





ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணாய நமஃ

இதிகாசமாகிய

# ஸ்ரீ மஹாபாரதம்

வசன காவியம்

[ஐதீக பல கலர் திருவுருவப் படங்களடங்கிய சுத்தப் பதிப்பு]

ஸ்ரீ பர்வம் - சாந்தி பர்வம் - அனுசாசனிக பர்வம்
அஸ்வமேத பர்வம் - ஆசிரமவாச பர்வம் - மௌசல பர்வம்
மகப்பிரதானிக பர்வம் - சொர்க்காரோகண பர்வம்.

இவை,

ஸ்ரீ வேதவியாசர் செய்த கீர்வாண பாரதத்தைத்
தமிழில் நல்லாப் பிள்ளை அவர்கள் செய்த பாடலுக்கிணங்க
அமைத்தெழுதியது.

4-வது புத்தகம்

பிரசுரித்தவர்கள் :—

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1933.

4-வால்யம் செட்] [விலை ரூபா 10.





17-1

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# நான்காம் புத்தகத்தின் சருக்க அட்டவணை

## ஸ்ரீ பர்வம்

சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். — பக்கம்.



## சாந்திபர்வம்



சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். — பக்கம்.

சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். பக்கம்.



## அஸ்வமேத பர்வம்.



## ஆசிரமவாச பர்வம்

சருக்கங்களும் அவற்றினுட்பிரிவுகளும். — பக்கம்.



## மூசலப்பர்வம்



## மகப்பிரதானிகபர்வம்



## சொர்க்காரோகண பர்வம்



நான்காம் புத்தகத்தின் சருக்க அட்டவணை முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:





ஸ்ரீ ருக்மணி சத்யபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## பதினொன்றுவது,

## ஸ்ரீ பர்வம்.

---

கண்ணன் துதி.

ஆக்கு மாறய னுமுத லாக்கிய வுலகங்
காக்கு மாறுசெங் கண்ணுடைக் கருணையங் கடலாம்
வீக்கு மாறர னுமவை வீந்ததா ளுத்தி
பூக்கு மாமுத லாமவன் பொன்னடி போற்றி.

சூதபுராணிகர் வாக்கியம்.

ஓ சவுனகாதி முனிவர்களே ? இவ்வாறு உயுத்தபஞ்சகத்தின் ஐந்தாம் பாகமாகிய சௌப்திக பர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி? பதினெட்டா நாட் காலையோடு சகல ஜனங்களுமாண்டுந் துரியோதனனின்னு மெஞ்சிமிஞ்சியுள்ள சில சேனைகளைக்கொண்டு யுத்தத்திற்கு வந்ததும், அவைகளைப் பாண்டவ ரறக்கொன்றதும், அதுகண்ட அரவகேதனன் தடாகத்துள் மறைந்து மிர்த்யுசஞ்சீவிமந்திர முச்சரித்ததும், அதைச்சில வேடுவராற் கேட்டறிந்த வீமன் அங்ஙன மியாவரோடுஞ் சென்று அவனை வெளிப்படுத்தியதும், பின்னிருவருங் கண்ணனுரைத்த வாய்மைப்படி சமந்தபஞ்சகமடு வடுத்ததும், அங்கு தீர்த்த யாத்திரை போய் வந்த பலராமர் முன்னிலையி லிருவருங் கதாயுத்தம் புரிந்து துரியோதனன் சாய்ந்ததும், அருச்சுனனுடைய தேர் அழன்றதும், அக்கைபொன்றி வீழ்ந்த அரசனை அஸ்வத்தாமன் கண்டு சேனுபதிப் பட்டங்கொண்டு சிவபிரானால் வாளாயுதம் பெற்று வந்து இரவிற்றுயின்றுயின்றிருந்த இளம்பஞ்ச பாண்டவராதியரை வதைத்ததும், அதுகண்ட திரௌபதி அவ்வஸ்வத்தாமன் தலைக்குச் சபதங்கொண்டதும், அச்சபதத்தை ஸ்ரீ கிருஷ்ணதேவர் அருச்சுனனைக் கொண்டு ஒருவாறு முடிப்பித்ததும் ஆகிய இச்சரித்திரங்களையெல்லாஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டு சந்தோஷித்தேன். இப்பால் சாந்தித்திரையத்தில் முதற்பாகமாகிய ஸ்ரீ பர்வத்தையுந் திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## முதலாவது,

# ஈமவிதி முடித்த சருக்கம்.

### கண்ணன் துதி.

உளனெனி லுளனவ னுருவமிவ் வுருவுகள்
உளனல னெனிலவ னருவமிவ் வருவுகள்
உளனென விலனென விவைகுண முடைமையில்
உளனிரு தகைமையோ டொழிவிலன் பரந்தே.

ஓ தவஞ்சே ரருள்பெறுந் தண்சுடர் மணியே பவஞ்சேரிருளறும் பண்ணவரணியே கேளும் பாசறைக்கணடைந்த பலகாரியங்களைக் கண்டுணர்ந்த சஞ்சயன் அதிசீக்கிரத்தில் அஸ்தினாபுரத்திற்குபோய் திரிதராஷ்டிர பூபதியைப்பணிந்து செய்திகள் யாவுஞ் சொல்ல, அவையனைத்தையுங் கண்ணிலாத தன்னந்தனியாகிய அத்திரிதராஷ்டிர மகாராஜன் கேட்டு, பள்ளமான நடுக்கடலினின்று பற்றுக்கோடில்லாமல் வாடுவதைப்போற் பதறிக்கதறிப் பார்மேல் விழுந்து இரக்கங்கொண்டு, மயக்கமுற்றுச்சாய்ந்து கால்கையோய்ந்து மைந்தராசையால் மடிந்தவனைப் போற் சலித்து வாடினான். அக்காலையில் தீர்த்தயாத்திரை செய்துவந்திருந்த விதுர மகாராஜன் துரியோதனன்மடிந்த செய்தியாவுந் தெரிந்து, திரிதராஷ்டிரனுடைய சபைக்குட்புகுந்து, மிகுந்த துயரம் பூண்டு, மீட்டுந் தனது விவேகத்தால் ஆராய்ந்து, அண்ணனை வாரியணைத்து, அவன் கண்ணீர் தணித்து, அநேக தருமங்களையும் அரசர் நீதிகளையும் அஞ்ஞானம் அகல்விக்கு மெய்ஞ்ஞானங்களையு மெடுத்துக் காட்டித் தேற்றினான். அப்படி தேற்றியும் அத்திரிதராஷ்டிரன் ஏதொன்றாலுந் தேறாமையால் விதுரன் மிகநொந்து, ஸ்ரீ வேதவியாசர் வரும்படிக்கு நினைத்தான்.

### திரிதராஷ்டிரன் வியாசரனுக்ஞை பெற்றுப் பந்துமித்திராதியர்களோடு போர்க்களமடைதல்.

---

உடனே வாதராயணர் வந்தடைந்து, திரிதராஷ்டிரன் கொண்ட புத்திரசோபமானது கொஞ்சங்கொஞ்சமாய்க் குறையவும், காந்தாரியின் கண்கலக்கமும் ஆறவும், கொட்டியபஞ்சுபோலராகிய நெஞ்சம்வன்னெஞ்சாகத் தேறவும், அவ்விருவருந் தம்மைப் பணிந்துதேவரீர் திருவடியேதஞ்சமென்று நமஸ்கரித்துக்கூறித் துன்பமொடுங்கி இன்பமேலிடவுமாக தெரிந்த பந்த சம்பந்த நிர்ப்பந்தத்தைத் தொலைத்துத் தேற்றித் தெளிவித்தார். பக்தியுடன் மனந்தேறிய திரிதராஷ்டிரனானவன் வேதவியாசருடைய பாதகமலங்களில் வணங்கி, ஓ காக்ஷியற்ற வெனக்குச் சாக்ஷியாகவந்தாண்ட ஆண்டவனே ஓ என் குலதீபமே இனி யான் செய்ய வேண்டிய புத்தியென்னவென்று கேட்டான். இப்படி நன்மார்க்கவழியில் நின்று நலம்பெறக்கேட்ட ராசனை நோக்கி வியாச பகவான் களித்து, அப்பா என் குமாரனே நீ இவ்விடத்திலிருந்து இரங்குவதினால் உனது பத்தினியாகிய காந்தாரியும், உன் மருமக்கண்மார் முதலாகிய இராஜஸ்திரீகளும் அளிந்து களிந்து பெருந்துகள் படிந்து நொந்துபோகின்றார்கள் இது உனக்கு நன்மையல்ல நான் சொன்னபடி செய். அழகிய மாதர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு யுத்தகளமாகிய குருக்ஷேத்திரத்திற் புகுந்து, அவ்விடத்தில் மரணம் அடைந்த பேர்களையெல்லாம் நெருப்புக்கடன் குறையாமல் வாரிக்கொளுத்திப் போட்டு, தடாகக்கரையிற் சென்று, நீர்க்கடன் முதலாகிய கருமங்கள் யாவுமுடித்துத் திரும்பிவருவதுவே நிரத்துவமாகிய உண்மையென்று வேதவியாசர் சொல்லினர்.

அந்தப்படியே திரிதராஷ்டிரனானவன் தன் பத்தினி முதலாகிய இராசஸ்திரீகளோடு உற்றதுரைத்து, யாவரும் புறப்பட்டு

என்னோடு வாருங்கள் போவோமென்று அழைத்தனன். அவர்களெல்லோரும் முகத்திலும்சிரத்திலும் மார்பிலும் வயிற்றிலும் கரங்களினால் அறைந்துகொண்டு, கையை நெரித்து கண்ணில்லாவரசனைப் பையப் பைய விளித்து நாம் அந்த யுத்த பூமிக்குப் போய் ஆரைக்காணப்போகின்றோம், ஐயையோ தெய்வமே இப்படியுமுண்டாவென்று அலறிக் கதறிப் பூதறி, ஒருவர்பேரி லொருவர் விழுந்து, தலைவிரிகோலமாய்க் குழைந்து உள்ளத்திலெழுந்த மனஸ்தாபம் நீங்காமல் தாமரைமலர்போல் வதங்கி, வீராதி வீராள் யாவரும் போர்புரிந்த பூமியை நோக்கிப் போனார்கள். இதல்லாமலும் அஸ்தினபுரத்திலிருக்கின்ற யாவருக்குந் தெரியும்படியாய் யானைமேற் பேரியறைவித்தார்கள். அஃதெப்படியென்றால் நாங்களியாவருங் குருக்ஷேத்திரத்துக்குப் போகின்றோம் தங்கள் தங்கள் நாயகர்கள் பிள்ளைகள் தந்தைமார்கள் தமயன் தம்பிகள் மற்றுமுண்டான உறவினர்களில் யாவரேனும் யுத்த பூமியில் உயிர்விட்டிருப்பாராயின், அவர்களைக் கண்ணாற் பார்க்கவேண்டியபேர்களெல்லோருமெங்களுடன்கூட வாருங்களென்று பறைமுழக்கி வைத்தார்கள்.

இப்படி இறையோதியவாறு பறைகூறியபடியால் தலைமயிர்விரித்த தையலார் கூட்டங்கள் சமுத்திரம்போ லிரைச்சலிட்டு; நெருக்கமும் பெருக்கமும் உடையவர்களாய்க்கங்குகரைதெரியாமற் கலங்கிவந்தார்கள். விதுரராசனும் சஞ்சயனும் திரிதராட்டிரனென்னும் பேர்விளங்கிய கண்ணில்லாத வேந்தனும் காந்தாரியும் முதிர்ந்தவயதையுடையவர்களாகையால் தேரேறி வந்தார்கள். மற்றப் பேர்களெல்லோருந் துயரத்தினாலும் துக்கத்தினாலும் ராஜ முறைமை வழுவாமல் கட்டுக்காவல் முக்காடு முதலிய பந்திப்புடன் அஸ்தினபுரத்தின் கோட்டை வாசலைக் கடந்தார்கள். அப்படி கடக்குமுன்னமே அம்மாதர்களுடைய கண்களிலிருந்து வழிந்தோடிய கண்ணீரானது யாவரும் அதிசயப்படும்படியாய் புதுவெள்ளப் பெருக்கமுள்ள பெரிய ஆறுபோல் வடிதலில்லாமலோடியது. இப்படியாகத் திரிதராட்டிரனும் அவனுடைய பத்தினியும் மற்ற ஆடவரும் மாதர்களுங் குருபூமிக்கு வந்தார்கள். அந்த திரிதராஷ்டிரனும் இன்னுமுள்ள பேர்களும் யுத்த பூமிக்கு வருகிறார்களென்பதைத் திசாதிசைகளில் இருக்குந் தேசதேசத்தாருக்குத் தெரிவிக்கப் புகுந்த தன்மம்போல் இந்த ஸ்திரீகள் இரங்கியழுகிற ஓசையெங்கணு நிறைந்தது. குந்திதேவியுஞ் சுபத்திரையும் உத்தரை முதலாகிய மற்ற ராசஸ்திரீகளுந் தங்களால் ஆற்ற மாட்டாத் துக்கத்துடன் விக்கிவேசாறி, அடக்கற்கரிய அரோதனத்துடன் ரணக்களம் புகுந்தார்கள்.

---

### திரிதராட்டிரனைக் காணவிரும்பிய பாண்டவர்களோடு கண்ணன் முன்சென்று கண்டு வசனித்தல்.

இவர்கள் குருக்ஷேத்திரத்திற்கு வந்த சங்கதியை வீரலக்ஷ்மிதங்கிய புஜபல பராக்ரமசாலிகளாகிய பாண்டவர்கள் அறிந்து, அவர்கள் முகத்தில் எப்படிவிழிப்பதென்று உன்மத்தம் பிடித்தவர்போல் ஒடுங்கி, சற்று நேரம் நிதானித்து, எப்படியும் அவர்களைக் காணவேண்டுமேயல்லது காணாமலிருக்கப்படாது ஆகையால் வள்ளல்கருத்துஉள்ளபடி முடியுமென்று துணிவுகொண்டு அவர்களுக்கெதிர்போகத் தொடங்கினார்கள். அப்போது மூலகாரணனாகிய முகுந்தன்பாண்டவர்களை நிறுத்தி, ஆத்திரப்படாதீர்கள். மூவாசைகடந்த முனிவருக்கும் புத்திரசோபம் பொல்லாது, இங்கே யிறந்துகிடப்பது ஒன்றிரண்டல்ல, நூறுபிள்ளைகளையும் ஆயிரம் பௌத்திரர்களையும் வாரிக்கொடுத்திருக்கிற திரிதராஷ்டிரனுங் காந்தாரியும்மிகு துயரங்கொண்டிருப்பார்கள், அவர்கள்மனத்திலும் வயிற்றிலும் வடவாமுகாக்கினி குடியிருக்கும். இந்தக் கடுமைக் காலத்தில் நீங்கள் எதிர்போனாற் பஸ்மீகரமாய்ப் போகும்படி சபிப்பார்கள். (குயவனுக்குப் பல கடிவேலை. வயவனுக்கு ஒரு நொடிகாலை) என்பதுபோல்முடியும். நான்பட்டபாடெல்லாம் நடுக்கடலிற்கரைத்த புளியாய்ப்படியும். ஓ நலம்பரவுந் தருமநந்தனா சற்றே பொறும், ஏதுகாரியத்திற்கும் ஆத்திரப்படலாகாது. முன்பின் யோசித்துக் காரியந் தெரிந்து செய்ய வேண்டும். கண்ணில்லாதவனையும் இருந்த கண்ணையு மறைத்துக்கொண்ட காந்தாரியம்மனையும்லேசாய் நினைக்காதீர்கள். அவ்வளவு பரிசுத்த மன

முண்டையவர்களானல், இப்பேர்ப்பட்ட பிள்
ளைகள் பிறப்பார்களா அம்மாளும் ஐயா
வுக்குச் சம்மந்தப்பட்டபடியாற் பொற்பட்
டும் அடித்து கண்ணைப் பொட்டென
மூடிக்கொண்டாள். இவர்களெல்லாம் மகா
கொடும்பாவ வுருக்கொண்ட துஷ்ட ஜெந்
துக்களாகும்.

ஏன்று அவர்களை அழைத்துக்கொண்டு
போய் ஒருபுறத்திற் பொருத்தி, வீமசேன
னைப்போற் பஞ்சலோகத்தாற் பூர்வம்அமை
ந்திருந்த ஒருபெரிய உருவை விதுரனுடை
ய அனுமதியின் பேரிற் கொண்டுவரச் செய்
து திரிதராஷ்டிரனுக்கு முன்னே நிறுத்தி,
ஸ்ரீகிருஷ்ணசுவாமியாகிய தான் முன்னுதா
கச்சென்று, ஓ மாமா யான் கண்ணன்
இதோ வந்தேனென்று நமஸ்காரஞ் செய்
தார். இப்படி சொல்லிய அவர் குரலைக்
கேட்ட மாத்திரத்தில் திடுக்கிட்டு, அப்பா
கிருஷ்ணு என் பிள்ளைகளையெல்லாம் வஞ்
சித்துக்கொன்றையோ இனி உனக்குக் கண்
ணுறக்கம் வருமா ஆ வஞ்சகனேயென்று
வாய்விட்டுப் புலம்பினன். அந்த மொழி
கேட்ட முரகரிமுகுந்தன் திரிதராட்டிரனைப்
பார்த்து, ஓ சர்வபூமா ஓ என் பெரிய மாமா
நான் செய்தாலுஞ் செய்யாமற் போனலுங்
காகதாளி ஞாயம்போல் உலகம் என்னையே
சொல்லும். தேவரீரும் வாயிற்போட்டு என்
னையே மெல்லும். அதனலெனக்கொரு
குறைவுமில்லை. எப்போதும் உண்மை உண்
மையே. பொய்மை பொய்மையே. ஆகிலும்
நான் பிறந்தவேளை இல்லையென்றாலும்
விடாது. அந்தச் சொல்லுக்கு நான் வல்லை
யென்றாலும் விடாது. (பாண்ட மோரிடத்
திற் பழியோரிடத்தில்) என்னும் பழமொழி
போல விளைந்தால் யாரென்ன செய்யலாம்
அப்பால் உங்களிஷ்டம். ஆனல் உங்களுக்
குவந்ததெல்லாம் நஷ்டம். அதனல் வெகு
கஷ்டம். இருந்தபோதிலும் இனிமேலென்
னயோசனையிருக்கின்றது. நடக்கவேண்டிய
வினையின்படிக்கு நடந்து போச்சுது. இப்
பால் நடக்கவேண்டிய காரியத்தை யோசிக்
கத்தக்கதே என்று சொல்லித் தேற்றினர்.

### பாண்டவர், திரிதராட்டிரனைச் சேவித்துக் கொள்ளுதல்.

இவ்வாறு தேற்றிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்
தியானவர் பாண்டவர்களைக் கண்காட்டித்
திரிதராஷ்டிரனுடைய காலில் விழச்செய்
தார். அந்தப்படியே ஐவரும்விழுந்துநமஸ்
கரித்தார்கள். பக்கத்திலிருக்கிற விதுர மகா
ராசன் அண்ணு புத்திராளாகிய பாண்டவர்
கள் தங்களை வந்து வணங்குகிருர்களென்று
சொன்னன்! அந்தமொழியைக் கேட்டமாத்
திரத்தில் திரிதராஷ்டிரன் பிரமித்து, ஆ
ஆ மைந்தர்களேயென்று வாய்விட்டுக் கூவி
எங்கடா அப்பா என்னருமைத் திருத்தம்பி
யின் பிள்ளைகளாகிய பாண்டவர்களென்று
கைவிரித்துத் தடவி, முரசுயர்த்த முடிபொ
ருத்த தருமராஜனை அன்போடணைத்து, பு
யத்துடன் பொருத்தித்தழுவி, முகத்துடன்
முகஞ்சேர்த்து முத்துமிட்டு மடிமீதிருத்தி
வரிசை முறைமையிற் சிறந்தவண்மை பாரா
ட்டித் தன்பக்கத்தில் இருக்க அமைத்து,
மற்றப் பிள்ளைகளு மெங்கே அப்பா மைந்
தர்களே வாருங்களென்று வீசு மெமபாசம்
போன்ற கரங்களை நீட்டினன் திரிதராஷ்டி
ரன். அந்தவேளையில் வாயுகுமாரனுகிய வீம
சேனனைமாயன்மறித்து, ஓ ஐயா வாயுகுமா
ரனே கண்ணில்லாதவனென்று தாராளமா
கச் சென்று முன்னின்று வணங்காதே. இ
தோ உன்னைப்போலிருக்கின்றபஞ்சலோகப்
பாவையை இந்த அந்தகனுக்கு முன்வைத்
து, நீ அந்தப்பாவைக்குப் பக்கத்திலிருந்து
நமஸ்காரம்பண்ணிக்கொள். ஐயாவீமசேன
மகாராஜனே இந்தப்பாவையேது உனக்குத்
தெரியுமா நீங்கள் சிறுவயதாய் விளையாடுங்
காலத்தில் உனக்கு விஷபோசன மூட்டிக்
கட்டி ஆற்றிற் போட்டுவிட்டான் துரியோ
தனமகாராஜன். அப்போது ஏழுநாள்வரை
க்கும் உன்னைக்காணுமல், ஊரும் நாடும் உற
வினரெல்லாரும் வந்து துக்கங் கொண்டா
டும் போது, இந்தத் திரிதராஷ்டிரன் உன்
பேரில் வைத்திருந்த பக்ஷத்தால் அந்த
ஏழு நாள் வரைக்கும் அன்னந் தண்ணீர்
தொடாமல், வீமா வீமாவென்று கூவிகூவி
ஆவியிழப்பவனானன்.

அதன்பேரில் இதோயிருக்கிற மகானு
பாவனுகிய விதுரராசனும் வீஷ்மர் முதலா
கியபேரும் உடனேயோசித்து, பஞ்சலோக
த்தால் உன்னைப்போல் வார்ப்படஞ்செய்து
வீமாவென்று கூப்பிட்டால் ஏன் ஐயாவெ
ன்று எதிர்ப்பேச்சு கொடுக்கும்படிக்குச் சூத்
திரமும் அமைத்து, இந்த ராசனுக்கெதிரில்
நிறுத்தி பிள்ளைகளுடனே விளையாடுகிரு

னென்றுசொல்லி நீவருகிற எட்டுநாள்வரைக்கும் இராசனைக் காப்பாற்றிக்கொண்டிருந்தார்கள். அந்தப்பாவைதான் இந்தப்பாவை. அப்பேர்ப்பட்ட அன்புமறவாதிருந்த அத்தனை எள்ளத்தனையேனும் பட்சமில்லாமற் பண்ணிப்போட்டான் துரியோதனன். இப்பவும் நூறு பிள்ளைகளையும் நீயேகொன்றாயென்று கண்டமட்டில் விஷம்வைத்திருக்கின்றான். ஆதலால் இந்தப் பொம்மைக்குப் பக்கத்திலிருந்து வணங்கென்று ஆதிமூலமாகியஐயன்சொல்ல, அந்தப்படியே வீமன் போய் திரிதராட்டிரனுடைய பாதத்திற்றாழ்ந்தான். உடனே அவன் மகா உருக்கமுள்ளவன்போல் நிமிர்ந்து, அப்பா வீமாவாடா என்சாமி என்றுசொல்லி அவனைத் தழுவத் தன்கரத்தை நீட்டினான். அக்காற் பஞ்சலோகப் பிரதிமையை முன்தள்ளினார்கள். அந்தப் பாவையை வீமசேனனென்றுசேர்த்துப்பிடித்து முறுக்கி அணைத்து இறுக்கித் தழுவியபோது பலபலவென்று உடைந்து உதிர்ந்து மண்ணோடு மண்ணாய்ப் படிந்தது. தன் பிள்ளைகளிறந்தபழியை வீமனோடு ஆற்றலாமென்றெண்ணிய வேந்தன் அந்தப் பாவையுடம்போடுதீர்ந்து தானுஞ்சேர்ந்து வீழ்ந்தான். அப்போது அக்கம்பக்கத்திலிருந்தவர்கள் அத்திரிதராட்டிரமகாராசனைத் தேற்றியெடுத்தார்கள்.

அந்தப் பஞ்சலோகப் பாவையானது பொடிப்பொடியாய்ப்போகவே வீமசேனன் வெகுண்டு. மகா கோப வயிரங்கொண்டு, அடா நயவஞ்சகமுடைய பாவி நீ செய்த தீவினையெல்லாஞ் சேர்ந்து கூடியே தங்கமாகிய நூறு பிள்ளைகளின் அங்கத்தைப் பங்கப்படுத்தி அவ்வவர்களும் புத்திர மித்திரர்களுடன் நாசம் அடையும்படியாகச் செய்தது. உனக்கு இந்த கெட்ட நினைப்பு இல்லாவிட்டால் இன்னுஞ் சிலகாலம் வரைக்கும் அவர்களிருப்பார்கள். ஆ ஆ பெரியோனே உனக்கிரண்டுகண்ணும் புளியம்பூபோல் அவிந்திருந்தபடியால் இன்று நான் பிழைத்தேன். இல்லாவிட்டால் நூறுபேருடன் நூற்றொருவனா யிறந்துபோயிருப்பேன் ஓ என்னிஷ்ட தெய்வமே என்னைப் பிழைக்கச் செய்வதற்குத்தானோஇந்தப்பாவியினுடைய கண்ணைக் கெடுத்துவைத்தாய் என்று கிரீசனைப்போற்றி, ஐயோ அனியாயமாய் நூறு பேரைக் கொன்றதைப் பார்க்கிலும் இந்த வஞ்சகனாகிய திரிதராஷ்டிரனையே முக்கியமாகக் கொல்லவேண்டியிருக்கிறது. இவனை உயிருடன்விட்டது பெருமோசம் இன்னும் இவனிருப்பானாகில் நல்லபாம்பைப்போல் விஷம் வைத்துக்கொண்டு யார்யார் குடிக்கு என்ன தீங்கு வைப்பானோ அப்பப்பா இவனிருப்பது என்மனஞ் சற்றும் ஒப்பாது என்று பேசாதும் பேசி ஏசாதும் ஏசினான் வீமசேனன். அந்தச் சொல்லையெல்லாங் கேட்ட திரிதராஷ்டிரன் வாயைத் திறவாமல் மறுவார்த்தை யொன்றும் பேசாமலிருந்தான்.

அப்போது மாதவனானவர் வீமனைநோக்கி, ஆ ஆ வீமராசனே! பெரிய தகப்பனை இப்படியும் பேசலாமா அந்தமட்டும்போதும் வாயைமூடு என்று கையமர்த்தி விட்டுத் திரிதராஷ்டிரனைப் பார்த்து, ஓ மாமா நான் விளைத்த பொல்லாத கலகவஞ்சனையால் உமது புத்திர பௌத்திராதியர்கள் இறந்துபோனார்களென்று என்பேரில் தோஷஞ் சொன்னீர். இவ்வளவு பாடுபட்டும் இத்தியாதி கேடுகெட்டும் வஞ்சனையும் சூதும் ஆரிடத்தில் நிறைந்திருக்கின்றன. ஆரிடத்தில் விளைந்துரைகின்றன. இப்போது உமது பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் உமக்குண்டாகிய சம்பத்தும் நாசமாய்ப் போவதற்கு வேறொரு மனுஷனும் பொல்லாங்கு செய்யவேண்டுமோ நீரே இதற்கெல்லாங் காரணமாயிருக்கின்றீர். ஓமாமா உமது புத்திரமித்திராதியர் இறந்து மடிந்ததற்குக் காரணம் உம்மைவிட வேறொருவரையும் நினையாதீர் நெஞ்சில் வஞ்சம் வைத்துச் சொல்லாதீர். இப்போது யாவரும் பிரசித்தமாய் உம்முடைய வஞ்சனையைக்கண்டார்களென்று அரிவாசுதேவன் ஓதவும், அதைத் திரிதராட்டிரன் கேட்டு, ஓ என தன்பிற்சிறந்த மருமகனே உன்னுடைய கடைக்கண்ணருள்மாத்திரம் இருக்குமாகில் என்வஞ்சனையும் என்னால்விளையும் பிழையும் என்னசெய்யும். என் வஞ்சம் என்னையே ஒறுத்தது. என் கழுத்தையே அறுத்தது. நீங்கள் திருடுந்திருட்டு வெளிவரமாட்டாது. நான் திருடாமற் றிருடிக்கெட்டேன். இனிமேற் புத்தி வந்தது என்று சொல்லிப்பின்னுஞ் சொல்லுகின்றான்.

ஓ மாதவா ஓ மதுசூதனா ஓ கபட நாடகா இனியோசிக்குமிடத்தில் இந்தஐவர்களையல்லாமல் எனக்கு வேறு துணை யாரிருக்கி

ன்ருர்கள் இவர்களைவிட வேறு உறுதியென்னவிருக்கின்றது. ஓ உத்தமனே இது உண்மையான வார்த்தையென்று இதமாய வாக்கியத்தைத் திரிதராட்டிரன் சொல்லிக் கண்ணீர்விட்டழுதான். அதைக் கோபால கிருஷ்ணன் கண்டு பாண்டவர்களைப் பார்த்து அவரவர்கள்வஞ்சனை அவரவரையழிக்கும். உங்களுக்கொரு துன்பமுமில்லை. நீங்கள் தருமமே ஜெயமென்றிருங்களென்றுசாற்றினுர். அப்பால் அருச்சுனன் முதலாகிய மூவரும் வந்து வணங்கினுர்கள். அப்போது திரிதராஷ்டிர மகாராஜன் உள்ள மூவந்து மகிழ்ந்து அப்பிள்ளைகளைத் தழுவிக்கொண்டு, இங்கித வசனங்களைப் பேசி, துன்ப முதலியதுந் தீர்த்து, தன் குமாரர்களிடத்திலிருக்குந் தன்மைபோலிருந்து, கேட்கவேண்டியதைக் கேட்டு, பேசவேண்டியதைப்பேசி யோசித்து மகிழ்ந்திருந்தான்.

## பாண்டவர் காந்தாரியைச் சேவித்துக் கொள்ளுதல்.

இப்படி பாண்டவரைவரும் பெரிய அநசனைப்பணிந்து ஆசிர்வசனமுதலிய அன்பெல்லாம் பெற்ற பின்பு, தங்கள் தாயாகிய காந்தாரியம்மனுடைய மனதிற் குடிகொண்டிருக்குந் துயரத்தை நீக்கும்படிக்குக்கருதி, யாவரு முறைமையாகச் சென்று எதிர் நின்று வணங்கினுர்கள். அவர்களை யெடுத்து அணைத்து உபசரித்த காந்தாரியானவள் வீமனைப் பார்த்து வெங்கனலாகிய வடவாமுகாக்கினியின் வெப்பம்போல் உருத்து, அடா வீமா! என்னதான் ஜன்மப் பகையாயிருந்தபோதிலும், இதெவ்வளவு அல்பமென்று எண்ணித் தள்ளிக்கொண்டு போகாமல், பாவமும் பழியும் பாராமல் பச்சாத்தாபம் நினையாமல், முடிபொறுத்த துரியோதனராஜன் முதலாய் கடைப்படு பிள்ளையாகிய விகர்ணனீருயுண்டாயிருந்த நூறுபிள்ளைகளையுங் கொன்றுயே; அப்பா! இப்போதுன் மனங் குளிர்ந்ததா? எல்லோருக்கும் சிரேஷ்டனுகிய கெடிஸ்தலாதிபதியான துரியோதன மகாராஜனைத் தண்டுகொண்டு தொடைமேலடித்துத் தொடையை முறித்துச் சாய்த்தையாம். இது தர்மந்தானு? இப்படி விதிதப்பி அடித்ததுமல்லாமல், சொற்பழுதாகிய பற்பல வார்த்தைகளைச் சொல்லித் திட்டினையாம். அதுவும் போகட்டும். அடிபட்டுத் தொடைமுறிந்து பூமிமேல் விழுந்துபோன பிற்பாடும் க்ஷாத்திரம் வைக்கலாமா? கொஞ்சமேனும் எண்ணிப்பாராமல், அணிமணிப்பணிமுடிதரித்த வணங்காமுடியில் உதைத்தனையாமே. இன்னும் அநேகங் கொடுமை விளைத்தனையாமே. இதுகளெல்லாம் ஆரையார் செய்யத்தக்க வேலை? இதல்லாமலும் இளவரசென்னுந் துச்சாதனனைச் சிலுக்கச் சிலுக்க இழுத்து வலித்து, கழுத்தைத் திருப்பி, செய்யாத சித்திரவதையெல்லாஞ் செய்தனையாம். மேலும் - அவனுடைய உரத்தை உடைத்து, பல்லினுற் கடித்து, உதிரத்தையும் அள்ளிக்குடித்தனையாம். இதுகளெல்லாம் உனக்கு நன்மையோ? அடா வீமா! சிறியோர்கள் தெரியாமற் செய்தாலும் வைதாலும் பெரியோருக்கு இரக்கந் துணையாயிருக்க வேண்டுமே. உனக்கு எவ்வளவேனும் இரக்கமென்பதில்லாமற் போச்சே. என்று காந்தாரி கதறிக் கண்கலுழ்ந்து சொன்னுள்.

இப்படியாகக் கூறிய காந்தாரியம்மனை வீமன் வணங்கி, என் தாயே! தேவரீர் இப்போது மதிமறந்து பேசுகிருப்போலிருக்கின்றது. பூர்வத்தில் ராஜராஜர்கள் நெருங்கிய பேரவையில் எங்களை அவமதித்ததும், அனியாயம் புரிந்ததும், நீர் அறியமாட்டீரோ? ஓ தெய்வப் பெண்ணுக்கொப்பாகிய தேவி! எங்கள் நிமித்தத்தில் அவர்கள் செய்த அனியாய வஞ்சனைச் சூட்சியை நாங்களறியமாட்டோம். தெய்வம் அறியும். அன்னியரும் புண்ணியரும் அறிந்திருப்பார்கள். எப்போதும் நீதி முறைதப்பி நன்றி குன்றினபேர்கள் எப்பேர்ப்பட்ட நாதனு யிருந்தபோதிலும், தேவனுயிருந்தபோதிலும், கடவுளாக்கினைக்குத் தப்பிப் பிழைப்பார்களோ; தாயே! எங்களைச் செய்தது பெரிதல்ல. உங்களுக்குரிய பெரிய மருமகளாகிய திரௌபதையைத் துரியோதனன் இழுத்து வரச் சொன்னபோது, தேவரீரிடத்தில் நாங்கள் விட்டு வந்திருக்கத் தங்களுடைய அரண்மனைக்குத் துச்சாதனன் வந்து அழைத்தானல்லவா? அப்போது திரௌபதையானவள் தங்களைச் சரணமாக அடைந்து, மாமி! மாமி! இதென்ன அனியாயம்? ஐஐயோ! சாமி! சாமி; என்று அழுது உம்மைத் தொழுது கட்டிக்கொண்டதுண்டா? இல்லையா? அப்

போது என்னடா தம்பி துச்சாதனுவென்று தடுத்து, இதென்ன காரியம் போடா என்று ஒருபேச்சு சொல்லி யிருந்தால் இவ்வளவு கலகம் விளையாதே. உம்து பிள்ளைகளெல்லாஞ் சுகமாயிருப்பார்களே. அந்தக் காலத்தில் தங்களுக்கு எங்கள் பேரில் ஒரு கோபமும் இல்லையே. இப்படியிருக்க, தாங்கள் மெத்தக் கரேமாய்க் கட்டிப்பிடித்துக்கொண்டபாஞ்சாலியின் கையைப் பறித்துவிட்டு, என்னடி? காக்கை கற்றென்றால் கணவனைக் கட்டிக்கொள்ளுகிற நீலி! அடி ஜெகஜாலி குடிகேடி! அடி போடி! என்று சொன்னீராமே. அந்த க்ஷணந்துச்சாதனன் திரௌபதியின் தலைமயிரைப் பிடித்து, கதறக் கதற இழுத்து வந்து சபையில் நிறுத்தி வஸ்திர பங்கஞ்செய்தபோது; எங்கள் வயிறும்-கண்ணும் மனமும்-அந்தப் பாஞ்சாலியின் உடலும்-குடலும் எப்படி எரிந்திருக்க வேண்டும்? அம்மணி! அது உமக்குத் தெரியாதா! அருகணைந்த மருமகள் மீது கருணையென்பதணுவளவேனும் உம்மிடத்திலிருந்ததோ!

அம்மா! நாங்களுந் தங்கள் கர்ப்பத்திலுதித்தவர்கள் தானே. அக்கால் எங்களுக்கு எரிந்த எரிச்சலைப் பார்க்கிலும், இக்கால் உங்களுக்கு அதிக எரிச்சலிருக்குமென்று நான் நினைக்கமாட்டேன். நாங்கள் கொண்ட வயிற்றெரிச்சலுக்கு நீர்கொண்ட வயிற்றெரிச்சல் உரையிடப் போதாது. தாயே! மேலும் ஓர் மாமுனிவருடைய சாபமும், உன் மருமகளாகிய திரௌபதை மாதிட்ட சாபமு மிருப்பதோடு, நீர் ஆதி நாளையில் துரியோதனன் தேகத்தைப்பரிசனஞ் செய்யும்போது இடையிற்றுணி தடுக்க, அப்பா மகனே! உனக்குப் பிராண நிலைதொடையிலிருக்கிறது, உன் தொடை முறிந்தால் மரணமாவாய். என்று நீர் சொல்லியிருந்த வார்த்தையும் வீண்போகாமல், எல்லாம்மூண்டு வந்து கலந்துகொண்டு இவ்வண்ணம் முடிந்து விட்டன. ஓ மாதரசியாகிய மாதாவே இளையவனுகிய துச்சாதனனுடைய ரத்தத்தைக் குடித்தேனென்று சொன்னீரே. அந்தக் காலத்தில் என்து கோபத்தால் நான் சபையிற்கூறிய சபதம் பழுதுபடாமல் வாயில் விட்டுக் கொப்பளித்து உமிழ்ந்து விட்டேனே யன்றி, குடிக்கயில்லை. இது நான் செய்யவேண்டிய கடமையாயிருந்தது, அப்படியே இந்தக் கிருஷ்ணமூர்த்தியின் அருளால் நடத்திவிட்டேன். இறைவியே! என் பேரிற் கோபம் பண்ணுதீர். என்று வீமசேனன்பேசியவனைத்துங் கேட்ட அம்மடக்கொடியாகிய காந்தாரிமீண்டும் வீமசேனனைப்பார்த்து, நல்லது. வீமா! இவர்கள் தான் துன்மார்க்கர்கள். அவர்களை நீ முடித்துவிட்டாய். போகட்டும் சொக்கட்டாறுடிய சபையில் உங்களுக்காகவுந் திரௌபதைக்காகவுஞ் சார்பாகப் பேசித் தமையனுடைய கோபத்தையும் பழியையுந் தானேற்றுக்கொண்ட விகர்னனென்னுந் தர்மவானையுங் கொன்றுவிட்டீர்களே, இது நன்மைதானு! தருமந்தானு! இதை யெனக்குச் சொல்லுங்களப்பா வென்றாள். அப்போது வீமசேனன் அதற்கு பதிற்சொல்லத் தோன்றாதவனாய் மயங்கிவாடி நின்றான்.

அந்தச் சமயத்தில் துளபமாலை பொறுத்த தூயோன் காந்தாரியைப் பார்த்து, மாமி! அது சங்கதி நான் சொல்லுகிறேன். இவ்வளவு நல்லவனாய் விகர்னன் இந்தத் துஷ்டாளுடனே சண்டைக்கு வரமாட்டானென்று எண்ணிக்கொண் டிருந்தோம். மிஞ்சி வந்துவிட்டான். அவன்பார்த்து, நீ மெத்தநல்லவன். உன்னை நான் கொல்லமாட்டேன். போய்விடு என்று பலதரஞ் சொன்னுன். என்ன சொல்லியு மவன் கேளாமல் துன்பப்படுத்தி மேல்வந்து விழுந்து, பலவித ஆயுதங்களிஞலுஞ்சாடினுன். அப்போதும் பொறுத்துப்பார்த்தான். அவன்விட்ட ஆயுதவடியெல்லாஞ் சகித்தான். பின்னரென்செய்வான் தன்னைக் கொல்லவந்தது பசுவானுலுந் தர்க்ஷணியம்பாராமற் கொல்லென்னுந் தருமத்தை வைத்துக்கொண்டு முடித்துவிட்டான். இல்லாவிட்டால் தான் சாகமருந்துண்பார்களா! மாமி! என்று மாயன் சொன்னபோது அருகிருந்த மற்றப் பேர்களும் மெய்தானென்று விளம்பினுர்கள். அதைக்கேட்ட காந்தாரி ஒருவாறுதேறி, அப்பா கிருஷ்ணு! அது போகட்டும், என் தமையனுகிய சகுனியைச் சாஸ்திரந் தேர்ந்த சகாதேவன் முடித்தது உனக்கு நன்மையாயிருக்கிறதாவென்று சலித்தாள், அப்போது ஆதிகேசவனுகிய அமலன், மாமி! சூதாடிப் பாண்டவர்களை இக்கோலங்கண்டு, நல்லதத்தில் பிறந்த உன் பிள்ளைகள் நூறுபேரையுங் கெடுத்து, ஆவிதொலையச் செய்த பாவி அவனுதலால், உன்னை நானே முடிக்

கிறேனென்று ராஜசபையிற் கூறிய சபத வசனப்படி சகாதேவன் முடித்துவிட்டான். அவனையும் நீங்கள் நோவப்படாது, இது களெல்லாம் வினைச் செயலென்று நிச்சயித்து மனந்தேறவேண்டியது ராஜகுலத்திற் பிறந்த நீர் சலிப்படைவது நன்மையல்ல. இனிமேல் அவைகளொன்றையும் நினையாதீர், இதோ இந்த ஐவரும் உமது மக்களென்று சொல்லி அவர்களை வீழச் செய்து, தானும் வீழ்ந்து பணிந்தார். உடனே காந்தாரி கோபமாறினவளாய் நமஸ்கரித்த கிருஷ்ணன் முதலிய பிள்ளைகளை யெடுத்து அணைத்து உச்சிமோந்து ஆசீர்வசனம் புகன்று, யாவரையு மழைத்துக் கொண்டு போர்களத்துட் புகுந்தாள்.

## திரிதராட்டிரனாதியர் படுகளஞ் சோதித்துப் பரிபவ முறுதல்.

அவ்விடத்திற் பெருமை வாய்ந்த மருமகளான திரௌபதை வந்து வணங்கினாள். அவளைக் காந்தாரி யெடுத்து அணைத்து, அம்மணி இப்போது உன்னை அறிந்தேன். அப்போது அறியாமற்கெட்டேன். முன்ன முன்னைத் துச்சாதனன் இழுத்துக்கொண்டு போவதை அறியாமற் கைவிட்டேன். நீ அருந்ததிக் கொப்பான அணங்கென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை என்றுரைத்து, மகிழ்ந்து புகழ்ந்து, யாவருஞ்சேர்ந்துபோகும்போது சுபத்திரை உத்தரை முதலிய பேரும்வந்து பணிந்தார்கள். அவர்களையுந் தேற்றி அழைத்துக்கொண்டு, தன் கணவனோடும் மற்றக் காரிகையாரோடுங் கழுக்களும் பருந்துகளுங் கலந்துகூடிய ரணக்களத்திற்குப்போய், துரியோதனன் விழுந்து கிடக்குஞ் சமந்த பஞ்சக தீரத்திற் சேர்ந்தாள். அப்போதவ்விடத்தில் உயிரிழந்து கிடக்கிற துரியோதனனை அவன் பெண்சாதியாகிய பானுமதிகண்டு, நாயகனுடல்மேல்வீழ்ந்து, செழுந்துயரால் ஆழ்ந்து, வாழ்ந்தநாளின் வண்மைகளெல்லாம் வரிசை வரிசையாய் மொழிந்து, உயிர்த்துயிர்த்து விழுந்து பெருநெருப்பில் வீழ்ந்த புழுவைப்போல துடித்துத் தன் னுயிரைவெறுத்துச் சோர்ந்தாள். திரிதராஷ்டிரனுங் காந்தாரியுந் தேகத்தைத் தழுவி, செவி, மூக்கு, திருமுடி வாய், மார்பு, வயிறு, கால், கை இவை முதலிய உறுப்புகளைத் தடவித் தடவி முத்தமிட்டு, ஓங்கிய சத்தமிட்டுக் கதறிக் கண்ணீர் சொரிந்து, தளர்ந்து, கரைந்து, தரைமேற் படிந்தார்கள். வண்டார்ந்த மதுமாலை அணிந்த கூந்தலையுடைய மற்ற மடமாதர்களெல்லோரும் புலம்பி, கண்ணீராற் கையலம்பி மாழ்கி வருந்தினார்கள்.

இவ்விதமாக ஏக யிரைச்சலாய் எங்கும் பொங்கி இரங்கிக்கொண்டிருப்பதை உரியோராகிய விதுர ராஜனும், சஞ்சயனும், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் பார்த்து, அவ்வவர்களையும் பல விதங்களினால் தேற்றினார்கள். அப்பாலம் முதுகுரவருந் தீராத துயரமொருவிதத்தினாற் றீர்ந்து தேறி, அந்த யிடம் விட்டுத் துச்சாதனன் முதலிய போரிற் சிறந்த பிள்ளைகள் இறந்த இடத்தைப் பார்த்து கண்ணீர் பெருக விடுத்து, அவர்களை யெல்லாம் எடுத்தெடுத்து மடிமீது வைத்து, உடலைப் பொருத்தி அணைத்து, முத்தமிட்டுக் கொஞ்சிக் கொஞ்சிக் குலாவினார்கள். அவர்களுக்குரிய பத்தினிமார்கள் சோர்வில்லாத தனத்தின் மீதும், வயிற்றின்மீதும் அறைந்துக்கொண்டு, துன்பமென்பவை யாவுளும் உழன்றார்கள். அந்த ராஜஸ்திரீகள் பட்ட துயரத்தை இத்தன்மைத்தென்று எம்மாற் பிரித்துச் சொல்லக்கூடாது ஓ பெருமானே இன்னமும் அப்பாற்றொடர்ந்து செல்வக் குமாரராகிய இலக்கணன், துற்சனி, இவர்கள் முதலாகிய பேரப்பிள்ளைகள் பற்பலரும், கல்விக்குரிய அபிமன்னு முதலாகிய மைந்தர்களும், ஐவரான இளம்பாண்டவர்களும் மற்றுமுண்டான பௌத்திரரும் அழிந்து கிடக்கும் இடங்கள் தோறுஞ் சென்று அழுதார்கள் அவர்களுக்குரிய பத்தினிமார்களும் மற்ற உரியவர்களும் பார்த்துப் பார்த்து, உயிர்த்துஉயிர்த்து, வேர்த்து வேர்த்து, ஒப்பனை சொல்லித்துயர்கூர்ந்து அழுதார்கள். சொல்லினாலுயர்ந்த மெல்லியாளாகிய துர்ச்சனையானவள் மிகுந்த துயர்கொண்டோடி, சயிந்தவனுடைய மல்லார்ந்த உடல்மேல் வீழ்ந்து அழுது சிந்து பதியாகிய மாமன் இறந்ததையுங் கண்டு தொழுது துயர்கூர்ந்து, தன்னைத்தான் மறந்தாள்.

இப்பால் யாருங் கங்கா புத்திரனாகிய வீஷ்மர் பொல்லாத வருத்த மநுபவித்துச் சரசயனத்தில் இருப்பதைக்கண்டு, நெடுமூச்செறிந்து புலம்பி, வில்லுக்கும் வேதத்திற்

கும் வல்லவராகிய துரோணாச்சாரியார் கிடந்த நிலையைப்போய்க்கண்டு, உடல் மறந்து கவலைபூண்டு கருகி வாடிக் கரைந்தார்கள். பேராற் சிறந்த கிருபி யென்னும் பெண்ணரை முதமானவள் நாயகன்மேல் வீழ்ந்து, கரத்தினால் மார்பில் அடித்து, தீராத் துயரத்துடன் திடுக்கிட்டுத் தியங்கி மயங்கி நெடிதாக மூச்சுவிட்டுப் பேச்சில்லாதிருந்தாள். அங்கதேசராஜனாகிய கர்னனையும் அவனுடைய பிள்ளைகளையும் நேராகப் போய்ப் பார்த்து பெருந்துயராகிய பெருவெள்ளத்தில் மூழ்கி பள்ளத்தினின்று நீந்திக்கரையேற அறியாதவர்களாய் நெட்டுயிர்த்தார்கள். அந்தக்கர்னனுடைய தேவியானவள் தன் நாயகனைக் கண்டு அவனுடைய நற்பிறப்பையுரைத்துக் கண்ணீர்கலுழ்ந்து கரைந்து கணவன்மேல் வீழ்ந்து உயிர்விண்டவளைப்போல் உலைந்து தலைவிரி கோலமாய் அலைந்து சஞ்சலத்திலாழ்ந்தாள். அப்பாற் சவுபல குமாரனாகிய சகுனிமேல் யாவரும் போய் வீழ்ந்து அழியுங்குடிக்கு அதிதேவதை யென்னும் பெயரை அவனியுள்ளளவு மழியாமற் பூண்டஐயாவேயென்று சமுத்திர இரைச்சல்போல் விரைந்து கரைந்து வழியும் நீர்போற் கண்ணீர் விட்டார்கள். அவனுடைய பத்தினியும் மெத்த வுருகினாள். விராடராஜனையும் பிள்ளைகளையும் நோக்கிய சுதர்க்கணையாகிய உத்தமியானவள் சிறிதுஞ் சகிக்காதவளாய் என்ன பாடுபட்டாள் ஐயோ பெண்ணாகிய உத்தரையையும் அபிமன்னுவையும் பார்த்து நெருப்பில் வீழ்ந்த செந்தாமரைப் புஷ்பம்போல் வெதும்பி வெந்தாள்.

இப்பாற்பாஞ்சாலனுடையமணித்தேர்ள் புணர்ந்த பெருந்தேவியானவள் தனது நாயகன் மூதலியபேர்கள் செத்துகிடக்கின்ற களத்தையுற்றுப்பார்த்தாள். மேல் வீழ்ந்தாள். உயிர்த்தாள். உள்ளுடைந்தாள். யாகத்திற் பிறந்த திர்ஷ்டத்துய்மனாகிய என்னையுனும்கற்றோர் புகழுஞ்சிகண்டியும் மாண்டாரோ என்று வாயிலடித்துக் கொண்டு உத்தமோசா உதார்மன் முதலாகிய பேர்களையுங் கண்டு கண்கூசி நின்றாள். அவர்களுடைய தேவிமாரெல்லோரு மேவித் துன்பமுற்று பதைபதைத்து ஆவி விடுவோ மென்று அலம்வந்து நாங்கள் மண்ணிற் பெண்ணாய்ப் பிறந்த பெரும்பிழை இதுதானோ வென்று வெய்துயிர்த்தார்கள். சேதிப்பெருமான்-மகபதிக்கிறைவன்-சேரன்-சோழன்-பாண்டியன்-காசிவேந்தன்-மத்திரராஜன்-திரிகர்த்தன்-யாதவகுல சிரேஷ்டாள்-குந்திபோஜாள் மாற்சேயாள்-மாகதாள்-இன்னுமுண்டாகிய உலகத்தரசர்கள் இயாவரும்பேதித்து, அவரவர்களுடைய உடல் வேறு தலைவேறாகக் கிடந்த இடங்களெல்லாம் போய்க் கண்டு கவலைகொண்டு அவரவர்க் குரியவரும் மற்றப் பெரியவரும் மனங் களைத்தார்கள். இவைகளை யெல்லாந் திரிதராஷ்டிரனுஞ் சௌபல ராஜபுத்திரி காந்தாரியும் போய்க் கண்டு துயர மூண்டார்கள். இதன்றியும், வாகுலீகன், சோமதத்தன், பூரிசிரவன் இவர்களுடைய தேசிகைமா ரெல்லோருந் தங்கள் தங்கள் கணவருடன் தொடர்ந்து ஆவி விடுபவர்களைப் போலச் சோர்ந்து உயிர்த்தார்கள். இன்னுமுள்ள தேச ராஜர்களியாவரும் இறந்து கிடக்குந் தன்மையை நோக்கி, திரிதராஷ்டிரனுங் காந்தாரியுந் தன் பிள்ளைகள் பொருட்டால் இவ்வளவு பேர் மாண்டார்களே யென்று தூண்டா விளக்குபோற் சுடர்விட்டெரிந்து சோர்ந்தார்கள். அப்போது கிருஷ்ணமூர்த்தி அவர்களைத் தேற்றிச் சொல்லுகின்றார்.

---

### காந்தாரிதேவி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைச் சபித்தல்.

ஓ! இக்குவலயத்தைக் கொண்டலினும் பரிந்து காக்கும் சூரவர்களே யான் சொல்வதைக் கேளுங்கள், இதெல்லாம் மேகமேனியானாகிய வேதநாராயணன் உலகிலுள்ள அரசர்களெல்லாம் மடிந்து அவிந்து போகும்படிக்கு இச்சைகொண்டு திருவிளையாடலாக நடத்தியதன்மையல்லது, வேறொருவரால் விளைந்ததல்ல, ஆதலால், இவைகளெல்லாம் நாராயணன் செயலென்றெண்ணுங்கள் இன்னும் பார்க்கப் பார்க்க இப்படியேயிருக்கும். என்று சஞ்சலம் அடைந்தஅவர்களின் சித்தத்தைத்தணித்தார். அந்தக்கோபாலனுடைய பேச்சைக் கேட்டு யாவரும் உண்மையென்று தைரியங்கொண்டு தேறினார்கள். அப்படித் தேறியும் பேதைமைக் கலக்கத்தாற் காந்தாரியம்மன் மாத்திரந் தேறாதவளாய், துளவணி மார்பனாகிய மாயனை நோக்கி, கண்கள் சிவந்து, இரத்தக் கண்ணீர் விட்டழுது, நெஞ்சுகள் நெருப்பெழுப்

புழுங்கி, ஐயோ! ஓ அனியாயக்காரனாகிய கிருஷ்ணா ஓ வஞ்ச நெஞ்சனே நாராயணனென்பவன் வேறொருவ னிருக்கின்றானென்றும், அவனுடைய விளையாட்டாய்ச் சகலமும் நடந்து நிறைவேறிய வென்றும், எங்களுக்குப் பராக்கு காட்டுகிறாயோ? அப்பனே உன்னுடைய சித்தல்லாமல் வேறொன்றிருக்கிறதா? இதெல்லாம் உன்னாலேயே விளைந்தது மறுபடியும் உன்னாலேயே முடிந்தது. ஆகிலும் அவர்களின் புத்திர பௌத்திர மித்திர புருஷாளைப் பறிகொடுத்து வயிறெரிந்து வாடுகிற வாட்டமும், மனதெரிச்சலும், உன்னைலேசாக விடுமா? ஆ! படுபாவி. இவ்வுலகத்தை யெல்லாம் படுசூரணமாகப் பாழாக்கிவிட்டாயே ஓ! பிறந்த விடத்தை மறைந்த பேயா, ஓ! பேயின் முலைப்பாலுண்ட வாயா ஓ! அசோதையாகிய தாய்க்குச் சேயா. ஓ! அன்புடைய கோபிகா ஸ்திரீகளுக்கு நேயா ஓ! அநேக விசித்திரங்கற்ற மாயா, ஓ! அப்புய-மாதுறையுங் காயா இந்தப் பாவத்தினாலே உன்னை நான் சபிக்கிறேன். பிடி சாபமென்று கடுங்கோபமாகக் காந்தாரி சொல்லினாள்.

உடனே புந்துள்வணிந்த பொன்னார் மார்பனவளைப் பார்த்து, ஓ மாமி இதோ வந்தேன் பொறும். பொறும். என்று ஏட்டநின்றவர் கிட்டவந்து, மட்டமாகிய ஒரு சவுக்கக் குட்டையை விரித்து, உமதிஷ்டப்படிக்கு ஏதேது சாபமெனக்குக் கொடுக்க விருக்கின்றீரோ? துட்டத்தனையும்விட்டுவிடாமல்இக்குட்டைத் துணியிற் கொட்டிக்கொடுமென்று இட்டத்துடனின்றார். அதுகண்ட காந்தாரியம்மனனவள் அவ்வரைப் பார்த்து, குடும்பங்களை யெல்லாங் குருக்ஷேத்திரத்திற் கெடுத்த தோஷத்தால் உனது புத்திர மித்திர களத்திராதிகளும் இப்படியே சிதைந்து அழிந்துபோகக் கடவதென்று சொல்லி, மாதவர் தேவர் முதலாகிய யாவுரோடு மற்ற மூவருந் திடுக்கிடும்படியாய்ச் சபித்தாள். இப்படி சாபமிட்ட அந்த உத்தமியைக் கண்ணன் பார்த்து, கற்பின் உறுதி வாய்ந்த கருங் கண்களையுடைய மாமி இந்த உலகத்தில் வந்து உற்பவிக்கும் பொருள்கள் முதலிய உயிர்களெல்லாம் மறுபடியும் ஒடுங்கும்படியானது உண்மையல்லவா? நீருந்தப்பாகச் சபிக்கவில்லை. தோற்றமெல்லாம் அழியுமென்று சொன்னீர். எப்படியும் விதிவழியே மதியும், அம்மதிவழியே கதியுமுண்டாகும். இதற்கு யாதொரு தடையுமில்லை. என்று சொல்லி விரித்த துவாலைக் குட்டையை வாரிச் சுருங்கி முடிந்துகொண்டு பெரு நெருப்பாகிய மலரகிதமாயன் அவர்கள் யாவருடனேயுங் கலந்து திரிந்துகொண்டிருந்தார்.

---

## மாண்டோர் யாவருக்குத் தீக்கடன் முடித்தல்.

இந்தப் பிரகாரந் திரிதராட்டிரன் முதலாயினோர் குருபூமியெல்லாந் திரிந்து, மடிந்த பேர்களிற் காணத்தக்க பேர்களை யெல்லாங் கண்டு கவலைகொண்டு, யாவரு மொருவனத்தில் வந்து சேர்ந்து வருந்தி, பின் பொருவாறு மநோதுக்கமாறி யிருந்தார்கள். அப்போது பாண்டவர்கள் பெரிய தந்தையாகிய திரிதராஷ்டிரனைத் தொழுது பணிந்து, அத்தனே இனி அடியேங்கள் செய்யத்தக்க செய்கை யாதோ அதனைத் தேவரீர் கட்டளை யிட்டால் அந்தப்படி நடக்கிறோமென்றுரைக்க, பூலோக சக்ரேஸ்வரனாகிய திரிதராஷ்டிரன், சாஸ்திரிகள் முதலிய பெரியோர்களிடத்தில் தர்மம் விசாரித்து, தருமராஜனை யழைத்து, அப்பா குழந்தாய் நமது சொந்தமானவ ரென்றும் அன்னியரென்றும் பாராமல், வேறுவிதம் ஓராமல் மனந்திரும்பிக் சோராமல் இன்னிலத்தில் மாண்டோரியாவருக்கும் தீக்கடன் முடித்துவிடுகவென்றான். இப்படி முதல்வனாகிய திரிதராஷ்டிரன் சொன்னவுடனே வீமசேனன் முதலாகிய பேர்கள் மரங்களைநெருங்கிய வனங்களிற் பிரவேசித்து அநேக மரங்களைத் துண்டித்து பாசறைச் சாமான்களெடுப்பதற்கு விஸ்தாரமா யமைந்திருந்த வண்டிகளிலேற்றி சமர் நிலத்திற் கொண்டுவந்து குவித்தார்கள். மன்னனாகிய திரிதராட்டிரன் எவரெவர்களுக்கு எப்படி விதிக்க வேண்டுமோ அப்படிக்கெல்லாம் எரி மூட்டும்படி முறையாக விதித்தான். ஆகாய கங்கை பெற்ற மைந்தனாகிய வீஷ்மாச்சாரியார் ஒருவர் நீங்குதலாய் மற்றப் பேர்களுக்கெல்லாம் உரித்தாகிய ஈமவிதிக்கடனை முடித்துத் தீமூட்டினார்கள். அப்போது அநேகங் கோடி காடுகள் பற்றியெரியும் தன்மைபோல் அக்கினி தேவன் அனல் மூண்டெரித்தான்.

அப்போது கைக் குழந்தைகளைக் காப்பாற்றும் பொருட்டுப் பிராணனுடனிருக்க வேண்டுமென்னும் ஆசையையுடையஸ்திரீகளும் கருப்பங் கொண்டிருக்கும் ஸ்திரீகளுந் தவிர மற்ற பத்தினிமார்களிற் சிலர் சாகமனம் என்னும் உடன்கட்டையேறியும் சிலர் அக்கினிப் பிரவேசமாகியும் தங்களுடலை நீங்கித் தங்களுயிர்த் துணையாகிய நாயகனுடன் மூவுலகமும் போற்றும்படியாய்த் தேவுலகம் அடைந்தார்கள். அக்கினிசாக்ஷியாகக் கலியாணஞ் செய்த புருஷனை ஒரு பொருளா யெண்ணாமல் அந்த நாயகனுடைய ஆக்ஞை தள்ளி நடக்கும் பெண்சாதிகளெல்லாம் மகா பாவிகளென்று எட்டு திசையும் நிந்தித்து பழிக்கும்படிக்கிருந்து புருஷன் போனாற் போகிறான் நாம் மாத்திரஞ் சாகாமலிருந்தாற் போதும் என்று மேனி துலங்கி வெண்கலையுடுத்தி விருந்துடனுண்டு இருந்துயிர் வளர்த்தார்கள். இப்படி அந்தக் குருக்ஷேத்திரத்தில் ஒரு ஊசிமுனை யூன்றும் இடங்கூட விறுதாவாயிராமல்எங்கணுங் கனலெழுந்தெரியவும், நூறு கோடி மன்னர்கள் பிணங்களை வாரி நெருப்புக்கு உணவு கொடுத்துத் தள்ளிக்கொண்டிருக்கவும்- நாய் - நரி-கழு - காக்கை இவை முதலிய பக்ஷிகளுக்கெல்லாந் திருப்தியாகிய இரை அகப்பட்டுப் பூமிகளிலு மலைகளிலும் பொருந்திய தீப்பெருக்கத்தாற் புழுங்கித்திகைத்துக்கொண்டிருக்கவும், சமுத்திர மத்தியிற்றங்கிய வடவாமுகாக்கினியின் ஆரபாரம்போற் பிணங்களெரியவும், நிணங்கள் குவியவுமாகக் கடுங்கனல் கனகனவென்று கலந்தெழுந்து நிமிர்ந்து புதைந்து கடகடவென்றிடிந்து எரியும்போது, இந்த யீரேழுலகமும் எப்படியாமோ? என்ன பாடுபடுமோ? என்று பெரியோர்களுந் தேவர்களுங் கலங்கி அலமலங்கி, பிரமனைக்கண்டு கேட்பதானார்கள்.

இந்தப்பூமி இடங்கொள்ளாமற் பிணங்களெரிகின்றதழலின் கொழுந்தும் அழலின் புகையும் அண்டகடாகம் வரைக்கும் எழுந்துளரியாநின்ற தோற்றம் எப்படியிருந்ததென்னில், உத்தமராகிய ஆஞ்சநேயர் இலங்காபுரத்தை எரி மூட்டிய பான்மையை ஒத்திருந்தது. மேலும், அத்தனாகிய திரிநேத்திரதாரியானவர் நகைத்து மூப்புரத்தை யெரித்த கனலையும் ஒத்திருந்தது. இதன்றியும் பாவிகள்செய்த வஞ்சனையெல்லாஞ் சமிதையாகவும், அனலிற்பிறந்தாள் முதலிய ஸ்திரீகள் அழாநின்ற கண்ணீரெல்லாம் நெய்யாகவும், பாண்டவராகிய வயவீராள் உரைத்த சபதங்களெல்லாம் வேதமந்திரமாகவும், நீதிபரனாகிய தருமராஜனுடைய பொறுமைகள் நெருப்பாகி, வெறுப்பாகிய நீண்டெரியுந் தன்மைபோலும் இருந்தது. இப்பால் தருமராஜன் முதலான பாண்டவர்களும், பெரிய தந்தையான திரிதராட்டிர மகா ராஜனும், சிறிய தந்தையாகிய விதுரராசனும் உரிமையான குந்திதேவியும், காந்தாரியும், உலூகியும், திரௌபதையும், சுபத்திரையும் உத்தரையும் இன்னுமுண்டான புருஷர்களுஞ் சில ஸ்திரீகளுஞ் சேர்ந்து, துன்ப மென்னும் கடலில் ஆழ்ந்து, இரங்கி வீழ்ந்து, மண்மேற்றாழ்ந்து வருந்தினார்கள். அப்போது விதுரராஜனும் மாயவனாகிய வாசுதேவனுந் தேற்றி, துன்பமாற்றி, விவேக விக்ஞானம் போதித்தார்கள். அவர்களுடைய போதனையினால் எல்லோருந் தெளிவடைந்து, தேசமாகிய மடமாதர்களுடன் திருபருந்தேறி உயிரிழந்த உடல்போலுங் காற்றினாற் கலங்கியசைகின்ற பெரு வெள்ளச்சலம் போலு மிருந்தார்கள்.

ஈமவிதி முடித்த சருக்கம் முற்றிற்று.



## இரண்டாவது

# திலோதகச் சருக்கம்.

### கண்ணன் துதி.

மருந்தைவா னவர்க்களித்து வையமுண்டு செய்யசெம்
பருந்திலேறி மாதவத்தர் பணியவாயர் பாடியிற்
பொருந்துகின்ற பொதுவர்மாதர் பூந்துகிற்க வர்ந்துபூங்
குருந்திலேறு கின்றகொண்டல் குரைகழல்க டுதிசெய்வாம்.

கேட்டீரோ ஜனமேஜயமகாராஜனே! ஈமவிதிமுடித்து இரக்கக்கடலிலாழ்ந்து வருந்துகின்ற யாவர்கட்கும் பொய்மொழிவிண்டு மெய்மொழிகொண்ட விதுரமகாராஜன் பல பல விதங்களினாலுந் தருமங்களைச்சொல்லித் துயர்போக்க, அதனால் மெய்மையாகிய வேதியர்களும் வேந்தர்களும் மற்ற மாந்தர்களோடுமன்னர்குல மாதர்களுந் துன்பம் நீங்கினவராக, அப்போது கலக்கமே துலக்கமாகக்கொண்ட காந்தாரி நாயகன் விதுரனைப் பார்த்து, ஓ! விவேகத்திற் சிறந்து பழகிய விதுரவேந்தே! யாவரையுஞ் சுட்டுப்போட்டோம். எல்லாக் கலக்கமுந் தீர்ந்தோம். இனிமேல் செய்யுங் கருமங்களுக்குத் தருமநூன்முறைகளில் யாது கட்டளையோ? அதனைச் சொல்லுக. என்று உட்கசிந்த திரிதராட்டிரமகாராஜன் புத்திரசோபத் துயரப் பெருக்கத்தினால் உருக்கமாகச் சொன்னான். அதற்கு ஒருமை மனத்தோனாகிய விதுரன் மனமகிழ்ந்து, என் அண்ணாவவர்கள் மிகுந்த சோபங்கொண் டிருக்கின்றார். அந்தச் சோபத்தை ஆற்றவேண்டும் என்னும் அன்பினையுடையவனாய், மாமுனிவோர் ஆதியிற் கூறியிருக்கும் வாக்கியத்தின் வண்ணந் தமயனுக்குச் சில சொல்லத்தொடங்கினான்.

---

### திரிதராட்டிரன் சோகந்தீர விதுரன் சேகசீவ சம்பவ லக்ஷண முரைத்தல்.

ஓ! இவ்வுலகில் முழுமைக்கும் அதிபதியாகிய அண்ணா! தருமமென்பது ஒருவர் சொல்லுந் தகைமை யுடையதல்ல. எவராலுஞ் சொல்லப்படாதது. சொன்னாலுந் தெரியக்கூடாதது. காரியாகாரியக் கருமங்களை அறியுந்தோறுந் தருமமென்பது இன்னதென்றுதெரியும். அன்றியும், சாஸ்திரங்களிற் பெரியோர்களால் ஏற்படுத்தி வைத்திருப்பதைச் சாது சங்கத்துடன் பார்த்துணர்ந்து பழகினால், இந்தப் பூமியிற் பிறக்குங் கருவினுடைய துன்பமாறிப்போம். ஓ காவலனே! இந்தக் கரும பூமியில் அந்தத் தரும சாஸ்திரத்தின் கருத்தானது மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைஎன்னும் பெரும் புறக்கடலில் வீழ்ந்து மூழ்கிய பாவிகளால் அறியுந்தர முடையதன்று. பின்னை யார் அறியத்தக்கவரென்றால்? அகத்தை யகற்றி அசைவற்று, உரையற்று, உயவற்று, மலைவற்று, மாசற்று, விசுவாசமுற்ற மகிமையோர் அறியத்தக்கவர். ஆகிலுங் கொஞ்சஞ் சொல்லுகிறேன் கேளும் அண்ணாவே! சுக்கில சுரோணிதமென்னும் இரண்டும் பனித்துளி போற் சேர்ந்து, அவசமுங் கவசமுமாகி உருவாய்மூழ்கி, வாயுவினால்மாழ்கி, தாயின் கருப்பத்திற் புகும்போதே ஐந்துகிளையாய்ப் பிரித்து அசைந்தாடும். சில நாட்சென்றால் நரம்பு, எலும்பு, தசை, தோல் இவைகள் கூடும் பின்னுஞ் சில நாளில் திருந்திய அவயவங்களெல்லாம் பூரணமாக உண்டாகும். இன்னும் சில நாட்சென்றாற் கருப்பைக்குட்டிருப்பது ஆடி அசைந்து, கதலுவ்தற்கு இடங்கிடையாமல் ஒருக்கிடையாகவிருந்து எப்போதாகிலும் ஒருவேளை புரளுமாயின் உலகமெல்லாம் புரளுந்தன்மைபோற் கருச்சுமந்த கன்னிகை வருந்தக் கவலைவிளக்கும். பின்னுஞ் சில நாட்போய்ப் பூவுதயமாகுங் காலத்தில், தசவாயுவிலும் பெரியதனஞ்சயனென்னும் வாயுவினால் தலைகீழாகத்திரும்பி வரும். அப்போது வருகிற வழியானது முழுமையு நெருக்க அந்த உபாதியால் வெந்து மெலிந்து நிலத்தில் வந்து விழுந்து இறங்கும்.

அப்பால் வியாதிகளினல் வருந்தி, பசியினல் அலேப்புண்டு, காமமுதலியபைசாசின் மயக்கங்களிற் றடுமாறி, கல்வி முதலிய பேச் சறிந்து, பெருந் தன்மையாய் உயர்ந்து, தாய், தகப்பன், தமர் இவர் முதலாகிய பேர்கள் களிக்கும்படிக்குச் சஞ்சரித்து, பொருள் தேடவிரும்பி, வஞ்சனையும் பொய்யுங்கற்று, மகாபாவந்தேடி, மனந்தடுமாறி, பரதாரம், பிறர் பொருள் என்று நினையாமலாசை கொண்டு, பாவமும்பழியு நாடாமற் பலதிசையும் போய்த் திரிந்து, திருட்டுத்தன மேலுற்று, சமுசார வாழ்க்கையிற்றாழ்ந்து, சஞ்சலவேட்கையிலாழ்ந்து, சிலகால மயங்கி மூறுக்காய்த் திரிந்து, அப்பாற் கிழத்தனம்வந்து உழன்று அலேயச்செய்யும். திரையுநரையுஞ் செறிந்து, கிண்கிணென்று இருமி, தடியூன்றித் தள்ளாடி, பூர்வமான பாலியத்தில் தான்தேடிவைத்த தீவினைகளெல்லாம் பின்னு மூன்னும் உலேக்க மதியழிந்து, மகிழ்வெழுந்து, மனங்குறைந்து, மனுஷத்தன மறைந்து, கண்ணிருண்டு, காதடைந்து, காலசைந்து, கண்டோர் நகைக்கக் கலக்கப்படுஞ் சமயத்தில் உயிர்த்தரகராகிய யமபடாள்வந்து தாளாமல் விரைந்து இழுக்க, ஸ்தூலதேகத்தை விட்டு அவர்கள் வசத்திற்சிக்கி, சூட்க்மதேகத்துடன் எமலோகம்போய் விக்கி அவ்விடத்திய காரிய மனுபவித்தற்காக யாதனு சரீரமெடுத்து, நல்வினை தீவினையின் பயனையடைந்து, மறுபடியும் அந்தஎமபடாள் இந்தக் கர்மபூமியிற்றள்ள, பழையபடி தாயின் கருப்பத்தில் உருவெடுத்து ஸ்தூல தேகம் பூண்டு, சாதல் பிறத்தல் என்னும் இவ்விரண்டும் நம்மைவிட்டு நீங்காமல் அலேக்கின்ற சம்சாரந் தவிர்த்தவன் எவனே? அவனே வேதநான்கும் இறந்தவிடமாகிய வேதாந்தத்தின் மெய்ப்பொருளென்று மேலோராகிய நூலோர் செப்புவார்கள்.

இப்படியாக வெடுக்கும் இந்த உடலின் கணக்கை எவர்களாலும் அறியப்படாது. கடற்கரையிற் பிறந்து அலேயினுற் பரந்த கருமணலேக் கணக்கிடுவாரெவரோ அவர்கள் தான் அறிவார்கள், அரசனே! உடுத்த வஸ்திரம் பழசாய்ப் போனல் அதுபோய் வேறென்றாய்வரும் புதுவஸ்திரம்போல், இவ்வுலகிலுண்டாகிய உயிர்கட்கெல்லாம் வேறு வேறாக உடல் வந்தமையும், இதனுடைய நிலேயைத்தாங்கள் அறியாமலும், தமதுபொறிபுலன்களே அடக்காமலும், தாங்கள் இத்தன்மையோரென்று நினேக்காமலும் இருந்து, குருக்களென்று பேர் வைத்துக்கொண்டு பிறருக்குபதேசம் செய்வார்கள். இவ்வுலகத்திற் சிலபேயர்கள் இன்னும் பலபேயர்கள் தங்கள் குலத்தைச் சிலாக்கியமாக மதித்து, பிறருடைய குலத்தை நிந்திப்பார்கள். மீன்னுஞ் சிலபேயர்கள் தங்களுக்கு நிலேயாகிய பொன்பொருள் இருக்கிறதென்று இறுமாந்து களித்து, செல்வ கர்வத்தினல் ஆதுலரைப் பொருள் செய்யாமல் இகழ்ந்து பேசுவார்கள். இப்படியே இவ்வுலகின்கணுள்ளோர் யாவருமயங்கி, அனித்திய வாழ்வை நித்தியமென்று நம்பி, பெரும்பாசக்கூட்டத்தில் அகப்பட்டுக்கொண்டு, தெளிவில்லாமல் அலேந்து உளேந்து குலேந்து போவார்கள். கொஞ்சப்போதேனும் நல்ல பழக்கத்திலிருந்து, தானென்று பேசுவதையும் அவனென்று ஏசுவதையும் சற்றெண்ணி நோக்குவார்களாகில், சஞ்சலமென்பதுஞ் சலிப்பென்பது மற்று ஜனனமரண வேதையில் அகப்பட்டு உழலாமல் முத்தியடைவார்கள்.

---

## சீவர்களுக்குண்டான இன்ப துன்ப வியல்புரைத்தல்.

ஐயா இறைவனே! இதன்றியும், இவ்வையகத்திற் செய்தவத்திலோங்கியமாமறை நூல்வல்ல மாமுனிவர்கள் திருவாய்மலர்ந்த தெளிவினே, உள்ளங்கை நெல்லிப்பழம் போல உண்மையாக நான் கண்டதொன்றுண்டு. அது பொய்மை மனத்தராகிய பேர்களுக்குச் சொல்லக்கூடாத நல்லநெறியாகும். அத்தன்மையாகிய அருமைப் பொருளே உமக்குச் சொல்லுகிறேன். தேவரீர் இந்தப் பிரபஞ்ச மயக்கம், புத்திர வாஞ்சை இவை முதலிய பெரும் பேயினுட்டத்தை விட்டுக் கேளும். இப்புவியில் ஒரு பிராமணச் சிறுவன் கர்ந்தாரகிரியென்னும் ஒரு பெரிய மலேயை நோக்கிப்போனுன். அப்படிபோனவன் தன் மனத்திலெண்ணிய ஒப்புவழிவிட்டுத் தப்புவழியாகச் சென்று அடர்ந்து படர்ந்த முட்காட்டடைந்து பசியால் வாடிப்போம்போது, சரபசார்த்தூல முதலாகிய துஷ்டஜெந்துக்களினல் அயர்ந்து பிராணபயங்கொண்டு, புலி முதலிய மிருகங் கொன்றுபோடுமே யென்னும் அச்சமானது தன்னு

யினை வாட்ட நாட்டமழுங்கி, காட்டிலுமேட்டிலும்விழுந்து ஓட்டமாய் ஓடினன். அப்படி ஓடிவருகின்ற வழியில் ஒரு ஸ்திரீயானவள் இவன் பேரில் மோகங்கொண்டு கிட்ட வந்து கூடி, சேரறென்பதைக் கண்ணுற் காண்பதற்கும் அருமையுடையவளாய், எனக்கு ஆகாரம் வேண்டுமென்று நாடினள். அப்போது வறுமையடைந்து பெருமை குறைந்த அந்தப் பெண்ணினுடைய பொல்லாத முகத்தைப் பார்த்து மிகவு நடுங்கி, கொஞ்ச மயங்கி நின்றான்.

இதற்குள் ஒரு வேங்கையானது இவனைத்தொடர்ந்து துரத்திக்கொண்டு சமீபத்தில்வந்தது. அதையவன் பார்த்துப்பயந்து, பக்கத்திலுயர்ந்து நீண்டு பணைத்துத் தழைத்து இருக்கின்ற ஒரு ஆலமரத்தைக் கண்டு, அம்மரத் தண்டையிலோடி, அதன் மேற் றாவியேறி, உடலஞ்சலித்துத் தள்ளாடி, ஒரு கிளைமேற் சாய்ந்து, அடிவாரத்திற் புலிமிருக்க ஆய்ந்து, கொஞ்சம் வாட்டமாகிய நித்திரை மயக்கத்தாலோய்ந்து, மாய்ந்தவன்போல் மண்ணில் வீழ்வதானன். அப்படி வீழ்கிறவனுடைய கைகலானது நானு பக்கத்திற் றழாவும்போது, அக்கைகள் அம்மரத்தின்மேற்சுற்றி படர்ந்திருந்த சிலபசுங் கொடிகளைப் பிடித்தன. அது கொஞ்சம் ஆதாரவாக யிருக்கவே அக்கொடிகளைப் பற்றிச்சென்று சந்தோஷித்தான். உடனே இவன் பிடித்த படர்கொடிகள் சரசரவென்று வுருவிப் பூமியில் இறங்கி வந்தன. அப்போதவன் ஐயோ! இந்தக் கொடிகளும் நம்மைத்தாங்காமற் கழன்று வருகின்றவனே யென்று விசனங்கொண்டு, நம்மையெங்குகொண்டு போகின்றனவோ வென்று தலை குனிந்து பூமியைப் பார்த்து, நல்ல காரியம் நம்மைப் பூமிக்குக் கொண்டு போகின்றன. ஆனதால் நாம் பூமியிலிறங்கி, அந்தப் பெண்ணினுடன் கூடிப்போய்விடலாமென்று மகிழ்ச்சி யடைந்தான்.

அப்படி பூமியைக் கிட்டியும் இன்னுங் கீழே போய்க்கொண்டிருப்பதினால், இதென்னடா இவ்வளவு ஆழமென்று நிதானித்துப் பார்த்தான். அவ்விடத்தில் ஓர் அகண்ட ஆழமான ஒரு பாழுங்கிணறிருப்பதைப்பார்த்து, ஆ! ஆ! தெய்வமே யென்று அலறி, கதறிப்பதறிக் கலங்கி, கிணற்றிலாகிலும் இறங்கி அப்பாற் கரையேறுவோமென்று கொஞ்ச மகிழும்போது அந்தக் கிணற்றினுள்ளே ஒரு பெருங் கரும்பாம்பானது அழற் கண்விழித்து, அகலமான படத்தை விரித்து ஓங்கியோங்கி இவனைச் சீறியடிக்கத் தலையெடுத்தது. அதையவன் காணலும் உயிர் குன்றந்து பரிதாபமுற்று, கொடிகளாகிய பற்றினால் இருகாலையு முடக்கிக்கொண்டு, ஊசலாடுவதைப்போ லசைந்தாடிச்சுழன்று, அந்தப் பாழுங்கிணற்றின் பக்கத்திற் குதித்துவிடலாமென்று களித்துப் பாயப்போயினன். அப்போது கொல்லத்தக்க கோபமுற்ற ஒரு காட்டானையானது நீட்டமாகிய இரு கொம்புடன் ஆறு தலையுடையதாய் பன்னிரண்டு கால்களைப் பெற்று, மலைக்கல்லைப் போல் உடல் தாங்கி, இருபுறங் கறுப்பும் ஒருபுறம் வெளுப்புமாய்க்கிணற்றுப்புறத்தில் நின்று, தும்பிகையாலிவனைத் துழாவிப் பிடிப்பதாயது. அதைக் கண்ட மாத்திரத்தில் அவன் நடுங்கி நாக்கைத் துழாவி, திடுக்கிட்டிறங்கித் தேம்பி, தான் கைப்பிடித்த கொடிகளை விடாது மேலே யேறிப் போய்விடலாமென்று தயிரிய சந்தோஷங்கொண்டு மேல் நோக்கினன்.

அந்தக் கொடிகளின் பேரில் தற்செயலாய் எண்ணிறந்த கால்களுந் தலைகளுஞ் சிறைகளுமுடைய அளவற்ற கோலாகல வண்டுகளுந் தும்பிகளும் மொய்த்து, இவனைப்பற்றி விறுவிறென்று அடித்து மோதுவதாயின. அம்மோதலினால் வேலாயுதம்பட்டு வீழ்ந்தவனைப்போற் பொருமலடைந்து அயர்ந்து உன்மத்தனானன், அந்த வேளையில்டுத்த கொடிகளிற் கட்டியிருந்த தேன்கூடுடைந்து, தித்திப்பாகிய தேன் தாரையாய் ஒழுகுவதாயது. அப்போதிவ்வளவுகவலையுற்றிருக்கிற இந்தப் பிராமணன் பசியினாலுந் தாகத்தினாலும் வருந்தி வாடியிருப்பவனாதலால் அந்த வண்டுகள் வாயினாற் சேர்த்த தேனைத் தன் வாய் திறந்து பிடித்துக் குடித்து நாவினாற் சுவை யறிந்தான். இப்படி இவன் சுவைத்துக்கொண்டிருக்கும்போது வெள்ளையுங் கருப்புமாகிய இரண்டு எலிகள் யிவன் பிடித்திருந்த கொடிகளை யடியிற் கடிக்க, அதைப்பார்த்து நாவறண்டு நாடி யொடுங்கி நலிந்திருந்தான், அண்ணா! இப்பிராமண னனுபவித்த யின்ப துன்பமும் பார்த்தீர்களா? இப்படியே யிருக்கின்றது இச்செகத்திலுள்ள சீவர்க ளனுபவிக்கு மின்பதுன்

பங்கள் என்று செவ்வையாகிய மனமுடைய ஞான விதுரன் சொன்ன சொல்லை மையலை யுடைய மன்னவரைவரும், திரிதராட்டிரனும், மற்றச் சொல்வல்லோராகிய துயர்களுங் கேட்டு, ஏதொன்றுந் தோன்றாதவர்களாகி, ஓ! மெய்யுணர்வுடைய விதுர மகாராஜனே! அந்தப் பிராமணப் பிள்ளையின் கதியென்ன? அவனுடைய மீட்சியாது? யிவ்வளவு துன்பத்தினின்றவன் எப்படி தேறினனென்பதையுஞ் சொல்லுமென்று கேட்டார்கள். இப்படி பாராளும் வேந்தர் பலரு மற்புதமடைந்து மிகுந்த பட்சமாய்க் கேழ்க்கவே, தன் பெரியோனாகிய திரிதராட்டிரனை நோக்கி உரியோனாகிய விதுரராஜன் சொல்லத் தொடங்கினன்.

ஓ அரசர்க்கரசாகிய அண்ணாவே! கேளும்; காந்தார வரையென்பது, மெய்ம்மையாகிய மோட்சமென்னும் முத்தி ஸ்தானம் இவன் நோக்கிப்போன காடென்பது, இந்தப் பிரபஞ்சம். தப்பு வழியாகச் சென்றது தீவினைவழி, ஒப்புவழி நாடியோடியது, நல்வினைவழி, தாறுமாறாகிய காடுகளெல்லாம் வேறுவேறாகிய பேத உயிர்கள். பலவிதமாகிய மிருகங்களெல்லாம் அழகையழிக்கவந்த தீயவியாதிகள். மானிடப் பெண்ணாக வந்தவள். விகுர்தாகிர்தி யென்னு மாயை. உற்பத்தி, சஞ்சரித்தல், ஒய்ந்தொடுங்கல் என்னும் இம்மூன்றுங்கூடிய அல்பஉடலானது ஆலமரம். அம்மரத்திற்படர்ந்திருந்த கொடிகள் பலவித ஆசைகள். கிணற்றினுள்ளிருந்த கரும்பாம்பென்பது, தென்றிசையிலிருந்தெழுந்து உயிர்களைப் பிடிக்கவரும் கூற்றுவன். எலிகளிரண்டும் பகலும் இராத்திரியும். யானையானது ஒரு வருடம் முகங்களாறும், ஆறுருதுக்கள். இந்த யானையினிற மிரண்டும் உத்தராயனம் தக்ஷிணாயனம். கால்கள் பன்னிரண்டும் பன்னிரண்டு மாதங்கள். ஊழ்வினையின்படிக்கு நேரிடுங் கோரிக்கை தேன் துளிகளாம். ஐயா! இப்படி அத்தேன் துளிகளை யருந்தி ருசிப்பார்த்துக் களித்தவை, உயிர் விடையங்கள். பிராமணனென்றது ஆன்மா. துரத்திவந்த துஷ்டமிருகங்களும், வழியிற்வந்த பெண்ணும், கிணற்றிலிருந்த பாம்பும், கரையினின்ற யானையும், மோதியடித்த அளிகளும், கொடியைக்கடித்தஇரண்டெலிகளும் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்னுமறுவிதப் பகைகளாம். இந்த ஆறுவகையாகிய பெரும்பகைகளுக் குட்பட்டடங்கி, அச்சமுற்றிருந்து, நேரிட்டொழுகிய தேனைச் சுவைத்தல் இந்த உயிர்க்கடுத்த இயல்பாக்களும், பேறுகப்பெற்ற உடலினால் வருவது எப்போதுந் துன்பமே யல்லாது இன்பமுண்டென்று சொல்லுவதற்கு எவ்வகையிலுமில்லை. உண்டானால் நீர் கண்டமட்டுஞ் சொல்லும். என்று விதுரமகாராஜன் தெளிவுபெற வுரைத்து நிறுத்தினன்.

## யாவருங் கங்காஸ்நானத்திற்குச் சென்று திரௌபதியின் கூந்தல் முடிப்பித்தல்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே! இப்பாலிவர்களி யாவருங் கங்காநதிக்குப் போகும்படியாய்ப் புறப்பட்டார்கள். அப்போது ஸ்ரீவேதவியாசரும் நாரதரும், தௌமியாச்சாரியரும், கிருபாச்சாரியரும், இன்னும் பலவாகிய முனிக்கூட்டங்களும் பின்தொடர்ந்து வந்தார்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்தில் இவர்களெல்லோரும் பணிந்து ஆசீர்வசனம் பெற்று, அவர்களையுந்தங்களோடு அழைத்துக்கொண்டு போனார்கள். மேகத்துக் கொப்பாகவும், பொருந்திப் பெருக்கத்துக் கொப்பாகவும், பொன் மாரிகளைப் புலவருக்கு வருஷிக்குங் கரத்தையுடைய பாண்டவர்களும், பூமிக்கிறையாகிய திரிதராஷ்டிரனும், குந்திதேவி, காந்தாரி இவர் முதலிய பாவைமார்களும், தத்துக்கியானியாகிய விதுரமகாராஜனும், மற்றுமுள்ள பேர்களும், சிறந்த முகில் வண்ணனாகிய ஸ்ரீநாதனும், அவருக்கிளையவரான சாத்தகியும் சூரியகுலத்திற் சிறந்த பகீரதனால் வெளிவந்த பாகீரதி நதியைச் சேர்ந்து, உயுத்தகளத்தில் உடன்று உயிர்விட்ட தங்கள் தங்கள் புத்திர மித்திர பௌத்திராதியரை யெல்லாம் நினைத்து கவலைகொண்டு, கண்கலங்கி, அப்பா மக்களே! உங்களை யெல்லாம் ஒழித்துக் கை கழுவி விட்டோம். உலகங்களெல்லாம் மூழ்கிப் போயின. இனி யாங்களுந் தலைமுழுகிப் போடவேண்டிய கடனென்றிருக்கின்றதல்லவா? என்று யாவருஞ் சஞ்சலப் பட்டார்கள்.

இவர்கள் படுந்துயரத்தைப் பாகீரதியானவள் கண்டு, தானுந் துயரப்படத் துணிந்ததைப்போசற மூத்திர கோஷ்டியிலும்

அதிகமாக வாய்விரைந்து அலைகளாகிய கைகளினால் மோதிமோதி நிலத்திலறைந்து விழுந்து, வாய் நுரைக்குந் தன்மைபோற் செண்டுசெண்டாக நுரைகளைக்காட்டி, கண் சிவந்து கலங்குவதுபோற் கமலமுதலிய புஷ்பங்களெல்லாங் கசங்கக்காட்டி, உள்ளங் கலங்குவதுபோல் வெள்ள நீரெல்லாங்கீழ்மேலாய்க் கலங்கி, கண்ணீரோடுவதுபோல் மலர்த்தேனுஞ் சலமும் மறுகி மயங்கியோடி தனது வாயிலடித்துக் கொள்ளுவதுபோற் கரைகளிலிருக்கும் மணல்களை வாரியடித்து வந்த ஸ்திரீகளைக் கட்டிக்கொண்டு அழுகிறதைப்போல் இவர்களைத் தண்ணீரால் வளைத்து நனைத்து இவர்கள் துயரத்தை ஆற்றி வாய் மூடுவதுபோற் சிறு துளிதுளித்து இவர்களுடைய வாயிலும் புகுந்து ஆயாசந்தீர்த்துத் தன்னிடத்தில் இடங்கொடுத்து உபசரித்தாள் கங்கையானவள்.

அதேனப்படி யென்றால் வீஷ்மருக்குத் தாயாகையால் தன் பிள்ளையைக் குறித்தும் சந்திரவம்சத்துக்கு வந்த சுகதுக்கமுஞ் சூதகாதி முதலியதுந் தனக்குண்டென்பது தோன்றும்படிக்கு முடன்பட்டாளாயினள். பிற்பாடு அரசர்களனைவரும் ஸ்திரீகளியாவரும் வியாசாதி முதலிய அந்தணர்களும் கங்காதேவியைச் சிந்தித்து, சங்கல்ப முதலியவைகள் கூறி ஸ்நானம்பண்ணி ஆசமனஞ்செய்து தங்களுக் குரித்தான அருங்கடன் முதலிய யாவுந் தீர்த்து கரையேறிப் பொருந்தியிருந்து செப முடித்துக்கொண் டெழுந்து குருக்கத்திமரமும், சுரபுன்னை மரமும், கடுக்காய் மரமும், மாமரமும், இலுப்பைமரமும், ஆத்திமரமும், பலாமரமும், சண்பகமரமும், தேக்குமரமும் இன்னும் பற்பல விருட்க்ஷங்கள் நிறைந்த ஒரு தோப்பினிடத்தில் அந்த ராஜாதிபன் முதலிய வேந்தரும், சகல மாந்தரும், மாதவரும் போய்ச் சேர்ந்தனர். மாங்கிலிய ஸ்திரீகளா யிருக்கின்ற மாதர்களெல்லோரும் தங்கள் தங்களுடைய தலைமயிரைச் சிக்கறுத்து நீருலர்த்தி முடித்துக் கொண்டார்கள்.

அப்போது அக்கினியிற்பிறந்த அணங்கனாகிய திரௌபதை மாத்திரம் விசித்திரக்குழல் முடிக்காமல் நின்று விசனப்படுந் தன்மையை வியாசராதி பெரியோர்களெல்லோருங் கண்டு திரௌபதைக்கு சமீபத்திற் போய் நின்று அம்மா! அருந்ததிக் கொப்பாகிய அம்மணி! இராஜராஜர்களுறைந்து நிறைந்த சபையில் நீர்சொல்லிய சபதமும், பிற்பாடு அஸ்வத்தாமன் நிமித்தத்திற்கூறிய ஓர் சபதமும் இப்போது உமது எண்ணத்தின்படி முடிந்ததே இனிமேல் உமது கூந்தலை முடித்துக் கொள்ளலாமே இப்போதும் உமது கூந்தல் முடிவதற்குத் தடையென்ன? என்று தகுந்த முனிவர்கள் கேட்டபோது, தண்டுழாயணிந்த முகுந்தனுந் திரௌபதியைப் பார்த்து, ஏனம்மா நான் தூதுவரும்போது நீர் விசனப்பட்டதற்கு உமது கூந்தலை முடிப்பிக்கிறேனென்று நான் உமக்கு சொல்லிவந்தபடி உமது பதிவிரதா தன்மத்தால் நடந்து போயிற்றே இனிகூந்தல் முடித்துக் கொள்ளலாமே? அதற்கென்ன தடை என்று கூறவும், மாமிமாராகிய குந்திதேவியுங் காந்தாரியு மெழுந்து அம்மருமகளுக்கு உபசாரஞ் சொல்லி தங்கள் கையினால் கூந்தல் முடிக்கத் துணிந்தார்கள்.

அப்போது வஞ்சமில்லா நெஞ்சமுற்ற அஞ்சுகம்போன்ற கிஞ்சகவாயாளாகியபாஞ்சாலியென்னும் வஞ்சி தடுத்து மாமி! நானே முடித்துக் கொள்ளுகிறேன். தங்களுக்குப் பிரயாசம் வேண்டாம் என்று பதின்மூன்று வருஷமும் ஐந்து மாதமுமாக விரித்திருந்த கூந்தலை அலர்ந்த செந்தாமரை போன்ற தனது கரங்களால் வகிர்ந்து வாரி முடித்தனள். அது காலையில் ஆகாயத்திற் றங்கிய தேவர்களுந் தேவ மாதர்களும் மந்தாரம் பாரிசாதம் இவை முதலிய புட்பங்களை வாரி புஷ்கலாவர்த்த மாரிபோலப் பொழிந்து வாழ்த்தினார்கள். அகத்தியமுனி, அத்திரிமுனி, ஆங்கீரசமுனி, உரோமசமுனி, ஏரண்டமாமுனி, கலைக்கோட்டுமுனி, காசிபமுனி, கௌதமமுனி, சமதக்னிமுனி, சனகமுனி, சனற்குமாரமுனி, பராசரமுனி, புலத்தியமுனி, மார்க்கண்டமுனி, வசிஷ்டமுனி, வான்மீகமுனி முதலாகிய மகாமுனிக்கணங்களெல்லோரும் அருளளித்து ஆசீர்வதித்தார்கள். சதுரராகிய பாண்டவர்கள் மனமகிழ்ச்சியானார்கள். புகையூட்டும் பூங்குழலையுடைய சந்திரகுலப் பூவைமார்கள் யாவருந் திரௌபதா தேவியைத் தொழுது கற்புடைமையை நோக்கித் துள்ளினார்கள். இவ்விதமாக மற்ற அன்னம் போலும் நடையினை யுடைய மின்னலிடையாராகிய கன்னியார் யாவரு மிக்க களித்திருந்தார்கள்.

## வியாசராதியர் முன்னிலையில் அடைந்து போயினார்க்கெல்லாம் அருங்கடனாற்றி முடித்தல்.

---

இப்பால் மலைபோன்ற தோளிணையுடைய பாண்டு மைந்தர்கள் சொல்லுதற்கரிய முனீஸ்வரர்களின் வாக்கியப்படிக்குக் கருமஞ் செய்வதற்கு அந்த யிடத்தில் ஓர் சாலை குறித்து அதைச் சூழ்வர அங்குள்ள யாவரும் வந்திருப்பதற்குப் பந்தலமைத்தார்கள். அந்தக் கருமங்களுக்கு வேண்டிய உபகரணங்கள், சமித்து, நவதானியம், நெய், பால், தயிர், தேன், தேங்காய், பழம், சாம்பிராணி, கற்பூரம், அரிசி, காய், இலை, கறி, காரை, சூரை, முன்னை, முசுட்டை, வெல்லம், இஞ்சி, கோசலம், கோமயம், சந்தனம், தாம்பூலம், புஷ்பம், தட்சணை, கலசம், எள்ளு, திருப்பை நூல், தீபம் இவை முதலிய வெல்லா வஸ்துக்களும் அம்பாரமாகச்சேகரித்துதரும்விதி தப்பாமல் வேதவிதி குறையாமல்விதிவிலக்கு வழுவாமல் இறந்துபோன சிரேஷ்டகனிஷ்டரென்னும் மூத்தோர் இளையோர் முதலிய யாவருக்கும் நற்கதி கிடைக்கும்படிக்கு ஆகாயத்திற் பொருந்திய தேவர்களும் மற்றப் பிதிர்த்தேவர்களும் புகழ்ந்துகொண்டாடிக் கொள்ளும்படியாய்க் குறைவில்லாக் கருமம் நிறைவேற்றுவதானார்கள்.

அக்கா லங்குள்ள முனிவர்களுக்குத் தருமராஜன் இருகரத்தையுங்குவித்து ஓ சுவாமிகளே! யான் பவித்திரந் தரித்துச்செய்யப் போகின்ற கருமக்கடன் இன்னாருக்கு முதலிற் செய்யவேண்டியதென்று செவ்வையாக யோசித்து இன்புண்டாகக் கட்டளை யிடுங்களென்று வணங்கிக் கேட்க வியாசாதி முனிவர் நிதானித்துச் சொல்லத்துணிந்தார்கள். ஓ முரசகேதனனாகிய மூர்த்தண்யனே! கேளும் உங்களைப்பெற்ற தாயாகிய குந்திதேவியார் முதலிற் பெற்ற புத்திர சிகாமணியான கர்னமஹாராஜன் உங்களுக்கு முக்கியமாகிய நற்றுணைவனுஞ் சிரேஷ்டப் பிராதாவுமாகையால் கருமத்துக்கு அவரே அக்கிரகன்யனாகும். ஆதலால் அவருக்கே முதன்மையாகச் செய்யவேண்டியதென்று மகாமுனிவருரைத்தார்கள் அவ்விடத்திலிருந்த பொறுமையோராகிய பூசுரரும் புவியாள்வோராகிய ராஜராஜேஸ்வரரும் அதுவே ஞாயமென்றிசைத்தார்கள். அந்தப் பிரகாரமே தலைவராகிய தருமநந்தனர் தருப்பை வாங்கிக்கொண்டு முன்னோனாகிய கர்ன மகாராஜனுக்கும் துரியோதன மகாராஜன் முதலிய நூறு பேருக்கும் இவர்களுடைய பிள்ளைகளுக்கும் பாஞ்சாலன் சல்லியன் சகுனி முதலாகிய அம்மான்மாருக்கும் அவர்களின்புத்திரர்களுக்கும் மைத்துனர்களுக்கும் வேதியர்களுக்கும் ஆசாரியருக்கும் தனக்குதவியாகிய தரணீசருக்கும் இன்னுமுண்டாகியமித்திராள் முதலிய பலருக்கும் முறை முறையாகப் பிரேதாதிகள் சிலைகள் ஸ்தாபித்து தருமந்தவருமற் கலச நீராலும் பால் தயிர் முதலிய பலவிதங்களாலும் அபிஷேக முதலியன செய்து வஸ்திரந் தரித்து நைவேத்தியம் வைத்து தூபதீபாதிகள் காட்டி செய்கருமங்களெல்லாஞ் சீராய் முடித்து வேத வேதியர் சொல்லிய விதிப்பிரகாரம் நடத்தினார்.

இந்தப் பிரகாரம் பன்னிரண்டு நாள் வரைக்கும் நித்திய விதியாகச் செய்கடன் முடித்து சிலையுகுத்து ஸ்நானம்புரிந்துகோவைப்பழம் போன்ற இதழினையுஞ் செங்கமலம் போன்ற கையினையுமுடைய ஸ்திரீகளும் உரிய பெரியோர் முதலிய யாவரும் கடல்போற் பெருகிய கங்கையிற் புண்ணிய ஸ்நானஞ்செய்து பிண்ட முதலியவும் போட்டு நதிக்கரையேறி பீதாம்பரம் பட்டுபட்டாவளி முதலாகிய வஸ்திரங்கள் தரித்து, நித்திய விதி முடித்துக்கொண்டு ஆசாரிய வணக்க மிணங்கி பெரிய தந்தையைப்போற்றி அவருடைய உத்தரம் பெற்று ஊனமாகிய முதலிய சிராத்தம் சப்தமம் சோடசம் மகாசோடசம் ஏகாங்கம் இப்படி பலவகையாகிய விதிகளையெல்லாம் நடத்தி விஸ்வதேவர் விஷ்ணுதேவர் முதலிய பேர்களைப் பூசித்து ஆசாரிய சம்பாவனைகளை அன்போடு நடத்தி மற்ற மகானுக்களாகிய பிராமணர்களுக்கும் பெரியோர் முதலிய உரியோருக்கும்பொன்களும் வெள்ளிகளும் ஒன்பதுவகை மணிகளும் பசுக்களும் நல்ல நல்ல வஸ்திராபரணங்களும் குதிரை யானை பல்லக்கு பூமிகன்னிகை இப்படியாகிய சோடச மகாதானங்களும் உபசரித்துக் கொடுத்து எல்லோருங் கதிசேரும்படியாய் வடக்குத் திக்கில் பிதிர்த்தேவதையை வைத்து மேற்குத் திசையில் விஷ்ணுவை யமைத்து கிழக்

அதிகமாக வாய்விரைந்து அலைகளாகிய கைகளினால் மோதிமோதி நிலத்திலறைந்து விழுந்து, வாய் நுரைக்குந் தன்மைபோற் செண்டுசெண்டாக நுரைகளைக்காட்டி, கண் சிவந்து கலங்குவதுபோற் கமலமுதலிய புஷ்பங்களெல்லாங் கசங்கக்காட்டி, உள்ளங் கலங்குவதுபோல் வெள்ள நீரெல்லாங்கீழ்மேலாய்க் கலங்கி, கண்ணீரோடுவதுபோல் மலர்த்தேனுஞ் சலமும் மறுகி மயங்கியோடி தனது வாயிலடித்துக் கொள்ளுவதுபோற் கரைகளிலிருக்கும் மணல்களை வாரியடித்து வந்த ஸ்திரீகளைக் கட்டிக்கொண்டு அழுகிறதைப்போல் இவர்களைத் தண்ணீரால் வளைத்து நனைத்து இவர்கள் துயரத்தை ஆற்றி வாய் மூடுவதுபோற் சிறு துளிதுளித்து இவர்களுடைய வாயிலும் புகுந்து ஆயாசந்தீர்த்துத் தன்னிடத்தில் இடங்கொடுத்து உபசரித்தாள் கங்கையானவள்.

அதேனப்படி யென்றால் வீஷ்மருக்குத் தாயாகையால் தன் பிள்ளையைக் குறித்தும் சந்திரவம்சத்துக்கு வந்த சுகதுக்கமுஞ் சூதகாதி முதலியதுந் தனக்குண்டென்பது தோன்றும்படிக்கு முடன்பட்டாளாயினான். பிற்பாடு அரசர்களனைவரும் ஸ்திரீகளியாவரும் வியாசாதி முதலிய அந்தணர்களும் கங்காதேவியைச் சிந்தித்து, சங்கல்ப முதலியவைகள் கூறி ஸ்நானம்பண்ணி ஆசமனஞ்செய்து தங்களுக்குரித்தான அருங்கடன் முதலிய யாவுந் தீர்த்து கரையேறிப் பொருந்தியிருந்து செப முடித்துக்கொண்டெழுந்து குருக்கத்திமரமும், சுரபுன்னை மரமும், கடுக்காய் மரமும், மாமரமும், இலுப்பைமரமும், ஆத்திமரமுய், பலாமரமும், சண்பகமரமும், தேக்குமரமும் இன்னும் பற்பல விருட்க்ஷங்கள் நிறைந்த ஒரு தோப்பினிடத்தில் அந்த ராஜாதிபன் முதலிய வேந்தரும், சகல மாந்தரும், பரதவரும் போய்ச்சேர்ந்தனர். மாங்கிலிய ஸ்திரீகளாயிருக்கின்ற மாதர்களெல்லோரும் தங்கள் தங்களுடைய தலைமயிரைச் சிக்கறுத்து நீருலர்த்தி முடித்துக் கொண்டார்கள்.

அப்போது அக்கினியிற்பிறந்த அணங்கனாளாகிய திரௌபதை மாத்திரம் விசித்திரக்குழல் முடிக்காமல் நின்று விசனப்படுந் தன்மையை வியாசராதி பெரியோர்களெல்லோருங் கண்டு திரௌபதைக்கு சமீபத்திற் போய் நின்று அம்மா! அருந்ததிக் கொப்பாகிய அம்மணி! இராஜராஜர்களுறைந்து நிறைந்த சபையில் நீர்சொல்லிய சபதமும், பிற்பாடு அஸ்வத்தாமன் நிமித்தத்திற்கூறிய ஓர் சபதமும் இப்போது உமது எண்ணத்தின்படி முடிந்ததே இனிமேல் உமது கூந்தலை முடித்துக் கொள்ளலாமே இப்போதும் உமது கூந்தல் முடிவதற்குத் தடையென்ன? என்று தகுந்த முனிவர்கள் கேட்டபோது, தண்டுழாயணிந்த முகுந்தனுந் திரௌபதியைப் பார்த்து, ஏனம்மா நான் தூதுவரும்போது நீர் விசனப்பட்டதற்கு உமது கூந்தலை முடிப்பிக்கிறேனென்று நர்ன் உமக்கு சொல்லிவந்தபடி உமது பதிவிரதா தன்மத்தால் நடந்து போயிற்றே இனிகூந்தல் முடித்துக் கொள்ளலாமே? அதற்கென்ன தடை என்று கூறவும், மாமிமாராகிய குந்திதேவியுங் காந்தாரியு மெழுந்து அம்மருமகளுக்கு உபசாரஞ் சொல்லி தங்கள் கையினால் கூந்தல் முடிக்கத் துணிந்தார்கள்.

அப்போது வஞ்சமில்லா நெஞ்சமுற்ற அஞ்சுகம்போன்ற கிஞ்சகவாயாளாகியபாஞ்சாலியென்னும் வஞ்சி தடுத்து மாமி! நானே முடித்துக் கொள்ளுகிறேன். தங்களுக்குப் பிரயாசம் வேண்டாம் என்று பதின்மூன்று வருஷமும் ஐந்து மாதமுமாக விரித்திருந்த கூந்தலை அலர்ந்த செந்தாமரை போன்ற தனது கரங்களால் வகிர்ந்து வாரி முடித்தனள். அது காலையில் ஆகாயத்திற் றங்கிய தேவர்களுந் தேவ மாதர்களும் மந்தாரம் பாரிசாதம் இவை முதலிய புட்பங்களை வாரி புஷ்கலாவர்த்த மாரிபோலப் பொழிந்து வாழ்த்தினார்கள். அகத்தியமுனி, அத்திரிமுனி, ஆங்கீரசமுனி, உரோமசமுனி, ஏரண்டமாமுனி, கலைக்கோட்முனி, காசிபமுனி, கௌதமமுனி, சமதக்னிமுனி, சனகமுனி, சனற்குமாரமுனி, பராசரமுனி, புலத்தியமுனி, மார்க்கண்டமுனி, வசிஷ்டமுனி, வான்மீகமுனி முதலாகிய மகாமுனிக்கணங்களெல்லோரும் அருளளித்து ஆசீர்வதித்தார்கள். சதுரராகிய பாண்டவர்கள் மனமகிழ்ச்சியானார்கள். புகையூட்டும் பூங்குழலையுடைய சந்திரகுலப் பூவைமார்கள் யாவருந் திரௌபதா தேவியைத் தொழுது கற்புடைமையை நோக்கித் துள்ளினார்கள். இவ்விதமாக மற்ற அன்னம் போலும் நடையினை யுடைய மின்னலிடையாராகிய கன்னியார் யாவரு மிக்க களித்திருந்தார்கள்.

### வியாசராதியர் முன்னிலையில் அடைந்து போயினர்க்கெல்லாம் அருங்கடனாற்றி முடித்தல்.

இப்பால் மலைபோன்ற தோளினையுடைய பாண்டு மைந்தர்கள் சொல்லுதற்கரிய முனீஸ்வரர்களின் வாக்கியப்படிக்குக் கருமஞ் செய்வதற்கு அந்த யிடத்தில் ஓர் சாலை குறித்து அதைச் சூழ்வர அங்குள்ள யாவரும் வந்திருப்பதற்குப் பந்தலமைத்தார்கள். அந்தக் கருமங்களுக்கு வேண்டிய உபகரணங்கள், சமித்து, நவதானியம், நெய், பால், தயிர், தேன், தேங்காய், பழம், சாம்பிராணி, கற்பூரம், அரிசி, காய், இலை, கறி, காரை, சூரை, முன்னை, முசுட்டை, வெல்லம், இஞ்சி, கோசலம், கோமயம், சந்தனம், தாம்பூலம், புஷ்பம், தட்சணை, கலசம், எள்ளு, திருப்பை நூல், தீபம் இவை முதலிய வெல்லா வஸ்துக்களும் அம்பாரமாகச்சேகரித்துதரும்விதி தப்பாமல் வேதவிதி குறையாமல்விதி விலக்கு வழுவாமல் இறந்துபோன சிரேஷ்டகனிஷ்டரென்னும் மூத்தோர் இளையோர் முதலிய யாவருக்கும் நற்கதி கிடைக்கும்படிக்கு ஆகாயத்திற் பொருந்திய தேவர்களும் மற்றப் பிதிர்த்தேவர்களும் புகழ்ந்துகொண்டாடிக் கொள்ளும்படியாய்க் குறைவில்லாக் கருமம் நிறைவேற்றுவதானார்கள்.

அக்காலங்குள்ள முனிவர்களுக்குத் தரும்மராஜன் இருகரத்தையுங்குவித்து ஓ சுவாமிகளே! யான் பவித்திரந் தரித்துச்செய்யப் போகின்ற கருமக்கடன் இன்னாருக்கு முதலிற் செய்யவேண்டியதென்று செவ்வையாக யோசித்து இன்புண்டாகக் கட்டளை யிடுங்களென்று வணங்கிக் கேட்க வியாசாதி முனிவர் நிதானித்துச் சொல்லத்துணிந்தார்கள். ஓ முரசகேதனனாகிய மூர்த்தண்யனே! கேளும் உங்களைப்பெற்ற தாயாகிய குந்திதேவியார் முதலிற் பெற்ற புத்திர சிகாமணியான கர்னமஹாராஜன் உங்களுக்கு முக்கியமாகிய நற்றுணைவனுஞ் சிரேஷ்டப் பிராதாவுமாகையால் கருமத்துக்கு அவரே அக்கிரகன்யராகும். ஆதலால் அவருக்கே முதன்மையாகச் செய்யவேண்டியதென்று மகாமுனிவருரைத்தார்கள் அவ்விடத்திலிருந்த பொறுமையோராகிய பூசுரரும் புவியாள்வோராகிய ராஜராஜேஸ்வரரும் அதுவே ஞாயமென்றிசைத்தார்கள். அந்தப் பிரகாரமே தலைவராகிய தருமநந்தனர் தருப்பை வாங்கிக்கொண்டு முன்னோனாகிய கர்ன மகாராஜனுக்கும் துரியோதனன் மகாராஜன் முதலிய நூறு பேருக்கும் இவர்களுடைய பிள்ளைகளுக்கும் பாஞ்சாலன் சல்லியன் சகுனி முதலாகிய அம்மான்மாருக்கும் அவர்களின்புத்திரர்களுக்கும் மைத்துனர்களுக்கும் வேதியர்களுக்கும் ஆசாரியருக்கும் தனக்குதவியாகிய தரணீசருக்கும் இன்னுமுண்டாகியமித்திரர் முதலிய பலருக்கும் முறை முறையாகப் பிரேதாதிகள் சிலைகள் ஸ்தாபித்து தருமந்தவருமற் கலச நீராலும் பால் தயிர் முதலிய பலவிதங்களாலும் அபிஷேக முதலியன செய்து வஸ்திரந் தரித்து நைவேத்தியம் வைத்து தூபதீபாதிகள் காட்டி செய்கருமங்களெல்லாஞ் சீராய் முடித்து வேத வேதியர் சொல்லிய விதிப்பிரகாரம் நடத்தினார்.

இந்தப் பிரகாரம் பன்னிரண்டு நாள் வரைக்கும் நித்திய விதியாகச் செய்கடன் முடித்து சிலையுகுத்து ஸ்நானம்புரிந்துகோவைப்பழம் போன்ற இதழினையுஞ் செங்கமலம் போன்ற கையினையு முடைய ஸ்திரீகளும் உரிய பெரியோர் முதலிய யாவரும் கடல்போற் பெருகிய கங்கையிற் புண்ணிய ஸ்நானஞ்செய்து பிண்ட முதலியவும் போட்டு நதிக்கரையேறி பீதாம்பரம் பட்டுபட்டாவளி முதலாகிய வஸ்திரங்கள் தரித்து, நித்திய விதி முடித்துக்கொண்டு ஆசாரிய வணக்க மிணங்கி பெரிய தந்தையைப்போற்றி அவருடைய உத்தரம் பெற்று ஊனமாகிய முதலிய சிராத்தம் சப்தமம் சோடசம் மகாசோடசம் ஏகாங்கம் இப்படி பலவகையாகிய விதிகளையெல்லாம் நடத்தி விஸ்வதேவர் விஷ்ணுதேவர் முதலிய பேர்களைப் பூசித்து ஆசாரிய சம்பாவனைகளை அன்போடு நடத்தி மற்ற மகானுக்களாகிய பிராமணர்களுக்கும் பெரியோர் முதலிய உரியோருக்கும்பொன்களும் வெள்ளிகளும் ஒன்பது வகை மணிகளும் பசுக்களும் நல்ல நல்ல வஸ்திராபரணங்களும் குதிரை யானை பல்லக்கு பூமிகன்னிகை இப்படியாகிய சோடச மகாதானங்களும் உபசரித்துக் கொடுத்து எல்லோருங் கதிசேரும்படியாய் வடக்குத் திக்கில் பிதிர்த்தேவதையை வைத்து மேற்குத் திசையில் விஷ்ணுவை யமைத்து கிழக்

குத் திக்கில் விஸ்வதேவரை ஸ்தாபித்துச் சந்தன புஷ்பாதிகளாற் பூசைகள் யாவும் புரிந்து அருமையாகிய திதிகளினால் அர்ச்சித்து அருங்கட னாற்றினார்கள்.

அப்பாற் சங்கத்தொனி முதலிய சகல வாத்தியங்கள் முழங்க வெண்பட்டுகளினால் வெகு விநோதமாக அலங்காரங்கள் நிறைந்துள்ள சாலையுள் பரிசுத்தமாகியஒமவேள்வி யாரம்பஞ்செய்து அழகிய அங்குலி விரலிற் பவித்திரந் தரித்து அவிசொரிந்து மந்திரம் புரிந்து அவ்வேள்விக்குரிய கருமங்கள் யாவும் அழகுற முடித்து கங்கைக் கரைக்குச் சென்று திலோதர்ப்பணக் கடன்கள் தந்தார்கள். பின்பு வடவால விருட்சத்தடியிற் சென்று பொருந்தி சவ்யாசவ்யமாக இடது கால் வலது கால் மடித்திட்டிருந்து எல்லோருக்குங் குறைவில்லாமற் பிண்டமளித்து தருமகருமக் கடன்களெல்லா முடித்தார்கள். கடல்சூழ்ந்த உலகமெல்லாங் கலக்கந் தெளிந்து சந்தோஷிக்கும்படியாய்த் தானங்களும் தருமங்களும்நெய்த்தீப முதலிய நியமங்களும் புரிந்தார்கள். இந்தப்படி கங்கையைச் சுற்றிச்சுற்றி எந்தெந்த ஸ்தானத்தில் எந்தெந்த கடத்தில் எப்படி செய்யவேண்டுமோ அந்தந்த ஸ்தானத்தில் அந்தந்தக் கடத்தில் அப்படிக்கெல்லாம் மூன்று மாசம் வரைக்கு மிருந்து சூதகந்துலைந்து மங்கள ஸ்நானமாடி பெரியோரைப் பணிந்து அவர்களுடனும் பற்பல பிராமணர்களுடனும் போஜனமுண்டு குரவர் முதலியோர் சூழக்குற்றமற்றிருந்தார்கள்.

## திலோதகச் சருக்கத்தோடு

ஸ்ரீபர்வம்—முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:





ஸ்ரீ ருக்மணி சத்யபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## பன்னிரண்டாவது,

# சாந்தி பர்வம்.

---

கண்ணன் துதி.

வடித்தரிய கலைகளெல்லா மறைமுனிபாற் றெளிந்தபதம்
வெடித்தண்டம் பொதுளவளை விஜயனுக்குக் குறித்தபதம்
முடிக்கரிய பாரதத்தை முத்தபதம் விடத்தரவி
னடித்தபத நினைத்தவர்க்கு நல்குபதம் பணிகுவாம்.

சூதபுராணிகர் வாக்கியம்.

ஓ சவுனகாதி முனிவர்களே ? இவ்வாறு சாந்தித்திரையத்தின் முதற்பாகமாகிய ஸ்ரீபர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி ! பாரதப்போர் முடிந்தபின்பு திரிதராட்டிர மகாராஜன் வியாசரனுக்ளைபெற்று பந்துமித்திராதியர்களோடு போர்க்கள மடைந்ததும், அவனைக் காண விரும்பிய பாண்டவர்களுக்குமுன் கண்ணன்சென்று வசனித்து பின்பு அவர்களை நமஸ்கரிக்கச் செய்ததும், திரிதராட்டிரனுதியர் படுகளஞ் சோதித்துப் பரிபவமுற்றதும், காந்தாரிதேவி ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைச் சபித்ததும், பாண்டவர் மாண்டோர் யாவருக்குந் தீக்கடனிறைவேற்றியதும், திரிதராட்டிரன் சோகந்தீர விதுரமகாராஜன் செகஜீவ சம்பவ லக்ஷணமும் சீவர்களுக்குண்டான இன்பதுன்ப வியல்பு முரைத்ததும், இயாவருங் கங்காஸ்நானத்திற்கு சென்று திரௌபதையின் கூந்தலை முடிப்பித்ததும், வியாசராதியர் முன்னிலையில் பாண்டவர்கள் அடைந்து போயினோர்க் கெல்லாம் அருங்கடனாற்றி முடித்ததும், ஆகிய விச்சரித்திரங்களை யெல்லாம் அவ்வவற்றின் உட்பிரிவுகளோடும் உபசரித்திரங்களோடுஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டு சந்தோஷித்தேன். இப்பால் இரண்டாம் பாகமாகிய சாந்திபர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள் வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## முதலாவது,

# திருமுடிபுனைந்த சருக்கம்.

### கண்ணன் துதி.

படித்தடம் பொதுளிய பாதம் பாரதம்
வடித்துரைப் பவர்செவி வழியின் மாந்திஞேர்
மிடித்துய ரகற்றிய பாதம் வேள்விகள்
முடித்திடு பாதமென் முடியி னுயதே.

ஓ கனமேவிய போஜனே! ஜெனமேஜெய ராஜனே கேளும், வையம்புகழைவருடைய மைந்தரும் நல்ல துணைவரும், அரிய மைத்துனரும், உரியமித்திரரும், மற்ற யாவரும் யுத்தபூமியில் மடிந்து போனமையால், அவர்கள் நற்கதி பெறும்படியாய் திலதற்பணுதிக் கடன்களைச் செய்து முடிந்த பிற்பாடு, அந்தக் கங்கைக்கரையில்மூன்றுமாதம்வரையிலிருந்தார்கள். அப்படி யிருக்கும்போது ஒருநாள் அரசர்க்கரசனுகிய திரிதராட்டிர மகாராஜனும் ஸ்திரீகள் யாவரும், விதுர மகாராசனும், கிருபாச்சாரியரும், சஞ்சயனும், மேகவண்ணனுகிய விமலனும், சாத்தகியும் பாண்டவரும் ஒன்றுபடக்கூடி ஆசனங்களின் மீதிருந்தார்கள். அந்த வேளையில் வேதவியாசரும் நாரதமகாமுனியும் அநேகம் பிராமணர்களுடனே அங்ஙனமெழுந்தருளிஞர்கள் அவர்களைக் கண்டமாத்திரத்தில் வீரகண்டை தரித்த வேந்தரைவரும் விதுரமகாராஜனும் எதிர்சென்று பணிந்து ஆசனம் அளித்து அர்க்கியபாத்திய ஆசமனியமுதலிய கடன்களெல்லாஞ்செய்து துதித்தார்கள். அந்தப் பெரியோர்களும் பெருமை நிறைந்த அன்புடன் வேதவாக்கியங்களா லாசீர்வதித்து, அரசரியாவரையும் ஆசனத்திலிருக்கும்படி கட்டளையிட்டார்கள். அந்தப்படியாவரும் இருந்த பிற்பாடு விளர்த்த விபூதி தூளிதமும் செம்மலக்காடு போன்ற செஞ்சடையும் தண்டுகமண்டலமும் முப்புரி நூலும் ஒப்புவமையில்லாத காட்சியும் மிதியடிசூடிய பாதமுமுடைய அம்மகானுக்கள் தருமராஜனை நோக்கி இதனைச் சொல்லத் தொடங்கிஞர்கள்.

---

**வியாசநாரதாதியர் தருமனை முடிசூட்டிக்கொள்ளும்படி வேண்ட அவரும் முடிக்குரிய கர்ணன் செயல் கூறி மறுக்க நாரதரவன் சரிதங்கூறித் தேற்றுதல்.**

ஓ வேந்தர் வேந்தனுகிய தருமபுத்திர மகாராஜனே! உமக்கு மித்திரனுக நெருங்கித் திருத்துளவணிந்த இந்தத்திருமாலின் அருட்டிறத்திஞலும் தம்பிமார்களின் மலை போன்ற புயவலிமையிஞலும் சத்துருக்களெல்லாம் நாசமடைந்து, இமயனுலகத்தில் வாசடைந்து வீரசுவர்க்கம் போகும்படியாய் ஜெயித்து இவ்வுலகமெல்லாம் ஏக சக்ராதிபதியாய் பிறக்கும்படிக்கு வெற்றியுற்ற வாழ்வைப் பெற்றீர் எப்போதுந்தருமமானது பொய்யை வெல்லும் அதருமமானது மெய்யைக் கெல்லும் என்கிற இந்தச் சாக்ஷியைஉம்மிடத்திற்கண்டோம் ஓ புகழ்ப் பெருமை பூண்ட புண்ணியனே! இனிமேல் நீர் திருமுடி புனைந்து எங்களைப்புரந்து யாகாதிகளை இன்புற நடத்தி இவ்வுலகமினிமைபெற அரசாளத் தக்கதென்று ஜனனக் கடல் கடந்த ஞானவானந்தக் கருணையோர் சொன்ஞர்கள். இவ்விதமாகச் சொல்லிய பெரியோர்களுக்குத் தருமபுத்திர மகாராஜன் வந்தனம் புரிந்து சொல்லுகிருர். ஓ மகாநுபாவர்களே பதினெட்டுநாள் யுத்தஞ் செய்து சத்துருக்களென்று எதிர்த்து வந்தவர்களைச் செயித்து மீண்டதுமெய்யே நாங்கள் ஜெயம்பெற்ற போதிலும் எங்கள் மனதுக்குச் சந்தோஷ மென்பதில்லாமற் சஞ்சலதுக்கமே மிக்கனவாயிருக்கிறது அஃதெதிஞலென்ருல் எங்கள் கால்வழிக்கு உத்

வியாசராதி முனிவர்கள், ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலாயினோர் முன்னிலையில் திரௌபதை தன் கூந்தலை முடித்துக்கொள்ளல.



வியாச நாரதாதியர் தருமனை முடிசூட்டிக் கொள்ளும்படி வேண்ட, அவரும் முடிக்குரிய கர்னன் செயல்கூறி மறுக்க, நாரதரவன் சரிதங்கூறித் தேற்றுதல்.

தமனாகயிருந்த அபிமன்னனென்னும் ஒரு
பிள்ளையாகிலும் இல்லாமற் போயினன்.
அவனைப் பறிகொடுத்த பாவத்தை நினைக்க
நினைக்க எங்களெண்ணத்தைக் கெடுக்கிறது.
பெருமூச்செடுக்கிறது. இதனால் மனம் வருந்
தி வாடுகின்றவர்களாயினோம்.

ஈதிப்படியிருக்க, ஓ நிகரில்லாத முனி
வர்களே! திர்ஷ்டத்தூய்மன் முதலாகிய
மைத்துனர்களும், இளம்பஞ்ச பாண்டவர்
களும், யுத்தமுற்றும் வெற்றிபெற்ற பிற்பாடு
அஸ்வத்தாமனாற் செத்தார்கள். அவர்களி
ருந்தாலுங் கொஞ்சஞ் சந்தோஷமாயிருக்க
லாம். அதுவுமில்லை. ஓ சிவானந்த வாரி
யில் மூழ்கிய சிதேந்திரியர்களே இவர்களை
யெல்லாம் பறி கொடுத்து, இவர்களுடன்
இறக்காமல் உயிர்சுமந்து சிந்தாகுலப்பட்டு
மதிமயங்கிய எங்களுக்கு செயங்கொண்டோ
மென்னுஞ் சிறப்புப் பெயருமுண்டோ? இ
தல்லாமலும், சூரிய குமாரனாகிய கர்னமகா
ராசன் எங்களுக்கு முன்னோனாகியிருக்க, அப்
பேர்ப்பட்ட தாதாவாகிய புண்ணியனைச்சப
தங்கூறி உயிரழித்தோம், அத்தீங்காகிய
பொல்லாங்குகளெல்லாம் எங்கள் மனத்தை
வருத்தி, வயிற்றைக் கிழிக்கும்படியாகிய வா
ட்போலிருந்து வாட்டி வதைக்கின்றன. இந்
தத் துன்பங்களிற் றுயரேறிய எங்களுக்கு,
சமர்கடந்தோம், செயம்பெற்றோம் என்னு
ம் வீரமுண்டோ? ஓ தவராசர்களே எங்கள்
தாயாகிய குந்திதேவியார் கர்னமகாராசனு
டைய சங்கதியைச் சொல்லாமல் மறைத்து
பெற்றுவளர்க்காத சிற்றாத்தான்போற் கபட
மாக இருந்த பக்ஷத்தை நினைக்குந்தோறும்
நினைக்குந்தோறும் எங்களையுருக்கிக் கருக்கு
கின்றது. ஓ மாசறக்கற்ற மாதவமுடையீர்?
பேசுதற்கரிய கர்னமகாராசன் பூமியிற் பிறந்
து வாழ்ந்தசரித்திரங்களை எங்கள் குறைதீரச்
சொல்லல்வேண்டும். என்றுத் தருமராசனா
ன அண்ணல் முதலியபேருங் கண்ணீர் விடு
த்து உள்ளம் நைந்துருகி உரைக்கவும், சீர்
சிறந்த வேதவியாசர் முதலாகிய மகா ரிஷி
கள் பலரோடு நீதி குறையாத நிருபர்களும்
மகிழ்ச்சியுடன் கேட்கும்படியாய், வீணைத்
திறந்தெரிந்த மேலோனாகிய நாரதமகா
முனிவர் சொல்லத் தொடங்கினார்.

ஓ ஐவர்களே! கேளுங்கள் உங்கள் தாயா
கிய குந்திதேவியாரானவள் கன்னிகைப்பரு
வமாயிருக்குங் காலத்திற் சூரியபகவானுடை
ய வரத்தினாற் கர்னமகாராசனைப் பெற்று,
நிலைபெற்ற உலகப்பழிப்புக்கு அஞ்சித்தான்
பெற்ற பிள்ளையைப் பெட்டியில் வைத்து
ஆற்றில் விட்டுவிட்டாள். அப்பிள்ளையைத்
திரிதராட்டிரனுடைய தேர்ப்பாகன் கண்டெ
டுத்து வளர்த்துவரு நாளையில், பரசுராம
ருடையபொன்னடியை வணங்கிவில்வித்தை
முதலியவுங்கற்று, பிராமணப் பிள்ளையென்
றுரைத்தசொற்சோர்வினாற் சாபமும்பெற்று,
காந்தாரி மைந்தனாகிய ராசாதிராசனுடன்
சிநேகமாய் அங்கதேச பட்டாபிஷேகங்கைக்
கொண்டு அரசாக்ஷி செய்து வந்தான். அக்
காலத்திற் கலிங்கராசனுடைய புத்திரியான
சுபாங்கியென்னும் பெண்ணுக்குச் சுயம்வர
மென்று. துரியோதனன் கேள்விப்பட்டு, கர்
னமகாராசனையு மழைத்துக்கொண்டு கலிங்க
தேசஞ் சேரு முன்னரே உருக்குமிராசனும்,
சிசுபாலனும், சராசந்தனும், அளவற்ற அ
ரசர்களும், இன்னுமுள்ள இனத்தரும் வந்
து சுயம்வரப் பந்தலிற் நிறைந்து சூழ்ந்
திருந்தார்கள். அந்தவேளையில்கெடிஸ்தலா
திபனாகிய துரியோதனமகாராசன் அங்கதே
சாதிபனுடன் சுயம்வரப்பந்தலிற் புகுந்தா
ன். இவனைக் கண்டவுடன் யாவரு மரியா
தை செய்து உட்காரும்படி உபசரித்தார்கள்
அந்தச்சமயத்திற் சுபாங்கியென்னும்பெண்
ணை அலங்கரித்துப் பற்பல தாதிமார்கள்
சூழ்ந்துவந்து கலியாணமண்டபம் புகுந்து
அரசர்களைக் காட்டி அவ்வவர்களுடைய
பேர், ஊர், சீர், முதலிய யாவுஞ் சொல்லிக்
கொண்டு வந்தார்கள்.

அப்போது வணங்கா முடியோனாகிய
துரியோதன மகாராசனையுங் கலியாணப்
பெண்ணுக்குத் தெரிவித்து அப்பாற்போக
அடியெடுத்து வைத்தபோது, அரவக்கொடி
தரித்த அதிபன்கண்டு, தனக்கு மாலைதரிக்கா
மற் பேர்கிறாளென்று கோபங்கொண்டு வீறி
மீறி, கன்னிகையை வாரித் தேர்மீதேறி, அ
ஸ்தினாபுரத்தைநோக்கி தூறிவருவதானான்.
அக்காலையில் அச்சுயம் வரத்துக்குவந்த அர
சர்களெல்லோருந் திரண்டு ஒருமுகமாய்ப் பு
ரண்டு யுத்தஞ்செய்தார்கள். அவர்களையெல்
லாம் இந்தக் கர்னன்கண்டு வில்லெடுத்து வ
ளைத்து நாணிபூட்டி, அவ்வில்லோசையாற்
சிலர்கள், விசிக அடியினாற் சிலர்கள், கடுந்
தேர் வேகத்தாற் சிலர்களாய் அடிபட்டு, உ
தைபட்டு புதைபட்டு, சிதைபட்டு, மாயும்படி

செய்தான் அதனால் சிலர்கள் கையோய்ந்தார்கள், சிலர் காலோய்ந்தார்கள், சிலர்கள் சண்டைசெய்யமாட்டாமற் புறமுதுகிட்டார்கள், சிலர்கள் மண்டையுதிரக் கலங்கித் திறமந்து கெட்டார்கள். இவ்விதமாகக் கர்னமகாராசனுடைய உதவியினால் துரியோதனன் வெற்றி கொண்டு சுத்தவீரனாகி வரும்போது, சராசந்தனென்பவன் கர்னனை எதிர்த்துக் கடுங் கோபத்துடன் போராடினான். இவர்களிருவரும் நெடுநேரம் வரையிலும் யுத்தஞ்செய்து, அங்கதேசராசன் அநேகம் அம்புகள் தொடுத்துச் சராசந்தனுடைய வில்லையுந் தேரையும் அழித்து மெய்யெல்லாங் கிழித்தான். அப்போது சராசந்தன் நல்லதாகட்டுமென்று கருவி, மாருதபங்கையும் ஆருத கோபமுங்கொண்டு தேர்விட்டிழிந்து, மீட்டுங் கர்னனை வளைத்து மல்யுத்தஞ் செய்து அதிலும் இளைத்தான்.

அதுகாலையில் வெற்றி பெற்றேனென்று கர்னமகாராசன் சொல்ல, அந்த மொழியை கேட்ட சராசந்தனங்கம் அயர்ந்து, அவலமுற்றெழுந்து, கர்னராசனைக் கட்டித்தழுவி மகிழ்ந்து, நீர்மெத்த பலசாலியென்றுபுகழ்ந்து விடைபெற்று மாலினி நகரம்போய்ச் சேர்ந்தான். இப்பால் இருளைப் போக்குஞ் சூரிய குமாரனாகிய கர்னனென்பவன் துரியோதனனுக்கு யாதொரு துன்பமுமில்லாமல், சுபாங்கியையும் அவனையுங் கொண்டுபோய் இன்பமாக அஸ்தினாபுரஞ் சேர்த்தான். அதனால் துரியோதன மகாராஜன் அவனை மெத்தவுமகிழ்ந்து, இவன் நமக்கு உற்ற துணையென்று வைத்திருந்தான். அக்காலையில் ஒருநாள் அங்கதேசத்தில் தான் அரசுபுரியும் போது தேர்ச்சக்கரத்தில் ஒருசிறிய பசுவின் கன்று அகப்பட்டு அரைந்துபோக, அந்தப் பசுவின் கன்றுக்குரிய ஒருபிராமணன் மனந் தாளாமல், அடாபாவி! என் பசுவின் கன்றைக்கொன்றபடியால் நல்ல யுத்தசமயத்தில் உன் தேர்ச்சக்கரம் பிதைந்துபோகக்கடவதென்று சபித்தான். இதல்லாமலும், தேவேந்திரன் பிராமணரூபத்துடன் யாசகங் கேட்கவந்து, இந்தக் கர்னமகாராஜன் பிறக்கும்போதே கூடப்பிறந்த கவச குண்டலத்தைத் தானமாக வாங்கிக்கொண்டு போனான்.

கேட்டீரா தருமநந்தனா! பரசுராமர் சாபத்தினாலும் பசுவின் கன்றுக்காகப் பிராமணனிட்ட சாபத்தினாலும், பெற்ற தாயாகிய குந்திதேவியார் நாகாஸ்திரம் ஒருதரம் விடுவதேயன்றி இரண்டாந்தரம்விடாதிருக்கவும், அர்ச்சுனன் தவிர மற்றத்தம்பிமார்களைக் கொல்லாதிருக்கவும், கேட்டுக்கொண்டவரத்தினாலும் இவனுடைய உடலுக்குக் காவலாகிய கவசகுண்டலத்தைத் தேவேந்திரன்பெற்றுக்கொண்டதினாலும், வீஷ்மாச்சாரியார் யுத்தமுதலில்இவனை அர்த்தரதரிற் போட்ட அனியாயத்தினாலும், மத்திரராஜனாகிய சல்லியன் இழிவாகிய உரைகளினால் ஏசினதினாலும்,கடைசிகாலத்தில் அவனுடையபுண்ணியங்களை யெல்லாம் இந்தக் கண்ணனானவர் கைக்கொண்டதினாலும், வான்சிலைக்கொருவனாகிய கர்னமகாராசன் மடிந்தான். இந்த மேன்சிலைக்கொருவனாகிய அருச்சுனன் வெற்றிபூண்டான். இத்தனை யிடையூறுகளெல்லாம் வந்துங் கர்னமகாராசன்செய்த யுத்தத்தை இன்னபடியென்று ஒருவராற் சொல்லப்போமோ? உத்தமனே! இவ்வளவு பொல்லாங்கு இந்தக் கர்னராசனுக்கு நேரிடாமற் போகுமாகில், இந்த மகா புருஷனை வெல்லத்தக்க பேர்களாவது, கொல்லத்தக்க பேர்களாவது இந்தத் தொல்லுலகிலுண்டோ? இதல்லாமலும், ஈசன், திருமால், பிரமன், இந்திரன், தேவர்கள், திக்குப்பாலர்கள் ஆசாரியரிருவர், இவர்கள் முதலிய யாவருங்கொடுத்த செழுங்கணை பலவுங்கொண்டு யுத்தஞ் செய்யும் அர்ச்சுனனுக் கெதிரில் யார்தானிற்பார்கள்? இவ்விதமான பல நிறைந்த அர்ச்சுனனாற் சகலமுங் குறைந்த கர்னராசன் இறக்காமலிருப்பானோ? என்று நாரத மகா முனிவர் சொல்லியருளினார்.

இவையனைத்தையுந் தருமராஜன் கேட்டு, சிந்தை மெலிந்து வாடிக் கண்ணீர் சொரிந்து, பக்கத்தில் நிற்கின்ற பாண்டுமகாராசனுடைய திருத்தேவியார் முகத்தை நோக்கித் தன் முகஞ்சுளித்து, ஓ கருணை நிறைந்த தாயே! உள்ளனுங் கள்ளனுமென்னுந் தன்மையா யிருந்து ஏதொன்று மெங்களுக்குச் சொல்லாமற் கழுத்தறுத்துவிட்டீரே இப்படியுஞ் செய்வாருண்டா! என்றுதருமராசன் தும்பி வெம்பிப் பேசினார். அப்போது தாயாகிய குந்திதேவி தன் மகனைப் பார்த்து, ஐயனே! நான் சொல்லுவதைச்சிறிது நிதானம் வைத்துக் கேட்டிடுக. அவன் என் பிள்ளையென்று எனக்கு முன்னதாய்த் தெரிய

மாட்டாது. சூதுபோராடி வனவாசஞ்செய்து யுத்தமென்று நேமித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைத் தூதனுப்பிவைத்தீர்களே, அப்போதுதான். கர்னன் என் மகனென்றறிந்து கண்கலக்கப்பட்டேன். என்னை நீங்கள் நிந்திக்கவேண்டாம். ஊழ்வினையை ஒழிப்பவர்கள் ஒருவருமில்லை. என் பாவி கர்ப்பமிப்படி யாச்சுது. ஆ பாலர்களே நீங்களறுவரும் ஒன்ருய்க் கூடியிருந்து என் கண்ணுற் பார்க்கப்பாக்கியம் பெருத பாவி யாயினேன். என்று புலம்பா நின்ற குந்தி தேவியைத் தருமராசன் பார்த்துச் சலித்து, இனிமேல் ஸ்திரீகளுடைய மனதில் எப்பேர்ப்பட்ட சங்கதிகளும் ஒளியாமல் வெளியாகக் கடவதென்று சாபமிட்டு, தனது தம்பியாகிய அர்ச்சுனனை நோக்கி, அப்பா பற்குனு! நமது சிரேஷ்டப் பிராதுவாகிய கர்னமகாராசனைக் கொன்றதற்குக் காரணம் நீயு நானுமாகிப் பழிக்காளாயினோம். ஆகையால், இனி நாமிவ்வுலகாள நினைப்பது ஞாயமல்ல. தவஞ்செய்யும்படிக்குக் கானகம் போய்விடுவோம். என்று தருமராச னுரைக்க, நரனுகிய அர்ச்சுனன் பதிலுத்தரஞ் சொல்லுகிருன்.

---

## தருமராஜனைத் தம்பியர் நால்வருந் திரௌபதி முதலாயினேருந் தேற்றுதல்.

ஓ மதிகுலமணியா யெழுந்தருளியவள்ளலே நான் விள்ளுவதைக் கேளும். இதுவரையிலும் யுத்தஞ்செய்து எல்லோரையுங் கொன்றுவிட்டு இப்போது காட்டுக்குப்போவோமாகில், பூர்வம் நமக்கு வந்திருக்கும் பழியைப்பார்க்கிலும் பத்து பங்கு அதிகமாகிய வசைச்சொல் வந்து சம்பவிக்கும். ஆதியில் ஆகவேண்டியகாரியமிதுவென்று யோசித்து எல்லாக்காரியங்களு நிறைவேற்றிய பிற்பாடு, எனக்குப் பட்டம் வேண்டாம். நான் காட்டுக்குப் போகிறேன். என்று சொல்லுகிற வாக்கியம் யோக்கியமா யிருக்கவில்லை. அண்ணு! தேவரீருடையஎண்ணம் இப்படியிருந்தால், நீங்களெல்லோரு மிருந்து பெரிய தந்தை முதலிய பேர்களைப் போஷித்து இந்தப் பூமியை ஆண்டுக் கொள்ளுங்கள். நமது ஜேஷ்டப் பிராதுவாகிய கர்னமகாராஜனைக் கொன்ற பாவிஞனகையால், நானே வனம் போகிறேன். நீங்களொருவரும் விசனப்பட வேண்டா மென்ருன். இப்படி தருமபூபதியாகிய நாபாலனேடு தன்ஞெசயனுகிய செயபாலன் இவ்வண்ணம் பேசியபோது, மருத்துமைந்தனுகிய வீமசேனன் அவர்களைப் பார்த்து, தம்பீ! நமதண்ணுவர்கள் பெரியார் பிழையா ரென்பதற்கிணங்கப்பொருந்தி ஸ்திரமாகப் பேசுகிருப்போலிருக்கின்றது. ஆ! ஆ! வெகு நன்ருயிருக்கின்றது. இதுகாறும் எட்டுத் திக்கிலுமுள்ள குலமன்னவரெல்லாரும் இடிந்து மடிந்துப் போகும்படி எற்றி, அவ்வெதிரிகளின் நாட்டைப் பிடுங்கிக்கொண்டு அரசு புரியாநின்று ஆண்மைபெற்ற சந்திரகுலத்தில் பிறந்த தார்ஷ்டிகாள் மெத்தவு நல்லவர்கள். மகா வல்லவர்கள். இப்படி பிதிர்பிதாக்கள் நடத்திவைத்த பழமையின்படி சத்துருவைவென்று நாட்டையாளலாமென்று போகாமல், காட்டுக்குப் போகிறேனென்பது குலமுறை தருமத்தைஅநுசரித்து நடக்கும்படியானவர்கள் சொல்லுகிற பேச்சோ? இது தருமமல்லவே.

ஓ தருமவுருவே! மானக் குறைச்சலுந் தீராப்பழியு முண்டாகும்படி நமக்குத் துரியோதனன் பொல்லாங்கு விளைத்த அந்நாளில் எல்லாக் குற்றங்களையும் வயிற்றிலடக்கிக்கொண்டு, தீனத்துவமாகிய ஈனத்தனப்பட்டு, காலனென்றும், மழையென்றும், இடியென்றும், வெயிலென்றும், கடுங்காற்றென்றும் மூடுபனியென்றும் பாராமல் இராப்பகல் நித்திரையற்று நல்ல போசனங்கெட்டு, ஊரை, பதியை, உற்றூர்பெற்றுரை, ஒருமிக்கவிட்டு, காடேகதியாய்ப் பன்னிரண்டு வருடந் துலைத்துக்கொண்டிருந்தோமே அண்ணு! அந்த நாளையில் ஆனபடியாகட்டும் போனபடி போகட்டுமென்று குரோதத்தையும் விரோதத்தையும்விட்டு, வனவாசம்பண்ணுவதே நல்லதென்று அவிடத்திற்ருனேயிருந்து விடுவோமாகில், அதுமேலாகிய மெய்ஞ்ஞானம், அதை விட்டு விட்டுப் பனிரண்டு வருஷமும் பற்றறக் கழித்து, மற்ற ஒரு வருடத்திற்கு விராடபுரத்திலிருந்து அஞ்ஞாத வாசமும் பண்ணி வெளிப்பட்டு, தூதுவிட்டுப் படைத்துணையுங் கூட்டிவிட்டு, அமரும்புரிந்து, யாவரையுமுடித்து, திரௌபதையையுங் கூந்தல் முடிப்பித்து, நாமுஞ் சபதமுடித்து,பிள்ளைக்காரனுகிய திரிதராட்டிரன் பிள்ளைகளைக்குறித்து உயிர்துடித்

து வருந்த, நமது புகழை உலகத்தில் யாவருங் கொண்டாடிச் சிறந்த பிற்பாடு காட்டுக்குப் போய் விடலாமென்று நாம் சொல்லுவது தருமமல்லவே, இந்தக் கொள்ளைக்கு இவ்வளவு பாடுபடுவானேன்.

ஓ வேந்தர் வேந்தே! நாம் இவ்வளவு வேலை முடித்துவிட்டு இப்போது வனவாசம் பண்ணப்போவோமாகில், உலகிலுள்ள சரியான அரசரெல்லோரும் நகைப்பார்கள். மகாமுனிவர் யாவரும் பழிப்பார்கள். தேவர்கள் முதலிய யாவரும் நம்மை மதிக்கார்கள். நமது சேவகர் முதலிய பேரும் நம்மை துதிக்கார்கள். மேலும் வீரலட்சுமி விளையாடுகின்ற போர்க்களத்தில் அந்தணராதியரையும் அரிய மூதாதை முதலிய வெகுபேர்களையுங் கொன்றபாவம் நம்மை யெப்போதும் விடமாட்டாது. நீர் உலகத்தை அரசு புரியாமல் அடவிக்குப் போவீராகில், யுத்தகளத்தி லுண்டான பாவங்களெல்லாம் வந்து நம்மை சுற்றிப் பற்றிக்கொள்ளும் மகா நரகத்துக் கேதுவை யாகும். ஓ மன்னரேறே! இந்தப் பூமியை அரசாக்ஷி செய்வதில் மகா தீமைகளுண்டென்று உமது சித்தத்திற்றோன்றுமாகில், மாமறையாளர்களின் வசனப்பிரகாரம் யாகாதிக்கிரமங்களை நடத்தி, நீதி நியமத்துடன் சோதிமுடியுஞ்செங்கோலுந் துலங்கத்தாங்கி, வருணாச்சிரம தரும முதலிய யாவற்றையுங் கிரமமாயுண்டாக்கி, பூர்வராச முறைமையோர் நடத்திவந்த நன்மைப்படிக்கு அரசாக்ஷி செய்து வந்தால் ஒரு தீமையுமில்லை. இதுதான் மேலாகிய தருமம் அரசகுலத்திற் பிறந்தோர் அவனியை யாளாது நிற்றல் தருமமல்ல. என்று தம்பியாகிய வீமசேனனுரைக்க, தருமநந்தனர் அந்த வார்த்தையைத் தனது செவியில் ஏற்றுக்கொள்ளாமல் மனம் வெதும்பி, உளநொந்து, கண்ணீர் சொரிந்திருந்தார் அப்படி யிருக்கும் அண்ணனுடைய மதிமுகத்தை மாத்திரை புத்திரராளாகிய செம்பவளமேனியிற் சிறந்த நகுல சகாதேவர்கள் பார்த்து யோசித்து, இதனைச் சொல்லத் தொடங்கினார்கள்.

ஓ எங்களிஷ்டதெய்வமாகியஇறையே! ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கும்போதே தீர்க்காலோசனை செய்து தொடங்கல் வேண்டும் தொடங்கிச் செய்த பிற்பாடு எண்ணி விசனப்படுவது ஏழ்மையாகிய பேதைமையென்று நீதி நூலோர் பேசியிருக்கின்றார்கள். அது (எண்ணித் துணிவது கருமந் துணிந்தபி, னெண்ணுவதென்பதிழுக்கு.) இப்படி யிருக்க சகல பகைகளையும் வென்று நமக்குண்டாகி நிலைநின்ற பழிகளெல்லாம் பற்றற நீங்கிப்போன பிற்பாடு காட்டுக்குப்போய் விடுகிறேனென்று சொன்னால், பின்புத்தியுள்ள பெண் புத்திக்காரர் பாண்டவாளென்று யாவரும் வசையாய்ப் பேசுவார்கள். பூஷணையுந் துஷணையுஞ் சரீரத்துக்கல்லது பரிசுத்த ஆத்மாவுக் கொன்றுமில்லை யென்னும் வாக்கியப்படிக்கு ஆரென்ன சொன்னாலும் நமக்கென்ன வென்றிருக்கலாமென்று நினைப்பீராகில், மெத்தவும் நல்லது தான். ஆகிலும், இப்போது நாம் காட்டுக்குப் போய்த் தவஞ்செய்வோமாகில், அந்தத் தவமும் அவமாய்ப்போய்க் கொடுமையாகிய பாவம்வந்து சம்பவிக்குமேயொழிய, சுபாவமாகிய சுகங் கிடைக்கமாட்டாது, ஆகையால் குற்றமற்ற நமது குல முறைப்படிக்குப் பட்டாபிஷேகங் கொண்டு, இந்தப் பூமியை ரட்சிப்பது பெரியதவமும் புகழுமாயிருக்கும். ஐயா! ஒருவருக்கொருவர் பகைத்து எதிர்த்து யுத்தஞ்செய்து கொல்லுகிறதினாற் பாவம், பழி, கொடுமை, இவைமுதலிய பொல்லாங்குந் தோஷமும் வரமாட்டா. அப்படி வருமாகில் யுத்தஞ் செய்யும் வீரர்களுக்கு வீரசுவர்க்கமென்று மேலோர் விதித்திருக்குங்காரணமென்ன? என்று நகுலசகாதேவர் சொல்லியும், பிழையற்ற மனத்தோனாகிய முரசகேதனன் அவர்கள் சொல்லையுங் கேளாமல் மறுத்துவிட்டார்.

அப்பால் அக்கினியிற் பிறந்த பாஞ்சாலியானவள் இருகரத்தையுங் குவித்து தண்ணந் துளவணிந்த திருக் கண்ணனுடைய கடைக்கண்ணனருள்கொண்டு தருமபுத்திர மகாராஜனுக் கெதிர்சென்று நின்று சில மொழி சொன்னாள். ஓ நன்னீதியுடைய நாதனே! வீறத்திறம் வாய்ந்த வேந்தர்கள் போர் புரிந்து சிறியோர்களையும் பெரியோர்களையுங் கொல்லுகிறதில்லையோ? இதுவரையிலும் அப்படி கொன்றவர்கள் கிடையாரோ? இப்போது நீங்கள் செய்த யுத்தந்தான் நூதனமோ க்ஷத்திரியர்களுக்குச்சண்டையில்லா விட்டால் க்ஷாத்திரமேது? அப்படி ராஜர்கள் செய்கிற யுத்தங்களினாற் பாவமும் பழியும் தீமையும் தீங்கும் நேரிடுவதா

யிருக்குமாகில் போர்புரிந்து சத்துரு சங்காரம் பண்ணி உலகத்தை யாளுவதே அரசருக்குறுதி யென்று மநுநூலில் விதித்திருக்கிற விதியை அரசர்கள் ஒப்புக்கொள்ளுவதுண்டோ இல்லையோ தேவர்க்குந் தெரியாதப் பொருளில்லையே அவர்வென்று அநேகம் பூமியைக் கைக்கொண்டு அரசாளுகிற அரசனுக்குச் சிறப்புப் பொருந்திய அஸ்வமேதயாக பலனும் இராஜசூயயாக பலனும் நாமேத்யாக பலனும் உண்டாகும் வீரலக்ஷ்மி விஜயலக்ஷ்மி முதலிய அஷ்டலக்ஷ்மிகளும் அந்த அரசனைவிட்டு நீங்காதிருப்பார்கள். இம்மைப் பயனீங்கி மறுமையடையும்போது வீரசுவர்க்கமுங் கிடைக்குமென்று மநுநூலிற் கூறியிருக்கின்றது. ஆதலால் அடியாளுடைய வசனத்தை அங்கீகரித்து அழகிய கிருஷ்ணமூர்த்தியினிடத்திற் பூர்த்தியா யோசித்து அரசுபுரியுங்கள் என்று சேற் கண்டையொத்த கண்ணினையுடைய திரௌபதி சொல்லினள்.

இப்படி பாஞ்சாலி சொல்லியுந் தருமராஜனவர் தனது பால்போன்ற பரிசுத்த மனது தியக்கங்கொண்டு மயக்கமேறி பின்னுந் துன்பத்திலாழ்ந்திருந்தனர். இப்படியெதினுலுந் தேறித் தெளியாதவராய்த் திப்பிரமை பிடித்தவர் போலிருக்க சகல சாஸ்திர மநுவிக்ஞானங்களைக் கேள்வியுற்றிருக்கும் பெரிய தந்தையாகிய திருதராஷ்டிர மகாராஜனும் சிறியதாயாகிய காந்தாரியம்மனும், உரித்தாகிய ராஜஸ்திரீகளும் விதுர மகாராஜனும் பலவிதத்தில் விஸ்தாரம் பேசினார்கள். ஆரென்ன சொன்ன போதிலுங் கேளாமல் மனந்தேறாமல் ஒரேபிடியாய் நான் வனம்புகுந்து தவஞ்செய்வேனே யல்லது இந்தத்தரையை யாளமாட்டேனென்று ஓதியுணராத உன்மத்தரைப்போல் ஓதவும், உவரிவண்ணனாகிய உலகரக்ஷகனுந் தருமராஜனை நோக்கி இந்தப் பூமியை ஆளுமுறைமை இத்தன்மையுடையதென்று பல கோடி விதங்களாய்ச் சொல்லித் தேற்றினார். அவருடைய சொல்லையுந்தடுத்து தான் பிடித்த பிடி விடாமல் இதோ காட்டுக்குப் போகிறேனென்று நீர் நிறைந்த தடாகத்திலெழுதிய எழுத்தைப் போன்ற தேகத்திசைய்ய விட்டு ஸ்திரமேற்கொண்டு எழுந்து நின்று பிரயாணப்பட்டார்.

### வேதவியாசர் பல தருமங்கூறித் தேற்றத் தேறிய தருமநந்தனர் தீவினையியல் கேட்க அதற்கவர் கூறுதல்.

அந்த வேளையில் வேதத்தைச் சோதித்துக் கீதத்தோடு தந்தருளிய வேதவியாசர் தரும பூபதியைத் தகைந்து ஓ காவலனாகிய பூவலனே இப்பேர்ப்பட்ட எண்ணமுள்ள நீ பூர்வத்திலேயே யாவரையும் வெறுத்துவிட்டுக் காடு புகுந்து தவம்புரிந்திருக்க வேண்டும். அதைவிட்டு குருக்ஷேத்திர பூமியில் யுத்தஞ்செய்து ஒன்றொழியாமல் யாவரையு முடித்து பாரதத்தைப்பற்றற முடித்து விட்டாய் இப்போது உனக்குச் சரியாகிய உல்லாச மன்னரெல்லாம் உன்னைப் பார்த்துப் பகைத்து வசைமொழி விளைத்துப் பழித்து நகைக்கும்படியாய் அடர்ந்து நெருங்கிய காட்டுக்குப் போகிறேனென்று சொல்லுகிறாய் நாட்டிலிருந்து நீதியான அரசுபுரிவதினுலுனக்கு வருகிற குற்றமும் வருத்தமும் காட்டிலிருந்து அருந்தவம் புரிவதினுலுனக்கு நேரிடுகிற சுத்தமும் பொருத்தமும் இன்னதென்று எனக்குச் சொல். என்று சுருதி மணக்குங்கனிவாய் முனிவராகிய வேதவியாசர் சொல்ல தோன்றலாகிய தருமராஜன் அவ்வியாசரைப் பணிந்து ஓ வேத முதல்வனாகிய எந்தையே சூரிய குமாரனாகிய கர்ன மகாராஜனை ஆருயிர் போக்கிய அரும்பாவியாகிய நான் இந்தப்பூமியைக்கருதியிருந்து துரைத்தனஞ் செய்வதில் என்ன பலனைக் காணப்போகிறேன்? எத்தனை நாள் இருந்து வாழப்போகிறேன். என்னுடைய குணத்தைச் சீர்தூக்கிப் பாக்குமிடத்தில் மகா பாவ ஜனனமாகிய ராக்ஷசகுணம் உத்தமமாயிருக்கின்றது.

ஓ ஆண்டவனே! என்னை வணங்கி உபசரிக்கும்படியாகிய துரியோதன மகாராஜன் முதலாகிய தம்பிமார் பேர்களும் பதறிக் கதறும்படியாக மடித்து, தாமரைமாதரித்த துரோணாச்சாரியாரை மொழிமாறிச் சொல்லி முடித்து பொய்யில்லா மெய்யோனாகிய வீஷ்மாசாரியாரை உயிர்மாற்றி சுற்றத்தார் முதலாகியபேர்களை விண்ணிலேற்றி அளவற்ற புத்திர மித்திராதிகளை மாளச்செய்து நான் இவ்வுலகத்தை ஆளவிருந்தேனே ஐஐயோ மநுநூலிற் சொல்லிய ராஜ தருமம் என்னவென்றால் அன்னியராகிய ஆராகிலும்





பகைமேற்கொண்டு படையுடன்புகுந்துசண்டை செய்யவந்தால் அவர்களுடன் எதிர்த்துப் போராடி அவர்களைத் தருமமாகவென்று வெற்றிபெற வேண்டுமென்று சொல்லியிருக்கிறது நிலத்தையாளும்பலத்த அரசர்களும் அப்படியே செய்து செயித்து வருகிறார்கள். அதுதான் தருமமென்பது என்னைப்போற் படுபாழாகிய வினைபுரிந்த பாவிகளுமுண்டோ? ஐயா! ஒரு குலத்திற்பிறந்து ஒரு தலத்தில் வளர்ந்து ஒரு கலத்திலுண்டு ஒருமனையில்வாழ்ந்து உயிருக்குயிராயிருந்த சகோதரரை முன்பின் எண்ணாமல் அமராடி அழித்து ஒழித்த பேர்கள் அவனியில் யாராகிலும் என்னைப்போ லுண்டோ? ஓ அத்தா! பரிசுத்தா! இது செய்யத் தக்க காரியந்தானோ? ஹரி! ஹரி! மீளா நரகத்துக் காளாகும் வழியைத் தேடிக்கொண்டேனே? விவேகமில்லாமல் தேடிக் கொண்ட வினையை அப்போதைக் கப்போதே ஒழித்துக் கொள்ளவேண்டுமே யல்லது. அதைவிட்டு மேலுமேலும் பாப மூட்டை கட்டிக்கொள்ளப்படாதே. ஓ பரமாத்மனே! ஆகையால் நான் நரகத்துக் கேதுவாகித் துயரத்தில் வீழ்ந்து முழுகிப்போக மாட்டேன். அரசாக்ஷியாகிய ஆசையிலாழ்ந்து வேகமாட்டேன். ஊழ்வினை வஞ்சித்து உலைத்துக் கெடுத்ததென்று தாழமாட்டேன்; காட்டுக்குப் போகாமல் நாட்டிலிருந்து வாழமாட்டேன் என்று பல பல வாய்மைகளை யெடுத்துத் தருமராசன் பேசினர். அதைக்கேட்ட வேதவியாசரானவர் சொல்லத் தொடங்கினர்.

ஓ விண்டலம்புகழும் வேந்தே! இராச தருமமென்பது வேத முறைமையால் வினையுந் தன்மையல்லாமல் வேறொன்றல்ல. ஆராரோ இறந்து போனர்களென்று விசனப்படுகின்றனையே, அப்பா தருமநந்தனு! வீணுக இறந்தவர்கள் ஒருவருமில்லை. நீ கொன்றதாயும், உன்னுற் சிலர் மரணமடைந்ததாயுஞ் சொல்லுகின்றாய். ஒருவரைக் கொல்லத்தக்க வல்லமை உனக்குண்டோ? அல்லது எனக்குத்தா னுண்டோ? உன்னுலு மில்லை; அது என்னுலுமில்லை. இதற்கு நீயோசிக்கவேண்டியதுமில்லை. நானதைப் பேசவேண்டுவதுமில்லை. புராதனனுகிய பூரண புண்ணிய னெவனே? அவனுடைய திருவிளையாடலென் றுணர்வது தன்னீர்மையாக்கனும். ஓ உத்தமனே! ஜன்மாந்திரப்பகையும் விரோதமும், குரோதமும், அவரவர்கள் உயிருடன் வாழ்வதும், உயிரொழித்து தாழ்வதும், அதுகளின் வினைக்கீடாக விதித்திருக்கும் நாளும், அந்த நாளுக்குத் தகுதியாக நடத்துங்கோளுஞ் சேர்ந்துவரு நாளையில், ஆரார் அதற்குரியவர்களோ? அவர்களெல்லோரும் அரைக்கணமேனுந் தாளாமல் முடியவேண்டியதே, அந்தப்படிக்கே காலம் வந்தபோது, இந்த இடத்தில் பலருமடிந்தார்கள். இதற்கு சர்வ சாக்ஷியாய்ப்பின்னைப் பிராட்டிக்குரிய பெருமான் உங்களுக் குரிய வராய்க் கிடைத்திருக்கின்றார் நீங்களும் அவர் சொல்வழி கேட்டு எல்லாம் அவனுக் கற்பிதமென்று நடத்திவந்தீர்கள். அதனுல் உங்களை யாதொரு வினையுந் தொடராது. உங்களைப் பழிப்பவர்களுமில்லை. அதைக் குறித்து நீங்கள் சஞ்சலப்பட வேண்டாம் என்று ஞானப் பெருமானுகிய வேதவியாசர் சொல்லினர்.

அம்மொழிகளைத் தருமராசனுனவர் தாழ்ந்து கேட்டுச் சரணில் வீழ்ந்து. உய்ந்தேன், உய்ந்தேன் என்று வணங்கிப் பயந்தீர்ந்து நயந்து ஸ்ரீ கானந்துளவணியுங் கருணைக் கண்ணனே! ஓ அண்ணலே! என்று அவரடியிலும் அழகிய முடிசூடிக் கண்குளிரப் பார்த்து சுவாமி! தேவரீரைத் துணையாகக் கொண்டோம். நாங்கள் குற்றஞ்சுமந்துாள் மாகிய நரகத்தில் விழுந்தாலும், ஒப்பற்ற மோக்ஷமடைந்தாலும்,எல்லாமுமக்கே அற்பிதம். எமக்கு நீரே துணை. என்று பேர்பெற்ற தருமராசனுனவர் சொல்ல, ஆச்சியருடனுடி பேச்சி முலையுண்ட பெருமான் சிறுநகைகாட்டியருளி, வாரும் தருமநந்தனரே! நீங்கள் யாதொரு காரியங்களும் மனதாரநினைத்திருக்க மாட்டீர்கள். ஆகையினுலே பெருங்கோலைக் கொடுமையாகிய தீமைகள் உங்களைச்சேரா. அவைஉங்களை யொன்றுஞ் செய்யா. இப்போது உமது தம்பிமார்கள் உம்மை வணங்கும்படியாய் அஸ்தினுபுரத்திற்குச்சென்று, அணிமுடிதரித்துக்கொண்டு, நெறிமுறை குறையாமல் அரசு புரிந்து வாழ்க்கடவீர்களென்றுநேசமாகியகேசவன் திருவாய் மலர்ந்தருளினர். அந்தப் பெருமான்மொழியை ராசசிங்கமாகியதருமராசன் கேட்டு, அலங்காரமுள்ள ஆசனத்திலமர்ந்து, விசுவாசமாகிய தம்பிமார்களுக்குந் திரௌபதைக்கும் இனியவசனங்களைப் பேசி,

மலரகிதராகிய வேதவியாசரைப் பணிந்து கைகுவித்து, அவருடைய திருமுகமண்டலத்தைப் பார்த்து, ஓ சேசிற்சிறந்த தெய்வ முனியே! இவ்வுலகிற் பொருந்திய உயிர்த் தொகைகள் முன்செய்த நல்வினைத் தீவினையை அனுபவிப்பார்களென்று சொல்லுகிறார்களே அதனுடைய காரியமென்ன? அந்தத் தீமைகளின் வரலாறுகளை நான் திறமாயறியும்படிக்குப் பிடித்துச் சொல்ல வேண்டும். என்று தருமராசன் கேட்க, வேதங்களையுத்தரித்தருளிய வியாசர் சொல்லுகிறார்.

ஓ மதிகுல மன்னனே! சகல வேதாகம சாஸ்திரங்களிற் கூறியிருக்கிற பிரகாரம் விதிவிலக்கு, நன்மை தீமை, இவை முதலிய யாவுமாராய்ந்து குறைவில்லாமல் நாள்தோறுஞ் செய்து வருவார்களாகில், அது நல்வினையாகும். அந்தவேதாகம சாஸ்திரங்கட்கு மாறுபட்டுப் பழுதாக நடப்பார்களாகில், அது தீவினையாகும். இதல்லாமல், இன்னமுஞ்சில சொல்லுகிறேன். அவற்றை உனது மனத்திற் கொள்க. சூரியோதயத்தில் தூங்குகிறதும், சூரிய அஸ்தமானத்தில் நித்திரை செய்வதும், பிறர்தாரத்தை விரும்புவதும், பிறருடைமையை அபகரித்தலும், வீட்டில் அதிதிவந்தால் அவனைப் பூசித்து உபசரிக்காமல் அகங் கொண்டு வெறுத்திருத்தலும், குருமொழி வழுவுதலும், குருநிந்தை செய்தலும் குடிபடைகள் நெருங்கிய நகரத்தை அழித்தலும், வேதமந்திரத்தைவிற்று ஜீவனஞ்செய்வதும், பெண்சாதி முதலிய அடிமைகளை ரக்ஷிக்காமல் விட்டுவிடுதலும், சிவனடியார்களை அச்சிவன் போற்கருதி சவரக்ஷணை செய்யாதிருப்பதும், வீடு முதலிய இடங்களில் தீமூட்டுகிறதும், பிறரை நிந்தையாகப் பேசுதலும்; தெய்வமிகழ்தலும், அன்னியருடைய புகழ்ப் பெருமையை நினைத்து பொறாமைப்பட்டு அவர்களுக்குக் கேடாக்த் தகுதியில்லாத பொல்லாங்கு முதலிய காரியங்களிற் பிரவேசிப்பதும், தான் கொண்ட சத்கருமங்களை விட்டு விடுதலும், விருதாவில் உயிர்வதை செய்தலும், பிராமணருடைய பொருளுக்குலச்சையற்று இச்சைவைப்பதும், அடைக்கலம் அடைந்தோரைக் காக்காமற் கைவிடுதலும், வேதபாராயணர் முதலிய பெரியோரைப் பழித்தலும், நிந்தித்தலும், இதெல்லாந் தீவினைமயமாகிய தீமைகளென்று புலவர்கள் பேசியிருக்கின்றார்கள். இவைகளிற் பாவம்போலிருந்து தீவினைசேராமற்புண்ணியபலனைத் தருவனவுஞ்சிலவுண்டு, அவையாவெனில், எதிரிகளின் பேரில் எதிர்த்து, அவர்களையொரு துரும்பாய் மதித்து, ஆயுதம் விதிர் விதிர்க்கவரு மதிசூரன் வேதமுணர்ந்தப் பிராமணனானாலும், அவனால் தனக்குப் பொல்லாங்கு வருவதாயிருக்குமாகில் உடனே சண்டைசெய்து கொல்லுகிறதெல்லாம்புண்ணியமேயாம். வேதமந்திரங்களையும் முத்தீயையுமுடைய யாகத்திற் பசுவை வதைத்தல் மோட்சமென்று இப்போது நடந்து வருவதையுந் நீ மனத்துட்கொள்ளுக. என்று வேதவியாசர் பலவாறாகச் சொன்னார்.

---

ஸ்ரீ கிருஷ்ணதேவர் தருமராஜனுக்கு நாரதர் மகத்துவங்கூறி, அவர் வார்த்தையை ஆதரித்தல் வேண்டுமெனல்.

இப்பால் தருமபுத்திர மகாராசனைப் பார்த்து உலகெல்லாம் ஒருங்களந்தருளிய பதுமநாபனென்னும் ஸ்ரீகிருஷ்ணர் சொல்லுகின்றார். ஓ தருமநந்தனரே! இந்த வியாசராகிய மகானுபாவர் சொன்ன வாய்மையெல்லாங் கேட்டீரல்லவா? இன்று முதல் உமது மனத்தில் நினைத்த ஐயமெல்லா நீக்கி, வையமெல்லாங் காக்குஞ் சவுக்கியம் பெறக்கடவதே. மேலும் நமது வேதவியாசருடைய நிலை முதலிய செயலையெல்லாம் நீர் அறிந்திருக்கின்றீர். அதைக்குறித்து நான் விரித்துச் சொல்லவேண்டியதில்லை. இவ்விடத்திற் கலந்த நாரதமகாமுனிவருடைய நற்பெருமைகளைச் சொல்லும் வல்லவர்களுமுண்டோ? ஓ தோன்றலே! ஆகிலும், நானறிந்தமாத்திரம் அவருடைய சரித்திரங்களிலொன்றைச் சொல்லுகிறேன் கேட்டருளும் இந்த நாரதமகா முனிவருடைய தங்கையானவள்பெற்ற பருப்பதனென்னும் ஓர் முனிவர் சிறப்புப் பொருந்தி தன்னம்மானாகிய இவரை விட்டு நீங்காத பக்ஷமுண்டானவராய் இவருடன் உடனிருப்போம் பிரியாமலிருந்தனர். பின் யிவ்விருவரும் மேகசஞ்சாரமாகிய உன்னத மலைகளிற் சென்று, சிவத்தைப்பேணுந் தவத்தைப் பொருந்தியிருந்தார்கள். இவ்விதமாக இவர்களிருவரும் அனேக காலந் தவம்புரிந்த பிற்பாடு, ஒருநாள் ஒருவருக்கொருவர் உச்சாக மேற்கொண்டு,ஒப்பற்றதங்கள்மனத்திற்கொண்ட

எண்ணம் நல்வண்ணமாகக் குன்றுமல் அனுபவிக்கவேண்டுமென்று இருவரும்மன ங்கலந்து காட்டிலிருந்து தவம்புரியுங்காலத் தில், பின்னுஞ்சில்நாட்சென்று அருந்தவம் விட்டெழுந்து, அரசர்களுடைய நாடுநகரத் திற் றிரிந்து சஞ்சரித்து, சுஞ்சயனென்னும் வாட்டிறமன்னன் வாழும்படியான நகரத்து ட்புகுந்து ராஜசபைக்குப் போயினுர்கள்.

இவர்கள் வந்ததைக்கண்ட அந்தச்சுஞ் சயராசன் எதிர் கொண்டெழுந்து, இரண்டு பாதங்களிலும் பணிந்து, அர்க்கியபாத்திய முதலாகிய உபசாரங்கள் புரிந்து, இருகரத் தையுங் கூப்பி, ஓ பெருந்தவத்தினையுடைய புண்ணியர்களே! ஏழையாகிய என்னிடத் திற்கு வந்த காரணம் யாதென்றுகேட்டான். இப்படி தேவேந்திரச் செல்வம் பெற்ற சுஞ்சயனுகிய இறைவன் கேட்கவும் வந்த அந்தணராகிய இந்த இரண்டு பேரும் ராஜ னுக்கு ஆசீர்வசனஞ்சொல்லி, ஓ ராஜபூபதி யே! அயனமாச விரதம் அனுஷ்டிக்கவே ண்டி உம்மிடத்திற்கு வந்தோமென்று சொ ன்னுர்கள். அவர்கள் மொழியைக் கேட்ட மன்னர் கோமானுனவன் உள்ள மகிழ்ந்து, தன்னரண்மனைக்குள் அழைத்துப் போய் தி வ்வியமான சிங்காரவனஞ் சூழ்ந்த வாசஸ் தலம் ஏற்படுத்திக் கொடுத்து, இவர்களுக்கு வேண்டிய வஸ்துக்களெல்லாம் அமைத்து சுந்தரமுக மமைந்த தன் குமாரத்தியாகிய சுதை யென்பவளை யழைத்து, இந்த நாரத முனிவரும், இவருடைய மருகராகிய இப் பருப்பத முனிவரும் ஆறுமாதம் நமது வச த்திலிருந்து விரதம் அனுஷ்டிக்க வேண்டு மென்று வந்தார்கள். இவர்களுக்கு உன்னுல் ஆகத்தக்க உபசாரங்களெல்லாங் குறைவில் லாமல் நடத்திவரக் கடவை என்று உருகிய உள்ளத்துடன் கருணைசுரந்துஉத்தரவு செய் தான். அந்தப்படியே அந்தப் பெண்ணுன வள் சுகுமாரியென்று யாவருஞ் சொல்லும் படிக்குப் பக்தி ஸ்ரத்தையாய்த் தாபதராகி முனிவர்கள் சிந்தைகளிக்கும்படி குறைவில் லாத ஏவற் பணிவிடைகளைச் செய்து வந் தாள்.

அப்படியிருக்க, ஒருநாள் இந்நாரத ம கா முனிவருக்கு உபசாரஞ் செய்யும் போது, கரும்பிலும் நிரம்பியரசமாகிய மொழிகளும் சுரும்பிலும் விரும்பியதிறமாகிய விழிகளும், கோங்கு மொக்கு போன்ற கொங்கையும், தேங்குலவு மலர்போன்ற செங்கையும், சுரு ங்கி நிமிர்ந்த மருங்குலும், நெருங்கியமர்ந் தக் கூந்தற் கங்குலும், வாழைத்தொடையும் வேழநடையும், பின்னர் சடையும், வன்ன வுடையும், மதனவேதபாதமும், நடனகீத நாதமுடைய பெண்கள் பெருமாளின் உருவ மானது, இரும்பைப் பார்க்கிலும் வலுவே றிய நாரதருடைய மனத்தையிளக்கிப் பைய நையச் செய்தது. மேகலாபரண மணிந்த கடிதடத் தையலாளுடைய பான்மையை மாசில்லாத நாரதர் பார்த்து, அவளுடைய அழகில் முழுகிப்போய் ஒன்றுந் தோன்று மல்,-வயித்தியஞ் செய்யக்கூடாத பயித்தியம் பிடித்தவரைப்போல் வாய்பிதற்றி, இராத்தி ரிக்கெல்லாம் நித்திரை யில்லாமல் நாளுக்கு நாள் இளைத்துப் போவதாயினுர். இப்படி யிவரிளைத்துப் போவதைப் பால்யனுகிய பரு ப்பதரறிந்து, ஓ மாமா! நீரேன் இப்படியா கக்குன்றிப் போகின்றீர்? நீர் எதின்பேரில் ஆசைப்பட்டிருக்கின்றீர்? நீர்கொண்ட காத லை ஏனெளித்தீர்! என்னிடத்திலேன் சொல் லாமற் போயினீர்? என்று மெத்தவுங் கூச்ச லிட்டுக் கேட்டு, மிகக் கோபங்கொண்டு இத னைச் சொல்லுகிறுர்.

ஓ மாமா! நாமிரண்டுபேரும் எந்தக்காரி யங்களையுஞ் சிந்தையி லொளிக்காமற் நிந் தையிற் றிளைக்காமல் பேசிக் கொள்ளுகிற தென்று நிச்சயித்திருக்கின்றோ மல்லவா அ ப்படியிருக்க நீர் சத்தியந்தப்பி அதனைமறந் தீரே, இதென்ன காரியம்? நீருன்னியது எனக்குத் தெரியாதா? இந்தப் பெண்பேரில் ஆசைகொண்டு நீர் படுந்துன்பத்தை எனக் குச் சொல்லக்கூடாதா? பிரமஞானந் தெரி ந்த பிராமணனுடைய குலநெறி முறை மைக்கும், குண நடைக்கும் இது தக்கது தானு? நமக்குரிய செபதப மந்திர ஆசார பூ சாவிதி முதலிய நன்மார்க்கத்தை யடுத்து, சிவபெருமானுடைய நெற்றிகண் அவராற் றீய்ந்து மாய்ந்து சிலம்போய்ந்துபோன ப ஞ்சையாகிய மன்மதன் பாணத்தால் வருந்தி வாடுகின்ற உம்மைத் தவம்புரிய வாருமென் றழைத்தால் வருவீரா? விரதங் காருமென்று ரைத்தார் காப்பீரா? அந்தப் பெண்ணை அ ணையாமல் விடமாட்டீர். ஆதலால் மேகமா கிய குழல்முடிந்த மெல்லியைக் கலியாணஞ் செய்து கைப்பிடிக்கு நாளையில் உமது முகங் குரங்குமுக மாக்கடவதென்று சபித்தார்.

இந்தச் சாபத்தைக் கேட்ட அம்மானுகிய இந்நாரதர் திபங்கி, மயங்கி, உயங்கி, தன்து மருமகனுன பருப்பதரைப்பார்த்து, நீ நாட்டிற் சஞ்சாரமில்லாமற் காட்டிற்போகக் கடவதென்று சபித்தார். இந்தச்சாபத்தைப் பெற்று, எனக்கு நாட்டில் வேலையென்னவிருக்கிறதென்று பூமியிலுண்டாகிய காடுகளெல்லாம் புகுந்து போயினுர் பருப்பதனுனவர்.

இப்பாற் சுஞ்சயனுடைய நகரத்தில் ஏதிலார்போல் ஏங்கியிருந்தஇந்நாரதமாமுனியின் சங்கதிகளை யெல்லாம் அந்தச் சுஞ்சயனென்னும் ராசனறிந்து, பரிசுத்தராகிய இந்நாரதருக்கு நஞ்சினுங்கொடிய அஞ்சனக்கண்ணுளாகிய வஞ்சிபோன்றதன்பெண்ணைத் தாராதத்தம் பண்ணிக் கொடுத்தான். பின்பிந்த நாரதமுனியும் அச்சுதையென்பவளும் பிரம்மாவுஞ் சரஸ்வதிபோலும், ஸ்ரீமகாவிஷ்ணுவும் லட்சுமியும் போலவும், புணர்ந்து இன்பமுற்று வாழ்ந்தார்கள். அந்தக்காலத்தில் அருந்தவத்தில் மிகுந்த பருப்பதமாமுனிவரின் சாபப்படி இவருக்கு குரங்குமுகம் வந்து சம்பவித்தது. ஆயினுமதற்கு வருந்தாமல், அச்சீரிற் சிறந்த பெண்ணுளுடன் கூடியிருந்தார் அந்தப் பெண்ணமுதம் இக்கணவனிடத்தில் அதிக அன்பும் பக்ஷமும்இச்சையும் உண்டானவர்களாய்க்கவலையில்லாதிருந்தாள். ஸ்திரீகளாய்ப் பிறந்தவர்கள் புருஷனுடைய குணம் பணம் குலம் நலம் கோத்திரம் சூத்திரம் இவைகளை விரும்பாவிட்டாலும் அழகுக்கு மாத்திரம் ஆசைப்படுவார்கள். இந்தப்பெண்ணுனவள் தன் புருஷனுகிய நாரதருக்கு வானரமுகமாகிய தாழ்வு கண்டுந் தனது மனந்தளராமல் வாழ்வு பூண்டு கற்பின் குணத்தால் நினைத்தற் கரிதாகிய மகிழ்ச்சி கொண்டு நாளுக்கு நாள் அதிக விசுவாசத்துடன் போற்றி ஊழியஞ் செய்து பாதுகாத்து வந்தாள்.

இப்படியிருக்கு நாளையில் ஒருநாள் அருந்தவத்தொருவனுகிய இந்நாரதமாமுனிவரானவர் மூங்கிற் காடுகளும் முகில்தவிழ்ந்தோங்கிய கோடுகளுமுடைய காட்டுக்குள் தனியே சென்று எவ்விடங்களிலுந் திரிந்து திரும்பி வருகின்ருர். அக்காலையில் அக்கினிக் கொழுந்துபோலொத்த தன் மருமகனுகிய பருப்பதர் அவ்விடத்தில் வந்துகூடினுர். அந்த மகாமுனியாகிய மருகனை இந்த நாரதர் நோக்கி அன்பு கூர்ந்து ஒருவரையொருவர் அணைத்து உபசரித்துப் பொருந்தினுர்கள். அப்போதிந்த நாரதமகாமுனியைப்பருப்பதர் பார்த்து ஓ மாமா நீர்சொல்லிய சாபத்தினுல் நாடு நகரங்களுக்குப்போகமாட்டாமற் காடு முதலிய இடங்களிற் பயின்று கலக்கமுற்றிருக்கின்றேன். ஆதலால் நீரிட்ட சாபத்தை நீக்கி விடுமென்று கேட்டார். அப்படியே நல்லதென்று மருமனுக்குத் தாமிட்ட சாபத்தை நீக்கினுர். மருமகனும் மாமனுக்கிட்ட சாபத்தை மாற்றினுன். இருவருஞ் சாப நீங்கி சந்தோஷமனத்தராய் ஒருவருக்கொருவர் விடை பெற்றுக் கொண்டு சென்ருர்கள். உடனே இந்நாரதமுனிவர் தனது மனைவியை நோக்கிவர செவ்வையான அழகு பொருந்திய தேசினுேடு திருமுக மண்டலம் பிரகாசிக்கும்படியா யிருப்பதை இவர்க்குரித்தாகிய கொவ்வைப் பழம் போன்ற வாயினையுடைய அக்கற்பின் மனைவியானவள் கண்டு இவராரோ அன்னியரென்றெண்ணிக்கொண்டு கிட்டவந்துநெருங்க நாணப்பட்டுத் தூரத்தில் நின்ருள்.

இக்குறிப்பைத்தனது ஞானத்தாற் பருப்பதரறிந்து முன்னே பழக்கமாகிய வழக்கத்தினுலே அக்கன்னிகையிடத்து வந்து ஓ துல்லிய உடையினையும் மெல்லிய யிடையினையுமுடைய மாமியிவர்என்னுடைய மாமன் நாரதமகாமுனிவர் இவருக்கு நேரிட்டிருந்த குரங்கு முகச்சாபம் நீங்கிப்போய் விட்டபடியால் நீறங்குலவிய வேறுருவாக விளங்கினுர். நீ சந்தேகப்படாமல் உமது புருஷனை ஒப்புக்கொள்ளும் என்று கூறவும் அம்மாது அதற்குடன்பட்டு மணவாளனுக்கு ஒருமைப்பட்டு உவகைகூர்ந்து உச்சாகமடைந்தாள். பின்புச் சிறந்த நாரதமுனிவரானவர் சிந்தைகளித்து அப்பைந்தொடியுடன் கூடி வாழ்ந்தார். இப்படி சிலநாள் வாழ்ந்து வருகையில் தெளிந்தோனுகிய இந்நாரதரானவர் பராளுகின்ற மாமனுன பார்த்திபனைப்பார்த்து, ஓ உலகாளும் உத்தமனே! மன்னர்குலத்தில் பிறந்து மண்ணுலகத்தை யாளும் மன்னர்களுடைய வருக்கத்தில் உமக்கு ஒப்பானவர்கள் ஒருவருமில்லை. உம்முடைய செல்வம் நீடுவாழ்வதாக. இனியான் உமது பெண்ணுடன் கூட காட்டுக்குப் போய்த் தவஞ்செய்யக்கருத்தானேன் உமக்கு வேண்டிய வரத்தைக்கேளுந் தந்து விட்டுப் போகிறேனென்று சொல்லினர்.

அப்போது தார்புனைந்த மார்பனுகியச் சுஞ்சயன் பணிந்தெழுந்து, சுவாமி! எனக்குப் பிள்ளை யில்லாமல் மெத்தவும் நெஞ்சுழன்றிருக்கின்றேன். என் மருள் நீக்கிப் பொருள் சேர்க்கும்படியாகிய புத்திரனென்று கட்டளையிட வேண்டுமென்று கேட்டான். அப்படியே சுவர்ணடீவென்னும்பிள்ளையுண்டாகும்படி அநுக்கிரகஞ்செய்து விடைப்பெற்று, மனைவியாகிய மாதையும் மருமகனையுமழைத்துக் கொண்டு வனம்போய்ச் சேர்ந்தார் இந்நாரதரானவர். அப்பாலிம் மகாமுனியி னனுக்கிரகப்படிக்குச் சுஞ்சயனென்னும் ராஜனவன் பிள்ளையைப் பெற்றுக் கொண்டு பொன்மலப்பொருள் சேரும்படிக்கு வாழுநாளையில், அச்சூழ்ச்சியைத் திருடர்கள் கண்டு, அந்தப் பிள்ளையைக் கொலை செய்து வயிற்றைப் பீறிப்பார்த்து, ஒன்றுங் காணுமையாற் போட்டுவிட்டுப் போனார்கள். அந்தப்பிள்ளையைப்பெற்ற மகாராஜன்கண்டு வருந்திப் பெருந்துயர் கூர்ந்து, இந்நாரதரைக் கூவியழுதான். இந்த மகானுபாவர் போய் அந்தப்பிள்ளையை தவத்தின் மகத்துவத்தா லெழுப்பிக்கொடுத்து, தாயையுந் தந்தையையுஞ் சிந்தைகளிக்கச் செய்தார். இவருடைய மகத்துவத்தை இவ்வளவென்று யாவராலுஞ் சொல்லப்படாது. ஓ வேந்தர் வேந்தராகிய உதிஷ்டிர மகாராஜனே! உம்மளவில் இந்த உத்தமர் சொல்லிய காரியங்களெல்லாம் உண்மையே, யிவருடைய வாக்கியத்தைத் தள்ளாமல் ஆசையுடன் திருமுடி சூடி, ஓசைக்கடல்சூழ்ந்த உலகத்தை ஆளத்தக்கதே என்று காளமுகில் வண்ணக் கண்ணன் சொல்லியருளினார்.

---

அருச்சுனன் சனகராஜனுடைய நீதியின் முறைமையைக் கூறித் தமயனைத் தேற்றுதல்.

அப்போது மைக்காள முகிலூர்த்தி மகனுகிய அர்ச்சுனன் மாலினி நோக்கி, ஐயா மாயனே! துயோனுகிய தருமபுத்திர மகாராஜன் சமர்புரிந்து, எண்ணில்லாதபேர்கள் கூட்டமாக இறந்து போனதைக் குறித்து மனம் வெறுத்து எஞ்சிப் பயப்படுகின்றார், மேலோர்களின் மிகுந்த மேலோனுகிய எங்கள் அண்ணுவானவர் அந்தப் பழமொழித்துத் தருமந்தப்பாமல் துரைத்தனம் செய்வாராகில் தீவினையாகிய பழிகள் எக்காலுஞ் சேராது. இவருக்கிசையுஞ் சேராது. அப்படிக்கில்லாமல் அடவி புகுவாராகில், யிதைவிட வேறு பாவங்களுண்டோ! ஓ எந்தலே! ஒரு சிறிய கதையொன்று சொல்லுகிறேன் கேளுங்கள். நான் தெய்வலோகத்திற போய்ச் சதமகநாதனுகிய தேவேந்திரனுடன் ஓராசனத்தி லிருந்தேன். அந்நாள் பாவமில்லாத தேவகுருவானவ ரிந்தச் சரித்திரத்தைச் சொல்லினர். என்றந்தையு நானுங் கேட்டுக்களிகூர்ந்தோம். அதாவது, பூர்வத்தில் மிதுலாபுரியை யாண்ட ஜனகராஜனைவன் அருமாதவத்தோர்களைப் பார்க்கிலும் அதிகன். அவன் கொடிய தீமைகளைப் பொடியப்போக்கி, குடிபடைகள் யாவுந்தாயினிடத்திற் பிள்ளை தளர்ச்சி யில்லாதிருக்குந் தன்மைபோல் வாழும்படியாக்கி, துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்து, தருமவேலியே தலைக் காவலாகக் காத்து, யாவரிடத்துந் தாடாண்மை செலுத்தி, தன் தாரதாரபரதாரசோதரனுகி, நீதி தப்பாமல் விசாரித்து நேயமில்லாமல் தண்டித்துவருகிறுன்.

இந்தச் சனகராஜனுக்குத் தம்பியானவன் குறைவுபடாத நிறைதவமுடையசங்கரசனென்னும்பெயர் பூண்டவன். இவன்லிகிதரென்னும் பேர் பெற்ற ஓர் அருந்தவருடைய வனத்தை நெருங்கிவந்து, அவரைத் தொழுது புகழ்ந்து வாழ்த்துவதற்காக அந்த வனத்துட் புகுந்தான். அங்கே நிறைந்தோங்கி யிருக்கும் பல தருக்களிலநேகங் காய் முதலியவற்றைக் கண்டான். அவற்றுள் முதிர்ந்து கனிந்து பழுத்த மாதுரியமாகிய ஒரு மாம்பழத்தைப் பறித்தான். அதை அந்த வனக்காப்பாளர் கண்டு இந்தப் பழத்தை யேன்றுத்தீ ரென்று கேட்டு அவனுடன் தொடர்ந்தார்கள். இந்தச் சங்கனென்பவன் லிகிதமகாமுனிவரிடத்தில் வந்து, அவரை புகழ்ந்து யேற்றிப் போற்றி, பக்தியாகிய நினைவுடன்பணிந்து நின்றுன். அப்போது தோட்டக்காரரும் நமஸ்கரித்து, ஆண்டவனே! தேவரீருடைய தரிசனத்துக்கு வந்த யிந்த உத்தமனுனவர் தம்மைத் தரிசிப்பதற்கு முன்னே ஒரு மாம்பழம் அறுந்தாரென்று சொன்னுர்கள். அந்த மொழியைக் கேட்டபெரியவர் சங்கரசனை நோக்கி, நீ அப்படி செய்திருப்பையாகிற் பிறர்பொருள் கவர்ந்த பொல்லாங்காகிய தீமைவந்து உன்னைப் பிடித்தது. இதற்கு தண்டனையானுலொழிய அத்தீமை நீங்காது. ஆகையால் நீ யிவ்வுல

கத்தையாளும் ஜனகராசனிடத்திற் சென்று ராஜதண்டம் கொண்டு, அப்பா விவ்விடத்திற்கு வாவென்று லிகிதமாமுனிவர் சொல்லினர். அந்தச் சொல்லைக் கேட்டவுடனே அவ்வனக் காப்பாளர் சங்கரசனுனவனை அஞ்சிப் பயந்துகசிந்து ஒசிந்துவரும்படியாய் அப்பழத்தோடு கொண்டுபோய் மிதுலாபுரியை மேலாகிய விதரணையாற் காத்துவராநின்ற ஜனகமகாராசனெதிரில் நிறுத்திச் சங்கதியைச் சொன்னார்கள். அந்த மகாராசன் அதைத் திரவிசாரித்து, சங்கரன்பேரிற் குற்றமென்று நேமித்து, இன்னாரின்னாருடைய சொத்தை அபகரிக்க நினைத்தவர்களுக்கும் எடுத்தவர்களுக்கும் இன்னயின்ன தண்டனையென்று மேலோர் விதித்திருக்கும் விதியைப் பரிசோதித்து யிதனைச் சொல்லுவதானன்.

ஓ சங்கரசனே! மறை வேதியர்களின் சொத்தாகையால் நீ யிந்தப் பொருளை யிச்சிக்கப்படாது. கரத்தாலுந் தீண்டி யெடுக்கப்படாது. அப்படி யிருக்க, இந்தப் பழத்தைப் பறித்த உன் கரத்தைத் தறித்து விடவேண்டியதென்று கட்டளை யிட்டான். அப்படியே ராஜாக்கினையின்படிக்குக் கொலைசெய்வோர் அவன் கையைத் தறித்துவிட்டார்கள். அப்பாலச் சங்கரசன் தறித்த கையையெடுத்துக்கொண்டு லிகிதமாமுனியி னிடத்திற்போய், தறிபட்ட கையைச் சந்தோஷமாய்க்காட்டி, அவருடைய கமலமலரடியில் வீழ்ந்து தாழ்ந்தான். அந்தப் பெரியவரிந்தச் சங்கரசனைப் பார்த்து, பிராமண சொத்தை கவர்ந்ததீமையை யிங்கனே தொலைத்துவிட்டாய். இனியுனக்குத் தீமையில்லை போவென்று ஆசிர்வதித்து விடைகொடுத் தருளினர். அவருடைய அநுக்கிரகத்தினல் உடனே முன்போலவன்முன் கைபொருந்தியது. அதையவன்கண்டு மனந்தேறி, பிராமணுள் முதலிய பெரியோர்களுடனே சந்தோஷ சமுத்திரத்தில் மூழ்கி, தாழ்வில்லா வாழ்விற் சிறந்தான். அப்போது தம்பியென்று பாராமல் தண்டித்த சனகராசனை முத்தலத்துள்ளோரும் துதித்து மதித்து மகிழ்ந்தார்கள். வானவர் பூமாரி பொழிந்தார்கள். அண்ணு! ஆரானபோதிலும் நடுவுநிலைமைதப்பாமற் பொதுமையுடன் விசாரிக்கும் ஆண்மிக்கையும், நன்னெறித் தருமமும் உடையவர்களா யிருப்பாராகில்; அவர்களுக்கு ஒரு தீமையுஞ் சேராது. பலராசர்களும்வெகுதேவர்களும்புகழுவார்கள். தேவரீர் இவைகளைச்செவ்வையாக யோசிக்க வேண்டியதே, வீணுய் மனந்தடுமாறல் வேண்டாம். ஓ உள்ளக் கருணையின் ஊற்றினுலுதித்த உதிஷ்டிரராஜனே! தேவர் யாங்களனைவருங் கேட்டுக்கொள்ளுங் கடமைக்கு உடன்பட்டு இவ்வுலகத்தின் குற்றங்களைப்போக்கி அரசாள்க் கடவீரென்று அருச்சுனன் சொல்லினன்.

---

### வியாசராதியர் தருமராஜனை வீஷ்மரிடம் அழைத்துச்செல்ல, அவர்வருக்கினியாக வேண்வேனகூறி அனுப்புதல்.

இப்படி சொல்லக்கூடாத தருமங்களையெல்லாம் எடுத்துச்சொல்லிய தம்பிமார் முதலிய பெரியோர்களின் வார்த்தை முழுமையும் ஆசையுடன் தருமராசன் கேட்டு, இவ்வுலகத்திற் பிரமாவினல் சிருஷ்டித்த ஆத்மகோடிகளெல்லாம் ஈடேறும்படியாக வெண்குடை நீழல் விரித்துத் தாயைப்போல் உபசரித்துக்கிருபை கூர்ந்தருளிய எங்கள் பாட்டனுகிய வீஷ்மாச்சாரியார் உயிர்த்துவருந்திச்சரசயனத்திற் பொருந்தி யிருக்க, நான் சுகத்தை விரும்பி இவ்வுலகத்தைஆளத்தக்கதோ? என்று தருமராஜன் ஏங்கி யிரைந்து கண்ணீர்விட்டுச் சொன்னர். அந்த மொழியை வியாசராதிய அருந்தவத்தோர் கேட்டு, நல்லது அவ்விடம்போய் அந்த வீஷ்மரையுங் கேட்போம். ஓ தருமராஜனே! நீங்கள் யாவரும் வாருங்களென்று அந்த வீஷ்மாச்சாரியார் இருக்குமிடத்திற்குத் திரிதராட்டிரன் முதலாகிய ராஜகூட்டங்களும், குந்திதேவி காந்தாரி முதலிய ராஜ ஸ்திரீகளும், மணியாழியிற் றுயிலும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும், சாத்தகியும், கிருபரும், விதுரரும், சஞ்சயனும் இன்னுமுண்டான பேர்களும் அத்தருமராஜன் முதலிய பாண்டவ ரைவரோடு சூழ்ந்துவர அழைத்துக் கொண்டுவந்துவிடுத்தார்கள். உடனே யாவருங் கங்காதேவியார் குமாரனுகிய அவ் வீஷ்மாச்சாரியரைக் கண்டு, அவருடைய திருவடியில் வீழ்ந்து தலைதாழ்ந்து பணிந்து துதித்து நின்றூர்கள், இவர்கள் யாவருஞ் சிந்தாகுலத்துடன் வந்தார்களென்று வீஷ்மாச்சாரிய ரறிந்து கண்விழித்துப்பார்த்து, சங்கதிகளை யெல்

லாங் கேட்டு, அவரவர்களுக்கு மங்களா சனஞ் சொல்லி, தனது தலைப்பேரனுகிய தருமராஜனை ஏறநோக்கி, தங்கள் குல முறைப்படி சில மொழிக் கூறத் தொடங்கினுர்.

ஓ தருமநந்தன! இந்தக்குருக்ஷேத்திரத்தில் யுத்தஞ் செய்து ஆவியற்றவர்களெல்லோரும் மோக்ஷமடையும்படியாய் மந்தாகினிக்கரையிலிருந்து கருமக்கடன்முறைகளெல்லாந் தீர்த்தாய். இனி இவிடத்திலிராமல் அஸ்தினுபுரம்போய்ச் சேரக்கடவை. அப்பனே! போரிற்சிறந்தபுஜபலபராக்கிரமசாலிகளெல்லாம் மாண்டுபோகும்படியாய்ப்போர் புரிந்த நீ அஸ்தினுபுரத்தை யடுத்து வர்ணுச்சிரம தருமந்தப்பாமற் குடிகளை சவரக்ஷணைசெய்து, திருதராட்டிரனுங்காந்தாரியுமாகிய உன் தந்தையையுந் தாயையும் பெரியோர் முதலாகிய உரியோரையும் ரக்ஷித்துக் கொண்டு திருமுடிபுனைந்து, பூலோகபோகத்தைவிரும்பி வாழ்வதைக் கருதாமல், தவம் புரிவதற்காகக் காட்டிற்குப் போகிறேனென்பது அபாரமாகிய கொடுந் தொழிலாகும். மேகம்போற் கணைகளைச்சொரியா நின்ற கர்னன் முதலாகிய வேந்தர்களும் பற்பலமாந்தர்களும் இறந்துபோனுர்களென்றுவிசனப்படுகிருய். அவர்கள் விறுதாவா யிறந்தார்களென்று நினைக்காதே. பிரம்மா விதித்த ஊழ்வினைகதித்த விதியளவுக்குக் குறைவில்லாமல் முடிந்தார்கள். வீரராகிய ராசருக்கு விதியென்ன வென்ருல் பகைவருடன் சண்டை செய்து மண்டலத்தை யாளுவது திறமாகிய அறமாக்கும். ஓ முரசகேதன இதனுல் உனக்கொரு பொல்லாங்கும் வராது. நீ விசனப்பட வேண்டாம். உன்னுலாகிய தொன்றுமில்லை. எல்லாம் வல்ல நல்லவர் ஏதொரு பேச்சும் பேசாமல் இதோ எனக்கெதிர் நிற்கின்ருர். ஆகையால் இந்தத் திருமாலைக் கைவிடாதே. இவருடனேயும் மற்ற இனியவருடனேயும் அஸ்தினுபுரத்திற்குப் போய் முடிதரித்துக் கொண்டு சத்துருக்களெல்லாம் உன்னைப் பணியும்படியா யிருந்து தருமங்கள் தப்பாமல் தயையுடன் வாழக்கடவாயென்று விளம்பினுர்.

---

தருமராஜன் சகல வைபவத்துடன் அஸ்தினுபுரஞ் சென்று கோலு வீற்றிருத்தல்.

இப்படி வீஷ்மாச்சாரியார் விளம்பிய மொழியைத் தருமராஜன் பழுதிலாமற் றலைமேற்கொண்டு பாடிப்பணிந்துகண்களிலுஞ் சிரத்திலும் அவருடைய திருவடியணிந்து அருளப்பெற்று, ஆசீர்வசனமுற்று, அன்புற்ற பெரியதந்தையும், சிறிய தந்தையும் பெரியதாயும், சிறியதாயும், அநேக ராசஸ்திரீகளும், கிருபாச்சாரியார் முதலாகிய பேருந் தன்னைப் புடைசூழ்ந்து வரும்படியாக மகா சந்தோஷத்தோடு பெருமை பொருந்திய அஸ்தினுபுரத்தை நோக்கி வருகின்ருர்கள். பாண்டவர்களைப் பதின்மூன்று வருஷத்துக்கு முன்னேபிரிந்தபட்டினத்து ஜனங்களெல்லோரும் அழகுடன் வந்த பாண்டவர்களைக் கண்டு சந்திரனைக்கண்ட சமுத்திரம் போற் பேரோசையிட்டுப் பொங்கிப் பூரிப்புகொண்டு, மகரதோரணம் மாளிகைதோறுங் கட்டி வாழை, கமுகு, தெங்கு இவை முதலாகிய வலங்காரங்களுஞ் செய்து, வாத்திய முழக்கங்களுடனே எதிர்சென்று, தருமராசன்முதலிய பேர்களின் பாதத்தில் வீழ்ந்தெழுந்து வணங்கி நின்ருர்கள். இப்படி சகல ஜெனங்களும் வாழ்த்தி வணங்கும்படியாகவும், முரசவாத்திய முழக்கவும்,புள்ளாங்குழலோசையும், யாழொலியும் எங்குஞ் சத்திக்கும்படியாகவும், பூரி, தாரை,வீரசின்னம்,சங்கத்தொனி இவைகளெல்லாம் அதிர்ந்து எட்டுத்திக்குஞ் செவிடேறும்படியாகவும் நல்ல வேளையில் வந்து, மேகங்கவிந்து உலாவுகின்ற அரண்மனைக்கு முன்வந்து ரதம் விட்டிழிந்து, பெரியோர் முதலிய பேர்களுடன் முறைதவருமற் கொலுமண்டபத்தைச் சேர்ந்து, ஓராசனத்தின்மீது ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியையும் சாத்தகி மன்னனையும் இருக்கச்செய்து, மத்திலிருந்தஇரண்டாசனத்திற் பெரிய தந்தையையுஞ் சிறிய தந்தையு மிருத்தி, பெருந்தவமுடைய அருந்தவர்களைப் பிரத்யேகமான மணியாசனத்தில் வைத்து, ஸ்திரீகளை யெல்லாம் அந்தப்புரத்துக்கனுப்பிவிட்டு, ஆசையையுடைய தம்பிமார்களும், கிருபாச்சாரியர் முதலாகிய பேரும், அழகிய சிங்காசனத்திலமரும்படி செய்து, மும்முரசு முழங்க, முரசக்கொடி பிடிக்க முழு

மதிக்குடை தழைக்க, அரசர்கள் பணிந்து அருகுநிற்க. முடிமன்னர்க்கதிபனுகிய முதல்வன் யாவரையும் வணங்கி ஆசிர் வசனம் பெற்று, எல்லோருஞ் சொல்லுகின்ற மங்கள வாக்கிய உத்தரவின்பேரில் உலகசம்மாரனென்னும் பரசுபாணியாகிய பரமசிவன் எழுந்தருளியதைப் போற் சிங்காசனத்திலேறி யிருந்தார்.

---

சுயோதனனுக்குத் துணைவந்த ஓரரக்கன் கோலுச்சபைக்குப் பலியாதல்.

அக்காலவர் பக்கத்திலிருந்து சிலர்வெண்கவரி, தாலவட்டம், ஆலவட்டம், சுருட்டி, மயிற்பீலி இவை முதலிய உபசாரங்கள் நடத்த, பல பரிவாரங்களும், படைஞரும, அரண்மனைப்பெண்களாகிய சுந்தர மாதரும் நெருங்கி ஆலஞ் சுழற்றி மங்களம் லாலி சுபசோபனம்பாட, கட்டியர் புகழ, பட்டு மூர்த்திகள்கொண்டாட, கனதன குபேர சம்பன்னனுகக் கருணை கூர்ந்திருந்தார் பாஞ்சாலி கொழுநராகிய தருமநந்தனர். அப்படியிருக்குந்தருணத்தில், தேன்றிணிந்த மாலையணிந்த மறைவாணர்கள் எழு கடலும் புரண்டு வருவதைப்போல் ருக்குவேத சாகைகளைச்சொல்லிக்கொண்டு வந்தார்கள். அவர்களைத் தருமராஜனவர் கண்டு திடுக்கிட்டெழுந்து, பல மறையாகிய ஆசீர்வசனங்கொண்டு, அவர்களுக்கு உபசார முதலிய பூசாவிதிகளுங்கொடுத்துஆசனத்திலேற்றி, அவர்களினனுக்ஞையால்நெய்போலுருக்குகின்ற மனத்தினையுடையவராய்ச் சிங்காசனத்திலிருந்தனர். அப்போது ஒரு அசுரன்னவன் பிராமண வடிவெடுத்து வந்தான். அவனுக்குமவ ருபசாரஞ்செய்யுங் காலத்தில் அவனம் முரசக் கொடியோனுகிய முன்னோனைப்பார்த்து, ஓ தருமநந்தனு! யாவரும் மலைக்கும்படியாகப் பெரிதாகிய பேர் வைத்துக்கொண்டு ஆஷாட பூதிபோல் நடித்துக்காட்டி, குருக்ஷேத்திரத்திற் சகலமான பேரையுங் கூட்டி, பலபேர்களுடைய பிராணனையும் வாட்டி வாங்கிவிட்டாய். அடாபாவி உனக்குத் தருமமென்கிற பேர் தகுமா? என்று அக்கிஷமாகப்பேசி, அத்துமீறி யேசினுன், அந்தச் சபையில் நிறைந்திருந்த வேதவேதியரெல்லாரும் மனங்கலங்கி, இவனுரவன்? பிராமணனு யிருந்தும் இப்படி பேசலாமா? என்று கண்விழித்துக் கறுத்துச் செறுத்து வெப்பமுடன் பார்த்தார்கள். அப்போதே யவன் குப்பென்றெரிந்து கரிந்து போனுன்.

அதைக்கண்ட அறக்குமாரன் கருமுகிலாகிய கண்ணனைப் பார்த்து, ஓ! அண்ணலே! இதென்ன காரணம்? இதென்ன கொடுமை? இதனை யடியேற் கிசைத்தருள்க வென்று கேட்டனர். அதற்குக் கருணையில் மிகுந்த கடவுளர்களிற் சிறந்த காசாம்பூவண்ணன் சொல்லுகின்ருர். ஓ ராஜாதிராஜனே! கேளும்; கொய்யுளைப் புரவிகள் பூட்டிய தேரோனுகிய துரியோதன மகாராஜனுக்கு உரிமையாகிய நண்பனிவன். பிரமப் பிரளயம் வரைக்கும் இருக்கும்படியாய்ப் பிரமாவினுல் வரம்பெற்றவன் கூட்டமான பிராமணரவர்கள் இவனைப்பற்றி யாது காரணத்திலேனுஞ்சலித்தால் இறந்து போகும்படிக்குப்பிரதிவர முற்றவன். துரியோதனனுக்குத் துணைவந்தவன். இத்தனை நாட் சென்றது இவனிடம் வந்து சேருவதற்கு. வந்த யிடத்தில் தன்னுயிர்த் தோழனுகிய சர்ப்பக்கொடியோன் மாய்ந்துபோனதைக்கேட்டு, ஓய்ந்த நடையுடையவனுய்ச் சபையில்வந்து ஆய்ந்த வேதியர்களின் காய்ந்த கண்ணருளால் தேய்ந்துமாய்ந்துபோனுன். இவனொருவன் நமது கணக்குக் குறைவா யிருந்தானுக்கனும். அதுவுஞ் சரிப்பட்டுப்போச்சுது. என்று குவலயாபீட மென்னும் மதயானையின் கொம்புகளைப் பிடுங்கிக் கஞ்சனை மடித்த கோபாலன் கூற, தருமராசன் முதலிய பேருங் கேட்டுச் சந்தேகக் கவலை தீர்ந்தார்கள். அப்பால் அந்தச் சபையிலெரிந்த அவ்வரக்கனுடைய உடற்சாம்பரை யகற்றி, புண்ணியாவாசனம்புரிந்து, ஸ்நானஞ் செய்து பஞ்சகவ்வியாதிகளுமுண்டு, ஓமம் வளர்த்தி. அந்தணர் முதலிய அருந்தவரைத் தொழுதிறைஞ்சி அவர்களால் ஆசிபெற்று, உவகையுடன் நவமணியாசனத்திலிருந்தார் உதிட்டிரரென்னும் பேர் பூண்ட உத்தமன். பெரியோர் பட்டாபிஷேக நாள் நியமித்த

---

பின் தருமன் தம்பியராதியர்க்கு விடுதியுவிடையுமளித் தந்தப்புர மடைதல்.

அந்த வேளையில் கவலையற்றுக்குவலயம் புரந்த பெரிய தந்தையாகிய திரிதராட்டிரன் விதுர மகாராசனுடன் கலந்து பேசி,

அவர்களிருவருஞ் சகல கலைவல்லவராகிய தவமுனிவர்களைப் பார்த்து, ஓ கலைக்கியாச னங்களில்வல்ல ஸ்வாமிகளே! இறந்து போனவர்கள் போக இருக்கிற பிள்ளைகள் இனிமேலுங்குறைவில்லாமலிருந்து ஆழ்ந் தகடல் சூழ்ந்தஉலகத்தை ஆண்டுவாழ்வதற் குத்திருமுடிபுனையவேண்டும். அதற்குத் தகு தியான நல்லநாளொன்று பார்த்துச் சாற் றுங்களென்று கேட்டார்கள். அவிடத்திலி ருந்த ஜோதிட நூல் வல்லோர்களும் சாஸ் திரிகளும்,பெரியோர்களும்,அரிகஜராசிச்சக் கரங்களிட்டு, சாஸ்திரங்களெல்லாம் பார்த் து, நாளைக்கேமுடிப்பதற்கு நாள் நன்றாயிருக் கிறதென்றுவாசம்பெற்ற மாமலர்மாலையணி ந்த மார்பினராகிய அம்மன்னவர் சமுகத்தி ற் சிந்தைகளித்துத் தெரிவித்தார்கள். அந் தமொழியைக்கேட்ட திரிதராட்டிர மகாரா சன் ஆனந்தங்கொண்டு, தம்பியாகிய விதுர மகாராஜனைப் பார்த்து, இதற்கு வேண்டிய பொருள்களை யாவற்றையுஞ் சேகரிக்கும்படி க்கும், ராசநேசபுரங்களுக்குத் திருமுகமெழு தும்படிக்கும் விரைவில் அமைச்ச ராதிபர் கட்குத் திட்டப்படுத்தும்படி கட்டளை யிட் டான். அவ்வாறே விதுரமகாராஜனிட்ட கட்டளையால், அத்தினமே கங்கை, யமுனை, கோதாவிரி, சரஸ்வதி, நருமதை, துங்கபத் திரை, கிருஷ்ணை, சிந்து, காவேரி, இதுமுத லாகிய நன்னதிப்புலனும், சமுத்திர தீர்த்த மும், சங்கம தீர்த்தமும், சங்குமுகதீர்த்தமுங் கொண்டு வரும்படிக்குப் பரிசுத்தமுள்ள பிராமணர்களை அனுப்பிவைத்து அழகிய நக ரங்களெங்கும் அலங்கரிக்கும்படிக்கு யானை யின்பேரில் முரசவாத்திய முழக்கி, சாரணர் களிடத்திற் றிருமுகமளித்துச் சுற்றுமற்று ள்ள பந்துமித்திராதியர்கட்கெல்லாம் அறி வித்தார்கள்.

அப்போது எமதருமராஜ குமாரனாகிய தருமராஜனைவர் பிராமணர்களுக்கு அஸ்வ ங்களும்-யானைகளும்-பசுக்களும்- திரவியங்க ளும் நல்ல வஸ்திரங்களும்-ஆபரணங்களு ங் கொடுத்து, விந்தவனை வழிபாடு புரிந்து, அவரவர்களுக்கு விடையளித்து, பெருமித முடைய முநிவர்களைப்பணிந்து, அவர்களை யும் எதாஸ்தானத்துக்குப் போகவிட்டு, சபாமண்டபம் விட்டெழுந்து,பெரியதகப்ப ன்சிறியதகப்பன் முதலியபேர்களுடன் திரு மனைக்குட்சென்று, தந்தைதாயர்களைத் தொ ழுது அந்தப்புரத்தமைத்து, தனதுசிந்தைக் கிசைந்த முகுந்தனுக்கு-சாத்தகிக்கும்-சிறந் தவிடுதிவிட்டு, துரியோதன மகாராசனிருந் துவாழ்ந்த மனையை வீமசேனனுக்குக் கொ டுத்து துச்சாதனன் வாழ்ந்தமனையை அர் சுனனுக்குதவி, பழைமையோர்மெச்சாநின் ற துன்முகனுடைய மனையை நகுலனுக்கு வழங்கி விகர்னன் வாழ்ந்தமனையைச் சகா தேவனுக்கு அளித்து, அந்நகரத்துக்குள் ளாகிய மற்றப்பேர்களை அவரவர்கள் பொரு ந்தி வாழ்கின்ற திருமனைக் கனுப்பிவிட்டு, பொய்மார்க்கத்திற் பிரவேசிக்காமல் நன்மார் க்கமாகிய சத்தியத்தின் வழியில் ஐம்புலன்க ளையுஞ்செலுத்தி, நடை-நொடிபாவனைகளா கிய தலைமையைத் தலைமேற்கொண்ட அத்த ருமபுத்திரமகாராசனனைவர் சகலநலங்களும் விமலவளங்களு முண்டாகிய இந்திரபதம னையமற்றோரந்தப் புரமனைக்குப் போயினர்.

இப்பால் பாராளுங்கொடுங்கோல் மன் னர்பலருடனும், நால்வகைப் படைத் தொ கைகள் கூடிய பதினொரு அக்குரோணி சே னைகளுடனும், மித்திர புத்திரரோடு தம்பி யருடனும், சர்ப்பக்கொடி படைத்த தாராதி பனாகிய துரியோதனமகாராஜன் சாய்ந்து போனன் போர்ச்சிங்கமாகிய அத்துரியோ தன மகாராஜ னிதுவரையிலு முருட்டிக் கொண்டிருந்த ஆக்கினைச்சக்கரம் பொய்த் துப் போயது. என்னுந் தன்மை போற் கீழ்க்கடலி லுதித்த சூரியனனவன் மேற் கடலில் மூழ்கினன். அப்போது தெளி வில்லாத துரியோதன மகாராஜன் நாள் தோறுந் தேடிக்கொண்ட பாவ மூட்டைக ளெல்லாந்திரண்டு, தங்களெஜமானாகிய வ ணங்காமுடி யுடைய பாம்புக் கொடியோனை க்கண்ணிற் காணவேண்டுமென்னுங் கவலை கூர்ந்து, மேகங்கள் சூழ்ந்த எட்டுத்திசையு ம் முட்டி நெட்டித் தேடிக்கூடி நெருங்கிய தைப்போற் கறுத்தயிருள் வந்துகலந்துகவி ந்தது. அதுகாலையில் தருமபுத்ரமகாராசனி ச்சையுடன் நிச்சயமாகத்தருமஞ்செய்துதே டிக்கொண்ட புண்ணியம் பெருந்தவமுஞ் சேர்ந்து பிரகாசித்து, உலகத்தை மூடிய இ ருளை நோக்கி அச்சமில்லாமல் லச்சையற்று இவ்விடத்திற்பொழிந்தி மருவுவீர்களாகில் உங்களை அடிவேருடன் அறுத்து அழித் துப்போடுவேன். ஓ பாபவிருள்களே! உங்க ளுக்கினிய துரியோதன மகாராஜன் எங்கே

போனானோ? அந்த விடத்திற்கு நீங்களும்
போய்ச்சேருங்கள். என்று பாபமாகிய இரு
ட்டைப் பறக்கடிக்கப் பற்பல கரங்களை விரி
த்துப் புச்ச மில்லாமல் துரத்துவதுபோல்
ஏழுபொழிலும்எழிலுடன் தழைக்கவும், இ
ருளோடி யொதுங்கி மலைக்குகைகளிற்புகுந்
து இரங்கி விருத்தப்பட்டுப் பிழைக்கவும்,
புது நிலாவாகிய சந்ரோதய முண்டாயது.

---

தருமராஜன் அந்தப்புரத்திலிருந்து அபிஷேக
மண்டபத்திற்கு வருஞ் சிறப்பு.

இப்பால் புலன்பொறி முதலாகிய ஈஷ
ணத் திசையங்களை நீக்கிய சிலாக்கியர்களின்
உள்ளத்திலும் தேவர்களின் மனத்திலும்
களிப்புற நிகழ்ந்து பூலோகத்திலுண்டான
பேர்கள்யாவரும் விருப்புடன் புகழ்ந்து கூ
த்தாடச் சிறந்து இனித்திருமுடி சூடிக்கொ
ள்ளும் முரசகேதனனாகிய முதல்வன் தரும
வழியாய்த் தனிச்செங்கோற் செலுத்தா நின்
ற ஆக்கினைச்சக்கரமானது பாவப்பகையிருள்
களைந்து கீழ்க்கடலி னிடமாகவந்து கதிர்
கதித்து உதித்ததைப்போல் சப்தமாவென்
னும் பசும்புரவி பூட்டிய ஓராழித்தேர்மேற்
கொண்டு அந்தப் பட்டணத்திலிருக்கும் மா
தர்களின் முகம்போல் தாமரைக் கமலங்கள்
மலர்ந்து தேன்சொரியவும் மறையவர் மாத
வர் முதலிய பேர்கள் யாவரும் ஓதா நின்ற
வேதமந்திரங்களோங்கவும் மார்த்தாண்டா
னாகிய சூரியபகவான் உதயமாயினான். இறந்
துபோன கொடிய பாவிகளின் வசத்திலிரு
ந்து இதுவரையிலும் பழகிவந்த கொடுமை
களைத் தீர்த்துத் தலைமுழுகிவிட்டுத் தோன்ற
லாகிய தருமராஜனிடத்திற் கலந்து நலனு
ற வாழவேண்டு மென்னும் ஆசையுடைத்
தாய் மனமகிழ்ந்து யானைகள் பொழியா நி
ன்ற மும்மதசலமென்னும் வாசனைக்கலவை
யாகிய சுந்தனக்குழம்புபூசி வெற்றிவீராளா
கிய வேந்தரைத்தனது திருமேனியின்மேல்
நவமணிமாலைகளாக வணிந்து, தாமரைப்பு
ட்பங்களே முதலாகிய மலர்ந்தபூந்தொடை
யில் தரித்து சூரியகிரண மென்னுஞ் சிகப்புச்
சித்திரவஸ்திரம் புனைந்து கொண்டவளாயி
னாள். பூமிதேவியென்னும்பெண்ணானவள்.

இப்படி பொழுது விடிந்தவுடனே சிறு
த்த இடையும் பொறுத்த நடையும் பரு
த்தமுலையும் கறுத்த விழியும் சிவந்தவாயும்
திறந்தநாளும் பசுங்கைத்தோளும் மச்சை
மயில்போல் மெய்யும் தாமரைமலர்க் கையு
முடைய லட்சுமிதேவிக்கி ஒப்பாகிய அரண்
மனைப் பெண்கள் வீணை நரம்புகளைத்தெறித்
து நிறைந்த யாழொலிபாடி தருமராஜனுக்
குத் திருப்பள்ளி யெழுச்சி சொல்லினர்.
அம்மொழிரசமானது காதுகளிற் கேட்டவு
டனே மாசற்ற மனத்தோனாகிய முரசகேத
னன் மலரணைமேற் கொண்ட நித்திரை நீ
ங்கி யெழுந்து முறையாக நிறுத்திய காலக்
கடன்களை முடித்து சூரிய நமஸ் காரஞ் செ
ய்து பெரியோரைப் போற்றி மங்களாசனங்
கொண்டு குளிர்ந்து சுகந்தமிகுந்து நிறைந்
த சலமும் சந்தனம் அக்ஷதை புஷ்பம்வஸ்
திரம் தூபம் தீபம் நைவேத்தியம் இவை
முதலிய பூஜா திரவியங்களோடு உபசாரவஸ்
துக்களையுங் கொண்டு வரச் செய்து திரித
ராட்டிர பூபதியுங் காந்தாரி யம்மனுமாகிய
தந்தை தாய்களின் திருவடிகளைப் பக்தியுட
ன் பூசித்து பரிவாய் நேசித்து அறிவாலறி
ந்து விசுவாசித்து அவர்களைப்பணிந்து அ
ன்பால் ஆசீர்வதிக்கப் பெற்று பிற்பாடு தன்
னைப்பெற்ற தாயையும் விதுரமகாராஜனையும்
பூசித்துஅவர்களின் திருவடிகளைப் போற்றி
அவர்கள் கூறிய மங்களாசனத்தையுஞ் சிர
சாகப் பெற்றுக் களித்தனர். இப்பால் அன்
பும் அருட்கண்ணுமுடைய அறன் குமார
னானவர் பாதுகாப்போர் பட்டுவான்கள் கட்
டியர் இவர்முதலிய பேர்கள் வந்து கலந்து
புகழ்ந்து வணங்கி இணங்கி வரும்படியாய்
அந்தப் புரவாயல் கடந்து முந்தப் புரவாய
லில் வந்தார்.

இப்பால் மைதீட்டிய கண்களைக் காது
பரியந்தமோட்டிய செழும்பவளம் போன்ற
வாயினையுடைய பாங்கியர் சேடியர் தாதியர்
இவர் முதலாகிய ஸ்திரீகள் நீராஞ்சனமுத
லிய ஆலாத்திகளெடுத்துச்சுழற்ற கனகவட்
டம் கதம்பவட்டம் மயில்வட்டம் ஆலவட்ட
ம் அன்னத்தின் றூவி இவைமுதலாகிய பல
விதவிசிறிகள் நூறு நூறுகவன்னமயிலாகிய
கன்னியர்வீச கொன்னுனைவேல் கண்ணார்
மின்னினை யொப்ப நின்று உபயசாமரை
போட கொங்கைகுலுங்கி நெருங்குமங்கை
யர் கொடிபோல் நின்று சுவேத க்ஷத்திரம்
பிடிக்க வர்க்கட்டு மாதர் மேற்கட்டி விரிக்க
வாரண நடையார் தோரணம் பரிக்க கருதி
சைக் குயிலர் விருதரைத்தெடுக்க துடியிடை
ப்பெண்கள் துகிற்கொடிபிடிக்க குவிந்தகொ

ங்கையர் நிமிர்ந்துநடிக்க நலனுடையமாதர்கள் பல மலரிறைக்க மங்கள அட்டகம் மாதர்கள்பாட பாலியவஞ்சியர்லாலிவாழ்த்தியம்ப வீணையாழ்தம்பூர் மின்னார்மீட்ட புள்ளாங்குழல்கள் எல்லா முழக்க அல்குஜா மேளம் காகளம் சின்னம் இவை முதலிய வாத்தியங்கள் துன்ன தவரத்னகஜித ஆபரணங்கள் எட்டுத்திசையும் வெய்யில்போலெரித்து மின்ன இன்னும் பலவாகிய சம்பிரமங்களுடன் பட்டாபிஷேக மண்டப முகப்பில்வந்தார். அவிடத்திற் காத்திருந்த அலம்புரி வலம்புரி புலம்புறு சிலம்படி அருந்ததியை நிகர்த்த ராசகுலத்தரிவையர்களும் பிர்மகுலத்திற் பிறந்த மங்களகரமாய்ச் சிறந்த பிராமணமாதர்களும், நிறைகுடம்-மணிவிளக்கு-முளைப்பாலிகை அங்குசம்-இணைக்கயல் முதலாயுள்ள மங்கலப் பொருள்களைக் கைக்கொண்டு, பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளப்போகின்ற அத்தருமராஜனுக்கெதிர்வந்து நின்று ஆசிபுகன்று, அவரால் தாம்பூலஞ் சந்தன் முதலிய உபசார வெகுமதிகள் பெற்றுப் போயினராக, அப்பாலங்கிருக்குமற்றெல்லோருக்கும் ஆனந்த முண்டாகச் செய்த தருமராஜன் அப்பட்டாபிஷேக மண்டப முன் முகப்பில் வாயலில் வந்தார்.

அங்கே வாள்பொருந்தியதோள் திருந்திய தம்பிமார்கள் சர்வாபரண பூஷணராக வந்துதமயனை வணங்கினார்கள். அவர்களைத் தருமநந்தனர் இருகையா லெடுத்தணைத்து ஆசீர்வதித்து, அவர்களுடன்கூடி அகமகிழ்ந்து முகமலர்ந்து இராஜபேரவை முகப்புக்குவந்தார், விதுரமகாராசன், கிருபாச்சாரியர், உயுச்சன், சஞ்சயன், இவர் முதலிய மந்திரிகளும், மற்றவேந்தர்களும், புரங்களிலிருந்தமர்ந்தர்களும் தவத்திற் சிறந்துயர்ந்தசாந்தர்களும் பெருங்கூட்டமாய்நெருங்கி மொய்த்தார்கள். காணிக்கை கொண்டுவந்து வைத்தார்கள். மதுரம் வாசகம் பேசி வணங்கினார்கள். முதன்மந்திரியாகிய விதுரராஜனுடன் இணங்கினார்கள். அக்கால் அத்தருமபூபதியானவர் இராஜ முறைமைப்படிக்கு எவ்வெவர்களுக்கு எப்படி வேண்டுமோ? அவரவர்களுக்கு அப்படியே வந்தனை மரியாதை வணக்கங்கள் செய்து, சதுர்வேத சம்பன்னராகிய முதுமறைவேதியர் கடல்போலொலித்து மொய்த்திருக்கா நின்றபன்மணியாலியற்றிய முன்முகப்புச் சபைக்கு வந்து, அவர்களுடைய திருவடிகளில் தம்பிமார்களுடன், முடிசூடிப்பணிந்து, தவுமியாச்சாரியரைப்போற்றி, தங்களுடன்கூட வனவாசஞ்செய்த பன்னீராயிரம் பிராமணர்களையும் உன்னிக்கனிந்து பணிந்துஅவர்கள் கூறிய பல்லாண்டுகளும், பத்திர புஷ்பங்களும், அக்ஷதைகளும், சிரமேற்கொண்டு, மூர்த்தண்ணிய தவசிகள் தீர்த்தவாசிகள், முநிவர்கள், சாதுக்கள், இவர் முதலியபேர்களைத் தலையால் வணங்கி, அவர்களுக்கு உபசார பூசைகளை ஒருமையாய் நடத்தி ஆசனங் கொடுத்துத் தொழுதார்.

அந்த வேளையில் யாதவகுல சிரேஷ்டாளுடனே யதுகுலநாயகராகிய ஆபத்பாந்தவனுஞ் சாத்தகியும் வந்தார்கள். அவர்களுக்குத் தருமநந்தனர் அஞ்சலிசெய்து, ஒருவரையொருவர் தழுவி உளமகிழ்ச்சி கொண்டு, வழுவில்லா மரியாதையுடன் பேரவைப் புரஞ்சென்று, பெரியமுரசம், சிறியமுரசம், மங்களமுரசம், கல்யாணமுரசம், தியாகமுரசம், வைபோகமுரசம் என்று சொல்லப்படுகின்ற பற்பல முரசங்களை முழக்கும்படி கட்டளையிட்டு, அணிமுதலாகிய வாத்தியசாலையுட்புகுந்து, இடக்கை, உடுக்கை, உறுமி, தம்பட்டை, கொம்பு, பம்மை, பேரிகை, மத்தளம், தாளம், முரசு, துருடு, முழவு, டங்கா, பங்கா, கின்னம், காகளம், கர்ணை, பூரி, தாரை, வீரசின்னம், புள்ளாங்குழல், அல்குஜா தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி, இவை முதலிய வாத்தியமெல்லா மியம்பச்செய்து, வீணைமண்டபம் புகுந்து, தாம்பூர், வீணை, சரமண்டலி, பேரியாழ், சகோடயாழ், மகரயாழ் செங்கோட்டியாழ், சுரிமுகச்சங்கு, வெள்வளைச்சங்கு, மங்கலச் சங்கு, வெற்றிச்சங்கு, மற்றுமுண்டாகிய வாத்திய முதலாகியவெல்லாஞ் சுர லயை தாள சுதிபேதமில்லாமல் முழங்கச் செய்து, அங்கிருந்து திரும்பும் போது கருணைசுரந்த தும்புருநாதர், வேதவியாசர், சூதபுராணிகர், அத்திரி, ஆங்கீரசர், பரத்துவாசர், துர்வாசர், கௌதமர், வசிஷ்டர், ஜயமுனி, பரதமுனி, நந்தீசமுனி, என்னுமிவ்வகைப்பட்ட மாதவயோக ரிஷிகளெல்லாம் வந்தார்கள். உடனே தருமநந்தனர் அவர்களுக்கு எதிர்சென்று நடந்துதாழ்ந்து, திருவடியில் வீழ்ந்து வணங்கினார். இத்தன்மையாக வணங்கிய வெற்றி

லட்சுமிபொருந்திய புயத்தினையுடைய தருமராசனை யாவரும் ஆதரித்து ஆசீர்வதித்து அன்பு கூர்ந்தார்கள். பின்பு அவர்களுக்கெல்லாம் இனிமையான உபசாரங்கள் சொல்லி உபகாரமுஞ் செய்து, சிறப்புற்ற ஆசனங்கொடுத்து, அவர்களுடைய அநுக்கிரகம்பெற்று, அழகிய நவமணி யாசனத்தில் வீற்றிருந்தார் நவகண்டமும்புகழ மேன்மை பெற்ற உதிஷ்டிரமகாராஜன்.

மகுடாபிஷேகச் சிறப்பு.

அப்போது ராசவீதிக ளெல்லாம் பச்சைப் பந்தல்களும், சித்திரப் பிரதி மெய்களும், வஸ்திராபரணங்களும், வாழை, கமுகு வான்கரும்பு, தாழை, இளநீர், சரக்கொன்றை, இவை முதலாகிய அலங்காரங்களும், மேற்கட்டிகளும், மகாதோரணங்களும், பூரணகும்பங்களும், வேதிகைகளும், ஆடல்பாடல் அலங்கார மண்டபங்களும் எங்கெங்கும் நிறைந்து சிறந்தது அங்கங்கே ஆடம்பரமாயிருந்தன. மங்கல வாத்தியங்களின் ஒலியும், முழவுவாத்தியங்களின் ஒலியும், பரதநாட்டிய ஸ்திரீகள் நடனமாடுகின்ற ஒலியும், தாள ஒலியும், யாழொலியும், தவறுதலில்லாத வேதவாக்கினையுடைய தவசம்பன்னர்கூறுகின்ற ஆசீர்வசன ஓசையும் பெருங்கடல் முழக்கமாகமுழங்க, அவைகளெல்லாஞ் செவியிற்கேட்டு வெள்ளைக்குடை நீழலிற்பொருந்தி, நீதிவசன வாக்கியங்களைப் பெரியோருரைக்க, தம்பிமார்களுஞ் சூழ்ந்து துதிக்க, சகலத்திராளுஞ் சேர்ந்து மதிக்க, இறுமாந்த வீரராஜ சிங்கம்போல் அந்நவமணியாசனத்தினின்று மெழுந்து, குருகுலாதிப ரனைவருங் கோடாத கோல் செலுத்தி நின்ற ராஜசிங்காசனத்திற் பொருந்தி யிருந்தார் முரசக்கொடிபடைத்த தருமராஜனவர். இப்படியிருக்க, மரகத நீலமணி வண்ணனாகிய கண்ணன் அவிடத்திலிருந்த வியாசாதி முதலிய பெரியோர்களையும், அண்ணலாகிய திரிதராஷ்டிர மகாராஜனையும், இன்னுமுள்ள அரசர்களினது மதிமுகங்களையும் பார்த்து, மகுடாபிஷேகஞ் செய்வதற்கு நியமித்த இலக்கினவோரை சமீபித்தது. இனித் தாமசமேன்? என்று சொல்லி அதற்குவேண்டிய பொருள்களை யெல்லாம் இக்ஷணத்திற் கொண்டுவாருங்களென்று ஏவலாளிகளுக்குக் கட்டளை யிட்டருளினர். இதோ கொண்டு வந்தோமென்று எதிரில் வைத்து வணங்கினர்கள்.

அப்போது கண்ணன் தவுமியரைநோக்கி, ஓ ஆசாரிய சிரேஷ்டரே! இனியுங்கள் பௌரோகிதத்துக்குண்டாகிய பக்குவங்களை நடத்த வாருமென்று நாரணர் சொல்லினர். உடனே அவர் வேண்டுவனவெல்லாம்பெற்றுக்கொண்டு, பாண்டவர் சகாயனுகிய பரந்தாமனுடைய கிருபாநோக்கம்பெற்று, மற்ற அந்தணர்களுடனெழுந்து பட்டாபிஷேக மண்டபம்புகுந்து, வேதவிதி முறைமைப்படிக்கு மேதினிச் சுத்திசெய்து, தருப்பைகள் வகுத்து, செந்நெல்களும் அரிசிகளும் முத்தினங்களும் பரப்பி, பொற்கலசங்கள் வெள்ளிக் கலசங்கள் துலக்கி, அவைகளுக்கு நூலணிந்து, சந்தனங் குங்கும முதலிய மந்திராட்சதை தரித்து, மாவிலை தருப்பை, அமைத்து, முன்கொண்டுவந்து வைத்த புண்ணிய தீர்த்தங்களை யெல்லாம் அப்பொற்கலசங்களிலும், வெள்ளிக் கலசங்களிலும் பூரித்து, நவரத்தினகடங்க ளுற்பாலமைத்து, பட்டு வஸ்திரந்தரித்து, தேங்காய், வாழைப்பழம், கர்ப்பூரம், சாம்பிராணி, இவை முதலிய உபசாரங்கள் கொடுத்து, அரசு, புரசு, எருக்கு, கருங்காலி நாயுருவி, வன்னி, தருப்பை அறுகு இவ்வொன்பதாகிய சமித்துகளிட்டு ஓமம் வளர்த்தி, மந்திரலோபம் கிரியாலோபமில்லாமல் அக்கினியைப் பூசித்து, பால், பழம், சர்க்கரை, தேங்காய், தாம்பூலம் இவை முதலிய நைமித்தியம்பண்ணி இன்னுஞ் செய்யும்படியாகிய விதிகளனைத்தும் வழுவாமல் முடித்துநிறைவேற்றினர்.

இப்படி சகல பூசைகள் யாவும் விதிமுறைப்படி நிறைவேற்றிய தௌமியாச்சாரியார் பட்டத்து யானையையுடைய தரும பூபதியுந் திரௌபதையும் நவமணி யழுத்திய அதுகாற்பீடத்தி லமரச்செய்து, தம்பிமார்களையும் பொருந்தி, பின்பு தந்தையாகிய திரிதராட்டிர மகாராசனையும், தாயாகிய காந்தாரியும்மனையும், அழைத்துவந்து தருமராஜனுக்கு அருகாசனத்திலிருத்தி வேதகோஷத்துடன் வியாசாதி பிரமுகர்கள் ஆசீர்வசனமுழக்க, தந்தைதா யிருவரும் சிந்தைமகிழ்ந்து களிக்க பொற்கலசங்களில் நிறைத்துவைத்த புண்ணிய தீர்த்தங்களை யெடுத்து அவரவர்கள் கையிற் கொடுத்து தருமராஜனுக்குந் திரௌபதைக்குந் தம்பிமார்களுக்

கும் அபிஷேகஞ் செய்வித்தனர். உடனே அருகிலிருந்த வேந்தர்கள் சலவை வஸ்திரங்களினல் நீர் துவட்டி, பெரியோர்களாசீர்வதித்த புதிதாகிய பீதாம்பரந்தரித்து, முன்னூலணிந்து நெற்றியிற் றிரிபுண்டரம் புனைந்து செந்தூரத்தில் தந்நீட்டி ஓமப்புகையின் மைக்காப்பிட்டு, சந்தனம், கஸ்தூரி, புனுகு, சவ்வாது, பனிநீர், இவை முதலாகிய வாசனைத் திரவியங்களை மார்பிலுந்தோளிலும் மல்குறப்பூசி, பிரகாசஞ் சிறந்த ரத்தின வடம், முத்து வடம், மோகன மாலை, மூக்வாளிப் பதக்கம், தும்பிப்பதக்கம், கோர்வைப் பதக்கம், குண்டலம், தோளணி, அரைப்பட்டிகை, வீரகண்டாமணி, கடகங்கணம், இவை முதலாகிய பலபணிகளு மணிந்து, சுகந்தபரிமள நிறைந்த தேனுறைந்த பராகம் விரிந்து பரந்த பூமாலைகள் சாற்றி, உத்தரீயமேற்போட்டு, கதிர்விடுமணி மதிக்குடைநிழலில் முத்தாசனத்தின்மீது பதுமராக மணிப்பிரகாசம்போற் ஜொலிக்கும்படியாய் அமைத்தார்கள்.

---

திருமுடிபுனைந்த சிறப்பு.

அப்போது அத்தருமராசனுக்கு இடதுபுறந் திரௌபதையும், வலதுபுறம் வீமசேனனும், பின்புறம் நகுல சகாதேவரும், மூன்புறம் அருச்சுனனும் வீற்றிருந்தனர். உபயசாமரம், ஆலவட்டம் இவை முதலிய உபசாரங்களை நடத்தினர். இந்திராதி தேவர்களும் மந்திராதி மூவர்களும் மகா சந்தோஷங் கொண்டாடினர். அற்புதமாகிய தேவர்கள் கற்பகமாரி பொழிந்து கண்ணனைப்போற்றினர். தேவதுந்துமி முழக்கினர். விற்பனவிவேகிகளாகிய வித்துவான்கள் பாமாலை சாற்றினர். காசினியோர் புகழ்ந்து வாச்கலவைகள் மாற்றினர். நேசமுடையோர்கள் இந்திரவன்னனப்பட்டு பட்டாவளிகள் போர்த்தனர். கட்டியர் பட்டுவான்கள் புகழ்ந்தேற்றினர். கற்புடையமாதர்கள் மங்களவாலி சொல்லி வாழ்த்தினர். மறுமன்னர்கள் முடிதாழ்த்தினர், பிர்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராள் முதலியவர்களும், வேத புண்ணியராகிய சதுர்வேத சித்தாந்த வேத சம்பன்னரும் வாழ்த்திப்போற்றினர். வேதவியாசர் முதலிய வேதியர்களும், முனிவர்களும் வேதமந்திரஞ் சொல்லி அட்சதை தூற்றினர். அஸ்திஞபுரத்திலிருக்கும் குடிபடைகளெல்லோருந் தருமராசனைபுந்திரௌபதையையும் பார்த்து ஆர்த்தனர். தேர், கரி, பரி, பதாதி என்னுஞ் சதுரங்க சேனைகளும் பூர்த்தியான அலங்காரத்தோடு அணியணியாய் நின்றன, முடி, குடை, கவரி, கொட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல் சிங்கம், தீபம், இடபம், ஆசனம், என்னுஞ் சின்னங்கள் இருபத்தொன்றும் ஆங்காங்கு பிரகாசித்திருந்தன, மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதர், சாரணர், கருமாதிக்காரர், கடைகாப்பாளர், படைத்தலைவர் இவுளி மறவர் யானை, வீரர், மடைத் தொழிலர், மருத்துவக் கலைஞர், நிமித்திகப் புலவர் இவர் முதலாகிய பரிசனங்களெல்லாம் பக்கங்களிற் பரவிநின்றிருந்தனர்.

அக்கால் தௌமியாச்சாரியார் சிற்றம்பலத்துட் பஞ்சகிருத்தியத் திருநடம்புரியும் ஸ்ரீ உமாபதியைப் பொன்மலராற் பூசித்து, சகலாத்மகோடி போஷகராகிய ஸ்ரீ நாராயணரை நன்மனத்தால் விசுவாசித்து, அனேகங்கோடி சந்திரகிரணப் பிரகாசமுள்ள வயிர முடியை மாணிக்கத்தாம்பாளத்தில் வைத்து, மாலை சந்தனாதி முதலியதுஞ் சாற்றி எடுத்துக்கொண்டு பெரியோர்களின் சபையிற் புகுந்தனர். அப்போது அவ்விடத்தி லிருந்த அருள்சுருங்காப் பெருங் கருணையோராகிய தவமுனிவர்க ளெல்லோரும் அந்த முடியைத் தொட்டு ஆசீர்வதிக்க, மற்றப் பேர்களுந் தொட்டுக் கும்பிட்டு ஜெயம் ஜெயம் என்று கோஷிக்க, பிராமண ஸ்திரீகளும் ராசஸ்திரீகளும் கரத்தாற் பரிசித்து வணங்க இப்படி யெல்லோருந் தொட்டாசீர்வதித்த பிற்பாடு தவுமியாச்சாரியர் கொண்டுவந்து வேதவியாசர் கையிற் கொடுக்க, அவ்வேத வியாசர் வாங்கி சண்மதமும் சதுர்வேதமும் சகலகலைக்கியானமுந் தானேயாகிய ஜனார்த்தனர் கரத்தி லளிக்க, அவர் அந்தவயிரமுடியைச் செந்தாமரைக் கமலம்போன்ற தமது திருக்கரத்தால்வாங்கி, சிந்தைமகிழத் தாங்கி, திருவருளோங்கி, கடாக்ஷ வீக்ஷண்யமாகிய கருணைவெள்ளம்பொழிந்து; கண்மல ரலர்ந்து இலட்சுமி விலாசத்துடன் கடல்வளைந்த காசினியைக் காவல்செய்து நீடூழிவாழ்கவென்று வாழ்த்தித் தருமபுத்திரமகாராசனு

டைய நன்மணிமுடிக்கண் அப்பொன்மணி முடியைத் தரித்தருளினர்.

அந்தக் காலத்தில் நான்கு வேதமும் ஓசையுடன் ஆர்த்தன. பலவித வாத்தியங்களுஞ் சங்கினங்களு முழங்கின. தேவர்களெல்லோருங் கூடக்குலாவிமகிழ்ந்தார்கள். எட்டுத் திசையிலுள்ள ஆத்மகோடிகளெல்லாரும் புகழ்ந்து வாழ்த்தினார்கள். அரம்பாஸ்திரீகள் அவனி நிறையப் புட்பமாரி பொழிந்து தேவதானம் பாடினார்கள் வேத வேதியர்களெல்லோருங் கடலோசை யடங்கும்படிக்கு முழக்கமாக ஆசீர்வதித்தார்கள். வீமசேனன் முதலிய தம்பிமார்கள் கண்களித்துச் சம்பிரமங்கள் பெற்றார்கள். அந்தக் காலத்தில் அவ்விதமாகிய சம்பிரமத்தை ஆனந்தமாகப் பெறாதவர்கள் எவர்களுமில்லை. பட்டின மாத்தியந்தமும் மங்களகரமாகிய பாக்கியம் பெற்றுப் பரவசமடைந்தார்கள். வீமசேனன் முதலிய தம்பிமார்கள் தமயனாகிய தருமராஜனுக்கு எதிரில் வந்து தீர்க்க தண்டமாகப் பணிந்து, அண்ணனுடைய அருள்கொண்டு ஆசனத்தில் வீற்றிருந்தார்கள். தக்கோர் முதலாகிய மிக்கோர்களும் வாழ்த்தினார்கள். இவ்வுலகத்தவராகிய குலக்குரவ ரெல்லோரும் மகிழோங்கிப் புகழ்ந்தார்கள். இவ்வித வைபவத்தோடு தருமபுத்திர மகாராஜன் மணிமுடி புனைந்து, சுவேதநக்ஷத்திர நீழற்கீழ்உபயசாமரம்வீசும்படியாய் சிங்காசனத்தில் வீற்றிருந்து, தேவர்க்கரசாகிய தேவேந்திரனும் யட்சர்க்கிறைவனாகிய அளகேசனும் ஆச்சரியப்பட்டுச் சிரக்கம்பங் கரக்கம்பஞ் செய்யும்படியாகவும், தம்பிமார்களுஞ் சந்தோஷங்கொண்டு புளகாங்கித முறும்படியாகவும், மறைவாணருக்கும், ஆதுலருக்கும், யாசகருக்கும், அளவற்ற நவமணிப்பணியாடை முதலிய நிதிகளும் பதிகளும், யானை, குதிரை, தேர், பல்லக்கு, இவை முதலாகிய பரிசுகளுங் கரிசனமாகக் கொடுத்தார். ஓமாக்கினி முதலிய வேதவிதிகளைச் செய்த மறைவாணருக்குக்கோதானம் பூதானமுதலாகிய சோடசமகா தானங்களும் பலகோடியாகக் கொடுத்து, இன்னமும்பெரியோர் சொல்லிய பற்பல தானங்களும் பரிசுத்தவான்களைத் தெரிந்து முறையாக அவரவர்களுக்குக் கொடுத்து விடுத்து, கற்றவர் நற்றவர் முதலிய மற்றவரோ டினிதிருந்து, அரண்மனைப் பெண்கள் ஆலாத்தி யேந்திச் சுற்றிச் சூழ்ந்துவரும்படியாய் ஆசனம்விட்டெழுந்து, அரண்மனைக்குட் புகுந்து, தரு ந்த அழகு சிறந்த திருமனையுட் பொருந்தியிருந்தார் தருமமே ஜெயமென்னுந் தரும ராஜனவர்.

இந்தப்பிரகாரந் திருமுடிபுனைந்து, உலகத்தை ஒரு குடையிலாண்டு, மன்னுயிரைத் தன்னுயிர்போற் காத்து, துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து, சிவாலயம் விஷ்ணுவாலயங்களைத் திருத்தி, திருநாள்முதலிய பெருநாள்கள் கொண்டாடி, முப்பத்திரண்டு அறச்சாலைகள்முதலிய தருமங்களெல்லாங் குறைவற நடத்தி, யாகாதி கிருதுக்களைச் செய்து, விருந்தினரோடுண்டு, வாரா விருந்தினர்க் கெதிர்கொண்டு, பெரியதந்தையரைப் பூசித்து, பெற்றதாய் முதலியோரை விசுவாசித்து, சத்தியநெறி நித்தியவிதி தவறாதவராய் உலகைத் திருத்தியாண்டுக் கொண்டு வந்தார். மேலும், காசாம்பூவை யொத்த கருநிறவண்ணக் கண்ணனுஞ் சாத்தகியும் மிகமகிழ்ந்துபுகழ்ந்து தங்களைவிட்டு நீங்காதிருக்க வைத்து, வீமசேனன் இளவரசாக முடிபொறுத்து அரசாட்சி புரிந்து சத்துருக்களை ரட்சிக்கவும், மித்துருக்களை ரட்சிக்கவும், நியமித்து, ரத, கஜ, துரகபதாதி முதலிய நாற்பெரும் படைகளைத் திருத்திப் பாதுகாக்கும்படிக்கு அர்ச்சுனனுக்குச் சேனாதிபதிப் பட்டங் கட்டி, நகுல ராஜனைப் பொக்கிஷத்துக் கதிபதியாக விருத்தி, தன்னைவிட்டு நீங்காது பொருந்தியிருக்கு மதி மந்திரியாக்ச் சகாதேவனை நிறுத்தித் துரைத்தனஞ்செய்துவந்தார் விவேகத்திற் சிறந்த தர்மராஜனவர். அப்போது நித்திய சோபன நிரந்தரகல்யாணமாக மாதமும்மாரிப் பொழிந்தன. எங்குங்கார்வளம், பார்வளம், நீர்வளம், ஏர்வளம், சீர்வளம், பேர்வளம், ஊர்வளம் பொருந்தி, சகல வேந்தர்களும் வெகுவித மாந்தர்களுஞ் சத்தியந் தப்பாமலுந் தருமங் குறையாமலும் வாழ்ந்து வந்தார்கள்.

திருமுடிபுனைந்த சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது,

# விதியியலுரைத்த சருக்கம்.

### கண்ணன் துதி.

தடந்தனி விடங்கரி னிடைந்தொரு கடங்கரி தளர்ந்தலறுநாள்
வடஞ்செறி தடந்துயி லொழிந்துயர் பதந்தர வருந்திகிரியான்
தொடர்ந்திடு பெரும்பட ருஞ்சிறை நெடுந்தொடர் துறந்துரகன்வெம்
படஞ்சுளி வுறும்படி நரம்புரி தரும்பத யுகம்பணிகுவாம்.

ஓ சந்திரகுலத் திந்திரன்போன்ற ஜெனமேஜெய மஹாராஜனே! கேளும் தருமபுத்திர மகாராஜன் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இளவரசான வீமசேனனுடனும், சேனாபதியாகிய அர்ச்சுனனுடனும் பொக்கிஷதாரியான நகுலனுடனும், தருமபத்தினியான திரௌபதியுடனும், தினமுந் தந்தைதாயாரைப் பணிந்து, சிவலாய விஷ்ணு வாலயாதிகளைத் தெரிசித்து, பெரியோர்களைப் பூசித்து, தான தருமங்களை விசாரித்து, அளவிறந்த பூபதிகளை நேசித்து, புலவர், பூசுரர், பூமிபாலரை விசுவாசித்து, கருணையிற் கடலை வென்றவராகியும், அறிவிற் பிரகஸ்பதியை வென்றவராகியும், பொறுமையிற் பூமிதேவியை வென்றவராகியும், ஒளியிற் சூரியனை வென்றவராகியும், வீணைகானத்தில் மிதுனகின்னரத்தை வென்றவராகியும், ஈகையில் மேகத்தை வென்றவராகியும், அழகில் மன்மதனை வென்றவராகியும், நிதியில் அளகேசனை வென்றவராகியும், போகத்தில் இந்திரனை வென்றவராகியும், கலைக்ஞானத்தில் ஆதிசேடனைவென்றவராகியுமிருக்கிற தனது சுபாவகுணத்தினு மேற்பட்டு, நான்கு வேதங்களையு மாராய்ந்துணர்ந்த திறத்தினால் நடுவு நிலைமைகளை நன்றாய்த் தேர்ந்து, அந்தணர்முதலிய வருணந்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரசரிய முதலிய நிலைகளில் நின்று அவற்றிற்கோதிய அறங்களில் வழுவாதொழுகலாகிய ஒழுக்கத்தையும், கடன் கொடல், உபநிதி, கூடி, மேம்படல், நல்கியதை நல்கானம்,ஒப்பிப் பணி செய்யாமை, கூலிகொடாமை, உடையனல்லான்விற்றல், விற்றுக்கொடாமை கொண்டுள்ள மொப்பாமை, கட்டுப்பாடு கடத்தல், நிலவழக்கு, மாதராடவர், தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு, என்னும் பதினெட்டுவகை வழக்கையும், இவ்வொழுக்க நெரியினும் வழக்குநெரியினும் வழுவினரை அந்நெரிகளில் நிறுத்தற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக்கபடி ஒறுத்தலாகிய தண்டத்தையும் ஒழுங்குபெற நடத்தி, தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற்கொல்வார், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவார், தொட்டியர், கள்வர், தன்னரசு, வேற்றரசு, மிருகபயம், பட்சிபயம், செந்துக்கள் பயம், மிகுமழை, மிகுகாற்று, இவை முதலியவைகளில்லாமல், செல்வம், விளைநிலம்,நோயின்மை, வளம், குறும்பின்மை இவை முதலிய அமைதிகள் விளங்கச் செங்கோல் தாங்கி நீதி செலுத்தி வருகின்றார்.

### தருமராஜன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி முதலானவர்களோடு சென்று வீஷ்மாச்சாரியாரைக் காணுதல்.

இப்படி அரசுபுரிந்து வருகிறநாளில் ஒருநாள் பாண்டவ சகாயனாகியும், பார்த்தசாரதியாகியும், பக்தபராதீனனாகியும், பரந்தாமனாகியும், தங்களைவிட்டு நீங்காதிராநின்ற ஸ்ரீ கிருஷ்ணசுவாமியுடனே சரசயனத்திலுற்ற வீஷ்மரிடத்திற் போய் வருவோமென்று கலந்து பேசிக்கொண்டு, தம்பிமார்களும், மகாரிஷிகளும், மந்திரிப்பிரதானிகளும், அரண்மனை வேலைக்காரர்களும், குடிபடைகளும், தன்னைப் புடைச்சூழ்ந்துவர



தருமராஜன், ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலானவர்களோடு சென்று பீஷ்மாச்சாரியாரை காணுதல்.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியோடு புறப்பட்டு, மிகுந்த விரைவாக விமானத்தைச் செலுத்திச் சென்று, தேவரிஷிகளும் பிர்மரிஷிகளுஞ் சூழ்ந்துகொண்டிருக்க, திவ்வியகுணமங்கள ரூபமாய் பிர்மதேயசு விளங்க, தேகாபிமான மற்று யோக நித்திரையுற்றுவீற்றிருக்கின்ற வீஷ்மாச்சாரியைக்கண்டு, ஜெயஜெய வென்று இருகரத்தையுஞ் சிரமேற்கொண்டு, தீர்க்கதண்டனிட்டு வணங்கினர். அப்போது சமீபத்திலிருக்கும் பரிசாலர்கள் கையைக் கொட்டி வணங்கி, ஓ எங்களாண்டவனே! இதோ தரும புத்திரமகாராஜன் துவாரகா புரிவாசனுடன் வந்திருக்கிறு ரென்றூர்கள். அந்தச் சொல்லைக் கேட்டவுடனேகருணைக் கண் விழித்துப் பார்த்து; மேலான சந்தோஷத்துடன் மகிழ்ந்து, அப்பா தர்மநந்தனு! இந்த முகுந்தனையும் இவ்வுலகத்தையுங் கைப்பற்றிக்கொண்டு சம்பிரமமாய்ப் பட்டாபிஷேகம் பெற்றுக் கொண்டனையா? மெத்த நல்லகாரியம். நீங்களிருவருங் கிட்டவாருங்கள். இவ்விடத்தி லமைந்திருக்கின்ற ஆசனத்திலிருங்கள். என்று சொல்லவும் அச்சொல்லின்படியே இருவருமிருந்து, அங்கு நெருங்கியிருக்கின்ற அருந்தவர்களை நோக்கி நமஸ்காரஞ் செய்தார்கள். அவர்களியாவரும் ஆசீர்வதித்து முகமலர்ந்து, எங்களுக்குத் தாயாகிய இந்தக்கிருஷ்ணபகவானும் பிரியாவிடையாய் இங்குவந்தது அருமையிலும் அருமையென்று உபசாரஞ்சொல்லிக் கூட்டமாகக் கூடினூர்கள். அந்தச் சமயத்தில் துளபமாலையைக் களபத்தோளிற் றரித்தருளிய கண்ணன் வீஷ்மாச்சாரியரை நோக்கிச் சில வார்த்தை சொல்லுகின்றனர்.

ஓஇந்துகுலத்துதித்த இராஜமுனியே! நீர் முன்னருரைத்த நன்னீதி வசனத்தைத் தலைமேற்கொண்டு பட்டாபிஷேகமும் பரித்து, தாயைநாடிய சேயைப்போலும்,பசுவைத்தேடிய கன்றைப்போலும், ஆசைகொண்டு, உமது திருவாக்கினுற் பற்பலதருமங்களை விற்பனமாகக் கேட்கவேண்டுமென்னுஞ் சிந்தையோடு உலகத்தார் கொண்டாடுங் கீர்த்தியையுடையவனுகிய உமதுபேரன் தருமராஜன் தம்பிமார் பிர்மாவிலும் உயர்ந்த மகாரிஷிகளும், தத்வக்கியானமுள்ள கிருபாச்சாரியார், விதுரர், சஞ்சயமுனிவர், இன்னுமுள்ள பெரியோர்களும் உம்மைச்சூழ்ந்து காத்திருக்கின்றூர்கள். ஆதலால், வேதப்பொருளி லுறைந்து மறைந்திருக்குந் தருமமுதலிய நீதிகளெல்லாவற்றையும் இவர்கட்குக் குறைவில்லாமல் நிறைவாக உமது திருவாக்கினுல் தேன் பொழிவதுபோல் மொழிந்தருளவேண்டும். இதுபற்றி உமக்குவேறு உபசாரஞ் சொல்லவேண்டிய தொன்றுமில்லை, என்று கன்று மேய்த்தருளிய விண்டுவாகிய ஒருவன் நின்றுசொல்ல,அம்மொழியனைத்துங் கேட்ட வீஷ்மர் நகைத்து, ஓ மேகவண்ணனுகிய அண்ணலே! ஓ ஆதிமத்தியாந்த ரகிதமானவள்ளலே! ஓ முகுந்தா! ஓ கோவிந்தா! ஓ வித்தகா! நீரறியாத நீதியுந்தருமமும் நீணிலத்திலுண்டோ? ஓ நெடியோனே! சரசயனத்தின்மீதிருக்கும் எனக்கு மெத்தத் தள்ளாண்மையும், ஆயாசமும், வெகுவாய் அதிகரித்திருக்கின்றன. மேலும், நாவினிடத்துப் பசையில்லை. ஈரமில்லாமற் புலர்ந்திருக்கின்றது. ஆகையால், தேவரீரே திருவாய்மலர்ந்தருளுமென்று சொல்லினர்.

அதற்குத் திருமாலானவர், ஐயா வீஷ்மாச்சாரியரே! உம்முடைய வாக்கினுற் கேட்கவேண்டுமென்றுமகிழ்ச்சியுற்று வந்தபேர்களுக்கு இன்னெருவர் சொன்னுல் அதைக் கேட்டு இன்பமடையத்தக்கதோ? அது அவர்கட்குத் திருப்தியாயிராது. அவர்களாசைகொண்டுவந்த ஆவலடங்காது. ஆனது பற்றி உமது தேகமானது யோகமேலிட்டிருப்பதால், நீர் யுத்தகளத்திற் பிரவேசிப்பதற்கு முன்னே எத்தன்மையா யிருந்ததோ? அத்தன்மையாக மாசற்றிருந்து,பூசல்முகத்திற்பட்ட புண்ணெல்லாமாறி, உடல்வருத்தமுதலிய ஆயாசமுந்தீர்ந்து, திடகாத்திர தேக தைரியம் பெறும்படிக்கு அனுக்கிரகம் பண்ணினே மாதலால் இதுமுதலாக நீர் திடங்கொண்டு அருமையான தருமங்களையெல்லாம் ஆராய்ந்தவண்ணம் உச்சாகத்துடன் சொல்லும், என்று பணமகுடப்பாம்பணையும் பாற்கடலு நீங்கிய பரந்தாமன் பக்தவற்சலன், பரபரகிதன், பரமபதநாதன் அருள்செய்யவே, வீஷ்மாச்சாரியருக்கு மனோவர்க்குக் காயமூன்றும் வலுவேறி, வருத்தந்தீர்ந்து, மனங்குளிர்ந்து, வனமாலிகை தரித்தருளிய கருஞ்சூரியனைப் போன்ற வாசுதேவனை, அலகை முலைப்பாலுண்ட ஆயனை, ஆச்சிமாருடன் குலாவியநேயனை, பவளம்போன்ற செவ்வாயனை, தேவகி தேவியா

ருக்கு சேயனைத் தோத்திரஞ்செய்து, செந்
தாமரைக் கரத்தைக்கூப்பி வணங்கி, அவரு
டைய திவ்வியமங்களப் படிவத்தை இருதய
கமலத்திலிருத்தி உள்ளன்புகூடிய ஒளியை
க் கண்ணுலுங்கண்டு, முகமலர்ந்து அகமகிழ்
ந்து இதனை மொழிகின்றனர்.

### ஸ்ரீ கிருஷ்ணபகவானை வீஷ்மாச் சாரியர் துதித்து அனுக் கிரகம் பெறுதல்.

ஓ உயர்ந்தோரி லுயர்ந்தோராலும் எட்
டப்படாத கனியே! ஓ வேதப்பொருளுக்கு
மேலாகிய தளியே! ஓ எல்லாப் பதத்திற்கு
இதமாகிய பதமே! ஓ பொன்னுசையாதிய
மூப்பற்றையும் வெறுத்தோர்க்கு உறவே! ஓ
புவிமாயையிற் பொருந்தி அக்கியான கேவ
லத்தாற் புலம்பித் தள்வார்க்குத் தூரமே!
பெருமையாகிய தருமசாஸ்திரத்தில் ஒட்டா
தவனுகியும், ஒட்டினவனுகியும், ஓரிடத்துந்
தட்டாதவனுகியும், தன்னைத்தா னறிந்த த
லைவருக்குத் தானறியப்படுந் தலைவனுகியும்,
ஆணவப் பேய்க்கொண் டலைவார்க்குக்காண
க்கிடையா கருப்பொருளாகிய கண்ணனே!
நின்மலமான நிரந்தர வஸ்துவாகிய தேவ
ரீர் மகத்துவத்தை அடியேன் மதிக்குந்தர
மோ? துதிக்குந்தரமோ? தேவரீரை யெண்
ணுந்தோறும் மிகவும் மயிர்க்கூச்செழா நி
ன்றேன். தேவரீர் திருவடி யனுக்கிரகத்தா
ல் தமது திருநாமத்தையும், திவ்விய திரு
வுருவத்தையும் எல்லா வஸ்துவுமா யிருக்கி
ன்ற இன்பத்தையும் நான் எடுத்துப்பேசி
ஏத்திவணங்கி இறைஞ்சும்படிக்கு அனுக்கி
ரகஞ் செய்யவேண்டும். ஓ ஈசனே! மூத்த
லைச்சூலமும் தண்டு கமண்டலமும், சங்குசக்
கரமும், ரிஷபவாகனமும், அன்னவாகனமு
ம், கருடவாகனமும், கயிலைமலையும், சத்திய
லோகமும், வைகுந்தப்பதியும், ஆகிய வி
வைகளை யெல்லாம் பாரதம் முடிக்கும் பொ
ருட்டாக ஒழித்து, தேவகி தேவகியாருக்குப்
பிள்ளையெனப் பிறந்த துளவணிமார்பனே!
பொரு ளென்பவைகளுமாய், அப்பொருள்
களின் சம்மந்தமுமாய், ஐம்பூதமுமாய், ஐம்
புலனுமாய், அவ்வைம்புலன்களினுல் மயங்
குகின்ற மயக்கமுமாய், அம்மயக்கங்களைமாற்
றுகின்ற பேரறிவுமாய், இருளுமாய், ஒளியு
மாய், உயிருமாய், இகமாய், அருளுமாய்,
அன்புமாய், தலைவனுமா யிருக்கும் ஆதிமூ
லப்பொருள் தேவரீராலுல், உம்மை யாரறி
யப்போகிறுர்கள்.

ஐயனே! ஒன்ருய், இரண்டாய், மூன்ருய்
இம்மூன்றினுள்ளும் பல கிளையாய், அக்கி
ளைகளின் தழையாய் அவற்றுட் பூ, பிஞ்சு,
காய், கனி இவை முதலியனவாய், இவைய
னைத்துக்கு முதலாகிய மரமாய், ஆதிமூல
மாய் அனுதியாகிய நான்மறையாய், முக்கு
ணமாய், இருவினையாய், ஒருமுதலாய், நன்
மையாய், தீமையாய், பற்பல ஐயமுமாய், அ
ந்தச் சமயாசாரங்களுக்குப் பொதுவாகிய ஐ
ந்தெழுத்தாய், எட்டெழுத்தாய், இவ்வை
ந்துமெட்டுக்கு மாதாரமாகிய ஓரெழுத்தாய்
வெற்றிபெற்று வீற்றிருக்கின்ற தேவரீர் எல்
லாவற்றிலும் விளங்கி பிரதிபலித்துக் கொ
ண்டிருப்பது என்ன விளையாட்டோ? ஓ நர
கரி முரகரி யென்னுந் திருநாரணனே! என்
று வீஷ்மாச்சாரியார் அநேக விதமாகத்
தோத்திரஞ் செய்து தொழுது வாழ்த்திய
போது, தன்னந்தனியே தனக்குத் தானே
யொப்பாகிய பெருமான் சற்றே நகைத்தரு
ளி, திருக்கண் மலர்ந்து கருணைகூர்ந்து ஓ
உபமானஞ் சொல்லுவதற்கு ஒப்பொருவரு
மில்லாத பெரியவரே! உமது உடலைவீட்டு
உயிர்போங்காலத்திற் பேசுதற்குரிய எட்டா
ம் வசுவின்பதம் உமக்குக் கிடைக்கும். இதற்
குக்குறைவில்லை, என்று அருள்புரிந்தனர்.
இவ்வண்ணமாகத் தண்ணந்துளவோன் தி
ருவாய்மலர்ந்தருளிய திவ்விய மொழியான
து வீஷ்மருடைய செவியிற் புகுந்து நிறை
ந்து புளகாங்கித முண்டாக்க, அதனுல் அ
ழகிய அரவிந்தம்போன்ற அரியினுடைய
திருவடிகளை மீட்டு மீட்டு மனந்தமுறை து
தித்து, பக்தவற்சல பரந்தாமனது அருள்
கொழிகைக் கொண்டு, தனது பக்கத்தி லிரா
நின்ற வேதவியாசர், நாரதமகாமுனி, இன்
னுமுள்ள மகாரிஷிகளின் அருள்வாக்கியமு
ம் பெற்றுக்கொண்டு, தமது குலத்தோர் சுக
ம்பெறப் பிறந்த தருமராஜனுகிய பேரனுக்
குச் சகல தருமசூக்ஷங்களையுந் தடையறவா
லோசித்துச் சொல்லத்தொடங்கினுர்.

### வீஷ்மாச்சாரியர் கிருஷ்ணமூர்த்தி உத் தரவினுல் தருமராஜனுக்கு வேண்டு வனவற்றை விளம்பநேர்தல்.

ஓ இராஜ ராஜர்களுக்குப் பெரியவனு
கிய தருமநந்தனு! இவ்விடத்தில் நிறைந்தி

ருக்கின்ற முனீஸ்வரர்களின் கிருபையினு லும் நீருண்ட மேகவண்ணனாகிய கண்ணன் எனக்கெதிரிலிருந்து காட்சி தருகின்ற மாட்சிமையினாலும், ஆட்சியாகிய சாஸ்திர புராண தருமங்க ளெல்லாவற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபு அறியாமை மூறியச் சொல்லுகிறேன். நீ உன்மனத்தில் தெரிந்துகொள்ளக்கூடாத சந்தேக முள்ளவைக ளனைத்துஞ் சிறப்புடன் யோசித்துக் கேட்டுக்கொள்ளுக,' என்று வற்றிவடியாத கருணைக்கு வித்தாகும் ஒருமுதல்வனாகிய வீஷ்மர் சொல்ல, தருமராஜன் மகிழ்ச்சியடைந்து கவலையற்ற நிலைபெற்ற அத்தலைவரைத்தொழுது, முகுந்த கோவிந்த வைகுந்தனது கமலபதத்தைக் கருத்தி லிருத்தி, இருகரத்தையுஞ் சிரத்திற்பொருத்தி, பொற்பிரகாசம் பொருந்திய பாட்டனுடைய காலிற் பணிந்து, அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்று, அவருக் கருகாசனத்திலிருந்து, தனது பரிசுத்தமான மனத்தில் அடைபட்டிருந்த பலமான சந்தேகங்களை யெடுத்துக்கேட்கத் தொடங்கினர், ஐயா எங்கள் மூதாதையே! பெரியோர்களாற் புகழ்ந்துப்பேசப்பட்ட பூலோகத்தில் அனேகங்கோடி புத்திமான்களும் பலவான்களு மிருக்க, ஒருவன்மாத்திரம் ராஜாவாகிப் பூமியிலுள்ள பேர்கள் யாவரும்வணங்கத் தண்டனை, கண்டனை அபராதம், விதிவிலக்கு, வர்ணாச்சிரம தருமம், வெற்றி மாலை, வீரகண்டாமணி, இவைகள் முதலியவெல்லாங் கிடைத்துச் செங்கோற் செலுத்தவேண்டி வந்தவிதமென்ன? உண்பன, உடுப்பன, துன்பம், இன்பம், பிணி, நரை, திரை, மூப்பு, சாக்காடு இவை முதலானவைகள்மாத்திரம் உலகத்திலுள்ளபேர்களுக்கு ஒப்பாக நடந்து வருவதென்ன? இந்தச்சந்தேகம் என் சிந்தையை விட்டு நீங்காமல் நெடுநாளா யிருக்கின்றது. இதற்கு நிவர்த்திசொல்லி என் மனக்கவலையை மாற்றவேண்டும், என்று விந்தகிரிபோன்ற புயத்தினையுடைய தருமராஜன் விரும்பிப்பணிய, வீஷ்மாச்சாரியர் புன்னகைகாட்டி, பேரனைப் பாராட்டி, பெருமையாக வாழ்த்தி, வாசனை பெற்றமலர்களிலிருக்குந் தேனை வண்டினங்கள் கண்டு களித்துண்பதுபோல தருமராஜன் கிரகிக்கும்படியாகப் பேசத்தொடங்கினர்.

ஓ முரசகேதனு! தேககாந்தி, கிருபை, சத்தியம். இவைகளினால் நிலைபெற்றிரா நின்ற ஒருவன் உலகுக்கு அரசனெனவன். அவ்வாறமைந்த அரசன் ஐம்புலன்களையுஞ் சேஷ்டை செய்யவொட்டாம லடக்கி, மிஞ்சி சேஷ்டைசெய்தால் காவலில்மடக்கி, குற்றமில்லாதவனாய்ப் பூலோக தேவர்களுக்கும் மேலோக தேவர்களுக்கும் யாகாதி முதலிய பாகாதி பணிவிடைகளிலிருந்து பரிந்து, அவர்களைப் பணிந்து, அன்புபாராட்டி விசுவாசித்து வருவான். அப்படிவரும் நன்னெறியின் வல்லமையினால், தேசமுழுதும் பூசித்து நேசித்துத் துதித்துக் கொண்டாடும்படியாய் உலகத்தை ஆளுவான். இத்தன்மையான நடுநிலைவாய்ந்த மன்னவன் மும்மூர்த்திகளாகிய சிவன், விஷ்ணு, பிர்மா, இன்னுமுள்ள தேவர்கள் முதலிய பேரைப் பார்க்கிலும் பிராமணர் அதிகமென்று உண்மையாய் மதித்து, உள்ளத்திற் றுதித்து; ஊழியம்புரிந்து அன்புபாராட்டி வருவான். அப்படி வருவானாகில், அவ்வரசன் ஒருதப்பு மில்லாதவனாய்த் தீர்க்காயுசுந் தருமவிர்த்தியும் பெறுவான். அவனாளுகைக்குள்ளாகிய உயிர்களுக்கு துற்சோப்பம், துற்பயங்கரம், துற்மரணம், துற்வியாதி, இவை முதலிய துயரங்கள்சேரா. பயிர்களுக்குசப்த மேகங்களு முழங்கி, மழைகளைக் காலமறிந்து பொழியும். யாகாதி கருமங்கள் மேன்மேலாக நடக்கும். பிரமதேயசுண்டாகும். பலம் பிரபலமாகும். தைரியமேலாகும். சத்துரு ஜெயமுண்டாகும். நெறிமுறை நிலைபெறும். நிதானமே தனமாயோங்கும். குல கோத்திரங்களின் குற்றமெல்லா நீங்கும், ஓ கருணைப் பிரவாகமுள்ள தருமனே! மேற்கூறிய ஐம்புலன்களும் நான் சொன்னவண்ணம் ஒருவழிப்பட்டிருக்குமாகில், இகழ்ச்சியில்லாத புகட்சியையுடைய இராஜராஜாக்களின் சம்பத்து, வல்லமை, இவை முதலியவெல்லாம், இவ்வுலகிற்றெய்வமாகி இருக்கும்வேதமுணர்ந்த வேதியர்களின் ஆசீர்வசனப் பிரதாபத்தாற் கைகூடிவரும். அவனினைத்தவண்ணம் கதியுங் கைகூடிவாரத்தக்கதே, இதை உன்கருத்தி லிருத்துவாய், என்றுபாட்டன் சொல்லக்கேட்ட பேரன் மீட்டுமவரை நோக்கி, ஐயா! இத்தன்மையான மங்களாசன மகத்துவம்பெற்ற மறையவர்கள் இராஜதண்டனைக் குடன்படுவானேன்?

அதனைத் திருவாய் மலர்ந்தருள வேண்டும், என்று வினவிய தருமநந்தனனை வீஷ்மர் பார்த்து அப்பா! ஒப்பில்லாத ஆயுதமுதலிய தனுர்ப்பாணங்களைக் கைக்கொண்டு யுத்த பூமியிற் பிரவேசித்து வெற்றிபெறுகிற வீரத்திலும், உயிர்க்கொலை முதலாகிய பொல்லாத மகா பாதகங்களைச் செய்தகாலத்திலும் பிராமணகிர்த்திய கர்மத்தையும் நித்தியானுஷ்டான தர்மத்தையும் விட்டுவிட்டபோதிலும், இராசன் பிராமணர்களைத் தண்டிக்கலாம். அதனால் அரசனுக்கு இன்பமேயல்லது ஒரு துன்பமுமில்லை. இவ்விதிகள் ஆதியிலுண்டான முறைமையைச் சொல்லுகின்றேன் கேள்.

---

### இராஜமுறைமையி னுற்பவம்.

ஓ சரித்திய விரதனே! மண்பொறுத் தந்தையாகிய பிரமதேவர் இவ்வுலகத்தைப் காங்காகப்படைத்து, ஆத்மகோடிகளை யுண்டாக்கி, தேவர்களையும் அளித்தார் அப்படியாகப் பிறந்த தேவர்கள் மூவுலகத்திலும் போய்ச் சஞ்சரித்து, பாபம் இப்பேர்ப்பட்டதென்றும், புண்ணியம் இத்தன்மையுடையதென்றும், நிதானித்து அதுகளைப் பகுத்தறிந்து நடத்துவதற்கு வழிதெரியாமல் விசாரப்பட்டு, பிர்மதேவரிடத்தில் வந்து நமஸ்காரம்பண்ணி, சுவாமி! பாபபுண்ணியம் இப்பேர்ப் பட்டதென்று எங்களுக்குத் தெரியவில்லை. அதைத்தெரியச் செய்யவேண்டுமென்று வருந்திக்கேட்டார்கள். அப்போது பிர்மதேவர் லட்சம் அத்தியாயமாய் ஓர் தருமசாஸ்திரஞ்செய்து, பிரம தருமமென்று பேரிட்டுத் தேவர்களிடத்திற் கொடுத்தார். அந்தத் தருமசாஸ்திரம் அர்த்தமும், அவ்வர்த்தங்களினுடைய சூக்ஷ்மமும், அவர்கட்குத் தெரியாமல் தவித்துக்கொண் டிருந்தனர். அச்சமயத்தில் பிர்மாவினுடைய நெற்றியிலிருந்து பதினொருருத்திரர் பிறந்தார்கள். அவர்கள் பதினொருபேரும் இந்தத் தருமசாஸ்திரத்தைப் பார்த்துச் சுருக்கி, லோகோபகாரமாய் பதினாயிரம் அத்தியாயமாக உருத்திரதருமமெனப் பெயர்கொடுத்துப் பிரபலபடுத்தினார்கள். அதனாலுந் தேவர்களறிந்துகொள்ள மாட்டாமல் அலையும்போது, தேவராஜனாகிய தேவேந்திரன் ஆசையுடன் அந்தப் பதினாயிரம் அத்தியாயத்தையுஞ் சுருக்கி, சகலருக்கும் வெளிப்படையாய்த் தெரியும்படிக்கு ஐயாயிரம் அத்தியாயமாக யேர்ப்படுத்திக்கொடுத்தான். அதனாலேயுந் தருமசூக்ஷ்மந் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவர்களாய்த் தேவர்கள் மயங்கினார்கள். அதைத் தேவகுருவாகிய பிரகஸ்பதி மூவாயிரம் அத்தியாயமாக முடித்தருளினார். அதனைச் சுக்கிராச்சாரியார் சுருக்கி ஆயிரம் அத்தியாயமாக ஏர்ப்படுத்தி வைத்தார். அதைப்பார்த்துத் தேவர்களுக்குச் சந்தேக நிவாரணமாகித் தேறும் அறிவில்லாமற் கலங்கித் துயரமடைந்து, பாபத்தையே யநுசரித்து, மனவிருளடைந்து, அக்கியானிகளாய் விசனமுற்று, இயாவரும் ஒரு பெருங் கூட்டங்கூடி, தருமத்தை நடந்திவைப்பதற்குத் தருமந்தப்பி நடந்தவர்களைத் தண்டிப்பதற்கும் ஒரு கர்த்த னிருக்க வேண்டுமென்று யோசித்து, மஹாவிஷ்ணுவி னிடத்திற்குப் போய் முறையிட்டார்கள்.

அப்பா தருமநந்தனா! அந்த விஷ்ணுவானவர் பூலோகத்தில் யாவரும் புண்ணியத்தை மேற்கொள்ள நடப்பிக்கும்படியாய்த் தம்முடைய நினைப்பினாலே ஒரு மகாபுருடனையுண்டாக்கி, அவனுக்கு விரசு என்று பெயரிட்டு, நீ இவ்வுலகத்துக்கு ராஜாவாயிருந்து தருமபரிபாலனம்பண்ணி, பாபபுண்ணியமும் பக்குவாபக்குவமும் பார்த்து நடப்பித்திடுக, அவ்வாறு உன்சொல்லுக்கடங்கி நடவாதபேரை, தகுதியாகிய தண்டனை செய்திடுக, என்று ஆக்ஞாபித்து அனுப்பி வைத்தார். அந்தவிரசு என்கின்ற இராஜன் இராச்சியபாலனம் பண்ணாமல், கருத்தமனென்கிற ஒரு பிள்ளையைப் பெற்று, அவனுக்குப் பட்டங்கட்டிவைத்து, இப்பிரபஞ்ச வாழ்வை வெறுத்துத் தபசுபண்ணி மேன்மையைப் பெற்றான். அவனுடைய குமாரன் கருத்தமனென்பவன் (தந்தையெவ்வழி அவ்வழிபுதல்வன்.) என்பதுபோற் சம்பத்தை விரும்பாமல், பெரும்பாலுந் தவமேதனமாக்கொண்டு தவஞ்செய்யப் போய்விட்டான். அவனுடைய பிள்ளை அனங்கனென்பவன் கடல்வளைந்த காசினிமுழுமையுந் திடமிகுந்த தீரத்துடன் ஆளுகைசெய்து, தருமபரிபாலனச் சக்கரநடத்தி, மாசற்ற மனைவியைப்புணர்ந்து, நெடுநாளிருந்து, சாதுர்வர்ண தர்மங்கள் குறையாமலும் நடுவுநிலைமைகுன்றாமலும் நடத்தி, பூமிமுழுதுங் கொண்டாடும்படிக்குப் புகழ்ந்தேடி, ஒரு பிள்ளையைப்

பெற்று, அவனுக்கு நன்னிதியென்னப பெ
யரிட்டு, சாஸ்திரப்பயிற்சியுஞ் செய்வித்து,
அவனுக்குப் பட்டாபிஷேகங் கட்டிவிட்டுத்
தான் எட்டாப்பதத்தை விரும்பித் தவஞ்செ
ய்யப்போனன். அப்போது அந்நன்னிதி
யென்னும் ராஜன் சத்தியம், தயை, சாந்தம்,
பொறுமை, தர்மம், இவைகளெல்லாவற்
றையுமறந்து, காமக்குரோத லோபமோக ம
தமாச்சரியங்களிலே வீழ்ந்து, இந்த அறுவி
தப்பகைகளேயும் நீறுசெய்யமாட்டாமற் பஞ்
சேந்திரியங்களேயும் வேறுபடுத்தக் கூடாமல்
அவைகட்குள்ளா யகப்பட்டுக் கொண்டு,
லோகமெல்லாம் பொல்லாதவ னென்று
சொல்லத் தக்கதாய் நெறிதப்பிய நெறியி
ற்போனன். அப்பால் இராச்சிய பரிபால
னம் பண்ணுவதற்கு இராஜனில்லாமல், அ
நேக முனீஸ்வரர்களும் மந்திரிகள் முதலிய
வெகுசனங்களும் மனவருத்தமடைந்து, நா
ட்டுக்கு இராஜனில்லாமற்போனல் தருமங்
களில் ஒன்று நடவாது. வருணச்சிரம தரு
மந்தப்பிப்போம். வரம் புடைந்துபோம்.
காட்டில் மிருகங்கள் மிஞ்சிப்போம், நமக்
கெல்லாம் உபத்திரவமுண்டாகும். பூமியை
ரட்சிக்கிறகடமை மகாவிஷ்ணுவுக்குச் சொ
ந்தம். அவ்விஷ்ணுவுக்குப் (பிருதிபதி) எ
ன்று சுருதிவாக்கியமுண்டு. ஆகையால், அ
வர் முன்னிலையில் வந்து இராஜவருக்கத்தா
ரில் இப்போதுள்ள இந்நன்னிதியென்பவ
னுடைய வலது தொடையைத் தருப்பை
அரணியினலே கடைவோமாகில்; நமக்குரா
ஜன் கிடைப்பானென்று ஒரேமனதாய் நிச்
சயித்துக்கொண்டு வேதமந்திர விதிப்பிரகா
ரங்கடைந்தார்கள். அப்படிகடையும்போது
சூடெழுந்து ஒருவன் பிறந்தான்.

அப்பா மெய்விரதனே! அவனெப்பேர்
ப்பட்டவனென்ருல், தீப்பொறிக்கிடமாகிய
பொல்லாத கண்களின் காச்சலும், பெரும்
புலிப்பாச்சலும், பேரண்டம் பிளக்கும்படி
யாகிய பெருங்கூச்சலும், திசையளாவுங் கை
வீச்சலுமாகப் பிறந்தான். அவனே யம்முனி
வராதியர் கண்டு, அப்பா! நீ காட்டுக்கெல்
லாம் மேட்டிமையாயிருந்து, வேடர்களுக்கு
அரசாகி; தர்மந்தவருமல் ஆண்டுவரத்தக்க
தென்று அவனைப் போக்கிவிட்டு, அப்பால்
அந்த நன்னிதியின் வலதுபுயத்தைக் கடை
ந்தார்கள். அதிலிருந்து புண்ணியதேகமும்,
கன்னியமான கருணைப் பார்வையும், விண்
ணிலிருந்து மின்னலழிந்து வருவதுபோல்
ஆரகேயூர மணிமகர குண்டல கிரீடத்து
டன் கரத்தில்தனுப்பாணந்தரித்து, தயார்கர்த்
துடன் பரமாகாரனென்கிற இராஜனொரு
வன் பிறந்தான். அப்போது தோன்றிய
பரமாகாரனென்னும் பார்த்திபன் அம்முனி
வராதியரைக்கண்டு ஆச்சரியமடைந்து, ஆ
னந்த சித்தனைப் பிரதட்சண நமஸ்காரம்
புரிந்து, ஆசீர்வசனமேற்றி, ஓ சுவாமிகளே
அடியேன் செய்யவேண்டிய ஊழியத்தினைக்
கட்டளையிட்டால், அப்படியே செய்து வரு
கிறேனென்று வணங்கினன். அப்படி வண
ங்கிய பிள்ளையை அம்முனிவராதியர் கட்டி
யணைத்துக் கடாட்சமளித்து ஓ இராஜகுல
தீபமே! இப்பூமிக்கு நீ ராசாவாகியிருந்து
வெள்ளைக்குடை நீழலிற் கொள்ளையாகிய பு
கழைத்தேடி அரசாளுக, என்று சகல சாஸ்
திரங்களும், தருமங்களும், நீதியும், தனுவே
தமுஞ்சொல்லி, நல்ல முகூர்த்தத்தில் மகு
டாபிஷேகம் பண்ணிவைத்து, தீர்க்காயுசும்,
திரவியவிர்த்தியும், திடகாத்திரமும், உண்
டாகும்படி ஆசீர்வதித்தார்கள். அந்தப் பர
மாகார மகாராஜன் சத்தியத்துடனே தர்மத்
தப்பால் இராச்சியபாரம் பண்ணிக்கொண்
டிருக்கும்போது, பின்னும் முன்னஞ்சொல்
லிய நன்னிதியினுடைய எலும்பைக் கடை
ந்தார்கள். அதினின்றும் இருவர் பிறந்தார்
கள். அவர்கள் மிகுந்த சௌந்தரியத்தைப்
பொருந்தினவர்கள். தாதா, விதாதா, என்
னும் பேர் பெற்றவர்கள். அவர்களிரண்டு
பேரும் பரமாகார மகாராஜனுக்குத் துணை
யாயிருந்தார்கள். அந்த வேளையில் சுக்கிராச்
சாரியார் குருவாக்வும் மந்திரியாகவு மிருந்
தார்.

ஓ குவளைதார் புனைந்த கோமானே!
இப்பால் அந்தப் பரமாகார மகாராஜன்
இரதகஜ துரகபதாதிகளான நால்வகைச்
சேனைகளைவிஸ்தாரமாக வைத்துக்கொண்டு,
பிரம்மாண்டமாகிய சுற்றுமதில், கோபுரம்,
அகழ், மலை, ஆறு, நாடு, நகர், அரண்,
இவை முதலிய வடங்கிய பட்டினமும், கோ
ட்டையும், ஒன்றற்கொன்று குறைவில்லாத
சம்பிரம மங்கரமா யிருக்கத்தக்கதாகச் சபா
மண்டபத்தி லமைந்த சிங்காசனத்தில் வீற்
றிருந்து, அசத்திய முதலிய பகைகளைக்
கடந்து, சத்தியநித்திய தருமத்தின் வழியே
தன்னரசை நடத்தி, நெறிமுறை தப்பியமூட

ரைத்தண்டித்து, மூத்திக்கு வித்தாகிய மூதல்வரைக் கும்பிட்டு, எல்லாவுலகும் நல்லவனென்று சொல்லும்படிக்கு வல்லமையுடன் ஆண்டுவந்தான். இயாகாதி அவிர்ப்பாகங்களால் இந்திரன் முதலாகிய அந்தர தேவர்களும் மந்திர தேவதைகளுங் கொண்டாடும்படியாய் ஆக்கினைச் சக்கரத்தாணை செலுத்தினான். அவ்வரசனுடைய கால்வழி வந்த அரசர்களியாவருஞ் சகல வருணங்களுக்கும் மேலாகிய பிராமணர்களைப் பூசித்து வாழ்ந்து வந்தார்கள். அப்போது பிராமணாள் இராஜனாயுள்ளவன் உலகத்தைக் காத்து ரக்ஷித்தலும் ஆறிலொருகடமை வாங்கிக்கொள்ளுவதாகிய இன்னுஞ் சில நிபந்தனைகளை ஏர்ப்படுத்தி வைத்து, எங்களேற்பாட்டின்படிக்கு நடந்தால் உமக்குச் சம்பத்துண்டு. நீதிசேரும், ஜெயமுண்டு அவ்வேற்பாட்டைவிட்டுச் சத்தியந் தப்பி அசத்தியத்திற் பிரவேசித்து அதிக ஆசைப்படுவீராகில், தரித்திரமும், சாபமும், ஆயுட்குறைவும், அபஜெயமுநேரிடுமென்று ஆக்யாபித்தனர். அவ்வாக்யாபனையின் வண்ணம் அவ்வவர்களும் பாரம்பரியமாய் நடந்து கொண்டு உலகத்தைக் கிரமப்படி யாண்டு வந்தார்கள். ஆதலால் இராஜனாயுள்ளோன் எப்போதுஞ் சத்துருஜெயஞ் செய்து, எதிரி தன்னை வணங்கவுங் கப்பணங் கட்டவும் பண்ணிக் கொள்ளும் பாக்கியத்திற் கண் வைக்கவேண்டும். ஏமாறப்படாது. குடிபடைகள் கொழுத்திருக்க வேண்டும். தன்னிடத்தில் நெருங்கிய நேசமான பேர்களானாலும் ராஜன் கொலுவிருக்கும்போது வித்தியாசமில்லாமல் வணங்கிப் பணியவேண்டும். இராசனுக்கு நேசமானவர்கள் பணியாவிடில் மற்ற மோசமான சத்துருக்கள் மதியார்கள். இராசன் மகாவிஷ்ணுவின் சொரூபமென்று மறைகளிற் சொல்லப்பட் டிருக்கின்றது. ஆதலால், அந்த அம்சமிருப்பவனுக்கே இராசாங்கம் வருமென்று மேலோர் பேசியிருக்கின்றார்கள். இவ்வுலகமாள்வதற்கு அப்படிப்பட்ட இராசனொருவ னிருக்கவேண்டும். இல்லாமற் போனாற் பூமி அனாதரணையாய்ப் போம். தருமம் நடவாது. நன்மைதீமைகளும் விட்டுப்போம். வருணாச்சிரம தருமங்களுங் கெட்டுப்போம். இவைகளெல்லாம் நல்ல ராசாங்கத்தினால் அழியாமலிருக்க வேண்டும். இராசபய மிருக்க வேண்டும். பிரஜைகள் பயந்து நடக்க வேண்டும். ஆகையால், இராசனில்லாமலிருக்கு நாடு மிருகமுலாவுங்காடு, என்று சொல்லிவந்த வீஷ்மாச்சாரியைத் தருமராசன் பணிந்து, ஐயா கருணா நிதியே! வருணாச்சிரம தருமமென்பன யாவை அவற்றை நான் விபரமாயறியும்படிக்கு விரித்துரைக்க வேண்டுமென்று கேட்க, வீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

---

## வருண தருமம்.

ஓ தருமநந்தனா! அந்தணர், அரசர், வைசியர், சூத்திரர், என வருண நான்காயுள்ளன. அவற்றுள் அந்தணகுல மென்பது மேலானது. இந்தமேலானகுலத்தோரர்கிய பிராமணாள் செய்ய வேண்டிய கிரமங்களைப் பொது விதியிற் பேசியிருக்கின்றார்கள். அவற்றை நான் எடுத்து உனக்குச் சொல்லுகிறேன் கேள். வேதியரென்போர் குற்றஞ் செய்யாமலும், கோபம் வையாமலும், சத்தியந் தப்பாமலும், ஆசையில்லாமலும், தருமம் மறவாமலும், பூத தயவுடன் பதிவிரதையாகிய பெண்ணை கலியாணம் பண்ணிசுசியாதி யாசாரத்துடன் நித்திய செபம், தவம், கருமம், தவாக்கினி, காயத்திரி, இவை முதலிய காரியங்களில் வழுவில்லாமல், பழியில்லாமல், வழியாய் நடத்துவது பிராமணவிதி. இன்னமும், வேதமோதல், யாகஞ்செய்தல், வேதமோதுவித்தல், யாகம் பண்ணுவித்தல் தபசிருத்தல், தெய்வத்தைப் போற்றல், அவுபாசம் புரிதல், அக்கினி சாட்சியாய்க் கலியாணஞ் செய்தல், அரசராதியர்க்கு விவாக நடத்தி வைத்தல், அரசர் முதலிய எவர்கள் கொடுத்தாலுந் தானம் ஏற்றல், தானமீதல், அதிதி அப்பியாதிகளுக்கிரங்கி அன்னம் படைத்தல், இந்தியாதி குணங்களும் உடையவர் பிராமணர். இவர்கட்கு நீரின் முன் செபமும் நெருப்பின் முன் தவமும் முக்கியமானது. இரண்டாவது அரசர்குலம். இவ்வரசர் குலத்திற் பிறந்தவன் அவயங்குறையாதவனாய், அழகுடையவனாய், குலகோத்திரக் கொழுமைபெற்றவனாய், வேதாத்தியயனஞ்செய்து, பிராமணனைக்கொண்டு எக்கியம் பண்ணிவைத்து, வில்வித்தை, மல்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம், இரதசாரத்தியம், அஸ்திரசஸ்திரப் பிரயோகம், ஆயுதவரிசை, இவை முதலியதும் பழகி, நால்வகைச் சேனைகளைக் காப்பாற்றி, சத்துருவின்

மேரிற் சண்டைக்குப்போய் ஜெயம்பெற்று தன்தாரசகிதனுய், பரதாரசோதரனுய், யாதினுங் கரவிடமில்லாமல், மன்னுயிரைத் தன்னுயிர்போல் மதித்து, பொதுமையாயிருந்து, திரவியஞ்சேர்த்து, பரதேசிகள் முதலிய யாசகர்களுக்கு முன்பின்பாராமற் கொடுத்து பக்ஷபாதமில்லாமல், பரராஜ பயங்கரனுயிருந்து அரசாள்வது முக்கிய தருமம். மூன்ருவது வைசியகுலம். இவ்வைசிய குலத்திற் பிறந்தவன் தருமந்தப்பாது திரவியஞ் சம்பாதித்து, நாணயமில்லாரிடத்திற் கொடுக்கல் வாங்கல் செய்யாதிருந்து பொய்பேசாமல் பரதாரம் விரும்பாமல், சத்தியவழியில் நின்று, புண்ணியங்களைத்தேடி, நாவுதவருமல், பிராமண பூசைபுரிந்து, அன்னதானமிட்டு, தெய்வாராதனை முதலிய நோன்பும், சுபசோபனுதிகளும், பொருட்செலவழித்துப் பூரணமாக முடித்து, பற்று வரவு கணக்கிற் சற்றும் புரளாமல், சித்தமொருமித்து, கோபத்தையடக்கிப் பொறுமையுடனிருந்து, அரசனது சன்மானம் பெற்று வாழ்வது,வைசிய தருமமாம். நான்காவது சூத்திரகுலம். இக்குலத்திற் பிறந்தவன். மேற்கூரிய மூன்று சாதிக்கும் உபசாரம்பண்ணி, உழுது பயிரிட்டு, பூமிக்குக் காணியாக்ஷிக்காரனுயிருந்து, சன்னியாசி, தரித்திரன், பிதுர்க்கள், பாலியர் முதலிய சகலமானபேருக்கும் உதவிசெய்து, தேவதாபக்தி, ஆசாரியபக்தி, பெரியாரைப்பணிதல், பசுக்காத்தல், இவை முதலாகிய வேலைகளில் ஆளாகியிருப்பது சூத்திர தருமம். நான்கு வருணங்களின் முறைமை இதுவாகும். இனி ஆத்மலாபமாகிய ஆசீர்மலட்சணஞ் சொல்லுகிறேன் கேள்.

---

ஆச்சிரம தருமம்.

ஓ! உதிஷ்டரராஜனே! பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரத்தம், சன்னியாசம், என ஆச்சிரமம் நான்காயுள்ளன். அவற்றுள் முதலாவது பிரமசாரி நடக்கவேண்டியமுறை எவ்வாறெனில், குருவணக்கம், வேதாகமப் பயிற்சி, செபம், தவம், விதிநெறிக் கருமம், ஒருவேளை பிக்ஷை தருப்பை, சமித்து,புட்பம், இவைமுதலியன கொண்டுவந்து ஆசாரியர் பணிவிடைக்கு உபயோகப்படுத்தல், சந்தன சுகந்த பரிமள கந்தத்தையும், விலக்கல், எண்ணெயிட்டு முழுகாமற் சுத்த சலத்தில் ஸ்நானம்புண்ணல் கோவணம் வைத்தல், நித்திரையிலும்புத்தகமறவா திருத்தல், சீவகாருண்ணியமாதல், இவைமுதலியவெல்லாம் முதலாச்சிரமத்தின் செய்கை. இரண்டாவது இல்லறத்தான் நடக்கவேண்டிய முறை எவ்வாறெனில், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்று நான்கு குணங்களையுடைய கற்புடைமைவாய்ந்தநற்குணநற்செய்கை தோய்ந்த பதிவிரதையை விவாகம் பண்ணிக்கொண்டு, அவளைவிட்டுவேறுவழியிற் புகாமல் அவளுடன் கூடிவாழ்ந்து, தாய் தந்தையரைப் பூசித்து, கிழவர்கள்,பாலர்கள், பெண்கள், நோயினர், இவர்களை ஆதரித்து, அதிதி, அப்பியாகதி, பிதுர்த்தேவதை, இவை முதலிய பேருக்கு விருந்தமுதூட்டி, ஜீவஹிம்சை செய்யாமல்,பொய் சொல்லாமல், வஞ்சனை கபடங்கள்,பண்ணுமல், பிறருடைமையின்பேரிலும்பிறர்பாரியின் பேரிலும் ஆசைப்படாமல், கல் முதலாகிய கயப்புகளுண்ணுமல், மண்ணிலிருந்து பெண்ணேரஞ் சொல்லாமல்,பட்சபாதமாய் வழக்கழிவு உரையாமல், பரதேசிகளுக்குப் பிச்சைவைத்து, பந்துக்கள் சுற்றத்தாரை நிந்தனை சொல்லாது பாதுகாத்து,தேவதா பூசைபுரிந்து, நோன்புமுதலிய விரதமிருந்து தேவதர்ப்பணம், ரிஷிதர்ப்பணம், பிதுர்தர்ப்பணம், ஆசாரியதர்ப்பணம், இவைகளைச் செய்து, தேவதாபக்தி, பிராமணவிசுவாசம், பந்துசனநேசம், இவைகளை வகித்து, சுபசோபனசந்தோஷங்களுடன்இருக்கவேண்டியவன் கிரகஸ்தன். மூன்ருவது வானப்பிரஸ்த னடக்கவேண்டிய முறை எவ்வாறெனில், அக்கினியுடனேயும், பெண்சாதியுடனேயும், காட்டுக்குப்போய் புனிதமாகிய ஆச்சிரமங், கட்டிக்கொண்டு, போசனத்தையொழித்து, கந்தமூலபலாதிகள் புசித்து, வீண்காலம் போக்காமல்,பிரமநிஷ்டைகூடி காற்றுக்கும், பனிக்கும், மழைக்கும், வெய்யிலுக்கும், பயப்படாமலிருந்து பஞ்சாக்கினி மத்தியில் தபசுசெய்து, தன்வசமாயிழுத்து ஆட்டிக்கோட்டிக்கொள்ளும்ஐம்புலன்களையும் ஆறுபகைகளையும், அடக்கித் தன்வசப்படுத்தி, கலைக்ஞானங்களைக் கைவல்யமாகத் தேர்ந்து, கர்மபூமியின் வாசனுவிஷயத்தைக்கனவிலுங் கருதாமலிருப்பது மூன்ருவது ஆச்சிரமத்தின் முறை.

அப்பா என் பௌத்திரசிகாமணி! இனி நான்காவது சன்னியாசமென்னும் யதி

யாச்சிரமத்தைச் சொல்லுகிறேன் கேள். பாசபந்தமறுத்தல், ஓரிடத்தி லிருக்காமல் உலகமெல்லாஞ் சஞ்சரித்தல், கிடைத்த போதுண்ணல், படுக்கை, உடுக்கை, உண்ணல், இவைகளிற் பக்குவம், சிங்காரம்,உருசி, இவைகளைப் பாராமல் அனுபவித்தல், ஒருவருடன் பேசாமல் மௌனமாதல், நல்லதென்றுந் தீயதென்று நாடாதிருத்தல், சிகை, பூநூல், இவற்றைச்சார்ந்த கருமக்கிரியை நீக்கல், காவிகாம்பரம் போர்த்தல், தண்டுகமண்டல மேற்றல் வேதசாஸ்திர புராண முதலிய நூலெல்லாம் ஐயம், திரிபு அறியாமை, இவையில்லாமல், அறிதல் மூன்றுகாலமும் மூழுகல், சகலமும் பிரமார்ப்பணம் பண்ணல், நான், எனது, என்னுஞ் செருக்கறுத்தல், பொறுமையாதல், விருப்பும், வெறுப்பும், முறைமையாகிய ஒப்புரவறிதலும், விட்டுவிடல் ஆகிய வியல்புகளை யெல்லா முடையவனெவனோ? சகலத்தையு நியாசித்த சன்னியாசியாம் வருணத்தில் முதல்வருண மெப்படி மேலானதோ! ஆச்சிரமத்தில் இக்கடையாச்சிரம மேலானது இன்னும் பிறவுமுள்ள. அநுஷ்டானங்கள் பலவாகவுள. இவைகளை யெல்லாம் உடையவனையே யதியென்றுரைக்கவேண்டும். ஆனால், இந்த நான்காவதான யதியாச்சிரமம் பிராமணனுக்குக் தருமேயல்லது மற்ற பேர்களுக்குக் கைகூடாது. ஆகிலும் பரிகாரமாய்க் கூடியிருந்தாலும் நெறியுடனிருக்கவேண்டும். சூத்திரனுக்கு இல்லறமே நல்லறமாகையால் மற்ற மூன்றாச்சிரமமும் அநுசரிக்க வேண்டியதில்லை. அப்படிக்கு மேலாகிய காரியங்களை அபேக்ஷித்து, தானும் பெரியவாளைப்போலாகி உயர்ந்த பதத்தைப் பெறவேண்டுமென்று நினைத்து, அதனதன் தர்மந்தப்பி நடத்தினால் ஆயுளும் ஐஸ்வரியமுங் குறைந்து வம்சபரம்பரையும் மாறிப்போம். இம்மையில் தரித்திரமும், அம்மையில் நரகமும் அநுபவிக்கவேண்டிவரும். என்று வீஷ்மர் சொல்ல, இவையனைத்துங் கேட்டிருந்த மருதமரத்தை யுதைத்து வீழ்த்திய மாதவன் முதலிய மகானுக்கள் யாவருமகிழ்ந்து, மனம்பூரித்துப் புகழ்ந்து மதித்தார்கள். அப்போது தருமராசன் சந்தேகந் தெளிந்தவராய் ஓ சுவாமி! தேவரீர் திருவாய்மலர்ந்த தருமமானதுதேவார்மிதத்தினுஞ்சிறந்த இனிமையைத் தருகின்றது ஆகிலும் இந்தப் பூமிக்குக் கர்த்தாவானவன் இராசன் தானு? இவ்வுலகிலுள்ள சனங்கள் தர்மகர்மங்களையநுசரித்துத் தகுதியாக நடந்து கடைத்தேறச் செய்வதற்கு இராஜன் தவிர வேறொருவரால் நடத்தக்கூடாதோ? என்று என்மனஞ் சந்தேகத்தைத் தழுவுகிறது. ஆதலால், அச்சந்தேக நிவர்த்தியுந் தயை செய்யுமென்று தருமராஜன் கேட்க, வீஷ்மர் சொல்லுகின்றார்.

ஓ குபேரனுக்கொப்பான என்பேரனே! பூலோகத்திற்கும் பிராமணன் ராசனே. பூலோகத்திற்குத் தருமம் ராசனே. பூலோகத்திற்கு தெய்வம் ராசனே. பூலோக ரக்ஷகன் ராசனே. பூலோக சம்ஹாரகர்த்தனும் ராசனே இத்தன்மையாகிய ராசனில்லாவிட்டால், தருமம், புண்ணியம், சத்தியம், யாகம், வேதம், தவம், தானம், மழை, கோவில், குளம், சத்திரம், சாவடி, ஒன்று முதவாது. கிரமமாய் நடவாது. ஸ்திரீசனங்கள் முறைதப்பிப் போவார்கள். கர்ப்பவுற்பத்தி யில்லாமற் குறையும். புருஷாள் குலாச்சாரம், சத்தியம், சாந்தம், இவைகள் முதலியவற்றை விட்டுத் தப்பி நடப்பார்கள். மழைபொழியாது. மாடுகண் பலுகாது. குடிபடை நோயும். கோத்திரமாயு மாதலால் இராசன் உலகத்திற்குப் பிராணன். ராசன் சமஸ்தமான உயிர்களுக்கும் உடல். ராசன் நடுவுநிலையிலிருந்து கிருபையுடனுங்கடவுள். மேலும், இவ்வகைப்பட்ட ராசனுயினேன் சத்தியந்தப்பாமற் செங்கோற் செலுத்துவானாகில் மேற்கூறிய வருணாச்சிரமங்களின் பலனும் தபோபலனும் வேள்விப்பலனும் அவனுக்குண்டாம். சிவாலயம் விஷ்ணுவாலய முதலியவைகள் பிரபலிக்கும். ரிஷீஸ்வரர்கள் முதலானவர்களின் யாகம் யோகம் இவை முதலிய'வெல்லாங் குறைவின்றி நடக்கும். அவ்விராசன் கிருபையினால் உலகத்திலுள்ள பேர்களுக்கு அவ்வவர்களுடைய தாய் தந்தைகளினு மெண்மடங்கதிகமாகிய அன்புகூடி யாதரணையுண்டாம், வருணாச்சிரமத் தலைவர்களெல்லாம் அந்த இராசனுக்குச் சகல மரியாதையும் நடத்தி வைக்கிற அன்பர்களென்று வேதத்திற் சொல்லியிருக்கிறது. அவ்விராசன்செங்கோலினால் எல்லா வருணத்தினருங் களாபடனம் வியாதாகாரம் நிற்கத் தண்டனம் சந்தேகவாரணம் அன்னியகுண சகனம் பர

திருதூனயோகம் பரார்த்ததேவப் பிரார்த்திதம் என்று சொல்லும்படியான கல்வி பயிற்றல் துயர்தீர்த்தல் தண்டத்தினீக்கல் ஐயந்தேற்றல் பிறர்குணத் தழுக்காறின்றிப் பொறுத்தல் பிறராற் செயயப்படுந் தீமைமறந்து நன்றி நினைத்தல் பிறர்க்குவேண்டித் தெய்வம் வழிபடலாகிய உயிர்க்கேழுபகாரமும், அன்னம் பானம் அம்பரம் மந்திரம் தாசபாலனம் காயாமயத்திரி தயமோசனம் சவச்சேமம் என்று சொல்லும்படியான உணவு பானம் உடை இடம் அடிமைக்காத்தல் சிறைநோய் மூன்றுந் தீர்த்தல் பிணமடக்கலாகிய உயற்கேழுபகாரமும் ஓவாது நடத்துவர். ஒன்றாகிய வீடுபேறும், இரண்டாகிய பொருளும், மூன்றாகிய தொழிலும், நான்காகிய வேதமும் ஐந்தாகிய யாகமு மாறாகிய பருவமும் ஏழாகிய மேகமும் எட்டாகிய யோகமும் ஒன்பதாகிய கிரகமும் பத்தாகிய நற்குணமும் பலித்துப் பிரபலிக்கும். எல்லாக் குடிபடைகளும் புகழ் கல்வி வலி வெற்றி நன்மக்கள் பொன் நெல் நல்லூழ் நுகர்ச்சி அறிவு அழகு பெருமை இளமை துணிவு நோயின்மை வாழ்நாள் என்னும் பதினாறு பேறும் பெற்றுச் சுகமடைவார்கள். இராசனில்லாத நாடு சந்திர சூரியர் நுழையாக்காடு. புத்திர செல்வமில்லாத வீடு. பிராமணன் போதிய பெருஞ்சடக்கூடு. என்று காங்கேயருரைத் தருளினாரப்போது தருமநந்தனர் தாங்கற்கரிய மகிழ்ச்சியோடும் அவரை மும்முறை வலம்புரிந்து பணிந்து ஆண்டவனே! எனக்கு வேண்டிய வரையிலுந் தெளிவாயிற்று. தாங்கள் ஒரே நெட்டாகயிருந்து எனக்குச் சொல்லும் விஷயத்தில் தேகவருத்தம் உண்டாகும். ஆகையால் இன்றைக்கு இந்தமட்டு நிறுத்தி, நாளைக்குச் சொல்லும்படிக்கு விரும்புகின்றேன். என்று முரசகேதனன் மொழிய, வீஷ்மரும் அவ்வாறே செலவு கொடுத்தனுப்பினர். உடனே சகல்மானபேரும் மகா சந்தோஷ சித்தராய் அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்தார்கள். சூரியனுங் களிகூர்ந்தவனாகி மேற்குத்திசையிலஸ்தமனமானான்.

விதியியலுரைத்த சருக்கம் முற்றிற்று.

---

மூன்றாவது,

# அரிசியலுரைத்த சருக்கம்.

கண்ணன் துதி.

அழுதும்வாண்முறுவ லரும்பியுங்களித்து மாடியும்பாடியு மகிழ்ந்துந்
தொழுதுமாதரித்தும் விழுந்துமேலெழுந்துந் துதித்திடத்தன்பதந் தந்தோன்
முழுதுமாயோங்கு முச்சுடராகி மூலமாய்ஞாலமாய் விண்ணு
மெழுதொணுமறைக்கு மொட்டொணுவடிவத் தெம்பிரா னும்பர்நா யகனே.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! மறுநாட்காலையிற் சூரியோதயமானவுடன் தருமநந்தனர் காலக்கடனை முடித்துக்கொண்டு, தம்பிமார்களும், கிருஷ்ணமூர்த்தியும், ரிஷீஸ்வரர்களும், முனீஸ்வரர்களும், பொருந்திவர வீஷ்மாச்சாரியரிருக்கும் இடத்திற்குப்போய் அவருக்கு நமஸ்காரஞ் செய்து, பெரியோர்களுக்கெல்லாம் வந்தனை தந்து பணிந்து நின்றனர். அப்படி நின்ற பேரனை நோக்கிய வீஷ்மாச்சாரியார் ஆசீர்வசனம்புகன்று, ஆசைப்பெருக்குடன் ஆசனத்திலிருக்க உத்தரவு செய்து, அப்பனே! இன்னமும் நீ கேட்கவேண்டிய தரும சந்தேகங்களைக் கேட்டிடுகவென்று சொல்ல. தர்மராஜன் வினவத் தொடங்கினர். ஓ ஐயா எங்கள் மூதாதையே! பூலோகத்திற்குத் தெய்வமென்கிற ராஜன் ராச்சியபாரம் பண்ணவேண்டிய முறைமை யெப்படி? அதையெனக்கு விரித்துரைக்க வேண்டுமென்றுகேட்க, வீஷ்மர் சொல்லத் தொடங்கினர். ஓ விவேகம்பெற்ற வேந்தனே! அரசனுக்கு ஒற்றைக்குடை, வெற்றிக்கொடி. ஜெயமுரசு, மங்கலவாத்தியம் - துஸ்தரமாகியபடை - விஸ்தாரமாகியகுடி - செழிப்பாகியபயிர் - கொழுப்பாகிய உயிர் - நீதிதெரிந்த மந்திரி - சேதியறிந்த தந்திரி - மேலுயர்ந்த மதில் - ஆழ்ந்தகன்ற அகழ்-பொறியமைத்த அரணம்-செடிநிறைந்த சயிலம் - வெற்றிமாலை - வேலாயுதம் - கரி - பரி - தேர் - காலாள் - இரத்தினாபரணம் - நவரத்தினம் - குண்டலம்-ஆரம்-கேயூரம் - கிரீடம் - சந்தனம் - பாளிதம்-குங்குமம் - கதம்பம் - கர்ப்பூரம் - கஸ்தூரி-புனுகு - சவ்வாது - அஸ்திரம் - சஸ்திரம்-அநேகம்பூமி-அநேக பொக்கிஷம்-கொடிபடர்ந்தமேடு-குடிகளடர்ந்த நாடு-கொலுக்கூடமமைந்தபதி-குறைவில்வெள்ள நிறைந்தநதி-வேதமந்திரவேள்வி - வேற்றுமையற்றகேள்வி-நான்குவேதம்-ஆறுசாஸ்திரம் - பதினெண்புராணம்-முப்பத்திரண்டு உபநிடதம்-அறுபத்துநான்கு கலைக்ஞானம்-தர்மசாஸ்திரம் நீதிசாஸ்திரம்-புருஷலட்சணம்-ஸ்திரீ லட்சணம்-இதுகளெல்லாம், உடைத்தாயிருக்கவேண்டும். இதல்லாமலும்,சாதுசங்கப்பழக்கமும், சாதுரியவான்களிணக்கமும், உரியாருடைய உறவும், பெரியாருடைய துணையுங் கொள்ளவேண்டும். மேலும் நல்லமனத்தினளாயு மிர்துவசன முடையவளாயுமுள்ள மாசற்றமனைவியும், புகழாபரணம் பூணும் பிள்ளையும், மழைமாறிலுமாறுத சத்தியவாக்கும், தனக்கு மேன்மையுண்டாகக் கோரப்பட்டபந்து ஜனங்களும். அன்புபாராட்டிய அண்ணன்தம்பிகளும்,பிராணனைவிரும்பாத மானமுள்ள வீரனும் உடைத்தாதல் வேண்டும். தான் யெப்போதும் ஆசாரந் தப்பாதவனுய், சோர்வு மடிமை அதயிரியம், இவையில்லாதவனு யிருத்தல் வேண்டும். மேலும், தான் சத்துருவின் பேரிற் சண்டைக்குப் போங்காலமும், போகப்படாதகாலமும்,தன் பலமும், எதிரிபலமும், அப்போதைக்கப்போதே சாரணர்களால் தெரிந்துகொள்ள வேண்டும். செங்கோல் செலுத்துத் திறமையும், முறைமையும், கண்ணுக்கணிகலமாகிய கண்ணோட்டமும், எண்ணித்துணியுங்கருமமு மிருக்கவேண்டும். வரும் விருந்

தினர்க்கு வரிசைதந்து உபசரித்தலும், ஆப த்துவந்தகாலத்தில் தயிரியம் விடாதிருந்த லும், மநுவிக்ஞானமார்க்கமும், திரவியஞ் சேர்ப்பிக்குந் திறமும், ஆறிலொருகடமை வாங்கும் அறமும், குடியானவர்பெற்ற ஐந் து பங்கில் ஒருபங்கு போஜனத்திற்கும் ஒரு பங்கு விரைமுதலுக்கும்போக, மற்றவையை தர்மத்தின் வழியே செலவழிக்கப்பார்த்துத் திட்டமாய் நடத்திவரவேண்டிய திறமும் உடைத்தாதல் வேண்டும்.

ஓ தருமநந்தனு! இதல்லாமலும், அர சர்க்குரிய சாமம், பேதம், தானம், தண்டம், என்னும் உபாயம் நான்கில் தண்டந்தவிர மற்ற மூன்றினுலும்பார்த்து முடியாமற்போ மாகில், நான்காவது தண்டம் நாட்டிவிட வேண்டும். அவசரப்பட்டு ஆத்திரமாய் கோபமூர்த்தண்ணியங் கொள்ளப்படாது. அதனுற் பழியும் பாவமும், பட்டத்திற்கு இடையூறும் பாராமல்வரும். இந்தநான்கு உபாயத்தை ஒரு சத்துருவினிடத்தில் மாத் திரமல்ல, சிநேகனிடத்திலுஞ் செலுத்திப் பார்க்கவேண்டியது. பின்னும், குத்துக்கால், கொடுங்கை, அச்சு, மச்சு, வண்டில், இரிசு, இவைகளோடு சிகரகலகம், குடை, கொடி, ஆலவட்டம், இதுகளமைந்ததேரும்; இரத் தினங்கள் பதித்து, தங்கக்கட்டு, வெள்ளித் தட்டு, செம்புக்கட்டு, இரும்புக்கட்டு முதலிய பூண்களிட்டு, குச்சுகள்மாட்டி, கத்திகள்கட் டி, கும்பமத்தகம்பெற்று, மும்மதம்பொழிந் து இறுமாந்து, ஏழுறுப்புக்களுமுயர்ந்திரு க்கப்பட்ட அரசகுஞ்சரமும், மல்லகதி, மயூ ரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி என்னுமைந்துகதிளும் பின்னிட்டுப்போக, முன்னிட்டோடுங் குதிரைகளும், சண்டை யென்று கேட்டவுடனேசந்தோஷங்கொண் டு சம்பிரமங்கொண்டாடுங் காலபலங்களு மிருக்கவேண்டும். இந்தக் காலபலங்களில் விற்காரரென்றும்-வேற்காரரென்றும்- வாட் காரரென்றும்-மூன்றுபிரிவுண்டு முன்சொன் ன மூவகைச் சேனையுஞ்சேர்த்து, ஆறுவிதப் படையுண்டு. அவையாவன, பந்துக்களின் மிகுந்தவர்படை, இப்போது எதிர்க்கப்போ கிற சத்துருவின்பேரில் முற்பேரதுசண்டை க்குப்போய் செயிக்கமாட்டாமல் இளைத்து வந்து விட்டபடை, தீவுதீவாந்திரங்களிற் பெருக்கமாய் வைத்திருக்கிறபடை, பகைநே ரிட்டகாலத்திற் பொருட்செலவுசெய்து நூ தனமாய் வைக்கிற தற்காலப்படை, தன்னி டத்திலிருக்குஞ் சொந்தப்படை, என்னு மிவைகளாம். இவைகளெல்லாம் அரசன் தன் பிராணனைப்போற்காப்பாற்றவேண்டும். பழமையாய்ப் பூர்வாபூர்வீகமா யிருந்தது அநுபோகந் தெரிந்தவர்கள் அல்ப உத்தி யோகத்திலிருந்தாலும், உயர்ந்தவேலையி லி ருந்தாலும், வேலையில்லாதிருந்தாலும், அ வர்களைத் தள்ளிவிடலாகாது. புதிதாய் ஒரு த்தன்வந்து, எத்தனைவிததன்மைகளைக்காட் டி, அநுபோகந் தெரிந்தவனைப்போற்பேசி, இரவும்பகலும் பாடுபட்டாலும், அவனைச் சேர்த்து உத்தியோகத்தில் வைத்துக்கொள் ளப்படாது. இதற்கொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேன் கேள்.

---

படைமாட்சியைக் குறித்துக்கூறிய
அம்பரீஷன் கதை.

ஓ உயர்ந்தவர்க் குயர்ந்த உத்தமனே! பூர்வத்திற் சூரியவம்சத்திற் பிறந்த அம்பரீ ஷ மகாராஜன் உலகமெல்லாங்கொண்டாட த்தக்கதாய் நெடுநாள் இராச்சியத்தை ஆ ண்டு- அப்பால் மாண்டு - உச்சைசிரவமென் னும் வெள்ளைக்குதிரைக்கு அதிபதியாகிய தேவேந்திரனிடத்திற்குப்போய் அவனது அருகாசனத்திற் சொற்கலோக வாசியாயிரு ந்தான். சிலநாள் தரித்து இந்த அம்பரீஷ னுடைய சேனுதிபதியாகிய சுவேதனென்ப வன் ஒரு திவ்விய தேவவிமானத்தி லேறிக் கொண்டு, பாதாதிகேசபரியந்தமும் மாணி க்கவச்சிர வைடூரியத்தினுற் பிரகாசிக்கின்ற முத்தாரம் இரத்தினுரம் கொத்தாரம்- கிரீடம் வாகுவலயம் இவைமுதலான ஆபரணங்க ளும், வாசனைமாலை- கதம்பகஸ்தூரி- வீரகண் டை- தனுப்பாணம் - இத்தியாதி சம்பிரமுந் தரித்து, பிரகாசமான தேவஸ்திரீகளுந் தே வதூதர்களுஞ்சேர்ந்துவரும்வைபவத்துட னே வந்தான். அந்தச் சேனுபதியை அம் பரீஷன் பார்த்து ஆச்சரியப்பட்டு, அடங்கா மகிழ்ச்சி மேலிட்டு, தேவேந்திரனை நோக்கி, ஐயா ஆயிரங்கண்ணு! பூலோகத்தில் வாச பேயம்- பவுண்டரீகம்- இராஜசூயம் - அஸ்வ மேதம்- புத்திரகாமேஷ்டி- நரமேதம்- இவ்வா று நூறு எக்கியம்பண்ணி, தேவதாபூசை களும் விரதங்களுமநுஷ்டித்து, மநுவிக்கி யான மார்க்கப்படிக்கு தீதிதப்பாமலிருந்து, அநேகதர்மங்களுஞ்இழைத்து, மனத்திலழு

க்கில்லாமல், அசூசியில்லாமல்சீவகாருண்ய தயாரசம்பெருகி இராச்சியபரிபாலனம்பண்ணிய இராஜாக்களுக்கு இப்பேர்ப்பட்ட பதவி கிடைப்பது அருமையாயிருக்க; உம்முடைய போகபூமியானது என்னுடையசேனாதிபதிக்கு எளிதிற்கிடைத்தவாறென்னமோ? இவன் தேடிக்கொண்ட நல்வினைப்பயன் எத்தன்மையுடையதோ? அதை அடியேனுக்கு விபரமாகச்சொல்லவேண்டுமென்ன, அப்படியே தேவேந்திரன் அம்பரீஷனுக்குச் சொல்லுகிறான்.

ஓ சூரியகுல வீரியனே! கேளும். நீர் பூமியிற் சத்துருவைச் செயித்து மித்துருவைப்போஷித்து வெகுகீர்த்தியாய் மிகு நேர்த்தியாய், திவ்யதுரைத்தனம் பண்ணிக் கொண்டுவரும் நாளையில், உம்மைவென்று வெற்றியிற்புறங்கண்டு கோட்டை கொத்தளமெல்லாங் கைக்கொண்டு தாங்கள் ஆளவேண்டுமென்னும் ஆசைபூண்டு படையெடுத்துவந்த சதசிருங்கனுடைய பிள்ளைகள்மூன்றுபேர் இராக்ஷசரூபமுடையவர்கள் அவர்களைத் தேவர்களுடன் யானுங்கூடியெதிர்க்கினுஞ் செயிக்கமாட்டேன். அவர்கள் மிகுந்த புரமும் - வரமும் - உரமும் - கரமும்-சிரமும் கோபக்கண்ணு முடையவர்கள். அப்பேர்ப்பட்டவர்கள் கடல் வளைந்ததுபோல் நால்வகைச்சேனையுடன்வந்து புகுந்துவளைந்து, உமதூரைச்சுற்றிக்கொண்டுமெத்தவும் யுத்தம்பண்ணி, , உமது காவலாளிகளையும் பட்டினத்துச் சனங்களையுங் கண்கலங்கச்செய்தார்கள். அந்த யுத்தச்சேதியை அடிக்கடி வேவுகாரர்வந்து சொல்லவும். அதைக்கேட்ட நீர் மெத்தவும்யோசித்து, கோட்டைக்குக் காவலிருக்கத் தகுந்தபேர்களைவைத்து, மனை மக்களுடன் அக்கோட்டைக்குள்ளிருந்து, நான்குவர்சலையுமூடி பந்தோமுவஸ்து பண்ணிக்கொண்டு, வெளியிலேகொடியசண்டையிட வந்திருக்கும் அரக்கரைத் துரத்த வேண்டுமே இதற்கு ஆரைத்தேடியனுப்பலாம்? எவரை நேமிக்கலாம்? என்று யோசித்து, பாரம்பரியமாய் இருக்கப்பட்ட பழையசேனாபதியை அனுப்புவோமென்று நிச்சயித்து, பெரியபடைகளைச் சேர்த்து, இந்தச்சேனாபதியை வரவழைத்து, காரியங்களைத் தெரிவித்து, இவ்வரசுக்கு நீயே அதிபதியென்று ஆடையாபரணங் கொடுத்து வீரப்பட்டங்கட்டி யனுப்பிவைத்தீர். அப்போதிந்தச் சேனாபதி மிகுந்த தண்டுடனே சென்று, கோடிபேர்க்கொரு தீரனென்று யாவருங்கொண்டாடும்படி எதிரிகளுடனெதிர்த்து சப்தமேகங்கள் யானைகளாகவும், மலைகளெல்லாந் தேராகவும், அலைகளெல்லாங் குதிரையாகவும், நுட்பமான கருமணலெல்லாம் பதாதியாகவும், வந்ததோவென்று சந்தேகிக்கும்படியாய்க் கவிந்த பகையாளிகளின் சேனைகளைப் பாழாக்கி, தன் படைகளிலும் எதிரிபடைகள் அதிகரித் திருக்கின்றமையாலும், இராக்ஷசாள் வெகுபேர் மாயாவிசித்திர யுத்தம் பண்ணுவதினாலும் இந்தச்சேனாபதி ஆச்சரியப்பட்டு, அவாள் பலத்திற்குத்தாநீடு கொடுக்க மாட்டாமல் தனக்குத்தானே பேசிக்கொள்ளுகிறான். ஐயோ! நமது அம்பரீஷ மகாராஜனிடத்தில் நம்மிலும் அதிகமான வீரப்பிரதாபர்கள் அநேகம் பேரிருக்க, அவர்களைத்தேடாமற் சேனாதிபதித்தலைமையில் நமதுமூதாதை நாள்முதல் இவர் மூதாதை நாள் தொடங்கி உத்தியோகஞ்செய்துவந்த சாம்பிரதாயமென்று நம்மை நாடி, சத்துருவை செயித்துவாவென்று அனுப்பியிருக்கின்றார். இவ்விடத்தில் வந்து பார்த்தால் ஒருகடல்மேற் புரண்டஏழுகடல் போன்ற சேனைகளுடன்ராக்ஷசமயமாயிருக்கின்றார்கள் இவர்களையெப்படிசெயிக்கிறது? நல்லது நமது சேனைகளுடன் ஊருக்குஓடிப்போவோமென்று நினைத்தால் அவ்விடத்திற்போய் அம்பரீஷ மகாராசனுக்குஎன்னவென்று உத்தரவு சொல்லுவோம். செயிக்காமல் வந்துவிட்டேனென்றால், ராசன்மெத்தவும் விசனப்படுவார். அப்போதவருடைய துன்பத்தைப் பார்த்து, நாம் எப்படி சகிப்போம், வெகுநாளாய்த்தின்றஅவாளுடைய உப்புந்தண்ணீரும் நமதுகர்ப்பத்திலிருக்கின்றது. இப்பேர்ப்பட்ட காலத்தில் இளைத்துக்காட்டலாகாது. இது தர்மமல்ல. செயிக்காமல் வந்துவிட்டானென்று அவமானப்படுவதைப்பார்க்கிலும், யுத்தமுகத்திற் செத்தானென்று மானமும் வீரமும் பெறுவது நன்மை, வெகுகாலங்களுக்குக் கீர்த்தியுண்டாம். ஆகையால், எதிரிபடைகளிற் பிரவேசித்து நம்மாற்கூடியமட்டும் பார்த்துவிடுவோம். என்று துணிந்து சண்டைபோட்டும் வெற்றிபெறாமல், நமதுதலையானது சங்கரமூர்த்திக்குப் பலியாகக் கடவதென்று வைராக்கியங்கொண்டு அங்கிருந்த சிவால

த்திற் கெதிர்சென்று நின்று, ஓ திங்களையும் கங்கையையும் பொங்கரவையும் கொன்றை ப்பூமாலையையுஞ் சடாமகுடத்தில் தரித்தருளியதாணுவே! ஓ சாம்பவமூர்த்தி! ஓ ஏழை பங்காளா! இப்போது இவ்விடத்தில் நேரிட்டிருக்கிற சத்துருவைச் செயிக்கத்தக்கதாக எனக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டும். ஓ ஐமுகக்கடவுளாகிய ஐயா என்று அரையிற் கட்டியிருக்கின்ற உடைவாளையுருவி, தன் தலையைப் பலியாகவறுக்கத் துணிந்து கொய்தான்.

அக்காலையில் ஆத்மகோடிகளாற்றுதிக் கப்பட்ட பசுபதியாருக்குக் கிருபைவந்து, பிரத்தியக்ஷமா யெழுந்தருளி அவனது கையைப் பிடித்துக்கொண்டு அறுபட்டதலையை ப்பொருத்தி அவனுடைய புத்தியையுந் திருத்தி ஒரு உழுந்து உருளுகிற நேரத்திற் குள்ளாக வந்த சத்துருவைச் செயிப்பா யென்று வரங்கொடுத்து, உரங்கொடுத்து ஸ்திரமாகிய சிவலிங்கத்திற் சிவபெருமான் மறைத்துவிட்டார். இந்தச்சேனாதிபதிசிவனுடையவரப்பிரசாதத்தினால் நானாவிதமாய்ச் சிவனைத் தோத்திரஞ்செய்து சன்னிதானத்திற் பணிந்து சந்தோஷத்துடன் தன்சேனையிற் கலந்து - பேரி - பாங்கா - முரசு - டங்கா இவை முதலிய வாத்திய முழங்க வெற்றி, கொடிபற்றி, ராக்கதப்படையிற் புகுந்துதேர்களுடன் தேர்களும் யானைகளுடன் யானைகளும் குதிரைகளுடன் குதிரைகளும் பதாதிகளுடன் பதாதிகளுங், கைகலக்கத் தொடந்தயுத்தஞ்செய்து, அந்த மூன்று ராக்ஷதர்களையும் வளைத்துக்கொண்டு சண்டைபண்ணினான். அப்போது ஒரு க்ஷணத்தில் எதிரிகளின் சேனையெல்லாம் இறந்து யிறைந்து முறிந்துபோயின. போனதுபோக நிலைபெற்று நின்ற சிலபேருடனே வந்த ராக்கதர் மூவருஞ் சேனாதிபதியால் அடிபட்டு, தேர்களாலிடிபட்டு, குதிரைகளா லுதைபட்டு, யானைகளா லுரைபட்டு, யுத்த பூமியில் நின்றும் விடுபட்டு மூலைக்கு மூலை ஓடிப்போனார்கள். இப்படி ஒருவர் போனவழி யொருவருக்குத் தெரியாமல் ஒளித்துப்போனவரைப் பார்த்த உமது சேனாதிபதி மிகுந்த செயத்தை யடைந்து, செயபேரி முழங்கிக்கொண்டு திரும்பினான்.

அப்படி திரும்பிவரும்போது நீர் இந்தச் சேதிகேட்டு, உமக்குரிய பேர்களோடும் வரிசை வண்மைகளேந்தி எதிர்கொண்டு அழைத்துவந்து பட்டினஞ்சேர்ந்து, தகுந்த ஆசனத்தில் மிகுந்த மரியாதையுடனிருத்தி வெகுமதிசெய்து வெற்றிபெற்ற விபரத்தை வினாவினீர். அக்கால் தானடைந்த செயத்தைப் பிரதாபித்துச் சொல்வது தகுதியன்றென்று நினைத்துச் சொல்லாமலிருக்க நீர் நமது சேனாபதி பின்பலம் வேண்டாமல் வென்றானென்று சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தீர். சபையிலுள்ள பேர்களும் இவனது சமர்த்தைக்குறித்துக்கொண்டாடினார்கள். எசமானாகிய உமது நிமித்தத்தில் மார்புகாட்டி யுத்தஞ்செய்து வெற்றிபெற்று இத்தனைபாடு பட்டபடியினாலே இவனிந்த ப் பொன்னுலகந்திலுண்டாகிய பேரின்பவருங் கொண்டாடும் படியாய் வீர சொர்க்கம் பெற வேண்டி வந்தான். எசமானுக்குத் துரோகம் பண்ணாமலும், படைமுகத்திற் பதுங்கிப்போகாமலும், முனையினின்று வெற்றி கொண்ட வீரனுக்கு இந்தப்பதவி கிடைத்தது. ஆகையால் பூர்வீகசாம்பிரதாயமுள்ள பொருளான பேர்களைக் கைவிட்டப் படாது. அவர்கள் தங்கள் பிராணனைத் திரணமாக நினைத்து தங்கள் ராசனுக்கு செயத்தையுஞ், சுகத்தையுந் தேடுவார்கள். ஓ அம்பரீஷ மகாராஜனே உம்முடைய சேனாதிபதியாகிய இச்சுவேதனன் மிகு சிலாக்கிய புருஷனென்று தேவேந்திரன் சொல்ல, அம்பரீஷன் ஆனந்தமடைந்து ஐயா நீருள்ளபடி யுரைத்தீர். சந்தேகமில்லை. உலகாளும் அரசருக்குப் பாரம்பரியமா யிருக்கப் பட்ட பேரை வழுவாமற் காப்பது முறைமை. அப்படிக்கிருக்க, பழமையான பேர்களைக்காப்பாற்றாத பார்த்திபனுக்கு சாவ்ஸவித வாழ்வுஞ் சந்தோஷப் பெருக்கமுங்கிட்டா, தாழ்வும், துன்பமும், அபசெயமும், அவனைத் தலையெடுக்க வொட்டா. என்று சொல்லிச் சந்தோஷமடைந்து, அச்சுவேதனுந் தானுமாகச் சொர்க்கலோக வாழ்விற் சோபித்துக் களித்திருந்தார்கள். இப்படி பழமையானவர்களாற் பகை களையப்பட்டு பாக்கிய நலம்பெற்ற சிலாக்கியனாகிய அம்பரீஷன் அவனுடைய சேனாதிபதி சுவேதனோடு சொர்க்கலோகத்திருந்த கதையைச் சொன்னேன். இனி அரசனானவன் அறிவில்லாத சின்ன மனிதனைச் சேராதிருக்கும் விதத்தைச் சொல்லுகின்றேன் கேள்.

சிற்றினம் சேராமையைக் குறித்துக் கூறிய
அனுபமரிஷீ கதை.

அப்பா சற்குணத்திற் சிறந்த தருமநந்தனா இராசன் சின்னமனிதரைச் சேர்க்கலாகாது. அவர்களாற் பெரியகாரியம் ஆகமாட்டாது தீமை விளையுமல்லாது நன்மை விளையாது. அவர்களுக்கு என்ன உபசாரஞ்செய்தபோதிலும், எவ்வளவு சகாயம் பண்ணியபோதிலும், இவர்களாலே செவ்வை பட்டோமென்று ஒருக்காலுஞ் சொல்லார்கள். பலநாளுதவி செய்து ஒரு நாளுதவர விட்டாற் பலநாளுஞ் செய்த உதவி பாழாகிப் போய் கமுகமரம் நித்தியந் தண்ணீர் விடாமற் போனாற் எப்படி வாடுமோ ? அப்படி போல் முகம் வாடி, வம்பு வார்த்தைகளாடி அபகாரம் பண்ணுவார்கள். நமக்குப் பகையாமிருப்பவருடன் உறவாடி நமது உண்மைகளை வெளியிடுவார்கள். அதற்குத் திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லுகிறேன்கேள். ஒருவனத்திலே பர்னசாலைக்கட்டிக்கொண்டு அனுபமரென்கிற ரிஷீஸ்வரர் தபசு பண்ணி, குற்றமற்றவராய் இடையூறுகளெல்லாவற்றையுங் களைந்து விரதத்திற் சிறந்து வெகு நாளிருக்கின்றார். அந்நாளையில் அந்த காட்டிவிருக்கின்ற மிருகங்களெல்லாம் அவரண்டையில் வந்து நமஸ்காரம பண்ணி, பேதமில்லாமற் பயமற்றிருந்து, அவருக்கு வேண்டிய உபசாரங்களையுந் தங்களாலியன்றமாத்திரஞ் செய்துகொண்டுவந்தன. அந்த அனுபமரென்கிற ரிஷீஸ்வரர் அம்மிருகங்களிடத்தில் நிரம்பிய தயவாய், அவைகளுக்கு ஒரு துன்பமும் வரவொட்டாமற்பாதுகாத்துக்கொண்டு, தன்னுயிர்போற் பக்ஷம் வைத்து வருவார். இப்படிக்கிருக்க, எந்தெந்தக்காட்டிலுள்ளமிருகங்களெல்லாம் இவருடையப் பர்ண்சாலையைச் சூழ்ந்துகொண்டு, தங்கள் தங்களுக் கிச்சையான இரையைப் புசித்து, யதேச்சையாய் இந்த ரிஷிஸ்வரனை வணங்கிக்கொண்டு பிரியாமவிருக்கின்றதுகள். அப்போது ஒரு நாயானது பலநாட்டிலிருந்துசிறுமையடைந்து காட்டிற் புகுந்து, கிருபைக்கடலாகியும், தயாரசமாகியும், சீவகாருண்யமாகியும் இராநின்ற இந்த அனுபமரென்கிற ரிஷியினிடத்திற்கு வந்து வாலைக்குழைத்து, வாய்விட்டிரைந்து, அவரை வணங்கிக் கொண்டது. அந்த மகானுபாவர் இதன் விஷயத்திலும் அன்புடையவரா யிருந்தார், அவரெழுந்து போனால் இந்த நாயுங் கூடவே போகிறது. இவர் உட்கார்ந்தால் அவருக்கெதிரில்இந்த நாயும் இருக்கின்றது. அவர் படுத்தா லிதுவும் படுக்கிறது. எழுந்தபோது சீக்கிரம் விழுந்து தெண்டனிடுகிறது. அவருடைய பாதங்களை மோர்ந்து நாவினல் நக்குகிறது. நேருக்கு நேர் நின்று உடம்பை குலுக்கிச் சந்தோஷக் குரைப்பு குரைக்கிறது. இப்படிக்கு யிரவும் பகலும் நீக்கமில்லாமலும், தூக்கமில்லாமலும், அதிகப் பிரீதியாய் காத்துக்கொண்டிருந்த நாயின் பேரில் அந்த ரிஷிக்கு ஆச்சரியம் பிறந்து, அற்புதமடைந்து, அந்தச் சுனகனிடத்தில் மிகுந்த தயவுடையவரா யிருந்தார்.

இப்படி யிருக்கிறபோது தவசிரேஷ்டராகிய அந்த முனிவரை யடுத்திருந்த ஒரு கலைமான் தங்களினத்துடனும் பிள்ளைகுட்டிகளுடனும் வெருண்டு, தன்கொம்பைப் பூமியிற்றாழ்த்தி மருண்டு, குமாளமிட்டு, இந்த நாயைக் குத்திக் கொல்லவேண்டு மென்று எழுந்து வருவதாயது. அக்காலையில் அந்த மகாரிஷி கண்டு, பச்சாத்தாப முடையவராய்ப் பயந்து, தன்னைச் சரணமடைந்த நாயைக் காக்க வேண்டுமென்று கருதி, தனது கமண்டலத்திலிருந்த சலத்தைத் தெளித்து கையிற் பிடித்திருந்த தண்டினல் தட்டினர். அப்படி தட்டவே அவருடைய தபோபலத்தினல் அந்த நாயானது வாயுதேவனுக்கு வாகனமாகிய கலையைப்போல் மேன்மேலாக உயர்ந்து, தலை நிமிர்ந்து, கொம்புகள் பணைத்து, நெறித்து முறித்துக் குறித்துப் பாய்ந்து குதிப்பதாயது. ஆகவே அதை எதிர்த்து வந்த மானின்பேரில் அதிர்த்துச் சண்டை போட்டு விட்டு, மெய்மான் ஓடிப் யோகவும் நாயாகிய மான் செயிக்கவுஞ் செய்து, அந்த நாயை மானுருவத்துடன் சில நாள் வைத்துக் கொண்டிருந்தார். அப்படியாயிருந்த அந்த நாயானது சிலநாள் வரைக்கும் மகாரிஷியின் கால் மாட்டிலே படுத்துக்கொண் டிருந்தது. இவ்வாறு தன்னை விட்டு நீங்காதிருக்கிற இந்த நாய்மானை ஒருவராலுஞ் செயிக்கப்படாத பதினறடி வேங்கைபார்த்து, தோகை யடித்து, மயிர்சிலிர்த்து, தனிக்குரலிட்டுக் கூவி, கண்சிவந்து, கடைவாய் நக்கி, மீசை துடித்து மேல்விழ

ப்பாய்ந்தது. அந்த நாயாகிய மர்ன் புலிக்
குப்பயந்து பெரியவரை நயந்து அவரு
டைய பின்புறத்தி லொதுங்கியது, அதை
யந்தப் பெரியவர் பார்த்து முன்போற் கம
ண்டலத்துச் சலத்தைத் தெளித்துத்தண்டி
னாற்றட்டி முப்பத்திரண்டடி வேங்கையாக்
கிமுடிக்கினார், இந்த மாயை வேங்கையைக்
கண்டு ஞாயமாகிய வேங்கை ஓடி யொதுங்
கிப்போய் விட்டது இந்த நாயானதுவேங்
கை ரூபமாகவே யிருந்து அம்மேலோனுக்
குபசாரம் பண்ணிக்கொண்டிருக்கு நாளில்
ஒரு மதயானையானது தனதொற்றைக் கரந்
தூக்கி இருகொம்பாட்டி மும்மதம் பொழி
ந்து நால்வாயசைத்து, மிருகங்களனைத்து
ம் அஞ்சி நடுங்கும்படியாகஆருக்கோபத்து
டன் அடர்ந்து முப்பத்திரண்டடி வேங்
கையை மோதியது. அப்போது காடெல்
லாங் கடக்டத்து அதிர்ந்தன. அக்கால்
அம்முனிவரானவர் கண்கலங்கி காலடியில்
வாலடித்துச்சுற்றிய நாய்புலியை வானம
ளாவிய மதயானைக்கி விட்டார். இந்த
யானையை வந்தயானைகண்டு மனம் வெந்து
நொந்து ஓடிப்போய் விட்டது. பிற்பாடு
ஒரு மிருகராஜனாகிய சிங்கம் வந்து எதிர்த்
தது. அப்போது இந்த நாயைப்பஞ்சான
னமாகச் செய்து பகையாட அனுப்பினார்.
இந்தச் சிங்கத்தைக் கண்ட அந்தச் சிங்கம்
அந்தஞ்சிந்தி, சிந்தைநைந்து; வந்தவழி
யோடி பிந்திப்போய் விட்டது. அப்பால்
எண்காலுள்ள சரபம் வந்தெதிர்த்து அட்
டகாசம் விளைத்தது. அப்போது இந்தத்
தபோமுனியானவர் தனது நாயாகிய சிங்
கத்தை நாகருமஞ்சுஞ் சரபமாக்கிப் போர்
விளக்கவிட்டார் இரண்டு சரபமும் புரண்டு
விழுந்து நாயாகிய சரபமேலிட்டுத் தாக்கும்
போது, வந்த சரபம் எந்த வழியோ யிளைத்
துப் போய்விட்டது. அப்பால் நாயானது
சரபரூபத்துடனிருந்து, தனக்கு ஒருவரு
நிகரில்லாமற் காடெல்லாந்திரிந்து,மிருகங்
கள் யாவுந்தனக்குப் பயப்படும்படியாய்ரிஷீ
ஷ்வரரிடத்திற் பொருந்தி, அவரருளாலே
தான்படும்பாடற்று மேன்பாடுற்றது.

அப்பா தருமநந்தனா! இப்படி பிரதிஷ்
டையுடனே யிருக்கப்பட்ட பொயச்சரப நா
யானது தன்னை யிவ்வளவுக்குப் பெருமைப
டுத்தி வைத்த மகாரிஷியை என்னமாய் நி
னைக்கவேண்டும்? தன்னிஷ்ட தெய்வமென்
று எண்ணவேண்டுமல்லவா? தானுஞ் சுகப்
பட்டு, தன்னைச்சுகப் படச்செய்த தவசிக்கு
ஆட்பட்டுப் பெருமை யடையலாமே, (குல
த்தளவேயாகுங்குணம்.) என்பதுபோல்இந்
தச் சின்னச்சாதிநாயானது ஒருஎண்ணமெ
ண்ணியது. அவ்வெண்ணத்தை நானென்
ன சொல்லுவேன்? அந்த நாயினிளைப்பு எ
ன்னவெனில், நாமோர் சாதியில் நாய் இவ
ருடைய தவமகிமையால் உயர்ந்த அந்தஸ்
தை யடைந்திருக்கின்றோம். ஒருவேளை நம
துசெய்கை வேறுபட்டு இந்த மகானுபாவ
ராகிய ரிஷிக்குக் கோபம் வந்துவிட்டால், ந
ம்மை முன்போல் நாயாகிப் போகுவார்.
அப்படிக்கு இவர் கோபத்திலகப்பட்டுஅனி
யாயமாய்ப் பழய நாயாவதைப்பார்க்கிலும்,
முன்சாக்கிரதைப்பட்டு இவரையடித்து உ
யிரை முடித்து, உதிரங்குடித்து, நரமுங் கர்
வம்பிடித்து இந்தக் காட்டிலேயே யிருப்
போம், என்று கருதி மகாரிஷியைக் கொல்
லத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தது.
அப்படியிருக்கிற நாய்ச்சரபத்தின் மூகவுல்
லாசத்தையும், கெலிப்பையும், இருமாப்பை
யும் திரிகாலக்கினியாகிய அவ்வனுபமரிஷி
யறிந்து இதனுடைய வெண்ணத்தைப் பரி
சோதிப்போமென்று சாக்கிரதையா யிருந்த
னர். அப்படியிருக்கும்போது ஒருநாள் இ
ந்த நாச்சரபமானது மகாரிஷியைக் கொல்
கிறதற்கு வாயைத்திறந்து நகத்தைவரித்து
எகிறிவருங்காலையில் அம்முனிவர் தண்டேன்
றிப்பார்த்து என் பழயநாயே! இப்படி கெ
ட்டாயே, என்றார். அப்படி யவரழைத்த வு
டனே எப்போதும்போல நாயாகிப்போயிற்
று மூன்றுகாலமுந் தெரிந்த மூதன்மை மு
னிவராகையால் தனக்குத் துன்பம் நேரிடுவ
தற்குமுன் தப்பித்துக் கொண்டார். இன்
னொருத்தரானால் எப்படி தப்பிப்போகலாம்?
ஆனதால் என்றென்றைக்கும் இராக்கள் சிற்
றினங்களைச் சேர்க்கலாகாது.

### பூபரிபாலனமும் அதன்மகிமையுங் கூறுதல்.

அப்பாபேரனே! உலகாளுமரசன் தன
து நாட்டில் நெற்பயிர்கள் கரும்பு போல
வளர்ந்து செழிப்படையும்படியான நீர்வள
மும், நிலவளமும், ஆற்றுக்கால் பாச்சலும்,
ஆகிய இவைகளிலும், ஏரி, குளம், கால்கே
ணி, கய்ம், தடாகம், தோப்பு, ஊர்சூழ்ந்த

சோலை, இவைகளின் விர்த்தியிலும், எப்போதுங் கியாபகம் வைத்திருக்க வேண்டியது. இது முக்கியகாரணம், இவ்வாறு நிலவளம் நீர்வளமுடைய, பூமியை இராஜன் நடு நிலைமையோடும் ஆண்டு வருவானாகில், அந்தப்பூமியில் தவமோங்கும் தானமோங்கும், மழைபொழியும், பூமாதேவியும் மனங்கனிந்து வஞ்சனையில்லாமல் பலபண்டங்களையும் விருத்தி பண்ணிக்கொடுப்பாள். இராஜன் சத்தியந்தப்பி நடப்பானாகில், எந்தவைசெழிப்பாகிய பூமியும் விழுப்பாகிப்போம் பலப்பிராப்தி கிடைக்கமாட்டாது. பூமிதேவியும் நடுங்கியொடுங்கிப்போவாள். இராஜனுக்குங் குடிகளுக்குந் தரித்திரமுண்டாம், அன்னியதேச ராஜபகைமேலிட்டு வரும். ஆகையால் இராஜன் நெறிமுறை தப்பாமல் தருமத்தை யனுசரித்து நடுநியாயஞ் செலுத்தி, தேவதாபக்திவைத்துச் செங்கோற் செய்வானாகில் அவனிராச்சியத்தில் ஒண்ணடசயமான தானியவிளைவுஉண்டாம். பூமிவளங்கொடுக்கும் பொழியுமழை யடுக்கும். குடிபடைகளுந் தழைக்கும். கோவில்கள் செழிக்கும். சத்தியமுந் தைரியமுங் களிக்கும். சத்துரு செயமுண்டாகும். ஒரு காலத்தில் மாரிவறண்டு க்ஷாமகால நேரிடுமாகில் குடிகளெல்லாங் குன்றுப்போம் அக்காலத்தில் அரசன் கிலேசப்படாமல் நமக்கென்ன குறைவென்றிராமல் பொருட்செலவென்று பின்னிடையாமல் குடியானவர்களுக்குத்திடஞ்சொல்லி, பொருள், விரை, மாடு,இவைகளெல்லாம் உதவிபண்ணி, எருதழை, முதலானவைகளிட்டு, ஏரி குளங்கள் தூறுவாரிப் பார்வையிட்டு, கீழ்நீர்கொண்டிருமைப்பித்து,பூமியைச்சேடைசெய்து உழுது, பயிரிடும்படிக்கு முயற்சி பண்ணி, அந்த வருஷத்தில் வந்த பலனைக் குடியானவர்களே அனுபவிக்கும்படி கொடுத்து மறு வருஷப்பலனிற் பாதியிறைவாங்கி, அப்பாலோங்கியபோது தன் கடமையைப் பூர்த்தியாய்ப் பெறல்வேண்டும், அரசருக்குப் பூமியே ஆதரவு. பூமியே பிராணன். பூமியே சாமி. பூமியே கதி. இதுவே அரசருக்கு வீதி. இதை உன்னுள்ளத்திற் பதி.

ஓ அதிபதியாகிய அரசனே! உயிர்க்குத் தரித்திரமில்லாமற் காப்பது பூமி. பசித்த பேர்க்கு அன்னமாவதும் பூமி. யாகாதி வேத முதலியவற்றிற்கு ஆதாரபூதம் பூமி. பிணி, ரோகம், பீடை, இவை முதலியவற்றை நீக்கிவைப்பதுபூமி. வேறொருவிபத்துமில்லாமற் சகல சம்பத்தையுங்கொடுக்கிறது பூமி. பஞ்சேந்திரிய விஷயராகிய பேர்களுக்குப் போகத்தை யுண்டாக்குவது பூமி, பஞ்சேந்திரிய நிக்கிரகம் பண்ணிய பேர்களுக்குப் பதவி பெறுவதற் காதரவாகிய தவசை வளர்ப்பது பூமி. மும்மூர்த்திகளும் வந்து தங்களுக்காக வேண்டிய காரியத்தை முடித்துக்கொண்டு போவதற்கு முக்கியமாயிருப்பது பூமி. இப்பேர்ப்பட்ட பூமியை யாளுகிற ராஜன் சகல கீர்த்தியும் பிரதிஷ்டையும் அடையப் பெறுவான். இன்னும் இந்தப் பூமியின் பெருமையைச் சொல்லுகிறேன் அருமையாய்க்கேள்.இப்பூமியானதுபொன் வெள்ளி, முதலான நவலோகங்களுக்கும் உற்பவ கர்ப்பமாயிருக்கின்றது. அன்றியும் கரும் பொன்மலை - வெண்பொன்மலை-பசும்பொன்மலை, இவை முதலிய வெகு மலைகள் இப்பூமியிலிருக்கின்றன. நவரத்தினங்களுக்கும் உற்பத்திஸ்தானமாயிருக்கின்றது. மேலுமிப்பூமி பற்பல கோடி மரங்கள் - கொடிகள் - செடிகள்-ஒஷ்திகள்-சஞ்சீவிகள் - முதலியவைகளோடு-காடுள்ள ஒரு திங்கள்-இரண்டு கதிர் - மூன்று தேவர் - நான்கு பூசை-ஐந்து பூதம் - ஆறு மதம்-ஏழு சமுத்திரம்-எட்டு மலை - ஒன்பது கிரகம்-பத்து அவதாரம்-பதினொரு ருத்திரர் - பன்னிரண்டு சூரியர் - இவைகளுடனே - மூன்றுகோடி அறுபத்தையாயிரந் தீர்த்தங்களையும் - அநேகம் பறவை மிருகங்களையுந் தன்னிடத்தி லுண்டாயிருப்பது, இராஜராஜர்களுக்குக் கோட்டை-கொத்தளம் - கொம்மை - அகழ்-இவை முதலியவற்றைத் தன்மேல் வைத்துக்கொண்டு, இராசாக்களைக் காப்பது, எவரெவரெப்படி நினைத்தாலும் அவரவருக்கு அந்தப்படி விளைப்பது. சகல பண்டங்களுந் தன்னிடத்திலுண்டாக்கித் தாய்போலருத்தி வைப்பது. எண்பதினாயிரம் யோசனை கனத்தையுடையது. இப்பேர்ப்பட்ட பூமியை ஆளுகிற அரசனுக்கு என்ன குறைச்சல்? தன்னை அமராபதி அளகாபுரிக் கொப்பாய் அரசாட்சி செய்யு மரசனுக்குத் தக்கபடி உதவி பண்ணிக்கொண்டிருக்கும் பூமியையும், உழுது பயிரிடுங் குடிகளையும், தன் பிராணன்போற் காப்பாற்றிக் கொள்ளுங் கடமை ராசனுடைய உடைமை. இவ்வாறு

காக்கின்ற அரசனுக்கு - கோட்டை - கொத்தளம் - கொடி - முடி - வாழ்வு - சம்பத்து எல்லாம் பலிக்கும். பூமியைப்பாழ்படுத்திப் பூமிபாலகரை வருத்தப்படுத்தினல் பொக்கிஷங் குறையும். இலக்குமி விலகுவள்.

---

அமைச்சர் திறம்பேசி, அதுபற்றிக் கூறிய கேமதரிசி மகாராஜன் கதை.

ஓ! அரத்தின் மைந்தனே! தருமதான சாமர்த்தியத்தில் மேற்பட்ட அரசனுகயிருந்தாலும், நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம், இந்த மூன்று காலமுமறிந்து, மொழியும் பொருள் தெரிந்து பரிந்து சொல்லத்தக்க மந்திரி யிருக்கவேண்டும். மந்திரியை விட்டு ராச்சியபாரம் பண்ணுவானேயாகில், மைதீட்டிய கண்களையுடைய ஓர் கன்னிகையாற் கலியாணம் பண்ணிக் கொள்ளுமுன்னே பெற்ற பிள்ளையானவன் குலவழி நிறையிலுங் கோத்திர முறையிலும் ஏற்றுக்கொள்ளும் யோக்கியமில்லாமல் எப்படி யிழிவுபடுவானே? அப்படி போலாவான். மந்திரியில்லாத மன்னன் தந்தியில்லாத வீணையாம். அவனது வருணமேன்மை யெண்ணிப் பார்க்கலாகாது. சகல கலை வல்லவனுய், நியாயா நியாயந் தெரிந்த நல்லவனுய், விவேகமுயர்ந்த கல்விமானுய், முன்பின் யோசிக்கத்தக்க சாந்தஸ்வதனுய், புத்தி யுக்தி, பெருமை, பொறுமை, இவைகளை யுடையவனுய், பெரியவர்களை நேசித்திருப்பவனுய், குலதோசங்குடிதோஷங்கூறுதவனுய், குணபூஷணனுயுமுள்ள மதிமந்திரி கிடைப்பானுகில், அந்த அரசன் ஆகாமியசஞ்சிதத்திலழுந்தாமல், பிராரத்துவகன்மத்தை உடனுடனே புசித்து, பூமண்டலமெல்லாம் ஒரு பொற்குடையிலாண்டு நல்லகதியைப் பெறுவான். ஆனதுபற்றி மந்திரியைத் தாய்போர்பரிந்து அரசுபுரிந்து வருவானுகில், அவ்வரசன் சேய்போல் மூச்சட்டையாய் வளர்ந்து வருவான். தாய்வேறு பிள்ளைவேறுயிருந்தாலும், இவருக்கு மத்திமிற்பட்சமுள்ள மனசே சாக்ஷியா யிருப்பதன்றே? மேலும், இராஜன் புருஷனைப்போலும் மந்திரி ஸ்திரீயைப் போலுமிருந்து, நல்ல பதிவிரதையுடன் கூடிவாழும் பாங்குபோல் தாழ்வில்லாப் பாக்கியமோங்கிச் சுகபோகத்தை யனுபவித்து, குடிபடைகளென்னும் புத்திரசம்பத்துடன் வியாதியாகிய சத்துருசெயம் பண்ணி நல்லகதிபெறுவார்கள். பதிவிரதையில்லாத துற்குணமுள்ள பெண்ணை கலியாணம் பண்ணினேர் இல்லறதருமமுங் கெட்டு, இன்ப சுகத்தையும் விட்டு, தரித்திரமேவிட்டு, நோய்க்குடன்பட்டு, விரகத்திலழுந்தி நரகத்தில் விழுவார்கள். இத்தன்மைபோல், புராணசாஸ்திரந் தெரியாமல், உலகநடை நொடிபாவனை யுணராமல், வஞ்சநெஞ்சமுடைய மத்தரை, பொருள்வாக்கொண்ட பித்தரை, புண்ணியத்திற்குக்கேடு நினைக்கும் பேயரை, பொருளறியாமற் பேசும்பெருவாயரை, மந்திரிகளாய் வைத்துக் கொள்ளக்கூடாது. அப்படி வைத்துக்கொண்டால் அடங்காப் பிடாரியைப் பெண்டு வைத்துக்கொண்ட அல்லலாய் முடியும். அப்போர்ப்பட்ட மந்திரியையுடைய அரசனுக்கு அபசெயமும், வறுமையும், மகோதவியாதியும், ஆருப்பிணியும், தேறுத்துணிவும், நேரிட்டு இப்பூமியிலிறந்திறந்து ராசனும் மந்திரியும் நரகத்திலழுந்துவார்கள். ஆதலால், இதற்குத் திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

ஓ தருமக்கடவுளின்தநயனே! சகலவளப்பமுந் தழைத்திருக்கப்பட்ட கோசல தேசத்தை யாண்டு வந்த கேமதரிசியென்னும் ராசன் நீதிசெலுத்தி ராச்சியபாரம் பண்ணி வருகிற நாளில், அவனிடத்தில் மிகுந்த பாபிகளாய், தெளிவில்லாதவர்களாய் ஒன்றைத் தக்கபடியாய்த் தெரியாதவர்களாயுள்ள துர்மந்திரிகள் சேர்ந்து, பொருமை, ஆசை, கோபம், லோபம், இவைகள் மேலிட்ட அதர்மங்களைச்செய்து, இராசனுக்குத் துற்புத்திக் கற்பித்து, உலகமெல்லா - நிந்திக்கும்படிக்குங் குடிபடைகள் அழுத கண்ணீருஞ் சிந்தையுமாய் அலையும்படிக்குஞ் செய்து, வழக்கழிவுபேசி, இலஞ்சம் பரிதானம் வாங்கி, ஊரையடித்து உலையிற் போட்டு, மரத்தாலி கட்டி-வாயாற் பகட்டி-வன்பும் வரன் முறையின்றி வழங்கி-இராசனுடைய பெருமை புகழ் முதலியவற்றைப் போக்கடித்து-அரசனை அபகீர்த்தி ஆளாக்கி - ஆழமாகிய பாழும் பாவக்குழிலே அழுத்தி விட்டார்கள். அதனுல் மழை பொழிதலற்று, மாதவங்குறைத்து - மகங்களடக்கி - பயிர்களுங் காய்ந்து-குடிபடைகளு மோய்ந்து - பதிவிரதாமார்க்கமுங் கெட்டு - பிராமண கிர்த்திய

ழும் விட்டு - பலபண்டங்களுங் குறைந்து-பாபம் மேன்மேலாகி நிறைந்து - பயம் - வியாதி-சோபம் - துர்மரணம் - இவை மேலிட்டு - நாலெட்டறமு நலிந்து - நாடு நகரமும் பட்ட பாட்டை நாம் சொல்லி முடியாது. இத்தனை யிடையூறும் விதரணை யில்லாத துன் மந்திரிகளால் விளைந்தது. அப்படியிருக்குங் காலத்தில் இந்தக் கேமதரிசியென்னும் ராசனுடைய தந்தையினிடத்தில் மந்திரியாயிருந்த காலவனென்பவர் தன்னுடைய ராசனிறந்த பிற்பாடு கூடயிருந்து ஈமக்கடன் முதலிய கருமங்களை நடாத்தி, இந்தக் கேமதரிசி யென்னும் பிள்ளைக்குப் பட்டங்கட்டி வைத்துவிட்டு, இனி யொரு வரிடத்திலும் நான் உத்தியோகம் பண்ணத் தக்க தல்லவென்று பிரபஞ்சவாசையை வெறுத்து, துறவறத்தை யடுத்து, மகாபெரியவராய்க் காமாக்கினியை யவித்து, தாபாக்கினியை வளர்த்து, காட்டிலே தவமிழைத்துக் கொண்டிருந்தார். அந்தப் பெரியவர் ஒரு நாள் கண்விழித்து, நமதுராஜாவின் பிள்ளையெப்படி யிருக்கின்றானோ? இராஜாங்கம் எவ்விதமாய் நடத்துகிறானோ? நாடு நகரஞ் செழிப்பாயிருக்கிறதோ? நால்வகைச் சேனைகளும், நானிலத்தவரும், நன்மை கொண்டாடுகிறார்களோ? இல்லையோ? அதைப் போயறிந்து வருவோமென்று சில தபசிகளுடன் புறப்பட்டு, கோசலநாடு குலாவிய அயோத்தியாபுரி பட்டணத்துக்கு வந்து, மந்திரிமார்களிடத்திலேயும், பிரதானிகளிடத்திலேயும், சேனாபதிகளிடத்திலேயும், பூர்வீகமா யிருக்கப்பட்ட பெரியவாளிடத்திலேயும், போய்ப் பழகிச் சஞ்சரித்து, சில அனுபவங்களினாலேயுங் கேள்விகளினாலேயும் விசாரித்தார்.

அப்படி விசாரிக்குமிடத்திற் சேர்ந்திருக்கு மந்திரிக ளெல்லாரும் பாவிகளாய், அன்னியாயக் காரர்களாய், பாரபட்சம்பேசும் பதிதர்களாய், கனவிலுந் தருமத்தையும் கருதாதவர்களாய், நீதி நிறையை யடுத்து இறையைக் கெடுத்துந் தாங்களு முறையை விடுத்துக் துறைதப்பி யிருக்கின்ற துர்க்குணத்தை யறிந்து, துயரமடைந்து, ஐயோ பாவிகள்! இராசனைக்கெடுத்து நாசப்படுத்தினீர்களா? ஆ! ஆ ஒழுக்கமுதலிய வருணச்சிரம தருமம் ஒடுங்கிப்போச்சுதே என்று விம்மியழுது அங்கலாய்த்து, இந்தப் பிள்ளையினாலே இவன் தந்தையாகிய பெரிய அரசனும் நரகம் புகுவானே நாம் மந்திரியாயிருந்து துரைத்தனம் பண்ணும்போது சேர்த்துவைத்த பெரிதாகிய தருமமெல்லாம் விருதாவாய்ப் போய்விட்டதே இதற்கெப்படி? என்ன செய்யலாம்? தருமத்துடன் கிரமமாக நடக்கும்படியாய்ச் செம்மைப் படுத்த வேண்டும், புண்ணியவானுடைய சொத்தைப் பூரணமாகப் புசித்த நன்மைக்காக இந்தப் பிள்ளையினளவில் நாம் பாடுபடவேண்டும், என்று பூர்த்தியாய் நினைத்து தமது தபோமகிமையால் அலங்காரமுள்ள ஒரு காக்கையை ஏற்படுத்தி, அதற்கு விலையுயர்ந்த ஆபரணங்களினால் அலங்கரித்து, பட்டு உறைபூட்டிய வட்டத்தி லேந்திக்கொண்டு பட்டினத்திலுண்டாகிய பழைய மனிதர்களுள்ளவிடத்திலெல்லாந் தான் பழைய மந்திரியென்று அவர்களறியாதபடி மரியாதையுடன் அந்தக் காக்கையைக் கொண்டு சென்று, ஐயா இதனைக் கண்டீர்களா? இதனுடைய மகிமையை அறிவீர்களா! நான் சொல்லுகிறேன் கேளுங்கள் வேதாகமசாஸ்திர புராணங்கற்ற விதரணையோர்களுக்குந் தெரியாத ரகசியங்களைச் சொல்லும். அவர்களின் மனதில் நினைத்த நினைப்பெல்லாந் தெரிந்து கூறும் மனவஞ்சனை, சூதுவாது பொய், கரவடம், இவை முதலிய மார்க்கமெல்லாங் கண்டு கொள்ளும். பாபபுண்ணியங்களைப் பகுத்துவிள்ளும். பாலும் அன்னமும் உட்கொள்ளும். என்று நாடு நகரங்களிற் காட்டிவரும்போது, ஒருவன் கூட்டிக் கொண்டுபோய் ராஜசமுகத்தில் விட்டான்.

அங்கே இராசனும் மந்திரிமார் முதலாகிய சகலரும் நிறைந்திருக்கின்றார்கள். இந்தப் பெரியவர் அந்தச் சபையைப் பார்த்து, ஓ இறைவனே! ஓ முறைபிறழாத மந்திரிகளே யிந்தக் காகத்துக்குத் திரிகாலமுந்தெரியும். ஆதலால் யிந்தக் காக்கையை என் மனோவாக்குக்குச்சரிப்பட்டிருந்தபெரிய ராசனுடைய பிள்ளையான யிளவரசனுக்குக் கொடுக்கிறேன். இதனால் ஒரு விபகாரங்களில் சாட்சி சாதக முதலியவைகளை விசாரித்துச் சஞ்சலப்படவேண்டுவதில்லை. ஒரு சங்கதியைச் சொல்லி என்ன சொல்லுகிறாய் காகமேயென்றால், பளபளவென்று உண்மை பலிக்கும். இன்னதிக்கிற் சத்துரு உண்டு இல்லையென்று சொல்லும். இது ஞாய ம

னியாயமென்று காட்டும். மந்திரிகளிடத்தில்
மாறுபாடிருந்தால் அவர்களின் பிராணனை
மீட்டும். வஞ்சக நினைத்தபேரைத் தூரத்
துக்கோட்டும். திரவியக் கொள்ளையடித்த
வரை எமனிடத்திற் கூட்டும். புண்ணிய
மறந்தவர்களைப் பெருமைகுறைய வாட்டும்.
பொருள்வாக்கொண்ட பேர்களை மருள்வாக்
கொண்டலையப்பண்ணும். இராஜத்துரோ
கம்-கர்த்தத்துரோகம், வெகுசனத்துரோகம்-
சிநேகத்துரோகம்-இவை செய்யும் பேர்களை
த் தெருவிலிழுத்துவிடும். எக்காலு முக்கார
முணருங் காகமென்று இதற்குப் பெயர்.
செவ்வைதப்பினபேரைக்காட்டிக் கொடுக்கும்
சீர்தப்பினபேரை ஆட்டிக்கெடுக்கும். இனி
யிதையறிந்து பிழையுங்கள். என்றுசொல்லி
அந்தக் காக்கையை ராஜகொலுக் கூடத்தில்
வைத்து, ராசபுத்திரனுக்கும் புத்திமதி சொ
ல்லி, அவனைத் தன்பிள்ளைபோல் அன்புபா
ராட்டி ஆசீர்வதித்தனர். அந்த ராசகுமா
ரனு மவரைத் தன் தகப்பனைக் கண்டது
போற் களித்து சரணம்புகுந்து, சகலவித
மரியாதையும் உபசாரமும் புரிந்து பரிந்து
அனுப்பினான், இந்தப்பெரியவர் அவ்விடம்
விட்டுப்பிரிந்து காட்டுக்குப் போய்விட்டார்.

இப்பால் அன்றிராத்திரி பாதகராகிய
மந்திரிகள், பதாதிதராகிய தந்திரிகள், எல்லா
ருஞ் சேர்ந்து, அந்த ரிஷியானவர் இந்தக்
காக்கைக்கு எல்லாந் தெரியுமென்று சொல்
லிப் போயிருக்கின்றார். ஒருவேளை நம்மு
டைய துர்நடத்தைகளை யெடுத்துச்சொல்லு
மாகில், இராசன் கோபித்து இவ்வாறாகவா
என்னைக் கெடுத்தீர்களென்று இரைந்து வி
ரைந்து வெட்டிபோடக் கட்டளையிடுவான்.
நமது குட்டுக்கெட்டுப்போம். ஆகையால்,
இந்தக் காக்கையைக் கொல்லுவது நல்ல
தென்று ஆலோசனை பண்ணிக்கொண்டு
மிகுந்த தந்திர உபாயமாய் ஒதுங்கிப் பதுங்
கிவந்து காகத்தைப்பிடித்து, கழுத்தையொ
டித்து, அதனுயிரை முடித்துப்போட்டு ஒரு
வருக்குந் தெரியாமல் ஓடிப்போய்விட்டார்
கள். பொழுதுவிடிந்தவுடனே கிருபைக்
கடலாகிய ரிஷீஸ்வரன் காலக்கடனை முடித்
துக்கொண்டு இராஜசபைக்குவந்து, கழுத்
துமுறிபட்டு இறந்துகிடக்கிற காகத்தைக்
கண்டு மனவருத்தமாகி, அந்தவேலை செய்த
வர்களைக் கியானதிர்ஷ்டியாலறிந்து, இனி
நாம் சும்மாயிருக்கலாகாது, பிரமாதம் விளை
யும். மோசம்வரும். அரசனுக்கு நாசம்
வரும். பட்டின மூழ்கிப் பாழாய்ப் போய்
விடும். இவ்வரசனுடைய சந்ததியாரும் நர
கத்தில் விழுவார்கள். அப்படிக்கெல்லாம்
வரவொட்டாமற் காப்பாற்றவேண்டும். என்
றுகருதி, இளவரசன் சிங்காரவனத்திற்குப்
போகும்போது தானுங்கூடத் தொடர்ந்து,
அடர்ந்த வனத்திற் சந்தடியில்லாத விடத்
திற் கொண்டு போயிருத்தி, ஆசீர்வதித்து
தமது கடாட்ச வீட்சண்ணியங்காட்டி, அவ
ன் தந்தை நாளையில் தான் மந்திரியாயிருந்த
தர்மமெல்லாஞ்சொல்லி, இப்போது உன்
னிடந்திலிருக்கிற துஷ்ட மந்திரிகளால்
உன்னிஷ்ட காமியார்த்தங்களை யிழந்துபோ
கிறாய். உலகத்தார் உன்னைப் பொல்லாதவ
னென்று தூறுகிறார்கள், சும்மாயிருக்கிறஉன்
தலையின்பேரிற் பழியேறிவிட்டது. தர்மத்
தை மறந்ததினால் மாதமும்மாரியென்னும்
வளமாறிக்குன்றிவிட்டது. மந்திரிகள் உன்
னை வஞ்சித்து உள்ளடக்கிப்போட்டு தாங்
கள் வெளிப்பட்டுவேண்டிய திரவியங்களைத்
தேடிக்கொண்டார்கள், ஊரை அன்னியா
யம் பண்ணிவிட்டார்கள். அவர்களாலுண்
டாகிற பாபமெல்லாந் தீரவிசாரித்த மன்ன
னைச்சேரும். ஆதலால் உன்னைப் பாபம்
பிடித்துக்கொண்டது. இன்னும் அநேகங்
குறைகளுண்டு. அவைகளையெல்லாங் கண்டு
என் மனந்தாளாமல், உன் தகப்பனாரிடத்தி
லுண்டுவளர்ந்த உண்மையைக் கொண்டு
சீர்திருத்த வேண்டுமென்று வந்து, ஒரு
காக்கையைக் காட்டி, அதற்குக் காலத்திரய
முந் தெரியுமென்று சபையறியப்பேசி வை
த்துவிட்டு வந்தேன், இந்தத் துஷ்டமந்தி
ரிகள் தங்களுடைய துர்நடத்தைகளை ஒரு
வேளை உனக்குச்சொல்லிவிடப் போகுதென்
கிற அச்சத்தினால் அதனைக் கொன்றுபோட்
டார்கள். இப்பேர்ப்பட்ட பாபிகளுக்கு முன்
னே நீயெப்படி பிழைக்கப்போகிறாய்: எப்
படியோ ராச்சியபரிபாலனம் பண்ணுகிறவர்
களுக்கு ஒருவேளை யிருக்கிறசிந்தை ஒரு
வேளையிராது. ஏதாகிலும் ஒருகாரியங்களைப்
பேசவேண்டிவரும். அப்போது இந்த மந்
திரிகளாகிய பாவிகள் வசனாபி சேர்த்துக்
கொன்று விடுவார்கள். ஆதலால் இந்த
மந்திரிகள் உன்னிடத்திலிருக்கலாகாது. நீ
இவர்களை நீக்கிவிடுவதே மேலாகிய பாக்கிய
மாக எனக்குத் தோன்றுகிறது. இதன்றியி

லும், உனக்குப் பட்டமான அன்றுமுதல் யின்றைய வரையிலும் யிவர்கள் நடத்திய அதர்மங்கள் யின்னின்னது. இதுவரையிலும் நீ யடைந்த துன்பமெல்லாம்போக, இனிமேலாகிலும் நல்ல மந்திரிகளை வைத்துக்கொண்டு இகபரானந்தத்தைப் பெறுவையென்று மகாயிரக்கமுள்ள மனதோடுஞ் சொல்லினர்.

அரசன் அந்த முனிவன் வார்த்தையைக்கேட்டு, ஓ சுவாமிகளே! தேவரீர் என்னுடைய தந்தைக்குரிய பெரியமந்திரியாகையால், என்னையும் அவ்வாறே கடைத்தேற்றவேண்டும். எனக்கும் புத்திமதிசொல்லிக்கொண்டு சிறிது நாளிவ்விடத்திலிருந்து பாதுகாத்து வருவீராகில், நானும் பக்குவப்பட்டுப்போவேன், பாபரகிதனுவேன், பரத்துவ விசாரணைசெய்வேன், தேவரீர் பாதத்தை மறவேன், என்று பற்பலவிதமாகப் பணிந்தான். அந்த ராஜகுமாரனை அவரெடுத்து அணைத்து முத்தமிட்டு அப்பா! அப்படியே ஆகட்டும். நீ இனிமேல் ஏமாறுமல் அந்தப் பாவிகளாகிய மந்திரிமார்களைஒழித்துப்போடு, சாக்கிரதையாயிரு; நீதிசெலுத்துவது நெருப்பாறு மயிர்ப்பாலமென்று நினைத்துக்கொள் என்றுசொல்லி அவனுக்குத் தெளிவு பிறக்கும்படியாய்த் தேற்றிவிட்டார். அன்றுமுதலவன் கன்றலுடையவனுய், பொல்லாத மந்திரிமார்களின் பொய், பொருமை, முதலியவை யறிந்து, அவர்களுக்கே மேவுதல்செய்து, நாள்தோறும் ஒவ்வொருவனு யகன்றிவிட்டான். இப்பால் அந்தரிஷிஸ்வரருடைய நீதியைக்கேட்டுநெறிமுறைசெலுத்தி, அவர் திருவடிநிழலை மரவாநவனுயிருந்துஉலகத்தார் கொண்டடாவும் சத்துருக்களழிந்தோடவும்,தருமதான நீடவும் செங்கோலாடவும், தேவதைகள் கூடவும் மகா பிரபல்லியமாய் நீதிவிசாரணையை நெறியாய் நடத்தி, நாடுகள் செழிக்க, காடுகள் தழைக்க, நன்மழைபொழிய, நான்குவருணமுஞ்செழிய பத்தர்மார்க்கம் பத்தினிமார்க்கங்குறையாமல் விளங்க இவ்வரசனது கீர்த்தி மூன்று லோகமும் பூர்த்தியாக பகைவர்வந்து ஒதுங்க, படைகளும் வந்து நெருங்க, நித்தியசோபனம், நித்திய மங்களம் புத்திரபாக்கியம் சத்திய வாக்கியம் இவை முதலிய பற்பலவிதமான யோக்கியங்களெல்லாம் உண்டாய்ச் சிலாக்கியனுகிவாழ்ந்துவந்தான். ஓ தருமநந்தனு! பிரமாவைப்போன்ற வேதமுதல்வனுனலும் துணைக்காரணமாகிய மந்திரி யில்லாவிட்டால் ராஜனுக்குப் பிரதிஷ்டையில்லை. ஆனல் யோக்கியமான நடத்தை சாஸ்திரவிசாரம் நல்ல குடிப்பிறப்பு இவைகளையுடைய மந்திரி வாய்க்கவேண்டும். இப்போது நான்சொல்லிய முனிவர் சாம்பிரதாயமான மந்திரியாகையால் இந்த அரசனுடைய தந்தையிடத்திலும் வெகுநாளிருந்து அப்பால் தவம்புரிந்து ஆத்மலாபமும்பெற்று இப்பால் தன்னுடைய அரசனது புத்திரனுக்குத் துணையாயிருந்து காப்பாற்றினர். ஒரு மந்திரியினல் அவன் பிறந்த குலமும் அவனுக்குப் புகுந்த மனைவியின் குலமும் தன்னைரக்ஷித்த பெரிய ராஜாவின் குலமும், அவ்விராஜனுடைய புத்திரமித்திர சந்ததிவருக்கமுந்தழைத்த புண்ணியத்தைப்பார் புனிதத்தை யோசி பழிபாவ நீங்கிய பாகியத்தைப்பார். என்று வீஷ்மாச்சாரியர் புகன்றுமேலுஞ் சொல்லுகின்றார்.

---

## பெரியோர் மகத்துவமும் அவரைத் துணைகொள்ளுதலினு லுண்டாகும்பெருமையுங் கூறுதல்.

ஓ புண்ணியவானே! இப்பேர்ப்பட்ட மந்திரி கிடைத்திருந்தாலும் உலகாளும் அரசனுக்குப் பெரியவாளுடைய சகாயமிருக்கவேண்டும். அதெப்படியெனில், வேதம் நான்கு, சாஸ்திரம் ஆறு, கலைக்ஞானம் அறுபத்து நான்கு, உடநிடதம் முப்பத்திரண்டு, புராணம் பதினெட்டு இவை முதலிய இயாவுமுணர்ந்த பெரியாரைத் துணைக்கொள்ள வேண்டும். எந்நேரமும் அவர்களுடைய தரிசனமும் சாவகாசமும்,பெறவேண்டும். வீண்காலம் போக்காமற் சத்காலக்ஷேபம் பண்ணவேண்டும். நல்ல நீதிநெறி முறைமைகளைத் தூண்டிக் கேட்கவேண்டும். தருமம்-தானம்-தவம் - சாந்தம் - இவைகளையெல்லாங்கேட்டுத்தெரிந்து கொள்ளவேண்டும். எந்தக்காரியங்களையும் மந்திராலோசனையுடன் தன் மதியையுங் கூட்டிப்பார்த்து, இதுசரியோ அல்லவோவென்று பெரியவாள் கிடைப்பது அருமையாயிருக்கும். அப்படிக்கிருந்த போதிலும் எந்தப்பாடாகிலும்பட்டுச் சம்பாதித்துக் கொள்ளவேண்டும்.

அதேனென்ருல், பெண்டு பிள்ளை, பந்து மித்திராள், இவை முதலான பேர்களெல்லாம் அவனுடைமையைச் செலவழித்துச் சாப்பிடுவார்களே யல்லாமல், அவனைக் கடைத் தேற்றுவாரில்லை. அவனுக்கொரு ஆபத்து வந்ததானல் தாங்களுங்கூடயிருந்து அழுவார்கள். அல்லது தூரப்போய் விடுவார்கள். நீர் நிறைந்த குளத்திற் சேர்ந்திருக்கும் பக்ஷிகள் நீர் வறண்டால் நெடுந்தூரம் பறக்கும். அதிலிருந்த தாமரைகளோ நீருடனிறக்கும். நீர் சுறக்கும்போது கூடப் பிறக்கும். அதுபோற் பெரியாரைத் துணைப் பற்றியிருந்தால், நல்ல கேள்விகளினுலும், சாஸ்திரப் பயிற்சியினுலும், கியானேபதேசமாய் திடச்சித்தங்கொண்டு, தெய்வ நிர்ணயந்தெரிந்து, இப்பிரபஞ்சம் பொய்யென்றறிந்து, போகாதி விஷயங்களிற் புத்திகெட்டலையாமல், நிலைபெற்று நெறிபற்றி நன்மையைப் பெறலாம். பெரியோரென்பது எந்த வருணத்திற் பிறந்திருந்தாலும் அவர்களுக்குச் சாதிபேத மிராது. படாடம்பங் காட்டாமலிருப்பார்கள். நன்மை தீமைகளைச் சரியாய் நடத்துவார்கள். தருமஞ் சத்தியமுந் தவருர்கள்.

அத்தன்மையாகிய தெளிவுடையவர்களை அறிந்துகொண்டு, அவர்களை விட்டுப் பிரியாத இராசனிருப்பானுகில், அவனுக்குச் சகல காரியங்களும் வெற்றியாம். அப்படிக் கில்லாமற் போனல், உண்டதையே யுண்டு, உடுத்ததையே யுடுத்து, கண்டதையேகண்டு, களித்ததையே களித்து, கேட்டதைக்கேட்டு, கர்மபூமிக் கிலேசத்திலழுந்தி, பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்களிலே பந்தப்பட்டு, சிறிதும் ஆத்மக்கியான மில்லாமல், ஆணவம்-மாயை - காமியம் - என்னு மும்மலக் கட்டிற்ரேய்ந்து, நாற்கரணச் சேட்டையிற் சாய்ந்து, ஐம்புலன் வழியிற்பாய்ந்து, ஆறு பகையாற்காய்ந்து மாய்ந்து போய்விடுவான் ஆனதால் இப்பூலோகத்தில் பெரியவர்களுக்கு மிஞ்சினபதார்த்தமில்லை. உலகமென்பது உயர்ந்தோர் மயமாயிருக்கின்றது ஈஸ்வரன் விளையாடுகிற இந்தச் செகத்தானது அந்தப் பெரியவர்களுக்காகவே யல்லாது, மற்றப் பேருக்கல்ல. அவர்கள் நிமித்தஞ் ஜெகதீசன் செய்யும் நன்மைகளெல்லாம் பூமியின் குணம்போற் பிரிந்து, நெல்லுக் கிறைக்குந் தண்ணீர் புல்லுக்கும் புசிப்பாகு மாறுபோற் பசுவாகிய ஜீவராசிகளெல்லாம் பிழைத்திருக்கின்ருர்கள். அதுபற்றி, யிப் பிரபஞ்ச சுகபோக வாழ்க்கையில் வைத்திருக்கிற பேராசையைப் பார்க்கிலும், பெரியவாள்பேரில் அதிக அன்புவைத்து, அவர்கள் தன்னிடத்தில் விருப்பமா யிருக்கும்படிக்குப்போற்றி நடந்துகொண்டால், அவர்க்ள் என்னேரமுங் கூடியிருந்து, திவ்வியக் கியானந் தெரிவித்து, சாஸ்திரக்கருத்தையேற்றி சஞ்சலச் சித்தத்தை மாற்றி, அக்கினியான விருளை யாற்றிவிடுவார்கள். பெரியவர்களின் கேள்வியுஞ் சாவகாசமும் மில்லாமற் போனல், யிராஜனுக்கு எத்தனை பலமிருந்தாலும் எவ்வளவு செல்வமிருந்தாலும் உண்மைப் பொருள் தெரிந்து ஒருபோதுங் கதிபுகமாட்டான். பின்னு முன்னும் பிறவிக்கிடமாய்விடும். யிவைகளைப்பற்றி யிராஜனுக்குத் தூயோர்வலியுந் துணைவலியுமிருக்கவேண்டும். இவை யிரண்டு மில்லாவிட்டால் தோன்றல் பொருட்பட மாட்டான். அதற்குத் திருஷ்டாந்தமாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

## தூயோர்வலியைப்பற்றிக் கூறிய கோசலராஜன் கதை.

அப்பா குந்தி புதல்வனே! பூர்வத்திற் கோசல தேசத்தை மதசி யென்னும் ராஜன் ஆண்டிருந்தனன். அவனிடத்திற் காலவ ரிஷி யென்பவர் நேசமாயிருந்தனர் அவராவென்ருல், யிந்தக் கோசலதேசாதிபதியின் தந்தையிடத்தில் மந்திரியாயிருந்து துறந்து மாதவஞ் செய்ய நதலைப்பட்டவர். இந்த ரிஷியானவர் தன்னரசனிடத்தில் வைத்த அன்பினுல் ஒருக்கால் இவனிடத்தில்வந்து துஷ்டமந்திரிகளை விலக்கி இஷ்ட மந்திரிகளை நேமித்து என்னேரமுந் திரியாக்கினி வளர்த்துக்கொண்டு, வைதீகத்தை யனுசரித்து, இராஜனுக்கு லௌகீகங்களை யேர்ப்படுத்தி, சட்டமாய் ராச்சியபரிபாலனம்பண்ணும்படிக்குக் கூடியிருந்து குணப்படுத்தி, பின்பு பழைய வாசனையை நினைத்துத் தபசு பண்ணப் போய்விட்டார். அவருடைய சிநேகம்பெற்ற ராஜன் குறைவின்றி வெகு நாள் ராச்சியபாரம் பண்ணிக்கொண்டிருக்கு நாளில் முன்னே தள்ளிவிட்ட மந்திரிகளில் ஒரு துஷ்டன் மெத்தவும் வணங்கி யிவனிட

த்தில் வரப்போக விருந்து மற்றோர் தேசத்தரசனாகிய விதேகராசனைக்கலந்து கலகம் விளைத்தான். அதனால் விதேகராஜன் அநேகந்தண்டுகளுடன் புறப்பட்டு, வடவாமுகாக்கினிபோற் கொதித்து, மதரிசிராசன் பேரிலெதிர்த்தான். யிந்த மதிரிசிராஜனும் படைகளுடனெதிர்த்துப் பயங்கரமான சண்டை புரிந்து கைகலந்த காலத்தில், விதேக தேசாதிபன் மேலிட்டு கோசல தேசாதிபனைக் குன்றச் செய்து அவனது கோட்டை கொத்தளமெல்லாம் பறித்துக்கொண்டு நாட்டை விட்டோடப்பண்ணினான். அந்தக் கோசல தேசாதிபன் சகல சம்பத்துமிழந்து ஆரணியத்திற் புகுந்து அலைந்து திரிந்து வருந்தி வாடி முன்னே தன் தகப்பனாரிடத்தில் மந்திரியா யிருந்த காலவமகாரிஷி யெங்கேயென்று காடெலாந்தேடி, அவரைக் கண்டுபிடித்து நமஸ்கரித்து, ஓ ஐயனே! ஓ என்னுயிரைக்காக்குந் தெய்வமே! ஓ என்குல முதல்வனாகிய மூர்த்தியே! துஷ்டமந்திரிகளால் நரகத்தில் விழுந்து முழுகிப்போக விருத்த என்னைக் கைதூக்கிக் கரையேற்றி விட்டீர் என் ராச்சியத்தில் தருமத்தை நாட்டினீர். இப்போது விதேக தேசராஜன் மேலிட்டுப் போர்விளைத்து மெலியப்படுத்தி, இராச்சிய முதலிய அரசாட்சியைக் கைக்கொண்டு என்னைக் காட்டிலோட்டினான் தேவரீருடைய திருவடியே தஞ்சமென்றடைந்தேன். என்னையிரட்சியையா வென்றழுதான் அந்த ரிஷியானவர் அவனை யாசீர்வதித்து, நல்லது பயப்படாதே. உட்காரு என்று தன்னுடனே கூடஸ்நானம், பூசை, சாப்பாடுமுதலானது நடத்தி, சிறிதுநாள் போன பிற்பாடு இவ்வரசனைச் சுகப்படுத்த வேண்டுமென்றுகிருபை கூர்ந்து, தன்னுடைய சீஷரை யனுப்பி விதேகராசனை அழைத்து வாருங்களென்று கட்டளை யிட்டருளினார்.

கேளப்பா தருமநந்தனா அந்தச் சீஷர்கள் வணங்கி அவ்வாறே போய் விதேகராசனை யழைத்துக் கொண்டு வந்தார்கள். வந்த அந்தராசன் காலவமஹாரிஷியைக் கண்ட மாத்திரத்தில் பணிந்து, பாதங்களைக் கண்களினும்-சிரத்திலும் - மார்பிலும்-தோளிலும் - ஒத்திக்கொண்டு - வைத்துக்கொண்டு - முத்தமிட்டு, சுவாமி நான் என்ன பாக்கியஞ் செய்தேன் ? அடியேனொருவன் அடிமையாயிருக்கின்றானென்று அன்பு கூர்ந்து அழைத்த காரணம் யாதோ என்று சொல்லி மீட்டுமவரடிமேல் வீழ்ந்தான். அவனை யக்காலவரிஷியாதரித்து ஆசீர்வதித்து, ஓ அரசனே இவ்வரசிளங்குமரன் அளவில்லாத புகழ்பெற்ற பராக்கிரம சாலியாகிய என்னரசனுடைய குமாரன். எனக்கு மிகுந்த அன்பன். இவனை நீ யெதிர்த்து யுத்தம்பண்ணி வெற்றி பெற்று, இவனது ராட்சியபட்டாபிஷேகத்தைப் பிடுங்கிக் கொண்டனையாம். இவன் என்னிடத்தில் வந்து முறையிட்டான். இனியாகிலும் என் சொல்லுக்கிரங்கி, உன் பெண்ணை இவனுக்குக் கலியாணம் பண்ணிக்கொடுத்து, இருவரும் சுகமாயிருங்களென்று மங்களாசனம் பண்ணினார். அந்த வார்த்தையை விதேகராஜனோடு கூட்டாளி கொண்டு, காலவருடைய வாக்கியத்தை வேதமாகக்கருதி, சுவாமி! தமதிஷ்டப்படிக்கு நடத்துகிறேனென்று வணங்கி செலவு பெற்றுக் கொண்டான். பின்பு கோசல தேசாதிபனும், விதேக தேசாதிபனுங் கைகோர்த்துக் கொண்டு வந்து, நல்ல முகூர்த்தத்தில் தன் பெண்ணை மதரிசி மகாராஜனுக்குக் கலியாணம் பண்ணிக்கொடுத்து, அவனுடைய பட்டினமும், இன்னும் அளவிறந்த மண் மனையும், பொன் வெள்ளி பூஷணமும், பொற்காசும், பொற்றுகிலும், போர்மோகிய யானை முதற் றேராதி படைகளும் ஸ்ரீதனமாகக் கொடுத்து, மகாரிஷி வாக்கியப்படி மன்னர் முதலிய மகா சனங்களும் வேத வேதியரும் நாதகீத நாவலர்களுங் கொண்டாடிப் புகழ பொக்கிஷத்திலிருந்த திரவியங்க ளெல்லாவற்றையுங் கொடுத்து மகிழ்ந்தான். கோசல தேசாதிபன் பெண்சாதியுடனே விதேகராஜனை வணங்கி விடைபெற்றுத் தன்னுடைய பட்டினஞ் சேர்ந்து, புகழுடைய போகவாழ்விற் சுகம் பெற்றிருந்தான். ஆதலால், பூரியர் சினேகத்தைப் போக்கி ஆரியர்நேசத்தை யடைவாராகில், அவர்கள் யாரான போதிலும் மேன்மாடடைவார்கள். வெற்றி பெருவார்கள். எப்போதும் அரசனுக்குத் தூயோர் வலியே மேலானது இவ்வலியென்று நல்ல துணைவலியுங் கூட்டுவிக்கும். துணைவலியில்லாவிடினும் அரசன் சுகப்படமாட்டான். அதற்குத் திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

துணைவலியைப்பற்றிக் கூறிய

ஒட்டகத்தின் கதை.

ஓ எனது குலத்திற் சிறந்த பேரனே! ஆகாய முகட்டை யளாவிய ஒரு பெருங் காட்டில், கழுத்து நீண்டு, கொழுத்து,உயர்ந்து பருத்த ஒட்டகமொன்று பிரம்மாவைக்குறித்து அநேகநாள் தபசிழைத்தது. அதனது புத்திரசத்தார் பிரம்மா சந்தோஷப்பட்டு,அன்னவாகன ரூடராய் காக்ஷியாகவந்து, என்னை நோக்கித் தவம்புரிந்த தென்னவென்று கேட்டனர். அதற்கந்த ஒட்டகமானது விவேக சூனியத்தினாலும், தாமஸகுணத்தினாலும், பிர்மாவைப் பார்த்து, ஐயர் சதுர்முகனே! தேவர் முதலிய மானிடர்களும் ஆச்சரியப்பட்டு நகைக்குப்படியாக நூற்றைம்பது யோசனை நிகளம் என் கழுத்து வளரும்படிக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று வரங் கேட்டுக்கொண்டது. அவ்வாறே ஆகுகவென்று கடாட்சித்து பிர்மதேவர்போனார் அப்பால் அந்தஒட்டகம்மேகமண்டலத்தை யளாவிய கழுத்தையுடைத்தாய்மமதையடைந்து, ஒருவருந் தனக்கு நிகரில்லாமல், காட்டிலிருக்கிற மிருகங்களெல்லாவற்றையுங்கூட்டிக்கொன்று, தாட்டியாய்த்தின்று, மதோன்மத்தாய்த் திரிந்துகொண்டிருந்தது. அப்படி யிருக்கும்போது ஒரு நாள்விபரீதமான உகாந்தகாலம்போற் காற்றுமழையுங் கலந்து, இடியுமின்னலும் பெருகி, எங்குந் தலைகாட்டவொட்டாமற் சாடின. அவ்வேளையிற் பிரம்மாண்டமாகிய தேகமும் நூற்றைம்பது யோசனை தூரம் வளர்ந்திருக்கின்ற கழுத்துமுள்ள கொழுத்த ஒட்டகமானது ஒதுங்கியிருக்க இடங்கிடையாமல் மெத்தவுந் துக்கப்பட்டு, பிரயாசத்துடன் நாலுபக்கங்களிலுமோடி, பெரிய மலையினிடத்தில் ஓர் சிறியகுகையிருக்கக்கண்டு, அந்தக்குகைக்குள் தனது நூற்றைம்பது யோசனை நிகளமுள்ள கழுத்தை நுழைத்து இளப்பாறி யிருந்தது. அந்தக்குகைக்குள் இதற்கு முன்வந்து புகுந்திருந்த ஒரு குள்ளநரியானது நூதனமாய்வந்த ஒட்டகத்தின் தலையைக்கண்டு, இந்த ஒட்டகங் கர்வித்துக் காட்டிலுள்ள ஜீவராசிகளைக் கொன்று தின்று களிப்புற்றிருக்கின்றது, நம்மைக்கண்டால் எப்படியுங் கொல்லும். என்று பயந்து, இந்த மலைக்குகைக்குள் ஒளித்திருக்கின்ற நம்மைத் துருவிப்பிடித்துக் கடித்துக்கொல்லத் தலை நீட்டியதாகையால், இது நல்ல சமயம் இதனுடைய கழுத்துசீக்கிரத்தில் திரும்பப்படாது. இதற்குள்ளே தானே வேலைமுடித்துவிட வேண்டும். என்று ஒரு பக்கமாய்ச் சாய்ந்து அவ்வொட்டகத்தின் கழுத்து நரம்பைக்கடித்து, இரத்தத்தைக்குடித்து, பசியைமொழித்து, பகையையுமுடித்தது.

அப்பா தருமநந்தனா! அவ்வளவு பாரியும் பலமும் பெற்ற ஒட்டகமானது ஒன்றுக்குமுதவாமல் உயிர் துறந்துபோயது. பிர்மாவைக்குறித்துந் தபசுசெய்து வரம்பெற்ற வல்லமை யிருந்தும், பெரியாரைத் துணைகொள்ளும் பேரறிவின் பெருமையில்லாததினாற் பெறவேண்டிய வரத்தைப் பெறாமல் பேய்மதியால் நீளக்கழுத்தாக வரத்தைப் பெற்று, நெடுநாளிராமல் உயிர் நீங்கியது அதுவுமன்றி, துணைவலியாகிலு மிருக்குமாகில் நரியினுடைய பகைநேரிடாது. காட்டிலிருக்கும் ஜீவராசிகளைப் பகையாக்யுக்கொண்டு, உதவி யொருவருமில்லாமல் துணைவலியு மிழந்து சேர்ந்தது. ஆகையால், இராஜர்களுக்குப் பெரியவர்களின் நேசவிசுவாசமும், குடிவழியிற் கூடிய துணைவலியுமிருக்கவேண்டும். முற்காலத்தில் வில்லுமுனையில் மேதினியைச் செயிக்கும் வல்லவராகிய ஸ்ரீராமன் திரிபுவன ஜெயதரனாகிய தம்பியிருந்தும், கவிக்குலங்களைப் படைகூட்டிக்கொண்டுபோய் கடலைக்கடந்து, அடலைத்தொடர்ந்து,இராவணவேட்டையாடி, அயோத்தியில்வந்து, சீதையுடன் பட்டங்கட்டிக் கொண்டார். ஆனபடியால், எவ்வளவு வல்லமைச் சமர்த்திருந்தபோதிலும், முக்கியந் துணைவலி யிருக்வேண்டியது. இந்தத் துணைவலிக்கு இவ்வளவென்று ஒரு அத்தில்லை. சத்துருவின் பலம் எத்தன்மையுடையதோ? அத்தனைவரைக்கும் விஸ்தாரந் துணைவலிவேண்டியது. பகைவர்மேலிட்டுப் பகைத்துவருங்காலத்திற் படைத்துணையானது கோட்டைவாயிற் கதவென்று குறிக்கலாம். இராஜனுடைய செங்கோற் சாயாமலிருப்பதற்குப் பெரியவர்களுந் துணைவலியுமே துணையன்றி வேறில்லை. இப்பேர்ப்பட்டராஜனைச் சினேகித்தபேருக்கும், அவனாளப்பட்ட பூமியிற் பிறந்த பேருக்கும் பாவமணுகாது யாதேனு மோரேதுவால் நேரவிருக்கினும், பஞ்சுப் பொதியிற்பட்ட

நெருப்புபோல் இராஜனுடைய நன்னெறித்துணை ஏற்பட்டுப் போக்கிவிடும். அதெப்படியெனில், ஒரு சிறிய கதையினைச் சொல்லுகின்றேன்கேள்.

---

### நன்னெறித் துணையைப்பற்றிக்கூறிய வேடராசன் கதை.

ஓ தருமபூபனே! இன்னாட்டைச்சார்ந்த பெரியகாட்டிற் பாரியாத்திர மென்னும் பர்வதமொன்றுண்டு. அந்த மலையினிடத்திற் காப்பவ்வியனென்று ஒருவேடனிருந்தான். அவன் சாதியில் வேடனானபோதிலும், உத்தமகுணமும், சத்தியவசனமும், தருமங்குடிகொண்ட மனசும், தயாளத்துவமாகிய சாந்தமும், பொறுமையும், அருமையும், விரதமும், தூய்மையும் மேன்மையுமுடையவன். மகாதாஷ்டகன். புஜபலபராக்கிரமன். மெத்தவுந் தயிரியம் படைத்தவன். வில்லில் வல்லவன். பொய்யையறியாதவன். தான்வாசம் பண்ணிக் கொண்டிருக்கிற காட்டுவழிகளில் மிருகபயம், வேடர்ப்பயம், திருடர்பயமில்லாமற்காத்து, தவசிகளுக்குத் தொண்டுபுரிந்து தன் குலாசாரப்படிக்குப் பட்சிமிருகங்களையடித்துண்டு சுகித்து, பெண்டு பிள்ளைகளுடன் வாழ்ந்து வந்தான். இவன் உத்தமனென்று பெரியோர்கள் கொண்டாடினார்கள். அக்காட்டிலிருக்கும் எஞ்ஞியர் முதலியதீயரும் மற்றச்சாதியருஞ் சேர்ந்து, இவனது நற்குணங்களை யோர்ந்து, நீரெங்களுக்கெல்லாம் ராஜாவாயிருந்து நன்மார்க்கம் போதித்து, ஆசாரவிபகாரம், பாபபுண்ணியம், நன்மை, தீமை, சுபாசுபம், இவைகளுக்கெல்லாம் வரன்முறை யேர்ப்படுத்தி, நாங்கள் நரகம்புகாமல் நற்பதவிபெறும்படியாகக் கண்டனைதண்டனையுடன் நடத்திவரவேண்டும். நாங்களுமது ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறோம் என்றுவேண்டிக் கொண்டார்கள். அவர்களை அப்புருஷலட்சணமமைந்த தாமரைக்கண் ணுடைய வேடன் பார்த்துச் சொல்லுகிறான். ஓ பிரசைகளே! நீங்களெல்லாந் தருமந்தெரியாதவர்கள், உங்களை யொருவழிப்படுத்தி ஆளுகிற பேர் ஒருவருமில்லை, ஆனாலும் நான்சொல்லுகிற வசனத்தைக் கேளுங்கள், எப்பேர்ப்பட்ட இடுக்கண்வந்தபோதிலும், உயிர்போகுங்காலத்திலும், என்னுடைய ஆக்ஞையைத் தட்டுகிறதில்லையென்னுஞ் சத்தியமும் உங்களிடத்திலுண்மையாயிருக்குமானால்; நீங்கள் கேட்டுக்கொண்டவண்ணம் நான் ராஜாவாயிருக்கிறேன். இதற்கென்ன சொல்லுகிறீர்களென்று பச்சைமேனியையுடைய வேடன் கேட்க. இவன் மொழியைக்கேட்க அவர்களியாவரும் அவசியஞ் சத்தியமாய் அப்படியே அத்துமீறாமல் உமது கட்டுப்பாட்டிலிருக்கிறோமென்று சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணினார்கள்.

அப்போது காப்பவ்வியனாகிய வேடன் சந்தோஷித்து, பாரியாத்திர பர்வதத்தினிடத்தில் ஒரு ஆசனமேர்ப்படுத்திக்கொண்டு காட்டிலிருக்கும் வேடர்முதலிய பேர்களைக் கூட்டிச் சபையேர்ப்படுத்திவைத்து,சிற்சில தருமத்தின் இயல்பெடுத்துச் சொல்லுகிறான். கேளுங்கள் வெகுசனங்களே! இன்றுமுதற் பசுக்களையும் பிராமணர்களையுந் தொழுது அவர்களுக்குத் தொண்டுசெய்துபோற்றுங்கள். அவர்கள் உங்களைக் கோபித்தாலும், உதைத்தாலும், முட்டினாலும், திட்டினாலும், அடித்தாலும் நீங்கள்பதிலுக்குக்கோபிக்கக்கூடாது. கோபத்தை நாயாக நினைத்துக் கட்டிப்போடுங்கள். சொர்க்கபதம் வேண்டுமென்கிற அக்கரையிருக்குமாகில்தாயை தகப்பனை, தமயனை, தெய்வமென்றெண்ணிப்பூசித்து, அவர்கள் சொல்லுக்குஎதிர்சொல்லாமல் வழிபட்டு நடவுங்கள். பெண்சாதி பிள்ளைகளை அன்புடன் விசுவாசித்துப்போஷித்து வாருங்கள். பரஸ்திரீகவனம் பண்ணாதீர்கள். அண்ணன் தம்பிமாருடனேயுந் தாயாதிகளுடனேயுங் கலந்திருந்து, வேற்றுமையில்லாமற் சாப்பிடுங்கள். எந்தவிஷயத்திலும் ஒருவரையொருவர் வஞ்சிக்கவேண்டாம். சுபாசுபங்களில் விரோதமில்லாமற் கலந்து நடத்துங்கள். பிறருக்கு இடங்கொடாதீர்கள். சத்துருவின்பேரிற் சண்டைபோடுகிறபோது சாந்தத்தையும் பொறுமையையுந் தூரத்தள்ளிவையுங்கள். மற்றவேளையிற் கோபத்தை எட்டப்போக்கிவிடுங்கள் நம்முடைய ஜாதியாசாரம் ஜீவஹிம்சைசெய்யுந்தொழிலானாலும், நமது பசிக்குங்குடும்பசம்ரக்ஷணைக்குந் தக்கதாய் உயிர்வதைபண்ணிக்கொள்ளவேண்டியது. சத்தியந்தப்பலாகாது. தலைபோகிறகாலம்வந்தாலும்பொய் பேசவேண்டாம். ஒருவரையொருவர்பார்த்துப் பொறாமைப்படவேண்டாம். அதிக

ஆசைப்பட வேண்டாம். புறங்கூற வேண்டாம். என்று தருமசாஸ்திரம் போதித்து, ஜாதிக் கட்டோலையுடன் பட்டோலை யேர்ப்படுத்தினுன். அவ்வாறே யாவரும் நல்லொழுக்கத்தையனுசரித்து, வேடராஜன் விதித்த விதியின்படிக்கு முறை தப்பாமல் ஒப்பாக நடந்துவந்தார்கள். அதனுல் தீயவேடர்களெல்லாந் தீவினைகடந்து, அந்திய காலம் வந்தபோது யாவருந் தேவலோகத்திற் ஸ்திரமாகிய நற்கதி புகுந்தார்கள். இதுபோலவே இராசனுடைய நன்மைகளினுல் ஜனங்களெல்லாம் நற்கதி பெறுவார்கள் (அரசனெவ்வழி குடிகளவ்வழி) இதை நீயறிந்துகொள்ளுக. இனி நல்லோரென்று சொல்லப்படுகின்ற தலைமையானவர்களின் சிநேகத் திறத்தைச் சொல்லுகிறேன் கேள்.

---

## நல்லோர் நட்பைப்பற்றிக் கூறிய புருவின் கதை.

ஓ பாண்டுமைந்தனே! உயர்ந்த குலத்திலுதித்து, சகலகலைக்ஞானமுமதித்து, பெரியோரென்று துதிக்கப் பூசிதைபெற்ற புண்ணியவான்கள் ஒருவரை யடுத்துத் தந்திரம் பண்ணிச் சில பொருளைக் கிரகிக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டு நேசிக்க மாட்டார்கள். எந்தக் காலத்திலும் ஒருவனுற் பெரும் பொருளுக்கு இச்சை கொள்ளார்கள் ஒருவனிடத்தில் வரும் போதே வீட்டில் உலைவைத்துப்போட்டுவாரார்கள். இப்பேர்ப்பட்டவாளுடைய சினேகம் ஒப்பற்ற நேசமென்று யோசித்துக் கொள்ளுக, இவர்கள் தான் பல பொருளுமுதவும் பனைத்தாரு போன்றவர்கள், மழைபொழியு மேகம் போன்றவர்கள், பிரதியுபகாரத்திற்கு எதிர்பாராதவர்கள். மேலும் இத்தியாதி குணங்களையுடைத்தாய் சகல வித்தையுமற்றுக் கியானமற்றபேர்கள் நான்குவருணத்திலேயுமுண்டு. பட்சி முதலாகிய மிருகங்களிலேயுமுண்டு. எதிலே நல்ல ஆத்மக்கியானமும், ஈஸ்வர பத்தியும், வேதவிதியுந்தப்பில்லாமலிருக்கிறதோ? அதனைத் தெரிந்து சந்தோஷித்து, பூமியிலுள்ள ஆன்மாக்களிற் பேரறிவாளராகிய பிரபலரை யறிந்து, கன்மத்தாற் சாதியோ? சன்மத்தாற் சாதியோ? என்னுங் கருமத்தைமதித்து, பாசிநுரைமுதலியன நீங்கி நீரைக் கொள்வதுபோலும், உமியைப் போக்கி அரிசி பெறுவதுபோலும், புல்லிதழை விலக்கிப் பூவைத் தரிப்பதுபோலும், புன்மைகளையகற்றி நன்மை பெறுவதுபோலும், குலபேதம் பாராமல், அவர்களிடத்திலுற்ற அதிசயம், மகிமை, ஆசாரம், இவை முதலிய நன்நெறி நலத்தைப் பிரயோசனமாகக் கொண்டு விசுவாசிக்க வேண்டும், மேலும், சகலவித அலங்காரங்களுடனே வாண்மையாகிய இரதத்தை ஒரு பொருட்டாய் மதியாமல் அதனது அஞ்சூராணியை ஆவ்பதமாய்ப் பார்ப்பது போல், குலத்தை மதியாமற் குணத்தை நிதானித்துச் சுகத்தைப்பெற வேண்டும். இப்பேர்ப்பட்ட நற்குணமுடைய பேர்களைச் சிற்குணமுள்ள தெளிவியோர் தெரிந்து கொள்வார்கள். அவர்களா லடையும்படியாகிய பேற்றை நான் சொல்லியாற்ற மாட்டேன். இத்தன்மை வாய்ந்த சிவக்கியானம்பெற்ற முதன்மையானவர்களைச் சன்டைமுனையில் சென்ற வீரனுனாலும், பஞ்சமாபாவியானுலும், படியாத மூடனுனுலும், சமயவாதியானுலும், சாதுசங்க மற்றவனுனுலும், சண்டையுடனே தெண்டனிட்டு வழிபடுவார்களாயின், தங்களுடைய துற்சுகுணங் கெட்டு நல்லகுணம் பிறந்து தரிசனமகத்துவ பக்தியினுலே கடைத்தேறிப் போவார்கள். அவர்களின் பகையைச் சம்பாதித்துக் கொண்டாலும் பாக்கியமுண்டு இதற்குச் சாட்சியாக ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

ஓ அறக்கடவுள் மைந்தனே! காருண்யமுள்ள பெரியோர்போன்ற ஒரு ஆரண்யத்தில், விழுதுவிட்டுத் தழைத்திருக்கின்ற ஆலமரத்தின்கிளையில், புருடனும் பெண்சாதியுமாகியஇரண்டுபுருக்களிருந்தன. அவ்விரண்டுந் தங்கள் குடித்தனமுறையிற் குறைவறக்கலந்து, மனதொருமைப்பாய் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் வாசம் பண்ணிக்கொண்டு வருநாளையில், ஒருநாள் ஆண்புரு வெளியே போயிருக்குஞ் சமயத்திற் பெண்புரு தன்னுயகனைத்தேடித் தங்களினத்தின் கூச்சலின்படியே கூவிக்கொண்டிருந்தது. அப்போது ஒருவேடன் வில்லும் அம்பும் பிடித்து மிருகமுதலிய பட்சிகளைக்கண்டால் தாட்சணிய மில்லாமலடித்து, நெருப்பிலிட்டுப் பொசுக்கிக்கடித்துத் தின்னும்படியாகிய கடூரமானவன். என்னேரமுங் கொலை செய்யுந் தொழிற் குறிப்பினையுடையவன். அவன்சிறுகண்ணிறுக்கி முறுக்கிய வலையைக்கட்டி, இ

ரையைத்தெளித்து, தீபகப்பட்சியை வைத்து, உச்சுருக்குக் கயிற்றைக் கையிற்பிடித்துக் கொண்டு, தழைகளினாலே தன்னைமறைத்து, பட்சி மிருகங்களுக்கு யமன்போல ஒளித்திருந்தான். அப்போது அம்மரத்திலிருந்த பெண்புருவானது கன்னிவைத்திருக்கின்றகாரியந்தெரியாமல், வேடன்பழகிவைத்திருக்கிறதங்களினமாகிய புருக்களும் அங்கிருக்கக் கண்டு, பறந்துவந்து விழுந்து அக்கன்னியிலகப்பட்டுக்கொண்டது, உடனே அந்த வேடனானவன் சுருக்குக்கயிற்றையிழுத்துச் சுறுக்கில் ஓடிவந்து, பெண் புருவைப் பிடித்துப் பையிலடைத்து, இன்னும் பட்சிகளைப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது ஆகாயத்தில் மேகங்கவிந்து சூரியகிரணமாறி, பெருங்காற்று மின்னற் பேரிடியுடனே நறநறவென்று பெருமழை பொழிந்தது. இந்த வேடன் தோற்பைபோல் நனைந்து, நடுக்கமுங் குளிருமுண்டாய் சரீரஞ்சலிர்த்து, வெளேலென்றுவெளுத்து, வாயுங்காலும் விரைத்து, கண்ணுமனமு மிரண்டு, காதுமூக்கும் அடைந்து, கருவிகரணங்களுங் குறைந்து பூமியில் வீழ்ந்தான். அந்தச் சமயத்தில் ஆண்புருவானது ஆலமரத்திற்கு வந்து தன்னுடைய பெண்புருவைத்தேடி, ஐயோ! பெண்ணாயமே ஓ பெண்கள் சிகாமணியே ! ஓ பெண்கள் பெருமானே ! ஓ பெண்ணரசி ! என்று மனநொந்து வாடி, அந்தோ இந்த மழையிலெங்கே அகப்பட்டு அயர்கின்றனையோ? எங்கே வழிதெரியாமல் நிற்கின்றனையோ? எங்கே வருந்தி யென்னைத் தேடுகின்றனையோ? என்று வாய்வறண்டு புலம்பி எவ்விடத்திலுமோடி, இலையிலையாய்நாடி, இனியென்னாசை யெவ்வாறுமோ? ஓ ஏந்திழையே! ஓ எனக்கிசைந்த இன்பமே! என்றுபல வாறாகப்புலம்பி, வேடன் கையிலகப்பட்டு வலைப்பையி லிருக்கின்ற விதமறியாமல், வாய்விட்டலறிப் பேய்போற்றவித்தது. அதனுடைய வருத்தத்தை அவ்வனத்தி லிருக்கின்ற, மாதவரெல்லோரும் பார்த்து வருந்தி ஆ! ஆ! பெண்ணாசையின் பெருமை யிப்படிப்பட்டதோ? என்று நினைத்துக்கொண்டு பேதுற்றார்கள். மிருகங்கள், பட்சிகள், மரங்கள், மலைகள், இவை யாதிகளும் புண்ணீர் போன்ற கண்ணீர் விட்டதுகள். இப்படிக்கு மண்ணும்விண்ணுங் கலங்கும்படியாய் வருந்திய ஆண்புரு சற்றுநேரம் மூர்ச்சைபோயிருந்து, பின்பு தெளிந்து நெடுமூச்செறிந்து சொல்லத் தொடங்கியது.

ஓ பெண்ணே! உன்னைக்கூடிய நாள் முதல் இன்னாள் வரையினும் ஒரு நிமிடமேனும் பிரிந்தறியேன். நீயும் என்னைவிட்டு நீங்கினதில்லை. நாயகனே தெய்வமென்று பூலோக வழக்கத்தை நற்றி, என்னைப்பற்றி உபசாரம் பண்ணி வந்தாய். உடலிரண்டும் உயிரொன்றுமாக இருந்தோம். உன்னைப் பிரிந்த என்னுயிர் இன்னு மிருக்கிறது. நீயின்னுமென்னிற் காணாது தாழ்கின்றனை ஆ பேதாய்! உன்மனமென்ன கல்லோ? இரும்போ? மரமோ? அல்லது மண்ணாங்கட்டியோ? நானறியேன். நீ இப்போது ஆருடைய துற்போதனையில் அகப்பட்டுக் கொண்டாயோ அதனையுந் தெரிகிலேன். ஓ என்னகத்தன்பே! வகைமோசம் வந்ததோ? மதிமயங்கிப் போச்சுதோ? என்னை மறக்குங் காலம் ஆச்சுதோ? மழையால் உயிர்மாயவாச்சுதோ? உயிருடனிருந்து என்னைச் சோதிக்கின்றாயோ விறுதாவிலென்னை வாதிக்கின்றாயோ நீ பிடித்த பிடியைச் சாதிக்கின்றாயோ இல்லை மறந்து விட்டாயோ என்னைக்காணாத்தபடியால் இறந்துவிட்டாயோ பெருங்காற்றில் அகப்பட்டுப் பறந்து விட்டாயோ இப்பூமியின் வாழ்க்கையை மறந்துவிட்டாயோ இனியொருக்கால் நானுன்னை காண்பேனோ இன்பவிளையாட்டைப் பூண்பேனோ ஓ தெய்வமே தெய்வமே என்று பெண்சாதியை நினைத்துக்கொண்டு, வருத்திவருந்தி, மருண்டு மருண்டு, கிலேசத்துடன் கண்ணீர்விட்டழுதது. இந்த ஆண்புரு புலம்புஞ் சஞ்சல வசனங்களை யெல்லாம் வேடனுடைய சிக்கப்பையிலகப்பட் டிருக்கின்ற பெண்புருவானது கேட்டு, ஐயோ பாவம் நம்மைக் குறித்து எனிப்படி துயரப்படுகின்றார். நமது நாயகரென்று சிந்தை கலங்கி, மீட்டுந் தனக்குள்ளே தானொந்து, மிஞ்சிப்போன காரியத்திற்கு வேறு செய்கை யென்ன யிருக்கிறது. ஆங்காலமெல்லாம் அன்புடன் வாழ்ந்தோம் இது போங்காலம் ஏதோ பொல்லாத காலம் பிரிவினைகாலம் சாங்காலம் இதைக் குறித்து சஞ்சலப்படுவானேன் நல்லது இதை நம்மால் விலக்கிக்கொள்ளும் வல்லமை யுண்டானால், முன்னோர் முதலிய பேர்களெல்லாம் முடியா திருப்பார்களே, ஆகையால், வினைப்பகுதியை வெல்ல வல்லவரில்லை. எ

ன்று மனவுறுதிகொண்டு, தன்னுயகனைக்
கூவியழைத்து, ஓ பிராணநாயகா ஓ பிரா
ணவல்லபா! ஓ பிராணசகிதா ஓ புருஷசிரே
ஷ்டா ஓ புருஷமேரு ஓ புருஷசிகாமணி?
ஓ புருஷபுனிதா என் வினைவசத்தால்இந்த
வேடன் கட்டியவலையில் விழுந்து, கக்கத்தி
லிருக்குஞ் சிக்கத்திற்சிக்கி, இவன் கைக்குள்
ளாய் விட்டேன். நான் மகா தீவினையுடை
யவள். என்னையொரு பொருட்டாக நினைத்
து நீர் மனநையவேண்டிய மார்க்கமென்ன
உம்முடையபேரறிவாண்டமை எங்கேபோ
க்கடித்துக்கொண்டீர். நித்தியா நித்திய வ
ஸ்து விவேகக் கியானத்தை மறந்து, சம
யம் வந்தவேளையில் மயங்கித் தாபந்திரியப்
படலாகுமா அப்படி படுவதினால் பயனுண்
டாகுமா இது நமக்கு முன்னும் பின்னும் ந
டந்திருக்கிற காரியந்தானே. நாமும் பல
முறை அறிந்திருக்கின்றதுதானே. போன
துபோக நின்றவரைக்கு நிலைதவறாமலிருந்
து, என்றென்றைக்கும் பயமில்லாதஇன்பத்
தைத்தேடும். என்னுறவைத் துறவாகக்
கொள்ளும் இந்த வேடனுடைய சமுசாரவி
சார சல்லியம் எப்பேர்ப்பட்டதோஇவனது
பசி யெத்தன்மையுடையதோ நானொரு பி
ராணி அகப்பட்டதை நம்பி- வேறு ஆகார
ம் அகப்படாமையால் வெம்பி, மழை,குளிர்
காற்று, இவைகளினால் மாய்ந்தவர்போல்
ஓய்ந்துகிடக்கின்றான். நான்இவன துப்பயி
லடங்கி உய்யும்வகையில்லாமல் உபாதிப்படு
கிறேன். ஆனதால் இந்தவேளை என் பிரா
ணன் விருதாவிற்போகாமல், இவனுடைய
பசிக்குங் களைக்கும் உபயோகப்படும்படி நீர்
சகாயம் பண்ணும்.

ஐயா இவ்வுலகத்தில்தோற்றப்படுவதா
கிய நாமரூபமாவதெல்லாம் நசியும் பொரு
ளேயல்லது வேறல்ல, இன்னும் பற்பலநா
ளிருந்தாலும், ஒருநாளிறப்பது நிச்சயம்.
தூங்குவதுபோலிறப்பு தூங்கி விழிப்பது
போற்பிறப்பு, இதையறிந்தும் பிரபஞ்சத்
தோர் எண்ணுவதெல்லாம் பறப்பு. இப்ப
றப்பினால் நமக்கென்ன உண்டாகுஞ்சிறப்பு
ஐயோ இதுவே பந்தம். இந்தப் புன்பிறவி
யின் போகந்தெரிந்த புறவினமான நீர் கல
ங்கி மயங்குவதற்குக் காரணம் யாதோ அறி
யேன். இந்த விசாரத்தை விவேக விசார
ணையால் விட்டுவிடும். நாம் வாழ்ந்த இல்
லற தருமம் பழுதுபட்டு நரகத்துக் கேது
வையாகாமல், இவ்வேடுவனுக்கு உபயோக
மாகும்படியாய்ச் செய்யும். இந்தவேடன் எ
ண்ணியவெண்ணம்இன்னும் நிறைவேறாம
லிருக்கின்றது. நாம் திருந்திய மனைவாழ்க்
கையிலிருந்த விடத்தில் விரும்பிவந்த விரு
ந்தாளிக்கு ஊட்டிவைக்கவேண்டிய ஒருமை
யல்லவா வந்த விருந்தாளி பட்டினியிருக்க
நாம்பார்த்திருப்பது பாபமல்லவா நம்மிட
வீடேறிவந்தவன் எப்படிப்பட்ட பகைவனா
யிருந்தாலும், அவனை நாம் அதிதியாய் நி
னைத்து ஆதரிக்கவேண்டுமே. ஆகையால்,
இந்த வேடனாகிய அதிதியை ஆயாசந் தீர்
த்துப் பூசைபண்ணிவையும். ஐயனே! உம்
மாலே யெனக்கும் நல்ல பதவி கிடைக்கும்,
இனிமேல் நாமிருவருங் கூடிவாழ நேரிட்
டாலும், இதுவரையில் அநுபவித்த ஆசா
பாசமேயல்லது வேறே நூதனமுண்டோ?
எப்போதும் உமக்கு முந்திப்போக வேண்டு
மென்று முழுமனதுடனினைத்த என்னெண்
ணத்தின் வண்ணந் திண்ணமாயது. அண்
ணலே ஆகிலுங் கண்ணியமாயிறந்துநமது
பந்துக்களுஞ் சிறந்துபார்க்கப் பாக்கியம் ப
ண்ணமற்போன பாபமென்னமோ தெரிய
வில்லை. வினையின்பயனை ஒருவராலும் வெல்
லமுடியாது. நாம் மனோவாக்குக் காயங்களி
னால் வஞ்சனையில்லாமல் நடந்தால், வருவ
து வரட்டும். போவது போகட்டும். இப்
போது நீர் நன்றாயிருக்க ஆபத்தினால் ஒரு
வன் அவஸ்தையடைந்து விழுந்தால் அ
தைக்கண்டுஞ் சும்மாயிருப்பது பாபத்திற் கி
டமல்லவோ? என்று அநேகவிதமாகப் புரு
டன் மனதைத்தேற்றிய பெண் புறாவின்பே
ச்சைக்கேட்ட ஆண்புறாவானது, அறிவுட
ன் தெளிவடைந்து, ஸ்திரீயின்பேரி லிருந்
த சொந்த பந்தத்தைத் துலைத்து, மழைக்
காற்று விட்டும் எழுந்திராமல் வகைமோச
மாய் விழுந்திருக்கிற வேடனண்டைக்கு வ
ந்து, நாங்களிருக்கும் இடந்தேடிவந்தநாத
னே! நீரிப்போது அடைந்திருக்கும் வருத்
தத்திற்கு நான் செய்யவேண்டிய உபசார
மின்னதென்று கட்டளையிட்டருளினால், அ
வ்வாறு நடந்து கொள்ளுகிறே னென்று
சொல்லிற்று. அதற்கு வேடன் சொல்லு
கிறான். ஓ ஆண்புறாவே! நானிந்தவேளை
பிழைத் தெழும்படிக்கு என்னுடைய குளி
ரைப்போக்கி விடுவையாகில், இதற்குமிஞ்சி
ன உபசாரமும், உபகாரமும், உதவியுமில்லை

யென்று வேண்டிக்கொண்டான்.

கேளப்பா தருமநந்தனு! அன்னேரமே அந்தப்புருவானது அதிகவேகமாய்ப்பறந்து, முறிந்து கிடக்கின்ற சிறிய விறகுகளை மூக்கினுற்கொண்டுவந்து சேர்த்து, காட்டித் தீமூட்டி, தன்னுடைய ரக்கையைவீசி, அவ்வீசுதலினு லுண்டாகுங் காற்றினுல் எரியச் செய்து, வேடனுக்குச் சூடுறைக்கப் பண்ணியது. அப்போது வேடன் புரண்டெழுந்து முன்னும்பின்னுந் தீக்காச்சி, குளிர்போய் ஈரம்புலர்ந்து திமிர் நீங்கினவனுய்க்கையைக்காலை நீட்டியசைத்து,நெட்டையிட்டு, கோட்டுவாய்விட்டு, மெள்ள எழுந்து, மறுபடியு மிருந்து, அதிகபசியினுல் வருந்திவாடுகிறான். அப்படி வாடுகிற வேடனுடைய வெறுமையறிந்த அந்த ஆண்புருவானது அவனை நோக்கி, ஓ அரண்யவாசி! உமக்கு மிகவும் இளைப்புங்களைப்பும்வந்திருக்கிறதாய் எனக்குத் தோற்றுகின்றது. நானிந்தப் பட்சி யுடம்பெடுத்ததற்கு உமது பசியாறச் செய்வதே எனக்குப் போதுமான பிரயோசனமாகக் காணப்படுகிறது. ஆகையால் நீர் பசியினுலே வருத்தப்படவேண்டாம். நானிந்த நெருப்பிலே வீழ்ந்து இறக்கிறேன். என்னை யெடுத்துப் புசித்து உமது பசியைத் தீர்த்துக்கொள்ளும் என்று சொல்லி ஆகாயத்திலெழுந்து படபடவென்று ரக்கையையுதறி, ஓ ஜகத்ரக்ஷகனுகிய கடவுளே! உமதாக்கினையால் நல்வினை தீவினைப்பயனை யனுபவிப்பதற்குளடுத்த இந்தத் தேகமானது பசித்துவந்த அதிதியாகிய வேடனுக்கு இரையாகக்கடவது. என்று மூன்றுவிசைகூவி ரெக்கையை யொடிக்கிக்கொண்டு நெருப்பில் வீழ்ந்திறந்தது அதைப்பார்த்திருந்த வேடன் அதிசயப்பட்டு, ஒருபக்கம் வருந்துகிறபசியால் துன்பப்பட்டு, அந்தப்புருவை வெந்தபின் யெடுத்துச் சாப்பிட்டுத் தண்ணீர் குடித்துப் பசிதணிந்து, அகங்குளிர்ந்து, முகமலர்ந்து தருமத்தை நினைத்து, இத்தரணியிற் பிறந்த ஆத்மாக்களிற் பேரறிவுடைய புருவானது மெத்த அருமையானது. நானிதுவரையிலும் இப்பேர்ப்பட்ட செந்துவைப் பார்த்ததில்லை. ஐயோ! இதனது பெண்சாதி என் கையிலகப்பட்டிருக்க இப்பிரபஞ்ச வாழ்க்கைப்படிக்குப் புலம்பித்தவித்து, அந்தத் துக்கத்தை உடனே மறந்து, நமதுயிரையும் புரந்து, நமது குளிரையும் போக்கி, தன்னுயிரையு மாய்த்து, தன்னுடலையு நமதுபசிக்கு உதவியாக்கியது. இத்தனையுபகாரம் பண்ணிய ஒரு பட்சிக்கிருந்த நல்லறிவு நமக்கில்லாமற் போனதென்னை? நாம் மானிட தேகமும் வழிதுறை தெரிந்த கியானமு முடைத்தாயிருந்தும், பாழான பசி நிமித்தம் அதைப் புசித்துவிட்டோமே ஐயோ நம்மைப்போற் பாபசனனமில்லை.

என்றிவ்வாறு பரதவித்த வேடனவன் சிறிதுநேரஞ் சோர்வுற்றிருந்து மீட்டுந் தெளிந்தெழுந்து, ஆ! ஆ! என்ன காரியஞ் செய்தோம்? இந்த அல்பவுயிரை வளர்ப்பதற்காகவா சில ஆத்மாக்களை வதைப்பது. அப்படி உயிர்வதை செய்து உண்டும், சுகித்தும், களித்தும், என்னபலனைப்பெற்றோம்? இந்தக் கொலைத்தொழில் புரிந்து குடும்பத்துடன்கூடி மகிழ்ந்த நமது தந்தை, தாய், பாட்டன், இவர் முதலியபேர்கள் எங்கே? எல்லோரும் இறந்துதானே போனுர்கள். இருந்தவரொருவருமில்லையே. இந்த ஆண்புருவைப் போன்ற புத்திமான்கள் மனிதருள்ளுங் கிடையாரே. ஏதேது? இன்னுமென்ன தீவினைக்காளா யிருக்கின்றோமோ தெரியாது. என்று மனதிளகிவாடி, வலைப்பையிலிருக்கிற பெண்புருவைக் கையிலெடுத்துக் கொண்டு உன் புருஷனுக் கொப்பாகியபுண்ணியவானை இம்மண்ணுலகிற் கண்டதில்லை. கேட்டதுமில்லை, அவரை நினைக்குந்தோறும் எனக்கு மனக்கலக்கமாகிறது. இப்படிப்பட்ட உத்தமனுக்கு நான் துரோகியாய்விட்டேன். மிகுபாபியாய் விட்டேன். என்னுவியோ கரைகிறது. என்னுக்கை பரதவித்தலைகிறது. ஆனபடியால் அவருடன் கூடிப்பிரியாமல் வாழ்ந்த உன்னை எரியாற் சுட்டுக் கொல்லமாட்டேன். என் பாழான அங்கத்திற்கு இரையாக வொட்டேன். உனக்கிஷ்டமான விடத்திற்குப் போய்விடென்று விட்டுவிட்டான் அந்த வேடுவன் கையினின்று விடுபட்ட பெண்புருவானது வானத்திலுயர்ந்து பறந்து, வட்டமாய்ச் சுற்றிவந்து வேடனையடுத்து ஐயா நானும் என் புருஷனும் (இல்லறமல்லது நல்லறமன்று) என்னும் விதியைவிரும்பி வாழ்ந்தோம். இருவரும் மனங்கலந்துஇன்பத்திலாழ்ந்தோம். நீர் எங்களை யொருபொருளாய் நினைத்து நாவுக்குருசை தேடி, நாங்களிருக்கும் வீட்டைக்கூடி வந்த நீர் அதிதியாய் விட்டீர்.

இல்லறதருமத்தை இச்சித்தபேர்கள் பரதேசிகளுக்கு அன்னம் படைத்து, பிராணதத்தங் கேட்பினுங் கொடுத்து, அவர்கள் கொண்ட பசியகற்றிப் பரிவுடனனுப்ப வேண்டியது. அப்பாதகரத்தால் வேதாகம விதியின் படிக்கு என் புருஷன் உம்முடைய பசிக்கு உணவாயினர். இப்போது நீரென்னை விடுத்து எங்கேயாகிலும் போய் இன்பத்தையடைந்து வாழென்றிசைத்தீர். அன்பனே! என்னுதன் வெளிப் பட்டபோதே எனக்குப் போதம் போய்விட்டது. என்னன்பனீங்கியவப்போதே எனக்கு ஆசையும் அலங்காரமுமகன்றன. கொண்டவன் கலைந்த போதே என் கொண்டனையுங் குலைந்தது. மகிழ்நன் மடிந்தபோதே என் வாழ்வுமடிந்தது. இனியென்வாணுள் முடிய வேண்டியதே. நான் என்னுயகனுக்குப் பாரியாளாகையால் உயிர் போய் உடலிருப்பதுபோற் பதிபோய் பாரியாளிருப்பதிற் பயனென்ன?

ஐயா வேடர்கோவே! ஓர் சற்குண நாயகனுக்குச் சையோகத்தலைவி யொத்திருந்தால், (ஐயமிட்டுண்) என்று சுருதி வாக்கியஞ் சொல்லி யிருக்கின்றது. அதுபோலவே என்னுயகன் அதிதியாகிய உமக்கு ஆத்மதிருப்திப் பண்ணி வைத்தார். நானும் ஒத்து நடந்தால் மாத்திரம் அவருதவிய ஆகாரப்பலன் பயன்படும், நான் அவரிஷ்டம்போற் கலந்து நடவாவிடில், இதுவரையிலும் நாங்கள் செய்துவந்த இல்லறவாழ்வும், வ்ரதமும், தருமதானமும் நிஷ்பலமாய்ப்போம். எனக்கு நல்லகதியில்லை. என்பதியின் எண்ணம்போல் நானும் உள்ளத்திற் பதிவிப்பேனுகில், நாங்களிருவரும் பதவியடைவோம். இல்லாமற்போனுல் அவரங்கும் நானிங்கும் அலைந்து நரகத்தில் வீழ்வோம். ஆதலால் என் காதலன் உம்மைப்போலொத்த நல்லோருக்குப் பசியாற்றியும் வருத்தப்பட்டாரென்கிற பேர் வராமல், என்னையுங்கூட அனுப்பிவிடும். ஓ ஏந்தலே! ஸ்திரீகளுக்குப் புருஷனைவிடத் தெய்வம் வேறில்லை விரத நோன்பில்லை, கோவிற் குளமில்லை. மூர்த்தி தீர்த்தமில்லை. மஞ்சளில்லை, மாலையில்லை, வாசனையில்லை, வாடையில்லை,குங்குமமில்லை பூஷணமில்லை, எல்லாச்சிறப்பும் புருஷனேயன்லி வேறென்றுமில்லை. இந்தந் தருமங்கள் அருமையாகப் போதித்து இதனது உண்மையைத் தெரிவித்த பேர்களும், தெரிந்து நடந்த உத்தமஸ்திரீகளும் எமவாதனையில்லாமல் இகபர சாதனத்தை யென்றும் பெறுவார்கள். ஆதலால் நீர் என்னைப்பட்சிக்க ஆசைப்பட்டுப் பிடித்த இச்சை தீரப் புசிக்கக்கடவீர். என் கணவனுடன் நானும் போய்ச்சேருகிறேனென்று உயரவெழும்பித் தலைகீழாய் வீழ்ந்து, தன்னுயகனிறந்தநெருப்பிலே நானும் பிராணனை விட்டது. உடனே அப்புருக்களிரண்டுந் திவ்விய தேகம் பெற்று, தேவவிமானத்திலுற்று, தேவதுந்துமி முழங்க, தேவகூட்ட நெருங்க அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோர்த்தமை, முதலாகிய அப்சரஸ்திரீகள் நடனம்புரிய, தேவரிஷிகளும் அவர்களுடைய தருமபத்தினிகளும் ஆலவட்டம், சாமரம், குடை, கொடி, பூரணகும்பம், மாணிக்கதீபம், இவைமுதலிய உபசாரங்கள் செய்துவர, தேவேந்திரன், சப்தரிஷிகள், அஷ்டவசுக்கள், திக்குப்பாலகர், உருத்திரகணங்கள், பூதகணங்கள், தேவகணங்கள், ராக்ஷதகணங்கள், சிவகணங்கள் முதலிய பேர்களெல்லாம் ஜெயஜெயவென்று கொண்டாட, இவ்வளவு சம்பிரமத்துடன் பெண்சாதி புருஷனுக மனதொத்து வாழ்ந்த புருவிரண்டுஞ் சுவர்க்கலோகம்போய்ச் சுகசீவிகளா யிருந்ததுகள்.

அப்பா தருமபூபதி! இத்தியாதி விபவங்களைக் கண்டவனுகிய வேடுவன், மதிமருண்டு, ஐ ஐயோ!! இவ்வாறுகியசற்குணருக்கு துரோகியானேனே கொலைபாதகனுனேனே தவக்குறையானேனே பாபியாய்ப் போனேனே பதிதனுனேனே என்று மூர்ச்சைபோய் பின்னுந்தெளிந்து, (நன்மைசெய்தார் நலம் பெறுவர், தீமைசெய்து தீமைபெறுவர்.) என்னும் பழமொழிக்கிணங்க, பிராண ஆசையையுந் தேகாபிமானத்தையும் போக்கி நமக்கு விருந்தாகயிருந்த புருக்களிருவருந் தெய்வதேகம் பெற்றுத் தேவலோக முற்றூர்களே அவர்களைக்கண்டு தரிசிக்க நமக்குக் கிடையாதா? மேலும் அவர்களைத் தின்றிருக்கிற நமது கர்ப்பம் புனிதம் பெரிதா? நான் பாபியானபோதிலும் நல்லோர்களால் உபசரிக்கப்பட்டு அவர்களையே உணவாகக்கொண்ட என்னுடலானது கதிபெறும லிருக்கப்போமோ? இனிமேலிந்தத்தேகம் இருந்தென்ன இறந்தென்ன? வீடு, வாசல்பெண்சாதி பிள்ளை இவர்களில் யாருக்கு யார் சம்பந்தம் இதென்ன வீண் தொந்தம்? என்று வேட

னுக்கு விக்கியானம் பிறந்து, இகத்தினசை யை வெறுத்து, பரத்தினசையை விரும்பி, நிலத்தின்குணம் நீரைப் பலசுவையாகவேறு படுத்துவதுபோல், குலத்தின்குணம்நம்மை இக்கூறாக்கி விட்டது. அநேக உயிர்வதை கண்டோம், அவைகளைப்பசிக்கு உட்கொண் டோம். கொலைத் தொழிலுக்கு ஆலயமா னோம். பாபத்திற்கு அதிபதியானோம் இன் னுமிருந்து வினைமூட்டை கட்டிக்கொண்டு எமபடாளிடத்தி லகப்பட்டு இருபத்தெண் கோடி நரகங்களிலும் வீழ்ந்து இம்சைப் படுவதைப் பார்க்கிலும், இப்போதே தப்பி த்துக்கொள்வது ஒப்பென்று களங்கரகிதமா கிய கபோதமிரண்டையுங் கியானோபதேசக் குருவாகக்கொண்டு, அப்புறாக்களது திருவ டியைத் தியானித்து இதனைச் சொல்லுவ தானான்.

ஓ என் குருசுவாமிகளே! நல்லோர்க ளைக் கண்டாலும், நாவிற் பேசிக்கொண்டா லும், சரணமடைந்தாலும், சற்பத்தி செய் தாலும், அவனுக்கு நல்லகதி உடனேஉண் டாமென்று வேதசாஸ்திரங்களில் விளம்பி யிருப்பதாய் மேலோர் சொல்லுகின்றார்கள். அவைகளைக் கிளிப்பிள்ளை போல் நெடுநா ளாய்க் கேட்டுக்கொண்டிருந்த நான், உங்க ளைக்கண்டு தரிசித்தேன். கைப்பிடித்துக் கொண்டு பரிசித்தேன். கடித்துப்புசித்தேன் என் பசியைத் தவிர்த்தேன். இப்பவும் உங் களைக் கதியென்று நம்பினேன் நம்பினேன். என்று பாபரகிதமான பவித்திர மனத்தை யுடையவனாகி, காட்டுத்தீயில் விழுந்து கால முடிந்து போனான். தட்சணமே இந்திர விமானம் வந்தது. நெருப்புக்குப் பட்சண மான வேடன் தேவரூபம் பெற்றுத் தேரி லேறிக்கொண்டு, பல சிறப்புக்களுடன் தேவலோகம் புகுந்தான். ஆதலால், பெரிய வர்களுடன் கலந்துபேசிய மூலத்தினாலாவ து, அவர்களுடைய கோபக்குரோதத்தினா லாவது, நன்மார்க்கமும், நற்கதியும், நற்பாக் கியமும் உண்டாகும். பெரியோர்கள் நீறு பூத்த நெருப்புப்போல் ஒன்றிலுந் தட்டுப் படாமல், உலகத்தோடும் ஒத்திருப்பார்கள். ஏதோ ஒருநாளைக்கு இஷ்டம்வந்தால் இரா ஜ கொலுவுக்கு வருவார்கள். அவர்களைக் கண்டவுடனே எந்தவேலையி லிருந்தாலும் நிறுத்திப்போட்டு, உபசரித்துத் தரிசித்து, ஒருநாட் கண்டதை பலநாளுங் கண்டதாக உணர்விலழுத்திப் பிரியம் வைக்கவேண்டும். அதனால் ராசர்கள் சுகப்பட்டு இடையூறகன் று இன்பத்துடன் வாழ்வார்கள். இதற்குத் தான் (பெரியாரைத் துணைக்கொள்.) என்று பெரியோர்கள் பேசியிருக்கின்றார்கள் சினே கம் பண்ணத்தகாத தீயரைக்குறித்துச் செப் புகிறேன் கேள்.

## தீயோர் நட்பைக்குறித்துக் கூறிய பூனையின் கதை.

ஓ குவளைத்தார் புனைந்த கோமானே! விருட்சங்கள் அடர்ந்து நெருங்கியகாட்டில் ஒரு ஆலமரத்தினடிவாரத்திற் பெரிய வளை வைத்துக்கொண்டு, தன்னந்தனியாய் தங்க ளினத்துடன் சாராமல், பலசாலியும் புத்தி மானுமாகிய பலிதனென்னும் எலியொன்று வெகுநாளாயிருந்தது. அந்த ஆலமரத்தின் மேலாயுள்ள ஓர் கிளை நுனியில் ரோமசன்ம னென்கிற பூனையிருந்தது. இப்படியிருக்கு நாளில் சூரியசந்திரர்கிரணநுழையக்கூடாத அந்தக்காட்டில் மிகுந்த கடினசித்தமுள்ள ஓர் வேடன் நாள்தோறும் வந்துபுகுந்து, அவ்விடத்திலிருக்கிற மிருகங்களையும், பக்ஷி களையும் பிடித்துக்கொண்டு போய்விடுவான். அப்படியாயிருந்த வேடன் ஒருநாள் அந்த ஆலமரத்தின் கிளையின்பேரிற் பூனையிருக்கக் கண்டு, அதைப் பிடித்துத் தின்னவேண்டு மென்று விருப்பங்கொண்டு, அப் பூனையில் லாத வேளையில்வந்து அம்மரத்தினடியில் ஒரு கண்ணிவைத்துப்போனான் இரைதேடி த் திண்ணப்போயிருந்த பூனையானது திரும் பிவந்து மரத்தில் ஏறப்போகும்போது, வே டுவன் வலைகட்டி யிருக்கின்றானென்று தெரி யாமல் ஸ்ரீகளினுடைய மாயமயக்கவலையில க்ப்படும் மதியற்ற மானிடப்பாவியர்போல் அந்த வலையிலகப்பட்டுக் கொண்டு, ஆ! ஆ! மோசம் போனேமே, என்றிரைந்து அழுது பிராணபயப்பெற்று, பதைபதைத்து, துடி துடித்து பெருமூச்சுவிட்டு, நாமுடியுங்கால மிதுவா யிருந்ததோவென்று நான்கு திக்கு நோக்கி, படுபாவியாகிய வேடன் எங்குபார்த் திருக்கின்றானோ? பதுங்கி யிருப்பானோ? நாம் அகப்பட்ட சவுக்கையறிந்து ஓடிவரு வானோ? என்று காலினாலும், கையினாலும், வாயினாலும், வலையைக் கிழித்துப்பார்த்து, தன்னால் முடியாமல் தவித்து, தெய்வத்தை

நினைத்து, ஓ தெய்வமே! இதுவரையிலும் பெருமையாய்ப் பிழைத்தேன். இப்போது வேடன் வலையில்வீழ்ந்து கட்டுண்டேன். இனியென்கதி யெப்படியோ நானறியேன். என்று மனங்கலங்கி அங்கலாய்த்தது.

அப்போது அவ்விருக்ஷத்தின் அடிவாரத்திலிருக்கின்ற பலிதனென்னும் எலிக்கு இந்தப் பூனை படுந்துயரந் தெரியும்படியாய் ஒரு கீரிப்பிள்ளையுங் கோட்டானுங்கூவின. அவற்றின் ஓசைகேட்ட வெலியோடிவந்து, பூனைக்குப் பக்கத்தில் நின்றது. இதைக் கண்டவுடன் கீரியுங் கோட்டானுங் கிளம்பித் தாங்களிருக்குமிடத்திற்குப் போய்விட்டன. இப்பால் ஓடிவந்த எலியானது வலைக்குளகப்பட்டிருக்கும் பூனையைப் பார்த்து, ஓய் ரோமசன்மனென்னும் பூனையே! இப்போது என்னாலே நீர் உயிர்பிழைக்க வேண்டியிருக்கிறது நீரகப்பட்டுக்கொண்ட வலையை என் பல்லினாலே கடித்துவிட்டு உம்மைக் காப்பாற்றுகிறேன், பயப்படாதீர், கவலைவையாதீர், நானப்படி உபகாரம் பண்ணுவேனாகில், நீர்செய்யப்போகிற பிரதியுபகாரமென்ன? என்னையும் எங்களினத்தையுங் கண்டால் வாழைப்பழம்போல்விழிங்குவது தானே உமக்குரியமரியாதை? நீங்கள் எலிப்புலியென்றே பேர் படைத்தவர்களல்லவா? அப்பா! உடனே லபுக்கென்றுவாயிற்போட்டுக்கொள்ளுவீர்களே, நன்மை செய்தார்க்கு தீமைசெய்கிற சாதியாச்சே, நீங்கள் குலாச்சாரதருமம் விட்டுவிடுவீர்களா? ஒருக்காலும் விடமாட்டீர்கள். போகட்டும், ஆபத்துவந்திருக்கும்போது அவைகளையெல்லாம் பேசப்போகாது, உள்ளபடிமுடியும், தெய்வமிருக்கிறது. ஐயா! எங்கள் குலத்தின் பேரில் உங்களினத்தாருக்கிருக்கும் விரோதத்தை வைக்காமலென்னிடத்தி லிஷ்டம்வைத்துச் சிநேகமாயிருப்பீரா? நானினைக்கவில்லை. ஆகிலுஞ் சாதியின் குணத்தைக் காட்டாமல் தயவாயிருப்பேனென்று உறுதியாய்ச்சொல்லும். என்று பலிதனென்னும் எலி கேட்கவே, பஞ்சேந்திரியங்களும் நிலைதவறிக் குலாலன்சக்கரம்போற்சுழன்றுகொண்டிருக்கு மனதையுடையரோமசன்மனென்னும்பூனை வெகுதூரம் பார்வைபெற்றஅவ்வெலியைப் பார்த்துச் சொல்லுகின்றது.

ஐயா எலியரசனே! ஓ என்பிராண ரட்சகனே! இந்தவேளையில் எனக்குப் பிராண தாரைவார்த்தால் இந்த உபகாரத்தைநானெந்தநாளையிலுமறவேன், நீர் கெட்டியாய்நம்பும், சிலர் காரியத்தைப்பற்றித் தழுவுவார்கள், காரியமுடிந்தால் கடைக்கண்ணாலும் பாரார்கள். நானப்படியல்ல, காரியமுடியட்டும் மூடியாமற்போகட்டும், ஒன்றின்பேரிற் கவலைகொண்டால் அதுவே பார்வையாயிருப்பது எங்கள் குலவேலை. ஆதலால் தருமதானத்தைக் கெடுத்தவரானாலும், பாபஞ்செய்யும் பதிதரானாலும், சத்தியந்தப்புஞ் சண்டாளரானாலும், பிராணபிச்சைகொடுத்தநன்றியை மறப்பார்களோ? நீர் நினைக்கின்றீரா? ஐயோ! பெருங்குறையாகிய பிறவிக்கடலைக் கடக்கக்கருதிய கருவாளிகள்செய்நன்றிகுன்றுவார்களா? உயிருதவிக்கு மிஞ்சினவுதவி வேறில்லை. ஈதெனக்கு உண்மையாய்த்தெரியும். அறக்கடவுளாகிய தருமதேவதையே சொல்லிய தருமத்திற் றப்பிப்போனாலும், என்னுடைய சொல்லுஞ் சத்தியமுந் தப்பமாட்டேன். இது சத்தியம் என் சொல்லை நம்பி வேடன் வருவதற்குமுன்னே விரைந்தோடிவந்து வலையையறுத்து என் மயக்கத்தைத்தீரும். உயிர்பிச்சைதாரும். உமக்குச் சகல கீர்த்தியும் புண்ணியமும் உண்டாகும், என்னால் நீர் நல்லபேறுபெறுவீர், தாமசம் பண்ணாதீர், என்னுயிரைரட்சியும். என்னுயிருள்ளமட்டும், என் கால்வழிச்சந்ததியுண்டானமட்டும், உம்மை எங்கள் வம்சத்திற்கு உயிரளித்ததெய்வமென்றுஉச்சவங்களுடன் தலைமேற் சுமக்கின்றோம், விளக்கேற்றிவைத்து கும்பிடுகிறோம்,சந்தேகப்படாமல்வாரும், சப்தகோடி மகாமந்திரங்களும் அளவிறந்தவாகமங்களுஞ் சாட்சியாகச் சத்தியம்பேசினேன். இனி தொற்றப்பமாட்டேன். துக்கத்தில் மூழ்கியவென்னை அக்கரையாய்க் கரையேற்றும். மெத்தப் பேசுகிறதற்கு இந்தவேளை பக்குவமாயில்லை, நான் வலையை விட்டு வெளிவந்தவுடனே உம்மைவிட்டு அப்பாலே போவேனென்று எண்ணாதீர், நீர் என் கர்ப்பத்திலிருக்க வேண்டிய மனிதனாச்சே, உம்மைவிட எனக்கு வேறுதுணையில்லை. பிராணன் போகிறகாலத்தில் எங்கள் குலதெய்வம்போற் குறுக்கேவந்து வீழ்ந்து என்னுயிரைக் காத்துரட்சித்த உமக்கு ஒரு தீங்குநினைக்கக்கூடுமா? உமக்குத்தானே நான் தீங்கிழைப்பேனா? இப்படியும் பாவிகளிருப்பார்களா? தெய்வந்தான் பொறுக்குமா? தீங்

குசெய்யுந் தீயர்களைத்தெய்வஞ்சீரார்தா? ஏன் விபரீதமெண்ணிப்பார்க்கின்றீர். ஒருக்காலு மப்படிவாரா து! ஏன் சொல்லுறுதியைநம் பும். சீக்கிரம்வாரும். என்று அனந்தவித மாய் வருந்திச்சொல்லியது.

இப்படி சொல்லுகின்ற பூனையை எலி யானது பார்த்து மனதிரங்கி பயப்படாதீர், உமக்குப் பிராணபயந் தீர்க்கின்றேன். நீர் சந்தோஷமாயிரும் என்று சொல்லியதே யொழிய அவ்வலையருகிற் கிட்டவுமில்லை, கடிக்கவுமில்லை, சும்மாய்க் குந்திக்கொண்டி ருந்தது. அதைக்கண்ட பூனை எலியைக் கூவி, ஏனையா! இன்னுமனதிரங்கவில்லையா என்னை நம்பவில்லையா? என் வார்த்தையிலு ண்மையில்லையா? உறியைச்சீக்கிரங்கடிக்கவி ல்லையா? நன்மை செய்தார்க்குத் தீமைசெய் தால் தனக்குத்தானே கேடுநாடிவரும், தீ மையோடிவரும், வறுமைமூடிவரும், மைந் தர் பெண்டிர் வாடியுறும், ஆதலால் சீக்கி ரந் தயைசெய்யும். என்று திக்கு நோக்கி விழுந்து, தொழுது, அழுது, வேண்டிக் கொள்ளவும், அந்த ரோமசன்மனுகியபூனை யைப் பலிதனென்னும் எலிநோக்கி,ஓமார்ச் சாலராஜனே! நான் தூரத்திலிருக்கிறே னென்று நீர் யோசிக்காதீர். இந்த வலைக் குரிய வனசரன் கிட்டவந்தாற் பட்டென்ற றுத்து உம்மைப் பாதுகாப்பேன். இப்போ து முன்னதாக உம்மை விடமாட்டேன். அதேனென்ருல் தனக்குமேற்பட்ட சத்து ருக்கணேசம் என்றைக்கும் ஆகாது. அவர் களைச் சிநேகிக்கவேண்டிய சந்தர்ப்பம் நேரி ட்டால், தூரத்தில்வைத்து மனோபயத்துட ன் சாக்கிரதையாய் உறவாடி யனுப்பவேண் டும். அப்படி செய்யாமல் ஏமாறி நெருங்கி ஞல், உடனே துன்பமுண்டாம். இவ்வாறு நீதிசாஞ்திரத்தின் கருத்து. இவ்விதியை நான் கொஞ்சங் கேட்டிருக்கின்றேன். உம் மைக்குறித்து நீர் யோசனை பண்ணவேண் டாம். அந்த நீசவேடனைக் கண்டவுடனே ஒரு நிமிஷத்திலே வலையைக்கடித்து உம் மை வெளிப்படுத்துவேன் அதற்குமுன் அ வசரப்படலாகாது. எண்ணித் துணியாத காரியமிளப்பத்திற்கேதுவாம். நீர் கிலேசப் படவேண்டாம், என்று சொல்லிக்கொண்டி ருக்கும்போதே எமபடாளைப்போல் தண்டும் கத்தையும், தடியும், வலையும், வில்லும், பாண மும், வேலும், கோலுங்கொண்டு, கயிறுங் கையுமாய் வேடரோடி வந்தார்கள். அவர் களைக்கண்ட பூனை நடுங்கி, ஓ பலிதனென் னும் எலியரசனே! இனி யென்னவுபகாரம் பண்ணப்போகிறீர்? என்று பரதவித்துக் கொண்டிருக்கும் போது, வேடர்களுங்கிட் டி நெருங்கிவிட்டார்கள். எலியானது இது தான் சமயமென்று வலையைக்கடித்துப்போ ட்டது. அவ்வலைக்கு ளகப்பட்டிருந்த பூனை யானது சமுசாரவிசாரபந்தத்தை யறுத்துக் கொண்டோடுஞ் சன்னியாசியைப்போல் ஓ டிப்போயது. எலியுந் தன்னிருப்பிடத்தில் நுழைந்துகொண்டது ஓடிவந்தவேடுவர்பா ர்த்து உறங்கிப்போனார்கள்.

அன்றுபோக மற்றநாள் ரோமசன்ம ஞகிய பூனை பலிதனென்னும் எலியண்டை க்குவந்து, ஓ மஹானுபாவா! எனக்குப்பிரா ணுதாரமாகிய புண்ணியனே! என்னுபத் தைத் தீர்த்த அன்பனே! எனக்கு வே றுதவிஇல்லை, ஆதரவில்லை. தாயும் தந் தையும், குருவும் தெய்வமும், நீரென்று சாஷ்டாங்கமாகத் தெண்டனிடுகிறேன். எ ளியேன்மீது தயவுவைத்து வெளியேவாரு ம். நேற்றெல்லாம் பாவியாகிய வேடன் வலையிற்சிக்கிப் பசியாயிருந்தேன். இப்போ துதான் எங்கேயாகிலும்போய் இரைதேட வேண்டும். உதவிசெய்த உம்மைப் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்தேன். உம் மைக்கண்டால் என் பசியாறிப்போம். இன் றுமுதல் நாமிருவரும் ஒன்றுபட்டுச்சந்தோ ஷமாயிருப்போம். உமக்கு ஒரு பொல்லாங் குமில்லாமல் நானும்மைக் கர்ப்பத்தில் வை த்துக் காக்கிறேன். ஓ என்னுயிரை மீட்டுக் கொடுத்த இறைவனே! என்மீது சற்றே தயவுவைத்துவந்துஎன்களை தீர்த்துப்போம் என்று பூனைசொல்ல, அம்மொழியைக்கேட் ட எலியானது, ஐயா பெரியவராகிய பூனை யே! நம்மிருவருக்குஞ் சிநேகமென்பது வி ட்டுப்போகாது. மேகம் வானத்திற் கனத் தாற் பூமியிலிருக்கும் மயில்களாடுகின்றன. சூரியனுதித்தால் தாமரைமலருகிறது. அ துபோல் அன்பர்களெங்கிருந்தாலும் பட் சம் விடப்போகிறதில்லை. ஆதலால், நாம் இப்போதிருக்கிறதிடத்திலேயே இருப்போ ம். மனதிலிருக்கும் அன்பு மாத்திரம் மற வாதிருக்க வேண்டியதேயன்றி மற்றென்றி ல்லை. நாமிருவரும் ஒரிடத்திற் கூடியிருப்ப தற்குச் சரிப்படாது. நானோ? வளைவாசி நீ

ரோ கிளை வாசி. நமக்கு மூமக்கும் பிரியா விடையா யிருக்கக்கூடுமா? இந்த மட்டிலே நீருநாமுங் கலந்திருக்கிற பேச்சை விட்டு விடும். எல்லாருக்குஞ் சிரேஷ்டராகிய சுக்கி ராச்சாரியார் சீஷருக்குச் சொல்லிக்கொண்டு வந்த தருமங்களிற் சிலது கேட்டிருக்கின் றேன். அதனாற் பெரியோர்கள் பேற்பெற் ருர்கள். முதன்மையாகிய அதனை உமக்குத் தெரிவிக்கிறேன் கியாபகமாகக் கேளும். இ ராஜனானவன் தன்னிலுமுயர்ந்த சத்துருவு டனே யெதிர்த்து யுத்தஞ் செய்து ஜெயிக்க மாட்டாமற் போனால், நேசம் பண்ணிக்கொ ண்டிருந்து, சமயம் பார்த்துக்கொல்லச் சொ ல்லியிருக்கிறது. (பகையாளிகுடியை உறவா டிக்கெடு.) என்று பழமொழியும் ஒன்றுண்டு.

ஆகையால், ஓ மண்டலிமன்னனே! ஒரு வன் இஷ்டத்தைப் பெற்ருேமென்று மகிழ லாகாது. அப்படிக்கு மகிழ்ந்து அந்த நேச த்தை எதார்த்தமென்று நம்பினபேர்கள் து ன்பப்படுவார்கள். தன்னிலுந் தாழ்ந்தவர் களுடன் சிநேகிக்கத்தகாது அதுவும் அப் படியே கீர்த்தியைக் கெடுத்துக் கிலேசத்தை விளைக்கும். ஏதோ ஒரு காரிய நேரிட்டால், அந்தக் கவையைப்பற்றிக் கூடத்திரிந்து காரியசாதனை பண்ணிக்கொண்டு காலங்கழி க்கவேண்டும். மூழுவிரோதியென்றுங் குலப் பகையென்றுந் தெரிந்திருந்துங் கூடிக்குலா வுவது அறிவுள்ள பேருக்கு அடுக்காது. அ து முறையன்று சத்துருவுக்குக் கேடுசெய்யு ங்காரியத்திலேயே கவலை கொண்டிருப்பான் எதிரியை வெல்ல வேண்டுமென்கிற நினைப் பு என்னேரமுஞ் சொலித்துக் கொண்டிருக் கும். கொல்லுவதற்குத் தன்னாலே முடியா தாகில், அவனுக்குப் பகைவனைக்கொண்டா கிலும், அல்லது நல்ல தனத்திலாகிலும், வேலை முடித்துப் போடுவான். சத்துருக்கள் வந்துபணிந்து கும்பிடுவார்களாகில், எதிரி சந்தோஷம் படலாகாது. அதேனெனில், எதிராளிகுவித்த கைக்குள் ஒரு ஆயுதமிருக் கும். மேலும் அவர்கள் துயரம்போல் அபி நயித்து அழுவார்கள் அவர்களுடைய கண் ணீரைத் துடைத்தால் அது விஷமாகயிரு ந்து, துன்ப நீக்கிய அன்பனைக் கொல்லும் ஆகையாலிப்பேர்பட்ட சத்துருவை நம்பி இன்பமாய் நேசிப்பதைப் பார்க்கிலும், அவ ன் கையில் இவன் பிராணனை ஒப்புவித்து விடுகிறது மெத்தவும் உத்தமம். பகைவரிட த்தில் முக்கிய சிநேகஞ் செய்யவேண்டிய மு றை நேரிடுமாகில், நெஞ்சிலே பயம்வைத்து நித்திரையற்று, பஞ்சும், நெருப்பும், பக்கத் திலிருப்பதுபோற் சாக்கிரதையா யிருந்து தப்பித்துக்கொள்ளவேண்டும். தான் போகிற இடமும், படுக்கிறஸ்தானமும், உண்ணுகிற உணவும், எதிரிக்குத் தெரியப்படாது. தெரி ந்தால் உடனே பிராணஹானிவரும். ஓ ஆலவராஜனே! இடையில்வந்த பகையானு லும் ஒருவித்த்தில் மாறிப்போம். இன்னெ ருவரால் ஆறிப்போம். நம்மிருவரை யினத் தினும் உண்டான பகையானது அனாதியா கிய ஈஸ்வரசிருஷ்டியினாலுண்டாகியது. ஆ கையால் என்றைக்குஞ் சேரலாகாது. உமது பேரில் வைத்த இஷ்டத்தை யொருக்காலு மறக்கமாட்டேன். நீர் யென்மனதைவிட்டு நீங்கமாட்டீர். அதைவிட்டு என்னேரமும் உம்முடன் கூடியிருப்பதற்கு ஒப்பமாட்டே ன். என்று பலிதனென்னும் எலி சொல்ல, அதனுடைய வார்த்தையைப் பூனைகேட்டு, எலியின் மனதில் ஐயநேரிட்டிருக்கிறபடியா ல் நாமென்ன சொன்னாலும் நம்பமாட்டா து. நாமேன் வீணாய் இதையழைக்க வேண் டும்? என்று தான்கொண்ட ஆசையைவிட்டு விட்டு, தானிருந்த ஆலமரத்தையும் விட்டு, வேறொரு இடத்தில் வாசம் பண்ணிக்கொ ண்டிருந்தது. பலிதனாகிய எலியும் ஆல மரத்தின் அடிவாரத்தைவிட்டு மற்றோரிடத் திற்குப் போய்விட்டது. ஆகையால், பூமி யை ஆளப்பட்ட அரசர்கள் நல்லோருற வைநாடித் தியோருறவைக் கைவிடுவதோடு தனக்கு மேற்பட்டவர்களையு நேசிக்கப்படா து. இதைக்குறித்து இன்னுமொருகதை சொல்லுகிறேன் கேளென்று வீஷ்மர்புகலு கின்றார்.

---

## செல்வர்களுடைய சிநேக மாகாதென்பதைப் பற்றிக் கூறிய பிரமதத்தன் கதை.

பூச நகரமென்றொரு பட்டணமுண்டு. அப்பட்டணத்திலுள்ள சகலமான பேருங் கொண்டாடா நின்ற பிரமதத்த னென்னும் ராஜன் மிகுந்த பலபராக்கிரமத்துடன் அர சாக்ஷி செய்து வருநாளில், பாரிய உடலையு டைய பறவைச்சாரியென்னும் பட்சி அந்த ராஜனிடத்திற் பேதமில்லாமற் சிநேகம் ப

ண்ணி, பயமற்றுத் தினமும் வந்துகண்டு பேசிக்கொண்டு போகிறதுண்டு அந்த ராஜனுந் தீங்கில்லா மனத்தினை யுடையவனுய் வஞ்சமின்றி நேசித்து வார்த்தையாடி வருவான் அவனை இந்தப்பட்சியானது சிநேகபாத்திரனென்று தன் சிந்தையுட்கொண்டு, மெய்யாகநம்பி தனக்கு அருமையாகப் பிறந்திருக்கிற பக்ஷிப் பிள்ளையை யழைத்துக்கொண்டு இராஜனண்டைக்கு வந்தது. அந்தக் குழந்தையை ராஜன் கண்டு, எடுத்து அணைத்து முத்தமிட்டு கொஞ்சிக்குலாவி விளையாடி உல்லாசமாய்ச் சல்லாபமாய் ஓராசனத்தில் வைத்து, தன் குழந்தைகளைப் பார்க்கிலுஞ் சதமடங்கதிகமாகச் சந்தோஷங் கொண்டாடி, முச்சட்டையாய் மெச்சி லாலனை செய்து இரத்தினுபரணங்கள் பூட்டிச் சிங்காரித்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனன். அப்படி யிருக்கும்போது பறவைச் சாரியாகிற பட்சி இராஜன் பட்சம் வைத்து விளையாடிக்கொண்டிருக்கிற தனது பிள்ளையைப்பார்த்து, நீ இவ்விடத்திற்ருனேயிரு. நான் இரை புசித்து வருகிறேன். என்று தன் குழந்தையை அவ்விராஜ சமுகத்தில் வைத்துவிட்டு விடை பெற்றுக்கொண்டு, தான் போகவேண்டிய யிடத்திற்குப்பறந்து போய்விட்டது. இராஜன் அந்தப் பக்ஷியின் பிள்ளையைத் தன்னிச்சைக்கிசைய வைத்துக் கொண்டிருக்கிறபோது, அவ்விராஜனுடைய பிள்ளைகள் விளையாடிக்கொண்டு வந்து அந்தப் பறவையின் குழந்தையைப் பார்த்துப் பரியாசம்பண்ணி, கைமேலெடுத்துத் தறையிலடித்தார்கள். அந்த அடிபட்டவுடனே படபடவென்று ரெக்கையை யடித்துக்கொண்டு பிராணன் போய்விட்டது. அதைக் கண்ட இராஜன் உடல் பதறி, ஒன்றுந் தோன்ருமல் ஒடுங்கியிருந்தான்.

அந்தச்சமயத்திற் பறவைச்சாரிப்பட்சியானது வந்து, இறந்துபோன குழந்தையைக்கண்டு, எண்ணி யெண்ணிக் கண்ணீர் சொறிந்து, ஆ! ஆ! என்னகாரணம் விளைந்தது? ஐயோ! தெய்வமே! நானிந்த ராஜனுடைய நேசத்தை நம்பிப்பேதமில்லாமல் என் பிள்ளையை இங்கு விட்டுப்போனேன். இவ்வரசனுடைய உபேக்ஷையினுல் இவன் பிள்ளைகள் என் பிள்ளையைக் கொன்ருர்கள். தன்னிலுமுயர்ந்த செல்வர்களுடைய வுறவு தகாதென்று உண்மைஞானமுணர்ந்த முனிவர்கள் மொழிந்திருக்கின்ருர்கள். ஒரு பாக்கியவானுனவன் தனது பெண்சாதி பிள்ளையோடும் வந்தால் ஓரேழையின் பெண்சாதியும் பிள்ளையும் வீட்டுக்குளழைத்துபோய் ஏதேதோ உபசாரம் பண்ணுவர். அவன் பெண்சாதியும், பிள்ளையும், அவனும், அந்தப் பாக்கியவான் வீட்டுக்குப் போனுல், தலைக்கடையில் வைத்துச் சாதம் போடும்படிக்கு வேலைக்காரருக்கு உத்தரவு பண்ணுவான். தன் பெண்சாதி பிள்ளையை அவ்வேழைபார்த்தவுடனே அவர்கள் வளங்குன்றிப் போமென்று உள்ளறையில் வைப்பான். ஆன்படியால், செல்வருறவைத் தேடக்கூடாதென்று நீதிசாஸ்திரந் தெரிவித்திருக்க, நாம் அறிவில்லாமல் இந்த ராஜனுடைய சிநேகத்தை விரும்பினேம். நமது பிள்ளையை இவனிடத்திற்றனித்து விட்டோம். இவள் பிள்ளையை அலட்சியம் பண்ணிக் கொன்றுவிடப் பார்த்திருந்தான். என்று சிறிது நேரம் விசாரமாயிருந்து, அப்பாற்றெளிந்து கோபம்பிறந்து கண்கள் செவந்து, நெருப்பைப் போற் பெரு மூச்செறிந்து, இவ்வரசனது பட்டணமும், அரசாட்சியும், அதமாகும்படி செய்கிறேனென்று விறுவிறெனப் பறந்து, ஆகாயத்திற் கிளம்பி காட்டிலுயர்ந்திருக்கிற ஒரு பெரிய மராமரத்தைக் காலினுலே பிடுங்கிக்கொண்டு வந்து, இரண்டு ரெக்கைகளையும் விரித்து உதறி வட்டமிட்டாடி, பெருங்கூச்சலிட்டிரைந்து, பாம்பைப்பார்க்குங் கருடனைப்போற் பகைத்துப் பார்த்து, பிரமத்தராஜன்பேரில் வெறுப்பும் ஆயாசமுங் கொண்டு, ஆ! ஆ! ராஜனே யென்றிரைந்து, அவன் காதில் இருப்புச்சலாகை யேறுவது போல் இவ்வார்த்தைகளிசைத்தது.

ஓ அரசனே! இராஜர்களுக்கும் பாக்கியவான்களுக்கும் ஒரு கர்வமுண்டாகிறதுண்டு. அதென்னத்தினு லென்ருல், சேனை முதலிய சனக்கட்டும், பாக்கியமுதலிய பணக்கட்டும், இருக்கிற தென்கிற அகங்காரத்தினுல் மதத்தேறிப்போகிறது. அதனுற் செய்காரியந் தவிர்காரியம் அறியாமற் சிந்தைகளித்திருப்பார்கள். இந்த வாழ்வு நமக்கு முன்னிருந்தவர்கள் அனுபவித்தது தானே. அவர்கள் இப்போது என்னகதியானுர்கள். என்று யோசித்து தம்முள் நாடிப் பார்ப்பார்களாகில், எல்லா உயிருந்தம்போல் நினைத்து இன்பதுன்பத்தி னியல்பறிந்து நடப்பார்கள்.

ஆகையால், அவர்களுடைய நேசம் ஆகா
து. இதனை முன்னமே, பெரியோர் சொல்
லக் கேட்டிருந்தும், என்னமோ மதிமயங்கி
உன்னுடைய நன்னடத்தை நல்லவார்த்தை
யை நம்பி மோசம்போனேன். என் குல
விர்த்தியாகிய குழந்தையை யிழந்தேன். ஓ
கோவே! அவ்வித ஆபத்துக்கிடமாகுமென்
று சற்றுமெண்ணமற் போனேன். என்று
வெகுகோபத்துடன் விளம்பி, மேன்மேலா
ய்க்கிளம்பி, இப்பவும் உன்னை யென்ன விடு
வேனோ? உன்னுடைய கொடிபறக்குங் கோ
ட்டையை இடிக்கிறேன். உன்னையும் பழிக்
குப்பழி முடிக்கிறேன். அதமாக்குறேன்.
என்று துணிந்து மகாரோஷ ஆவேசத்து
டன் ஆக்கிரமித்தது. இப்படி ஆவேசங்
கொண்டபட்சியை இராசன்பார்த்து. ஓ பற
வைச்சாரி யென்னும் பட்சிராஜனே! இது
வரையிலும், நீ கோபம் பண்ணிக்கொண்ட
து என்னால் வந்த குற்றத்திற் காகவல்ல.
நானுமக்கு அபராதியாக மாட்டேன். இப்
படிசெய்தால் தப்படிவருமென் றெண்ணாத
அறியாச் சிறுபிள்ளைகளில் ஒருத்தன்செய்த
பெருத்த குற்றத்திற்காக இப்பட்டணத்தை
யும், வெகுசனங்களையும், என்னையும், அழித்
துவிடுகிறேனென்றது ஞாயமோ? தரும
மோ? ஓ விவேகனே? உமக்கு அபராதஞ்
செய்தவனெவனோ அவனொருத்தனைப் பிடி
த்து முறித்து முடித்து, உமது பழியைத்
தீர்த்துக்கொள்ளும். அது முறையான விப
காரம். என்று சத்தியவந்தனாகிய வேந்தன்
விளம்ப, அந்தவார்த்தையைக்கேட்ட பட்சி
யானது சொல்லுகின்றது.

ஓ வேந்தனே! ஒருவன் ஒரு அபராதத்
தை முறைதப்பி முன்னே நடத்தினால் பின்
னே அவனுக்கும், அவன் குடும்பத்திற்கும்,
பதினாயிரங்கோடி பகையை விளைக்கலாமெ
ன்று பராசரஸ்மிருதியிற் பன்னியிருக்கின்ற
து. இதுமாற்சல்லியமல்ல. வஞ்சனையுமன்று.
ஆனபடியால் நான்கொண்டகருத்தின்வண்
ண முடிப்பேனென்று நவின்று, வெகுளி
மேற்கொண்டு, மேகம்போலிரைந்தது. அப்
போது இராசன் மறுவசனம் பேசுகின்றான்
ஓ பறவைச்சாரியே! கற்றறிவாலுயர்ந்த உத்
தமகுணம்பெற்ற பெரியவர்களுக்குத் தெரி
யாதொருவன் தீங்கிழைத்தால், அதைத்த
க்ஷணமே மன்னித்து, சவுரியந்தணித்துதா
ட்சண்யப்படுவார்கள். மத்திமர்களுக்குக் குற்
றஞ்செய்தால், அந்த குற்றத்திற்குத் தகுந்த
பிரதி குற்றம் பண்ணிக் கூட்டுவார்கள், அத
மர்களுக்குத் தீங்குபுரிந்தால், அதை யொன்
று கோடியாய்ப் பெருக்கி, ஆறாதகோபமுங்
குரோதமுமுண்டாக்கி; அக்கினிச் சுவாலை
யாய்க் காய்ந்து, என்றைக்கும் இடையூறு
பண்ணுவார்கள். அதுவும் பாவிகளாய்,
படியாமடையராய், புத்தியீனராய், பிடிவாத
க்காரராகிய அதமர்களுடைய நடத்தை
இப்படியாக நூல்களிற் பெரியோர்கள் பேசி
யிருக்கின்றார்கள். இதனை நீருமறிந்திருப்
பீர். உத்தமராகிய நீர் இப்படி வெகுளிமேற்
கொள்வது தருமமன்று. என்றிசைந்த ராச
வாக்கியத்தை நட்புற்றிருந்த பட்சிகேட்டு,
மெத்த விசாரமடைந்து ஓராசனே! கேளும்
நீர் சொன்ன தருமமானது நான் கொண்ட
புத்திரசோபகாலத்திற் பிரயோசனப்படாது
இந்தத் துக்கம்பிரபஞ்சவாழ்க்கையைப்பொ
ய்யென்று விலக்கிய மெய்யர்களையும் விடா
து. அவர்களுக்கும் ஒருவேளை விதித்திருந்
தாலு மிருக்கலாம். ஆகிலுமிது இந்தசமய
த்திற் பேசும் பேச்சல்ல. பூலோகவாழ்க்கை
யிற் புகுந்திருப்பவர்கட்குப் பேசியிருக்கிற நீ
திசாஸ்திரத்தைச் சொல்லுகிறேன்கேளும்.

ஓ பிரதாபவீரனே! இராசர்கள் குற்ற
மற்ற மனதுடையவர்களைப்போல்வெளிக்கு
க்காண்பித்து தன்னுடைய சத்துருவினிடத்
தில் மெத்தவு நேசமாய்த்தழுவி விசுவாசம்
போலிருந்து, சமயநேரிட்டவிடத்தின் தன்
வேலையை முடித்துக்கொள்வார்கள். அப்ப
டிமுடிக்கும்படிக்கு நேரிடுங்காலத்தில் அந்
தப்பகையாளியை மாத்திரமல்ல, அவனு
டைய குடும்பகோத்திர பந்துக்களையும், நா
ல்வகைச் சேனைகளையும்,புத்திரமித்திரர்களை
யும் போக்கிவிட்டுப் புகழ்பெற்று வாழ்வார்
கள். ஒருவன் பகையானால் அவனைச்சார்ந்த
பேர்களை அடியோடே கெல்லிவிடுவது அர
சருக்குரிய முறைமை. அரசருக்குரிய க்ஷாத்
திர தருமம். ஆனதால், நீர் மனிதராசன்.
நான் பட்சிராசன். உங்களுக்கும் எங்களுக்
குஞ் சத்துருத்துவமுண்டு. அதை நான் ம
னதினினையாமல், நீர் வல்லவனென்றும் மி
கவும் நல்லவனென்றும் புத்திமாறி, உம்மு
டன் சிநேகம் பண்ணினேன். ராசனுடைய
வழக்கமும் நல்லபாம்பின் பழக்கமும் ஒன்
றென்பார்கள். அதுபோல் உம்முடைய சத்
துருத்தன்மையைக் காட்டினீர், இந்த நிமித்

த்தில் உம்மதாகிய நாடுநகரம், மாடுமக்கள் வீடுவாசல், காடுகரம்பு எல்லாவற்றையும் ஒரேமட்டாய் முடிக்கிறேன் என்று சாரிப்பறவை சாற்ற, ராசன் ஓபட்சியே! நீர் சொன்ன நீதியெல்லாம் இராசர்களுடைய முறைமைதான் இது சரியினத்தாராகிய இராசர்களுக்கு மாத்திரஞ் சரிப்படுமேயல்லாமல், மற்றப்பேருக் குதவமாட்டாது. அதேனென்றால், அரசர்களுக்கு யெப்போதுந்தொன்றுதொட்டு, அனுதியாய், பாரம்பரியாய், ஜனன ஜனனத்திற்கும் பிரியாமல், அவன் பிள்ளை பேரன் இவன் பிள்ளை பேரனென்னும் வரிசைக்கிரமமாய், இன்னருக்கு மின்னருக்கும் விரோதமென்று இவ்வுலகவிஸ்ராந்தியாய் பெரும்பழிவாங்கி, வருகிறதுண்டு. அதைக்குறித்து எந்தத் தந்திரங்களினுலாவது எவ்விதசினேக மூலத்தினுலாவது சாமபேததான தண்டத்தினுலாவது, சத்துருத்தன்மை வெற்றிப்பெற நினைப்பார்கள். இந்த முறைகளெல்லாம் ராசாக்களுக்கு மாத்திரமே யல்லது, மற்றொரு சாதியாருக்குக் கூடாது.

அப்படிக்கிருக்க, மனுஷருக்கும், பட்சிகட்கும், பாரம்பரியான பகையென்று வசனித்தீர். அதேது அப்படிக்கிருக்குமா? இதுவரையிலும் இவ்வுலகத்தில் இப்பேர்ப்பட்ட நீதியிருக்கிறதென்று நான் அறிந்திலேன். ஐயா பட்சிக்கிறைவனே! உங்களுக்கும் மனிதருக்கும் ஒருநாளும் பகையில்லை. மனிதரைக் கண்டால் நம்மைப் பிடித்துக் கொள்ளப் போகிறார்களென்று உங்கள்மனதிற்கொண்ட அச்சத்தினுற் பயந்து பறந்து போய்விடுவீர்கள். இதுவேயல்லாமல் வேறே பகையொன்றுங் கிடையாது. ஓடுகிறவனைப்பார்த்தால் துறத்துகிறவனுக்குச் சூளுவும் பலமும் விளைவதுபோல், பயந்து பறந்துபோகிற உங்களைக்கண்டாற் சும்மா போகிறவர்களும் உங்களைப் பிடிப்பதுபோல கையை நீட்டிக் காட்டுகிறதுண்டு. இதைவிட்டு நீர்தானே உம்மிட வாக்கினுல் இல்லாத பகையை உண்டென்றுரைத்தீர். இப்பவும் நீர்வேறு நான்வேறல்ல. அப்படிக்கிருந்த போதிலும், ஞாமும் நீதியும்பொது. இவை மாறுபடக்கூடா. உமது பிள்ளையைக் கொன்றுவிட்ட என்பிள்ளையை உமக்கு தேரேவிடுகிறேன். அவனை உமது ரெக்கையினுலடித்து, கால்நகத்தினுல்பிளந்து, மூக்கினுற்கொத்தி, பத்தலாய்க்கிழித்து, பழிக்குப் பழிவாங்கிப்போடும். ஓ பாக்கியவானே! சும்மாவிடவேண்டாம். உமது புத்திரசோபந் தீரச் சித்திரவதைசெய்யும். எத்தனைவிதம் பண்ணினுலும் எனக்குச்சம்மதமே. அதற்காக நான் கவலைப்படவில்லை. இவ்வளவு தான் ராசதருமம். நீர் சகலமுந் தெரிந்த பெரியவர். உமக்குவேறே இன்னுமென்ன சொல்லப்போகின்றேன். என்று இதவாய் தாழ்மையாய், ஏழ்மையாய், குளிர்ந்தமொழியாய், உபசாரமாய் நிரம்பவருந்தி, இறந்த பட்சிப்பிள்ளையை நோக்கி இரைந்து அழுது தெய்வத்தைத் தொழுதான்.

இதனுல் அந்தப்பெரிய பறவைச்சாரிக்குக் கோபந்தீர்ந்து, மனங்குளிர்ந்து, உள்ளமிரங்கி, ஓ ராசாவே என் பிள்ளையைக் கொன்றதற்குப்பதிலாக உமதுபிள்ளையைக் கொல்லச்சொன்னீர். அப்படியே கொல்லுவதுனுகில் இறந்துபோன என்பிள்ளையெழுந்து வருவனு? கொழுந்து விட்டெரிகின்ற என் குடலுங் குளிருமா? இறந்தது ஆருடைய பிள்ளை அதற்காக இறக்கப்போகிறது ஆருடைய பிள்ளை இரண்டும் என் பிள்ளைகளே அல்லது உமது பிள்ளைகளே, ஒருவன்தான் போய்விட்டான் வினை துலைந்தது. இன்னொருவனும் ஏனிறக்கவேண்டும் நான் ஏன் கொல்லவேண்டும்? காரியமில்லை நீர் சத்தியந்தப்பாமல் தருமத்தின் வழியே நின்று, இதுகெட்டது ஒழி அல்பபட்சி போவென்றிகழாமல், என்பிள்ளையை நீகொன்று பழிதீர்த்துக் கொள்ளென்று பிள்ளையென்கிற வாஞ்சையை பாராட்டாமற் பேசினீர். நடுவு நிலைமையை நாடினீர், சத்தியத்தையனுசரித்தீர், இதுவேயெனக்குப்போதும், என்புத்திரசோபந் தீர்ந்தது, உமதுமனதிற் களங்கமில்லை, நீரொன்றுக்கும் யோசிக்கவேண்டாம், என்று பறவைபேசி ஓ ராசனே நீர் சுகமேயிரும், நான்போய்வருகிறேன் என்று விடைபெற்றுக்கொண்டு இறந்துபோனகுஞ்சையும் எடுத்துக்கொண்டு தனது யதாஸ்தானத்திற்குப்போய்விட்டது. ஆதலால் தனக்குயர்ந்தபேர்களுடன் சிநேகம்பண்ணினுல் அலட்சயமுந் துன்பமும் அடுக்கடுக்காய் வரும். நமது சாமபேத தானதண்டமென்னு நால்வகையுபாயங்களு மவர்களிடத்திற் செல்லா. மரியாதையும், மானமும். உடனே குன்றற்கானஹேது கூறுமேவரும். இதல்

வாமல் கொலே, களவு, கள், காமம், பொய், இவைகளேக் கோர்வையாகவும், அசுத்தப் பார்வையாயு மிருக்கப்பட்ட கறுப்பனிடத் தில் நேசம் பண்ணப்படாது. நேசம் பண் ணிஞல் உடனே பிராணனுக்கு மோசம் வரும். அதற்கு திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

---

பஞ்சபாதகனுங் கறுத்தவனுமானவனே டிணங்கலாகாதென்பதைப்பற்றி கூறிய பிராமணன் கதை.

அப்பா என் பேரனே! மூன்று சுடரும் ஏக காலத்திற் பிரகாசிக்குந் தன்மைபோல ஆபரணங்களே யணிந்து, மூலக்கமலத்தில் முளைத்து, அங்ஙனே வாசமாயிராநின்ற பிர மன் முகத்திற்பிறந்த பிரமஞ்ஞான பிராமண வமிசத்திஞெருவன். அவன் விடத்தையும் படத்தையும், திடத்தையுமுடைய பாம்புக்கு ஒப்பானவன். துரோகியுந் துன்மார்க்கனு மானவன். பிராமணகுல இயற்கையும் ஆ சாரவனுஷ்டானமும் விட்டவன். விவஸ் தையில்லாமல் ஸ்திரீகளுடைய தனத்தைப் புணர்ந்து அவஸ்தைப்படுகிறவன், கண்ட சோறுண்டு திண்டுபோற்றிரிபவன், கெடு திக்கெலலாம் விடுதிபோன்றவன். இப்படிப் பட்டவன் கொலே செய்யும் வேடருடனே கூடிக்கொண்டு, அவ்வேடச்சாதிப் பெண் ணேயேயங்கீகரித்து மாம்சபக்ஷணம்பண்ணி அத்தாமசப் பெண்ணுடன் நண்ணி, செடி படர்ந்த பர்வதங்களெல்லாந்திரிந்து வேட் டையாடி, அநேகஞ்சீவசெந்துக்களே வதை த்து, பிராமணனென்கிற பேருங்கேட்டு,அப் பிராமணனுக் குண்டாகிய ஆசாரங்களும் விட்டு, பச்சை யிறைச்சிகளே லச்சை கெடத் தின்று, பட்டினியும் பசியுமாயிருக்குஞ் சமு சாரத் தொல்லேயினுற் சங்கடப்பட்டு, இனி நாம் எங்கேயாகிலுஞ்சீவனஞ்செய்து பிழை ப்பதற்கான வேலேகளேத் தேடவேண்டும். தி ரவியஞ் சம்பாதித்து ஐஸ்வரியவந்த ஞக வேண்டும். என்று பணத்தாசை பிடித்து, பொதிமாட்டு வர்த்தகம் பண்ணுகிற வாணி பருடன் சேர்ந்து, ஒருநடை யிரண்டு நடை போக்குவரத்தாயிருந்தான். அப்படி யிருக் கும்போது வண்டுகள் நாதம்பாடிய காடுகள் கூடிய மலேயடிவார மார்க்கத்திற் காட்டானே கள் ஒன்ருேடொன்று பகைத்து, தாட்டியா ன மரங்களே முறித்து, பூமிகுலுங்கமிதித்து பெரு முழக்கத்துடன் அதிர்த்துச் சண்டை பேர்டுகின்றன, அச்சண்டையின் ஆரபாரத் தை அச்சண்டாளன் கேட்டு, சமீபத்தில் நெருங்கிப் பார்த்து, வாணிபர் முதலியபேர் களோடு மறைநெறி தப்பிய இவ்வேடனு மொடுங்கி, ஒருவர் போனவழி யொருவர் போகாமலெல்லாருங்கி, எல்லார்க்கும் பிராண பயமேலிட்டு, கால் கொண்டமட்டுங் கடுமை யான வேகங்காட்டிக் கலங்கி யோடிஞர்கள்.

அப்படி யோடும் போது இந்தச் சண் டாளப் பிராமணனவன் வழிதப்பி, கல்லு ம், புல்லும், காடுமேடும், கறடுமலேயும், முள் ளு முறடுமுள்ள புதறிலே வீழ்ந்து, மெய் சோர்ந்து, நாவுலர்ந்து, நாபிவறண்டு, கண் பஞ்சடைந்து, கருத்துமயர்ந்து,மேல்மூச்சு வாங்கி, மெலிவிஞற் றூங்கி, இளேப்புங் களேப்பும் இருமலுமேலிட்டு ஒண்டியாயெழு ந்து, ஓடியோடிப்பார்த்தது, நல்லவழியகப் படாமல் நெருப்புப்பற்றி யெரிகின்ற மூங் கில்வனமெல்லா நீங்கிக் கைகாலோய்ந்து, ஒரு பெரிய ஆலமரத்தினிழலிற்போய்ச் சா ய்ந்துவிட்டான். இப்படி வேதியர் குலத்திற் பிறந்த பாதக வேடனைவன் வேசாறிகிடக் கும் வேளேயிற் சூரியன் அஸ்தமனமாஞன். நான்குதிக்கும் இருள்வந்து மூடிக்கொண்ட து. அந்தக் காலத்தில் இந்தவேடன் தெளி வுவத்தெழுந்து, நமக்கு இன்றெல்லாம் ஆ தாரமில்லே. காடுமுழுதும் ஓடி, காலும்வாடி நாடியுந் தளர்ந்து போயது. நாக்கும் வறண் டுஇளேப்புமேலாயது. எங்கேயாகிலும்போக லாமென்ருல் வழி தறை தெரியவில்லே. இ வ்விடத்திற்ருனே யிருந்து இராப்பொழு தைப் போக்குவோமென்ருற் கொடிய ஆர ணியமான காடா யிருக்கின்றது. நாம் நடக் கவுமாட்டோம்,பசியையடக்கவுமாட்டோம், உள்ளபடி முடிகிறது. சூரியோதயமான பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று வேதவிதியைமறந்த பாதகன் அந்த ஆல மரத்தினடியிலே படுத்துக்கொண்டு பெரும் பசியுடன் ஆயாசமடைந்து, தூக்கம்பிடிக்கா மல் ஏக்கம் பிடித்து, புரண்டு புரண்டு புலம் பிக் கொண்டிருந்தான். அந்த ஆலமரத்தி லே தேவர்களாற் கொண்டாடப்பட்டநாளி சிங்களென்னுங் கொக்கொன்றுளது. அது மண்பொதுத் தந்தையாகிய பிரமனுக்கு மிக வும் விசுவாச நேசமாயிருப்பது. இந்திரன்

முதலியபேரும் வந்து சந்திக்கும்படியான சிந்தையையுடையது. விந்தையான கீர்த்தி பெற்றது.

இத்தன்மைகள் வாய்ந்த கொக்கானது தான் சஞ்சரிக்கிற யிடமெல்லாந் திரிந்து, நிரம்ப இரையருந்தி, மாலைப்பொழுதில் வந்து நான் வசிக்கின்ற அந்த ஆலமரத்திலிறங்கிற்று. அந்தக் கொக்கினுடைய சுபாவமானது தான் வந்தவுடன் ஆராகிலும் அதிதி அப்பியாகதிகள் வந்தார்களா வென்று மரத்தைச் சுற்றிப்பார்க்கிற வழக்கம் அந்தப்பிரகாரம் பார்த்து, மரத்தினடியிற்படுத்திருக்கின்ற வேடுவப் பிராமணனைக் கண்டு, மெத்தவும் விசாரமாகி, இவர் யாரோ தெரியவில்லை. பரதேசி போலிருக்கிறது என்று பாவித்துக் கிட்ட நெருங்கி, ஓ உத்தமரே! நீரேன் இவ்விடத்தில் வந்து படுத்துக்கொண்டிருக்கின்றீர் ? என்ன காரியமாக வந்தீர் ? அடியேன் அதிதிபூசை பண்ணுவதற்கு அகப்பட்டீர், இன்று நான் கடைத்தேறுங்காலம், ஏதோ என்னாற் கிடைக்கப்பட்ட பிட்சையை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஓ இறைவனே! எழுந்திரும் எழுந்திரும் என்னளவிற் கிருபைபுரியும், என்று வேண்டியமைத்து உபசாரங்கள் பண்ணி, கந்தமூல பலங்களுந் தேன்களும் அவன்பசிதீரச் சாப்பிடுகிற மட்டுங்கொடுத்து, நல்லருசியான சலமுமளித்து இளைப்பாற்றி விட்டது. அவ்வேடனுந் திருப்தியாய்ச் சாப்பிட்டு விடாய்தீர்ந்து, மெய்யுங்குளிர்ந்து, கையும்புலர்ந்து, பைய ஐயனருள்பெற்றவன் போலாகி, பற்பலபேச்சுகண் மூச்சுவிடாமற் பேசி, கொக்கைப் புகழ்ந்து மகிழ்ந்திருந்தான். அந்த வேளையில் நாளிசிங்கனென்னும் கொக்கானது பசியினால் வருந்தியிருந்த அதிதியானவர் போசனம் பண்ணியவுடன் உண்டவிளைப் படைந்தாரென்று கருதி, தழைகளும் புஷ்பங்களுஞ் சேகரித்துப் படுக்கையமைத்துச் சயனித்துக் கொள்ளும்படியாகச் சொல்லி, தானுமருகில் உட்கார்ந்து கொண்டு சங்கதி வினவுந்தொடங்கியது. ஐயா! நீ யார்? இந்த ஆரணியமான காட்டில் நீர் வந்ததற்குக் காரணமென்ன ? உமது ஊரெது? உமது பெயரென்ன? நீரெங்கிருந்து எங்கு போகின்றீர்? உமது வர்த்தமான மெல்லா மறையாமற் சொல்லுமென்று கேட்டது. அதற்குப் பதிதனாகிய பிராமணவேடன் சொல்லுகிறான்.

ஐயா நாளி சிங்கவேந்தே ! கொஞ்சம் பொருளாசைகொண்டு வாணிபருடன் கூடி வரும் வழியில், காட்டானைகள் சண்டைபோட்டு கர்ச்சித்த ஓசையைக் கேட்டும் அவற்றின் உருவத்தைப்பார்த்தும் பயந்து, ஒருத்தரோடொருத்தர் கூடாமலோடிப் போனார்கள். நானும் பிரிந்து பிராணபயங் கொண்டு, தட்டுக்கெட்டுத் தடுமாறி வழிதுறை தெரியாமல் இந்தக்காடுவந்து சேர்ந்தேன். எனக்கு உமதுவீடு சொந்தமாச்சுது. இதல்லாமலும், நான் பிராமணப்பிள்ளை. அந்தக்குலாசாரந்தப்பி, தரித்திரத்திலே மூழ்கிக் கெட்டலைந்து அகப்பட்டமட்டு மாசாரமில்லாமற் புசித்துப் பசிநோயகற்றி, பரதேசியாய்ப் புறப்பட்டு மலைபடும் ராச்சியமாகிய குறிஞ்சி நிலத்திற்குவந்து, வனவேடருடன் கலந்து அவர்களுடைய மார்க்கமெல்லாம் அறிந்து அவர்களில் நானுமொருவனாய்ச் சேர்ந்து, அந்த மறவகுலப் பெண்ணை மணந்துபணர்ந்து, பட்சிமிருகங்களைப் பதறப்பிடித்து, எச்சில் தீட்டு எதுவுமில்லாமல் இச்சையின்படிக்குநடந்து பொய்யனானேன். இவ்வாறு சிலகாலமுழன்று திரிந்து, இந்த கர்மதேகம் எடுத்தது எதற்காகவென்று தீர்க்காலோசனை கொண்டு, நல்வினை தீவினைப்பயனை அனுபவிப்பதற் கல்லவாவென்று அறிந்து கடைசியிற் பெண்சாதி பிள்ளைகள் பண்ணுகிற சள்ளையாற் பணந்தேடப் புறப்பட்டேனென்று வேடவேதியன் சொன்னான். அதைக்கேட்ட நிமலோதகமான மனதையுடைய கொக்கானது அக்கறையாகியகிருபையுடன் நெகிழ்ந்த மனதையுடையதாய் ஐயா! வேடவேதியனே! நீர் திரவிய அபேட்சையினாலல்லவோ இத்தனை பாடுபட்டீர். நல்லது உமக்குச் சுளுவில் திரவியங் கிடைக்கும்படி உபாயஞ்சொல்லுகிறேன். அஃதென்னவென்னில் பூமியின் மாயா மயக்கத்தைப் போக்கடித்தவர். ஆத்மக்கியான முள்ளவர். அரசாட்சி செய்யும் அரசனானவர் சத்தியநெறி தப்பாத உத்தமர். விருப்பாட்சனென்னும் பெயருடையவர் எனக்கு நெடுநாளாய்ச் சிநேகமானவர். அகம்புறம் இரண்டும் ஒத்தவர். இப்போது நானிருக்கின்ற ஆலமரத்திற்கும் அவரிருக்கிற சத்தியகிரி நகரத்திற்கும் மத்தியில் முக்காதவழி தூரமு

ண்டு. அவருடைய பட்டணத்துக்கு நீர்
போய் நாளிசிங்க னிடத்திலிருந்து வந்தே
னென்பீராகில், உம்முடைய ஆசைதீரப்
பொருள் கொடுப்பார். வேண்டிய வெகுமா
னஞ் செய்வார் அப்பாலுமக்கு வறுமை
யென்பது இராது. ஆதலால், இப்போது
மிங்கிருந்து, விடியற்காலத்தி லெழுந்து
போமென்று விடைகொடுத்து, நாளிசிங்க
னென்னும் அக்கொக்கானது தன்னுடைய
படுக்கைக்குப் போய்விட்டது.

இந்தக் குலப்பிரஷ்டனான பார்ப்பானு
ம் நித்திரை பண்ணி, எப்போது விடியும்?
எப்போது நாம் போய்க்காண்போம்? என்கி
றபேராசை பிடித்திருப்பவன் இராவெல்லா
ம் இதுவே நினைப்பாயிருந்து,இந்திர திசை
யில் சூரியன் வந்துதையஞ் செய்ததைக்கண்
டு, திடுக்கென்றெழுந்து, உச்சிதனாகிய நாளி
சிங்கனை எச்சரித்துச் செலவு பெற்றுக்கொ
ண்டு, வடத்திசையைக்குறித்து மூக்காதவழி
நடந்து, வீரலட்சுமி விளையாடும் வேலைத்
தாங்கிய விருப்பாட்சமகாராஜன் மந்திரி பி
ரதானிகளுடனே சாஸ்திரீகள், தர்க்கீகாள்,
சாதுக்கள், வித்துவான்கள், தரணிபதிகள்,
குடிபடைகள், ஊழியப்பெண்கள், இவர்கள்
யனைத்துங்கேட்ட நாளிசிங்கனைத்து தன்
னுயிர்த்தோழனாகிய விருப்பாட்சனைத் துதி
த்து மனமகிழ்ந்து, உள்ளந்தருக்கி, உட
ல்ஞ்செருக்கி ஆநந்தமடைந்து,இந்தவேட
வேதியனைநோக்கி, ஓ பிரமகுலத்திற் பிறந்த
வனே! நானுமக்கொரு புத்திசொல்லுகிறே
ன். அந்தவழியில் நிற்பீராயின் இகபரசவுக்
கியத்தைப் பெறும்படிக்கான இன்பத்தை
யடைவீர். அதாவது, விடியற்காலத்தில்
இவ்விடம் விட்டுப் புறப்பட்டு, இடருகிய
காட்டினை யெல்லாங்கடந்து, நாட்டின்வழி
யே நடந்து, இதுவரையிலுங் கூடியிருந்த
வேடருறவை விடுத்து, உம்முடைய பழைய
நாட்டையடுத்து, மித்திரருடன் கலந்துநய
மாய்ப்பேசி, பிரஷ்டத்துவப் பிராயச்சித்தம்
பண்ணிக்கொண்டு, நல்ல குடிப்பிறப்புள்ள
பிராமணஸ்திரீயைக் கலியாணஞ்செய்து, பி
ராமணாசார அனுஷ்டானங்கொண்டு, கோப
லோப மோகாதிகளை யெல்லாம்விட்டு, சா
ந்தகுண சாதுவாய் ஸ்ரீயும் புருஷனும் மன
தொத்து இல்லறதருமத்தை அனுசரித்து
வந்தால் நல்லபதவியைப் பெறுவீர். சந்தி
ரனுக்குங் களங்கமிருக்கும்போது நமக்குங்
களங்கமிருப்பது பெரிதல்ல. ஆதலால் உம்
மையும் இகழாமற் கூட்டிக்கொள்ளுவார்கள்
நீரும் பெருமையடையலாம். என்று நல்ல
விசேடமான புத்திமதிகளைச் சொல்லியது.

இந்த வசனங்களை அந்தப்பொய்யனான
பிராமணன் மெய்யனைப்போல் அபிநயித்து
க்கேட்டு, தன்னுடைய ஈனபுத்திப் பழக்கத்
திற் கிணங்கத்தக்கதாயுள்ள சில்காரியங்களை
எண்ணிக்கொண்டான். அதென்ன வென்
றால், நமக்கு வெகுதிரவியம் அகப்பட்டது.
இது நமது பிள்ளைப்பிள்ளை தலைமுறைக்கும்
போதும். இனிமேல் நாம் ஸ்ரீலோலனாய்
வெகு சம்பிரமத்துடனே யிருக்கலாம். இப்
போது நாமிருக்கிற காட்டைக் கடந்துபோ
கிறதற்கு வெய்யிலினாலே பிரயாசைப் பட
வேண்டி யிருக்கிறது. வழியிலே இளைப்பா
றுகிறதற்கு யாதொருணவுங்கையிலில்லை. இ
ந்தக் கொக்கைப் பிடித்துக்கொன்று கைக்
கொண்டால் வழிப்பசியாறும். மார்துரியமா
மிசமாகும். இதைவிட வேறு இரையைக்
காணோம். ஆதலால் இது நித்திரைபண்ண
ட்டுமென்று விழித்துக்கொண் டிருந்தான்.
இந்தக்கொக்கு அந்தப் படுபாவியினுடைய
கெடு நினைப்பையறியாமல், நாம் நல்லபுத்தி
சொல்லியிருக்கின்றோம். நமது பேச்சைக்
கேட்ட பிராமணன் நீச்சத்தொழிலை நீக்கி,
இனிப் புத்தியுடனடந்துயுத்தியாகக்கடைத்
தேறுவான், கெட்டுப்போன துஷ்டனா
வன் மறுபடியும் நல்லமார்க்கத்திற்கு வந்தா
ல், அது எவ்வளவு சுகிர்தம்? அது நமக்கு
நற்காரியம். பெரியோர்களுடைய உள்ளம்
எப்படியென்றால், சிறியோரையுந் தங்களைப்
போல் தேற்றிவைக்குந் திறமையையுடைய
து. நாமும் அப்படியே நன்மைபெறச் செ
ய்தோம். என்று தனக்குள்ளே மகிழ்ந்துசய
னித்துக்கொண்டது, அந்தக்கொக்கு நல்ல
நித்திரை கொள்ளுகிற நடுநேரத்தில், விட
த்திலுங் கொடியவனாகிய வேடப்பார்ப்பான்
நன்றிகுன்றிய ஞாபகங்கொண்டு, அந்த நா
ளிசிங்கன் தூங்குகிற இடத்திற்குப் போய்
அதைப்பிடித்து சிறிதுந் தயாளமில்லாமற்
கழுத்தையொடித்து, அதனுடைய தோலை
யுரித்து அப்பாலெறிந்துவிட்டு, அந்தமா
மிசத்தைக் கண்டங்கண்டமாய்த் துண்டங்
கண்டு துணியிலே முடிந்துகொண்டு, திரவி
ய மூட்டையைச் சுமந்து, அதிசீக்கிரமாய்ப்
பொழுது விடிவதற்குமுன்னே அந்தவனத்

ணைக்கடந்து, காலோடு காலடிபடும்படியாய்ப் படபடவென்று நடந்து போகின்றான்.

அப்போது சத்தியகிரிநகரை யாளப்பட்ட புத்திமானாகிய விருப்பாட்ச னென்பவன், தன்னுடைய அரண்மனையிற் பற்பல மணிகளழுத்தி விசித்திரப் பிரதிமை கட்டிய மேடையின்மீது நித்திரை பண்ணிக்கொண்டிருக்கின்றான். அவனுக்கு இந்தப் பதிதனாகிய பிராமணவேடன் தன்னுடைய சினேகனான நாளிசிங்கனைப்பிடித்து வேலைமுடித்துக்கொண்டு போகிறானென்று சொப்பனமுண்டாகி, அப்போதே விழித்து அலறிப்பதறி, கதறி விழுந்து எழுந்து, அணிந்த மாலைகள்வாட அழுதகண்ணீர் வழிந்தோட முறையிட்டான். அம்முறையைக் கேட்ட காவலாளர் திகைத்து, இதென்ன ஆச்சரியம்? இராஜன் படுத்து நித்திரைபண்ணும்போதெழுந்து அங்கலாய்க்கின்றார். அருமைப்படுகின்றார். என்று ஓடி சகலமான காரியஸ்தர்களுக்குந் தெரிவித்தார்கள். இந்த அபாயத்தைக்கேட்ட மந்திரிபிரதானி முதலியயாவருந் தக்ஷணமேவந்து, பந்துஜனங்கள் முதலானபேரோடு நொந்து, மிகுந்த கூட்டமாகக்கூடி ஒருநாளுமில்லாத விந்தையாய் இன்றைக்கென்னமோ நமதரசனுடைய சிந்தை நொந்ததாய்க் கேள்விப்பட்டுவந்தோமென்று ஒருவரோடொருவர் பேசினார்கள். அப்போது அரசன் அவர்களைப்பார்த்து, தன்னேசனான நாளிசிங்கனுக்கு நடந்துபோன சேதியை நவின்று, தான்கண்ட சொப்பனம் பழுதுபடாதென்று எல்லாருடனேயு மிசைத்து, தனது நேசனுக்கு நேர்ந்த விபத்தை யெண்ணி யெண்ணிக் கரைந்து ஹா! ஹா! ஹா! ஐஐயோ!! நேற்றேநான்வீனைத்தேனே, அந்தப்பாவியாகிய பார்ப்பானைப்பார்த்தபோதே இவன்கெட்ட சண்டாளனென்றெண்ணினேனே, இவன் பேரிலெப்படி அன்புவைத்தார் என்னன்பரென்று சந்தேகித்தேனே, அந்தோ இதோ என்னிஷ்டருக்கு அபாயம்வந்துவிட்டதே, அந்தமஹா துரோகிக்கு மிதமில்லாத உபகாரஞ்செய்தாரே அதைக்கொஞ்சமேனு நினையாமல் அந்த வஞ்சனையாளன், கீழ்மக்களினுங் கீழானவன், உடனே அபகாரஞ் செய்தானே, அவருடைய சதையைக் கொண்டு, போகின்றானே, இன்னுஞ் சற்றுநேரத்தில் தின்றுவிடுவானே, என்று தியங்கி, மயங்கி இப்பேர்ப்பட்ட அனியாயத்திற்கு நான் என்னசெய்வேன்? இன்னும் பிராணனுடனிருக்கின்றேன். ஆ! தெய்வமே! எனக்கும் ஒரு தீங்குநேர்ந்து போய்விட்டதோ? என்றான். அக்காலையில் இந்தச் சொல்லைக்கேட்ட யாவரும் பதைபதைத்து, துடிதுடித்து, அந்த மகானுபாவருக்கும் இப்பேர்ப்பட்ட துர்மரணமா கிடைத்ததென்று சோபித்தார்கள்.

அந்தவேளையில் விருபாட்சராஜன் சற்றே மனோதிடங்கொண்டு கோபித்து, தன்னிடத்திலிருக்கின்ற உயிர்ச்சேவகரைப் பார்த்து, ஓ வல்லவர்களே! எசமானுக்குத் துரோகம்பண்ணாத நல்லவர்களே! நீங்கள் ஓருகாதவழியை ஒரு நாழிகையாகத் துலைத்துப்போய் அந்தப் பாதகவேடபார்ப்பான் எங்கேயிருந்தாலும் பிடித்துக்கொண்டு, முன்பின் பாராமல் மோதி, என் சிநேகிதனுடலையுந்தேடியெடுத்து வாருங்களென்று அதிக தீவிரமாகச் சொல்லியனுப்பினான். அவ்வுத்திரவைக்கேட்ட காவலாளர்கள் கடுகிக்கணைத்து, கண்பொறி பறக்கச்சினத்து, இதோ கொண்டு வந்தோமெனப் புறப்பட்டு, இராக்ஷதர்போலோடி, ஆலமரத்தை யணுகிப் பார்த்து, அவ்விடத்திற்கிடந்த கொக்கின் தோலையெடுத்துத் தங்கள் ராஜனிடத்திற் கனுப்பிவிட்டு, அப்பாற் கோபக்கிராந்தராய் மெத்த வேகமாய்ச்சென்று, அவன் காலடியைக்கண்டு வழிபிடித்து, மானைத்தொடரும் வனவேடரைப்போல் அந்த மகாபாவியைக் கண்டுபிடித்து, பாசத்தினால் தோளோடுதோள் நெருங்க வரிந்திறுக்கி, கையிலிருந்த குறுந்தடிகளாலடித்து, கொக்கினுடைய மாமிசம் அவன் துணியில் முடிந்திருக்கப்பார்த்து அதையும் அவிழ்த்துக்கொண்டு அவனையும் அந்த மாமிசத்தையுந் தங்களரசனுக்கு முன்னே கொண்டுவந்து காட்டித் தொழுதார்கள். இராஜன் அந்த மாமிசத்தைப் பார்த்தபொழுது, அடாபாதகா! நேற்றையதினம் என்னேசன் பெயரைச்சொல்லி வேண்டிய திரவியங்களையும் மேன்மையான ரத்தினங்களையும் பெற்றுக்கொண்டு போன போக்கிரிப்பார்ப்பானே! என்று சொல்லித் தூதரை நோக்கி, இப்பேர்ப்பட்ட பெருந்துன்பத்திற் கிடமாகிய இவனை அங்கேதானே வேலைமுடித்துக் கடித்து இவனுதிரத்தைக் குடித்துப்போடாமல், யிவ்வளவு தூர

மனதொப்பி எப்படி கொண்டு வந்தீர்கள்? என்முன்னே யேன்விட்டீர்கள்? என்று இறைவன் கேட்டான். அந்தக் காவலாளிகள் வேந்தனைப்பார்த்து, ஓ ஆண்டவனே? யிந்த நன்றிகுன்றிய நான் மறையாளனை நாங்கள் தின்னமாட்டோம். நாயும்புசிக்கமாட்டாதெ ன்றூர்கள். ஆனலிந்தப்பாவி என் முகத்திற் கெதிர் நிற்க வேண்டாம். இவனைக்கொண்டு போய்ச் சுடுகாட்டு நாய்களுக்கு விருந்தாகப் போடுங்களென்றான்: அப்படியே செய்கின்றோமென்று அங்ஙனே குண்டாந்தடிகளினால்முண்டுகள் மூட்டுகள் முறியவடித்து வாய் வழியில் உதிரங்கக்கும்படியாய் யிழுத்துப் போகின்றூர்கள்.

அப்போது பட்டணத்துச் சனங்களெல்லாம் அவனைப்பார்த்து, ஐயோ! சோறிட்டு யினைப்பாறிச் சொர்ணமுந் தருவித்துக் கொடுத்து, நீதியுஞ்சொல்லி நேயமாயிருந்து உபகாரம் பண்ணியனுப்பிய பெரியவருக்கு அபகாரஞ் செய்தானே, சற்றேனுந் தாட்சண்ணியம் பாராமல் உயிர்வதை பண்ணினனே, அப்பா யிந்தப் பாவிக்கு யிரங்கினல் யிவ்வுலகமும், நமது புண்ணியமான அரசும், பொன்றிப் போகச் செய்வான். இவன் பாவியிலுங் கொடியபாவி. ஆதலால், ஐயா காவலாளிகளே! நன்றாய்க்கட்டுங்கள். செவ்வையாய் திட்டுங்கள். தடிகளாற் கொட்டுங்கள். சத்திக்கித்தனை சதையாய்க் கொய்யுங்கள். மலைமேலேற்றித் தள்ளுங்கள். ஆயுதவகையாற் கொல்லுங்கள். யிருப்பு முள்ளுமே லுருட்டுங்கள். யிவனைக் கண்டாலு நினைத்தாலுங் கர்மம்வந்து கலக்கும். சீக்கிரமிழுத்துப் போங்கள். என்று தங்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். ஊருக்கும், உறவின் முறைக்கும், மற்ற உற்றூருக்கும் பெற்றூருக்குமாகாத அப்பாவியை வேவுகார ரிழுத்துப்போய், அவன் கழுத்திற் கயிறுமாட்டி நாலுபக்கங்களிலும் பிடித்துக் கொண்டு, சுடுகாட்டு நாய்களையும் வேட்டை நாய்களையும் உசுப்பிவிட்டு, அவனைக்காட்டிக் கடிக்கச் செய்தனர். அப்படிச்செய்தும், ஒரு உயிரைக் காட்டியவுடனே தங்களுயிரை லக்ஷியம்பண்ணமற் போய்விழுந்து கடித்துதறித் தின்னும் நாய்களானது யிந்தப்பெரும் பாவியைக் கண்ணினலும் பாராமல், தங்கள் பசியையும் ஓயாமற் குலைத்துக்கொண்டு போய்விட்டன. அப்பாற் போன்களில்லடைபட்டிருக்கிற புலிகளுக்கு முன்னே போட்டார்கள். அவைகளும் பின்னிட்டுப்போயின. பூமியிற் புதைத்து யானைகளின் காலிற் புரட்டினூர்கள். அந்த யானைகளும் யிவனைத் தீண்டிவதைக்காமல் அகன்றிவிட்டன. இன்னும் அநேகவிதமான யிம்சைகள் பண்ணியும் எந்த விதத்திலும் உயிர்போகாமலிருக்கிற துஷ்டனை அவ்விடத்திற்றனே நிறுத்திப்போட்டு, சிலபேர் இராஜனிடத்தில் வந்து, நடந்த சங்கதியைச் சொன்னூர்கள். அதைக்கேட்ட அரசனனவன் ஆச்சரியப்பட்டு, தாயுந்தீண்டாத பாவியை யிந்தப்பூமியென்னமாய்ச் சுமந்தது? தெய்வம் எவ்வாறு சகித்தது? ஆ! கடவுளேஎன்று சற்றுநேரம் யோசனை யொன்றுந் தோன்றமற் சும்மாயிருந்து அப்பால் நிதானித்து, தன்னுடைய பிராண சிநேகனுக்குச் சினேகனுகிய தேவேந்திரனை நினைத்தான்.

அப்போதே அயிராவதப்பாகனன இந்திரன் வந்து விருப்பாட்ச மகாராஜனைக் கண்டுஒருத்தருக்கொருத்தர்க்ஷேமவிசாரணை செய்து பிரிய வசனங்களைப் பேசி. என்னை நினைத்தகாரியம் யாதென்று வினவினன். அக்கால் விருப்பாட்சன் மெத்த விசாரமாய் கண்ணிலேதண்ணீர் வடியக்கவலைகொண்டு, தேம்பித் தேம்பி யழுது, நெடுநாளைய நேசனை நாளிச்சிங்கனென்னு நல்லவர். தமக்கு மிகுந்த விசுவாசமானவர். அந்த மகானுபாவருக்கு ஒரு துற்மார்க்கனல் இன்னபடி நடந்ததென்று ஒன்றெளியாமலுரைத்தான் அதைக்கேட்ட தேவேந்திரன் அதிக விசாரப்பட்டு, அவருக்கும் இப்படி வரலாமா? ஐயோ! ஈதென்ன அனியாயம்? என்று மனங்கன்றி, ஓ விருப்பாட்சமகாராஜனே! நீரொன்றுக்கும் பயப்படவேண்டாம். நேசன்போய்விட்டானென்று புத்திமோசம் போகாதீர். அந்த நாளி சிங்கனகிய நல்லவருக்குச் சிருஷ்டிகர்த்தா சிநேகமானபடியால், அவரெவ்விதத்திலும் பிழைக்கச் செய்வார். நீர் சந்தேகப்படாதீர். இப்போது நீர் கொண்டிருக்கும் விசனத்தைவிட்டு, அந்த மித்துருவின் உடலின் மாமிசத்தைப் பிணித்து அபிஷேகஞ்செய்து, உமது ஆசைதீரச் சம்பிரமத்துடன் கொண்டுபோய்ச் சுடலைசேர்த்து, காஷ்டமடுக்கிச் சுட்டுப் போடும். சுகிர்த்தைத் தேடும். அவ்வுடலானது அக்கினி பகவானுக்கு ஆகுதியானவுடனே நம்முடை

ய இஷ்டன் பிழைத்து வருவார். நாமெல்லோரும் பார்த்துச் சந்தோஷப் படலாமென்று பேசினான். அந்தச் சொல்லாசையினால் விருப்பாட்சமகாராசன் தகனஞ் செய்வித்தான். பட்டணத்துச் சனங்கள் முதலிய இயாவரும் பரதவித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது நாளிசிங்கனென்னுங் கொக்கினுடைய மெய் விரதத்தினாலும், தேவேந்திரனது சகாயத்தினாலும், பிர்ம்மாவினுடைய தயவினாலும், விருப்பாட்ச ராசனுடைய துணைக்காரணத்தினாலும், தேவதைகளின் பிரேரேபணையினாலும் ஆகாயத்திலிருக்கிற காமதேனுபாலைப்பொழிந்தது. அந்தப் பாலானது நாளிசிங்கனென்னும் ஞானவானுடைய உடல்வெந்த சாம்பரை நனைத்தது. தக்ஷணம் நாளிசிங்கனாகிய கொக்குபழய வடிவங்கொண்டு, சோனாமேகம்போற் கண்ணீர் சொரிந்து கொண்டிருக்கிற விருப்பாட்சனையுந் தேவேந்திரனைப்பார்த்து, விசனமாறுங்கள், விசனமாறுங்கள் என்றது. அதைக்கண்ட விருப்பாக்ஷ ராசனும், தேவராசனும், இறந்தவர் பிழைத்தாரென்பதனாலுண்டாகிய இன்பத்தை யடைந்தார். தேவதைகளும் அரம்பாஸ்திரீகளும் மகிழ்ந்து புஷ்ப வருஷம் பொழிந்தார்கள். பூலோகத்தார் புண்ணியத்திற்கு ஒருக்காலும் பழுதில்லையென்று புகழ்ந்து கொண்டாடினார்கள்.

இப்பால் விருப்பாக்கனும் விண்ணாள் பவனுங் கொக்கைத்தழுவி மார்போடணைத்து, உச்சிமோந்து, உள்ளமகிழ்ந்து, விருப்பாக்கன் தனது நண்பனைப்பார்த்து, ஐயா! நீர்எங்களுக்கு அநேக தருமங்களையும், அரசர் நீதிகளையும், அதுபோகச் சேதிகளையுந் தெரிவிக்கின்றவராச்சே. அப்படி யிருக்க, இந்தப் பார்ப்பாரப் பதிதனுடனே எப்படி நேசித்தீர்? இவனை எவ்வாறு நம்பி என்னிடத்திற்கனுப்பி வைத்தீர்? இந்தப் படுபாவி இவ்வளவு தூரம் பிரமாதத்திற்குக் கொண்டு வந்துவிட்டானே. கீழ் மக்களுக்குக் கிஞ்சித்தேனுங் கிருபைபுரியப்போமோ? என்று நடந்த சங்கதிகளை எல்லாம் விபரமாய்ச் சொன்னான். அச்சொல்லைக் கேட்ட நாளிசிங்கனென்னுங் கொக்கானது பதைத்துத் துடித்துப் பரதவித்தெழுந்து, எங்கே அந்தப் பிராமணன்? இருக்கின்றானா? இறந்து போனானா? என்று கேட்டது. அதற்கு விருப்பாட்சன் சற்றாலோசித்து, பிராமணனிறந்து போனானென்று சொன்னால் மறுபடியும் இவர் பிராணனை விடுவார்போலிருக்கிறதென்று அதனுடைய அவசரத்தினாலறிந்துகொண்டு ஐயா! அந்த அனியாயக்காரப்பாவி இதோ யிருக்கின்றானென்று கொண்டுவரச் சொல்லி நாளிசிங்கனுக்கு முன்னே விட்டான். அந்த கொக்கு அழும்பனாகிய பிராமண வேடனைப் பார்த்து, ஐயோ! அப்பா!! உன் தலைவிதி யிப்படியாயிருந்தது? நல்லது. எதுவு மவாளவாளுடைய வினையின்படி முடியும். என்று விருப்பாக்களைப் பார்த்து ஒ அன்பனே! இவன் கட்டையவிழ்த்து இளைப்பு களைப்பு இல்லாமற்போக்கி, இவனுக்காகக்கொடுத்து விட்ட திரவியங்களை தத்தாபகாரம் பண்ணாமலளித்து, அவனிஷ்டப்படிக்குப் போகும்படியாய் என்னிமித்தியத்தில் அனுப்பி விடுங்களென்று வேண்டிக்கொண்டது. அப்படியே இந்திரனும் விருப்பாட்சனுஞ் சிந்தை கனிந்து, சிநேகநிமித்தியமாய்க் கட்டவிழ்த்து, அவன் கட்டிக்கொண்ட பொருள் மூட்டையங் கொடுத்து ஓட்டிவிடும்படியாய் தலையாரிகளுக்கு உத்தரவு செய்தார்கள். அவ்வாறேயவர்கள் கட்டவிழ்த்து உடமையுங் கொடுத்து, அத்தடத்தினின்றுங் கடத்திவிட்டார்கள். பொருள் தேடவந்த நீசப் பிராமணன் அப்பொருளுடன் பாபமூட்டையுங்கட்டிக்கொண்டு, ஒருவேளை தலையாரிகள் இன்னமுந் தேடிவரப் போகின்றார்களென்று பயமடைந்து திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, ஓட்டமு நடையுமாயோடி, வேடுவச்சேரி சேர்ந்து, முன்போலவே விபஸ்தை கெட்டிருந்தான். இப்பால் தேவேந்திரன் செலவு பெற்றுக்கொண்டு சிநேக விசுவாசந் திறம்பாமல் தெய்வலோகம் போய்ச் சேர்ந்தான். நாளிசிங்கன் விருப்பாட்சனைப் புகழ்ந்து, என் பிராணநேசனாகிய உன்னைப்போல் இந்தப் பூமியிற் காண்பனோவென்று பொங்குதலடைந்து செலவு வாங்கிக்கொண்டு பூர்வீகமிருந்த ஆலமரத்திற்குப் போய் தேவர்கள் முதலான பேருங் கொண்டாடச் சுகம் பெற்றிருந்தது. விருப்பாக்கன் வேலைக்காரருக்கு வேணமட்டும் வெகுமதி கொடுத்து மேன்மையோடிருந்தான்.

அப்பா தருமநந்தனா! அப்பட்சி சாதியாகிய கொக்கு யென்ன யோக்கியமுள்ளதாயிருந்தது? இப்பிராமணனாகிய பதிதன் நெறியற்ற நெறிபோய் எப்படியாகக் கெட்டான்

பார்த்தையா? ஆனதால், உயர்ந்த குலத்திற் பிறந்தோமென்று சிலமூடர் மதிப்பார்கள். அஃதொன்றும் பிரயோசனமில்லை. மானிடதேகம் மேன்மையென்று சொல்லுவார்கள். அதுவுங்காரியமில்லை. எந்தக்குலமானாலும், எந்தப் பிறப்பானாலும், நற்குணமும் ஞானமும் பேரறிவும், சத்தியமும், பிரதானம். ஆகையால், உயர்ந்தகுலமென்று வெளிவேடத்தையும், டம்பத்தையும், சம்பத்தையும், பார்த்து மயங்காமல், நிதான சுதானந்ததையுடைய பேர்கள் எந்தச்சாதியிற் பிறந்திருந்தாலும் அவர்களை யெல்லாம் நல்ல காரியங்களிலேயுஞ் சேர்த்துக் கொள்ளவேண்டும். அவர்களும் பிரீதியாய் வஞ்சனையின்றி மருவுவார்கள். எப்போதுஞ் சுகத்தைக் கோருவார்கள். அவர்களுடைய உறவாற் பகை நேரிடுவதானாலும் ஜெயமாகும். நன்மைகிடைக்கும். இதை நன்றாயோசித்துக்கொள்ளுக. இன்னமும் இராஜர்கள் பூலோகத்தாருடைய காரியங்களையும், அன்னிய அரசாட்சிகளையும், அன்றைக்கன்று நடக்கின்ற மனோதர்மங்களையும், ஒருவரால் தெரிந்துக்கொண்டு, தானும் புத்தியினாலோர்ந்து அப்பால் ஒருவருடன் யோசித்து நேசிக்க, வேண்டும். அப்படிக்குச் சிநேகம்பண்ணினால் எப்போது நன்மையுண்டாம். நல்ல நேசத்தினால் நலங்கிடைக்கும். தீயசிநேகத்தினாற் செல்வமுஞ் சீருங்கெட்டு, பிராணனுக்குகேடுவரும். ஆதலால், யாதினு முன் சாக்கிரதைப்பட்டு, இவாள் நல்லவர்கள். இவாள் யோக்கியர்கள். இவாள் குலசாம்பிரதாயர்கள். இவாள் குணமேருவானவர்கள். என்றறிந்துகூடி இவாள் துஷ்டர்கள். இவாள் அயோக்கியர்கள், இவாள் அசாம்பிரதாய குலத்தவர்கள், இவாள் அவகுணமானவர்கள். என்றறிந்துவிலக்கி, ஒருவர் சொல்லைக்கொண்டு ஒருவனை மதிக்காமல், தன் புத்தியினாலும், யுத்தியினாலும், நடைநொடிபாவனைகளை நாள்தோறும் ஆராய்ந்தறிந்து சீராய்ந்தபேருக் கழகுண்டாம். உலகத்தையாளுகிற இராஜன் இவ்விதமாய்த் தேடிச் சிநேகிக்கவேண்டும். இராஜன் ஒருத்தனை அவசர நிமித்தியமாய் வைத்துக்கொண்டால், அவன், சிலநாட்பழகி அந்த ராஜனுடைய நோக்கத்தைத் தெரிந்துகொண்டு அவ்வரசனுக்குத் துரோகம் நினைக்காமல் ராஜகாரியத்தில் நாட்டம் வைத்திருக்கவேண்டும், அவன்தான் நற்குலத்தான், பொற்குணத்தான், அப்படிக்கவன் சரியானவனாயிருந்தபோதிலும் எசமான்புத்தி எளிமையாயிருந்தால் அவனிடத்திலிருக்கிறவனுங் கெட்டு, எசமான் புத்தியோடுகலந்து, எல்லாக் கேட்டுக்கும் இடையூறுக்குந் துணைப்பட்டுப்போவான். ஒருவேளை எசமான் கோபம்வந்து கோபித்தால், இவனும் எசமானைக் கோபிப்பான். அதேதெனனில், அவன்பண்டவாளம் இவனுக்குத் தெரியும். இவன் அனுபோகசாலி, அப்பாலந்த யெசமானிவனைத் தழுவவேண்டும். சத்தியமுள்ள பிரபுவானவன் ஒருவனைத் தழுவத்தக்கதாகிய அவசரமில்லை. சத்தியதருமந்தவிர மற்றொன்றுக்கும் பயப்படவேண்டியதில்லை. இதைக்குறித்து திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்லுகின்றேன் அதை உனது புத்தியிற் பதிந்து கொள்ளுக.

---

### அரசன் தயவையறிதலைப்பற்றிக் கூறிய அதருமராஜன் கதை.

ஓ தருமநந்தனா! புரிசைக்கிரியென்னும் ஒரு பட்டினத்திற் பவிரகராஜ னென்பவன் அரசாட்சி செய்துவந்தான். அவன் கொடுங்கோல் மன்னன், பொல்லாதவன், அருளில்லாதவன், அதருமங்களைப் புரிவதே அவனுக்குப் புண்ணியம். அவன் குடிபடைகளைவருந்தி, ராஜதண்டங்கண்டு, வெகுபாணங்களைக் கொள்ளையடித்து, உயிர்வதை செய்து, பெரியோர் மனநோவப்பண்ணி, பெருவியாதிபிடித்து, உடல்தடித்து வெடித்து, சீழும் ரெத்தமுமாய் வடித்துச் செத்தான், அந்தப்பாவி யுந்தப்பூமியிற் செய்த பொல்லாங்கினாற் கோமாயுவென்கிற குள்ளநரியாய்ப்பிறந்து, குவலயமெங்குந்திரிந்து, ஒரு சுடுகாட்டுக்குப்போய் நரிகளுடன் சேர்ந்து, நாற்றமுள்ள பிணங்களைப் பிடுங்கித்தின்று நாளுநாளுமுழன்று வருகிறான். அந்நாளில் இந்தநரி பூர்வஜனனத்தில் அநேகம்பொல்லாங்கைச் செய்தபோதிலும், ஒருகாலத்தில் நன்மைசெய்திருந்தபடியினாலே பூர்வக்கியானந் தோன்றி, ஐஐயோ!! நான் முன்னே வெகுபாபஞ்செய்திருந்தபடியினாலே நரியாய்ப்பிறந்து இத்தனை பாடுபட்டுத்திரியா நின்றோம். இனியாகிலும் நற்கருமங்களைச்செய்ள்து பூர்வபாபத்தைப் போக்கடித்துக் கொ

ளவேண்டும். என்று நல்லறிவுபிறந்து, காதியாசாரப்படிக்கு மாமிசமுதலிய பிணங்சளைத் தின்னுமல், பழங்களேயும், காய்களேயும், கிழங்குகளேயும் புசித்து, குளத்துத் தண்ணீரைக்குடித்துக் காலங்கழித்து வெகுநாளிருந்தது. இப்படியிருக்கிறபோது அந்தக்குலத்தனவாகிய நரிகளெல்லாம் இந்த நரியினிடத்திற்குவந்து, ஐயா! நீர் நமது குலாச்சாரந்தப்பி மாமிசம் புசியாமற் பட்டினியிருக்கின்றீர். ஒருவேளே உமக்கு மாமிசம் அகப்படாமையினுலேயோ? அல்லது காடுமேடு திரிந்து சாப்பிடக்கூடாத பால்மாறிக்கையினுலேயோ? நீர் விலக்கிவிட்டது. அப்படிக்கானுல், நிதம் நாங்கள் கொண்டுவந்து கொடுக்கின்றோம். நீர் சாப்பிட்டுச் சந்தோஷமாயிரும். என்று அநேகவிதத்திற் சொல்லியதுகள்.

அப்படியவைகள் சொல்லிய பேச்சை ஒத்துக்கொள்ளாமல், ஓ மித்திரர்களே! நிழலினுடைய சவுக்கியம் வெய்யிலிற்போனுற்றெரியும் பூர்வத்தில் எழுவகைத்தோற்றமாகிய எண்பத்துநான்கு நூருயிரமென்னும் யோனிபேதங்களிற் பிறந்து மறுபடியுமிறந்து வண்டிச்சக்கரம்போலும் கடலினுடைய அலேயைப்போலும், மாறிவருஞ் சனனத்தில் எத்தனேயோகோடி புண்ணியவசனத்தினுல் ஐயறிவுள்ளமானிடப்பிறவியாய்ப் பிறப்பது. அந்த மானிடப் பிறவியிலும் அவயவப்பழுதில்லாமற் சனித்து, கல்வியைக் கற்று, ஞானம், தயை, சாந்தம் இவைகளேயுடைத்தாய் நன்னீதி நடத்தும் அரசனுகப்பிறப்பது எவற்றினுமரிது. அப்பேர்ப்பட்ட ராச்சியபரிபாலனம் பண்ணத்தக்கதாகஎனக்குக் கிடைத்திருந்தும், பெரியவர்களுடன் சினேகஞ்செய்து நல்ல தரும சாஸ்திரக் கேள்விகளேக் கேட்டு, சத்கருமங்களேயனுஷ்டித்து, யோக்கியமாகத் தானதரும பரோபகார ஜீவகாருண்யஞ் செய்து கடைத்தேருமல், ஐஐயோ!! அனியாயமாய்ப் பெரியபாபங்களேப்பண்ணி, செந்துக்களிற்குழ்ந்த நரியாய்ப்பிறந்தேன். வெகுதினமாய் நாற்றமெடுத்த பிணங்களேப்பிடுங்கித்தின்று வயிறு வளர்த்து வந்தேன். இப்போதெனக்கு ஏதோவொரு புண்ணியபலத்தால் முன்பு நேர்ந்த தீவினேயின்செயலேப்பூர்வக்கியானங்கொண்டறிந்து, மெத்தவுந் துக்கப்பட்டு, உங்களினத்தாருண் ணுசிறபுலாலே மறுத்தேன், என்றுபுகலவும் மற்ற நரிகளெல்லாம் மெத்தவிரைந்து, ஓ உத்தமரே எவனொருவன் தருமவானென்று சொல்லத்தக்கவனே? அவனே குலாசார தருமந் தப்பாதவன். அதைவிட்டு வேறுதருமஞ்செய்பவன் அதருமன், (கைவினே கரவேல்.) என்கிற வாக்கியத்தைக் கண்ணுற்றுப்பாரும். ஆகையால் நமது குலமுறைப்படிக்கு நாமெல்லாங்கூடியுண்போம் வாருமென்று அழைத்ததுகள். இப்படி எத்தனேவிதத்திற் புத்தியைக்கலேத்தாலும் அவ்வரசநரி ஒரேபிடிவாதமாயிருந்து, தான்கொண்டிருக்கு நிலேவிடடுப் பிரியாமற் சரகாதி மூலங்களே அருந்திக்கொண்டிருந்தது.

இந்த வர்த்தமானமெல்லாம் அந்தக் காட்டிலிருக்கின்ற மிருகங்களுக்குச் சர்தாராகிய வேங்கைப்புலி கேட்டு ஆச்சரியப்பட்டு, இந்த நரியண்டைக்கு வந்து ஓ நரியே! உம்முடைய விரதத்தின் திடத்தைக்கேட்டு நிரம்பவுஞ்சந்தோஷமாச்சுது. இப்பேர்ப்பட்ட ஸ்திரமான புத்திசாலிகளிடத்தில் நேசிக்க வேண்டுமென்று வந்தேன். ஆதலால் இப்போது என்னிடத்திலிருக்கிற குமுஸ்தாக்களுக்கெல்லாம் நீர் பெரிய குமுஸ்தாவாயிருந்து மதிமந்திரிதனஞ்செய்து, எனக்கு நல்ல அறிவும் போதித்துக்கொண்டிருமென்று சொல்லிற்று. அதற்கிந்த ஆசாரநரியானது நகைத்து, ஓ புலிராசனே! நான் உம்மிடத்திற் புதிதாய்வந்து அமுல் நடத்தினுல், பழமையாயிருக்கிற பேரெல்லாம் பொருமைப்பட்டு மனங்கொள்ளாமல் என் பேரிற் ரூேஷஞ்சொல்வார்கள், எங்கேகுற்றமுண்டோவென்று தேடுவார்கள். எந்தச் சமயத்தில் இவனே வாலறுத்திடலாமென்று யோசனே செய்யக்கூடுவார்கள். உமக்கு இல்லாததும் பொல்லாததும் சொல்லி, எனக்குத் தண்டனேக்கண்டனே செய்விக்கும்படி நாடுவார்கள். (பார்க்கிற கண்ணிலு கேழ்க்கிற காதுமேல்.) என்பதுபோல் அவர்கள் மொழியைக்கேட்டு நீர் கோபிக்க வேண்டிவரும். நீர் துரைத்தனம் பண்ணுகிறவர். உம்மிடத்திற் சாக்கிரித்தனஞ்செய்கிற என்னே நீர் என்னபண்ணவேண்டுமோ? அதெலலாம் பட்சபாதம் பாராமற் செய்யலாம். உமக்குளதிரில்லே, எனக்குத்திக்கில்லே, ஆதலாற் கேள்விச்சொற் கேட்டுக் கெடுநினேப்பு கொள்ளுகிறதில்லேயென்றும் இப்போதிருக்

கிற இஷ்டம்போல் எப்போது மிருக்கிறே னென்றுங் கெட்டியாய்ச் சொல்லுவீராகில், நானும்மிடத்தி லிஷ்டப்படிக்கு இருக்கிறே னென்று சொல்லிற்று. அதற்குப் புலியான து, அப்படியே நான் ஒருத்தர் பேச்சையுங் கேளாமல் உம்மையே நம்புகிறேன். என்னை நீர் உண்மையாய் நம்பும். என்று அபயஸ் தங்கொடுத்தது. அப்பாலந்த நரியானது புலியினிடத்திற்போய் மந்திரியா யிருந்து, சகல விசாரணையுஞ் செய்து, பரமார்த்திய பக்குவ விசேடங்களை யறிந்து, காலத்திரய மூங்கண்டு, தக்கபடி காலட்சேபம் பண்ணிக் கொண்டிருந்தது. அந்தச் சர்தாராகிய புலி யும் நரிசொன்ன பேச்சைத்தள்ளாமற் கேட் டுவந்தது.

இப்படிக்கிருக்க, அந்தப் புலியினிடத் திற் பழமையா யிருந்த மந்திரி மிருகங்களெ ல்லாம் பொருமையடைந்து, அந்தப்புலியும் நரியும் பொருந்தி வாழ்வது சரிப்படாமல் இந்த நரியைக் கொன்றுவிட வேண்டுமென் று நிச்சயித்து, எந்தவிதத்திற் கொல்லலா மென்று, ஆலோசித்துத் தருணந் தேடிக் கொண்டிருந்ததுகள், அப்படியிருக்கிற நா ளையில் வெகுநாளாய்ச் சமயம் வாய்க்காமல் நமது புலிராசாவுக்கும் இந்த நரிக்கும் மித் திர பேதம் பண்ணி அவரைக்கொண்டு கொ ன்றுவிடச் செய்யவேண்டுமென்று தங்களுக் குள் கலந்துபேசி, பலநாள் காலம் பார்த்தி ருந்து, புலிராஜன் பசியுடனே வருகிற வே ளைப்பார்த்து, அதற்குப்பக்ஷணமாகவைத்தி ருந்த மாமிசத்தை யெடுத்து மறைந்து விட் டிருந்ததுகள். அந்தப் புலிராசன் காடெல் லா மோடித்திரிந்து களைத்து இளைத்துவந் து, பசிநோயினுல் வருந்தி, இவ்விடத்தில் வைத்திருந்த இரையெங்கே யென்று இரை ந்து கோபமாக விரைந்து பூமியதிரக்குதித் தது. அப்பொல்லாத கோபவேளையை அ வைகள் நோக்கி, ஏனையா எங்கள் பேரிலெ ரிந்து விழுகிறீர்? உமக்கு உயிர்துணையாய் வந்திருக்கிற பிரயமான நரிமந்திரியானவர் தான் தின்பதற்காக ரகசியமாய்த் திருடிவை த்துக்கொண்டனர். அவர் நான் மாம்சபக்ஷ ணம் பண்ணுவதில்லையென்று பலுக்கியபே ச்சையெல்லாம் நீர் நம்பினீர். அது சுத்த வெளிச்சமே, வெளிக்கு வேஷமே. மாமிச தேகம் மாமிசத்தை மாற்றியதென்றால் யாவ ரும் இனத்தைத் தழுவாமலிருக்க வேண்டு மே இவர் எந்தயினத்தை விட்டார்? இனத் தை இனந்தழுவுமென்பது பொய்யா? ஐயா சைவமென்று வீணை பிரதிஷ்டைக்காகச் சொல்லிக் கொள்ளுவதே யொழிய வேறென் றுஇதைப்பகுத்துப் பார்க்குமிடத்தில்உள்ளுக்குள்ளே வெகுவாய் உண்டு வருகிறார். நம் மில் யாருக்கும் ஊத்தைக்கவிச்சு, உதிரக்க விச்சு, ஊனீர்க்கவிச்சு, சீழ்நீர்கவிச்சு, தே கக்கவிச்சு, போகக்கவிச்சு, மூலைப்பாற் கவிச் சு, முகருங்கவிச்சு, இன்னுமநேகங் கவிச்சு களுள். தேகம்விட்ட அன்றைக் கல்லவோ சீலமென்று செப்பவேண்டியது. மாமிசத் தேக மிருக்கிறவரைக்குஞ் சைவமென்னும் மேல்மினுக்குப் பொய்வார்த்தையை நம்மப் படாது. ஆசாரமென்று பேர்வைத்துக் கொண்டு உமக்கிருக்கிற இரைச்சியிற் கொஞ் சங்கொஞ்சம் ருசிப்பார்த்துப் பசியாற்றிவரு கிறதே தனக்கு ஆதாரமுமாசாரமுமாக நினை த்திருக்கின்றார். நாங்களுஞ் சாடைமாடை யாய்ப் பார்த்து வருகின்றோம். ஒருவேளை உம்மிடத்திற் சொன்னால் அவரளவில் வை த்திருக்கிற புதுமோகத்தால் எங்கள் பேரிலு மக்குக் கோபம் வருமேயென்று மெத்தவும் பயந்திருந்தோம். உமது அன்னத்தைப் புசித்த நாங்கள் உமக்குப் பின்னந்தேடப் படாது. உண்மையை யுரைத்தோம் என்று சமயோசிதமாய்ச் சொன்னதுகள்.

அந்தமட்டிற்கேட்ட மதப்புலியானது சொல் வலிமையினாற் சொன்ன பொய்யை மெய்யாகக்கொண்டு வாலடித்து, நகத்தை விரித்து, முகஞ்சிலிர்த்து, கண்சிவந்து, ப ல்லைக்கடித்து, அந்த நரியைப்பிடித்து, அ டித்து விழுங்கி விடுகிறேனென்று ஆக்கிரமி த்துப் பராக்கிரமங்காட்டி, கழுத்துமயிரைச் சிலுப்பி, கடைவாயை நக்கி, வாயைத்திறந் து, உடம்பை குலுக்கிக்கொண்டு வருவதாய து. அப்படிவருகிற ஆவேசத்தை அந்தப் புலியினுடைய தாயானது கண்டு, அடடா! பழையபாவிகள் கெடுத்தார்கள். பகைமூட்டி விடுத்தார்கள். அந்த நரிமந்திரி வந்த பிற் பார்டு என்மகன் சுகப்பட்டான். உள்ளபடி நடக்கிற குள்ளநரியார் மிகநல்லவர். பொய் பேசமாட்டார். உத்தியோகத்திற்கு வருகிற முன்னிலையில் விஸ்தாரம் வினைவிளையுமெ ன்று கேட்டுக்கொண்டனர். துன்மார்க்கரெல் லாருங்கூடி என்பிள்ளைக்குத் துற்போதனை பண்ணி இத்தனை தூரத்திற்குக் கொண்டுவ

ந்துவிட்டார்கள். என்றுகுலைகுலைந்து, ஓடி வந்து குறுக்கேவிழுந்து, அப்பா மகனே! அந்த நரிமந்திரி மெத்தவும் உத்தமர். அவருக்கு வாய்ப்பதட்டங் கைபதட்டங் கிடையாது அவர் வந்தநாள் முதல் இந்நாள்வரையிலும் அனுபோகம் பார்த்து வருகிறேன். மெத்தவு நிதான முடையவர். நான் ஸ்திரமாகச் சொல்லுகிறேன். நீ தீர்க்க விசாரணை செய்தாற்றெரியும். அப்போது பொய்யுமெய்யும் வெளியாய்ப்போகும். புண்ணியபாவம் இரண்டுந்தெரியும். நீ பொறுமையை விடுக்காதே. என்று பிள்ளையினது கோபத்தைமாற்றியது. தாய்ப்புலி சொல்லை கேட்ட பாய்ப்புலியானது சற்றுநேரம்நிதானித்து, தீரவிசாரிக்கத் தெரியுமென்று தன் கொலுவுக்குவந்து, பழைய மந்திரிகளை ஒவ்வொன்றாயழைத்து, நான் தின்னுகிற புலாலை நரிமந்திரியெப்படி எடுத்தனர்? எத்தனை நாளாய் இப்படி செய்து வருகிறார். யார் பார்த்தவர்கள்? நீ பார்க்கும்போது எந்த மாமிசத்தை யெடுத்தனர்? நீ கண்ணாரக்கண்டனையா? கண்டபோதே எனக்குத் தெரிவிக்க வேண்டுமே நல்ல மனசுடையவர்களானால் எல்லாரு நன்னாயிருக்கப் பார்ப்பார்கள். கெட்டகுணத்தார் யாவருங் கெட்டுப்போம்படி துட்டத்தன நினைப்பார்கள். என்று தனித்தனி பிரித்து அவைகளின் மனத்தினைப் பேதித்து விசாரித்தது. அப்போது இவைகள் பொய்பேசிச் சாதிக்கமாட்டாமல் புலிராஜனைப் பணிந்து, ஐயா! நீர் அந்த நரிமந்திரியைக் கொன்று விடுவீரென்று நாங்களெல்லோரும்ஒன்றுகூடி நீர் புசிப்பதற்காகயிருந்த மாமிசத்தையெடுத்து ஒளித்து வைத்துஇப்படிக்குஅபாண்டஞ் சொன்னோமென்று ஒத்துக்கொண்டதுகள்.

அந்தக்ஷணமே புலிராசன்விசாரமடைந்து, என்ன புத்தி யெண்ணினோம்? என்று விசாரியாமற் கொன்று விடப்போனோமல்லவா? என்று மனங்குன்றி, நரியையழைத்து, அவ்விடத்தில் நடந்த கிரியைகளையுரைத்து உபசாரம்பண்ணி இனியென் சரீரமுள்ளமட்டும் உம்மைப் பிரியேன். உம்மிடத்தில் அவநம்பிக்கை வைக்க மாட்டேன். இனி யாரென்ன சொன்னாலுங் கேட்கேன் இது சத்தியம். என்று உறுதி சொல்லிக்கொடுத்து அந்த நரிக்கு முன்னிருந்த பெருமையைப் பார்க்கிலும் பின்னையும் அருமைப்பாராட்டி சகலவிபசார அதிகாரங்களையும் அதன் வசத்தாய் விட்டுவிட்டு, தன்தாயை வணங்கி, அம்மா! உம்மாலே நான் பாபத்தில் வீழ்ந்து ஆபத்தையடையாமல், கோபத்தைத் தவிர்த்துக் குணவானுடைய உறவைப்படைத்து மேலான பெருமை யடைந்தேன். என்று தாயைப் போற்றியபின் துன்மார்க்கராகிய பழைய மந்திரி மிருகங்களைச் சன்மார்க்கமுள்ள நரிக்கு ஊழியம் பண்ணும்படிக்கு விதித்து அதுமுதல்நரியைத் துதித்துச் சுகம் பெற்று வாழ்ந்தது கேட்டையா தருமநந்தனா! அறிவில்லாத பேரிடத்தி லறிவுடையோர் சேர்ந்தாலுங் குற்றம்வரும். ஆனதால், இராசர்களுடைய குணங்களை நன்றாயறிந்து பின்பு அவர்களிடத்தில் மருவவேண்டும். எவர்களானாலுந் தன் சுதாவிவேகத்தினாலே தீர்க்காலோசனை செய்து தெரிந்துகொள்ளவேண்டும். ஒருவருடைய பேச்சைக்கேட்டு அவசரப்படலாகாது. அவரவர்கள் தங்கள் தங்களுடைய காரியஞ் செவ்வைப்படுகிறதற்குப் பாடுபட்டு, எந்தவேளையில்எப்படி செய்ய வேண்டுமோ? எவ்விதம் பேசவேண்டுமோ? அதற்குத்தகுந்தகாரியங்களைச் செய்யவும் பேசவுமா யிருப்பார்க ளயலார் சொன்ன பேச்சைப் புத்திமானாகிய ராசன் கேட்டு, அதன் சொன்னோக்கம் பொருணோக்கந் தெரிந்தப் புருஷ லட்சணமும் உணர்ந்து, அவனிருந்து சொல்லுகின்றதிசை, அப்போது அவனுக்கு நடக்கிறஇசை இவையெல்லாம் நிதானித்துப் பார்த்தாலும் உடனே யதை நம்பப்போகாது. தள்ளவுங்கூடாது. பராமுகமாயிருக்கவும் படாது, அவரவர்களக்கறைக்கு அவரவர்கள் பாடு படுவார்களென்பதற்கு ஒருகதை சொல்லுகிறேன் கேள்.

---

பகுத்தறிதலைப்பற்றிக் கூறிய நரி, கழுகு, இவைகளின் கதை.

ஓ முரசத்துவஜனே! விதிசேய்மாநகரென்றொரு பட்டணமுண்டு. அப்பட்டணத்திற் பிரபுத்துவமுடைய ஒரு குடியானவனுளன். அவனுக்கு ஒரு பிள்ளை அருமையாகப்பிறந்து சிலநாளிருந்து இறந்துபோயது. அந்தக் குழந்தைக்குண்டான உரியோர்களும் அப்பட்டினத்துச் சனங்களும் விசனமடைந்து, கண்ணீருங் கம்பலையுமாய் அழுது கவு

லயடைந்து, சவப்பணி செய்பவனுல் எடுப்பித்துக்கொண்டு மஹேசபூமியிற் கொண்டுபோய் வைத்தனர். அப்போது அந்தப் பிள்ளையைப்பெற்ற தாய்தந்தையர் அச்சவத்தைச் சீக்கிரம்புதைக்க மனம்வராமல், அந்தப் பிள்ளையைப் பார்த்து பார்த்து அதனுடைய அழகும், வளர்த்தியும், புத்தியும், யுத்தியும், அவர்கள் மனத்தினின்று நீங்காத்துயரத்தை விளைவிப்பதினுல் அந்தக் குமாரன் பேரிற் படுத்துக்கொண்டு துக்கப்பட்டு, அங்ஙனமே தாமசமா யிருந்து விட்டார்கள். அந்தவேளையில் அவ்விடத்திலிருந்த நெருப்பிப்போன் றெரியப்பட்ட பெரும்பசியையுடைய ஒரு கழுகானது இந்தப் புத்திரசோபமுடையவர்களைப் பார்த்து, ஓ மனிதர்களே நீங்கள் ஐந்தறிவுள்ள செந்துவாய்ப் பிறந்துஞ் சபத்தைக் கொணர்ந்து மயானத்தில் வைத்துக்கொண்டு மேல்வருங் காரியந் தெரியாமல் வீண்காலம் போக்குகின்றீர்கள். இங்கே பொல்லாத பூதங்களும்,பிரமராக்ஷதப் பேய்களும், வாசம்பண்ணிக் கொண்டிருக்கிற மஹேசஸ்தானம். ஒருவேளை யுங்களுக்கு அபாயநேரிடும். சூரியனும் மலைவாயிற் விழப்போகிருன். பாசமான இருள் சூழ்ந்து மோசம் வருவதற்குமுன்னே செத்தபிணத்தைப் போட்டுவிட்டுச்சீக்கிரம்போய் விடுங்கள். (ஆண்டாண்டுகோடி யழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ இம்மானிலத்தில்) என்னும் வாக்கியத்தை மறந்து போனீர்களோ? நீங்களும் இந்த மண்ணுக்கே யிரையாகப் போகின்றவர்களன்ருே? இதற்குமுன் னிருந்தவர்களும் பின்னிருப்பவர்களும் பிழைத்திருப்பார்களென்பது பேச்சோ? அனுபோகந் தெரியாமல் மதிமறந்து போச்சோ? இந்த மஹேசஸ்தானத்திலே தேவர்களும் இருக்கப் பயப்படுவார்கள். ஆனபடியால் உங்களுயிரைத் தப்பிக்கொண்டு ஓடிப்பிழையுங்களென்று சொல்லியது. இப்படியந்தப் பரியரக்கைப் படைத்த கழுகு சொல்லவும், அந்த வார்த்தையைக் கேட்ட இருவரு மதிமயங்கி, பிராணபயங்கொண்டு, மைந்தனைப் புதைக்காமல் வைத்து விட்டு ஓடினுர்கள்.

இப்படியவர்கள் பயந்து ஓடும்போது அங்கே ஒரு ஆலமரத்தின் பொந்திலிருக்கிற குள்ளநரியொன்று மெள்ள வெளிப்பட்டு ஓடுகிறபேறைத் தடுத்து, ஐயோ! புண்ணியர்களே! இவ்வளவு அருமையாய்ப் பெற்று வளர்த்த பிள்ளையை மண்ணுக்கிரையாய் வைத்து விட்டீர்களோ? என்று வருந்தியது. அப்போதவர்கள் அதனைப்பார்த்து, ஓ நரியே! பிள்ளையைப் புதைக்கப்போன எங்களுக்குப் பெரியபயங்காட்டி, ஓட்டியது ஒரு கழுகுகென்று புகன்ருர்கள். அதைக்கேட்ட நரியானது நகைத்து, அந்தக்கழுகின் பேச்சைக் கேட்டு அறிவு கெட்டுப் போகிற காரணமென்ன? ஏன் திரும்பிவிட்டீர்கள். வாருங்கள் வாருங்கள் இவ்விடத்திலொரு சிந்தனையுமில்லை. மஹேசபூமி யென்று பெயர் வாயந்திருக்கிற மயானத்தில் மற்றொரு கணமுதலிய பைசாசங்கள் வரக்கூடுமோ? சூரியன் அஸ்தமானமாகிறதற்கு இன்னும் ஒரு நாழிகைப் பொழுதிருக்கிறது. அதுவரையிலும் நீங்களருமையாகப் பெற்று வளர்த்த பிள்ளையைக் கண்ணிலே பார்த்து, கையினுலணைத்து முத்தமிட்டுக் கவலைதீருங்கள். இனிமேற் காணப்போகின்றீர்களா? ஒருவேளை பிராணவாயு கபாலத்திலடங்கிப் பிராணசகிதமாய்த் திரும்பினுலுந் திரும்பும் பிள்ளை பிழைத்தாலும் பிழைக்கும். ஐயோ! உங்கள் திஷ்டமெப்படியோ நானறியேன். ஆனுல், உயிர்போய் தொண்ணூறு நாழிகை பிரேதத்தை வைத்துப் பார்க்கும்படி ஒருசித்தாந்தமுண்டு. நூற்றிருபது நாழிகை ஆகாயப் பரிசஞ்செய்து பரிக்ஷிக்கும்படியாய் ஒரு சித்தாந்தமுண்டு. இந்தத் தவணைகளிற் பிழைக்காமற் போனுல், அப்பால் நீங்கள் போய் விடலாம். இதற்குள்ளே அவசரமென்ன ஆகிலும் நீங்களென்ன கல்மன துடையவர்களா? ஒரு பிள்ளை பிறக்க வேண்டுமென்று அநேகந் தவசுபண்ணி, தானங்கள் கொடுத்து, கோவில்கள் கட்டி, குளங்கள் வெட்டி, சிவப்பிரார்த்தனை செய்தல், விஷ்ணு பூசை நடத்தல், சில்லரைத் தேவதைகளை வழிபடல், விரதங்காத்தல், நோன்பிருத்தல், பூவாடைத்தெய்பம் போற்றல், தொட்டிலுடன் பிள்ளை செலுத்தல், அடுப்புச் சேர்த்தல்,புல் லுமுடி போடல், புறங்கைகட்டித் தலைகவிழ்ந்துண்ணல், உதயமுழுக்காடல், ஒருசிரங்கையரிசி பொங்கியுண்ணல், வாயினுற் புற்கடித்தல், நிலமெழுகியிட்டுப் புசித்தல், தகடெழுதிக்கட்டல், அவிஷதங்கள் சாப்பிடல், சிலைசெய்து நாட்டல், அரசும் வேம்பும் பயிராக்கி நாகப்பிரதிஷ்டை செய்தல், பிள்

ளையின் மலத்தைத் தின்னல், பெற்றவர்பாற்
போய் பிச்சு நஞ்சருந்தல், ஸ்நானஞ்செய்த
ஐந்தா நாள் மலத்துணிக்கசக்கி வாசலில் நி
ன்று சூரியனுக் கெதிரிலுண்ணல் இப்படி
இன்னும் பலவாருகிய கஷ்டமெல்லாம்பட்
டுப் பெறவேண்டிய பிள்ளையை, சுடுகாட்டிற்
போட்டு விட்டுப்போக மனந்துணிந்ததோ
வென்று கண்ணீர்விட்டு அவர்களுடன் கல
ந்தழுது, இன்னுஞ் சற்றுநேரமாகிலும் இ
ருந்து பார்த்துப் போங்களென்று மிகவும்
பச்சாத்தாப முள்ள துபோற் சொல்லியது.

இந்த வசனத்தைக்கேட்ட தாய்தந்தை
யர் இளகியமனத்தையுடையவர்களாய், பிண
ம்பிடுங்கித் தின்னுகிற நரிக்கு இவ்வளவு இ
ரக்க மிருக்கும்போது நமக்கில்லாமற்போன
தென்னவென்று திரும்பிப்போய்க் குழந்தை
யைப்பார்த்துச் சிந்தை நைந்தார்கள். அப்
போது கழுகுகண்டு, நீங்கள் போய்விட்டீர்
களே; மறுபடியும் ஏன் வந்தீர்களென்று
கேட்டது. அதற்கவர்கள் நரிகூறிய ஞாய
மெல்லாவற்றையும் நவின்ருர்கள். அதைக்
கேட்ட கழுகு ஆஹாவென்று கூவி, ஓ ஆவ
தறியாத ஆப்தர்களே காலஞ்சென்று கழன்
றபிராமணன் திரும்பிவருமா? நரி சொன்ன
பேச்சு நிசமா? செத்தபேர் திரும்புவாரென்
று இதுவரையிலும் நீங்கள் கேள்விப்பட்டி
ருப்பீர்களா? பார்த்திருப்பீர்களா? நான்
இந்தச் சுடுகாட்டில் ஆயிரத்து முந்நூறு
வருஷமா யிருக்கிறேன். சகல வைபவமும்
அறிவேன். இந்த மண்ணில் மாண்டவர்
கணக்கில்லை ஆண்டவனருளாலாவது மீண்
டுபிழைத்தது அறியேன். நீங்களியாவராகி
லுங் கேட்டும் பார்த்துமிருந்தாற் சொல்லு
ங்கள், (சுடுகாடு போனபிணந் திரும்புமா?)
என்னும் பழமொழி சொல்லக் கேட்டதில்
லையா ஐயோ ஏழைமக்களே! போங்கள்போ
ங்கள்: ஆச்சுது மஹேசமுனி வரப்போகின்
ருரென்றது. அவர்கள் அந்தக் கழுகினது
பேச்சைக் காதிற் பாதிகேட்டுங் கேளாமலி
ருக்கும்போதே ஓட்டமெடுத்தார்கள். இப்
படியோடி வருகிறபேரை வழியில் நரிகண்டு
தடுத்து, ஏன் ஓடிவருகின்றீர்க ளென்றது.
கழுகு சொன்ன காரியங்களைக் கழறினார்கள்.
அதைக் கேட்ட நரியானது அவர்களருகிற்
பரிவாயணுகி, கழுகின் பேச்சைக்கேளாதீர்
கள். குழந்தையி னிடத்திலிருந்து உங்கள்
குறைகளைப் போக்கடித்துக் கொள்ளுங்கள்.
நாளைக்குப் பார்க்கப்போகிறதில்லை. செத்த
வர்கள் பிழைக்கமாட்டார்களென்றே நினை
க்கவேண்டாம். ஜெகதீசனுக்கு அருள்வரு
மாகில் ஒரு நிமிஷத்திற் பிழைப்பார்கள்.
இதற்குச் சம்சயமில்லை. இந்தப் பூமியிற்
பிறந்திறந்த பேர்களில் வெகுபேர் பிழைத்
திருக்கின்ருர்கள். இதுகளுக்கெல்லாம் இ
ப்படி கூடுங் கூடாதென்று ஒரு நிர்ணயமு
ண்டோ? இல்லை. மநோவாக்குக் கெட்டாத
பரமேஸ்வரருடைய திருவிளையாடல் எப்ப
டியிருக்குமோ? அதை ஆராலெடுத்துரைக்
கக்கூடும்? இதற்கொரு திருஷ்டாந்தஞ்சொ
ல்லுகிறேன் கேளுங்கள்.

தசரத மகாராஜன் பிள்ளை அயோத்தி
யை ஆண்டுவரும்போது, ஒரு பிராமணப்
பிள்ளை இறந்துபோய் அந்தக் குழந்தைக்
குரிய தாய் தந்தைகளும் பந்துக்களுந் துக்
கப்பட்டு எடுப்பித்துக்கொண்டு வந்து, ஸ்ரீ
ராமனுக் கெதிரில் வைத்து, இந்தப் பிள்ளை
துர்மரணமாக இறக்கவேண்டிய தென்ன?
நீர்பண்ணுந் துரைத்தனத்தில் என்னமோ
குறைவிருக்கிறது இல்லாவிட்டால் எங்கள்
பிள்ளை சாவாது. உம்மாலே இந்தப் பிள்ளை
செத்தது. இப்பவும் இந்தக்குழந்தை எழு
ந்திராமல் நாங்களுயிருடன் போகமாட்
டோம். எங்களுயிரை உமது சமுகத்தில்
விட்டுவிடுகிறோம். என்று ஓங்கி முறையிட்
டழும்போது, அவருந் துக்கப்பட்டார். அ
துவேளையில் ஸ்ரீராமருடைய சத்தியத்தின
லே அநேக நேரத்திற்குப் பிற்பாடு தூங்கி
யெழுந்தவர்போல் அந்தப் பிள்ளை பிழைத்
தெழுந்தான். அவனுடைய தாய்தந்தை
முதலியபேரும் புத்திரசோபமறந்து வாழ்ந்
திருந்தார்கள். அப்படிபோல் உங்கள் பங்
கிலேயுந் தெய்வமிருந்து பிழைப்பூட்டிக்
கொடுத்தால் ஆகாதா இறந்தவன் பிழைத்
தானென்பது ஒரு அருமையா இது ஒருபெ
ரிய காரியமா உங்களுக்கேன் எள்ளளவும்
புத்தியில்லை இத்தனை ஆத்திரமாமா ஐயோ!
எத்தனை தவம்பண்ணிப்பெற்றபிள்ளை அது
செத்ததும், அதனை நீங்கள் எறிந்துவிட்
டுப் போகிறதும், எனக்கு மகா விந்தையாயி
ருக்கிறது. எங்கள் மிருகசாதியிற்கூட இப்
படிக்கு மனந்துணியாது. இப்போதான்
என்ன முழுகிப்போய்விட்டது. சாயங்கால
மட்டுமிருந்து, உங்கள் சஞ்சலங்களெல்லாந்
தீர அழுது சலித்து, இது கெட்டுது போ

வென்று மனம் வெறுத்துப் போய்விடுவீர்களாகில், எப்போதைக்கும் இந்தப் பிள்ளையின் நினைப்புவராது, சட்டி சுட்டதுங் கைவிட்டது வென்று போவீர்கள். இதுதான் யென்னேரமு நினைவு, அதுவே காண்பதெல்லாங் கனவு. உருவெளித்தோற்றமும், உயிர்வந் துலாவுவதென்னு மாற்றமும் உங்களைவிடமாட்டா. என்று பயங்காட்டித் தேற்றியனுப்பிவைத்தது. அந்த நரியின் வார்த்தை அவர்களுக்குப் பெரிய நன்மையா யிருந்தபடியால், உண்மைதா னென்னத் திரும்பிச் சுடுகாட்டுக்குப் போனார்கள்.

இப்படியவர்கள் திறமில்லாத அறிவாளிகளாய் இங்குமங்குந் திரியும்போது, அந்தக் கழுகானது அப்பழுதாகிய மனிதரைப் பார்த்து, ஐயோ! மீட்டும் வந்தார்களே, சீக்கிரத்தில் இவர்கள் போய்விட்டாற் பொழுதிருக்கும்போதே அந்தப் பிணத்தைப் பிடுங்கித்தின்று வயிறு நிரப்பிக்கொண்டு போய்விடலாமே என்று எண்ணி அப்பா! இங்கிருக்க எனக்குப் பயமாயிருக்கிறது. பிர்மராக்ஷசு வருகிற வேளையாச்சுது. இதோ போகிறேனென்று பறந்து காட்டியது. அந்த நரியுஞ் சாயங்காலவரையிலு மிவர்களிருந்தாற் கழுகுக்கு இரைகிட்டாது. பொழுது போய்விட்டால் இருட்டில் தலைகாட்டாமல் ஓடிப்போய்விடும். இந்த மனிதர்களுஞ் சுடுகாட்டிலிருக்கமாட்டார்களப்பால் ராத்திரிகாலம் நமக்குச் சொந்தமானபடியால், பந்துசனங்களுட னிந்தப்பிணத்தைப் பிடுங்கித்தின்னலாமென்று கருதிப்பேதித்துச் சாதித்தது. இவ்விரண்டி னுடைய எண்ணத்தையிவ் வண்ணமென்று கண்டுகொள்ள மாட்டாத அவ்விலேசானவர்கள் மயங்கி, ஒன்றுந்தோன்றாம னின்றார்கள். சூரியனும் மேற்றிசைக்கடலில் மூழ்கினான். இந்தத் தந்திரவுபாயங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டுசர்வாந்திரியாயிருந்த உமாபதியாகிய பரமேஸ்வரர் களித்து நகைத்தார். அவரை மருங்கிலிருந்த மாலாகிய பார்வதியார் வணங்கி, சுவாமி! தேவரீர் தற்செயலாய் நகைப்பதற்குக் காரண மென்னவென்று கேட்டார். அதற்கெம தையன் மசானபூமியில் நடந்த மார்க்கமெல்லாஞ் சொல்லிக் கிருபைகூர்ந்து, இடபத்தி லேறிவந்து, அந்தப்பிள்ளை உயிர்த்தெழும்படிக்கு அநுக்கிர்கம்பண்ணி, அந்த நரிக்குக் கழுகுக்கும் பசிதணியச்செய்து, கடைசியிற் பேறும் பெறும்படியாய்க் கட்டளையிட்டு, கவுரியுடன் திருநடம்புரிந்த கண்ணுதல் கயிலைக் கெழுந்தருளினார். இப்பால் இறந்தெழுந்த பிள்ளையின் தாய் தந்தையர் கழுகையும், நரியையும், கையெடுத்துக் கும்பிட்டு, உங்கள் புண்ணியத்தினால் எங்கள் பிள்ளை பிழைத்தானென்று குழந்தையை யழைத்துக்கொண்டு, பந்து மித்திரரால் யாவருங்கூட்டமாய்க்கூடி மங்களவாத்தியத்துடன் எதிர்கொண்டு வரப் பட்டினம்போய் அரண்மனை புகுந்தார்கள். இந்தநரியுங் கழுகுஞ்சந்தோஷத்துடன் தங்கள் தங்க ளிடம்போய்ச் சேர்ந்தன. அப்பா குழந்தாய்! அவரவர்களுக்கு ஆகதேண்டுங் காரியத்திற்குப் பக்கவேதை பரிசவேதையில்லாமற் பலங்கட்டிப் பேசுவார்கள் அப்படி பேசினும் மனிதருக்குள் பகுத்தறியும் அறிவில்லாதபேர்கள் பயன்பட மாட்டார்கள். அப்பேர்ப்பட்டவர்களை எண்ணினாலும்உடனே குற்றம்நேரிடும். ஒருவர் எத்தனையோ விதமாகச் சொன்னபோதிலுந் தன்னுடைய சுயம்புத்தியைத் துணையாகக் கொண்டு சோராம லிருக்கவேண்டும். இதன்றியும், இராஜர்களுக்கு ஆசாரம், கருமக்கிரியை, ஒழுக்கம், இவைகளிருக்கவேண்டும் இவைகளில்லாவிட்டார்செல்வ நில்லாது. ஜெயம்பெறமாட்டார்கள். ஒருவேளை காலகதியால் தள்ளுண்டுபோனாலும் பிராணயாசகாலத்திலாவது ஒழுக்கத்தைத் தழுவி உயிர்விடவேண்டும் அதற்காக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

## ஒழுக்கமுடைமையைப்பற்றிக் கூறிய இந்திரன் கதை.

ஓ குந்தமாதேவிக்கு மூத்திய புத்திரனே! தேவேந்திரனும், பிரகலாதனனும், ஒருகாலத்தில் பகைத்து நெருங்கிப் போர் புரிந்து, கடைசியில் தேவேந்திரன் தோற்றான். பிரகலாதன் மெத்த வெற்றிபெற்று உத்தமனென்று உலகத்தார் கொண்டாட நின்றான். அதனால் தேவேந்திரன் தியங்கிச் சோர்வடைந்து, தெய்வலோகத்திற்குப் போய் தங்க ளாசிரியனாகிய பிரகஸ்பதி பகவானைக் கண்டு, அவருக்கு நடந்த சண்டையின் பிரதாபமும், பிரகலாதன்பெற்ற வெற்றியுஞ்சொல்லி மனவருத்தப்பட்டு, சுவாமி!

அந்தப் பிரகலாதனை நான் செயிக்கவே
ண்டும். அதற்குவேண்டிய உபாயஞ் சொ
ல்லுமென்று கேட்டான். தேவகுருவான
வர் சீடனைப்பார்த்து, நீ செயிக்க வேண்
டுமானால் இராக்ஷச குருவாகிய சுக்கிராச்சாரி
யிடத்திற்குப்போய்த் தெரிவித்துக்கொண்டா
ல், அவருபாயஞ் சொல்லிக்கொடுப்பார். ஆ
தலால் விரைவிற்போ யவரைக் காணென்று
அனுப்பிவைத்தார். அப்படியே இந்திர
ன் அவரிடத்திற்குப்போய் பிரதக்ஷண நம
ஸ்காரஞ்செய்து, சுவாமி! நான் மெத்தவு
ஞ் சிறுமை யடைந்து உம்மாற் பெருமைய
டைய வேண்டுமென்று சரணம் புகுந்தேன்.
என்னைக் காத்திரட்சியும் என்று நடந்த ச
ங்கதியைத் தொடர்ந்துரைத்துத் தோத்திர
ம் பண்ணினான். அப்போது சுக்கிராச்சா
ரியருக்குத் தயைபிறந்து, ஓ தேவேந்திர
னே! பிரகலாதனிடத்தி லிருக்கின்ற ந
ல்லொழுக்கம் உன்னிடத்திலில்லை. உன்னிட
த்திலும் அச்சகுண ஒழுக்கம் வரும்படியாய்
ச் செய்து கொள்ளுவையாகில், உடனே
உனக்குச்செயமுண்டாம். அப்பால் உன்னை
வெல்லும் வல்லவரில்லை. என்றியம்பக்கே
ட்ட இந்திரன் சந்தோஷப்பட்டு, அவரை
விட்டுச் செலவு பெற்றுக்கொண்டு, இப்பா
ல்வந்து ஓர் தளர்ந்தவிருத்தப் பிராமணவே
டமெடுத்து, பிரகலாதனிடத்து அடுத்து, அ
வனுக்கு மனசுவரத்தக்கதாய் வழிபட்டு வந்
தான்.

இந்தப் பிராமணனுடைய யோக்கிய
தைக்குப் பிரகலாதன் மகிழ்ந்து சுவாமி
பெரியவரே! உமக்கு வேண்டுவதைக்கேளுந்
தருகிறேனென்று சாற்றினான். உடனேஇந்
திரன், ஐயா! உம்மிடத்திலிருக்கிற ஒழுக்
கத்தை யெனக்குக் கொடுத்து விடுமென்று
கேட்டான். பிரகலாதனன் திடுக்கிட்டு, ஓ!
ஓ! மோசம்போனேம். இனிமேல் சொற்
சோர்வு படலாகாது. தேகம் அனித்தியம்.
கீர்த்தி நித்தியம். என்றெண்ணி அவன்
விரும்பிய அவ்வாறே கொடுத்துவிட்டான்-
இப்படி அவ்வொழுக்கத்தைத் தத்தமாக வா
ங்கிக் கொண்டு இந்திரன் தெய்வலோகம்
போய்ச் சேர்ந்தான். இவ்விடத்திற் சீல
மானஒழுக்கத்தைத் தேவேந்திரனுக்குக்கொ
டுத்த பிரகலாதனிடத்தி லிருந்து பிராமண
சீலாசாரனென்னும் ஒரு திவ்விய புருஷ
ன் புறப்பட்டு, ஓ பிரகலாதா! இதுவரையி
லும் உன்னித்தில் நல்லொழுக்க மிருந்
தபடியினாலே பிராமண சீலமெல்லா மோரு
ருவாகி உன்னைவிட் டொழியாதிருந்தேன்.
அதைத் தேவேந்திரனுக்கு நீ தத்தம் பண்
ணியபடியால் இனிமேலுன்னிடத்திலிருக்க
மாட்டேன்.இதோபோகின்றேன்என்று வெ
ளிப்பட் டிந்திரனிடத்திற்பொருந்தி, அவ
னுடலிற்றங்கியிருந்தனன். அன்றுமுதலாய்
அவ்விந்திரன் வெற்றிபெறும்படி மஹா
லட்சுமியும், ஜெயலட்சுமியும், தங்கள் ரூபத்
தோடும் பிரத்தியக்ஷமாய் தேவேந்திரனிட
த்தி லிருந்துவிட்டார்கள். இவ்விருவரை
யும் பெற்றுக்கொண்ட இந்திரனனவன் இ
ராக்கதரைச் செயித்து திரிபுவனத்திற்கும் அ
திபதியானான். ஆகையால், நல்லொழுக்கம்
எவாளிடத்தி லிருக்கின்றதோ? அவாளுக்கு
ச் சத்துரு செயமுண்டாகும். மித்துரு நய
ம் மேன்பாடாகும். சகல பாக்கியமும் பெ
ருகும். அவர்களுக்குப் பூலோகத்திற் கிட்
டாதபதார்த்தம் ஒன்றுமில்லை. அப்பேர்ப்
பட்ட ஒழுக்கத்தையுஞ்சீலாசாரத்தையுந், து
ணையாகக்கொண்ட பேருக்கு எக்காலும் ஒரு
குறைவுவராது, சிலவேளை காலதேச வர்த்
தமானங்களினால் யிவ்வொழுக்கம் ஆசாரமு
ந்தப்பி ஈனத்துவ நேரிடுமாகில், அதனாலே
அவர்களுக்குப் பலங்குறையமாட்டாது அ
தற்குந் திருஷ்டாந்தம் ஒருகதை சொல்லுகி
றேன் கேள்.

---

## ஆசாரமுடைமையைப் பற்றிக்கூறிய கவுசிகமகாரிஷி கதை.

அப்பா பாண்டவச் சிரேஷ்டனே! மு
ன்னொருகாற் கவுசிகமகாரிஷி யென்பவர்
தபசுபண்ணிக் கொண்டிருக்கிறபோது, தி
ரேதாயுக முடிவில் துவாபரயுக முதலில்
மழை பெய்யாமல் க்ஷாமம்வந்தது. அந்த
க்ஷாமகாலத்தில் உலகிலுள்ள உயிர்களனைத்
தும் அன்னம், தண்ணீர் காய், கனி, யிலை
கிழங்கு, யிவை முதலியவை கிட்டாமற்
பெரும்பசியினால் வாடிவதங்கி யிறந்துபோக
நேரிட்டது. அப்படிக்கு மனுக்களும் மாடு
கன்று முதலாகிய உயிர்களும் மாய்ந்துவரும்
போது, விசுவாமித்திரர் தமது தபசு தெளி
ந்து விழித்துக்கொண்டார். அப்போதவர்
தனக்குண்டாகிய மிகுந்தபசியினால் உபத்திர
வமடைந்து, எதையாகிலும் புசித்து உத

ராக்கினியை யவித்து யிளைப்பாறுவோமென்று காய்கனி கந்தமூலாதிகளை எங்கெங்குந்தேடி, யாண்டுமில்லாமையால் வாடி வதிப்படி யானதென்று கியான திருஷ்டியால் நாடி, நிலத்தில் மழைத்துளி வீழாமையால் புற்பூடுகளெல்லாங் காய்ந்து தீய்ந்துபோயின்வென்று தெரிந்து, எரியும் பசி பொறுக்கமாட்டாமல் உலர்ந்த நாடெல்லாம் ஓடித்திரிந்து வரும்போது ஒருகாட்டிலே புகுந்தார். அவ்விடத்தில் ஒரு புலையன் கிணறொன்றெடுத்து, அதனருகிற் குடிசையமைத்து, அநேக விலங்கினங்களை வதைத்து, மாமிசத்தைக் குடிசையில் வைத்துக்கொண்டு, அதைப் பசிவந்தவேளையிற் றின்று, கிணற்றினது நீரையருந்தி, தன்னுயிரைக் காப்பாற்றிக்கொண் டிருக்கின்றான். அந்த உளவை விசுவாமித்திர ரறிந்து, யிராத்திரியில் அவன் குடிசைக்குள் நுழைந்து, அவனை யறியாமல் ரகசியமாய் யிறைச்சியைத் திருடினார். அதையந்தப் பொல்லாப் புலையன்கண்டு ஆர்ப்பரித் தெழுந்து, கைவாளைவாங்கிக் கரகரெனச் சுழற்றி யோங்கி, அவருடலை யிரண்டு துண்டமாகவெட்டவேண்டுமென்று வைது வீசிவருகிறான். அச்சமயத்தில் விசுவாமித்திரர் அவனைப் புரிவாய்நோக்கி, அப்பா அன்பனே! என்னைப் பயப்படச்செய்தே, வாய்க்குவந்தபடி வையாதே, வாளினாற் கொய்யாதே, என் வாக்குப்பொய்யாதே, நான்சூரியகுலத்தரன், தவத்தினலத்தால் விசுவாமித்திரனானேன், என்பசியினால் நுழைந்து பழித்தொழிலுக்குள்ளானேன், நீ பதறாதே என்று பன்னிப் பரதவித்தார். அப்போது அந்தப் புலையன் கிடுகிடென்று நடுங்கி, கிலேசித்து ஒடுங்கி, ஓங்கியகையுமோய்ந்து, வாளாயுதத்தையுமெறிந்து, அவர்காலில் விழுந்து, ஐயா பரம குருவே! இப்படிப்பட்ட வேலைசெய்வதற்கு நீருடன்படுவானேன்? உமக்குஈதடுக்குமோ? இதுமுறைமைதானோ? ஞாயமோ? நன்னீதமோ? பெரியோர்களுக்கியல்போ? என்று புலையன் கேட்டான்.

அதற்கு விசுவாமித்திரர் புன்னகையாடி. கேளாய் அப்பனே! இந்தஉடலெடுத்திருக்கப்பட்ட ஆத்மகோடிகளில் மானிடதேகம்வருவது அரிது. அதிலும் ஆசாரமாயிருப்பது மகா அரிது. ஆயினும், பிராணனுக்கு ஆபத்துவந்தபோது ஆசாரத்தைப் பார்த்தாற் சரிப்படாது. அந்தவேளையில் உயிரினிமித்தம் ஆசாரத்தைவிட்டு காப்பாற்றிக்கொண்டால் அதனாற்குற்றமில்லை ஆசாரமென்பதெல்லாம் உபசாரம். ஆதலால் இதனைக்குறித் துவிபரீதம்யோசிக்காதேயென்று கூறினர். இவ்வாறு கூறிய விசுவாமித்திரரை அம்முனிகாதகனாகிய புலையன்பார்த்து, ஐயா! நீரென்ன சமயத்திற்குத்தக்கபடிசொல்லுகின்றீர்? பிராணன் போனாலும்போமேயொழிய தன் குலாச்சாரமும், ஒழுக்கமும், நெறிமுறைப் பழக்கமும் விடலாகாதென்று பெரியோர்கள் பேசியிருக்க, சகல நீதியுமறிந்து தெளிந்த நாதனாகிய தேவரீர் என் குடிசைக்குள்ளே புகுந்தது பாவத்திலும் பாவமாகிய மகாபாவமென்றெண்ணாமல், மெத்தவுந் துணிந்து, உயிருக்குமஞ்சாமல் நாற்றமுள்ள இறைச்சியைத் திருடித்தின்ன நினைத்தது உமக்குஞாயமோ? அல்லது காலத்திற்குத்தகுந்த உபாயமோ? ஓ பிர்மாமுதலியதேவர்களுங்கொண்டாடும்பிர்மரிஷியே! நீர்சொல்லுவதை யோசித்தால் மகாபுதுமையாயிருக்கிறதே யொழிய, புராதனமுள்ளதாயில்லை. என்று புலையன் பேசவும், அதற்கு விசுவாமித்திரர் மாறுத்தரம் வேறுசொல்லமாட்டாமல் மயங்கி மறுபடியும் புலையனைப் பார்த்து, ஓ புண்ணியனே! இப்பூலோகத்தில் இப்பிரபஞ்ச வாழ்க்கையை மெய்யென்று நம்பி இருக்கின்றபேர்கள், பிராணன் போனாலும் பெருமைபெறக்கொண்ட ஆசாரத்தை விடப்போகாது. நீ கேட்டது மெய்யோ. நாங்களோ? இப்பிரபஞ்சவாழ்வு பொய்யென்று ஈஷணைத் திரையாதிகளை யொழித்து, எதுவுமில்லையென்று விடுத்து, யாதொன்றிலும் பற்றில்லாமற் பிரமவிசாரணை பண்ணிக்கொண்டிருக்கிற பரதேசிகள் நாங்கள் சத்தியத்தையும், தருமத்தையும் மோட்சத்தையும் சம்பாதிக்குங்கிரியையுடைய ஆசாரமே எங்கட்கு மேலாகிய ஆசாரம். அதைவிட்டால் வேறுவழியில்லை அதை நாங்கள் விடக்கூடாது. ஆகிலும் நாங்களொருவேளை ஆசாரந்தப்பினால் அதனாலெங்களுக்கொரு உபாதிகளில்லை. பெருநெருப்புக்கிரமில்லை யென்பதுபோற் புனிதவான்களுக் கொன்றேனுமில்லை. எங்களுக்குச் சர்வபூதாதிகளுஞ் சரியாயிருக்கும். பெரிது சிறிதென்பதில்லை பிரபஞ்சத்தில் ஒன்றுக்கொன்று விதவேஷங்களாயும் பேதாபேதங்

கனாயுமிருந்து, தங்கள் பெண்டுபிள்ளையெ ழுந் தங்கள்பண்டுபத்தார்த்தம் என்றுந்தழுவி இவர்கள் புறத்தியார், இவர்கள் உள்ளூரார் என்றுங்குழுவி, நமக்கும்அவர்களுக்குஞ்சம் மந்தமென்று வழுவி, இது நம்முடைமை இது பிறருடைமையென்று வித்தியாசமா யெண்ணுகிற ஆசாரம்எங்களிடத்திலில்லை. அப்பேர்ப்பட்ட பேதமுமில்லை, சர்வபூதாதி களுஞ் சமமாய்ப்பார்க்கிற கிருபாமூகூர்த்தங் கொண்டிருப்பவர்கள் நாங்கள்,எங்களுக்கும் பிரபஞ்சசம்மந்தத்திற்கும்வெகுதூரம். அது எங்களுக்கு அக்கரையில்லை நாங்கள் சீவன் முத்தர், லோகோபகார நிமித்தம் உடச் சுமந்து ஈஸ்வரனுடைய திருவிளையாட்டுக் குச் சாட்கியாயிருக்கிறபேர்கள். எங்களுக்கு இப்பேர்ப்பட்ட காரியமெல்லாம் ஒருபொரு ட்டல்ல. இதனுல் வருகிற ஆசாரயீனமா கியகுற்றத்தைப் போக்கடித்துக்கொள்ளுகிற வல்லபம் எங்களுக்குண்டு. ஒரு வாய்ப்பேச் சிலேபறந்துபோய்விடும். அக்கியான கேவ லத்தில் அழுந்தியபேருக்குப் போகமாட் டாது. ஆதலால் அவர்கள் அனுஷ்டித் தே தீரவேண்டும் இதை நீ நன்ருயோசித் தறிந்துகொள்ளுக. என்று செப்பவும் அந் தப் புலையன்கேட்டு, அவருடைய பாதத்தில் வீழ்ந்து, சுவாமி! ஆனுல் தேவரீருக்குச் சரிப்போனமட்டும் பாருமென்று போய் விட்டான்.

அப்பால் விசுவாமித்திரர் அந்நமாமி சத்தை நெருப்பிலிட்டுவதக்கிப்பூர்த்தியாய்ச் சாப்பிட்டு, தாகத்திற்கருந்தித் தன் பசி யைத் தீர்த்துக்கொண்டு ஆயாசமாயிருக்கும் போது இந்தப்பசி வருவானென்று நிதானி த்துப்பார்த்தார். இவ்வுலகத்திலேபனிரண்டு வருஷமாய் மழையில்லாமற் போனபடி யால் இத்தனைவருத்தமுற்றடுதென்று பெரு த்த கோபம்பிறந்து, இன்னிமிடத்தில் மேக ங்களையும் மேகநாதனுகிய இத்திரனையும் எரி த்துவிடுகிறேனென்று கோபித்து, வடவா முகாக்கினிபோற் கண்சிவந்து, தேவேந்திர னையும் ஆகாயத்தையும்பார்த்துஅதட்டினுர். அக்காலையில் இந்திரனடுங்கி, மேகங்களை யழைத்து, ஓ முகில்காள்! நீங்கள் யாவருஞ் சீக்கிரம்போய் மழைபொழியுங்கள். இன் னுஞ் சற்றுநேரந் தாமிசப்பட்டாற் பதினு ன்குலோகமும் பாழாகிப்போய்விடும். விசு வாமித்திரருக் கோபம் பலக்குமுன்னே நீங்கள் கனத்துப்பலத்து, இடித்துத் தடித் துப் பெய்யுங்களென்று போக்கினுன். அம் மாத்திரத்தில் மேகங்களனைத்தும் அங்கிருந் து புறப்பட்டு, சக்கிரிவாளகிரிமட்டுங் குடை கவிந்தாற்போற் கவிந்து, உகாந்த காலம் போற் கறுத்து, ஊழித்தீயைப்போல் மின் னி, அண்டமதிரக்குமுறி, சடச்சடவென்று யானைத்துதிக்கைபோலப் பொழிந்து யெங் கும் வெள்ளமாக்கி, படுகுழி பள்ளங்களனி றைந்ததல்லாமலும் வெள்ளிடங்களெல்லா நீர்புரளவாக்கிவிட்டன. ஆறுகள், மடுக்கள் ஏரிகள், குளங்கள், வாவிகள், குட்டைகள், வர்ய்க்கால்கள், வயல்கள், கசங்கள், கால்வா ய்கள், இவையெல்லா நிறைந்து, சமுத்திரத் திற்குஞ்சகாயமாயது,உலகமெல்லாம் இடை யூறகன்று, சகலபிராணிகளுந் தலையெடுத்து பயிர்ப்புலன்களுந் தழைத்துக் காய்த்தன. இந்தப்பிரகாரம் பிரதியுபகாரம் வேண்டாம ல் தலையாயார் சிநேகம்போல மேகம்பொழி யவும், அதனுல் உலகந்தழைக்கவும் பண்ணி வைத்து, நின்மல சொரூபியாகிய விசுவா மித்திர மகாரிஷி எப்போதும்போல் இடை விடாமற் றபசிலிருந்துவிட்டார்.ஆகையால் ஒழுக்கமுடையாருக்கு இழுக்குவராது. ஒரு வேளை வந்தாலும் உலகம் பழிக்காமற் படிக் குச் சாக்கிரதையாயிருந்துஆசாரத்தைக்காப் பாற்றிக்கொள்ளவேண்டும். இவ்வித ஒழுக் கத்தையு மாசாரத்தையுங் கைவிடாத வரசன் தான்செலுத்துங் கோலென்பது யாதென் றும், அது எவ்வழியாய் வந்ததென்றும், அச்செங்கோலுக்கு அதிதேவதைகளாரென் று மறியவேண்டும். ஆதலால் அவைகளையு முனக்குச் சொல்லுகிறேன் கேள்.

---

## செங்கோல் முறையைப்பற்றிக் கூறிய மாந்தாதா மகாராஜன்கதை.

ஓ தருமபூபதி!சங்கினங்களூர்ந்து,நாத முழக்கி விளையாடித்திரியுஞ் சேற்றினங்களு நாற்றினங்களுமருவிய கழனிகளெங்குஞ் சூ ழ்ந்த வளப்பங்களினுற் பொங்கிய பலவளங் களு நிறைந்த அங்கதேசத்தில், வசுவேமன் என்போன் ஒருவனுளன் அவன் தருமமே இயற்கைக்குணமானவன். அவிர்ப்பாகங்களி னுல் மகிழுந்தேவர்கள் யாவருங் கொண்டா டா நின்றவன். இவன் வெகுநாள் ராஜ்ஜிய பாரம்பண்ணி, பின்பு மண்ணாசையை நீக்கி,

பெண்சாதியுந் தானுமாய் இமோத்கிரிசாரலுக்குப்போய், அங்கே தவம்பண்ணுகின்ற பெரியோராகிய ஞானிகளுக்கு வணக்கம் புரிந்து, அவர்களுடன் இணக்கமாயிருந்து தவஞ்செய்வதற்கு சிஷ்டாசாரத் தன்மை பயின்றுவந்தான். அப்படியிருக்கின்றகாலத்தில், சுவர்க்கமத்திய பாதாளமென்று மூவுலகத்தினுங் கீர்த்திக்கொடி நாட்டிய மாந்தாதாவென்னும் பார்த்திபன் அவ்விடத்திற்கு வந்து, வசுவேமனென்னும் அரசனுக்குத் தாழ்ந்துவணங்கிவழிபட்டு, ஓ மகாராசனே! செங்கோலாகிய தண்டனை நூல் முறையை எனக்குச்சொல்லவேண்டுமென்று கேட்டான். அதற்குப் பிரபஞ்சவாசனை விட்ட அங்கதேசாதிபன் அவ்வரசனைச் சந்தோஷத்துடன் பார்த்து,ஓ மாந்தாதாவே! நீர்கேட்கப்பட்ட செங்கோலியற்கையும் அதன் தண்டனையும், அதுவந்தவரலாறும், அதனுடையபலமும் விஸ்தரித்துள்ளன ஆயினு முக்கியமானவற்றை விளம்புகிறேன். அந்தச் செங்கோல் முறைப்பிரகாரம் நடந்தால் அவர்களுக்கு என்றைக்கும் பழிவரமாட்டாது. பாபமணுகாது. மூலக்கமலத்தில் முளைத்தெழுந்த பிர்மயாகம் பண்ணவேண்டும் என்று எத்தனித்து, மானசத்திலே ஒருபிள்ளையைப் பெற்று, அவனை எக்கியயோக்கிய கர்த்தாவாக்கி, இமோத்கிரிச் சாரலிற் சகலமேன்பாடும் வரத்தக்க யாகஞ்செய்யத் தொடங்கி, அந்த யாகத்தைப் பூரணபடுத்தித் தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்துவருகிறான். அக்காலத்தில் மானசத்திலுண்டாகிய பிள்ளைமறைந்து போய்விட்டான்.

அப்போது சதுர்முகனுக்குக் கோபம் பிறந்து, மகாவிஷ்ணுவி னிடத்திற்குப்போய் நடந்த விருத்தாந்தங்களை விண்ணப்பம் பண்ணி வணங்கினான். அந்தச் சங்கதியை மகாவிஷ்ணுகேட்டு பிரமனை யழைத்துக்கொண்டு, எப்பொருட்கு மிறையாகிய ஈஸ்வர னிருக்கப்பட்ட கயிலாயத்திற்குச் சென்று, உமாபதியை வணங்கி, சுவாமி இப்பிர்மாளக்கியம் பண்ணிக்கொண்டு வரும்போது அந்தயாகம் நிறைவேறி வருவதற்கு முன்னமே, அந்த எக்கியத்திற்குக் கர்த்தாவாக நியமித்திருந்த தன்னுடைய மானசபுத்திரன் மறைந்துபோனான். அதனால் அந்த யாகம் பூரணமாகாமற் போயதாம். ஆனதால் வேள்வி விக்கினம் வரலாகாது. இதற்கென்ன செய்யலாம்? தேவரீர் அதற்கோருபாயம் சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அதற்குப் பரமேஸ்வரன் அவரைப் பார்த்து, ஓ மாயனே! யாவனேனு மொருவன் பொல்லாத காரியம்பண்ணினால் தண்டனை நூலிற் செப்பியபிரகாரந் தண்டிக்கவேண்டியது. அப்படி உடனுக்குடனே தண்டித்தால் அவன் சொன்னபடி கேட்பான். அவன் செய்த தீவினையும் அற்றுப்போய்விடும். அவ்வாறு தண்டிக்காமற் போனாற் காரியமுடியாது. தீவினையு நீங்காது. ஆகையால், ஒருவனிமித்தமாக தண்டனைசெய்த் தொடங்கினால், அதைப்பார்த்து உலகத்தி லிருக்கிற மனுக்களெல்லாந் தப்புத்தன்மை நடவாமற் செப்பமா யிருப்பார்கள். அதனால் யாவருக்கும் பாவங்கள் தீர்ந்து புண்ணிய தேகிகளாய்ச் சுகப்பட்டு வாழ்வார்கள். என்று சிவன் சொல்லியபோது, பிர்மாவும் விஷ்ணுவும் பணிந்து, ஓ பரமசிவமே! தாங்கள் திருவாய் மலர்ந்தருளிய தண்டனை நூல் அடியேங்கட்குக் கற்பித்தருளவேண்டுமென்று காதலித்தார்கள். உடனே சாம்பவமூர்த்தி தண்டனை நூலேற்படுத்தி, நான்கு வேதம், ஆறுசாஸ்திரம் பதினெண் புராணம், இருபத்தெட்டாகமம், முப்பத்திரண்டு உபநிடதம் அறுபத்துநான்கு கலைக்கியானம், ஆகிய இவைகளுக் கொப்பச் சேர்த்து, அதனு ளொருபுறமாய் நீதிசாஸ்திரமுந் தருமசாஸ்திரமும் வகுத்து, இதெல்லாமற் பதினான்கு சாஸ்திரங்கள் பிரத்தியேகமா யமைத்து, அவற்றோடு பரத சாஸ்திரம், ஆயுள் வேதம், தனுவேதம், மீமாம்ஸை, இந்த நான்கு நூலையுங்கூட்டிப் பதினெட்டாக்கி, இந்தச் சாஸ்திரங்களை யெல்லாம் மகாவிஷ்ணு கையிற்கொடுத்து, அவற்றினுடைய விபரங்களையும் போதித்து, நீர் உலக ரட்சகனாகையாலும், மகாவிஷ்ணுப்பிரதிவிபதே யென்னும் வாக்கியத்தினாலும், இவைகளை உலகத்திற் பரவும்படியாய் விரிந்து, இந்தக்கருத்தை யெவர்களுந் தெரிந்துகொண்டு இந்நூலின்படி நடக்கத்தக்கதாய் நீரே ராஜனாகயிருந்து திட்டஞ்செய்து, இவற்றை யனுசரிக்காத பேரை உடனுக்குடனே தண்டித்துத் தருமசக்கிர பரிபாலனம் பண்ணி, இத்தாரணியைக் காவற் கடவுளாயிருந்து ரட்சியும் என்று சதா சிவமூர்த்தி கிருபையுடனே அநுக்கிரகஞ் செய் தனுப்பினார். அப்படி

யே விஷ்ணுவும், பிர்மாவும் அவ்வருளைப் பெற்று வந்தார்கள்.

இதற்குள்ளே விந்தச்சேதி தெரித்து கொண்டஎக்கியகர்த்தாவாகிய மண்பொதுத் தந்தையினுடைய மானசபுத்திரன் எப்போதும்போல் வந்து யாகத்தை முடித்தான். அப்பால் மகாவிஷ்ணு அங்கிராவென்கிற பிள்ளையைத் தனது மானசத்தினலே உண்டாக்கி, அவனுக்கு ஆதிபாண்டரங்க னளித்த சாஸ்திரங்களை யெல்லாம் படிப்பித்துக் கொடுத்து, அவனைப் பூமிக்கு அரசனுக்கினர். அந்தப்பிள்ளைமரீசிமஹாரிஷிக்கு அந்தச் சாஸ்திரங்களை வழங்கி வையகத்திற் பிரசித்தம் பண்ணச்சொன்னன். அந்தமரீசி கொண்டல் வாசனுகிய தேவேந்திரனுக்கு உபதேசித் தருளினர். அந்தத் தேவேந்திரனல் அஷ்டதிசாமுகங்களிலு மிருந்த ரிஷீஸ்வரர்களெல்லாரும் மகாதேவ வாக்கியத்தை யறிந்து பூலோகத்தில் விரைந்தார்கள் பூலோகத்திலுள்ள பேர்கள் சிஷ்டாசாரத் தன்மைப் பிரகாரந் தொண்டுபட்டுக் கிரகித்துக் கொண்டார்கள். இது தான் தண்டனை நூல் வந்ததற்கு முகாந்திரம், அந்தத் தண்டனை நூல்களுக்குப் பெயரென்னவெனில், கபர்த்தி, சங்கரன், தாணு, உருத்திரபவன், உமாபதி, என்கிற பெயர்களாலே பண்ணப்பட்டன. அவரவர்களே அந்தத்த நூலுக்கும் பெயரும் அதிதேவதையு மானர்கள். அந்த நூலின்வழியே நடவாமல் அதிக்கிரமித்துத் தீங்குசெய்த பேர்களைத் தண்டிக்கிறபோது இன்ன ரினியாரென்று பாராமல், தன்மனிதன்பிறமனிதனென்றுன்னமல் பயப்படாமல், நயப்படாமல், இரக்கங்கொள்ளாமல், அந்தந்தக் காரியங்களுக்குத் தகுந்தபடி ராசன் தண்டிக்க வேண்டியது. அப்படி தண்டித்தால், அந்த ஆத்மாக்களுக்கு நல்லதெளிவும், சுகுணமும், புத்தியும்வரும் இரத்தினங்களுக்குச் சாணேபிடிப்பதுபோலும், பயிருக்குக் களைகடிவதுபோலும், தாமரைத் தடாகத்திற்குப் பசியாற்றுவதுபோலும், நெல்லுக்குப் பதர் போக்குவதுபோலும், இருட்டுக்கு வெளிச்சங் காட்டுவதுபோலும், ஆத்மாக்களுக்குக்குற்ற நீக்கிக்குணங்கொடுத்துப் பாவத்தைப் போக்கும். அரசர்கள் பகை, நட்பு, தருமம், அதருமம் இவைகளை யாராய்ந்து, தண்டனை நூல்களிற்சாற்றிய பிரகார நடத்துவதே செங்கோன்மை இந்தப்படிக்கு எந்த ராஜன் நடத்துகின்றுனே? அந்த ராஜனுக்கு எவாள் அடங்கி நடக்கின்றர்களோ? அவர்களுக்கு இகபரசாதனம் உண்டாம். என்று வசுவேமன்சொல்ல, மாந்தா மனமகிழ்ந்து சந்தோஷப்பட்டுச் செல்வுபெற்றுக்கொண்டு, தன்னுடைய பட்டணம் போய்ச்சார்ந்து, தன்னரசாட்சிக்குரிய தேசமெல்லாந் தர்மாதர்மம் விசாரித்து, தண்டனை நூற்பிரகார நடத்தி, தானுந் தன்னைச் சேர்ந்தபேர்களும் பெருமையுடன் பேறு பெறத் தக்கதாக வாழ்ந்தான்.

ஓ தர்மராஜனே! அதனல் இராஜர்கள் விபகாரங்களில் தாட்சணியமில்லாமல் தண்டிப்பதே முதற்காரியம். இதுதான் செங்கோல்வந்த வரலாறு. என்று வீஷ்மர் சொல்ல, அங்கிருந்து கேட்ட ரிஷியீஸ்வரர்கள், முனீஸ்வரர்கள், தவசிகள், தத்துவஞானிகள், தம்பிமார்கள், கிருஷ்ணதேவர், இவர் முதலாகியபேரும் உவகையோடு மனமகிழ்ந்து, அனுதியில் தண்டனை நூல் வந்தமார்க்கம் இப்படியாவென்றுகொண்டாடினர்கள். பின்னும் வீஷ்மர் தருமராஜனைப் பார்த்து, அப்பனே! இராஜனுயினன் தன்னிடத்தி லிருக்கப்பட்டவர்களுக்கு அடிக்கடி சாக்கிரதையாய் நடவாமற்போனற் கடின தண்டனை கிடைக்குமென்றும், மனதிற் பயம்பிறக்கத் தக்கதாகச்சொல்லியுந் தெரியாமற்சிலகுற்றங்கள் செய்வார்களாகில், அந்த வேளையில் தண்டனை நூற்பிரகாரந் தண்டியாமல் மனம் பொறுத்து, சற்றே தாழ்ந்த தண்டனை தண்டிப்பவனே உயிர்களின்மீது தாட்சண்ணியமுடையவன். அதுதான் தயாளுவாகிய ராஜமுறைமை கொடுந்தண்டனை கூடாது, இத்தன்மையுடன் குடிபடைகளுக்குத் தந்தை தாய் போன்றவன் மகா புண்ணியவான், அவனைத் தான் தருமராஜனென்று சாற்றுவது. அதைவிட்டுத் தானென்னுந் தாமத குணங்களிலே அகப்பட்டு மனம்போனபடிக்குப்போய் தாழ்ந்த குலத்திற்கு உயர்ந்த தண்டனை தண்டிக்கிறவன், மகாபாவி நிந்தையையுடைய கொடுங்கோல் வேந்தன். அவனிருக்கு நாடு பெரும்புலி செருக்குங்காடு. அவனுக்குப் பின்னே நிற்குங்கேடு. சாம, பேத, தான, தண்ட, சதுர்விதவுபாய சத்தியந்தப்பாமல் முறைமை விசாரித்து, அதன் தகுதியும், வழக்கமும், ஒழுக்கமும், ஞாயமும், அஞ்ஞாயமுமறிந்து, பெரியோர்களுக்கும், ஊரா

ருக்கும், சரிப்படத் தெரிவித்து, தாங்கத்தக்க தண்டனை நடத்திந் தரணியைக் காத்துவரு கிறவன் நீதிபரன் இந்தச் சாந்தகுணந்தப்பி, நாம் ராஜனுகச்சே நமக்கெதிர் யாரிருக்கின் ருர்கள்? என்று ஆணவத்தால் அகந்தை யடைந்து, எவரையும் காக்காமல் எடுத்தெ றிந்துபேசி, வணக்கம், அடக்கம், ஒடுக்கம், ஒழுக்கமில்லாம லிருப்பானுகில், அவ்னுக்கு ஏப்பேர்ப்பட்டபலமிருந்தாலும், பணமிருந் தாலும், பாழாய் குறைந்துபோம். அவ னும் அபசெயப்பட்டு வருமையை யடை வான். அதற்குத் திருஷ்டாந்தமாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

## இறுமாப்பைப்பற்றிக் கூறிய இல்வ மரத்தின் கதை.

இமவத்கிரிச் சாரலில் ஒரு இலவமரம் ஆகாயமட்டும் உயர்ந்து, தன்னுடைய கிளை யை அஷ்டதிக்குமட்டும் நீட்டி, தழையுங் கொழுந்துந் தளிர்த்து, குடை கவிந்தது போற்கவிந்து, தனதடியானது பிர்ம்மாண் டமாய்ப் பருத்து நெடுங்காலமா யிருக்கின்ற து. அந்த மரத்தண்டைக்கு நாரதமகாமுனி வர் வந்து வெய்யிலுக் கொதுங்கி நின்று, அந்த இலவமரத்தை நோக்கி, ஓ சான்மலி விருட்சமே! மகமேரு முதலிய மலைகளையுங் காடுகளையு முறித்து அதம்பண்ணுகிற வாயு தேவனுக்கும் உனக்கும் அதிக சிநேகிதமோ அவன் உன்னை முறிக்காமல் விட்டிருக்க வேண்டிய காரணமென்ன? அதை யொளிக் காமற் சொல்ல வேண்டுமென்று கேட்டனர். அதற்கந்த இலமரஞ் சற்றே நகைத்து, ஐயா நாரதமகாமுனியே! என் பலத்திற்கு வாயுபகவான் ஈடாகமாட்டுவானே? எனக் கவன் எம்மாத்திரம் மற்ற மரங்களைப்போல வா என்னையு மதித்துக் கேட்கின்றீர்; ஆ! ஆ! நன்ருயிருக்கிறது அந்த வாயுவை மெத்தக் கொண்டாடிப் பேசுகிறீர். அவனு க்கு ஆயிரம் பங்கு நானதிகமென்று நீரறி யீரோ! என்னை லேசாய் மதித்தீரோ? என்று தன்னைத்தானே புகழ்ந்து பேசியது. அம் மரத்தைப் பார்த்து நாரதர் சொல்லுகின் ருர். ஓ பூரணித்தருவே! மகா மேருவினு டைய கொடிமுடியை யொடித்து ஆதிசேட னைக் கெலித்த பராக்கிரமசாலியாகிய வாயு தேவனை உனக்குச் சமானமல்ல வென்றும் அவனுக்கு ஆயிரம்பங்கு நானதிகமானவ னென்றுஞ் சொன்னையே. இப்படியாகச் சொல்லத்தகுமோ நீயொரு அல்பவிருட்சம் உன்னைப் பார்க்கிலும் வயிரம் பற்றிய மரம் அநேகங்க ளிருக்கின்றன. அவைகளொன் றும் இப்படி கர்வித்துச் சொல்லக்காணும். நீ பேசுவது அகந்தையா யிருக்கிறது. இந் த ஆணவமும், அகந்தையும், வணங்காமுடி பெற்ற இறுமாப்பும் மூட்டின்றி நிற்குமா? வாயுதேவன் மகத்துவரும்போது இப்போ தென்னிடத்திலுள்ள நிலையின்படிகருக் கெ ட்டியா யிருப்பையா. இந்தச் சொல்லை மற வாதே. என்று நாரதர் சொல்ல, அவர்மொ ழியைக்கேட்ட இலவமரமானது பின்னையும் பின்னையும் பெருமை பாராட்டி, இன்னும் நான் சொல்லவேண்டுமா! வீண்பேச் சென் னத்திற்கு! வாயுதேவன் இவ்விடத்திற்கு வெட்கப்படாமல் வரும்போது நான்படுகிற அவமானமும், அவன்டையப்போகிற அவ மானமும், நீரே பார்க்கலாம். என்று சொல் லியது. அதன் வார்த்தையின் வலுவைக் கேட்ட நாரதரானவர் நல்லது காண்போ மென்று இலவமரத்தி னிடத்தில் விடை பெற்றுக்கொண்டு சென்று, தேயுநண்பனுகிய வாயுபகவானைக்கண்டு, தனக்கும் இலவமரத் திற்கும் நடந்த சங்கதிகளைப் புகன்ருர்.

அம்மொழிகேட்ட வாயுபகவான் இம் மென் றெழுந்து, கோபாக்கினியுடன் சீறி, நெருப்புப்பொறி பறக்குங் கண்களை நெறித் து விழித்து ஆக்கிரமித்து, லோகாலோக மனைத்தையுங் கலக்கி, மலை, ஆறு, காடு, நாடு, கோபுரம், தோரணகம்பம், இவை யாவு மதிரும்படியாக ஆரபாரத்துடன் புற ப்பட்டு, கீழது மேலது, மேலது கீழது, என்னப்புரட்டிச் சாடித்து வருகிருன். அப் போதவ் விலவமரங் கண்டு, கிடுகிடென்று நடுங்கி, தன்னுடைய கப்புக்கவருகிய கிளை களை முறித்துக்கொண்டு மொட்டையாய் நின்று, தப்புவார்த்தைபேசினேமேயென்று சலித்து தன்னை வேருடனே சாய்த்துவிட்டப் போகிருனென்கிற பயத்தினுலே வாயுதேவ னைவணங்கி, நல்லவார்த்தை வழங்கிஇணங் கியது. அக்காலையில் வாயுதேவன் கோபசா ந்தியாய் மனங்குளிர்ந்து போய்விட்டான். அதைக்கண்ட நாரதர் வந்து புன்சிரிப்பு கொண்டு, ஆனந்தக்கூத்தாடி, தன்னுடைய மகதியுர்ழைத்தட்டிப்பாடி, இலவமரத்தை

நோக்கி, ஏன் பலமாகிய பொங்கர் விருட்சமே! உன்னுடைய கிளையெங்கே? பணையெங்கே? கப்புக்கவறு மெங்கே? இலையெங்கே? தளிரெங்கே? உன்னுடைய இறுமாப்பல்லவா உன்னை மொட்டையடித்து விட்டது? இனியெப்போதும் உனக்கு மற்றவாத்மகோடிகளுக்கும் ஆணவமும் அகந்தையுமாகா. என்று சொல்லிப்போட்டுத் தன்னுடைய ஸ்தானத்திற் கெழுந்தருளினர். ஆனபடியால், இயாவனொருத்தன் தனக் கொப்பாக ஒருத்தரு மில்லையென்று பிரதிஷ்டை பேசுகிறானோ தன்னைத்தானே புகழுகிறானோ! அவன் எவ்வனைபோதிலுஞ் சீக்கிரத்தில் நால்வருங்கண்டு நகைக்க உடனே தாழ்ந்து, அவமானப்பட்டு வருத்த முறுவான். எவனொருவன் யோக்கியமும், அவையடக்கமும், வணக்கமும், கியானமும், உடையவனோ? அவன் மேல்வருங்காறியமறிந்து வேளைக்குத் தக்கபடி தப்பித்துக் கொள்ளுவான். அப்படிவருங் காரியங்களுக்கு முயற்சிதேடிக் கொள்ளாமலிருப்பானாகில், அவன் உறுதியாய் காரியத்தாட்சியினாலே கண்கலங்கி இறந்துபோவான். அதற்குச் சாட்சியாய் ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

## முன்சாக்கிரதையைப்பற்றிக் கூறிய மும்மீன்கதை.

அப்பா பாண்டு மைந்தனே! ஓரூரில் ஒரு நதியின் மடுவிலுற்ற அநேகஞ் சலசரத்திற் பெரிதாகிய அறிவையுடைய மூன்று மீன்களிருந்தன. அவைகளின் பெயர் தீர்க்கதெரிசி, பிரார்த்தகால தெரிசி, தீர்க்க சூத்திரதெரிசி, என்பனவாம். இம்மீன்கள் மூன்றும் ஏகமாய் சஞ்சரித்துக்கொண் டிருந்தன. அப்படி யிருக்க, அந்த மடுவிலுள்ள சலமெல்லாங் கொஞ்சங் கொஞ்சமாய் கால்வாயில் வடிந்தும், காச்சாலுலர்ந்தும்போவதாய்து. அதைக்கண்ட வருவதுணருந் தீர்க்கதரிசியென்னு மச்சமானது மனதிலச்சங் கொண்டு, தன்னுடன் கூடிமருவிய ரெண்டு மீனையுங்கண்டு சொல்லுவதாவது. ஓ என்னுடைய தோழர்களே! நாமிருக்கிற மடுவினுடைய நீரெல்லாம் வறண்டும் வடிந்தும் போய்விடுகிறது. இனிமேல் செம்படவர் சேர்ந்துவந்து வலைவீசினால் நாம் அகப்பட்டுக் கொள்ளுவோம். ஆதலால், இதில் நாமிருக்கப் போகாது. முன்னாடி மடைவாயிற் போகிற நீர்வழியே போய், ஆழமுள்ள மடுவில் அல்லது குளங்களிலிருந்து பிழைப்போம். இனி யிவ்விடத்திலிருப்பது காரியமல்லவென் றியம்பியது. அதைமற்ற இரண்டு மீன்களுங்கேட்டு நகைத்து, ஐயா நண்பரே! நீர் சொல்வது வெகு நேர்த்தி, இந்த யிடத்தில் நாம் வெகு நாளாயிருந்தோம். இனி யிந்த மடுவைவிட்டுப் போகிறதேது? நம்மை யொருவர் பிடிக்கிறதேது? போம் போம் இதெல்லாம் பயித்தியம். நல்லது உமது சொற்படி போவதானாலும், நினைத்தவுடனே போகக்கூடுமா? எல்லா பின்னாலே பார்த்துக் கொள்மோம். என்று வந்த பின்னறியும் பிரார்த்தகாலதரிசியும், வந்தும் அறியாத தீர்க்க சூத்திர தரிசியும் பேசின. அதைக்கேட்ட தீர்க்கதரிசி இவர்களுக்கு மேல்வருங் காரியஞ் சொன்னால் தெரிம்வில்லை. துன்பப்படுகிற முன்னிலையிற் றெரியும். என்று சொல்லிப்போட்டு, தான் நீர்வளமுள்ள ஓர் பெருங்குளத்திற்குப் போய் விட்டது.

பின்பு மற்ற மீனிரண்டும் முன்னிருந்த மடுவிலிருக்கும்போது, மீன்வேடர் வந்து வலைவீசினார்கள். அப்போதவ்வலையில் அவ்விரண்டு மகப்பட்டுக் கொண்டு, ஐயோ நமக்குப் பிராணன் போகின்ற கால நேரிட்டதேயென்று மனதுமயங்கித் துக்கப்பட்டு, பிரார்த்தகால தெரிசியென்பது சாக்கிரதையாய்ச் சற்றுநேரம் வரையில் மறைந்து, கோர்த்த கோர்வையிலிருந்து சமயம் பார்த்துக் கோர்வையைக் கடித்துக்கொண்டு, மற்றொரு குளத்திற்போய் வலைவீசிய போது மெத்தெனக்குதித்து வெகு தூரம் போய்விட்டது. இன்னொரு மீனாகிய தீர்க்க சூத்திர தரிசியென்பது பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளும் வகை யறியாமல், வலைஞரிடத்தி லகப்பட்டு மாய்ந்தது. ஆதலால் முன்சாக்கிரதையும், பேரறிவு முள்ள பேர்கள் ஆபத்துக்காலத்தில் எப்படியுந் தப்பித்துக்கொண்டு பிழைப்பார்கள், அவ்வறிவுஞ் சாக்கிரதையு மற்றவர்கள் சோம்பேறியைப்போல் எந்தக் காரியங்களையும் எண்ணிப்பாராமல், எதிராளியிடத்திற் சிக்கி, உயிரிழந்து போவார்களென்றிசைத்த பாட்டன் வாக்கியத்தைக் கேட்டதாஷ்டிகனை தருமராஜன் சந்தோஷித்து, ஐயா! தேவரீராற் சகல நீதியுந் தெரியவந்

த்து. ஆநந்தபாஷ்பத்துடன் ஆசையானேன். இதல்லாமல், சீமையாளப்பட்ட ராஜர்களுக்கு அபஜெய முண்டாகிற வயணமும், வெல்லுந் திறமில்லாத பலயீனருக்கு வெற்றிவருகிற மார்க்கமும், கஜக்கபடிகளாகிய பேர்களுக்கு வாழ்வுவருகிற வழியும், பரிசுத்தவான்களுக்குச் சம்பத்து நீங்கிச் சஞ்சலப்படுகின்ற தாழ்வும், இவைகளை அடியேனுக்கியம்ப வேண்டுமென்று தருமபூபதி கேட்க, வீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

---

ஜெயாபஜெயத்தைப்பற்றிக் கூறிய
கங்கையின் கதை.

ஓ தருமசீலனே! முன்னொரு காலத்திற் கங்காப்பிரவாகம் வந்து கடலிற் கலந்தபோது சமுத்திரங் கங்கையைக்கண்டு, ஓ கங்கையே! நீர் பெரு வெள்ளங் கொண்டுவரும் போது உமதருகி லிருக்கப்பட்ட செடி, கொடி, புல், பூண்டு, இவைகளை விட்டுவீடுகிறீர். பெரிய மரங்களை யெல்லாம் அடிவேருடன் பிடுங்கி அசைத்து அலைத்து ஆட்டி, முறித்துவீழ்த்துகிறீர். அது என்ன காரணத்தினலே இந்தவிருட்சங்கள் பண்ணுகிற அபகாரமென்ன? புற்பூடுகள் செய்கிற உபகாரமென்ன? என்று கேட்ட அந்தக் கேள்விக்குக் கங்கையானது விசுவாசமாய்ச் சொன்னதாவது. தான் பெருகி மும்மரமாய் வரும்போது எனக்கு அடக்கமாயும் ஒடுக்கமாயும், வணங்கப்பட்டனவற்றை வருத்தமாட்டேன். வணங்காமல் நிமிர்ந்து இருமாந்து கட்டையாயிருப்பனவற்றை வேருடன்பறித்துமொட்டையாக வீழ்த்துவேன், வணங்குவதுபிழைக்கும். வணங்காதது உயிரிழக்கும். என்றுசொன்ன கங்கையின் வார்த்தையைச் சமுத்திரங்கேட்டு, சரிதானென்று ஒப்புக்கொண்டது. ஆதலால், இளைத்தவரசன் வணக்கத்துடன் கனத்த பலவானையடுத்து நல்ல வார்த்தைகளைப்பேசி, அவ்விராஜனுடைய மனம்போனபடிக்குத் தானும்போய் அண்டிப்பிழைப்பான். பலவான்களுக்குத் தாழ்ந்து நடந்தால் என்றைக்குங் குறைவு வராது. யாதொரு குற்றமுமில்லை யென்றார். இம்மொழியைக்கேட்ட தருமராஜனுஞ் சக்கிராயுதன் முதலாகிய சகலரும் வீஷ்மரைத் தோத்திரம்பண்ணி, தேவரீர் இன்றைக்கு மெத்தப் பேசியபடியாற் கண்ட சோஷையுண்டாம். இன்றுபோய் நாளைக்கு வருகிறோம். என்று விடைபெற்றுக்கொண்டியாவரும் ஆனந்த பரவசத்தர்களாய் அஸ்தினபுரம்போய்ச் சேர்ந்தார்கள்.

அரசியலுரைத்த சருக்கம் முற்றிற்று.

---

# நான்காவது,

# தருமவியலுரைத்த சருக்கம்.

## கண்ணன் துதி.

மருவுதிரைக் கடற்புவியில் வசுதேவன் றேவகிபால் மைந்தனாகத்
திருவவதா ரம்புரிந்து பலராமப் பெயர்புனைந்து தீயோரான
பிரலம்பன் முதலோரைத் தொன்றுலகை வாழ்வித்துப் பிரமனாதி
சுரர்முனிவர் தொழுதேத்த நின்றோனென் சிந்தையுளுந் துன்னுங்கோவே.

ஓ சந்திரகுல திலகனாகிய ஜெனமேஜெய மகாராஜனே? அஸ்தினாபுரத்தில் தருமராசன்முதலிய யாவரும் மறுநாட் காலையிலெழுந்து நித்தியஸ்நான செபவிதியனுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு, வீஷ்மரிடத்திற்கு வந்து அவரை வணங்கி மஹாரிஷிகளையும் பணிந்து,ஆசீர்வாதம்பெற்றுத் தத்த மிருக்கைகளிற் பொருந்தினார்கள். அப்போது தருமராஜன் மாத்திரந் தனியேயெழுந்துவந்து தனது பாட்டனுக்குப் பக்கத்திலுட்கார்ந்து, ஓ தாதா! இதுவரையிலும் இராஜநீதிகளைக்கேட்டு இன்பமடைந்தேன். இனி எண்பத்து நான்குகோடிஜீவாத்மாக்களும் எவ்வித தருமத்தினாற் சனன மரண சல நிதிவேதைதயைக் கடந்து தணிக்கைப் பெறுவார்கள். அதனது விபரத்தை அடியேனுக்குச் சொல்லவேண்டு மையனேயென்று தருமநந்தனர்கேட்க,தத்வக்கியான தபோநிதியாகிய வீஷ்மாச்சாரியார் சிறுநகை காட்டி, ஸ்ரீ கிருஷ்ணதேவர் வியாயாதிப் பிரமங்களைத் தியானித்து விபகரிக்கத் தொடங்கினார். ஓ எனக்கன்புள்ள பௌத்திரனே? தருமங்களைப் பலகோடி விதங்களாக எடுத்துச் சொல்லாத சாஸ்திரங்களில்லை. நல்ல அறிவுடைய பெரியோர்கள் தருமமார்க்கத்தை யெல்லாமறிந்து, அந்தப்பிரகார நடந்து நற்கதிபெறுவார்கள். தருமந்தெரியாத மூடர்களெல்லாம் பாபங்களை விர்த்திப்பண்ணிக்கொண்டு நரகத்திற் கேதுவெய்யாவார்கள். நல்வினை தீவினைகளினாலே இந்தவுலக நடந்துவருகின்றது. உலகுண்டானதும், உடலுண்டானதும், வினைப்பயனென் றறிந்துகொள்ளுக. இப்படி வினைக்காரணமா யுண்டாக்கப்பட்ட பூமியில் தருமத்தின் பேரிற் கருத்தை வைத்துக் கடைத்தேறவேண்டும். கடைத்தேறுவதற்கு அநேகம் வழிகளுண்டு. எந்த வழியைப்பற்றி முடிவு காண்கிறாளே? அந்தவழியி லவனுக்குச் சுகமுண்டு. ஓ விஸ்தாரமறிவுடைய விதரணனே! அவைகளில் ஏதாகிலுமொன்றைக் கேட்பையானால் அதற்கு வழிகாட்டுகிறேன் என்று வீஷ்மர் சொல்ல, தருமராஜன் அவரைத் தொழுதெழுந்து, ஓ பெரியோனே! மெத்தப் பிரயாசப்பட்டு எடுத்த இந்த உடலானது திட்டென்று விழுந்து பொட்டென்று போவதற்கு முன்னே, சோம்பலில்லாமல் எந்தக் காரியத்தைச் செய்தாற் சுளுவிற் கதிபெறக்கூடும், எது உலகத்தாருக்கு எளிதிற் கைகூடுவது! அப்படிப்பட்ட மார்க்கத்தை எனக்கு அனுகிரகம் பண்ணிவையும் என்று அறக்குமரன்கேட்க, அதற்குப் பிரமசாரியாகிய வீஷ்மர் ஒரு திருஷ்டாந்தமாகிய கதையைச் சொல்லுகின்றார்.

---

## எளிதிற் கைகூடுவதைப்பற்றிக்கூறிய மேதாவி யென்னும் பிராமணன் கதை.

ஓ பேரனே! பிராமணகுலத்தில் மேதாவியெனப் பெயர் வாய்ந்த ஒருவர். அவர் மேலான சாஸ்திரங்களைச்சோதித்து,சுருதி, யுக்தி, அநுபவத்தினாற் சிறந்து, பிரபஞ்சத்தையு மறந்து பொருந்தியது, அவருடைய தகப்பனைவர் சமஸ்தபூதாதி உயிர் வருக்கங்களெல்லாம் பூமியிற் பிறக்கிறதும் இறக்கிறதுங் கண்டு மனம்வெறுத்து, தன்பிள்ளையாகிய மேதாவியைப் பார்த்துக் கேட்கின்றார். அப்பா குழந்தாய்? இந்தக் கிரகஸ்தாச்சிரமத்தினாலே ஆத்மலாபம் ஒன்றுமில்லை. நமதுயிர் கதிபெறுவதற்கு லாபத்தைக் காணோம் இந்தயில்லறவாழ்க்கையால் ஓர்தலங்

கிட்டுமென்று எனக்குக் தோன்றவில்லை. இகபரமாகிய இவ்வறத்தை யொழித்து, மனஞ்சலியாமல் வனத்திற்குப்போய் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி. பெரியோர்களுடைய சாவகாசம்பெற்று, உபதேசக்கிரமமுற்று, உடற்பகையாகிய காமக் குரோதிகளைக் கடத்தி, பிராணவாயுவுக்கு யோகவலுவேற்றிக்கொண்டு சம்மாரகர்த்தாவாகிய எமனைச் செயித்து விஷ்ணுமாயை வென்று, பரத்தின் பதத்தைகண்டு வாழவேண்டுமென்று இச்சைகொண் டிருக்கிறேனென்று சொல்லினர். அதை மெய்யனை மேதாவி கேட்டு, ஐயா! காட்டுக்குப்போய்தபசுசெய்து கதியடைகிறே னென்று கழறுகின்றீர். இல்லறத்திற் கூடாதென்றும் துறவறத்திற்பெறலாமென்றும், இரண்டிடமுங் கற்பித்தீர். இவ்விடத்தை விட்டு அவ்விடத்திற்குப்போனால் ஆத்மபோதம் வருமேயன்றி, இல்லாவிட்டா லில்லையென்பதல்லவோ உம்முடைய கருத்து. அப்போது ஆத்மலாபம் ஆச்சிரமத்தின் பேரி லேறிற்று. அந்தப்படி யல்ல. கியானவுறுதி கிட்டாத பேர்களுக்கு ஸ்திரீஜன மயக்கமும், அசத்தியமும், அவாவும், புறங்கூறுதலும், பொருமையுமிகும். இதனால் ஈஸ்வரச்சார்பு பெற மாட்டாமற் கரும பூமியைக் காதலித்து, ஐம்புலன்களின் வழிசென்று, இயான் எனதென்றும் பற்றுமனின்றவர்கள் எவர்களோ? அவர்கள்தான் அடிக்கடி புனர்ஜெனனமெடுத்து, எமதண்டனைக்கு ஈடுபட்டு, பாசக்கயிற்றுற் கட்டுண்டு, கதையினல் மொத்துண்டு, சூலத்தாற் குத்துண்டு சோம்பிக்கிடப்பார்கள். கியான உறுதியைக் கடைப்பிடியாய்க் கொண்டவர்கள் பெண்மாயையிற் பிறழாமல், சத்தியந்தப்பாமல், சதாசிவச்சார்பும் பெற்று, ஐம்புலனையு மடக்கி, யமனையும் புறங்கண்டு அருள்வடிவு பெருவார்கள்.

ஐயா தாதையே! அப்பேர்ப்பட்ட உத்தமர் இங்கிருந்தாலென்ன? அங்கிருந்தாலென்ன? மற்றெங்கிருந்தாலுமென்ன? வீட்டிருந்தால் விசனமென்றுங் காட்டி லிருந்தால் தரிசனமென்றும் இரண்டில்லை. அவர்கள் பெண்சாதி பிள்ளைகளுடன் கலந்து குலாவி அணைத்து வாழ்ந்தாலும், அவர்களை மாயை அசைக்கமாட்டாது. விவேகத்தெளிவும், மனவுறுதியும், உண்மைக் கியானமும், நித்தியாநித்திய வஸ்து விவேகமும் மலபரிபாகமும் இல்லாதவர்கள், காட்டுக்குப் போனாலும் காலூன்றித் தவமிழைத்தாலும் ஆகப்போகிற தொன்றுமில்லை இருந்தஇடத்திற் றவங்கூடாதபேருக்கு எங்கே போனாலுமென்கைகூடும்? பெரியவர்களின் நேசமும், விசுவாசமும் சகவாசமும் உபதேசமும் இங்கேயுமுண்டு. அங்கேமாத்திரம் உண்டென்பது அபத்தம். மோட்சம் பெறுகிறவனுக்கு இடபேதமில்லை. இருந்தயிடத்திலிருந்து அநுபவிக்கமாட்டாதவன் வனத்திற்குப்போய் புலிக்கிரையாக்கி, மறுபடியும் பிறக்கவேண்டியதாய் முடியும், என்று வார்த்தைவழங்கிய மேதாவியின் பேச்சைத் தந்தைகேட்டு, சரிதானென்று தன்னியனும் ஈஸ்வரபக்தியும் இருதய சுத்தியும்பெற்று, பச்சாத்தாபம், பூததயவு அருளுடைமை அன்புடைமை, உறுதிக்கியானம், இவை முதலியனவுற்று, மகாரிஷிகளுக்கெல்லாம் பெரியவராகிப் பிரசித்தராயினர். ஆதலால், உலகிலுள்ள பேர்களெல்லாருஞ் சுளுவிற் கடைத்தேறுவதெப்படியென்று உசாவியபடியால் இதைவிட நான் உனக்குச் சொல்லவேண்டிய தென்னயிருக்கிறது? இவ்வாறு இல்லறவாழ்க்கையைக் குறித்துப்போயிருக்கிறவண்ணம் நல்லமனைவியுடன் கலந்துநடத்தினல் எல்லவர்க்கும் இன்பமுண்டாகும். என்றும் வீஷ்மர் வழங்கக்கேட்ட தருமராஜன் களிக்கைடைந்து, ஐயா! வெகு திரவியம்பெற்று ஒருவன்வாழ்வதும், செல்வமில்லாமல் மற்றொருவன் தாழ்வதும், உயர்ந்தவனொருவனுந் தாழ்ந்தவனொருவனுமா யிருப்பதும் என்ன காரணத்தா லையாவென்றுகேட்க வீஷ்மரியம்புகின்றார்.

---

## செல்வமுஞ் சிறுமையும்பற்றிக் கூறுதல்.

ஓ மனவுறுதிகொண்ட மாதவத் தருமனே! தனமுள்ளாருக்கு மதமிருக்கும், கோபம்பிறக்கும், நமக்கெதிர் ஒருவருமில்லையென்று கர்வப்பேய்பிடிக்கும். கல்வி கேள்வியுடைய பேர்களைக்கண்டால் அவர்களை மதியாமலும் வணங்காமலும் அகந்தை படைத்து, ஆங்காரமுடைத்தாகி, ஐஸ்வரியஞ் சாசுவதமென்னு மக்கியானத்தைமதித்துச் சுக்கியானந்தை விடுத்திருப்பான். பெண்மயக்கம், பொருண்மயக்கம், பூமித்தியக்கம் இ

வைகளைப் பெருமையாகப் பெற்றிருப்பான். சம்பத்தில்லாத பேர்களுக்கு இத்தியாதி சங் கடங்களொன்றுமில்லை. இதனுல் தரித்திர ன் இத்தியாதி மமதையடைந்து, பெரியவா ள் மனம்பேதிக்க நடந்து, இந்தப் பிறப்பில் நொந்துவந்து, வறந்து, இனி நோதலடை யப்போகிற ஒருவனிடத்திற் காத்துக்கொண் டிருக்கின்ருன். ஆதலால் திரவியமில்லாத வனே உயர்ந்தவன். பூர்வபுண்ணியத்தினுல் வந்த பொருளைப்படைத்தவன் மேற்கூறிய மநத்தவன் மேற்கூறிய மதமாதிகளை வகிக் காமல், இன்னும் புண்ணியந்தேடிக்கொள்ள முயன்று, எவரையும் நொய்யவுரையாமல் நோய்தல்புரியாமல் செய்யுங்கருமந் தீங்கறச் செய்து, சீவராசியி லிரக்கம்காட்டி, ஸ்திர சிந்தையிலிருந்து, தெய்வமிகழாமற் ருெழு து, சிந்தை பொருமித்து வாழ்வாஞகில்; இ ன்னெருசன்மத்தில் இறைவனுவான். அப் படிக்கில்லாமல் நடந்தால் அதிக பாவமூட் டை கட்டிக்கொண்டு, நால்வருநகைக்க நலி வுற்றிருந்து, நரகவாதனையி லழுந்திக்கிடந் து, இவன் நன்ருயிருக்கும்போது மனமறி ந்துசெய்த நன்மையோ? மனமறியாமற்செ ய்த தன்மையோ? அந்தப் பலனிருந்து வே ருெருயோனியிற் புகவொட்டாமல் மானிட ஆக்கையிற் பிறந்து, மேற்கூறிய மாதவப் பேறுபெற்ற மகாராஜனிடத்தில் வறுமையா ய்க் காத்திருக்க வேண்டிவரும். கூடியமட் டும் பாரமார்த்தியமாய் நடந்தவன், பின்னும் பின்னு முற்தவிப் பெறுமையினுலே செல் வமாய்ப் பிறப்பான். தீரக்கேட்டு ஆணவப் பட்டு அழிபவன் வேறுயோனியிற் பிறந்து வெதுகஷ்டப்படுவான். அதைப்பற்றி வீர முமில்லை காசுமுமில்லை யென்பதுபோல், தி ரவியமில்லாத கற்வமற்றவன், திரவியம்ப டைத்தவன் கர்வமுற்றவன், எல்லாப் பொல் லாங்கும் பெரும்பழியும் பொருளிருப்பவனை ப் பீடிக்குமே ஒழிய பொருளில்லாமல் அரு ளிருப்பவனைப் பீடிக்கமாட்டா. என்றுகூறிய வீஷ்மரைத் தருமராஜன் துதித்து, ஐயா! தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய வண்ணமா னுல், திரவியம்படைத்தவர்கள் எவ்விதத்திற் கடைத்தேறுவார்கள்? அதைச் சொல்லவே ண்டுமென்று வேண்டினுர். அதற்கு வீஷ்மர் சொல்லுகின்ருர். அப்பா பேரனே! பொ ருளவாவைப்போக்கி, இப்பொருள் யாரிடத் திலும் நிலைத்திருப்பதல்லவென்று அறு போகத்தினுலும், நல்ல ஆசான் முன்னிலை யினுலும், சாஸ்திரவழக்கத்தினுலும், அவ் வாசையின் வேரைக்களைந்து, அண்ணழி ஆண்டழியென்று அலட்சியப்படுத்தி, அரு ளவாவைக்கொண்டு நெறிவழிபற்று நிற்பா ராகில்; அவர்கள் நல்லகதியை விதியாய்ப் பெருவதுமன்றி, சனனநேரிட்டபோதிலும் பொருள் மிகுந்த குபேரசம்பத்தைப் பெற லாகும். அதற்கொரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

## அருளவாவைப்பற்றிக் கூறிய மங்கனேன் னும் மறையவன் கதை.

அப்பா தருமநந்தன! வேதநெறித் பாத மங்கனென்னும் ஓர் மறையவனுக்குப் பணத்தாசைபிடித்து, எந்தவிதத்திலாவது எந்தத்தொழிலானுவது பொருள் சேர்த்தாற் போதுமென்று தன்னுடைய ஜாதியாசாரத் தப்பித் திரவியந்தேடினுன் அப்படிதேடியும் அதைத் தருமகருமங்களிலுஞ் சற்பாத்திரங் களிலுஞ் செலவழித்து, அதற்குத் தகுந்த நல்லபயனை யடையாமல், எதற்கும் பிரயோ சனமில்லாமற் பூமியிற்புதைத்து, லோபமி குத்து, பின்னையும் ஆசைபிடித்து, ஆத்து மக்கியானமற்று, அறிவும், பொறையும், நெரியும், முறைமையுங்கெட்டு, தான்போகிற கெதி தனக்குத் தெரியாமல், நாம் சாஸ்வத மாயிருப்போமென்றும், இந்தத்தனம் நம் மைவிட்டுப் போகாதென்று நினைத்து, செல் வநிலையாமை, இளமை நிலையாமை, என்னு நீதிசாஸ்திரங்களையுந்தருமசாஸ்திரங்களையு மெண்ணமல், பொருளெந்தவழி வந்ததோ அந்தவழியே போய்விடுமென்றும் இந்தப் பொருளிருக்கும்போதே அருளைத் தேடிக் கொள்ளுவோமென்றும்யோசிக்காமல், தியா ன சூனியத்தால் மயங்கி, சரீரந்தளர்ந்து, நோய்கள்மேலிட்டு, சிலேத்துமம் ஓலிட்டு, வெளிப்படுகிற காலத்திற்கு வெள்ளைக்கொடி போன்ற நரைநரைத்து, மறைவுசெய்வது போல் திரைதிரைத்து, பேரிமுழங்குவது போல் இருமிக்கனைத்து, கட்டுங்களத்து, கால்வாங்கியோடுங் குதிரை யோட்டமுங் கூடிக்குதித்து, பாரியாளும் புத்திரமித்திர ரும் பதைபதைக்க விழிகள் மேல்கீழால் வெ ருண்டு விழித்து, உடலும் உயிரும் ஒடுங்கி விடுங்காலநேரிட்டது. அக்காலையில் அந்த

ஆத்மார்த்தக் கடவுளைப் பூசித்து, தோத்திர
நமஸ்காரங்கள் தொடங்கி, ஆசமன்னியங்
கொண்டு அசுத்தமான வழியிற் போகாமல்
நல்ல வழியாய் நடந்து, தானிருக்கும் இட
ம்புகுந்து, பசித்துவந்தபரதேசிகளுண்டோ
வென்று தேடி, பஞ்ச கச்சாயத்தோ டன்ன
ம்பகர்ந் துபசரித்து, கோபத்தை விடுத்து, ச
த்தியத்தையடுத்து, குரோதத்தைக் கெடுத்து,
மனோசீலமடுத்து, ஈனவிர்த்திகட் கிசையாம
ல், சத்து சடம் என்கிற பதார்த்தபேத முண
ர்ந்து, யதார்த்தமாகத் தன்னைத்தானறிந்து,
காலந் தெரிந்துண்டு, கழிக்கத்தக்கதைக் கழி
த்து, அதிக பிரசாகோஷ்டத்தி லகப்படாம
ல், நாவைக்காத்து நன்மைபெற் றிருப்பதே
ஆசாரம். இதற்கு வேண்டிய மந்திரங்களை
யெல்லாம் மர்மமாய்மனதிலுணர்ந்து, அம்
மந்திரங்களைப் பிரயோக வழிபோக்கிப் பஞ்
சேந்திரியங்களையும் நிக்கிரகம்பண்ணி, தான்
கடைத்தேறத் தக்கதாக எவனொருவன் நிலை
யினின்று செபிக்கின்றானோ? அவன் எல்லா
வற்றிற்கு மேலான பேரின்பலோகம் பெறு
வான். இதன்றியும், இயமம், நியமம், ஆச
னம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தார
ணை, தியானம் சமாதி என்னு மிவைகள் அ
ட்டாங்கயோகமம் இவ்வேட்டி னுடைய ஆ
சனம், மந்திரம், இயற்கை, இருக்கை, பேதா
பேதம் இவைகளை நன்றாய்ப் படித்தறிந்த
பெரியோர்கள் அனுபோகத்தாதறிந்து, வா
யுவைக் கும்பித்து யோகாப்பியாச மனுஷ்டி
ப்பார்கள். இந்த யோகாப்பியாசத்தி லிரு
ந்து அம்மேலான மந்திரங்களைச் செபம்
பண்ணுவதும் ஆசாரமென்று விளம்புவார்
கள். அதற்கொருசாட்சிவிள்ளுகிறேன்கேள்
வள்ளலேயென்று வீஷ்மருரைக்கின்றார்.

---

மந்திரசெப மகத்துவத்தைப்பற்றிக்கூறிய
கவுசிகரிஷி இக்ஷுவாகு ராஜன்
இவர்கள் கதை.

அப்பா உதிஷ்டிரனே! கவுசிகனென்
றொரு பிராம்மணர். அவர் சத்தியம், பொறு
மை, சாந்தம் இவையுள்ளவர். தூய்மையா
ன ஆசாரமுடையவர். மந்திரப்பிரவாக மக
த்துவமெல்லாந் தெரிந்தவர். அப்பேர்ப்
பட்டவர் ஒரு மிடத்தை யேற்படுத்திக்கொ
ண்டு ஆயிரவருஷஞ் செபம் பண்ணினார்.
அவ்விடத்திற்குச் சாவித்திரி தேவியானவள்
பிரசன்னமாய் வந்து நின்று, நீர் வெகு நா
ளாய்ச் செபஞ்செய்கிறீர். உமக்கு இவ்வுலக
த்திலென்ன வேண்டியிருக்கிறதோ? அன்
னதைக்கேளுந் தருகிறேனென்றாள். அவ
ரந்தச் சரஸ்வதிதேவியைப் பார்த்து அம்
மா! நான் யாதொரு லாபத்தைங் குறித்
துச் செபிக்கவில்லை. இப்பேர்ப்பட்ட செபம்
பண்ணுகிற விரதங்களுக்கு விக்கினம் நேரி
டாமல் நடக்கும்படிக்கு அனுக்கிரகஞ் செ
ய்யவேண்டுமென்றார். அப்படியே இசை
மடந்தை சந்தோஷமடைந்து வரங்கொடுத்
து, ஓ வேதமந்திரப் பிராமண முனியே! நீ
ரனுஷ்டிக்கிற மந்திர செபத்திற்கு மகிழ்ந்து
தருமதேவதைவரும். உம்மிடத்திற்கு கால
யமன்கிட்டித் தீவரப்படுத்துவான். அக்கா
லத்தில் முக்கோடி தேவருங் கைகுவிக்கத்
தக்கதாக அத்தருமதேவதை நல்லகதி தரு
மென்று சொல்லிப் போயினள். அப்பால்
முன்போலவர் செபஞ்செய்யத் தொடங்கி,
விரத பின்னமில்லாமல் மூந்நூறு வருடஞ்
செபஞ்செய்து வரும்போது, தருமதேவதை
ரூபிகரித்து, ஓ பிராமணசீலனே! பெரிதிலு
ம் பெரிதுதவம், அந்தத் தவத்திற்கு மேற்
பட்டது செபம். அதை நீரனுஷ்டித்து
வந்தமையால், உமக்கு மேலானகதி கிடைத்
தது. அக்கதிக்குப்போய்ச் சேர்ந்துவிடும்.
இந்த ஸ்தூலபூதவுடலைக் கர்மபூமியிற் கழி
த்துப்போடும். என்னவு முதற்குலத்தான்
தருமதேவதையைச் சரணமடைந்து, ஓ அற
க்கடவுளே! ஆன்மாவுக்கு அனந்தமான
இன்ப துன்பங்கள் வருகிறபோதெல்லாம்
லாபலோபத்திற் கிடங்கொடுத்துக் கொண்டு
காப்பாற்றி அதற்குக் கவசமாயிருந்த உடலை
யொழித்து, ஆத்மாவுக்குப் பேரின்பம் வந்த
காலத்தில் அதுவுங் கூடயிருந்தி அனுப
விக்க வொட்டாமல் நீக்கித் தான்மாத்திரஞ்
சுகமடைவது தருமமோ? யானென் தாயின்
கருப்பத்திற் றரித்தபோதே எனக்குக் கவச
மாயிருந்து, சாரரசங்களினால் வளர்ந்து, அ
தனது சகாயத்தைச் சந்தோஷமாகக் கொடு
த்து, எல்லாந் தன்னதென்று என்னைச்சுமந்
திருந்த மெய்யைவிட்டு, நான் மாத்திரந்
தனிந்துப்போய்ச் சுகம் பெறுவது எனக்கு
நன்மையல்லவே என்று நவிலவும் அதைத்
தருமதேவதைக் கேட்டுச் சொல்லுகின்றது.

ஓ கவுசிகரே! எப்பேர்ப்பட்ட மகிமை
யுடையவர்களுக்குந் தேகம்வேறு, தேகிவே

வேதியனுக்கு யாத்திரைக்கியானம் வந்து, ஐயோ! நாமிறந்து போய்விட்டால் நமக்குப் பின்னாலே நம்மைத் தொடர்ந்து இந்தப் பெண்டாட்டிபிள்ளைகளும், உற்றார்பெற்றாரும், நாம் தேடிப் புதைத்த பொருளும், ஆகிய இவைகளி லொன்றேனுங் கூடவரத் தக்கனவோ! ஒன்று முதவப்போகிறதில்லை. நாம் செய்த நல்வினை தீவினையென்னும்பாப புண்ணியங்கள்தான் நமக்குவழித்துணையாய் வருவன. நமக்குங் காலஞ்சமீபித்தது. இந்தப் பொருளைப்போற்றி வைத்திருப்பதினால் பிரயோசனமென்ன ? என்று போங்காலக் கியானம் பிறந்து, நல்ல சத்கருமங்களிற் செலவு செய்து, ஒருகாசும் வைக்காமல், ஆசையுஞ்செய்யாமல், பரப்பிரமத்தையே பொருளாகக்கொண்டு பிராணனைவிட்டான், உடனே சிவகணங்கள் தரிசனமாய் மோட்சம் லபித்தது. என்று வீஷ்மர் சொல்ல, தருமராசன் கேட்டுமகிழ்ந்து, எங்கட்கிசைந்த இறையே! சரணம். இவ்வுடலமானது பஞ்சபூத சகிதமென்றும், பஞ்சகோசவிசிதமென்றும், பகர்கின்றார்களே, அந்தப் பஞ்சபூதமாதிகளெங்கே யிருந்தன, அவைவந்து இந்தத் தேகத்திற் சம்மந்தம்பட்ட விதமென்ன? இவற்றைச் சொல்லியருள வேண்டுமென்றுகேட்க வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

### சகசீவபரவியல்புந் தினசார முறையுங் கூறுதல்.

ஓ குவளைத்தார் புனைந்த கோமானே! ஆதிமூலப் பொருளாகிய பரந்தாமனுடைய திருநாபிக்கமலத்திருந்து பிர்மா பிறந்தார், அவர் ஆகாயத்தைப் படைத்தார். அந்த ஆகாயத்திலிருந்து வாயு வீசியது. வாயுவிலிருந்து தேயு தோன்றியது. தேயுவிலிருந்து அப்புகசிந்தது. அப்புவிலிருந்து பிரிதிவு தோன்றியது. உதித்த தெப்படியோ? அப்படியே யொடுக்கமுமின்றறிந்து கொள்ளுக. இந்த ஐந்துபேரும் பூதங்களினாற் சமஸ்தமான பிராணிகளுந் தோன்றின. அதல முதலாகிய கீழ்லோக மேழும், பூலோக முதலாகிய மேல் உலோகமேழும், ஆக்கப் பதினான்குலோகம் முகமாக்வும், ஏழு சமுத்திரம் வயிறாகவும், பர்வதங்கள் முழு தும், எலும்பாகவும், தோப்புகள், வனங்கள், காடுங்கள், இவைகளெல்லாம்ரோமமாகவும், வானமும், பூமியும், உடலாகவும், சக்கிர வாளகிரிகையாகவும், பெரும்பறக்கடல், கடைத்துவாரமாகவும், சந்திர சூரியர், கண்ணாகவும் வடவாமுகாக்கினி, உகாந்தக்காலாக்கினி உதராக்கினியாகவும், ஆறு கால்வாய் அருவி இவை முதலியன இரத்த நாடியாகவும், திசையே காலாகவும் உருக்கொண்டிருக்கின்ற தம்பிரானாகிய ஆண்டவனெவனோ? அவனே கர்த்தா. அவர்தான் அண்டநாதன், அகண்டநாதன், பிர்மாண்டநாதன், இதிற் சரங்களா யுள்ளதெல்லாம் பஞ்சபூத சொரூபமென்றும், அசரங்களாயுள்ள மலை மரம், ஆறு, குகை, கோபுரங்கள் இவைமுதலியன பஞ்சபூத சொரூப மல்லவென்றுஞ் சிலர் நினைப்பார்கள். நீயப்படியெண்ணாதே சரங்களைப்போலவே அசரங்களென்று நினை. ஆதலால் இப்பஞ்சபூத சொரூபமா யிருக்கின்ற சகசீவ பரத்தினுடைய நிலைமை இவ்விதமென் றறிந்து கொள்ளுக. என்று சொல்லிய வீஷ்மரை உதிஷ்டிரர் மீட்டுமுவந்து நோக்கி, ஐயனே ! நற்கதியினைப் பெறும் பெரியோர்களுடைய ஆசாரம் பேசவேண்டுமென்று வினவ, விரதசீல வீஷ்மர் பகர்கின்றார். அப்பா குழந்தாய்! சூரிய உதயமாக ஐந்து நாழிகைக்கு முன்னெழுந்து கமண்டலத்து நீராற் கரம், கால்வாய் இவைகள் பூசி, ஆசமனியங்கொண்டு பரிசுத்த மனதுடன் தனது ஆத்மார்த்தக் கடவுளின் அடிமலரைத் தியானித்து, செவிமறையச் சிரவேஷ்டிகட்டி, நிருதிமூலையாயுள்ள களர் நிலத்திலே மற்றொரு நினைப்புமின்றி வரவொட்டாமல் உன்மத்தமா யிருந்து, மலபிரண்டையுங் கழித்து, எவர்களுடனேயும் பேசாமல் இருகைநிறைய மிருத்திகை சேர்த்து, குதத்திற்குப் பதினொன்றும், இடதுகரத்திற்கு ஏழும், வலதுகரத்திற்கு ஐந்தும், காலுக்குப் பத்தும், ஆகமுப்பத்து மூன்றுதரஞ் சவுசமாற்றி, அந்தத் தொகையே வாய் கொப்பளித்து, பதினொரு அங்குலம் ஐந்து அங்குலமான பூங்கொம்பு அல்லது பாற்கொம்புகளாற் பல்விளக்கி, கரநியாசம் அங்க நியாசம் பண்ணிக்கொண்டு ஈஸ்வரத் தியானஞ்செய்து தடாகத்திலிறங்கி, அதனைப் பரிசுத்த கங்கையாகப் பாவனைபண்ணிச்சங்கற்பித்து, ஸ்நானமாடி, நீராற்றி, மடிவஸ்திரமுடுத்தி, சூரியமந்திர சகிதமாய் சூரிய நமஸ்காரம் பண்ணி, நித்தியகர்மானுஷ்டான முடித்து,

று, சேதனன்வேருகி, குடியிருந்தவீட்டுக்கு
கணக்குபார்த்து அளவின்படிக்குக் குடக்
கூலிகொடுத்து அப்பாற்போவதுபோல் தே
கத்தை யொருவிச் சீவன் கதியடைவதேயல்
லாமல் ஸ்தூலதேகம் சூக்ஷமதேக சகிதமா
கிய ஆவியுடன்மேவிப் பதவியடைந்தபேர்
கிடையாது. உமக்குத்தெரியாத ரகசிய முண்
டோ? ஓ உத்தமனே தேகம்பொய், சேதனன்
மெய் என்னதான் பழகியிருந்தாலுங் கடை
சியில் எனதென்றிருந்த அசுத்தமாகிய சரீ
ரத்தின் சொந்தந் தட்டுக்கெட்டுத் தடுமாறிப்
போய், பிணம்பிணமென் றிகழப்பட்ட புன்
கதியேயல்லது வேறில்லை. சுத்தமாகிய ஆத்
மபுருஷன்மாத்திரமே முத்தியி லழுந்துவா
ன். என்னுடன் கூடிப்பிறந்து சகல நன்
மைக்குந் துணையாகச் சிறந்துஇடங்கொடுத்
துக் கொண்டிருந்த உடலைவிட்டு வரமாட்
டேன் என்கிறீர். நரகவேதனை யனுபவிக்
கும்போது உடலிலிருந்து அனுபவிக்கிற
தா? இல்லையே. ஆன்மாவல்லவோ துன்பப்
படுகிறது. இவைகளை நீர் யோசித்துத்தேக
த்தைவிலக்கி நல்லகதியடையக் கடவீரென்
றுதருமதேவதைநவில, அவ்வார்த்தையை
ஆதரிக்காமற் கவுசிகர்தேகாபிமானத்துடனி
ருககவும் அந்தவேளையில் இந்த மஹாரிஷி
க்கு நேரில் மிர்த்தியுதேவதையுங் காலனும்
வந்து இதோ நாங்களிருவரும் வந்தோம்.
உமது ஸ்தூல உடலை நீக்கிச் சூக்ஷமதேகத்
துடன் கொண்டுபொகின்றோம். நீர் பய
ணப்பட்டுவாரும். நீர் மிகவு நல்லவர் உம்
மை மேலானபதவியில் நிறுத்தும்படியாய்
சம்ஹாரக் கர்த்தாவாகிய இயமதருமராஜன்
உத்தரவு செய்திருக்கின்றூர். நான் அவரு
டைய காரியக்காரன் என்பெயர் காலன். இ
வர்தான் உயிர்களைக் குத்தகை யெடுத்திருக்கி
ன்ற மிர்த்தியுதேவதை என்றுரைத்து அ
ழைத்தார்கள். அவர்கள்பேச்சை அக்கவுசிக
ர் சட்டைபண்ணமல், எப்போதும்போற்செ
பத்தி லிருந்துவிட்டார்.

அந்தவேளையில் எமதருமராஜன் நிஜ
ரூபமாகிவந்து ஏனையாதடைபேசுகிறீரென்
று கேட்டனன். கவுசிகரானவர் உடனே வி
ரைந்தெழுந்து நமஸ்கரித்து அருகில் நெ
ருங்கி ஆசனங் கொடுத்து அவனுக்குச்
செய்யத்தக்க மரியாதை உபசாரங்களெல்லா
ஞ் செய்து, தானுமிருந்து கலந்துபேச வா
ரம்பித்தார். அப்போது பெரியவர்களாற்
கொண்டாடப்பட்ட பிரதாபசாலியாகிய அ
யோத்தியையாளும் இட்சுவாகுமகாராஜன்
கெங்காஸ்நானம் பண்ணிப் போகின்றவன்
இந்தக் கவுசிகமகாரிஷி ஆச்சிரமத்தின் வழி
யேவந்தான், அவ்விடத்தில் தருமவானுகிய
எமதருமராஜனைக்கண்டு பிரதட்சண நமஸ்
காரம் பண்ணிக்கொண்டு தீர்க்கசெப திட
வானுகிய கவுசிகமகாரிஷியைக் கண்டு வண
ங்கி நின்றுன். அவ்வாறு நிற்குஞ் சூரியகுல
த்திராசனைக் கவுசிகர்கண்டு ஓபெருமை பொ
ருந்திய ராஜனே! எனது ஆசிர்மத்திற்கு
இன்றையதினம் நீர் வந்தபடியால் எனக்கு
அதிதியானீர். உமதெண்ணத்திற் கொண்டி
ருக்கிற இச்சையை ஒளியாமற்கேளும். என்
று கவுசிகர் சொல்லவும், சத்திய சவுச ஆ
சார உபசார பூசாவிதிகளும், செபதப விர
தாதிகளும், சாஸ்திரத் தெளிவும் எக்கியமு
ம் ஏராளமாகப்பெற்ற இட்சுவாகு மகாராச
ன் கவுசிகரைப் பார்த்து, சுவாமி! நான்இந்
தப் பூமியெல்லா மாளப்பட்ட ராசன் உங்க
ளைப்போன்றவர்களா லபேட்சிக்கப்பட்ட
ஒரு பொருளைப் பதார்த்தத்தை நான் கொடு
க்கவேண்டியவனு யிருக்க, தேவரீரிடத்தில்
நான் எந்தப் பதார்த்தத்தைக் கேட்டு வாங்
கச் சிந்தைகொள்ளப் போகின்றேன். மே
லும் ஒரு பதார்த்தத்தின்பேரில் ஆசைப்
பட்டால். அது பிறவிக்கு வித்தாகுமென்று,
ஆசாபாசத்தை அடியோடறுத்துவிட் டிரு
க்கின்றேன். அப்பேர்ப்பட்ட விரதத்தைப்
போக்கி என்னத்தைக் கேட்பேனென்றுன்.
அம்மொழிகேட்ட கவுசிகமுனியானவர் ஓ
ராசனே எப்படிப்பட்டவர்களானுலும் ஒரு
வரிடத்திற்கு வந்தால் அவர்களுக்கு உபசா
ரந் தன்னுலியன்றமட்டுஞ் செய்து உபகாரம்
பண்ணுவது உத்தமமென்று பேறு பெற்ற
சீவன் முத்தர்களுரைத்திருக்கின்றூர்கள். அ
தைப்பற்றி உமக்கு நானுரைத்தேன். ஓபர்வ
தாகிருதியாகிய தோளினையுடைய பார்த்தி
பனே! வேதவேதியர் முதலியபேருக்கு நாம்
கொடுக்க, மெய்த்தவரியாவரும் நம்மிடத்
தில்வந்து யாசிக்க, இப்படி மேம்பாடாயிரு
க்கின்ற நாம் இவரை எவ்வாறு கேட்பதெ
ன்றுலக்ஷைப்படாதீர். மகாப்பிரசாதமென்று
மனதில் மதித்து, நாணத்தையோட்டி நன்
ருய்க்கேளும். என்றுபேசிய கவுசிகரிஷியின்
இஷ்டத்தைக்கண்ட இட்சுவாகு மகாராசன்
சற்று நிதானித்து, ஓ கற்றறிவுள்ள உத்த

மனே! தேவரீருடைய சிந்தை இப்படியிருந்தால் நான் தடுப்பது நிந்தை, ஆனதால், நீரெனக்கு உபகாரஞ் செய்யவேண்டுமென்று கருத்திருந்தால், நீர் பண்ணப்பட்ட செபத்தினுடைய பலன்கள் யாவற்றையுஞ் சம்பிரமாய்க் கொடுமென்று கேட்டான்.

அதற்குக் கவுசிகர் எண்ணங்கொண்டு ஓ அரசனே யாம் இதுவரையிலுந் தேடிக்கொண்ட செபத்தினுடைய பலன் முழுமையும் வேண்டினபடியால் இதோ உலகத்துடன் தத்தம் பண்ணுகிறேன். ஒப்புக்கொள்ளும், என்று கவுசிகருரைக்கவும், அவ்வார்த்தையின் உதாரத்தை வெற்றியின் மிகுந்த வய்மும், சத்துரு நடுங்கும் பயமும், வசனவுசித நயமுமுடைய இரவிகுலாதிபன் கேட்டு அற்புதமடைந்து, ஓ ரிஷிகட்கெல்லாம் இராசரிஷியே தேவரீருடைய மனதில் வெகு காலமாய்ப் பிரயாசைப்பட்டுச்சேகரித்த யாவற்றுள்ளு மரும்பொருளாகிய செபத்தை அடியேனுக்குக் கொடுக்கிறேனென்றது அருமையான காரியம். பெரிய ஔதாரியம். அருமையானகாரியஞ் சுளுவிற்கிடைத்தால் ஆருக்கும் ஆசை பெரிது. நானும் இவ்வாசை வலையை அறுத்தவனல்ல, மிகவும் இஷ்டந்தான். கஷ்டப்பட்டுக்கூடிய உமது செப்பலன்களையெல்லாம் மனதிற் கவலைப்படாமற் கொடுக்கவேண்டும் என்றான். அவ்வரசனது கருத்தறிந்த முனியானவர் அவனை மகிழ்ச்சியுடன் பார்த்து, ஓ ராசனே! அப்படியே வாங்கிக்கொள்ளும், எனக்கு ஒன்றின்பேரிலேயும் அவாவில்லை. நான் நிராசையானவன். இந்தச் செபத்தினால் வருகிற பலன் எனக்கென்னத்திற்கு? இதோ தந்தேன் பெற்றுக்கொள்ளுமென்று கமண்டலத்துச் சலத்தையோட்டி, கையை நீட்டித்தத்தம்பண்ண எத்தனப்பட்டார். அரசன் அந்த மகாரிஷியினுடைய மனோதுல்யத்தையும், பற்றற்ற நலத்தையும், பாரமார்த்தியத்தையும் பார்த்து அவர்மீது லட்சயமான பட்சமுண்டாகி, தனது வெள்ளமான பேரறிவுடைய வுள்ளந் தெளிந்து, ஓ சுவாமி முனிநாதா! இந்தச் செப்பலன் என்னத்திற்கென்று நிராசையாகிய நீர் வெறுத்து எனக்களிக்கத் துணிந்தீர். தேவரீருடைய சித்தையறியாமல் விந்தையாய்க் கேட்டேன். சாதுவாகிய உம்மால் தருமநிர்ணயமும், பற்றற்ற பரிசும், அவாவறுத்தலுந் தெரியவந்தது, சுவாமிகளின் செபம் எனக்கு வேண்டாம். ஓ மிகுந்த தவசைப்படைத்த ரிஷியீஸ்வரரே! உமக்கிஷ்டமில்லாத காரியத்தை எனக்குக் கொடுக்கிறேனென்றால் நான் வாங்கிக்கொள்ளுவனோ? உமக்கு ஆசாபாசம் அற்றதுபோல எனக்கும் பிரபஞ்சம் பொருளின்பேரில் அபேக்ஷையில்லை. என்று அரசன் புகலவும் கௌசிகர் சொல்லுகின்றார்.

ஓ ராசனே! நீர் முன்னடி செப்பலனெல்லாஞ் சிந்தாமற் றருமென்று கேட்டுவிட்டு, இப்போது வேண்டாமென்று வெறுத்து வேறொன்று சொல்வது வேந்தருக்கியல்போ? சூரியகுலத்துத் தோன்றல்களுக்குச் சொற்சோர்வுவருவது சுகிர்தமோ? உத்தமர்கள் பிராணன்போகிற காலத்திலும் பேச்சு தப்பினாற் பெரும்பாவம் வரும். முன்னடித் தேடிய தவமெல்லாம் பொய்க்கும், திரிகால அனுஷ்டானமுந் தேவதாபத்தியுங் குறைந்துபோம். ஆதலால், என் சொல்லைத் தட்டாமல், நீர்கேட்ட இஷ்டத்தை வீண்போகவொட்டாமல் வாங்கிக்கொள்ளுமென்று வருந்தினார். அதற்கு ராசன் சிறிதேனும் மனமொப்பாமல் தடுத்துத் தடுத்துச் சிலமொழிகூற, அதற்கந்தப் பெரியவர் சில அறமொழியறைய, இவ்வாறு இரண்டுபேரும் வாதிட்டுக்கொண்டிருக்கின்றபோது தற்செயலாய் அங்கே விகிர்தாகாரரூபத்துடனே இரண்டுபேர் சேர்ந்து வழககிட்டு, வாதிட்டுவந்து, இவ்விருவரையு நோக்கி யிக்காரியங்களைக் கூறிப் பேசத்தொடங்கினார்கள். அதென்னவெனில், ஓ கௌசிகமுனியே! ஓ இட்சுவாகுமகாராஜனே! இதோ என்னுடன் வாதாடிவருகிற யிவர் ஒரு கோதானம் பண்ணினார் அந்தப்பலனையெனக்குக் கொடுமென்று நான் கேட்டேன். அதற்கிசைந்து கொடுத்தார். நான் பெற்றுக்கொண்டு திரும்புகிற சமயத்தில் எனக்கு விவேகம் விளைந்து நானொரு பெரியவருக்கு இதற்கு முன் இரண்டு பசு தானங் கொடுத்திருந்தேன் ஆதலால் அந்தப்பலனை உமக்குக் கொடுக்கின்றேன் எனக்கு நீர் கொடுத்த கோதான பலனுக்குப் பதிலாக வாங்கிக்கொண்டு போமென்று சொன்னேன், நல்லதென்று சம்மதித்து ஒத்துக்கொண்டார். முன்னே ஒத்துக்கொண்டபடிக்கு இப்போது ஏற்றுக்கொள்ளாமல் நிலைதவறி மனம் பிரிந்து, என்கண்ணிற்காணாமல் மறைந்துவிட்டார். அதுமு

தலிதுவ்வரையிலும் மொழிபிசகிப் போன இ வரை எங்கெங்குந்தேடி ஏங்கியிருந்தேன். இன்றைக்கு என் கண்ணிலகப்பட்டுக்கொண் டார் பூர்வம் சம்மதித்தபடிக்குக் கோதான ப லனைக் கைக்கொள்ளுமென்று சலம் வார்க் றேன் மாட்டேனென்று கையைப்பறித்துக் கொள்ளுகிருர். ஓ பஞ்சேந்திரியங்களையும் ஏவல்கொண்டிருக்கிற பாக்கியவான்களே! இதையாராய்ந்து தேர்ந்து ஓர்ந்து தரும மாகச் சொல்லுங்களென்று வந்த இருவரி லொருவன் கேட்டான். அப்போது அவ னுக்கெதிரியாகிய மற்றொருவனும் அவ்வந் தணரையு மரசனையுமடுத்து நீங்கள் ஒருதலை வழக்காகக் கேட்டுரைக்காமல் எனது ஞாய த்தையுங் கொஞ்சங்கேட்டு நடுநீதியாய்ச் சொல்லுங்களென்று நவிலலுற்றான்.

ஓ ஐயமாரே இவர் என்னுடைய கோ தானபலனைப் பலவந்தமாய்க்கேட்டார் நான் மனப் பூர்வமாய்க் கொடுத்தேன் வாங்கிக் கொண்டு போய்விட்டார் அப்பாற் சிலநாள் தரித்துத் தன்னுடைய கோதானபலனை எ னக்குக் கொடுக்கிறேனென்பதாய்த் தொந்தர வுசெய்கிருர். அதைப் பெற்றுக்கொள்வதற்கு எனக்கிஷ்டமில்லை இவர் விருதாவிற் போரா டுகிருர் ஒரு உபகாரம் பண்ணி பதிலுபகாரம் வாங்கிக்கொள்ளுகிற மனம் எனக்கில்லை. ஆ தலால் உமது கோதானபலனுக்கு ஆராவ து யாசைப்பட்டால் அவர்களுக்குக் கொ டும் ஆசையில்லாத பேர்களுக்கு அடித்துப் பாலூட்டுவதா தருமம்? என்று பலமுறைத் தடுத்தேன் இவர் நிற்பந்தம் பண்ணுகிருர் இது முறைமைதானு? நீங்களுத்தமர் மகளா தலால் இதனை நன்ருயாராய்ந்து பார்த்து நரகத்திற் கேதுவில்லாமற் பேசுங்களென்று வேண்டிக் கொண்டான் அப்போது மூன் னே வழக்கிட்டு வந்தவன் மறுபடியும் சொ ல்லுகிருன் ஓ மகாரிஷியே! ஓ மகாராஜனே இவர் சொன்னது மெய்தான் என் கோதான பலனைக் கொடுக்கிறேனென்றபோது இவர் சம்மதியில்லாமற் றடுப்பாராகில், நான் விடு க்கவேண்டியதே அப்படிக்கில்லாமல் அப் போது இவர் ஒப்புக்கொண்டு இப்போது நான்வாங்கமாட்டேனென்றும்தானம்பெறு ம்படி அக்கறையில்லையென்றும் பேசுவாரா கில் நான் சும்மாவிடப்போமோ முறையோ வென்பவன் தலையில் மூட்டைவைப்பேனு நீங்களே சொல்லுங்களென்ருன். இவ்விரு வர் விபகாரத்தை ரிஷியும் ராஜனுங் கேட்டு, தீர்க்காலோசனை செய்து அரசனிவ்விருவரு க்கும் சம்மதியாகும்படிக்கு சொல்ல தனக்கு வழியில்லாமற் பேசாதிருந்தாற் பிழையொ ன்றுமில்லையென்று இருந்துவிட்டார். அந் தக் கவுசிகமுனிவர் இட்சுவாகு ராஜனை நோக்கி ஓ அரசனே! இருவர் வாழ்க்கையுஞ் செவ்வையாய்க் கேட்டீரல்லவா, இவர்கள் சொன்னபேச்சு இவ்வள்வுதானென்னுடை ய செபத்தின் பலனைக் கேட்டுவிட்டு இப் போது வேண்டாமென்கிறீர். உமக்கும் இப் படியே வரும் இப்பவும் நீர்விரும்பிக் கேட் டபடிக்கு நான் வெகுகாலமாகச்செய்துவந்த செபத்தின் பலனைச் சுபத்துடன் வாங்கிக் கொள்ளும் அல்லவென்ருல் சபிப்பேனென் று கோபித்தனர். அம்மொழிகேட்ட ராஜன் மறுமொழிபேசாமற் றன்கையை நீட்டினன். உடனே கவுசிகமுனிவர் எனக்குரிய செபத் தின்பலன் இவ்வரசனுக்குச் சொந்தமாகக் கடவதென்று தனது மனோவாக்குக் காய மென்னுந் திரிகரணசுத்தியாய்த் தத்தம்பண் ணினர்.

அதை யேற்றுக்கொண்ட இட்சுவாகு மகாராஜன் கவுசிகரிஷியைப் பணிந்து ஒரு வார்த்தை புகலத்தொடங்கினன். ஐயா! உம் முடைய தபோபலனை நான் வாங்கிக்கொண் டேன். இனிமேல் நீர் நல்லகதியடையத் தக்கதாக என்னுடைய புண்ணியபலன் முழு தும் உமக்குத்தருகிறேன். நீர்வாங்கிக்கொள் ளுமென்று சொன்னன். அந்தவேளையில் வாதிட்டு வந்திருந்த இருதிறவராகிய விகிர் தாகார புருஷர்கள் இராஜனுக் கெதிர்நின் று, ஏனையா இப்படியாகச் சொல்லுகின்றீர்? நாங்கள்சொல்லிக்கொண்டவிபகாரத்தையுங் கேட்டு கேட்டு அதற்கு நன்மை தீமை விள ம்பாமல், நீருந் தப்பிய ஞாயஞ் செப்பு கின்றீர். எங்களுடைய பூர்வோத்திரத்தைக் கேளும். நாங்களிருவரும் காமக்குரோதபுரு ஷாள், உங்களுக்குள் நேரிட்டவழக்கையொ ழிக்கும்படி இந்தரூபமெடுத்து வந்தோம், இதோ இருக்கின்ற தருமச்சொரூபி எமதரு மராஜன், இவர் மிர்தியு தேவதை, இவர் கட்கு நடுவே யிருப்பவர் பிரமநிலை பிரியாத கவுசிகமகாரிஷி. நீரோவெனிற் சூரியகுல திலகனகிய வீரியன். இட்சவாகு மகாராஜன், சகலவிபகார தருமமுந் தெரிந்தவன், இந் தத்தபசியுடன் வீணே தர்க்கமாடுகிறீர். இது

தர்மமோ? ஒருவருக்கொன்று கொடுப்பதும் ஒருத்தர்கையி லொன்று வாங்குவதும் ஒருவருடைய செயலல்ல, வினையின்படி நடக்கத்தக்கது என்று சொல்லிவரும்போது தருமதேவதை பிரசன்னமாகி, ஓ இட்சுவாகு மஹாராஜனே! உத்தமனுகிய உமக்கு இந்த மகாரிஷிகொடுத்த செபத்தின் பலனுனது இவரை நல்லகதியிற் கொண்டுபோய் வைக்கும். உம்முடைய புண்ணியபலனைக் கொடுத்து இவருக்குக்கதி புதிதாய்த் தேடவேண்டியதில்லை. உம்முடைய உதவி யிவருக்கு வேண்டாம். மாசற்ற இந்த வுத்தமருக் கீய நினைத்த உமது புண்ணியப்பலனும் மத்திமமாய்ப் போகாதென்றது. அந்தச் சமயத்திற் பிர்மதேவரானவர் முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் ரிஷீகளும், சித்தர், கின்னரர், கிம்புருடர், காந்தருவர், வித்தியாதரர் மூதலாகிய தேவகணங்களும், பூதகணங்களும், புடைசூழ்ந்து வரும்படியாய் அன்னவாகனரூடராகி, சரஸ்வதி தேவியுடன் வெளிப்பட்டு, புஷ்பவருஷம் பொழிய தேவதுந்துமியுடன் நூற்றெட்டு தேவ வாத்தியமும் கோஷீக்க, அஷ்டதிக்கும் அதிரத்தக்கதாக வெகு சம்பிரமத்துடனே நெருங்கினுர்.

அப்போது அவாளிருவரு மெழுந்து சதுமுகத்தவனுடைய சரணத்தில் விழுந்து துதித்து வாழ்த்தினர். அச்சமயத்தில் நான்கு முகத்தையுடைய நாதன் அவர்களை நோக்கி, ஓ கவுசிகரே! உம்முடைய செபத்தைப்போலும், விரத உறுதிபோலும் உலகத்தில் ஒருவரு மிழைத்ததில்லை. ஓ அரசனே! உன்னைப்போலும் ஒரு புண்ணிய சீலன் உம்பருலகிலுங் கிடையான். அதனுல், உம்மிருவருடைய நற்செயலைப்பற்றி நான் சந்தோஷித்து வந்தேன். என்னுடைய முகமண்டலபதவி உங்கட்குக் கொடுத்தேன், விரைவில் இருவரும் உடலையொழித்து வந்து சேர்மின்களென்று கருணைகூர்ந்து பிரியமா யுரைத்தார். அவ்வார்த்தையைக் கேட்ட நிறைந்த அறிவாற் சிறந்த கவுசிகரும் இட்சுவாகு மஹாராஜனுந் தட்சணமே உலகந்தோன்றிய நாள்முதல் நடந்து வந்த உண்மைநெறிப்பிரகாரந் தேகத்தை நீக்கி சகலதேவர்களுஞ் ஜெயஜெயவென்று துதிக்கும்படியாய்ச் சத்தியலோக முத்தியையடைந்து, என்றென்றைக்குமாருத பேரானந்த மோட்சம் பெற்றிருந்தார்கள். பிர்மதேவனுந் தேவர்கள் முதலியபேருந் தங்கள் ஸ்தாஸ்தானஞ் சேர்ந்தார்கள். ஆத்மகோடிகளைத் தண்டிக்கின்ற அந்தகனும், தருமதேவதையும் காமக்குரோதருந் தங்களிடத்திற்குப்போயினுர்கள் ஆனபடியால், எல்லாத்தபசைப்பார்க்கிலுஞ் செபம்பண்ணுகிறது மேலான ஆத்மலாபமென் றறிந்துகொள்ளுக. மலபரிபாகமரிந்து, அலமருமாயையகற்றி, விலகரும்பதவி பெறுவதைவிட பிராணனுக்கு வேறே உறுதிகிடையாது. அந்தச்செபமானது எவனெப்படி நினைக்கின்றுனோ, அப்படிக்கெல்லாங் கைகூடிவரும், மந்திரத்தின் செபமே உயிருக்குலாபம். என்று வீஷ்மருரைக்கத் தருமராஜன் அகமுமுகமும் ஆநந்தப்பட்டு; பாட்டனுடைய பாதத்தில்விழுந்து, ஐயா! உம்முடைய கிருபையினுலே இப்போர்ப்பட்ட மகாரகசியங்களெல்லா மறிந்தேன். இன்னுமொரு சந்தேகமிருக்கின்றது. அதென்னவென்றுல், செல்வம் நிலையல்லவென்று பெரியோர்கள் பேசியிருக்கின்றுர்கள். அனுபவத்திலு மப்படியேயிருக்கின்றது. அது என்னத்தினுல் நிலைபெறமாட்டாது. என்றைக்கு நிலைத்திருக்கும்படியான உபாயமெப்படி? இதையெனக்குச் சொல்லவேண்டுமென்று தருமராஜன் கேட்கவும், கங்காபுத்திரன் உத்தரமுறைக்கத் தொடங்கினுர்.

---

### செல்வமும் வறுமையும்பற்றிக் கூறிய மகாபலி, இந்திரன், இலக்குமி, இவர்கள் கதை.

ஓ முரசகேதனு! முற்காலத்தில் தேவேந்திரனும் பலிச்சக்கிரவர்த்தியும் பேசிய சில விடயங்களை உனக்கு விரித்துரைக்கிறேன். அதாவது, சதமகனுன யிந்திரன் சத்தியலோகத்திற்குப்போய் நான்முகனைக் கண்டு நமஸ்காரம்பண்ணிக்கொண்டு ஐயா மூலக்கமலாசனனே விரோசனனென்கிற ராட்சசராஜன் பிள்ளையாகிய மாபலி மூன்று லோகாதிபத்தியமும்பெற்றுசக்கிரவர்த்தியென்று பெயரோங்கி ஒருகுடைநிழலில் உலகையடக்கி, திருகில்லாத பெருவாழ்வு வாழ்ந்து வந்தவனைக் காணுமே அவனிப்போது எங்கிருக்கின்றுன் அந்தயிடத்தையெனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டான். அ

தற்கு பிரமனகைத்து இந்திரனைப் பார்த்து உன்மனதி னினைத்துக் கேட்டது எனக்குத் தெரியலாயிற்று முன்னே மூவர் முதலாகிய தேவர்களையுந் தலைகாட்டவொட்டாமலடித் துத் தனக்கு மேலான சம்பத்துடையவர்க ளில்லையேன்று திருவிற்சிறந்து பெருவாழ் வு வந்தவன் அந்த வாழ்வெல்லாம் நம்மு டைய கையிற் கொடுத்துவிட்டு தாழ்வை யடைந்துபோனானென்கிற தயாளத்தினாலல் லவோ என்னைக்கேட்கவந்தாய்? ஓ சகிமணா ளனே! அது எனக்குத் தெரியவந்தது. ஆ கிலும் இப்போதவனிருக்கிற யிடமும் ஐஸ் வரியத்திடமும் உனக்குத் தெரியச் சொல்லு கிறேன் கேள். சுரபி பயங்கரமென்கிற ரூப மெடுத்துப் பூமியிற் சஞ்சரிக்கின்றான் அவ னைக்கண்டு நீ யென்னசெய்யப் போகின்றாய் அதையெனக்கு சொல்லென்று பிரமன் கே ட்க இந்திரன் சுவாமி! அடியேன் அவனை ப்பார்த்து சிலபேச்சுகள்பேசவேண்டியிருக் கின்றன தாங்கள் முழு மனதுடன் செலவு கொடுங்களென்று பிரதட்சண நமஸ்காரம் பண்ணி விடைபெற்றுக் கொண்டு சத்திய லோகத்தைவிட்டுப் புறப்பட்டுபூலோகத்தில் வந்து காடுகள் செடிகள் மலைகள் வனாந்தி ரங்கள் நாடுகள் நகரங்கள் மேடுகள் பள்ளங் கள் ஆறுகள் குளங்கள் குன்றுகள் குகைகள் யிவைகளெங்குந் திரிந்து தேடி பூமியெல் லாம் வலமாகவந்து, ஓரிடத்தில் மாறுருவத் துடன் வாசம்பண்ணுகின்ற மாபலியைக் கண்டு ஓ சக்கிரவர்த்தி! ஜெயிக்கப்படாத யுத்தங்களெல்லாம் ஜெயித்து விஜயங்கொ ண்டு முடிக்கக்கூடாத யாக முதலிய வேலை களைமுடித்து பிரபலமேன்மையடைந்து வா ழ்ந்த வாழ்வெல்லா மறைந்துபோக நீரிந்த எலிரூடமெடுத்து உமியும் நெல்லுந்தின்று கொண்டு உயிர் பிழைக்கும்படியாய் நேரிட்ட தல்லவா? ஐயோ உம்முடைய பரிவட்ட ணையும் பெருஞ் செல்வமும் பிரதிஷ்டையும் வீரூப்பும் எங்களைப் போன்றவர்களை ஒரு எண்ணத்தில் மதிக்காத இறுமாப்பும் யாவ ரையுஞ் சட்டைபண்ணாதமமதையும், ஆகிய விவைகளெல்லாம் எங்கே மறைந்தனவோ யிம்மட்டோடுபோக தனுகரண புவனபோக மெல்லாம் சதமல்லவென சாதுக்கள் சாற்றி யதுண்மைதான் அந்தோ! தெய்வமே வாழ் வையுந் தாழ்வையு மிவ்வாறும் வழங்குவா யோ? என்று நசைமொழியாடி சற்று பொ

றுத்து கிட்டநெருங்கி ஓ சக்கிரவர்த்தி! நீர் பயப்படாதீர், நான் தேவேந்திரன் உம்மை ப்பார்க்க வேண்டிய பேராசை கொண்டு வந் தேனென்று பகர்ந்தான்.

அந்த மகாநாதனை மகாபலிசக்கிரவர்த் தி பார்த்து சொல்லுகிறான். ஓ வச்சிராயு தனே! எனக்கிந்தவேளை இளைத்த சமயமெ ன்றறிந்து பயம்விட்டு, என்னைக்கிட்டி ஈன மான பேச்சையிசைந்து, இகட்சியாய் ஏள னம்பண்ணுகிறையோ? நீ யிப்படிபேசுவதி னாற் பெருங் கூட்டமாகிய ராக்ஷசர்களுக்குப் பலங்குறைந்து போயதென்று நினைத்தா யோ ராக்ஷசர்களுக்கு இறக்கினும்பலஞ்சிற க்குமேயொழிய குறைவுவராது. முற்காலத் தில் நான் பிரபலித்திருக்கும்போது எனக் கெதிரிலேவந்து நிற்கப்பயப்பட்டு, நீ மூலை க்குமூலை யொதுங்கிக் கிடந்தவன். வனவே டர் மான் கும்பைக் கலைத்து விடுவதுபோல வாரத்திற்கொருதரம் யான் புறப்பட்டு, உன் னையும் தேவர்களையும் பொன்னுலகத்திற் றங்கவொட்டால் ஓட்டிக்கொண்டு திரிவே ன். அப்போது நீ யெங்கேயோ? நானெங் கேயோ அப்பேர்ப்பட்ட அழகன் இப்போ து என்கிட்டவந்து மனோதிடங் கொண்டு பயப்படாதே, பயப்படாதே என்று சொல்லி எனக்கு தயிரியங்காட்டிகால பேதசமயங்கண் டு கசட்டுமொழி வகுக்கின்றாயல்லவா இஃது னக்குநல்லகாலமென்றெண்ணினையோஇது னக்கு இப்படி நீ யிசைக்கத்தகாது. நானிப் போது அனுபவிப்ப தெல்லாம் உன்னாலு ம் என்னாலும் வந்த செயலல்ல சர்வேஸ்வர னாகிய பசுபதியின் செயலென்றறிந்து அகந் தையை யடக்குக. உலகில் ஒருவருக்கு ஆங் காலத்தில் எல்லாந் தற்செயலா யமைந்து கைகூடும். திக்கெட்டும் ஜெயமுண்டாகும், இக்கட்டிராது பயமில்லை பிடித்த காரியங் கடித்தவாய் துடைத்தாற்போற் கைகூடிவரு ம். போங்காலம்வந்தால், எத்தனை பொருட் பலமுற்றிருந்தாலும், பெண்டீர், பிள்ளை, ம ண்மனை, பந்துமித்திராள், மந்திரிகள், மாத வர், குருக்கள், குடி, படை, அரண்மனை, நா டு, நகரம், காடு, கரம்பு, இவைகள் நிரம்பியி ருந்தாலும், சமயத்திற்குதவாமல் எல்லாந் தட்டிக்கெட்டுப்போய்விடும் ஆகையால் செவ் வையாய்த் தேறித்தெளிந்த அறிவுடையா ளர்கள், ஜெயாப ஜெயமும் நன்மை தீமையு ம், சுகதுக்கமும், இன்பதுன்பமும், வாழ்வுந்

தாழ்வும், வன்மையும்புன்மையும், பெருமையும் சிறுமையும், சமமென்று பாராட்டி,வாக்கினுற்பேசியவண்ண மனமுங்குவிந்து, அகம்புற மொத்து அரன்செயலென்று ஆநந்தத்தைக் கைவிடாமல் அனுபவிப்பார்கள். நன்மைதீமைகளிலும் நொய்யவுரைப்பார்கள். நொந்தக்கண்ணுற்பாரார்கள். நாவையடக்கி ஜீவகாருணியராய் எல்லாஞ் சிவன்செயலென்றிருப்பார்கள். இதுதான் பெரியோர்கணிலே. நீ இதனைவிட்டுச் சிறியோர்கள் நிலையைப்பாராட்டி, நானிப்படியிருக்கிறேனென்று தெரிந்து அஞ்சாம லடுத்துவந்து இரக்கப்படுவதுபோல் ஏசிக்காட்டினையே? ஓ இந்திரனே! இதுதான் எரியுங்கொள்ளியை உபகாரம்பேசல் ஏறத்தள்ளி இன்னுந் தீமூட்டுவதுபோலாகும். என்று மகாபலி நவின்று மன துசலித்தான்.

இந்தப்பிரகாரந் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு தீவினையை நினைத்துத் தியங்கிய மகாபலியின் தேகத்திலிருந்து, மகா சௌந்தரியமாய், ஒருவரானும் கணிக்கமுடியாத கோலமாய், ககனவாசிகளாலுங் கண்விழித்துக் காணக்கூடாதகாட்சியாய், ஆபரண வஸ்திரவலங்காரந் தரித்துக்கொண்டு, சகல பாக்கிய சுந்தரமுள்ள இரட்சகியாகிய மகாலட்சுமிவெளிப்பட்டு, ஆயிரங்கண்ணனுகிய இந்திரனுக்கு எதிரில் நின்றுள் அந்த மகாதேவியை அவ்விந்திரன் ஆயிரங்கண்களினுலுங்கண்டு ஆருமைகொண்டு, அம்மணி? நீர் இந்த மகாபலிச் சக்கிரவர்த்தியினுடைய உடலைவிட்டுப் புறப்பட்டு நாயேனுக்கெதிரிலிருக்கின்றீர். என்தாயே? மநோன்மணி! நீர் யாரம்மா? நானும்மைத் தெரிந்துகொள்ளுஞ் சக்தியற்றவனு யிருக்கிறேன். எளியேன்மீது கிருபைபுரிந்து தேவரீருடைய பிரதாபத்தைத்தெரிவிக்கவேண்டுமென்று சிந்தித்தான். அந்தவேளையில் முடிகொடி நிறைந்த செந்தாமரைக் கமலத்திற்பிறந்த கோக நகையும், சமஸ்தகோடி ஜீவாத்மாக்களையும் இரட்சிக்கா நின்ற அரிப்பிரியையு மாகிய இலக்குமி இந்திரனைப் பார்த்து ஓ ஆகண்டலனே? என்னை யறியாயா? நான் மகாலட்சுமி, இதுவரைக்கும் இந்த மகாபலிச் சக்கிரவர்த்தியினிடத்திலிருந்து சகல சம்பிரமமும் பெறச்செய்தேன், இவன் முன்போலில்லை. இப்போது இழுக்கனுகி, அதற்குத் தகுந்த நினைப்பும், நடை நொடி பாவனையும், ஆசாரமுதலிய யாவுங் குன்றினுன். இனிமேல் இவனண்டையிலிருக்க மனமொப்பாமல் உன்னை நாடிவந்தேன். நீ யென்னை மருவிவாழக்கடவது. என்று மாயோன் மனைவி சொல்லக்கேட்ட இந்திரன் அச்சந்திரபிம்ப இந்திரியைப் பிரதட்சணம் பண்ணி, தீர்க்க தெண்டன் செய்தெழுந்திருந்து, இரண்டு கரத்தையுஞ் சிரத்தில்வைத்துத் தோத்திரஞ்சொல்லித் துதிக்கின்றுன். ஓ நாதநாதாந்தரூபி! ஓ பாலபாலாந்த சோபி! ஓ மோகமோகாந்த பாலி! ஓ சீல சீலாந்த சீலி! ஓ மிர்கமதப யோதரி! ஓ கோடி சூரியப்பிரகாசி! ஓ அமிர்தாநந்த செல்வி! ஓ ஆதிசத்திவல்லி! ஓ ஜகன்மோகினி! ஓ சர்வபூத சொரூபி! ஓ சத்காரியகாரணி! ஓ ஜகத்திரட்சகி! ஓ தேவகி! ஓ திருவே! ஓ தருவே! ஓஅருவே! ஓ உருவே! ஓ மருவே! ஓ ஐஸ்வரியக்குருவே! ஓ அம்மணி வருக வருக ஓ மநோன்மணி வருகவருக ஓ நவமணி வருக வருக ஓ உருக்குமணி வருகவருக ஓ சிந்தாமணி வருகவருகஎன்று மதித்துத் துதித்து வணங்கினுன். இப்படி வணங்கிய அந்தப் பொன்னுலகத்திறையைப் பொருட்செல்வி கண்டு பூரித்து சந்தோஷித்து, அவன் முகமண்டலத்திற் ருவி, ஆயிரங் கண்ணுடைய தேகத்தில் அமிக்கமாய் விட்டாள். உடனே தேவேந்திரன் திருமால்போல் விளங்கி, மகாதேயசுடைத்தாய் ஜெயமெல்லாம் புகழச் செகச்சோதி மயமாயினுன். இவைகளை யெல்லா மருகிலிருந்து பார்த்த மகாபலியானவன் எட்டப்போயிருந்து, (ஊக்கமது கைவிடேல்) என்னும் வாக்கியப்பிரகாரந் தயிரியத்தை விடாமல், ஆகட்டும், இவளெங்கே போகிருள். நமக்கு நல்லகாலம்வந்தாற் கூடவே திரும்பி நம்மிடம் வருவாள். இந்திரனைச்சுமையெடுக்க வைப்பாள். இவ்வாறு தானே மாறிமாறிக் கொண்டு இன்னுன் இனியானென்றெண்ணுமல், இந்தப்பூமி மலபந்தப் பூமியென்றுணராமல் ஆங்குந்திரிந் துழலுகிருள். இருக்கட்டும் நமக்கென்ன முழுகிப்போயது, என்று மனஞ்சுளிக்காமல் நன்மையோ டிருந்தான். தேவேந்திரன் சிந்தைகளித்து, மகாபலியினிடத்தில் விடை வாங்கிக்கொண்டு வானுலகடைந்தான்.

இப்பால் மகாபலியானவன் சிலநாட்டடரித்து இருந்த இடத்தைவிட்டு மலைப் பாம்புகள் மலிந்த இமயகிரி சென்று, அம்மலை

யின் குகையிற் பிரவேசித்துத் தபசுபண்ணி னன். இப்படிக்கிருக்க மேலுலகத்தில் விஜயம் பெற்றுப் பிரதாபனுயிருக்கிற வெள்ளை வாரணனனவன் மறுபடியு மகாபலியைப் பார்க்கவேண்டுமென்று வந்து முன்னிருந்த யிடங்களெல்லாம் ஆராய்ந்து,எங்குங்காணுமையால் துயர்கூர்ந்து, பனிமலையைச்சார்ந்து மகாபலியைக்கண்டு, ஒன்று மறியாதவனைப்போல் உருத்தெரியாமனின்று, அவ்வரக்கன்மனது அரக்கென உருகும்படிக்குச் சுடச்சுடச் சொல்லுகின்றான். ஏனையா இராக்கதராஜனே! நவரத்தினகசிதமா யிருக்கப்பட்ட தேர்களையும் பொன் பூணணிந்த கொம்புகளுடைய யானைகளையும், வாயுவேகத்திலு மிஞ்சிய வாசிகளையும், சமுத்திரம்போனிறைந்த சேனைகளையும், சூரியகிரணம்போற் சொலிக்கும் ரத்தினுபர்ண கேயூர மணிகுண்டல கிரீடங்களையும் வகித்து, சமத்தகோடி தேவர்களுஞ் சய சயவென்று கைகட்டிச் சேவிக்கத்தக்கதாய் பரிவட்டணைகளுடன்ஆடம்பரமாய் மூன்றுலோக முதல்வனென்று பெருமிதம்பெற்று, நிறைந்த கொலுமண்டபத்திற் சிம்மாசனமேறிச் சிங்கம்போல் வீறிச் சக்கிரவர்த்தியாயிருந்த நீர்! விருதாவாய் அப்பிரயோசனப்பட்டு யிந்தப் பனிமலைச்சாரலிற் குகைக்குட்புகுந்து கிடக்கத் தக்கதாகப் பிரமனெழுதினனே? ஆ பாவமே ஐயோ வினையே வினையே என்று பரிதாபப்பட்டான். இவன்கூறிய மொழியெல்லா மகாபலிச் சக்கிரவர்த்தி கேட்டுத் தேவேந்திரனென்று தெரிந்து, ஓ இந்திரனே! நெடுங்காலமாய்ப் பெருவாழ்வு வாழ்ந்த பெரியோர்களானுலும், அசாத்ய சயத்தையடைந்தவீரரானுலும், அழகுமாண்மையும் படைத்த அரசரானுலும், அதிக சாஸ்திரக்கல்விகள்படைத்த அமலரானுலும், தெய்வபக்தி ஆசாரியபக்தி சிறம்பாத செல்வரானுலும், இவ்வுலகத்தில் ஆத்மகோடிகளைப் படைக்கின்ற அயனானுலும், அவனை யுந்திக்கமலத்தினின்றும் பெற்ற அரியானுலும், கிஞ்சித்துக் காலம் போகமும், சிறிதுநாள் யோகமும், கொஞ்சதின மோகமும், சின்னாள் சம்பத்தும், பன்னாள் விபத்துமடைந்து, பின்னுஞ் சிலபொழுதில் எல்லாவற்றையுமிழந்து, அப்பால் நிருவகிக்கமாட்டாமல் துக்கப்பட்டு, தன்னைப்பணிவாரைத் தான் போய்ப்பணிந்து தரித்திரப்படுவது கர்மபூமியின் சுபாவம். இதுதானிகத்தின் லாபம். நல்வினை தீவினை யிரண்டினாலும், வரும்படியாகிய போகத்தை அனுபவிப்பதற்கு எடுத்தது யிந்தத்தேகம். இதை நீயறியமாட்டாயா ஓ பேச்சிலும் ஏச்சிலுமிகுத்தவனே! நீ பூர்வத்திற் சகல சம்பத்தையும் போக்கடித்துக்கொண்டு சத்துருவினல் மெத்த வருத்தப்படவில்லையோ? எழுபதினாயிரந் தேவ வருஷஞ் சீர்காழியில் மூங்கிலென்னவடிவெடுத்துப் புதர்மூடிக்கொள்ளும்படி புத்திகெட்டுப் பயந்திருக்கவில்லையோ? இவ்விமயகிரிச் சாரலிலுள்ள சலநிறைந்த தடாகத்தில் ஓர் தாமரைத்தண்டின்கண் அணுருபம்படைத்து அலைச்சலடைந்தா யில்லையோ! இத்தன்மையாய் எத்தனைகேட்டுக்கு ஈடுபட்ட நீ தன்னைமறந்துபேசினய். இது உலகமுறைமையென்றெண்ணமல் என்னைப் பழிப்பதற்கிசைந்தனையோ! எது அனுபவிக்கவேண்டுமோ அதுவந்தேதீரும். உறுதிபெற்ற உத்தமர்கள் தமதுகற்ற கல்வியின்திறத்தால் இதற்குக் கவலைப்படுவார்களோ? கோடையினல் தீய்ந்துகாய்ந்த பயிரானது மறுபடியும் மழையினல் துளிர்த்துத் தளிர்த்துக் காய்க்குமல்லவா சிலநாள் யிருட்டுஞ் சில நாள் நிலவுமல்லவா செல்வம் வந்துவிட்டால் தன்னை மறந்துபோகிறதும் ஒரு அறிவா அப்பேர்ப்பட்டவர்கள் தான் சாற்றில் மகிழ்ந்து தயிரிலழுகுபார்க்கின்ற அறிவில்லாதவர்கள். இதற்கொரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன்கேள்.

ஓ ஆயுமறிவற்று ஆயிரங்கண்படைத்தவனே காற்றினலே நெருப்புப் பிரபலமாகின்றது. அந்தக்காற்றினலேயே அந்நெருப்பு அவிந்துபோகின்றது. நெருப்பினலே நீருண்டாகின்றது. அந்த நீரினலேயே நெருப்பவிந்துபோகின்றது. நீரினலே மண்ணுண்டாகின்றது. மண்ணினலேயே நீர் மறைந்துபோகின்றது சகலமும் நீரினற்பிழைப்பன் ஒருசலவெள்ளத்தாற் சகலமும் நாசமாவன சூரியனல் தாமரைப்போதுவிரிகிறது அந்தசூரியனலே மீட்டுங்கரிந்துவிடுகிறது. இவையோசிக்குமிடத்து உடலிலேயே பகையுண்டென்பது உனக்கு தெரியவில்லையா எல்லாங்காலத்திற்கு தகுந்தபடி நடப்பதற்கு காத்திருக்கும் நல்லதும், பொல்லாதும் நாம்தேடிக்கொண்டதல்ல ஒன்றையுண்டாக்கிக் கொள்வதற்கும் உண்டானதை

விலக்குவதற்கும், ஒருவருக்கும் அதிகாரமி
ல்லே. ஆதலால், நான் அப்படியாக அனுப்
விக்கவேண்டியகாலம்ஆனது இப்படியாகக்
குகைக்குட் புகுந்து இருக்கும்படியானகால
மிது. என்னுடையநல்வினைக்காலத்தில்என்
கண்ணிலகப்படாமல் ஒளித்துக்கொண் டிரு
ந்தனையன்றோ? அந்தக்காலத்தையும், இப்
போது தேவராசனாய், வச்சிராயுதபாணி
யாய், முத்தாரம்பூண்டு எனக்குமுன்னின்று
விஸ்தாரம் பேசுகின்றனை யன்றோ? இந்தக்
காலத்தையும். நீயே யெண்ணிப்பார்த்துக்
கொள்ளலாம். ஓ மேகவாகனா! எதிர்காலத்
தில் ஒருவனுக்கு ஈஸ்வரன் என்னென்ன
அதிசயங்காட்ட யிருக்கின்றானோ? அதைய
றிந்து சொல்லுகிறதற்கு ஆருடையதரம்?
என்று சொல்லிய மகாபலிச் சக்கிரவர்த்தி
யின் மனோதிடத்தையும், தயிரியத்தையும்,
கௌரவத்தையும், இந்திரன்பார்த்து, மறு
மொழிசொல்ல வாயில்லாதவனாய் நாணி,
ஓ சக்கிரவர்த்தியே! நல்லது நான் போகின்
றேன். என்று சொல்லிவிட்டு விண்ணகரத்
திற்குப்போய் போகபாக்கியத்தி லிருந்து,
பின்னும் பன்னாட்போனபிற்பாடு பூலோகத்
திற்குவந்து, அவரவர்கள் நினைத்த கிரியை
களைத் தரப்பட்ட கங்காநதியில் ஸ்நானம்
பண்ணி, அதன்கரையிலிருந்து செபஞ்செய்
கிறான். அச்சமயத்திற் சத்தியலோகவாசி
யான பிர்மாவுக்குச் சமானமாகிய நாரதமகா
முனிவரானவர் அந்தப் பாகீரதியில்ஸ்நான
ம்பண்ணிச் செபஞ் செய்கிற தேவேந்திர
னுக் கருகில்வந்தார். அந்தவேளையில் லட்சு
மியானவள் சூரியப் பிரகாசம்போன்றகாட்சி
யைக்கொண்டு, தனது திவ்யசொரூப சுந்
தரவிம்பந் தோன்ற வந்து அவர்களெதிரி
யில் நின்றனள். தேவேந்திரனு நாரதருஞ்
சீக்கிரமெழுந்து தீர்க்கதண்டமாய் விழுந்து
இருவருங் கைகூப்பிநின்று, ஓ திவ்யக்காட்
சியே! ஓ ஜெகத்திற் சாட்சியே! ஓ சீவகாரு
ணியனே! தேவரீருடைய பெயரென்ன திரு
வாய்மலர்ந்து சொல்லம்மா வென்றனர். அ
தற்கவ்வன்னமாகிய கன்னி சொல்லுகின்று
ள், நான்மகாலட்சுமி. முன்னம் ராக்ஷசராச
னாகிய மகாபலி யிடத்தினின்றும் வெளிப்
பட்டு உன்னிடத்திலிருக்கச் சம்மதித்து அ
யிக்கிய மானவளன்றோ? என்று தேவேந்தி
ரனைப் பார்த்துச் சொல்லினள். அவள் வார்
த்தையைக் கேட்ட நாரதமுனிவரும் நாக
லோகநாதனுப் பிரதட்சணம்பண்ணி நம
ஸ்கரித்து, ஓ மகாதேவி! ஓ அகிலாண்ட
நாயகி! ஓ ஓங்காரி! ஓ பரப்பிரம சொரூபி!
ஓ நிர்வகி! ஓ நிராகரி! ஓ நிற்குணி! ஓ நிர்ம
லாட்சி! ஓ சகுணி! ஓ சற்குணி! ஓ சௌந்
தரி ஓ சீவரட்சகி! ஓ சீவாட்சி! ஓ பொற்கம
லவாசி ஓ பிரதாபவிசுவாசி ஓ விஷ்ணுநே
சி ஓ நாராயணி ஓ கிர்பாசமுத்திரி ஓ காம
ரூச்சி ஓ கமலன்றல்லி ஓ தீனதயாபரி ஓ
பத்தவர்ச்சலி ஓ வேதவேதாந்த முதல்வி ஓ
மெய்ப் பொருட்டலைவி என்று அநேகவித
மாகத் தோத்திரஞ் சொல்லி அஞ்சலித்து,
அம்மணி நீர் இராக்கதனை விட்டுவிட்டு
நீங்கிய தற்குக்காரணமேன்? சொல்லுமென்
றுகேட்டனர். அப்போ தவ்விருவருக்கும்
இலக்குமிதேவி சொல்லுகின்றாள்.

ஓ நாரதரே ஓ நான் மருப்பியானையூர்
தியே என்சங்கதி நீங்களறியமாட்டீர்களோ?
எவரொருவர் தீவினை செய்கின்றார்களோ?
அவர்களிடத்தில் நான் அரைக்கணப்போ
தும் பொருந்தேன். தீவினையாவ தென்ன
வெனில், கொடும்பாவம். அதாவது, சூரி
யோதயத்திலும் அஸ்தமிக்கும்போதுந் தூ
ங்குவது, வேதத்தை, தெய்வத்தை, விதியை
விலக்கை, ஆசாரத்தை, ஆசாரியரை, பூசா
விதியை, பெரியோர்தவத்தை, புண்ணியத்
தை, விரதத்தை, நோன்பை, தாயை, தந்
தையை, தமையனை, தம்பியை, தனயரை, தரு
மபத்தினியை, எளியாரை; இன்னுமுள்ள
நன்மைகளையு நல்லோரையும் இகழ்ந்துபே
சுவது சுயஸ்திரீயைத் துவக்கப்படவைத்து
ப்பரஸ்திரீயைப்பக்கத்தில் வைப்பது. ஞாய
ந்தப்பி அனியாய நடப்பது. வழக்கழிவுரை
ப்பது. லஞ்சம் பரிதானத்திற் கிச்சிப்பது.
பொய்ச்சாட்சி பேசுவது. ஒருவர் சொத்தை
அபகரிப்பது. மனதிலொன்றும் வாக்கி
லொன்றும் வசனிப்பது. வஞ்சிப்பது. நன்
றிகுன்றுவது. சீவயிமிசைபண்ணுவது. தீர
விசாரியாமற் றண்டிப்பது. நிந்திப்பது. குடு
ம்பதோஷங் கூறுவது. அபாண்டம்போடு
வது, பயனில்லாதவார்த்தைகள் பகருவது.
கோபத்தினாற் சீறுவது. சோம்பலாவது. கு
ளியாது தெளியாது அசுசியா யிருப்பது.
சூதாடுவது. கள்ளுண்பது காய்ப்புச்சேர்ப்ப
து. தூஷித்து நிந்திப்பதே தொழிலாயி
ருப்பது. தெய்வமிகழ்வது. இன்னுமுள்ள
நன்மைகளுக்கிடறாகிய துன்மைசெய்கின்ற

நலமிலாரிடத்தில் நானிருக்க மாட்டேன். ஒரு குணமேனும் உத்தமமாயிருந்தால், அந்தயிடத்திற் சற்றுநேரமிருக்க மனஞ்சம்மதிக்கும். அவர்களாரெனில், விருந்தினரைப் பரிந்து பூசைபுரிந்து அமுதூட்ட உபசரிப்போரிடத்தும், துறந்தார்,இறந்தார்,இவர்கள் கடைமையைச்சேராமற் செய்பவரிடத்தும், உண்மையான ஆசார பரராளிடத்தும், கடிந்துரை யாடாத கருணையோ ரிடத்தும், குளிர்ந்த முகமுடையோ ரிடத்தும், எல்லாருக்கு நல்லவரென் றிருப்போரிடத்தும், நித்தியமான சத்தியகீர்த்தியை நிலைநாட்டுவோரிடத்தும், தெய்வபத்தி ஆசாரியபத்தி செலுத்துவோரிடத்தும், தந்தைதாயை நிந்தியாதவரிடத்தும், கோபி, சந்தனம், பூதி நாமம், இவைகளைப் பற்றியபேரிடத்தும், தருமமுள்ளபேரிடத்தும், இலட்சணமமைந்த யானை, குதிரை, பசு, ரிஷபம், பூமி இப்பேர்ப்பட்ட இடத்தும். அன்னீதியில்லாத ஆலயத்தினிடத்தும், என்னுயகனது இருதயஸ்தானத்தைப் பார்க்கிலும் இன்பமாயிருப்பேன். இன்னுஞ் சத்திரம், சாவடி, தடம்-மடம்.சாலை - சோலை - தண்ணீர்ப்பந்தல்-துரவு-ஏரி - குளம் - ஆறு - அகழ் - கயம்-தாமரைத்தடாகம், இவ்விடத்திலும், இவைகளை யேர்ப்படுத்தப்பட்ட பேர்களிடத்திலும், எல்லா ஆச்சாரத்திற்கு மேலான குலாசார முறைகளைத் தப்பாமல் நடத்துகிறவர்களிடத்திலு நானீங்காதிருப்பேன். என்னைவிட்டு அவர்களும் பிரியாமற் பிரியமாயிருப்பார்கள் என்று உருக்குமணிதேவியா ருரைத்தனள் அம்மொழியை நாரதருந் தேவேந்திரனுங் கேட்டு அற்புதப்பட்டு, ஓ அம்மா! நல்லது மகா பாவியாயிருப்பவன் மகாராஜனுயிருக்கின்றான் அவனடைந்ததெல்லாம் பாவமாயும் அக்கிரமமாயுமிருக்க, ஏதாகிலும் ஒரு நற்காரியஞ் செய்திருந்தால், மற்றப் பொல்லாங்கை யெல்லாமறந்து அவனிடத்திற்குப் போவீரோ? போகாம லிருப்பீரோ? என்றுவினவிப் போற்றினார்கள். அதற்குச் சுகந்தபரிமள மலர்மாலைசூடிய மகாலட்சுமி குறுநகை விளைத்துச் சொல்லுகின்றாள்.

ஓ அறிவுடையவர்களே! குற்றமூன்று பங்குங் குணமொருபாகமேனு மிருந்தால், அவர்க ளிடத்திலும் போயிருப்பேன். எப்படிப்போ யிருப்பேனென்றால், தீயின்பேரிலுமுள்ளின்பேரிலுந் தேகநடுங்கிச் செல்பவர் போற் சிடசிடவென்று சிறிது நாள் நின்று ஏதாகிலும் ஒரு மூகாந்திரத்தை நாட்டி, அவர்கட் கிசையக்காட்டி, மறைந்து போவேன். நற்செய்கையாகிய நல்வினை மூன்றுபங்குந் துற்செய்கையாகிய தீவினை ஒரு பங்கு மிருந்தால், அவர்களிடத்தில் நான் போயணுகி மேலுமேலு நல்வினைத் தேடச்செய்து, தீவினையை மறைத்து, அவர்களை நாளுக்குநாள் விர்த்தியாக்கி, நன்னடக்கை, நற்றருமம், நற்செய்கை, நற்றவம், நற்புத்திரன், நற்பெண்டீர், இவையெல்லாவற்றையுஞ் சேர்த்து, நானும் விளையாடிக் கொண்டிருப்பேன். அவர்களே கன்மானுபவத்தால் அகத்தை அக்கிரமஞ் செய்யப்பிரவேசிப்பாராகில், மகிழ்ச்சியின்படியே இகழ்ச்சி விளைத்து, நான் நீங்கிப்போவேன். அந்த அகத்தையும் அக்கிரமங்களு மறைந்து நன்மார்க்கவழி வந்தால், நான் துணையாயிருந்து கைதூக்கி விடுவேன் ஒருவேளை தெரிந்துந் தெரியாமற் குற்றங்கள் செய்தால், நானிருக்கிறவரைக்கும் அக்குற்றங்களை விசாரணைக்குக் கொண்டுவராமல் வெகுபேர் சந்தோஷிக்கும்படி விடுத்து, நானும் பொறுத்துக் கொண்டே யிருப்பேன். புண்ணியவான்களிடத்திலிருப்பதி லெனக்குப் பூச்சியமுண்டு அவாள் செய்கிற சிறு குற்றத்தை மன்னிப்பது என் கடமை. அதிகப்பட்டால் எல்லாவற்றையும் ஒரே தரமாகச் சாய்ந்து விட்டு ஓடிப்போவேன் என்றியம்பினள். அந்தவார்த்தையை இந்திரனு நாரதருங்கேட்டுச் சந்தோஷமுற்று, நல்லது தாயே! இப்போது நீர்வந்ததுளென்னத்திற்கு? எவ்விடத்திற்குப் போகின்றீர்? எந்த எளியோனை ஏந்தலாகச் செய்யப் புறப்பட்டீர்? ஓ உத்தமி எங்கட்குண்மையாகச் சொல்லுமென்று பணிந்தார்கள். அதற்கிலக்குமி தேவேந்திரனைப் பார்த்து, ஓ சசிகேள்வனே! உன்னிடத்திலிருக்கும்படியாக முன்னமே அயிக்கமாயினேனிப்போதிப் பரகிரீதிக்கண் செய்த உன் செயத்திற்கு மகிழ்ந்து தெரிசனமாயினேன் என்றுதனது சுயம்பிரகாசத்தைக் காட்டி, உடனே மறைந்து, ஒருபரம அணுவடிவ மெடுத்து அவ்விந்திரனுடலிற்றானே புகுந்து மகிழ்ந்திருந்தனள். லக்ஷுமிதேவியினுடைய பிரதாபமிப்பேர்ப்பட்டது. அப்பா தருமனே! நீ முன்னே கேட்டகேள்விக்கிதுவே சாட்சியென்பதாய் உன்திருதயத்தி லிருத்துகவெ

ன்று சகல ரிஷீஸ்வரர் முனீஸ்வரர் முதலிய யாவரும் கொண்டாடுகின்ற வீஷ்மாச்சாரியர் குறிக்கவும், அந்த சந்தேகத்தை நிவர்த்திசெய்துகொண்ட தருமநந்தனன் அதிசயப்பட்டு, மறுபடியும் பாட்டனை வணங்கி சுவாமி காலமென்று சொல்லுகின்றீர்களே அந்த காலமாவதென்ன அந்த காலத்தின் நிதானத்தை எனக்குத் தெரியக் கிருபை புரிந்தருளும் என்று சிரத்தையாய்க்கேட்க, அவ்விஜய சம்பந்தனுகிய தருமராஜனுக்கு வீஷ்மர் விளம்பத் தொடங்கினர்.

---

காலப்பிரமாணத்தைப்பற்றி கூறுதல்.

அப்பா பாண்டு புத்திரனே! நிமிஷம் பதினெட்டு கூடியது காஷ்டம். காஷ்டமுப்பது கூடியது, கலே. கலே முந்நூற்றைம்பது கூடியது, சிறு முகூர்த்தம். சிறு முகூர்த்த மிரண்டு கூடியது, பெருமுகூர்த்தம். பெருமுகூர்த்தம் பதினறு கூடியது, ராப்பகல் சேர்ந்த ஒருநாள். அந்த நாள் ஏழுதழுவியது, வாரம். அவ்வாரமிரண்டு கலந்தபின், பட்சம். அப்பட்சத்துவயம், மாதம். மாதம் ஒன்றுக்குநாள், முப்பது. அம்மாத மிரண்டு சேரில், இருது. இருது ஆறுகூடினல், ஒரு வருஷம். அந்த வருஷத்திற்குள்ளே தக்ஷணையனம், உத்தராயணம், இரண்டுண்டு. இது பூலோக வருஷம். இப்பூலோக வருடம் ஒன்ருகில், தேவர்களுக்கு ஒருநாள். இந்நாளில் உத்தராயனம், பகல். தக்ஷணையனம், இரவு இந்தநாள்முந்நூற்றறுபது கூடியது தேவவருடம். அவ்வருடம்பந்நீராயிரத்தை நான்கினுற் பெருக்கிகண்டதொகை, கிரேதாயுகம். மேற்கூறிய பன்னீராயிரத்தை மூன்றினுற் பெருக்கி ஏற்பட்ட தொகை, திரேதாயுகம். அப்பன்னீராயிரத்தை யிரண்டிற்பெருக்கி ஏற்பட்ட தொகை, துவாபரயுகம். அதை ஒன்றிற் பெருக்க நின்றதொகை, கலியுகம். முன்சொல்லி வந்த முந்நூற்றறுபது நாளாகிய வருஷம் பன்னீராயிரத்தை நான்கில், மூன்றில், யிரண்டில், ஒன்றில் பெருக்கிய தொகைகூடியது, நான்கு யுகம். யிந்த நான்கு யுகத்தையும் அப்படியாகப் பெருக்கிக் கூட்டிய வருஷத்துத் தொகையைச்சாற்றுகின்றேன் கேள்.

முதலாகிய கிரேதாயுகத்திற்கு வருடம், பதினேழுலட்சத் திருபத்தெண்ணுயிரம். இரண்டாவது கிரேதாயுகத்திற்கு வருடம், பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூறுயிரம் மூன்றுவது துவாபரயுகத்திற்கு வருஷம், எட்டுலட்சத்தறுபத்துநாலாயிரம் நான்காவது கலியுகத்திற்கு வருஷம் நாலுலட்சத்துமுப்பத்திராயிரம். இப்பேர்ப்பட்ட யுகம் நான்கு கூடியது, ஒரு சதுர்யுகம். இந்தச் சதுர்யுகம் ஆயிரமானுல் சிருஷ்டிகர்த்தனுக்கு ஒரு பகல். இன்னும் ஆயிரஞ்சதுர்யுகஞ் சேர்ந்தால் அச்சதுர்முகனுக்கு இரவு. ஆக இரண்டாயிரஞ் சதுர்யுகம் முப்பதுசேரில், ஒருமாதம். அந்த மாசம் பன்னிரண்டு கலந்தால், ஒரு வருடம். அவ்வருடம் நூறுமுடிவானுல், அயனுக்கு ஆயுள் முடிவு. அப்பிரமதேவன் பகலிற் சகலாத்மாக்களையுஞ் சிருஷ்டிப்பான். இரவிற் சகல ஆத்மாக்களும் இறந்துபோம். அப்போது சலப்பிரளயம் வந்து மூடிக்கொள்ளும். ராத்திரி முழுது மப்படியே யிருக்கும். முதற்கூறிய நிமிஷந்தொடங்கி மண் பொதுத்தந்தையின் ஆயுதபரியந்தம் உனக்குணர்த்தினேன். இப்படி இந்தக்காலம் பெருகி வளர்த்துபோகின்ற விதத்தை ஆரறிந்து அறையைப் போகின்றீர்கள்? இதுதன் காலமென்பது. இந்தக்காலவளவைப் பாற்கடலிற் பிறந்த ஆலாலவிடத்தைக் கண்டத்திற்றரித்தருளிய ஆதியாண்டரங்கனும், அகலிட முழுதும் விழுங்கிய ஆதிநாராயணனுமே அறிந்து பேச மாட்டார்களாகில். மண்டலத்திலும், விண்டலத்திலும், எண்டிசையிலுமுள்ளவர்கள் என்ன அறியப் போகின்றீர்கள்? என்று வீஷ்மர் சொல்ல, அதைக் குந்திகுமாரன் கேட்டு, ஐயா! நல்ல காரியங்களைச் சீக்கிரத்திற் செய்யென்று செப்புகிறீர்களே, அதென்ன காரணத்தினுல்? அதற்கு மாத்திரந் துரிதப்பட வேண்டியதென்ன? இதனைச் சொல்லுமென்று கேட்க வீஷ்மர் விளம்புகின்றனர்.

---

விரைவுற்றுச் செய்யவேண்டுங் காரியத்தைப் பற்றிக் கூறிய இருவகைப் புண்ணியத்தின்விதி.

அப்பா ஒப்புயர்வில்லாத உதிஷ்டிரனே! இவ்வுலகத்தில் விரைவிற் செய்யுங் காரியமாவது தருமம். அதையறிகிறவிதமெப்படியென்றால், சகல சாஸ்திர புராண வேதாகமங்களுணர்ந்து, அவைகளின் சார

மான காரியங்களையும் பகுத்தறிவதே அவை களையறிதற்கு மூலமாம். பிரபஞ்சத்தோடு கூடியவைகளான பெண்டுபிள்ளை, பண்டுபதார்த்தம், மண் மனை, வீடு வாசல், தோட்டம் துறவு, ஆனை, சேனை, ஆடையாபரணம், இவைமுதலிய வெல்லாம் மாயாவிலாசமாம் இந்த உடலைவிட்டு உயிர் நீங்கி உடல் உலகை விட்டு மறையும்போது, மேற்குறித்த பொருளனைத்துங் கூடவராது. முன்பின்னாகிய யாவருக்கும் இது பிரத்தியட்சமே, ஆதலால், ஆசாபாசத்தி லழுந்திக்கிடவாமல், அசிரத்தைவைத்து ஏமாறாமல், இந்தக் குடும்பங்களைக் காப்பாற்றுவதற்கு நீதிசாஸ்திரம் எவ்வளவு பிரமாணம் பேசியிருக்கிறதோ? அவ்வளவுக்கும் பாடுபட்டுப் பிரபலித்து, மான நாட்டி, தண்ணீர்ப் பானையைத் தலைமேற்கொண்டு போகிற தையல் தன்னுடைய பார்வையெதிரிலும் நினைப்புக்குடத்திலும் பதித்துப் போவதுபோல் பார்வை யெல்லாஞ் சமூகவிசாரமாகிய சமுசாரத்திற் போக்கி, தன்னுயிர்த் துணையாய்த்தானெங்கேபோனாலும் அங்கேயும் வழித்துணையாகின்ற தருமத்தில் நினைவைத்தாக்கி, சரீர மிறப்பதும் அச்சரீரத்திற் சஞ்சரிப்பவன் ஒளிப்பதுந் தெரியாதபடியாற் சாக்கிரத்திற்றானே தாமசமில்லாமல் தருமத்தைத் தேடவேண்டும். அந்தத் தருமமே ஜெயமோட்சத்தின் கதவைத்திறக்கு முதற்சாவி. அரைனிமிஷமேனுஞ் சும்மாயிராமல், எப்போ தெப்போதென்று அதனைச்சமயத்திற் குறிந்துக்கொள்ள வேண்டும். தருணந் தப்பினால் மரண நிச்சயம். இதனாற்றான் சான்றோர்கள் யாவரிடத்தும் இரக்கம்வைத்து, அனியாயமா யழியாதீர்களென்றும், தருமத்தைத் தட்சணஞ் செய்யுங்களென்றுஞ் சொல்லுவார்கள்.

ஆனால், இத்தருமமென்கிற புண்ணியம் பலவிதமாயுள. அவைகளிற் பசு புண்ணியமென்றும், பதிபுண்ணியமென்றும், இரண்டு முக்கியமானவை. இவ்விரண்டினுக்குள்ளே மற்றெல்லாப் புண்ணியங்களு மடங்கிப் போம். அப்படியிருந்தாலும் புண்ணியமென்பது பொதுப்பெயர். விதியிலெதுவானாலுஞ் சீக்கிரத்திற் செய்வது நல்லது. யாதிலும்பதி புண்ணியம்பத்தத்தனை உத்தமம் இதனாற் சுத்தமோக்ஷம்பலிக்கும். பசு புண்ணியமெல்லாம் பதிபுண்ணியத்தினாற் பலப்பட்டு சித்தியாம், இச்சித்தியாவது சொர்க்காதிபோகம். சொர்க்காதி போகமாவது ஆன்மாக்களுக்கு உற்றவிடத்துதவி. திருப்பணி, உச்சவம், வேதமந்திரம், பிரதிஷ்டை ஆசாரபூசை, இன்னும் பலவித புண்ணியங்கள் பதிபுண்ணியத்திற் சேர்ந்து பலனைத்தருவயாகாதிகிருதுக்கள், அன்னதானங்கள், இவைமுதலியன பசுபுண்ணியத்திற் பாய்ந்து கலந்து சொர்க்காதிபோகங்களைக் கொடுக்கத் தகுவ. ஆகையால் எந்தவிதத்திலாவது பேரறிவாளர்கள் யிந்நிலையில்லாக் காயத்தை நிச்சயமாய் நம்பாமல், கெட்டுப்போஞ்செல்வத்தை இஷ்டமென்றெண்ணாமல், விட்டுப்போம் பாலியங்கிட்டு மென்றெண்ணாமல், கஷ்டப்பட்டாலுந் தருமங்களைத் தேடிக்கொள்ளுவார்கள். ஓ மெய்விரதனே! இளமை, செல்வம், வலி, வெற்றி, புகழ், மனை, மக்கள், பொன், புவி, நுகர்ச்சி, அழகு, பெருமை, துணிவு, நாள், யிவை முதலியன நித்தியமல்லாத அநித்தியப் பொருளாகிய ஞானம், அருள், பொறை, வாய்மை, மேன்மை, மௌனம், மனவூக்கம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி இவைகளாலுண்டாகுஞ் சற்கருமங்களை விரைவிற்செய்து முடித்தல்வேண்டுமென்று முதியோர் மொழிந்திருக்கின்றனர், மெதுவிற்செய்கிற காரியமுஞ் சிலவுள அவற்றையுஞ் சொல்லுகிறேன்.

---

விரைவற்றச் செய்யவேண்டுங் காரியத்தைப்பற்றிக்கூறிய சீர்க்காரி ரிஷியின் கதை.

அப்பா அறக்குமாரனே! சீர்க்காரியென்னுந் தபசியாகிய ஒரு ரிஷிக்கு மேதையென்று ஒருபிள்ளைபிறந்திருந்தான் அவன் மன்மதனுக்கு நேராகிய வடிவமுடையவன் ஆதிசேடனுக் கொப்பாக அருமறை கற்றவன். மேலாகிய தபசுகளை மிகவாய்ப்பெற்றவன். இப்பேர்ப்பட்ட பிள்ளையின்பேரிற் பட்சமுடைய மகாதபசியான சீர்க்காரியானவர் ஆசிரமத்திலிருக்கும்போது, பெண்சாதிக்குந் தனக்கும் பிணக்குநேரிட்டு, மரியாதைக்குறைவாகிய சண்டைவிளைந்து, அச்சண்டையிற் பத்தினியானவள் அத்துமீறிப் பேசியபடியாற் குணமாகிய மலைமீதிருந்தவர் கோபமாகிய நிலமீதிறங்கி ஆக்குரோஷப்பட்டு, மேதையென்கிற மெய்யனைப்பார்த்து அப்பா! உன்தாயாகியவிவளை வெட்டிப்போ

டென்று வெகுளியா லுரைத்து, ஆச்சிரம வீட்டைவிட்டுப் பூச்சரமாகிய சோலையிற் புகுந்துபோய்விட்டார். தாயாருக்கு ஆயுள் கெட்டியா யிருப்பதனால் அப்பிள்ளைக்குத் தந்தை சொற்படியே வெட்ட மனதுவாராமல், மெத்தத் துக்காக்கிரந்தனாகி, பத்து மாதஞ்சுமந்து பெற்றெடுத்து வளர்த்துச் சீராட்டித் தாலாட்டிக் காத்திரட்சித்த மாதாவை எப்படி வெட்டுவேன்? ஒரு உபத்திரம்பண்ணாமல் அவள் சாகப்போகிறதில்லையே என்கைவாளினால் என்தாயை நானெப்படி முடிப்பேன்? என்று மனதி லுன்னியுன்னி, இந்தத்தருமசங்கடத்திற்கு நாமென்னசெய்வோம்? தந்தை சொல்லுக்கு மேலாகிய மந்திரமில்லையே. இந்தப்படி நடத்துவது தருமந்தானோ? தாயைப் பிள்ளைகொல்லப் போகாதே கொன்றாற் பழியுண்டாமே நானென்னசெய்வேன்? என்று மனங்கன்று இவ்விரண்டு தருமத்திலுந் தன்னுயிரைமாய்த்துக்கொள்வது மேலான தருமமென்று துணிவுகொண்டான்.

இப்படி யிருக்கிற வேளையிற் கோபங்கொண்டு கெடுந்தொழிற்கிசைந்த சீர்க்காரியானவர் சினந்தெளிந்து, ஆச்சிரமத்தை நோக்கித் திரும்பி ஐஐயோ!! பிராணனுக்குப்பிராணனாகிய நமது பத்தினியை வெட்டி விடும்படி குமாரனுக்குச் சொல்லிவந்தோமே இன்னேரம் வெட்டிவிட்டானோ? என்னமோ? தெய்வமே தெய்வமே! நான் போகிறவரையிலும் பேரறிவாளனாகிய பிள்ளை வெட்டாமலிருக்கானோ? நான் கோபத்தினாற் கூறினேனென்று தெரிந்துகொள்ளானோ? நன்றாய்ப்படித்தவன் தாயைக்கொல்லச் சம்மதிப்பானோ? சமதக்கினி சொல்லைக் கேட்டுப் பரசுராமன் தாயைக் கொன்றானாதலா லதுவும் புண்ணியருரைத்த புனிதந்தானே யென்றெண்ணி யொருவேளை புரிந்திருப்பானோ அப்படியாகிய தருமபுனிதத் தந்தைவார்த்தையால் மூந்தினாலும், தகுந்ததாதென்று எண்ணிப்பார்ப்பதல்லவோ தருமம். பதரூதகார்ரியஞ் சிதருதென்று சொல்லுவதும் ஒருதருமமல்லவா. மேலும், நமது புத்திரன் மெத்தவும் புத்திமான். அவசரப்படமாட்டான், ஆகிலும் தெய்வமிருக்குறது என்னுயகியைக் கண்ணினாற் காண்பேனோ தெய்வமே ஓவினையே நான் ஆச்சிரமத்திற்குப் போனவுடன் என்வயிறுகுளிரப் பண்ணுவையோ வயிறு எரியச் செய்வையோ என்று எண்ணாதுமெண்ணி அகங்கலாய்த்துக்கொண்டு ஆசிர்மத்திற்கு வந்தார் அப்போது தன்பிள்ளையும் பெண்சாதியும் அவரை எதிர்கொண்டுவணங்கி தோத்திரம்புரிய அதுகண்டரிஷிஉள்ளங்குளிர்ந்து, கண்ணீர் வெள்ளமாயோடப் புன்சிரிப்புகாட்டி, பிள்ளையின் புத்திக்குமெச்சி, பெண்சாதிக் காசீர்வதித்து, பிள்ளையையும், பெண்சாதியையும், இரண்டுகைகளினாலு மேந்தித் தாங்கித் தழுவி மனங்குளிர்ந்து, மணவனோடு மனைவியர் எதிர்த்தவார்த்தை யாடக்கூடாது எதிர்ப்பேச்சில்லா திருந்தால் ஈரேழுலோகத்தையும் வெல்லலாம் இதுதான் பெண்களுக்கிருக்க வேண்டிய தருமம், என்று இரசமாகிய பிரிய வசனமும் புத்தியுஞ்சொல்லி, பின்பு மூவரும் பழையபடி தன்மையுடன் வாழ்ந்திருந்தார்கள்.

ஆனபடியினாலே ஓ குவலைமாலைதரித்த கோவே! துணிவினால் கோபத்தினால் அதிகாரத்தினால் ஆக்கினையினால் அகங்காரத்தினால், அவசரத்தினால், பொறாமையினால், பொல்லாங்கினால், பகையினால், எண்ணிப் பாராமையினால் இன்னுமநேகவிதங்களாகிய மதமாச்சரியத்தினாற் கொலை முதலாகியபாதகங்களைச் செய்வதற்கு மனதுவருவதுண்டு. கோபமேபாபம், கோபமேகொடியது, கோபமேசண்டாளம், கோபமே மகாபாதகங்களை உண்டாக்குவதற்கு வித்தாயிருப்பது. ஒருவனுக்குக் கோபமுதலிய குறைகளினாற் குற்றம் நேரிடுகிறதா யிருந்தால், சற்றுநேரம் அவற்றை யடக்கி, தன்பிழையிம் எதிரிபிழையும் ஆராய்ந்து, தனக்குள்ளிருக்குஞ் சாட்சியானவனுக்குச் சரிப்படுத்தி, இதுதகும், இது தகாது என்று கண்டறிந்துகொண்டு அவைகளில் தாரதம்மியம் பார்த்துப் பொறுமையாகிய விரதபூஷணத்தைப் பூணுவதே உத்தமத்திலும்உத்தமம். முன்னுரைந்த சீர்க்காரி யென்னுந் தவசியின் புத்திரனாகிய மேதை யென்பவன் தகப்பன் பேச்சைக் கேட்டு உடனே தாயை வெட்டிப்போடாமல், தந்தையினுடைய வார்த்தையையுந் தாயினுடைய மூர்ச்சையையுஞ் சமரசப்படுத்தித் திரிதப்படாமல் நிதானித்தபடியால், அம் மைந்தனுந் தந்தையுந் தாயுஞ் சுகப்பட்டார்கள். ஓ தருமநந்தனா! இயாருக்காயினும் பொல்லாத பாபங்களைச்செய்ய மனங்

குவியுமாகில், உடனே பேரறிவினுலே பிரித்து ஆற்றிவிட்டுக் கோபத்தை மாற்றிவிட வேண்டும். ஆறிப்போனகோபம் அவனுக்கு ஆதரவாகும். அப்போதே இரக்கத் தோன்றும் தீர்க்காலோசனைபண்ணித் துணிந்த பேர்களுக்கு வரும்பலனையும் அரும்பத வியையும் பெருங்கீர்த்தியையும் என்னுலிசைக்கத்தக்கதன்று பொன்னுட்டின் சுகத்தைப் பூரணமாய்ப் பெறுவார்கள், ஆகையால், சற்கருமங்களைச் சோர்வாய் விடவேண்டும், சீக்கிரத்திற் செய்கிறகாரியமும், மெதுவிற் செய்கிற காரியமும், இதனுலறிந்துகொள். என்று வீஷ்மர் சொல்ல, தருமராஜன் சந்தோஷப்பட்டு ஐயா! தர்மார்த்தகாமமோட்சமென்னும் புருஷார்த்தங்கள் நான்கிலுஞ் சீவனுக் குறுதியாகிய சகாயஞ்செய்யத்தக்கது இன்னதென்று எடுத்து காட்டவேண்டுமென்று இறைஞ்சிகேட்க, அதற்கு கங்காபுத்திரன் கரைக்கத்தொடங்கினுர்.

---

புருஷார்த்தங்களைப்பற்றிக் கூறுதல்.

அப்பா உதிஷ்டிரனே! தருமார்த்த காமமோட்சமென்கின்ற அறம், பொருள் இன்பம், வீடு என்னு நான்கினுள், சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய மூதன்மையான வீட்டை யெட்டியேறுவதற்கு மற்றமூன்றும் ஊன்றுகோலாயுள்ளன. இரண்டாவது இன்பமென்பது லட்சுமியைப்போலுங் குளிர்ந்த தாமரைமுகத்தளாய் மெது வாய்பேசுகிற மிர்துபாஷியாய்கோபமில்லாதவளாய், குறைக்குநாய்போற் சீறுதவளாய் நோயற்றவளாய் பழிப்பில்லாக்குலத்திற்பிறந்தவளாய், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு இந்த நான்குகுணமு முடையவளாய் மாமியார், மாமனுர், மைத்துனர், மூத்தார், பந்து மித்திரா ளிவர்களுக்கு இதம்பட நடப்பவளாய் விருந்தினரைக்கண்டாற் பரிந்தெதிர்கொண்டு வருந்தி அன்புடன் அன்னம் படைப்பவளாய், நாயகன் சொல்லுகின்ற முறையின் வழியினின்று நடப்பவளாய்மலடியாய்ப்போகாமற் புத்திரபாக்கியமுடையவளாய், இந்திராணி ரதி, இவர்களைப்போல் இன்பலீலைபுரிபவளாய், அன்னியர்வீட்டில் போகாதவளாய், நித்தியஸ்நான செபதபநியமத்துடன் சூரியநமஸ்காரம்பண்ணி நாயகனுக்கடங்கி நடக்கும் அதிபாலியமுடையவளாய், பின்னும் ஸ்திரீகளுக்குரிய சுபலட்சணமும் நற்குணமும் பொருந்திய பெண்சாதியுடன் மனமொத்து ஆசையாய்ச் சலந்துவாழ்வதுதான் இன்பம். இது இம்மைப்பிரயோசனம் மூன்ருவதுபொருளென்பது, இத்தியாதிகுணங்களமைந்தசொற்றவறுத மனையாளுடன் கூடிவாழ்கின்ற இல்வாழ்க்கையில், பிரமச்சாரி, வானப்பிரத்தன், சந்நியாசி, பிதிரர், குரவர், தேவர்கள், விருந்து, ஒக்கல், பெரியோர்கள், மறையோர்கள், யிறந்தோர்கள், ஏற்போர், உறுப்பில்லார், பிணியாளர், விருத்தர், பாலர், சிசுக்கள், மூத்தோர், என்னு மிவர்களையோம்பற்குத் தேடும்பொருள். இதனை வழியறிந்து, மூறைமையாய் ஒருவர் மனம்நோவாமல், தன்னைத் தீவினை சாராமல், சோழி, சூது, சொக்கட்டான், சதுரங்கம், இவைமுதலிய பாவச் சொத் தல்லாமல்? கொலை, களவு, கள், காமம், பொய், இவைகளினுல் வருவதல்லாமல் குறைபுகன் றேற்காமல் கணக்கழிவு கூறுமல், நம்பினபேர் நடுங்காமல், அடைக்கலம் வைத்தவர்க் ளழாமல், தருமதானச்சாவடி, மடம், ஆலயம், ஏரி, குளம், வனம், தோப்பு, துரவு, இவைகளைச்சார்ந்தவிலைகளினுல், மனமடிந்து பிறரிகழாமல், நன்மையிற் கிடைத்தது போதுமென்று சம்பாதித்தல் செய்து நன்மார்க்கத்தில் செலவழித்து ஜீவகாருண்யனு இருப்பானுகில், அவனுக்கு இன்மைப்பயனும் மறுமைப்போகமும்உண்டு. மூன்ருவது தருமமென்பது, காலந்தப்பாது நித்தியானுஷ்டான கருமங்களைககருதி, குருநாதனையும் ஈஸ்வரனையுந் துதித்து, பூசாவிதியும், ஆசார நியமமும் செபதபநமஸ்காரமும் புரிந்து, தானென்கிற ஆணவசுதந்தரத்தைத் தள்ளி, யாவற்றையும் பிர்ம மாற்பணமாகத் தத்தம்பண்ணி, அவனல்லது வேறில்லையென்று அறிந்து நடப்பதுவே தர்மம். இந்தத்தருமத்தினுல் இம்மைப்பயனும் அம்மைப்போகமும், உம்மைமோட்சமுங் கிடைக்கும். இம்மைப்பயனுவது, பூமியிற்செல்வம். அம்மைப்போகமாவது, சொற்காதிபோகம். உம்மைப்பயனுவது, இனிமேற்கிடைக்கப் போகிறமோட்சம். தர்மார்த்தகாமமென்கிற இம்மூன்றிலும் பரமசுகமான வீட்டினைப் பெறுவதற்கு ஆதாரமானதுதருமமே. இந்தத்தருமத்திற்குப் பொருளாயுள்

ளது தவம். இதற்குச் சாட்சியாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

---

### தவத்தைப்பற்றிக் கூறிய மெய்ப் போத ரிஷியின் கதை.

அப்பா பாண்டுவின் மைந்தனே! கடல் வளைத்த காசினியில் திடம்விளைந்திருக்கின்ற தேவப்பிரமாண குலத்திற்பிறந்த ஒருமெய்ப் போத ரிஷியென்றும் பெரியவர். அவர் காமாதிகளைவிட்டு அர்த்தமாகிய பொருள்மேலாசைவைத்து, பூமியெல்லாந் திரிந்து, பொன்னுசையாற் கரிந்து முடிவில் தபசுபண்ணித் திரவியம் பெறவேண்டுமென்று மனதிலெண்ணி ஒரு சாலை யேர்ப்படுத்த அதிலிருந்து தவம்பண்ணுகிறார். அத்தருணத்தில் ஒரு மகாபுருடன் தேவசொரூப சுந்தர திவ்விய திருமங்கள ரூபத்துடன் பிரசன்னமானான். அவனைப் பெரியவர்கண்டு, அஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அடிபணிந்து நின்றனர். அப்படி நிற்கின்ற பிராம்மணனை அத்தேவபுருஷனேக்கி உனக்கு வேண்டியதென்னவென்று வினவினன். அதற்கவர் சுவாமி! எனக்கு மிகுந்த திரவியம் வேண்டுமென்றனர். அப்போது அந்தத் தேவன் ஒருயட்சனை வரும்படியாகிய நினைத்தான். அப்படியே யட்சன்வந்து தொழுதான், அவனை யத்தேவன் பார்த்து, தாமரைமாலை தரிக்கப்பட்ட இந்தப்பிராமணன் எவ்வளவு திரவியங்கேட்டாலு மில்லையென்னுமல் வழங்கிவாவென்று வகுத்தான். அப்போதே யட்சன் அந்தப் பிராமணனைநோக்கி, ஓ ஐயரே நீர் ஆசைப்பட்ட நிதியம் எவ்வளவோ அவ்வளவுந் தருகிறேன் பெற்றுக்கொள்ளுமென்று பொக்கிஷத்தைத் திறந்துவிட்டான். அதைக்கண்டபோதே அவ்வேதியனுக்குக் கியானம் பிறந்து, மனந்தெளிந்து, ஐயோ! ஈதென்ன நம்முடைய அறியாமை எவ்வளவோ அருமையான தவத்தைச் செய்து நிலையற்ற திரவியத்தை ஓர் பெரும்பொருளாய் விரும்பினேம், செல்வம் பிரயோசனமா தவம் பிரயோசனமா? ஐஸ்வரியத்தினுற் பெருமையும், பூலோகப் பிரதிஷ்டையும், உடலுக்குச் சுகமுமல்லாமல், உயிருக்கென்ன சுகம்? இந்தப் பொருளினாலே கோபம், லோபம், மோகம், மதம், மார்ச்சலியம், பகை, மமகாங்காரம், ஆணவம்இவையெல்லாம் விளையும். விருதாவிற் கெட்டேன், என் விரதமெல்லாம் விட்டேன். வீணைசைப்பட்டேன். என்று தன்னைத்தானே நொந்துகொண்டு, தனக்கெதிரிலே காட்சியாகி யிருக்கின்ற புட்பக விமானனை நோக்கிப் பிரதட்சணம் வந்து நமஸ்கரித்து சுவாமி; அடியேன் மடமையினுற்பொருளைவிரும்பிக் கேட்டேன். தேவரீர் அருள்செய்யத் துணிந்தீர். இந்தப்பொருள் மருளை விளக்கத்தக்கது. ஆதலால் ஆன்மாவுக்கு தெருளை விளக்கும்படியாகிய ஓர்லாபத்தைத் தந்து இம்மைப்பொருளைக் கைகூட்டிவைக்குந் தருமப்பொருளாகிய தவத்தைப்பெறும்படிக்கு அநுக்கிரகம் பண்ணுமென்று வேண்டிக்கொண்டார். அப்போதந்தத் தேவனுக்குக் கிருபைவந்து, நீர் நல்லகாரியத்தை நாடி நீர் இத்தான் சாஸ்திர விசாரணைசெய்து சாதுக்களின்விவேகமுறைமை. என்று தாழ்த்தி, அவருக்குத் தவப்பொருளே சித்திக்கத் தக்கதென்று கிருபைகூர்ந்து மறைந்துபோனான். பின்பவர் உயிருக்குச்சார்பு தருமப்பொருளாகிய தவம். இதுவேபிரதானம் இதுவே நிதானம். இதுவே மகாதானமென்று நிச்சயித்து நெடுங்காலந்தவம்பண்ணி நெறிவழிபற்றி வாழ்ந்து நீணிலத்திலிருப்பவர்கள் தரித்திரப்பட்டு இவரிடத்தில் வந்து வணங்கித் தங்களுக்கு வேண்டியபொருளையும் பட்டாபிஷேக துரந்தரனுகி வாழவேண்டுமென்கிற பாக்கியத்தையுந் தாருமையாவென்று கேட்டாலுந் தடையறத்தந்து இப்படி யெவருக்கு மெக்காலத்துந் தருவேனென்று பிரசித்தப்படுத்தி, அவ்வாறே அவரவர்களுக்குங் கொடுத்து ஒப்பில்லாத மெய்ப்போதரிஷி எப்போது மிருந்தார். ஆதலால், காமத்துக்கும் பொருளுக்கும் பெரியது தருமமென்றறிக. இத்தருமமாகிய மூன்றுக்கும் இவற்றின் பயனுகிய வீட்டுக்குந் தவமே ஆதாரமென் றுணர்க. என்றுதானென்பதற் வீஷ்மர் சாற்றி; இத்தகைய தபசுக்கு எக்கிய முக்கியமான துணையென்றனர். இப்படிசொல்லிய பாட்டனை தருமராஜன் பணிந்தெழுந்து, ஐயனே! எக்கியஞ் செய்யும்போது கொல்லாவிரத மேற்கொண்டு பசுபந்தனுதிகளை பரிகரித்துச் செய்யக்கூடாதோ? அதுபற்றித் தேவரீர் திருவாய்மலர வேண்டுமென்ன, வீஷ்மர் சொல்லத் தொடங்கினர்.

## இயாக முறையைப்பற்றிக் கூறிய நாதப்பிர்மரிஷி கதை.

அப்பா குணசாந்தனே! வேதவேதாந்தமான உபநிடத முதலாகிய சகலகலைக்கியானங்களையும் நன்காராய்ந்துணர்ந்த நாதப்பிர்மமென்றொரு பராமணோத்தமரிருந்தார் அவர் தன் மனையாளுடன் திரிகுண தோஷமும் சாராமற் கெடுத்துக் கொல்லாவிரதங் கொண்டு காட்டிலிருந்து தபசு செய்துவந்தார். நாளுக்கு நாள் அவருடைய தபசு அதிகப்பட்டு வருகிற காலத்தில், வேதவிதியாய் விளம்பியிருக்கின்ற பசுவபையிட்டுவேள்விசெய்யாமற் சருகுபலாதிகளைக் கொண்டு பசுவபைக்குப் பிரதியாய் ஓமம் பண்ண வேண்டுமென்றெண்ணி, மனமகிழ்ச்சியுடனே அவ்வெக்கிய முடிப்பதற்கு வேண்டியத்திரவியங்களை சேகரித்துக்கொண்டிருந்தார். அப்போது யிந்த சங்கதியைத் தேவேந்திரனறிந்து, அந்த பிராமணனிடத்திற்கு வந்து, ஓ பிர்மகுலசிரேஷ்டனே! வேதத்திற் சொல்லியிருக்கின்ற சகல யாகங்களுக்கும் பசுபந்தனம் பிரதானமென்று பேசியும், அப்படியே அநேகம் பேர்கள் நடத்தியுமிருக்க, அதற்கு மாறாக சருகுபலாதிகளைப் போட்டு, எக்கியம்பண்ணுவது உமது குலத்திற் கியல்போ? நீர்படித்ததிறமோ வேதவிதிக்கு வேறுபட்டு நீர் நடத்தினல் அது உமக்குச் செல்லாது அதனல்வரும் பயனு மில்லாது யிது மிகவும் பொல்லாது என்று புகன்று புரந்தரன் போனன், அப்பாற் சிலரிஷீஸ்வரர்கள் வந்து, ஓ அய்யரே! விரதமெய்யரே! அக்கினிக்கையரே! நீர் பசுபந்தனமில்லாமல் எக்கியம் பண்ணப் போகிறதாய் கேள்வியானோம் நீரப்படிக்குச் செய்யக்கூடுமா உமக்கு அது முறைமையாமா அதனல் வரும்பாபம் வீண் போமா விதிதப்பி நடப்பார்க்கு விதித்திருக்கிறதண்டனை வீணுமா இப்படி செய்வதனற் பலன்கிட்டுமா நீர் கொல்லாவிரதங் கொண்டிருந்தாலும் வேதத்திற்சொல்லியவண்ணம் பண்ணினல் விரதபங்கமிராது என்று விதம் விதமாய் விளம்பினர்கள் அவர்கள் பேச்சையுங்கேளாமல் தனதிஷ்டப்படி யாகஞ்செய்ய எத்தனித்திருந்த பெரியவரை அவருடைய பெண்சாதியானவள் பார்த்துச் சொலலுகின்றாள்.

கேளும் பர்த்தாவே? தேவேந்திரன் சொன்ன பேச்சையும் ரிஷீஸ்வரர்கள் விளம்பிய விதியையும் பொருட்செய்யாமல், உமது மனம் போனவாறே செய்வதற்கு முயர்ச்சி பண்ணுகிறீர். நமக்கெல்லாம் வேதமே ஆதாரம் அதைத் தள்ளி நடந்தால் வேத புருஷன் உமது யாகத்தையும், உமது விரதத்தையும், நிறைவேற்றமாட்டான். அதனற் பழியும், பாவமும், அபரோதனையுஞ் சம்பவிக்கும். என்று தன்னுற்கூடியமட்டுந் தருமபத்தினிசாற்றியும், அவள் சொல்லையு மந்த நாதப்பிரமரிஷியானவர் இகழ்ந்து, மண்டல குண்டங்கள் வகுத்து, வேதிகையமைத்து, திரியாக்கினி விரித்து, சமஸ்காரம்பண்ணி, நமஸ்காரஞ்செய்து, சங்கல்பவிதி தரித்து, வாகிசவாகிசு பரிபூசைபண்ணி அக்கினியை ஓமகுண்டலத்தில் வைத்துச்சொலிக்கச்செய்து அடிமேகலையிலே தருப்பையும்நடுமேகலையிலேகூற்சமும், மேல்மேகலையிலே பருதி இஷ்டசமும் வைத்து, அக்கினிக்குச் சனிப்புஜாதகன்ம முதலானது நடத்தி, சிருக்கு சிருவத்துக்குப் பூசை முடித்து திரிமூர்த்தி சொரூபமாய்ப் பாவித்து, ஆச்சியத்திற்கு சமஸ்காரஞ்செய்துஆச்சியமாகிய அந்தநெய்யைத் தருப்பையினலே தொட்டுஇடைபின் கலை சுழி முனையாய்ப் பாவித்து, மூலாதார ஆகுதிபண்ணிப் பூர்ணகுதிசெய்து, அப்பிரபப் பிரதான ஓமம் பண்ணத் தக்கதாக ஆரம்பித்தார். அப்போது அக்கினியானது சிறிதும் பிரபலியாமலடங்கி மடங்கி அவிந்து போயது. எத்தனை விதத்தில் மூட்டினலும், கர்ப்பூரம்நெய், சமித்து, இவைகளைக் காட்டினலும், நெருப்புமூளாமற்போனதை ரிஷியீஸ்வரன் கண்டு? இதென்ன காரணமென்று நிதானித்து ஆலோசனையிலிருந்தார். அப்படி யிருக்கும்போது அவருக்கெதிரிலே ஒரு மான்வந்து நின்று ஓ ஐயா! நீரென்ன யாகம் பண்ணுகிறீர்? குச்சயாகமேயல்லது தசையாகமே, எங்கேயாகிலும் இப்படிநடந்திருக்கிறதா! ஓமத்திற்கு! உயிரைக்கொன்று வயிற்றுநாபிக்குள் வேண்டும் போன்ற நிணமாகிய வபையை யெடுத்து மந்திரதேவதைகள் கையிற் கொடுத்து யாகம்பண்ணினற் புண்ணியபலனுண்டு. புகழுண்டு பொருளுண்டு. போதமுண்டு. புனிதர்களாசீர்வாதமுமுண்டு. முடிவில் முத்தியுமுண்டாம். அதனலொரு பாவமுமில்லை யென்பதாய் வேதத்தில் விளம்பி யிருக்க, நீரப்படி புரியாமற்

போனபடியினால் அக்கினியெரியாம லவிகி
ன்றது. ஆதலால் ஓ மாதவனே? என்னை
நீர் பசுவாகக்கொண்டு வபையெடுத்து ஓமம்
பண்ணுமென்று சொல்லியது.

அதற்கும் அப்பெரியவ ரொப்பாமல்
நடத்துகிறபோது அவரைப் பின்னும் மா
னைது பார்த்து, ஓ ரிஷியே ? பாபம் வரு
மென்று பயப்பட்டீர். வேதத்திற் சொல்லி
யிருக்கின்ற மேம்பாட்டின்படிக்கு மெய்யாக
நம்பி அவிர்ப்பாக மளித்தால், தேவதை
களெல்லாஞ் சிந்தை மகிழ்ந்து உம்மிடத்
தில் வந்து கண்டு நிந்தை நீங்க வாழ்த்து
வார்கள். நீர் எக்கியம் பண்ணுகிறீர். அதில்
முக்கியமாகிய அவிப்பாகம் வாங்கிச் சாப்பி
டலாமென்று அக்கரையாக ஆசைகொண்டு
தேவர்களெல்லாம் ஆகாயத்திற் கூட்டங்
கூட்டமாய்குழுமி யிருக்கின்றார்கள். அதோ
தேவேந்திரன் முதலிய பேர்களுந் திகைத்
துக்கொண் டிருக்கிறார்கள். நீரே நேரிற்
பாரும் என்று வந்தமான் அந்தமான் பிரா
மணனுக்கு தெரியும்படியாக அனுக்கிரகம்
பண்ணிற்று. அந்தமான் வசனத்தைக் கேட்
டபெரியவர் வானத்தைப் பார்த்து சகல
கோடி தேவர்களோடு சதமகனையுங்கண்டு
ஆச்சரியங்கொண்டு, ஐய நீங்கி (செய்வினை
திருந்தச்செய்) என்னும் வேதவிதியை அநு
சரித்து மனதை ஸ்திரப்படுத்திக்கொண்
டிருக்கின்றார். அத்தருணத்தில் தரும தேவ
தை பிரசன்னமாகி, ஓ கொல்லாவிரதங் கொ
ண்ட குணக்கியனே! வேதத்தின் உண்மை
யை வெளியிடுகிறேன் கேளும் என்றெச்சரி
த்து யாகவத்தியாய் நவின்றிருக்கின்ற சட்
கிரமத்தையும், டமரவோசையாற் பிறந்த அ
ட்சரசொருபத்தையும் கிரமமாகச் சொல்லி
மறைந்து போய் விட்டது. அப்போது ம
றைமுதல்வனுகிய பெரியோன்மனந் துணிந்
து, ஓ வேதமே! உன்னை நம்பினேன். ஓவே
தமே! உன்னை நம்பினேன். ஓ வேதமே! உன்
னை நம்பினேன் என்று முக்காலுங்கூறித்து
தித்து, தானடத்தி யவம்மேலாகிய எக்கியத்
தில் திரிமூர்த்திகள், தேவேந்திரன், தேவர்
கள் இவர்கள்முதலிய யாவருக்கும் பசுவபை
யினால் ஓமம் பண்ணி, அவிர்ப்பாகங்கொடுத்
துத் திருப்தி பண்ணிவைத்தார் அப்போது
திரிமூர்த்திகள் முதலான பேர்களுஞ் சந்
தோஷப்பட்டார்கள். இப்படியவர் மேலான
ஒரு பசுவெக்கியத்தைப்பண்ணி, அநேகவி
ஐயமும் தபமும், நன்மையும் கூடிவரத்தக்க
தாகவிருந்து முடிவில் ஒப்பற்றபதவியுற்றார்.
ஆனதால், கொல்லாவிரத மேற்கொண்டவ
னானும், வேள்விகளைப் பசுத்தம்பனுதிக
ளாற்செய்யவேண்டுவதைப்பற்றி இனிமேல்
நானுக்கு சொல்ல வேண்டியதென்ன? வே
தமே நமக்கு அத்து. அதைக்கற்று, அதிற்
சொற்படி அவிர்ப்பாகம் வைத்து நடந்தா
லெல்லாபலன்களு முண்டாம் என்று வீஷ்
மர் சொல்ல தருமநந்தனன் கேட்டு, பின்
னும் பாட்டனாரை பணிந்து ஓ இந்துகுலத்
தில்வந் துதயஞ் செய்த ஐயனே! நன்மை
யான காரியங்களிற் பிரவேசித்த பேர்களுக்கு
எல்லாரும் பழிக்கும்படியாக துன்பம்வந்து
சம்பவித்து அதனாலவர்கள் துயரப்படுகிறார்
களே அதென்னத்திலே இருளை போக்
கிப் பிரகாசிக்கப்பட்ட சூரியனைப்போல் ஆத்
மாவுக்கு அக்கியானயிருட்டை நீக்கி சுக்கி
யானமென்னும் சோதியைப் பிரகாசிக்கச்
செய்ய நின்ற சுகுணராகிய தேவரீர் இந்தச்
சந்தேகத்தை நிவர்த்தி செய்யவேணுமென்
று சரணம் புகுந்த பௌத்திரனை நோக்கி
வீஷ்பர் சாற்றுகின்றார்.

---

### செய்காரியந்தவிர்காரியமறிந்து நடக்க வேண்டு மென்பதைப்பற்றிக் கூறிய தக்கன் கதை.

அப்பா தரும புத்திரனே! குளிர்ந்த
பிரகாசத்தையுடைய குழவிப் பிறையையும்
பிரவாகமாகிய மங்கையையுந் தரித்தருளிய
சடாமகுடத்தைப் பொறுத்த தாணுவாகிய
மூலகாரணப் பொருளானவர், தேவேந்திர
ன்முதலாகிய சகலகோடி தேவர்களும், ரிஷி
களும், தேவபூதகணங்களும் சேவிக்கும்படி
யாய் செவ்விலவன் மலற்போற் செவந்தயித
ழினையுடைய ஆதிசத்தியானதேவி வாமபா
கத்தில் வந்திருக்கும்படிக்குக் கோடாகோடி
கொன்றை மரங்கள் குலாவிய அநேக நந்த
வனங்களும்வில்வவனங்களுந் தழைத்திருக்
கப்பட்ட கைலையங்கிரிகண் மாணிக்க சிம்
மாசனத்தில் எழுந்தருளி யிருக்கும்போது
சிலரிஷீஸ்வரர்கள்முதலிய மெய்யடியார்கள்
அவ்விடத்திற்வந்து அதிகார நந்திதேவ
ருடைய அனுமதியின்பேரில் திருக்கோவிலு
க்குட்புகுந்து, பிரதட்சண நமஸ்காரம் பண்
ணி, ஓதேவதேவா! ஓ மஹாதேவா! ஓ தந்

துவநித்த பரிசுத்த நிர்மல கருணாநிதியாகி
ய கடவுளே! அயன்குமாரனாகிய தட்சகப்
பிரமன் தேவரீரொருவரைவிலக்கி மற்றப்
பேர்களுடன் சபைகூடி ஒருயாகத்தினைச்
செய்கின்றான். அந்தயாகத்தில் தேவரீருக்கு
மாத்திரம் அவிர்ப்பாகமில்லை. ஓ எப்பொரு
ட்குமறையாகி எல்லாவற்றிற்குஞ் சோதியா
யிருக்கின்ற ஈஸ்வரனே தேவரீருடைய கரு
ணையெப்படியோ? எங்களுக்கொன்றுந் தெரி
யவில்லையென் றிறைஞ்சித் தோத்திரம்புரிந்
தார்கள். அவ்வுரைகேட்ட ஆதிபகவன் பு
ன்னகையோடு பொருந்தியிருந்தினர் அந்
நேரவேளையில் தேவியார்க்கு கோபம்பிற
ந்து ஹர ஹர சம்போவென்று வணங்கி,
இவ்வுலகத்தில் மற்றையர்செய்கின்ற யாகம்
போற்செய்யாமல் அகங்காரத்தினாலும் அ
றிவீனத்தினாலும்பண்ணப்பட்டதக்கனுடை
யயக்கிய மழியத்தக்கதாக தேவரீர் சிந்திக்க
வேண்டுமென்று மொழிந்தனர் கணக்கிறந்
த திருவிளையாடலையுடைய கண்ணுதலான
வர் சங்கிவார்த்தையைக் கேட்டமாத்திரந்தி
ரத்திற் சகலபிரமதகணங்களும் புடைசூழ ரி
ஷப வாகனரூடராய் அப்பார்வதாதேவி
யுடன் பதிதன்செய்கிற யாகசாலைக்கு வந்து
அந்தரவாசியாயிருந்தனர். அப்போது அ
தைத் தக்கன்கண்டு தனது நிலைதளராமல்
மனங்கலங்காமல் தானெடுத்த காரியமுடிவு
பெறும்படி ஓமம் பண்ணிக்கொண்டு தேவர்
களுக்கு அவிர்ப்பாகங்கொடுக்க ஆரம்பித்
தான்.

அப்போது தானல்லாத பொருளில்
லாத பசுபதியானவர் ஞானதிபர்களாகிய
ஜீவன் முத்தர்களினது மனமகிழத்தக்கதாக
த் தம்முடைய நெற்றிக்கண்ணிலிருந்து வீர
பத்திரக்கடவுளைப் பிறப்பித்தார்கள். அந்த
வீரபத்திரர் பலவித ஆயுதங்களுடனே கோ
பாக்கிரந்தராய் நெருபெரியுங் கண்ணுஞ்
சிரிப்பெயுங் கோரதந்தமுமாகி, பரமேஸ்
வரனைப்பணிந்து விடைபெற்றுக் கொண்டு
யாகத்திற்புகுந்து, அநேகம் வீரகணப்படை
களை யேர்ப்படுத்தி ஓமஞ்செய்கின்ற வேள்
விச்சாலையைச் சுற்றிலுங் காவலாக்கினர்.
அப்போது அப்பூதகணப் படைகளெல்
லாஞ் சற்றேனுந் தாக்ஷணியம் பாராமற்பல
முகத்திலும்பரவி, உகாந்த காலத்திற் சமுத்
திரம் பொங்கி உலகத்தைவளைத்துக்கொள்
ளும் உபத்திரவமெப்படியோ! அதன்மை
யாக சாலையை வளைத்துக்கொண்டன அ
வைகளுக்கு எகப்பட்டுக் கொண்ட அயனரி
முதலாகிய தேவர்களெல்லாங் கைநெறித்து
மெய்பதைத்து இனி யென்செய்யப்போகி
றோமென் றேங்கித்தளர்ந்தார்கள். அந்த
வேளையில் வேள்விச்சாலைக்குட் புகுந்த வீர
பத்திரர் வீராவேசங்கொண்டு அந்த யாகத்
திற் கூடன்பட்டிருந்த சகல தேவர்களையுங்
கண்டமட்டுஞ் சேதித்தி,மூலைக்குமூலை சோதி
த்து பஞ்சுப்பொதியிற் பற்றிய நெருப்பைப்
போல் அதமாக்கி யெரித்து விஷம்போன்ற
தக்கனையு மெச்சனையும் பிடித்துத் தலையை
வெட்டிப் போட்டார். அதுகாதுயிற் பிரம
தேவன் நானாபக்கத்திலும் ஓடி வாடி, அகில
லோக நாதனாகிய ஆதிபரமேஸ்வரருடைய
அடிமலரணையில் அலறி விழுந்து, ஆண்
டவனே! தக்கனுக்குக் கர்வபங்கமாச்சுது.
இனிமேல் தேவரீருக்கு அவிர்ப்பாகக் கொ
டுப்பதற்குச் சந்தேகமில்லை. அவன் பிழைக்
கும்படிக்டிக் கருணை யிரக்கவேண்டும் என்று
மகாதேவனை வேண்டிக் கொள்ளவும் அத
னலவருக்கு மனதிரங்கி பிரமாவினுடைய
பரிதாபம் பார்க்கமாட்டாமல் வெய்யிலில்
வைத்த மெழுகைப்போலுருகி, வீரபத்திர
ரால் வெட்டுப்பட்டு விழுந்தபேரெல்லாம்
பிழைச்சும்படிக்குத் தயைபுரிந்தருளினார்.

உடனே சகலமானபேருஞ் சஞ்சலப்
படாமல் முன்போல்வே தூளைவீசியவாறு
போற் பிழைத்தெழுந்தார்கள். இவ்வாறெ
ழுந்த தக்கன் முதலாகிய தேவர்களும் அவ்
வவர்க ளொக்கல்முதலான பேர்களியாவ
ரும் வீரபத்திரசுவாமி கையால் வீழ்ந்து
மேலாகிய பரமசிவத்தி னருளாற் பிழைத்
தோமென்றறிந்து, இருவரையும் பணிந்து,
இயாகம் அழிந்துபோய் கிடக்கிற அலங்
கோலத்தைக் கண்டு கிடுகிடென்று நடுங்கி
பயபக்தியுடன் தோத்திரஞ்சொல்லி, சுவா
மி? நாங்கள் செய்த அபராதத்தைப் பொறு
த்து ரட்சிக்கவேண்டுமென்று பொருமலும்
விக்கிலுங்கொண்டு புலம்பித் தவித்து, ஓ த
யாபரா? ஓ பராபரா? என்று வேண்டிக்கொ
ண்டு, மறுபடியும் வேள்வியைத் தொடங்
கிச் செய்து' வேதவிதியின்படிக்கு முதலில்
மகாதேவனுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து,
மற்றவர்களை பூசித்தார்கள். பரமன் தக்கனை
மாத்திரந் தலைமாறலுடன் வைத்திருந்தார்.
இதைப்போல் நற்காரியமாயிருந்தாலுஞ் செய்

காரியத் தவிர்காரிய மிரண்டு மறிந்து ஈஸ்வரபத்தியு மிருந்து நடத்துவராகில், அக்காரியம் விக்கினமில்லாமல் நிறைவேறும் இல்லாவிட்டாற் கெட்டுப்போம். என்று புகன்ற பாட்டனைப் பேரனாகிய தருமநந்தனன் பணிந்தெழுந்து, ஓ என் குலதெய்வமே! பார்க்கவரென்னும் பெரியவரைச் சுக்கிரரென்று உலகத்தார் சொல்லுகின்றார்களே அவருக்கு இந்தப்பெயர் வந்த வரலாறென்னவென்று கேட்க, மேலோனாகிய வீஷ்மர் பட்சத்துடன் சொல்லத் தொடங்கினார்.

---

### பார்க்கவருக்குச் சுக்கிரப்பேர்வந்த வித முறைத்தல்.

ஓ சட்சயமங்களுக்கும் சமாதானமான தருமநந்தனா! முன்னொருநாள் பார்க்கவரானவர் அளகைக்கதிபதியாகிய குபேரனிடத்திற்குப்போய் அவனைப்பயங்கரப்படுத்தினார். அதனால் துயரமடைந்த இருநிதிக்கிழவன் அபயந்தந்துச் சகிக்கமாட்டாதவனாய், தனது தோழமைபூண்ட பரமசிவனிடத்திற் சென்றுபரதவித்தான். அச்சங்கதியைக் கேட்ட பார்வதிசமேதராகிய சிவபெருமான் குபேரன்பேரிற் பரிந்து, பார்க்கவர் பேரிற் குரோதங்கொண்டெரிந்து. அந்நிமிடத்திலவரைப் பிடித்து விழுங்கிப்போட்டார். அப்பால் தேவர்கள் ரிஷிகள் முனிவர்கள் யாவரும் அழுது ஆதிசிவனைத் தொழுது, பார்க்கவரைத் தரவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அதன்பேரிற் பாலநேத்திரனுக்கு அருளுண்டாகி, விழுங்கிய பார்க்கவரை ஈஸ்வரனுடைய சுக்கிலமாய் அதோமுகத்தால் வந்தபடியால், அன்றுமுதல் அவர்சுக்கிலரென்று சொல்லப்பட்டார். அச்சுக்கிலரென்னும் பேர் இவ்வுலகத்திற் சுக்கிரரென்று மருவியது. என்று சாற்றவுந்தருமராசன் சந்தோஷப்பட்டு நமஸ்கரித்து, ஓ நாதனே நானிலங்கொண்டாடா நின்ற வேதவியாசருடைய பிள்ளை சுகயோகியின் விர்த்தாந்தமெல்லாங் கேட்க விருப்பமுற்றிருக்கிறேன் என்னபேட்சையடங்க அருள்செய்ய வேண்டுமென்ன, அவர் கருத்தின்படி சுத்தபதவித்திரராகிய வீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

---

### ஞானசாதனத்தைப் பற்றிக் கூறிய சுகயோகியின் கதை.

ஓ என் கண்ணுக்கண்மணிபோன்ற கல்யாணகுணனே! மகாவிஷ்ணுவினம்சமாகிய வியாயமுனிவரானவர் கோடிகோடி கோடா கோடியாகிய வேதங்களை யெல்லாஞ் சிக்கறுத்து, இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், என்று நான்காப் பிரித்து, பல சடைகளோடுஞ் சாகைகளோடும் உலகத்திற்கெல்லாம் ஆதாரமாகும்படி செய்தருளி, சகல தபசுகளிலுந் திரிகாலக்கினியாகி, சாபானுக்கிரக சாமர்த்திய முடையவராய் அதிக தூன்மையோடிருக்கப்பட்ட காலத்தில், வெகுநாளாய்ப் பிள்ளையில்லாமற் பின்பு புத்திரன்வேண்டுமென்கிற அபேட்சையினாலே சூரியன் தினமும் பிரதக்ஷண நமஸ்காரம் பண்ணிக்கொண்டு வராநின்ற வெள்ளியங்கிரிச் சாரலில் அருந்தவமிருந்து, பர்வதராஜ புத்திரியையும் பரமசிவனையுங் கருத்திலிருத்திக் கடுந்தவம் பண்ணி வருகின்றார், அக்காலத்திலே வேதவியாசர் சிவனுக்கற்பிதமாகிய சில யாகங்களைச் செய்து, மந்திரமுலமாய் அவிர்ப்பாகமளித்து, மணிகண்டனாகிய அம்மகாதேவனைத்தியானித்து, ஆனந்தக்கண்ணீர் விட்டழுது, சரீரம் பொடித்துப் பூரித்து, நாத்தழும்பேரத்துதித்து, நெஞ்சம் பஞ்சுபோலாகி, வெண்ணெய்போலுருகி, உடல்குழைந்து, சிவானந்த வெள்ளத்தில் மூழ்கித் தன்னைமறந்தனர். அப்போது ஏழைபங்காளனுக்குக் கிருபைவந்து யக்ஷகின்னர் கருடகாந்தருவ சித்த வித்தியாதரருடன் அனேகங்கோடி ரிஷிஈஸ்வரர்கள் தோத்திரம் பண்ணிக்கொண்டு மேய்த்து வரும்படியாகச் சகல ஜீவாத்மாகோடிகளையும் ரட்சிக்கப்பட்ட அச்சம்புவாகிய நாதன்பார்வதியம்மனுடன் இடபவாகனமூர்ந்து, மான்மழுசதுர்பூஜ காளகண்ட திரிநேத்திர சடாபாரதாரியாய்க் காட்சிகொடுத்தனர். அதைப்பார்த்த வேதவியாசர் சூரியனைக்கண்ட செந்தாமரைக் கமலம்போல் அகமகிழ்ந்து, முகமலர்ந்து ஆனந்தமாய்க் கூத்தாடி, பஞ்சாங்க நமஸ்காரம் பண்ணி சாம்சிவமூர்த்தியின் திருக்கோலத்தைப்பார்த்து, தன்னிலுமடங்காத மகிழ்ச்சி பூர்த்து ஆனந்தவேர்வை வேர்த்து, அனந்தவிதமாகத் தோத்தரித்து, ஓ மகாவிலாச உல்லாச

கயிலாச வாசியாகிய சுவாமியே! என்று உள்ளமுருகி, என்புகுழைந்து, அன்புதழைய, நின்றார். அப்போது வேதவியாசரைவிடையோனோக்கி, நீரிழைத்ததவத்திற்கு நாமெத்தவுமெச்சினோம். உமது கோரிக்கையைக் கூறினாற் கொடுப்போமென்று மொழிந்தார்; அதுகேட்ட வேதவியாசர் பணிந்து, ஓ நின்மல நிர்க்குண நிராகார நிச்சயமே! ஆத்மக்கியானமும், அறிவும், பத்தியும், பஞ்சபூத்சேஷ்டைகளி லகப்படாப்பான்மையும், மாயையொழித்த மாண்புமுள்ள மைந்தனொருவனை அடியேற்குத் தந்தருள வேண்டுமென்று வருந்திக்கேட்க, அப்படியே கொடுத்தோமென்று அந்திவண்ணன் திருவாக்கருளி வெள்ளியங்கிரிக் கெழுந்தருளினார்.

இப்பால் வேதவியாசர் தபசுநிலை நீங்கிக் கயிலையங்கிரிச் சாரலில்விட்டு, இமோத்கிரிக்குப் போய் பர்ணசாலை யேர்ப்படுத்திக்கொண்டு வைதீகமடங்கட்டி வாசம்பண்ணி, வருநாளையில், ஒருநாள் தீக்கடையுங்கோலை செங்கையாற் பிடித்து அக்கினிபிறக்கும்படி கடைகிறார். அப்போது மைதீட்டிய மயிர்கண்போன்ற செவ்வரிபறந்த கண்களையுடைய அரம்பையானவள் அவ்விடம் வரக்கண்டார். அப்போதவளுடைய மதிமுகமும், மதர்த்தவிழியும், சுவர்னகுடம்போற் கதித்துப்பெருத்த கனதனமும், ஆல்போன்றவயிரும், மால்போன்றரோமவரையுங் கண்ட வேதவியாசர் மிகுமோகங்கொண்டு, விலக்கக்கூடாத மன்மதபாணத்திற் கிலக்காகி, ஒமத்தியில் உய்வது விடுத்துக் காமத்தீயிற் கருகிமெலிந்து, கண்பஞ்சடைந்து கலிங்கி வருந்துகின்றார் அப்படிவருந்துவதைமுல்லைக் கொப்பாகிய பல்லையுடைய வல்லியருந்தானு மன்மதக்கணையால் வாடி, வேதவியாசரை நாடி, மையல்தீரக் கலவிகூடி மருவவேண்டுமென்றோடிவருபவள்போல் நடைகாட்டி கெஞ்சிக்கெஞ்சிப்பஞ்சவர்ண அஞ்சுகமாகி அஞ்சியஞ்சி தஞ்ச நீரேயென்று களிகொண்டு ஒருமரத்தின்கிளையிலிருந்து மறைந்தாள். அப்பால் வியாசர் வேளின்கணையால் மெலிந்துவேசாறி, விரகம் பொறுக்கமாட்டாமல் மையல்மீறி, நேரிற்கண்ட நேரிழையழகும் அவள் நெரிப்பும் அவள்காட்டியகாமப்பார்வையின் குறிப்பும்இவருக்குட்புகுந்து அவ்வளை நினைத்து நினைத்து உருகினார். அக்காலவருக்கு வீரியம்பெருக அது கண்ட கன்னியர் இவ்வீரியம்பூமியில்விழாப்படாதென்னும் புண்ணியத்தை யெண்ணித்தனது கையினாற்றாங்க, அக்காலவ்வீரியமானது கையுநிறைந்து வழிந்து முன்னர் நெருப்புக்கடைந்த குழியில் வீழ்ந்து நிரம்பியது. அது இவருக்குத் தெரியாமல் தன்னைத்தா மறந்தவராய் அரணிக்கோலால் ஓயாமற்கடைய, அப்போது அந்தச்சூடு மிந்தச்சூடு கலந்து அக்கினிஜொலித் தெழுத்ததுபோல மகத்தாகிற திவ்வியசுகமகாரிஷி பிறந்து சிறந்தார். உதயகிரியிலிருக்குஞ் சூரியனுநாணும்படிக்குச் சுயம்பிரகாச காந்தியுடன் தோன்றிய சுகனென்னுஞ் சுதனை அங்குள்ள வேதாகமசாஸ்திர புராணமுதலாகிய கலைகளுக்குரிய புருஷரும், பெரியோர்களும் அரியதவத்திற் குரியோர்களுங்கண்டு மெய்யன் பிறந்தான், எங்களையன் பிறந்தான், என்று துதித்துக் கொண்டாடினார்கள். தருமதேவதை, நீதிதேவதை, வனதேவதை, பூமிதேவதை, இவர் முதலியபேர்களு மகிழ்ந்தார்கள், தேவர்கள் தேவதுந்துமிமுழங்கிப் புஷ்பமாரி பொழிந்தார்கள், சகலாத்மகோடிகளுக்குந் தற்செயலாய்ச் சம்பிரமமுஞ் சந்தோஷமும் பிறந்தன. எங்கும் நித்தியோச்சவங் கொண்டாடினார்கள்.

இப்பாற் பாரிலுள்ள பாவங்கள் பறந்தோடவும், தருமங்குழுமித் தலையெடுத்தாடவும், பெறும்பேறுகலந்த வைபவத்துடன் ஜனித்தபிள்ளையை வேதவியாசர் பார்த்து, தீராதவறுமையி லகப்பட்டுத் தேம்பிய ஒருவனுக்குமாறாத திரவியவாழ்வுவந்தால் அவனடையுமகிழ்வெப்படியோ? அப்படிபோலவும், பிறந்திறந் துழன்ற பிராணனனது நாள்தோறுங் கொஞ்சங் கொஞ்சமாகநல்வினைதேடி அதனாற் புண்ணியங்கூடிவிவேகம் விளைந்தவனுடைய உள்ளக்கிளர்ச்சி யெவ்விதமோ? அவ்விதம்போலவும், அவிவேகிக்கு விரக்தி ஞானமுண்டாகி அதிதீவிரதரபக்குவநேர்ந்து, இருவினையொப்பு மலபரிபாகமுற்று ஜனனமூலை தீய்ந்து இருவினைப்பயனுங் காய்ந்து, உற்பவவிடாய் மாய்ந்து, சுவர்க்கலோகத்தையடைந்து ஆனந்தத்தையடைவதுபோலவும் பிரம்மாநந்தத்தில்மூழ்கியெழுந்தார். அந்தக்காலத்தில் விண்டுவும், பிரமனும், தேவேந்திரனும், மற்றத்தேவர்களும், ரிஷிஸ்வரர்களும் முனீஸ்வரர்களும் சரஸ்வதியும், இலட்சுமியும், ஆகாயகங்கை.

யும், பூமிதேவியும், சித்தசாத்தியரும்வந்து, மூன்மே சொரூபமாகப்பிறந்த மைந்தனை உவந்து ஏந்தி,உச்சிமுகந்து நீராட்டி ஆசீர்வதித்து சட்கர்மங்களையுங் காலக்கிரமமாக நடப்பித்திருந்தனர். அக்காலத்திற் சாமவேதகானத்தை வீணையில் மீட்டித் தேவரம்பைகள் பாடிக்கொண்டுவரப் பார்வதிசமேதராகிய பரமசிவன் ரிஷபவாகனரூடராயெழுந்தருளி, நாரதர் முதலான ஞானக்கடலாகிய மோனமுனிவர்கள் முன்னும்பின்னு மொய்யது வரும்படிக்குவந்து, வேதவியாசருடைத் சேய்தனைப் பார்த்து; தமது கிருபா சமுத்திரத்துடன் திருவருட்கடாட்சஞ் செய்து, மதிவளர்க் கலைவளருமாறுபோல் இப்பிள்ளைக்குமதிவளரக் கலைவளர்கவென்றுவாழ்த்தி,மகாதேவியுடன் வெள்ளுவரைக்கெழுந்தருளினர். பிர்மாமுதலானதேவர்களாதியரும் போனார்கள். இப்பாற் சுகப்பிர்மாவானவர் தந்தையைப் பணிந்து, திரிகரணசுத்தியார் பத்திசெலுத்தி, திடனுவென்கின்ற பிராமணனிடத்திற்போய் வேதாகமசாஸ்திரங்களையெல்லாங் கற்று, புராணசாரம், பூதாசாரம், சிவாசாரம், விபகாரம், அதிகாரம், தருமாதருமம், கருமாகருமம், இவையாவுந் தெரிந்து, ரிஷிகளுக்கெல்லா முதன்மையாயிருந்து மீட்டுந் தனது தந்தையிருக்கின்ற ஆசிரமத்திற்குவந்து முறைமைப்பிரகார மிருந்து, ரிஷிகளுடன் வாசம்பண்ணிக்கொண்டு தனதுவிரிந்த திறமைக்குரிய பெரியவிரதங்களையனுஷ்டித்து, இப்பிரபஞ்ச மயக்கத்தைப் பார்த்தும் பாராமலிருக்கும் நின்மலசித்தத்தை வகித்து, ஒருவர் கண்ணிலுங் கருத்திலுந் தோற்றாமலகன்று நிற்குங் காரணப் பொருள்போற் சகித்திருந்தனர்.

இப்படி சிலநாட்சென்றபின்பு தந்தையான வேதவியாசர் மைந்தனை சுகரை மருங்கிலிருத்தி, ஓ குற்றமற்றகுணவானே! உலகமென்பதும் இவ்வுலகத்திலுள்ள சகலபேதங்களுந் தாறுமாறாகிய மாயை யல்லது வேறில்லை. அவற்றைப்பற்றிக் கூறுவதிலோர் பேறில்லை. பரப்பிரமம் ஒன்றுதான் நிச்சய பதார்த்தம், இதுஎதார்த்தம், அகில புவன சராசரங்களில் உள்ளும் புறம்புமாயுறைந்து விளையாடுகின்றவர் அப்பரப்பிரமமாகிய பரமசிவனே, அவரசைந்தாலல்லது அணுவு மசையாது, அவரே சுதந்தரன். மற்றவர்கள் யாரும் பரதந்திரர். மனுக்களுக்குறைத்திருக்கின்ற வருணாச்சிரமதரும சாஸ்திரங்களின் மூலமா யவரை யறிந்து கொள்ளவேண்டும். என்று இந்தப்படிக்கு எந்தெந்தத் தருணத்தி லெப்படி சொல்லவேண்டியதோ! அந்தந்தத் தருணத்தில் ஆரணாகமாதிகளின் சித்தப்படிக்குப் பலவனுபங்கள் காட்டிக்கொண்டு வந்தனர். அவையனைத்தையு மெய்ஞ்ஞானச் செல்வராகிய சுகரானவர் (தந்தைசொல்மிக்க மந்திரமில்லை.) என்னும் விதிப்பிரகாரம் வித்தியாசமில்லாம லறிந்துகொண்டு, மறையாச்சிரமத்திற் பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், என்று விளம்பியிருக்கின்ற வகையொரு மூன்றையுமறிந்து, பின்பு தந்தையைப் பார்த்து, ஐயா! இவைகளைப் பார்ப்பதினாலுங் கேட்பதினாலும் சொல்வதினாலும் பிரபஞ்ச ஆசாபாசம் பிடித்துக்கொண்டு அலையவேண்டுவதேயன்றி ஒரு சுகமுமில்லை அது சிலருக்குக் கொண்டாட்டம். இப்படியட்ட பண்டாட்டங்களை மாற்றுகின்றஞான நூலொன்றினையே நவிலுமென்று கேட்டார். மைந்தன் வசனத்தைக்கேட்ட வாதராயணர் நகைத்து, ஓ சகலகலைக்கியானமும் உருவாய்ச்சமைந்த பிள்ளாய்! வருண நான்கினுஞ் சிறந்தது ஆச்சிரமம். ஆச்சிரம நான்குஞ் சிறந்தது அமலஞானத்தை வழிபடுஞ் சந்நியாசம். இச்சந்நியாசத்திற்கு மேற்சொல்லிய மூன்றாச்சிரமங்களிலும் பற்று வைக்காமல், உனதுபுத்தியினால் மற்றதை விளக்கிவிடலாமென்று பார்க்கின்றாய். ஆயினுமவற்றை விட்டுவிடப்போமா? மேலேறுகிறவன் முதற்படியிலிருந் தேறுவதா அல்லது முன்படியைத் தாண்டி நான்காவது படியிற் காலூன்றியேறுவதா இதை நீயே சொல்லுக. தராசின் முட்போன்ற மனதையுடையவர்களாய்ப் பாபத்திற்குப் பயமும், தயாரசமும், தண்ணளியும், தவநிலையும், தன்னுலர்போற் சராசரவுயிர்களைச்சமமென்றுன்னி யிருக்குஞ் சீவகாருண்ணியமு முடைய பேருக்கும்; இந்த ஆச்சிரம மூன்றைத்தள்ளிவேறில்லை. இம்மூன்றிலேயே பழகிவரும்போது சகலமுநாசமாகிய சன்னியாசமிருக்கிறது. என்றியம்பிய பிதாவுக்குப் பிள்ளை சொல்லுகிறார்.

ஐயா! இந்தப் பிரபஞ்சவாழ்க்கைகளை போகங்கவிரும்பிய ஆக்கையோர்க்கு நீர் போதிக்கவேண்டியது இதுதான். உன்னையு

ங்கூடச் சேர்த்துக்கொண்டு சொல்லவேண்டாம். நானிந்தப் பூவாசை, பொன்னாசை, பெண்ணாசை என்னு மூன்றையும் விரும்பினவனல்ல, நீரிதை மறந்துபோம். இந்தப் பிரபஞ்சமானது நல்வினை தீவினைகளின் போகமாய் மருவியிருப்பது. இவற்றுள் நல்வினையாவது, தானம், தருமம், பரோபகாரம் இன்னும் பற்பல நற்காரியங்க ளுண்டாயிருப்பது. தீவினையானது, பொய், கொலை, களவு, கள், காமம், இவைகள் மயமாயிருப்பது, இவைதானிருவினை, இவைகளில் நல்வினையைச்செய்தவன் இங்குமங்கும் வீடு, வாசல், மண், மனை, பெண்டு, பிள்ளை, பண்டு பதார்த்தம், பாக்கியம், யோக்கியம், சத்தியம் சிலாக்கியம், விமானம், தேவசமானம், வெகுமானம், சுகுமானம், விதரனம் இவை முதலிய நிதானத்துட னுலகாதிபனாகிக் கமலையோடிருப்பான். இந்த வாழ்வினாற் பெறப்போகிற நயமென்ன? தீவினையைச் செய்தவனோ? தரித்திரனாய் நோய்பிடித்து உண்ணல் - உடுத்தல் - படுத்தல் - கொடுத்தல்- இவைகளற்று, வீடுவாசலில்லாமல் கைகால் குறைந்து கவலை மேலிடுவான், இந்தத்தாழ்வினாற்பெறப்போகிற நஷ்டமென்ன? இந்த நயநஷ்டங்க ளாரையுடையது! செல்வத்தினால் எதுமகிழ்ந்தது? இல்லாமையால் எது துக்கப்பட்டது எண்ணிப் பார்க்குமிடத்தில் இதுவும் பாவமே. அதுவும் பாவமே. ஒரு மரத்துளிரண்டுபாளை. ஒன்று நுங்கைத்தரும் ஒன்று கள்ளைத்தரும் அறிவாளிகளுக்கு சம்பந்தவிசேடத்தால்இரண்டுமொன்றே. அறிவில்லாத பேர்களுக் கதுவேறு இதுவேறு சுகத்தினால் நன்மையும், அசுகத்தினால் தீமையுமில்லை. இவனுடைய பேதமனமானது பிரமாதத்திற் கொண்டுபோய்விடுகிறது. இந்த நினைப்பினால் நெடுந்தூரம்போன யிவன் திரும்பிவந்து எப்படி தேறுவானோவென்றால் சாஸ்திரக்கியானத்தைச் சார்ந்து, சாது சங்கமப் பழக்கத்தினாலோர்ந்து. சங்கதியின்னதெனத் தேர்ந்து, அனுபவத்தாலறிந்து தேறுவான். அறிவாளிகளுக்குச் சுகதுக்கமான வினையிரண்டும். விலங்கு. இவ்வினையிரண்டும் பிறவிக்கிடமே ஐயோ! ஆத்மா கடைத்தேறப்போகிறவழி யீதல்லவே பல்லக்கு-குதிரை-யானை-விமானம்-தேர் - இவைகளிற் பவனிவந்தாலென்ன? கால்நடையாற் பாரெல்லாந் திரிந்து நடந்துவந்தாலென்ன இருவருக்கும் துன்பமின்பமொன்றே.

மேலும் ஒருபிள்ளை துன்பப்படுகிறான். ஒருபிள்ளை இன்பப்படுகிறான். இவ்விரண்டு பிள்ளைகளையுந் தாய்தந்தையர்கள் பார்த்துப் பாதுகாக்கின்றார்களா இல்லையா? சர்வாத்மகனாகிய ஈஸ்வரன் எல்லாரிடத்திலு மிருந்து பார்ப்பது நிசமா அபத்தமா? நிசமானாலவருக்குப் பிள்ளைகளிற் பேதம்வராதல்லவா பெற்றவர்களுக்கு பிள்ளைகளொன்றே அதுபோல் கடவுளுஞ் சகலாத்ம கோடிகளுக்குப் பொதுவாயிருந்து, அவ்வவர்க ளிருவினைப் பகுதியின்படி புசிப்பு யேர்ப்படுத்தியிருக்கின்றார். அந்தப் புசிப்பு எப்படியும் அவ்வவர்களுக்குக் கிடைக்கக் காத்திருக்கின்றது. பிறத்தல், இறத்தல், அனுபவித்தல், ஆநந்தப் படுத்தல் இவை யெல்லாம் இருவினையாளராகிய இருவருக்குஞ் சரியே இப்படிக்கிருக்க ஈஸ்வரத்தியானம் பண்ணி விதியை யனுசரித்து நடவாமல் வெகுபேர் கெட்டுப்போகிறார்கள். மநோ நிச்சயமில்லாமல் உழன்று வாடுகிறார்கள், விருதாவாய் வாழ்வென்றுந் தாழ்வென்றும் பிராந்தி யுட்கொண்டு மயங்கிவீழ்கின்றார்கள். இப்பிராந்தி மயக்கந்தீர்ந்தாற் சகலவினையோடு நினைவுமாறிப் போமல்லவோ? ஓர் நிதானமு முண்டாகுமல்லவோ நாம் இன்னான் நமக்கு வீடு இன்னயிடத்தில் நாம் இன்னதினால் முழுகிப்போயிருந்தோம் நம்மை யின்னான் கைகொடுத்து அழைத்துவந்து நல்லயிடஞ் சேர்த்தான். இதுமேல் வீட்டுக்குப் போகலாம், பேர்கச் சமயம் வாய்க்கவில்லையென்றாலோ அது வாய்க்குமளவும் ஒருபக்கத்தில் வேறொன்று நினையாமற் கிடக்கலாம். என்னுமிடம்வந்தால் சிலநேரத்திற் சகலமயக்கமுந் தெளிந்துபோம். இதுபோலவே மோனமாய் ஒரு மூலையில் விழுந்துகிடந்தாலும் கொண்டபிராந்தி விண்டுபோய்விடும். அல்லது யகன்றுபோய்விடும். கடைசியா யோசிக்குமிடத்திற் பசிக்குக் காணப்போகிறது வுணவு, மற்றதென்ன விருந்தாலும் பயனில்லையென்று யிவையனைத்தையும் ஞானசூக்குமத்தா லறிந்து, ஈஸ்வரபக்தி பண்ணி எந்தவேளையிலுஞ் சிந்தை தெளிந்து க்ஷேமபுமாற்றிக் கண்டுணராமல் ஐயோ! என் வீணிற் கெட்டுப்போகின்றார்கள் நல்வினை தீவினைகளின் சம்பந்தத்தால் விலங்கா விலங்கான பிறப்புமாறாமல் வந்துகொண்டிருக்கும்

இந்த யிருவினைகளில் நல்வினை நல்லதென்றுந் தீவினை தீயதென்று மகிழுவார்கள். இவ்விரண்டு வினைக்கும் வித்தியாசமென்ன இரண்டும் விலங்குதான் ஆனால் நல்வினை செம்பொன் விலங்கு. தீவினை கரும்பொன் விலங்கு. இவ்வளவு தாரதம்மிய முடைய்து இருவகையாய் வினையென்பது. இவனுடைய தன்மையறியாமல் உயிர்வர்க்கங்கள் நல்வினை வேண்டுமென்று மயங்கி முயங்கி தாங்கள் தருமம்பண்ணிற் சுகம்பெறலாமென்று சஞ்சலப்பட்டு அலைகின்றார்கள். ஆனால் கீர்த்தியுண்டு. பெருமை பெறலாகும். அப்பவும் பூஷணையுந் தூஷணையும் உடலுக்கல்லது உயிருக்கொன்றுமில்லை. இப்படிப்பட்ட பெருமையும், புண்ணியமும், வாழ்வும், மேன்பாடும் எனக்கு வேண்டாம். சிக்கனத்திற் சனனமரண வேதையொழிந்து மோட்சமடையவேண்டும். இதற்குவேண்டிய முத்திசொருப லட்சணமெல்லா மொழிந்து, எனக்கு மோக்கங்கிடைக்கும் ஆக்கத்தைத் தேடுமையாவென்று சுகப்பிரமம் சொல்ல, அதற்கு வேதவியாசர் சொல்லுகிறார்.

ஓ மெய்யனே! விதேகதேசத்திற்கலந்த மிதுலாபுரியில் ஜனகமகாராஜன் துரைத்தனம்பண்ணிக்கொண்டு, பத்தினி புத்திர மித்திரபந்தம் யற்றியவனைப்போ லிருந்து பிள்ளைப்பூச்சிபோலும், புளியம்பழத் தோலு போலும் பொருந்தி, மாயையாகிய மரத்தை வேர்களைந்து வெட்டி அது மறுபடியுங் கிளைத்து எட்டிப்பாராம லழியும்படியா யிராக்கினி கொளுத்திக்கொண்டிருக்கிறானவனே சீவன்முத்தன். அவனே பிரமசொரூபன். அவனே உலகத்தோடொத்து வாழ்பவர்களிலொருவன். அவனொருவனே கலைமுற்றுங் கற்று, கற்றோரடிபணிந்து, கல்லாருடன் கலந்து நாலுபேர் நடக்கிற மார்க்கத்தின்படிக்கு நடந்து லோகமாயைக்குட்படாமல் நீறுமூடிய நெருப்பைப்போ லிருப்பவன், அவனுக்கொப்பானவர்களில்லை அப்பேர்ப்பட்ட பக்குவனுகி யடங்கி யிருப்பவனிடத்திற்கு நீ போவையாகில், உன்மனதிலிருக்கிற சந்தேகங்களையெல்லா மாற்றிவைப்பான். நீ யவனை நாடிப்போகிறபோது பிரபஞ்சத்திற்கு வேறுபாடாய்ப் போகாமல் ஞானத்தையொளித்து லோகத்தையநுசரித்து உலகிலுள்ள சாதாரணமான ஒருவனைப் போல்போய்ப்பாரென்று வியாசருரைத்தார்,

உடனே விஞ்ஞான வீறுபெற்ற சுகயோகியானவர் தன்பிதாவைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு சென்று, தேவர்களாற் கொண்டாடப்பட்ட பரதகண்டத்திற் புகுந்து, பலமலைகளும், காடுகளும், நதிகளுங்கடந்து, தாமரை மலர்களானது ஸ்திரீகளுடைய முகங்களுக் கீடுபடாமல் வெட்கித் தண்ணீரில் ஒற்றைக்காலில் நின்று தவமிழைக்கின்ற கோலமும், தேன் பெருகி அருகிலிருக்கும் ஆறுகளிலோடி மருதநிலத்தை வளர்க்கும்படியாகிய வளமும், மண்ணரம்பைகள் விண்ணரம்பையரிடத்தில் மருவியாடும் வண்மையும், மந்திகள் வேர்ப்பலாப் பழத்தை மகிழ்ந்துண்ணும் தன்மையுமுடைய விதேகநாட்டின் எல்லையளவைக் கண்டு மகிழ்ந்துசென்று மிதுலாபுரியைச் சார்ந்தான்.

அங்கே பரதநாட்டியங்களும், சுரக்கியானங்களும் தாளங்களுக்கிணங்கிய மேளங்களும், வீணை, வேணு, தம்பூர், முதலாகிய கருவிகளைக்கொண்டு சங்கீதம்பாடுகின்ற சரசமாதர்களும், சகோரயாழ், மகதியாழ், பேரியாழ், செங்கோட்டியாழ் வாசிக்கின்ற புருஷருடன் சரசசல்லாப உல்லாசங்களை யனுபவித்திருக்கின்ற ஸ்திரீகளும், நாயகனுடன் கலந்துபாடுகின்றவர்களும், கலவிற்புலந்தூடுகிறவர்களும், ஊடல்தவிர்ந்து கூடுகிறவர்களும் கொஞ்சுகிறவர்களும், மன்மதன் கணையால்வாடி இருவருயிரும் ஒன்றா யிணைந்த பேரும் ஆகிய வித்தன்மையான வளங்கள் பலவாயிருக்கின்றசின்னங்களைக்கண்டார். இவையனைத்தையுஞ் சுகயோகியானவர் கண்டுங் காணாதவர்போல் தலைகுனிந்து நடந்து, அங்குள்ள மாடமாளிகை கூடகோபுர மருவிய தெருக்களைக்கடந்து, மிதுலைக்குட் பிரவேசித்து அங்கே வாழை, கமுகு, கரும்பு, இளநீர், பலா, மா, தாழை, மகரதோரணம், கொடி, மேல்விதானம் இவைகளெல்லா மலங்கரித் திருக்கின்ற பலவீதிகளின் விநோதங்களும், பொற்குடங்களாற் பூரணகும்பம் அமைத்திருக்கின்ற மேடைவேதிகளின் சம்பிரமங்களும், இயானை, குதிரை, தேர், பதாதி இவை முதலியவைக ணெருங்கிய பெருக்கங்களும் நவரத்தினங்களாற்செய்த குன்றுகளும், சிங்கார மண்டபங்களும், வசந்த மண்டபங்களும், ஆயிரக்கால்மண்டபங்களும்-காடை-கோழி-கவுதாரிகள்-கடா இவைமுதலியவைகள் சண்டைபோட விட்டிருக்கிற

சந்தடியும், அன்னம், மயில்கள், கிள்ளை, குயில், தாரா, மான், மாடப்புரு, இவை முதலியவை மேயவிட்டிருக்கிற வினோதமும் இராச ஸ்திரீகள் முதலாகிய மற்றெப்பெயர்களும் விளையாடுகின்ற அம்மனை. கழங்கு-பந்து இவை முதலியவற்றின் ஆரபாரமும் இன்னுமுள்ள சம்பிரமங்களெல்லாவற்றையுங் கண்டுங்காணாதவராய் மெல்ல நடந்து, சித்திர விசித்திரமுள்ள இராஜசிங்காசனச் கொலுக் கூடத்தின் முகப்பில் வந்தார்.

இப்படி வந்தவரை அவ்விடத்திற் காவலாயிருந்த துவாரபாலகர் கண்டு, ஆரையா போகிறது நில்லுமென் றதட்டினார்கள். அப்படிக்கேட்ட சுகரானவர் சந்தோஷத்தினால் வாழ்த்தினாலுந் தீவினை வசத்தாற் றிட்டினாலுஞ் சமமாக வனுபவிக்கப்பட்ட சாதுவாகையால், அவ்விடத்திலேயே அசையாமல் நின்றுவிட்டார். உடனே துவாரபாலர் அரசனிடத்திற் போய் ஐயா! ஆரோ ஒருவர் வந்திருக்கின்றாரென்று தெரிவித்தார்கள். சனகராசன் அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் மகானுபாவராகிய சுகப்பிர்மமே வந்தாரென் றறிந்துகொண்டு, இன்று நமக்கு நல்லகாலமென்று கண்ணீருகுத்துக்களித்து, பக்கத்திலிருக்கப்பட்ட மந்திரிகள் சாஸ்திரிகளுடனே எழுந்து எதிர்சென்றுகண்டு பிரதக்ஷண நமஸ்காரம் பண்ணி, மிகுந்த தேவதா வுபசாரத்துடன் அழைத்துவந்து ஆசனத்திலிருக்கச்செய்து, அரக்கியபாத்திய வாசமன்னியங் கொடுத்து, பாதோதகங்கண்டு, வஸ்திராலங்கிர்தம், புட்பம், அட்சதை, தூபம், தீபம், நைவேத்தியம், இவை முதலிய சோடசபூசைகளுநடத்தி, சுவாமி! தேவரீர் இங்கெழுந்தருளிய காரணமியாதோ? அதனைத் தெரிவிக்க விரும்புகிறேனென்று தெண்டனிட்டான். அதற்குச் சுகர் சொல்லுகின்றார். ஓ வேந்தர் வேந்தே! என்றந்தையாகிய வேதவியாசர் உம்மிடத்திற்குப் போகச்சொன்னார். என்னத்திற்காகவென்றால், இறப்பும் பிறப்புமில்லாத பேரானந்த ஞானம் உம்மாலறிந்துகொள்வதற்காக வென்று தெரிவித்தார். அந்தவார்த்தையைக் கேட்ட ஜனகன் பயந்து, ஓ சுகமுனியே! உமது தாயையும் எனது ஆசாரியருமாகிய வியாசபகவான் மகா ரிஷிகளுக்கெல்லாம் மாயையின் லட்சணத்தைத் வகுத்துச்சொல்லி, அம்மாயையைக்கடந் தப்பாற் கரையேறு மார்க்கமுங் காட்டாநின்ற மகானுபாவர். தூய்மைக்குத் தூய்மையானவர். வேதவித்தாக விளங்கியவர். அவற்றியாததும் ஒன்றிருக்கிறதோ? என்னிடத்திற் கிருபைவைத்து மாயையின் புணர்ப்பையும், மறைப்பையும், ஜன்னமரண மற்ற தீரஞானத்தையும் போதித்து, ஆத்மதரிசன மாகும்படிக்குச் செய்தருளித் தன்னியனாக்கி வைத்த சர்வலோக நாயகன், தம்மிடமாக யான் தெரிந்துகொண்டதை மறந்துவிடப் போகிறேனென்று பழம்பாடம்பார்க்கின்றார்போற் றாண்டினாரோ? ஐயா? இது பொய்யாகிய உலகமென்று மெய்யாகிய ரகசியம் உமது தந்தையிடத்துப் படித்துக்கொண்டு கிருதார்த்தனானேன். அவரெனக்கு உபதேசம் பண்ணியிருக்கிறபடிக்குத் தலையான ஞானமார்க்கத்தை உமக்குச் சாற்றுகிறேன். அதனுடைய கிரமங்களெல்லாங் கேட்டருளும்.

ஓ எனது கர்த்தனுடைய காதலனே! பிராமணாள் ஆச்சிரமநான்கையும் அனுசரிக்கவேண்டும். அவற்றுள்முதலாவதாச்சிரமம் பிரமசரியம். அதாவது, வேதாத்தியயனம் பண்ணப்பட்ட உபாத்தியாயரை வணங்கிச் சிஷ்யபணிவிடை புரிந்து வழிப்பட்டு, சாங்கோபாங்கமாய் வேதம் படித்துக்கொள்ளவேண்டும். பிராமணர் வீட்டுகளிற் பிட்சை வாங்கி சாப்பிடவேண்டும். எண்ணெய் தேய்த்துக்கொண்டு முழுகப்படாது. தரையிலே படுக்கவேண்டும். சந்தனாதிவாசனைத் திரவியமுந் தாம்பூலமுமாகா. கோவணவுடை கூடாது. ஈஸ்வரத்தியானம் என்னேரமுமிருக்கவேண்டும். இரண்டாவதாச்சிரமங் கிரகஸ்தம். அதாவது, நற்குண நற்செய்கையுடைய பொற்குடிப் பிறப்பாகிய பெண்ணை விவாகம் பண்ணிக்கொண்டு அவளுடன் மருவிச் சகலதருமங்களையுந் தாட்சியில்லாமற் செய்து, பெரியவர்களுக்குத் தொண்டு புரிந்து, புத்திரப்பேறுற்று வந்த விருந்தினரைப் பரிந்து உபசரித்து, வராத விருந்தினருக் கெதிர்பார்த்து, தான் வகித்த விரத பின்னம் வராமல் அன்னமருந்தி, சத்தியதருமம் நித்தியமென் றிருக்கத்தக்கது. மூன்றாவது ஆச்சிரமம் வானப்பிரஸ்தம். அதாவது, சந்ததியை இல்லறவாழ்க்கையி லிருத்தி தான் பந்தபாசங்களைச்சிந்தி, நாட்டையொருவிக் காட்டில் மருவி பிரமநாட்டம் பிரியாமலிருந்து, தபசுபுரிந்து தியானஞ் செலுத்துதலாகும். இ

வானப்பிரஸ்தத்தில் மருவியிருந்து இதனுடைய மார்க்கமறிந்து மனந்துறந்து, நான்காவது ஆச்சிரமமாகிய படிமேலேறி மோட்சமுடியேறுவார்கள். இப்படி வரன்முறை தப்பாமலனுசரித்து, ஒவ்வொன்றின் பலனையுமுணர்ந்து ஞானம் பிறக்க வேண்டும். இஞ்ஞானத்தால் அஞ்ஞானத்தை அடுக்கடுக்காயறுத்துப் படியேறினவர்கள் பாக்கியவான்கள். என்றரசன் சொல்லவும். அதைத் தீக்கடைக்கோலாகிய தேகத்தில் தேகியாயிருந்த தீப்போன்ற சுகியோகி இராஜனைப் பார்த்து, ஓ ஜனகராஜனே! வேதவிதிப்பிரகாரம் ஒவ்வொரு ஆச்சிரமத் துறையையும் அனுசரித்து, அந்தந்த வித்தியாசங்களைக் கண்டு வெறுப்படைந்து பின்பு ய்தியாச்சிரமஞ்சேர்ந்து, அதனாற்றான் ஞானம் வரவேண்டுமோ ஒரு வேளை நல்ல புண்ணியவசமிருந்து முதலாச்சிரமத்திலேயே ஞானம் வந்துவிட்டால் அது பிரயோசனப்படாதோ! வாராதென்கிற வழக்குண்டோ நல்லது. நல்வினைப் பயனாற் கிடைந்ததானால் மற்றமூன்றாச்சிரமத்தையும் அனுசரிக்க வேண்டிய முறையில்லையே இதனுடைய திரத்தைச் செப்புமென்று சுகர்கேட்க ஜனகவரோதயனவரைப் பார்த்துச் சொல்லுகிறான்.

சுவாமி தேவரீர்! திருவாய்மலர்ந்தபடியே ஆச்சிரம தருமங்களை அனுசரித்துத் தேறாமற்பிறவி ஞானம் பெற்றிருக்கப்பட்ட பெரியோர்களுமுண்டு அவ்வாறு நேரிட்டிருந்தபோதிலும் அவர்கள் வேதத்தில் விதித்தவண்ணம் ஆச்சிரம நான்கையுங் கைவிடாமலனுசரிப்பார்கள் ஞானம் வந்தவர்கள் நான்காச்சிரமத்தையுந் தழுவவேண்டியதென்னவெனில் தாங்கள் படியேறிவிட்டோமென்றும் பற்றில்லாத ஞானவான்களென்றும் அவ்வாச்சிரம தருமங்களை அலட்சியமாய் விட்டுவிட்டால், அகப்பற்றுப்புறப்பற்றையுடைய அக்கியானிகள், தவத்தை விரதத்தை அனுஷ்டிக்க மாட்டாத சோம்பேறிகள், ஆகியவிவர்கள் யாரும் பெரியோர்களே இந்த ஆச்சிரமங்களிலொன்றும் பிரயோசனமில்லையென்று விட்டு விட்டார்களே. பலனிருந்தால் விடுவார்களோ இல்லை இல்லை! நாமேன் அந்த நான்காச்சிரமத்தையுங் கட்டிக்கொண்டழ வேண்டும் என்று விட்டுவிட்டுச் சீக்கிரங் கெட்டுப்போவார்கள் சர்வேஸ்வரன் சகல ஆத்மகோடிகளுங் கடைத்தேறவேண்டுமென்றுமோட்சவீட்டுக்கு ஏறிப்போன்ற படிபோல சரிதை, கிரியை யோகம் ஞானம் என்னுமிவைக்கு முறையே பிரமசாரி கிரகஸ்தன் வானப்பிரஸ்தன் சன்னியாசி என்று சோபனக் கிரமமாய் ஏற்படுத்திவைத் திருக்கின்றார். ஆகையால் பிறவிஞானம் பெற்றவர்களும் அனுசரித்துத்தீரவேண்டும், அப்படிக் கனுசரியாமல் விடும் பெரியோரால் உலகங்கெடும். அதனால் பாவம்படும். ஆசை விட்ட பெரியோரையுந் தொட்டுக் கொண்டாடும். ஈஸ்வரனுக்கும் அபராதியாவர். ஞான முதல்வர்களாகிய தங்களுக்கு அக்கறையில்லாமற் போனாலும், உலகத்தாருக்காகத் தாமடைந்து காட்டி, சிஷ்டா சாரத்தன்மையாய்ச் செய்விக்க வேண்டும். அதைக்கண்ட பூலோகத்தார் பயந்து, பெரியோர்களெல்லாம் அனுஷ்டிக்கின்றார்களேயென்று பேய்போல் விழுந்து, பிடிவாதத்தினாற் றேறுவார்கள். ஓ சகலமுந்தெரிந்த தாணுவே! உமக்கு நான் சொல்லவேண்டியதென்ன. வேதத்திற்குரிய தேவரீர் வேதவிதியை இகழாமல், மூன்றாச்சிரமத்தையு மனுசரித்து அம்மூன்றையும் படிப்படியாயேறி நான்காவதாச்சிரமத்தினந்நெறி நிலையிலிருப்பதே உத்தமம். என்று ஜனகராஜனவில், அதற்குச் சுகயோகி சொல்லுகின்றார்.

ஓ ஞானவேந்தே! தலைமைஞானம் பெற்ற தபோதனர்கள் இவ்வுலகத்தி லிருக்குங் காலத்தில் தங்களுடலை யென்னமாய் வைத்துக்கொண்டிருப்பார்கள்! அத்த முறைமையை எனக்கறைய வேண்டுமென்ன, அறுபகைகளையுங் களைந்த இறையாகிய ஜனகன் இசைக்கின்றான். ஐயா சுகமுனியே உண்மைஞான முணர்ந்த உத்தமர்கள் எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் ஒருயிரைக்கொல்லார்கள். இடையூறு செய்யார்கள். குற்றங்களைத் தேடார்கள். குறை யெவர்க்கும் புரியார்கள். கர்மிகளைப்போற் பந்தங்களிற் பட்டுழலார்கள். பற்றுவைக்கார்கள். மனமும் வாக்கும் வேறுபடார்கள். உள்ளும்புறம்பும் ஒத்திருப்பார்கள். எல்லா உயிரிடத்திலும் பிரியங்கொண்டு ஒருமைப்பட்டிருப்பார்கள். ஒரு பதார்த்தத்தின்பேரில் விருப்பும், மற்றொரு பதார்த்தத்தின்பேரில் வெறுப்பும் வைக்கமாட்டார்கள். உபகாரம் பண்ணினவர்களென்று பட்சமும் அபசாரஞ்செய்தவர்க

ளென்கிற அபட்சமும் நினையார்கள். ஒருவர்மேற் கோபமும், இன்னொருவர்மேற் சந்தோஷமுங் காட்டார்கள். ஒருவேளை நினைப்பும் பின்னொருவேளை மறப்புமாயிரார்கள். என்றைக்கும் ஒரே நினைப்பும் ஒரே சீருமாயுருவார்கள். இறப்பு, பிறப்பு, என்கிற அறியாமையை யகற்றி மெய்ஞ் ஞானவழியில் நிற்பார்கள். இரும்புவேறு, பொன் வேறென்றெண்ணார்கள். கரும்பும், வேம்பும், சமமாய்க்கொள்ளுவார்கள். மகமேருவையும், சிறிய துரும்பையும், சரியென்று மதிப்பார்கள். அதிதீவரபக்குவமாயும் நிர்மலசுத்தப் பரிபாகமாயு மிருந்துகொண்டு அரும்பாய், மொக்காய், அலராய், மலராயிருக்கப்பட்ட மோட்சவீட்டைக்கண்டு அதன ரமுடிவை தெளிவார்கள். ஒருவர் திட்டினாலும் தோத்திரம் பண்ணினாலும் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் அடித்தாலும் இடித்தாலும் சீறினாலும் தூறினாலும் உடலுக்கேயல்லது உயிருக்கொன்று மில்லையென்று கோபங்கொள்ளா திருப்பார்கள். இவ்வுலகத்திலமுந்தி மயங்கார்கள். தவப்பிர்மானந்தத்திற் றங்கியிருப்பார்கள்.

இப்பேர்ப்பட்ட நல்ல ஆத்மாக்கள் முன்சொல்லிய நான்காச்சிரமத்தை நண்ணியிருந்தாலும் நாடா திருந்தாலும் அதனால் அவர்களுக்கு யாதொரு குற்றமுமில்லை. அவர்களிச்சாசுதந்தராள். ஓ சுகப்பிர்மமே! இதுதான் ஞானவரம்பு. இதற்காதாரம் மேனவரம்பு. இது ஞானவான்கள் தேகத்தையெப்படி வைத்திருப்பார்களென்று நீர் கேட்டபடியால் இப்போதுரைத்த இயற்கையின்படியே தேகாபிமானஞ் சிதைத்து, உடற்சார்பில்லாமல் தேகம் பிராரத்துவ கன்மபோகத்தைப் புசிப்பதற் கெடுத்ததென்று பூர்த்தியாய்த் தெரிந்துகொண்டு உடலுக்கு வளர்ப்பம், இளப்பம், என்னவந்தாலுந் தன்னபிமான மென்பதில்லாமல், புளியுமோடும் போல் ஒட்டாமனின்று, எல்லாவற்றிற்கும் ஆத்தாரம் உணவென்று காட்டி, உண்மை ஞானத்தால் நீ யாரோ? நானேரோ? என்றுவிட்டு புரிந்திருப்பார்கள். இனிமேல் உமது தந்தையாகிய வியாசரிடத்திற்குச் சென்று, தன்னைத்தானறியுந் தன்மையை விசாரித்து, யானுஞ் சம்பந்தமில்லாமல் தனியேயிருப்பது தகுதி. என்று ஜனகமகாராஜன் சொல்லிச் சரணம் புகுந்தபோது பிர்ம்மகுலதீபமாகிய சுகயோகியாவவர் கிருபாநோக்கமாக ஆசீர்வதித்து, ஆசாரிய பத்திசெலுத்திச் செலவு வாங்கிக்கொண்டு, வேதவியாசரிடத்திற்கு வந்து பணிந்து ஜனகனிடத்தில்போய்க் கண்டதுமுதல் இப்போதிவ்விடத்தில் நின்றதுவரைக்கு நடந்த விர்த்தாந்தங்களைப் புகன்று, தான் கேள்விப்பட்டுவந்த ஞானசாஸ்திரத்தி லனத்தையெல்லாஞ் சொல்லினர். அவரை வியாசர் குளிர்ந்தருகமாய்க் கிருணியப் பார்வையுடன் கடாட்சித்து; அப்பா! ஞானசாஸ்திரங்களெல்லாம் நன்ருயறிந்துகொண்டா யல்லவா? இனி நீ இங்கேதானேயிரு. என்று சொல்லவும் அவ்வாறே தகப்பனுடைய சீஷர்களாகிய சுமந்தர், பயிலவர், வைசம்பாயனர், இம்மூவருடன் கலந்து, செயல்வேறு சிந்தனைவேறில்லாமல் வேதமோதிக்கொண்டிருந்தார். இப்படியிருக்கிற நாளையில் அருமையான வேதசாஸ்திர புராணங்களை யெல்லாம் ஐயமறப்படித்திருக்கிள்ற சீடர் மூன்றுபேரும்ஆசாரியருக்குப் பிரதக்ஷணம் பண்ணி நமஸ்கரித்து, சிரத்திற் கரத்தைக்குவித்து, சுவாமி! தேவரீரிடத்திற் கற்றுக்கொண்ட வேதமுதலியவற்றைத் தங்களுடைய போதனை சத்திப்பிரகாரம் பூலோகத்திலிருக்கின்ற பேர்களுக்கெல்லாஞ் சொல்லி வைத்தால் உலோகோபகாரமா யிருக்கும். தங்களுக்கும் பிரதிஷ்டையுண்டாம். ஆதலால், அடியேங்களவ்வாறு சொல்லும்படி அனுக்கிரகம்பண்ணவேண்டும். என்று வணங்கிக் கூறவும் மலரகிதமான வேதவியாசர் நகைத்துச்சொல்லுகிருர்.

ஓ மாணவர்களே! உலகத்திலுள்ள யாவருங் கடைத்தேறும்படியாக மெத்தவு நல்ல வார்த்தையைச் சொன்னீர்கள். இது முக்கியஞ் செய்யவேண்டிய காரியந்தான். மேலும் நல்ல நூல்களைக் கற்றவன் தன்னைப்போற் பல்லோரு நால்வராகப் போதித்துவைக்க வேண்டும். அப்படிக்குச் சொல்லி வைக்காத பேர் படியாத மூடரிடத்திற் பயன்பட்டு, அவர்கள் செய்த தவங்கெட்டு, நாளுக்குநாள் குறுகிக் குன்றுவார்க ளென்றிருக்கிறதை நீங்களோர்தி யுணர்ந்தததானே, அதற்கொரு திருஷ்டாந்தம் பாருங்கள். பஞ்சப்பிரணவ மந்திரமாகிய மௌனத்திலிருக்கின்ற ரிஷிகள் மோட்சமடையும்போது, தம்மைச் சூழ்ந்த சகலருங் கதிபெறவேண்டு மென்று

உபதேசித்துப் போகின்றார்கள். அவர்கள்
மறுவற்றஞான விருதயர்களாகையால், தம்
மைப்போல் மற்றையரையும் பார்க்கின்றார்
கள். நீங்களுமிப்படியே போதித்து உபசரிக்
கவேண்டியது முறைமையே. என்றுபுகன்ற
வேதவியாசரை அவமுனிவர் மூவரும் பார்
த்து, அப்படிக்குத் தருமமிருந்தாலுந் தங்க
ளுடைய பேரருளைப் பெருந்துணையாகக்
கொண்டு போனால் எங்களுக்குப் பெருமை
யுண்டு. ஆதலாற் செல்வு கொடுத்தருள்வீ
ரென்று கேட்டார்கள். அச்சொல்லின் பொ
ருளை யறிந்தவியாசர் மனமகிழ்ந்து ஓ அன்
பர்களே! நீங்கள் எல்லா நூல்களையுஞ் சாம்
பிரதாயமாய்க் கற்று என்னிலுஞ் சிறந்த கீர்
த்திபெற்றிருந்தும், நாமேபோய் உலகத்திற்
சொல்லி வைப்போமென்று வித்தியாகர்வம்
படையாமல் ஆசாரியருடைய அருளைப்
பெற்று அப்பாற் போதிக்கவேண்டுமென்கிற
அன்புடனே இருந்தீர்களாகையால், நீங்
கள்தான் எனக்கு வந்த பிள்ளைகள். இப்போ
துதான் சந்தோஷப்பட்டேன். என்னிடத்
திற் கற்ற நூலுங் கேட்ட கேள்வியுஞ் சிறக்
கக்கடவது. என்று புகன்று மூன்று பிள்ளை
களையும் எடுத்து மார்பிலணைத்து, முத்தமிட்
டு சுகனைப்பார்க்கிலும் அதிகமென்று சொ
ந்த பந்ததொந்தங்கட்டி, பூலோகத்தில் வே
தங்களை விரிக்கும்படிக்கு அனுப்பிவிட்டு,
அகந்தையற்றிருக்கும் போகியாகிய வேத
வியாசர் யோகியாகிய தன் குமாரனுடனே
பர்னசாலையிலிருந்தார். அப்போது சரிகம
பதனியென்னும் இசையை யாழிலேற்றி வா
சிக்கப்பட்ட நாரதர் வந்தார். அவரைக்கண்
டமாத்திரத்திற் பெரியாருக்குச் செய்ய வே
ண்டுவன வெல்லாய் பிசகாமற் செய்து பூசி
த்த வியாசரை நாரதர் நோக்கி, சுவாமிவேத
வியாசமூர்த்தியே! நானிந்தத் தபோவனத்
திற்கு வரும்போதெல்லாஞ் சப்தமேக முழக்
கம்போலும், சமுத்திர இரைச்சல்போலும்,
சற்றேனு மோயாமற் சார்வதாய் முழங்கிக்
கொண்டிருக்கின்ற வேத கோஷ்டம், இப்
போது சற்றுமில்லாமலிருப்பதற்குக் காரண
மென்ன? விருக்க மிருக்குமிடத்தில் வேரிரு
க்கவேண்டும், வேதவிருக்கமாகிய தேவரீ
ரிருக்கும்போது சுற்றிலும் பரவிப்பற்றி யிரு
க்கும் வேராகிய சீடரைக் காணேமே! இஃ
தென்ன காரணமென்று வினவ வியாசர்
சொல்லுகின்றார்.

ஐயா மகதியாழ்முனியே? இந்தக் கர்ம
பூமியிலுள்ள பிராமணருக்கு வேதமோதி
வைக்கும்படிக்கு என்னிடத்தில் வாசித்த
சீஷர்களை அனுப்பிவைத்தேன். இவ்விடத்
திற் படிப்பவரொருவரு மில்லாமையால்,
வேதமோதுகிற சந்தடி அற்றிருக்கின்றது.
மேலும் உம்முடைய கடாட்ச வீட்சண்ணி
யத்தினால் என்பிள்ளையாகியசுகனும் நானும்
பூமியெல்லாந்திரிந்து, வண்டுபோற் சுழன்
று, வேதங்களையெல்லாம் போதிக்கப் போகி
ன்றோம். அப்படிக்குப் பிரயாசை யெடுத்துக்
கொள்ளாவிட்டால் வேதம் பரவுகிறதா யிரு
க்கவில்லை யென்று சொன்னார். அந்தப்பேச்
சைக்கேட்ட நாரதர் ஆனந்தித்து, ஐயா
வியாசமுனியே! இந்தப்பிரகாரஞ் சொல்லிப்
போதித்துத் திரியவேண்டியது. முறைமை
தானென்று சொல்லிச் செலவுபெற்றுக்கொ
ண்டு போய்விட்டார். இப்பால் வியாசர் சுக
யோகியுடன் கடல் சூழ்ந்த காசினியை வல
மாகத் திரிந்து, நமது பிள்ளைக்கும் பூமியிலு
ள்ள பிள்ளைகட்கும் வேதாத்தியாயனம் பண்
ணிவைத்து, சாங்கமாய் நான்குவேதமும்
வரும்படியாகபண்ணி, வேதாந்த ரகசியமும்
விளம்பியருளினார். பிற்பாடு ஆகாயகங்கை
யில் ஸ்நானமாட வேண்டுமென்று பிள்ளை
யை ஒருபக்கத்தில் நிற்கவைத்து ஸ்நானஞ்
செய்யப் போனார். இப்பாற் சுகப்பிரமம் ஒரு
சுசியாகிய பூமியிலிருந்து வேதபாராயணம்
பண்ணும்போது, செவந்தசடாமுடிதாரியா
கிய நாரதர்வந்து சுகரைப்பார்த்து, அப்பா!
நீ பூரணசப்தமாய், தொனியாய், நாதமய
மாய், கீதலலிதமாய் வேதமோதுவதைக்கே
ட்டு உன்னைப் பார்க்கவந்தேன், மெத்தவுஞ்
சந்தோஷமடைந்தேன், ஆனந்தமாச்சுது.
உனக்கு வேண்டிய காரியத்தை விரும்பிக்
கேட்டால் நான் கொடுக்கிறேனென்றார்.
அதற்கவர், சுவாமி? எனக்கு வேறொன்றும்
வேண்டாம். என்னை இன்னனென்றறிந்து
அப்பால்என்னையென்பதும், அறிந்தவனெ
ன்பதும், அறியத்தக்கதென்பது மற்றுச்சுக
முற்றிருக்கும்படிக்கு வரங்கொடுக்க வேண்டு
மென்று வழுத்தினார். அதைக்கேட்ட நார
தர் மகா சந்தோஷமடைந்து, இவனுக்குப்
பிரமஞானம் போதிக்கவேண்டுமென்று தன்
மனதில் நினைத்து, நாமிவ்வுலகில் விதைக்
கப் பருவகாலம் பார்த்திருந்த பொருளைக்
குறித்துக் கேட்டபடியால், இப்பொருளுக்

சூரியவன் இவனே யென்று வேதமுடிவின் சாரத்தை விளம்பத் தொடங்கினார்.

ஓ வேதாந்தசார மறிவதற்கு மிகுயோகியாகிய சுகயோகியே? வருணமென்றும், ஆச்சிரமமென்றும், நன்னான்காய் வகுத்துள்ளன. இவற்றுள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரமென்பனவருணம். இவ்வருண நான்கும் அஞ்ஞானப் போர்வையல்லது வேறில்லை. உயர்ந்தஜாதி அதுவென்றும், அதுவே முக்கியமென்றும், தாழ்ந்த ஜாதியிதுவென்றும், இதுவே தாழ்மையென்றுமில்லை. அஞ்ஞானமகன்ற விஞ்ஞானம் எந்தயிடத்தில் விளங்குகிறதோ! அதுவே பிரதானம். கருமத்தினாற் சாதியல்லது, சென்மத்தினாற் சாதியில்லை. சாதமென்பது பிறப்பு. சாதியென்பது அப்பிறப்பில் ஆண் பெண் அலியென்னும் பிரிவு. இவ்வாண்பெண் அலியென்னும் பிரிவில் உயர்வு தாழ்வு பேசுவதெல்லாம் அஞ்ஞானம். பிரமசரிய கிரகஸ்த வானப்பிரஸ்த சன்னியாசத்துவ மென்பன ஆச்சிரமம். இவ்வாச்சிரம நான்கும் பிரபஞ்ச மயக்கமேயன்றி வேறில்லை. பிரமசாரி யென்பவன் விரதியாய்ப் பிச்சையேற்றுண்பவன். கிரகஸ்தனென்பவன் நாட்டிலிருந்து இல்லறஞ் சேர்ந்து நடிப்பவன். வானப்பிரஸ்தனென்பவன் காட்டிலிருந்து துறவறங்காட்டி நொடிப்பவன் இம்மூன்றிலும் பயனில்லை. அப்பால் யதியாச்சிரமமொன்று, இதைத்தான் பெரியோர்கள் பெருமையுளதென்று ஒப்புக்கொள்ளுவது. ஆயினும் இதற்குத் தயாரசமுஞ் சத்தியமும் இருக்கவேண்டியது. இவ்விரண்டிற் கடுகத்தனை தப்பிப்போனால் மலையத்தனை நரகம் வந்து முன்னிற்கும். தெரியாமற் றவறினேனென்றாலும், உயர்ந்தபடி யுற்றதேதலால் தண்டனையதிகம். மற்றதில் வண்டியுருளைப்போற் கீழது மேலதாய்ச் சுழன்றுக்கொண் டிருக்கப்பட்ட சென்னமரண மானவே தீரா. இவை யென்றைக்குத் தீருமென்றால், நாமென்பது நசிந்து; நமதென்பது தவிர்ந்து, ஆணவமல மகன்றதானாற்றீரும். அப்போது சராசர கோடியாயுள்ள சகலாத்மாவுந் தானேயல்லது. வேறில்லை. சமஸ்த தேகாதிகளெல்லாஞ் சம்பந்தமாயை. ஆத்மாபரிசுத்தம்! அது மாயாமயக்கத்திலகப்பட்டு மருண்டு கிடக்கிறது. களங்கசகிதமாகிய உடலுக்குங் களங்கரகிதமான உயிருக்குஞ் சம்மந்தமில்லை. இதை என்றைக்குயதார்த்தமாகக் காண்பானோ அந்த இடமேமோட்சம். அப்போது, நிராமயமும், நிட்களமும், நிர்விகற்பமும், நிற்குணமும், தானேயாவான். இப்படிக்கு யிருளுமொளியும் இல்லாத யிடத்திலிருந்து பார்க்கிற சகலமும் எளிதில் வெளிச்சமாய்த் தோற்றும். இப்படிப்பட்ட ஞானசொரூபியாய்த் தானிருக்க, அதைவிட்டுவிட்டு மாயாமயக்கமாகிய உலகத்தைத்தானென்றெடுத்து மேற்போட்டுக்கொண்டு தனக்குரிய ஞானசொரூபத்தைமறந்து எத்தனை நாள் திரிகின்றானோ! அத்தனை நாளுந் தன்னைத்தானறிகிற தெளிவுவரமாட்டாது, என்றுசொல்லி நாரதர் போயினர்.

இப்பாற் பிரபஞ்சவாஞ்சை மயக்கத்திற் படியாமல் தற்சுபாப தற்சொரூபமான சுகயோகியானவர் தனக்கு ஞானோபதேசம் பண்ணிவைத்து அனுபோகமுங் காட்டிய ஆசிரியர்போன திக்கைநோக்கி அன்பாய்த் தீர்க்கதெண்டன்செய்து, சோதிவிளக்கமான சுத்தஞான சமுத்திரத்தில்மூழ்கி, சனனக் கடலைத்தாண்டி, எங்குந்தானாகிய பிரமஞ்ஞானம் விளங்கி, நற்றவமுடைய உத்தரதிசைக்குப் போகவேண்டுமென்று வியாசர்பாற் சென்று பணிந்து, செலவுகேட்டார். அதற்கவர் அடாசுதனேஎன்னைப்பிரிய உனதுமனமெப்படிக்கிசைந்ததோ அப்பா என் பிரியமானவனேயென்று யிரங்கினார். அக்காலையிற் சுகயோகி நாரதருணர்த்திய ஞானதீர்க்கரிஷியை யெடுத்துக்காட்ட, அதைக் கேட்ட வியாசர் பிரமித்துப் புகழ்ந்து மகிழ்ந்து, சுகுணமானபிள்ளை தன்னைவிட்டகன்றுபோகின்றானே யென்னுங் கிலேசத்தால் ஒன்றுந் தோன்றாதவராகி யிருந்தனர். இப்படி பெருந்துயரப்படுகிற பிதாவைப் பிள்ளைதேற்றி, பொருமலைமாற்றி அதிதீவிரமாகிய யோகப்பரியேறி பூலோகத்தைப்பிரிந்து ஆகாயமார்க்கத்திற் போகின்றார். அப்படியவர் போகும்போது மேலோக வாசிகளாகிய தேவர்கள் கண்டு அநேகங்கோடி சூரியபிரகாசம்போற் சுகப்பிரமம் இதோ போகின்றாரென்று பூரித்து ஆ ஆ இவர் குலஞ்செய்த நல்லம்பாதோ வேதவியாசரிழைத்த தவமெத்தன்மைத்தோ யிந்தப்பிள்ளை பிறவிக்கியானோதய மூர்த்தியாய்ச் சனித்ததே. என்று யாவருங் கரத்தைச் சிரத்திலேற்றி சிவசிவவென்று தியானித்துத் தெரிசனங்கண்டு தெளிவுகொண்டிருந்

தார்கள். இப்பாற் சராசரங்களியாவுந் தானாயிருக்கப்பட்ட சுகயோகியானவர் பிரசண்ட மாருதவேகம் பின்னிட்டுப் போகும்படியாய்த் தான்முன்னிட்டு வடவாமுகத்தை நாடிவருகிறவேளையிற் சகலசராசரங்களையும் பார்த்து, உங்களிலே ஒருவன்தான் எவனோவென்றும் யின்னானென்றும் யானென்றுரைத்து, லோகோபகாரத் தந்தையாகிய வேதவியாசர் இந்தவழியேவந்து மைந்தாவென்று என்பெயரைச் சொல்லிக் கூப்பிடுவாராகில், நீங்களியாவரும் ஏன் ஏன் ஏன் என்று சொல்லுங்களென்றியம்பி அவ்வாகாய மார்க்கத்திற் சோதிமயமாய்ச் சொல்லுகின்றார். அப்போதவ்வாகாய மளாவிய சிகரங்களையுடைய மலைச்சுனைகளில் தீர்த்தமாடவருகின்ற தேவஆதிரீகள் வஸ்திரங்களை களைந்துவைத்து நிர்வாணமாய் நீராட், அக்காலையில் அந்தவழியாய்ப்போகிற இந்தச் சுகயோகியை யவர்கள் பார்த்து, நாணமடமச்ச முதலியவைகளில்லாமல், தங்களிச்சையின்படிக்கு ஸ்நானம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அதைக்கண்ட சுகப்பிர்மம் விகல்பமில்லாமல், பிர்மக்ஞானத்துடன் செல்லுகின்ற தனது விசையினாற் பர்வதங்கள் மலைகள் விருட்சங்கள் ஆகிய விவைக்ளெல்லாமசைந்தும், முறிந்தும், அறுந்தும், ஒடிந்தும், படிந்தும், பொடிப்பொடியாய்ப் போகத்தக்கதாக மகாமேருவுக்குவடபாரிசத்திற்புகுந்துபோய்விட்டார்.

இப்பால் இரணிய கருப்பனுக்குச் சமானமான வேதவியாசர் அரணியிலுற்பவித்துப் பிரிந்துபோன ஒப்பில்லாத புத்திர சோபத்தினால் அவர் போனவழியைத் தொடர்ந்துபோகின்றார். அப்போது இமையா நகட்டத்தவர்களெல்லோரும் பார்த்து ஐயா! உம்முடைய குமாரன் இளஞ்சூரிய விம்பம்போல் ஆகாயமார்க்கமாய்ப்போனார். அவர் போனவேகத்திற் பர்வதங்களும் குலுங்கி பட்சி மிருகங்களுங் கலங்கி, விருட்சங்களும் விலங்கிப் போய்விட்டதுகள். இன்னேரம் நெடுந்தூரம் போயிருப்பார். நீர் நடக்கிற நடைக்கும் அவர் சென்றவேகத்திற்குஞ் சரிப்படாது. நீர் அவரை எந்தநாளையிற்காணப்போகின்றீர் ஏதேது கண்டுபிடிக்கமாட்டீர் வீணேவிண்ணிலலையாதீர் இந்தமட்டில் மனந்தேறி சுகமாய்ப் பூமியிலிழிந்துபோமென்றுரைத்தனர். இப்படி சொல்லியும் அச்சொல்லைத்தட்டி, பிள்ளையைப்பற்றி பெருங்காட்டைச்சுற்றி, பெருமூச்சுவிட்டு ஒருபர்வதத்திற்போயிரங்கினார். அவ்விடத்திலுள்ள சுனை நீரில் விளையாடிக்கொண்டிருந்த தேவஸ்திரீகளியாவரும் வியாசரைக் கண்டுங் காணாததற்குமுன்னே வெட்கப்பட்டு வஸ்திரங்களினால் மானத்தை மறைத்துக் கொண்டார்கள். அதை வியாசர் கண்டுசெற்று நின்று, இதற்குமுன் இந்த வழியிற்போன ரிஷியைப் பார்த்தீர்களாவென்று அவர்களைக் கேட்டார். அதற்கவர்கள் ஆமென்றார்கள். ஆனால் அப்போது இப்போதுடுத்திய ஆடையைத் தரித்தீர்களா வில்லையாவென்றார் யில்லையென்றார்கள், ஓ தேவஸ்திரீகளே! முன்சென்றவன் என்மகன். நானவனைத்தேடிவந்தேன் என்பெயர் வியாசன். அவனும் புருஷன். நானும் புருஷன். அப்படியிருக்க அவன் போனபோது அச்சமில்லாமலாடிக்கொண்டிருந்த நீங்கள் என்னைக்கண்டு லச்சைபட்டு வஸ்திரமுடுத்திக் கொள்ளவேண்டிய பரிசென்ன? இந்தப் பேதத்தைப்பகருங்களென்று கேட்டனர். அதற்கந்தஉசிதகசித உத்தமஸ்திரீகள் ஐயா வியாசரே முன்னேபோன முனிவரானவர் மோகமாயையற்றவர், சொரூபக்கியானமுற்றவர், அதனாலெங்கு மவ்ராயிருப்பாறென்றுணர்ந்து நிர்வாண தசையினின்று ஸ்நானம்பண்ணினோம். அவர் மாயப் பிரபஞ்ச மயக்கறுத்த ஞானவானாதலால், எங்களுக்கு அவரைப்பற்றிப் பேசவேண்டிய சம்பந்தமில்லை. எங்களுக்கு அவர் வரம்பு, அவருக்கு நாங்கள் வரம்பு. நீரவ்வாரல்ல. இப்பிரபஞ்ச பாயையின்மூழ்கிய பெருங்கியானி உம்மைப்பார்த்தவுடனே உடலங் கம்பித்து வெட்கமேலிட்டு புடவையை உடுத்திக்கொண்டோமென்றார்கள்.

இம்மொழியைக்கேட்ட வேதவியாசருக்குத் தெளிவுபிறந்து நிரம்பிய விசனமாய் நெடுமூச்செறிந்து, பிள்ளையை நினைந்து நினைந்து, பிரிவாற்றாமையாற் பெருங்குரலிட்டு, அப்பா மகனே ஐயாசுகனேயென்று கூவித்தலைப்பட்டார் அப்போ தங்ஙன நிலைத்த மலைகள்-மரங்கள் - செடிகள் - செட்டுகள்- முதலியனவும் ஓரறிவுமுதல் ஆறறிவீறாய்க் கூடிய ஆத்மகோடிகளியாவும், அண்டரண்டங்களும் ஏன் ஏன் ஏன்? என்றெதிர்மொழி ஈந்ததுகள். அதுகேட்ட வியாசர் வெருண்டு, தமது புத்திரனைக் கூவினால் இந்தப் பூமிமுதல் மகாபூதங்களெல்லாம் ஏனென்று

கேட்கின்றன. இதை யோசிக்குமிடத்தி லிப்பூமியாயும், இப்பூமியிலுள்ள பொருள்களாயும் பஞ்சபூதங்களாயும், இப்பஞ்சபூதபேதங்களாயும், சகலாத்ம கோடிகளாயும், பரவிய பரப்பிரம்மம் ஒன்று. அதை நீ தெரிந்துகொள்ளாமல் தகப்பனென்கிற பெருமையும் தனயனென்கிற அருமையும் பாராட்டுகிறாய். பிள்ளையார் தந்தையார் ஆருக்கார் பிள்ளை, ஆருக்கார் தகப்பன், நீவேறு நான் வேறென்பதென்னை? எல்லாமொன்றேயன்றி வேறென்பதொன்றுமில்லை என்றின்று முதலென்றுங் கண்டுகொள்ளென்று அறிவுறுத்துகிற மொழியாக்கும் பிறந்ததென்று தெளிந்து வேனென்றுந் தெளியா மனத்தினையுடையவராகி, ஓ என்செல்வனே ஓ என்சிறுவனே ஓ என் சேயனே என்று மகா திகிலுந்துயருமாயிருந்தார். இப்படிக்கு பிரபஞ்ச ஆசாபாசமென்னும் ஆபாசமகற்றிய வேதவியாசரும் புத்திரபாசப்பற்றுவிடாமல் தெய்வமே தெய்வமேயென்று தியங்கிமயங்கினர். அந்நாளில் பிர்மா-விஷ்ணு-தேவேந்திரன்-முப்பத்துமுக்கோடிதேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள்-யட்ச கின்னரர் கருடகாந்திருவர் சவனகாதிமுனீஸ்வரர்சிவகண பூதகண இராட்சசகணங்கள் ஆகியவிவர்களுடன் பச்சைக்கொடியாகிய பார்வதி கலந்தபாகராய் பவளம்போன்ற பரமசிவன் இடப்வாகனரூடராகி, மான்மழுசதுர்புச காளகண்ட திரிநேத்திரசூல டமரக கபாலமுடைய கோலத்தோடு ஆலகாலவிடத்தைப் பட்சித்து அரியயனாதிகளாகிய தேவர்களை ஆதரித்த கருணாரசத்தைவகித்து எல்லாவற்றிற்கு மூலகாரண முதல்வனாயிருந்து அருள்மூதாட்டி யாதரிக்குந் தமது கிர்பாநோக்கத்தைப் பரப்பி வேதவியாசரிடத்திற்குவந்து பெருங்காட்சியாய் நின்றனர். அப்போது வேதவியாசர் எழுந்து, அநேகவிதமாகவிழுந்து, சாமவேதக் கானஞ்சாற்றிப் பரவசமடைந்து, பாயுங்கண்ணீருடன் என்புகளுருகப் புட்சமாகக் கூத்தாடி தன்பிள்ளையைப் பிரிந்தவருத்தமும் பாசபந்தப்பொருத்தமும் பறந்தோடிப் போகும்படியாய்ச் சிறந்த தேவாதிதேவனைப் பணிந்து, மீட்டுமெழுந்திருகைகட்டி வாய்பொத்தி பத்தியுடன் புத்தியாய்ப்பாடினர்.

அதற் கெம்பெருமானாகிய சாம்பவமூர்த்தி வியந்து புகழ்ந்து சிரக்கம்பஞ்செய்து, ஓ பேரறிவுடைய பெரியோனே! நீர் பூர்வ காலத்திற் பூரணக்கியானத்துடனின்று நம்மைக்குறித்துத் தபசுபண்ணியபோது உமக்கு வேண்டியதென்னவென்று நாம்வந்துகேட்க, பஞ்சபூதத்தையுஞ்செயிக்கத்தக்கபாலகன் வேண்டுமென்றீர் நாமவ்வாறே பட்சமாய் அநுக்கிரகம்பண்ணினோம் அவ்வாறேபிறந்த புத்திரன் பரமானந்த ஞானத்தைப்பெற்று ஒருவரும் பெறுதற்கரிய புகழைக் கைக்கொண்டு பெரியவனாயினன். நீர் பிரபஞ்சமாயையி லழுந்தி, அறிவீனரைப்போல துன்பப்பட வேண்டிய துயரமென்ன நீர் வேதஞ்சுரக்கிற வாக்கினால் மெஞ்ஞானசொரூபமெல்லாம் விளம்பிக்கேட்டு இப்போது ம்மதுகான்மூளையைகுறித்துக் கவலைப்படுவதுஞாயமோ? இப்பிரபஞ்சத்திற்கு அதீதமாகிய ஞானத்தி லிருக்கிறபேர்கள் சசூக்ஷவிசாரத்தினுந்தழுவி, தாங்கொண்ட கருத்திற்குத்தவறுதல் வாராமற் பிள்ளைப்பூச்சிபோற் பூரணகளையுடன் பொருந்திவாழ்வார்கள். அப்படித்திகில்லாமற் பரிபூரணக்கியானம்பெற்ற பாக்கியனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்கிற மனவலிமையுடன் அவனைத்தேடிப் புறப்பட்டது உமக்கு முறைமையோ அப்படிக்கு நீர் போனாலும் அவனுமக்கு அகப்படமாட்டான். ஒருவேளை யகப்பட்டாலும் உம்முடனே கலந்திருக்க வரமாட்டான். பூமி, கடல், மலை, மேகம், சந்திரசூரியர் முதலாகிய பிர்மாண்ட முள்ளவரையிலும், உமது பெயரு முமது பிள்ளைபெயரு நிலைநிற்கும்படிக்குக் கீர்த்திதேடிக்கொண்ட மைந்தனைக் குறித்துச் சிந்தனைப்படுவதை மறந்துவிடும். ஆனாற் காணவேண்டுமென்று எப்போது நீர் அபேக்ஷிக்கின்றீரோ அப்போது உமது பிள்ளையின்சாயை உமக்கு தோன்றும்படியாய் வரங்கொடுத்தேன். நீர் பூலோகத்திற்குப்போம் என்று செலவுகொடுத்துத் தருமசமுத்திர தாணுவானவர் மறைந்துவிட்டார்.

இப்பால் வியாசர் பரமேஸ்வரருடைய அனுக்கிரகத்தைப்பெற்றுத் தம்முடைய பர்ணசாலைக்குவந்து மனோநிச்சயம் வைத்து மைந்தன் பிரிவை மறந்து, உலகத்தாருக்கு உண்மைக் கியானத்தை அவர் தெரிவிக்காமல் ஒரு பரியாசமாய்ச் சொல்லி, வேதநான்கையும் விரிந்தபுராணங்களையுந் தழுவி நடக்கும்படி போதித்து வருகின்றார். இவ்வாறு

போதித்து நடத்திக்கொண்டு வரும்போது மெய்மைக்கியானம் விருதாவாய்ப் போய்விடுகிறதே யென்று விசனப்பட்டு, ஆயினும் இதை யொருவருக்கும் விளம்பலாகாது. ஏனெனில், நாரதர் நம்முடைய பிள்ளைக்குப் பூட்டைத்திறந்து காட்டிவிட்டுப் போயினர். நாட்டைத்தழுவிக் கொண்டிருந்த நமது மகனாகிய நல்லறிவாண்மைபடைத்த சுகன் பக்குவப்பட்டிருந்தமையால், காட்டிய கற்பூரதீபச்சோதிபோற் கலந்து பரிபூரண பாக்யவானானன். ஆதலால், இனி நாம் செய்ய வேண்டுவ திதுவேயென்று இகத்தைத்தழுவி அதற்குவேண்டிய சாத்திரங்களை யெல்லாம் இதவாயேர்ப்படுத்திக்கொண்டிருந்தார் என்று சகலகலைக்ஞானசம்பன்னராகியவீஷ்மர்விளம்ப, இதைச் சகலமானபேருங் கேட்டு அறுவகைப்பகைகளையுமறுத்து, அப்போதே ஞானம்பெற்ற அன்பர்களைப்போல் மகிழ்ந்து புராணவைராக்கியப் புனிதரானார்கள். இந்தச் சுகப்பிரம்மத்தின் சரித்திரத்தைப் படித்தபேருங் கேட்டபேரும் லோகவாழ்க்கையில் மூழ்கியிருந்தபோதிலும், நொடிக்கு நொடி மனத்தெளிவும், அப்போது நேரிட்டிருக்கிற வியாதியும், மனோவியாதியு நீங்கும், தூய்மையும், இரக்கமும் உடையவராவார்கள். மேலும், ஒருக்கால் நாரதர் பதரிகாச்சிரமத்திற்குப்போய்ப் பேசுகிற சங்கதியைச் சொல்லுகிறேன் கேட்டிடுகவென்று காங்கேயர் பகரத்தொடங்கினர்.

---

## பிரமதரிசனத்தைப்பற்றிக்கூறிய நாரதமுனிவர் கதை.

ஓ தயாளுவாகிய சனார்த்தனனுக்கு மைத்துனனான சதுரனே! மூலக்கமலத்தில் முளைத்த முதல்வனான பிராமணனுடைய மகனாகிய நாரதர் பூமண்டலமெல்லாந் திரிந்து, மகதியாழ்பாடி வரும்போது, பதரி காச்சிரமத்தின் வழியாய்வந்து, அங்கிருக்கப்பட்ட மகானுபாவராகிய நாராயணமூர்த்தியைக் கண்டு, அவரிடத்தில் மிக மதுரவாசகமாய் யிதனைப்பேசினர். ஓஐயரே! ஆன்மாவான து சொற்பமான துரித்திபோன்ற பருத்தவுடலு மெடுத்தற்குப் பயனென்ன வென்று விசாரிக்கு மளவில், பரப்பிரம்மத்தை உள்ளும் புறம்பும் ஒத்திருக்க ஏகசோதி மயமாய்க் காண்பதே உறுதியென்பதாய்ப் பெரியோர்களெல்லோரு மிசைத் திருக்கின்றார்கள் ஓ நடலைக் குற்றங்களைக் களைந்த நாராயணரே! அந்தச் சூட்சத்தை அடியேனுக்குத் தேவரீர் அருள்செய்யக் கோருகிறேனென்றுவினவ, நரநாராயணர் சொல்லுகின்றார், ஓ நாரதரே! இப்போது நீரிசைத்த சோதியை உள்ளும் புறம்பும் பார்ப்பதே உண்மைக்கியானம். உள்ளே யெந்த வானத்திற் கண்டானோ? அந்த வானந்தமாகப் புறம்பிலும் காணவேண்டும். இதல்லாமல் மகாமேருவுக்கு வடபுரத்திற் போகிற பேர்களுக் கெல்லாஞ் சுத்த முத்தி யென்று சுருதியும் ஆகமங்களுஞ் சொல்லுகின்றன, சுத்தாத்துமாக்களெல்லாம் அங்குள்ள சுவேதனத்திலிருக்கின்றார்கள். அங்கிருக்கின்ற ரிஷிகளி யாவரும் வெளுப்பா யிருப்பார்கள். அங்கே மெய்யல்லது பொய்யென்பதில்லை. இவ்வித வியல்போடுங்கூடி யெண்ணற்றவரா யிருக்கின்ற அவர்கள் எல்லாஞ் சக்கிராங்கிதனாகிய விஷ்ணுவைச் சதாகாலமு நினைத்து, சந்தி செப மந்திரமுதலியயாவும் அச்சோதிக்கே வகுத்துச் சலனமில்லா திருப்பவர்கள். அப்பேர்ப்பட்டவர்கள்தான் அந்தவருட்சோதியைத் தரிசிப்பார்கள். ஓ வேதமுனியே! நீரும்போனாற் காணலாமென்று நாராயணர் சொல்ல, நாரதர் மனமகிழ்ந்து மேருவுக்கு உத்தரபாகத்திற் சென்று, நாராயணர் நவின்ற சாட்சியெல்லாங்கண்டு, மீட்டும் பூலோகத்திற்கு வந்து சகலருக்கும் விளம்பினர். வசுவென்னும் ராஜன் அந்தப் பிரகாச வெளிச்சத்தைக்கண்டு மோட்சமடைந்தான். சீவசிருஷ்டி செய்கின்ற பிரமகுமாரனாகிய அத்திரிமகாரிஷியும் அந்த ஒளியைப்பார்த்து உள்ளந்திருந்தினர் பிரமாவினாலுங் காணப்படாத விஷ்ணுவினுடைய திருமேனிப்பொலிவை யாவராற் காணக்கூடும்? கண்டாற் பதவி கைகூடும். என்று சொல்லிய வீஷ்மரை இராஜவரோதயனாகிய தருமராஜன் பணிந்து, ஐயா! கிர்தார்த்தனேன். சகல சன சமூகங்களுக்கும் பொருந்தும் படியாய்ச் சமமான தருமமொன்று சொல்லவேண்டும் அந்தத்தருமத்திற்கு ஒன்று நிகரில்லா திருக்கவேண்டும். என்றென்றைக்கும் நிலையான காரியங்கொடுப்பதா யிருக்கவேண்டும். பிராணிகள் அதையனுஷ்டிப்பதற்குச் சுளுவாயு மிருக்கவேண்டும். என்றுகேட்ட விரதசீல வீஷ்மர் வியந்

து புகழ்ந்து மகிழ்ந்து சொல்லத் தொடங்கினர்.

---

### பரமதருமத்தைப்பற்றிக்கூறியபிருகு வேதியன் கதை.

ஓ பல்லுயிரையுந் தன்னுயிர்போற் பாதுகாக்கும் பரதகுல சிகரமணியே! முன்னொரு காலத்தில் நாரதர் தேவேந்திரனிடத்திற் குப்போனர். அவனிவ்வரைக்கண்டு எதிர்கொண்டு பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, ஓராசனத்திலிருத்திச் சோடசோபசாரபூசைகள்புரிந்து, சுவாமி இங்கு தேவரீர் எழுந்தருளுவதற்கு அடியேன் என்னதவமிழைத்தேன். என்று தோத்திரம்பண்ணி ஆசீர்வசனம்பெற்றுக்கொண்டுநின்றான். அவ்வே நாரதமுனிவர் சிங்காசனத்தி லுட்காரச்சொல்லி, ஒருவர்க்கொருவர்க்ஷேமவிசாரணைசெய்துகொண் டிருந்தனர். அப்போது இந்திரன் ஐயா நாரதரே! பூமியில் அற்புதங்களேதாகிலு முண்டோ? அப்படிக்குண்டானற் சொல்லுமென்று தூண்டினன். அந்த இந்திரனை நாரதர்பார்த்துச் சொல்லுகின்றார். ஓ வச்சிராயுதனே உலகத்தாரைக் கடைத்தேற்றி வைப்பதற்காகவந்த கங்கைக்கரையிற் பத்மநகரமென்றொருபட்டணம். அதிற் பிருகுவென்னும் பிராமணனொருவன் சகல கோடி பிராணிகளையுந் தன்னுயிற்போற் பார்க்கப்பட்ட தயாரசகுண முடையவன். நித்தியசத்திய விரதன். இயாவரும் நல்லவனென்று கொண்டாடப் பேர்பெற்றவன். கோபத்தைக் கோபித்தவன். உத்தமஸ்திரீயை வேட்டவன். பெருமையான பிள்ளைகளைப் பெற்றவன். வந்தவிருந்துக்குபசரித்து இனிமேல் வரப்போகிற விருந்துக்கு எதிர்த்திருப்பவன். பாக்கியத்திலும், யோக்கியத்திலும், சிலாக்கியமானவன். நோயற்ற வாழ்வுடையவன். இப்படிக் கொன்றிலொன்று குறைவில்லாமல் நிறைவாக வாழ்ந்து வருகிறநாளையில், தருமசாஸ்திரங்களையு நீதிசாஸ்திரங்களையும் படித்து, அவ்வவற்றினுட்பாநுட்பங்களை வடித்து, சகல ரகசியங்களையுந் தேர்ந்து தெளிந்து, அநேக தருமங்களிற் பரமதருமமெதுவென்றறியவேண்டுமென்று மேலுமேலுஞ் சாஸ்திர விசாரணைசெய்து, மேலோராகிய மெய்யறிவோர்களையுங் கேட்டு, ஒருவரும் தெரியச்சொல்லாமையாற் கிரகஸ்தாச்சிரமத்திலேயே வாழ்ந்துவந்தான். இப்படி நெடுநாள் கடந்தபிற்பாடு ஒருநா ளவனிடத்திற் சவுனகரிஷீஸ்வரர் வந்தார்.

அவரை யவ்வந்தணன்கண்டு வணங்கிப் பூசைபுரிந்து, அன்னவாகனக் கடவுளுக்கொப்பானவரே வாருமென்று உச்சரித்து, போசனமூட்டி, அவரால் மங்களாசனம்பெற்று, சுவாமி! தருமங்களில் மேலான தருமமென்ன? அதை யெனக்குத் தெரிவிக்கவேண்டுந் தேவனேயென்று சிந்தித்தான். அதற்கு சவுனகமுனிவர்சொல்லுகின்றார். அப்பா! நீகேட்ட தருமத்தைப் பற்றிப் பல நூல்களும் பலவாருகப் பேசியிருக்கின்றன. உலகத்திற் சிறிதுபேர் சத்தியமென்றும் சிலர் தயாரசமென்றும் சிலர் கொல்லாமையென்றும், சிலர் விருந்தினரென்றும், சிலர் உபசாரமென்றும், சிலர் வேதவிதியாகிய ஆச்சிரமங்களென்றும், சிலர் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள்ளும்புறம்பும் ஒத்திருக்கின்ற உண்மைப் பொருளெதுவோ? அதுவென்றும் பேசுவார்கள். அப்படிக் கிருப்பதால், தருமங்களில் இன்னது மேலாகிய தருமமென்பது விளம்புதற்கு நான் பாத்திரனல்ல. ஆனாலுங் குற்றமில்லாத நற்றவங்களைச்செய்கின்ற நைமிசாரணியத்திற்குப் பக்கத்திற் கோமதியென்னுந் தீர்த்தக்கரைக்கடுத்த பத்மதாகமென்னு நகருளது. அதிற் பத்மனென்னும் பேர்பூண்ட மகத்வமுள்ளசார்ப்பராஜன் துரைத்தனம் பண்ணிக்கொண்டிருக்கின்றார். அவர் (இல்லறமல்லது நல்லறமல்ல )என்னுஞ் சுருதி வாக்கியத்தைப்பிடித்து, அதற்குவேண்டிய கருவி நூல்களெல்லாம்படித்து, கிரகஸ்தாச் சிரமத்தைக் கிரமமாய் நடத்திவருகின்றார். மகத்தாகிய தருமசொரூபி. நித்தியப் பிரமாணத்திலே யிருக்கப்பட்டவர். ஆநந்த சமுத்திரத்தைக் கண்டிருக்கப்பட்ட பேர்களுக்கெல்லாம் புண்ணிய தருமங்களை விரித் துரைக்கப்பட்டவர் நல்ல மகாத்மாக்கள் மகாதபோநிதிகள் பிதுர்க்கள் இவர் முதலியபேர்களுக்குப்பூசை பண்ணப்பட்டவர். அவருடைய பெருமையை ஒருவராலும் அளவிட்டுச் சொல்லப்படாது. அவருடைய ரூபஞ் சர்ப்பமென்று நினையாமல், நீ யவரிடத்திற்குப்போய் கேட்கவேண்டிய சந்தேகங்களைக் கேட்டு உண்

மை யறிந்துகொண்டு வரலாம் என்று புகன்று தன்னுச்சிரமத்திறகு ரிஷீஸ்வரர் போயினர்.

அவர் போய்விட்டவுடனே பிருகுவென்னும் பிராமணனுக்கு ஆசையும் அன்பு மேலிட்டு, மத்மனென்னும் பாக்கியவானைப் பார்க்கவேண்டுமென்னும் பத்திமேலாகி, நன்னுடைய பெண்சாதி பிள்ளை பந்துமித்திரர்கள் இவர்கள் யாவரையுங்கூட்டி நல்லவார்த்தைசொல்லி, இந்த வர்த்தமானங்களையுந் தெரிவித்து, அவர்களிடத்திற் சந்தோஷமாக உத்தரவு பெற்றுக்கொண்டு, மகாரிஷி கூறிய அடையாளப்படிக்குத் தேடிச்சென்றான். இவன் அவன்வீட்டுக்குப் போனபோது அந்தப் புண்ணியனுகிய பதுமன் வீட்டிலில்லாமல் அப்பாற் போயிருந்தபடியால், அந்த நாகராஜனுடைய பெண்சாதியாகிய தருமசீலியென்பவள் இந்தப் பிராமணனுக் கெதிரில்வந்து பாதபூசைபண்ணி, அர்க்கியபாத்திய ஆசமனமுங் கொடுத்து, வீட்டுக்கு ளழைத்துச்சென்று, ஓ ஆண்டவனே! தேவரீர் வந்தகாரியம் யாதோ? அதனை யடியாளுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று நமஸ்காரஞ் செய்தாள். அந்தப் புண்ணிய குணவதிசெய்த உபசாரத்தினுல் அவள்புருஷன் இன்னிலை யுடையவனென்றும் அவர்களின் இல்லற தருமமு நல்லறமாமென்று நிதானித்து வேதங்களையாராய்ந்த வேதியன் மிகப்பயந்து, வெகுவாய் நயந்து அம்மணி! சில சந்தேகங்களை உமது நாயகனுல் அறிந்துக் கொள்ளவேண்டி வந்தேனென்றுன். அதுகேட்ட மாது சொல்லுகிருள். ஐயரே! என்கணவர் பாரிசநண்பனுகிய சூரிய பகவானிடத்திற்குப் போயிருக்கின்றனர். அவர் வருவதற்கு எட்டுநாள் செல்லும் என்று அதிகபுத்தியும் அன்பும் பாராட்டிச்சொன்னுள். அந்தப்பிராமணனதைக்கேட்டு அவரப்படியே வரட்டும். நானவர் வரும்வழியிற் காத்திருந்து அழைத்துக் கொண்டுவருகிறேன். அல்லது அவர் வந்த பிற்பாடு வருகிறேன் என்று மகாபதிவிரதையாகிய மடமாதுக்குச் சொல்லிப் போட்டு, அவர்கள் வீட்டைவிட்டுப் புறப்பட்டு அவ்வளவு தூரமாக நடந்து, அவர்வருகிற வழியிலிருந்து, அந்த மகானுபாவர் வந்து தரிசனந் கொடுக்கிறவரைக்கும் உபவாசவிரத மிழைப் போமென்று ஆறுநாளிருந்தார்.

அதையந்த உத்தமியறிந்து இந்தப் பிராமணனிடத்தில்வந்து, ஓ கர்த்தனே! ஓ நான்குவேதமுங் கரைகண்டிருக்கிற நாயகத்தூய்மைவாய்ந்த நாதனே! அடியாளுக்கு அன்பாகிய நாயகன் ஆக்ஞையிட்டிருப்பது என்னவெனில், நம்மிட ஆச்சிரமத்திற்கு யாவரேனும் பெரியவர்கள் வந்தால் அவர்களுக்குச் சோடசோபசாரம் பண்ணி அவர்களிஷ்டப்படிக்கு அன்னங்கொடுக்கச் சொல்லிப்போ யிருக்கின்றுர். அப்படிக்கிருக்க தேவரீர் இவ்விடத்திற் கெழுந்தருளியும் அமுதுகொள்ளாமல் உபவாசமாயிருந்தால் முறைமையாகாது, மேலும் நாயகனுல் எனக்குக் குற்றம்வந்து சம்பவிக்கும். இதல்லாமலும், எங்களுடைய இல்லறதரும நேமமுங் கெட்டுப்போம். ஆதலால் அடியாள் அன்னம் எடுப்பித்துக்கொண்டு இவ்விடத்திற்கு வருகிறேன். தேவரீருக்கு இஷ்டமானமட்டும் பிட்சை யேற்றுக்கொண்டு ரட்சித்து, எங்களைக் கடைத்தேற்றவேண்டும். ஓ கண்ணருநிறைந்த கற்பகமே! என்று பலவாறு கூறித் தன்னுடைய தருமபத்தினிக்கும் பத்தத்தனையாய் வேண்டிப்பணிந்து உபசரித்தாள். அதற்கந்தப் பிராமணன் ஓ அருந்ததியிலுந் திருந்திப் பொருந்திப் பெருந்திருவனைய சீரும்பெற்ற பெண்ணையகமே உமது புருஷன் எங்கேயென்று கேட்டபோதுசூரியனிடத்திற்குப் போயிருக்கின்ருரென்றும் வருவதற்கு ஒருவாரம் பிடிக்குமென்றும் வசனித்தீர். அப்போதே அவரைக் காணுகிற பரியந்தம் புசிப்பதில்லையென்று சங்கல்பம் பண்ணிக்கொண்டு உபவாசமிருக்கின்றேன். அந்த விரதங்கெட உமது வார்த்தைக்கு உடன்படேன், அன்னமும் அருந்தேன். உம்முடைய காதலன் எட்டாநாள் வராவிட்டால், ஒன்பதாநாளுதயமுதற்கொண்டு உண்கிறேன். இதனுல் உங்கள் விரதத்திற் கொருபங்கமில்லை. உங்களுடைய நியமம் இயமயோகத்தின் பலனைப்பெறும். உங்களுக்கொரு தீமையுஞ்சேராது. உங்கள் வாய்மையுஞ் சோராது வல்வினையும் வாராது தாயே மனேன்மணி! என்பேரில் மனஸ்தாபமில்லாமற் சுகமாய் நீர் போமென்று சாற்றினர். அவரது மொழியைக்கேட்ட நாகராஜாவின் நாயகியாகிய நாககன்னி தன்வளவுக்கு வந்துவிட்டாள்.

இப்பா லொருவாரங் கடந்த பிற்பாடு

சூரிய பகவானிடத்திற் சென்றிருந்த சுகுணவானுன் நாகராஜன் வந்தான். ஆச்சிரமத்திலிருந்த பதிவிரதை அவருக்கெதிரோடிச் சென்று பாத பூசை முதலிய உபசாரங்கள் பண்ணி, சிங்காசனத்தில் இருக்கச் செய்து, சேடர் சேடியர்களைக் கொண்டு ஆலவட்டம்-சாமம்-விசிறி - சாந்தாற்றி - இவை முதலியவற்ருல் இளைப்பகற்றி, அவருக்கு முன்னின்று, சுவாமி! அடியாள் விண்ணப்பமொன்றுளது தேவரீர் சூரியமண்டலம் போயிருந்தபோது இவ்விடத்திற்கு பிருகு வென்னும் பெரியவர் வந்தார் உபசரித்தேன் தங்களை விசாரித்தார். செங்கதிரோனிடத்திற்குச் சென்றிருக்கிருரென்றேன் எப்போது இங்ஙனம் வருவாரென்ருர் ஒரு வாரத்தில் வருவார் என்றேன் அப்படியானுல் அவர் வருகிற வரைக்கும் நான் உபவாசவிரதம் பூண்பேனென்று தேவரீர் வரும் வழியிற் றவமூற்றிருந்தனர். இச்செய்தி அறிந்த அடியாள் சென்று அவர் திருவடியிற் பணிந்து அனேகவிதத்திற் றெரிவித்துத் தேற்றியபோதும் தனது தீரம் விடாமல் இருந்தனரென்று செப்பினுள். அவர் அம்மொழியைக் கேட்ட அப்பொழுதே கொழுந்து விட்டெரியுங் கொப்பறையில் விழுந்த புழுபோற் பொறிந்து தான் கொண்டு இருக்கும் இளப்பைப் பாராட்டாமல் எழுந்து அந்தப் பிருகுவென்பவ ரிடத்திற்குச்சென்று ஐயா! தேடக்கிடையா பெருமானே நாயினுமடிய பேயனை நாடிவந்த காரணம் யாதோ என் குடிசையில் லடிபெயர்த்தருளப்பெற்ற தவமென்னமோ தேவரீர் சீரடி வருந்தப்பெற்ற செயலெதுவோ என்று மூகமன்கூறி சுவாமி தேவரீர்வந்து இன்ன காரியமென்று வழங்கினுல் அந்த காரியத்தை க்ஷண நேரத்தில் ஜாக்கிரதை பண்ண மாட்டுவே னென்று சாற்றினுன். அதைக்கேட்ட யிறப்பிறப்பற்ற தவப்பலத்தையுடைய அந்தணன் அவனைப் பார்த்து ஓ நாகராஜனே நான் வந்த காரியத்தைக்குறித்துப் பிற்பாடு பேசுகிறேன். நீர் சூரியமண்டலத்திற்குப் போய்வந்த துரிதமென்ன அம்மண்டலச் சிறப்பும் விசாலப் பரப்பும் நேர்மையுஞ் சீர்மையும் அதிசயமும் சூரியனிருக்கின்ற ஆசாரமும் சம்பிரமமும் நீர் வார்த்தையாடிய வகையும் அங்குள்ள விநோத அதிசயங்களும் இன்னும் உண்டான சகல விந்தைகளையு நீர் கண்டபடியே யுரைக்க வேண்டுமென்று கேட்க அவனுடைய செவியில் தேவாமூர்தம் சொரிவது போல் நாகராஜன் செப்பலுற்றனன்.

ஓ பிர்மவித்தாகிய தேவனே, கேளும், சூரியமண்டலத்தில் முரசு கறடிப்பறை குடமுழவு வல்லரி துத்தாரி பூரி டமாரம் எக்காளை தாரை வீரசின்னம்தப்பட்டை தவுண்டை மேளம் இவைமுதலிய சகல வாத்தியங்களுஞ் சப்தமேகம்போல முழங்கும் ஒலியொருபக்கம், தேவஸ்திரீகள் கந்தருவப் பெண்கள் யக்ஷகன்னியர்கள்; இவர் யாவருஞ்சதி சுதி தாள மேளங்களுடன் பரதமாடுகின்ற பரிசொருபக்கம், பேரறிவினுயர்ந்த பெரியோர்களும் மன்வுருதியுடைய மாதவர்களும், கரையிறந்த வேதாகமங்களைக் கழறுகிற சப்தமொருபக்கம், ஸ்மிருதி இதிஹாசம், பஞ்சலக்ஷணபாவம், தருக்கம், மீமாம்சம், அறுபது நான்கு கலைக்ஞானம், என்னுமிவைகளை அப்பியாசம் பண்ணுகிற ஆரவாரம் ஒருபக்கம், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளும், சகல சாதியாரும், சற்குலவேதியருந் தோத்திரஞ் செய்கின்ற துழனியொருபக்கம் தவசிகளும், முனிவர்களும் வேதமந்திரம் ஓதுகின்ற கீதநாதமொருபக்கம், தரிசிக்கின்றவர்களாலுந் துதிக்கின்றவர்களாலு மூண்டாகுஞ் சந்தடி யொருபக்கம் ஆலவட்டங்கள், சாமரங்கள், சத்திரங்கள், மயிற்பீலிகள், குஞ்சங்கள், பிஞ்சங்கள், சுருட்டிகள், முத்துக்குடைகள், இவைகளா லுபசரிக்கின்ற ஒலியொருபக்கம் அவ்வவர்கள் பணியுந் தோறுமளித்தருள்கின்ற ஆசீர்வசன ஆர்ப்பொருபக்கம், அஷ்டமங்கலம், லாலி, சுபமங்கலம், இவை முதலிய ஆரவாரம் ஒருபக்கம், பராக்கு, கட்டியம், எச்சரிக்கை, இவை முதலான உபசார அவசரங்களொருபக்கம், இன்னும் இவை முதலிய வநேகவைபவங்களுடன் உஷாதேவி, பிரத்யுஷாதேவி, சாயாதேவி, சமேதனுய் ஆயிரங்கிரணத்துட னிருக்கப்பட்ட திவ்வியமான தேவ நிர்மாண ஜோதிமணியை மார்பிற் றரித்துக்கொண்டு நவரத்நகசித சிங்காதனத்தின்மேலி லிருக்கப்பட்ட சூரியபகவான் தனது பிரபையுடன் கொலுவிற்றிருக்கின்ருர் அவர் சப்தமாவென்னும் பரிகள் பூட்டிய ஒற்றையாழித் தேரில் அருணன் சாரத்தியஞ்செய்ய வெழுந்தருளி, மன

வேகவாயுவேகமாய் மகமேருவைப் பிரதட்சணஞ்செய்து, வையகத்தார் வாணாளையளந்துகாட்டு மகாமூர்த்தியாயிருக்கின்றனர். அவருடைய கிருபையினால் மழை பெய்கிறதும், தானியாதிகள் மலிகிறதும் வருஷம், மாசம், வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம், உத்தமம், மத்திமம், அதமம், ஆகிய இவைகள் நடப்பதும், சராசரங்களுண்டாய்த் தழைவதும், சாத்விகம், இராசதம், தாமதம், என்னு முக்குணம் விளைவதும், சிருஷ்டி, திதி, சம்மாரம், என்னுமுத்தொழிலுண்டாவதும் இத்தொழில்களுக்குரிய பிர்மா, விஷ்ணு, உருத்திரன், ஆகிய மூவரும் அந்தச் சூரியபகவானுடைய ஒளிக்குளொளியாய் உட்கலந்திருப்பதும் என்பேரலிகளாற் சொல்லிமுடிவதோ, இம்மூர்த்திகளும் அவருடைய பிரகாசமென்றால், சகலாத்ம கோடிகளுக்குஞ் சூரியனைவிட வேறு சுடருந் தெய்வங்களுமுண்டோ.

இப்பேர்ப்பட்ட சூரிய பகவான் முக்கோடி தேவர்கள் அர்க்கியங்கொடுத்துச் சுவர்னபுஷ்பம் பொழிய கருடனுடைய தமையனை அருணன் மெத்தவிசையுடன் விமானத்தைச் செலுத்த, வேகசாகசத்துடன் சப்தமானடிக்க அலைகடல் வளைந்த உலகத்திற்கெல்லாங் களைகண்ட தெய்வமாகக் கொலுவில் வீற்றிருக்கின்றபோது மிகுந்த ஜோதியுடன் ஒரு மகாபுருஷன் வந்தான். அவனுடைய பிரதாபமென்னவெனில், தேவர்களைப்போல் திவ்விய தேகம்பெற்றவன். ஆரகேயூர மணிகுண்டல கிரீட பூஷணாலங்கிர்தன். திடகாத்திரவச்சிரதேக உச்சிதபலவான். அருணனுடைய காந்தியிலும் அதிகமானவன் அப்பேர்ப்பட்டவன் சூரிய பகவானுடைய கொலுமுகத்தில் வந்து நின்று சிலாக்கிய சாரமான தோத்திர வாக்கியங்களைச் சொன்னான். அதைக்கேட்ட சூரியன் ஆநந்தமுற்றிருக்க மறுபடியும் அந்த திவ்விய புருஷன் சகலகோடி ரிஷீஸ்வரர் முதலாகிய பிரதமகணங்களெல்லாம் பணிந்து வணங்கித் தோத்திரம் பண்ணிக் கொண்டிருக்கிற பருவத்தில், அந்தச் சூரிய சோதியிற் புகுந்து உள்ளேகலந்து ஒன்று பட்டுப்போனான். அதைகண்ட தேவர்களும் அஷ்டதிக்கு பாலகருமுகமலர்ந்து அகமகிழ்ந்தார்கள். இந்த விந்தையை நானுங்கண்டு அற்புதமடைந்து ஐயா உம்மிடத்தில் ஆயிரங்கிரணனையடைத்து ஒளியாய் வந்து உம்முட் புகுந்து ஒன்றிப்போன உத்தமரோ அவருடைய உண்மையைச் சொல்ல வேண்டுமென்று உருகிக்கொண்டேன். சூரியதேவன் என்பால் வைத்த அன்பினால் வண்டு மொய்க்குந் தேனிறைந்த தாமரைமலர்மாலை குலுங்கநகைத்து என்பேரிற் கிருபைவகித்து, மகத்துவமுமர்மமுமான ஓர் வசனத்தைச் சொல்லத்தொடங்கினார்.

ஓ நாகராசனே! இப்போது தன்னிற்கலந்தவர் தேவர்களினுஞ் சிறந்தவர். மெத்த நல்லவர். பூலோகத்தில் வேதமோதுகின்ற பிராமணர்களில் இருவரும் ஒருகூட்டிப்பார்ப்பார். சகலகோடி தருமங்களுமொன்றைக்குறித்துச் செய்யாமல் நிராசையாய்ச் செய்யப்பட்டவர். குற்றமற்ற நிர்மல உதகம் போற் பற்றற்றிருப்பவர். தேகாபிமானமற்றவர். அவருக்கு ஸ்தூலபூத தேகம்போய் விட்டது. உடனே சூக்குமதேகத்திற் பிரவேசித்து என்னுடன் கலந்து பிரிவறப்பரவினர், இதுதான். இடரில்லாதமுத்தி. இதன்றி வேறோரதிசயமில்லை. யாவனொருவன் ஆசாபாசத்திலகப்பட்டுக் கெட்டலையாமல் நிராசையுற்றிருக்கின்றானோ! அவனே பிறவிவேதைகடந்தவன். அவனே முத்தாத்மா ஆசையுடனும் பற்றுடனுஞ் செய்கிற தருமமெல்லாம் பிறவிக்கேதுவாகும், அவாவிருக்கிற வரைக்குந் தவாப்பிறப்பு ஜனனமரணநீங்காது. ஆகையால் எல்லாத் தருமங்களிலு முதன்மையான நிராசையோடிருந்து ஒருவழிப்பட்ட உண்மை யோராதலால், சீக்கிரஞ் ஜனனமொழிந்தது. ஜனனமொழிந்ததல்லாமலும் என்னுடலிற் கலந்து ஜோதியோடு ஜோதியாய்ப் பரவிவிட்டார். என்று சூரியன்கூற, யான் மகிழ்ந்து சந்தோஷமடைந்தேன். இது நேற்றைய்தினஞ் சூரியனிடத்தில் நடந்த சமாச்சாரமென்று நாகராசன் பேச பிருகுவென்னும் பிராமணன் கேட்டு ஆனந்தத்திற் சிறந்து, நாம் நினைத்துவந்த கருத்தின் சங்கையறத் தற்செயலாய் உண்மைவெளியாயது, நமது விரதமும் பலித்தது, தருமசூட்சமுந் தெரிந்தது. என்று நினைத்து அந்த நாகராஜனுக்கு உபசாரத்துடன் ஆசீர்வதித்து இதனைப் பேசுகின்றான்.

ஓ மகானுபாவரே! நான் வெகுநாளாய் முடிவான தருமம் அறியவேண்டுமென்று

அநேகம் பெரியோர்களை உசாவினேன். ஒருவருஞ் சொல்லமாட்டாமற் சந்தேகத்தில் விட்டார்கள். ஒருமுனி புங்கவரால் உம்முடைய மகிமையைக்கேட்டு, இந்தரகசியத்தை உம்மால் தெரிந்துகொள்ள வேண்டுமென்று வந்தயிடத்தில் நீரில்லாமற் போனபடியால் உம்மைக் காணுகிற பரியந்தம் உபவாசவிரதமிருந்து கண்டு, சூரியலோகத்தில் நடந்த ஆச்சரிய சமாச்சாரங்களையுங் கேள்விபட்டு, நான் கொண்டிருந்த சங்கைதீர்ந்துகிருதார்த்தனுனேன் என்று அந்தணன்பேச, அந்த சொல்லைக்கேட்ட நாகராசன் அவனைவணங்கி வழிபட்டு உபசாரங்கள்செய்து, சுவாமி தேவரீர் நிரம்பிய பசியும் இளைப்புமாயிருக்கின்றீர். அடியேனை நாடிவந்து ஆறு நாள்பசித்திருந்துபோவது அழகல்ல. அறமல்ல அடியேனுக்குப் புகழல்ல. எழுந்திருந்துவாரும். என்று இதவாகப்பேசி மனைக்குள் ளழைத்துசென்று நெய்யளாவிய அன்னமும், அறுசுவை பதார்த்தமும், பாயசம் வடை பணிகாரங்களுடன் படைத்து, ஆசையுமன்பும் பொருந்தத் தானுந்தன்பெண்சாதியுமாக உண்பித்து தானுமுடனே யுண்டு, இருவருங் கரம்வாயபூசி, ஆசமன்னியமருந்திக் களைதீர்ந்து ஒரிடத்தில் உட்கார்ந்து, ஒருவருக்கொருவர் பேசவேண்டிய தருமரகசியங்களைப் பேசிக்கொண்டு வருகிறார்கள். அப்போது பிருகுவென்னு மந்தணன் தானனுஷ்டித்துவருகின்ற இயல்பெல்லாம் பேசி, பரமதருமம் அறியவேண்டிய பான்மையால் வந்தேனென்று பகர்ந்தான். அவனுடைய விருத்தாந்தங்களைக் கேட்ட நாகராஜன் தன்னுடைய சரித்திரங்களைச் சாற்றி, தருமபத்தினி கிடைத்திருக்கின்ற தவத்தினுல் சிவத்தைமறவாச் செல்வம் பெற்றிருக்கின்றேனென்று செப்பிப் பின்னுஞ் சொல்லுகிறுன்.

ஐயா வேதவித்தகனே! ஆத்மவிமுத்தியடைகிறவர்களுக்கு அதிதீவிர பக்குவமும் அனுயாசமாகிய பேரறிவும், தனக்குத்தானே வந்து கைகூடும்படி நல்வினை நடத்திவைக்கும், எல்லாவற்றிற்கு மேலான தருமமானது எந்தப்பதார்த்தத்தின் பேரிலும் இச்சைவையாதது அதுதான் பரமசிவம். அதுவேபரமதருமம். இச்சைப்படுவது அபர்த்தும். அந்த இச்சையைவிட்டே னென்பது வாசகப்பாடன்றி வாக்கியப்பாடன்று. அகமும், மனமும், ஒத்து ஒருமையாய் நிராசைபடுவானுகில், அவனெவனுனபோதிலும் உடனே முத்திபெறுவன். அவனுக்கு எல்லாக்காரியங்களும்பொருந்திக்கைவல்யமாம். நினைத்தது சித்தியாம். அவனெத்தனைகாலமிருந்தாலும், மாயாதேகவருத்தமின்றிச்சாயாதேகச் சம்பிரமத்துடனிருப்பான். அவன்தான் யகங்கையில் மோட்சத்தை வைத்துக்கொண்டிருப்பவன், சுகதுக்கமற்றவன். துக்கமேக்கம் விட்டவன், சோதிருபமாகிய சூரியனிற்கலந்து சுடர்ரியிருப்பவன். என்று சொல்லக்கேட்ட பிருகுவான் யதிகலாபம் பெற்றவர்போல் மகிழ்ந்த பரவசமாகி, ஐயா! நெடுநாளிருந்த சந்தேகங்களைஒருநிமிடத்திற்றெரியப்படுத்தினீர். இன்றுமுதல் உம்மை என்பங்குத் தெய்வமென்றேற்றிப் போற்றி வருவேன். என்றுசொல்லி அவனுடைய பெண்சாதியாகிய தருமசீலியினிடத்தும்வார்த்தையாடி, தாயே, இவ்வுலகமாதாவாகிய அறம் வளர்த்த அம்மணிக்குச் சமானமாக உம்மை என்னேரமும் நான் சிந்திக்கவேண்டியது. நீரிக்கற்புடன் கணவரோடுங்கூடி வாழ்ந்தீர் என் றின்சொல்லுரைத்து, இருவரிடத்திலும் விடைகொண்டு, ஜனக, ஜனந்த, ஜனற்குமார ஜனர்த்தனர் முதலியபேர்களுங் கொண்டாடப்பட்ட அப்பிருகு தன்னிருப்பிடத்திற்குச் செல்லப் பிரயாணமாயினன். அப்படி பிரயாணங்கொண்டு வரும்போது வழியிற் சுவனகமகாரிஷியின் ஆச்சிரமத்திற்குச்சென்று, ஐயா! தேவரீர் போதித்த அடையாளப்படிக்குப்போய் இல்லறவாழ்விலுயர்ந்த அந்தப்பதுமராஜனைக்கொண்டு பரமதருமார்த்தம் பக்குவமாயுணர்ந்துகொண்டேன். இந்த ரகசியத்தைத் தெரியப்படுத்தியது தேவரீருடைய புண்ணியமே! என்றுரைத்துத் தன்னுடையயதாஸ்தானம் போய்ச்சேர்ந்தான்.

ஓ தேவேந்திரனே! அன்றுமுதலாக அப்பிருகுவென்னு மந்தணன் ஒன்றிலும் பற்றில்லாதவனுய்ச் சிலநாளிருந்து, பூப்பிரதட்சணம் புரிந்துவருகின்ற புண்ணியனிடத்திற் பொருந்திப் பாலுநீரும்போலக் கலந்து போயினுன். இதுதான் ஆத்மமுத்தி என்பது. இந்த அற்புதங்களை மகாசந்தோஷத்துடன் பார்த்துவந்தேன். என்று நாரதபகவான் சொல்லவு மேகநாதனுக்கு மேலான மெய்யறிவுவந்து, தானும் பரமதருமம்

இதுவென்றுணர்ந்து, ஓ மண்டலமெல்லா நொடியிற்போய் வருகின்ற புனிதனே! உம் மாலே இந்தத் தருமந் தெரிந்தேனென்று தோத்திரம்பண்ணி வணங்கினன். அவரவனை ஆசீர்வதித்துச் செலவுபெற்றுக்கொண்டு தன்னெதாஸ்தானத்திற்குப் போயினர். என்று பிரியமகலாத வீஷ்மர் சொல்ல உரிமையுள்ள தருமராஜன் கேட்டுச் சரீரம்பூரித்து, தன்னைமறந்து, ஓஇவ்வுலகத்தார் கடைத்தேறுவதற்காகச் சுளுவில் ஒரேதருமத்தை உரைத்தருளிய உத்தமனே ஓசித்தனைச்செயித்த ஜிதேந்திரியனே! சரணம்சரணம் என்று தலைமேற் கரங்கூப்பித் தொழுது சுவாமி! சூரியனும் அஸ்தமானமாகின்றான்.தேவரீர் உதயமுதல் எங்கட்குரைத்த தருமங்களினல் நாங்கள் திருப்தியடைந்தோம். தேவரீர் வசனிக்கும் வசனத்தால் வருத்தமடைந்தீர்கள். நாவுலர்ந்துபோம். ஆதலால் நாங்களுதயத்தில் வரும்படிக்குக் கட்டளையிட்டருளுமென்று செலவுபெற்றுக்கொண்டு,தம்பியரோடு அஸ்தினபுரம்போனர். மகாரிஷிகள், கிருபாச்சாரியார், விதுரமகாராஜன், ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலான பேர்களும் ஞானசோதிப் பிரகாசம்போல் முகமலர்ந்து தேயசுடையவர்களாகி, நம்முடைய பாக்கியமே சிலாக்கியமென்று வீஷ்மரைப்புகழ்ந்து,தங்களுக்குள் தாங்களேமகிழ்ந்துகொண்டாடிச் சென்று, தருமராஜன் முதலாயினோரோடும் உண்டு சுகித்து ஒப்பற்றபேரானந்தமுற்றிருந்தார்கள்.

## தருமவியலுரைத்த சருக்கத்தோடு

சாந்திப்பர்வம் - முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:







ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீமஹாபாரதம்

## பதின்மூன்றாவது

# அநுசாசனிகபர்வம்.

---

### கண்ணன் துதி

கருவிடை யெய்தார் நரகிடைப் புகுதார் காலனைக் கனவிலுங் கருதார்
வெருவிரு விழிவேன் மடந்தையர் காம வேட்கையாம் வேலையி லழுந்தார்
பொருமொரு திகிரி வலக்கரத் தணிந்த புண்ணியன் விண்ணவர் பெருமான்
திருமரு மார்பன் றிருவடிக் கடிமை செயுமடி யவர்க்கடி யவரே.

### சூதபுராணிகர்வாக்கியம்.

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு சாந்தித்திரையத்தின் இரண்டாம் பாகமாகிய சாந்திபர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெநமேஜயமகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி பாண்டவர்கள் அடைந்து போயினார்க்கெல்லாம் அருங்கடனாற்றியபின் வியாசராதி முனிவர்களும், வீமனாதிய தம்பியரும், கிருஷ்ணமூர்த்தியும், திரௌபதையும் மற்றுமுண்டான உரியவரும், ஜேஷ்டப்பிராதுவாகிய கர்னமகாராஜனாதியர் இறந்ததைக் குறித்து வருந்திச் சிந்தாகுல முற்றிருந்த தருமராஜனுக்குப் பல இதிகாசங்கள் கூறித்தேற்றித் திருமுடி தரித்துக்கொள்ளும்படி வேண்ட, அதற்கவர் சம்மதியாது அடவிசென்று அருந்தவஞ்செய்வேனென்று தாண்ட, பின்பு யாவருமவரை வீஷ்மர்பாலழைத்துச்சென்று அவராற் சொல்வித்துச்சம்மதிப்படுத்த, அப்பால் யாவரோடும் அஸ்தினாபுரஞ்சேர்ந்து சுயோதனனைத் தேடிவந்த அசுரனைப் பலிதந்து பட்டாபிஷேகமாடித் திருமுடி புனைந்துகொண்டு செங்கோல் தாங்கி அரசியற்றியதும், பின்பு கண்ணனுடனே வண்ணத் தம்பியராதியரும் புடைசூழ்ந்துவரநிதநிதம்வீஷ்மரிடஞ்சென்று அரசுரிமைக்குரியசிலதருமசந்தேகங்களைக்கேட்க, அவரவ்வரசுரிமையி னுற்பவமும், வருணாச்சிரமமுறைகளும், இராசாங்கவியல்புகளும், தருமவாய்மைகளும், இன்னின்னபடிக்கென்று அவ்வவற்றையுந் தக்க திருஷ்டாந்தக் கதைகளோடுஞ்சாற்றித் திருப்திசெய்வித்ததும், ஆகிய விச்சரித்திரங்களையெல்லாஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டுச் சற்சீல சம்பன்னனாயினேன். இப்பால் மூன்றாம்பாகமாகிய அநுசாசனிகபர்வத்தையும் யான்கேட்டுக்கிர்தாத்தனாகும்வண்ணந்திருவாய்மலர்ந்தருளவேண்டும். என்றுகேட்க, வைசம்பாயன முனிவர் சொல்லத் தொடங்கினார்.

## முதலாவது,

# வேதாகமப்பிரமாணமுரைத்த சருக்கம்.

கண்ணன் துதி.

மனனக மலமற மலர்மிசை யெழுதரும்
மன னுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்
இன னுணர் முழுதல மெதிர் நிகழ் கழிவி னும்
இனனிவ னெனனுயிர் மிகுநரை யிலனே

நிஜாபதி குலத்திற் பிறந்த சுதாதிக வைபவத்திற் சிறந்த, தசாவித அங்கத்தில் நிறைந்த ஜெனமேஜயமகா ராஜனே! பாண்டவர்கள் மறுநாட்காலமே யெழுந்து காலக் கடனை முடித்துச் சூரிய நமஸ்காரம் பண்ணி, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, கிருப, விதுரர், சஞ்சயன், இவர் முதலான பேர்களுடனே புறப்பட்டு, வீஷ்மரிடத்தில் நெருங்கி, கை தட்டி யோகநித்திரையெழுப்பி, தீர்க்கதண்டனிட்டு, அவருடைய ஆசீர்வசனத்தைக் கிருபையுட னடைந்தார்கள் உடனே இவர்களை வீஷ்மர் மற்ற ரிஷீஸ்வரர்களுடன் இருக்கச் சொல்லி உத்தரவுபண்ணி, பிற்பாடு யுதிஷ்டிரரைக் குளிர்ந்த பார்வையாகப் பார்த்து, ஓ தருமநந்தனு! இன்னும் நீ யறிந்து கொள்ள வேண்டுவ தெவைகளோ? அவைகளை யெல்லாங் கேட்டுக்கொள்ளுக. இங்குள்ளோர் யாவருக்கும் பிரயோசனமாகவும், சந்தோஷமாகவும், எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேனென்று விளம்பினர். பின்பு அஞ்சலியஸ்தராய்த் தருமபூபதி கேட்கத்தொடங்கினுர். ஐயா பிதாமகரே! பாம்பைப்போற் பல்லில் விஷத்தை வைத்துக் கொண்டு பகை பாராட்டிப் பயப்படாமல் தான் பிடித்த பிடியைச் சாதித்த சற்பக்கொடியோனுகிய துரியோதனன், பங்காளுள்ள பிரகாரம் பூமியை யெங்களுக்குக் கொடுக்காமல் வஞ்சித்தான். அதுகண்ட நாங்களேனும் மனம்பொறுத்து, பூமியாசையைப்பொருட்செய்யாமல், ஒழித்து, காட்டுக்குப்போய் தவமிழைத்துக்காட்சிபெருமல், தாட்சியாகியு சண்டைமூட்டி சகலருஞ் காவப்படுத்தி, தனயர் முதலிய பெரியோரையும் உரியோரையு மிழந்து, தேவரீருடைய திருவாக்கின்படிக்கு அரசாக்ஷிக்குரிய பட்டங் கட்டிக் கொண்டோம். நாங்கள் நடத்திய பதினெட்டு நாளைய யுத்தத்திற் பதினெட்டக்குரோணி சேனைகளையும் வென்று கொன்றபாவந் தீருப்படிக்கும், யாங்களினி நடந்துகொள்ள வேண்டியதற்கும், வேதாகமங்களிற்சொல்லியிருக்கின்ற பிரமாணங்களை அனுபவத்தோடுந் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும். என்று தருமராசன் கேட்க வீஷ்மர் நகைத்து, அப்பா பொன்மேகவண்ணப் புண்ணியனே ஓ மேலான விபகாரஞ் செலுத்தும் வேந்தனே! உங்கட்கொரு பாவமுமில்லை. உனக்கொரு பழியுமில்லை. நானெத்தனை சொல்லியும் அத்தனையு நம்பாமல் இன்னமும் ஐயப்படுகின்றயல்லவா? சந்தேகம் விட்டுவிடு. சந்தேக மிருக்கிறவரைக்கும் பாவம் போகாது. சோதியாகிய மின்னல்போ லாயுதங்களைக் கொண்டுவந்து போர்புரிந்த பேர்களெல்லாம் ஆயுள் முடிந்திறந்தார்களே யல்லது, ஆயுள் முடியாமல் ஒரு அணுவும் அசைந்ததில்லை. அவர்கள் உங்களா லடிபட்டிறந்தார்களென்று நீங்களேன் நினைக்கின்றீர்கள்? இது வினையின் செயலென் றுணராமல், விருதாவிலேன் வேஷ்டை யேற்றுக் கொள்ளுகின்றீர்கள்? எந்த வேளையி லெப்படி நடக்கவேண்டுமோ அந்த வேளையில் அப்படியே நடந்துதீரும். அதுபற்றி ஒருவருக்கென்ன சம்பந்தம். உங்களா லாவதென்ன? ஒன்றுமில்லை. நீங்களென்னு நிமித்தமாத்திரமேயல்லாது, இன்னும்யாராலேயும் ஒரு பிரயோசனம் இராது. எல்லாம் ஈஸ்வரச் செயலென் றெண்ணி இகத்தில் நின்மலமா யிருப்பவர்க ளெவர்களோ? அவர்களேபரிசுத்தாத்மாக்கள். இதற்குச்சாட்சியாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.



வீஷ்மர் தருமராஜ ஞாதியர்களுக்கு வேதாகம பிரமாண முரைத்தல்.

## கிராதபுயங்க சம்வாதம்.

இந்தக் கருமபூமியில் அருமையாய் களங்க ரகிதமுற்றிருக்கப்பட்ட பிராமண னொருவன். அவனுடைய ஸ்ரீயானவள் புண்ணியவதி. அவர்களுக்கு ஒரே பிள்ளை. அந்தப் பிள்ளையைப் பாம்பு கடித்தது. ஔஷதமுதலிய சிகிச்சைகளும் பண்ணினார்கள். அதனால் உபயோகப்படாமல் அந்தப்பிள்ளை இறந்துபோயது. அப்போது பெற்றவள் திரிபுவனத்தாருந் தியங்கி மயங்கி இரங்கத்தக்கதாக இறந்துகிடக்கிற புத்திரனைப்பார்த்து, மனம்பொறுமல்; வயிறு தாளாமல், மூறையோ முறையோ வென்று கதறிப் பதறினாள். அக்கரற் பேரறிவாளனாகிய பொருச்சுனனென்னும் பெயரினையுடைய ஒருவேடன்கண்டு, ஓட்டமா யோடிவந்து, அந்தப் பிள்ளையைக் கடித்த பாம்பைக் கையிலேபிடித்துக்கொண்டு, இறந்துபோன பிள்ளையின் தாயாருக்கெதிரில் விடுத்துக்காட்டி, இதோ உன் பிள்ளையைக் கொன்ற பாம்பைக் கொல்லுகிறேன் பாரென்றான். அந்த பிராமண ஸ்திரீ அவனைப்பார்த்து, அப்பா வேடனே! என் குழந்தை யிறந்தது என்முன் வினைப்போகத்தால் விளைந்த கொடுமையே யல்லாமல், கொன்றவர்களுடைய குற்றமல்ல. நீவீணில் இந்தப் பாம்பை யேன் கொல்லுகிறாய் இது தன்னுடைய பிள்ளைகுட்டி பெண்சாதியுடனே சுகமாக வாழட்டும் இதைக் கொல்லவேண்டாம். விட்டுவிடென்றாள் இப்படி பவளம்போன்றவாய்திறந்து பகர்நத பிராமணப் பெண்ணின் பேச்சைக் கேட்ட வேடன் ஆச்சரியப்பட்டு, ஓ பசும்பொற் கங்கணந்தரித்த பைங்கொடியே மானிடப் பிறவியிற் சந்ததி முக்கியமானது. அப்பேர்ப்பட்ட சந்ததியைக் கடித்த பாம்பை அடித்து விடுவதே தருமம். இதைக் கொல்லுவுதில் ஒரு துன்பமு மில்லை. இதற்கு யெவரும் பச்சாதாபப்படார்கள். உனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. உலகவியல்பு இயாதொருத்தன் தான் ஜெயம்பெற வேண்டுமென்று நினைக்கின்றானோ? அவன் சந்துருவைக் கொல்வதுதருமமே. தேவேந்திரன் தான் ஜெயமடைவதற்கு விருத்திராசுரனை வெகுபாடுபட்டு முடித்தான். மகேஸ்வரர் தன்னைப் பகைத்து யாகம் வினைத்த தக்கனைக் கொன்றார். பகைவரை உடனுக்குடனே கொல்லுவது உறுதி. அதன்னாலில் விசாரப்படலாகாது. தயை தாட்சண்ணியம் எண்ணிப் பார்க்கப்போகாது. துஷ்டநிக்கிரகம் பண்ணவிட்டாலோ? அக்கிரம மேலிட்டுபோம். என்று கிராதன் சொல்ல, அதற்கும் அந்தப் பிராமணப்பெண் மனங்கொள்ளாமல், பச்சையான பால்மரத்தை வெட்டுவது போல் கச்சையுடைய நாகத்தைப்பதைபதைக்கக் கொல்லுவையாகில் இதனை விறந்த பிள்ளை யெழுந்து வருவானா! ஒருபோதுமில்லை, அப்படிக் கிருக்க விருதாவாய்க் கொல்லுவதில் இலாபமென்ன? இது வேலையில்லாவேலை. அதைக் கொல்லும்போது தலையும், வாலும், உடலும், உயிருந் துடிப்பதைப்பார்த்தால், நமதுமனந் துடித்துப்போம். இதுதான் கண்டது. வேறொன்றுமில்லை. நீயதைக் கொலைசெய்யத் துணிவாயாகில், நானதைப் பார்க்கப் பயப்படுவேன். கொல்லாவிரதமே விரதம். புலையுங் கொலையுங் களவுந் தவிர்வதே புண்ணியம். ஓ கண்ணியனே? இந்தப் பாம்பை விட்டுவிடு. விட்டுவிடு, என்று உள்ளமுந் தேகமு நடுங்கியுரைத்தாள்.

இப்படியாக வாதாடிக்கொண்டிருக்கிற பிராமணஸ்திரீயின் பேச்சையும், வேடனுடைய பெருமூச்சையும், அவ்வேடன் கையிற் சிக்குண்டிருக்கிற சர்ப்பங்கேட்டு, கோபாவேசங்கொண்டு ஆர்ப்பரிக்கின்ற வேடனை நோக்கி, ஓ மெத்தவுந் தெரிந்த வில்வேடனே! என்னைக் கொல்லுகிறேனென்று நீ யெந்தமுறைமையினாற் சொல்லுகிறாய்! என்னைக்கொல்லஉனக்கென்ன தருமமிருக்கிறது உன்னை நான் எப்போதாகிலுங் கடித்தேனா எத்தனையோகாலமாய் இந்தக் காட்டில் நீயு நானும் புரண்டுகொண்டிருக்கின்றோம். இதுவரையிலும் எத்தனையோ தரம் என்னை நீ மிதித்திருப்பாய். உன்னை நான் ஒரு தரமேனும் வருந்தியிருப்பேனா? மிர்த்தியுதேவதை விதித்தபடிக்கு இந்தப்பிள்ளையை நான் வந்துகடித்தேன். அப்படிக்கில்லாமல் என்சுயபுத்தியாலுந் துஷ்டத்தனத்தாலுந் தீண்டியிருப்பேனாகில், நீ சொல்ல வேண்டியதுங் கொல்லவேண்டியதும் நீதியே. (எய்தவனிருக்க அம்பைநோவது) என்பதுபோற்செய்தவனொருவனுமிருக்க, பிராமணன்போனதும் அவ்வழியாயிருக்க, வீணேபழியும் வழியும்

நான்சுமக்கலானேன். (பண்டமொருபக்கம் பாவமொருபக்கம்) என்பதுபோல், என்னை வருத்த நினைப்பது தருமத்திற்குப் பொருத்தமல்ல இந்நியாயஞ் சரிதானா நீயேசொல்லு. என்றுகேட்க அந்தப்பாம்புக்கு வேடன் சொல்லுகின்றான் இப்போது நீ சொல்லிய மிர்த்தியு தேவதையை ஆரறிவார்கள் பிரபஞ்ச மெல்லாம் பாம்புகடித் திறந்தானென்று பழியுன்பேரிற் சுமந்திருக்க, நீயேதோ ஒருவழி காட்டுகின்றாய். பொல்லாதகொடுமை புரிந்தவன் நீயோ அல்லவோ அடா படுபாவி! சற்றேனு மனமிரக்கமில்லையா தாய்தந்தையர், பந்துக்கள், வந்தவர்; போனவர், நின்றவர், பார்த்தவர், கேட்டவர், இவர்கள்யாவறும் பதறுகிறார்களே ஆதலாற் பழிக்குப்பழி உன்னைக்கொல்லுவதே வழியென்று பகர்ந்தான். இப்படிக்கு வேடனும் பாம்பும் வெகுநேரம் வரதாடிக்கொண்டிருக்கிறவேளையில் மிர்த்தியு தேவதை பிரசன்னமாகி, மூவுலகத்திலுந் தன்னதிகாரத்தை நடத்திக்கொண்டிரா நின்றவன் காலன், அவன் எங்களை அம்புபோல் எய்துவிடுவான், அவனெங்கேகுறிவைத்தானோ அங்கே நாங்கள்போய், அவன் வைத்தகுறி தப்பாமற் கொல்லுவோம் நாங்கள் ஒருவர்கையி லடங்கிய வேலைக்காரர்கள். நீங்கள் எங்களைக்கோபிப்பதும் நிந்திப்பதும் உங்களுக்குப்பாபம் ஓ வேடனே? எய்தவனிருக்க அம்பைநோவது தருமமோ வென்று இந்தப்பாம்பு சொல்லியபடி, இப்போதிதனைக் கொல்லுவதினால் ஒருபலனுமில்லை. உலகத்திற் கர்மிகளா யிருக்கிறபேதைகளும், சாஸ்திரத்தின் முடிவறியாத மூடர்களும் பேசுகின்ற பேச்சைப்போல், நீயும்பேசுகிறாய். பெரியோர்கள் வாசம்பண்ணுகிற காட்டுக் குரியவனா யிருக்கிற நீ விபகாரந்தப்பி யொருவேலை செய்யப்போமா என்றுமிர்த்தியு தேவதை விளம்பியது. அதன்சொல்லைக் கேட்ட கானக வேடன் கனைத்து? ஓ மிர்த்தியுதேவே! எய்தவனிருக்க அம்பைநோவதெப்படி யென்பதாய் நீங்களிருவருங் கூறியமொழி சரியே. குற்றமில்லை. இவ்வுலகத்தில் ஒருவன்மீது வெகுகொடிய பாணங்களை எய்யும்படியானவன் எதிரிலே நிற்கிறபோது, அவன்விட்ட பாணங்களை முன்னதாக அறுத்துப்போட்டு அப்பால் எய்தவன்பேரில் தாக்குகிறார்கள். அந்த நிதானிக்குமிடத்தில் அம்பைப்போன்ற உங்களைக்கொன்றுவிட்டு தேகவருத்தந் தீர்த்த பிற்பாடு, உங்களையேவிய காலனென்னும் எய்தவன்பேரில் எய்வதுதகுதி. ஆதலாற் பிரத்தியட்சத்தில் இப்பாம்பு கடித்தபடியாற் புத்திரன் இறந்தான். இப்போதிதையெடுத்துப் பேசவேண்டுமே யொழிய மற்றதைக்குறித்துப் பேசுவதற்கு வியகாரமென்னவென்று வேடன் சொல்லினன்.

இப்படி யிவர்கள் நீநானென்று பேசிக்கொண்டிருக்கிற சமயத்தில் இயாவருங்கொண்டாடப்பட்ட காலன்வந்து வேடனுக்கு முன்னின்று, ஏன்பிள்ளாய் இந்தப்பாம்பைப்பிடித்துக் கொல்லுவே னென்கிறாய்! ஒருவரை யொருவரை யொருவர் கொல்லக் கூடுமோ. எப்போதும் ஊழ்வினையின்படிக்கு நடக்குமல்லாமல் வேறுண்டோ. வேத முதலிய சாஸ்திர புராணங்களிற் றேறித் தெளிந்த பெரியோர்கள் தாம் தாமுன் செய்தவினையென்று சாற்றுகிறார்களல்லது அன்னியாள்பேரிற் பின்னஞ் சொல்லுவதில்லை. எல்லாம் நல்வினை தீவினையின் சுபாவமென்று எதுவந்தாலுஞ் சந்தோஷப் படுகிறதேயல்லாமல், வேறொன்று நினைப்பதில்லை. நன்மை வருங்காலத்தில் எல்லாம் நன்மையாகவே வரும். தீமை வருங்காலத்தில் எல்லாந் தீமையாகவே வரும். நல்வினை தீவினைகளின்படி நடத்தி வைக்கிறது எங்கள் சுபாவம். ஓ வனச அனியாயமாய் இந்தப் பாம்பைக் கொல்லுகிறேனென்பது அவசிய மன்றென்று கூறினன். இப்படி வேடனோடு காலன் விளம்பிக் கொண்டிருக்கையிற் பர்வதம்போன்ற தனத்தையுடையபிராமண ஸ்திரீ சொல்லுகின்றாள் ஓ ஐயமாரே வீணாய்ச் சம்வாதம் பண்ணுவதினால் என்ன பிரயோசனம், மேல் வினையைத் தள்ளிக்கொண்டவர்கள் ஆராகிலு மிருக்கின்றார்களா, நீங்கள் வாதுபுரிவதனால் பொழுது போகிறது. இறந்துபோனவென் குமாரனுக்கு வயிறுப்பிப்போகிறது. சுடுகாட்டிற் கொண்டுபோய் முடிக்கத்தக்க கடனை முடிப்பதற் கில்லாமற் போகிறது. மடிந்த பிள்ளையை வைத்துக் கொண்டு வயிறெரிவதைப் பார்க்கிலும் எரிமூட்டி வைத்துத் தலைமுழுகிப் போட்டால் என் துயர நீங்கிப்போம். ஐயா வேடனே உமக்குக் கோடி சரணம். பாம்பைவிட்டு விடும். என்று வேண்டினாள். அந்த உத்தமியின் பேச்சைக்கேட்ட வேடன் ஐயோ உன்

பாவமிப்படியா. என்று மனதிரங்கிப் பாம்பை விட்டுவிட்டான். அந்தப் பாம்பு வேடன் கரத்திலகப்பட்டு மெலிவுதீர்ந்து சரசரவென்று போய்விட்டவுடனே அக்கிராரத்திலுள்ளவர்களெல்லாஞ் சேர்ந்து, பிராமணப்பிள்ளைக்கு நீர்க்கடனு நெருப்புக்கடனு நடத்தி ஸ்நானம்பண்ணி தங்கள் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். இங்ஙனம் வந்திருந்த வேடன், மிர்த்தியுதேவதை காலன், இம்மூன்றுபேரும் அவரவரிடம்போய்ச் சேர்ந்தார்கள். ஓ அற்புக்கொருவனாகிய அதன் குமாரனே! இது முற்காலத்தில் நடந்த கதையானபடியால் ஒருவர் ஒருவரைக்கொல்லக்கூடாது, ஒருவராலொருவர் இறந்தார்களென்று சொல்லநப்படாது. எல்லாம் வினையின் செயலென்று விசிதமா யறிந்துகொள்ளுக. இன்னும் நீங்சுள் கொன்றதாகவும் உங்களாலவர்கள் மடிந்ததாகவும் பிரமை முதலியசந்தேகமுண்டோ? (மாயுறேல் ஆயுவின்றி மசகமும் இறந்திடதே) என்னும் பெரியோர் வாக்கியத்தைப்பேண் ? இடத்தைப்பற்றியும் முன்னின்றவர்களை நற்றியுஞ் சொல்லுவது காரியம். மேல்வினை மூண்டு முடிப்பது காரணம். இதனால் உனக்கொரு கொடுமையுமில்லை. என்று கடுமையகன்ற மனத்தினராகிய வீஷ்மர் கரைக்க, தருமராஜன் சங்கடம் நீங்கி இன்னுமொன்று கேட்கின்றார்,ஓவல்லவனே இவ்வுலகத்தில் இல்லறதருமத்துடனிருக்கின்ற பேர்கள் மிர்த்தியு முதலியவைகளை வென்று மாருதவின்பத்தை அனுபவிப்பார்களென்று பெரியோர்கள் பேசுகின்றார்களே, அப்படியே யனுபவித்தவருண்டா அதனையருள்செய்யவேண்டுமையனே யென்றுவேண்ட, வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

## சுதரிசனமுனிவர், போகவதி, இவர்கள் கதை.

ஓ என்னன்புக்குரிய அறத்தின்மைந்தனே! மநுகுலத்திற் பிறந்து கறைதோய்ந்த வேலைக்கையிலேந்திய சுயோதனராஜனென்பவ னொருவனுளன் அவனை இப்பூமியிற் பிரசித்தமா யிருக்கப்பட்ட நருமதை நதியேவந் திரீயாகவந்துதனக்குப்பதியாகக்கொண்டு வாழ்ந்து வருகிற நாளையில் உலகத்தி லிருக்கப்பட்ட பெண்களுடைய அழகெல்லாந் திரண்டு அவர்களுடைய புகழாகிய பதிவிரதா தன்மமெல்லாம் பொருந்தி ஒரு பெண்ணாய்ப் பிறந்ததோ என்னும்படியா, அந்த ராஜனுடைய பெண்சாதி வயிற்றில் ஒரு பெண்ணாயகம் பிறந்தாள். தாயுந்தந்தையும் அற்புதமடைத்து, பெண் பிறந்த சந்தோஷத்தால் உச்சவாதிகள் நடத்தி சுதாசனை யென்று பெயரிட்டு இராஜமுறையாக வளர்த்துவந்தார்கள். அந்நாளையிற் பேதை பெதும்பைப் பருவங்கள் கடந்துபதினான்கு வயதிற்குமேற் மங்கைப்பருவம் நேரிட்டது. மாதாபிதாக்கள் மகிழ்ந்து உதாசனனென்னும் அக்கினிபகவானைப் பூசிக்கும்படியாய் அவனை வரும்படி உன்னினார்கள். அவ்வாறே யவன்வந்து, அவர்கள் செய்தபூசைமுகத்தி லிருக்கின்றான். அவனுக்கவர் செய்யத்தக்க பூசையாவு முடித்துப் போயினர். இப்படியவர் போனபின் அந்தப் பெண்ணானவள் தன்காலிலணிந்த தண்டை, சதங்கை சிலம்பு, இவைகள் கொஞ்சத்தக்கதாகவும் சகலாபரணங்களும் கலகலவென்று ஒலிக்கத்தக்கதாகவும், இரண்டு பொற்கிரிபோற்றிரண்ட தொய்யலெழுதிப் புரண்ட கொங்கையைச் சுமந்த இடையானது தாளமாட்டாது எங்கிச் சிவ்வாடத் தக்கதாகவும், கரத்திற்றரித்திருக்கப்பட்ட வளையல்களை கலகலவென்று கோஷிக்கவும் மேகலாபரணம் பதினாறு கோவையுடன் மன்னிப் பின்னு முன்னும் பாரிக்கும்படியாகவும்,செவ்வரி கருவரி படர்ந்தசெங்கண்ணானது செவிவரையிலும் பாய்ந்துலவும், பவளம்போன்ற வாயிற் பல்லுகளாகிய ஆணிமுத்துக்கள்பிரகாசிக்கவும், இன்னும் விசித்திரமான சித்திரரூபப்பொற்பிரதி மெய்போல் வருகிறாள். அப்படிவருகிறபோது புருவமாகிய வில்லை வளைத்து சொருவகாகிய கண்ணம்பு தொடுத்து முகவுல்லாச நயநகையும் பொடித்து மிகுசல்லாபசுரபதமும் படித்து, அக்கினி தேவனிருக்குமிடமாய் வந்தாள். இவ்விந்தை மிகுந்த சுதாசனையின் சௌந்தரியத்தைப்பார்த்த அக்கினிதேவன் அவள் கண்ணம்புக்குப் பலத்தவனாகி, கால்பதறி மயங்கி, காமாக்கினியாற் கயங்கி சரீரமுலர்ந்து சருகாய்ப் புலர்ந்து, அடக்கமாட்டாதவனாய் அவளை நோக்கி, ஓ சுமுகமதியே ஓ சுகுணவதியே! ஓ சுகிர்தவமணியே ஓ சுதாசனைமணியே நீ யெனக்குப் பெண்சாதியா யிருவென்று வருந்தினான்.

இந்தச் சொற்கேட்ட அந்தபெண் மிகுந்த நாணத்துடன் தலையிறங்கி நின்று, தோகைமயிற்போற்சாய்ந்து, குயில்போற்கூவி, கிளிபோல் வசனிக்கிறாள். ஐயா பகவானே? என் தாய்தந்தையர் என்னைப்பெற்று வளர்த்த சந்தோஷந்தீரச் சம்பிரமமாய் ஒருவருக்குப் பாணிக்கிரகணம் பண்ணிக் கொடுப்பதற்கு முன்னே, என்னிச்சையாய் ஒருவர்பேரி லாசைப்பட் டிணங்குவது அழகோ! எல்லாந் தெரிந்த உமக்கு நான் சொல்லவேண்டியதென்ன! உமதிஷ்டப்படிக்கு நடத்திக்கொள்ளவேண்டுமென்றால் உள்ளத்தில் விளைந்த ஆசையை விருதாவாய்ப் போக்காமல், என் தாய் தகப்பனரிடத்திற் சென்று அவர்களைச் சம்மதிக்கக்கொண்டு, தமதிஷ்டப்படிக்கு முடித்துக்கொள்ளுமென்று சாற்றி, தனது தாய்தந்தை இருக்குமிடத்திற்குப் போயினாள்.

இப்பால் அக்கினிபகவான் வெட்கப்பட்டு, வேதக்குன்றுவளர்ந்ததுபோல் வேதியன் வடிவங்கொண்டு சுயோதன ராசனிடத்திற்குப் போனான். அந்தராசன் இந்தப் பிராமணனைக்கண்டு வணங்கி ஆசீர்வாதம் பெற்று, தேவரீர் யாண்டிருந்து வருகின்றீரென்று கேட்டனன், அதற்கு அக்கினிதேவன், ஓ வெற்றிமாலை தரித்த வேந்தனே! உருவத்தில் மிகுந்த அழகுபடைத்த உம்முடைய குமாரத்தி சுதாசனையை எனக்குக் கலியாணம் பண்ணிக்கொடும். நான் அதற்காக வந்தேனென்றான். இராசன் அதற்கு ஒன்றும் பேசாமலிருந்தான். அந்தவேளையிற் பர்வதம்போன்ற தோளையுடைய அக்கினிதேவன் நாணி, அப்பாற்போய்த் தன்னுடைய சுடர்களையைச் சுருட்டிக்கொண்டு மறைந்துபோய்விட்டான். பின்பு மூன்றுலோகத்திலும் அக்கினியைக்காணாமல், தேவர் முனிவர் பிராமணாள் முதலியபேரும் அலைந்து திரிந்து வருந்து, தீக்கடைகோலைத் திரித்தார்கள். அதனிடத்திலும் அக்கினி பிறக்காமற் போனபடியால், நித்தியாக்கினி ஓமம், யாகம், சமயல், பாகம், தீபம், ஒன்றுமில்லாமல் உலகம் இருண்டுபோயது. இப்பேர்ப்பட்ட வேலைகளை யெல்லாங் குறைவற நடத்துகின்ற செங்கோலையுடைய ராசனும் மனம் வேறுபட்டு, சந்தோஷமில்லாமற் சலித்துக்கொண்டு, நான் செய்த பாவமோ? என்னைச் சேர்ந்தவர்களால் எய்திய குற்றமோ? தருமந்தப்பியதோ? ஈதென்ன காரணந்தெரியவில்லையே. என்னும் பெருங்கலக்கமுடையவனாய், அக்கினிபகவான் ஓமத்தினிடத்திலிருந்து எப்போதும்போற் அவியேற்றுக்கொள்ளாமல் போனதென்ன அதிசயம்? என்று வெகுவிசாரமாய் நடுங்கிப் பெருமூச்செறிந்து யோசனைசெய்துகொண்டிருந்தான். அக்காலத்திற் பிராமணாளியாவருந் தவித்து, ஸ்நானம் ஆசமனீய முதலிய சற்கருமங்களில்லாமற் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அக்கினிபகவான் அவ்வேதியருக்கு வெளிப்பட்டு, ஓ ஐயமார்களே! சுதாசனையினிடத்தில் எனக்கு மோகமூண்டாயிருக்கிறது. அந்த ஆசையை நீக்கினால் நான் பழையபடி திரிவேன். இல்லாவிட்டாலென்சுடுகையைப்பார்க்கிலுங் காமாக்கினி எண்மடங்கதிகமா யென்னைக் கொளுத்திவிடுகின்றது. அதைச் சகிக்கமாட்டாமல் ஒளித்துக் கொண்டிருக்கின்றேனென்றான். அதைக்கேட்ட பிராமணாள் இராசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் அப்படியாவென்று மகிழ்ந்து, தன் குமாரத்தியைக் கன்னிகாதானமாக அக்கினிதேவனுக்குத் தாராதத்தம் பண்ணினான். அக்கினியும் மன்மதசொருபங்கொண்டு பெண்கையைப் பிடித்து, அரசு, ஆல், முருக்கு, இவைகளினாற் கூட்டி நாட்டிய அரசாணிக்காலைப் பிரதக்ஷணம் வந்து, பெரியவாளுக்கு நமஸ்காரம்பண்ணி தலைமையான பெண்ணாயகத்தின் இளமையான குஜத்தைத் தழுவிப் பெரும் போக வாரிதியிலழுந்தி, இன்பமாதுரிய இகழ்த் தேனருந்தி எங்கணும் வடவைக்கனலாகிய பெருந்தீயெனப் பொருந்தி, மகிழ்வு மாட்சிமையும் பெற்றிருந்தான்.

அந்தநாளிற் சுதாசனையின் கர்ப்பத்திற் புண்ணிய உருவம்போல் ஒரு பிள்ளை பிறந்தான். அப்பிள்ளைக்கு அக்கினிதேவன் தவத்திலுயர்ந்த தவசிகளுந் திரியாக்கினிக்கதிகாரிகளாகியவேதியர்களு மங்களாசனஞ் சொல்லி வாழ்த்தும்படியாய், தேவர்கள் புஷ்பமாரி தூற்றும்படியாய் புத்திரோச்சவ முதலிய தருமங்களைத் தாட்சியில்லாமற் செய்து, ஞானசுதரிசனனென்கிற நாமங்கொடுத்து, குழவிப்பிறை வளருந் தன்மைபோல் வளர்ந்துவருகிற குமாரனுக்குப் பூணூற்கலியாணமும் பொருந்தி வேதாகமசாஸ்த்திரபுராணங்களும் ஐயந்திரியில்லாம லரிவித்து

வந்தான். பின்பு தன்மகன் உலகத்தில் மூப்படைந்த பிற்பாடு, அன்னப்பட்சி நாணிய நடையும் சொர்ண ஸ்தம்பந் தோற்குந் தொடையும் மின்னற்கொடி வெட்கிய யிடையும் பொன்னைப்போற்பிரகாசிக்கும்உடையும் கற்கண்டுபாகினுமுயர்ந்தமொழியும் விற்கொண்டவண்டி னுஞ்சிறந்தவிழியும் -அற்கண்டகொண்டலைப்போன்ற கொண்டையும்-கற்கொண்டுருண்டு முழங்கிய தண்டையும், களங்கமற்றிலங்கியமுகமும் இளங்கனிக்கிசைந்த தனமும், இங்கிதமானமும் எழிலானமும் அருந்ததிக்கொப்பாகிய கற்பும்-ஆசாரபூசை ஆகமத்திற்கொப்பும், போகவதி யென்னப் பெயர்செப்பும் ஓர் மகாரிஷியின் மகளாகிய பெண்ணரசியைப் பேசி, நல்லமுகூர்த்தத்தில் தன்மகனுக்கு விவாகம் நடத்தினன். அப்பால் பெண்ணும் பிள்ளையும் இல்லற வாழ்க்கையிலிருந்து, தருமங்களெல்லாவற்றையும் புரிந்து, கிரகஸ்தாச் சிரமத்திற்குச் சொல்லியிருக்கிற விதிமுறைதப்பாமல் நடந்து விரதமிருந்து தருமத்தாட்சியுங் கருமத்தாட்சியுமில்லாமல் தவமேலிட வாழுநாளையில், இவர்களிருவருஞ் சண்டனைவென்றிட வேண்டுமென்று உட்கொண்டு, அங்ஙனமிருக்கும் பெரியோருடன் தங்களபிப்பிராயத்தையுரைத்து, குருக்ஷேத்திரத்திற்குச் சென்று விசாலமான பர்ணசாலையொன்று ஏற்படுத்திக்கொண்டு அவ்விடத்திற் றவமாய் நின்று, அங்கேவருகின்ற மாதவர்கள், மஹாரிஷிகள் இவர்கள்முதலாகிய பேர்களுக்கு பாதபூசை அர்க்கியபாத்திய உபசாரங்கள் பண்ணி, திவ்விய கந்தமூலகனிவர்க்கங்கள் கொடுத்து வந்தனைவழிபாடிழைத்துவந்தார்கள். இந்த சத்திய நித்திய பத்திய முதலிய சாந்தவேதாந்த விரத தபோநிதியாகிய சுதெரிசன மகாரிஷிமனமும், பொற்புடைமைதிணிந்த கற்புடைமையணிந்த காதலியாகிய போகவதியென்னு மனைவியினுடையமன மொன்றுபட்டிருந்தமையால், இவர்களுக்கு நாளுக்கு நாள்தவமுயர்ந்து, நான்குதிக்கும் அடர்ந்து வரும் விருந்தினராகிய அதிதிகளுக்குப் பரிந்து உபசரித்து வந்தார்கள். இதுகண்ட தேவர்களெல்லோரும் பதியுஞ்சதியும் வதியும்விதி யிதுவேயென்று கொண்டாடிப் புகழ்ந்து, எல்லா தருமங்களினும் இல்லறதருமஞ் சொல்லத்தரமல்லவென்று துதித்தார்கள். இப்படியிருக்கிறகாலத்தில் சுதெரிசன ரிஷியானவர் தன்மனதிற் குடிகொண்டிருக்கப்பட்ட விரதமுடிவெல்லாந் தனது தருமபத்தினிக்குத் தெரியப்படுத்துகிறர்.

ஓ என் கண்ணுக்கினிமையான பெண்ணே! யாராவதொருத்தர் இந்தஆச்சிரமத்தின் வழிவந்தால், யாவரோஎவரோவென்றெண்ணமல் அன்புபாராட்டி முன்புறவைத்து அருக்கியாதி பூசைபுரிந்து, அட்சதை தாம்பூல சந்தனமமைத்து, தூபதீபங்கொடுத்து, சுயம்பிரகாசச்சோதியாகவும், ஆதிமூலவிஷ்ணுவாகவும், ஆத்மாக்களைப்படைக்கும் பிர்மாவாகவும், வந்தனைவழிபாடு செய்வையல்லது, வேறுபாடாய் மாறுபாடு நினையாதே. அவர்களைச் சிவசொரூபம், விஷ்ணுமயம், பிர்மதேயசு என்றுமதித்து எதிர்பணிந்து துதித்து, அவர்களுடைய உடல்வருத்தந் தீர்த்து உணவருந்தப் பொருந்தி, ஆலவட்டம்போட்டு அடிமலரை வருப்பிடித்து, அறுசுவையன்னம் வருந்தி யுண்பித்து அவர்கள் திருப்தியடைந்துஇளைப்பாறி அவர்களாய்ப் போனல் ஆசீர்வசனம்பெற்று அவர்களடிமலரை நமது முடியுறவணங்கிக் கொள்ளவேண்டியது. இதைவிட வேறு தருமமும் புண்ணியமும் எங்கேனுமில்லை ஓ திங்கள்வதனு! அதிதிபூசையேபூசை மற்றப் பூசையெல்லாம் வயிற்றுப்பூசை. இல்லறந்தேடிவந்த அதிதிகள் எப்பொருளையும் விரும்பார்கள். ஒருவேளை விருப்புற்றுக்கேட்டாலுஞ் சந்தோஷத்துடன் கொடுக்கவேண்டியதே, இதுவே முக்கியதருமம். கேட்டோருக்கிட்டோர் பெரியோர். இடாதோரிழிந்த வாழ்வினையுடையோர்கள். அவர்கள் ஒருவேளை ஆனந்தமாய் உன்னை விரும்பினுலும் முகஞ்சுளியாமல், மேனிநெளியாமல் வீட்டிலொளியாமல் மேவிவிடுவதே மேலாகிய தருமத்திற்கு வேராகும். இதன்றி, நானில்லாதபோது துறந்தோர் முதலியபேர்கள் வந்தால், இப்போது நான் உனக்குத் தெரிவித்திருப்பதைப் பிரணவப் பொருளாகக்கொண்டு பூசித்தனுப்புவதே உனக்குக் கடமை. என்னுடைய வார்த்தை உனக்குக்கடைப்பிடியுடமை. இதுவே தருமம். என்றின்னுஞ் சொல்லவேண்டிய இயற்கைகள் எல்லாஞ்சொல்லி, இவ்வில்லற தருமத்தைக்கிரமமாக நடத்தினபேர்கள் பெற்றபேரும், பிர

பலப்பேரும் எடுத்துக்காட்டி இருவரும் மனங்கலந்து வாழ்ந்தார்கள்.

இப்படி வாழ்ந்துவருகிற நாளையில் ஒரு நாள் சுதெரிசனமகாரிஷியானவர் தன்பெண்சாதியைப் பர்ணசாலையில்வைத்து, யாகாதிகட்கு வேண்டிய தருப்பை, சமித்து, மாவிலை, முருக்கிலை, புரசிலை இவை முதலிய கொண்டுவரும்படியாகக் காட்டுக்குப் போயினர். இந்தப்பதிவிரதாசிரோமணியானவளிருந்த இடத்திற்கு எமதருமனானவன் ஒருபிராமண வடிவங்கொண்டு சரேலென்று வந்தான். வேதாகமபுராணமுதலிய சகலமுங் கற்றவனுயுந் திடமனம் பெற்றவனுயும் வந்த அவனைப் பார்த்தவுடனே போகவதியானவள் தனதுதேய்ந்த இடையுடனே மனமுஞ்சோரும்படிக்குப் பயந்து திடுக்கிட்டு, திடீலென்று எழுந்து எதிர்சென்று நின்று உபசாரம்பேசி, வேதியரிருக்கப் புசிக்கப் படுக்க விதித்திருக்கின்ற பர்ணசாலைப் பாங்கி லழைத்துக்கொண்டுபோய் தர்ப்பாசனத்திலுட்காரவைத்து, பாதார்ச்சனைமுதலிய தூபதீப பரிசுங்கொடுத்து, அவருடைய அடிகளில்தன்முடியைப் பதித்துத் தெண்டனிட்டு, சுவாமி? நாயேன் கடைத்தேறுவதற்காக எழுந்தருளிய ஞானக்கனியே! அடியாள் செய்யவேண்டிய பணிவிடை இன்னதென்று கட்டளையிடவேண்டுமென்று தொழுதனள். அவள் செய்த உபசாரத்திற்குவந்த பிராமணன் சந்தோஷப்பட்டு, அந்தோ பைந்தொடியே! கந்தற்பன்கணையால்நொனலைந்துநாந்தேன் வந்துன்னையடைந்தேன். ஓ தையலே! என் சிந்தை மையலைத்தீர்த்தருள். உன்னமுத முலையையும் அதரக்கனியையும் விரும்பி அலைந்துகெட்டோடிவந்த எனக்கு அவைகளையருத்தி, என் மோகத்தையுந் தாகத்தையுந் தீரும். என்று பலவாருக வேண்டினன். அவன் சொல்லைக்கேட்ட உத்தமி சற்றுங்கலங்காமல் அந்த இடத்தைவிட்டும் விலகாமல், பக்திரசமாய்ப் பணிந்து ஐயனே! இதுமுற்றுமுணர்ந்த முனிவர்கள்சொல்லு முறையோ? தாங்கள் விரும்பிக்கேட்ட தானத்தை நிதானித்தால் வானத்தில் மேலாகிய பதவி தருமோ? இல்லை. இது உயிருக்கேனு முதவியாய்வருமோ? ஐயோ! அற்பகாமத்தினல் உமது விற்பனமெல்லாம் வீணுகிப்போய், சொற்பனங்கண்டவர்போற் சோம்பிக் கற்பினையாகிய நரகத்தில்வீழக் காரியமேன்? உம்மைத்தொட்டு என்னையுமிழுக்குமே, தீமைக்கேதுவாகிய காரியங்களிற் பெரியோர்கள்பிரவேசிக்கமாட்டார்களே. அனித்திய தேகத்திற்கு அனித்தியந்தேடுவது அனித்தியமே ஆதலால் இந்த இல்லறத்தி லிருக்கப்பட்ட பதார்த்தங்களில் எதைக்கேட்கினும் இந்தப் பெண்ணின்பம் ஒன்றுதவிர, மற்றெல்லாந் தருகிறேன். உமக்கு வேண்டியவை கேளுமையாவென்று அந்தப் புனிதவதி புகன்ருள். இவ்வளவையுங் கேட்டிருந்த எமப்பிராமணன் நகைத்து, இந்தவேளையி லெனக்கு வேண்டியது இன்பம். நீ வீண் சம்பம்பேசுகிருய். நீயென்னதந்தாலும் அதை என்மனத்தினுலுங் கரத்தினுலுந் தீண்டேன். ஒரு பொருளை ஒருவரிடத்திலும் வாங்குவதில்லையென்னும் விரதமுடையோன். இப்போது நான் மோகவிகாரங் கொண்டிருக்கின்றேன். நீ தடைப்படுத்தாமல் உன்னுடைய அதரபானந் தருவையா? தரமாட்டையா? என் பிராணன் போய்விடும்போலிருக்கிறது. உனக்குப் பாபமும்பழியும்வரும். என்னைச் சீக்கிரங் காத்திடுக. விரைவில் என்னருகில்வருக. என்மடிமீதுட்கார்ந்து முத்தந்தருக என்று செப்பினன்.

அந்த ஆரணனுரைத்த காரணத்தைக் கேட்ட பூரணசந்திரோதயம்போன்ற வாரணத் தனத்தையுடைய புண்ணியக் கன்னி அநேகவிதமா யெண்ணி, தீர்க்காலோசனை பண்ணி கிலேசமுள்ளவளாய்நண்ணி இனியென்னசெய்வேன் ஆ தெய்வமே? இவருரைத்த வார்த்தையோ தடுக்கக்கூடாமையாயிருக்கிறது. நமது நாயகன் கட்டளையோ அதிதியானவர் என்ன கேட்டாலுந் தடையறக்கொடுப்பதே தருமமென்று மொழிந்து, தானுமில்லையென்னுமல் எதுவுங் கொடுக்கிறே னென்பதாய் விரதங்கொண்டிருக்கின்ருர். அவருடைய விரதமும் பங்கமாகப்படாது. நமது பதியினுத்தரவின்படி நடக்கிறதே நமக்குப் பழுதில்லாத் தருமம். அதிதிகளின் மனதைத் திருப்தியாக்குகிறது இல்லறவாழ்க்கையி னியல்பு. இவைகளைப் பாராட்டல் செய்யாமல் விலக்கிவிட்டால், இதுவரையிலுந் தேடிய மனைவாழ்க்கைப் பெருந்தவம் அடியோடழிந்துபோம். ஒருவர் நாடியதைக் கொடுக்கிற நல்லறமே இல்லறம். நாமிவருக் குடன்பட்டுவிட்டால், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்னு

நால்விதமகடுக் குணமுங் கற்புடைமைபுங் கெட்டுப்போம். இதற்குயாது செய்யத்தக்கது! என்று கிலேசங்கொண்டு, முடிவில் ஸ்திரீகளுக்குப் புருடன் தெய்வம். அவருடைய ஆக்ஞை திருமந்திரம். ஆதலால், நம்முடைய கணவன் நவின் றிருக்கின்றபடிக்கு மனச்சுளுக்கில்லாமல் உடன்படுவதே மகாபதிவிரதா தர்மம். என்று மனவுறுதி கொண்டு, தன் புருஷனைத் தெய்வமாய்ச்சிந்தையிலிருந்தி, சுவாமி? என் கர்த்தாவாகிய பர்த்தாவின் சொற்கடவாமல் நடப்பேனு இல்லோகாபவாதத் தடையாகிய இடையூறு என்னை யென்ன செய்யக்கூடும். மற்றொருவருக்கும் யான் பயப்பட வேண்டியதில்லை. என்றுகுலமடைந்தை யானவள் அந்தப்பிராமண அதிதியைநோக்கி ஓ ஐயா? தேவரீரிச்சை தீரும்படிக்குச் சித்தமானேனென முல்லை யரும்பைப்போன்ற தத்தங்கள் பிரகாசிக்கும்படியாய் நகைத்துக்கட்டி முத்தாடி அதரபான மூட்டினாள். இவளருந்தக் கொடுத்தஇன்பரச சரசசல்லாபங்களினால் அந்த எமப்பார்ப்பான் உல்லாசமாயிருந்து அத்தப் பெண்கொடியாகிய போகவதியுந்தானும் ஒரு அறைக்குள் நுழைந்தார்கள்.

அந்தவேளையிற் காட்டுக்குப் போயிருந்த கணவன்வந்து, தான்கொண்டுவந்த தருப்பைமுதலிய வஸ்துக்களை ஓமவேதிகை யருகில் வைத்துப்போட்டு, தன் பத்தினியாகிய உத்தமியைக்காணுமல் படபடப்புடனே அவள் பேரைச் சொல்லிக்கூப்பிட்டார். அந்த ஓசையை போகவதிகேட்டு நடுநடுங்கி, வைதீகப் பிராமணன் முகத்தைப் பார்த்தாள். அந்த விடாசண்டனாகிய அதிதியானவன் கடகடவென்று பற்கடித்து, நீ கடைத்தேறுவாய். நீ கடைத்தேறுவாய். பேசாதே, பேசாதே, மிஞ்சிப் பேசுவையாகில் உன்னைச் சபிப்பே னென்றான். அதைக் குறித்துப் போகவதியோசித்து, நாமிப்போது இவருக்கு உடன்பட்டோம். இந்த அதிதியின் வர்தை தீர்ந்து இவரானந்தப் படுவதற்கு முன்னே நாமுறித்துக் கொண்டு போவது முறைமையன்று, நல்லது நாயகனுக்கு நாமிங்கிருக்கிறோமென் றுதெரியச்செய்யலாமென்றால், இந்தப் பிராம்மணர் சபிப்பார். ஆகையால் நம்முடைய வினைப்பிரகார முடியட்டுமென்று பேசாம லிருந்து விட்டாள். இப்பால் அவள் புருஷனானவன் அநேகந்தரங்கூப்பிட்டு மன்றிடுக்கிட்டு, வீட்டுக்குள் நுழைந்துப்பார்த்தான், அவ்விட்டிலிருந்த அதிதிப் பிராமணன் சுதெரிசன முனிவரைப்பார்த்து ஓய் பிராமணனே. மதிமருளாதே. கவலைப்படாதே! கண்கலங்காதே. மயக்கமுருதே உன் மனைவி அதிதி பூசைப் பண்ணுகிறு ளென்றான். அக்கோதைக் கிசைந்த மணவாளன் சொற்குறிப்பறிந்த குணவாளனும், மேலானகதி சம்பாதிக்க விரும்பினவனும், புண்ணியமெல்லா வற்றையும் ஒரே மொத்தையாக உருட்டித் தானே கைக்கொள்ள வேண்டுமென்னுங் கருத்தையுடையவனு மாகையால். அதிதியின் பேச்சைக் கேட்டு ஆனந்தமாய் சரீரம்புளகித்து, மனங் குளிர்ந்து, மேன்மேலான பாக்கியங் கண்டவன்போற் பூரித்து, ஆடினான், பாடினான், வேதபாடங்களைச் சொல்லிக்கொண்டோடினான். சன்ம சாபல்யமானேன். என் தந்தைதாய் தேடிய தவந்தான்! தவம் மற்றதெல்லாம் அவம் கர்த்தாவினுடையகிருபையை நானென்னவென்றுசொல்லுவேன். அதிதியாய் எழுந்தருளியவரு மவரே. யாவற்றிற்கு மேலான அறிவுமவரே. திரிமூர்த்தி சொரூபமு மவரே. எனக்கு முக்கியமான முதல்வரு மவரே. விரதமுமவரே. விவேகமுமவரே. வெற்றியுமவரே. யுத்தியுமவரே. சத்தியுமவரே. சித்தியுமவரே! இவையாவும் அவரே. இதுவே சத்தியம். இதுவே நிச்சயம் இதற்குப் பஞ்சபூதமும், சூரிய சந்திரரும், என்மனமுஞ்சாட்சி. உண்மையென்பதற்குத் திருஷ்டாந்தக்காக்ஷி. இதுவே தருமக்காணியாட்சி என்றுரைத்து ஐயா! மகானுபாவா முன்னமென் பெண்சாதிக்கு அதிதிகள் ஆசைப்பட்டு விரும்பின்படிக்கு வழிபடச்சொல்லி உத்தரவு செய்திருந்தேன். நானுரைத்த வண்ணம் என் பெண்சாதி அதிதிபூசை பண்ணுகிறாள். மெத்தவுஞ் சந்தோஷம். மகாசந்தோஷம், என்று வாசலிற் போய் நின்று, அவ்வதிதி வரவை யோயாமற் துதிக்கின்றான்.

அப்போது அசரீரி யிதெல்லாந் தெரிந்து, ஓ அதிதியே? இந்த மஹானுபாவன் சொன்ன வார்த்தைகளி யாவுஞ் சத்தியமே, உண்மை. அகம்புற மிரண்டும் ஒத்தவன், யாதொரு குற்றமுமற்றவன், என்று சொல்லியடங்கியது. அந்த வேளையில் அந்தப் பதிவிரதையைப் பக்கத்தில் வைத்துக்கொ

ண்டு வீட்டிக்குள்ளிருந்தவேதியன் தானேற்
படுத்திக்கொண்டுவந்த வேடந்தை யொழித்
து தனது யதாரூபமெடுத்து, காலபாச தண்
டசூல கோலத்தைத் தாங்கி எருமைக்கடா
வாகனத்துடன் தேவதைகள் ரிஷிகள் திக்கு
ப்பாலகர் சூழப் பிரத்தியட்சமானான். உட
னே அப்புனிதவதியும் அவள் புருடனான
புண்ணியவானும் பிரதட்சண நமஸ்காரம்
புரிந்து அநேக விதமாகத் தோத்திரஞ் சொ
ல்லிப் போற்றிவாழ்த்தினார்கள். நான்கு திக்
கிலுந் தேவர்கள் புஷ்பமாரி வாரித் தூற்றி
னார்கள். உலகமெல்லாம் வழுத்தக் குறை
தவிர்ந்தார்கள். தரும வேந்தனும் உடல்
குளிர்ந்து இல்லறநடத்திய சதிபுருஷாளிரு
வரையும் பார்த்து ஓ உத்தம குணத்தரே?
உலகத்தில் உங்களைப்போல் ஒருவரையுங்
கண்டிலேன். ஓ சுத்த பவித்திரனே உனக்கு
வேண்டிய வரங்கேள் தருகிறேனென்றனன்
அதற்கவர் சுவாமி அடியேனுக்கு எமதண்
டனையு மெமவாதனையு மில்லாம லிருக்கும்
படிக்கு வரங்கொடுக்க வேண்டுமென்றனர்.
அப்படியே எத்தனைகாலம் இவ்வுலகிலிருக்க
இச்சையோ! அத்தனைகாலமு மன்போ டிரு
ந்து அதிதி பூசைபுரிந்து பிரபஞ்சத்தாசை
பின்னிட்டபோது தேவலோகத்திற் போயி
ருந்து போகபாக்கியங்களை யனுபவிக்கும்படி
வரங்கொடுத்தேன். இன்றுமுத லென்றென்
றைக்கும் உனக்கு எமனுடைய உபத்திர
மில்லை. என்றியம்பிப் பதிவிரதா சிரோ
மணியாகிய போகவதியம்மனைப் பார்த்து
அம்மா? உன்னுடைய மேலான நிதானத்தி
ற்கு மெச்சினேன். சந்தோஷமானேன்! நீ
இன்றுமுதல் போகவதியென்னும் பெருமை
யுடன் வேகவதி என்கிற நதியாய், புனித
மாய்; மருத்துவமாய் என்னாளும் வற்றாமல்
இருப்பதோடு உன் புருஷனுக்கு மாத்திரம்
ஸ்திரீயாய் மற்றவர்களுக்குச் சகல பாபங்க
ளையும் போக்கடிக்கிற புண்ணியநதியாய் வா
ழ்கவென்று வரங்கொடுத்து அங்குள்ள மற்
றப் பெரியோர்முதலிய பேர்களும் புகழ்ந்து
ஆசீர்வதிக்கும்படிக்கு அவர்களுடைய நன்
னிலையை வெளிப்படுத்தி, தனது யதாஸ்தா
னம்போய்ச் சேர்ந்தான் யமதருமராஜனான
வன். இப்பாலவ்விருவரும் அந்தத் தரும
தேவன் கொடுத்த வரத்தின்படிக்கு எமதண்
டனையச் செயித்து இன்பமாக வாழ்ந்திரு
ந்தார்கள். ஆதலால், இல்லறத்திற்கு எடுத்
துரைக்கின்ற நெறிமுறை நீதிமுறையின்படி
நடந்தாற் காலனை வெல்லலாம். கதியையும்
பெறலாம். என்று வீஷ்மர் பன்னியபோது,
சமஸ்தமான பேருங் கேட்டுச் சந்தோஷப்
பட்டார்கள். அப்போது தருமநந்தனர்
தனது மூதாதையாகிய காங்கேய முனி
வரைந் தீர்க்கதெண்டஞ் செய்து, ஐயனே
இல்லற தருமத்தைக் குறித்து எனக்கு
வேண்டியவரையிற் றெளிவுண்டாயது ஓ
எங்கள் துயர நீங்கத்தக்கதாய்ச்சொரூபநிச்ச
யஞ் சொல்லத்தக்கவரே? ஓ என்போன்றவ
னைஇரட்சிக்கப்பட்டவரே? சுவாமிசூத்திரர்,
வைசியர், க்ஷத்திரியர், இம்மூன்று வருணந்
தாருந் தங்கள் குலத்திற்குயர்ந்த பிராமண
னாக வேண்டுமென்றால் ஆகலாமா, கூடா
தா! இந்த ஐயம் என்மனதி லிருக்கிறது.
அது இன்றைக்குத் தீர்ந்து நான் கடைத்
தேறும்படிக்குத் திருவாய் மலர்ந்தருள வே
ண்டுமென்றுசிந்தித்து வநதித்தார். அதற்கு
வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

## இந்திரமாதங்க சம்வாதம்.

அப்பா தருமஸ்வரூபியேதவசிரேஷ்ட
னாகிய பிராமணன். அவனுக்கொரு பிள்ளை
அந்த பிள்ளையைத் தகப்பன் காட்டுக்கனு
ப்பி, தருப்பை சமித்துகொண்டு வரும்படி
உத்தரவுபண்ணினான். அப்படியே அந்தப்
பிள்ளை போகிறபோது வழியிலே கோவேறு
கழுதையின் குட்டி மேய்ந்துகொண் டிருந்த
து. அந்தக் குட்டியைக்கண்டு அதட்டி அ
தட்டித் துரத்தினான். அந்தக் கழுதைக்
குட்டி தன் தாயிடத்திலோடி அம்மா நான்
சும்மா மேய்ந்துகொண் டிருக்கும்போது அ
வனென்னை அடிந்துத் துரத்தினனென்று
கோபத்துடன் கூறியது. அதைக்கேட்ட
கோவேறுகழுதைகுட்டியை முத்தமிட்டு யப்
பா அவன்கெட்டான். பிராமணனால் தெரி
யும் கீழ்ப்பட்ட புலையன். இந்தக் காட்டில்
நமக்கு அவனுக்குஞ் சம்மந்த மென்ன
விருக்கிறது. சும்மாயிருவென்று சொல்லி
யது. அதுகேட்ட குட்டி மீட்டுந் தாயை
நோக்கி, அம்மா அவன் சோலிக்குப் போ
னேனா அவனைத் தொந்திரவு செய்தேனா,
என்னை யேனடித்தா னவனைச் சும்மா விடப்
படாது சண்டை போடவேண்டும். என்று
கடுங்கோபமாய்ச் சொல்லிற்று. அந்தக்குட்

டியின்பேச்சை இப்பிராமணக்குட்டி கேட்டு மெத்த விசாரமாய்ப் பெருமூச்சுவிட்டு, தேகமுழுதும் வியர்த்து, தேம்பிவெம்பி உயிர்த்து, திரும்பித் தியங்கித் திகைத்து அதன் தாயாகிய பெண் கழுதையி னிடத்திற்குப் போய் கண்ணிலே தண்ணீர் விட்டழுது விசனப்பட்டான். அவனைத் தாய்க்கழுதை கண்டு ஏனழுகிறாயென்று கேட்டது. அதற்கவன் புலையனென்றுரைத்த தன்மையை நானறியத்தக்கதாகச் சொல்லவேண்டுமென்றனன். அப்போது பெண்கழுதை அவன் கழுத்தைப் பார்த்து இவனுக்குப் பூர்வபுண்ணியத்தினால் மிருகபாஷை தெரியும்போலிருக்கிறது. அதனாலல்லவா நாம் சொன்னதைத் தெரிந்துகொண்டு பூர்வோத்திரங் கேட்கிறான். நல்லது. ஓ பிராமணப்பிள்ளாய் உன்தாயானவள் காமவிகாரங்கொண்டு நாலாம் வருணமாகிய சூத்திரனைப் புணர்ந்தாள். அந்தச் சூத்திர பீசத்திற்கு நீபிறந்தாய். ஆகையால் ஆயர்குலத் தாய்க்கும் இழிகுலத்தந்தைக்கும் பிறந்த தோஷத்தால் உனக்குப் புலையத்துவம் வந்தது. அதைத்தான் சொன்னேனென்றது.

அச்சொல்லைக் கேட்ட வேதப்பிள்ளை சரீரநடுங்கி, தன்தந்தை யண்டைக்குவந்து, நடந்த விர்த்தாந்தத்தையுந் தனது பூர்வோத்திரத்தையும் புகன்றான். அதைக் கேட்டதந்தை இதென்ன விந்தை? ஐயோ! அப்பா! இது உன் தாயார்பேரில் நிந்தை. உன் சிந்தை கலங்காதே யென்று தேற்றினான், அந்தமொழி தனக்குத் திருப்தி யில்லாததினால் நான் தபசுசெய்து சுயப்பிராமணனாகிறேனென்று தந்தையை விட்டகன்று, ஒரு பெரிய ஆரணியத்திற் ஒற்றைக்காலூன்றி, மற்றைக்கால் மடக்கி, ஆகாயத்தை நோக்கி தேவேந்திரனைக் குறித்து நூறு வருஷந் தபஞ்செய்து வருந்துகின்றான் அந்நாளி லொருநாள் வச்சிர பாணியாகிய தேவேந்திரன் காட்சியாகத்தோன்றிய, அப்போது அந்தப் பிராமணப் பிள்ளை பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து தொழுதான் அவனைத் தேவேந்திரனோக்கி, நீ என்னைக் குறித்துத் தவஞ்செய்த காரணமென்ன வென்று கேட்டான். ஐயா! எனது ஜென்ம இழிவொழிந்து உயர்ந்தபிராமணனாகும்படி வரந்தாருமென்றான். அதற்குத் தேவேந்திர னகைத்து, இவ்வுலகத்தில் யாருங்கோராத வரத்தைக் கேட்டனை. இது நான் கொடுக்கிற வரமன்று. அதுதவிர வேறே வரங்கேள் தருகிறே னென்றான். தவஞ்செய்த பிராமணன் பின்னொரு வரமும் வேண்டியதில்லை. நான் மற்றொன்றையுங் குறித்துத் தவம்பண்ணவில்லை. எனக்கு வேண்டியது நல்ல குடியிற்பிறந்த வேதியனாக வேண்டுவதே யென்றான். அதற்கோ ருத்திரமுஞ் சொல்லாமல் தேவேந்திரன் மறைந்துபோய் விட்டான். பின்னையும் அந்தப்பிள்ளை முன்னையிலும் பதின்மணங் கதிகமாகத் தவமிழைத்தான் அது எப்படியெனில், ஒருகால் பெருவிரலை நிலத்திலூன்றி, தபசு செய்கின்ற தபசிகளுங்கண்டு தலை நடுங்கும்படியாய் மாம்சம், தோல். நரம்பு, இவை முதலியவைகள் சரிந்து திரைந்து போகும்படிக்கு வாடி, மனச்சலிப்பில்லாமல் தயிரியம் விடாமல், மறுபடியும் நூறுவருஷம் அருமையான தவம்பண்ணினான். அப்பால் தேகசக்தியற்று உடலொடுங்கி பூமியின்பேரிற் சாய்ந்துவிட்டான். அதனைத் தேவேந்திர னுணர்ந்து, ஓ! ஓ! இதுபழிக்குவழியாய் வந்ததேயென்று வெகுசீக்கிரத்திற்பிரசன்னமாகி, தன்னிரண்டு கரத்தாலும் அவனை வாரியெடுத்து, அவனுடைய வருத்தத்தைத் தீர்த்துக் களையாற்றி இதனைச் சொல்லுகிறான்.

அப்பா குமாரனே! நீ உயர்ந்த பிராமணனாகவேண்டுமென்று வருந்தித் தவமிருந்தாய். காச்சிய இரும்புகுடித்த நீரானது கழலமாட்டாது. அதுபோல் எவனெவன் எந்தெந்த வினைப்போகத்தால் எந்தெந்த ஜென்ம மெடுக்கின்றானோ? அந்தந்தச் சனனத்தில் அவனெத்தனைத் தபசுபண்ணினாலும் அந்தத் தபசெல்லாம் ஆத்மாவுக்குள்ளே மறைந்துகொண்டிருந்து, அந்தத் தேகம்போய் மறுபிறப்பு வந்தபோது முன்னிழைத்த தபசின் பலனை யடையச் செய்யும். இந்தப் பிறப்பில்தானே பலன் கொடுக்கமாட்டாது. இராசன் முதலான மூன்று சாதியரும் பிராமணனாகப் போகிறதில்லை, விருதாவில் ஏன்பிரயாசப்படுகிறாய்? என்னாலாகாது. சொன்னாலுங்கேளாய் (கிட்டாதாயின் வெட்டென மற) என்னு நீதிக்குமாறாய் எட்டாப்பழத்திற்குத் தொறடு கட்டுகிறாய். மாமிச தேகத்தைப் புண்ணாக்கி மண்ணாக்கி மாயச்செய்கிறாய். இனியாகிலுந் தவத்தை

விட்டுவிடு. ஓ விவேகமற்றவனே! பிராமணப்பிறவி லேசானதல்ல! அதைக்குறித்து வரன்முறை சொல்லுகிறேன் நீ விபரமாய்க் கேட்டறிந்து கொள்ளுக பரம சண்டாளன் நூறு சனனமெடுத்து சனனந்தோறும் அந்தக் குலத்தொழிலிற் பிரவேசிக்காமற் சத்திய நெறியாகிய நித்தியவிரதத்திற் சாக்கிரதையுடன் உத்தமமுடையவனாயிருந்தால், நான்காவது சூத்திரயோனியிற் பிறப்பான், அச்சூத்திரன் கர்மந்தப்பாமல் தர்மந்தவறாமற் கிரமமாக நூறுசென்மம் விரதநோன்பிழைத்தால், மூன்றுஞ் சாதியாகிய வைசியனாவான். அந்த வைசியன் கர்மதர்மந் தவறாமல் பொய்யுரை பேசாமல், சீவகாருண்யனாய்த் தேவபூசை திருப்பணி யலங்காரஞ் செய்து ஆயிரஞ் சனனம் அருந்தவ மிருப்பானாகில், க்ஷத்திரியனாவான். அந்தக்ஷத்திரியன் நெறிபிறழாமல், முறைகுறையாமல், நீதி வழுவாமல், நிலைதவறாமல், மன்னுயிரைத் தன்னுயிராய் மதித்து, ஆயிரம்பிறப்பும் பிறந்து, பிறவிதோறும் அகந்தை யடக்கி கருமங்கருகி, எக்கிய ஓமங்களியற்றி தீவினை வயப்படாமல் நல்வினையைச் சேர்ப்பானாகில், பிராமணசனனங் கிடைக்கும், அந்தப் பிராமணன் பஞ்சேந்திரியங்களையு மடக்கி, ஏகமனதாய் அவா நீக்கி யாகாதிகளுண்டாக்கி வேதப்பொருளறிந்து, அப்பொருளை விளக்கி, அவ்வழி நடந்து, நின்மலசித்தனாய்ப் பதினாயிரஞ் சென்ன மெடுத்தானாகில், மகாரிஷியாவான். ஆனபடியால், இந்த வரிசைக் கிரமப்படி யேறவேண்டும். இப்படியின்றி, பிரம சிருஷ்டியிலே வரப்பட்ட பெரிய சென்னத்தை இந்தப்பிறப்பிலேயே கிடைக்க வேண்டுமென்று எண்ணிறந்த காலந் தவஞ்செய்தாலும் எய்துமோ? இப்போது நான் சொன்ன வரிசைப் படிக்குத் தவறுதலில்லாமல் நடந்த ராசனானால், பிராமண சன்மமுண்டாம். அந்தப் பிராமணன் தனக்கு விதித்திருக்கின்ற விதிப் பிரகாரம் நடப்பானாகில், நன்மையுண்டாம். விதிதப்பினால் பழயகதியிற் கொண்டுபோய் விட்டுவிடும். இது அசாத்தியம். நீதிமானாகிய பூபதிகளாலும் பிடிக்கப்படாத சார்த்தூலம் உனக்குக் கிடைக்குமோ? அந்த ஆசையை நிராசையாக்கிவிடு, இனி வேண்டியபெண்கள் உன்மேல் இச்சைகொண்டு, உன்னைப் புருஷனாக வகித்துப் பூசிக்கத்தக்கதாகச் சுகமாயிரு. என்று அதற்குத்தகுந்த தேயசும் ஆயுசுங்கொடுத்து, அவனை ஒரு தேவனாக்கி வைத்தான். அந்தப்படியே அவன் அநேகம் பெண்கள் பூசிக்கச் சிவந்தமேனிகொண்டு பூமியிற் றிரிந்தான். தேவேந்திரன் தெய்வலோகம் போனான், ஆதலால், இந்த மூன்று குலத்தாரும் என்னபாடுபட்டாலும் பிராமணனாக மாட்டார்கள். என்று கங்கா புத்திரன் கரைத்ததைக்கேட்ட தருமபுத்திரன் இருகரங் குவித்திறைஞ்சி, எந்தையே! க்ஷத்திரியர் தவஞ்செய்து மகாரிஷியாகமாட்டார்களோ? விசுவாமித்திர மகாரிஷி எப்படியானார்? என்று தருமராசன் வினவ வீட்டுமர் சொல்லுகின்றார்.

---

## வீதவ்வ்வியராஜன் கதை.

அப்பா பேரனே! சூரியகுலத்தி லவதரித்த காதிராசனுடைய காதலன் கவுசிகன் வெகுநாள் ராச்சியபாரம் பண்ணிக் கடைசியிற் பிர்ம்மரிஷியானான். அதனது வரலாறு கேள்- தமக்கையுந் தங்கையும் இருவர். ஒருத்தி ரிஷிக்கு வாழ்க்கைப்பட்டாள், மற்றொருத்தி ராசனைக் கட்டிக் கொண்டாள். இவ்விருவருக்கும் பிள்ளையின்றி ஒரு ரிஷியுடன் சொல்லி அங்கலாய்த்தார்கள். அந்த ரிஷி அவர்களுக்கிரங்கி, நீங்களிரண்டு பேரும் மாதவிடாய்வந்த நாலாநாள் கங்கையில் ஸ்நானம் பண்ணி, அக்கரை யோரத்தில் வெவ்வேறாக யிருக்கின்ற இரண்டு மரத்தில் இன்னின்ன மரத்தை நீங்களிருவரும் தழுவிக்கொள்வீராகில் உங்களுக்குக் கர்ப்பமுண்டாம். என்று அம்மரங்களின் பெயர்களை அவர்களுக்கு உபதேசம்போற் கூறினர். அவர்களவ்வாறு செய்யாமல், மறதியினால் தங்கைக்குக் குறித்த மரத்தை அக்காளும் அக்காளுக்குச்சொன்ன மரத்தை தங்கையுமாகத் தழுவிவந்தார்கள். அவர்களை ரிஷிபார்த்து, நீங்கள் நான் சொன்னபடிக்கு நடவாமல் மாறிப்போனபடியால், ரிஷி பத்தினியாகிய உன்வயிற்றிற் பிள்ளை பிறந்து பிராமணகுலமென்கிற பேர்மாத்திர மிருக்க க்ஷத்திரிய கிர்த்தியமாய் நடப்பான் ராஜபத்தினியான உன் கர்ப்பத்தில் க்ஷத்திரியனாகப் பிள்ளைபிறந்து, பிராமண நெறிமுறை பிசகாதவனாவான். இது வினைவசத்தால் நீங்கள் தேடிக்கொண்ட நியமமென்று அப்படியே கருப்ப

மூற்று இருவரும் பெற்றார்கள். இது பூர்வ கர்மம். இவ்விதத்தாற் பிறந்த கவுசிகராஜன் வெகுகோடிகாலந் தவசுபண்ணி, பிராமண னுகிறதற்கு மெத்தவும் பிரயாசப்பட்டு, பிரம ரிஷிக்கொப்பாய் விசுவாமித்திரரென்று பெயர் வகித்தார். அவர் பட்டபாடெல்லாம் நீ கேட்டிருப்பாய். அதைக்குறித்து நான்பேச வேண்டியதில்லை. எந்தவிதத்திலும் பிராமண மகத்துவம் பெரிது என்று சொல்லியதைக்கேட்ட தருமராசன் அடிபணிந்து, ஆண்டவனே! வீதவவ்வியனென்கிறவேந்தன் நெடுநாள் துரைத்தனம் புரிந்து, தாமரைமாலை தரிக்கப்பட்ட பிர்மகுலத்திற் சேர்ந்தானென்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆதலால், அஃதெப்படி சேர்க்கப்பட்டானென்று வினவ, வீஷ்மர் விளம்புகிறார்.

அப்பா அன்புக்கொருவனே! முற்காலத்தில் வீதவவ்வியன் யாவருங் கொண்டாடத்தக்கதாய் ராச்சியபாரம்பண்ணுகிறநாளில் தனக்குச் சமானமான பிள்ளைகள் நூறு பெயர் பிறந்தார்கள். அவர்கள் நூறுபேரும் பிரபலமாய் காசிதேசத்தை யாளப்பட்ட ராஜனுடைய குமாரருடன் கனத்த சண்டைவிளைத்து அவர்களைக் கொன்றார்கள். இறந்த பிள்ளைகளின் தந்தையாகிய காசிராஜன் பாரத்துவாச மகாரிஷியினுடைய ஆசிர்மத்திற்குப்போய், அவரைக்கண்டு கும்பிட்டு நின்று தோத்திரித்து, தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து, தன் குமாரர்களுக்கும் வீதவவ்வியன் புத்திராளுக்கும் யுத்தம் நேரிட்டுத் தன் பிள்ளைகளிறந்துபோன விர்த்தாந்தமெல்லாஞ் சொல்லி, மிகுந்த குறையுடன் விசனப்பட்டான். அதனாற் பரத்துவாசருக்குக் கிருபைவந்து, காசிராஜனுக்கு எல்லாச் சோபமுந் தீர்த்து, பழமையைப் பார்க்கிலும் புதுமையாய்ப் பிரபலமுற்ற சுகம் பெரும்படியாக ஒரு யாகஞ்செய்வித்து, அந்த எக்கியத்தினிடத்திலிருந்து ஒரு வீரனை உண்டாக்கினார். அந்த வீரன் திரிலோகத்தையுஞ் செயிக்கும்படியாகிய தீரன். அவனைக்கண்டு சகல பெரியோர்களும் வாழ்த்தினார்கள். அப்பேர்ப்பட்ட பிள்ளையானவன் வீதவவ்வியன் பிள்ளைகள்பேரிற் பகைத்து எதிர்த்து சண்டைவிளைத்து, நூறுபிள்ளைகளையும் நொறுக்கி, அப்பால் இப்பேர்ப்பட்ட துட்டரைப்பெற்றவனெங்கேயென்று சதுரங்கப்படை கூடிய வீதவவ்வியனைத் தேடிப்போகின்றான். அப்போது இந்தச் சேதியைக்கேட்ட ராஜன் ஓட்டமாயோடி, பிருகுமகாரிஷியி னாசிர்மத்திற் புகுந்து சுவாமி! உமது திருவடிக்கடைக்கலம் என்று பிராண னுக்கபயஸ்தங் கொடும் என்று சரண்புகுந்தான். அவனைத் தொடர்ந்து எதிர்க்கச் சென்ற காசிராசனுடைய எக்கிய குமாரன் பிருகுமகா ரிஷியின் பர்ணசாலைக்குட் புகுந்து, அவருக்குத் தகுந்த தோத்திரம் பகர்ந்து, ஐயனே! எங்கள் குலத்தைக் கருவறுத்த பலத்த திருடனைப் பெற்றவன் தங்களிடத்தினுழைந்து மறைந்திருக்கின்றான். அவனைக் கைப்பிடியாகக் கொண்டுபோகவேண்டும். அதற்குத் தடைசொல்லாமற் செலவு கொடுமென்று பாதத்தில் வீழ்ந்து கரங்குவித் திறைஞ்சினான்.

அதற்கும் பிருகுமாரிஷி இரங்கி, ஓ சகலகலையுங்கற்ற ராசபுத்திரா! உனக்குரிய சத்துரு இவ்விடத்திற்கு வரக்காணேம். இந்த ஆசிர்மத்திலுமில்லை. இருந்தானுகிற் கண்டு பிடித்துக் கொண்டுபோவென்று சொன்னார். அந்த மின்னார்மேனி வீரன்கேட்டுக் கோப வெகுளிகொண்டு தன் பகைவனை யங்குள்ள பல விடங்களிலுந் தேடிப்பார்க்கின்றானப் போதந்தப் பிருகுவானவர் மனம் வருந்தி, நம்மிடத்தி லடைக்கலமென் றடைந்தவனை எப்படி காட்டிக்கொடுப்பது? ஐயோ! வதிக பாவம் ஆச்சே என்றருள்சுரந்து, தமது தவ மகிமையால் வீதவவ்வியனங்குள்ளவநேகம் பிராமணர்களுள் ஒருவனாய் அக்காசிராசபுத்திரனுகவந்து புகுந்த வீரன் கண்ணுக்குத் தோன்றும்படியாக நினைத்தார். அவரெண்ணிய வண்ணம் வேதபாராயணப் புண்ணியனுகப் பொருந்தியிருந்தான். வந்த ராஜகுமாரன் அந்த ஆசிர்மமெல்லாந்தேடி பகைவனைக் காணுதபடியால் மறுபடியும் பிருகுமகாரிஷியினிடத்தில் வந்து, சுவாமி! தேவரீராசிர்மத்தில் அக்கிரமமாய்ப் புகுந்தேன். அபசாரம், அபசாரம் என்னைத் தேவரீர் மன்னிக்க வேண்டியது என்று வெகுவித உபசாரமாய் வேண்டிக்கொண்டு வணங்கினான். அவருஞ் சந்தோஷமாய் ஆசிர்வதித்தருளினார். அவரிடத்திலவன் செலவு பெற்றுக் கொண்டு காசிபட்டணம்போய்ச் சேர்ந்தான். அன்றுமுதலாகப் பிருகுமுனிவர் தம்முடைய சொற்படிதருதபடி வீதவவ்வியனைப் பார்த்து, நீ இன்றுமுதலெலன்றென்

றைக்கும் பிராமணனுக்கவே யிருந்துவிடென்று கட்டளையிட்டருளினர். இப்படியவர் பிரமாணந் தப்பாமற்செய்த பேரருளினல் அவ்வீதவவ்வியன் பெறுதற்கரிய் பிராமண ஜனனப் பேறுபெற்று மகிழ்ச்சியுடன் தவம்பண்ணிக்கொண்டிருந்து, திரியாக்கினியிடத்தில் அநேகம் பிள்ளைகளை யுண்டாக்கிக் கொண்டான். அந்த ஓமாக்கினியி லுதித்த பிள்ளைகளு மவன்போற் பிர்மகுலமே யானர்கள். இதைக்குறித்துப் பார்க்குங் காலத்தில் அப்பிள்ளைகள் அக்கினியிற் பிறந்தபடியினலேயும், அவர்களின் தந்தை பிருகுரிஷியினனுக்கிரகத்தினற் பிராமணனன படியினலேயும், அவனுக்குப் பிறந்த பிள்ளைகளும் பிராமணராகக் கூடுமென்பது தகுதியான விதிமுறைமைதான். சந்தேகமில்லை என்று பிர்மாவுக்கீடாகிய வீஷ்மர்சொல்ல, அதைத் தருமராஜன்கேட்டு சந்தேகந் தீர்ந்து, ஐயா! இந்த லோகத்திற் சிற்சிலபேர் ஒவ்வொரு பிரதிக்கினைபண்ணி, அந்தப் பிரதிக்கினைப் பிரகார முடித்துக் கொள்ளுகிருர்களே அதென்ன? அவர்களுடைய வல்லமையா? அல்லது வினையினுடைய விளைவா? இதனை யெனக்கு விள்ளும்படிக்குச் சொல்லியருள வேண்டுமென்று கேட்க, வீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

---

### முயற்சியின் திறங் கூறல்.

அப்பா தருமபூபதி இவ் வுலகத்தில் இயாதொருத்தன் பிரதிக்கினை பண்ணினல் அது முடிவுபெறுவதற்கு அதற்குண்டான முயற்சிகள் எத்தனை இயற்றவேண்டுமோ! அத்தனையுஞ் சோம்பலில்லாமற் பண்ணினலும், அதுமுடிவதற்கு மேல்வினையின் விளைவிருந்ததேயாகில், அந்த வினையே எல்லாவற்றையு முடிப்பதற்கு அனுகூலமா யிருக்கும். தீவினையிருக்குமாயின் தேடிச்செய்யு முயற்சி எல்லாந் தீதாய்ப்போய்விடும். ஆனல், நல்வினை தீவினையென்று நாடிச்சோம்பலாய் முயற்சிசெய்யாம லிருக்கப்படாது. முயற்சி பாராட்டாமற்போனல் மேல்வினைக்கு ஆதரவில்லை அது வுங்கைகூடாது. அப்படியானல் மேல்வினை என்னமாய்ப் போமென்று கேட்பாயாகில், மேகத்திற் பளிச்சென்று வெளிச்சங்காட்டி மறைந்து போகின்ற மின்னல்போல், அவனுக்குச் சற்றே ஹேதுக்கிரம மிருக்கக்காட்டி மறைந்து போம். இதுதான் மேல்வினையின் விளைவு. ஆகையால் என்னேரமும் முயற்சியிலேயே யிருக்கவேண்டும். அவாளவாள் முயற்சிக்குத் தக்கதுபோல் இருவினை விளையுமென்றறிக. முனைந்து பிரகாசிக்கச்செய்யு முயற்சியாவது காரியம். வினையானது காரணம். காரியமின்றிக் காரணங் கைகூடாது, அதெப்படி யென்ருல், நன்ருய் முற்றிக்காய்ந்து தேறிய வித்தானலும், நல்ல நிலத்திற்போட்டு எருமுதலியதுங் கொடுத்துத் தண்ணீர்ப்பாச்சினல், அந்த விதை முளைந்து கொழுமையுடன் வளர்ந்து குணமுள்ள பலனைக் கொடுக்கும். அந்த நல்ல விதையைத்தானே உப்பவர் நிலத்தில் விதைத்தால் முளையாது. தப்பி முளைத்தாலும் பலனைத்தராது. அத்தன்மைபோல் முயற்சி பண்ணுமற்போனல் நல்வினையாகிலுங் கெட்டுப்போம். எவ்வளவு முயற்சி செய்கின்ருர்களோ? அவ்வளவும் நல்வினையானது பிரகாசிக்கும், நெய்யிருக்கிறவரைக்கும் வத்தியிற் பற்றிய விளக்கிருக்கும். நெய்யற்ருல் திரியெறிந்து நெருப்புங்கூட அவியும். அப்பாற் புகையும். மேலுமேலு முயற்சியிருந்து ஒருவேளை வினையில்லாமற் போனல், அதிகபலன் கைகூடமாட்டாது. முயற்சியும் வினையுஞ் சமத்துவமானல், மெத்தவும் பிரபலிக்கச் செய்யும். இதனற் காரியமில்லாமற் காரணம் பண்பு பெருது. காரணமின்றிக் காரியமு மாகாது. அதற்குத் திருஷ்டாந்தங் காற்றில்லாமல் அக்கினி சொலிக்காது அக்கினியில்லாமற் காற்றினலேயாக நடக்காது. இதை உன்னறிவினற் றெரிந்து கொள்ளுக. என்று வீஷ்மரறைய, தருமராஜன் நின்மல மனதுடன் சம்மதமாய் நமஸ்கரித்து, ஐயா! ஒருவருக்குச் சுகமிருக்குங் காலத்தில் அவருடனிருந்து விருந்து முதலியது மநுபவித்து, அவர்கட்குத் துன்பமுந் துக்கமும் ஒக்கவருங் காலத்தில் மிக்கனவாய்க்கூடிய விசிதத்தை நாடாமல் விட்டுவிடுகிறதா? அல்லது கூடயிருந்து அவர்களுடைய நல்வினை தீவினைகளையுந் தம்முடையதென்று அனுபவிக்கிறதா? இதற்கு விதிவழி சொல்ல வேண்டுமென்ன, வீஷ்மர் சொல்லுகின்ருர்.

கிளிப்பிள்ளையின் கதை.

அப்பா அறன்குமாரனே! காசி தேசத்திற் கையில் வில்லுங்கணையுங்கொண்டு திரிகின்றகானகனொருவன். மிருகங்களையும்பக்ஷிகளையுங் கொல்லுந் தொழிலிற் சற்றேனுங் கூசாதவன். மேலும் பட்சிகளின்பேரிற் பாணங்கள் தொடுக்கும் போதெல்லாம் அந்தப் பாணங்கள் அப்பக்ஷிகளிருக்குமரத்தின்மேற் போய்ப்பட, அந்தப் பாணங்களில் விஷந் தோய்ந் திருப்பதனாலே அப்பாணம் பட்டு அம்மரத்தின் இலை பூ பிஞ்சு காய்கனி முதலியவெல்லாம் உதிர்ந்துபோய் அம் மரமும் மொட்டைமரமாய் வெட்டவெளியாகும். இப்படி ஒருநாள் ஒரு மரத்தின்மீது பாணங்களை வீசி வெட்டவெளியாக்க, அதில்வாசம் பண்ணிக்கொண்டு நெடுநாளாயிருந்த ஒரு கிளியானது தழைத்தமரம் உலர்ந்துபோனதைக்கண்டு சஞ்சலங்கொண்டு இம்மரத்தின் பழத்தைத்தின்று காலங் கரிப்புதெரியாமற் பிழைத்திருந்தோமே, இப்போ திந்தமரம் பட்டுப்போனது போலாயதே. இது தழைத்திருக்கும்போது நாம் செழித்திருந்தோமே, இப்போ திளைத்த காலத்தில் இதை விட்டுப் போய்விடுகிறது தருமமல்லவே என்று அம் மரத்திலேயே யிருந்து, மழைக்கு நனைந்து, வெய்யிலுக்குக் காய்ந்து, மேனிமெலிந்து குளிரெடுத்து, காற்று, இடி, மின்னல், இவைகளாற் பாடுபட்டு, கருத்தழியாமல், தைரியம் விடாமல், கவலைப்படாமல், சலனமுறாமல், நன்றிகுன்றாமல் பழமைபாராட்டி, அறிவையும், பலத்தையும், அனுகூலமாக்கி, அவ்விருட்சத்தைவிட்டுப் போகாமலிருந்தது. இப்படி யிருக்கிற காலத்தில் மேகவாகனனாகிய தேவேந்திரன் இந்த விந்தையை யறிந்து, ஒரு கிழப் பிராமணனைப்போ லுருவெடுத்து அந்த விருட்சந்தினிடத்திற்குவந்து, விஷக்கணைகள் பட்டு வெந்துபோயிருக்கிற மரக்கிளையிலிருக்கும் ஸ்திரக்கிளியைக் கண்டு, ஓ அஞ்சுகமே! உன்னுடல் இத்தனை வருத்த முறத்தக்கதாக இவ்விடத்திற் காய்ந்து தேய்ந்து மாய்ந்துபோன மரத்திலிருப்பானேன்? வேறே தழைத்துப் பழுத்திருக்கிற மரங்களைச்சார்ந்து சவுக்கியம் பெறக்கூடாதா? ஏனிப்படி வருத்தப்பட வேண்டும் (ஒருவீடில்லார்க்கு உலகமெல்லாம்வீடு) என்பதுபோல் ஈஸ்வரன் லேர்ப்படுத்திய காடு அநேகமுண்டு. அவைகளில் வாசம்பண்ணிக் காலம் போக்கலாமே. ஐயோ, வீண்காலம் போக்குகின்றனையே என்று வேதியன் கேட்க, கிளியானது சொல்லுகின்றது.

ஓ ஐயா பிராமணரே! நமஸ்காரம், நானிந்த மரத்தின்பேரிலே நெடுநாள் என் சொந்தம்போலிருந்து பிராதாக்காலம், மத்தியானம், சாயங்காலம் இம்மூன்று காலங்களிலேயும் பசிநோயுந் தாகமுந் தோன்றாமற் படிக்கு பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு, பக்குவமாய் வாழ்வு பூண்டேன். இப்போதிந்த மரத்திற்கு இடையூறு வந்துவிட்டதென்று, மதிகெட்ட மாந்தரைப்போற் செய்நன்றிகுன்றி சிந்தைமறந்து அயல்விருட்சத்திலணுகமாட்டேன். இதுவே பேரறிவாளருடைய தன்மை உலகத்தில் ஒருவன் சுகமுஞ் செல்வமும் பெற்றிருக்கும்போது அவனுடன்கூடி சுகத்தை யனுபவித்து, அவனுக்குக்கெடுதியும் வறுமையுங் கிட்டிய நாளிற் கடன்காரர் முதலிய பேர்களிடத்தில் அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டு அப்பாற்போகின்றகயவர்களைப்போல் நானும்நீங்கிப்போவது ஞாயமோ, தருமமோ, ஓ நாதனேசுகத்துக்கெப்படி பகுத்துச்சுகித்தேமோ அப்படியே தீமைக்கும் உடன்பட்டிருக்க வேண்டும் இராமற்போவாராகில், அவருக்குப்பழியும், பாவமும் பங்கமும்வரும். அதுவுமல்லாமல் கொடிய நரகமே குளிக்க வேண்டியதாகும். ஆதலால் இந்தத் தருமசூட்சந் தெரிந்திருக்கப்பட்ட நான் வேறொரு விருட்சத்திற்குப் போகலாமா? என்று கிளி பேசியபோது பிராமணன் ஆச்சரியப்பட்டு, அந்தோ! ஓ தந்தையே சுகத்தை விரும்பும்படியாகிய இந்தச் செகத்தில் தேகவருத்தம் பாராமலும், பசியைப்பாராட்டாமலும், நித்திரையில்லாமலும், பழிச்சொல்லுக்குப் பயப்படாமலும், அருமையோராமலும், இனத்தார்கள் கூறுகின்ற அவமதிப்புணராமலும், நிலைதப்பாமலும் இருப்பதனாற் பயனென்ன? என்றைக்கிருந்தாலும் இறந்துபோகிறதேகம். இருக்கிறவரைக்கும் உண்ணுறங்க லென்பதை யோர்ந்து அனுபவியாமல் வருந்துவதில் என்ன பிரயோசனம்? என்று கிழப்பிராமணன்கேட்கவும் கிளியானது சொல்லுகின்றது.

ஓ ஐயரே! நீர் வேதவேதியர். சகலவிதி முறையுந் தெரிந்தவர்! தருமசொரூபி. உம்

மைவிட சத்தியதருமம் வேறில்லை. நீரேயிப்படி சொல்லுவீராகில், நீசத் துரோகிகளாகிய நன்றி மறந்தவருக்குக் கொழுகொம்பு வேறேவேண்டுமே! என்னளவில் இப்பேர்ப்பட்ட மொழியைச் சொல்லாதிருக்கும்படிக்கு வேண்டிக் கொண்டே னென்றது. அம்மொழிகேட்ட தேவேந்திரன் ஆனந்தமடைந்து ஐயோ! அல்பமாகிய பட்சிக்கு இவ்வளவு பேரறிவு பிறந்தது அருமையென்று அகமகிழ்ந்து, தன்னுடைய ரூபத்துடன் பிரசன்னமாகி, ஓ சுகமே, நீ சுகமேயிரு. நான் தேவராஜன் உன்னுடைய நிலையுணர்வதற்காகவந்தேன். நீ மெத்தவும் நன்னெறிபற்றியிருக்கின்றாய். அதனால் நான்கிருபை கூர்ந்தேன். உனக்கு வேண்டியதைக் கேட்பையாகில் தட்டாமற் றருகிறேனென்றான். அதைக் கிளிகேட்டு எனக்குவரங்கொடுக்க உமக்கிஷ்டமிருக்குமாகில், இப்போது நானிருக்கிற மரம் எப்போதும்போலே இடையூறில்லாமலிருக்கும்படியாக அனுக்கிரகம்பண்ணுமென்று கேட்டது. இந்திரன் அப்படியே ஆகுகவென்று சொல்லி, அடிக்கிற காற்றுக்கும் பெய்கிற மழைக்குங்கூட பயமற்றிருக்கும்படியாய்க் கிருபை புரிந்தருளினான். உடனே அந்த விருட்சம் முன்போற்றழைந்து, கொழுந்தோடிப்படர்ந்து, நெருக்கமாயடர்ந்து, வானம்வரையிற்றொடர்ந்து, பூரித்து, காய்த்து, பழுத்து, சிரக்கம்பஞ்செய்திருந்தது. அமுதகூபனாகிய ஆகண்டலன் இந்தக் கிளியினிடத்திலிருந்த நன்றி குறையாத தருமத்திற்காக முன்னின்று அதனது மனதைச் சோதித்து, திறபகலாத திடத்தைக்கண்டு சந்தோஷங்கொண்டு, அந்தக் கிளிகேட்ட வரத்தைக் கொடுத்துப் போயினான். ஆகையால் நல்லவர்களாகிய உத்தமர்கள் சுகதுக்கத்துக்கு உடன்பட்டு நேசமாயிருப்பார்கள், மத்திமர்கள் நீர்நிறைந்த குளத்திற் பறவைகள் செறிந்து நீர்வற்றறினாற் பறந்துபோம் பான்மைபோல நீங்கிப்போவார்கள். என்று நன்றியறிந்த வீஷ்மர், நவில, பண்டிதனாகிய பாண்டுபுத்திரன் கேட்டுப் பாட்டனைப் பணிந்து ஒருவார்த்தை கேட்டார். ஐயா! உலகிலுள்ள பொருள்களிளெல்லாம் அறிவே பொருளென்றுபேசுகிறார்களே. அந்த அறிவினால் அறியவேண்டிய அரும்பொருள் யாது? அதனைத் திரிகாலமுந்தெரிந்த திவ்வியக் கியானியாகிய தேவரீர் தெரிவிக்க வேண்டுமென்று சிரந்தாழ்த்தி யிருந்தார், அதற்கு வீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

---

## அறிவாலறியும் பொருள் இன்னதெனக் கூறுதல்.

ஓ முரசகேதனா! நீலமேகச் சாமளவர்ணனாகிய நெடியோன், ஸ்ரீமந்நாராயணனாகிய இந்தக் கோவிந்த கோபால கேசவவாசுதேவ கோவர்த்தனதாரியா யெழுந்தருளிய கிருஷ்ணமூர்த்தியின் பாதபத்மங்களைப் பற்றிப் பத்தியாய்க் காண்பதே பேரறிவாகும். ஓ இக்கட்டகற்றித்திக் கெட்டும் புறந்த கீர்த்தியுடையவனே! இன்னுஞ்சொல்லுகிறேன் கேள். இந்தப் பரவாசுதேவனது திருவடிகள் பஞ்சபூதமாகியும், தருமத்தினுட்பொருளாகியும், ஓமாதியாகத்திற் குரிமையாகவும், சத்தியமும், நித்தியமும், தருமமுமாகியும், ஞானஞான விஞ்ஞான பதமாகியும், எல்லாவற்றிலும் மேலான மோட்சமாகியும் விளங்குவதனால் இனி வேறுபொருளுண்டென்று விளம்பலாமோ? ஓ பசும்பொன்னாரம்பூண்ட பாக்கியனே! கயிலையாளியும், சத்தியலோகவாசியும் வைகுந்தநாதனும் இன்னும் வேதங்களில் விளம்பிய பலபேத தேவர்களும், சுருதிச் சொரூபமும், தோற்றமாற்றமும், இந்தத் துவாரகாபுரி வாசனென்று உணரத்தக்கவே. இதுவே அறிவிலுயர்ந்த நுண்மையான அறிவென்று வீஷ்மர் சொல்ல, அதை ரிஷீஸ்வரர்களும் முனீஸ்வரர்களுங் கேட்டு புன்சிரிப்புகொண்டு, எதிரிலிழிக்கின்ற முகில்மேனியனைப் பார்த்து, இவர் சில நாளைக்குமுன்னே தேவகிதேவியார்வயிற்றிற் பிறந்தவர். யதுகுலராஜ திலகனானவர், நம்மிலொருவராயு நலம்பொலத்திற் குடன்பட்டிருப்பவரை நான்குவேதமுதல்வரென்றும், திருநாரணனென்றுங் கொண்டாடுவதென்னை? அதனை யெங்கட்குச் சொல்லுமென்று வினவ, வீஷ்மர் விளம்புகின்றார்.

ஓ மகான்களே! தீக்கடைக் கோலிலிருந்து பிறந்தநெருப்பானது கொஞ்சமேனுங் குறையாமல் தன்னுடைய பலத்தையுங் குணத்தையும் பாரினில் விரித்துத் தகிக்கும் பான்மைபோல், சந்திரகுலத் தோன்றலாகிய இத்தருமராசனது தபோபலத்தினாற் காருண்யத்திற்கு முதன்மையாகிய அக்கடவுள் திருவவதாரம்பண்ணி, பாண்டவர் சகாய

னென்றும் பார்த்தசாரதி யென்றும் பேர்தாங்கி, அந்த ராசகுலத்திலொருவராய் வாசம் பண்ணி, சுபாசுபங்களுக்கு முடன்பட்டு, பத்தபராதீனனு யிருக்கின்றார். இவருடைய அனந்த கவியாணகுண லீலா விநோதங்கள் அதிசயங்கள் திருக்கூத்துகள், ஆனந்த நடனங்கள் ஆருக்காகிலுந்தெரியுமோ?வேதாகமங்களினாலும் அறியத் தக்கதோ? என்று அவரது அற்புத விலாச லீலா விபூதியைத் தோத்திரம் பண்ணினார். அந்த வீஷ்மருடைய பத்திரசத்தைப் பக்கத்திலிருந்து கேள்விப்பட்ட லோக விரட்டாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் புன்சிரிப்புட னிருக்கவும், வேதவேதியர், பாண்டவர்கள், ரிஷிகள், முனிவர்கள் இவர்களியாவரும் பேரானந்தத்திற் புரண்டு, புளகாங்கிதம் போர்த்து, மெய்வறந்து ஓ கேசவ நாராயண வாசுதேவா! ஓ அப்பிரமேயா! ஓ அரி முகுந்தா! ஓ மாதவா! ஓ மதுசூதனு! ஹரி ஹரி!! என்று வாழ்த்திப் போற்றினார்கள். அப்பால் தருமராஜன் பாட்டனைப் பணிந்து, பதுமமுகத்தைப் பார்த்து, பற்பல ரக்சியங்களும் விற்பன விவேகங்களுந் தேவரீரா லறிந்து கிருதார்த்தனுயினேன். இப்பவும், சற்பாத்திரமான பேருக்கும், சகலவேத சம்பன்னராகிய பிரமக்ஞான பிராமணருக்கும், யாதேனுமொரு வஸ்து தருகிறேனென்று சந்தோஷமுண்டாகச் சொல்லி, இன்றைக்கு நாளைக்கென்று இதம்படக் கூறி, அப்பாலில்லையென்றவன், ஒன்றுங் கொடாமற் போனவள், இவர்களென்ன பேறடைவார்கள்? இதனைச் சொல்லவேண்டு மென்று வேண்ட, வீஷ்மர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

---

### நரியின் கதை.

முற்காலத்தில் ஒரு குள்ள நரியுடன் வெள்ளைக்குரங்கானது கூடிச் சிநேகம் பண்ணிக்கொண்டிருந்தது. ஒருநாள் நரியானது மனிதர் மாமிசம், தோல், நரம்பு, எலும்பு, இவைகளைக் கடித்துத் தின்னும்போது குரங்கு பார்த்து ஓ நரியே! நீ பூர்வ ஜன்மத்தில் என்ன பாவம் பண்ணினுய்? நாயுந் தீண்டாத நரருடலைப் பிடுங்கித் தின்கிறையே என்றது. அதற்கு நரியானது, ஐயா குரங்கே நான் முன்பிறப்பில் ஒரு பிராமணனுக்குச் சிறிது திரவியங் கொடுக்கிறேனென்று ஆசை வார்த்தை சொல்லி, நாளை யென்னுநாள் நமனுடைய நாளாகையால் மோசப் போனேன். அந்தப் பாவத்தினால் இந்நரிச் சென்னமெடுத்தும் பூர்வக் கியானத்துடன் சொல்லுகிறேன் என்றது. அதைக் குரங்குகேட்டு, இப்படியா உன் பூர்வோத்திரமென்று போய் விட்டது. ஓ தருமராஜனே! பூமியிலே யாவனெருவன் பூர்வ புண்ணியவசத்தாற்பொருளுடைத்தா யிருப்பானாகில், பிராமணாள், அதிதிகள், ஏழைகள், இவர் முதலாயினோர்க்குக் கேட்ட அப்போதே கொடுத்து விடவேண்டும். அப்படிக் கில்லாமற் கொடுக்கிறேனென்று பேராசைக் காட்டி, பிற்பாடு கொடுக்காமல், இன்றைக்கு நாளைக்கென்று இழுந்து அலக்கழிப்பானாகில், அவனுக்கே பிணந்தின்னுகின்ற நரியாகிய பிறப்பு கிடைக்குமென்று நவின்றார் வீஷ்மாச்சாரியார். அதைத்தருமராஜன் புந்தியிற் றெளிந்து, பத்தியாய்ப் பணிந்து, சுவாமி! நான்குவித வருணங்களினும் ஒவ்வொரு வருணத்திற்குத் தாழ்ந்த குலத்தன் வேத மந்திரங்களைப் பிரணவ சகிதமாய்ச் செபித்தால் அவன் நற்கதி பெறுவானு? அல்லது துற்கதி புகுவானு? இந்த மருமத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்டார். அதற்கு வீஷ்மர் ஒரு கதை யெடுத்தியம்புகின்றார்.

---

### சூத்திரன் கதை.

கேளாய் தருமபாலனே! இமோத்கிரிச் சாரலில் எண்ணிறந்த பிராமணாள் மெத்தப் பொறுமையுடனே தபசு பண்ணிக் கொண்டிருந்தார்கள். அவர்களை நாலாம் வருணத்தினனான ஒரு சூத்திரன் பார்த்து, அந்தப் பிராமண ரிடத்திற்குப் போய்ப் பணிந்து, அவர்களுக்கெல்லாம் ஆசாரியராயிருக்கின்ற ஓர் பெரியவரைக்கண்டு, செந்தாமரைக்கமலம்போன்ற அவர் திருவடியில் வீழ்ந்தெழுந்து, வாய்புதைத்து, கைகட்டி, மெய்யொடுக்கி, ஐயா அடியேனுடைய பிறவி வேரறும்படியாய் அனுக்கிரகித்துக் கடைத்தேறும் வழியைக் காட்டும். தவம்புரியும் மார்க்கத்தைக் கூட்டும், தங்களைப்போ லாவுதற்கு வேதசாரத்தை யூட்டும். சாமீசரணம் சதுராசரணம், தவமே சரணம் என்று போற்றித் தாழ்ந்தான். அந்தப் பெரியவர் அவனை ஆசீர்வதித்து, அப்பா உனக்குத் தவம் எளி

தில் வராது. இங்ஙனந் தவம்புரிவோர்க்குத் தொண்டுபட்டுக்கொண்டுமனத்தூய்மையாயிருப்பாயாகில் அப்பாற் பார்த்துக்கொள்ளலாமென் றருள்புரிந்தார். அன்று முதலவன் பொறிபுலன் வென்ற அப்பெரியோனுடைய உத்தரவின்படிக்குப் பழுதற்ற தவஞ்செய்யும் பண்ணவர்கட்கு வழுவற்ற பணிவிடை பண்ணிக்கொண்டு, தீர்ந்தவேளையில் அந்த இடத்தைவிட்டு மற்றோரிடத்திலிருந்து, மகா பத்தியுடையவனாய், தேவர்கள் திருப்திபடையும்படியாய் விரதங்கள், செபங்கள், நன்னெறிகள், இவைகளில் தவறாமல், தன் சாதிமுறைக்கான காரியங்களைத் தள்ளி, மேலாகிய விரதசீலனாகி, தன் குரு சுவாமியை மறவாமல் பிதுர்த்தேவதைகள் ஆசைப்படும்படியாகப் பூசைவைத்து கடன் முறைகழித்து, ஆசையை வெறுத்து, கோபத்தை பொறுத்து, காருண்ய முள்ளவனாகி, திரிலோகமுங் கொண்டாடும்படிக்குச் சுத்த சீல சாத்த உத்தமகுணனா யிருக்கிற காலையில் இவனைப் பெரியோர்களுக்கு ஊழியம் பண்ணிக் கொண்டிருவென்று போதித்த பெரியாசிரியர் இவனது நன்னடக்கைகளால் நயந்து, மிகவும் வியந்து, அகமுங் குளிர்ந்து, முகமுமலர்ந்து, இவனிடத்திற்கு வந்து அழைத்தார். அவரை இச்சூத்திரன் கண்டமாத்திரத்தில் வணங்கி, திருவடிகளை வாழ்த்தி, ஆண்டவனே! அருத்தவம் பூண்டவனே! தேவரீர் திருவருட் டுணையால் நான் கடைத்தேறினேன் என்று ஆசையுடன்சொல்லி, ஆசானைப் பூசைப்பண்ணி, ஓர் பெரிய ஆசனத்தில் எழுந்தருளச் செய்து, அண்டையிற் கைகட்டிக்கொண்டு நின்றான். அப்பெரியோன் இவனுடைய நிலையெல்லாம் நன்றாய்ப் பரிசோதித்து, இவன் வகித்த ஆசார வனுஷ்டானங்களுக்குச் சந்தோஷித்து; மகாமந்திர மர்மங்களெல்லாம்வழங்கி, தாழ்வான மார்க்கங்களைத்தள்ளி, வாழ்வான மார்க்கங்கள் எல்லாஞ் சொல்லிப் பூரணபட்சம் வைத்து, இத்த முறைமைப்படிக்கு முயற்சியோடிருந்து தவமுற்றினால் நீ நற்கதி புகுவாயென்று அனுக்கிரகம் பண்ணிப் போட்டு அகன்றார்.

இவ்வாறுரைத்த ஆசான் வாக்கியப்பிரகாரஞ் சூத்திரன் சற்பாத்திரனாய் செபதபங்கள் செய்து வெகுகாலமிருந்து, நிரியாண பருவபக்குவஞ் சார்த்து, மறுபிறப்பில் ஒரு மகாராஜ புத்திரனாய்ப் பிறந்து, மிகுந்த கல்வி முதலிய திறத்திலும், கருத்திலும், பிரபலமா யிருக்கின்றான். அதைப் பிறவிக்குரிய தந்தையறிந்து சந்தோஷ மடைந்து, நல்ல முகூர்த்தத்திற் பட்டாபிஷேகங் கட்டிப்போட்டு, தான் வானப் பிரஸ்தாச்சிரமத்திற்குப் போனான். தந்தை நீங்கியவுடன் அப்பிள்ளை நீதியாய் உலகாண்டு வருகிறான். அக்காலையிற் பூர்வ சன்மத்தில் தனக்குத் தருமநெறியுந் தவநிலையுஞ் சொல்லிவைத்த சகல கலைவல்லவராகிய ஆசாரியர் அந்தராஜனுடைய பட்டணத்தில் அரமனைப் புரோகிதனுடைய பிள்ளையாய்ப் பிறந்து, சிறந்து வளர்ந்து வந்தார். இப்படிக்கிருக்க ஒருநாள் நால்வகைவேதத்தினையுடைய அந்தப்புரோகிதப்பிள்ளை நால்வகைச் சேனைகளையுள்ள ராஜனரண்மனைக்கு வர, அவரைக் காணவே அந்த ராஜனுக்குப் பூர்வக்ஞானம் வந்து, உடனே சிங்காசனம் விட்டுத் திடீலென்றிழிந்து, கலகலவென்று நகைத்தான். புரோகிதப்பிள்ளை இராசனை யடுத்துக் கிட்டி வந்து, ஐயா இராஜ பூச்சியனே! என்னைக் கண்டவுடனே நகைத்த காரணமென்ன? அதையெனக்கு விபரமாய்ச் சொல்லுமென்று பயந்து கேட்டார். இராஜன் புரோகிதரைப் பார்த்து, ஐயா! நீங்கள் பூர்வம் இமோத்கிரிச் சாரலில் வெகு பிராமணருக்கெல்லாம் ஆசாரியரா யிருந்தவர். அக்கால் நானொரு சூத்திரன். உம்மை சரணென்று அடைந்தேன். உமக்கு என்பேரிற் கிருபைவந்து மந்திரோபதேசம்பண்ணி என்னைத் தன்னியனாக்கினீர். தேவரீர் அருளினால் நான் செவ்வைப்பட்டேன் என்று நடந்த விர்த்தாந்தங்களைச் சொன்னான். இந்த வர்த்தமானந் தெரிந்துக்கொண்ட பௌரோகிதச் சிறுவர் விசனமுற்று, நாமிவனுக்கு மந்திரோபதேசம் பண்ணிய பாவத்தினாலே நம்முடைய தவமெல்லா மடிந்து, நம்மையும் இந்தப் பிறப்பிற் கொண்டுவந்து விட்டது. நாமுபதேசித்த மந்திரத்வத இவனனுஷ்டித்த படியினாலே, பூர்வக்ஞான புண்ணிய கனமும் சார்வபூம சம்பிரமத் தனமும் பெற்றான். நம்முடைய பாவமிப்படிக் காயதென் றெண்ணி நலிந்துமெலிந்து பெருமூச்சுவிட்டார். அந்தப்புரோகிதரை இராஜன் வணங்கி, மிகுந்த பாற்பசுக்களுந் தகுந்த திரவியங்களும்

மலைபோன் மலைக்கக் குவித்து, அவர் கருத்தில் விளைந்த கலக்கத்தை கண்டுகொண்டு, சுவாமி! தாழ்ந்த குலத்தானுக் குபதேசித்த தன்மையால் தமக்கு நேரிட்ட பாபங்களை யெல்லாம் இப்போதே போக்கடித்துக் கொள்ளும். என்றுசொல்லி அந்தப் பாற்பசுக் களையுந் திரவியங்களையுந் தானம்பண்ணி, பின்னும் எத்தனையோ கோடி முத்தும் பவளமுந் துஸ்தரவஸ்தியங்களோடு அனுப்பி விட்டான்.

அப்பால் அந்தப் புரோகிதர் ஓரிடத்திற்போயிருந்து, தருமங்களெல்லாம் புரிந்து, வேதவிதியின் பிரகாரங் கருமங்களும் புரிந்து, யாகாதி கிருதுக்களு நடத்தி, தேவ தார்ச்சனை, பிதுர்க்கருமம், அதிதிபூசை இவை முதலியவும் அனுஷ்டித்து, பூமிப் பிரதக்ஷணம் பண்ணி, அநேக புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கி, ஐம்புலன்களும் புறம் போகாதடக்கி, ஆறுபகையுமறுத்து, பூர்வ ஜென்மபாவங்களைத் போக்கடித்துக் கொண்டு, எப்போதும் போலவே ரிஷிகுலத்தி லவதரித்து முக்குறும்புங்கடிந்த முதல்வனுர். இராஜனும் நான்முறை செங்கோல் நிறை தவருமலும், மனுவிக்கியான மறவாமலும் அரசுபுரிந்து, கீர்த்தியடைந்து, மேலான மதியை விரும்பிப் புகுந்தான் ஓ குற்றமற்ற வெற்றியைம் பெற்றவனே! ஓ குறைவற்ற கல்வியைக் கற்றவனே! அப்பா தருமநந்தனு? இவ்விருவருக்கு நேர்ந்த சம்பவச் சூழ்ச்சிமை உன் விவேகத்தாலாய்ந்து அறிந்துகொள்ளுக, அன்றியும், ஒருவன் இழிந்த குலமானுலும் நற்குண நற்செய்கையுடனே யிருந்து வழிபட்டால் அவனுக்குத் தக்கமாத்திரம் உபதேசம் பண்ணவேண்டும் அப்படிச்செய்தால் செய்தவனையும் போய்ச் சேர்க்கும்தப்பினுல் உபதேசித்தவனை இடர் படுத்தித்தாழ்ந்த கதியிற்ற அளிவிடும். ஆனதால் ஒருவருக் குபதேசம் பண்ணுவதற்கு முன்னமே அவனுடைய பருவத்தை யறித்து அதிதீவிர முணர்ந்து, உபதேசிக்க வேண்டுவனவற்றை உபதேசிக்கவேண்டும். மற்றப்படிக்குப் பொன்னுசையாலும், சாட்சண்யத்தாலும் விசேஷித் துபதேசிக்கக்கூடாது தான் பெற்ற மந்திரத்தை ஒருவனுக்குமுணர்த்தாம லிருக்கவேண்டும். மந்திரமென்பது எளிதல்ல மந்திரமென்பது பிரம்மசொரூபம். மந்திரமேமாதவம் மந்திரமேயாகம். மந்திரமேயாகம். மந்திரமே தர்மார்த்த காமமோட்சம். மந்திரமேதெய்வம். மந்திரமென்பது ரகசியம், மந்திரத்தினுலாவது மற்றென்றினுலுமாகாது. இம்மந்திரத்தை மனத்தூய்மையுடைய பெரியோர்கள் சிஷ்யபரிபக்குவமறிந்து செப்புவார்கள் என்று வீஷ்மர்சொல்ல, தருமராஜன்கேட்டு ஆனந்தமடைந்து ஓ கருணாநிதியே! தேவர்களுக்கு ராஜனுன தேவேந்திரனுடன் சிநேகமானுலென்ன! சிநேகமில்லாமற் போனுலென்ன! அதனுல் வருங் கெடுதியைச் சொல்லுமென்று கேட்க வீஷ்மர் பேசலுற்ருர்.

---

## பங்கரசிவராஜன் கதை.

அப்பா திங்கள்குலச்சேயே! பங்கரசிவனென்கிற ராஜன் ஒருகுடை நிழலில் உலகமெல்லாம் ஆளுகைசெய்து, வருகையில், எல்லாப் பாக்கியமுங் கிடைத்திருந்தும் புத்திர பாக்கியங்கிட்டாமையால் மனம்வருந்தி பிராமணர்களைக்கூட்டி, எனக்குப் புத்திரச் செல்வ முண்டாவதற்கு ஒரு யாகஞ்செய்ய வேண்டுமென்று தொடங்கி இந்திரனுக்கு விரோதமாகிய மந்திரங்களால் யாகம் நிறைவேற்றி, அவிர்ப்பாகமளித்து, நூறுபிள்ளைகளைப் பெற்று உச்சாகத்துடன் உலகத்தையுங்காத்து, பெருக்கமான பிள்ளைகளின் சம்பிரமத்தையும் பார்த்து, அவர்கட்கு வேண்டிய வித்தியாப்பியாச முதலியதும் விளைத்து மிகுந்த பராக்கிரமத்துடன் முயற்சி யடைந்துவருகிற அக்காள் மூளைகளைக் கண்டுகளைகள் தீர்ந்து, காதலியுந் தானுந் தீதகல வாழ்ந்து வருகுன்ருர்கள். அக்காலனை ஒருநாள் வேட்டையாடப் போகவேண்டுமென்று குமாரவர்க்கங்களும், ராஜஸ்திரீகளும், ரதகஜதுரகபதாதிகளும், மந்திரி, தந்திரி, பிரதானி, வேட்டைக்காரர், வலையர், நாயகன், டேகை, ராஜாளி, இவை முதலியவைகளும் பொருந்தி வரும்படியாய்ப் புறப்பட்டு வெகு ஆடம்பரத்துடன் காட்டுக்குப் போய் வேட்டையாடுவதானுன். அவனுேடு வந்தவர்கள் நாலுபக்கங்களிலும் பிரிந்து சண்டபேரண்டம், சரபசார்த்தூலம் இன்னுமுள்ள துஷ்டமிருகங்களை வெட்டிக் குறைச்சுட்டு, இன்னும் பலவற்றை வலையில் மாட்டிப் படுகுழியில் வீட்டிவருகின்ற சந்தோஷ வெற்றியாற் பலதிசைகளிற் சிதறிப்

போனார்கள். இராஜன் ஒரு மானை நாடி, குதிரைமேற் கொண்டோடி, கணைகளை யுந்திச் சிந்தி, இமைகொட்டாம லதனைத்தொடர்ந்து செல்லுகிறான். அக்காலையிற் காலங் கருதிக்கொண்டிருந்த காண்டாவனன் இதுதான் சமயமென்றுன்னி, உகாந்த காலத்தி லெழுகின்ற சப்த மேகத்தின் மின்னலிடி முழங்க விபரீதம்போல் ஒரு பயங்கரத்தை யுண்டாக்கினான். அந்த ஓசையானது பிரளயகால முழக்கமாக எதிர்த்து? அண்டகடாகங் கலங்கிப் பூமியுங் குலுங்கியபோது, இராசனைச் சுமந்த குதிரையிரண்டு, கடிவாளம் பிடுங்குண்டு, இராசனைத் தூக்கிக்கொண்டு வாயுவேக மனோவேகமாகப் பறந்தது. அப்போது அரசன் மெய்மறந்து பூலோக வாசையைத் துறந்திருந்தான்.

இவ்வாறோட்டமெடுந்த குதிரை வெகுதூரஞ் சென்று மேகங்கள் தவழு முடியினையுடைய மலையோரத்திற் பெருக்கெடுத்துவேகமாய் வருகிற ஓர் காட்டாற்றி லிறங்கியது. அந்தக் குதிரையும் அதன்மேலிருந்த அரசனும் அவ்வாற்றில் முழுகிமுழுகி எழுந்தபோது அந்நதியின் பிரபாவத்தினாலே ராஜன் பெண்ணுருவானான். மகா ராஜனானவன் பேதைமை ஸ்திரீயாகிய பேதத்தினால் மேல் விளைவை நினைத்து வெட்கப்பட்டு, விசனமுற்று, முன்னே வேட்டையாடவந்த காட்டை நாடிவந்து; சந்தேகப்படானின்ற தன்மனை மக்களாதியரையும் அமைச்சர் முதலானவர்களையும்நோக்கி நடந்த விர்த்தாந்தங்களை நவின்று, பிள்ளைகளிடத்தில் ராச்யத்தை ஒப்பித்து, அவர்களை நாட்டுக்கனுப்பிவிட்டு, ஸ்தம்பாகிர்தியாய் அசைவற்றுத் தவம்பண்ணப்பட்ட ரிஷிகளிருக்கின்ற ஆசிரமங்களுக்குப் போய் அவர்களுடன் கலந்து, உபதேச முதலியதும் பெற்றுக்கொண்டு தபசுபுரிந்து காடேகதியா யிருக்கின்றான், அப்படியிருக்கும்போது காமத்தினாலே ஒரு முனீஸ்வரன் கையிற்சிக்கி, அவருடன் கலந்து சுகபோகம் புணர்ந்து வாழ்ந்து சிலநாளிற் சேமத்தேற்போன்ற கடிதத்தையுடைய இந்த ஸ்திரீயாகிய நான் நூறுபிள்ளைகளைப் பெற்றனள். அந்தப் பிள்ளைகளெல்லோரும் பெரியவர்களான பிற்பாடு அவர்களை யழைத்துக் கொண்டு, தன்னுடைய பட்டணம் போய்ச்சேர்ந்து அரண்மனைக்குட் புகுந்தான். அப்போது இவன் முன்னே ராஜனாயிருந்த நாளிற் பிறந்த பிள்ளைகள் நூறுபேரும் வந்து பார்த்து, தகப்பனென்றறிந்து, சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி, இன்னும் பெண்ணுரு நீங்காமையைக் குறித்துச் சஞ்சலப்பட்டார்கள். அந்த நூறு பிள்ளைகளையும் அரசன் அரவணைத்து, ஆசீர்வதித்து வாழ்த்தி, அப்பா குமாரர்களே? நான் இந்தப் பெண்ணுருவான பின்பு பெற்ற பிள்ளைகள் இந்நூறுபேரும், ஆதலால் இவர்களும் நீங்களும் ஏகோபித்துக்கூடி வாழுங்கள், என்றிசைந்துத் தான் பழயபடி வனத்திற்குப் போய்விட்டான். அப்பால் இந்த இருநூறு பிள்ளைகளும் பொருந்தி ஒருவருக்கொருவர் உற்றதுணையாய், ஒருமையாய், வேற்றுமையின்றி மேதினி புறந்தார்கள்.

அந்த நாளில் தேவேந்திரன் மனம் பொருமல் ஒரு பிராமண ரூபமாய் வந்து, இந்தப் பிள்ளைகளிற் சிலருக்கு ஒருவரோடொருவர் பகைக்கும்படியான காரியங்களைப் போதித்து, அவர்கள் மனதைப் பேதித்து, பகை விளைத்து வைத்தான். இவ்விருதிறப் பிள்ளைகளும் பொருமைக் காய்ச்சலுடன் சண்டைபோட்டு, இருநூறு புத்திரருஞ் செத்தார்கள். இதனாற் கருநிறம் போன்ற கண்களையுடைய ராஜன் தேவியானவள்கண்ணீர்விட்டு, பெருமூச்சுடன் தேம்பி வெம்பித்தினறி அழுதனள். அப்போது ஒருவன் தற்செயலாய் அவளெதிரில் வந்து நின்றான் அவனை இராஜஸ்திரீ கண்டு தன் குறையெல்லாஞ்சாற்றினாள். அதைக்கேட்ட அம்மனிதன் இராஜபத்தினியைப் பார்த்து, அம்மா குணவதி உன் பிள்ளைகள் மனம் பேதித்ததும், சண்டை போட்டதும், இறந்ததும் தேவேந்திரனுடைய பகை. அதேனென்றால், இந்திரனுக்கு இதவில்லாத எக்கியத்தைப்பண்ணி நூறுபிள்ளைகளைப்பெற்று பிரபலிக்கச் செய்தபடியால் தேவேந்திரனுக்கு இஷ்டமில்லாமற் கோபம்பிறந்து உன்கணவன் காட்டில் வேட்டையாடப் போனபோது உகாந்தகாலச் சப்தமெழுப்பியதும், குதிரை மிரண்டோடப் படுத்தியதும் மலையாற்றி லழுத்திப் பெண்ணாக்கியதும் அந்தப் பெண்ணுருவி னிடத்திலிருந்து நூறுபிள்ளைகள் பிறக்கச் செய்ததும்; ஆகியவிவையெல்லாமவனுடைய பகையால் விளைந்தன, அந்தத் தேவேந்திரனும் நான்தானென்று கலீரெனச் சிரித்துத் தன்னுருவங் காட்டி

னன். அதுகேட்ட ராஜபத்தினி அவனைப் பணிந்தெழுந்து ஐயனே! நாங்கள் தெரியாமற் செய்துவிட்டோம். செல்வமுங் கேட்டோம். சிறுவர்களையு மிழந்துவிட்டோம். உமது திருவடிக் கடைக்கலம் புகுந்தோம் என்று தோத்திரம்பண்ணி இத்திரனுடைய உத்தரவினுற் காட்டிற் பெண்ணுருவாயிருக்கின்ற ராஜாவை யழைப்பித்து, அவ்விந்திரனுக்கு நேரில் அவன் கூறிய சங்கதிகளை யெல்லாம் புகட்டினுள். அதுகேட்ட அரசன் தேவேந்திரனைப்பணிந்து, ஓ ஆனந்த கலியாணகுணனே! ஓ ஆனந்தபோக துரந்தரா! ஓ ஆனந்த வைபோக புரந்தரா! நான் புத்திகெட்டேன். என்னை இனிச் சுகப்படுத்திக் காப்பாற்றும். என்று பணிந்து வேண்டிக்கொண்டு, ஐயா தேவர் பெருமானே! என்னுடைய புத்தியீனத்தாலே உம்மை விடுத்து யாகஞ்செய்யப் புகுந்ததும். அதனுல் உமக்கு என்பேரில் ஆயாசம் விளைந்ததும், நான் பெண்ணுய்ப் பிறந்ததும்! பிள்ளைகளிறந்ததும் செல்வ முதலிய ராஜாங்கத்தைத் துறந்ததும், என் தீவினைப் பயனையன்றி வேறல்லவென்று உபசாரஞ் சொல்லி, ஓ மகபதி! மனம் பொறுத்துக் கொள்ளும் என்று வேண்டிக் கொண்டான்.

அதனுல் திரிலோக பூசிதனுகியதேவேந்திரன் மனதிரங்கி கோபமாறிஓவேந்தனே இறந்துபோன இருநூறு பிள்ளைகளிற் சிலரைப் பிழைப்பிக்கின்றேன். உனக்கிஷ்டமான பிள்ளைகளைக் காட்டென்று கேட்டான். அதற்கவன்; ஐயா! நான் பெண்ணுனபின்பு பெற்ற பிள்ளைகளைப்பிழைப்பூட்டுமென்றுன் வச்சிராயுதனவனைநோக்கி நீ ராஜாவாயிருக்கும்போது பத்தினியினிடத்திற் பெற்ற பிள்ளைகளை நாடாமல் புருஷப்பெண்ணிடமாய்ப் பிறந்த பிள்ளைகளை நினைத்தது என்ன காரணமென்று கேட்டான். அதற்கு ராஜன் சொல்லுகின்றுன். ஓ பெருமானே! நான் புருஷனு யிருக்கும்போது என்னுயகியும் நானுங்கலந்து காமமதத்தினுல் பெற்ற பிள்ளைகள் அவர்கள். இவர்கள் நூறுபேரும் என் வயிறுநோகச் சுமந்து வருந்திப் பெறப்பட்டவர்களாதலால், சொந்தச் சந்ததி பிள்ளைகளைப்பார்க்கிலும் இடையில் வந்த இந்தப் பிள்ளைகளின்பேரில் எனக்கு ஏராளமாக ஆசை யுண்டாக்கி யிருக்கின்றுன் ஈஸ்வரன். ஆனபடியால், அந்தப் பிள்ளைகளை யெழுப்பித் தாருமென்று கேட்டேன். ஓ ஆண்டவனே! உயிருதவி செய்யும், கருணைக்கண் பாரும், என் காதலரைத் தாரும் என்று கைதொழுதான். சதமகன் மனமகிழ்ந்து, அந்தப் பிள்ளைகள் நூறுபேரும் பிழைக்கும்படிக்கு அனுக்கிரகம்பண்ணி, மேலுஞ் சொல்லுகின்றுன். ஓ ராஜனே! நீ பெண்ணுயிருக்கவேண்டியதில்லை, உன்னை முன்னைப்போலவே வேந்தனுக்கி வைக்கிறேனென்றுன். அதைக்கேட்ட அரசன் இந்திரனுக்கு வந்தனை தந்து, ஐயா! புருஷரைப் பார்க்கிலும் பெண்களுக்கு போகசுக மதிகமானதால், எனக்குப் புருஷவடிவம் வேண்டாம். பெண் வடிவமே சம்மதம். இதனுலெனக்கு வேண்டியவின்பஞ்சனிக்கின்றது. ஆதலால் இதுவே போதுமானதென்றுன். அதைக்கேட்ட இந்திரன் அற்புதமடைந்து, புருடனுயிருந்தவன் பெண்ணுருபத்தைப்பெற்று அதின் பிரதாபப் பிரயோசனத்தை யனுபவித்துப் பேசுகிறுன். புருஷஜன்மங் கெட்டதென்று ஏசுகிறுன். ஆதலால், இவனென்றைக்கும் பெண்வடிவமோ டிருக்கத்தக்கதென்று பெரும் வரங்கொடுத்து ஸ்திரப்படுத்திவிட்டுப் போனுன். பின்பவன் நூறு பிள்ளைகளுடன் பெண்ணுருவமாய் வீட்டிலிருந்தான். கேட்டையா தருமநந்தனு! நீ வினுவியசந்தேகத்திற்கு உத்தரம் என்றுரைத்த சந்தனு புத்திரரை உதிஷ்டிரர் வந்தனை வழிபாடாற்றி, ஐயா! இந்தச் சக்கிரதரனுகிய ஸ்ரீ கிருஷ்ணனது வல்லமையைக்கேட்க மனமுவந்தேன் அதனைத் தமது திருவாக்கா லுரைத்தருள வேண்டுமென்று வணங்கினர். உடனே அவருக் காசீர்வதித்து, மூலப்பிரகிர்திபின் முதலறிந்த வீஷ்மர் திரிகரண சுத்தியாய்ச் செப்பத் தொடங்கினர்.

க்ருடன் கதை.

ஓ அச்சுதனுக்கு மைத்துனனுகிய அறன்காதலனே ஒருவராலும் பெருமையுரைத்தற் கருமையாகிய கெருடன்பூமியிற்பிறந்து, தாயாருடைய சாபந்தீர்க்கவேண்டி, சத்துருவின் பிள்ளைகளாகியசர்ப்பங்களுக்குத்தேவாமிர்தங் கொண்டு வரும்படியாய் தேவலோகத்தைக் குறித்துப் போகிறபோது, எதிர்த்துப் பகைத்த தேவர்களை யெல்லாஞ் செயித்து, தேவாமிர்தத்தை யெடுத்துக்கொண்டு

திரும்பி வருகிறான். அக்காலையில் ஞானோதய மூர்த்தியான மகாவிஷ்ணுவானவர் அக்கருடனுக்கெதிரிலே யானையின்பேரி லாரோகணித்து, ஆரோ ஒருவர்போல் வந்து வழிமறித்து நின்று, நல்லவார்த்தை நவின்று, நானாவித வரங்களளித்துப் போய்விட்டார். அப்பாற் பெற்றவளனுபவிக்கிற ஆபத்தைத் தீர்த்த கருடன் தந்தையான காசிபப் பிரமாவினிடத்தில்வந்து, பிரதக்ஷணநமஸ்காரம் புரிந்து, ஐயனே! நான் தேவாமிர்தத்திற்குப்போய் வரும்போது மகாவிஷ்ணு குறுக்கேவந்து அநேக வரங்கொடுத்துப் போனாரென்று நடந்தசங்கதிகளைஒழியாமல் நவின்றான். அப்போது கருணைக்கடலாகிய காசிபர் கருத்துருகிக் கசிந்து, கருடனைப் பார்த்து, அப்பா! லோகராட்டியன். தாயிலுங் கிருபையுடைய நயாளன். சகலாத்மகோடிகளையும் ரட்சிக்கப்பட்டவன்.பக்தபராதீனன். ஆதிமூலப்பொருளாகிய அவரே யுனக்குக் காட்சிக்கொடுத்தாரானால், அநேககோடிநாள் தவம் புரிந்தாலுங் கிடைத்தற்கருமையாகியதும், வேதங்களினாலு மறியக்கூடாததுமாகிய அவர் திருவடி உனக்குக் கிடைத்தது. இது உன்னுடைய தவம். எத்தனையோ காலமெல்லாம் வருத்தித் தவமிருந்த சீவன்முத்தாளும் அருந்தவர்களும் பெறக்கூடாத பெரிய பதத்தை நீயெளிதிற் பெற்றாய்.

அப்பா மைந்தனே! இவ்வுலகமெல்லாம் அவருடைய ஆதீனம். பாலாழியிற்றுயிலும் பரந்தாமனாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை, கிருபைக்கடலை, அருள்மாரி பொழியுமேகத்தை, ஆபத்பாந்தவை, பிரமனைத்தந்த திருநாபிக்கமலனை, சோதியாய்த்துலங்குந் துளவணி மார்பனை நீண்டமேனிநெடுமாலை, ஸ்ரீ வாசுதேவனை, கோவிந்தனை, அச்சுதனை, கேசவனை, வாசவனை, முராஹாரியை, முகுந்தனை மூலப்பொருளாகிய முதல்வனை நீ தரிசித்ததே பாக்கியம். இப்பவும் அந்த மகானுபாவர் பதரிகாச்சிரமத்தி லிருப்பார். அவரைக்கண்டு பணிவிடைத் தொண்டுபண்ணிக்கொண்டு பாபரகிதனாயிரு என்று புத்திரனுக்கு வேண்டிய புத்திமதிகளைப் போதித்து, சுவாமியின் பிரதாபங்களெல்லாஞ் சொல்லி யனுப்பினார். இப்படி தந்தை யுரைத்த மந்திரமொழிப்படி சர்வக்கியனாய் பதரிகாச்சிரமத்திற்குச்சென்று, ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைக்கண்டு, ஆனந்தத்துடனே மயிர்க்கூச் செறியவும், அநேகமாய்க் கண்ணீர் பொழியவும், ஆடிப்பாடி, கோடிகோடியாக அடிமேற்பணிந்து, அவர் திருவருளை மனத்திலுணர்ந்து, நாக்குழறத் தோத்திரித்து நிற்கின்றான். அப்போதக் கருடனை வைகுந்தவாசன் பார்த்து, புகைமுகத்துடன் இருபைகூர்ந்து, ஓ பட்சிராசனே! என்னைத்தேடிக்கொண்டு வந்தமையால் என்னிடத்தில் எப்போது மிருக்கக்கடவதென்று அருள் புரிந்து, பதரிகாச்சிரமம் விட்டெழுந்து கருடனுக்கு முன்னாகத் தாள் நடந்தார். சுவாமியெழுந்தருளியபோது கருடனுங்கூடக் கூடியோடினான். ஸ்ரீமந்நாராயணக் கடவுள் கொத்தாகிய கொன்றை மலரை முடித்துச் சத்தாகிய அம்பிகையை வரமபாகத்தில்வைத்துக் கங்கையையுந் திங்களையுந் தரித்துப் புலித்தோலும் பொங்கரவமும் பொருந்திய சங்கரன் யோகத்திலிருக்கின்ற கயிலைமலையையும், சந்தன தமாலமரங்கள் மலைந்த பலநந்தவனத்தையுங் கடந்து உத்தரதிசையை நாடிச்சென்றார். அப்போது அவ்விடத்தில் ஒருவராலு முணரக்கூடாத ஜீமுத மயமான இருட்பூமி தோன்றவும், தவத்தைப் பெற்ற கருடனுக்கு வழிதெரியாமல் மனத்துணிவு நீங்கி, மதிமருண்டு மயங்கினான். அந்த வேளையில் பரவாசு தேவனுடைய பக்தனை கருடனுக்குச் சூரியப்பிரகாசச் சோதிபோல இருள்கெட ஒளியுண்டாக்கினார்.

அப்பா தருமநந்தனா! அந்த மேலான வொளியைக் கருடன் கண்டமாத்திரத்தில் அக்ஞானத்தி லழுந்தி யெழுந்து விக்ஞான சோதியில் மெய்மறந்தவர்போல் மகிழ்ந்து, அச்சர்வலோக நாயகன் அந்தஇருள்வனத்திலும், பூமியிலும், ஆகாயத்திலும், உலாவிக்கொண்டிருப்பதும் பலபுவனமும், சகலசராசரமும், அண்டரண்ட பிர்மாண்டமும், சிருஷ்டி திதி சங்காரங்களும், முக்குணமும், மும்மூர்த்தியும், முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், ஏகாதசருத்திரரும், துவாதசாதித்தரும், அஷ்டவசுக்களும், திக்குப்பாலகரும், பஞ்சபூதமும், சப்தசமுத்திரமும், சப்ததீபமும், அவ்வவற்றின் விருக்ஷங்களும்பெரும்பொறைக்கடலும், சக்கிரவாளகிரியும், பரமபதமும், கைலாயமும், சத்தியலோகமும், மகமேரு முதலான குலாசலமும், மூன்றுகோடி யுறு

பதினுயிரம் புண்ணிய தீர்த்தமும், பாரியாத்திர சுவேதமுதலான நான்கு வணங்களும், நான்குமடுக்களும், அநேகங்கோடி பர்வதங்களும், தும்புரு நாரதராதியரும், சப்தரிஷிகளும், மற்ற ரிஷிகளும், பிரிதிவு மண்டலத்திலுண்டான அற்புதங்களியாவற்றும் இவரல்லாதில்லையென்று கண்டுகொண்டு அதிசயப்பட்டு, தன்னுற்பார்க்கச் சைக்கியமில்லாமற் பிரமித்து, இனி நாம் பார்த்துமுடியாதென்று பகவானைச் சிந்தித்து வந்தித்துத் தோத்திரித்து, சுவாமி தேவரீருடைய பரிபூரண லீலாவிநோத விபூதியை நான் கண்டுகளிக்க மாட்டுவேனே? வேதகாம சாஸ்திரங்களும் உணரமாட்டாவே. தானறியாச் சிறியேன் பயப்படுவேன். இந்த மகாவிலாச சொரூபத்தை மறைத்தருளும். என்று நடுநடுங்கிக் கண்களைமூடிக்கொண்டு, க்ஷணநேரம்பொறுத்துக் கண்ணைவிழித்துப் பார்த்தான். அப்போதவர் சாரங்கபாணியாய்த்தணித்திருப்பதைக் கண்டு, இதென்னவிந்தை? ஆரிடத்திலிந்த அதிசயங்களைப்பார்த்தோம். இப்போதிவர் ஆலமரத்தைத் தன்னுள்ளடங்கியவித்தப்போலிருக்கக் கண்டோம். ஆ! ஆ! சர்வசீவதயாபரனே என்று வணங்கிப் போற்றிய கருடனை மகாவிஷ்ணுபார்த்து இதெல்லாம் என்னுடைய மாயாவிலாசம். இதை யறியத்தக்கபே ரொருவருமில்லை. என்னுரைத்து அனுக்கிரகஞ் செய்தருளினர். ஆகையால், இப்போது நம்மிலொருவரா யிங்ஙனமிருப்பவர் அப்படிப்பட்ட ஆண்டவன். எப்பேர்ப்பட்டவர்க்கு மெட்டாதவன். இவருடைய பெருமையை யாவராற் சொல்லக் கூடும்? என்று முந்தியே முதற்பொருளென்று கற்றுணர்ந்த வீஷ்மர் சொல்ல, அதைக் கேட்ட தருமராசன் அஞ்சனமேனியானை நெஞ்சினி னினைத்து சந்தோஷித்து ஐயா, ஒருவன் தான் பெற்ற பெண்ணை எப்படிப்பட்ட பேருக்குக் கொடுக்கவேண்டும். அந்த விபரத்தைச் சொல்லுமென்று கேட்க கங்காபுத்திரர் சொல்லத் தொடங்கினர்.

---

கன்னிகாதானத்திற்குரிய வரனது
நிதான முரைத்தல்.

அப்பா தருமநந்தன! ஒருரிலொரு மகாரிஷியின் குமாரன். விரதசீலன் பெருமிதப் பிரதாபன். அட்டவக்கிரனென்னும் பெயரினன். மேலும் பிரமசாரியத்திலிருந்து வேதாகமசாஸ்திரமுணர்ந்து ஸ்மிர்தி இதிகாசபுராணங்களெல்லாந்தேர்ந்து, தனக்கெவரு மெதிரில்லாமல் இருக்கப்பட்டவன், இவன் இனிமேற் கிரமமாகிய இல்லற தருமத்திலிருக்கும்படியா யிருக்கிறபோது மகாதபோ நிதியாகிய வதான்னிய ரிஷியின் மகளாகிய பாகுபோன்ற மொழியையுடைய சுப்பிரபாவை யென்பவளைக் கண்டு, அவள் தந்தைபாற் சென்று, உமது குமாரத்தியை யெனக்குத் தேவர்கள் கொண்டாடும்படியாய்த் தாராதத்தம் பண்ணித் தருவீராவென்று கேட்டான். அந்த வதானிய ரிஷியானவர் சந்தோஷித்து மிகவும் பரிவினையுடையவராய்அவனைப்பார்த்து, ஓ ஐயனே! நீர் சகலகலை சம்பன்னர் உமக்கு என்பெண்ணைக் கொடுப்பதற்கென்ன தாட்சி? உம்மிஷ்டப்படியே மேகம் போன்ற கூந்தலையுடைய என் குமாரத்தியைக் கொடுக்கின்றேன். இதற்குள்ளாக வெப்பங்களைத் தீர்க்கும் பனிவரைச் சாரலுக்குப் போய்வாருமென்று சொன்னர். அதைக்கேட்ட அட்ட வக்கிரமன் மாமா! நானவ்விடம்போய்ச் செய்ய வேண்டிய கருமமென்ன? அதனைத் தேவரீர் சொல்லியருள வேண்டுமென்று கேட்டான். அதற்கு வதானியரிஷி சொல்லுகின்றர். பொற்பிரகாச வடிவமைந்த பர்வதராஜ புத்திரி பரமேஸ்வரனைக் குறித்துத் தபசு பண்ணுகிருள். அந்தத் தவச்சாலையையும் தவமிழைக்கிற மரகதவல்லியையும், மகாதேவனையுங்கண்டு வணங்கி, அங்கிருக்கின்ற அதிசய அற்புதங்களையும் பார்த்து, அதற்கு உத்தரபக்கத்திலிருக்கப்பட்ட அடர்ந்த காட்டிற் புகுந்து, அவ்விடத்தில் மிகுந்த விந்தையாகக் கட்டிய வீடொன்றிருக்கிறது. அதை யணுகி உள்ளே நுழைந்து நோக்கினல், பாக்கியவதியாகிய பெண்ணொருத்தி யிருப்பாள். அவளைப்பார்த்துச் சிலவார்த்தைகள் பேசி வருவீராகில், தாபமயமான மூலையை ரும்பையொத்த பரிசுத்த தந்தத்தின் அந்தத்தைப்பெற்ற என்குமாரத்தியைக் கலியாணம் பண்ணிக் கொடுப்பேனென்றர்.

இப்பால் அட்டவக்கிரன் அதற்கிசைந்து, முப்புரிநூலுடைய மார்பன் எக்களிப்புடனடந்து இமோத்திரிச்சாரலையடைந்து,

கவலை நீங்கிய பெரியவர்களைப்பணிந்து கை தொழுது, தவச்சாலையிற் சென்று அம்மையிருந்து யப்பனைக் குறித்துத் தவசுபுரியுஞ் சதுரைக்கண்டு எதிர் நோக்கித் தெரிசனஞ் செய்து, பக்கத்திற் பிர்மாண்டமாயிருக்கின்ற காட்டிற்புகுந்து இமயகிரியோரமாய் வருகிறான். அப்போது வடதிசைக் காவலனான குபேரன் எதிரில் வந்து, இவன் பாதத்தில் வாசனையோங்கிய மலர்களினா லர்ச்சித்து உபசரித்து, ஐயா பிர்மசாரியே! நீரிவ்விடத்திற் சிலநாளிருந்து போமென்று யவ்விடத்திலிருத்திக் கொண்டான். இருவரும் அந்த யிடத்திற் சந்தோஷித் திருந்தார்கள். இப்படி சிலநாள்சென்றபிறகு, அக்குபேரன் சில யரம்பாஸ்திரீகளை யனுப்பி, ஆடல் பாடல் யபிநயமுதலிய விநோதங்களை நடப்பித்து வேடிக்கைவிளைப்பித்தான். இப்படிக்குத் தேவப் பெண்கள் நாதகீத விநோதத்துடன் நடனம் புரிகின்றதைப்பார்த்த யட்டவக்கிரன் மதிமருளால், மயங்கிவிழாமல் மனஞ்சலியாமல் மையலுறாமல், தேவர்களுக்கு ஒருநாளாகிய நமக்கொரு வருஷம் வரையிலும் அங்ஙனேயிருந்து, குபேரனிடத்திற் செல்வு வாங்கிக்கொண்டு சிலதூரம் வந்து மறுபடியுந் திரும்பிப்போய் மகாதேவி தவஞ்செய்கிற மாதவப்பூமியை, மகத்துவ நிலத்தை, புண்ணிய க்ஷேத்திரத்தை மூன்று விசை வலமாகவந்து தெண்டனிட்டெழுந்து, புனிதநதிகளிற்றோய்ந்து, பனிவரைக்கு வடபாலிருக்கின்ற வனத்திற்சென்று, மேகமண்டல மட்டாய்க் கட்டியிருக்கின்ற வீட்டைக்கண்டு உள்ளே போயினான். அங்கிருந்த தாதிமார்கள் எதிரோடிச் சென்று, மனையகத்துவந்த அட்டவக்கிரனைக்கொண்டுபோய் தங்கள் தலைவிக்கு முன்விட்டார்கள். அந்த எசமானி இவனைக்கண்டு பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணி உபசரித்து உள்ளறையி லழைத்து, நவரத்தின கசித வுசிதமாகிய சிம்மாசனத்தி லுட்காரச் செய்து, பாதபூசைபண்ணி, பச்சரிசிகளால் அர்ச்சனைபுரிந்து, நடந்துவந்த வழியிளைப்பாற்றி, தனதமளியிற்சற்றுசாயவிருத்தி, தாசத்தேனுகிய வசனங்களாற் கொஞ்சி, தன்னுடன் பொருந்தியிருந்த தாசிகளை யெல்லாம் அப்பாற் போகச்சொல்லி, தானும் அவனுமாய்த் தனிந்துப் பேசிக்கொண் டிருந்தார்கள், அச்சமயத்தில் தாமரைநாயகனென்னுஞ் சூரியன் மேற்குச் சமுத்திரத்தில் வீழ்ந்துபோனான். உடனே யிருள்வந்து மூடிவிட்டது.

அக்காலத்தில் இந்த அட்டவக்கிரனானவன் தெறிதவறா நேமத்துடன் சென்று, சந்தியா வந்தனத்தை முடித்துக் கொண்டு வந்து, மீட்டுமந்தச்சுகவைபோக சவுந்தரியவதியினுடைய அமளியான பஞ்சணையின் பேரிற் படுத்துக் கொண்டான். அப்போதந்தப் பசுங்கொடியானவள் திவ்யாபரண பூஷண திலகந் தரித்துக்கொண்டு, சிறப்பாகிய வஸ்திரமுடுத்தி, தினுசுவாரியான் பூமாலைகளணிந்து, சந்தனபாளித குங்கும கந்தசுகந்தமிகுந்து குழைந்தனவாய் சாந்து சவ்வாது புனுகு அத்தர் பனிநீர்களேந்திய நவரத்தினச்சுவர்னக்கிண்ணம்போன்ற குஜங்களினெடுப்பும், அப்பகுத்த குஜத்தைச்சுமக்க மாட்டாமற் சிவ்வாடிய இடுப்பும், அன்னநடையும், பின்னற் சடையுமாக வந்து! பாசபந்தப் பற்றுகள் அற்றிருக்கின்ற பிரமசாரி விரதத்திற் பயின்ற பாபரகிதனுடனே படுத்துக்கொண்டாள். அப்போது ஆசைப்பற்றற்ற அட்டவக்கிரன் அவளைச் சற்றும் விரும்பாமலிருக்க, அதைக் கண்ட அந்தப் பெண் கொடியானவள் போகமோகம்பொறுக்கமாட்டாமல், ஐயா! நீர் புருஷலட்சணத்தைவிட்டீரோ? காமனைவென்றுகண்டீரோ ஆண்பிள்ளைத்தனம் உமக்கில்லையோ, கடல்வடு, கயல், கலைகடுங்கணை, வாள், வேல், விடம், வண்டு, நீலோற்பல மலர், கருவிளைமலர், கமலமலர் இவைகளையொத்து கருமணியோடுங் கலந்து, அமுதுங்குலாவி, செவ்வரி கருவரிபரந்து, காதுபரியந்தங் கடைதாவிய கண்களையுடைய பெண்களினிடத்துக் காமங்கொள்ளாத நீர் சையோகசம்போக சரசசல்லாப உல்லாச புருடரைப்போற் போகானந்தம் பொருந்தச்செய்யும் பொற்கட்டிலின்மேல் ஏன்வந்து படுத்தீர், ஏனெனக்கு மோகங் கொடுத்தீர். ஆ என்னிடத்தைக் கெடுத்தீர். ஏங்கவிடுத்தீர் ஐயோ! என்னப்பிரயோசனம்? என்றுவருந்தினாள். அவள்பேச்சை அட்டவக்கிரன் கேட்டு இதனைச்சொல்லுகின்றான்.

ஓ அணங்கனாய்! ஓ மகாலட்சுமியைப் போன்ற சவுந்திரிய முடையவளே! நான் பிரமசாரி. விரதத்தைப் பேணியிருப்பவன். என்னிடத்திற் சுகபோக வசந்தஸ்திரீ வந்தாலும், தமக்கு நல்வினைப்பயன் வாய்த்த

தென்றுமகிழ்ந்து மதிமயங்கி, துஷ்டத்தன மும் நஷ்டத்தனமுமான காமத்தை இஷ்ட மென்று நம்பி, இதுகாறுங் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த விரதப்பொருளைக் கைவிட்டுவிடு வேனே? தரித்திரனுக்கும் பிரமசாரிக்குந் தையலராசை வெகுதூரம் மஹாபாரம். ஓ பாம்பின் படம்போன்ற நிதம்பம்; படைத்த பாவையே! இன்பநீத்த பேரறிவாளரிடத் தில் இன்பப் பயிரேற்றிவைக்கும் பெண்கள் எத்தனை கோடிபேர் வந்தாலும், புனிதர்கள் புளகாங்கமாய்ப் புத்திமயங்கி வீரிய கலிதம் விடுவார்களோ? மெய்மறந்து தொடுவார்க ளோ? விரதத்தைவிடுத்து விருதாவிற் கெடு வார்களோ? நீயேன் யோசிக்கிருய்? எனக் கிஷ்டமில்லையென்று எண்ணுதே? என்னு டைய பட்டினஞ்சேர்ந்து பிரமசாரி விரதத் தினின்று வேதவிதிப்பிரகாரங் கிரியை நடத் தி; கடன்முறைமுடித்து, இனத்தைத்தழுவி கலியாணமருவி, இல்லறதருமம்பூண்டு, பதி விரதா பங்கமற்ற பாவையைக்கூடி, இகபோ கநாடி பரபோகந்தேடும் வாழ்க்கையைப் பெ றவேண்டுவதல்லால், நீ என்னுடன் கூடப் படுத்துக் காமக்கணையைத் தொடுத்து எத் தனைவித இனிமையி லடுத்தாலும், உன்னை யொரு பொருளாகப் படுத்திப் புல்ல என் மனத்தை விடுப்பேனு? மேலும் உன்னை இன்னுளென் றுணர்ந்திலேன். உன் பூர் வோத்திர மறிந்திலேன், கருப்புட்டி யென் ருல் வாயினிப்பது கயவர்கடன்மை. ஓ கன தனக்கொம்பை சுமந்தமைந்த காரிகையே! மழைக்கா லிருட்டானுலும் மந்தி கொம்பு விட்டுக் கொம்புபாயாது. இதை நீ சிந்தி உன்னுடைய குலகோத்திர மென்ன, நீயார் உன்னூரேது. உன்பேர்யாது. நீ கன்னிகா வாரமோ பிறருடைய தாரமோ இத்தியாதி சங்கதிகளி லொன்றுந் தெரியாமல் நானுன் னைத் தொடுவது கெடுதலன்ருே, ஆரந்தாங் கிய மாருந்தோளுஞ் சேரவில்லை யென்கிற கோபமுனக்கு. தீரவிசாரிக்காத பாபமெனக் கு. அவசரப்படலாகாது. நீயேவலுவிலா சைப்பட்டாலும், நின்மல மனசையுடைய பெரியோர்கள் நெறிதப்புவார்களோ, இத ன்றியும் ஸ்திரீகளுக்குச் சுயாதிகார மில்லை யென்று தரும சாஸ்திரமும் நீதிசாஸ்தர முஞ் சாற்றுகின்றன. கன்னியர்கட்குமூன்று காவல் முதற் காவல் தந்தை. அத்தந்தை சம்மதித்து ஒருத்தருக்குப் பலபேர் முன்னி லையிற் பாணிக்கிரகணமாய் நீர் வார்த்துத் தத்தஞ் செய்யவேண்டியது. இப்படிக்கான இயல்பை நடத்திக்கொண்டு இல்லறவாழ்வி லிருக்க நினைக்காமல், ஓ பச்சைவளையலணி ந்த பாணியே உன்னிச்சையின்படிக்கு நடக் கவுன்னுவையாகில் நானுடம் படலாகுமோ ஒருக்காலும் விரும்பேன். என்று இரவெல் லாம் அவள்பக்கத்திலே விழுந்திருந்துசூரி யோதய மானவுடனே எழுந்து பொய்கைக் குப்போய் ஸ்நானசவுச சந்திசெப அநுஷ் டான முதலியவைகளை முடித்துக்கொண்டு பெரியவர்களுக்குப் பூசைபண்ணி, உபசரிக் கப்பட்ட பெண்ணிடத்தில் வந்து நான் போகிறேனென்று செல்வு வாங்கிக்கொண்டு இந்தப் பழியை வெறுத்துவந்த வழியைக் குறித்து வதானிய மகாரிஷியாகியமாமனிட த்திற்கு வந்து வணங்கினன். இப்படிவந்து வணங்கிய மருமகனை அம்முனிவ ரானவர் அன்போ டெடுத்தணைத்து வாழ்த்தி, அங் ஙன நடந்த சங்கதிகளையெல்லாந் தமது ஞா னக்கண்ணலறிந்து மனம்பூரித்து, அச்சங் கதிகளையொன்றுங் கேளாமற் சாப்பிடுமென் று உபசரித்து வேதியரைக் கூட்டிப் பந்தற் கால்நாட்டி, அவ்வட்டவக்கிரனுக்குச் சுப் பிரபாவையாகிய தன்குமாரத்தியை விவாகம் பண்ணிக்கொடுத்தார் அவர்களிருவரும் இல் லறவாழ்க்கையி லின்புற்றிருந்தார்கள். அப் பா தருமா இப்பேர்ப்பட்ட பேரறிவாளருக் குப் பெண்களைத் தானம் பண்ணவேண்டும். இதுதான் கன்னிகாதான தருமமென்று சாற்றினர்.

---

வருணசங்கிரம முரைத்தல்.

இவையனைத்துங் கேட்ட முரசகேத னன் தனது குற்றமில்லாமனத்தி லுட்கொ ண்டு, ஓ கருமந் தெரிந்தகோவே! ஓ தரும மறிந்த தேவே. நான்காவது வருணத்திற் பிறந்த சூத்திரஸ்திரீயை மூதற்குலத்தானு கிய பிராமணன் கலந்து ஒரு பிள்ளையைப் பெற்ருல், அந்தச் சந்ததிக்கு நல்லகதி கிடைக்குமா? கிடைக்காதா? எந்த ஞாயத் தாற்கிடைக்காது இவற்றைப் பூமிதேவியின் புண்ணிய வசத்தாற் பிறந்த தேவரீர் எனக் குப் புகன்றருள வேண்டுமென்று கேட்க, வீஷ்மர் விளம்புகின்ருர். ஓ பிரதாபனுகிய தருமராஜனே! ஆதியாகிய வேதியர் நான்கு

குலத்திலும் விவாகம்பண்ணலாம். க்ஷத்திரி
யர்கள் பிராமணகுலந்தவிர மற்றமூன்றிலும்
பிரவேசிக்கலாம். வைசியர் உயர்ந்த இரண்டு
குலத்தையும்விட்டுத் தன்குலத்தோடு தாழ்
ந்த ஒருவருணத்திலுஞ் சம்மந்தப் படலாம்
நான்காவது சூத்திரன் தன்குலத்தில் மாத்
திரந்தழுவலாம் தனக்குயர்ந்த மூன்றுகுலத்
திலும் விவாகம்பண்ணிக் கொள்ளக்கூடா
து. இந்த நான்கு வருண ஸ்திரீகளையும்
முறைமைப்படிக்குக் கலந்து பெற்றபிள்ளை
களுக்கு வருணசங்கிரமமென்று சொல்லப்
படும். உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத்
தாய்க்கும் பிறந்தவர்கள், அனுலோமா இழி
குலத்தந்தைக்கும் உயர்குலத்தாய்க்கும் பிறந்
தவர்கள், பிரதிலோமர், அனுலோமத் தகப்
பனுக்கும் பிரதிலோமத் தாய்க்கும் பிறந்த
வர்கள், அந்தராளர், பிரதிலோம புருஷ
னுக்கும் அனுலோமப் பெண்ணுக்கும்பிற
ந்த பிள்ளைகள், விராத்திரியர், சாதிதருமம்
விட்டவர்க்கு விரசத்தியரென்று பெயர்.
இவைகளில் வானப் பிரஸ்ததாச்சிரம ரிஷி
களுக்கு எந்தசாதியிற் பிள்ளை பிறந்தாலும்
அந்தப் பிள்ளைகள் யாவரும் ரிஷியேயாவார்
கள். அவர்களுடைய தபோபலப் பெருமை
யினாலே பீஜம்பிரதானமாய் எந்தயோனியிற்
பிறந்தாலும் பேதமில்லை. சுயம்பாவார்கள்.
ரிஷிகளுக்கு இயற்கையான குலமே அக்க
றையில்லை. மனிதர்களுக்கு மநுவிக்கியானப்
படிக்கு விதிவிலக்கின் முறைபாடெல்லாம்
வற்புறுத்திச் சொல்லி யிருக்கின்றது அந்த
நூல்வழியால் நீ யறிந்துகொள்ள வேண்
டியதைத்தெரிந்து கொள்ளலாகும். மேலும்
ரிஷிமூலமும், நதிமூலமும் கேட்கலாகாது,
கேட்டால் மனந்தாட்க லாகாது. இவ்வித
மாக மநுவிக்கியானத்தில் வலுவேற்றியிருக்
கின்றது. அவர்கள் பிறந்தயிடம் யோக்கிய
மல்லாமற் போனாலும், விந்துப் பிரதான
மாய் உயர்ந்து போவார்கள். அதற்குத்திரு
ஷ்டாந்தம் அகஸ்தியரும், வசிஷ்டரும்,
நூலாசிரியராகிய வியாசருமே போதுமான
து இவர்கள் பிறந்தயிடத்தையும், இவர்கள்
பெற்றிருக்கின்ற தபோ திடத்தையும், பெரு
மை தூய்மைமுதலிய எல்லாவற்றையும் நீ
தெரிந்திருக்கின்றனை யல்லவா? ஆதலால்
உனக்குச் சொல்லவேண்டியதென்ன? சன்
மக் கடலினின்றுங் கரையேறுவதற்கு ஐம்பு
லனைச் செயிக்கிற உறுதி ஆரிடத்திலிருக்கின்
றதோ? அவர்களியாவருங் குலத்தாற் கதி
பெறமாட்டார்கள். குணத்தால் நற்கதிபெறு
வார்கள். ஆதலால், தலம்பெரிதல்ல, தவ
மேபெரிது. என்றுசொல்லியபாட்டனை தரு
மராஜன் புகழ்ந்து, ஐயா! நீண்ட அளகத்
தையுடைய மாதர்களியாவரும் பாப ரூபமெ
ன்று பகருகின்றார்கள். என்னிதயத்திலும்
அப்படியே யிருக்கின்றது. அதனுடைய வி
பரத்தை அடியேனுக்கு அனுக்கிரகம் பண்
ணுமென்றுகேட்கவீஷ்மர்சொல்லுகின்றார்.

---

## நாரதர் பஞ்சசூடையென்பவளால் மாத்ரியல்பு கேட்டறிதல்.

அப்பா என்மைந்தன் மைந்தனே! மக
தியாழ்வருடிய நாரதமுனிவர் பூமிசஞ்சாரம்
பண்ணிக்கொண்டு வருகின்றார். அப்படி
வரும்போது அவருக்கெதிரிற் பெருமை
பொருந்திய ரூபலட்சண மமைந்த பெண்
கள் சிகாமணியாகிய பஞ்சசூடையென்னும்
ஓர் அப்சரஸ்திரீயானவள் செந்தாமரைமீ
திருமாந்துள சிந்தாமணிபோல் வந்தாள்.
அவளது சௌந்தரியமான்து இரதியோ?
தவவிரதியோ? என்னும்படிக் கிருந்தது.
அவளை நாரதர்கண்டு, அதிகவன்புகொண்டு
ஓ மாதுசிரோன்மணி! ஆபரண வலங்கார
சிங்கார பொங்காரமா யிருக்கப்பட்ட பெண்
களனைவரும் பாபசென்மமென்று படித்த
பெரியோர்கள் விதித்திருக் கின்றார்கள்,
அதென்னத்தினாலோ? அதனை நீ யெனக்
குச் சொல்லுகவென்று கேட்டனர். அந்த
அப்சர ஸ்திரீயானவள் அவ்வரைப்பார்த்து,
ஓ பிரம்புத்திரரே! நீர் கேட்ட கேள்விக்
கொப்பில்லை. யாதொரு தப்பில்லை. உண்
மைதான். உமது தந்தையான பிரமன் சகல
பாவங்களையுந் திரட்டிப் பெண்ணுருவாக்கி
னார். அந்த மகாபாபிகளுடைய சரித்திரத்
தைக்கேட்டுத் தேவரீர்செவிக்கு விருப்பமா
யிருக்கின்றதோ? ஆனால் நானறிந்த மட்
டுஞ் சொல்லுகிறேன். நீ கவனமாய்க் கே
ளும். ஒருவர் ஒரு காரியத்தைச் சொல்லும்
போது வேறுசிந்தை கொள்ளாமல் விருப்ப
மாகக் கேட்டுத் திரும்பி யுத்தரஞ் சொல்பவர்
உத்தமன். மற்றவன் செத்தவன். இதை நீர்
அறிந்துக்கொள்ளும் ஐயா! இவ்வுலகத்தில்
உமக்குத் தெரியாத ஒளிப்பாட்டமில்லை.

அக்கியான கேவல பாபமே ஸ்திரீகள். அஃதெப்படி யெனில், விஞ்ஞான மேலோங்கிய எப்பேர்ப்பட்ட புருடரையும் மாயவலையில் வசப்படுத்திக்கொண்டு தாங்களே அவர்களுக்குப் பிராணசஞ்சீவியென்றும், தாங்களே அவர்களுக்குச் சகலசுகமுமென்றும், தோன்றச்செய்து, தங்கள் எண்சாணுடம்பி லிருக்கும் புண்காணியை அவர்கள்பார்க்கப்பார்க்க மயங்கிப் பிரமைகொள்ளக் காட்டி கரும்பின் ருசியினுங் காமமதிகமென்று அதிரோஷ்டரசமருந்தித் தங்கள் காலடியே கதியென்று கிடக்கக்கிடத்தி, சேபம், தபம், விரதம், நோன்பு, தெய்வம் பிதுர்க்கருமம் இவை முதலியவையெல்லா மறக்கப் பண்ணி, பந்து, புத்திரர், மித்திரர், பத்தினி, சுற்றத்தார் இவரைத் துறக்கச்செய்து, தம்மையே குலதெய்வமென் றனைத்துக் குறைதீரப் பணிந்து தங்கள்டிமைபோல் வீழ்ந்து கிடக்கத்தக்கதாகப் பண்ணிக்கொள்வார்கள்.

ஓ மகானுபாவரே! சமுத்திரத்தையும், மழைத் துளியையும், வான்மீனையும், கருமணலையுங் கணக்கிட்டளக்கலாம் கண்டளிக் கொள்ளலாம். பெண்களுடைய கருத்தின் வருக்கந்தையும், அவாள் கொண்ட காமப் பெருக்கத்தையும், தள்ளிவிடப்படா. மோனமான ஞானியையும் மோசம்போகச் செய்வார்கள். ஞானதீபத்திற்கொரு தத்து. கோபதீபத்துக்கொரு கொத்து; தீயமா பாபத்துக்கொரு வித்து. தீண்டத் தீண்டமனப்பித்து. கண் புருவசாபத்தா லொரு சுத்து. காட்டுவதினால் வரும் விபத்து. ஐயோ!! வெகு பொல்லா ஆபத்து, ஆ! ஆ! ஆ! என்சொல்வேன் அவர் சித்து, நரகத்திற்கொரு மந்திரமூலம். நகைமுகமோ? வெகுமந்திர ஜாலம். நயமொழியோ செவிக்கேறிய ஆலம், நல்வழியோ? உயிர் கீறிய சூலம். நரகக்குழி நவத்துவாரவழியுஞ் சரியென்பதற்கு சாட்சி நாறுஞ் சீழ்முதலியவை தொக்கிக் கிடப்பதே காட்சி. இதிலழுந்திய பேர்கள் நல்வினைப்பயனு டெழுந்தாற்காணலாம். ஐயா நாரதரே! நெருப்பைத் தொட்டாற் சுடும். இத்தனை குருரகுணமுடைய துரோகிகளை யொருவன் கூடினனாகில், அத்தப்பாவம் இவனுக்கு ஏழேழு ஜன்மத்திற்கு நீங்காது. இப்படியான ஸ்திரீகளுடன் சேருவது மகா சவுக்கிய சுகமென்று எண்ணுவ தொன்றேயொழிய இலேசமேனுஞ் சுகமென்பது கிடையாது. துக்கமென்பது இவனை விட்டிடையாது. அஃதெப்படி யென்றால் சுணங்கன் பசையற்ற என்பைக் கடித்துப் பசியாறியது போலாகும். ஒருவ னின்பமில்லாதவர் போன்ற பெரியோரிடத்தி லடுத்துக் கடுகத்தனை கருணை சம்பாதித்தால், அவனது குலமும், இஷ்டஜன நலமும், தானிருந்த தவமும் ஆகிய இவையனைத்துஞ் சீர்பெறப் பக்குவமான பதவிபெறலாம. இந்த நாரியரிடத்து ஆசாபாச விசுவாசநேசம் வைத்தாலும், முத்துமுத்தாய்ப் பேசிக் கொளுசினாலும், உனக்கு நான் மூறியென்று கொஞ்சினாலும், நெஞ்சிலடக்கிய லஞ்சம் விலக்கார்கள். துரோகம், கபடு, வஞ்சம், மோசம், கரவிடம், பொய், சண்டை, கூச்சல் இவைகளேமெய்யாயிருக்கிற பெண் போகத்திற்கு மிஞ்சியபோகம் எந்தநாளுமில்லையென்று எவனொருவன் எண்ணியிருக்கின்றானோ? அந்தநாள் வரையிலும் அவன் பூாவத்திற்குடன்பட்டு துக்கங்களை யனுபவித்து, சங்கடத்தினால் வருந்தி, நோயினால் நொறுங்கி, நொந்து, நைந்து, புகைந்து, இருமித் தலைநடுங்கிச் சாவான். அப்போது யமபடாள் ஸ்தூலதேகத்தை நீக்கிச் சூட்சுமதேக மொன்றாக்கி, அதன் யாதனா சரீரத்தை வருத்தி நரகத்திற் பொருத்தி எரித்து இம்சை படுத்துவார்கள். ஆகையால் பெண்களைப் பாபரூபமென்று பகருவது.

ஓ மகதிமுனியே! எந்நாளும் புருடர்களுக்கு ஸ்திரீகளால் துக்கமேயல்லது, சுகமில்லை. சுகமென்கிற கிஞ்சிப்போகம், சஞ்சிதபாவம், யாவனொருவனுக்கு அதிக துன்பமடைவதாய் தீவினையுளதோ? அவனுக்குத்தான் பெண்ணாசைப் பேய் பிடிப்பது பித்தேறிய சித்தம்மெத்தத் துடிப்பது புண்ணியவான்கள் விஞ்ஞானம் பொருளைப்பற்றிப் பேசுவதல்லது, காமத்தைக் குறித்துப் பேசார்கள். கடவுணினையறியாத கயவர்கள் கருமைபெற்ற கண்ணையுடைய காரிகையாரைக்கண்டால், அடி யென் கண்ணுட்டியென்று ஆசைமயக்கேறி, அசையாமல் மீறி கண்ணோய், வெட்டை, சிரங்கு, சூலை, கிரந்தி, மூலம், புவுட்டிரம், அரையாப்பு, வெள்ளை, சொள்ளை இவைகள் மேலிட்டு, அன்னங்சுந்து, பசிமாறி, அஜீரணப்பட்டு, தேகம் வியர்த்து, தாகமெடுத்து, ஈளை, இருமல்

மிகுந்து, பெருமை குறைந்து, பீடை தழைந்து, முடிவாகிற பரியந்தம் மூக்கால், கக்கல் விக்கல் முதலிய நோய்கள் பொருந்தி, பின்பு ஒக்கலுடன் கூடிவருந்தி, உயிரென்னும் பயிரையறுக்கிற காமவரிவாளை நினைந்து, அதற்குரியவர்களாகிய துரோகிகளை மறந்து ஆ தெய்வமே! என்னை வதைக்காமற் கொண்டு போய்விட மாட்டாயா? என்று கண்ணீர்பெருக்கி, ஆலாலவிடமானாலும் வடவைக்கனலானாலும் வாசியே அடிபாவி வேசியே? நாளும் வருத்தி நலிக்குதே? சீழ்மிகுத்து வலிக்குதே? திட்டென்று வீழ்ந்து பொட்டென்று போகாமற் சித்திரவதை செய்யுதே? எத்தனைவிதமா யிணங்கிக் கலந்திருந்தாலும் இடைந்திருந்த தன்மனது போலவே இப்போதிடைந்தாளே. ஒன்றிருக்க ஒன்றைச் சொல்வதுபோல் வஞ்சித்தாளே. என்று கரைந்து கலங்கிக் காலனுக் கிரையாவார்கள். திரிபுவனங்களிலுள்ள எவர்களும் ஸ்திரீமனதைத் தெரிந்துகொள்ளமாட்டார்கள். வஞ்சனை குடிகொண்ட கப்பல் மாயையடைத்துவைத்தகிடங்கு பேராசைகொண்ட பெட்டி. பேதைமாந்தரைப் புதைக்கு மண்வெட்டி. இவைகளைப் பாரம்பரியமாய்த் தெரிந்திருந்தும் விளக்கைப் பிடித்துக் கிணற்றில் விழுவார்போல் மூடர்கள் நம்பி, அவர்களெப்படி சொன்னாலும் அப்படியே கேட்டு நடந்தது, மனோவாக்குக்காய மூன்றும் அவர்களுக்கு வசமாக்கி, படுகுழியிற் பட்டயானைபோற் சிக்கிக்கொண்டு பரதவிப்பார்கள். அவர்கள்தான் பிறவியென்கிற துக்கசமுத்திரத்தில் மூழ்கிக்கிடக்கப்பட்டபேர்கள்.

ஐயா நாரதமுனியே! ஸ்திரீகளெல்லாரும் பாவிகள்தானோ வென்றால்? ஏகதேசத்திற் கடலிற் கன்மிதந்தாற்போற் கற்புடைய பதிவிரதைகளாகி, தன் புருஷனே தெய்வமென்று அம்மணவாளன்சொல்லுக்கு மாறு பேசாத மாதர்கள் சிலருண்டாயிருக்கலாம். அப்படிக்கில்லாவிட்டாற் பெண்களென்கிற வாசனையற்றுப்போம். ஒரு தீக்கடைக்கோவி னிடத்திற் செனித்த தீயானது அதிகசுவாலையாய் மிகுந்த கிரணங்களுடன் வெப்பங்கொண்டு, குளிர்ந்து குழைந்து கிடக்கிற சேருகிய ஈரத்தையும் புலரச்செய்து சுத்தப்படுத்துவதெப்படியோ? அப்படிபோல் உத்தம ஸ்திரீகளுடைய தரிசனத்தினாற் சகல பாவமுந் தோஷமும் பொரிந்துபோய்விடும். ஆனதால், அவர்களைக்குறித்து நினைக்கவேண்டுவதில்லை, இது அற்புதமான காட்சி. அருமையிலும் அருமை. அநேகங்கோடி ஆத்மாக்களிற் சுகர், வாமதேவர், என்னப்பட்ட சிறிதுபேர் மாத்திரம் எவ்வாறு ஞானவான்களாயிருந்து அவரைக்கண்டு தரிசித்தபேர்க்கெல்லாம் ஞானோதயமாய்விளங்கிப் பிறவிக் கடலைக் கடத்தி வைத்தார்களோ? அப்படி போல் அநேகங்கோடி பெண்களுக்குள்ளே ஒவ்வொருத்தர் உத்தமிகளா யிருப்பதுண்டு அவர்களால் மேலான கீர்த்திகளைப் பெற்றோர்களனேகர். மற்றமாதர்களியாவரும் பாவிகளே. பெண்களினாலே புருஷர்கள் கெட்டுப்போவார்களென்பது பொய்யல்ல. இதற்குத் திருஷ்டாந்தம் பூரணசந்திரனுக்குச்சமான முகத்தினையுடைய கௌதமர் பெண்சாதியாகிய அகலிகையாலே தேவேந்திரன் எந்தநாளையிலு நீங்காத பழியும், பாவமும், ஆயிரம் யோனிகளை வாய்ந்த ஆகமும் பெற்றான். உலகிலுள்ள பெண்களினழகில் எள்ளத்தனை எள்ளத்தனை யெடுத்துப் படைத்த மூன்றாம் பிறைபோன்ற நெற்றியையுடைய திலோத்தமை யானவளால் ஒரு முகமா யிருந்தபிரமன் நாலுமுகமாய்நாணமடைந்தான் எந்தக்காலமு முடலு முயிரும்போ லிருந்த அண்ணன் தம்பிகளாகிய சுந்தோப சுந்தா ளிருவரும் ஒருவராலுஞ் செயிக்கப்படாத உரமுடையவர்களா யிருந்தும், மேன்மையாலழிந்தார்கள். சந்திரன் தீராத சாபம் பெற்றுத் தேகங்குறைந்து திரிந்தலைந்து தாரையென்னுங் குருபத்தினியால் தாழ்வினைப் பூண்டான். மூன்றரைகோடி வயது பெற்ற இராவணன் சீதாதேவி பந்தத்தாற் புத்திர மித்திர சோதராளுடன் செத்துப்போனான். இன்னும் பூதலத்திலு மீதலத்திலு முள்ள ரிஷிகள், முனிவர்கள், தபசிகள், அரசர்கள் தேவர்கள், இயாவர்களும், மாதர்களாலே பழியும், இழிவும், பாவமும், ரோகமும், தரித்திரமும், வருத்தமும் அடைந்து, வாணாளொழிந்தார்கள். இவைகளெல்லாங் காமமாகிய கிஞ்சித்து மோகமல்லவோ இப்பாட்டுக்குங் கேட்டுக்கும் வாட்டமா யிருந்தது? மேலும், பெண்களாயினோர் நல்ல புட்பம், ஆடையாபரணம், இவைகளைக் கொண்டுவந்து கொடுக்கச்சொல்லி கேட்பார்கள். அவர்களிஷ்டப்படி கொடாமற்போனாற் கெட்

டமனத்துடன் இகழ்வார்கள். இல்லையென்றைமற் கொடுத்தால் அதைச் சிங்காரித்துக் கொண்டு அடக்கமில்லாமல் வெளிப்பட்டுக் காமக்கிழத்தியாய் விரகமேலிட்டுத் திரிவார்கள். எத்தனை விடநாயகன் கூடினாலுஞ் சித்தினியாகிய ஸ்திரீகளுக்குச் சற்றேனுங் காமந் தணியிருக்கமாட்டாது. புருடனுக்குண்டாகியபோகத்தினும் அவளுக்கு ஏழுபங்கதிகமாயிருக்கும் புருடர்மனது அல்பம் பெண்கள்மனது காயகல்பம். அதனால் ஆடவர்க்குப்போகமுத்தும். ஆயிழையார்க்குப் போகம்பிந்தும். இருவருக்கும் போகம் ஒன்றுபட்டியல்வதில்லை. இப்படி ஒன்றுபட்டுச் சரியாகிச் சமப்பட்டிருப்பது அருமை.

ஐயா முனிவரரேறே! இப்பேர்ப்பட்ட ஸ்திரீகள் எப்படி அடங்கி இருக்கின்றார்களென்றால்? சாதிக்கட்டுப் பாட்டுக்கும், ராசதண்டனைக்கும், பழிச்சொல்லுக்கும் பதுங்கியிருக்கின்றார்கள், சிலர் இத்தியாதி காரியங்களையும் லட்சியஞ்செய்யாமல் தங்கட்கிஷ்டமாகிய இன்பந்தேடுவார்கள். பெண்ணென்கிற பெரும்ரூபமே காமமாகும். நாயகன் எத்தனை நயமாகவும் நல்லம்மான் பிள்ளையாகவுங் கிடைத்திருந்தபோதிலும், அயலாரின் பேரிலே அவர்கள்மனஞ்செல்லும். பரபுருஷனைச் சேருவதே பாக்கிய சுகமென்றெண்ணுவார்கள். இதன்றியும், தந்தையானபோதிலும், கருவிலமைந்த மைந்தனானபோதிலும் அண்ணன் தம்பியானபோதிலும், அழகுடையாரிருக்கில் அரிவையர்களுக்கு நிதம்பந்துடித்து உதிரம்பொசியும். அதனால் எண்ணிய புருஷனையெப்போது சேருவோமென்று முப்போதுங் கவலைகொண்டு, அன்னிய நாயகனை அணையும்பெருமையே அனுதினமும் நினைவார்கள். இப்படிப்பட்டகெட்ட நினைப்பையுடைய துட்டப்பெண்கள் கொட்டமான பாபத்தை குடிவைத்துக்கொண்டவர்கள். அவர்களுக்குச் சுசிசுத்தமிராது. அதேனெனில், அவர்கள் முதிர்ந்த உதிரம்? மூத்திரம், இந்திரியம், மதசலம், மும்மலபாசம், மொய்க்குங் கிருமிகள்வாசம், கீழ்வாய்நேசம், வியர்வை யுல்லாசம், வெகுவிதமோசம் இவைகள் இடைவிடாமலூறிக் கொண்டிருக்கிற சேற்றுக்கயத்திற் கொப்பானவர்கள். அதனாலவர்களிடத்திற்சுசியில்லை சுத்தமுமில்லை. இது புத்திமான்களுக்குத் தோன்றும். புத்தியீனருக்குத் தோன்றாது. இவ்வளவுதானையா பெண்ணுருவின் பிரதாபம் ஆதலால், பெண்ணுருவமெல்லாம் பெரும்பாவ ரூபமென்று சொன்னேன். என்று மகதியாழ் கைக்கொண்ட நாரதருடனவின்று, தேவர்கள் கொண்டாடுஞ்சௌந்தரியவதியாகிய பஞ்சசூடையென்னும் அப்சரஸ்திரீ போய்விட்டாள். அப்பா தருமராசனே! யாவரும் ஸ்திரீகளைப் பாபரூபிகளாய்ச் சொல்லுகிறார்களென்றும், என் மனத்தினுமப்படியே யிருப்பதென்று நீ சொன்னதுசத்தியமே, என்று பகர்ந்த பாட்டனைத் தருமராசன் பணிந்து, ஐயா! இத்தியாதி குணங்களையுடைய பெண்களை எப்படிமனம் புரிவது? எவ்வாறு காப்பது? என்றுகேட்க, அதற்கவர் அப்பா! அவர்களைக் காக்க அரியரப்பிரமாதிகளாலுமாகாது. மெத்தப்பிரயாசம், போகமும் மோசமுந்தேகமாயிருப்பவர்கள். அவர்களுடைய மனதைப் பெரிதுபண்ணி முந்நாளைக்காவலாயிருந்து முன்னவனைப் பெருமைப்படுத்தி மனைவாழ்க்கை நடத்திவந்தால் நல்லதாச்சுது இல்லாமற்போனால் ஏழுமதிலிட்டிருந்தாலும் எட்டுதிசைக் காவலானாலும், உருவியகத்தி கைக்கொண்டு நித்திரையில்லாமற் காத்தாலும், ஒருவராற் கட்டுத்திட்டம் பண்ணமுடியாது (அறைக் காத்தவன் பெண்டிழந்தான்) என்னும் பழமொழியுண்டு. அப்படிக்குக் கொடூரமாகவுங் கட்டுப்பண்ணக்கூடாது. காவலில்லாமலும் விட்டுவிடப்போகாது. ஜாக்கிரதையோடிருப்பதாகக் காட்டிக்கொண்டிருக்கவேண்டும். அதற்கொரு கதைசொல்லுகிறேன் கேள்.

---

## பெண்டிர் காவலைப்பற்றிக் கூறிய தேவசன்ம ரிஷிகதை.

ஓ முரசத்துவசனே! தேவசன்மனென்னும் ஓர் முனிவருளர். அவருடைய பெண்சாதியானவள் உரிசையென்பவள். அவளோ? சித்திரக்காரரால் எழுதிமுடியாத விசித்திர அழகி. மகாபுத்தியுடன் புருஷனுக்குபசாரம்பண்ணித் தொழப்பட்டபுத்திசாலி இவ்விருவருங்கூடி வனத்தில் வாழ்ந்துவருநாளையில், ஒருநாள் இன்னொரு வனத்திலுள்ள மற்றொருவருக்கு எக்கியம்பண்ணிவைக்கவேண்டிய வேலை இம்முனிவருக்கு வந்தது. அதனை மனதிற்கொண்டு, விபுல

னென்னும் பிரதமசிடனைப்பார்த்து, அப்பா எனக்கு மனைவியாகியும் உனக்குத் தாயாகியு மிருக்கிற உரிசையென்னும் ஆசாரிய பத்தினியை விட்டுப்பிரிந்து ஒருவேள்வி செய்யப் போகவேண்டியதாய் நேரிட்டிருக்கிறதுஎன்னுடைய ஸ்திரீயை தேவேந்திரன் விரும்பி வெகுநாளாய்க் கண்போட்டுக் கொண்டிருக்கின்றான். அதை நானறிந்து, ஸ்திரீகளுக் கெல்லாங் காவல்வேண்டுமென்று கழறிய நீதியின்படிக்குப் பத்திரமாய் பாதுகாத்துக் கொண்டிருந்தேன். அதனால் இதுவரையிலும் இந்திரனுக்கு அவனெண்ணம் எட்டாமற்போய்விட்டது. அப்படியிருந்தபோதிலும், அவன் இவள்மேற்கொண்ட ஆசையை வெறுத்துவிட்டவனல்ல. ஆகையால் நான் அக்கறையாய் யாகம்பண்ணிவைக்கப் போகவேண்டியிருக்கிறது. நான் போய்வருகிறேன். நீ என்னைப்போல இரவும்பகலும் ஏமாறாமல், இந்திரன் வந்து நுழையாமல், என்மனங் குழையாமல், உன்தவம் பிழையாமற் காத்துக்கொண்டிரு, என்று கருணையோடுரைத்து, மறுபடியுஞ் சீடனை நோக்கி அப்பா! தேவேந்திரன் பலவிதரூபமெடுத்துவருவான். அஃதெல்லாவற்றையும் உமது தவ மகிமையாலுணர்ந்து, அதற்குத்தகுந்த அவசரத்துடன் தடுத்துக்காத்து ஆஜரா யிருக்க வேண்டும் என்று அநேகமுறையுரைத்துப் போகத் தொடங்கினார். ஆசாரியன் மொழியைக்கேட்ட விபுலசீடன் சுவாமி! தேவரீரொன்றுக்கும்பயப்படவேண்டாம். மனதிற் சஞ்சலம்வேண்டாம். அந்தவேலை யென் வேலை. நீர்போய்வாரும். தேவரீர் உத்தரவின்படி பத்திரமாய்க் காக்கிறேன் பாரும், என்று ஆசானைப்பூசித்து அனுப்பிவிட்டுதான் ஆசாரியபத்தினியைவித்தியாசமில்லாமற் காத்துக்கொண்டிருப்பவனாகி, தேவேந்திரன் மாறுரூபமாய்வந்து வஞ்சிக்கப்போகிறானென்றும், நம்மை நம்பிப்போன ஆசாரியருக்கு ஏதாகிலுங் குறைவுவருமாகில் நமதுசத்தியமுந் தவமு நிறைவுறாதென்று நினைத்து; ஆசாரியர் பெண்சாதியுந்தெரிந்துகொள்ளாதிருக்கத் தக்கதாய்ப் பரகாயப்பிரவேச பந்தமென்னுஞ் சாகசமந்திரத்தாற் குருபத்தினியின் தேகத்திற் பிரவேசித்து, பிராணனோடு பிராணவாயுவாய்க் கலந்து பிழையற்றிருந்தான்.

இந்தப் புரட்டை இந்திரனறியாமல், அவ்வுரிசையாகிய இருடிபத்தினியின் கொண்டைபோ லிருண்டகாலத்திற் செங்காவி வஸ்திரமுடுத்தி, சங்கோடுந் தண்டு கமண்டலமுங் கொண்டு, வச்சிராயுதமனைய கண்களையுடைய அம்மாதரசியின் ஆசிரமத்திற் குள்வந்து, பெண்கள் மோகிக்கும்படியாகிய வடிவமெடுத்து தகத்தகாய மேனியுடன் மகா உச்சிதரூபமாய் அவளுக்குநேரில்நின்றான். அவனைக்கண்ட மங்கையானவள் மருண்டாள். அப்போதே இந்திரன் சொல்லுகின்றான். ஓ திங்கள்வதனா! ஓ பொங்குமெழிலாய்! ஓ மாதுரத்தினமே! ஓ மாதுரைத்தனமே! உன்பருவமும், உன்சொரூபமும் உன்னுருவமும் வீணாக விறுதாக்காலம்போக்கிவிட்டாய். ஆ! ஆ! என்னுடன்கூடினால் உனதுமனம் வேறோரின்பந் தேடுமோ? உன்னுடன் கலந்தா லென்னிஷ்டம் வேறு நாடுமோ? இந்திரபோகம் உன்சொந்தமல்லவோ? பாக்கியமனைத்தும் நீபார்த்துப்பகர்ந்தவர்க்குண்டாம்; இப்படிக்கிருக்க, இந்தப் பேய்முனியைகைப்பற்றிக் கொண்டிருப்பதிற்பிரயோசனமென்ன? நல்ல சோறுண்டா? நாட்டத் துணியுண்டா? பூசச் சாந்துண்டா? பூவாங்கிமுடிக்கப் பொருளுண்டா? சீராய்ச் சிறப்பிக்க ஆபரணங்களுண்டா! தித்திப்பாயுண்பதற்குச் சிற்றுண்டியுண்டா? கட்டின தாலிக்குக் கடைமணியுண்டா? கலவி குலவி புலவி திருத்திக் கூடுதலுண்டா? வெள்ளைப் பல்லுக்கு வெற்றிலையுண்டா? கிள்ளித்தெளிக்கச் சதையுண்டா? ஐயோ! எனிப்படி வீணாய் வாணாளை மாய்க்கின்றாய்? என்றென்றைக்கும் இந்தப் பருவகால மிருக்குமோ? இனிப்போனால் வருமோ இனியேனுமென்னிடத்தி லன்புவைத்து இன்புறுவை என்று இதமாகிய வார்த்தைகளை யெடுத்துப் பேசினான். அப்போது அந்த ரிஷிபத்தினியினுடலுக்குள்ளே பரவி அயிக்கியமாயிருக்கிற சீடன் அவையனைத்தையுங்கேட்டு, மனது நொந்து வருத்தப்பட்டு, கோபத்தோடெழுந்து, மறுபடியுமடங்கி, அந்தஆசாரியபத்தினி பேசுகிறாப்போல், அவள் வாக்கிலிருந்து வசனிக்கிறான். எப்படிக்கென்றால், அடா துராத்துமா! நீயார் இந்திரனல்லவா? எங்கிருந்து வருகின்றாய்? ஒருத்தருடைய ஆசிரமத்திற்கு மற்றொருவர் வரலாகுமா? நீ ராவண சன்னியாசிபோல் வாசற்

காவலாளியையு மயக்கியல்லவா வந்தாய்? நீ யப்படிவ்ருவதற்கு என்ன சொந்தம்? மாயா ண்டிவேட மேன்கொண்டு வந்தாய்? நீ பெரிய தேவனுயிருந்தும் புத்தியில்லையா? தேவர்களுன்னைக்கும்பிடுகிருர்களா? சதமகனென் கிற சப்தமுனக்குண்டா முன்பட்ட சூடு மறந்துவிட்டாயா! முதற்கொண்ட தாரந்துறந்துகெட்டாயா? உனக்கு வின்முழுதாளியென்னும் பட்டந் தகாது. பிரகஸ்பதி பேசிய நீதி போதாது. போ போ பயித்தியக்காரா! என்று பேசினுன்.

இவனை யனைத்தையுங்கேட்ட தேவேந்திரன் திப்பிரமைகொண்டு, பிராணன்போன பிரேதம்போல் மூர்ச்சை யடைந்து சோர்ந்தான். அந்தச் சமயத்திற் சீடனுன விபுலன் அந்த அம்மன் தேகத்தைவிட்டு வெளிப்பட்டு, சர்வ சம்ஹாரகால உருத்தின் போற் கொதித்து, சகலபூதமும் தடுங்கக் குதித்து, ஆ! தேவேந்திரனே! என்னுசிரியன் இல்லாதவேளை யறிந்து என் தாயாரிடத்தில் வந்து வாய்க்குவந்த வம்புமொழிகளைவசனித்தாய் மடையர்போல புஜலித்தாய். என்னுண்டவன் கண்டால் நீ பூண்ட பட்டமும், பூண்களும், பொருளும் பொன்னுடும், பாழாய்ப்போய்விடும், உன் பிறவியும் ஏழுக்காய்விடும். நீ கெடுவாய். அடா படுவா! அடா குடிகேடா குருத்துரோகி எனக்குருசாமிகண்டால் மீட்டும் யாகநாருவாய், உன்தேக நீருய், ஓ காமியே! அடாமூதேவியிருக்கும் பூமியே? பரதாரமும்பரபொருளும் இச்சிப்பது பான்மையன்றென்று யோசிக்க வில்லையே? உரிமையான நீதி சாஸ்திரங்களை முறையாய்வாசிக்கவில்லையோ? வாசித்ததை விசுவாசிக்கவில்லையோ? ஆளனில்லாத வேளையிற் பெண்களை அனியாயஞ் செய்ய வந்தாயோ? இதுவே உனக்கு நிரந்தர வேலையோ? நெறிமுறையறியாத பாலையோ அடே அனியாயக்காரா! நீ பாவியிலுங் கொடிய பாவி, பெரும்பாவி, இதோ உன்னைக் கொல்லுகிறேன் பார் இனியுனக்குப் போக்கிட மெங்கே? இந்தச் சாக்கடை நீரே நீ இனி என் கையாற் சாகாமற் பிராணனுடன் தப்பிப் போவையோ? என்று சொல்லி மந்திரவாளை யுருவிக் கொண்டான் அதை இந்திரன் கண்டான். உடனே கிடுகிடென்று நடுங்கி விடவிடென்று ஒடுங்கி, வெட்கப்பட்டு, துக்கப்பட்டு உடம்போடு உயிர்போனவன்போற் பயந்து, மானத்தால் நயந்து, மகாரிஷிக்குச் சீடனுன விபுலனுடைய பாதத்தில் வீழ்ந்து பரதவித்தெழுந்து, ஓ மகானுபாவா! ஓ மாதவதிபா! ஓ ஞான சொரூபா! ஓ நற்குண நீபா! என் அபராதத்தை இன்றைக்கு மாத்திரம் மன்னித்துவிடும் எளியேன் பொருட்டில் இரக்கப்படும். எரியுங் கோபத்தைவிடும். ஏழையென் பேரிற் கிருபை வையும். இளைத்தபேருக்கருள்செய்யும். புத்திகெட்டேன். உமது ஆசாரியர் சொல்லைக் காப்பாத்தியதுபோல் அடியேனையுங் காப்பாற்றி ரட்சியும். இந்தம்மானுடைய பதிவிரதாதன்மத்தைப் பாதுகாத்ததுபோல் என்மனது விருதாகாமல் மானங்காத்தருளும். சபிக்கவேண்டாம். க்ஷமிக்க வேண்டும் என்று அங்கங்குன்றிப்புங்கப்பட்டு, செங்கரங் குவித்து, சங்கர சுயம்புவேயென்று சாஷ்டாங்கமாய்ப் பணிந்து, இன்று முதல் என்றென்றைக்கும் இப்பேர்ப்பட்ட துட்ட வேலைக்கு யான் உட்படப்போகிறதில்லை. உமக்காட்பட்டேன். ஐயனே? சின்னத்தனத்திற் பிரவேசித்துப் பெரிய தனத்தை போக்கடித்துக் கொண்டேன். இனிப் புத்தி வந்தது புத்தி வந்ததென்று போற்றிப் புலம்பினுன்.

அப்போதவ் விபுலனுகிய முனி மாணுக்கன் மலைபோலெழுந்த கோபத்தை மாற்றி மனமிதங்கி கிருபைகூர்ந்து ஐயோ! ஆகண்டலனே! உனக்கு எல்லாப் போகமுங் கிடைத்திருக்கப்புல்லரைப்போலே திரிவானேன்? இது நல்ல தல்லவே உன்னைக் கொல்லுமெல்லவே. இனிமேலும் இப்பேர்ப்பட்ட பொல்லாங்குக்கு இடங்கொடாதே. புண்ணியவான்கள் புனிதவதிகள் சாபம் பொல்லாது, நீ பிழைத்துப் போய்விடு. உனக்குப் பிராணபிச்சை கொடுத்தேன். பதனம் பதனம் என்று சொன்னுன். அப்படியே மகாபாக்கியம் உமது வாக்கியமென்று அடிக்கடி வந்தித்து அமராவதிக்குப் போயினுன். இப்பால் மகாரிஷி பத்தினிக்குப்புருஷ தருமங்களும் பதிவிரதா மகத்துவமும் போதித்து, ஆவலாகிய அத்தாயினிடத்தில் காவலாகியிருந்தான். இப்படியிருக்கின்ற வேளையில் எக்கியம் பண்ணப்போன தேவசன்மரிஷியானவர் வந்தார். அவரை யவ்விபுலன் கண்டு தெண்டனிட்டு நடந்த விருத்தாந்தமெல்லாம் சொன்னுன். அதைக்கேட்ட மகா ரிஷியானவர் மனமகிழ்ந்து சந்தோஷப்பட்டு, சீஷ

னுக்கு மங்களமுண்டாகும்படிக்கு ஆசீர்வசனங்களுடன் வேண்டிய வரங்களெல்லாங் கொடுத்து தன் பெண்சாதியுந் தானும் ஒருமையுடன் வாழ்ந்திருந்தார்கள். பூமிதேவியானவள் மண்வெட்டி முதலிய ஆயுதங்களினால் தன்னை வெட்டுகிற பேர்களைத்தானே சுமந்துக் கொண்டிருக்கும் பொறுமைபோல் தேவேந்திரன் நினைத்த குற்றத்தை அம்முனிவர் பொறுத்துக் கொண்டனர். அப்பா தருமநந்தனா! பெண்கள் பேரில் எவ்வளவு ஆசையிருந்தாலும், அந்த ஸ்திரீகளே மேல்விழுந்து மோகப்பட்டாலும், அவர்களை நம்பும்போது மெத்தப் பத்திரமாய்த் தம்முடைய புத்தியை திருத்தவேண்டும் பதறலாகாது. நம்பிவிட்டால் மோசமும் நாசமுமுண்டு. என்று சரசயனத்திலிருக்கும் வீஷ்மர் சாற்றவும் அந்த மகாவிரத மூர்த்தியை ஆண்டவனாகியமாதவனும், பாண்டவர்களும், ரிஷிகளும் போற்றினார்கள். மறுபடியும் வீஷ்மர் யூரசகேதனனை நோக்கிச் சொல்லுகின்றார்.

---

## நேத்திரம், நினைவுபரிசம், இம்மூன்றுமயன் மாதரிடத்தாகாதென்பதுபற்றிக் கூறிய விபுலமுனிவர் கதை.

அப்பா பாண்டுநந்தனா! ஒரு அப்சரஸ் திரீயானவள் மகாசம்பிரமவிலாச உல்லாசத்துடன் ஆகாயத்திற் போகிறாள். அவள்கையிற் பிடித்திருந்த பொன்னுருவிபூமாலைதவறிமேற்சொல்லிய தேவசன்ம ரிஷியின் ஆசிரமத்தில் வந்து வீழ்ந்தது. அந்த ரிஷிபத்தினியாகிய உரிசை யென்பவள் சீக்கிரத்தில் எடுத்து தன்னுடைய கூந்தலில் முடித்துக் கொண்டு, கிடைத்தற் கருமையான மாலைகிட்டியதென்று சந்தோஷ சம்பிரமங்கொண்டாடிக் கொண்டிருந்தாள். அப்படிக் கிருக்கும் போது இவளுடைய தங்கை புருஷனாகிய அங்கதேசாதிபன் காட்டில் வேட்டையாடி, இவர்களிருக்கிற ஆசிரமத்தின் வழியே வந்தான். மைத்துனன் வரவும் மகாரிஷிபத்தினியானவள் அவனைக்கண்டு, ஐயோ? எத்தனை தூரம் வேட்டைக்குப்போனீர்? இத்தனை நேரமுஞ் சாப்பிட இல்லையோ! இளைப்பாயிருக்கின்றீரே, கொஞ்சங் கந்தமூலங்கள் தின்றுதாகத்திற்குப் புசியுமென்று உபசரித்தாள். அவன் தான்வந்த களையைபாராமல் மூத்த மாமியார் முகத்தைப் பார்த்து, நீர் முடித்திருக்கிற புட்பமாலை திவ்விய தேவமணமாயிருக்கிறது. திக்கெட்டும் பரிமளிக்கிறது. இப்பேர்ப்பட்ட பூமாலை உண்டென்று இதுவரையிலும் நானிந்தப் பூலோகத்திற் கண்டதில்லை இந்த மலர்மாலை உமக்குக் கிடைத்த வரலாறு எனக்குச் சொல்லவேண்டுமென்று வேண்டினான். அதற்கவள் சந்தோஷமடைந்து, தன் புருடனாகிய தேவசன்மருடனே சிரித்து வார்த்தையாடி, என் தங்கை புருஷனான அங்கதேசாதிபனானவர் நான் முடித்திருக்கின்ற பூமாலையைப் பார்த்து, இதனது பரிமளமும், பொன்னிறமும், என் புத்தியை மயக்கிவிட்டனவென்றும், நானெங்குங் கண்டதில்லை யென்று மிச்சையாகப் பேசினார். இப்பேர்ப்பட்ட பொன்னுருமாலை என்தங்கை முடிக்கும்படியாகத் தேவரனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று உபசாரஞ்சொல்லினாள். அவளுடைய அமுதம்போன்ற மெல்லிய மொழிக்குத் தேவசன்மர் மயங்கி, மாசற்ற விபுலனென்னுஞ் சீஷனை வரவழைத்து, நீ தேவலோகம் போய் இந்தப் பொன்னுருமாலையைப் போலவே வேறொன்று சீக்கிரங் கொண்டுவர வேண்டுமென்று அனுப்பினார். உடனே சீஷன் ஆசாரியர்க்குப் பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணி ஆசீர்வசனமும் அனுக்கிரகமும்பெற்று, அமரருலகத்திற் சென்று, அழகிய மலர்மாலை கொண்டு, ஆசாரியருடைய பர்ணசாலையை நோக்கி வருகிறான். அவ்வழியில் ஒரு பெண்ணும், ஒரு புருஷனும், ஏதோ வோராட்டத்தில் தோற்புங் கெலிப்புந் தோன்றாமற் கார்ப்பண்ணிய மேலிட்டு, ஆர்ப்பரித்துச் சண்டை போடுகிறார்கள். அதை இந்த விடலன் கண்டு, இச்சண்டையால் நமக்கென்ன காரியம்! ஆசாரியர் பணிவிடையே வீரியம் என்று அவசரமா யோடிவருகிறான். அப்போது ஆறுபேர் கூடிய கூட்டம், சூதமாடிய தேட்டம், கேட்ட பந்தயத்தில் நாட்டம், ஆகிய வோராட்டத்தில் நேரிட்ட வாட்டத்தால் ஒருவர்க்கொருவர் ஏசிக்கொண்ட இழிவையும், பேசிக்கொண்ட சபதத்தையுங்கேட்டு, இதுநமக்குப்பொருளல்லவென்று அருள் நிறைந்த ஆசானிடத்தில் வந்து, அடிமலர்மேற் பொன்மலர் வைத்து அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து கைகட்டி நின்றான். தேவசன்மர் சிந்தைமகிழ்ந்து, தெய்வலோகத்துத் திவ்விய மாலையைத் தருமபத்தினியினிடத்திற் கொடுத்து, அங்கதேசாதி

பனை அரசனுக்குக் கொடுப்பித்து, அவனையவன் பட்டணத்துக்குப் போகும்படிக்கு அனுப்பிவைத்தார்.

இப்பாற் சீடனான விபுலன் குருவின் திருவடியைத் தொழுது, ஐயனே? தெய்வலோகம்போய் பூமாலை கொண்டுவந்த வழியில் விந்தையான அதிசயங்கள் வெகுவாய்க் கண்டேன். அந்த விஷயங்களில் ஒரு புருடனும் ஸ்திரீயுஞ் சண்டைபோட்டுக் அந்தரத்திற் சுழன்றார்கள். அதைப் பார்த்துக் கொண்டு இப்பால் வரும்போது, மும்மூன்று பேர்கூடிச் சூதாடுகையில் இயாதோ ஒரு காரியத்தைப்பற்றி ஒருத்தருக் கொருத்தர் சபதம் பண்ணிக்கொண்டார்கள். அவ்வாறு பேரிலொருத்தன் வழியே வருகிற என்னைப் பார்த்து, இதோ போகின்றானே குருத்துரோகி, இவனடையப் போகிற பாப நரகத்தில் நானும் விழக்கடவே னென்றான் அந்தச் சொல்லைக் கேட்டதுமுதல் இதுவரையிலும் எதுகாரியத்திலும் அசைவற்றிருக்கின்ற கருங்கல்லாகிய என் மனது, கரைந்து கலைந்து கலங்கிக் கவலைப்படுகின்றது. ஓ ஆண்டவனே! என் மனமறிய ஒரு பாவமும் பண்ணிலேன். அப்படிக்கிருக்க இப்பேர்ப்பட்ட குருத்துரோகி யென்னும் பெயர் வருவானேன்; சுவாமி! அதை விபரமாய் யெனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்று விசனமுற்று விக்கி விம்மி முறையிட்டழுதான். அதற்கு ஆசாரியார் சொல்லுகின்றார். அப்பா மகனே? கலக்கமுறாதே. நீ வந்த மார்க்கத்தில் அந்தரத்தில் ஆணும் பெண்ணுமாய்ச்சுழன்று சண்டையிட்டார்களென்றனையே; அவர்களிருவரும் பகலுமிரவுமாம் மற்ற இரு மூன்று பேரும் ரிதுக்கள். அவரிலொருவ னுன்னைக்கண்டு, நீ போகிற கதியிலே போவேனென்று சபதம் பேசியது உன்னிடதிலிருக்குங் குற்றத்தைக் கண்டு தான், அஃதென்னவென்றால், தேவேந்திரன் என் பெண்சாதியினிடத்தில் வராமலிருக்கும்படி உன்னைக் காவலாக்கிப் போனேன். நீ என் பத்தினி புத்திக்குத் தெரியாமல், அவளுக்குள்ளே புகுந்து கலந்து மறைந்திருந்தனை. அது உனக்கு முறைமையல்ல. மேலும், இப்படியாகக் கலந்திருந்து இந்திரனோடு வார்த்தைபேச வென்றேனென்று என்னிடத்திலுஞ் சொல்லாமற் போனாய், ஸ்ரீயை யறியாமல் அவளுடைய அவயவங்களிற் செறிந்து பொருந்தி மருவியிருந்தனை அவளைப்படியும் ஸ்திரீ சென்மம். ஸ்திரீகளெல்லாம் பேதைமைக்குணப் பெட்டியானவர்கள். சரியாயிருப்பார்களென்று சாதிக்கப்படாது. சந்தேகமும் படக்கூடாது. ஆசாரிய பத்தினியாகிய அவளுக்கு நீ புத்திரன். ஆயினும் அவளையறியா லவளங்கத்தைப் பரிசித்தாய். அவள் சுமந்து பெற்ற தனயன் முன்னும் பின்னும் பரிசிக்கவில்லையோவெனில், தாய் கருப்பத்தி லூறிக்கிடந்த தனயன் யோனித் தழும்புப்பட வந்தமையால், ஒரு வருடம் அவளுடனாடிக் கொண்டிருக்கின்றான். இது சம்மந்த பாவம். நீ அந்தனயனோ டொப்பானவனன்றி, நீ ஊறிக்கொண்டிருந்த கர்ப்பமும், ஊடாடிக்கொண்டிருந்த சம்பந்தமும் வேறு நேத்திர பாவம், நினைவின் பாவம், என் முப்பாவங்களைப் பகுத்தறிவுடையோர் பகர்ந்திருக்கின்றார்கள். இம்மூன்று மிப்போதுன்னை படுத்திருக்கின்றன. ஆகிலும் இதற்குச் சாந்தம் வன்மையில்லாமல் உண்மைபேசினால் தோஷமறுமென்று சுருதிப் பிரமாணங்களுண்டு. நான் வந்தபோது என்னிடன் சொல்லிவிடுவையாகில் உடனே போய்விடும். இப்பவும் எனக்கு நீ மெத்தச் சரியான பிரியசீடனே, அப்பாவங்கள் நீ நினையாமல் வந்தன. இப்போதிவைகள் உன்னை விட்டு நீங்கும்படி செய்தேன். இனி நீ நிந்தையில்லாமல் அருந்தவம் புரிகவென்று அருள் வழங்கினர். உடனே விபுலனென்பவன் பேரானந்தமடைந்து, பெருந்தவனாகிய ஆசான் மொழிந்த பேரருள் கொண்டு, தன் குற்றந் தனக்குத்தானே தெரிந்து, தான் செய்தது தப்பென்றோர்ந்து, என்னவேலை செய்தோமென்று இதயங்கலங்கி, வெகுகாலந் தபசுபண்ணி, அப்யா லாசானுஞ் சீடனுங் குருபத்தினியு நற்கதி புகுந்தார்கள். ஆதலால், ஒருவன் தனது சுய பத்தினி தவிர இதரமாதர்களைக் கண்ணாற் பார்த்தாலும் நிருத்தால் நினைத்தலும், ஆக்கையாற் பரிசித்தலுமாகா, இது முக்கிய தருமம். என்றிப் பூமண்டலத்தை ஒரு வெள்ளைக்குடை நீழலிலடக்கிப் புரந்தருளுந் துரந்தரனாகிய தருமராஜனுக்கு நிரந்தர யோக நிஷ்டை குலையாத வீஷ்மர் சொல்ல; தருமராஜன் முதலிய பேர்களுஞ் சந்தோஷப்பட்டு நமஸ்கரித்து, ஓ சந்தனுவினந்தனா!

தேவரார்தியரிற் பெரியோர் இன்னாரென்றும், கௌசிக ராஜனைக் காசிராஜன் பெற்ற வயணமுஞ் சொல்ல வேண்டுமென்ன, அதற்கு வீஷ்மருரைக்கலுற்றார்.

---

தேவராதியரிற் பெரியோரையுங் கௌசிக ராஜ னுற்பத்தியையு முரைத்தல்.

ஓ அறன் குமாரனே! பூர்வத்தில் இதோயிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் நாரதரைப் பார்த்து, நீராரை வணங்குவீரென்று கேட்டார். அதற்கு நாரதர் சொன்னதாவது ஓ சவுரிராஜப் பெருமானே! திரிமூர்த்திகள், வுநாயகக்கடவுள், வேலாயுதக்கடவுள், இந்திரன், அக்கினி, வருணன், வாயு, இவர் முதலியோரைப் பணியப்பட்ட அடியார்களுடைய பாதங்களுக்கு நான் அடிமையாய் வணங்குவேன். பின்னும், கதிக்கு வழிகாட்டப்பட்ட தங்கள் குருஸ்வாமியினுடைய வார்த்தை கடவாதபேர், ஒருவராலும் நீக்கப்படாத மாயையை உண்மைஞான மென்னு நெருப்பிலிட் டெரித்த பெரியோர், மனம் வெறுக்காமல் முகஞ்சுளிக்காமல், வந்தவிருந்தை உபசரித்துண்பிக்கும் உரியோர், வேதாகமவிதி பிசகாத மெய்யர், தென்புலத்தார் பூசைமுதலியவைகளை ஸ்திரமாய் நடத்தும் விரதர் பிராமண விசுவாசம் பண்ணப்பட்ட புண்ணியர், தங்களுடைய நித்தியகர்ம அனுஷ்டானம் விடாத நெறியோர், இவர்களுக்கெல்லாந் தாழ்ந்து வணங்குவே னென்றார். இவ்வார்த்தைக்கேட்ட இக்கிருஷ்ணமூர்த்தி சந்தோஷமாயினர். ஆதலால், இப்போது நான் சொல்லிவந்த இவர்கள்தான் எல்லாருள்ளும் பெரியோர்களென்று பிரபாசன வசுவான வீஷ்மர் பேசவும், தருமர் அன்புடன் கேட்டு, அகமுமுகமு மலர்ந்து, ஐயா! கவுசிகராசனைப் பற்றிய கேள்விக்கும் விடைதர வேண்டுமென்று வினவினர். அதற்கு வீஷ்மர் மகிழ்ந்து, ஓ அருளாளா! பிருகுமகாரிஷி பிள்ளை சவனகமகாரிஷி. காதிராசனுடைய தந்தை கற்பகம்போன்ற கரதலவண்தமயமைந்த குசமகாராசன். இவன் அண்டகடாகங்கவிந்தபூமியை அண்டிவரும்போது சவனகரிஷி வந்தார். அவருக்கவன் நமஸ்கார முதலிய உபசாரங்கள் புரிந்து சுவாமிகளே! தேவரீர் இங்கெழுந்தருளியது? யாது காரணமா யிங்ஙனந் தயை செய்தது? என்று இராசன்கேட்க, சவனகரிஷியானவர் சொல்லுகின்றார். ஓ அரசனே! நீரும், உமது பெண்சாதியும், உமக்கு நேசமானவர்களும் எனக்குப் பணிவிடை செய்வீர்களாவென்று கேட்டார். அதற்கிராசன் இருதயம் பூரித்து, அந்தச் சவநகர் சொற்படிக்கு ஊழியம் பண்ணிக்கொண்டு வந்தார்கள். சவனகர் இவ்வாறு அவ்விடத்திற் சிலநாளிருந்து பின்னொரு யிடத்திற்குப் போனார்கள் இவர்களும் அவரை விட்டு நீங்காமல் தேகநிழற்போற் றொடர்ந்து, நாளுக்குநாள் அதிக விசுவாசமாய்த் தொண்டு செய்து நின்றார்கள். அங்கு சவுனகமகாரிஷி ஒருநாள் பகற்போசனம் பண்ணி நித்திரைசெய்ய வேண்டுமென்று படுத்துக்கொண்டார். பந்துமித்திராளும், அந்த ராசனும், அவருடைய ஸ்ரீயும் மகாரிஷியினுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது ரிஷியானவர் அரண்டு புரண்டு எழுந்து அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓ அரசனே! ஓ அரசியே! நீங்களென்து நித்திரைக்குக் கெடுதல் நேராமற் பாதுகாத்திருங்கள். என்னை விட்டுப் போகாதீர்கள். கமலம் போன்ற கைகளினாலே என் காலைப்பிடியுங்கள். என்று பேசிக்கொண்டே நித்திரை போய்விட்டார். இவர்கள் உண்டி உறக்கமில்லாமல் திருவடியை வருடிக்கொண்டே யிருந்தார்கள். அவருக்கு நித்திரையதிகமாகி இருபத்தொருநாள் தூங்கினார். இராசனும், இராசபத்தினியும், ஒருவரோடொருவர் பேசாமல், ஊமைபோற் காலைப் பிடித்தவண்ணமே இருபத்தொரு நாளும் விழித்திருந்தார்கள். இருபத்திரண்டாநாள் சவனகரெழுந்து இவர்களுடன் பேசாமற் போய்விட்டார். பின்பிவர்கள் சுவாமி எவ்விடம் போனாரோ? மீட்டுமிவ்விடம் வருவாரோ? என்று கவலைபாய்ந் திருக்கும்பேது, சவனமகாரிஷி இயாரோ ஒருத்தர் வீட்டுக்குட்சென்று செவ்வையாகச் சாப்பிட்டு, மறுபடியும் வந்து முன்போலவே படுத்துக்கொண்டார். வெற்றிவேலுடைய வேந்தனும், பத்தினியும் ஆகார நித்திரையற்று, பழைய படி இருபத்தொருநாள் பாதத்தைத் தழுவிக்கொண்டிருந்தார்கள். அப்பால் ஞானமுனிவர் தூக்கந்தெளிந்தெழுந்து இவர்களைநோக்கி, முன்னே யிருபத்தொருநாள் பின்னே இருபத்தொருநாள் ஆக நாற்பத்திரண்டு

நாளும் பசிதாக நித்திரை சற்றேனுமில்லாமல்மறந்து, தேகாபிமானந் துறந்து, ஒரே நிலையிலிருந்து பணிவிடைபுரிந்தது அற்புதம். அற்புதம். இவர்களுடைய சாந்த குணத்திற்கு நாம் அபராதியாய்ப் போய் விடுவோம். என்று பயந்து, மிகவுநயந்து, பட்சமாய்அவ்வரசனைப்பார்த்து, ஓ இட்சுவாகு குலத்திற் பிறந்தவனே? மகாலட்சுமி போல் இருக்கப்பட்ட ஸ்ரீயும், மகாவிஷ்ணுவைப்போன்ற நீயுஞ் சாப்பிட்டீர்களா? போசன மில்லாம லிருந்தீர்களோ? அப்படியா சந்தோஷ மாச்சுது. உங்களுக்கு நல்ல வரங்கொடுக்கிறேன் வேண்டியதைக் கேளுங்களென்று சொல்லினர். அதற்கவர்கள் சவனகரைப் பணிந்தெழுந்து, சுவாமி! வம்ச விர்த்தி யாகும்படிக்கு உங்களிலொரு வணுகிய சற்புத்திரன் வேண்டுமென்று போற்றினார்கள், அதன்பேரி லந்த ரிஷியானவர் சிருஷ்டிகர்த்தாவின் சிந்தையைத் தெரிந்துகொண்டு, உங்களிஷ்டப்படிக்கே வரங் கொடுத்தேன். ஆனால் உங்கட்குப் பிறக்கிற பிள்ளை உலகாளுவான். அவனுக்குப் பிறக்கிற பிள்ளையானவன் பிர்மரிஷியாய் எங்களைப்போலிருப்பான். பயன்படாதீர்கள். என்று ஆசீர்வதித்து, சவனகமகாரிஷி தவத்திற்குப்போயினர். அவர்கொடுத்த வரத்தின்படி காதிமகாராசன் பிறந்து செங்கோற் செலுத்தினன். அவனுடைய புத்திரன் கசிவுகராசன்,இந்தராஜன்தான் விசுவாமித்திர ரிஷியானவர் என்று வீஷ்மர்விளம்ப, தருமராசனுக்குச்சரீரம் புளகித்து, பாட்டனுக்கு ஊட்ட முதலியதுங்கொடுத்துப் பரிந்துபசரித்துவணங்கி ஐயா! இன்னுஞ் சவுனகமுனிவர் சரித்திரங் கேட்க விருப்ப மிருப்பதால், தேவரீர் தயைசெய்ய வேண்டுமென்ன வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

### அருந்தவர் பெருமையும் ஆவின் மகத்துவமும், பற்றிக்கூறிய சவனகமுனிவர் கதை.

ஓ சத்தியவிரதனே!சவனகரிஷியானவர் பூமிக்கு ஆதரவாகியபாகீரதியின்முகத்துவாரத்தில் ஸ்நானம்பண்ணி மூழ்கிப்போய்சலத்திற்குள்ளே நல்ல இடத்திலிருந்து, அருமையான தவம்புரிந்து, பன்னிரண்டு வருஷம் ஆரியர்களுங்கண்டு களிக்கும்படிக்கு அசைவற்றிருந்து விட்டார். அப்போது வலைஞர்கள் மீன்பிடிக்கவேண்டுமென்று வந்து வலைவீசி, நாலுபக்கமுங் கவிந்து, நாரிவலித்து இழுத்தனர். அப்போது மாயவலைக்குத் தப்பியிருந்த மகாமுனியான சவனகர் தோயவலைக்கு ளகப்பட்டுக்கொண்டார். அக்கால் என்னமோ கனமாயிருக்கிறதென்று வலைஞர் யிழுத்துக் கரைமேலேற்றினார்கள். அந்தவலைக்குட்பட்டுவந்த மகாரிஷியை அம்மீன் பிடிப்போர்கண்டு. மிகுந்தபயங்கொண்டு, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, சுவாமி! நாங்களெங்கள் குலசார தருமப்படிக்கு வலைபோட்டோம் இந்த முகத்துவாரப் பள்ளத்தில் தேவரீர் மூழ்கி யிருந்தமை யறியோம். ஆகிலுமெங்கள்பிழையை பொறுக்கவேண்டும். என்று மிகவும் வேண்டினார்கள். சவனகமகாரிஷியானவர் சாக்கிரத்திலிருந்து, ஓ வலைஞரே! நீங்களுங்கள் சாதியாசாரத்திற்குத் தப்பில்லாமற் செய்தீர்கள். அதனாலுங்களுக்குந் தோஷமில்லை. சலசரத்தைப்போலுங்கள்வலையி லகப்பட்ட என்னையும் மீனுடன் சேர்த்து விற்றுப்போடுங்கள். என்னை மீற்றி விடாதீர்க ளென்று சொன்னார். அம்மொழிகேட்ட வலைஞர் தேகந்திடுக்கிட்டு, ஓ மகானுபாவரே! தேவரீ ரிப்படிசொன்னால் நாங்களெப்படி பிழைப்போம்? என்னமாய் விற்போம்? என்று ஒருவர்க்கொருவர் ஆலோசனை செய்துகொண்டு, அக்காலத்தில் உலகாண்டிருந்த சந்திரகுலாதிபனான நமது நகுஷமகாராஜன் காலிற்போய் விழுந்து, நடந்த விர்த்தாந்தங்களைச்சொல்லி கடற்கரையாளராகிய எங்களைக் கரையேறச்செய்யுங்காவலனே என்று கண்ணீர்விட்டழுதார்கள். அப்போது நகுஷராசன் உடனே புறப்பட்டுச் சவனகரிஷி யிடத்திற்குவந்து சரணம்புகுந்து, சுவாமி! சிற்றறிவுள்ள தீனர்கள்செய்யாமற்செய்த குற்றத்தைக்ஷமிக்கவேண்டுமென்று பலமுறைபணிந்தேற்றினன் அதற்கந்தச் சவனகரானவர் சொல்லுகிறார். ஓ ராசனே! இவர்களுக் கொருகுற்றமு மில்லை. யாதொரு குறையுமில்லை. அவர்கள் சாதித்தொழிலைத் தாராளமாய்நடத்தப்பெரும்வலை வீசிப் பிரயாசத்துடனிழுத்து, காத்திரமான மீன் அகப்பட்டதென்று களித்துப்பேரானந்தங் கொண்டார்கள். ஆதலால், அவ்வானந்தமு மாசையும் வீண்போகாமல், என்னை விற்றுப் பொருள்கொள்ளச் சொன்னேன். இம்மண் ணுலகுக்கு மன்னனான உம்மிடத்

திலவந்து முறையிட்டுக் கொண்டதற்கு, நீர் என்னிடத்தி லடைந்து இதவுசொல்லுகின்றீர். நல்லது, என்க்குண்டானவிலையை இவர்களுக்குக்கொடுத்துத் தருமந்தப்பாமல் எந்தனே மீட்டுக்கொள்ளுமென்றார்.

அரசனதற்கிசைந்து, ஓ மீன்வாணிபர்களே! மும்மலமும், முக்குணமும், மூப்பிணியுமற்ற முனிவருக்காக ஆயிரம் பொன் கொடுக்கிறேன். அதை வாங்கிக் கொண்டு இவரைக் கொடுத்துவிடுங்களென்று கேட்டான். அந்த ரிஷியானவர் கண்விழித்துப்பார்த்து, ஓ அரசனே! நீர் முறைமைதப்பிச் சொல்லுகின்றீர். நிறைகுணவான்களாகியஎமபொலியர்க்குத் தகுமான விலைகொடுத்து மீட்காமல் ஆயிரம் பொன்னென்பதாய் ஒரு தொகையைச் சொல்லுகிறீர். இவ்வளவு விலைதானு நான் பெறத்தக்கது, இம்மட்டா யென்னை நீர் மதிப்பிட்டது என்னவும், அதை அரசன்கேட்டுப்பயந்து, ஓ கழிக்கரைக்காவலரே! லட்சம்பொன் தருகிறேனென்றனன். அதற்குமகாரிஷி நகைத்து, ஓ அரசனே எனக்கு விலைவைத்ததுயிதுவோ? இம்மாத்திரத்திற்குத்தானே நான் உடலெடுத்தது என்றார். மறுபடியும் மன்னன்கலங்கி, கோடிபொன் கொடுக்கிறே னென்றான். அதற்கும் முனிவர் ஐயோவென்றரற்றி, மையலிலாழாது மாதவமிழைத்தவுடல் இந்தவிலையோபெறுவது? என்று தன்னை வெறுத்துக்கொண்டு, ஓ ராசனே! உமது மந்திரிமார்கள் வேதசம்பன்னர், சாஸ்திரப் பிராமணுள், சத்தாகிய பெரியோர்கள், மகத்தாகிய மாதவர்கள் இவர்களுடன்கலந்து ஆலோசித்து, நான்யின்னது பெறுவேனென்பதாய் விலை மதித்து, அப்பாற் சொல்லுமென்று சொல்லினர். அதுகேட்ட வேந்தன் திடுக்கிட்டு இருகாத்தையு நெரித்து, மனக்கவலையோடு நிதானித்துச் சஞ்சலப்பட்டு தன்னிடத்தி லன்புவைத்திருக்கின்ற கவிசாத ரென்னும் முனியை நினைத்துக் கைதொழுது, சுவாமி நான் தருமசங்கடத்தி லகப்பட்டுக்கொண்டு தவிக்கின்றேன். இந்தவேளை என்னை இரட்சிக்கவேண்டும். என்று திக்குநோக்கித் தெண்டனிட்டுச் சிந்தனைசெய்தான். அவரந்தக்ஷணமேவந்தெதிர் நின்றார். அவரைக்கண்ட இறைவன்முறையோவென்றழுது அவரடியிற்ளுெழுது, சுவாமி! தழைத்த குலமான ஆலமவிழுதுக்குத் தானே வந்தது பட்டுப்போகும்பழுது, நானென்ன செய்வேன்? என்று சகல உபசாரமும் புகன்று, அவ்விடத்தில் நடந்திருக்கிற விர்த்தாந்தங்களை யெல்லாம் நவின்றான்.

இவ்வசனங்களை அவ்வித்தகஞகிய உத்தமமுனி யறிந்து, ஓ அரசனே! இந்த மகானுபாவராகிய மகாரிஷிக்குப் பிர்மாவும்,பின்னுஞ் சொல்லாநின்ற தேவர்களும் ஈடாகமாட்டார்கள். மேலும் பெரியவர்களுக்குச் சரியாக உலகத்திலுள்ள பொருள்களை யெல்லாங் கொடுத்தாலும் பொருந்தா. இவர்களுக்குச் சமமாயிருக்கிறவஸ்து என்னவென்றால், பஞ்சகவ்வியங் கொடுக்கிற தருமதேவதை சொரூபமாகிய பசுக்களும், துறசோபம் துற்பயங்கரம், துற்மரணம், துற்வியாதி இவைகளை நீக்கிச் சுகந்தருகின்ற பிராணருமாம். அந்தப் பவித்திரப்பொருளாகிறபசுவென்பது பாரில்லாவிட்டால், இந்தப் பிராமணுள்செய்கின்ற பெருந்தவம், ஓமம், விரதம், ஆசாரம், பூசாவிதி, இவைமுதலிய முறைகள் பொருந்திநடவா. வேதமுதல்வராகிய மும்மூர்த்திகளிலேயுஞ் சிறந்தவர்கள் பேரானந்த முனிவர்கள் சீவன்முத்தர்கள் இவர்களிலும் பெரியவர்களை ஆராய்ந்துபார்க்கவேண்டுவதில்லை. அப்பேர்ப்பட்ட ரிஷிகளுக்குப் பசுவல்லாமல் மற்றென்றும் ஈடுபடாது. பசுவில்லாமற் பதிதபாவனமில்லைபசுவின் பெருமையைப் பகர்வதற்கு என்னுல்முடியாது வேதங்களினுல் விளம்புகிறதென்னவென்றால், ஒரு பசுவை உத்தமராகிய ஒருவருக்கு ஒருவன் தானங்கொடுக்கில், உலகெல்லாம் புகழும்படியாக வாழ்ந்து மேலான பயனைத்தருங் கதியை யடைவான். அந்தப் பசுவின் தேகத்திலிருக்கிற ரோமமொன்றுக்கு ஒருவருஷக் கணக்கின்படிக்கு எத்தனை மயிரிருக்கின்றதோ? அத்தனை வருடம் முத்தியிலிருப்பான். இதன்றி எக்கியம், ஓமம்,(அக்கினி) தேவதைகள்பெரியோர்கள் தென்புலத்தார் இவர்யாவருக்குந்துன்பமாகற்றி இன்பத்தைத் தரப்பட்டார்கள் பிராமணுள். ஒருவராலுஞ் செயிக்கப்படாத எங்களுடைய ஏந்தலே! நீ இதுகளின் தாரதம்மிய மறிந்து சவனகரிஷிக்குப் பதிலாக ஒரு பசு கொடுக்கிறேனென்று பேசினுர் பக்குவமாகுமென்று கவிசாத மகாரிஷி கழறினர். அப்போது புவியாளும் நகுஷன் மகிழ்ந்து நாண மடைந்து, சவனகரைப் பணிந்து

சுவாமி உனக்குக்கிரயமாக ஒரு கபிலை கொடுக்கிறேன். அடியேனைக் கவலைப்படுத்த வேண்டாமென்று கால்மேல் வீழ்ந்தான்.

அதைக்கேட்ட சவனகர் ஆநந்தப்பட்டு நிரம்பிய சந்தோஷமாகி திருப்பனே, வாழ்த்தி, இதுதான் எனக்குத்தகுந்த விலையென்று பூரித்தார் உடனே கருக்கரையாருக்கு ஒரு பசுவைக் கொடுத்து, மஹாரிஷியை மஹாராஜன் மீட்டுக்கொண்டான். அந்த வலைஞர்கள் சவனகரிஷியைத்தொழுது, சுவாமி எங்கள் குறைதீர்ந்து நாங்கள் கரையேறும்படியாக இக்கபிலையை உமக்குத் தானமாகக் கொடுக்கச் சம்மதித்தோம். தேவரீர் தடைபடுத்தாமற் சம்பிரமமாய்ப் பெற்றுக்கொண்டு, எங்களைக் குலகோத்திர குடும்பத்துடன் ரட்சியுமென்று கும்பாகக்கூடி பணிந்தார்கள் அதற்கு வம்புசெறிந்த அம்போருகச்சர சரணையுடைய மகாரிஷியானவர் அவர்கள் திரிகரணசுத்தியாய்ச் சொற்ற திறத்தை யறிந்து, அம் மீன்படுப்போரிடத்திற் பசுவைத் தானமேற்று ஓவலைஞர்களே! நானிதுவரையிலும் ஒருவரிடத்திலொன்றும் பெற்றிலேன். இப்போது உங்கள் வேண்டுதலினாலும், உபசாரத்தினாலும், நீங்கள் நற்கதியடைய வேண்டுமென்கிற ஞாபகத்தினாலுங் கோதானம்பெற்றேன், என்றுசொல்லி அவர்கட்கு அனுக்கிரகம் பண்ணப்போகிற தருணத்தில், இவருடனேகூட வலையிற் சிக்கிய மச்சமெல்லாந் தேவசொரூபம் பெற்றுத் தோத்திரஞ் சாற்றின. அதுகண்ட முனிவர் அன்புடையவரா யானந்தங்கொண்டு, நீங்களியாவரு மித்தேகத்துடனே தேவலோகம் போமின்களென்று செலவுகொடுத்து, வலைவேடரை நோக்கி, எனக்கு நீங்கள் சுத்தமனதொத்துச் சுரபிதான மளித்தமையால், குடும்பவர்க்கத்துடன் சொர்க்கம்போய்ச் சேருங்களென எக்கியஞ்செய்கிற கரங்களினால் அர்க்கியங்கொடுத்தருளினார். தட்சணமே அம்மச்சங்களும் அவர்களுந் திவ்விய தேகிகளாகிய தேவவிமான ரூடர்களாய்,தேவேந்திர மோகிகளாய் திருவின் சுகபோகிகளாய் தேவதுந்துமி முதலிய வாத்தியங்களுடன் விண்ணிலெழுந்து பொன்மாரி பொழிய, அமுதம் பெருகி வழிய அஞ்ஞான சன்னமொழிய அப்சரஸ்திரீகள் நடம்புரிந்து பாடல் மொழிய, ஐந்தரு நீழ்லி லமர்ந்தார்கள்.

பின்பு தருமஸ்வரூபியாகிய அச்சவனக மகாரிஷி நகுஷன்மீது தயைவைத்து, ஓ திடகாத்திர தேசக்காவலனே! உமக்கு வேண்டிய வரங்களைக் கேளுந் தருகிறேனென்றனர். அதற்கவ னவரைப் பணிந்தெழுந்து, சுவாமீ, நான்குவேதசொரூபராகிய தேவரீர் இப்பூமிசெய்த தவத்தினால் இவ்விடத்திற்கு வந்தீர். தேன்மருவிய செந்தாமரைப் போன்ற உம்முடைய திருவடிக்குச் சாஸ்திரங்களிற் செப்பியிருக்குந் தன்மைப் பிரகாரம் அன்பசையாமனிருத்தி அர்ச்சனை செய்வதே அடிமைக்குப் போதுமானவரமென்று புகன்றான் அச்சொற்கேட்ட அருந்தவர் அவ்வரசனது பத்தி வசனத்திற்கு மெத்த மகிழ்ந்து, ஐயா! மகாராஜனே. நீர் இகத்திலிருந்து சுகத்தையடைந்து, ஏகாந்தமாகிய தேகாந்தகாலத்தில் தேவர்களியாவரும் எதிர்கொண்டு அஞ்சலிசெய்து வாழ்த்தும்படியாய்ச் சுவர்க்கலோகஞ்சென்று, நவரத்தினமுடிசூடி தெய்வலோகம் மேஹாசனமேறி தேவர்கட்கெல்லாங் கோவாய்த் தேவேந்திரனுவீரென்று ஆசீர்வதித்துப் போயினர். இராஜன் அவரடிவைத்த இடத்தைப் பூசித்து ஆயுங்கட்டி நித்தியோச்சவ முதலாகிய பூசைகள் நிறைவேற்றினன். ஓ சத்தியமுந் தருமமுந் திரண்டுருவான தருமநந்தன சவனகமுனிவருடைய மகத்துவம் இத்தன்மையுடையது. அவர் சலசரங்களாகிய மீன்கள் சஞ்சரிக்கப்பட்ட செம்மையில்லாத இடத்திற் பொருந்திய குற்றத்தினாலேதான் அருமையான நிஷ்டைகூடிய மகாத்துமாவாயிருந்தும் பரதரி முத்த வலைக்கண்ணியின் பந்தத்திலகப்படும்படியாயினர் இதன்றிப் பெரியோருடைய சாவகாசத்தினால் நன்மை கிடைக்குமென்று சொல்வதற்குச் சரியாய், அவ்வலையிலகப்பட்ட மீன்களும் அம்மீன் பிடிப்பவர்களுமடைந்த பேற்றின் பெருமை எவ்வகைத்தானது? பின்னுஞ் சவனகரிஷிக்கு ஏந்தப்பொருளுஞ் சரிப்படாமற் கபிலை மீடானபடியினாலே, அக்கபிலையின் மகத்துவம் எப்போர்ப்பட்டது. என்று பகர்ந்த பாட்டனைத் தருமர் வணங்கி யெழுந்து, ஓ என் குலமணியே? இதத்தில் என்னென்ன தானதருமம் பண்ணவேண்டியது. எந்தத் தானத்தால் என்ன பலன் கிடைக்கும்? இவைகளை வேதாகமப் பிரமாணப்படி விபரமாய்ச் சொல்லவேண்டுமென்று விரும்பிக்கேட்க வீஷ்மர் பகர்கின்றார்.

தருமதானப்பலன் கூறுதல்.

அப்பா உதிஷ்டிரனே மாற்றுயர்ந்த தங்கம், பொன், வெள்ளி, செம்பு, இரத்தினம், வஸ்திரம், இயானை, குதிரை, பல்லாக்கு, தேர், இவைகளைத் தானஞ்செய்தால் என்னபலன் கிடைக்குமோ? இதற்கெல்லா மேலானபலன் தான்பெற்ற கன்னிகையைப் பெரியோர்களுக்குத் தானம் பண்ணுவது. இதனிலும் பெரிய பலன் நல்லன்பர்கட்கு இன்பமாய் அன்னதானஞ் செய்வது. இந்தத் தானத்திலுஞ் சிறந்தது தண்ணீர்ப்பந்தல் வைத்து உபசரித்தல். அத்தண்ணீர் வார்ப்பதிலு மேலானது வித்தியாதானம் புரிவது. அதனிலும் பெரியது சற்பாத்திரங்களுக்குத் தடையறக் கொடுப்பது. எல்லாவற்கு மேலானது பூதானமீவது. பூதானத்திலு முயர்ந்தது கோதானம். இந்தக் கோதானத்திலந்தப்பசு எப்படியிருக்கவேண்டுமென்றால், குலம், நலம், வர்ணம் இவைகள் மேலானதாய், பாற்பெருக்கம், விர்த்தி, சுபலக்ஷணம், காதுநெறிப்பு, மறுவில்லா நிறம், இவைகளுள்ளதாய், அங்கக்குறைவில்லாததாய், நோயற்றதாய், கடாரிக்கன்றை ஈன்றதாய், கண்மயிலைபாய்ந்ததாய், வாலுங் காலும் பூமியிலுயர்ந்ததாய், தோலிற் சூடுருததாகி! இதை நாலுவேதமுங்கற்ற பிரமாணமுற்ற பிர்மக்கியானிக்குக் கொடுத்தால், முந்தி கூறிய தானங்களெவற்றினுக்குமேலாகிச் சிறக்கும். அப்பலன்களை யெல்லாம் அடைவேகொடுக்கும், என்றென்றைக்கும் இருளில்லாத பரலோகஞ் சேர்வார்கள். இந்தப் பசுதானத்திலும் அதிக அப்பியாக்திகளைப் பூசைசெய்து, அவர்கள் விரும்பியதைப் பெரும்பயனென்றளிப்பது பெரிது. குறிப்பறிந்தீதல் அதனிலும் பெரிது. கல்விக்யானமுடையாருக்குக் கொடுப்பது அதனிலு நன்று. ஏழைகள் கேட்பதை ஒளியாமலீவது அதிலும்பெரிது. கூலி குறையாமற் கொடுப்பது அதனிலு முயர்ந்தது. குடும்பரக்ஷணை அவற்றிலும் பெரிது. சத்தியதருமம் இயாவிலுமுயர்ந்தது. அன்னை தந்தையர் சொல்லை ஆதரித்தொழுகில், இதுகாறுஞ் சொல்லிய எல்லாத்தனங்களின் பலனைத் தரும். என்று வீஷ்மர் புகல, தருமராஜன், ஐயா! அவசியமறியத்தக்க ரகசியங்களை யறியலானேன். இப்போது தேவரீர் பசுலோகஞ் சேர்வார்களென்று பகர்ந்தவண்ணம், அந்தப் பசுலோகம் எங்கிருக்கின்றது அதனை நானறிய நவிலவேண்டுமென்ன, கங்காகுமரன் சிங்காரமாகச் செப்பத் தொடங்கினர்.

---

பசுலோகச் சிறப்பும் அப்பசு லட்சணமுங் கூறுதல்.

அப்பா என்னருமைப்பேரனே, இந்தப் பூலோகமுதற்கொண்டு மேலே சத்தியலோகந்தினுக் கப்பால் அண்டச்சுவரின் கவிப்பு. அவ்வுலகத்தையாருங் காணமாட்டார்கள், கண்டவர் உட்கொண்டு விண்டிருக்கின்றபடி சொன்னேன். பூர்வந் தேவேந்திரன் பிர்மாவை வணங்கி, இப்போது நீ யென்னைக் கேட்டபடியே சங்கை செய்தான். அவனுக்குப் பிர்மதேவர் சொல்லுகின்றார் ஓ இந்திராணி கேள்வனே! பசுலோக மெவ்விடத் திருப்பதெனில், அண்டகோளகைக்கு அருகாமையிற் சிவ்லோகத்திற்கு மேலாய்ச் சேரவிருக்கின்றது. யாவருக்கும் பாசுபந்த வினையை யறுத்துப் பதம்பாலித் தருளுகின்றது பசுலோகம். அவவுலகத்தில் நானும் என் பிள்ளையாகிய உபப்பிர்மாக்களிற் சிலரும், மானிடதேகத்திற் சத்தியந்தப்பாமல் வாழ்ந்த ஞானவித்தகரும் வாசம்பண்ணி, அவ்வுலகின் அதிசயங்களையறிந்து அனுபவிக்கத்தக்கதே யொழிய மற்றொருவராலு முடியாது. பூலோகமெல்லாம் ஒருகுடை நீழலிலடக்கிந் தருமநெறி முறைப்படி ஆண்டுவந்த அரசர்களும், தேகம் வருந்த வருந்தித் தவங்கள் புரிந்தபேர்களும், யாகந்தொடர்ந்து தான தருமங்கள் வழங்கினபேர்களும், இயாவரிடத்துங் கிருபையுடையவராகி மூன்றுலோகமுங் கொண்டாடநின்ற முதியோர்களுஞ் சென்றடைய விருப்பது. அப்பசுலோகம் அன்றியும் இலட்சணமான சுரபியைப்போஷித்து, அதனையந்தவங்கங்கடோறும் பூசித்து புஷ்பம், பொன்மணி இவைகளினால் அர்ச்சித்து, பூரணக்கியான பூசுரருக்குப் புனிதகருடன் தானமளித்து மனங்குவிந்திருந்தபேர்கள். அந்த ஆவுலகத்தை யடைவார்கள். இப்பேர்ப்பட்ட மேலான பசுலோக கதியானது. கோடிசூரியப் பிரகாசங் குலாவியிருப்பது. சுத்த வண்மை

யுடையது சோதிமயமானது. பொன்மேனி
யானஎன்னையும், நீலமணியுடற்பெற்ற மாய
னையும், பவளம்போன்ற வடிவப்பரமனையும்
வேறுபடித்திக்கூறுமல், பத்தியுடனினைத்து
அன்பினுலே வழிபட்டு ஆராதனை செய்
வோர்கள் ஆனுலகங் கெட்டியாய்ச்சேர்வார்
கள். இத்தியாதி பெருமையுடையது பசு.

இந்தப் பசுவைச் சாம்பவமூர்த்தியாகிய
பசுபதியானவர் தமது பதாகையிலே நிறுத்
தி, அதனையே வாகனமாக்கிக் கொண்டு,
அதனது சத்தையே பூதியாகத்தரித்து,சகல
பாவதோஷ சுபாசுப சந்தோஷங்களுக்கும்
பூதப்பிரேத பிசாச டாகினி டோகினி முத
வியபேய்களுக்கும், நீறுபட்டவர்வினை நீறு
கும்படிக்குமாகும் ஓர் நேமங்கண்டருளினுர்.
எப்பொருட்கு மிறையாகிய ஈஸ்வரனே அ
தனை ஏற்றுக்கொள்வாராகில், இனிநான்பசு
வினுடைய பான்மை தூய்மையைப்பகரவல்
லவனே? இவ்வளவு தூரம் அதை எடுத்துப்
பேசியது உன்னிஷ்டத்தினுலும் என்னு
டைய அவாவினுலு மென்றறிக. மற்றப்படி
க்கு அதனுடைய மகத்துவத்தை அந்தச்
சாம்பவ மூர்த்தியே அறியத்தக்கவர் என்று
பிர்மதேவர் சொல்லக்கேட்ட இந்திரன் மகி
ழ்ந்து எழுந்து புகழ்ந்து, தன்னுலகம் போ
னுன். அப்பா தருமா! சகலலோகமுந் தானு
யிருக்கின்ற சம்புவையே தான் தாங்குவதா
னுல், அதனுடைய மகத்துவ மென்போலிக
ளாற் சொல்லத்தக்கதோ? என்று வீஷ்மர்
சாற்றக்கேட்ட வாசனை பரித்த குவளைமாலை
யைத்தரித்த வாய்மையோன் மனமகிழ்ந்து,
ஓ மாதவனே! மேற்கூறிய பசுவினுடைய
அவயவங்களைப் பூசிக்க வேண்டுமென்று
சொன்னீர்களே. அந்தந்த அவயவங்களில்
எந்தெந்த தேவதைகளிருப்பார்கள்? அதனை
யெனக்குத் தெரிவிக்கவேண்டு மெந்தையே
யென்று வினவ, சந்தனுராசன் அருமையா
கத் தந்த விந்தைமிகுந்த நந்தனன் வினோத
மாகச் சிந்தைகளித்துச் சொல்லுகின்றுர்.

அப்பா! தருமநந்தனு! பசுவினுடைய
முகத்திலே தேவேந்திரன் நாக்கிலே சப்த
ரிஷிகள், கொம்பிலேகாலன், மூக்கிலே வாயு,
பாதங்களிலே குபேரன், புட்டத்திலேசீவன்
முத்தர்கள், முகவாய்க் கட்டத்திலே தேவர்
கள், பிடரியிலே பிர்மா, கண்களிலே சூரிய
சந்திரர், கண்டத்திலே பரமேஸ்வரன், வரி
மடிப்பிலே பார்வதி, வயிற்றிலே அக்கினி,
இடையிலே ஸ்ரீமந்நாராயணன், தவிடையி
லே வசுக்கள், முசுப்பிலே காவித்திரி, நெஞ்
சிலே பகனென்னுந் தேவதம், வாலிலேதரு
மதேவதை, மயிரிலே முக்கோடி தேவர்கள்,
காதிலே காலப்பிரமாணக் கடவுளர், நடுநெற்
றியிலே சித்தர்கள், அடிவயிற்றிலே பன்ன
காதிபர், மடியிலே அமுதகூபாளர், யோனி
யிலே இந்திராணி, இரத்தத்திலே சந்திர
கலை, மாம்சத்திலே சத்தி, மூலையிலே சரஸ்
வதி, மூத்திரத்திலே கிருத்தி, சரணத்திலே
லட்சுமி, இவ்விதமாக இருப்பதானுல், அந்
தப் பசுவின் பெருமையைப் பகரலாகுமோ!
இந்தப்பிரகார மதனவயவங்களிற்சகலதேவ
தைகளுமிருப்பார்கள். அதன் தூய்மையான
புனிதத்தை ஆர்றியப் போகிறுர்கள்? மகா
தெளிவினையடைந்த விவேகிகள் இதனுடை
ய பொருளறிந்து, பெருமை தெரிந்து, போ
ஷித்துப் பூசிப்பார்கள். பசுவைப் பிரம்பினு
லும், கொம்புகளினுலும், கயிற்றினுலும், வா
ரினுலும் தடியினுலும் மற்றெதுகளினுலும்
அடிக்கப்போகாது. பயிர்ப்புலத்தில் மேய்ந்
தபோதிலும், மூன்றுதரங் கையைத் தட்டி
உரப்பவேண்டும். அதற்கும் போகாமற்போ
னுல், தருப்பைப்புல்லேனும் வைக்கோலா
லேனுந் தட்டியோட்டவேண்டும். இதுதரு
மம், மேலிட்டுச் செய்வது அதருமம், இவ்
விதமாகக் கொண்டாடி வெகுபேர் கடைத்
தேறினுர்கள். அதில் உனக்கொருகதை
சொல்லுகிறேன் கேள்.

---

### பசுவைப் பூசித்துப் பாதுகாத்தலைப் பற்றிக் கூறிய சுமித்திரரிஷி கதை.

அப்பா தருமநந்தனு! அந்திதேவனெ
ன்னும் ஓரரசனு லாளப்பட்டபுட்டினத்தில்
வசிக்கின்ற மகாரிஷியாகிய சுமித்திர ரென்ப
வருக்கு ஒரு பசுவுண்டு அவரந்தப் பசுவைக்
காலையிலும் மாலையிலும் நன்றுய்த்தேய்த்து
மேய்த்துப் போஷித்துப் பூசித்து வருவார்.
இப்படியிருக்கிற நாளில் ஒருநாள் சுமித்திர
ரிஷி உதயத்திலெழுந்து, அதனுடம்பெல்
லாஞ் சொறிந்து, தடவிக் கொடுத்து குளிப்
பாட்டி, புல்லுள்ள புலத்தில் மேய்த்துக்
கொண்டிருக்கின்றுர். அப்போது ஒரு ரிஷ
பஞ்சம்மந்தப்பட்டது அந்தப்பசு அதுவே
கெர்ப்ப முண்டாயிருந்து கிடாரிக் கன்றை
யீன்றது. அக்கன்றும் பசுவும் பெரிதாகிய

போது தாயொன்றுங் கன்றொன்றுமாகக்கன்
றுபோட்டு, இவ்வாறு வருஷந்தோறும்பலு
கிவிருத்தியாய்த் தருமந் தழைவதுபோற்பெ
ருகி மந்தைப்பசுவாயின, இந்தச் சுமித்திரர்
எல்லாப் பசுக்களையும் மேலுமேலும் ஆசை
யாய்சவரட்சணை பண்ணிக்கொண்டிருந்தார்.
இவ்விதமாக நாள்தோறும் பழகியபந்தத்தி
னால், இவரெவ்விடம் போனாலும் அந்தப்
பசுக்கூட்டங்களுங்கூடச்செல்லும். இவரெ
ங்கு நின்றாலும், எந்த்விடத்தில் உட்கார்ந்
தாலும், எங்கு படுத்துக்கொண்டாலும் அ
வையுமிவரைப் பிரியாமற் றழுவுவ, அவரும்
அவைகளிடத்திலும் மனவெறுப்பில்லாமல்
பசியறிந்து தாகமறிந்து தேகஸ்திதி யறிந்
துக் காப்பாற்றி, அவைகளுக்குப் பேரிட்ட
ழைத்து, தானும் அவைகளுட் னொருவராய்
விளையாடிக் கொண்டு, அப்பசுவின் கன்று
போல் அதனது முலைகளில் வாய்வைத்து
ண்டு மாடென்று மனிதனென்றும் வேற்று
மைபாராமல் வெறுப்பின் றிவிருப்பமாயிருந்
தார். இதைக்கண்ட சகல ரிஷிகளுமிவரை
ஆபீன விருடியென்று பெயரிட்டழைத்தார்
கள். இப்படி வெகு நாள் ஆகிறபோது
பத்துலட்சம் பசுக்கூட்ட மாயின. அப்பசு
க்களை யெல்லாம் அம்மடுவினுடைய கரை
யருகிற் கொண்டுபோய் மேய்க்குங் காலையில்
அம்மடுவிற் சப்திக்கப்பட்டவளையலும் பாத
கட்க முதலிய சிலம்புகளும், கறுத்த அளக
மும், பருத்த ஸ்தன புளகமும் படைத்தமா
தர்கள் கரை புரளும்படி சலத்தைக் கலக்கி,
அலையெறியும் நீரில் ஆநந்தமாய்விளையாடி
னார்கள். அவர்களைப் பசுக்கூட்டங்கள்கண்டு
இந்த மடுவில் வந்து விளையாடுகின்ற நீங்
கள் யார்! ஏனிந்தமடுவில் மூழ்குகிறீர்கள்.
நீங்களிருப்பது எந்தவூர் என்றுகேட்க,அத
ற்கந்த ஸ்திரீகள் அப்பசுக்களைப் பார்த்து,
ஓ சுரபிகளே! பூர்வத்தில் நாங்கள் பசுச்செ
ன்மங்கள். இப்போது புனித மாதர்களின்
பிறப்பாயிருக்கின்றோம். இம்மடுவு மகாமக
த்துவமுள்ளது ஆதலால், இங்ஙனம் நீரா
டிப்போகவந்தோம், எங்கள் நாடுபசுலோகம்
ஆனுலகென்றும் அறைவார்கள் என்று கூ
றிய அந்த ஸ்திரீகள் மொழிகேட்ட பசுக்
கூட்டமெல்லா மீட்டு மவர்களைப் பார்த்து,
நாங்களும் பசுலோகஞ்சேரும்படிக்கு அனு
க்கிரகம் பண்ண மாட்டுவீர்களா வென்றுகே
ட்டன. அதற்கவர்கள் இரக்கப்பட்டு, நீங்க
ளியாவரும் இந்த ஊராளப்பட்ட அந்தித்
தேவனுடைய எக்கியப்பசுக்களாய்உயிர்விட்
டீர்களானால் சந்தேகமில்லாமல் ஆனுலகை
மடைவீர்கள் என்றிவ் வுறுதியாகிய உபாய
ஞ்சொல்லிப் போனார்கள்.

அதைக்கேட்ட கோவினங்கள் அவ்வந்
தித்தேவன் யாகத்திற் பிராணனை விடும்படி
க்கு நிச்சயித்து, மறுபடியும் நிதானித்து,
இதுகாறு நாமெல்லாம் இச்சுமித்திர முனி
யினால் விர்த்தி பண்ணப்பட்டும், போஷிக்கப்
பட்டும், பிழைத்திருந்தோம். இவரும் நம்மு
டனொருவனாய்ப் பழகியிருந்தார். நாம் இவ
ருக்குச் சொந்த உடைமையே இவர் நம்மை
இதுவரையிலுங் காத்திரட்சித்தார். இவரை
விட்டுவிட்டு நன்றி மறந்தவர்போல் நாமாத்
திரங் கதியடையலாகாது. அது நன்மையு
மல்லஎன்று யோசித்து நல்லது நாமிவரை
யழைத்தால் உயிர்பிரியாமல் உடன்படமாட்
டார். இவருக்குப் பிராணன் இந்த யுகத்திற்
பிரிகிறதாயில்லை. இவர் நம்முடனே கதிபெற
வரப்போகிறது மில்லை. இவர் வராவிட்டா
லும் நாம் பலாத்காரம் பண்ணிப் பிராணனை
மாய்த்துப் பசுலோகம் கொண்டு போவது
பாக்கியம், இதனால்நமக்குப்பாவமில்லைஎந்த
காலத்தில் இவரிந்தப்பதவி பெறப் போகின்
றார் நம்மைக்காத்த பலனுக்குநாமிவரைக்கா
ப்பாற்றுவோம்என்று மனோ திடங்கொண்டு
ஆவினங்க ளெல்லாஞ் சுமித்திர ரிடத்திற்
சேர்த்து, அவர் முகத்தை யேறிட்டுப் பார்
த்து, ஐயோ! நமது எண்ணத்தை இவருக்
குச் சொல்லுவதெப்படி? என்று மனங்கூசி
வாடிமயங்கி, ஒன்றையொன்று பார்த்துஓது
ங்கின. அப்போது அந்த ஊரிலுள்ள பசு
வினங்களாகிய சிற்சில கபிலைப் பசுக்கள் மந்
தைப் பசுக்களைப் பார்த்து, ஐயோ! நீங்கள்
கொல்லமாட்டீர்கள். உங்களுக்குத் துணிவு
போதாது. நீங்கள் வைதீகரிடத்திற்பழகின
வர்கள் உங்களுக்குச் சீவகாருணிய முண்டு
நீங்கள் காட்டில் வாசம். நாங்கள் நாட்டில்
வாசம். எங்களுக்கு நானாவித உபாயம்,
அபாயம், தருமம், தந்திரம், இவைகள் தெ
ரிந்திருப்பதோடு உலகத்தார் நடக்கிற வஞ்
சம், மாறுபாடு, மோசம், பொய், பொறாமை,
கலகம், ஆசை, அன்பு இவைமுதலானவை
களை யறிவோம். எங்களுக் கெல்லாந் தெரி
யும் வேண்டுமானால் எங்களுக் கென்னவுண்
டு? (விரதங் கெட்டாலுஞ் சுகந்தக்க வேண்

டும் சுகங்கெட்டாலும் விரதந்தக்க வேண்டும்.) என்று முதியோர் சொற்படி எங்களுக்கோர் பிரயோசனஞ் சொல்லுங்களென்று கேட்டன. அதற்குக் கபிலைகளை இந்த மந்தைப் பசுக்கள் நோக்கி, எங்களை ஆரொருத்தன் அன்பாகத் தானங்கொடுக்கின்றானோ? அந்தக் கோதானபலனுக்கு நூறத்தனை பங்கு உங்களைத் தானம் பண்ணுகிற பேருக்கு வரத்தக்கதாகவும், உங்களை உலகமெல்லாங் கொண்டாடும்படியாகவும் வரங்கொடுத்தோமென்று வாக்குத்தத்தம் பண்ணியதுகள்.

இவ்வரம் வாங்கிக்கொண்ட கபிலைபசுக்கள் ஒருமித்துக் கண்சிவந்திருக்கும்போது, மற்றப் பசுக்கள் ரிஷியண்டைக்கு வந்து, ஓ சுமூத்திரரிஷியே? நீரெங்களைக் காத்திரட்சித்த கடமைக்காக எவர்களும் பெருதற்கரிதாகிய பசுபதங் கொடுக்கின்றோம். வருகிறீராவென்றழைத்ததுகள். அவரதற்குச் சம்மதியாமல் முகத்தைச் சுளித்துக்காட்டினார். உடனே பக்கத்திலின்ற கபிலைபசுக்கள் பாய்ந்து அதனாலந்த முனிமாய்ந்து, ஆய்ந்த அறிவுடையாளரும் ஆனுலகத்தாரும் எதிர்கொண்டழைக்கும்படியான பக்குவத்தி லிருந்தனர். அவர் நல்ல காரியத்திற் கிடங்கொடாமல் முகத்திற் கோபங்காட்டிச் சுளித்தபடியினால் அதுமுதல் அவரினமாகிய பிராமணர் முகத்தில் அசூசியாகிய மூதேவி வாசமாயினள். அதைப் பிராதக்கால முழுக்கினாலும், பிரமக்காயத்திரி முதலாகிய அர்க்கிய ஓமங்களினாலும்போக்கி, சூரியதேயக்காட்டி சத்தியவிரத உத்தம காரியங்களினால் பிரமதேயசு பூணக் காண்பார்கள். அதனாற்றான் அந்தணர் முகத்தில் அசூசியுண்டென்று சொல்வது மற்றொருகா லண்டமுகடிடம்பெறுமற் சந்திரசூரிய கிரகங்களனைத்துடைக்க மூளைத்து ஒரு மகாரிஷி முதுகில் வளர்ந்த மூங்கிலைச் சிலமுனிவர்கள் காமதேனுவினால் நீவச்செய்தபோது, சல்லிவேரெல்லா மறுத்து மூலவேர் நீக்குஞ்சமயத்தில் அந்த மகானுபாவருக்கு வருத்தமாகி நோயாமல் மெலிந்து சீ! மூதேவியென்று திரும்பிப்பார்த்துரைத்தனர். அதனாற் பசுக்கள் மூகத்திலும் அப்பான்மையுண்டென்றுவேதாகமங்களில் விதித்திருக்கின்றது. இப்பால் மகாரிஷிவளர்த்த பசுக்களெல்லாங் குற்றமற்ற அந்தித்தேவ மகாராசனிடத்திற்போய், ஓமகானுபாவர்! நாங்கள் நற்கதி பெறும்படியாகஎங்களைப்பசுவாங்கிக்கொண்டு அக்கரைச்சேர்த்துவிடும் என்று சொல்ல அப்பசுக்களின் காயந்தெரியாத பார்த்திவன் திகைத்துத் திப்ரமைகொண்டு அடடா!! இத்தனையாயிரம் பசுக்களையும் எந்தயாகத்தில் முடிக்கிறது? இதென்ன விபரீதம்! எதுவு மிதமாயிருக்கில் மகத்துவவழிவரும். அமிதமானால் அகத்தியம் பழிதரும் என்று உட்கொண்டவனாய் அப்பசுக்களைப்பார்த்து, ஓ சுரபிகளே உங்களை நான் கொல்லமாட்டேன் போங்களென்றான். அந்தப் பசுக்கள், ஓ ராஜனே! நீர்வேறு யோசனை பண்ணுதீர். நாங்கள் மனப்பூர்வமாய் நல்லகதி யடைவதற்குக் காலநேரிட்டிருக்கிறது. அதனால் உம்மை வேண்டுகின்றோம். இதனால் உமக்கும் நற்கதியுண்டாம். இதரயோசனை பெண்ணைமல்யாகநடாத்தும் என்று சொன்ன சொல்லைக்கேட்ட அந்தித்தேவன் சிந்தனைசெய்து, செந்தழல்வாணரை யழைத்து வந்தனைதந்து, இயாகசாலையொன்றேற்படுத்தி, ஓராயிரவருஷங் கோரேதகம் புரிந்தான்.

அந்தயாகத்தில் நாட்டிய யூபஸ்தம்பத்திற் பசுக்களைத் தருப்பையினாற் பந்திக்கிறபோது, அந்தித்தேவன் பசுவினங்களை நோக்கி, ஓ தருமசொரூப சாதுக்களே! உங்கள் பேச்சை நம்பி யாகஞ்செய்கிறேன். மந்திர உச்சாடனம் பண்ணி ஓமம் வளர்த்தும் போது நீங்களியாவரும் மகாதேவனைச் சிந்தையிலிருத்தி வந்தித்துக்கொண்டிருக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் அக்கிணியறிவால் துன்பப்பட்டுக் கண்ணினாலே தண்ணீர்பெருக்குவீர்களாகில், தக்ஷணமேயாகத்தை நிறுத்திவிடுவேனென்றான். அம்மொழிக்கு ஆவினங்கள் சம்மதித்துக்கொண்டன அதுமுதலாய் நிதநிதம் ஓமாக்கினியை வளர்த்திப் பூரணாகுதிகொடுத்து வரும்போது ஒருநாள் வழக்கப்படி அன்றைய பசுவை யூகஸ்தம்பத்திற்கட்டிவைத்தார்கள். அதனுடைய கன்று தாயைக்கண்டு அதனிடத்தில் வந்துநின்றது. அந்தப் பசுவானது தன்பிள்ளையின் உடம்பெல்லாம் நாவினாலே நக்கி ஐயோ! மகவே! நீ இன்றுமுதல் யாரிடத்தில் இருப்பையோ? யார் ஆதரிப்பார்களோ? இயாரை அம்மாவென் றழைப்பாயோ? இதோ நான் எக்கியப் பசுவாய்ப்போகின்றேன்

பாசபந்த ஆசைபொல்லாது. என்னசெய்
வேன் இனி நீ மற்றொரு மாட்டுகளையு மனி
தர்களையு முட்டாதபடி சாதுவாயிருந்து வா
ழென்று சொல்லாதுஞ்சொல்லி கல்லாதா
கிய பசு கண்ணீர்விட்டது. அதை வல்லா
ளாகிய மகாராஜன்கண்டு, இயான் முந்திசொ
ல்லியவண்ணஞ்செய்வேனென்று கைகூப்பி
நின்று யாகத்தை நிறுத்திவிட்டான். பின்
பவ்வரசன் தன்மனதொத்த பசுக்களைப் பரி
ந்து, கண்ணீர்சொரிந்த காலியுடனே மற்ற
மிருதிப்பசுக்களையும் ஓட்டிவிட்டு, அம்மட்
டிற் சாந்திவேள்வியை முடித்து, சர்வத்தி
ற்குமேலான சாயுச்சியம்பெற்றான். மனங்க
லங்காமல் ஒரே நினைவாயிருந்து எக்கியத்தி
லிறந்த ஆனினங்களெல்லாம் அப்சரஸ்தி
ரீகளும் பெரியவர்களும் தேவர்களும் தங்க
ளை யெதிர்வந்து வணங்கி ஆனந்தங்கொள்
ளும்படியாய்ப் பரலோகம் போய்ச் சேர்
ந்து, அங்கே தாங்கள் மடுத்தடத்திற்
கலந்துபேசிய அரிவையரைக்கண்டுஉங்களு
ரையி னுதவியினாலும், உபாயத்தினாலும்
மந்திரராஜன் யாகப்பசுவாய் ஆனுலகடை
ந்தனவென்று அன்புடன் மருவியிருந்தது.
ஆபீனமகாரிஷியும் வந்துசேர்ந்து அவரை
ச்சார்ந்த இனத்தாரும், குலத்தாரும், தலத்
தாரும், அங்கும் பிரியாவிடையா யிருந்து
வணங்கும்படியான வாழ்வுபூண்டு சிறந்தார்
ஓ தருமராஜனே!தேவதைகளைப்பார்க்கினும்
பசுக்களதிகமென்று கருதுக. என்று வீஷ்
மாச்சாரியர் சொல்லியதைக்கேட்ட தருமரா
ஜன் சந்தோஷித்து வணங்கி, கர்த்தனே
கால் கண்ணுங்காலும் கருத்தும் பெற்றதற்
கு உம்மால் உரியபலனடைந்தேன். இம்
மை அம்மை, உம்மைக்குமுதவிதேடிக்கொ
ண்டேன். என்று ஓங்காரமிட்டு உச்சாகமு
ற்று, உடம்புமறந்து, உள்ளமகிழ்ந்து, பூமி
யில்வீழ்ந்து, புரண்டு, பணிந்து, சரீரமாத்
தியந்தமும் பூரித்துப் பார்த்துப் போற்றித்
தோத்திரம் பண்ணினார். புங்கவர், முதலிய
பேர்களும் புகழ்ந்து மகிழ்ந்தார்கள். பிறகு
நான்கு திசையும் வேரூன்றிய கீர்த்தியை
யுடைய தருமநந்தனரானவர் மீட்டும் வீஷ்
மரை வணங்கி எந்தையே! பசுக்களிலே கபி
லைப்பசுவென்று வேறேபிரித்துப்பகர்ந்தமை
யால், அந்தப் பசுவின் மகத்துவத்தையுந்
திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்
க வீஷ்மர் சொல்லுகின்றார்.

### கபிலைப்பசுவின் மகத்துவ முறைத்தல்.

ஓ ஒப்பற்ற வுணவிற்சிறந்த உதிஷ்டிர
மகாராசனே! அந்தப்பசுவுக்கு நிறம்,குணம்
பிறப்பு, சிறப்பு, அவயவலட்சணம், இவை
யெல்லா மற்ற பசுவைப்போல அமைந்திரு
ந்தாலும், காதும், கண்ணும், மடியும், மூக்
கும், வாலும், கருப்பாயிருக்கும் இவைகளில்
ஒரு குறிப்பிருந்தாலும், அதுவுங் கபிலையெ
ன்று பேசுவார்கள். இப்பேர்ப்பட்ட கபிலைப்
பசுவை இயாவரேனும் பூசித்து அர்ச்சனை
செய்து தருமதேவதையெனப் பாவித்துப்
போற்றினால் மேன்மையிற்சிறந்த மேலான
கதி பெறுவார்கள். மனுவிக்கியானத்துக்கு
மாறாய் நடந்தவர்கள். வேதவிதிகளை விலக்
கியபேர்கள், தீவினை முதலிய பாவங்களைத்
தேடிக்கொண்டவர்கள், பொய் பேசினவர்
கள் தெய்வநிந்தை செய்தவர்கள், ஆகிய
இவர்களெல்லாம் ஒருகபிலைப்பசுவைக் காப்
பாற்றி, அதற்கு வாயுறை கொடுத்துவளர்த்
து, அதை வழியிற் கண்டாலும் வணங்கித்
தொழுது அதனுடையபாலைத் தேவர்களுக்
கு அபிஷேகமாகும்படி அளித்து உபசரித்
தால் தீமைகள்தீர்ந்துசெம்மையாகியபலனை
யடைந்து சுபஞ்சேர்வார்கள். அந்தக்கபிலை
யும் அடித்து, உதைத்து, வைது இரைபோ
டாமறகட்டி இம்சைபண்ணினபேர்கள். எம
லோகத்தில் வருணபாசப் பிணிப்பினால் வா
டி, தீராநரகத்தில் நேராயமுழுந்துவார்கள்.
அந்தப் பதிவின்பால் மனிதர்சாப்பிடப்போ
காது. சாப்பிட்டாற் பசுவினுடைய ரெத்தத்
தைம் பானம் பண்ணியதுபோலாம். முக்கிய
மாய் சிவலிங்க வபிஷேகத்திற்கே உரியது.
இப்படி சிவனுக்கற்பிதஞ்செய்தவர்க ளடை
யப்படும் பெருமையைத் தூக்கிச் சொல்லுவ
தற்குப் பிர்மா முதலாகிய தேவர்களாலும்
ஆகாது. அச்சிவனுக்கற்பிதஞ் செய்வித்தவ
ர்களுடைய பெருமையையு மவர்களறியமா
ட்டார்கள். என்றால், நான் சொல்லத்தரமோ
ஓ குணசீலனே! அப்பேர்ப்பட்ட கபிலை
யைச் சுத்தனாய், தயாரசனாய், சத்தியவா
னாய், நித்தியவிதி தப்பாதவனுமாகிய வேதி
யனுக்குத் தானங் கொடுத்தால், அத்தான்
மளித்தவனுக்குக் கிடைக்கிறபேறு சாற்றத்
தக்கதோஇத்தன்மையாகிய பசுவுக்குத் தின
மும் புற்கொடுத்து, குங்குமமணிந்து, மஞ்
சட்பூசி, தண்ணீர் குடிப்பித்து, தனை நீக்கி

வழிபட்டால். உடலெடுத்த நாள்முதல் ஒரு
புண்யமுஞ் செய்யாத உலுத்தனுனலும், கல்
லாக் கசடனுனுலும்; கியானமற்ற மூடனுனு
லும், காமியானுலும், பொய் திருட்டுக்குச்சா
மியானுலும், பிறர்பொருள் பிறர்தாரங்கவரு
வதில் ஆசாமியானுலும், வீணுசையா லலை
பவனுனுலும், பெரியோரை யிகழ்ந்தவனுனு
லும், பிழை நீங்கிப் பிழையொதுங்கி பெருங்
கெதிபெறுவான்.

இவ்வளவு பெருமையும் அருமையும்
இந்தக் கபிலைக்கு எப்படி வந்ததென்றுல்,
மூன்காலத்தில் அக்கினிபகவான் தேவர்கள்
பேரிற் கோபமாய் கபிலைப்பசுவின் வயிற்
றுக்குள்ளே ஒளித்துக்கொண்டான். அந்த
வுளவறியாமல் வுலக மெல்லாந் தேடி,
யெங்குங் காணுமலேங்கி மெத்த விசார
மாய் கபிலையினிடத்திற்கு வந்து, ஓ புண்
ணிய விருவே? ஓ பொய்யாத மெய்யே
அக்கினிதேவ னெங்கேயோ மறைந்துபோ
னுன். அவனில்லாமல் நித்திய பூசை; நை
வேத்தியம், ஓமம், யாகம் இவையாவுந்தடை
யாகி நாங்களும் பெரியோர்களும் வருந்து
கிறேம் வாடுகிறேம். நீர் தருமதேவதை
யாகையால், எங்கள் வருத்தந் தீரத்தக்கதாக
இன்ன இடத்தில் இருக்கின்றுன். அக்கி
னி பகவானென்று எதார்த்தஞ் சொல்லவே
ண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அ
த்தேவர்கள் படுந்துயரத்தைக்கேட்ட கபிலை
சிந்தையிறங்கி, அக்கினிதேவன் என்னுட
லிலே யிருக்கின்றுனென்றுரைத்தது. அப்
போது அக்கினிதேவன் வெளியிற் புறப்பட்
டு; தேவர்களை வெறுத்துக் கொண்டான்.
அவர்கள் அக்கினிக் கடவுளுக்குச் சாந்தஞ்
சொல்லி, அவன் கேட்ட வரங்களைக் கொடு
த்து, பூலோக முதலிய புண்ணியலோகங்
களிலெல்லாம் பூசை நைவேத்தியம் யாவும்
பொருட்படும்படிக்கு பொருத்தினுர்கள். அ
ந்த நாளையிற் சகல தேவர்களுஞ் சங்கட
நீங்கி, கபிலைப்பசுவைக் கொண்டாடிப் புக
ழ்ந்து உலகிலுள்ள பொருளுக் கெல்லாஞ்
சுத்த பவித்திரமான பொருள் கபிலைகளே
ன்று துதிசெய்து, சுசி முதலிய ஆசார புனி
தங்கள்உங்களாற்சுத்தமாகத்தகுவவென்றும்
உங்களைப்போஷித்த பேர்களுக்குப் பூரண
பதவி கிடைக்குமென்றும், பேரானந்த வீட்
டுக்கு நீங்களே சோபானமென்றும், மேலா
னவரங்களை ஸ்திரம்பெறக் கொடுத்தார்கள்

அந்தநாள்முதல் இந்தக் கபிலைகளுக்குப் பரி
சுத்தமுண்டாகிச் சகலபதமுங் கிடைத்தன
என்றுபராசிவனுடன் வில்யுத்தமும் மல்யுத்
தமுங்கண்டு அருள்கொண்ட அர்ச்சுனன்
தமயனுகிய அன்பனுக்கு வீஷ்மர் சொன்
னுர். அதனுல்தருமராஜன் சந்தோஷப்பட்டு
ஐயா! இறந்துபோனபேர்களுக்கு நல்லகதி
வரும்படியாக அவரவர்களுடையபிள்ளைகள்
செய்பவேண்டிய திதி சிரார்த்தங்களென்ன
அது செய்கிற கிரமமென்ன அதனுல் வரும்
பலனென்ன? இவைகளைச் சொல்லவேண்டு
மென்று தொழுத தருமராஜனுக்கு வீஷ்மர்
விரித்துரைக்கின்றுர்.

---

சிரார்த்தம விரதம் இரண்யதானம்
இவற்றின் விதியுரைத்தல்.

அப்பா மூரசகேதனு! இயாவனொருவ
ன்யெக்கியம் பண்ணி அவிர்ப்பாகம் வைக்
கும்போது தேவர்கள் பிரதான மாவதுபோ
ல், மாண்டுபோனவர்களுக்காகப் பிதுர்லோ
கத்தார் முதன்மையா யிருக்கின்றுர்கள். இற
ந்த தாய்தந்தையரைக் குறித்து அன்னம்,
தர்ப்பணம் பிரதானமாகச் செய்யவேண்டு
மென்று சொல்வதுண்டு. அது மூன்று
பிரிவாயிருக்கும். அதாவது, பிராமணர்களு
க்கு அன்னம் பகர்தல், எள்ளுடனே தண்
ணீர்வார்த்துவிடுதல், பிண்டம்பிண்டமாய்ப்
பிடித்துப் பிதுர்ப் பிரீதியாய்க் கொடுத்தல்.
இம்மூன்றுக்குமுரிய காரியங்களில் விலக்கிய
தைவிட்டு, விதித்திருப்பதைச் சேர்ந்து, ஆ
சாரயீன அசத்தியனுகிய பிராமணனைத் தள்
ளி, வேதவித்தாய் விஞ்ஞானவந்தனுகியவே
தியனை வைத்துக்கொண்டு, ஆத்ம சுசிற்பூத
ஞய்ஸ்நானமுதலிய புறத்தூய்மை யோடிரு
ந்து சாஸ்திரவிதிப்பிரகாரந் திதிகொடுத்த
ல்வேண்டும். இப்படி கொடுப்பாராகில் இவ
ர்களுடைய பிதுர்க்கள் இவர்கள் நினைத்தளி
த்த கதிபோய்ச் சேருவார்கள். முக்கியமாய்
மொழிந்திருக்கின்ற எக்கியம் ஐந்தில், பிது
ர்க்கருமம் பிரதானமான யெக்கியம். இந்தப்
பிதுர்க்காரியம் பெரியோர்களைக் கண்டபோ
துஞ் செய்யவேண்டும் தினமுஞ்செய்யக்கூ
டும். புண்ணிய தீர்த்தங்களைப் பார்த்தபோ
தும் பண்ணவேண்டும். அல்லது பிதுர்த்தி
னம் வருகிறவரையிலுங் காத்திருந்து செய்ய
வேண்டும். இப்படிக்குஞ் செய்யக்கூடாமற்

போனால், தன் தந்தை தாயிறந்த திதியை மறவாமல், அத்தினஞ் சுத்தியத்தியா யிருந்து திவசங் கொடுக்கவேண்டும். அப்படிக்குங் கொடாமல் போனால், அந்த வம்ஸமுழுதுநசித்து மீளாநரகத்தில் வீழ்வாறென்று தேவாகமங்களினு மனுவிக்கியானத்தினும் பேசியிருக்கின்றது. ஆதலால், விக்ஞயானேஸ்வர மென்னும் வேத சாகையைப் பார்த்தால் இதனது விபரங்களெல்லாம் விள்ளும், என்றுரைத்த பாட்டனைத் தருமராஜன் பணிந்து, சுவாமி? விரத மூறைமை பற்பலவிதங்களாய்ப் பேசுகிறீர்களே. அவனுடைய விபரமுஞ் சொல்லவேண்டுமென்று கேட்க கங்கைமைந்தன் கூறுகின்றார்.

ஓ ஏழுகடலும், ஏழுகிரியும், ஏழுபொழிலும், எட்டுதிக்கும், எட்டுபாலகரும், எட்டுவசுக்களும், ஒன்பதுகிரகங்களும், ஒன்பது நிதியும்; ஒன்பது பதியும் ஒருங்கே கொண்டாடா நின்ற உதிஷ்டரனே! தபசு செய்கிற ரிஷிகளியாவரும் உபவாச மிருப்பார்கள். இல்லத்தாருக்கு ஏதாகிலுங் காரியத்தாட்சி வந்தால் அக்காரியங் கைகூடுகிறவரையிலும் இத்தனை நாளைக்கென்று விரதமிருந்து, ஒரு வேளையாயுண்டு காரியசாதனம் பண்ணுவார்கள். இதல்லாமற் பெரிய விரதமொன்றுண்டு அதாவது, இல்லறதருமத்திற் கெடுத்திருக்கிற விதியின்படிக்குத் தப்பாமல் நடப்பதும், அவரவர் குலாச்சாரதருமந் தப்பாமல் நடப்பதும், மேலாகியவிரதம். என்று வீஷ்மர்சொல்ல, தருமராஜன் சரணமடைந்து சுவாமிகளே? உலகத்தில் எந்த சிரார்த்தம் பண்ணினாலும், எந்தவிரதம் இழைத்தாலும் இரணியதானங் கூடவைக்கும்படி யேர்ப்படுத்தி யிருப்பானேன். தெக்ஷிணை திரவியங் கொடுக்காமற் செய்யலாகாதோ? என்றுகேட்க, அதற்கு வீஷ்மர் மகிழ்ந்து; ஓஉத்தமசத்திய வாக்கியனே! முற்காலத்திற் பரமேஸ்வரன் தன்னுடைய வீரியத்தை அக்கினி பகவானிடத்தில் வைத்தார். அக்கினிதேவன் அதைச் சகிக்கமாட்டாமல் தத்தளிக்கும்போது; கொஞ்சம் பூமியிற் சிந்திச் சொர்ணமாயது. அந்தத் தயக்கத்தை தேவர்கள் கண்டு, எவர்க்கு எந்தத்தானந் தந்தாலும் அந்தச் சொர்ணததைக் கூடவைத்துக் கொடுத்தால், முக்கியமென்றும், இல்லாவிட்டாற் பலனில்லையென்றும் விதித்து வைத்தார்கள் ஆனபடியால் சொர்ணம் எல்லாப்பொருளுக்குமேலானது. பரிசுத்தமுடையது. பாபவினைபோக்குவது அயோக்கியரை யோக்கியராக்குவது. பெரும்போகக் கடல் கடக்குங் கப்பலானது. சகல தர்மங்களுக்கும் உச்சவாதிகளுக்குந் தலையாயிருப்பது. அதிகாரமுடையது. கீழ்மக்களை மேன்மக்களாக்குவது குணத்தை வளர்ப்பது குலத்தை விளைப்பது, இல்லாததை உண்டென்பது, உண்டென்பதை யில்லையென்பது. இன்னுமுள்ளபெருமை சிறுமை முதலிய எல்லாவற்றிற்கும் பொன்னே, காரணம், யுகந்தோறும் இதனுடைய மாற்றென்னுஞ் சொரூபங்குறைந்துபோம். இதனது மகத்துவங் குன்றாது. ஆதலால், எந்தக் காரியத்திற்கும் ஈஸ்வர சகிதமாய் இரணியத்தக்கிணை ஈயவேண்டுமென்று வீஷ்மரியம்பினார். இதனைத் தருமராஜன் கேட்டுச் சந்தோஷித்து, சுவாமி! கபிலையின் கோசல கோமயம் அசுசம்போக்குகிற தூய்மையென்று முன்குறிப்பிட்டிருப்பதைக் கூறவேண்டுமென்று வேண்ட, அதற்குக் குறைவில்லாத தவம்பெற்ற வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

## கோசலகோமய மகத்துவம்.

அப்பா கீர்த்திப் பிரதாபனே! பூர்வஞ் செந்தாமரை கமலத்தில் வீற்றிருக்குந் திருமகளானவள் பசுவினிடத்திற்குப்போய், ஓ கபிலைப் பசுக்களே! நானெப்போதுந் தப்பாமல் உங்களிடத்தி லிருக்கும்படியாக விருப்பங்கொண்டுவந்தேன். நீங்களொருப்பட்டு என்னிஷ்டப்படிக்கு வரங்கொடுக்க வேண்டு மென்றனள். அதற்கப் பசுவினங்கள் ஏ மகாலட்சுமியே? நீயெங்கு நிலையாய்த்தங்குவதில்லை, சற்று நிலையில்லாதவள் மின்னல் போற்றேன்றி மறைந்து போவாய். நீ போனபிற்பாடு உன்னை நினைத்து நினைத்து கிலேசப்பட வேண்டியிருக்கும். நீ அதுதானில்லை. நீ எங்களிடத்தி லிருக்கவேண்டாம. என்று வெறுத்ததுகள். அதைக்கேட்ட லட்சுமி சொல்லுகின்றாள். ஓ கோவினமே! நான் உண்மையாக ஒருவரிடத்தில் நிலைத்திருக்கப் போகிறதே நிச்சயம். அவரிடத்திற் சில வித்தியாசங் கண்டால் அங்கே தரித்திரிப்பதற்குத் தாளாமல் இன்னொரிடத்தி

ற்குப் போய்விடுவேன். மேலும் ஞாயந்தவறி, பொய்மொழிபேசி, புண்ணிய மறந்து பாபம்விளைத்து, பொருமைமேலிட்டு, பின்றபுணீ பேசிய பேயர்களிடத்திற் பொருந்தேன். ஆதலால், இவர்களைப்போல நீங்கள் வாழ்க்கையிற் குன்று மானிடரல்ல. ஆக்கையால் அறிவால்என்றும் புனிதர்கள். எக்கிய யோக்கியர்ள். உங்களிலுயர்ந்தவரொருவருமில்லை. நீங்கள் சகல தேவதாசொருபம். தருமபீடம் மாயையின் மர்மமாறலற்றவர் இப்பேர்ப்பட்ட உங்களிடத்தில் வாசமாயிருக்க வேண்டுமென்று இச்சையாய் வந்தேன். உம்மாலே என்பெயர் விளங்க வேண்டும். தருமதேவதையாகிய நீங்களே தள்ளிவிட்டால் என்னருமை யறிந்து இயார் கொண்டாடுவார்கள் ஓ முக்கியமுள்ளவர்களே என்னைக் கைவிடாதீர்கள். என்று அப்பசுக்களின் மனது பரிவுறும்படியாகப் பண்ணினன்.

அப்போது ஆவினங்களெல்லாங் கூடி ஆலோசித்து, நல்லது ஓ நளினி! எங்களுடைய சாணத்தில் நீ வாசமாய் எக்கியயாகாதி முதலிய புண்ணிய வாசனத்திற்குப் புனிதமாய், கோசல கோமயமென்றுகொண்டாடும் பெருமையாய், வீடுவாசல் மெழுகிச் சுத்தி செய்கிறதற்குரிமையாய் பாபசண்டாளத்துவ பைசாசகணத் துஷ்டர்களுக்குப் பவித்திரமாயிருந்து, அங்கங்கு நீவாசஞ் செய்யவேண்டுமென்று உறுதிமொழி கொண்டு கோமகோசலயத்திற்குலாவும் வரங் கொடுத்தன. ஸ்ரீ மகாலட்சுமி எனக்கு தற்பேறு கிடைத்ததென்று மிகக்கொண்டாடி, முகமலர்ச்சியாய், மனமகிழ்ச்சியாய், எவைகளினும் எச்சானதென்னு மூச்சாகமாய், பசுகளின் கோமயமான சாணத்திற் பதிவு கொண்டிருந்தாள். அவளுக்குத் தங்கையாகிய கீர்த்தி லட்சுமியும் அந்த முறைமைப்படிக்குக் கோகவத்திற் குடியாயிருந்தாள். ஆனதால், கோசல கோமயங்கள் மகாமேன்மையாய், அவைகள்பட்ட இடமெல்லாம் புனிதமாய், இலட்மீகரமாய், அசூசங்களைப் போக்கடித்து ஆசாரமாயிருந்து அலங்காரஞ்செய்து வருவன. என்று வீஷ்மருரைத்ததைக் சந்திரகுலாதிபனுன் தருமராசன் கேட்டு சந்தோஷித்து, ஐயா தருமவழியிற் சம்பாதியாத திரவியத்தை தானகாஞ்சனை யாசகமாகப் பெற்றவர்களுக்கு எந்தக் கதிகிடைக்கும் எந்தப் பலனைப் பெறுவார்கள். என்று கேட்க வீஷ்மர் சந்தோஷித்து, அப்பா நீ கேட்ட கேள்விக்குச்சரியாக ஒரு கதைச்சொல்லுகிறேன். அக்கதையைக் கேட்பாயாக. நான் சொல்லப்போகிற கதையைக் கேட்டால் உன் மனத்திலுற்ற சங்கைகள் தீரும், அச்சங்கைகள் நிவர்த்தியாவது மன்றி உனக்கு மற்றையர்க்குஞ் சென்ம சென்மங்களிலிழைத்த தீவினை முதலிய பாவங்களும் தீராத ரோகங்களும் தெளியாத மூடத்தன்மையும், தியங்கப் பண்ணுந் தரித்திரமும் போய், பிறவிப்பெருங் கடலாழ்மற் குற்றங் குறைவில்லாச் செல்வத்துடன் புத்திர மித்திர பாக்கியமும் பெற்றுக் கீர்த்தியாய் வாழ்ந்து முடிவிற் பரமபதமுங் கிடைக்கும்.

---

### தருமர் தருமத்தைப்பற்றிக் கூறிய சப்த ரிஷிகள் முதலாயினோர் கதை.

அப்பா தாஷ்டீகனை தருமநந்தனு! அத்திரி வசிட்டர், சமதக்கினி, கவுசிகர், பரத்துவாசர். கௌதமர், காசிபர், இவாளேழு பேருந் திரி புவனங்களுங் கொண்டாடப்பட்ட செல்வர்கள். கவலையற்றிருக்கின்ற அருந்ததியோ. புருடனைவிட்டு க்ஷணப்போதும் பிரிந்தறியாதவள் சண்டியென்பவளும் அவளுடைய நாயகன் பசுச்சகரென்கிறரிஷியும்,ஒருவரையொருவர்பிரியாத உத்தமர்கள். இவர்கள் பத்துபேரும் அதிகமான தபசுபண்ணிபூலோகத்திற்குச் சஞ்சரிக்குநாளையில், மழையில்லாமற்சகலாத்துமாக்களும்வருத்தமடைந்து துன்பப்பட்டுச்சோர்வடைந்ததுகள். அக்காலத்தில் இந்த மகானுபாவர்களாகிய பதின்மருக்குங் கந்தமூல பலங் கிட்டாமல் காடு நாடெல்லாந் திரிந்து கவலைப்பூண்டு, அந்தந்த யிடங்களிலிருந்த ரிஷிகளும் உச்சாக மில்லாமல் உறங்கிப் பசிமிகுந்து பறந்து ஒன்றுந் தோன்றாமல் அறிவழிந்து சிரமையடைந்து உலத்தாரைப்பார்க்கிலும் ஒடுங்கி மெலிந்து உயிருசலாடப் பொருந்தி யிருப்பதைப்பார்த்து, தாங்களும் ஓரிடத்தில் உட்கார்ந்து, அச்சாணிபோன்ற உடலலசி, பைத்தியம் பற்றினவர்களைப்போற்பாவித்திருந்தனர். அப்போது இவர்கள் செத்துப்போன பிணத்தைச் சிலர் ,வைத்துப்போன ஓர் பொய்கைக்கரை இடத்தைப்பார்த்து, இந்தப் பிணத்தையாகிலுந் தின்று

பசிதீர்த்துக் கொள்ளுவோமென்று அப்பி ணத்தின் சமீபத்திற்போய்ச் சுற்றிக்கொண்டு மாம்சத்தைப் பிடுங்கினார்கள். அந்த வேளை யிற் சற்சீலரகிதனாகிய விடாதருவனென்கிற ராஜன் காட்டில் வேட்டையாடி அந்தவழி யே வருகிறவன் இவர்கள் பிணந்தின்னப் புகுந்ததைக்கண்டு நெருங்கிவந்து, பிரதக்ஷ ண நமஸ்காரம்புரிந்து, ஓ மகா பெருமைபெ ற்றபேரானந்தமூர்த்திகளே! உங்களுக்கு நே ரிட்ட நெடும்பசி வருத்தத்தினால் இந்தப் பி ணத்தைப் புசிக்கப்புகுந்தீர்கள். ஐயோ! இப் படிக்கேன் செய்ய வேண்டும். சொர்ணங்கள் நவரத்தினங்கள் ஆபரணங்கள், வஸ்திரங் கள், நெல்லு முதலாகிய நவதானியங்கள், பற்பல பண்டங்கள், நல்ல பாலைத்தரும் வெ ள்ளைப் பசுக்கள், இவைகளெல்லாம் வேண் டியமட்டும்உபசாரத்துடன் தருகிறேன். உங் கள் பசிநோய் தீரத்தக்கதாக வாங்கிக்கொள் ளுங்கள் என்று பகர்ந்து பணிந்தான்.

அதற்குப் பதின்மருந் தலையசைத்து, இப்போது நேரிட்டிருக்கின்ற பெரும் பசியி னால் நாங்கள் உடலொடுங்கி வீழ்ந்தாலும் உயிர்மறந்து சாய்ந்தாலும் நல்லதே உட லோடிருக்க வேண்டுமென்கிற ஆசை ஒருக் காலுமில்லை. பிணத்தை தின்னுவது பெரும் பசி தணிப்பது பெருமை. இதைவிட்டுக் கைசாய்ந்து, காலோய்ந்து மனமடிந்து, உடலொடுங்கி, தனக்கில்லை யென்று ஒருவரி டத்திற் குறைபுகன்று வாங்குவது கூடாது. கூடாது அல்லவென்று வாங்கினாலும் நல் லவராய் தருமத்தின் வழியிற் சம்பாதித்தவ ராய், பாப சொத்தில்லாதவராய், பாரமார்த் தியராய், குடிப்பிறப்பி லுயர்ந்தவராய், கேட் டவர்களுக்கு இல்லை யென்னாதவராய், கெடு நிலைப்பற்றவராய் ஆசார பூசா விதியுடைய வராய் ஜீவகாருண்யமுள்ளவரா யிருப்பார்க ளாகில் அவர்களிடத்திற் பெறலாகும் அம்ம ட்டேயன்றி பெரியவர்களென்று பேர் பெற் றவர்கள் நாயிலுந் தாழ்வாகிய தாசிகள் வெ ட்கம்விட்டு லெச்சை கெட்டு மேல்விழுந்து றவாடி வஞ்சனையாற் சம்பாதிக்கப்பட்ட திர வியத்தைப் போன்ற பாபச் சொத்துக்களை மறந்துந் தீண்டமாட்டார்களென்றால் அவ ற்றைப் பார்க்கிலுங் கெட்ட சொத்து கொடுங் கோல் மன்னர் பொருள். அப்படிப்பட்ட பொருளை நாங்கள் உன்னிடத்திற் பெற்றுக் கொள்ளமாட்டோம். நீ யேன் வருத்துகி றாய் என்று அப்பதின்மருஞ் சாற்றிவெறுத் தார்கள். அம்மொழியைக்கேட்ட ராஜன் மிகவுமனநொந்து தன் பட்டணம் புகுந்து சகல சாஸ்திரங்களுந் தெரிந்த குற்றமற்ற பெரியோர்கள் சொற்ற சொல்லறிந்து இழிவாகிய முறைபுரிந்து தேடுஞ்செல்வ மானது கடலைபோ லொத்ததென் றுணர் ந்து புத்திமான்களாகிய மந்திரிகளுக்கு அப்பதின்மர் சொன்ன தாட்சியைப்புகன்று அவர்களும் அரசனும் ஆலோசனைசெய்து இனி யென்னவிதமாய் நடத்தலாமென்று ஒருவரோடொருவர் பேசி ஆலோசித்து, காய்கனியாதி பண்டங்களுக்குள்ளே திரவி யத்தை மறைத்துக்கொண்டுபோய் அப் பதின்மருக்குங் கொடுத்து அவர்கட்குக் குற்றம் நேரிடும்படிக்குச் செய்யவேண்டு மென்று வினைவசத்தால் வேந்தனுக்கும் அமைச்சர்களுக்கும் புத்திபிறந்து, அப்படி ச்செய்வதே உபாயமென்னத் தங்கள் சபல புத்தியாலதனை நடத்தி, அரசனை யங்ஙனே நிறுத்தி, அமைச்சர் மாத்திரம் அப்பதின்ம ரிருக்கும் இடத்தை நாடிப்போய் அக்காய் கனி கிழங்கு முதலியவற்றைக் கொடுத்துக் காலில், விழுந்தார்கள், அவைகளை யவர்கள் வாங்கிப் பார்த்து, அவற்றுள்ளேசுவர்ணம் நிறைந்திருக்கின்ற குற்றத்தை யோர்ந்து, இவைகள் எங்கட்குத் தேவையில்லை. உங்க ள் ராசனுக்குப் புத்திபோதியுங்கள். நாங்க ளொருவரிடத்திலும் வாங்குவதில்லை. என் று மறுத்து மறுபடியுங் கொடுத்துவிட்டார் கள். அவைகளை யவ்வமைச்சர்கள் வாங்கிக் கொண்டுபோய் நடந்த விர்த்தாந்தங்களை யெல்லாம் இயம்பினார்கள்.

அதனைக்கேட்ட கொடுங்கோல மன்ன னுக்குக் கோபம் பிறந்து, அப்பெரியோரை மகாரிஷிகளென்று மனங்கொள்ளாமல், அ வர்களைக் கொல்லுங் கருத்துடையவனாய்த் துணிந்து, சற்றேனு மிரக்கமில்லாமல் அ வர்களைக்குறித்து மாரணஓமம் பண்ணினான் அந்த ஓமாக்கினியிலிருந்து ஒரு பிரமராக்ஷ சி ஆர்ப்பரித்தெழுந்து, அண்டரண்ட பகி ரண்டமும் அதிர வெளிப்பட்டாள். அவ ளை மகா புசபலத்தையுடைய இராசன் பார் த்து, இன்ன பொய்கையிடத்தில் வேதப்பி ராமண ரிஷிகள் இருக்கின்றார்கள். அவாள் ஆசாரயீனாள். பிணத்தைப் பிடுங்கித் தின்ன

பட்டவர்கள். நீ யவர்களண்டைக்குப்போய் மெனியைப்பிடித்து, கோரதந்தத்தாற் கடித்துக் கொன்று வரக்கடவாயென்று மந்திரவ லுவேற்றியனுப்பினன். அந்தப் பிர்மராட்சசக்கன்னி ரிஷிகளிருக்கப்பட்ட விசாலமான பொய்கைக்கரையிற் புகுந்து, வானம்வரையிலும் நிமிர்ந்தாள். அக்காற் சத்தியமே நித்திய விரதமாகப்பெற்ற உத்தமரிஷிகளும் அவர்கட்குரிய விசாலக்கண்களையுடைய பத்தினிமாருந் தபசு பண்ணிக்கொண்டிருந்து, பின்பு நிஷ்டைகலைந் தெழுந்திருந்து பசியாற்றிக்கொள்வதற்குப் பட்சணைகள் ஒன்றுங்காணுமற் பொய்கைக்குவந்து, அதிற்றழைத்திருக்கப்பட்ட தாமரையின் தண்டு,கிழங்கு காய், கொழுந்து, இவைமுதலியவாறைத் தின்று தண்ணீருண்டு, தங்களை வருத்தும் பசிதாபங்களைத் தனியப் பண்ணுகிறார்கள். அவ்வேளையி லந்த பிர்மராட்சசியானவள் கோரதந்தமும், செம்பட்டமயிரும்,கருத்தவுடலும், நாயுங்கண்ணும், பெருத்தவாயும், துடித்தநாக்கும்,பருத்தவடிவுங்காட்டி, கொடிய ஆயுதங்களும்பூட்டி, அவர்கட்குத்தோற்றும்படிக்கு எதிரில் எதிரியாயிருந்தாள். அவர்களவளைக்கண்டுங் காணுதவர்போலிருந்தார்கள். அப்போதவள் கனைத்து, ஓதமையுண்டுலாவுந் தவரிஷிகளே? நீங்களியார்! இந்தத் தடாகத்திற்கு என்வந்தீர்கள்? என்று மகா உரப்போடுங் கேட்டாள் அதற்கவர்கள் சினந்து, ஓ அரக்கி! நீயார்? உன் பூர்வோத்திரம் புகலென்று கேட்டார்கள். அதற்கந்த ராட்சச ஸ்திரீயானவள் இந்தத் தடாகத்து நீரை ஒருவருந்தீண்டாமலும், எவருக்கும் உதவியாக வொட்டாமலுங் காவலிருக்கப் பட்டவளென்று கழறினள். அதுகேட்ட முனிவர்கள் ஆச்சரியப்பட்டு, ஓ பிர்மராட்சசப் பேதாய்! நாங்க ளிந்தக்குலத்தி லிருக்கின்ற தாமரைக்கிழங்குண்டு தண்டு முதலியவற்றை மென்று, தழைகளைத்தின்று, தரித்திர காலங்கழிக்கவேண்டி வந்தோமென்று சொன்னர்கள். அதற் கரக்கியானவள் முன்னுதாய் உங்கள் பேரைப் புகன்று அப்பால் நீங்கள்வந்த சங்கதி சொல்லுங்களென்று அதட்டிப்பேசினள். அவள் வாக்கியத்தினல் மகாரிஷிகள் மருண்டு, இச்சண்டியென்ன புரண்டுபேசுகிருள்? தர்க்கமிடுகிருள். சமர்த்தைக் காட்டுகிருள். என்று ஞானதிருஷ்டியினல் நாடினர்கள். அப்போதிவள் பிறந்த வயணமும், வந்திருக்கிறகாரணமும், இவளையனுப்பிவைத்த இராசன் முயற்சியும் அறிந்துகொண்டு, இப்படியாக நமது பிராணனைப் பிடிக்கவந்த பேய்ச்சியாவென்று நகைத்து, இவளது வல்லமையையறிவோமென்று தங்களுக்குரிய பெயரைச்சொல்லாமல் வேறு மாறுபாடானபேரைச்சொன்னர்கள்.

அந்த வேளையில் தேவேந்திரன் கனக ரிஷியென்னும் பெயர்கொண்டு அந்த பங்கசத் தடாகத்திற்கு வந்தான். வந்தரிஷி இங்கிருந்த ரிஷிகளைக்கண்டு ஆனந்தங்கொண்டு பேசிவருகிறவேளையில், இராக்கத ஸ்திரீயானவள் படபடவென்று ஓடிவந்து, ஓ புதிதாய்வந்தரிஷியே! உம்முடையபெயரென்ன சொல்லுமென்றுள். அந்த மகாரிஷி தன் பெயரைச்சொன்னர். பின்னுங்கேட்டாள். மறுபடியும் சொன்னர். அன்னவளுக்கு அவருடைய பெயர் நன்ருய் விளங்காமையால் ரெட்டித்து ரெட்டித்து, கெட்டியாய்ச்சொல்லி எனக்குத் தெரியப்படுத்துமென்று சீறினள். அதனலவருக்குக் கோபம்பிறந்து, அடி பெட்டிமகளே! உனக்கித்தனை அகங்காரமா? அல்ப ஸ்திரீயாகிய அரக்கி நீயாவென்னை அலட்சியம்பண்ணி அதட்டிக்கேட்கிறவள் என்று கையிற் பிடித்திருந்ததண்டைச் சுழற்றியெறிந்தார். அதுபோய் அவளுடைய தலைசாய்ந்துவிழச் சாடியது. உடனேயவள் நீலகிரிபோல் நிலத்தில்வீழ்ந்தாள். அப்போதம் மகாரிஷியினுடைய கோபாக்கினி புறப்பட்டு, அவளுடலைச்சாம்பராகும்படியா யெறிந்துப்போட்டது. அவ்வனத்திலுள்ள மற்றமாதவர்களும், ரிஷிகளெண்மரும், பத்தினிகளிருவருஞ் சந்தோஷப்பட்டு, அந்த ரிஷியைப் புகழ்ந்து கூட அழைத்துக்கொண்டு, மகா யோக்கியமான தடாகத்திற் புகுந்து ஸ்நானம்பண்ணி, காலக்கடன்களை முடித்துக்கொண்டு, தாமரைக் கிழங்கு, தண்டு, இலை இவைகளைப்பிடுங்கி, சேறெல்லாமலம்பிச் சுமையாகக்கட்டி, ஒரு பக்கத்தில்வைத்து, சிறிதுநேரந் தங்கள்செபத்திலிருந்து விழித்துப்பார்த்தார்கள். அப்படி பார்க்கும்போது அந்தச்சுமையில்லாமற் போயது. அப்போதவர்கள் பசியினல் வருந்திப் பலதிக்கிலும்பார்த்து, இவ்விடத்தில் அயலார்வரவில்லையே நாம்வைத்தசுமையை யாரெடுத்தவர்கள் எப்படிபோயிற்று? இங்கி

ருந்தவர்கள்தானே யெடுத்திருக்கவேண்டும். யாராவதெடுத்தீர்களா? என்றொருவரையொருவர்வினவினர்கள் எவருமறியோமென்றார்கள். ஒருவரு மறியோமென்றால் இங்கு நூதனமாய்வந்த இவரொருவர் தவிர மற்றநாமெல்லாந் தனித்தனிப் பிரமாணஞ்சொல்லித் தேறவேண்டுமென்று நிச்சயித்து, ஓ சுனகிஷியே! நாங்கள் சொல்லுகிற பிரமாணங்களுக்கு நீர் சாட்சிபூதமாயிருந்து கேளும். என்று ஒவ்வொருவரும் சத்தியம்பண்ணத் தொடங்கினார்கள்.

அப்பா தருமராசனே! முதலாவதத்திரிரிஷி யெழுந்து நானந்தச் சுமையை எடுத்திருப்பேனாகிலும், எடுத்தபேர்களைப்பார்த்திருப்பேனாகிலும், பசுவை உதைத்து அடித்தவர், சூரியசந்திரருக்கு நேரில் மலமூத்திரம் விடுத்தவர், வேதத்தில் விதித்திருக்கின்ற தருமந்தப்பி நடந்த வேதியர், வேள்வியாகிய கருமங்களில் மந்திரக்குறைவுசொன்னவர் ஆகிய விவர்கள்போகிற பாவத்தில் நானும் போகக்கடவதென்றார். இரண்டாவது வசிஷ்டரிஷி யெழுந்து, நானந்தச் சுமைகாணுமையைப்பற்றி, அறிந்திருப்பேனாகில், வேதம்படியாத வேதியன் துறவியாகிப் பெண்போகம் விரும்பினவன், ஆளைக்கண்டுகுலைத்து மேல்விழுகின்ற நாயைக்கூட யிழுத்துக்கொண்டு திரிபவன், அடுத்தாரைக் கெடுப்பவன், ஆசாரநெறி தப்பினவன், அன்னமிடாம லுண்டவன், ஆகிய யிவர்கள் வீழுநரகத்தில் நானும் மடியக்கடவேனென்றார். மூன்றாவது காசிபரிஷியெழுந்து, அம்மூட்டையைத் தொட்டதுமில்லை, ஒருவரெடுக்கப் பார்த்துவிட்டதுமில்லை அப்படி யுண்டாகில், பெற்றபிள்ளையை விற்றுண்டவன், சரணமடைந்தவனைத் தள்ளியிகழ்ந்தவன், திரவியமிருந்துந் தீனரைரட்சிக்காதவன்,மெஞ்ஞானிகளை வெறுத்து நிந்தித்தவன், பொய்சாட்சிபுகன்றவன்,கர்மமானஇரண்டுதானம் ஒருநாளையிலேற்றவன், எடுக்கப்படாதசுமையை எருதின்பேரிலேற்றினவன், எருதுமுக்கியிழுத்துச் சம்பாதித்ததை சீவனம் செய்பவன், எருதின் மனம்நோவ அடித்தவன், பசுவைக் காப்பாற்றாமல் விட்டவன், ஆகிய விவர்கள்போகிற கதியில் நானும்போகக்கடவேனென்றார். நான்காவது பரத்துவாசரிஷியெழுந்து, அந்தத்தாமரைச் சுமையை யெடுத்ததுமில்லை, ஒருவரெடுக்கப் பார்த்ததுமில்லை, இவ்விரண்டிலொன் றுண்டானால், தங்களுடைய ஞாதிகளைவஞ்சித்தவன், அவர்களுடன் குடும்பரக்ஷணை பண்ணாதவன், பசுக்களை விற்றுப்புசிப்பவன், பொறுமையற்றவன்,ஐயமிட்டுண்ணாதவன், தருமபரிபாலனம் புரியாமற் பெரியோர்வைத்த தருமசத்திரத்தையும், சாவடியையும், ஏரிகுளங்களையு மிடித்துக் கெடுத்தவன், அவைகளை ஒருவருக்கு விலைக்குக் கொடுத்தவன், வழியடைத்தவன் ஆகிய யிவர்கள் போகிற நரகத்தில் நானும் போகக்கடவேனென்றார். ஐந்தாவது ஜமதக்கினி இருடியெழுந்து, இந்தக்கிழங்குச்சுமையைக் கிரகித்தும் ஒருவர் கிரகிக்கப் பார்த்துமிருப்பேனாகில் வீடுதூரமான ஸ்திரீயுடன் மேவினவன், புண்ணியதீர்த்தங்களில் மதுசலம்விட்டவன், பெண்டுகளுக்குத் தூது முதலிய துஷ்கிர்த்தியத்திலே சீவனஞ்செய்பவன், கொண்டவன்மனது குன்றச்செய்தவன், சூத்தி மோகத்தால் தாய்தந்தையைப்பழித்தவன், ஆகியவிவர்கள் போகின்ற நரகம் எனக்கும் உண்டாகுமென்றார். ஆறாவது கௌதமஇருடிஎழுந்து இப்போது காணமற்போன சுமையைக்குறித்து நானொன்றுமறியேன். அறிவேனாகில், பெரியோர்மனஞ் சலிக்கப்பேசினவன், அகந்தை செய்தவன், நான்செய்த தருமத்தை நடுவில் விட்டவன், அத் தருமத்தை விலைக்குவிற்க உடன்பட்டவன், நித்தியாக்கினிஹோத்திரத்தை நீக்கினவன், அதனை யவித்தவன், ஆத்மக்ஞானமற்றுத் தன்தாரத்தை யொதுக்கிப் பிறமாதைப்புணருபவன், சோரஸ்திரீகையி லன்னஞ்சாப்பிட்டவன், பெரியோர்களுக்குப் பொருளைக் கொடுத்து அருளைப்பெறாமல் நீதியில் வழக்கடிக் கெட்டவன், நல்லாரை நிந்திப்பவன், முன்னொன்று பின்னொன்று சிந்திப்பவன் ஆகிய யிவர்கள்போகிறகதியில் நானும் புகுவேனென்றார், ஏழாவது கௌசிகரிஷியெழுந்து, நானிந்தமூட்டையைத் தொட்டெடுத் திருப்பேனாகில், வினைமூட்டை சுமப்பதுமன்றி, நால்வகைச் சேனையைக் காப்பாற்றாத ராசாக்கள், தனக்குரிய வேலைக்காரரிடத்துக் கடிந்துகடிந்து பேசுகிறவர்கள், குடிகளைவருந்திக் கொடுமை செய்பவர்கள், அனியாயத்தீர்வைக்குத் தண்டமிடுபவர்கள், தீரவிசாரியாதவர்கள், பட்சபாதம் பேசுகிறவர்கள், கண்ணோட்ட மற்றவர்கள், கற்றவர் நற்றவர் மற்றவர்களையும்

காவாதவர்கள், மனுவிக்கியானந்தப்பி நடப்பவர்கள், மற்றூர் வார்த்தையை நம்பின வரசர்கள், ஆகிய விவர்கள் எந்த நரகத்திலிறங்குவார்களோ, அந்த நரகமே யடியேனுக்கு முண்டாகுக வென்றனர்.

அப்பா தருமநந்தனு! எட்டாவது பசுச்சகரிஷி யெழுந்து, நானுமந்தத் தாமரைக்கிழங்கின் சுமையை எடுத்தறியேன். சத்தியமாகச் சொல்லுகிறேன். இச்சொல் பிசகினால், வேசி வயிற்றிற் பிறந்த பிள்ளையாயும், ஒருவருக்கு அடிமைத்தொழில் செய்பவனையும் போவான். இவை இந்தச் சன்மத்தில் மாத்திரமல்ல. சென்ம சென்மந்தோறுந் திரிவேனென்றனர். இந்தப் பிரகாரம் ரிஷிகளெண்மருஞ் சொன்னபோது இவைகளை சுனகரிஷிகேட்டு, வசிஷ்டர் பத்தினியாகிய அருந்ததியை நோக்கி, அம்மா! நீரும் பிரமாணம் பண்ணவேண்டு மென்றனர். அப்படியே மகாபாக்கியமென்று சொல்லுகின்றாள். ஓ சுவாமி! நானந்தச் சுமையை யெடுத்திலேன். எடுத்தவரையுங் கண்டிலேன். எடுத்தேனுங் கண்டேனு மிருப்பேனாகில், மாமன் மாமிபேரில் அன்பில்லாமல் நிந்தை சொல்பவள், சண்டையிட்டுத் திட்டுகிறவள் தன் சாமியாகிய கணவனுடன் தாறுமாறு செய்பவள், புருடனுடைய குறையைப் பிறரிடத்திற் சொல்லிய பேதைகள், போசனவஸ்துக்களாகிய பொறிக்கறிகள், பால்வடைகள், பாயசங்கள், பண்டம் பலகாரங்கள், பழத்தினுசுகள், இவைகளை புருஷனுண்பதற்கு முன்னேபுசிப்பவள், பிள்ளையை வஞ்சித்தவள் கருவழித்தவள், காலையிலெழாதவள் அறுசுவையுடன் சமையற்செய்த புசிப்பைத் தானுண்டு முண்டக்காய்த் தண்ணீருஞ் சுண்டக்காய் வற்றலும் அதோகிடக்கிறது கதுக்குப் போவென்று பதைக்கச் சொல்பவள், ஆகிய இவர்கள் எந்தக்கதியடைவார்களோ? அந்தக்கதிக்கு அடியாளும் பாத்திரமென்றாள். அவளுடனிருந்த பசுச்சுகர் பத்தினியாகியசண்டியெழுந்து, நானந்தக் கிழங்குமூட்டையைத்தொட்டிருப்பேனாகிற் சாதம்பண்ணிக் காலமறிந்து தன் கணவனுக் கிடாதவள், வீட்டுவேலை செய்வதற்கு மனமுமில்லாமல் முகஞ்சுளித்துக்கொண்டவள். பொய்பேசுகிறவள், விலையாகக்கொண்டு வளர்த்த பெண்பிள்ளையைத் தங்கள் பேருக்குக் கன்னிகாதானமாய் வழங்காமல், தன் புருஷன் முதலிய பேர்களுக்குக் கூடடிவைத்துத் தான்கொண்ட கருத்தை முடித்துக் கொள்ளுகிறவள், பிச்சையன்ன மிடாதவள், சுன்னங் கொடாதவள், ஆகிய விவர்களெக்கதி பெறுவார்களோ? அக்கதி பெறுவேனென்றாள். இப்படி ரிஷிகள் எண்மரும் இருடிபத்தினிகளிருவருஞ் சத்தியஞ்சொல்லி யானவுடனே சாக்ஷிபூதமாயிருந்த சுனரிஷியை அப்பதின்மரும் பார்த்து, சுவாமி! எங்கள் வாக்கில் வந்த வண்ணந் திரிகரணங்களு மொருமைப்படச் சத்தியம் பண்ணினோம். நாங்கள் சொல்லிய உண்மைகளியாவும் உம்முடைய கியாபகத்திலி லிருக்கிறதல்லவோ? நீரும் எங்களைப்போற் சங்கையறத் தீர்த்துக்கொடுமென்று கேட்டார்கள். அந்த ரிஷீயானவர் நகைத்துச் சொல்லுகின்றார். நல்லது நானந்தக் கிழங்கு மூட்டையை எடுத்திருப்பேனாகில் தேவப்பிராமருக்கானாலும், எக்கியம்பண்ணப்பட்ட ரிஷீகளுக்கானாலும் ஒருவன் ஆசையுடன் பெண்ணை சர்வாலங்காரகன்னிகாதானமாய்க் கொடுக்கும் பலனெதுவோ? அப்பலனை நானடைவேன் என்று சத்தியம்பண்ணினார். அவ்வாக்கியங்கேட்ட ரிஷீஸ்வராளியாவரும் பெருமைபெற்ற மகாரிஷியைப் பார்த்துத் திகைத்து. ஓ எல்லாப் பாபங்களையும் எளிதிற் போக்கப்பட்ட புண்ணிய மூர்த்தியே! நாங்கள் உண்பதற்குக் கொண்டிருந்த வண்டிருந்த தாமரைமலர்த் தண்டை எங்களுக்குக் கொடுமையாவென்று வேண்டினார்கள். அந்த வேளையிலே சுனகரிஷி ரூபமாயிருந்த தேவேந்திரன் தன்னுடைய சுயரூபங்கொண்டு இருடிகளுக்குபசாரங்கூறி, நீங்கள் நான் செய்த அபசாரத்தைப் பொருத்தருள வேண்டுமென்று தோத்திரம் புரிந்து, ஓ ரிஷீஸ்வரர்களே! முன்னம் விடாதருவராசனால் ஏவி, மாயைரூபமாய் வந்த ராக்ஷசஸ்திரீயைக் கொல்லவும், உங்கள் வாக்கினால் தருமசபதங்களைக் கேட்கவும், நானேயத் தாமரைக்கிழங்குச் சுமையை மாயையால் மறைத்தேன், அது நீங்கள் வைத்தயிடத்திலிருக்கின்றது. நீங்கள் பசியாறுங்கள். இனிமழை வருஷித்து உலகஞ் செழிக்குமென்று சொல்லித் தேவேந்திரன் போய்விட்டான். அப்பால் அவனுத்தரவின்படி மழை பொழிந்து பூமிகளிற் சகலமான பயிருமேறி, சகல சம்பத்துகளும் போதுமானவரையிற் பொருந்தின. மகா இருடிகள் பதின்மரும், ரிஷீபத்தி

னிகளும், பசிதீர்ந்து, தேசஞ் செழித்துத் தவம்புரிந்தார்கள். அந்த விடாதருவராசன் பாபமான பழியைத் தேடிக்கொண்டே னென்றுவந்து இந்த இருடிகளைப்பணிந்து, ஆசீர்வசனம் பெற்றுப்போனுன். அப்பா புண்ணியனே! இப்போது நான் சொல்லியபடி மிகுந்த பாக்கியவந்தனு யிருந்து பாபமில்லாப்பொருளை யனுபவித்தல் அவனும்அவனிடத்தில் தானம் வாங்கினவனும், வம்சபரம்பரையாய்ச் செல்வங் குறையாமற் செருக்கியிருப்பார். முடிவிற் பரகதியும் பெறுவார்கள். என்று சந்தனுவின் மைந்தன் சாற்ற, சந்திரகுல சிகாமணியாகிய தருமராஜன் கேட்டு, சுவாமி! செருப்புங் குடையுந் தகப்பன் பேர் சொல்லித் தானமீந்தால் என்ன பலனைப் பெறலாகும்? அதை யெனக்குச் சொல்ல வேண்டுமென்ன, வீஷ்மர் சொல்லத் தொடங்கினுர்.

---

### பாதகாப்பு, கவிகை இவற்றின் தானத்தைப்பற்றிக் கூறிய ஜமதக்கினி முனிவர் கதை.

கேளாய் தருமநந்தனு! முற்காலத்தில் ஜோதியாகிய சூரியனுக்கும் பெருமை பொருந்திய ஜமதக்கினிக்கும் வாதுவந்தது. அதென்னவென்முல் ஜமதக்கினி சந்தோஷமாய்க் கையில் விற்பிடித்துக்கொண்டு உல்லாசமுற்று வருகையில், மேகத்திற் பிரகாசிக்கு மின்னல்போன்ற அழகையுடைய அவர் பத்தினியாகிய ரேணுகை அம்புருத்தூணி தாங்கிக்கொண்டு பின்னேவர நெடுந்தூரஞ் சென்று, ஓர் வெள்ளிடையிற் போய் நின்று மனைவிபாலிருக்கின்ற அம்புருத்தூணியை வாங்கி, வில்லிலே அம்பைச் சந்தித்துப் பிரயோகம் பண்ணினுர். அப்போது மாயா விநோத மநோவிகாரங் கொள்ளாத மகாரிஷீ எய்த பாணத்தை, மேகலாபரணமுஞ் சிலம்புஞ் சப்திக்கும்படியாய் ரேணுகாதேவி ஓட்டமாயோடி எடுத்து வந்து புருஷனிடத்தில் வைத்தாள். இப்படியாக அவர்கள் போடுகிற அத்தனை பாணங்களையும் அப்போதைக் கப்போது யெடுத்தோடி வரும் போது ஒருவிசை ரேணுகை சீக்கிரத்தில் வாராமற் சற்றே பொறுத்துவந்தாள். அந்த சமதக்கினி பகவா னவளைப்பார்த்து, ஓ பெண்ணரசியே! என்னருகில்வா. நீ அஸ்திரமெடுத்துச் சல்தியில் வாராமல் இத்தனை நாழிகை சென்றதென்ன? அங்கே நடந்ததை உள்ளபடி சொல்லென்று கேட்டார். அதற்கு ரேணுகை இரண்டுகையுங் கூப்பிச் சிரசில் வைத்துக்கொண்டு நடுங்கி, சுவாமி! சூரிய வெப்பத்தினுற் பிறந்த நிலத்தின் சூடு நெருப்புப்போற் பற்றுவதினுற் கால்வைக்க மாட்டாமல், மரத்தினிழல்தோறு நின்றுகாலாற்றிக்கொண்டு, உலகமெல்லாந் துதிக்கா நின்ற தயாரச மூர்த்தியாகிய உம்மண்டைக்கு வந்தேனென்முள். இப்படியாகத் தனது பத்தினி வருந்திச் சொல்லக்கேட்ட ஜமதனிக்குக் கோபம்பிறந்து, கண்கள் சிவந்து ஓ பெண்ணே! உன்னுடம்பெல்லாம் வியர்க்கவுங் கால்கள் கொதிப்பேறவுஞ் செய்த சூரியனை நானென்ன செய்கிறேன் பார். என்று உதடு துடிக்கப் பெருமூச்சுவிட்டு புருவநெரித்து ஆதித்தனைக்கடிந்து பார்த்தார். அவருடையகோபத்தை தினபதியறிந்து, பிராமணரூபமாக மகாரிஷிக் கெதிரில் வந்து, ஓ பிரமனுக்கொப்பாகிய பிரபலமுனியே! ஆயிரஞ் சோதியாகிய சூரியன்பேரில் அதிககோபங் கொண்டு தண்டிக்கும்படி நினைத்த தன்மை யாதோ! பற்பல கோடி ஆத்மாக்களும், பூமண்டலமும், காடும், செடியும், மேடும், மலையும் ஆகிய இவையெல்லாஞ் சூரியோதயஸ்த மில்லாவிட்டாற் சுண்டிப்போமே. நெருப்புக்குச் சோதியேது? நீருக்குக் குணமேது? பயிர்களுக்குயிரேது? இவைகளெல்லாம் நீர் தீரத்தெரிந்த பாக்கியர். தவசிலாக்கியர், சாதுவான யோக்கியர். நீரே இப்படி கோபிக்கலாமா? பெண்சாதிதேகம் வருத்தப்பட்டுப் பொரிந்ததென்று பரிந்துவரப்போமா? எரிந்துவிழலாமா? இவ்விதமாகத் தீயகோபங் கொள்வீராகில் தயாபரத்துவம் எடுபட்டுப் போமே. ஓ அருளே உருவாயிருக்கப்பட்ட ஐயனே! கொஞ்ச காரியத்திற்காகச் சூரியன் பேரிற் கோபிப்பது முறைமையாமோ? சூரியகிரண மில்லாமற்போனுல் மழை பெய்கிறதேது? அந்த மழை யில்லாமற்போனுற் பூமியின்கண் பயிர் முதலியவற்றின் விளைவேது! விளைவாகிய பல பண்டங்களில்லாவிட்டால் ஓமாக்கினியேது! அக்கினி கோத்திரமில்லாவிட்டால் அவிர்ப்பாகமேது! அவிற்பாக மில்லாவிட்டால்மூவர் முதலிய தேவர்களேது! தேவர்களில்லாவிட்டால் வேதமேது! ரிஷிகளேது! விதியேது! விலக்

கேது! ஆகையால் சகலகோடி உயிர்களுக் குஞ்சூரியனே நிலே. தங்களேப்போன்றயோக பராளுக்குச் சூரியனே கலே. அவனுலேயே யெல்லோர்களுக்கு முதவி. அப்படிப்பட்ட ஆதவன்பேரில் இப்படிப்பட்ட கோபம் எண்ணக்கூடுமா? உம்முடைய ஞாயநன்றன் றென உரைத்து; தன்னுடைய நிசரூபத் தைக்காட்டி மகமேருவைப்போல் வளர்ந்து பிரகாசித்தான். அவனேக்கண்ட மாத்திரத் தில் ஜமதக்னிக்குக் கோபமாறி கிருபாச முத்திரராகி, சூரிய பகவானேத் தழுவிக்கொ ண்டு ஆசீர்வதித்து வாழ்த்தினர். பின்பு சூரியபகவான் மகானுபாவராகிய சமதக்கினி யின் வாழ்த்துதலேயேற்று, அம்முனிவருக்கு மிகுந்தபத்தியுடன் குடையுஞ் செருப்புந் தானங்கொடுத்து, என்காய்ச் சலேக்காத்தபுத் திமான்களுக்கும் பத்தியாளருக்கும் நித்திய வைபவ நெறியுண்டாகு மென்று வேதன் விதித்திருக்கின்றார். ஆதலால், குடையுஞ் செருப்பு முனிவர் முதலியோருக்குக் கொடுத் தவர்கள் நற்கதியாகிய நன்மை அடைவர்க ளென்று வரமீந்து சூரியன்போனன். இரே ணுகையினேடுஞ் சமதக்கினி சென்று தன்து ஆசிரமத்தி லமர்ந்திருந்தார். ஆனதால், இயர்ரொருத்தர் செருப்புங்குடையுந் தங் களேத்தந்த தாய்தந்தையை நினேத்துப்பெரி யவர்களுக்குத்தானங் கொடுக்கின்றார்களோ? அவர்களடையும்பலனேச் சூரியமண்டலமே யறியுமென்று வீஷ்மர்சொன்னர். அதைக் கேட்ட பொய்யற்ற மெய்யன் சுவாமி! சவு சம்பண்ணுகிற விதிசாற்ற வேண்டுமென்று வேண்ட, சூரியனேப்போற் றெளிவினேயு டைய வீஷ்மர் சொல்லத் தொடங்கினர்.

## சவுசவிதி யுரைத்தல்.

ஓ தராதிபனே! முன்குலத்தரான அந் தணர் இரவிற்பகலிற் இருமலங் கழிக்கும் போது தெற்கே முகமும் வடக்கே அபிமுக மாக உட்காரவேண்டும். அப்போதுவேட் டியினுல் தலேயைமூடி, பூமியைப் பார்த்து, சூரியனே, சந்திரனே, பசுக்களே, பிராமணர் களே பெரியோர்களே ரிஷிகளே, ஆராதனே யாகிற தெய்வங்களேப் பாராமல், ஒரு வருட னும்பேசாமல், எவர்கள் கண்ணிலும் படா மல்மூன்றுதரங் கையைத்தட்டி உட்கார்ந்து மலங்கழித்து இடதுகரத்தில் மிர்த்திகையும் வலதுகரத்திற் சலமுங்கொண்டு குத்தைச் சுத்திசெய்து இடதுகையை மிர்த்திகையினு ல்தேய்த்து அசுத்தத்தைமாற்றி, பின்பு இரு கரத்தையுட் சேர்த்து இழையத்தேய்த்து இரண்டுமுழங்கால்மட்டும் மணலினுற்கழுவி அநேகந்தரம் வாய்கொப்பளித்து ஆசம னங்கொண்டு பின்பு முப்புரிநூல் சவ்வியமா யணிந்துகொள்ளல் வேண்டும். இவருள் இல்லறந் துறவறமென்னும் இருநெறியு டைய பேருந் தருமசாஸ்திரஞ் சொல்லிய பிரகாரந்தூய்மை ஆசாரங்களுணர்ந்து நட ப்பது இயற்கையாம். இவருக்குப்பின்குலமா னயிருவர் தங்களினத்திற்குத் தக்கபடியிரு ந்து தமக்கு முன்னுன குலத்தார் சொல்லிய படி காரியங்களேச்செய்து எல்லாரினு முயர் ந்த இருடிகளே வணங்கி வழிபடுகிறதே மே லான்காரியம். நாலாவதான கடைவருணத் தர். தம்முடைய மனத்தூய்மைக் குறித்தான ஆசாரத்திலேயிருந்து, உயர்ந்த பிராமணர் முதலிய குலத்திற்கு வணங்கி வழிபட்டு நட ந்தார்களேயாகில், இயர்வற்றிற்கும் முக்கிய மான கதி பெறுவாரென் றறிந்து கொள்க. என்று சொல்லவுந் தருமநந்தனர் சந்தோ ஷித்து, ஐயா! உறங்கிப்போங் காலத்தை எவ்வாறுணர்ந்து கொள்ளத் தக்கதென்று கேட்க, அதற்கு வீஷ்மர் சொல்லுகின்றார்.

## சாக்குறியறியுந் தன்மையுரைத்தல்.

அப்பா தருமனே! ஒருவருக்கு மரண காலங்கிட்டி வரும்போது அறிந்துகொள் ளுந் தன்மை யெப்படிக்கென்றல் தெற்கே போகின்ற பேர்கள் கண்டால் திசைமாறு பாடாய்த் தோற்றுமாகில், பார்த்தவர்கள் மூன்றுவருடத்தில் முடிவார்கள். சூரியனே மண்டலமில்லாமலும், கண்ணேமூடிப் பார்க் கிற் கதிர்கள்தோன்றுமலும் போனல், இர ண்டுவருடத்தி லிறப்பார்கள். தம்முடைய உடற்சாயல் தொண்டியாய்க் கண்டாலும் தோன்றுமல் விண்டாலும், ஒருவருடத்தி லொழிவார்கள். மேலும், தேகத்தினிழலா னது பற்பல பேதமாய்க்காணுமாகில், ஆறு மாதத்தில் அழிவார்கள். தங்கள்கையினுல் இரண்டுகாதையு மூடிப்பார்க்கு மிடத்தில் ஓசையில்லாம லிருந்தால், ஒரு மாதத்தில் உறங்குவார்கள். வாயிற் சலத்தை வார்த்துக் கொண்டு கொப்பளித்து வெயில் நிழலில் உமிழும்போது, அது இந்திர தனுசைப்

போல் வீழாமற் போமாகில் ஆறுமாதத்தில மிவார்கள். அருந்ததி தரிசனமாகாமற்போனால், ஆறுமாதத்தி லொடுங்கிப்போய் விடுவார்கள். நாவிநுனியை நீட்டி மூக்கு நுனியைப்பார்த்து அப்பியாசம்பண்ணி நோக்கம் வைப்பவர்களுக்கு, ஒருநாள் நாக்குநுனி மறைந்து மூக்குநுனி வளர்ந்து எடுப்பாயிருந்தால், ஐந்துமாதத்தில் இறப்பார்கள் உதடும், நாவும், பல்லும், கறுத்துக் காணில் ஆறுமாதமிருப்பது அருமையாகும். வயிறு இருதயஸ்தானம், கை, கால், இவைகள் ஸ்நானம் பண்ணும்போது நனையாமலிருக்குமாகில், ஆறுமாதஞ்சென்று கொன்றுபோடும். தாங்கள் அடிவைத்த இடத்தில் அடிச்சுவடானது சிதைந்து காணுமாகில் எலும்புடன்குன்றிச் சிறிதுநாளையில் யிறந்துபோவார்கள். கண்ணாடியில் தங்கள் தலைதெரியாமல் உடலினிழல் தோன்றுமாகில், மாதமொன்றில் மரணமடைவார்கள். சூரியனைப் பார்க்குமிடத்தில் ரெண்டாய்ப் பிரிந்துதோன்றினால சிலநாட் கணக்கிற் சிந்திப்போவார்கள். நட்சத்திரம பகலில்றெறிந்து இரவிற்றெரியாவிட்டால், கொஞ்சநாழிகையில் மிஞ்சுவார்கள். பூரணசந்திரனைப் பார்த்தாற் பிரகாசத்தாற் கொடாமற் புகைபோல்மழுங்கிக் காணுமாகில், சிலநாளிருக்கைதன். காதிலுநாசியிலு நடுக்கங்கொண்டு ரெண்டுவிழியுங் கறுத்ததானால், அப்போதே பயணமாவார்கள். தன்னுடைய நிழல் தனக்குத் தென்பாரிசத்தில் தோற்றுமாகில் அன்றைக்கே காலன்கடாமணி கலகலவென்னும்.

மேலும், பின்கலையான சந்திரனிலே ஒருபகல் சுவாசமொதுங்கி யோடினால், வருஷமொன்றில்மாய்வார்கள். இரண்டுபகலோடினால், இரண்டு வருஷத்தில் சண்டன் கிட்டுவான். மூன்றுபகலோடினால், ஒரு வருடத்தில் முடிவார்கள். உபயபாரிசத்திலும் ஒரே நெட்டாய் பத்துநாளோடுமாகில், ஏழுமாசத்தில் எழுந்தருளுவார்கள். சுவாசம் மூக்கின்வழியே ஓடாமல் வாய்வழிவந்தால் நாள் மூன்றில் நலிவார்கள். தம்முயரத்திற்குச்சரியாய்த் தம்மைபோல் மற்றோருருவந் தோன்றினால், மூன்று வருடத்தில் முடிவார்கள். மலம், மூத்திரம், வீரியம், இம்மூன்றுஞ் சுவாசங்கெட்டு மாறப்போனாலும், குறைந்தாலும், நிலையாய் உயிர் நிற்காது. ஆகாயத்தைப் பார்க்கும்போது கறுப்பாகி யானையைப்போல் தோணப்படுமாகில், அப்பிராணன் அவசரத்திலகலும். தம்முடல் செவ்வையாயிருக்க நிழற்சாயை அலைந்துகாட்டுமானால் சமீபத்திற் நமனேலேகிட்டியது. ஆறுவகை ருசிகளும், மெய், வாய், மூக்கு, கண், செவி இவ்வைந்து முறையே கெடுமாகில், நான்கு அல்லது ஆறுமாதத்தில் நசித்துப்போவார்கள். துருவனிலை தெரியாவிட்டாற் பெரிய நாளில்லை. உதடும், நாக்கும், மேலண்ணமும் பசையற்றுவறண்டுபோனால்,ஆறு அல்லது மூன்றுமாதத்தில் அந்தகனு ரிடத்திற்கு அடைவே போவார்கள். பின்பக்கத்திலும், பிடரியிலும், தலைமேலும், பச்சையோணன் விழுந்ததானால் தட்சணமே பறைமேளமுழங்கலாம், நெய், எண்ணை, பால், நீர், இதுகளிற் பார்க்கும்போது தலையுமுகமுந் தெரியாமற்போனால் பதினைந்து நாளையிற் பாசகரனைப் பார்க்கலாம். அவை யிரண்டாய்ப் பிரிந்துகாணுமானால், யமவீரர்கள் விருந்தினராகி வருவார்கள். நாலுதிக்கும் இந்திரவில் தோணவும்,பகலிலும் இரவிலும் பாசாசுகளாடக் காணவும் பர்வதத்தின்பேரிலும் மரத்தின்மீதிலுங் காந்திருவ லோகம் வந்திருக்கவுங் கண்டால், அவனுவியை அந்தகன் குடியாமல்விடான்.

எப்போதும் பருத்திருக்கிறதேகம்இளைத்து மெலிந்தாலும், மெலிந்ததேகம் அதிகம் பருத்தாலும், மாதமொன்றில் வைச்சுதமாநகர் புகுவார்கள். பேய், பூதம், நரி, நாய், கழுதை, அவுணர், ராட்சதர், அண்டங்காக்கை, பருந்து, குரங்கு,புலி, செந்நாய், இதுகளைத் தின்னுகிருப்போற் சொப்பனங்கண்டால், அந்த உயிரை ஏழுநாளையில் எமன் தின்னக் காத்திருக்கிறான். செவப்புச் சந்தனம், செவப்பு வஸ்திரம், செவப்புப் புட்பம், கோடிவஸ்திரம் இவைகளையுபயோகிக்கவும், எண்ணெயிட்டு முழுகவுஞ் சொப்பனங்கண்டால், மாதநான்கில் மரணமாய்விடுவார்கள் எண்ணெய்தேய்த்துக்கொண்டு தலைமயிரைக் கையாற்பற்றி ஒருவன்பிடித் திழுக்கிருப்போலும், தம்பிடரியிற் குத்தினாற்போலும், தம்மேற் குதித் தேறினாற்போலும், உலர்ந்த புற்சுமைசுமக்கிருப்போலும், தெற்குத்திசைக்குப் பயணம் போகிருப்போலும், தங்களுக்கு உரியவர்கள்,தங்கள் வம்சப்பெரியோர்கள், தென்புறத்தினின்று சேதி சொல்லிக் கைகாட்டி அழைப்பதுபோலுங்

கணுக்கண்டால்? ஒரு பட்சத்தில் அல்லது
இருபட்சத்தில் இறந்துபோவார்கள் பொல்
லாத பெருங்குரலுடைய பெண்பிள்ளையான
வள் கட்டிக்கொண்டழ, தம்மேலேவிழ, கரு
த்த உருவத்துடன் தொழ, கட்டைசுட்டது
போலான சொரூபமுங்கையிற் கதையுங் கறு
ப்புத் துணியும் போர்த்து ஒருவன் ஆர்த்து
வர, அவனைப்பார்த்து உடலெல்லாம்வேர்க்
கக்கனுக்கண்டாராகில், அவர்கள்ஒன்றிரண்டு
திங்களில் உலவார்கள், குரங்கென்று அடி
த்துப் பிடித்துக் கிழக்கு முகமாய்க் கொண்டு
போகிறுப்போற் கனுக்கண்டால், பதினைந்து
நாளையிற்பகலுலகடைவான். கேட்பவர்கட்கு
இல்லையென்னுமற் கொடுத்து வருகின்றவர்
கள் கொடாமல்மறுத்து, என்னகொடுத்தும்
பிரயோசனமில்லை போவென்று வெறுத்து
லோபப்புத்தி மேலிடுமாகில், ஒரு வாரத்திற்
செலவு பெறுவார்கள். ஒருநாளுங் கொடாத
உலுத்தர்கள் கடைசிக்காலத்தில் தானதரும
பரவுபகாரம் பண்ணி, எல்லாரும்ஆச்சரியப்
படும்படியாய் ஈகையிற் படிவாக ளாகில்,
இருமூன்று திங்களில் உயிர்மாண்டுபோவார்
கள். சாதாரணமானவர்கள் கொஞ்சந் தலை
குலுக்கிக் கர்வமடைந்து மனிதரை மதியாம
லிருந்தால், நெய்வறண்ட விளக்குபோற்குப்
பென்றெரிந்து தொப்பென்றவிந்து போ
வார்கள். இவ்வாறு இன்னும்அநேகங் குறி
களுள. இவைகள் எல்லாரும் எல்லாருக்கும்
பொதுவென்று எண்ணப்படாது. இக்குறி
களை வாதம் பித்தம் ஐயம் இவைகள் மிகுதி
யாய்க் கைகூடிய தேகத்திற்கும் உவர்ப்பு
நிலம் கசப்பு நிலம் புளிப்பு நிலம் கார்ப்பு
நிலம் தித்திப்பு நிலம் துவர்ப்பு நிலம்
என்னும் பல நில மனிதருக்கும் இப்போது
நானுரைத்தவற்றில் தக்கபடி குறிபிடிக்கும்.
ஆனால் எதுவுந் தப்பாது சாஸ்திரங்களிற்
சொன்னது நமக்குத் தோற்றவில்லையென்று
அலட்சயம் பண்ணப் படாது. ஒன்றில்லா
விட்டால் ஒன்று பலிக்கும். இவற்றிலொன்
றைக் குறிப்பாகக் கண்டுக் கொண்டவுடனே
பெண்டுபிள்ளை பண்டுபதார்த்தங்களைப் பாரா
ட்டாமல் தைரியங்கொண்டு சகல பேருக்குத்
தெரிவித்து நானிந்த வேளையில், இந்தக் கா
லத்திற்போய் வருகிறேனென்று புகன்றால்,
அது இந்தக் கர்ம பூமியோருக்கு மகத்துவ
மும் காட்சியும் பிரபலமும் பெருமையும்
தெய்வ நிர்வாணமும் பெரியோர் என்கிற
பிரமாணமு மூண்டுபண்ணும். தானும நிஷ்
டைகூடியதுபோலிருந்து, நிரந்தரப்பொ
ருளாகிய பரத்தினிடத்திற் கருத்தைப் பதி
த்து, கர்ப்பூரஜோதி காட்டுங்கள் கட்டியாய்
வைத்து மூட்டுங்களென்று மரணத்தின்வே
தையகற்றி, மீட்டும் பிறவியின் வாதை பெற
லாயினும் மகத்துவமான நற்கதியடையலா
மென்று வீஷ்மருரைத் தருளினர்.

---

## மானவரிற் சிறந்தா ரிவரெனல்.

இவ்வாறு சொல்லிய வீஷ்மரைத்தரும
ராஜன் பணிந்தெழுந்து, ஐயா! தேவர்களுந்
தொழப்பட்ட மனிதர் சிலருண்டென்று
கேள்விப்பட் டிருக்கின்றேன். அப்பேர்ப்
பட்ட மானிடருண்டாகில் அவர்கள்தன்மை
அருள்புரியுமென்றார். இப்படிக் கேட்ட பா
ண்டுமைந்தனைப் பனைக்கொடி வேந்தன் பார்
த்து, அப்பாதருமபுத்திரா! நீ கேட்டசங்கை
அதிசயமல்ல. உலகத்தில் எல்லோரு மறி
வார்கள். நீயறியேனென்று கேட்டது என்
மனத்தை நெகிழ்த்தது. ஆகிலுஞ் சொல்
லுகிறேன்கேள். இந்திரசாரதியாகிய மாதலி
இந்தச் சங்கையைக் குறித்துத் தேவேந்
திரனைக் கேட்டான். அதற்குத் தேவேந்தி
ரன் சொல்லுகிறான். ஓ மாதலி! தருமார்த்த
ராமந் தவறுத லில்லாமற் குற்றங் களைந்து
நெறிமுறை வழுவாரிலை பெற்றவர்களு மழ
கினையுடைய ஸ்திரீகளை ஒரு பொருட்டாயெ
ண்ணும விருக்கப்பட்டவர்களும், வித்தையி
னுலும், சம்பத்தினுலும், அழகினுலும்புகழ்
பெற விருக்கின்றனவென்று கர்வங்கொண்டு
செருக்கடையாமலிருப்பவர்களும், ஜிதேந்தி
ரியராயிருக்கின்ற பேர்களும் தன் தாரமேதா
ரம்பரதார சோதரரா யிருக்கின்றபேரும் தரு
மந் தப்பாமல் நடக்கின்றவர்களும், நடுவு
நிலைமையானவர்களும், சத்தியமே பூஷண
மாயிருக்கிறபேரும், சவுசவிதி தப்பாதவர்க
ளும் தருமஞ் செய்கிற விஷயத்தில் வலது
கையாற் செய்கிறது இடதுகைக்குத் தெரியா
மற் கொடுக்கிறபேரும் மாதா, பிதா, குரு,
தெய்வம் என்கிற நால்வரையும் பாராட்டிக்
கிரகஸ் தாச்சிரமத்தைக் காப்பாற்றினோரும்
பஞ்சேந்திரியச் சேஷ்டைகள் அறந்து யதி
யாச்சிரம தருமந்தப்பாம லனுஷ்டிக்கிறவா
ளும் இவர்களெல்லாம் நான்வணங்கும் பெ

ருண்மைபெற்றவர்கள் என்று மாதலிக்குத் தேவேந்திரன் வகுத்தான். இதை நீ தெரிந்து கொள்ளுக என்று வீஷ்மர் சொல்ல, உதிஷ்டிரர் தனது பர்வதம்போன்ற தோள்கள் பூரித்து இருகரங் குவித்துத் துதித்து வணங்கி அவரடிமேற் பணிந்து சுவாமி! இவ்வுலகத்தில் தடாகமெடுப்பது தருமமென்று பேசுகிறார்கள். அதனால் வரும் பலனைச் சொல்லுமென்று கேட்க கலைமதிக் குலத்திலுதித்த கங்காபுத்திரர் கழறலுற்றார்.

## தடாகப்பிரதிஷ்டையின் பலன் கூறுதல்.

அப்பா தருமநந்தனா! தருமங்களென்பது கோடாகோடியுண்டு. அத்தருமங்களுக்கெல்லாம் மேன்பாடாகிய தருமம் தடாகப்பிரதிஷ்டை அந்தத் தடாகம் வெட்டி வைத்து, ஏரிகுளங்களெடுத்து, சுற்றிலுந்தோப்புகள், பூஞ்சோலைகள், தென்னஞ் சாலைகள் உண்டுபண்ணி, அதிலுள்ள தீர்த்தங்கள் சகலாத்ம கோடிகளும் சாப்பிடும்படிக்கு நேரிட்டால் உத்தமமான தருமத்தில் அன்னதான தருமம் பெரிதென்றும், அதிலுந் தண்ணீர் வார்க்கிறது பெரிதென்றும், அதிலும் தடாகம்பெரிதென்று மறைகள் முறையிடுகின்றன ஆகையால், ஒருவர்ஏற்படுத்திய குளத்திலே கபிலை முதலாயுள்ள பசுக்கள் வந்து தண்ணீர் குடித்துத் தாகவிடாய் தீர்ந்துவால்வீசி மகிழ்ந்துவருமாகில், அவர்களுடையமரபெல்லாங் கடைத்தேறும். சாதுர் வருணத்தில் தாழ்ந்தவருணத்தோர் எக்கியங்கள்பண்ணக் கூடாதாகையால், ஒரு தடாகம் உண்டாக்கினால் எக்கியயாகங்கள் பண்ணிய பலன்களைப் பார்க்கிலும்எண்மடங்கதிகபலனுண்டாகும். அவர்களுடைய மூதாதைகள் நரகத்திலழுந்திக் கிடந்தாலுந் தக்ஷணமே தேவர்கள்கொண்டாடா நின்ற சுவர்க்கபதவி பெறுவார்கள் என்று மும்மலங்கடந்த நின்மலன் புகல, சொன்மலமற்ற சுந்தரன் கேட்டு, ஓ பன்மகம்புரிந்த பாக்கியனே! என்மனக் கலங்கமெல்லா மொழிந்தனன். உலகத்தில் தங்கள் தங்கள் இஷ்டகாமியார்த் தங்கள் உலகத்தில் பலிக்கும்படியாய்ச் சந்தோஷமாய், ஆனந்தமாய், ஏகமனதாய், உறுதியாய், உண்மையாய், உபாசனாமூர்த்தியைப் பூசை பண்ணுகிறபோது, அக்கடவுளுக்குத் திருமஞ்சன மாட்டி, சந்தனஞ்சாத்தி, புட்பம் அர்ச்சித்து, நைவேத்தியங் கொடுத்து, தூபதீபமெடுத்து, கவரி, சுருட்டி, குடை, கொடி இவை முதலிய உபசாரங்கள் செய்யவேண்டிய விதியென்ன? அந்த வரலாறு அடியேனுக்குத் தெரியச்செய்ய வேண்டுமென்று தருமர் கேட்க, அப்படியே நல்லதென்று வீஷ்மர் ஆசையுடன் பேசத் தொடங்கினர்.

## பூஜாவிதிமுறை யுரைத்தல்.

அப்பா தருமநந்தனா இப்போது என்னை நீகேட்டபடியே மாபெலிச் சக்கிரவர்த்தி சுக்கிராச்சாரியரை வினவ, அவரவருக்குச் சொன்னார். அந்த மாபெலியானவர்மனுவுக்குரைத்தனர், அந்த மனுவென்பவர்சுவர்ன மகாரிஷிக்குச் சொற்றனர். அச்சுவர்ன மகாரிஷி நாரதருக்குநவின்றார். அந்தநாரதமகாமுனிவர் எனக்கருளிச் செய்தார். அவரால் நானுணர்ந்தபடிக்கு உனக்குச் சொல்லுகின்றேன் கேள். இக்கடல்சூழ்ந்த உலகத்துள்ள மன்னுயிர்களுக்கு வகுத்திருக்கின்ற வருணாச்சிரமங்கட்குறைத்திருக்கும் பூசாவிதிகள் பலவாறுயிருக்கினும், அவைகளில் முக்கியமாக உணர்த்தவேண்டுவதியாதெனில் அருணோதயமாகுமுன் னெழுந்திருந்து ஓர் தடாகத்திலே ஸ்நானஞ்செய்து, வெண்ணீறுதிசின்னங்களைத் தரித்து, தங்கடங்கட் குரிய உபாசனாமூர்த்தியை யெழுந்தருளப்பண்ணி, சுத்தோதகம், பஞ்சகௌவியம், பஞ்சாமிர்தம், பால்தயிர் நெய்கருப்பஞ்சாறு முப்பழம் இளநீர் சந்தனம் தபனநீர் இவை முதலியவைகளைக்கொண்டு திருமஞ்சனமாட்டல்வேண்டும். அப்பாற் சந்தனஞ் சாற்றுமுறையில் பொறிகை வெற்பின் சந்தனத்தை யரைத்துச்சாற்றினால் தீராத மகா பாதகங்களெல்லாந்தீரும். அவர்களுடைய தேகம் பரிசுத்தமாய்த்தேயசுடைத்தாய் பரிமளமாயிருக்கும். சந்தனத் தூபங்களினாற் பிர்மஹத்தி முதலிய தோஷங்கணீங்கும். தருமத்திற்கு நீதிக்கும் இருப்பிடமாவார்கள். அகிற் சந்தனம் அரிசந்தனம் பூசிவைத்தால், போகசுகமும், வச்சிர தேகமும், புகழுடம்பும் பெறுவார்கள். சாம்பிராணிப் புகையிட்டாற் கலைகற்றவர்களாற் சொல்லி முடியாத அதிபதித்துவமுங் கதியு மடைவார்கள். குற்றமற்ற ஜீவன் முக்தாள் தரிசனமாவார்கள். கற்பூர தீபமேற்றி

வைத்தவர்கள் ஜோதிப்பிரகாச சுரருலகடைந்து, கயிலைப்பதியிற் கலந்து வீற்றிருப்பார்கள். அதுகண்டசாப்பிராச்சிய பட்டாபிஷேகம்பெறுவார்கள் மேலும் தீபங்களினால் அவர்களைச்சேர்ந்த வம்சத்தார் முதலியபேரும் பொன்பாக்ய பூஷணாதிகளுடன் புவியாண்டு, பெரியோர்களுக்கும் அரிதாகிய புண்ணிய பூமிக்கண் அமைவார்கள். தீபங்களில் உத்தம்மான திருவிளக்கு என்னவென்றால், பசுவின் நெய்யாலும், பருத்திப்பஞ்சாலும், தாமரைநூலாலும் ஏற்றிவைத்தல், இவற்றால் ஜன்மாந்திரங்களிற்செய்த சகலதீவினைகளுந்தீய்ந்து, பின்னமான ஐஸ்வரியமெல்லாம்பெருகி, விசன முதலியதுமாய்ந்து தரித்திரமுங் காதவழிக்கப்பாற் பாய்ந்து தேய்த்து, கனமும்இனமும் தனமும் நல்லமனமும் பெறுவார்கள், மோக்ஷ வீடுமுன்னே நிற்கும்.

இப்பால் உடையானுக்குப் புஷ்பார்ச்சனைசெய்வது முறைமை. அப்புஷ்ப சாதிகளெல்லாம் அலைகளையுடைய பாற்கடலிலே தெள்ளமுதத்துடன் சேரப்பிறந்தனவாகும். அந்த மகத்துவத்தினால் பவித்திரம் புட்பமென்று தேவர்கள் ரிஷிகள் முதலாயினோர் ஒப்புக்கொண்டு வந்தார்கள். அறிவுடைய ஆத்மாக்களியாவரும் அருச்சிக்கத் தொடங்கினார்கள். தேவனுடன் கமகம வாசனையாயிருக்கப்பட்ட வெள்ளைமலர்களால் வழிபடு கடவுளைப் பூசிப்பாராகில், தைரியமும், வீர விஜயமும், சம்பத்தும், ஆயுராரோக்கியமுமுடையவர்களாகி, முடிவில் அவர்கள் பெறும்பேறு நம்மாற் சொல்லி முடிவதன்று. அந்தப் புஷ்பங்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நான்கு வகைப்படும். இவற்றுள் கோட்டுப்பூ வென்பது மரக்கிளைகளிற் பூப்பது. கொடிப்பூ வென்பது படருங்கொடிகளினால் அலர்வது. நிலப்பூ வென்பது குத்துச்செடிப் புதறுகளிலே உண்டாகிறது. நீர்ப்பூவென்பது தடாக முதலியவைகளிற் புட்பிப்பது. இந்நான்கு விதங்களிலும் பலகோடி புட்பங்களுள. இவைகளில் உத்திருஷ்டமான புட்பங்களினாலாவது, பத்திரங்களினாலாவது, பழுவிலைகளினாலாவது பூசைபண்ணினால் கல்விஞானங்கொடுத்து செல்வப்போகம் அடுத்து, மோட்சவீடு குறித்துப் போவதற்கு முதற்படியாயிருக்கும். பிறவிக்கடல் கடப்பதற்குத் தோணியாகும். செவப்புப் பூவினால் அர்ச்சனை புரிந்தால், நினைத்த போக பாக்கியமெல்லாங் கைகூடும் சத்துருஜெயமாகும். நீடூழிவாழ்வது நித்திய பதம்பெறலாகும். மஞ்சள் புஷ்பத்தினால், அருச்சித்தால் மைந்தர் மனைவாழ்க்கை, மாடு கன்று, நிலம் பலம் குலம் தலம் ஆகிய சகல பெருமையு மெய்தும் தரும கலியாணங்கள் பண்ணித் தன்னியராவார்கள். கறுப்புப்புஷ்பத்தால் பூசைபுரிந்தாற் பாபரகிதனும் வியாபார சிந்தனையிலிட்டிய பொருளுடையவனுய், அக்கியானமான ஆசைப்பற்றுடையவனுய்ப் பூமியில் வாழ்ந்து, அப்பால் விஞ்ஞான மேலிட்டு மேன்மை பெற்று மேலுலகடைவான். இன்னுமுள்ள பன்னிறப் பூவினும் பற்பலவிதப் பலன்களுண்டாம். ஆதலாற் புஷ்பங்களின் பூசையாற் பெரும்பலனைப் பேசுவதற்கு என்னாலுமில்லை. மற்றெவராலுமில்லை.

இவ்வாறு திருமசனமாட்டி அலங்கரித்து அருச்சனை செய்தபின்பு நைவேத்திய நலம்புரிதல்வேண்டும் கல்லு, நெல்லு, புல்லு உமி, இவை முதலிய மலினமில்லாத அன்னங்களைப் பதார்த்தத்துடன் நைவேத்தியம் பண்ணினவர்கள் அடையுந் தவத்தைப்போல், வேறே தவமுண்டென்று விளம்பலாகுமோ? முழுச்சகத்தைத் தருகின்ற பரமமூர்த்தியைப் பூசிப்பதற்குச் சமானஞ் சொல்லப்பட்டாது. பூசாமுகத்தில் தேவப்பிரீதியில்லாத போசனந் தேவாமிர்தத்துக்குச் சமானமானாலும், அந்த அன்னம் விஷயத்திற்குச் சமானம். பிச்சையிட்டுண்ணாத சாதம் புழுவுக்குச் சமானம். இப்பேர்ப்பட்டவர்களுடைய இல்வாழ்க்கையில் இரக்கவுங் கூடாது. தேவேந்திரன், தேவர்கள், இருடிகள், சித்தர், சாத்தேயர், கருடர், கின்னரர், யக்ஷர், காந்தருவர், வித்தியாதரர், பன்னகர், முனிவர், இராக்கதர், மானிடர் இவர் முதலான சிவகோடிகளும், சொற்கமத்திய பாதாளத்தி லிருக்கின்றபேர்களியாவரும், பூசைக்கும் நிவேத்திய போசனத்திற்குஞ் சமானமில்லையென்று போற்றி, பாபக்கடலினின்றுங் கரையேறும்படிக்குக் கழறியிருக்கின்ற வேதாகம விதியைத்தேடி மேலானோர்கள். காமியார்த்தம், ஆன்மார்த்தம், என்னுமிரண்டில் எவரெவர்கள் எதைவேண்டி அபேட்சித்து, அலங்கரித்து, அருச்சித்து நிவேதிக்கின்றார்களோ? அவரவர்கள் அந்தப் பலனையடைந்து முடிவில் மேலான பதவியடை

வார்கள். என்று வீஷ்மர் விள்ம்பவுந் தரும
ரானந்த பரவசமாய்ச் சிறிதுநேரங் கடவுளை
தியானித்து, மறுபடியு மவரைப்பார்த்து,
ஐயா்மூதாதையே! ஜாதியிலுணர்ந்தபிராமண
ருடைய சொத்துக்களை அபகரித்துக்கொண்
டவனுக்கு என்னகதி கிடைக்கும்? அதனைத்
தேவரீர் திருவாய்மலர்ந்தருள வேண்டுமெ
ன்று கேட்க, வீஷ்மர் சந்தோஷித்து தனக்
கருகிலுள்ள ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும், தேவ
ரிஷிகளும் மற்றந் தபசிகளுங் கேட்கத் தரும
ராஜனை நோக்கிச் சொல்லுகின்றார்.

---

### அந்தணர்சொத்தை யபகரிக்கலாகாதென்ப தைப்பற்றிக் கூறிய அரசபந்து மகாராஜன் கதை.

அப்பா சமர்த்திற்சிறந்த தருமநந்தனா!
அரசபந்துவென்னும் பெயரினையுடைய கிரீ
டாதிபதியான ராஜன் ஒருவன். அவன்
தன்னுடைய பட்டணங்களில் மாறுவே
டம்கொண்டு பிரவேசித்து நகரிசோதனை
பார்க்கும்போது, ஒரு புலையனான நீசன்
அக்கிராரத்துத் தெருவில் வந்தான், அந்த
வேளையிற் ஒருசுழற்காற் றடித்துச் செந்தூ
ளெழுந்து பறந்தது. அந்தப்பொடியானது
தன்மேற்படியாதபடி அப்புலையன்வளைந்து,
ஒடுங்கி ஒதுங்கிப்போனான். அதை மாறு
வேடங்கொண்டு வருகிற மன்னன் கண்டு,
இதென்ன காரணம்? இந்தத் தெருவிலெழு
ந்த மண்தூள்மேலேபடாமல் நீர் ஒதுங்கிப்
போன வயணமென்ன? இதனை எனக்குச்
சொல்லுமென்று வினவினன். அதற்கந்தப்
புலையன் புகலுகின்றான். ஐயா! என் தவத்
தின் மகத்துவத்தினாற் பூர்வஞானந் தெரி
யும். சென்மாந்திரத்தில் நான் பிரமசாரி.
பிராமணாள் வீடுதோறும் பிக்ஷைவாங்கி சாப்
பிட்டுத் தேசசஞ்சாரியாய்த் திரிந்தேன். ஒரு
நாள் பலவீட்டிலும் பிக்ஷையெடுத்து அக்கி
ராரத்திலோர் திண்ணைக்கு வந்தேன். அந்த
வேளையில் ஒருபார்ப்பினி விளக்குமாறு கொ
ண்டு விளக்கினாள். அவள் பெருக்குவதினாற்
பறந்த பராகமானது பிக்ஷைச் சோற்றிலே
படிந்தது. அந்தப்பொடியை அதினின்றும்
போக்கடிக்கக் கூடாமையாலும், என் புத்தி
யிலுந்தோன்றாமையாலும், அப்பிக்ஷை யன்
னத்தைச் சாப்பிட்டே னப்பிராமணாள் மன
மொப்பித்தர அன்னத்தைப் பெற்றேனே
யல்லது, பறந்துபோகின்ற தூசினையான்
ஆசிரித்தவனல்ல. பறந்து விழுந்த பொடி
யுடனே அன்னம் புசித்தேனே அந்தப்பா
வம் இந்தச்சென்மத்தில் நீசனானேன் ஆயி
னும் முன்சன்மத்தில் பிரமசாரியாயிருந்து,
ஈசனான குருவுக்குப் பணிவிடை பண்ணி,
எந்தக் காரியங்களும் எண்ணி நடந்த புண்
ணிய வசத்தால் இப்போது அக்கண்ணியப்
பிறப்பின் விர்த்தாந்தந் தெரிந்தது. இன்
னும் என்னகதி கிடைக்குமோவென்கிற பய
த்தினாலே பிராமணாள் வீதித்தூள் மேலே
படாமலொதுங்கினேன்.

இதுவுமன்றி, நேற்றுநான் நிரம்பவும்
விசாரமாகி, ஐ ஐயோ!! என் மனதறியாம
னடந்த கொஞ்சக் காரியத்திற்குக் கொடுந்
தண்டனையாய்ச் சண்டாளச்சென்மங் கொடு
த்தாயோ ஓ தற்பரா! ஓ சதாசிவா, ஓ ஈஷ்
வரா? என்று மனநொந்து விசனத்துடன்
படுத்து நித்திரை போனேன். அப்போது
ஏழையாகிய என்பங்குத் தெய்வமோ? இன்
னும் யாரோநானறியேன். ஒரு திவ்விய புரு
ஷரூபத்துடன் என்கனாவில்வந்து, நீயினி
கொஞ்சமேனுங்கிலேசப்படாதே. நாளையத்
தினம் அக்கிராரவீதியில் ஒரு ராஜன் உன்
னைச்சந்திப்பான். உன்னிடத்திலொரு அதி
சயத்தைக்கண்டு இதென்ன காரணமென்று
கேட்பான் அப்போது உன் மாரணவிர்த்
தாந்தத்தை வசனித்துப் பூர்வம் ஆரண பிர
மசாரி யானென்றறைவாய் உடனே இந்தப்
பிறவியோடிப்போம். பின்பு நற்கதியடைவா
யென்று சொல்லிப்போனார். விழித்துப் பார்
த்துமிகுந்த ஆசைகொண்டு வந்தேன். வந்த
போதே நான்கண்ட சொப்பனம்போல் மகா
னுபாவனாகிய உம்மை நேரிற் கண்டேன்,
என்னைப்பற்றி நீர்கேட்கவும் என்பாவவிர்த்
தாந்தங்களைப் புகன்றேன். இதோ நான்
போகின்றேனென்று அப்பாற்போய் புலை
யுடைய உடலைப்போக்கிப் பிராமணதேகம்
பெற்று, மேலான கதியடைந்தான். இவை
களைக் கேட்டுத் திருஷ்டாந்தந்திற் பார்த்த
அரசன் மகாபயத்துடன் அன்றுமுதற் பிரா
மணாள் வீதிமண்ணில் அடிவைப்பதற்கு அ
ஞ்சி, தன்னரசு நடக்கும் நாட்டுகளிலுள்ள
சகலருக்கும் இந்தச் சங்கதியைத் தெரிவித்
து, எல்லோரும் வேதியர் பொருளை விட
மெனக் குறிப்பீர்களென்று கட்டளையிட்டு,

அவர்களுக்கு வேண்டுவனவெல்லாம் விழைவறக்கொடுத்துக் காத்துவந்தனன். அவர்களும் அவ்வாறே நடந்துகொண்டு வேந்தனுடன் பொருந்தி வாழ்ந்து, சாய்ந்த காலத்திற் சற்கதி யடைந்தார்கள் என்று தீவினை வென்ற சீமானுரைக்க, அதைக் கோவலன் மைத்துனக்கோமான்கேட்டு, ஓ குருகுலசிகாமணியேயென்று கோடி தெண்டனிட்டுக்கும்பிட்டு, சுவாமி என் மனக்குறையாவும் போயின. குற்றமில்லாத பெரியோர்கள் விண்ணுடென்று பேசுகிறார்களே. அந்த விண்ணுடு ஒன்றோ! அல்லது அனேகமுண்டோ. இதன்து விபரத்தை விளம்ப வேண்டுமென்று வேண்டினார். அதற்கு வீஷ்மரவரைப் பார்த்து ஓ மன்மதனுக்குச்சமானமான அழகையுடையவனே. பூமியில் செய்கிற நல்வினைத் தீவினையான தருமம் அநந்தபேத மானபடியினாலே? மோட்ச ராட்சியமும் அநேகமுண்டாயிருக்கும்.விபகாரத்திசையிற்குற்றங்களுக்குத் தகுந்தபடி தெண்டனை யெப்படி விதிப்பதோ அப்படியென்று அறிந்துகொள்ளுக. ஆதலால் அக்கதிதரும் பூமிகளைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

---

### மோக்ஷ பூமிகளைப்பற்றிக் கௌதமருக்கு மிந்திரனுக்கு நடந்த சமவாதம்.

அப்பா அறக்கடவுள் மைந்தனே! ஒருக்காற் சகல கலைக்ஞான சாஸ்திர சம்பன்னராகிய கௌதமரென்னு மகாரிஷி ஒருவனத்திலுலாவி வரும்போது கறுத்த யானைக்குட்டி போட்டு இறந்துபோயது. அந்த யானைக்குட்டிதாயையிழந்து தரையில்விழுந்து முறையிட்டழுதது. அக்காலையிற் கௌதமர் கண்டு வருத்தங்கொண்டு இரக்கப்பட்டு, அந்த யானைக்குட்டியை எடுத்துவந்து பாலூட்டிப் பிள்ளைப்போல் வளர்த்துவந்தனர். அந்த யானைக்குட்டியுமெத்தச் செல்வமாய்த்தாயில்லா விசனந் தாங்காமற் சிறியகுன்றுபோல்வளர்ந்துவந்தது. அதைப் பார்த்த முனீஸ்வரன் மகிழ்ந்து, படுக்கை, உணவு,போசனம், இருக்கை, சேர்க்கை இவையாவுந் தன்னுடன்கலந்திருக்கப் படுத்தி, இரவும்பகலும் பிரியமாய்ப் பிரியாமலிருந்தார். அப்போது தேவேந்திரனைவன் பூமண்டலமுழுதும் ஏகச்சக்கிராதிபதியாய் ஆளப்பட்ட மகாராஜனைப்போல் வேடங் கொண்டுவந்து, அந்தயானைக் கன்றைப் பிடித்துக்கொண்டு மகாமுனியை வணங்கி வழிபட்டான். அவரும்அவனை வாழ்த்தி, ஓ அரசனே! நீ இவ்வளவு தூரம் வந்ததற்குக் காரணம் என்னவென்று தூண்டினார். சுவாமி! தேவரீரைத் தரிசனஞ்செய்யவேண்டுமென்று வந்தேன். மேலுந்தாங்கள் சர்வ லட்சணங்களும் அமைந்த யானைக்குட்டியை வளர்க்கின்றதாய்க்கேள்விப்பட்டபடி கண்டுபிடித்துக் கொண்டேன். இந்தயானைக்குட்டியையெனக்குக் கொடுக்கவேண்டுமென்று தொழுது கேட்டேன். அதற்கந்தப்பிரம்மரிஷியானவர் நகைத்து, இந்த யானைக்கன்று தாயைப் பறிகொடுத்துத் தள்ளபுற்றலறுநாளையில் நானெடுத்து வந்து இதுவரையிலும் என் பெரிய பிள்ளையைப்போல் ஆசையாய் வளர்த்தேன். இப்படி தினமும் மனமகிழ்ந்து கொஞ்சி முத்தாடிப் போஷித்த யானையை நீ கேட்கலாகுமோ? ஒருவருடைய போகப் பிரமையான வஸ்துவை மற்றொருவர் கேட்கலாகாது. மேலும் நீ உலகாளுகிற வேந்தன். இதனை நீ வாகனமாகக் கொண்டேறுவாய் என்மனந் தாளாது ஆகிலு மொருவர்க்குக்கொடுக்க எனக்குத்தானெப்படி மனந்துணியும். இதன்றியும் இக்கன்று யென்னிடத் திருக்குமாயின் என்னுச்சிரமத்திற்கு அழகாயுங் காவலாயு மிருக்கும். கந்தமூல பலங்களைக் கொண்டுவந்துகொடுக்கும். ஆனபடியினால் இந்த யானையை நீ நினையாதே யென்றார்.

அந்த வார்த்தையைக் கேட்ட ராஜன் நமஸ்கரித்து ஓ சிற்சொரூபானந்தம் பெற்ற கியானமுனியே! இந்த அற்பமான யானையால்உமக்குண்டாகிற உதவியுங்காவலு நினைத்துக்கொண்டால் எனக்கு மெத்தவும் அதிசயமா யிருக்கிறது. எம்போலியரை ஆக்கவும் அழிக்கவும் வல்லவராகிய உமக்குஒருவருடைய உதவியுங் காவலும் வேண்டியதோ. உம்மிடத்தில் தேகியென்று இரக்கிறவர்களுக்கு இல்லையென்கிற லோபகுண மிருக்கப்பெறுமோ, தேவரீர் தருமா தருமங்களைச்சிருஷ்டிக்கும்போதே இயானை குதிரை முதலிய ஆடம்பரங்கள் அரசனுக்கு உரியதென்று அமைத்துப் போட்டு, இப்போது முனிவர் விரும்பியதாக மொழி மாறிப் பேசுவது முறைமையோ! ஒருவர் தான் வகுத்த நீதிதப்பி நடப்பது தருமமோ? முனிவரிடத்தி லுள்ள பொருள் அரசருக்கு முக்கியமாய் வேண்டி

ருந்தால், இலட்சம் பசுக்களும் ஒருபசுவுக்கு
ஒரு பொன்னுங் கொடுத்துப் பெற்றுக்கொ
ள்ளலாமென்றும் அதற் கம்முனிவ ரொவ்
வாது மாட்டேனென்றால், அந்தத் தொகை
ப்பொன்னை அரசன் அபராதமாகக் கட்டிக்
கொண்டு, பசுக்களை அவர்களுக் கெதிரிற்கா
ட்டிலோட்டி விட்டுப் பொருளைத்துராக்கிரத
மாய்க் கிரகித்துக் கொள்ளலாமென்று நீர்
வகுத்துலீர். அந்த நீதி சாஸ்திரத்தின்படி
க்கு, இலட்சம் பசுக்களுடனே பொன்னுங்
கொடுக்கிறேன். ஏ சாம்பவ மூர்த்தியைப்
போன்ற சர்வக்ஞ முடையவரே, அவற்றை
வாங்கிக்கொண்டு யானைக் கன்றைத் தாரும்.
தராவிட்டால் மேற்கூறிய ஏற்பாட்டின்படி
நடத்திக் கைக்கொண்டு போவேனென்றான்.
அதற்கு ரிஷியானவர் வருந்தி, அச்சொல்
லுக்கு முடன்படாமல்? ஓ வேந்தனே நீ
சொற்ற தரும சாஸ்திரத்தின்படி தரித்திர
மாய்ஆசையுடையராவரோ? அவர்களுக்குச்
செய்ய வேண்டியது. அவாவற்ற சுபாவத்
தையுடைய எம்போலியருக்குக் கொடுத்தெ
ன்ன பயன், ஆனால் அரசன் விரும்பிய சொ
த்து வைக்கலாகாது. உனக்கிந்த யானைவே
ண்டுமானால், நல்வினைப் போற்றினால் நலம
டைவதும், தீவினை வசத்தினால் தியங்கியலை
வதும் ஆகிய விரண்டுஞ் செவ்வையாகத்தே
ர்ந்தசுத்தக்ஞானமுடைய வர்கள்வாசம்பண்
ணப்பட்ட சபைக்குப்போய் வருவையாகில்,
ஓ பொய்யில்லாதனே? இந்தக் குஞ்சரத்தைக்
கொடுப்பேனென்றார். அதைக்கேட்ட அண்
ணல், ஐயா! நல்வினை தீவினையிரண்டும் வரி
சையாய்ச் செய்கிற பேர்கள் அடைந்த உல
கத்திற்கு நான் போகமாட்டேன். அதேனெ
ன்றால் கணக்கில்லாத தவத்தைச்செய்த காரி
யஸ்தன் போக வேண்டுமே யொழிய மற்றப்
பேர்கட்குச் சொந்தமில்லை என்று அரசன்
சொல்ல, மறுபடியும் அதற்கு ரிஷிசொல்லு
கின்றார்.

ஓ மகாராஜனே! இவ்வுலகத்தினர் தரும
ராஜனென்று சொல்லப்பட்ட புண்ணியவா
னுடைய லோகத்திற்கானாலும் போய்வாவெ
ன்று புகன்றார். இராஜன் அகத்தூய்மை சற
த்தூய்மைபடைத்த பெரியோர்களுக்கு அன்
பு நிறைந்த அவனிடம் போய்வரத் தகுமே
யல்லது, சத்துருக்களின் மாமிசரத்த மார்
பையும் வேலையுமுடைய மன்னருக்குத் தகா
தென்று சொல்லினான் ஆனால் வரப்பிரசாத
மான மந்தாகினி சிந்தாமணியிலும் ஆகாய
கங்கையிலுஞ் சிறந்தது, அதனிடத்திலாகி
லும் போய் வருகவென்ன, அதற்கரசன், ஓ
ரிஷியே! அக்கினி முன்னிலையாய் எக்கியங்க
ளைப்பண்ணி, உயர்ந்த மகாத்துமாக்களாகிய
அதிதிபூசை புரிந்து, அவர்களுடையசேட
ம்புசித்த பேர்களெவர்களோ? அவர்கள்தெ
ன்புலத்தாராகிய பிதிர்த் தேவதைகளுக்குச்
செய்ய வேண்டிய நீர்க்கடனைக்கொடுத்த நெ
றியுடையோரிருக்கும் அம்மந்தாகினிலோகத்
திற்குப் போகவேண்டுமே யொழிய, நான்
போய்வர மாட்டேனென்றான். அப்பால்
ரிஷியானவர் நல்லது இவ்வுலகத்திற்கு அஞ்
சூராணியா யிருக்கின்ற மகாமேருக்காவது
போய்வாவென்றார். அதற்குவேந்தன் ஐயா?
இன்சொல், சத்தியம், விரதம், இயாவரிடத்
திலும் பரிவு. அன்புடைமை. அருளுடை
மை, இரக்கம், எல்லா வுயிரையுந் தன்னுயிர்
போற்கருதல் ஆகிய இத்தியாதி குணமுள்ள
பேர்கள் பொன்மலை நாடு புகுவார்கள். நான்
அவ்விடம் போவேனோவென்றான். அப்படி
க்கானால் இன்னொன்றுசெய், நல்லசங்கீதஞ்
சொல்ல வீணைக்ஞானம் வல்ல நாரதமுனிவ
ரிடத்திற்காகிலும் போய்வாருமென்று ரிஷி
சொல்ல, பூபாலன்பூரித்து, சுவாமி! அநேக
யாத்திரை திரிந்து, தீர்த்தங்களில் மூழ்கிதே
வதாதரிசனைபுரிந்து, விருந்துபரிந்து, சப்த
சுரசதீ சங்கீதம்தெரிந்து,சாமவேதநாதப்பிர
மத்தைச் சதாசிவப் பிர்மத்தின் செவியிலே
ற்றவல்ல மகதியாழ்வல்லவராகிய நாரதர்வா
சம்பண்ணப்பட்ட இடத்துக்குநான்போகத்
தகுவனோவென்றான், பின்னுமகாமுனி அர
சனைப்பார்த்து, நல்லதையா ராஜனே? உன்
னிஷ்டப்படிக்கு யானையைக் கொடுக்கிறேன்.
மகாமேருவுக்கு வடக்காயுள்ள மயக்கமற்ற
குருபூமிக்குப்போய்வாவென்றார். அதற்குரா
சன் ஓ முனிவரே, சொற்பழுதிராத பேர்கள்
கொலைபுரியாதவர்கள் விலைகுறையாதவர்கள்
புகழுடைமை பூண்டபேர்கள் ஆகிய வித்த
கையானர் போகப்பட்ட இடத்தில் நான்
போகமாட்டே னென்றான்.

அப்பாற் கௌதமர், ஓ ராஜனே வசிட்
டர் முதலிய சப்தரிஷிகளும் வாசம்பண்ணு
கிற லோகத்திற்கேனும் போய்வாவென்றார்
அதற்கு ராஜன், ஓ சுவாமி, அன்னதானம்,
சொர்னதானம், வித்தியாதானம், வஸ்திர

தானம், கோதானம், பூதானம் இவைமுத
லிய மாதானங் கொடுத்து நிதானங் கெடா
மலிருப்பவர்கள் சேர்ந்திருக்குமுலகத்திற்கு
நானெப்படி போவேன் என்றான். ஆனாற்
சூரியலோக மேனும் போய்வாஎன்றார்கௌ
தமர். அதற்கு வேந்தன், சுவாமிகளே! வே
தங்களிற் பயின்று, தவங்களில் முயன்று,
தாராதி புத்திராதி தனாதிகளைப் பரிகரித்து,
சகலமுநசித்த சன்னாசி போயிருக்கும் இடத்
திற்கோ என்னைப் போகச்சொன்னீரென்ற
னன். அதற்கு ஐம்புலனவித்த அருந்தவர்
வருணலோகம் போய்வாவென்றனர். அதற்
கரசன், ஐயோ! பருணிதர்களாகிய பாபரகி
தர், ஆசார நிஷ்டை அகலாதிருப்பவர்,
கிரியாக்கினி வளர்ப்பவர்கள், சீவகாருண்
ணியமுள்ளவர்கள், ஆகிய விவர்கள் சேரு
கிற இடமோ என்னைச் சென்றுவரச் சொன்
னதென்றான். அப்பாற் கௌதமர் சொல்லு
கின்றார். ஓ வேந்தனேஉலகெல்லாங்கொண்
டாடா நின்றதும், இயாவரும் விரும்பத்தக்
கதும், தேவர்களுக் காதாரமானதும், தே
வேந்திரன் கொலுவாகி யிருக்கிறதும், கற்ப
கக்காவுடையதும், சங்கநிதி,பதுமநிதி, தம
ணியநிதி முதலாயுள்ள நவநிதிகளுங் குல
வியதும், ஆகிய தேவலோகத்திற்காகிலும்
போய்வந்தால் இந்த யானையைக் கொடுக்
கிறே னென்றார். அந்த மொழிகேட்ட ராஜ
வடிவுடையவன் சொல்லுகின்றான். ஐயா
முனிவரே! யுத்தமுனையிற் சத்துருவை
செற்ற கொற்றவேல் வெற்றியாற் குற்றமற்ற
வன், நூறு அஸ்வமேதயாக பலனைப் பெற்
றவன், வேதங்கள் கற்றவன், தீர்க்காயுசுற்ற
வன், பழிபாவநோயற்றவன், கோதானமீ
ந்தவன், தருமங்குறையாமல் வாழ்ந்தவன்,
குரு முதலிய பெரியோர்களைத் தாழ்ந்தவன்,
கோபமில்லாப் பொருமையி லாழ்ந்தவன்,
இப்பேர்ப்பட்ட பேர்கள் சேர்ந்திருக்கும்
இடத்திற்கோ என்னைச் செல்லச்சொன்னீ
ரென்றான், அதற்கு ரிஷியானவர், நல்லது,
அன்பனே! குருவினுடைய லோகம்போய்
வாவென்றார். அதற்கரசன், ஓ தேசிகனே!
அக்கினிக்கிட்டோமம், பவுண்டரீகம், வாச
பேயம், அஸ்வமேதம் இத்தன்மையாகிய
எக்கியங்களைச் செய்தபேர்கள் எய்தியிருக்கு
மிடத்திற்கா என்னைப் போகச்சொன்னீரெ
ன்றான்: மீளவும் ரிஷியானவர் பசுலோகம்
போய்வாவென்று புகர்ந்தனர். வேந்தன்,
சுவாமிகளே! கபிலை முதலிய பல சாதிப்பசு
களை உத்தமருக்குத் தானமாக உதகம் வார்த்
தசத்குணசாந்தர், பிதாவாக்கியப்பிரமாணஞ்
சித்தமாந்தர், பிழைபுரியா அரசுடை வேந்
தர், தபசுபுரிந்து சத்தியநெறிபெற்ற சீவன்
முத்தர், இவர்கட்குக் காணியாட்சியா யிருக்
கிற பூமிக்கு என்னைப் போவென்றுரைப்ப
தெப்படியென்று பேசினான்.

அப்படிக்கானால், வெம்மையினாலும்,
தண்மையினாலும், வெளிறினாலும், குளிரினா
லும், வருத்தம்படாரா துபிணிமூப்புத் தொ
டாராதது, பழி, பகை, பாவம், அடாராதது.
அகண்ட செல்வம்இடாறாதது. நற்கதிகளுக்
குக் கெல்லாம் பொற்புடையது. நாலாம்பத
விக்கு மேலானது சத்தியலோகம். சிருஷ்டி
கர்த்தா வசித்திருக்கும் ஸ்தானம் அவ்விடம்
போய் வாவென்று கௌதமர் சொன்னார்.
அதைக்கேட்ட மகாராசன் சொல்லுகின்
றான். ஓ மகானுபாவா! உம்பருமதிக்கத்
தக்க உத்தமர்கள் எப்பேர்ப்பட்ட தவங்
களு மெளிதிற்செய்து அருள் நிறைந்தவர்
கள், நல்வழியிற்றேடிச் சேகரித்த புண்ணி
யப்பொருளைச் சாதுக்களான வைதீகர்களுக்
குக் கொடுத்தபேர்கள், நரமேதம், ராஜசூ
யம், இவைமுதலிய முக்கிய எக்கியாதிகளை
நடத்தினவர்கள், பிர்மஞானத்தைப் போ
தித்து வைத்தவர்கள், ஆகியவிவர்கட்கும்
அரிதானது சத்தியலோகம். அதில் அடி
யேன் போகத்தக்கவனோ வென்றான். இவை
யனைத்தையுந் தவத்திலுயர்ந்த மாதவன்
கேட்டுச் சந்தோஷித்து நகைத்து, ஓ தே
வேந்திரனே! நீ மாறுருபங்கொண்டு வந்த
மாயையைத் தெரிவிக்கமாட்டையோ நானு
ன்னை இன்னானென் றறியேனோ? என்யானை
யைக் கொடுத்தேன் வாங்கிக்கொள்ளென்று
வழங்கினார். அந்தக்ஷணமே மகாராஜ ரூப
த்தைவிட்டுத் தேவேந்திர சொரூபத்தைப்
பெற்று, மகாரிஷிக்குப் பிரதக்ஷ நமஸ்
காரஞ் செய்து, சுவாமி! இந்த யானை
உம்மை வணங்கி வழிபட்டுக்கொண் டிருக்
கிற அதிசய ஆச்சரியத்தைக் கண்டு வந்து
கைப்பற்றினேன். தேவரீருடைய சிந்தை
மகிழும்படியாய் இந்த ரூபங்கொண்டு வந்
தேனேயல்லது வேறில்லை. தேவரீர் அடி
மைக்கு மங்களாசனம் பண்ணவேண்டும்.
கோபம் வைக்கவேண்டாம். இப்பவுந் தங்
கள் அன்புக்குரித்தாய், அருளுக்குப் பாத்திர

மாய், திடகாத்திரமாய், தேவரீருடைய ஆசிரமத்தைக் காத்துக்கொண்டிருக்கிற யானையான் பயமற்றுப் பிடிப்பேனோ? பாரமார்த்தியமில்லாமற் கேட்பேனோ? எனக்கப்பேர்ப்பட்ட விருப்பமில்லை, என்பேரில் அருவருப்பில்லாமல்லக்ஷமித்து இந்தயானையுடன்விளையாடிக்கொண்டு மனோசுக மடைந்து ஆநந்தத்திலிருமென்று தேவேந்திரன் நமஸ்கரித்து உபசரித்தான்.

அவனுடையவசனத்தைக்கேட்டகௌதமரிஷி அதற்குச் சந்தோஷித்து, ஓ போக தேவேந்திரா! இந்தயானை மிக்வும் பேரறிவுடையது. பிரதாபம் பெற்றது. மிகுந்த செல்வத்துட னிருப்பது. உன்னிடத்தில் வந்தால் நான் வளர்த்த அருமையின்படிக்கு நீ வைந்திருக்கப்போகிற பெருமையுஞ் சமமாயிருக்கும். எனக்குஞ் சந்தோஷமுண்டாக்கும். ஓ கற்பகமாலை தரித்த பொற்புடை அற்புத விற்பனனே! இச்சுப்பிர தீபம் போன்ற கற்பகக் களிறைச் சுகமாக அழைத்துப்போவென்று சொன்னார். அதற்குத் தேவேந்திரனவுரைப்பார்த்து, ஓ சுவாமி தேவரீர் சொல்லுகிற வாக்கியம் எனக்குரியபாக்கியம். இந்தச்சிலாக்கியமாகிய இயானையுடன் கூட தேவரீருந் தெய்வலோகத்திற்கு வந்தால், அப்போது நானிந்தயானையைப்பெற்றுக் கொள்ளுவேன். இல்லாமற் போனால் எனக்கு வேண்டுவதில்லை யென்று விளம்பினான். அம்மொழியைக்கேட்ட கௌதமரிஷி அப்படியே சம்மதிகொண்டு, இந்திரனுந் தானுஞ் சிந்துரத்தின் மேலேறித் தேவலோகம்போய்ச் சேர்ந்து ஆனைவிட்டிழிந்தார்கள், உடனே தேவேந்திரன் கௌதமரிஷியை அரண்மனைக் கழைத்துப்போய் ஆகாயகங்கையால் அபிஷேகமாட்டி, சோடசோபசாரமுங் காட்டி, சப்த ரிஷிகளையும் ஆசாரியரையுங் கூட்டி, அமுதபோனகமூட்டி கற்பகமாலை சூட்டி, கதம்பகஸ்தூரிகூட்டி அரிசந்தனாதி தீட்டி, ஆனைக்கு ரத்தினாபரணங்கள் பூட்டி, ஆடம்பரங்களுடன் நாட்டியங்களாட்டி, இரண்டுகரத்தையும் நீட்டி ஓ என் கண்ணாட்டியாகிய இந்திராணியே! இக் கௌதம மகாரிஷி எனக்கிந்த யானையை வெகுமதி கொடுத்தாரென்று சுட்டிக்காட்டி, மேட்டிமையாகப் பணிந்து வெகு சம்பிரமமாய் மகாரிஷியினிடத்தில் விடை பெற்றுக் கொண்டுவீரசிங்காசனத்தில் வீற்றிருந்தான் கௌதமர் யானையைக்கட்டிக்கொண்டுகொஞ்சிக் குலாவி முத்தாடி உத்தாவு பெற்றுக் கொண்டவராய், தமது ஆசிரமத்திற்கு வந்தார். என்று வீஷ்மர் சொல்லவுந் தருமநந்தனர் பேராநந்தத்துடன் பணிந்து அப்பிதாமகனை நோக்கி, ஐயா! தபசுபண்ணுவதைப் பார்க்கிலும் நல்லவழியிற் சம்பாதித்த திரவியத்தைச் செலவழித்துச் சாஸ்வதமான. தருமம்பண்ணினால். எவற்றினுமேலானதென்று சொல்லுகிறார்களே; அதை அடியேனுக்கு விளம்பவேண்டுமென்று கேட்க, கங்காதநயன் கரைக்கத் தொடங்கினார்.

---

### தவத்தினுந் தருமஞ்சிறந்த தென்பதைப்பற்றிக்கூறிய பகீரதமகாராஜன் கதை.

ஓ குமுத நண்பன் குலத்திற்பிறந்தஎன் பேரனாகிய குபேரனே! தாமரைக்கு நேசனாகிய சூரியசந்ததியிற்றோன்றி வீரியமாய் விளங்கிய மனுகுலாதிபன் கால்வழியிற் பிறந்த பகீரதமகாராஜன் பூமிபரிபாலனம் புரிந்து வரும்போது, திருமாலின் திருநாபிக்கமலக் கோவிலிற் பிறந்த திசைமுகன்வாழுஞ் சத்தியலோகத்திற் சென்று பிர்மாவுக்குப் பிரதக்ஷணம்பண்ணிச் சாஷ்டாங்க நமஸ்காரமாய்ச் சேவித்தெழுந்து, கைகட்டி வாய் பொத்தித் தோத்திரஞ் சொல்லித் துதித்தான், அப்போது மண்பொதுந்தந்தைமனமகிழ்ந்து ஆசனங்கொடுத்து ஆசீர்வதித்து ஓ அனங்கனைப்போன்ற அழகுபடைத்தபகீரதனே நானிருக்கிற சத்தியலோகத்தில் இதுகாறும் பூததேகத்துடன் புகுந்தவரில்லை. நீஇந்தப் பிரகிருதியான தூலசரீரத்துடன் எவ்வண்ணம் வந்தாயென்று கேட்டனர். அதற்குப் பகீரதன், ஓ பங்கயாசனனே! அடிமைக் கடைத்தேறத் தக்கதாக வெகுநாள் தபசுசெய்தேன். வேதத்திற் சொல்லிய எக்கியமனைத்தையும் விதிகுன்றாமலும், மந்திராலோபங் கிரியாலோபம் வாராமலும் புரிந்தேன். விரதங்களெல்லாம் அநுஷ்டித்தேன். ஒன்றினாலும் உம்முடையலோகம் வருவதற்கு உபாயங்காணேன் எனக்கும் வல்லமையில்லை. பிராமணாள் எவ்விடத்தில் தவமிழைக்கின்றார்களோ? எவ்விடத்தில் எக்கிய மியற்றுகின்றார்களோ? அவற்றை விசாரித்துக் கொண்டிருந்து, அவிடங்களுக்குப் போய் அவர்கள் செய்

இன்ற தபசுகளுக்கும், எக்கியங்களுக்கும் யாதொரு இடையூறுகள் நேரிடுமானல் அவற்றைக்கெடுத்து விக்கினம் வரவொட்டாமல் வேள்வியை முடிப்பித்து, ஆகுதியளித்துப் பூரணமாகிற வரைக்குங் காவலிருந்து, இயாகங்களுக்குவேண்டிய உபகரணங்களுங் கொடுத்துப் பத்தி சிரத்தையாய்ப் பாதுகாத்திருப்பேன். அதனல் அந்தப்பெரியவர்களியாவருங்கூடி மகிழ்ந்து புகழ்ந்து, ஓ பகீரதனே! நீ பிர்மலோகம்போய்ப்பார்த்து, அங்கிருக்கின்ற அனுதிக்கடவுளை அன்பினற்பணிந்து, மேலான முதன்மையைக் கைக்கொண்டு, மறுபடியும் வந்துவிடென்று வரங்கொடுத் தனுப்பினர்கள். அதனலடியேன் வந்தேனென்றுன். அதுகேட்டபிர்மதேவர் சந்தோஷப்பட்டு, ஓ பகீரதனே! நீ பெரியவர்களுக்குந் தேவர்களுக்கும் உபயோகமாகிய யாகத்திற்கு உபகாரியா யிருந்தபடியால் அவர்கள் மகிழ்ந்து என்னுலகத்தைப் பார்க்கும்படியாய்த் தூலதேகத்துட னனுப்பிவைத்தார்கள். ஆனபடியால், நூறுயாகங்கள் செய்வதைப் பார்க்கிலும், அனேகமான தவங்களைப்பண்ணுவதைப்பார்க்கிலும்பாவமில்லாமற்சேகரித்த பொருளை அந்தயாகமுந் தவமுஞ்செய்யும் பெரியோர்களுக்கு உபயோகப்படுத்துவதும், மேலானதருமமென்றுபிர்மதேவர் சொல்லிப் பகீரதனுக்குப் பலவரங்கள் கொடுத்து உபசாரஞ்செய்து அனுப்பினர். அப்பாலவரிடத்தினின்றும் விடைபெற்றுக்கொண்டு பூமியில்வந்தசூரியகுலோத்துங்கன் உலகத்தை முன்போல் ஒருகுடையிலாண்டு, தருமோத்தமனென்று சகலரும் புகழத்தக்கதாக நற்பேர் சம்பாதித்து, சந்ததியோர்களுக்கு நற்கதிதருவித்து! சகல சம்பிரமத்துடன் வாழ்ந்தான். என்று கங்காபுத்திரன் சொல்லக்கேட்ட தருமநந்தனன் புகழ்ந்து, ஐயா! இப்போலோகத்தார் ஆயுசு விருத்தியும் அல்பாயுசுமாகிய விரண்டுந்தங்களாலே தேடிக்கொள்ளுவார்களென்று சாஸ்திரங்களினலேயுஞ் சான்றோர்களினலேயுங் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆயுசுக்குவிர்த்தியுஞ் சீரணமும் எப்படி யுண்டாக்கிக்கொள்ளலாம்? அதையடியேனுக்குத் தெரியச்செய்யுமையா ஞானனந்த மூர்த்தியேயென்றுகேட்க, வீஷ்மர் சொல்லலுற்றுர்.

---

ஆயுளுக்கு நிறைவுங் குறைவு முண்டாவதற் கேதுகூறல்,

ஓ சத்திய சந்தனுகிய தருமநந்தனு! ஆயுசும்புகழும், லஷ்மீகரமும் ஆகிய விவைகளெல்லாஞ் சுத்திபத்தியாகிய ஆசாரங்களினல் நித்தமும்பெருகி, மொத்தமாய் நாளுக்குநாள் வளர்ந்து மேன்மேலாகும். ஆசாரமும் ஒழுக்கமுங் குன்றினல் ஆயுள் முதலிய யாவும் நாளுக்குநாள் குன்றி நலிந்துபோகும். நல்வழியாகிய ஆசார முறைமைப்படிக்குநடந்து, அந்தந்த வருணத்திற்குத் தகுந்தவண்ணந் தப்பாமலிருந்தாற் சகல துன்பத்தையும் போக்கும். ஆயுசு விர்த்தியாம். ஆசாரியன் பேச்சைத் தவறினபேர்கள் வேதங்களில் விதித்த விதியை அகற்றி நடந்தபேர்கள் உலகத்திற்குக் குற்றம்வரும்படி நடக்கிறபேர்கள், பேசும்போது துரும்பைக் கையிலே பிடித்துக் கிள்ளியபேர்கள், சூரியனுக்கு முன்னும் பின்னும் முறம் வீசிப் புடைத்தவர்கள், விளக்குமாறினுற் றூற்றினவர்கள், தருமதீபம் அவித்தவர்கள் சாப்பாட்டில் நஞ்சிட்டவர்கள் ஆகிய இவர்களெல்லாம் ஆயுள் குறைந்து அழிவார்கள். ஆயுளை விருத்தியாக்கிக் கொள்ள வேண்டுவோர் எக்காலத்திலும் பொய் சொல்லாமல், கோபியாமல், பிராணனுக்கு அவதி வருகிறதேயென்று பேதுருமல், திரிகாலத்திலேயுந் தேவார்ச்சனைசெய்து, ஓமாக்கினி வளர்த்தி தேவர்களை ஆகுதியினல் திருப்தி பண்ணிவைத்து, அவ்வோமப் புகையால் விருத்தி பண்ணிக்கொள்ளலாகும். ஒருவனுக் குரித்தாகிய குல மனையாளைக் கைப்பிடித்துக்கொண்டபேருக்கு வருந்தீமைக ளிவ்வளவென்று வகுப்பதெப்படி! இதைவிடப் பாவமுந் துரோகமும் வேறில்லை. வாணுர் மாய்வதற்குப் பாதாரத்தைத் தழுவுகின்றதே வசனுபி, மேலுக் தனக்கிதமான நேசன், ராஜன், ஆசான், புரோகிதன், வயித்தியன், பந்துக்கள் வேலைக்காரர் இவர்களுடையபெண்சாதிகளையும் பெண்களையுமாசையால் மனதினினைக்கப்படாது. நினைத்தாலே? வருணபாசபந்த நரகத்தில் வீழ்வதற்கு ஆயுள் குறைந்து முன்னடி போவார்கள். கோவிலைச்சேர்ந்தகுளம், நிலம், தோப்பு, துரவு, தேவசொத்துக்கள் தருமார்ச்சிதங்கள், பிராமணருடைமைகள், அடைக்கலப் பொருள்

கள் எளியோர் நிதிகள் இவைகளை அபகரிப்
போர்களுக்கும் ஆயுசுகுன்றும். அழியாநர
கம் என்று மீளவிடாமற் றுன்றும். போச
னத்தையுஞ் சலத்தையும் நின்றுண்டாலும்,
மலமூத்திரங்களை நின்றுவிட்டாலும் நீரில்
அம்மணமா யிறங்கிக் குளித்தாலும், கைம்
பெண்ணைக் கலந்தாலும், தனக்கு மூத்தவ
ளுடன் சையோகஞ் செய்தாலும் வாழ்நாள்
பின்வாங்கும்.

அன்றியும், கிழக்கு முகமாய்ச் சாப்பிட
வுந் தலைவைத்துப் படுக்கவும் பழக்கம் பண்
ணுதவர்கள், பகலிற் சாதத்தோடு பாலுண்ட
வர்கள், உண்டபின் மூழ்குவோர்கள், செரி
யாதிருக்குமுன் யுண்போர்கள் இவர்கள் சீவ
னிழப்பார்கள். ஆசூசமா யிருக்கும்போது
அக்கனி பிராமணுள், பசு, செபமாலை இவை
முதலியவைகளைத் தொட்டபேர்களுக்கு ஆ
யுளொடுங்கும். வினை வெதுப்பும். கலை
வல்லவராகிய பெரியவர்களைக் கண்டகாலை
யில் தாம்பூலாதிக ளணிந்திருந்தால் அவை
களைமாற்றி எழுந்திருந்துவணங்கி, எதிர்
சென்றுபணிந்து, வாய்பொத்திக் கைகட்டி
நின்று, அவர்கள் உத்திரவுகொடுக்கிறவரை
யிலுங் காத்திருந்து அவர்களிடத்திற் செல
வு பெற்றுக்கொண்டு போகாமற் போனல்,
ஐஸ்வரியமுங் ஆயுளுங் கெட்டுப்போம். எ
னக்கு ஆயுசு இத்தனை வருடமிருக்கிறதென்
று இசைக்கின்றவர்களுக்கும் ஜனனபத்திரி
கையாகிய சாதகத்தை அடிக்கடி விசாரிக்கிற
பேருக்கும், பலன் மட்டுபட்டுப்போய் பஞ்
சையாய் உயிர்விட்டுக் கெட்டுப் போவார்கள்.
உடம்பிற்றேய எண்ணையிட்டுக்கொண்டவர்
கள். குருவை நிந்தித்துக் கோபமாப்பேசி
னவர்கள், பெரியோர்கள் சினந்து பேசிய
போது அவர்களை யெதிர்த்துக்கொண்டு பே
சினபேர்கள், பிரதமை, அஷ்டமி, சதுர்த்
தசி, அமாவாசி, பர்வம்இந்நாட்களில் க்ஷவ
ரம் பண்ணிக்கொண்டவர்கள், அல்லது ஸ்ரீ
ரோகங்கண்டவர்கள், அழகில்லாத அங்க
ஹீனரையும், சற்பாத்திர மறியாத கோத்திர
ரையும், செல்வமற்ற சிறுமியரையும், படி
யாத பாவிகளையும், தெளிவில்லாச் சிந்தைய
ரையும், உதயத்திற் பார்த்தவர்கள், இவர்க
ளைக்கண்டு பழித்தவர்கள், ஏழைகளையடித்து
எதிர்த்தவர்கள், பேதைகளைப் பதறப் பேசி
னவர்கள், பல்லு விளக்கும்போதும், மலச
லம்போக்கும்போதும், போசனம் புசிக்கும்
போதும் பேசுகிறவர்கள், சூரியோதயத்தி
லும் அஸ்தமானத்திலும் தூங்கினபேர்கள்
தாய்தந்தை, தமயன், தமக்கை, குரு, தெய்
வம் இவர்களைப்பூசித்து வணங்காதபேர்கள்
கர்ப்பஸ்திரீயுடன் கலந்தவர்கள் வடக்கிலு
மேற்கிலுந் தலைவைத்துப்படுத்தவர்கள், நிர்
வாணமாய்ப் புணர்பவர்கள், ஆலமரத்துட
னும் அரசமரத்துடனுஞ் சாய்ந்து பழவர்க்
கம் சாப்பிட்டவர்கள், மூக்கிலே வியர்த்த வி
யர்வு நாக்கிலே விழத்தக்கதாக அன்னம் பு
சித்தவர்கள், இடதுகைமி லுப்புவைத்துக்
கொண்டு சாப்பிட்டவர்கள், இடது கரத்தா
லுப்பு முதலியவற்றை வைத்தவர்கள், இர
வில் தயிர் பருகினவர்கள், இரவில் கீரைமுத
லிய இலைக்கறி அருந்தினவர்கள், நல்ல ப
தார்த்தங்கிடைத்தால் அதை நாலுபேருடன்
பகுந்துண்ணமல் தாங்கள் மாத்திரம் தின்ற
வர்கள் ஆகிய இவர்களெல்லாம் பல வியா
தியிலுைம் விசனத்திலுைம் விரைவில் மர
ணமடைவார்கள்.

மேலும் ஒருவன் தன் கையிற்கிடைத்த
அருமைப் பதார்த்தத்தை யாவரேனுங் கண்
டால் அவர்களுக்குங் கொடுத்து சாப்பிடா
விட்டாலும், தன்மிட்டி லொருவிதமும் வந்
தவிருந்தினருக் கொருவிதமுமாய்ச் சாப்பா
டுந் தாம்பூலமு மளித்தாலும் நெய், பால், த
யிர்பாயசம், வடை, அப்பம், சுசியன் இவை
முதலிய உரிசையான பண்டங்களையும், பதா
ர்த்தங்களையுந் தாய்தந்தை முதலிய பந்துக்க
ளோடும், பரதேசிகளோடுஞ் சாப்பிடாமல்
ஒண்டியாய்ச் சாப்பிட்டாலும் நோயும், வறு
மையு முண்டாகி ஆயுள் குறையும். பொல்
லாத காரியங்களை ஒருவன் செய்தால் அதை
பார்க்கலாகாது. நம்மால் தடைபடாக் காரி
யங்களைக் கண்டு ஐயோ பாவமென்று இரக்
கப்படலாகாது. நம்மால் நிற்கப்படுங் காரி
யமாயிருந்தால் இரக்கமடைந்து நிறுத்தாம
லிருக்கக்கூடாது. பார்க்கின்றவர்கள் தரும
வானென்று மெச்சுகிறதற்காகப் பரிதாபப்
படலாகாது. சூரியனுடைய சாரதியை
நோக்கலாகாது. அமாவாசி, பர்வம், கிரா
ணம் இப்பேர்ப்பட்ட விசேஷநாளையிலன்றி
மற்றக்காலத்திற் சமுத்திரஸ்தானம் பண்ண
லாகாது. தென்புலத்தாருக்குத் திதிமுதலிய
பூசை பகலைக்குமேல் ராத்திரிகளிற் செய்யப்
படாது. தன் பிள்ளையை, தம்பியை, காப்
பாற்றவேண்டும். தமயனைத் தந்தையென்

றெண்ணிச் சிந்திக்க வேண்டும். இப்படிச் செய்யாமல் வேறுசிந்தைகொண்டு மாறுபடலாகாது. இவைகளெல்லாம்அசுபமானகாரியத்தை விளைத்து ஆயுளைக் குறைக்கும். அப்பா தருமநந்தனு! இப்போதுநான் சொன்னதெல்லாம்விட்டு தன்மையாக நடந்தவர்கள் சுகமடைந்து, துன்பமிடைந்து, ஆயுள்வளர்ந்து, அஷ்டைஸ்வரியத்தையும் ஆயுராரோக்கியத்தையும் அனுபவித்து,கடைசியில் நற்கதி சேருவார்கள். ஆசார முதலிய நற்கருமங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு உபசரித்து அன்னங் கொடுப்பவர்கள் நல்லவழி பெறுவார்கள். தானங்களில் அன்னதானம் பெரிது. அதன் பயனை ஆறெடுத்துச் சொல்லுவார்கள். அத்தத் தருமம் உனக்கேகிடைத்திருக்கின்றது. அதைக் குறித்து நான்பேச வேண்டியதில்லை. இன்னமும் நீ கேட்க வேண்டியதைக் கேளென்று வீஷ்மர் சொல்ல, தருமபுத்திரர் சந்தோஷித்து சுவாமி! விரதங்களை பிராம்மணரும், க்ஷத்திரியரும் அனுசரிக்க வேண்டுமென்று பெரியோர்கள் பேசியிருக்கின்றார்களே, மற்ற இரண்டு வருணத்தாரும்அனுஷ்டிக்க வேண்டியதென்னவென்று வினவினர். பரதகுலம் விரதம் பெறும்படியாக வந்துற்பவித்த பாண்டு புத்திரனுக்கு ஆண்டவனாகி ஞானவரோதய வீஷ்மர் அருளிச் செய்கின்றார்.

---

### நான்கு வருணத்தினர்க்கும் விரதவிதி கூறுதல்.

ஓ தருமவேந்தனே! வேதமோதிய வேதியர் சாந்திராயன முதலிய விரதங்கள் தங்களாசை தீரும்படியாகச் சலபான முதலியதன்மைகளில்லாமல் மூன்று வருஷ முறைமையாயிருக்கலாம். இராஜர்கள் ஒரு பட்சம், ஒரு வாரம், இந்தமட்டும் உபவாசமிருந்து போற்றலாம். வைசியருஞ் சூத்திரரும் விரதம் இருக்கவேண்டுமென்றால், நான்குநாள் மூன்றுநாள் உபவாச மிருக்கலாம். அதன் பேரில் அதிகமாய் ஆசை கொண்டிருந்தாற் குற்றமுண்டாம் விரதபங்கம் வரும். இயாவனொருவன் இந்தப்பிரகாரஞ் சரீரத்தை வருத்தி ரெத்தஞ் சுண்டத்தக்கதாக உபவாசமிரத மிருக்கின்றானோ? அவனுக்கு இரக்காலத்தில் மூடிய இருள் சூரியன் சுடரைக் கண்டு மறைந்து போவதுபோல் அக்கியானம் நீங்கி சுக்கியானந் துலங்கி, பிறவியும்போய் புண்ணியகதி பெறலாகும். ஓ மூரசக்கொடியுடைய மூர்த்தண்ணியனே. இப்பிரபஞ்சத்திலுள்ள பேர்கள் கடைத்தேறுவதற்கு அநேக விரத முதலிய அனுஷ்டிப்புகள் ஏற்படுத்தி யிருக்கின்றன. அனேகம் பேர் அனுஷ்டித்தும் வருகின்றார்கள். இவ்விரதாதிகள் அனைத்துஞ்சர்வ வல்லமையும்பெற்று, கல்விகள்கற்று, மூவாசை மறந்திருக்கின்றமூர்த்திகள்பேசியிருக்கின்றார்கள். அவர்கள் பேசியிருக்கின்ற நூல்களில் இப்பேறுப்பட்ட விரதங்க ளிழைப்பதைப் பார்க்கிலும், ஆண்மாக்களுக்கு வேறொன்று மாதரவில்லையென் றுரைத்திருக்கின்றனர் என்று வீஷ்மருரைத்ததைத் தருமராஜன் கேட்டு, ஓ ஆதியே! பூமியிலுண்டான மனிதகோடிகள் தீவினைகள்செய்து பாவிகளானால், இந்த மேலானபுருட ஜன்னம்போய் அஃறிணையான மிருகா திருபங்கள் வருமென்று விளம்புகின்றார்களே, அதனது விபர மென்னவென்று கேட்க வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

### உயர்திணைப்பாலர் அஃறிணைப்பாலர்களாதற் கேது கூறுதல்.

அப்பா மெய்விரதனே! தாய் தந்தை, தமயன், குரு, தெய்வம், இவர்களுக்குச் செய்யவேண்டிய உபகாரங்கள் அளவில்லாதனவாம். அப்படிக்குச் செய்யாமல்தீங்கு புரிவதற்குத்திசைமுகனும் பயப்படுவான். மற்ற ஏழை எளியோர்கட்கும் பொல்லாங்கு பண்ணலாகாது? ஒருவேளை இவர்கள்பால் தனக்குக் குற்றங் குறைகள் நேரிட்டால், ஆசாரியரிடத்திற் சொல்லிப் பரிகாரம் பண்ணிக் கொள்ளலாம். மேற்கூறிய தாம் தந்தை முதலியோர்க்குப் பிழை பிழைத்தால், ஈசனுலுந் தீர்க்கக் கூடாது. அதற்குப் பரிகாரமுமில்லை. அவர்களுடைய திருவடியே அடைக்கலம், மேலும், மடம், சத்திரம், மசானம், கோவில், இவைகளுக்கு அமைத்திருக்கின்ற பொருள்களைக் கவருவாராகில், பூத தேகம் விழுகிற பரியந்தம் பொல்லாத துன்பத்துமுன்று, தேகந் தடித்து வெடித்து ஆன்மா நீங்கி, மறுபிறப்பில் எலியாய், பெருச்சாளியாய், திப்பிவண்டாய், காட்டுப் பன்றியாய்ச் சனித்து, வெகுநாள் அலைந்து கிலேசித்து, அந்தச் சன்மங்கள்போய் பின்னும், நாயாய்

நரியாய், பேயாய், முழுவாய்ஒழிவில்லாமற்
பிறந்து, கியானமறந்து, சுகந்துறந்து துக்
கஞ்சிறந்து, உழலுவார்கள். ஒருவன் பெண்
சாதிமேல் மற்றொருவன் ஆசைப் பட்டா
லும், அவளை யெடுத்துக் கொண்டாலும்,
கழுக்கள் முதலிய பட்சிகளாய்க் குறையுடன்
பறந்து, இரை கிடையாமல் அலைந்து வரு
த்தமடையவேண்டிவரும். தாம் வழிபடற்
குரிய சமயத்தை விட்டு மற்றொரு சமயத்தை
வாஞ்சித்தவரும், தேவதையைப் பூசித்து
நைவேத்தியம் வைக்காமற் போன பேர்க
ளும், தெய்வங்களைத் தொழுது பிதிர்க்கடன்
மறந்தவரும், தாய்தந்தையைப் போற்றாதவ
ரும், அண்டங்காக்கைப் பிறப்பி லழுந்தி ஆ
வென்று கதறி, தின்பண்டங்களைத் தின்ன
நிலையில்லாம லலையநேரிடும். தனக்கு மூத்த
வனை, மூத்தவளை, மனம் நடுங்கப்பேசி வஞ்
சித்தவர்கள் கொக்கு, நரையான் இவை முத
லிய பட்சியுருக்கொண்டு மகாபாவமடைந்து
மயங்குவதாகும். பிராமணனை யடித்தவர்கள்
திட்டினவர்கள், கோபமாய்க் கடுமை காட்டி
ப்பேசியபேர்கள், இவர்கள் யாவரும் வௌ
வாலாய்ப் பிறந்து, வாயினாற்றின்று வாயினா
ற்கக்கி, தலைகீழாய் நின்றுதனிநரகஞ் சேரக்
கிடைக்கும் வழிகளிற் போகிறவர்களை அடித்
துப்பிடித்து, ஆயுதங்களாற்குத்தியும் வெட்
டியும் அவர்களிடத்தில் உள்ள பொருளைப்
பறித்தவர்கள், கோவேறு கழுதையாகிக்குன்
றித்திரிவார்கள். ஸ்ரீஹத்தி, சிசுஹத்தி, பிரா
மணஹத்தி, இவை செய்தவர்கள், பறப்பரு
ந்தாப்ப் பிறந்து நரகமெத்தனையோ அத்
தனையிலும் நாளுமுழ்கிக் கிடப்பார்கள்.

அன்றியும், அன்னம், கறி, காய், பால்,
தயிர் இவைகளைப்பின்னம்பண்ணினவர்கள்,
தேவாராதனை செய்வதற்கு முன்னே தின்ற
பேர்கள், ஆயுதம் இல்லாத பேரைச் சண்
டையிட்டுக் கொன்றபேர்கள். ஆகிய இவர்
கள் சலசரமாய்ப் புழுத்துச் சஞ்சலப்படுவா
ர்கள். இரும்பை, பொன்னை, வெள்ளியை,
இன்னுமுள்ள லோகங்களை மறைத்த பேர்
கள், குரங்கு, கோட்டான், ஆந்தை இவை
முதலாகிய குரூர ஜன்மங்கள் எடுத்துக்குறை
ந்து, நிறைந்த நரகத்தில் மிதப்பார்கள்.
அடைக்கலப் பொருளை அபகரித்த பேர்க
ளும், அண்டின பேரைக் கண்டித்துவிண்ட
வர்களும், சண்டாளராகி நிந்திக்கப் பட்டு,
வருணப்பாச பந்திப்பில் அகப்படுவார்கள்.
பரிமள திரவியத்தை அபகரித்தவர்கள் மூஞ்
சூராய்ப் பிறந்து, துற்கந்தமாய் நாற்றமெடு
த்துச் சோம்பித் திரிவார்கள். ஸ்திரீ சனங்
கள் இப்பேர்ப்பட்ட பாவங்க ளிழைத்தால்
அவர்களும் இப்போதுரைத்த பிறவிகளில்
பிறந்து ஏங்கி மயங்குவார்கள். இத்தருமங்
கள் எவர்களுக்கும் பிடிப்படாது. நானறி
ந்தமட்டுஞ் சொன்னேன். இன்னும் அநே
கம் உண்டு. அவையனைத்தையுந் தருமசாத்
திரங்களினால யாத்திரப் படாமற் பார்த்துக்
கொள்ளலாம் என்று வீஷ்மர் சொல்லவுந்
தருமராஜன் மதி நிறைந்த மகிழ்வடைந்து,
பாட்டனுக்கு வாட்டந்தீர்த்துக்கூட்டமான
முனிவருடன் வணங்கி, ஐயா! அடியேன்
மனதிற் குறையில்லாமற் கேட்டுக் கொண்
டேன், இன்னுமொரு சந்தேகமென்னுளத்
திலிருக்கின்றது அஃதியாதெனில், மாமிசம்
புசிப்பதும் ஜீவஹிம்சை செய்வதும், மகாபா
வமென்று மகத்துக்கள் உரைத்திருக்கின்றார்
கள் இன்னுஞ் சில நூலோர் புசிக்கலாமெ
ன்று மறைத் திருக்கின்றார்கள். அதனது
உண்மை யென்ன இராஜர்கள். வேட்டை
போய் மிருகங்களைக் கொல்லுகின்றார்கள்.
அதைச் சமைத்து மெல்லுகின்றார்கள். வே
டர்கள் குல விருதாவாய்க்கொல்லுகிறார்கள்.
சீவனார்த்தஞ் செய்கிறார்கள். பிர்மக்ஞான
வேத எக்தாக்கள் பசுக்களை வதைத்து யாகம்
பண்ணிப் பரிந்தி அருந்தி விருந்திடுகின்
றார்கள். சாஸ்திரங்களை வகுத்த மகாரிஷிகள்
யாவரும் மாமிசத்துடன் அன்ன மருந்து
கின்றார்கள். சில்லறைத் தெய்வங்களுக்குத்
திர்ப்தி செய்கிறார்கள். பிதிர்பூசை, விரதம்,
நோன்பு இவை முதலியன செய்யும் பட்சத்
தில் ஊனுடன் உபசரிக்கும்படியாய்ப் பிரக
ரண மிருக்கிறதோ? இவைகளுக் கெல்லாம்
பாபமுண்டோ? இல்லையோ? எனக்கொன்
றுந் தோற்றவில்லை. ஆதலா லிவைகளில்
எனக்குத் தேற்ற முண்டாகத் திருவாய்மலர
வேண்டுமென்று கேட்க வீஷ்மர் சொல்லு
கின்றார்.

---

### கொலையும்புலையுந் தவிர்தலைப்பற்றிக் கூறுதல்.

அப்புா தருமநந்தனா! உலகத்தில் தரும
ங்களுக்கு அளவில்லை. எல்லாந் தருமங்க

ளுக்கும் பிரதானமானது விரதம். விரதங்க ளெல்லாவற்றினு முயர்ந்தது கொல்லாவிரதம். இதுதான் தருமங்களுக்குத் தலையாகும். ஜீவஹிம்சை செய்யில் அது பாபத்திற்கு வேராகும். இப்பால் நான்சொல்லவேண்டியதில்லை. இக்கொலைபாதகம் நான்குவழியி னில்வரும். அதாவது மனத்தினினைத்தாலும், வாக்காலுரைத்தாலும் புரளல், தேய்த்தல், நடத்தல், தின்னல் என்னுமிவைகளைத் தேகத்தால் நடத்தினாலும் கொலைபாவம்வரும். மநோவாக்கு காயங்களினால் வருகிற பாவமிதுதான். இதுகளில் நன்மை தீமையறிந்த பேரறிவுடையோர்கள் தங்கள் நாவின் ருசிக்காக இதரவுயிர்களின் மாமிசத்தை நாடிப்பொரித்து அவித்துப்புகைத்துச் சமைத்துப் புசிப்பது பெரும்பாவத்திலும் பாவம்இந்தமாமிசபுசிப்பால் தங்கள் அல்பவுடல் பருக்கவும், பலக்கவும், பாரிக்கவும், பூரிக்கவும், கொழுக்கவும், தழைக்கவும்நினைத்து மகிழ்வதை நீக்கிவிடுவாராகில், அவர்களிடத்தில் நிலைத்து நெடுநாள் நீங்காப்பாவமும் நீங்கும். ஒருயிரை ஒருவராற் கொல்வித்துத் தின்றாலும், தானேசெய்வதனாலுண்டான கொடும்பாவமேயாம். விலைகொடுத்து வாங்கினால் எப்படி பாவம்வருமென்றாலோ? இயாவருங்கிரயத்திற்குவாங்காவிட்டால், எவர்களு முயிரை மாய்க்கமாட்டார்கள். அவர்கள் கொலைக்கு மூலம் மாம்சம் சாப்பிடுகிறபேர்களேயாம். ஆதலால், ஊன் புசிப்பதை ஒழிப்பதுவிரதம். (நோன்பென்பது கொன்று தின்னாமை.) என்றும் (விலங்கிற்குப் புள்ளிற்குங் காடே புலன்கெட்ட, புல்லறிவாளர்வயிறு) என்றும், (கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லாவுயிருந்தொழும்.) என்றுஞ் சொல்லியிருக்கின்ற இப்பேர்ப்பட்ட சாஸ்திரப்பழக்கத்தினாலிப், சாதுக்களின் வழக்கத்தினாலும், விவேக சகாயத்தினாலும் வெறுத்துவிட்டால், மறுத்தும் வேறொரு தருமம் வகுக்கவேண்டியிராது. நம்மைப்போலுயிரென்றும் நாதவிந்துசகிதமென்றும், பசுபதினாதன் பரிபூரணமாய் நிறைந்திருப்பதென்றும், பட்சம் வைத்து ஜீவகாருண்ணியஇம்சைவைத்து, கண்டமட்டிற்கண்டருசியென்றும், அப்பாற்றிப்பியென்றும், அறிவாலறிந்துவெறுத்துவிட்டால் புலால் மறுத்தலென்னும் விதியை விதித்த மகாபுருடராவார்கள். மேலும் ஜனனங்கள் தோறுஞ் சைவம்வருமாகில் நல்வினைப்பயனே, இச்சென்மமுதலே னுநாடி நடத்தினாற் பெரிய பிரயோசனமாகும். புன்மையான புலாலைமறுத்தபேர்கள் நால்வகைப்பிறப்பில் ஏழுவகைத் தோற்றமாகிய எண்பத்துநாலு லட்ச யோனிபேதங்க ளியாவுங்கடந்து, பிறவிசாகரத்தையும் நீக்கிக் கரையேறி, சற்கிர்த்தியங்களாகிய எக்கியங்களெல்லாம் மூக்கியமாகப்பண்ணியபலனைப்பார்க்கிலுங்கண்ணியமான பயனைப்பெறுவார்கள். கொலை பிறவிக்குவித்து. ஊன்உயிருக்கு நரகச்சுமை இவ்வூனுண்ட உடல் முடிவில் நரிக்கும்நாய்க்கும், கழுகுக்கும், காக்கைக்கும்பொதிச்சோறு. இதனை நீ உணர்வாயென்று அன்புடன் சொல்லிய வீஷ்மரைத் தருமராஜன் தொழுது, யானந்தக்கண்ணீர் பொழிந்தழுது இருகரத்தையுஞ்சிரத்திலேற்றி, இதுகாறுமிதை யறியாது பழுதுநடந்தேனே பாவியேனென்று பாட்டனைப் பணிந்து ஐயா! தென்புலத்தாருக்குத் திருப்தியாகச்செய்யும்மாம்சபட்சணமார்க்க மென்னவென்ன அதற்குச் சந்தனுகுமாரர் சாற்றுகின்றார்.

ஓ சந்திரகுலாதிபனே! யாக எக்கியகிருதுக்களுக்குச் சீவன்களுடைய வகையெடுத்து மந்திரார்த்தங்களில்ஓமம்புரிந்து தேவதைகளுக்கு அக்கினிமுன்னிலையில் திருப்தி பண்ணிவிட்டுச் சிந்தைகளிப்ப தாகையால், அந்தத் தோஷம் அவ்வழியாய் விலகிப் போம். பிதுர்க்களுக்கும் அவ்வாறே வேத பூந்திர விதிப்படிக்கு நிவேதனம் பண்ணலாகும். குடிகளிடும் பயிர்முதலிய உயிர்களுக்குந், தவசிகளுக்கும், இடையூறில்லாமல் வேட்டையாடுவது வேந்தருக்கு முறைமை. ஆதலாதிற் பழிபாவமில்லை. வேடர்கள் குலாசார தருமத்தைக்கொண்டு திரிவதனாற் குற்றமில்லை. சாத்தேயமென்னுஞ் சமயமொன்று அதி லதர்வணவேதப் பகுப்பினால் யாமளநூலின்படி யந்திரமந்திரசம்பந்தமான தேவதைகளுக்குப் பிரார்த்தனைசெய்து பலியிடுவது. அப்பலி மந்திர தேவதார்ப்பிதமாம். அதிலும் வழக்கில்லை. வேதத்தில் விதித்த விதிவரு நடப்பார்க்கு வேங்கியம் இல்லை. அனித்திய தேகத்தைப் போஷிக்கு நிமித்தம் ஓராத்மாவை அனித்தியஞ்செய்தால், அறிவாலறிந்த அக்கிரமமென்று அந்தகன் தண்டிப்பார். (முற்பகைசெய்தாற் பிற்

பகைவிளையும்) என்னும்பழமொழிக்கிணங்க எவனெந்தவுயிரை எவ்வாறு கொன்றனோ? அவனை அந்தவுயிர் அவ்வாறு மறுசனன மெடுத்துவந்து கொல்லும். இது வேதாகமத்திற் உயிர்வதைப் பிரகரணத்திற் சொல்லும். ஆதலால் யாரும் பழிக்குடன்படலாகாது, தெரிந்தவரென்பவர் சகல சீவன்களையுந் தன்னைப்போல் நினைந்து பரிந்தவரல்லவோ? நற்கதி வேண்டினபேர் நாற்றமுள்ள ஊனை மறுப்பார்கள் துற்கதி விரும்பினோர் உயிர்தொலைத் துண்பார்கள். மேலான தவத்தைச்செய்து வேள்வி முடித்தவர்களானாலும், உயிர்வதைச் சம்பந்தம் ஊனருந்தும் விருப்பினால் கிஞ்சித்துவருமாகில், அது துன்பப்படுத்தி நரகத் துரவிற்றள்ளும். அப்பால் தலையெடுக்கமாட்டார்கள். அப்பேர்ப்பட்ட பொல்லாங்கான காரியமென்றெண்ணியே எல்லாந்துறந்த பெரியோர் உயிரெலாந் தாமென்றிருந்தார்கள்.

இதன்றியும், பூமியிற் றோன்றிய இலை காய் கறிமுதலியபதார்த்தங்களுஞ் சீவன்கள் தானே என்றால்? மச்சமுதலிய மாம்சங்களைப்போற் காய்கறி பதார்த்தங்களைச் சொல்லப் போகா. மரக்கறிகளுக்குச் சீவனுண்டாயிருந்தாலும் ஓ ரறிவுடையன. மற்றவைகளோவெனில், ஈரறிவு, மூவறிவு, நான்கறிவுடையன. மேலும், இவைகளுக்கு அவயவங்களேற்பட்டிருக்கின்றன. இலை காய்கறிகளுக்கு மூக்கு, நாக்கு முதலிய அவயவயமில்லை. இரத்தமாம்ச சுக்கில சுரோணிதமில்லை. ஊனறண்ணீரொன்றுமாத்திரமுண்டு அதுவும் வெப்பு நீராம். அவைகளை அறுக்கும்போதும் பிடுங்கும்போதும், பறிக்கும்போதும், முறிக்கும்போதும், தறிக்கும்போதும் பதைபதைப்பு துடிதுடிப்புமுதலிய வருத்தங்களில்லை, சிவப்புரெத்தம் பரவவுமில்லை, உபத்திரவமுமில்லை. இவ்விலை காய்கறிமுதலிய வஸ்துக்கள் தேவதாயோக்கியமென்று வேதங்களில்விரும்பியிருப்பது இந்தவஸ்துக்களெல்லாந் தெய்வப்பிரீதியென்று தெரிந்தேயிருக்கிறது. எல்லாம் ஈஸ்வரார்ப்பிதமென்று பறித்தாற் பாபமில்லை சகலபூதாதிகளிலுஞ் சர்வேஸ்வரர் சானித்தியமானவனே நானென்றும் நீயென்றும் அவனென்றும் இவனென்றும் உவனென்றும் பேசுவதற்கிருக்கின்ற அத்துவிதியாகிச் சகலமுநாசமாயிருப்பவர்களுக்கும், காய்கறிகளிலேயுஞ் சீவனுண்டென்று சிந்திப்பது தருமம். ஆனால் மற்றையர்கள் சமையற் செய்து கொடுத்தால் ஈஸ்வரார்ப்பிதம்பண்ணி சாப்பிடலாமிவரல்லாதபேர்கள் மாம்சத்தை ஈஸ்வரார்ப்பிதம் பண்ணினாலும், வருந்தித் தொழுது அழுதாலும் உயிர்வதைவிடாது. பாபம் நீங்காது. அதேதெனெனில், உதிரமாம்சசம்பந்தம் உடல். எல்லா மிருகங்களும் எல்லாப் பட்சிகளும் எல்லாச்சலசரங்களுமுதிரம், நிணம், கொழுமை, நெய்ப்பசைஇவை முதலிய உள்ளன. தன் பெரிய தேகத்தில் ஒரு சிறியமுள்ளு தைத்தால் துன்பமும் துயரமும் பிரயாசமுந் தெரிகிறதல்லவா! அஃதறிந்திருந்துந் தன்னைப்போல் தாதுக்களுடன் சேர்ந்த உயிர்ப்பிராணியைப் புசிக்க அறுக்கத்துணிவது, அனியாயம் ஹரி ஹரி அந்தக்கொடுமையை நானென்னென்றெடுத்துரைப்பேன். தன்தன் பிள்ளைக்குட்டிகள் தரையில்வீழ்ந்தால் காயமானால், இரத்தங்கண்டால், வியாதிநேரிட்டால் உடனே தங்களுள்ளமு முடலும் பதைபதைக்கின்றதைப்போற் பாராமல் தாங்கள்வல்லுயிரென்றும் அவைகள்புல்லுயிரென்றும் மனம்பொருந்திக்கொள்ளுவது தருமமா? மகாபாவமென்று பார்த்தும் பாராமற்செய்கின்றவர்களுடைய வம்ஸம், ஆயுசு, செல்வம், இவையாவும் பாழ்பட்டுப்போம், ஐயோ, இந்த ருசியைப் பெரிதாயெண்ணிப் பசியைப் பரிகரிக்கின்றார்களே இதனாற் பாபவசி பெரிதாயிருக்கிறதே. யோக்கியமான உயர்ந்த பிறப்பிற் கல்விஞானமுள்ள மானிட யாக்கையில் வந்தும், சண்டாளத்துவம்பெறுகிறார்களே பூததயை, பச்சாதாபம், ஈவு, இரக்கம்இவையில்லாத பேர்களை மனிதரென்று மதித்த பேருக்கு மாளாத்துன்பமு மீளாநரகமுமுண்டாமன்றோ? புலால்மறுத்துப் பெரியோராகித் தவம்புரிந்து மோட்சமடைந்த சாதுக்களாகிய சீவன்முத்தாள் அநேகருண்டு. அப்பேர்ப்பட்ட உத்தமர்களை எல்லா உயிருங் கைகூப்பிவணங்கும் சீவஹிம்சையை விடுத்தோர் சுகப்பிரமம்போலாவார்கள்.

ஓ தருமநந்தனா! பூர்வம் இவ்வுலகமெல்லாம் ஒருகுடையிலாண்ட சுவாயம்பு மனுவானவன் மார்க்கண்டேயரைவணங்கி, புலால் மறுத்தலைக் குறித்துக் கேட்டான். அம்மார்க்கண்டேயர் இப்போது நானுனக்குச்

சொல்லிவந்த பிரகாரமே சொன்னார். இன்னுமனேகம் பெரியோர்களு மிதைப்பற்றி வெகுவாய்ப்பேசி யிருக்கின்றார்கள். ஆதலாற் புலாலை மறுக்கவேண்டும். அதனால் ஆயுள், செல்வம், கீர்த்தி, இவை முதலிய வணிகி முடிவில் மோட்சமுமுண்டாம் மனிதசன்மத்திற் பிறந்தும் இரக்கப்படாமல் ஊன்புசிக்க விரும்பிய பேர்கள், இராக்ஷசகிர்த்தியத்தி லிருந்து நாசமுறுவார்கள். பூர்வந் தேர்கள் பெரும்பாவமென் றறிந்து, வேதாகமங்களினாற் றெரிந்து புலால் மறுத்தார்கள். அப்பால் இராக்கதரை வென்று செயம் பெற்றார்கள். அந்த மாம்சத்தை நீக்கிய லாபம் உடனே சத்துரு செயத்தைச் சல்தியில் உண்டாகச் செய்தது. அதனால் தேவர்கள் விசாரந்தீர்ந்து சுகமடைந்தார்கள். ஆகையால், தானமும், தவமும், தருமமும், தியானமும், வேள்வியும், ஞானமும், கல்வியும், நற்கருமமுமாகிய விவைகளை நாளும் விடாதியற்று மவர்க்கு, ஊன் உரிசை தேடி உயிர்வதைசெய் துண்ணுதலே அங்கமாகும். அவரங்கந் தங்கமாகும். மேலும், ஒருவேளை மாம்சந்தின்னாத பலனும், நூறு வருடந் தவம்பண்ணிய பலனுஞ் சரியாகும் இன்னுஞ் சொல்லா நின்ற யாகாதி கிருதுக்களும், விரதாதி நோன்பாதிகளும் புரிந்து, புண்ணியமெல்லாங் கிடைத்து, சத்தியலோகம் புகுந்து நித்தியமா யிருப்பார்கள். சகரச்சக்கிரவர்த்தியும், நளச்சக்கிரவர்த்தியும், திலீபச் சக்கிரவர்த்தியும், பகீரதனும் மேலான ராஜராஜர்களும் ஊனை வெறுத்து, உண்மையான உலகத்தைப் பெற்றார்கள். சில பேர்கள் மாம்சத்தை விடமாட்டாமல், அம்மகாபாவந் தீரத்தக்கதாய் வருடத்திற் புரட்டாசி, கார்த்திகை, தை, சித்திரை இந்த நான்கு மாதமும் விட்டு மற்றமாதங்களில் மாம்சம் அருந்துவார்கள். இவ்வாறு அனுஷ்டித்து வந்தாலு நல்லகதி கிடைக்கும். இப்பேர்ப்பட்ட பெருமையை யுடையது புலால் மறுத்தலாகிய விரதம். ஒருநாள் விட்டாலும் அதற்குண்டாகிய பலனை அனுபவிக்கலாம். என்று சிதேந்திரியரும் ஜீவன்முத்தருமாகிய வீஷ்மர் சொல்ல, அதைத் தருமராஜன் கேட்டு, சுவாமி? இவ்வுலகத்தில் நல்லமணமுந் திவ்வியகுணமுமுள்ள கா யிலை பதார்த்தங்களிருக்கவிச்சும் நாற்றமுமுள்ள ஊனைப் புசிப்பானேன்! இதனா லென்ன பயன், இதனால்யாது பலன் என்று கேட்கக் கங்காபுத்திரர் சொல்லுகின்றார்.

ஓ கருமக்கடலைக் கடந்த தருமராஜனே இப்பூமண்டலத்தில் அக்கியானத்திலமிழ்ந்திருக்கின்ற அறிவீனர் உடம்பு கொழுத்துத் தழைத்துப் பருக்கவேண்டு மென்று சதாகாலமும் மாம்ஸத்தைத் தின்று ஸ்திரீவிடயக் குளங்களில் வீழ்ந்து மூழ்கி யெழுந்து,மூச்சுத்திணறி, பாபம்வருகின்ற பழிப்பை யுணராமற் கெட்டுப்போய் நரகத்தில் வாழுவார்கள். எப்படியானாலும் புசிப்பதும் போகிப்பதும் பிரதானமென் றெண்ணுகிற பேர்கள் நரகத்திற்கு நாணமற் கொழுத்த நிணத்தை தின்பார்கள். போகத்தையும், புசிப்பையும் பொருளாய் நினையாதவர்கள். ஊனைத்தின்னாமல் உயர்ந்த பதம் பெறுவார்கள். புலாலைத் தின்றுகொண் டிருப்பவன் அதனை மறுக்கவேண்டுமென்றாற் கொஞ்சத்திற் பொருந்தாது. ஒருவராலு முடியாது. முடிந்தா லருமைதான், பிறவி வேரறுத்துப் பேரானந்த மடைந்த மோட்சத்திற்குச் சமீபித்தவர்கள். ஊனை வெறுக்க உடன்படுவார்கள். தனக்குத்தானே சம்பவிக்கும். தான் கெட்டுப்போனாலுந் தன்னுடைய குடும்பத்தையுஞ் சந்ததியையுங், கொல்லாவிரதத்திற் காத்துக்கொள்வது எல்லாத் தவத்திலு மேலான தவமென்று சகல வேதாகம புராண சரித்திரங்களிலெல்லா முறையிடுகின்ற தல்லாமல், குற்றமற்ற பரிசுத்தமாகிய நின்மல மனசையுடைய அகத்தியரு மளவற்ற நூல்களில் மூன் விதித்திருக்கின்றார். அஃதென்ன வென்றால், வேலாளிகளாகிய அரசர்கள் வேட்டையாடித் துஷ்டமிருகங்களைக்கொன்று சிவயோகிகளாகிய தபசிகளை ரட்சித்துக் காக்கவேண்டிய கடமை யாதலால், அவர்கள் சொல்லலாகும், அதையவர்கள் புசித்தலுமாம். கொன்றமையால் தின்றமையே யதற்குத் தண்டனையாகும். இது சுருதிப் பிரமாணம். அசுத்த அயோக்கியரானாலும் இவ்வொன்றை மாத்திரம் புசியாமல் விட்டவர்கள் மாசற்ற பெரியோராவார்கள். இடையூறடையார்கள். இவர்களை விடப் புனிதர்கள் எங்குமிரார்கள். மோட்சத்திற்கு அருளுடைமையே முதன்மையாகிய பிரதானம். இரக்கமில்லாதபேருக்கு எதுவும் பலியாது. புலாலை விட்டுவிட வேண்டுமென்று நினைத்தாலும் போதும். அப்படியே

தள்ளிவிட்டாலு நல்லது அன்றைக்கே தீவினையற்றுப்போம். சாஸ்திரந்தெரிந்துந்தெரியாதவர்போற் றின்னுவது கொடியபாவம்.

ஐயோ? தமக்கு நேரிட்ட வினையைப் போக்கிக்கொள்ளவே வகைதெரியாமலிருக்க, சும்மாயிருக்கிற ஆட்டை, மாட்டை, கோழியை, குருவியை அடித்துத் தின்னுவதில் மாமடையப்போகிற மரணம் போய்விடுமா, கொலைசெய்துண்ணுங் கொடியோரைக் கண்டாலும், பேசினாலும், நேசித்தாலும், விசுவாசித்தாலும், அவர்களுடைய நிழல் பட்டாலும் பாவமாம். எல்லா வுயிருமொன்றென்று எவர்கள் நினைப்பவர்களோ, அவர்கள் நித்தியமான சத்திய உலகத்திற் சந்துஷ்டியா யிருப்பார்கள். எல்லா உயிரையுங் காலமறிந்து கொல்லுவதற்கு எமனொருவன் ஏர்ப்பட்டிருக்கின்றான். அவனுக்குமேல் நிற்பட்சமாய் உயிர்வதை செய்கிற பாவிகளும், தின்னுகிற லோபிகளும், தங்களைத் தாங்கள் பட்சிக்கிற சண்டாளராய் அழுநரகத்தி லழுந்தி, பின்னும் பிறந்து, பெருநரகத்திலாழ்ந்து, மீட்டு மிறந்து மறுபடியும் பிறந்து, இதுவே வேலையாய் நின்றலைவார்கள். அவர்கள் செய்த கொலையோ, பழிக்குப் பழி கொடுத்து, தருவழிகெடுத்து அநேக பாடுபடுத்தும். என்றைக்கும் உயிர்க்கொலை செய்வதையும் ஊனுண்பதையும் விடுகின்றார்களோ, அன்றைக்கே அருளென்பது தழைக்கும். அன்பென்பது முளைக்கும். ஆத்மபரிபாக மாகத்தக்க வேற்றுருவங்கொண்டு குருவருளுண்டாகி, தேர்ச்சியும், ஆட்சியும், காட்சியும் பெறுவார்கள். உயிர்க்கொலையினாலுங் கோபம், லோபம், கடுஞ்சொல், பைத்தியம், ரோகம், வயிறெறிவு, கண்ணெரிவு, காலெரிவு, கையெரிவு, எரிகுன்மம், பீணிசாதிகள், தலைகுற்றல், தேகநடுக்கம், தலையாட்டம், கண்ணீரோட்டம், பதைத்துக்கொள்ளுங்கிலி, உதைத்துக்கொள்ளும் வலி, சுவாசகாசம், இவைகள் முதலிய துர்வியாதிகளெல்லாம் ஜன்மங்கள்தோறும் வரும். முன்சென்மத்திலும் பின்சென்மத்திலுமிது ஊன்தேகமாதலால், ஊனை விரும்பும் கியானசூனியத்தினாற் சடபதார்த்தமாகிய இலை காய்கறிகளை இச்சிப்பதில்லை. இதைப்படித் தறிவதற்கு விவேகமும், சாஸ்திரமும், ஆசாரமுறையும் ஆசாரியனுதவியும்யோக்கியமான குலமும் ஒழுக்கமுமிருந்து உதவியினால் மகாசுந்தமாகும். என்று வீஷ்மர்சொல்ல, இவையனைத்தையுங் கேட்ட தருமராஜன் மனந்திடுக்கிட்டுப் பயமடைந்து, இனி நாமிந்தப் புலாலை விட்டுவிட்டு நற்கதி யடையவேண்டுமென்று சங்கல்பம் பண்ணிக்கொண்டு, பாட்டனுக்குத் தெண்டனிட்டு, ஓ ஒப்பில்லாத உண்மையுடைய உத்தமனே! சகல வுயிரும் வதைபத்தக்கதாக யுத்தமுகத்தில் கொல்லுகிறார்களே அவர்களுக்கு எப்படி கதிவரும்? பாபமில்லாமற் போகுமா? என்று கேட்கவும் அதற்கு முதியகுரவன் மொழிகின்றார்.

---

## சமர்க்களக் கொலையைப்பற்றிக் கூறிய ஓர் கிருமியின் கதை.

அப்பா என் மகன்வழி தோன்றலே! பிரகாசம் பொருந்திய தேயசுடையவரும், வேதங்களைச் சிக்கறுத்து விவரமாய்ப் பிரித்தவரும், தெய்வத்தன்மை பெற்றவரும் நமது வேதவியாசர். இவர் பூர்வம் ஒரு ஆரணியத்தில் தபசு செய்துகொண்டிருக்கும்போது, அவ்விடத்தில் நல்லரூபமாய் காலும், உடலும், பூமியிற் படத்தக்கதாய், ஒரு புழுவானது மஹாகிலேசத்துடன் ஊர்ந்து வந்தது, வருகிறமார்க்கத்தில் வேதவியாசர் தவமுகூர்த்தமா யிருந்ததைப் பார்த்துப் பயந்து, இவர் நம்மைப் பிடித்துக் கொல்லப் போகின்றாரென்று சீக்கிரத்தில் அந்த வழிமாறிச் சரசரவென்று ஒதுங்கிப்போயது. அதன் பயத்தையும் உயிர்மேல்வைத்த நயத்தையும் பார்த்த வாதநாராயணர் புன்சிரிப்புகொண்டு நடுங்கியோடுகின்ற புழுவைநோக்கி ஓ, கிருமியே! இன்பதுன்பத்திற் கேதுவான உடலெடுத்தோ மாதலால் இந்த உடலை யாரேனுங் கொன்றுபோட்டாற் போடட்டுமென்றெண்ணாமல் நடுங்கி யொடுங்கி ஒதுங்கியோடுகின்றாய். இப்படிக் கோடியும் என்ன லாபம் பெறப்போகிறாய்? இப்போது எடுத்திருக்கிற துன்பமானவுடல் போய்விட்டால் இன்னும் வேறே இன்பமான எந்த உடலானாலும் வருமென்றெண்ணாமல் வெகு நாளைக்கு நிலைபெற்றிருக்கும் பொருளைக் காப்பதுபோற் சாக்கிரதை பட்டனை. இதற்கென்ன வசனம் பேசுகின்றாய்? உன்னை நான் கொல்லவில்லை. உபத்திரவப் படுத்தவில்லை. நீ யோடாமனின்று உத்தரஞ் சொல்லென்று

கேட்டார். அந்தப்புழு மாதவ யோகீஸ்வர னை வணங்கி. ஐயா! அநேகங்கோடி ஆன் மாக்களா யவனி நிறைந் திருப்பதெல்லாம் பெரிதுஞ் சிறிதுமாயிருக்கின்றன. ஆதலாற் பெரியவுடலுக்குமுன் சிறியவுடல் பயப்பட வேண்டும். அப்படிக்கில்லாமற்போனால் உட னேபிராணனுக்குமுடிவுவரும். இந்தப்பயத் தினால் நடுங்கி உம்மைக் கண்டொடுங்கி அப் பாற் போனேன். பூத உடலுக்குத் துக்கம் பொறுக்கமுடியாம லிருந்தாலு மின்னுமிரு க்கவேண்டு மென்கிற இயல்பு மெண்ணமும் இயற்கையாயுண்டு இறக்கும்போதில் அவ ஸ்தை, ஆருமை, துன்பம், துயரம், உபாதி இவையெல்லா முண்டாம். இவ்வுடலானது எத்தனைவித வியாதியால் மெலிந்து, அவ யவங்குறைந்து இதுகெட்டுது போமென்று வெறுத்துவிடத் தக்கதாயிருந்தாலும், இற வாமலிருப்பது சுகமென்று என் புத்தியிற் றோன்றி இடைந்தூர்ந்தே னென்றது. அப்மொழியைக்கேட்ட பராசகுமார வியா சர் மகிழ்ந்து கருணை கூர்ந்து இதனைப்பேசு கின்றார்.

ஓ கிருமியே! நீ அருமையான வார்த் தை யுரைத்தமையால், இனி, எப்பேர்ப்பட் ட பெரிய ஜெந்துக்கள் எதிர்ப்பட்டாலும் அதனாலுனக்கு இடையூறில்லாம லிருக்கத் தக்கதாகவரங்கொடுத்தேன். நீசுகம்பெறுவா யென்றார். அந்தப்புழுவானது, ஓ மஹானு பாவரே! சிற்றறிவுள்ள யான் தெய்வ முனி வருட னிருப்பது சுகமென்று சற்றுமுண ராமல், தேகத்துடனிருப்பது செல்வமென் றுரைத்தேன், சுவாமி! உடலுக்குத் தக்கது உயிர். உயிருக்குத்தக்கது உணர்வு, உணர்வுக் குத் தக்கது குலம். குலத்துக்குத் தக்கது குணம். இந்த குணங்கொண்டிசைத்த என் மொழியைக்கொண்டு பகைபற்றுச் சுகம்பெ ற்றிருக்க வரங்கொடுத்தருளினீர். ஆண்ட வனே! எலும்பில்லாத ஆக்கை யெடுத்த என்னுடலுக்கு என்னசுகமிருக்கிறது? தோ ன்றியபோதே துன்பமல்லாமல் இன்பமே து? எவ்வளவுமில்லை. அப்படிக் கிருந்த போதிலும், தற்காலத் தனுபவிக்கிற போக த்தை விரும்பி, இதுதா னின்பசுகமென்று எண்ணி மகிழ்ந்து, அநேக துன்பத்தில் அகப்பட்டழிந்தவன் அநுவத்தனைதேனை நக்கி ஆனந்தமுற்றாற்போல், இப்பிரபஞ்ச வாழ்க்கையிற் பேரானந்தப்படுவதே யல்லா மல், உன்னிப்பார்க்கில், ஒன்று மிராது, ஊனற்றுலர்ந்த என்னைக்கடித்துவக்கு நா யின் சுகமெவ்வளவோ? அவ்வளவே யிந்த வீணான சுகமென்றெண்ணாமல், இவ்வற்ப சுகத்தை யொருபொருளாயெண்ணி ஆனந் தப்படுவதில் அன்புண்டோ வென்று வணக் கத்துடன் உபசரித்துச் சொல்லியது. இவ் வாறு கூறிய புழுவினிடத்தில் வியாசர் கிரு பைவைத்து, ஓ கிருமியே இந்தப் பொல் லாத உடலெடுத்து வருகிறதற்குப் பூர்வஜன் மத்தில் என்னபாவம் பண்ணினை சொல் லென்றுகேட்க, அதற்குப் புழுவானது மகி ழ்ந்து, ஐயா! நான் தவமில்லாத தாழ்ந்த குலத்திற் பிறந்தவன். என்பெயர் சூத்திரசா தனி, கொலை, களவு, கள், காமம், பொய் இவை முதலிய பாதகங்களெல்லாம் குடி வைத்துக் கொண்டவன். பெரியவர்களுக் குத் தொண்டுசெய்து அவர்களைக்கண்டு தரி சித்துக் காட்சிபெறுதவன். பொல்லாத பேர் களுடன் பொருந்தித் திரிபவன், சாத்திரம் படிக்காத சண்டாளருறவைச் சம்பாதித்துக் கொள்பவன். தருமத்தைக் கனவிலு நினை யாதவன். சாந்தமொழி யற்றவன். சண்டை மொழி கற்றவன். மேலான மூர்த்தியாய்ச் சகலாத்மாக்களையும் ரட்சிக்கப்பட்ட ஜகதீஸ் வரனைச் சற்றேனு நினையாத தறிதலையன் அறிவுடனே நன்னெறி நில்லாதவன் பழி பாவங்களைச் செய்கின்ற பாவிகள் கூட்டத் திற் பங்குவைத்திருப்பவன் இப்பேர்ப்பட்ட துட்டனை யெங்கனுங் கேட்டறியமாட்டீர் கள். நான் இப்படி யெல்லாத் திரிந்திருந்த போதிலும், என்னையீன்ற அன்னைக்கு மாத் திர நல்லவனாகி, தோத்திரம்புரிந்து, பாத பூசைபண்ணி, கடுமொழிமறந்து கால்மேல் விழுந்து, அவள் ஆசீர்வதிக்கச்சிறந்து, பஞ் சபாதக கொடுமைத் தொழிலிற் பறந்து பற ந்து பால்மாறாது திரிந்தகொடியன்.

இவ்வாறு சிலநாட் சென்றபின் காட்டு வழியில் ஒரு பேரறிவுடைய பிராமணனைத் தொடர்ந்து, அவருக் குரியவனாகக் கலந்து வழிபாடுபட்டு மாற்க்கசகாயனானேன். பின்பு அந்தக்கர்மதேகநீங்கி, யமவாதையிலோங்கி சிலநாள் நரகத்திற் றூங்கி, இந்தப்புழுத்தே கந் தாங்கினேன். இப்படி வேதப்பிரமாண மாகி வழியே சென்ற ஓரதி திக்கு ஒருநாள் வழிப்பட்ட பலனும், தாயைப் பூசித் துச் சரணடைந்த பலனும், ஆகிய விவ்விர

ண்டு பலனுமென்கை தூக்கி, புழுவாய்ப்பிறந்தும் பூர்வக்கியானந் தெரிந்து புகலும்படியான புத்தியை வகித்தேன். சுவாமி! முன் பண்ணிய பாவங்களையெல்லா நினைத்துப் பதைபதைத்து ஐயோ! என்னபாவம் பண்ணினேம்? என்னேரமும் பயந்துநடுங்கி ஒடுங்கி அடங்கி, புழுவாய் முடங்கிப்புரண்டு உழலுகின்றேன். ஓ புண்ணியாத்மாவே எனது பூர்வசென்மத்தின்சீர் இதுவென்று அங்கலாய்த்துச் சொல்லியது. அதைக் கேட்டலும் பிர்மாவுக்குச் சமானமான வியாசருக்குப் பரிதாபம்பிறந்து, ஓகீடமே! பயப்படாதே, உன் துயரமெல்லாம் பறந்தோடப் பண்ணுகிறேனென்று பட்சம்வைத் துரைத்து, உனக்கு வேண்டிய வரங்களுந் தருகிறேன் கேளென்றுவிரும்பி புகன்றனர். உடனேபுழுவானது வேதவியாசருக்குப் பிரதட்சண நமஸ்காரம் பண்ணி, ஓ புண்ணியமூர்த்தியே! அடியேன் இந்தத் தேகம்விட்டு யோக்கியமான புனிதக்கியான தேகமெடுத்து இக்கருமபூமியிற் புண்ணிய தருமங்களைச் செய்து, கண்ணியமான கதிபெறத் தக்கதாக அனுக்கிரகம் பண்ணி ஆண்டருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டது அப்போதே வியாசர் சிரக்கம்பஞ் செய்து ஓகிருமியே! நீ இப்போதிருக்கின்ற புழுத்தேகத்தை விட்டுப் புலைத்தேக மெடுத்து பயிர்ப்புனங்களைத்திருத்தி பின்பு சூத்திரனகப்பிறந்து, சத்தியசவுசபத்திற் பயின்று, அப்பால் வைசியரிலுதித்து, வணக்கம் பொறுமை விரதம் நோன்பு இவைமுதலியவைகளிற்பழகி, அதன்பின் க்ஷத்திரியப் பிறப்பிலுற்று, யாகாதிகிருதுக்களை வகித்து, இராசநீதி முறைகளைச்செலுத்தி புண்ணியப் பொருளே பொருளெனமதித்து சோடசமகாதானமுநடத்தி நற்கதிதருவாய். இந்தச் சனங்கள்தோறும் உனக்குப்பூர்வக்ஞானந் தோன்றத்தக்கது என்று அருள்சுரந்தனர்.

இவ்வாறுரைத்த வேத வியாசருடைய திருவடிகளை அக்கிருமி முடிசூடிப் போற்றி ஏத்தி யிறைஞ்சித் தோத்திரிந்து, சுவாமி! கரைதெரியாத துக்கசாகரத்தில் மூழ்கிப்போனகடையேனைக் கைகொடுத்துக் கரையேற்றி விட்டீர். நான்கடைத்தேறினேன். இனிகதியறியேன் கவலையறியேன். என்று கண்ணீர் சொரிந்து புழுவாகிய புல்லுடலை மாற்றிப் புலைக்குடியிற் பிறந்து பூர்வக்ஞானத்துடன் வளர்ந்து, நன்மைகளை நாடி, உண்மையோடுறவாடி நல்வினையைக்கூடி நலிந்துகண்மூடி சற்சூத்திரன் வீட்டிற் பிறந்து ஜன்மக்ஞானத்துடன் சிறந்து நற்றவம் புரிந்து, நன்னினைப்புடனிறந்து வைசியகுலத்தி லுதித்து, மகாகியானப் பிரக்யாதியாய் வளர்ந்து குலமுறைதெரிந்து வாணியம் புரிந்து அளவற்றதிரவியம் செறிந்து. தருமதானம் புரிந்து, கல்விகற்ற அறிவுள்ளபேருக்குத் தாட்சியில்லாமற் றுட்டியாய்க் கொடுத்து, இன்ன தருமம்பண்ணினேன் இன்ன தருமம்பண்ணவில்லையென்று எவர்கட்குந் தோன்றாமலியற்றி சகலருங் கொண்டாடும்படியாய் அவ்வுடலை மாற்றி அரசனாகப் பிறந்து ராஜமுறைப்படிக்குச் சதுர்வித உபாயமுந் தெரிந்து, தனுவேதமுதலிய சாஸ்திரங்கள் படித்து தாயதரெல்லாங் கொண்டாடும்படியாய்த் தவங்களிழைத்து வரங்கள்பெற்று உரங்களுற்று கரங்குவித்துப் பெரியோரைச் சேவித்து அழகிய பூமிதேவியாருக்குப் பழகிய கிரீடாதிபதியாகி உலகமெல்லாம் புகழ உரிய பெரியோர் மகிழ வேதப்பிராமணரு ளிந்த வேந்தனைப் போற் சாந்தகுணமாய் வாழ்ந்தவ ரிதுவரையிலுமில்லை யென்று வாழ்த்த இராச்சியபரிபாலனம் பண்ணிவருகின்றான். இப்படியிராச்சிய பரிபாலனஞ்செய்து வருகின்ற நாளிலொருநாள் துதிக்கையுடன் மதத்த கதத்த மலைவிதத்த யானையின்பேரில் வெண்குடை கவிக்க ஆரோகணித்து விருதுடால் பிடிக்க சாமரம்போட சரசிகள்பாட வாகுவலயம் பிரகாசிக்க முத்தாரம் ரத்தினாரம் கொத்தாரம் தொத்தாரம் வித்தாரஞ் சொலிக்க சூரியபிம்ப மகுட ரத்தினாபரங்கள் துலங்க ஆலவட்டந் தாலவட்டம் மயிர்பீலி மகரதோரணப் விருதுக்கொடி இவை முதலான ராஜசின்னங்களையுடைய கூட்டத்துடன் நால்வகைச்சேனையு மறுவகைப்படையும் புடைகவிந்துவர பேரி பாங்கா காகளம் ஜெயமுரசு இவைமுதலிய வாத்தியங்கள் மேகமுழக்கம் போல் அதிர அஷ்டமா நாகங்களும் அஷ்டகுலாகலங்களும் அஷ்டமா யானைகளும் அஷ்டதிக்கு பாலர்களும் பயந்து சிதறபுகழும் பிரதாபமும் லோகமெல்லாம்பரவி வேருன்றிப்பட, கட்டியர் பட்டோலை படிக்க காரிகையார் பரத நாட்டியநடிக்க இப்போர்ப்பட்ட ஓட்டோலக்கத்துடன் பவனி வருகின்றான்.

இப்படி வரும்போது தன்னேடுவாகன மேலாகிய வேதியர் கூட்டத்துடன் வேதவியாசருடைய ஆசிர்மத்திற்குவந்துபட்டத்து யானைவிட்டிழிந்து மார்பிலுந் தோளிலுஞ் சிரத்திலுங் கரத்திலும்அணிந்த ஆரகேயூர வீரமதாணிப் பதக்கங்கள் அசைந்தாடச்சென்று வேதவியாசரைக்கண்டு பிரதட்சண நமஸ்காரஞ் செய்து பொன்னின் பூவாலும் மணிகளின் மலராலும் அருச்சனை புரிந்து பாதகாணிக்கை தட்சணை வைத்து அறுகு அட்சதை தருப்பைமுதலிய புனித வஸ்துக்களினல் சோடச மகாபூசையும் பண்ணி எக்காலுந் தன்னிதயம் விட்டகலாதமூர்த்தியை மூக்காலுந்தொழு ஈ முறையிட்டழுது தேவரீருடைய அருட்கண்பார்வை இந்த ஸ்திதியில் கொண்டுவந்து விட்டதென்று கூச்சலிட்டுத் துதித்து ஓ என்னைத் தடுத்தாட்கொண்ட இறைவனே! ஓ என் குருமணியே! ஓ என் கண்மணியே! ஓ இன்பக்கடலே! ஓ இனியவமுதே! ஓ யிதயத்துணர்வே! ஓ என்னருமைச் சுகமே? என்று மாருத அன்பினுடன் சீராகி வணங்கி பின்னும் பின்னுந்தோத்திரம்பண்ணி ஓ என் ஆண்டவனேஸ்வாமிகளுடைய கிருபாகடாக்ஷ வீக்ஷண்யத்தினுற் புகழ்ச்சென்மம் வாய்ந்தது. தேவரீர்என்பங்கில்முழுமைக்குமிக்கடாட்சம்வைத்து, இனிமேற் பிறவியெடாம லிருப்பதற்கு ஏதுபேசவேண்டுமென்றிரந்து வேண்டி விரும்பினன் வேதவியாசருக்குச் சந்தோஷஞ் சனித்து, உள்ளங்களித்து உடல்பூரித்து இதயமலர்ந்து ஆசிர்வசனம்புகன்று பர்ணசாலைக்குட்புகுந்து அவ்வரசனேடு ஏகாந்தமாயிருந்து ஓ யரிமளமலர்மாலை புனைந்த பார்த்திபனே! இனிமேற் பிறவிவராது ஒருவேளை வந்தால் இறவாம லிருப்பதற்கு உபாயஞ் சொல்லுகிறேன்கேள். வேதர்கசியம் விளம்புவதியாதெனில் பிராமணர் பொருட்டினுலும் பசுக்கள் நிமித்தத்தினுலுஞ் சத்துருவின் யுத்த முனையினுலுஞ் சீவனை விட்டானுகில் அதுவே நற்சனனமாகும் இவைதான் புருடசென்மத்திற்குப் பிரதானமான நன்மைகள் இவ்வழிகளறிந்துமேற்சொன்ன மூன்றுவிதத்திலேயானுலும் உயிருதவி செய்வானுகில் பிராமணகுலத்தில்பிறந்து உடனே சாஸ்திரவேதசம்பன்னனுகிய பிர்மரிஷியாகிய முக்காலமுணர்ந்த முதல்வனுய் எக்காலமும் எம்மைப்போலிருப்பான். ஆதலால் நீயுமிவற்றில் ஒன்றை யனுஷ்டித்து முடிப்பையாகில் வேதவேதியர் குலத்தில் பிறந்து மேன்மைபெறுவாய் என்று அவ்வைக்குரிய மார்க்கத்தோடு மந்திரானுக்கிரகமும் பண்ணினர். அப்போதவ்வரசன் சகல முனிவர்களும் உயர்ந்த தாளாண்மைபெற்ற சகல சாஸ்திரமுங் கற்ற வேதவியாசரின்பாதத்தில்வீழ்ந்துபணிந்து, கடைத்தேறினேனென்றும் மகாமந்திரோபதேசத்தை உறுதியாய்க் கொண்டு எல்லாத் தேவர்களுக்கும் அமுதகிரணக்கலையைக்கொடுத்து ஆதரிக்குஞ் சந்திரனைப் போன்ற கிருபைவாய்ந்த வியாசரை விட்டு நீங்கித் தன் பட்டணத்துக்குப் போய் வியாசர் உரைத்த மூன்று விதத்தில் எந்த விதத்திலாவது உயிரையொழிக்கவேண்டுமென்று எண்ணிக்கொண்டிருக்கின்றன். அப்போது பிரபல யுத்த நேரிட்டது. அந்தப் போர்முகத்தில் அவ்வரசன் போய் நின்று சவுரிய தயிரிய பராக்கிரமத்துடன் சண்டைபோட்டு நல்ல சுத்த வீரன் கையால் இறந்து அப்பாற் பிராமண குலத்தில் பிறந்த மகாரிஷியாய்ச் சிறந்து அளவிறந்த வேதாகம புராணந் தெரிந்து நெடுங்காலந் தவமிருந்து மாயை நீங்கிய தூய்மையாகிய புனித மாந்துவாய்தேவேந்திரனுக்குச் சிநேகமாய் தேவர்களாலும் மற்றயாவர்களாலும் கடவுளர் மூவர்களாலும் அவ்விதேய மகாரிஷி யென்கிற அரும்பெயர்பெற்று இயாகாதிகளெல்லாமியற்றி நீல மேனியராகிய நெடுமாலுக்குச் சமானரென விளங்கி வாதராயணரின் மலர்ப்பதம் வணங்கிவானவர் அருச்சனைபுரியும் வரிசையடைந்து மகாவிருடி மூர்த்திகளில் ஒருவனுக வாசம்பண்ணிக் கொண்டிருக்கிறன் ஆகையால் சத்துருக்கள்பேரிற் சண்டைக்குச்சென்று வெற்றிபெற்று வீரங்காட்டிப்புகழ்நாட்டி இறந்தபேர்களுடைய பேரும் சிறப்பும் வீரசுவர்க்கமும் நான் இன்னும் விளம்பவேண்டுமோ? ஓ அன்னதான முதலிய வறங்களை அன்போடியற்றுந் தருமநந்தனு! இன்னும் பதினெட்டுநாள்கொடிதாகியயுத்தம்பண்ணி யிறந்த உங்கள் கூட்டத்தைக் குறித்தும் பதினெட்டு அக்குரோணிப் படைகளை நினைத்தும் நீ கவலைப்பட வேண்டாம் அவர்களில் யாவரும் பூமியிற் பிறவா நெறிப்பெற்று என்றைக்கு மொன்றுகிய சொர்க்கத்திற் சுகமேயிருக்கின்றார்கள். இதற்கு மேலாகிய பேறென்னவுண்டு என்று யுத்த முகத்தில் வெற்றி

பெற்றுயர்ந்த வீஷ்ம ரியம்பினுர். விதரண்ணன் தருமராஜன் புகழ்ந்து மகிழ்ந்து ஐயா, இப்பூமியிற் கல்விகற்றவன் தவமிருந்தவன் தானங்கொடுத்தவன் இம்மூவரில் யாருயர்ந்தவர்கள்! இம்மூன்று காரியத்திற் சிறந்ததெது! இதனைச் சொல்ல வேண்டுமென்று கேட்க வீஷ்மர் பேசத் தொடங்கினுர்.

## கல்வி தவம் தானம் இம்மூன்றின் தாரதம்மியங் கூறுதல்.

அப்பா குவலேத் தாரோய்! மூற்காலத்தில் அக்கிரகண்ணியனுகிய மயித்திரேயமகாமுனியானவர் வேதவியாசரை வேண்டித்தொழுது இப்போது நீகேட்ட சங்கையைக் கேட்டார். அவருக்கு வேதவியாசர் விளம்பியிருக்கின்ருர் அதே பிரகாரம் நான் சொல்கிறேன்கேள். கல்வி கற்பதிலும் தவம்புரிவதிலும், தானங் கொடுப்பதிலும் தாரதம்மியமுண்டு. அஃதெவ்வாறெனில் மெத்தப் பிரயாசைப்பட்டு வித்தை கற்கவேண்டும் தவமும் அருமையாய்ச் செய்யவேண்டும். இவ்விரண்டையும் பாபமில்லாமற் சம்பாதித்த பொருளைத் தானங் கொடுக்குங் காரியத்தால் இலேசிற் பெறலாகும். இத்தானமொன்றே கல்வியையுங்கற்று கடுந்தவமு மிழைத்து, கடவுளர் கிருபைபெற்றுக் கடைத்தேறச் செய்யும். பெரும்பயனேயும் பெறலாகும். சகல தானங்களிலும் உத்திர்ஷ்டமானதானம் அன்ன தானம். இந்தத் தானங் கொடுத்தவனும், வாங்கியுண்டவனும் திருப்தியடையவேண்டும். இருவரில் ஒருவருக்கு மனத்தாங்கலிருக்குமாகில் இட்டும் பிரயோசனமிராது. இந்தத் தானத்தில் சீவரட்சணே யிருக்கிறபடியால் உத்தமமென்று உரைப்பது மற்றத் தானங்களும் பெரிதென்பதற்கு மாறில்லே. ஆனுல் எல்லாவற்றையும் உலகமெச்சக் கொடுக்காமல் இவ்வன்னதானத்தைப்போல் உண்மைக்ஞான ஆன்மா மகிழ ஒருமைப்பட்டுக் கொடுத்தால் வாங்கினபேரும் வழங்கினபேரும் பதம்பெறுவார்கள் வையகத்தில் ஐயமில்லாத கீர்த்தி தழைக்கும் என்று புகன்ற வீஷ்மரைப் பாண்டு குமாரன் பணிந்து ஆண்டவனே நான் காண்டற்கரிய பொருளெல்லாங் கரைத்தீர். பெண்டுகள் செய்ய வேண்டிய கருமங்களென்ன! அவர்கள் எந்த விடத்திற் கதிபெறுவார்கள். இவற்றைச் சொல்லவேண்டும் இறைவனே என்று ஏற்றினுர் வீஷ்மர் சொல்லத் தொடங்கினுர்.

## ஸ்திரீகள் நடக்கவேண்டிய நல்லொழுக்கத்தைப்பற்றிக் கூறுதல்.

ஓ வடிசுடர் வேலோங்கிய மகிபனே! தெய்வலோகக் கற்பக விருக்ஷத்தி னீழலில் விநோத வேடிக்கையாகப்பாக்கிய போக்கிஷமென்ன வீற்றிருந்த சாந்திலே யென்னும் பதிவிரதா ஸ்திரீயானவளே பூமியிற் சிறந்த பொன்மலைப் பக்கத்தில் வாசம் பண்ணுங் கைகையென்கிற கற்புடைய ஸ்திரீயானவள் கண்டு அந்த சாந்திலேயினுடைய நன்னெறியை உட்கொண்டு முன்னுடி வணங்கி அம்மா! நீர் புண்ணியலோகம் பெற்றுக்கண்ணியமாயிருப்பது என்னத்தினுலே? அந்த விபரத்தை யெனக்குச் சொல்ல வேண்டுமென்று விளம்பினுள். அதற்குச் சாந்திலே கைகையை நோக்கிச் சொல்லுகின்ருள் எனக்கு இப்பேர்ப்பட்ட கதி எப்படி வந்ததென்ருல் பதிவிரதா தன்மத்தினுல் வந்தது. மகத்துவமுள்ள பதிவிரதா தன்மத்தின் வரலாறு எப்படியெனில் நான் எனது மாமியாருக்கு மாமனுருக்கு வழிப்பட்டு அன்பு பாராட்டி நாளுக்குநாள் அதிக மரியாதை உபசாரங்களே இயற்றி அவர்கள் ஒருபொருளேக் கேட்குமுன்னமே விரும்பிக் கொடுத்து, அவாளுடைய பாதங்களே விளக்கி அறுகு அட்சதை புட்பம் இவை முதலியவற்ருற் பூசை செய்து அர்ச்சித்து, தூபதீபங்காட்டிப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணி, ஆசீர்வாதம் பெற்று பாதங்களிற் சூட்டிய அட்சதைபுட்பங்களே அவர்கள் கையால் வாங்கிச் சிரசின் மேலணிந்து வணக்க மிணக்கமாய்க் குணக்கேடின்றியிருந்து, மரியாதையுடன் பிணக்கமில்லாமற் சொன்னபடி கேட்டு உண்டிமுதலியதும் வேண்டிய மட்டும் பரிந்தளித்து அவர்கள் கால், கை, மேல் இவை முதலிய பக்கங்களில் நேரிட்ட வலியகலப் பிடித்து வஸ்திரங்கள் அழுக்கில்லாமலளித்து, தாம்பூலத்தை நறுக்கிக்கொடுத்து, அரித்தலே,எரித்த முதுகு இவை முதலிய வருத்தங் களேத்து, வயிற்றிற்பிறந்த பெண்போல் வாஞ்சித்தெதிர்த்து உத்தரம் பேசாமல், பொறுத்துப் புகழ்ந்து புறங்கூறு விரதம்பொருந்தியிருந்தேன். மேலும், சகலபுவன கர்த்தாவுக்கும்

தென்புலத்தாருக்கும் விருந்து வந்த அதிதிகளுக்கும், சில்லறையாகிய இல்லற தேவதைகளுக்கும், பூசை, நைவேத்திய முதலிய உபசாரங்கள் பண்ணி, பலபண்ட பதார்த்தங்களும் பட்சணவிதங்களும் பழவர்க்கங்களும் அறுசுவை யுண்டியுடனளித்து முகமலர்ந்து இனிமையுரைத்து அகமகிழ்ந்தேன். வீட்டுவேலைக்கு மிஞ்சினவேலை யில்லையாதலால் இதுவே பிரதானமென்றெண்ணி தேகவருத்தம், சோம்பல், தூக்கம், இளைப்பு, ஆயாசம், இன்பம், துன்பம், எதுவும்பாராமல், இரவும் பகலும் ஏமாறாமல், என் வீட்டு வேலையை இன்னொருத்தர் கையிற்கொடாமல் என்னால் இயன்றமாத்திரஞ்செய்வேன்.

மேலும் அவ்வீடு, வாசல், திண்ணை, தெருப்புறமுதலிய இடங்களில், எச்சல் துப்பல், ஈளை, தூசு, துரும்பு, குப்பை, கூளமிராமல் விளக்கி, பசுவின் சாணத்தாற் சமமாய் மெழுகி கோலமிட்டு; வாசற்காலுக்கு விபூதி தொட்டு, குங்குமப் பொட்டிட்டு, பூமாலை கோர்த்திட்டு, மாவிலை ஆர்த்திட்டு பார்த்த பேரியாவரும் என்ன லட்சுமிகரமாயிருக்கிறதென்று சொல்லும்படிக்குப் பரிசுத்தப்படுத்துவேன். வீண்பேச்சுகளும், பிறரேச்சுகளும் பேசேன், விருதாமனிதருடனும் உறவாடேன். காலை நீட்டிக்கொண்டு கதைகாரணம்பேசி அம்மனை, கழங்கு, பள்ளமாங்குழியாடி, வந்தபேர்களைப் போகிறபேர்களை உட்கார வைத்துக்கொண்டு விண்ணான நீட்டி, வீணாகிய டம்பங்காட்டி, புருஷன், மாமனார், மாமியார், பிள்ளைகள் இவர்கள் செத்தால் அழுகிறதற்கான பாட்டை ஆராய்ந்துகற்று சுயசோபனாதிகளுக்குச் சொல்லும்படியாகிய மங்கள லாலிகளைக்கூறி புனந்தரன்றாது, அல்லியரசாணி கதை, நல்லதங்கால் மாலை, கன்னகி காதை, இப்பேர்ப்பட்ட சில்லரைச் சரித்திரத்தைக்கேட்டு இந் நீட்டுப்பாட்டுக்கு வீட்டிலுள்ள அரிசி, மிளகு, மிளகாய், உப்பு, புளி, சாறு, சோறு, துணிமணிகளைக் கொடுத்து, யாவரிடத்துஞ் சிரித்து விளையாடி, ஓகொடியமான வார்த்தைகளாடி ஒருகு கொண்டை சொருகுகொண்டை போட்டு அதில் மலர்மாலைசூட்டி அந்தக் கொண்டைசரிய தன்னொத்த பெண்டுகள் தோளின் மேரிற் சாய்ந்து உரிய ஆண்மகனில்லாத போது அலங்கோலமாய் ஆடிப்பாடி புகையிலை பாக்கு வெற்றிலை இவைகளை ஒருவருக்கொருவர் மாற்றி பூமேலேற்றி ஏமாற்றி ஊருப்பேச்சு நாட்டுப்பேச்சு ஒருவனைவிட்டொருவனைத் தொடரும் ஏச்சு இவைகளைப் பேசிக்கொண்டு பெருமூச்சு விட்டுத் தூங்கி, வீட்டுவேலையை வேலைக்காரர் வேலைக்காரிகள் வெள்ளாட்டிகள் வெறுவியர் யிவைகளைப் பார்க்கச்சொல்லி ஆக்கச்சொல்லி சுசி முதலிய வில்லாமல் பண்டம் போவது வருவது தெரியாமல் பறவா பண்ணாமல் புருடன் முதலிய பேர்கள் வந்தால் வேலைக்காரியைக்கூவிச்சோறுபோட்டு வட்டியென்று சொல்லி, தாங்கள் அண்டை யசலுக்குப் போகிற பெண்டுகளாகிய வண்டர்களைப் போல என்னுயிரொழிந்தாலும் உடலழிந்தாலும் ஒருக்காலும் இப்படிக்கெல்லாம் நடக்கமாட்டேன்.

ஓ கைகையே! எனக்குத் தெய்வஸ்தலம் தேவாதிகளுலகம் குருவாச்சிரமம் மோட்சவீடு இவையெல்லாம் நானிருக்குங் குடிசைதான். இதைவிட வேறேயிடம் போயறியேன். சர்வேஸ்வரன் நம்மை இல்லற மங்கையாக ஏர்ப்படுத்தி வீடு தேடிவந்த அதிதி அப்பியகதி, பிதுர்க்கள் இவர்களுக்கு உபசரியென்றும் பர்த்தாவுக்கு ஊழியப்பணிவிடை புரிந்திடுகவென்றும் இல்வாழ்க்கையிலிருந்தே கடைத்தேறென்று விதித்தது, அப்பால் மோனவீட்டை யளிப்பதற்கு ழ அடைளாமாக வல்லவோ? ஆதலால் இந்தக் குடிசை வீட்டைக் கோகன்புரமா யுன்னி, நமக்குக் கோவில், ஸ்தலம், குளம், தருமம் இவையெல்லாம் வீட்டைச் சுத்திசெய்து ஆசாரமாய் வைத்திருந்தால் அதுவே யவை யெல்லமாயிருக்குமென்றெண்ணிச் சந்தோஷித்திருப்பேன். நான் கலியாணஞ் செய்துகொண்டு மாமியார் வீட்டுக்கு வந்தபிற்பாடு தெரு வாசற்படியிற்போய் நின்றறியேன். என் புருடனும் என் பெரியோர்களுந் தவிர அப்பற்புருடனும் பூவையருடனும் அண்டிப் பேசி இருக்கமாட்டேன். உதயத்திற்கு முன்னெழுந்து மலசலாதிகள் கழித்து தந்தசுத்தி செய்து நாக்குவழித்து வாய் கொப்பளித்து தெருவாசல் வீடெல்லாந் திருத்திப்பெரிக்கி மெழுகி மொக்கிட்டுபாத்திரஞ் சுத்திபண்ணி வைத்து விழுப்பாகிய பண்டங்களை விலக்கி ஸ்நானமாடி நித்தியவிதி நேமங்கூடி சூரிய நமஸ்காரஞ் செய்து ஈஸ்வரபூசை முடித்து இஷ்டதெய்வமாகிய நாயகனது படுக்கை

வீட்டினிற் புகுந்து அவரது நித்திரையை நீக்கி அவருக்கு நடத்தவேண்டிய உபசாரங்களெல்லாங் குறைவில்லாமல் நிறைவாகச் செய்து அநுஷ்டிப்பானவுடனே பத்திரம், புட்பம், ஜலம், அறுகு, அட்சதை, தூப தீபம், நைவேத்தியம் இவைகளை எடுத்துப் போய் மாமி மாமனாரை எழுப்பி, அவர்களுக்கு திருமலவுபாதி கடத்தி, பல் விளக்கவைத்து, ஆசனமமைத்து, அதன்மேலிருத்தி, நான்ஜலம்விடவும், என் புருடன் அவர்கள் பாதத்தைத் துலக்கிப் பத்திரபுட்பஞ் சாற்றவும், நான் தூபதீபமேற்றவும்,என்புருஷன் நிவேத்தியம் வைத்து நீர் மாற்றவும், பின் நாங்களிருவரும் போற்றவும், அவர்களெங்களை வாழ்த்தவுமானபின்பு, ஈசனுற் கிடைத்திருக்கின்ற வஸ்துவைப் பக்குவப்படுத்தி, அவர்கள் வாய்க்குரிசையாய்க் கொடுத்துவிட்டு பிற்பாடு கணவனுக்குப் போசனமிட்டுத் தாம்பூலந்தந்து, அவர் வெளியே போகிறவரைக்கும்அவரைவிட்டு நீங்காமல்ஆலவட்டமுதலிய ஆதரணை பண்ணிக்கொண்டிருப்பேன்.

இவ்வித உபசாரங்களெல்லா முடிந்து எனது நாயகன் அலுவற்ற காரியத்திற்குப் போன அப்போதே, வந்திருக்கின்ற அதிதிகளுக்குப் பூசைபுரிந்து பணிவிடையாற்றி, பால், தயிர், பாயசம், பொரியல், பற்பல பண்டங்கள் இவைகளை வஞ்சனை நினையாமல் அன்னத்தோடு வைத்து உண்பித்து, பின்பு பசுக்கள் முதலியவற்றிற்குக் குளிர்ப்பாட்டிக் குங்குமமிட்டு, நீருடன் புல்லருத்தி, ஆலயங்களுக்கு அபிஷேகப்பால் வார்த்துவிட்டு,உறவினருக் குபசரித்து, நானும் புசித்து,வேலைக்காரரும்என்னைப்போற் சாப்பிடும்படியாகிய விசாரணையாய் விசாரித்து, வீட்டுவேலைகளையெல்லாம் நிதானித்து, எந்தெந்தச் சாமான்களில்லையோ? அவைகளை ஆண்பிள்ளைக்கு அறிவிக்காமற் சேகரித்து, வருவாரும் போவாருங் கேட்டகேள்விக்குத் தகுந்த வார்த்தை யுரைத்து வம்பு வசனங்களுக் கிடங்கொடுக்காமல் மறுத்து, அரைக்கணமேனுஞ் சோம்பலில்லாம லறுத்து, எத்தவிதத்தில் விழுப்புவந்தாலும் உடனே ஆசுசஸ்நானம் பண்ணுவேன். அமுதுக்கு வந்த பெரியோர்களைக்கண்டுஅகாலமென்று சொல்லாமல் அப்போதே சமயற்செய்து அரைநொடிக்குள்பசியாற்றிப் போற்றுவன் எத்தனைபேர் அமுதுக்கு வந்தாலுஞ் சற்றேனு மனமிளைக்கேன்.எனக்கும் என்றுணைவனுக்கும் வேண்டுமென்று ஒருபதார்த்தமாகிலும் மறைத்துவைக்காமலெதார்த்தமாய்ப் படைப்பேன். எப்படிக்குயர்ந்த அருமைபெற்ற பழமுதலிய வஸ்துக்க ளானாலும் மைப்படியுங் கண்டத்த ரன்பருக்கு வழங்குவேன். என் கணவனே தெய்வமென்று கனவிலு மறவாமல் வழிபடுவேன் அவருடைய சொல்லுக்கு மல்லுக்கட்டி வார்த்தையாடேன். அவரது தம்பி, தமையன் முதலிய சுற்றத்தாரும் மற்ற நத்தத்தாரும் நன்மை கொண்டாடத்தக்கதா யிருப்பேன். அவர்களைத் தாட்சியில்லாமல்விசாரிப்பேன். முன்முறணி பின்பொறணிகூறேன். இவ்விடத்திற் பேச்சு அவ்விடத்திலும், அவ்விடத்து பேச்சு இவ்விடத்திலுமாகக் கோட்சொல்லி கலகம் விளைக்கேன். பெற்றோருக்கும் பிறந்தாருக்குஞ் சண்டையுண்டாக்கேன். பொறாமைப்படேன் பொய்பேசேன் வீணசை கொள்ளேன். வீட்டுடைமை ஒருவருக்கு வீணிற் கொடுக்கேன். செல்விருந்து வருவிருந்து பார்த்துக்சீவன்முத்தரைச் சிந்தித்துக் கொண்டிருப்பேன். சொல்லுவாதர் பேச்சைக்கேட்டு மல்லுக்குப் போகேன். என் சாமிக்கும் மாமிக்கும் மாமனுக்கும் வேண்டிய பதார்த்தங்களை விரும்பித் தேடிக்கொணர்ந்து பாகமாகச்சமைத்து பக்குவமாகப் பகுப்பேன். அப்படி பகுக்கும்போது ருசியான கறிகாய்களை வாய்மலர்ந்து கேட்குமுன்னமே தாய் பரிந்தூட்டுந் தன்மைபோலளிப்பேன். என்னையகனுக்கு ஊழியஞ்செய்கிற பணிவிடையாளரைப் பட்சமுள்ளபிள்ளைபோல் ரட்சிப்பேன்.

இவையன்றியுமென்கணவன்வீடுவிட்டு வேலைநிமித்தம் வேறூருக்குப்போயிருந்தால் அவர்வருகிறபரியந்தஞ்சந்தன புஷ்ப பரிமளாதிகளை விரும்பேன். மஞ்சள்குங்கும தாம்பூலாதிகளைப் பொருந்தேன். தலைசீவிக் கொண்டை யிட்டுக்கொள்ள மாட்டேன். பூஷணலங்கிர்தம்பொருந்தேன். நல்ல வஸ்திர முடுக்கேன். ஊருக்குப் போனவர் வந்த பிறகு இத்தியாதி அலங்காலத்துடன் எதிர் நின்று அவர் கண்டு கண் களிக்கக் கலந்து இன்பம் பெறுவேன். உள்ளூரில் வெளியே போயிருந்து வீட்டுக்கு வருமென்காதலனைக் காணுமளவும் நான் முந்திச் சாப்பிடமாட்

டேன். இலையில் அன்னத்தைப் படைத்து
விட்டு உப்பில்லை; ஊறுகாயில்லை, மிளகில்லை,
மிளகாயில்லை, புளியில்லை, பூண்டில்லை,
அரிசி, கட்டை, வறட்டி, ஒன்றுமில்லையென்
று மூன்னின்று, மிடற்றைப் பிடிக்கின்றுப்
போற சொல்லமாட்டேன். தாம்பூலந் தரித்
துக்கொண்ட சமயம்பார்த்து நான்குநாளைக்
குச் சாமக்கிரியை யிருக்கும்போதே முன்னு
டிச் சொல்லிச் சாக்கிரதைப் படுத்திக்கொள்
வேன். ஆண்புடையானுடைய சம்பாத்திய
த்திற்குத் தக்கசெலவு தகுந்தபடி செய்வேன்.
தாய்வீட்டுப் பட்சம்வைத்துச் சம்பாத்திய
முடிப்புகட்டி அடிக்கடி தாய்மனைக்கேகேன்
(வாழ்மனைப்பண்டந் தாய்மனைக்கேகில் தாய்
மனை பாழ்மனையாகும்.) என்ற வாக்கியமறி
வேன். நாயகன்மேல் நாட்டியகண்ணை மற்
றொருவர்மேல் நாட்டேன். பெரியவர்களுக்
குப் பேரன்புடன் பூசைபுரிந்து போசனமிடு
வேன். வீட்டுப் பிரத்யேகம்வந்தால் ஒருவே
ளை யன்னம் உண்டுக்கொண்டிருப்பேன்.
மூன்று நாள் ஸ்நானம்பண்ணிப் புறம்பிலிரு
ந்து நான்காநாள் நதியாதியில் ஸ்நானம்
பண்ணி ஐந்தாநாள் எண்ணெயிட்டு மூழ்கி
வீட்டைக் கோசல கோமயத்தாற் சுத்திபண்
ணி பஞ்சகவ்வியங் கூட்டியுண்டு அப்பாற்
புருடன் முகத்தில் விழிப்பேன். அவருடன்
பேசுவேன். மாதருதுவான மூன்று நாளும்
மகிழ்நன்முகத்தில் விழித்தாலும் பேசினு
லும் மங்கிலியத்திற்குக் குறைவுவரும். வீடு
தூரஸ்திரீயின் காற்றும் நிழலும் பேச்சும்
நாயகன் முதலிய நல்லோர்கள் பேரிற் பட
லாகா. பட்டாற் புருடனுக்கு ஆயுள்குன்றிப்
போம். நல்லோர்களும் சபிப்பார்கள். கைவி
லக்கமான காலத்தில் வாக்கினுற் பேசாமற்
கைச்சாடைகாட்டி வேண்டிய காரியம் பெற்
றுக்கொள்வேன். ஆறு முதலாகிய குளங்க
ளாலுல் ஒருவரைத் தண்ணீர் மொண்டுவரச்
சொல்லி கரைமேலிருந்து ஸ்நானம்பண்ணி
பிற்பாடு கோசல கோமயசுத்தியால் அவற்றி
லிறங்கி, மஹத்துவக் கங்காநதியை நினைத்
து மூழ்குவேன் ஒருவர் முகத்திலும் விழியா
மல் நாயகன்முகத்தில்விழித்தால், ஆயுசுவிர்
த்தியும் ஐஸ்வரியமுண்டாம். அருமருந்த
ன்ன பிள்ளைகளையும் பெற்றுக்கொள்ளலாம்
ஒருவேளை புருடன் ஊரிலில்லாவிட்டால்,
நாயகனுடைய ரூபத்தை மனதில் நினைந்து
நாட்டி, சந்திரகலையோட்டி, சூரியனைக்குறித்

துத் தரிசிக்கவேண்டும். அப்பாற் பூசாவிதி
களிலும் புருடன் பணிவிடைகளிலிருந்து
போது போக்குவேன். வயிற்றிற் பிறந்த
பிள்ளையாலுலும் கூடப்பிறந்த சகோதரனு
லும், எழுவயதிற்கு மேற்பட்டவரை முகா
லம்பனம்பண்ணிப் பேசமாட்டேன், மூந்தா
ணியை அக்கினிக்கோட்டைக் காவலாய்க்
கொண்டு, மூழுமதியோடுங் கற்புடைமையா
கிய பொக்கிஷத்தைக் காப்பேன். பதிவிரதா
பூஷணமிருந்தால் திரிமூர்த்திகளும்மதித்து
துதிப்பார்கள்.

ஓ கைகையே புருடன் தன்னுடையசம்
பாத்தியத்தைப் பெண்சாதியிடத்திற் கொடு
த்து இருவருங்கலந்து ஒருமனதாய்ப் பொ
ருந்தி சமூகவிசார நடத்திவரும்போது அ
ந்த ஸ்திரீயானவள் இப்பேர்ப்பட்ட கணவ
னைத் தெய்வமென் றெண்ணுமல் வஞ்சிக்க
லாகாது. அவனுக்குமிஞ்சின தெய்வமில்லை
மாதா, பிதா, குரு, தெய்வம் என்று சொல்
லப்பட்ட பிரபஞ்ச வாழ்க்கையெல்லாம் புரு
ஷனே. ஈஸ்வரன் பேதைமையாகிய பெ
ண்களைச் சிருஷ்டித்ததற்குக் காரணமென்ன
வெனில், மணவாளகிய கணவருக்குப் பணி
விடைசெய்யவும், லோகவிருத்திக்குச் சந்ததி
உற்பத்தியாகவு மேர்ப்படுத்தியது. பின்
னும் இல்லற தருமத்திற்கும், தென்புலத்
தார், தெய்வம், விருந்து, ஒக்கல், அதிதிபூ
சை, அக்கினி ஹோத்திரம், இவை முதலி
யன நடத்துவதற்கு முண்டாக்கினுர். எந்த
வேளையுங் காமக்கலவியும், ஆபரணவஸ்திர
அலங்காரங்களும், மேனி மினுக்குதலும்
பண்ணிக்கொண்டு, தாம்பூலந்தரித்து வீண்
ணும்பேசி, வேடிக்கையாயிருப்பதற்கு ஏற்
படுத்தியதில்லை. ஒருவேளை புருடனுக்குக்
காமம் பிரதானமாயிருந்து ஆசைப்பட்டு
ஸ்திரீயுடன் சாடை சரசம்பேசி விளையாடி
னுல், அவன் மனது எந்தமட்டும் விருப்ப
மோ? அந்தமட்டும் ஏகபாவமாய் பொருந்தி
ஒருதலைக் காமமில்லாமற் சம்போகமாக
இடங்கொடுத்து, இருவரும் பரவசமடைந்
து, கை, கால், வாய், சுத்திசெய்து தாகமரு
ந்தி, தாம்பூலம்பொருந்தி, தடையுட நித்தி
ரைப்பண்ணி, உதயத்திலெழுந்து, ஸ்நான
முதலிய விதிமுறைப் புரிந்து, வீட்டுவேலை
யைப் பார்த்து சீக்கிரஞ் சமையற் செய்து
காதலனுக்கு அருத்திவைக்கவேண்டும். இர
விற் சரசமாயிருந்ததை நினைத்து இறுமாப்.

படைந்து, மரியாதைதப்பி இன்பரசத்தைப் போக்கடித்துக்கொள்ளலாகாது புருஷனுக்குக் காமயிச்சை யில்லாதிருந்தால் ஸ்திரீயானவள் மேல்விழுந்து போராடப்படாது. சொப்பனத்திலுங் காமத்தைக் கருதக்கூடாது. அப்படிக்கில்லாமல் அறத்தின் வழி நில்லாமல், நாயகனை மதியாமல், நால்வரு நகைப்பாரென் றெண்ணாமல், மனதைப்போனவழிவிட்டு, மகிழ்நனை வஞ்சித்து, மனக்காவல் மூன்தானைக்காவல், வம்சாசாரக்காவல் இவைகளை மறந்து, நல்லவள்போலிருந்து, நடைநொடிபாவனைப்புரிந்து, ரகசியத்திற் சோரத்துவம் பண்ணுவார்களாகில், மகாகொடிய பாவியாவாள். துட்டநடத்தையுள்ளகெட்டவளாவாள். பகலே இருளென்ற பழிகாரியாவாள். அவளிருக்கும் வீடு பாளியிருக்குங் காடு, இருட்டுநிலம், திருட்டுக்குலம், களர்ப்பூமி, அழற்பாறை, கடுவிடம், கசப்பெட்டி, கல்லாக்கயவர்மனம், ஆகிய இவைகளுக்குச் சமானம்.

இவையல்லாமலும், மும்மூர்த்திகள், நவகிரகங்கள் வெகுசனங்கள் புரோகிதர் இவர்கள் முன்னிலேயி லக்கினி, கங்கை, நவதானியம், ஆல், அரசு, முருக்கு, திருவிளக்கு, தாம்பூலம், மஞ்சள், அட்சதை, இவைகள் முதலியனவுஞ் சாட்சியாய், தாய் தந்தை நீர் வார்த்துக்கொடுக்க அதைப் பிரமாணமாகப் பெற்றுக்கொண்டு, அவள் கழுத்தில்தான் நீயென்னும் பொருளைத் தரும்படியான தாலியென்னும் பெயருடைய மூத்திரையைத் தரித்து, கைகொடுத்தெழுப்பி, அஷ்டமங்கலமெடுப்பித்து அக்கினியை வலம்வந்து பொரீவாரிச்சொரிந்து, பூசுரரைப்பணிந்து அம்மிமிதித்து அருந்ததி தரிசித்து சிறுமனை புகுந்து தேவரைப்பணிந்து மணவனு மணவியுமாகி மகிழ்ந்து வாழ்ந்து, தேகத்திற் பாதியாளென்று இச்சைவைத்த நாயகனுக்கு சிறிதேனும் பக்தி செலுத்தாமல் இலச்சையுண்டாக்கி, தன்னுடைய விவேகங்கெட்டு, விரதமும்விட்டு பதிவிரதா மகத்துவத்தைப் பாழாக்கிப்போட்டு காமத்தின்வழியே கருத்தைச் செலுத்தி ஒருவருக்குந் தெரியாதென்றெண்ணி இரவும்பகலும் பரபுருஷபோக சுகத்திற்றானே பத்தியுஞ் சிரத்தையுஞ்செலுத்தி, மேலுக்கு புருஷன் பாதத்தை மூன்று காலமும் பூசைப்பண்ணுகின்றவள்போலிருந்து, உலகமெல்லாம் உத்தமியென்று கொண்டாடும்படியாய் வேஷங்காட்டி, இல்லறத்திலிருந்து கருமமுதலிய தருமங்களைச் செய்யுங் கணவனுக்கு உடந்தையாகி இருவருங் கடைத்தேறுங்கதியிற் புகாமல் இவள் கெட்டதுமன்றி இவளுக்குரிய கலியாணப்பிள்ளையையுங் கெடுத்து, சத்தியந்தப்பி மணவாளனை வஞ்சித்து, பலபேரைப் புணர்ந்து தேடிய பாபத்தைத் தன்மட்டி லனுபவியாமல் இவனை நல்லவளென்று நம்பியிருந்தபாதிக்காரனுக்கும் பங்கிட்டு அவன் தலைமேலுமேற்றி, இரண்டுவிதத்திலும் பிரஷ்டத்துவமாக்கிய சண்டாளியை, புருஷனுக்குமானஹானிசெய்து வஞ்சித்த மாபாவியை, தலைவனைத் தலையிற்கைவைத்த சவத்தை கொண்டவனுயிருக்கு எமனைச் சமைத்த கோரத்தை, இவ்விடத்தில் யாவருஞ் சீ! சீ! சீ! என்றே சிக் காறித் துப்பும்படியாய் அவள் செய்த தீங்கனைத்தும் ஒன்றாய்ச் சேர்ந்து, கைகால் குறைந்து பண்ணேய்மிகுந்து, புழுப்பூத்து, பூமியில் விழுந்து, பூததேகம்போய் சூட்சுமமாகிய யாதனசரீரம்வந்து எமபடாளிழுத்துச்சென்றுபாசம்-வேல்-கதை-சுடுசரம் இவை முதலியவற்றால் உபத்திரம் விளைத்து வைச்சுத நாகத்திற்குத் தென்மேற்கிலுள்ள வன்னிக்குளத்திற் கொண்டுபோய் மன்னிக்கட்டியிறுக்கி, வெந்நீர் முதலிய வெப்பவேதனைகள்விளைப்பார்கள் ஐயோ? அந்த யமபடாள் செய்யுந் தண்டனையின் கொடுமையைச் சொல்லவும் நாவெழுமோ ? ஆயினுஞ் சிலவற்றைச் சொல்லுகிறேன் கேள்.

---

## சோரஸ்திரீகளுக்கு நடக்கும் யமதண்டனையின் விதம்.

ஓ கைகேயே காமம் பெரிதென்றெண்ணி, கலியாணம் பண்ணிக்கொண்ட கணவனை வஞ்சனைபண்ணி கந்தகஸ்தூரி கதம்பம்புனைந்து, வந்தநாயகனுடன் கலந்து மருவிய நிதம்பத்தில் யமகிங்கரானவர் மூசலமாகிய இருப்புலக்கையை நெருப்புப்பொறிபறக்கக் காய்ச்சிச் சொருகுவார்கள், அவளைப் பிடித்து ஈயக்கொப்பறையிற் றோய்ந்து உருகியுருகி, ஊன்பெருகி யோடும்படியாய்ச் சூலத்தைக்கொண்டு குத்துவார்கள். செவசெவவென்று காய்ந்திருக்கிற செப்புப்பொம்மை ஆசையுடன் தழுவிக்கொள்

ளடியென்று அடிப்பார்கள் அவ்வேதனையா
ற்புரண்டு உருண்டு துடி துடித்துப் பதைக்கு
ம்போது, நெருப்பிற் காய்ச்சிய இருப்புச்ச
லாகையினாற் சுடுவார்கள். கீழே தள்ளிக்கிள்
ளுவார்கள். அட்டைகளை விட்டுக் கடிப்பிப்
பார்கள், புழுக்களினால் குடையப் பண்ணு
வார்கள். திப்பி வண்டுகளால் துளைப்பிப்
பார்கள். கிட்டிக் கொண்டு பிடிப்பார்கள்.
குறடுகளினாற் சதைகளை அள்ளுவார்கள். நா
ய்களினால் கடிப்பிப்பார்கள். நகத்தில் ஊசி
யேற்றுவார்கள். குதத்தினின்றுங் கழுவே
ற்றுவார்கள், இரண்டு தூணாட்டி, அதன்மே
ற்பானுவட்டம்போட்டு அதனடுவிற் சங்கிலி
மாட்டி அச்சங்கிலி நுனியை மூக்கிலும் வா
க்கிலுமேற்றி கீழே நெருப்பிட்டு, எமபடாள்
இரு புறத்திலுங் காவலிருப்பார்கள். தலை
மேல் நெருப்புப்பற்றிய இருப்புமுள் முடி
வைத்திருத்துவார்கள். விஷத்தைக்கொண்டு
வந்து அமுத்துவார்கள். இரும்பைக் காய்ச்
சிக் குதத்தினிடத்திலேற்றுவார்கள். கொட்
டாப்புளிகொண்டு ஆப்பு வைத்திருக்குவார்
கள். கத்திக்கித்தனை சதையாகக் கைகாலை நறு
க்குவார்கள். கோடாரிகொண்டு தறிப்பார்
கள். சம்மட்டியாற் சதைப்பார்கள், தலை
கீழாய்த் தொங்கவிட்டு மூலைமீது சுடர்வேற்
றயிலஞ் சொரிந்து, மூக்கிற் காரக்கடுமைச்
சாரேற்றி, கால் விரலிலுங் கைவிரலிலுஞ்
சுடரேற்றி. கற்றை மயிரைக் கொளுத்தி, ரம்
பங்கொண்டறுத்து கழுகு, காக்கை, பருந்து,
நரி இவைகளை உசுப்பிப் பிடுங்கிவிட்டுச் சித்
திரவிதை செய்வார்கள். இப்படி செய்யும்
போது முறையோவென்றழுது கத்தி பதறி
கைகாலுதறி வலிப்பெடுத்து மொருகிக் கூச்
சற் போடுவாளேயானால், அக்கால் பேசாதே
பேசாதே என்று இருப்புச் சோட்டா முள்
தடி வளைதடி வச்சிரதண்டம் இவைகளினால்
அடிப்பார்கள் இடிப்பார்கள் மழுவாயுதத்
தால் துண்டிப்பார்கள். இரும்பு மணலை
வறுத்துக் கறண்டியால்வாரி அவள் திரேகத்
தில் ஓயாமற் கொட்டுவார்கள். இரும்புச்
சட்டியிலிருத்தி அடியில் தீமூட்டுவார்கள்.

இன்னுமந்தக் கற்பு நிலை கெட்டுக் கண
வனைவிட்டு வஞ்சனைகண்ட காமக்கிழத்தியை
உலைக்களத்தில் வேகக்காட்டி யடித்துத் திர
ட்டியிருக்கின்ற மூறட்டு முள் முனையிலே
பொருந்தும்படிக்குப் பேசிய எமனுடைய
வார்த்தையின் வண்ணந் தாட்சணியம்பாரா
மல் யமதூதர் பிடித்து, எலும்பை யொடித்
து, எண்ணியாயிரம் எண்ணுமலாயிரம் அடி
யடித்து, நீ புருஷனை யிகழ்ந்து, சத்தியம்
புரண்டு குல கோத்திரத்தைக் கெடுத்து, குடி
கேடியென்று பேரெடுத்து, அன்னியபுருஷ
சுகத்தை யடுத்து, அவனிடம்படுத்து, ஆண்
புடையானைக் கடுத்து, வீட்டுப் பொருளைக்
கொடுத்து, விரதமுதலிய நோன்பையும் விடு
த்து, வஞ்ச நெஞ்சுடையவளா யிருந்தனை
யே இதோபார் அந்த இன்பசுகம். இந்தக்
கழுமுனையிலேறி அனுபவி என்று இருத்தி
அவளிரண்டு காலையும் பொருக்கி பக்கத்திற்
சூலம்பாச்சிக் கெற்பங் கலங்க ஊன்றி, தோ
ளையுங்காலையும்பிடித்திழுத்துக் கண்விழிபிது
ங்கக் கொத்தும்படிக்கு நரகக்குழிக் காக்கை
யை யேவுவார்கள். இப்படி வேதனைபட்
டுக் கொண்டிருக்கும்போது புருஷனைவஞ்சி
த்த பூவை யிவளென்று யமகிங்கரரில் ஒருவ
ன்சொல்ல, அதைப் பலர்கேட்டு, அவள்
சதையைத் தங்கள் பல்லினால் மெல்லுவார்
கள். இவளெல்லாப் பாவியரிலும் புருஷனை
வஞ்சித்த பெரும்பாவியென்றுசொல்லி குறு
ந்தடியாலடித்துக் கையுங்காலுங் கட்டி, சரீ
ரம் அசையாமற் பந்தித்து கீலுக்குக் கீல்
கூராணியடித்து, கிட்டியிட்டுக் கட்டி, செம்
பையுருக்கிக் கடிதவுத்தின் பேரிற் கொஞ்சங்
கொஞ்சமாய்ச்சுரசுரவென்னவார்ப்பார்கள்.
அந்தச் செம்புரசம் பட்டுக் குபீரென் றெறி
ந்து புகைச்சலு மெரிச்சலு மிகுந்து ஐயோ
வென்று பறக்கும்போது இரும்புக்குறட்டா
லிடித்து, வாய்க்குறட்டைப் பிடித்து வலிப்
பார்கள். பேய், நாய்கள், பாய்நாய்கள், செந்
நாய்கள், வன்னாய்கள் இவைகள் அவளுடை
யசதையைக் கடித்திழுத்துத் தின்னத்தக்க
தாய் உசிப்பிவிடுவார்கள். மூக்கு நீளமுடைய
ஆந்தை, கோட்டான், கழுகு, பருந்து, காக்
கை இவை முதலிய சேர்க்கையினங்கள் சேர்
த்து அவளாக்கையைக் கொத்தி யுண்ணும்
படி செய்வார்கள். அப்போ தவளுடைய
பிராணன் அவஸ்தைப் பட்டுக் கோரமான
விகார ரூபத்துடன் கிடப்பள். அப்போ
துங் கூர்மையான கொழுக்கொண்டுஉழுவார்
கள். இருப்புக் கொப்பறை யெண்ணெயி
லிடுவார்கள், அடுப்பிலேற்றி யெரிப்பார்கள்.
குண்டுகட்டாய்க் கட்டி கொளுத்துவார்கள்.
சரீரங்கள் பத்தலாய் வெடித்து ரெத்தங்கள்

வடியவு நிணங்கள் வழியவும்வறுப்பார்கள், பெரிய ரம்பங்கொண் டறுப்பார்கள்.

அம்மா கைகேயி! சேற்கெண்டைபோன்ற கண்ணால் மருட்டிப் பரபுருடனைச் சேர்ந்த பாவையர் அந்த யமபடாளாற் படும்பாட்டை, ஹர ஹர நானென்னென்று சொல்லுவேன். இவர்கள் கதி இப்படியாக நாயகனடங்க நடந்தவள், எதிர்த்துப் பேசினவள் சண்டை போடுகிறவள், சத்யமில்லாதவள் சாதங்கறியைத் தன்மட்டி லெடுத்தொளித்துக் கொண்டவள், இன்பக்காலத்திற்றடைசெய்தவள், புருடனைக் கடன்படச் செய்தவள் கணவன் சொன்ன ரகசியத்தைப் பலபேர் காதிற் போட்டவள், மணவனிடத்தில் மனமில்லாமற் சட்சம் இருப்பதுபோ லபிநயித்தவள் வீடேறிவந்த விருந்தைப் பகைத்தவள் வீட்டிற் பிறந்தாரை வெறுத்துக்கடிந்தவர்கள் வீட்டுடைமைகளைத் திருடி விற்றவள், பிட்சை போடாதவள் தன் தங்கை அக்காள், மச்சினிமார், இவர் முதலியபேர்களைக் கூட்டிக்கொடுத்தவள் வேசையரைப் போற் காசாசை கொண்டவள், தகாத பெண்களுடன் சவகாசம் பண்ணினவள், மலசலங் கழிக்கும்போது மணற்கொண்டு சுத்திசெய்யாதவள், மூழுகல், குழையல் முதலிய காலக்கடனைமுடிக்காமற் சமையல்வீட்டிற்புகுந்து சாப்பாடிட்டவள் படுத்தும் இருந்தும் புருடன் கேட்ட கேள்விக்குப் பயமில்லாமல்உத்தரவு கொடுப்பவள்கணவருடன் கலந்தபோதே ஸ்நானம் பண்ணுதவள், கர்வங்கொண்டு புருடனுக்குப் போசனத்தைக் கெடுத்தவள், கல்லு, நெல்லு, புல்லு, உமி இவை முதலிய போக்கிச் சமைக்காதவள் புருடனெளியவன் என்று அவனைப்பொருட்செய்யாமற்போனவள் அவன் கால் கை பிடித்துக் காலமறிந்து நடவாதவள். மாமன் மாமி கோரிய காரியத்தைக் கெடுபண்ணினவள் முன்காரியம் பின்காரியம் அறிந்து முடிக்காமல் அசடுதேடினவள், அண்டையசனுக்குப் போய்ச் சண்டையிழுத்தவள் மணவன் மச்சினன் மூத்தான், இவர்களைப் பகைமூட்டி வைத்தவள், நாயகனுடைய நற்செய்கைகளுக்கு இடங்கொடாதவள் இப்பேர்ப்பட்ட பெண்களை யமதூதர் கொண்டுபோய் இரும்புத் தூணை நெருப்பிற் காய்ச்சித் தழுவச்சொல்லி யிடிப்பார்கள். குண்டாந்தடிகொண்டு அடிப்பார்கள். எலும்பை யொடிப்பார்கள். இருப்பு முள்ளுகளிலே போட்டு உருட்டுவார்கள். கத்தியைப் பரப்பிக் காய்ச்சி மிதிப்பிப்பார்கள் கையிற் கயிற்றைக் கட்டி நரகக் கிணற்றில் துவைத்து எடுப்பார்கள். இரும்புக் கூண்டிற்றூக்கி யேறிட்டு வைப்பார்கள். இரத்த முஞ்சீழும் நிரம்பிய நரகத்திற் சுற்றிலுங்கருங்குளவி மொய்த்துக் கொண்டிரைய அமுத்துவார்கள். துற்கந்த மாம்ச நரகத்தில் துறுப்பார்கள். மலசல நரகத்திற் கவிழ்த்து வாட்டுவார்கள். அக்கினிக்குழியிற் புகுத்துவார்கள். அனற்பொறி நிரையத்திலிருத்துவார்கள், பாம்புக் கிணறு, அட்டைக் கிணறு, அரணைக்கிணறு, தேட்கிணறு, விரியன்கிணறு, நண்டுவாய்க்காலிக் கிணறு, பிள்ளைப்பூச்சிக்கிணறு இவைகளிற் போடுவார்கள். பெரும்புலிப்போன், செந்நாய்ப் போன். சிங்கப்போன், சிறரவப்போன் முதலியவைகளிற் விடுப்பார்கள். கத்தி, வாள், ஈட்டி, முள்ளு முனை, இவைகளை மாட்டிப்புடைத்து வருத்தப் படுத்துவார்கள். இந்தப்படிக்கு அநேகவித பேதமான இருபத்தெட்டு கோடி நரகங்களிலேயும் புகுத்திக் கண்டிப்பார்கள்.

அம்மா புண்ணியவதியாகிய கைகேயி! இப்பேற்பட்ட துன்மார்க்கப் பெண்ணை நான் கண்ணிலும் பாரேன். அவாள் பேச்சைக் காதிலுங் :கேளேன். அவாளைக் கலந்தும் விளையாடேன். எனக்குத் தகுந்த இஷ்டமுள்ள பதிவிரதைகளுடன் ஒழுகுவேன், பழமைபாராட்டிப் பழகுவேன், இஷ்டங்கொண்டு பேசுவேன், மற்ற வேளைகளில் வீட்டு வேலைகளும் இல்லற தருமமும், பிராணுகிய புருடன் பணிவிடையும் பிரதானமென்று பார்ப்பேன், பறக்கும் பட்சிகளைக்கூண்டில்வைத்து வளர்க்கமாட்டேன். என் மாமன், மாமி, கணவன், இவாள் வளர்த்தால் அதுகள் பசித்திருக்கப் பார்த்துண்ணேன். பசு முதலிய மாடு கன்றுகள் பட்டினியிருக்க வொட்டேன். என்னுயகனுக்கு மனங்கோணுதலாக நடந்து எதிர்த்து வாதித்து வார்த்தையாடேன். அவரென்னை யடித்துத்திட்டி யுதைத்த போதிலும் அவருடைய கால் கை வாய் நோவுமே யென்று உபசரித்து. உடனே அவர் அழைத்தாலும் அழையாமற் போனாலும் ஏனென்றோடி, அவருக்குண்டான பணிவிடைகள் முதலானதுகளைப் பால் மாறிக்கையில்லாமற்செய்து, என்பேரி

லேர்ப்பட்ட கோபந்தீர்ந்து இஷ்டம் வரும்படியாய் நல்ல வார்த்தைபேசி, அவர் தயவைத் தேடிக் கொள்ளுவேன். ஏழைகளாய் நொந்துபோன சமுசாரிகளுக்கு என் நண்பருடன் சொல்லி, உபசாரமும் உபகாரமுஞ்செய்வித்து அவர்களுக்கு இன்பமுண்டு பண்ணிவைப்பேன் அன்னம் தாகம் தாம்பூலம் சுண்ணம் மருந்து ஐயம் காதோலை தலைக்கெண்ணெய் இவை முதலாகிய தருமகூட்சமங்களில் என்னு லியன்றவரைக்கும் ஏற்பவர்க்களித்துப் புண்ணியஞ் சம்பாதிப்பேன். என் பிள்ளைகளுக்குக் கல்விவருவிக்கும் விஷயத்தில் மெத்தக் கருத்தாய்ப் பொருந்தி வைப்பேன் இப்பேர்ப்பட்ட சத்கருமங்களெல்லாஞ் சர்வ சாக்கிரதையாகப் பண்ணி நாளுக்குநாள் அபிவிர்த்தியாகி இந்தப்பாக்யத்தை யனுபவித்துக் கொண்டிருக்கிறேன் என்று சாந்திலை சொல்ல அந்த வார்த்தையைக் கேட்ட கைகையான்வருக்கு விவேகமும் ஞானமும் பிறந்து பிரதட்சணம் பண்ணி அம்மா! நீர் சொன்ன எதார்த்த வார்த்தை யனைத்துஞ் சத்தியமே என்று புகழந்து கொண்டாடி மகா லட்சுமிக்குச் சமதையான் கைகை செலவு வாங்கிக்கொண்டு மகமேருகிரிச்சாரலி லிருக்கின்ற தன் வீட்டுக்குப் போயினுள் என்று பிரமசாரியாகியவீஷ்மர் விளம்ப இத்தருமத்தைக் கேட்ட தருமராஜன் சந்தோஷித்து பாட்டனுக்குப் பிரதட்சணம் வந்து நமஸ்காரந்தந்து ஐயா! உம்மாலே பதிவிரதா ஸ்திரீகளின் பான்மையெல்லாங் கேட்டேன் சோரஸ்திரீகள் படும்பாட்டையெல்லாம் விசிதமா யுணர்ந்தேன் சுவாமி! புருடராகிய நாம் நடக்கவேண்டிய நன்மைகளெப்படி குற்றந்தீர்ந்து கடைத்தேறுவ தெப்படி இவற்றை யெனக் கியம்பவேண்டுமென்று கேட்க குரு முகூர்த்தங் கொண்டருளிய வீஷ்மர் சொல்லத் தொடங்கினுர்.

---

## புருடர் நடக்க வேண்டிய புத்தியாசாரத்தைப் பற்றிக் கூறுதல்.

அப்பா புண்ணிய ஸ்வரூபியாகிய என்னருமைப் பௌத்திரனே! புருடனுயினேன் உதயத்திலெழுந்து உபாதி நீக்கி ஸ்நான சந்தி யனுஷ்டான் செபதப கரும முதலியவை முடித்துக்கொண்டு சூரிய நமஸ்காரஞ்செய்துஇந்தப்படிக்கு மற்ற இரண்டு காலமுஞ் சோம்பலில்லாமல் முடித்து அவ்வக்காலத்திற் சுத்தவஸ்திரந் தரித்து அல்லது ஈரவேட்டியுடனிருந்து ஈஸ்வரத்தியான மியற்றி எட்டெழுத்தும் ஆறெழுத்தும் ஐந்தெழுத்துஞ் செபித்து இகபோகார்த்த சிந்தியை விரும்பி ஆரணனை ஆதியை அநாதியை எங்குந்தானுகிய பரிபூரணனை புண்ணியனை உண்மைப்பொருளை சத்தியநித்தியனை மோட்சகாரணனை கஜேந்திரவரதனை ஆதிமத்தியானந்த ரகிதனை ஆதிமூலப் பொருளை ஸ்ரீமகாலட்சுமியை மார்பிற் றரித்திருக்குந் திருநாரணனை நாராயணமூர்த்தியை தன்மனதாரவாழ்த்தி வணங்கித் தோத்திரம் பண்ணி பரபோகார்த்த முத்தியை விரும்பி நித்தனை நிராமயனை நின்மலனை நிற்குணனை சகுணனை மூவர் முதல்வனை முக்குணனைமுக்கணனை வேதவேதாந்த வேதியனை சோமசூரியாக்கினிச் சுடர் கண்ணனவனை அறம் வளர்த்தாளாகிய அம்பிகையை வாமபாகத்தில் வைத்தவனை, களனை, நிட்களனை, சகலனை, முத்தனை, கர்த்தனை, சித்தனை, இருமைக்கடலை, மும்மூர்த்திசொரூபனை, முத்தொழிற்கும் வித்தானவனை, வினோதனை, இலீலாவிபூதனை, விசாக மூர்த்தியைப் பெற்றவனை, நிசானுபோகமுற்றவனை தன்குற்றமற்ற மனத்தாற் குறைகூறித் தொழுதல்வேண்டும். இந்தப்பிரகாரம் மூன்றுகாலமு முற்றுவானுகில் நாளுக்குநாளவு னறிந்தறியாமற் செய்தகுற்றங்களெல்லாம் அனற்பட்ட சருகாகும். விஷ்ணுநாமமும், சிவநாமமும், ஒருகாற்சொன்னமாத்திரத்தில் மகா பாவங்கள் வதங்கிப்போம், புகழும், புண்ணியமும், ஆயுசும்செல்வமுமுண்டாம். இவ்வண்ணம் இயார் நடந்தவர்களோ, அவர்களுக் கெல்லாஞ் சகல பாபக்ஷயமு மூண்டாய் மோட்ச மடைவார்கள். என்று சொல்லக்கேட்ட தருமராஜன் இரண்டு கரத்தையுங் குவித்து நமஸ்கரித்து பத்மாசனம்பண்ணி, தொடைமேற் கரமமைத்து, மனத்தைக்குவித்து, பஞ்சேந்திரியங்களையுமடக்கி வாயுவைக்கும்பித்து,மூக்குமுனையில் மூனைக்கண்ணூட்டி சூரியமண்டல மத்தியிலிருக்கப்பட்ட பரமேஸ்வர மூர்த்தியைச் சற்றுநேர நதியானம்பண்ணி, அப்பாற் கண்ணைவிழித்துப் பாட்டனைப் பார்த்து, ஐயா! புருடர்கள் தானங்கொடுக்கிறதென்றுஞ்சொல்லப்பட்ட இரண்டு வகைக்குள் எதிலே அ

திகபலனுண்டாகும் இதனைச்சொல்லவேண்டுமென்று கேட்க வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

இன்சொற்தானத்தினுஞ் சிறந்ததென்பதை பற்றிக்கூறிய ஓர் இருடிகதை.

அப்பாமெய்விரதனே! தானமென்பது ஒருவருக்கொருத்தர் தனதாக ஈவது தனதென்பது மனோபத்தியுடன் அன்புவைத்தது. கொடுக்கிறவனுக்குக் குல சம்மந்தத்தாற் குணமிருக்கும். குணம் எவ்வளவுடையதோ அவ்வளவு கல்வி. கல்வி யெம்மாத்திரங் கற்றானோ! அம்மாத்திரம்பேரறிவு எம்மட்டோ அம்மட்டு தெளிவு. தெளிவுக்குத் தகுந்தபடி சேர்க்கை. சேர்க்கைக்குத் தகுந்த ஈகை. இவ் வீகையில் எவ்வண்ணங் கியானம் விளங்குவதோ? அவ்வண்ணம் பலனனுபவிப்பான். மேலும் தானங் கொடுப்பதைப் பார்க்கிலும் மேன்பாடாகிய தருமமொன்றுண்டு, அதென்னவெனில் வந்தவர்களை யுபசரித்து வணங்கி அன்பு பாராட்டித் தேன் சொரிவது போற் பேசுவது இதுபெரியதானம். அதாவது, சத்து, சித்து, ஆனந்தம் என்று மூன்றுபதார்த்தம், சத்தாகிறது சாத்வீககுணம், இந்தக்குணஞ் சும்மாயிறக்காது. மனஞ்சேதனப்பட்டு, ஆங்காரமடுங்கி, பொறாமை யொடுங்கி, அவாவிலங்கி நான் எனது என்கிற மோகாபிமானமற்று, பெண்டுபிள்ளை பண்டு பதார்த்தங்களெல்லாம் மித்தையாகக் கண்டு சர்வபூதாதிக ளிடத்திலேயுந் தயைவைத்து பச்சாத்தாப மூண்டாகி அருளுடனிருப்பது சத்குணம், இந்த சத்குண முள்ளவர்கள் சித்தாகிய பிர்மவிலாச வித்தெல்லா நெரிந்தவர்கள், பிர்மத்தைக் கண்டபோதே ஆனந்தமும்மோனமும், சொந்தமாகும், அவர்கள்தான் நித்தியானந்தர்கள். பிரபஞ்சவிசார நீத்த நின்மலானந்தர்கள். இந்தச்சச்சிதானந்தத்தன்மை பிரபஞ்சத்தைப் பொய்யெனக் கண்ட பேர்களுக்கேவரும். பூதாதிகளியாவுஞ் சமத்துவமாய்ப் பார்க்கப்பட்டதே சம்சித்தம். உரைவேறு செய்கைவேறாயிருப்பவர்கள் இன்சொற்பேசுவார்களா திரிகரணசுத்தியுடையவர்கள் இனியசொற் கூறுவார்களல்லது, மற்றொருவருக்கும் இன்சொற்பேசுவது எளிதல்ல. அது பெரிய காரியம். எல்லாருக்குந்தானே வாராது. சுத்த சாத்மீகிக்குச் சொந்தம். இதற்கொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேன் கேள்.

அப்பா தருமநந்தனு! சர்வபூதாதிகளிடத்திலேயுங் கிருபையுள்ள சாத்வீக குணத்தையுடைய பிராமணரொருவர். அவர்வனத்திலே சஞ்சரிக்கிறபோது. தாருணனென்கிற ராட்சசன் பெரும்பசி யுண்டானவனாகி, எங்கு மிரையகப்படாமல் மிகு கோபங்கொண்டு, எதை யெடுத்து விழுங்கலா மென்று ஏக்கம் பிடித்து வருகின்றான். அப்போது மேற்கூறிய பிராமணரைக் கண்டான். காணவே தன்பசியினாலையினால் இந்தப் பிராமணரைப்பிடித்து எடுத்து விழுங்கிவிட வேண்டுமென்று நினைத்து, ஓங்கிக்கனைத்து, இரண்டு கையும் விரித்துத்தடுத்துப் பிடித்துக்கொண்டான். அப்போது சகலவேதாகம புராண சாஸ்திரந் தேர்ந்து சங்கையறக் கேள்விப்பட்டிருக்கின்ற வேதியர் தெளி வுடையவராகி சற்றேனு முகஞ் சுளிக்காமல், சிந்தங் கலையாமல் மனம்பதைக்காமல், உடல் துடிக்காமல் உள்ளஞ்சோபிக்காமல், மிகக்கோபிக்காமல், ஆனந்த நடம்புரிகின்ற ஆதிமூர்த்தி போற் சோதிகாட்டி நகைத்து துயரற்றிருந்தார். அந்த தாருணரென்னும் அரக்கன் மனமருண்டு, மதிமயங்கி, மகிழ்ச்சி யடங்கி, புத்திகலங்கி, இவரெப்படிபட்ட பெரியவரோ, எத்தன்மை யுடையவரோ? என்று ஐயப்பட்டு, பிராணபயமில்லாமல் நகைக்கின்றாரே, முகமலர்ச்சி கொண்டாரே இதென்ன விந்தையென்று அவரைச் சேர்த்துப் பிடித்தகையைவிட்டுவிட்டு, பசிநோயோடு, மெழுந்த கோபமாறி, ஐயரே: எனக்குப் பசியும் ஆயாசமும் குளைப்பும் களைப்பும்வெளுப்பும் விதிர்விதிர்ப்பும் வரவேண்டிய காரணமென்ன? நீரிதை நன்றாயோர்ந்து சொல்லுவீராகில், உம்மைக்கொல்லாமல் அகல்வன். இல்லாவிட்டால் என்பசிக்கெப்படியும் உம்மைத்தின்னுவேன். கொல்லுவதற்கு முன்னாக நான்கேட்ட சங்கைக்கு உத்தரவு சொல்லுமென்றான். அந்தமொழிகேட்ட பிராமணன் அஞ்சாமல், புன்னகையோடு முகமலர்ந்து, சர்வபூதங்களிடத்திலும் ஈஸ்வரன் சானித்தியமென்பதை நன்றாயறிந்த நாதனுகையால் மிகுந்த இரக்கத்துடன் இன்சொல்லிலவனுக்கு உத்தரங் கூறினார்.

அப்பா குணவானே. தேகங்குளிர்ச்சியாய் புஷ்டியாய்ப் பருக்காமல் உலர்ந்து

போவது காசரோகமென்கிற வியாதியின் குணம். உடல்வெளுத்து மெலிந்து காட்டுவதெல்லாம் பாண்டுரோகத்தின் பான்மை இந்த ரோகங்கள்வருகிறதற்கு ஏதுவென்னவென்றால், ஒருவன் தன்னுடைய சுற்றத்தார், பந்துஜெனங்கள், மித்திரர், தரித்திரர், இவர் முதலிய பேர்களைக் கடிந்து குரூரவார்த்தைகளைக் கொட்டினாலும், அவர்கள் வயிறெரிந்து மனம் புகைந்து மலமலவென்று கண்ணீர் சொரிந்து அழுதாலும் ஒருவனுண்ணும்போது மிடறைப் பிடித்தாலும் தாய் தந்தையைத் தமையனைப் பழித்துப் பேசினாலும், அவர்களை யேசினாலும் சஞ்சலப்படுத்தினாலும், தான் பெற்ற ஜெயத்தைத் தானேபுகழ்ந்து ராஜசமுகத்தினின்று பெருமைகூறினாலும், அடுத்தவனுக்கு ஆபத்காலத்திலே உதவிசெய்யா திருந்தாலும், உதவிசெய்யாமலே விருதாவில் நான்செய்த உதவியாற் பிழைத்தானென்று விருதாடம்ப சம்பவம் பேசினாலும், செய்த வுதவியைச் செப்பிக்காட்டினாலும், கல்லாதமூடன் கற்றவிசேடனைப் புகழ்ந்து சந்தோஷப்படாமலிகழ்ந்தாலும், தேடியதிரவியத்தைப் பெரியவர்கள் முதலிய நல்வழியிற் செலவழிக்காமல் தீநெறியில் விறையப் படுத்தினாலும், அன்னமுண்டு பின்னம் பண்ணினாலும், வீண்விசாரம் பெற்றாலும், நன்றாயிருப்பவரைப் பார்த்துப் பொறாமைப்பட்டு நமக்கில்லையே யென்று றனம்பொருமினாலும், தேவர்கள், நல்லோர், பெரியோர், இவர்களை நிந்தனை பண்ணினாலும், மகாபாவமாகிய பசி, ஆயாசம், இளைப்பு, களைப்பு, வெளுப்பு, விதிர்விதிர்ப்பு, இவைமுதலிய நோய்களெல்லாம் வருமென்று சொன்னார். அதைக் கேட்ட தாருணராக்கதன் வேதியருடைய இன்சொல்லுக்கிரங்கி அவரை உயிர்வதை செய்யாமல் விட்டுவிட்டான். அப்பாற் சீலாசாரத்தையுடைய பிராமணரான்வர் தனது ஸ்தாஸ்தானம்போய் சார்ந்தார். அப்பா! தருமநந்தனா அந்தப் பிராமணர் இன்சொல்லை வகித்திருந்ததினாலல்லவா உயிர்ப்பிழைத்தார். ஆதலால், இதவென்பது எல்லாவற்றினு மேன்பாடென்று கங்கைமைந்தன் கரைத்தார் அங்கம்பொங்கிய தருமராஜன், சுவாமி புத்திரர்களிலே, அநேகவித புத்திரருண்டென்று பேசுகின்றார்களே அத்தனை விதங்களையுஞ் சொல்லவேண்டுமென, மெத்தக் கற்ற வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

### புத்திரபேத விபரங்கூறுதல்.

அப்பா குவளைத்தாமனே! முதலாவது, தனக்கு மாங்கிலிய தாரணமுள்ள சொந்த ஸ்திரீக்குப் பிறந்த பிள்ளை. இரண்டாவது, தன்னுடைய மகள், அல்லது மகன் இவர்கள் பெற்ற பிள்ளை. மூன்றாவது, தன்னுடைய பெண்சாதி தன்னையறியாமல் மற்றொரு விதத்தினாற் பெற்ற மைந்தனை தத்தபுத்திரனாகக்கொண்ட மஞ்சணீர்ப் பிள்ளை. ஐந்தாவது, தாய்தந்தையை நீக்கித் தன்னிச்சையாய்த் திரிந்துவந்து சரணமென் றடைந்த பிள்ளை. ஆறாவது, பெண்சாதி சாரத்துவமாய்ப் பலபேருடன் கூடிப் பெற்று இன்னான் விந்துக்குப் பந்தமாய் வந்ததென்று தெரியாத பிள்ளை. ஏழாவது, அன்னையும் பிதாவும் அடித்துத் துரத்திவிடப்பட்டு ஆதரவில்லாமல் வந்து சேர்ந்த பிள்ளை. எட்டாவது, கன்னிகையிலொருவனைக்கலந்து பெற்றுக் கரனீனனாகிப் பிற்பாடு அந்தக் கன்னிகையை எவன் கலியாணம் பண்ணிக்கொண்டானோ? அவனுக்கான பிள்ளை. ஒன்பதாவது ஸ்திரீயினுடைய வயிற்றிற் கருப்பங்கொண்டிருப்பது தெரியாமற் கலியாணம் பண்ணிக்கொண்டபின் தாலி கட்டிக்கொண்டவனுக்குச் சொந்தமாகும் பிள்ளை. பத்தாவது, தன்னுடைய மனைவியைத் தானே கோபித்துக்கொண்டு வேண்டாமென்று வெறுத்து ஒட்டிவிட்டானுநி லந்தப்பெண் தருமமாகப் பார்த்தும் பர்த்தா துரத்தியபடியால் தன்பேரிற் குற்றமில்லாமல் இன்னொருவ னிடத்திலிருந்து பெற்ற பிள்ளை. பதினொன்றாவது, தாயுந் தகப்பனும்விலைகொடுத்து வாங்கிக்கொண்ட பிள்ளை. பன்னிரண்டாவது. அன்னியஸ்திரீயினிடத்தில் தன் வீரியந் தரித்து உதித்து எல்லாருக்கு மின்னனுக்குப் பிறந்ததென்று தெரிந்து இவன் பேரே வழங்கும் அந்தபிள்ளை. ஆகிய இப்பிள்ளைகளை யெல்லாம் உத்தமமான மூதற்பிள்ளையோ டொப்பக் கருதும்படிக் குறைப்பது மனுநூலின் பிரமாணமென்றனர். இதனைக்கேட்ட தருமராஜன் வீஷ்மரைத் தண்டஞ்சமர்ப்பித்து, ஐயா! கங்காநதியின் பெருமையும் மகிமையையும் அடிமைக்குச் சொல்

லவேண்டுமென்று வணங்கினர். அன்புட னே காங்கேயன் சொல்லத்தொடங்கினர்.

---

கங்கையின் பெருமையு மகிமை
யுங் கூறுதல்.

அப்பா பேரனே! சூரியனில்லாத பக லுஞ் சந்திரனில்லாத இரவும் போன்றது கங்காநதியில்லாத நாடு. ஆதலால், அக்கங் கையேனும் அக்கங்கையோடொத்த ஓர் நதி யேனு மில்லாத நாடுபாழ். தேவர்களுக்குள் தேவேந்திரனெப்படி உயர்வோ, அப்படிக் குப் பூலோகத்திலிருக்கின்ற அநேகங்கோடி தீர்த்தங்களுக்குள்ளே புனிதமும், புண்ய மும், சிரேஷ்டமு முடையது அக்கங்கை அன்றியும், மகாபாதக விமோசனமும், சகல பீடாபரிகாரமும், இகபர சாதனமுந் தரப் பட்டது. யோகபாக்கியம் மருவிய பொன் னுடும் மோட்சமுந் தரப்பட்ட சகலபுவன கர்த்தாவாகிய சாம்பவ மூர்த்தியினுடைய சடாமகுடத்திற் சானித்தியமாய்ப் பதிவிரு ந்து ததும்பி, நெற்றிக்கண்சுடரை நிமிர வொட்டாமற் றணிப்பது. இப்பேர்ப்பட்ட மகாகங்கையின் பெருமையை நானென்னெ ன்று சொல்லுவேன்? ஆகிலும் இந்தக் கங் கையில் விதிமுறைப்படிக்கு ஸ்நானஞ் செய் தால், கொலை, களவு, கள், காமம், பொய்யெ ன்கிற பஞ்சமாபாதக முதலியவற்றின் வே ரைக்களைந்து வெந்நீர்வார்த்துவிடும். மாயா மயக்கங்களையும் மாய்க்கும். எமபாசத்தைத் தேய்க்கும். மும்மலத்தையும் நின்மலமாக் கும். முக்குறும்பையு மடிக்கும். இந்திரியங் களை யெற்றும். பற்றும் வினைகளைப் பாழாக் கும். ஆகாமிய சஞ்சித காமியத்தை யடக் கும். பிராரத்துவத்தைக் கழித்து உடலுயி ருடனொழிக்கும். மனதைச் செம்மைப் படுத் தும். உறுதியுண்டாக்கும். ஜனனந்தோறுந் தேடிக்கொண்ட வஞ்சனை, துரோகம், பா வம், லோபம், மோகம் இவை முதலிய எல் ல வற்றையுந் தீய்க்கும். சுவர்க்காதி போகங் களில் என்னுளுங் குடியாயிருக்க ஏற்றிவைக் கும். சஞ்சலமாகிய சமூகவிசாரத்தையுந் தீர்க்கும். பிறவிவேலையைப்போக்கும். இன் னுமனேக நன்மைகளை யெல்லாந்தரும். இன்னுமதனுடைய பெருமையை என்னுற் சொல்ல முடியுமோ? எக்கியங்கள், தானங் கள், தருமங்கள், விரதங்கள், சீலங்கள் ஆசா ரங்கள், செபங்கள், இவைகளெல்லாம் இன் னெரு தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து எய் தும் பலன்களுக்கு எட்டுப்பங் கதிகமாகும். இந்தக் கங்காஸ்தானஞ் செய்கிற பேர்களு க்கு எப்பேறும்பெறலாகும். இப்பேர்ப்பட்ட பெருமையையுடைய கங்கையைச் சத்தி லுள்ள ஆத்மகோடிகளுக்கு ஆங்காங்கு மாதாரமா யிருக்கப்பட்ட மற்றச் சுத்த சலத் தில் ஸ்நானம் பண்ணும்போது நினைத்து இதனினமான மற்றயமுனை, கோதாவிரி, சரஸ்வதி நருமதை, சிந்து,காவேரி,என்னு மிவ்வாறையுந் தியானித்தாலும், இவற்றின் பெருமையை ஒருவர்க் குரைத்தாலும், இற் றைக் கருதிப் பூப்பிரதக்ஷணம் பண்ணினு லும், கங்காஸ்நானத்திற்குப் போகிறேனெ ன்று மூன்றடி, ஏழடி, ஒன்பதடி பெயர்ந்து வைத்து நடந்து மீண்டாலும், பாபங்களெ ல்லாம் பறந்தோடிப்போம்.

இப்பேர்ப்பட்ட கங்காநதி தீரத்திற் சார்வதாய் வாசம்பண்ணி, அந் நீரில் மூழ்கி அந்தத் தீர்த்தத்தைச் சாப்பிட்டவர்களுக்கு என்னபலனென் றியம்புவேன்? அந்தக்கங் கையைக் காவடியில் வைத்துக்கொண்டு வந் து தோளிலே சுமக்கின்ற பேருக்கும், சும ந்துபோய் இன்னொரு ஸ்தலத்தில் அபி ஷேகம்பண்ணிவைக்கின்றபேருக்கும்அதை க்கையேந்திப்பண்ணுகின்றபேருக்குந் தீரா தவல்வினை தீர்ந்து, அவர்கள் ஸ்திரம்பெற் றிருப்பார்கள். இந்தக் கங்கா மகத்துவத் தைக் கருதிக் கேளாமல் அலட்சியம் பேசி அறிவழிந்த ஒருவன், மற்றொருக்கால் தட் டுக்கெட்டுத் தடுமாறி ஏதோவொரு காலாதீ தத்தால் அந்தக் கங்கைக் கரையில் வந்து அந்தக் கங்கையின் காற்று, அல்லது, திவலை அவன்மேற் படுமாகில, முன்னும் பின்னுமுள்ள பாபமூட்டைக ளெல்லாம் எரிந்துபோம், பூமியில்ஒருகோடி புண்ணிய தீர்த்தங்க ளுண்டாயிருந்தாலுங்கங்கைக்குச் சரிசொல்லக் கற்றவர்கள் கருத்தை பொருந் தார்கள். அப்பா தருமநந்தனு! கோடி நட் சத்திரங் கூடினுலும், ஒரு சந்திரனுகுமா? பத்துகோடி மலைகள் சேர்ந்தாலும், ஒரு பொன்மலையாமா? ஆயிரஞ் சத்தியானுலும் ஒரு பராசத்தியாமா? பல்லாயிரந் தேவரானு லும். ஒரு புருஷோத்தமனுவரோ? பண் புள்ள பேர்கள் எண்பதுகோடி யானுலுமெ ன்து நண்புள்ள சண்முகனுவரோ? அப்

படிபோல் கங்கைக்குச் சமானமில்லை. இப்பேற்பட்ட கங்கையில் ஸ்நானம்பண்ண வேண்டுமென்று சொன்னாலு-மகாபுண்ணியமும் புனிதமு முண்டாம். கங்கா ஸ்நானத்திற்குப் போகிறேனென்று ஓரடி யெடுத்துவைத்து நடந்தாலும் அவர்களுக்கு மேலுலகச் சுதந்தர முண்டாம். இப்படிப்பட்ட புனிதமுடையது பகீரதி என்று ஒருவராலுந் தன் மகிமை யறியப்படாத வீஷ்மர் விளம்பத், தருமராசனும் மற்ற மாதவர்களுங் கேட்டுப் பேரானந்தம்பெற்று, மெய்வீடுற்றவர்போல் மகிழ்ந்து வீஷ்மரைப் பார்த்து, ஐயா! தேவரீரின்று வேதாகமப் பிரமாணங்களை யெல்லாம் வெகுவாய்க் கரைத்தீர். யாங்களனைவருஞ் சன்ம சாபல்யரானோம். தங்களுக்கு இளைப்புங் களைப்பு மெய்துவதா யிருப்பதாலும் எங்கட்கு விடைகொடுத் தருளுமென்று கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே விடை தந்தபின் தருமன் முதலிய சமஸ்தானபேரும் அஸ்தினபுரஞ்சேர்ந்து, வீஷ்மர் கூறிய ஒவ்வொரு பிரமாணங்களையுஞ் சிந்தித்துப் போற்றி ஆனந்தித்திருந்தார்கள்.

வேதாகமப் பிரமாண முறைத்த சருக்கம்

முற்றிற்று.

---

இரண்டாவது,

## உமாமகேச சமவாத முரைத்த சருக்கம்.

கண்ணன் துதி.

மணிவயல்சூ ழயோத்தியினிற் றசரதன்றன் மகவாக மகத்திற்றோன்றி
யணிகெழுஞ்சீ தையைமணந்து காஞ்சி நிசாசரர்க ளறக்கடிந்து
திணிபுயரா வணன்முதலோர் தமைச்செகுத்துத் தேவர்பயந் தீர்த்தளித்துப்
பணியணைமேற் கண்வளரும் பரந்தாம னடித்துணையென் பற்றதாமே.

ஓ சந்திரகுலத் திந்திரனாகிய ஜெனமேஜய மகாராஜனே! மறுநாட் காலையில் சூரியோதய மானவுடன் தருமநந்தனர் தனது தம்பிமார், ஸ்ரீ கிருஷ்ணதேவர், வேதவேதியர்கள், இவர்கள் முதலான சமஸ்தமான பேர்களோடுங் காலக்கடனை முடித்துக்கொண்டு, அஸ்தின புரத்தினின்றும் வெளிப்பட்டுக் குருக்ஷேத்திரத்திற்கு வந்து வீஷ்மாச்சாரியர் விமல யோகத்தில் இருக்குஞ் சரசயனத்தருகிற் சென்று, பாட்டனுக்குப் பாத பூசை முதலிய பணிவிடைகள் செய்து, பலகாலும் இருகாலிற் பணிந்து ஐயா! சகலர்த்த கோடிகளுக்கும் அக்கியான விருளைப் போக்கிச் சுக்ஞான முண்டாக்கிச் செனன வேதை யகற்றித் தீவினை முதலாகிய மகாபாதகங்களெல்லாந் தீர்க்கப்பட்டதால், மெய், வாய், கண், செவி, மூக்கு இவ்வைந்திந்திரியமும், சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகிய தன்மாத்திரைகளும், மற்ற விடயங்களும், வெகுலேசில் ஒடுங்கிவிடச் செய்யத்தக்கதாய், வேதத்தி னொழுக்கம் அதனது விதியை வெளியிடுகிற தருமம். நீதியோ தூஞ் சாத்திரம் இவை முதலியவற்றைப் பரிஷ்காரமாய்த் தெரிவித்து மேலானகதி புகும்படியான விதத்திற் சாதாரணமா யுள்ளதெதுவோ? அதனையெனக்கு விபரமாய்த்தெரிவித் தருளவேண்டும் என்றுரைத்து வணங்கிநின்றபேரனை இணையற்றவீஷ்மரானவர் இன்முகத்தோடும் பார்த்து, இதனைச் சொல்லத் தொடங்கினர். அப்பா பாண்டு மைந்தனே! முன்னாளில் துவாரகையில் வீற்றிருந்த நீலமேகச் சாமள வர்ணனாகிய இந்த ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்குப் பெருமை பொருந்திய நாரதமகாமுனிவர் நீயிப்போதென்னை வினவிய விஷயங்கட்குந் தக்கதாய் ஒரு இதிகாசஞ்சொல்லி யிருக்கின்றார். அந்த நாரத

லவேண்டுமென்று வணங்கினர். அன்புட னே காங்கேயன் சொல்லத்தொடங்கினர்.

---

## கங்கையின் பெருமையு மகிமை யுங் கூறுதல்.

அப்பா பேரனே! சூரியனில்லாத பக லுஞ் சந்திரனில்லாத இரவும் போன்றது கங்கா நதியில்லாத நாடு. ஆதலால், அக்கங் கையேனும் அக்கங்கையோடொத்த ஓர் நதி யேனு மில்லாத நாடுபாழ். தேவர்களுக்குள் தேவேந்திர னெப்படி உயர்வோ, அப்படிக் குப் பூலோகத்திலிருக்கின்ற அநேகங்கோடி தீர்த்தங்களுக்குள்ளே புனிதமும், புண்ய மும், சிரேஷ்டமு முடையது அக்கங்கை அன்றியும், மகாபாதக விமோசனமும், சகல பீடாபரிகாரமும், இகபர சாதனமுந் தரப் பட்டது. போகபாக்கியம் மருவிய பொன் னுடும் மோட்சமுந் தரப்பட்ட சகலபுவன கர்த்தாவாகிய சாம்பவ மூர்த்தியினுடைய சடாமகுடத்திற் சானித்தியமாய்ப் பதிவிரு ந்து ததும்பி, நெற்றிக்கண்சுடரை நிமிர வொட்டாமற் றணிப்பது. இப்பேர்ப்பட்ட மகாகங்கையின் பெருமையை நானென்னெ ன்று சொல்லுவேன்? ஆகிலும் இந்தக் கங் கையில் விதிமுறைப்படிக்கு ஸ்நானஞ் செய் தால், கொலை, களவு, கள், காமம், பொய்யெ ன்கிற பஞ்சமாபாதக முதலியவற்றின் வே ரைக்களைந்து வெந்நீர்வார்த்துவிடும். மாயா மயக்கங்களையும் மாய்க்கும். எமபாசத்தைத் தேய்க்கும். மும்மலத்தையும் நின்மலமாக் கும். முக்குறும்பையு மடிக்கும். இந்திரியங் களை யெற்றும். பற்றும் வினைகளைப் பாழாக் கும். ஆகாமிய சஞ்சித காமியத்தை யடக் கும். பிராரத்துவத்தைக் கழித்து உடலுயி ருடனெழிக்கும். மனதைச் செம்மைப் படுத் தும். உறுதியுண்டாக்கும். ஜனனந்தோறுந் தேடிக்கொண்ட வஞ்சனை, துரோகம், பா வம், லோபம், மோகம் இவை முதலிய எல் ல வற்றையுந் தீய்க்கும். சுவர்க்காதி போகங் களில் என்னுளுங் குடியாயிருக்க ஏற்றிவைக் கும். சஞ்சலமாகிய சமூகவிசாரத்தையுந் தீர்க்கும். பிறவிவேலையைப்போக்கும். இன் னுமனேக நன்மைகளை யெல்லாந்தரும். இன்னுமதனுடைய பெருமையை என்னுற் சொல்ல முடியுமோ? எக்கியங்கள், தானங் கள், தருமங்கள், விரதங்கள், சீலங்கள் ஆசா ரங்கள், செபங்கள், இவைகளெல்லாம் இன் னொரு தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து எய் தும் பலன்களுக்கு எட்டுப்பங் கதிகமாகும். இந்தக் கங்காஸ்தானஞ் செய்கிற பேர்களு க்கு எப்பேறும்பெறலாகும். இப்பேர்ப்பட்ட பெருமையையுடைய கங்கையைச் செக்தி லுள்ள ஆத்மகோடிகளுக்கு ஆங்காங்கு மாதாரமா யிருக்கப்பட்ட மற்றச் சுத்த சலத் தில் ஸ்நானம் பண்ணும்போது நினைத்து இதனினமான மற்றயமுனை, கோதாவிரி, சரஸ்வதி நருமதை, சிந்து, காவேரி, என்னு மிவ்வாறையுந் தியானித்தாலும், இவற்றின் பெருமையை ஒருவர்க் குரைத்தாலும், இற் றைக் கருதிப் பூப்பிரதக்ஷணம் பண்ணின லும், கங்காஸ்நானத்திற்குப் போகிறேனெ ன்று மூன்றடி, ஏழடி, ஒன்பதடி பெயர்ந்து வைத்து நடந்து மீண்டாலும், பாபங்களெ ல்லாம் பறந்தோடிப்போம்.

இப்பேர்ப்பட்ட கங்காநதி தீரத்திற் சார்வதாய் வாசம்பண்ணி, அந்நீரில் மூழ்கி அந்தத் தீர்த்தத்தைச் சாப்பிட்டவர்களுக்கு என்னபலனென் றியம்புவேன்? அந்தக்கங் கையைக் காவடியில் வைத்துக்கொண்டு வந் து தோளிலே சுமக்கின்ற பேருக்கும், சும ந்துபோய் இன்னொரு ஸ்தலத்தில் அபி ஷேகம்பண்ணிவைக்கின்றபேருக்கும் அதை க்கையேந்திப்பண்ணுகின்ற பேருக்குந் தீரா தவல்வினை தீர்ந்து, அவர்கள் ஸ்திரம்பெற் றிருப்பார்கள். இந்தக் கங்கா மகத்துவத் தைக் கருதிக் கேளாமல் அலட்சியம் பேசி அறிவழிந்த ஒருவன், மற்றொருக்கால் தட் டுக்கெட்டுத் தடுமாறி ஏதோவொரு காலாந் தத்தால் அந்தக் கங்கைக் கரையில் வந்து அந்தக் கங்கையின் காற்று, அல்லது, திவலை அவன்மேற் படுமாகில, முன்னும் பின்னுமுள்ள பாபமூட்டைக ளெல்லாம் எரிந்துபோம், பூமியில்ஒருகோடி புண்ணிய தீர்த்தங்க ளுண்டாயிருந்தாலுங்கங்கைக்குச் சரிசொல்லக் கற்றவர்கள் கருத்தை பொருந் தார்கள். அப்பா தருமநந்தனு! கோடி நட் சத்திரங் கூடினலும், ஒரு சந்திரனுகுமா? பத்துகோடி மலைகள் சேர்ந்தாலும், ஒரு பொன்மலையாமா? ஆயிரஞ் சத்தியானலும் ஒரு பராசத்தியாமா? பல்லாயிரந் தேவரானு லும். ஒரு புருஷோத்தமனுவரோ? பண் புள்ள பேர்கள் எண்பதுகோடி யானலுமெ னது நண்புள்ள சண்முகனுவரோ? அப்

படிபோல் கங்கைக்குச் சமானமில்லை. இப்பேற்பட்ட கங்கையில் ஸ்நானம்பண்ணவேண்டுமென்று சொன்னாலு-மகாபுண்ணியமும் புனிதமு முண்டாம். கங்கா ஸ்நானத்திற்குப் போகிறேனென்று ஓரடி யெடுத்துவைத்து நடந்தாலும் அவர்களுக்கு மேலுலகச் சுதந்தர முண்டாம். இப்படிப்பட்ட புனிதமுடையது பகீரதி என்று ஒருவராலுந் தன் மகிமை யறியப்படாத வீஷ்மர் விளம்பத், தருமராசனும் மற்ற மாதவர்களுங் கேட்டுப் பிரமானந்தம்பெற்று, மெய்வீடுற்றவர்போல் மகிழ்ந்து வீஷ்மரைப் பார்த்து, ஐயா! தேவரீரின்று வேதாகமப் பிரமாணங்களை யெல்லாம் வெகுவாய்க் கூறித்தீர். யாங்களனைவருஞ் சன்ம சாபல்யரானோம். தங்களுக்கு இளைப்புங் களைப்பு மெய்துவதா யிருப்பதாலும் எங்கட்கு விடைகொடுத் தருளுமென்று கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே விடை தந்தபின் தருமன் முதலிய சமஸ்தானபேரும் அஸ்தினபுரஞ்சேர்ந்து, வீஷ்மர் கூறிய ஒவ்வொரு பிரமாணங்களையுஞ் சிந்தித்துப் போற்றி ஆனந்தித்திருந்தார்கள்.

வேதாகமப் பிரமாண முரைத்த சருக்கம்

முற்றிற்று.

---

## இரண்டாவது,

# உமாமகேச சம்வாத முரைத்த சருக்கம்.

கண்ணன் துதி.

மணிவயல்சூ ழயோத்தியினிற் றசரதன்றன் மகவாக மகத்திற்றோன்றி
யணிகெழுஞ்சீ தையைமணந்து காஞ்தி நிசாசரர்க ளறக்கடிந்து
திணிபுயரா வணன்முதலோர் தமைச்செகுத்துத் தேவர்பயந் தீர்த்தளித்துப்
பணியணைமேற் கண்வளரும் பரந்தாம னடித்துணையென் பற்றதாமே.

ஓ சந்திரகுலத் திந்திரனாகிய ஜெனமே ஜய மகாராஜனே! மறுநாட் காலையில் சூரியோதய மானவுடன் தருமநந்தனர் தன்து தம்பிமார், ஸ்ரீ கிருஷ்ணதேவர், வேதவேதியர்கள், இவர்கள் முதலான சமஸ்தமான பேர்களோடுங் காலக்கடனை முடித்துக்கொண்டு, அஸ்தின புரத்தினின்றும் வெளிப்பட்டுக் குருக்ஷேத்திரத்திற்கு வந்து வீஷ்மாச்சாரியர் விமல யோகத்தில் இருக்குஞ் சரசயனத்தருகிற் சென்று, பாட்டனுக்குப் பாத பூசை முதலிய பணிவிடைகள் செய்து, பலகாலும் இருகாலிற் பணிந்து ஐயா! சகலாத்ம கோடிகளுக்கும் அக்கியான விருளைப் போக்கிச் சுக்ஞான முண்டாக்கிச் சென்ன வேதை யகற்றித் தீவினை முதலாகிய மகாபாதகங்களெல்லாந் தீர்க்கப்பட்டதால், மெய், வாய், கண், செவி, மூக்கு இவ்வைந்திந்திரியமும், சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகிய தன்மாத்திரைகளும், மற்ற விடயங்களும், வெகுலேசில் ஒடுங்கிவிடச் செய்யத்தக்கதாய், வேதத்தி னுழுக்கம் அநந்த விதியை வெளியிடுகிற தருமம். நீதியோதுஞ் சாத்திரம் இவை முதலியவற்றைப் பரிஷ்காரமாய்த் தெரிவித்து மேலானகதி புகும்படியான விதத்திற் சாதாரணமா யுள்ளதெதுவோ? அதனையெனக்கு விபரமாய்த்தெரிவித் தருளவேண்டும் என்றுரைத்து வணங்கிநின்றபேரனை இணையற்றவீஷ்மரானவர் இன்முகத்தோடும் பார்த்து, இதனைச் சொல்லத் தொடங்கினார். அப்பா பாண்டு மைந்தனே! முன்னாளில் துவாரகையில் வீற்றிருந்த நீல மேகச் சாமள வர்ணனாகிய இந்த ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்குப் பெருமை பொருந்திய நாரதமகாமுனிவர் நீயிப்போதென்னை வினவிய விஷயங்கட்குந் தக்கதாய் ஒரு இதிகாசஞ்சொல்லி யிருக்கின்றார். அந்த நாரத

ராலே நானும் அறிந்தேன். அது எல்லாத்திற்கு மேலான வேதாசாரமாய் இருக்கத்தக்கது. அதற்குமிஞ்சிவேறொன்றுமில்லை. மகாரகசியமானது. அப்பேற்பட்ட மகத்துவசாரம் என்னவென்ருல்? இதோ எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணதேவரும் இவர் நிழல்போன்றிருக்கும் ஊருக்குமணி தேவியாரும், ஒருநாள் மேகங்கள் தவழ்ந்து விளையாடுகின்ற ஒரு பர்வதச்சாரலில் உல்லாசமாய்ச்சென்று, சல்லாபமாய் நின்று, சம்பாஷித்திருந்தார்கள். அப்போது முல்லைமலர் அணிந்த மூர்த்தி தன் பெருமைக்குத் தகுந்தபடியே ஒருபுத்திரன் உண்டாகவேண்டுமென்றுபன்னிரண்டு வருடம் ஒரே நிலையாய் தவம்பண்ணினார். அக்கால் பூலோகத்தி லிருக்கின்ற ரிஷீஸ்வரர்களெல்லாம் ஒரே மொத்தமாய்க் கூடிவந்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைக் கண்டு சந்தோஷங்கொண்டு ஆனந்த வழுத்துமுண்டு புளகாங்கிதங்கொண்டு இயாவரும் பரவசமாகிச்சென்று அவரைச் சூழ்ந்து நின்றார்கள்.

அப்போது நலம் பெறும்படியாக விரும்பிவந்த மகாரிஷிகள் உருக்குமணியுடனிருந்த உலகமளந்தவனைச் சூழ்ந்து சந்தித்து வந்தித்துச் சிந்தித்திருக்கும்வேளையில் இவருடைய வாயிலிருந்து ஒரு அக்கினிச்சோதி பிறந்து, க்ஷணநேரங்கூட தெரிசனைக்கிடங்கொடுக்காமல் வடவாமுகாக்கினிபோல் விரிந்து, ஆகாயத்தி லெழுந்து, அண்டத்திற் பறந்து, அங்கிருந்து மீண்டு நந்த நந்தனனுடைய செந்துவர்வாயிற் புகுந்தது அந்த விந்தையைக் கண்ட வந்தமுனிவர் எல்லோருஞ் சிந்தைமருண்டு, அற்புதமாய்த்திரண்டு வெள்ளம்போல் புரண்டு ஓவேணு கோபால சுவாமியே! தேவரீருடைய திருவாக்கிலிருந்து ஒரு அக்கினிபிறந்து ஆகாயத்திற் புகுந்து மறுபடியுந் திரும்பிவந்து தேவரீருடையவாக்கினில் புகுந்த பாக்கிய மென்னமோ? சுவாமி! அதனது வரலாறுசொல்லவேண்டுமென்றுகேட்டார்கள். அதற்கு வாசுதேவன் மனமகிழ்ந்து வாருங்கள் ரிஷிகளே? அவ்வக்கினியி னுடைய காரணம் உங்களுக்குத்தெரியவில்லையோ! ஆனால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள். அருகிபெருகி வரப்பட்ட சிகரமும், விசாலமும், உயரமுமுடைய பெரிய பர்வதச் சாரலுக்குச் சமீபத்தில் ஒரு ராட்சசன் குடித்தனஞ் செய்துகொண்டு அவ்விடத்திலுண்டாகிய உயிர்வகைகளை யெல்லாமழித்து வகைத்து தின்று, தேவர்களுக் கிடையூறுவிளைத்து துன்பப்படுத்திக்கொண்டு திரிகிறான். அவனைக் கண்ட உயிர்களெல்லாம் எமனைக் கண்டாற்போல் திடுக்கிட்டு நடுங்கி, தெய்வமேயென்று முறையிட்டுப் பல திசைகளிலும் பரதவித்தலைகின்றன. அப்பேற்பட்டவனைக் கொல்லவேண்டுமென்று ஒரு தாபாக்கினியை என் வாய்வழியில் நின்றும் பிறப்பித்தேன். அந்த நெருப்பானது போய் அந்த மகா பாதகனாகிய அரக்கனைப் பொடியாக்கிப் போட்டுப் பிர்மலோகம் போயிற்று. அங்கேயிருந்த பிர்மதேவன் கண்டு அவ்வக்கினியினோடு மன்மதனை யனுப்பி நீயிந்தநெருப்புடன் கலந்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்குப் பிள்ளையாகப் பிறக்கக் கடவையென்று அனுப்பினான். அந்த மன்மதனவ்வாறே அக்கினியுடன் சேர்ந்து எனக்கு ளொடுங்கியிருக்கும் படியாக எரிந்துக்கொண்டு சோதியாய் வர, அதை மறுபடியும் நான் மடுத்தேனென்று கேசவ நாராயணமூர்த்தி புகன்றனர். இவையனைத்தையும் கேட்ட பிர்ம ரிஷிகளெல்லாஞ் சந்தேகந் தீர்ந்து சந்தோஷப்பட்டு, அற்புதத்தோடு ஆனந்தபரவசராகி ஓ வாக்குக்கு மனத்திற்கு மெட்டாத மாதவப் பொருளே. ஓமகானுபாவரே, ஓலோகநாயகா, எப்படிப் பட்ட பேர்களானாலும் உம்மை யெளிதிலறியத்தக்கவரோ, ஓ கர்த்தனே என்று சகலவான்மாக்களுந் தொழுங் கடவுளாகிய அம்முகுந்தனை வணங்கினார்கள்.

இப்படி வணங்கிய அந்த ரிஷிஸ்வராள் வந்திருக்கப்பட்ட நெறியை நெடியோனாகிய நாராயணமூர்த்தி கண்டு, அந்த ரிஷிகளிடத்திற் பிரியமுள்ளவராய்ப் புன்முறுவல்காட்டி ஓ இருடிகளே! நான் அந்தச் சென்மமெடுத்துத் துவாரகைக்கு இராஜனாகிப் பலகோடி ராக்ஷச குலங்களைப் பாழாக்கித் தேவர்களுக்குத் திர்ப்திபண்ணிவைத்தேன். அந்த அரக்கரைக்கொன்றபாவம் என்னைத் தொடாமல் நீங்கிப் போகும்படியாய் நீங்களியாவருமென்னிடத்திற் கடாட்சித்து, சகல பாப க்ஷயமுஞ் சத்துருசெயமு முண்டாக்கத் தக்கதாகிய புனித புண்ணிய இதிகாசங்களை என்காதிற் பொழியவேண்டும் என்றுகரமுகிழ்த்துக் கேட்டருளினார். அம்மொழியைக் கேட்ட முனீஸ்வரர்கள் தபசாகிய அமுதம் புசித்திருக்கின்ற சந்தோஷத்தினாலுந் தைரியத்தினாலும் இதனைச் சொல்லலுற்றார்கள். ஓ தே

வாதிதேவனே, ஓ எம்மாலு மற்றெவராலு
மறியப்படாத அற்புதச் சோதியே தேவரீ
ருடைய லீலாவிபூதியைக் குறிப்பிக்கின்ற
இதிகாசங்களே யெண்ணிறந்த துள்ளன.
அவைகளையே யறிதற்குத் திடம்போதாத
யாங்கள், தேவரீர்க்கென்ன விதிகாசமெடுத்
துச் சொல்லப்போகின்றோ மென்றார்கள்.
அப்படிக்குரைத்த ரிஷியீஸ்வரர்களைக் கிரு
ஷ்ணபகவான் பார்த்துச் சிறுநகைவிளைத்து
என்னை எத்தனைவிதமாகப் போற்றிப்புகழ்ந்
தாலும் பூலோகத்தில் ஓர் மனித வடிவாகி
யாதவகுலத்தி லவதரித்து, மாடு கன்றுகள்
மேய்த்து, அழுவாருடனழுது, தொழுவா
ருடன்றொழுது, சிரிப்பாருடன் சிரித்து, கெ
லிப்பாருடன் கெலித்து, விளையாடிக்கொண்
டிருக்கின்றபடியால் என்போன்ற யாவரும்
உங்களைத்தொழுதுபோற்றவும், நீங்கள் எங்
களை வாழ்த்தவும் பெருமைபெற் றிருக்கின்
றீர்கள். பிரபஞ்ச சம்பந்தம் உங்களுக்கு
நிமித்தமில்லை. நீங்கள் பிரமமே பிரதான
மாய்க்குறித்துத்தவம்புரிவோர்களாகையால்
உங்களைவிட மிஞ்சினபேர்கள் மனிதர்களி
லுந் தேவர்களிலுமில்லை, நீங்கள் மிக உத்
திர்ஷ்டாளானபடியினாலே. நான் உங்களை
வணங்கிப்புனிதாசார இதிகாசங்கேட்டேன்
நான் கேட்கத்தகும் நீங்கள் சொல்லத்தகும்
ஆதலால், என்னாசை நிறைவேறும்படியாய்
பரிபூரணக் கிருபைவைத்துப் பகரவேண்டு
மென்று கேட்டனர் அதற்கவர்க ளவ்வாறே
ஆகுகவென்று சொல்லி நாரதமகாமுனியை
நோக்கி எங்களுக்கெல்லாம் நாதனாகிய நீர்
இந்தக் கிருஷ்ணபகவான் கேட்டவைகளைச்
சொல்லுமென்று நமஸ்கரித்தார்கள். அப்
படியே மகதியாழ் வல்லவராகிய நாரதமஹா
முனிவர் மேலான மகிட்சிபூத்து சொல்லத்
தொடங்கினார்.

---

## கைலாசச் சிறப்பு.

ஓ சரஸ்வதி நாயகனாகிய சதுர்முகனைத்
திருநாபிக் கமலத்திற் றந்தருளிய தயாபர
மூர்த்தியே! நான் கங்கை முதலிய அநேகங்
கோடி தீர்த்தங்களில் மூழ்கிப் பூமிப்பிரதக்ஷ
ணம் பண்ணிவந்தேன். அப்போது கைலை
யங்கிரிச்சாரலையடைந்தேன். அங்கேஆகாய
மளாவிய மரங்களால்நெருங்கி, கமகமவென்
னும் வாசனையுடன் புஷ்பித்து தேன்சொரு
ந்தி, கண்ணுக்கெட்டிய தூரம்பரவி தென்ற
லினாலசைந்து, பசியநிறத் தளிர்களுடன்
றழைத்து விரிந்த சோலையொன் றிருந்தது.
அச்சோலையில் தோகைமயில்கள் தேவநாட்
டியஞ் செய்யவும், கிளிகள் அக்கிளிகளுடன்
வேதங்களோதவும், சுரசுதி தாளத்துடன்
குயில்கள் பாடவும் பலகோடி பட்சிகள் உட்
களிப்புப் போடவும், தடாகங்களில் வாசஞ்
கொண்டிருக்கின்ற அன்னங்க ளெழுந்து
சாமர முதலிய ஆலவட்டம் வீசுவதுபோல்
அசைந்து, பறந்து, சிறந்து வந்திறக்கவும்
தாமரைத் தடாகங்கள் ஆலஞ்சுழற்றித் திரு
ஷ்டிகழிக்கவும், தாமரைப்புஷ்பங்கள் தைய
லார்போல் முகமலர்ந்து பார்க்கவும், மரங்
கள் சிரக்கம்பஞ் செய்வதுபோ லசைபவும்,
தேன்கள் சங்கீதரசம்போ லொழுகிக்காட்ட
வும், கருவண்டுகள் ஒத்திசைகூட்டவும், வெ
ள்ளைமேகங்களிறங்கிக்கொள்ளையாய்வஸ்திர
வரிசைகள் கொடுப்பதுபோலப் படுக்கவும்,
கருமேகம் பொன்மாரிபோற் பொழியவும்,
மலையருவிகள் மத்தளவோசைபோல் முழங்
கி வீழவும், தவளைகள் தாளந்தொனிக்கவும்
சங்கினங்களெங்கு முழங்கவுமிரா நின்ற அந்
தத் தோப்பி நடுவில் ஒரு வில்வமரமானது
கொலுக்கொண் டிருப்பதுபோல் வானமளா
வி, யுயர்ந்து, மலர்ந்து, தழைத்து, காய்த்து
ப், பழுத்து, உலகமளந்த பெருமானேவெ
ன்று யாதவர்கள் முதலிய யாவரும் நினைக்கு
ம்படியாய்ச்சிறந்தோங்கியிருந்தது அப்பேர்
ப்பட்ட கூவிளவிருட்சத்தினிழலி லேர்ப்படு
த்தியிருக்கின்ற வெள்ளி வேதிகையின்மீது,
கரியநிறக் கண்டனாகிய பரமேஸ்வரன் பார்
வதி தேவியாருடன் எழுந்தருளியிருந்தார்.

அஃதெவ்வாறெனில், சில தேவகணங்
கள் தூய்மையாகிய கங்காதேவியினது நுரை
போன்ற சாமரங்கள் வீச, வெண்மையாகிய
சுவேதச்சந்திர நிழற்ற, அஷ்ட நந்திதேவர்
கட்டியம்போடபரிசுத்தஞானவான்கள்பணி
விடைபுரிய, சிவபெருமானுடைய கிருபை
யை மறவாமற் பெறுபவர்களாகிய மெய்யடி
யார்கள் திரிகரண சுத்தியாய் மூன்றுவித
வணக்கமுஞ் செய்து நால்வகைப் புட்பத்
தினாலும் அருச்சித்துப் பூமாரி பொழிய,
சமுத்திரமானது மகமேருவமைந்த மாநில
த்தை வளைந்திருப்பதுபோற் சகல கோடி
தேவர்களுஞ் சூழ்ந்துகொண்டு ஓம் ஹரஹர

சம்போ! சிவசிவசம்போ! சங்கரசம்போ! சதாசிவசம்போ என்று தோத்திரஞ்சொல்ல இயக்கர்-சித்தர்-கின்னரர்-சாத்தியர்-விஞ்சையர் இவர் முதலானபேர்கள் இசையுள்ள சாமகானங்களிலே ஈசனுடைய லீலாவினோதத்தை வீணையில்மீட்ட, மாயையற்ற சதகோடி சீவன்முத்தரும், பிராமணரிஷிகளும் பிரதக்ஷிண நமஸ்காரம்பண்ணி மகாதேவருடைய மலரடியே அளப்பில்லாத மோட்சவீடென்று பிரமானந்தங்கொண்டு பரவசத்தராய்ப்பணிய, தும்புருநாரதர் தென்பாகிய ஏழிசைபாட இவ்விதவைபவத்தோடு கொன்றையும்-தும்பையும்-கூவிளமும்-கரந்தையும் கங்கையும்-திங்களும்-முப்புரிநூலும்-பொங்கரவமும், பொன்னிறச்சடைமுடியுடன்பொருந்தி மரகதக்கொடிபடர்ந்த பவளம்போன்ற திருநீறு திமிர்ந்த திருவுருவுடைய சிவபெருமான் நகநீண்ட புலித்தோலாடையுடன் யானைத்தோலும் போர்த்து ஒருபாதம் முயலகன் முதுகிலிருத்தியு மற்றொருபாதந் தொடையில் மடித்தும்வைத்து திவ்வியதேசோமயமாகிய ஐந்துதிருமுகத்தை அடியார்களுக்குக்காட்டி அவர்களின் விருப்பங்குறையாமல் சுகப்பேறுகொடுத்துக் கருணைக் கண்ணூட்டி, சோமசூரியாக்கினியென்கிற மூன்று கண்ணுந் துலங்கவிழித்துக் கடாட்சித்துக் கொண்டு, சுற்றிலுந்தழைத்துக்கொண்டு சுற்றிலுந்தழைத்த கரங்களெட்டினும் மானும், மழுவும், சூலமும், கபாலமும், துடியும், முடியும் அபயவரதமுமமைத்து, முகத்திற் சிறுநகையும், காதில் மகரகுண்டலமும், மார்பில் வாசமலர்மாலையும் புனைந்து, சகலகோடி அண்டங்களையும் பெற்றுவளர்த்த நாதவடிவான உண்ணாமுலையுடன் தூண்டா விளக்கின் சுடரொளிபோல் ஆண்டவனெழுந்தருளி யிருக்கின்றார்.

அக்காலையில் அடியேன்பூர்வபுண்ணிய நலத்தாற் போற்றிப்பணிந்து கிருதார்த்தனாகி, பிரதட்சண நமஸ்காரம்பண்ணி, திரிவோலக்க தரிசனங்கண்டு, பார்க்கப் பார்க்கப் பரவசமாய்க் களித்து, என்பு உருகி, அன்புபெருகி, தேகஞ்சிலிர்த்து, மயிர்க்குஞ் செறிந்து, நாக்குழறி நடனம்புரிந்து, சாஷ்டாங்கமாகவணங்கி, அம்மையப்பரடியை என்முடிமேற்பொருந்தி, கண்களிலொத்தி, கைகட்டி வாய்புதைத்து வேதோத்தமமாகிய தோத்திரஞ்சொல்லி வீழ்ந்தெழுந்து நின்றேன். அப்போது ஆதிபகவானுக்கு அருள்வாரி சுரந்து அநுக்கிரகம் பண்ணினார். என்போலொத்த கோடி ஞானமுனிவர்களுக்குங்காட்சித்தருளினார். நாங்களெல்லாம் பேரின்பவாரிதியில் மூழ்கிப் பிழைத்தோம். அந்தவேளையில் உலகமாதாவானவள் ஆகாசசொரூபச்சுடராகிய ஆதிபாண்டரங்களைப் போற்றி, செவ்வாம்பல் மலரிலிருந்து தேன்சொரிவதுபோலச் செப்புகின்றாள். ஓ கண்ணுதன்மூர்த்தி ஓ கைலைக்கரசே பற்பலகோடி அண்டங்களிலேயும் பொருந்திய சகலாத்மகோடிகளையும் பெற்றவரியாவர்? அவ்வாத்மகோடிகளைக்காத்திரட்சிப்பவர்யாவர்? அவைகளைமறுபடியும் அழிப்பவரியாவர்? சூரியசந்திராதிகளாய்ச் சொல்லப்படுகின்ற கிரகங்கள் எப்படியுண்டாயின இவைகளெல்லாம் உலகத்திற்குஉபயோகமென்று மறவாமற்செய்தவர் யார்? இவைகளைக் குறித்து எனக்கு எப்போதுஞ் சந்தேகமில்லாதிருக்க அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று கேட்க சோமசுந்தரர் சொல்லுகின்றார்.

---

## நிட்கள நிலை.

ஓ பராபரையே? பிரிதிவியண்டம், அப்புவண்டம்-தேயுவண்டம்-வாயுவண்டம்-ஆகாயவண்டம்-இவை முதலாகிய பலகோடியண்டங்களையு நித்தியமாயுண்டாக்கி அவைகளுக்கொரு கெடுதியுமில்லாமல் நாட்கள், நட்சத்திரங்கள்-திதிகள்-யோகங்கள்-கரணங்கள்-கிரகங்கள்-ராசிகள் வான்மீன்கள்-வேதங்கள்-ஆகமங்கள்-புராணங்கள்-சாஸ்திரங்கள் ஆகிய இவைகளை யேர்ப்படுத்தி, நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்குலட்ச யோனிபேத சீவராசிகளாய் விரியப்பண்ணி, அவ்வாத்மாக்கள் தோறு நீங்காமல் யாவற்றிலுங் குடியாயிருந்தும் பிடிபடாமலிருப்பவன் யானே. எங்குந்தானாய், நிராமயமாய், நிட்களமாய், ஏகமாய், பரம்பொருளா யிருப்பவனும் யானே என்னுடைய அங்கமானது பிரமாண்டத்தெல்லைக் கடங்காததாய், இவ்வளவென்று முடிவு பெறாததாய், சங்கல்பங்களொன்றுமில்லாததாய், விகற்பமற்றதாய், சோதிமயமாய், பஞ்சபூத சகிததத்துவமாய், தனிமுதலாய், இயர்கஞான சொரூபமாய், பிரமானந்

தப்பெருக்காய், பேரானந்த வெள்ளமா யிருக்க வகித்திருப்பவனும் யானே. ஒருவராலு மென்னை உணரப்படாது, உணர்ந்த பேர்களும் வாக்கா லோதப்படாது. ஏகமயமாய் நிகள நிஷ்கள சொரூபமா யிருப்பவனும் யானே. இப்படியாகிய நான் ஆன்மாக்களுக்குப் பஞ்ச கிருத்தியத் திருவிளையாடல் புரியும் பொருட்டாக வெட்டவெளியிலே நின்று, அலையிலெழுந்த குமிழிபோலும், மேகங் காட்டிய மின்னல் போலும், உலையிலுருகிக் கண்விட்டாடிய பொன்போலும் பொருந்தி மூவராய்ப் பிரிந்து, உலக சிருஷ்டியில் விரிந்து, உயிர்களைக் காக்கப்பரிந்து, உடலுயிரென்று வளர்ந்து வருகின்ற சகல சராசரங் களையுஞ் சம்ஹாரம் புரிந்து, இருவினையொப்பில் திரௌபவானுக்கிரகம் புரிவேன். இது என்னுடைய விளையாட்டு, ஆதலாற் பிரபஞ்சம் யாவும் யானே. தானும்பிரமமும், தனிப்பிரமமும், தான் தானே பிரமமும் நானே, நானே தான் பரமசிவமும், பராசத்தியும், பரவிந்துவும், பரநாதமுமென் றுணர்கவென்று திருவாய்மலர்ந் தருளினர். இவையனைத்துங்கேட்ட பராபரரை மீட்டும்பணிந்தெழுந்து, சுவாமி! இப்பேர்ப்பட்டதன்மையானால் தேவரீருக்கு இந்த ரூபமேதென்று வினவினள். அதற்கீசன் விசுவாசித்துச் சொல்லுகின்றார்.

---

சகள நிலை.

ஓ பவானி! இந்தத்தேகம் எனக்குச் சகளம். இதனிடமாய் வருபவர் மூவர். அவர்கள் முக்குணரூபர். முத்தொழிற் பிரதாபர். சிருஷ்டி திதி சங்காரமென்று நடத்துவார்கள். சிருஷ்டியில் மண்பொதுந் தந்தையென்றும் திதியில் விஷ்ணுவென்றும், சம்ஹாரத்தி லுருத்திரன் என்றும் பொருந்துவார்கள். நானிவர்களுக்கு வேண்டிய முயற்சியுமுறைமையுஞ் செய்துகொண்டு இம்மூன்றிலும் பிரவேசித் திருக்கின்றேன். சூரிய சந்திர அக்கினியும் என்னுடைய கண்களாயிருக்கின்றார்கள். என்னுடைய சுவாசமே வாயுவாக உலாவுகிறது. பாதலமே எனது பாதங்களாகும். அண்டகடாகம் என்னுடைய உடல், என் சொல்லானது வேதம், என்னை நினைப்பவர்களுக்கு நான் சமீபம். நினையாத பேர்களுக்குத் தூரம். என்னுடைய மானசத்தால் உருத்திரன் பிறந்தான் எனது சத்தியாகிய மகாவிஷ்ணுவின் திருநாபிக்கமலத்திற் பிரமன் சனித்தான். இப்பிரமன் யெங்களாக்ளைப்படிக்குப் பிராணிகள் முதலியவற்றைப் பிழையறப் படைத்தான். அந்தச் சராசரங்களை மகாவிஷ்ணு காத்திரட்சித்தான். அந்தச் சராசரங்களினுடைய தனுகரணபுவனபோகாதிகளை அழிப்பவன் உருத்திரன். அழிந்துபோகின்ற இவற்றிற் பொருந்தும் ஆன்மாபத்தி வைராக்கியமுற் றிருப்பதற்கும், அப்படி யுற்றவர்க்குப் பிறவித்துன்பம் வரவொட்டாமற் படிக்குங் காக்கவேண்டிய நிமித்தமாய் நானிந்த உருவங்கொண் டிருக்கின்றேன். இப்படிக் கிருந்தபோதிலும், சிவம் சத்தி விந்து நாதம் இவைகூடாமல் எதுவும் நடவாது. ஆனதுபற்றிப் பிரபஞ்ச நிமித்தமாக என்னுக்குள்ளே மகாவிஷ்ணுவும், மகாவிஷ்ணுவுக்குள்ளே நானுமாயிருந்தால் மாத்திரம் உலகமென்பது. இல்லாவிட்டாற் பிரயோசனமிராது, இந்தரகசியம் ஒருவருக்குந் தெரியாது. அருமையான பேர்களுக்குத் தெரிந்தாலும் பிரியாது. பேதைமையால் நான் வேறு விஷ்ணுவேறென்று பேசுவார்கள். துஷ்டாள் வாதித்துத் தூஷிப்பார்கள். இஷ்டாள் வாஞ்சையுற்றுப் பூசிப்பார்கள். நானுயர்ந்தவனென்று சிலர் சொல்லுவார்கள். விஷ்ணு வுயர்ந்தவனென்று சிலர் சொல்லுவார்கள். நானில்லாமல் திருமாலில்லை. மாலில்லாமல் நானில்லை. நாங்களிருவருமின்றிள துவுமில்லை. நாங்களிருவரும் அபின்னப் பொருளென் றறியாமற்பின்னத் தனத்தாற் கொன்னிப்பேசி, மர்மந்தெரியாமனத்தரு மதத்தரும் பிதற்றுவார்கள். இவ்வாறாகிய எங்கள் மகிமை யறிந்த மகானுக்களாகிய மூனீஸ்வரராள் முதலியபேர்கள் இரண்டு மொன்றென் றெண்ணித் தவம் பண்ணுவார்கள், இதோ நம்மைத் தரிசனம் பண்ணிக்கொண்டிருக்கிற இவர்கள் பேதப்படாத பேரறிவுடையவர்கள் புண்ணிய தேகிகள் மகா புனிதர்கள் என்று பூதநாதன் புகல பொருப்பிற் பிறந்த பூங்கொடி கேட்டுப் புளகாங்கிதமுற்று, ஓ சுவாமி! ஓ தத்துவக்ஞான கருணாநிதியே! ஓ தயாபரப் பொருளே! சோமசூரியாக்கினி மூன்றுந் தேவரீருடைய திருக்கண்களென்றீரே இக்கண்களை மூடினால் அம்மூன்று சோதிக்கும் பிர

காசித்த விராதோவென்றாள். அவர்களுக்குப் பரமசிவன் பகர்கின்றார்.

---

### திரிநேத்திரப் பிரபாவம்.

ஓ இமாசலி நம்து முக்கண்வியாபகமே மூன்றுசோதி என்பதற்குச் சந்தேகமில்லை. இவற்றை மூடிக்கொண்டால் உடனே யெங்குமிருள்வந்து மூடிக்கொள்ளும், முச்சோதிகளில் ஒருசோதியு மூதவாதென்றனர் அது கேட்ட பார்வதாதேவி அதைப் பரிட்சிப்போ மென்று யோசித்து, காந்தள் மலர் போன்ற கையை விரித்துப் பையக்கண்களை மூடினாள். உடனே சூரியசந்திரர் மறைந்து பதினான்குலோகமு மிரண்டு சந்தேகப்பட்டவருள்ளம்போல் மயங்கி விட்டன. அப்போது அக்கினியுமில்லாமல் வேத நியமங்கள் ஆசாரங்கள் பூசாவிதிகள் போசனநைவேத்தியங்கள் இவையெல்லாங் கெட்டன. எங்குந் தோற்றம் உற்பத்தி சஞ்சாரம் ஒடுக்கம் இவைகளியாவுந் தப்பிப்போய் காலங்களின் அளவை தெரியாமல் இருதுக்கள்வருடங்கள் மாதங்கள் பட்சங்கள் வாரங்கள் இவைகளெல்லாந் தடுமாறி தேவர்கள் முதலாகிய சகலாத்ம கோடிகளுந் திடுக்கிட்டு நைந்து நொந்து வருந்திவாடினார்கள் அக்காலையிற் பசுபதியானவர் உலக மியாவும் இருள் மூடியபடியினாலே நமது நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்தார். உடனே அந்தகாரம் நீங்கி, பந்தபாசமகன்ற மான்மைபோலோங்கி விளங்கியது, அதைப்பார்த்த பார்வதியம்மாள் தியங்கி, மூடிய கையை வாங்கி கால்மேல் விழுந்து கண்ணீருகுத்து, கரத்தைக்குவித்து ஓ அண்டர் நாயகனே! ஓ அமலவதுலனே! அடியேன் அபராதியாயினேன். அடியாள்குற்றங்களை க்ஷமித்துஎன்னை யாண்டருளவேண்டும், என்று போற்றி ஏத்திவாழ்த்தினாள். அதைக்கண்ட பரமமூர்த்தி மகிழ்ந்து, பயப்படாதே யென்று நல்ல வார்த்தை பேசுகின்றார். ஓ மலையரையன் பாவாய்! நீ யென்னுடைய கண்ணிரண்டையும் புதைத்தாய். அதனாலே உலகமிரண்டும் கலக்கம்விளைந்தது. எல்லோரும் என்னைச் சிந்தித்து வருந்தினார்கள். அவ்வவர்கள் வந்து வந்திப்பதை மறந்து விட்டார்கள். அவர்கள் கடைத்தேறுவதற்கும், ஸ்நான அநுஷ்டான செபதபசிவபூசைமுதலியவைகளுந் தாட்சி யில்லாமல் நடக்கும்படிக்கும், எனது நெற்றிக்கண்ணைச் சிறிதுதிறந்தேன் அப்பால் மன்னுயிர்களியாவுந் துன்னிப் பிழைத்தன. உலகத்தை மறைந்த இருளுமோடிற்று. இப்போது நீ மறைத்தகையை யெடுத்தபிற்பாடு சூரியனையுஞ் சந்திரனையும் பார்த்து, வேர்த்து வெதும்பிய ஆத்மகோடிகளெல்லாங் கவலை நீக்கிக் களிப்பற்று வாழ்ந்தார்கள். என்று சொல்லியதைக்கேட்ட அழிவில்லாத ஞானமங்கைதொழுது, ஓ ஆதியே தேவரீருடைய ஒப்பில்லாத உல்லாசத்தை ஆரறிவார்கள்? அடியாள் தெரியாமல் பழிதேடிக்கொண்டேன். என்சிந்தைமடிந்து இடிந்துவிட்டது. அதை மன்னிக்க வேண்டுமென்றுவணங்கி, இன்னமொன்று கேட்கத்தொடங்கி, ஓ ஈசனே! உமக்கு ஒரு சிரசிற் சோடசகலைகளும் பிரசித்தமா யிருக்க, மற்ற நான்கு தலை வரவேண்டிய நியாயமென்ன? அதனதுவிபரம் நானறியும்படிக்கு அருள் புரிய வேண்டுமென்று கேட்டனள். அதற்கு ஆதிபகவான் கிருபை கூர்ந்து அருள் செய்யத் தொடங்கினார்.

---

### பஞ்சானனப் பிரபாவம்.

ஓ நாராயணி! மகாவரப்பிரசாதிகளான மாதவரும், முனீஸ்வரரும், தேவர்களும், அன்புடைமை படைத்தமெய்யடியார்களுங் கடைத்தேறத்தக்கதாக, நீ கேட்ட கேள்விக்கு விடைத்தருகிறேன்கேள், மகா பராக்கிரம சாலிகளாய் உலககண்டகராய், உயிர்களுக்கபகாரிகளாய், எதிரில்லாதவர்களாய், எல்லாவரங்களும் உரங்களும் பெற்றவர்களாய் தங்களுக்குத்தாங்களே சண்டைசெய்துசெந்தாற்சாகவாமேயொழிய, மற்றொருவராலும் சுற்றுப்புறத்தி லுள்ளவராலும், பற்பலகோடி ஆயுங்களினாலும் சாவில்லா வரம்பெற்றிருந்த சுந்தோப சுந்தரென்கிற நானவர்களிருவர் சகோதரரா யிருந்தார்கள். அவர்கள்பண்ணிய அக்கிரமங்களெண்ணி முடியா பிரமதேவன் அவர்களைக் கொல்லவேண்டுமென்று மனதில் நினைத்து, தேவரம்பை முதலிய பெண்களின் அழகுகளில் திலமத்தனையெடுத்துச் சிருஷ்டித்த திலோத்தமை யென்னுந் தெய்வப் பெண்ணொருவள். அவள் சதானந்தரிடத்திற்குப்போய் அவரை யழைத்துக்கொண்டு என்னிடத்திற்கு வந்து என

க்கு வழிபட்டு சிஷ்டாசாரத் தன்மை தெரிந்துபணிந்து பிரதக்ஷணம் பண்ணினாள். ஒருவருக்குங் கிடைக்காத பேரழகைப் படைத்த பெண் பெருமாளானவளென்னை வலம் வருகிறபோது நானவளை யொருமுகத்தால் திரும்பித் திரும்பிப் பார்க்கச் சம்மதித்து நான்கு பக்கத்திற்கு நான்கு முகங்க ளுண்டாக்கிக் கொண்டு அன்னம்போல் நடக்கின்ற அவளழகைப் பார்த்தேன். அன்று முதற்கொண்டு இன்றைய வரைக்கும் ஐந்து தலையாகவே அமைந்துவிட்டேன். ஓ ஆரணி! இதல்லாமலும், ஆதியிற் சிருஷ்ட்டி திதி சங்கார திரோபவானுக் கிரகமென்னும் ஆக்கல் காத்தல் அழித்தல் மறைத்தல் விளக்கல் ஆகிய வைந்தொழில்களையு நடத்துவதற்கு ஈசானம் தற்புருடம் அகோரம் வாமம் சத்தியோசரதம் என வைந்துவித முகங்களையுடைத்தாயினேன். ஊதலா லிதுதான் முக்கிய காரணமென் றறிந்துகொள்ளுக. வென்றனர். அவற்றை மகாதேவி கேட்டு சுவாமி! உமது கண்டத்திற் கறையாகிய தென்னகாரணத்தா லென்ன, அதற்கு விடையோன் விடைதரத் தொடங்கினர்.

---

நீலகண்டப்பிரபாவம்.

ஓ கௌரி! முன்னாளையில் துர்வாசருடைய சாபம்பெற்ற தேவேந்திரன் செல்வங் குன்றிப்போய் மகாவிஷ்ணுவை பணிந்து தொழுது அழுதான். அது நிமித்தந் திருமால் பாற்கடல் கடைந்தனர். அப்போது மந்தரமாகிய மத்திற்பூட்டிய வாசுகிவருந்தி விஷத்தைக் கக்கினன். அவ்விடம் காலாக்கினிபோற் பெருகி, மூலைக்குமூலை முட்டிச் சுட்டுத் தகித்தது. அக்காற் சகலகோடி தேவர்களும், முனிவர்களும், அந்த விஷச்சுவாலை பொறுக்கமாட்டாமல் வருந்தி, உடல்கரிந்து, ஒருவரை யொருவர் பிரிந்து, என்னைத் துதித்துத் தோத்திரம் பண்ணினர்கள். உடனே நான் பிரசன்னமாகி, ஆலகாலவிஷத்தை அகங்கையிலேந்திப் புசித்தேன். அப்போது தேவர்கள் நம்மைத் துதித்துப் போற்றி சுவாமி நாங்களும்மை மறக்காமலிருக்கும்படியாக அண்டத்தை யெரித்த இந்த விடத்தைக் கண்டத்திற்றானே அமைக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள், அதனாலே தொண்டையி னிண்டயி லிருத்தினேன் இதைக்கண்ட முனிவர்களுந் தேவர்களுந் துன்பம் நீங்கி, இன்பமாகிய அமுதபோசனம் பண்ணினர்கள். அதுமுதல் நீலகண்டனென்று 'எனக்குப் பெயரிட்டார்கள் என்றுரைத்த இறைபவனை லோகமாதாவானவள் நோக்கி ஓகருணைக்கடலாகிய கண்ணுதலே! உமது திவ்விய கரத்திலும் பிநாகமென்னும் விற்பிடிக்கவேண்டிய காரியமென்னவென்றுவினவ, அதற்குப் பரமேஸ்வரர் சொல்லுகின்றார்.

---

பினாகப்பிரபாவம்.

ஓ மாயன்சோதரி! வருணங்களிற் சிறந்த பிராமண குலத்தி லவதரித்த கண்ணிவமுனி தவத்திலுயர்ந்த முதலானவர், பெரியோர்கள் இயாவருங் கொண்டாடா நின்றவர். இவர் பாசபந்த அவாவின் வேரற்றுப் போகும்படிக்கு நெடுநாள் தபசுபண்ணினர். அசைவற்றிருந்த தனது தவ நிலைநெருப்பினோடுங்காற்றுவீச அதனாற்படிந்த தூசிகள் பனிநமரினாற் புற்றுபோற் குவிந்து அவர் சரீரமெங்கும் மூடிக்கொண்டது. அந்தப் புற்றின்மேல் ஒரு மூங்கில் முளைத்து, ஆகாயம் வரைக்கும் வளர்ந்து சூரியசந்திரர் நட்சத்திரங்களையுந் துடைத்துப் பெருக்கித் துயரம் விளைத்துத் தலையாட்டிக் கொண்டிருந்தது. அதனால் தேவர்களெல்லாரும் வருந்தி சிருஷ்டிக் கர்த்தாவினிடத்தில் முறையிட்டார்கள். முதற்கடவுளாகிய பிரமதேவன் அந்த மூங்கிலைப் பார்த்து, அதனது பருமத்திற்கும் உயரத்திற்குஞ் சந்தோஷப்பட்டு, அந்த மூங்கிலை வேருடன் களைய வேண்டுமென்று மகாமுனியை மூடிக்கொண்டிருந்த புற்றைக் கழித்து அந்தப்புற்று மண்ணோடுகண்மூடிப் பொருந்தித் தவமிருந்தக் கண்ணுவரிஷியைக்கண்டு மகிழ்ந்து, உம்மைப்போல் உறுதியாய்த் தவமிருந்தவர் ஒருவரு மில்லையென்று கொண்டாடிப்புகழ்ந்து, அவருக்காக வேண்டுங் காரியங்கட்கு அனுக்கிரகம் பண்ணிவிட்டு, அவர்மேல் முளைத்துப் பெருத்திருந்த மூங்கிலைத் துண்டித்து மூன்று வில்லாக்கி, முடிக்கண்டத்திற் செய்த வில்லுக்குக் காண்டபமென்று பெயரிட்டுத் தானெடுத்துக்கொண்டு, நடுக்கண்டத்திற் செய்த வில்லைச் சாரங்கமென்று பெயரிட்டு விஷ்ணுவுக்குத் தந்து, அடிக்கண்டத்தாலான வில்லைப் பிநாக

மென்று பெயர்நாட்டி எனக்குக் கொடுத்து இவற்றை லோகோபகாரமாய்ப் பிடித்து யாவருக்குங் குற்றங் குறைகள் தீர்க்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அதனால் எனக்குப் பினகபாணியென்று பேர்வந்தது. நானும் அந்தப்பிரமாவின் சொல்லைக்கண்டு இந்தவில்லைக்கொண்டு தேவர்களுக்குஇடையூறுகள் விளைக்கும் இராக்கதாள் மேலிட்டால் அவர்களை அதப்படுத்தி, தேவர்களை ரட்சிப்பேன். சாமானிய ராட்சசர்களை ராட்சச வயிரியாகிய நாராயணன் கொல்லுவார் அவருக் கடங்காத் திடங்கொண்ட பேர்களை நான் சங்கார கிர்த்தியஞ்செய்து ஜாடுவேன் இது என்னுடைய வேலை, இந்தப் பினகம் வந்ததற்கும், இதனை நான் கைப்பிடித்ததற்குங்காரணமிதுதான்என்று காமற்காய்ந்தோனுரைக்க அதனைக் கயற்கணம்மைக்கேட்டுக் கான்மேற்பணிந்து, ஓ கடவுளே! மதம்பொருந்திய யானைகள், பொன்மயமான விமானங்கள், திவ்விய கதியுள்ள அஸ்வங்கள் இப்படிப்பட்ட வாகனங்களெல்லா மிருக்க, இவைகளை விரும்பாமல் விருஷபத்தி லேறித் திரிவானேன்? அதனுடைய தவமென்னமோ? இதனைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றாள். அதற்கு ஈஸ்வரன் சொல்லுகிறார்.

---

## நந்திவாகனப் பிரபாவம்.

ஓ உமையே! சத்தியம், தருமம், புனிதம் இம்மூன்றுமே விருஷபமென்னும்நந்திரூபமாகையால், அதனை வாகனமாகக் கொண்டேன். ஆனதால் தரும தேவதையே எனக்கு வாகனம். மற்ற வாகனங்களின்பேரி லேறுவதற்கு மனமில்லை. மேலும், அந்த விடபத்தி லேறியதற்குக் காரணமுண்டு. அஃதென்னவெனில்? பூர்வம்இம்மோத்கிரிச்சாரலுக்குப் பக்கத்தில் ஓர் பர்னசாலையில் இவ்வுலகஞ் சுகம்பெற வேண்டித் தியானத்திலிருந்தேன். அப்போது ஒரு ரிஷபம் என்னிடத்தில் வந்து பிரதக்ஷணம்பண்ணி, தினந்தினம் தப்பாமற் சேவித்துக் கொண்டிருந்தது. இன்னுங்காதுகளினாலும், கொம்புகளினாலும், நாக்கினாலும், வாயினாலும், தேகத்தினாலும் என்னைத் தீண்டிக்கொண்டே யிருக்கும் அதின் கருத்தை நானறிந்து, அதனிடத்தில் உள்ளன்பு புரிந்து, வெளிக்குத் தயவில்லாமைபோலக் கொஞ்சங் கோபங் காட்டினேன். அந்த வேளையிற் பிர்மாமுதற் கொண்டு சகலகோடி தேவர்களும் என்னிடத்திற்குவந்து, ஓ சர்வஜீவ தயாபரமூர்த்தியே! ஓ சத்துச்சித்தானந்த ஸ்வசொரூபியே! ஓ தற்பரா! ஓ சிற்பரா! என்று என்னை வணங்கி வாழ்த்தி, இந்த நந்திகேஸ்வரர் உம்மை நத்தி நித்தம் அர்ச்சனை பண்ணிக் கொண்டு வருகின்றார். இவர்பேரில் தேவரீர் கிருபைவைத்து ரட்சிக்காமற் கோபிக்க வேண்டிய தென்ன? இவர் தேவரீருக்கு வாகனமாகவுங் கொடியாகவுமிருக்கவேண்டுமென்கின்ற இச்சையுள்ளவரா யிருக்கின்றார் ஆனதா லிவரிஷ்டப்படிக்குக் கட்டளை யிட்டருள வேண்டுமென்று வரங்கேட்டார்கள். அவர்களின் வேண்டுகோளின்படியேவாகனமாகவும், கொடியாகவும், பொருந்தினேன். என்று கூறக் கேட்ட பால்போன்ற மொழியையுடைய பரமேஸ்வரி பாக்கியமென்று பணிந்து, ஓ பராபரப்பொருளே! தேவரீர் புனிதமான பூமியில் வாசம் புரியாமல், என்பும், நரம்பும், காலும், தோலும், குடலும், உடலும், மூளையும், ஈளையும், பூதமும், பேயும், நாயும், நரியும் உறங்குவதற்கு மேடிட்டிருக்கின்ற மசானத்தில் வாசம் பண்ணவேண்டியவா றென்னவென்ன, பிரளயகாலாக்கினிக் கண்களையுடைய பிஞ்சகன் பேசத் தொடங்கினார்.

---

## மசானவாசம் பிரபாவம்.

ஓ தற்பரையே! சர்வசங்க பரித்தியாகம் பண்ணி ஆசாபாசங்களற்று மோட்சமடைய வேண்டுமென்று எண்ணியிருக்கின்ற சீவன் முத்தர்களுடைய மனதிலேயும், இருவினையோப்போடு மலபரிபாகமு முண்டான சீவமுக்தாளுடைய நினைவு மறந்த இடத்திலேயும், வினை தீய்ந்து விதிகாய்ந்துபோன பரமுத்தாளிடத்திலேயும் வாசமாயிருக்கிற நான் இவைகளுக்கு மேற்பட்டு, எதுவுமல்லாமற் கடந்து, சம்மந்த மொன்றுந் தொடாமல், இனிப்பிறவி எடுப்பதற் கேதுவுமில்லாமலிருக்குமிடமெதுவோ அதுதான் நானிருக்கின்ற அந்தரங்கமயானம்இன்னும்பாழாய் சூனியமாய் ஒன்றுமில்லாதது நிற்குணமயானம் சகுணத்தோடும் சகளீகரித்துச் சகலத்துவங்களுடனுங் குணங்குறியுடனுங் கூலா

வியிருப்பது நித்தியமயானம்: இஃதாபாச
ரோசநேச விசுவாச பூசாவிதிகளும், பெண்
டுபிள்ளைகளும், பண்டு பதார்த்தங்களும்,
போகபாக்கியங்களும் பொருந்தி, எல்லாந்
தானென்றிருந்து, முடிவில் உயிர்போம்
பொழுது ஒன்றுக்கொன்று சம்மந்தமில்லா
மல்விட்டுவிட்டு, பிரத்தியக்ஷமாய்த் தானெ
ன்றிருந்த தேகத்தைத் தணலிலிட்டுத் தக
னம் பண்ணிப்போட்டு, சாரமற்றுப்போன
என்பைச் சலத்தில் வாரிக்கொட்டி, நேற்று
மில்லை, இன்றுமில்லை, மற்றென்றைக்குமில்
லையென்றிருந்த தன்னைநேற்றிருந்தார் இன்
றில்லையென்று முறையிட்டு முற்றுப்பெற்ற
து. ஆதலால் இம்மூன்று மயானத்திலும்,
மேற்கூறிய சீவன் முத்தர் முதலிய மூவரு
டைய நினைப்பு மறப்புமற்ற நின்மலமனமா
ன நிராமய மயானத்திலு நானிருப்பேன்.
அதுதான் எனக்குரிய இடம். இதைத்தான்
மஹேசஸ்தான மென்பது. யான் களங்க
மற்ற பாழ்வெளியி லிருப்பவனானபடியால்
என்னை மயானவாசி யென்பார்கள். இம்ம
யானத்தை அக்கியான கோவல மறுவைப்
போக்கடித்துச் சுக்கியான வொளியைக்கா
ட்டு நிற்குணபூமியென்று, தேவர்கள் முனி
வர்கள், சீவன்முத்தர்கள், இன்னு மேலான
வர்களெல்லாம்வந்து சூழ்ந்து வதிவார்கள்
அவர்களின் மாசற்ற மனோ வெளியே என
க்குவாசம். பொதுவில் ஞானிகளும், அக்
கியானிகளும், ஈமத்தாடியென்று என்னைய
ழைப்பார்கள். இதன்றியும், வாசனைபெற்ற
தாமரைமலர்மேல் வாசம்பண்ணப்பட்ட பிர்
மதேவனாற்சிருஷ்டிக்கின்ற அளவிறந்தகோ
டிஆன்மாக்களை அடியோடேயழித்துஆண்
டருளும்படியான என்னுடைய பூதகணங்க
ளைக்கண்டு பயந்து நடுங்கித் தாரை தாரை
யாய்க் கண்ணீர்விட் டழுகின்ற பிராணிகள்,
ஓ கருணைத்திருமேனிக் கடலே ஓ நெடிய நி
லையுடைய நிருமலச்சுடரே! ஓ அண்டபகிர
ண்டத்து மசைவற்ற மயானத்துப் பொருந்
திய ஆனந்தபதமே! ஓ அமுதரசப் பெருக்
கே! எம்மை யிரட்சியுமையா வென்று வே
ண்டிக் கொள்ளுவார்கள். அப்போது மயா
னவாச பசுபதியாகிய யெனக்கு இரக்கமுண்
டாகி, அவர்கள் மேலுமேலும் விசேடதனு
வாதிகளைப் பெறும்படியாக நல்ல வரங்கொ
டுத்து, அகில புவனத்திற்கு வெளியிலேயும்
நிகிலசராசர நிலத்திற் குள்ளிலேயும் விருப்
பமாயிருப்பேன். என்னையறியு ஞானமுள்ள
வர்கள் மயானத்தைப் பற்றற்ற புனிதபூமி
யென்பார்கள். ஞானவீன முள்ளவர் அசு
சஸ்தான மென்பார்கள். பின்னும் பரிக்கும்
பூமியாதலால் ஆசார நிமித்தஞ் சுத்தம்பண்
ணிக்கொள்ளவேண்டியதே. இது லோகாச்
சாரம். என்று மகேசனுரைக்க. பார்வதிதே
வியார் மனமகிழ்ந்து சுவாமி! தேவரீர் நீற்
றைப்பூசியதும், எலும்பையும் பாம்பையு ம
ணிந்ததும், சூலாயுதந் தரித்ததும், பெருஞ்
சோதியானதும் பேசவேண்டுமென்று கேட்
க, மகமேருவை வில்லாக வளைத்து வாசுகி
யான நாணில் மாலம்பேற்றிப் புரம்பொடித்
தருளிய புண்ணியமூர்த்தி வகுக்கத் தொடங்
கினார்.

---

## பூசல் பூணல் புனைதல் பொலிதல் இவற்றின் பிரபாவம்.

ஓ பர்வதமாதே! நாமரூப மாவதெல்
லாம் சர்வ சம்ஹார காலத்தில் நசித்துப்
போம். அக்காலத்தில் நானொருவனா யிருப்
பேன். அப்போது சகல சீவாத்மாக்களும்
வெந்தெரிந்த நீற்றையெடுத்து விருப்பமாய்
தரித்துக்கொள்ளுவேன். மறுபடியு மத்தோ
ற்றங்க ளனைத்து முண்டாகித் தழையும்போ
து, தருமதேவதை சரஸ்வதி, இலக்குமி இ
வர்கள் உருவமாகிய பசுவை யேற்படுத்தி
பஞ்ச கவ்வியாதிகளினாற் பூமியைப் பரிசுத்த
மாக்கி, புலங்களிற்றழைந்த புற்களைப்பசுவுக்
குவாயுரையேற்றி, அதனாற் கழிக்குங் கோம
யத்தைச் சுட்டு நீறாக்கி, மந்திரார்த்தங்களி
னால் வாரிப் பூசிக்கொள்ளுவேன். மறுபடி
சீவாத்மாக்களெல்லாங் கருப்பட்டு உருப்பட்
டுப்பிறக்கும்படிக்குஅவாளிறந்தெறிந்த நீற்
றைத் தருமதேவதை முன்னிலையில் அணிந்
துகொள்ளுவேன். ஓ உமையவளே. இரண்
டாவது எலும்பையும் பாம்பையும் எவர்க
ளும் ஆபரணமாக புனைந்துகொள்வார்கள்
மற்றப் புட்ப முதலிய மாலைகளைத் தரித்துக்
கொள்வார்கள் எனக்கு ஆனதுவும் ஆகாத
துவுமில்லை. எனக்கு எல்லாஞ் சரியே. இந்
தக்கருத்திற்கு அடையாளமாக அவைகளைத்
தரித்துக்கொண்டேன். ஓ முத்தாரம்புனைந்த
முதல்வியே மூன்றாவது சூலப்படையேனெ
னில்? மூர்த்திகள் மூவருமொன்றேயன்றி அ
வருட்பேதமில்லை என்பது தெரிவிக்க தேவ

ர்களால்றியப்படாத திரியாட்சர சிகையினை யுடைய சூலத்தைசேர்த்தேன். ஓ ஞானச்செல்வி நான்காவது நெருப்புமேனி எனக்கு வந்தவரலாற்றை நித்தியானந்தக்கடலில் மூழ்கியபுத்திமான்கள்மதிக்கவேண்டியது சீதோஷ்டணமென்று இரண்டு வகைகளுள்ளன. பூலோகமுதலாகிய சகலபிராணிகளும்பிழைத்து உலாவிச் சீவித்துச் சுகப்படமாட்டார்கள். எந்தவஸ்துவும் விர்த்தியாயிராது வளராது. ஆகையாற் சீதளத்தை விஷ்ணுவுக்குக் கொடுத்து உஷ்ணமாகிய அக்கினியை நான் தரித்துக்கொண்டேன். உலகத்திற்குக் குளிர்ச்சியாகிய நிலவும் வெய்யிலும் போன்று எம்மால் திதியும் சம்ஹாரமு நடத்திவருகின்றன. உஷ்ணத்தால் எனக்கு மேனி செவந்தது, என்று சொல்லியபின் மீட்டுமவரைப் பணிந்தெழுந்து, பிரமனாலு மறியப்படாத முடியின்மேற் பிறையைத் தரித்திருப்பதென்னென்றாள். அதற்கு ஈசன் பேசுகின்றார்.

---

## பிறைசூடிய பிரபாவம்.

ஓ நேசமங்கையே? சந்திரனனவன்தக்கன்செய்த அக்கிரம யாகத்தில் உக்கிரம வீரபத்திரரால் உதைபட்டுராய்ந்து, தேய்ந்துபோன கலைகளெல்லாம் போக ஒருகலை யிருக்கும்போது தன்னுயிர் யிழைக்கும் படிக்கு ஓடிவந்து என்பாதத்தில் விழுந்து ஆதரிக்க வேண்டுமென்றான். அவனைப் பயப்படாதேயென்றுகாத்து, அவனுக்குத் தக்கனால்வந்த சாபத்தையு மொழித்து தேவர்கள் புசிப்பாகிய அவனமுதகலையைத் தினமும் வளரும்படிசெய்து செகத்தில் நிறுத்தி, ஒருகலையுடன் சரணம்புகுந்த சந்திரனை இரட்சித்த் அடையாளத்திற்காகத் தரித்துக் கொண்டேன். இதற்குமுன் சரரத்துவத்தைக் குறித்துத் தேவகுருவிட்ட சாபத்தினலே தேகம்வெந்து நெருப்பாயிருந்தான். அப்போது அபயஸ்தங் கொடுத்துத் தரித்தேன். வீரபத்திரன் கோபத்தினல் யாகத்தி விறக்காமலும் ஆதரித்தேன், இம்மூன்று விதத்தாலும் பிறையை முடிக்கவேண்டிய தாயிற்று. அதுமுதலவன் தேகங்குளிர்ந்து வளரவுந்தேயவும் வாழ்வுபெற்று, வையகத்தார் மதிக்கவும் துதிக்கவும் வாழ்ந்திருக்கின்றனன். தாமரையில் வாழும் பிர்மா முதலிய சகலதேவர்களும் என்சிரசிலிருக்கின்ற சூழ்ந்தைப் பிறையைக்கண்டு. எனக்குச் சந்திரசேகரனென்று திருப்பெயர்தந்து வணங்கினர்கள், என்று சொல்லவுஞ் சாம்பவி மகிழ்ந்து சங்கரனைப்பணிந்து, இருக்குவேத சாமவேதங்களினற் ருத்திரஞ்சொல்லி, மகாதேவியாகிய என்தாய்மீட்டும் ஈசனை நோக்கி ஓ பந்தவினையை யறுத்த பத்தர்கள்பணியும் பதாம்புயனே? படைப்பிலுண்டாகிய எல்லா வுயிர்களையும் ஒன்றென் றெண்ணமல் ஒன்றுயர்ந்தது, ஒன்று தாழ்ந்தது, என்று பேதமெண்ணிப் பேசுவானேன் உடலுமுயிரு மொன்றாயிருக்க, வருணச்சிரமங்கள் வகுப்பானேன். இவ்வருணச் சிரமங்களுக்கு வேதத்தில் மொழிந்திருக்கிற வகையென்ன இதைச் சொல்லவேண்டுமென்று கேட்க ஐயா எனக்கடவுள் அருள்செய்கின்றார்.

---

## சதுர்வருணவிதி.

ஓ பவானி பாபமிகுந்த ஆத்மாக்கள் மிருகாதி முதலிய பட்சிகளிலே பிறக்கும். அதிலுங் கியானமிருந்தால் மேன்மையைப் பெறும். இல்லாவிட்டாற் சிறுமையடையும் நல்வினை தீவினைசேர்ந்த உடலில் நல்வினையின்னதென்றும், தீவினை யின்னதென்று நாடி நன்மையைத் தேடினல், மதிவிளங்கிய மானிட யோனியில் வரலாகும். அப்படிக்குச் சனித்தபோதிலும் நல்வினையே மிகுந்துவிட்டால் திவ்விய தேகமுடைய தேவராவார்கள். நற்கதியுண்டாம். இனி வருணநான்கும் வந்த முகாந்திரத்தைக்கேள் அவரவர் தாய்தந்தை செய்த நல்வினை தீவினைக் கீடாய்புனிதம். சுசி, ஆசாரம், ஒழுக்கம், இவைமுதலிய மேன்பாடுற்று, சிருஷ்டிகர்த்தாவின் காலிலும் நாபியிலும் தோளிலும் முகத்திலும் நான்குவகுப்பினர் பிறந்தார்கள் இந்த இடத்திலெவர் பிறந்தார்களோ? அந்தயிடத்திற்குரிய செய்கையால் வருணநான்கென்று வழங்கிவந்தன. பிரமன் பாதத்திற் சனித்தவர் சூத்திரரென்றும், நாபியிலுதித்தவர் வைசியரென்றும், தோளிற் ருேன்றினவர் க்ஷத்திரியரென்றும், முகத்தில் வந்தவர் பிராமணரென்றும் இவர்களே மற்றமூன்று பிரிவாருக்குங் கருமக்கிரியை காட்டிக் கடைத்தேற்றிவைத்து, தேவர்கள் சுகபோசனங் கொள்ளும்படிக்கு அவிர்ப்பாகங் கொ

டுத்து, வேதத்தைவிடாம லனுசரித்து விதி
வழிதருமங்களைவிளங்கவைத்து-தானம்:ஓம
ம்-தபம்-செபம்-சாந்தம்-ஞானம்- தண்ணளி-
ஒழுக்கம்-மானம்-குலம்-நலம்-கல்வி - இவற்
றை ஊனமில்லாமலுணர்ந்து ஈனமில்லாம
லிருப்பர். இவ்வேதிய ரொழுக்கமாவது
வேதமோதல்-வேதமோதிவைத்தல் - இயாக
ஞ்செய்தல்-நானமீதல்-தானமேற்றல் - இவ்
வாறு தொழிலும் பிரமாணமானசத்தியமும்
அதிதிபூசைசெய்வதும் பிதிர்க்கடன் கழிப்ப
தும்-சூரியனுக்கு அர்க்கியங் காலமறிந்து
கொடுப்பதும் - நல்லமனைவியுடன் இல்லற
நடத்துவதும் - அறுசுவையுண்டி இரண்டு
போதுண்ணலும் சாத்வீககுணமும்-தருமநி
னைப்பும்-செபஞ்செய்யும்வாயும்-தேகந்தேவ
தார்ச்சனைக்காயும் - இயமநியமாதி யிருந்து
முடித்தலும்-ஜீவகாருண்யமும் - சித்தபரிசுத்
தமும்-அக்கினிபூசையும் - ஆசாரவாசையும்
அன்பில் விருப்பும்-ஆசையில் வெறுப்புமு
டையமுதன்மைக் குணங்களை யுடைத்தாதல்-
பிராமணரொழுக்கம் வேதவிதிக்குமாறுபட்டு
பொருளாசையினால் அருளாசையற்று,போ
சன நிமித்தம் உயிர்வதைசெய்து பாபபுண்
ணியம் பாராமற் பொய் பொறுமை பொரு
ந்தி, ஆங்காரமேலிட்டு தானுயர்ந்த சாதி
யென்று தாழ்ந்த சாதியோரைச்சங்கடப்பட
ப் பழித்து எனக்குச் சமதையின்றென்று இ
றுமாந்து, இன்னு மித்தன்மைத்தான மம
தை கொண்டிருப்பாராகில், அவர்கள் உயர்
ந்தகுலத்திற் பிறந்திருந்தாலும் இழிகுலத்
தாரென் றியம்பப்படுவார். பிரமசிருஷ்டி
யிலேயே உலகத்திற்கு வேண்டிய் கருமகரு
மங்களியாவும் முதன்மையாகிய பிராமணன்
நடந்துகாட்டவேண்டுமென்று விதித்திருக்
கின்றது.

ஓ தேவி! இப்படி வேதவிதிக்குப் பிற
ந்து பிராமணன் மறையோதுதல் முதலா
கிய மார்க்கங்களைவிட்டு, உத்தியோகம் மண்
ணவும், அதிகாரஞ் செய்யவும், ஏர்ப்பட்டு
பொருள்பேட்சையும்கோபமும், மனஸ்தாப
மும், துற்கருமமுதலிய மோட்சவிகட்சியும்
விரும்பி, ஈனத்தொழிலிற் பிரவேசித்து
பொய், புரட்டு, பட்சபாதம், ஓரவிபகாரம்,
அன்னியா யார்ச்சிதம், இழிதொழில், பழி
தொழில், பொய்சாட்சி பொய்ப்பத்திரம் இ
வைகளி லிச்சைவைத்து, பூநூல் பின்குடுமி
யுடன் நானுமொரு பிராமணனென்று பேரி
ட்டுக்கொண்டு என்னேரமும் வேசையுறவும்
வியாபாரத்தொழிலும் பிரதாப பெருமையும்
புன்சகவாசமுஞ் செய்யக்கூடாது. இவைக
ளையுடையவன் கடையினுங்கடையன். என்
றைக்குங் கதிசேரப்போகிறதில்லை. வேதங்
குன்றினாலுங் குலாச்சாரங்குறையாமலிருக்க
வேண்டும். தன்னுசாரத்திற்கு விதித்திருப்
பன நியாயமானாலும், நியாயமல்லாமற்போ
னாலும், உலகத்தோ டொத்து வாழ்ந்தாற்
பெரியோர்கள் சாபம் வைக்கமாட்டார்கள்.
ஒருகுலத்திற் பிறந்தவன் மற்றொருகுலத்திற்
பிரவேசித்துச் சமயந்தப்பி நடப்பானாகில்,
அவன் குலப்பிரஷ்டன், சமயப்புலையன்,
மகாபாவி. மற்றவருணங்களுமப்படியே ஒரு
வேளை இதரவருணந் தப்பிப் போகுமாகிற்
பிராமணனைக்கொண்டு வேதவேதியன் வண்
ணமுடிப்பித்துக்கொள்ளுகிற பிராயச் சித்த
முண்டு. பிராமணன் தப்பிப் போவானாகிற்
பிராயச்சித்தமில்லை. அவன் தேடிய பாப
சொத்து பிரேதகருமத்திற்குமுபயோகமாக
ஒப்புக்கொள்ளக்கூடாது அவனிருக்கு மிட
த்தில் தேவர்களும் பிதுர்களும் பொருந்தார்
கள். அவனால் ஆசீர்வசனமுஞ் சங்கல்பாதி
தருமங்களுங் கருமங்களும் பலிதப்படா. அ
வன் மரணவேதனையால் வருந்தி நரகஞ்சே
ருவான். உத்தமனல்லாத பிராமணனாலே
காரியம் நடத்திவைத்தபேர்களும் நடப்பித்
துக்கொண்ட பேர்களும், ரவுரவாதி நரகம்
பெறுவார்கள். பெரியவர்களும் அவன்மு
காலம்பனம் பண்ணார்கள். ஒருவேளை வழி
தப்பி அவன் பொருளைத் தானமாக வாங்கி
விட்டால், அவனுக்கு நற்கதி வருங்காலத்
தில் தானம்வாங்கினபேர்களுக்கு நரகமுண்
டாகும், குலநாசமாம், தவத்திற்கழிவுவரும்.
ஆதலாற் குலாச்சாரந் தப்பிப் பாபத்தினாற்
றேடும்பொருளையாவரிடத்திலும் பெரியோர்
கள் வாங்கமாட்டார்கள். எந்தச்சாதி கெட்
டாலும் பரிகாரமுண்டு. பிராமணச்சாதி
கெட்டாற் பரிகாரமில்லை.

ஓ நாராயணி! க்ஷத்திரியருடைய சாதி
யாசார மென்னவெனில், அதைச் சொல்லு
கிறேன் கேள்: இராஜர்கள் தன்னிடத்திலிரு
க்கின்ற மந்திரி பிரதானிகளுடைய வார்த்
தையைக்கேட்டு, தன்புத்தியினாலும், ஆராய்
ந்துப்பார்த்து சகல காரியங்களை நடத்தவே
ண்டுவது. வேதமோதும் வேதியருக்கு நித்

தியகரும அநுஷ்டானந்தவிர வேறுவேலை யில்லாமலும், ஒழுக்கத்திற்கு விலக்கு வாராமலும் விருதாக்காலம்போக்க வொட்டாமலும், போசனக்குறைவில்லாமலும், உபசாரங்குறையாமலும், மேன்மையாக வைத்துக் காத்தல்வேண்டும். யாகம், ஓமம், இஷ்டகாமியார்த்தம், ஆத்மார்த்தம் தேவதாபூசைஇவைகளை அப்பிராமணர்களால் நடத்திவைத்துக்கொண்டவர்களிடத்தில் நான்கு வேதங்களையும் நன்றாயோதியுணர்ந்து விதிவிலக்கு இராஜதருமம் புண்ணியம் தேவபக்தி குருவுபசாரம்,கடவுணிர்ணயம்,காசினிநடத்தை வருணாச்சிரம தருமம், கலியாணம், சுபம், சோபனம், கருமக்கிரியை, தேவாலயம், பிரமாலயம், பிர்மோற்சவம், கோதானம்,பூதானம், மஹாதானம், தியானம், தியாகம், துஷ்டநிக்கிரகம், சிஷ்டபரிபாலனம், தண்டனை, பொருளீட்டல், மிருகபயமாற்றல், குடிபடை யோம்பல் மலை காடு அரண் கொடி குடைமாலை ஆயுதம் கோட்டை வாத்திய வகை மானம் திடம் தைரியம் வற்புறுத்தல் நிஷ்கண்டிதம் கண்ணோட்டம்கருணை பொறுமை காலத்திற்குத்தகுந்த கோபம், கல்விப் பயிற்சி, ஆயுதப்பழக்கம். காரியமறிதல் இவையெல்லாம் வகித்தல்வேண்டும். ஈனவிருத்தியிற் பிரவேசிக்கலாகாது. தன்னுயிரைப்போல் மன்னுயிரோம்பல், ஆறிலொருகடமைபெறுதல், பழையமனிதரைப் பிரியமுறல், புதியமனிதர்பேரிற் பிரியமுறல், பகைவரைப் பல்லில்நிறுத்தல். சிநேகரை நெஞ்சிலிருத்தல், சுற்றத்தாரைச் சூழவைத்துக்காத்தல், திரண்டசேனைகளைச்சேர்த்தல், சத்துருக்களைச் சண்டையிட்டுச்சாய்த்தல். சாதுசங்கமும் வித்வகோஷ்டியு மெந்நேரமும் விடாமலிருத்தல். நீர்வள நிலவளமுண்டாக்கல், பயிரிடுகிறவர்களுக்கு உதவிசெய்தல், ஏழையாயினோர்களை யாதரித்தல், அன்னசத்திரந் திருத்துதல். மகானுக்களின் மனப்படிபொருத்தல், ஆகியவிவை முதலியவெல்லாம் பொருந்தவேண்டியது இராஜதருமம்.

ஓ மாதங்கி! இப்பால் வைசியர்களினியல்பைச் சொல்லுகிறேன் கேள். திரண்ட திரவியந்தேடுதலே அவர்கட்கு சிந்தை. சுபசோபன கலியாணமுதலிய காரியங்களுக்கு லோபத்துவமில்லாமற் செலவுசெய்தலும், பெரியோர், பிராமணர், உரியோர் வித்துவான்கள், தேசாந்திரிகள், ஆதுலர், வைராக்கியர், நோயினர், தரித்திரர், இவர்கள்முதலிய பேர்களுக்கு முகங்கோணாமல் உபசாரத்துடன் அவரவர் காரியங்களைக் கேட்டுஞ் சுதாவிலறிந்தும் உதவிபண்ணுதலும் வேண்டும். பசுக்குலங்களை வாயுறை கொடுத்து, அவற்றைத் தருமதேவதையாயெண்ணிப் போஷித்தல்வேண்டும், வியாபாரத்துடன் வேளாண்மையுஞ் செய்யலாம் அன்னதானம் அதிகஞ்செய்யவேண்டியது மற்றத் தானங்களெல்லாந் தன் சம்பாத்தியத்திற்குத் தகுந்தவண்ண நிதானமாகப்பார்த்துக்கொள்ளவேண்டும். பிராமணனை விஷ்ணுவாக மதித்துப் புசிக்கவேண்டும். யாகவெக்கியங்களுக்கும் பொருளுதவி செய்யவேண்டும், எந்தத் தருமத்திற்கும் பொருந்தி, கோவிற்குள முதலியவெல்லாங் குறைவர நடத்தவேண்டும். சுகந்த பரிமளவஸ்து முதலிய பலபண்டங்களும்,ரசவர்க்கங்களும் பொற்காசு முதலியவும் விற்று வியாபாரம் பண்ணலாம். சத்தியந்தப்பாமல் தயாளுவாயிருக்கவேண்டும்.இவர்களுக்கு இனந்தழுவுதலே இன்பமாம். ஓ கௌரி! இனி சூத்திரருடைய தொன்மையைக்கேள், தனக்குமேலான முக்குணத்தாருக்கும் நல்வினைத் தொழில்நடாத்தி, ஊழியம்பண்ணி, பூமிக்குரியவர்களாய் உழுது பயிரிட்டு,மூன்றுகுலத்தாருடைய காரியங்களில் முயற்சியாயிருந்து, இராஜாங்கச் சேவகராய், இராஜர்களுக்கு முனையணியாய், பூமியாளராய்,கங்காபுத்திரராய், தேசாசாரப்படிக்கு நடந்து, சகல தொழிலும் புரிந்து, எல்லாவற்றிற்கு முரியவர்களாய் மற்றக்கருமங்களுந் தவறாமனடத்தி, பிச்சை, ஐயம், பிதுர்க்கருமம், பிராமண உபகாரம், இஷ்டமானதுஷ்டதெய்வ ஆராதனை' க்ஷத்திரிய ரூழியம், வைசியருக்கேவலம், பத்தி, சித்தி, வயிராக்கியம், இரக்கம், சத்தியம், தருமம், சவுரியம் இவைமுதலியன வகித்திருத்தல் வேண்டும். முன்னுரைத்த முக்குலத்தாரையும் நொய்யவுரை செய்யாமலும் நோவக்கண் பாராமலும் பரஸ்திரீகவனம் பண்ணமலும் பரபொருளிச்சைவையாமலும் அதிதி அப்பியாகதி ஆசாரியர் தெய்வம் இவர்களைப் பூசித்து பெரியோரைவழிபடல் அரசரோடு எதுமாறுகப் பேசாமை பந்துஜன போஷிப்பு இறுமாப்படக்கல் மமதைபோக்கல் வணக்கம் ஒடுக்

கம் மரியாதை தாழ்மை இவையெல்லா மிரு க்கப் பொறுக்கவேண்டும். இப்படிக் கில்லா மற் கெர்வப்பட்டால், இடையூறும் துன்ப மும் தண்டனையும் கண்டனையும் சாபமும் கோபமும் தனக்குத் தானே விளையும். முன் சொன்ன குலாசாரமுறை குறையாமனடந் தால் இச்சென்மத்தில் மானிட யோனியில் வந்த நல்வினைப்பயன் கைகூடி பின் தேவ லோகம் பொருந்தித் திவ்விய மங்கள குண வாளனுவான் அப்பால் பூமியிற் பிறந்தால் சுபசவுக்கிய சுகபாக்கிய சுத்த யோக்கிய மண வாளனுவான். இந்தமட்டும் வருணச்சிரம தருமம். இனி மறையாச்சிரம முறையை வகுக்கின்றேன் கேளென்று பரமேஸ்வரிக் குப் பகர்கின்றார்.

---

சதுராச்சிரமவிதி.

ஓ பார்வதி! ஆசாரியனை யடுத்து, அவ னையனுதினமுந் தொழுது வழிபட்டு, வேத ங்களைக் கற்று, தருப்பை சமித்துகள் கொண் டுவந்து அக்கினி கருமம்பண்ணி பிக்ஷையே ற்றுப் புசித்து இந்திரிய நிக்கிரகம் பண்ணி, வேதாகமபுராண சாஸ்திரங்களைக்கற்றுவிதி முறைபெற்று நன்னடைபுரிந்து நிட்டையி லிருந்து பொய்சொல்லாமல் விரதம்பாராட் டலே பிரமசரிய விதி, ஓ பெண்ணே! கிரக ஸ்த விதியைக் கேள். இரப்பவர்களுடைய இடர்களைத் திருத்தி தேவலோகத்தாருக்கும் தென்புலத்தாருக்கும் பிராமண முதலிய பெ ரியோர்களுக்குஞ் சந்தோஷம் பண்ணி, பல கோடி ஜீவாத்மாக்கள் இடத்திலும்பட்சமா ய் இரக்கம் வைத்து ஈகை இதவு பச்சாத்தா பம் பூததயை இவைகள் கூடிக் குலத்தில் வந்த ஸ்திரீயுடன் கலந்து இல்லறமென் றும்முறைபிறழாது போற்றி சத்திய சவுச ம்தரத்துடனிருந்து நோன்பாதி விரதமு மாற்று ஐந்தெக்கியமும் பண்ணி பிறர்பொ ருள்பரதாரம் பொய்யானை இவைமுதலியன விரும்பாமற் பூசிதமாயிருக்கவேண்டும். இத னால் பொருளுடைமையும் அருளுடைமையு முண்டாகும். ஓபைந்தொடி! வானப்பிரஸ்த விதியைக்கேள். காட்டுக்குப்போய் காவியுஞ் சடையுந் தரித்துக்கொண்டு அக்கினி வளர்த் திப் பூசைபுரிந்து ஏகபுத்தங் கந்தமூல பலங் களைப் புசித்து மனம்போனபடி பஞ்சேந்தி ரியச் சேஷ்டைகளை விடாமல் அடக்கித்தரு மபத்தினியுடன் தன்னந்தனியா யிருப்பது. ஓ பசுங்கொடி! சந்நியாச விதியைக் கேள். சகலமும் நாசஞ்செய்து சிதைவில்லாம விந் திரியமடக்கி மனஞ்சலியாமல் ஓரிடத்து நிலை யில்லாமல் உயிர்களின்பேரில் இரக்கமாரு மல் ஜீவாத்மா பரமாத்மாவென்று பேதமில் லாமல் அத்துவிதப் பொருளாய் கோபமில் லாதவனுய் மனஞ்செற்றவனுய் ஒரு சீவயிம் சையுஞ்செய்யாதவனுய் விதியின்படிக்கு இல் லறத்தான் கொடுக்க நல்லறமென்று சாப்பி ட்டுத் தரைமுதலிய இடங்களிற் படுத்து சவு க்கியந் தேடாமல் தேகாபிமானம் விடுத்து எது எப்படியானுலுந் தோன்றுத திடவிரத முற்று நித்தியா நித்திய வஸ்து விவேகமு ணர்ந்து தத்துவமறிந்து பேரறிவோடுங்கூ டிப் பூசஞ்சாரமோடி பொன்னும் ஓடும்இரு ம்பும் செம்பும் இவை யவையென்று உன்னு மலிருப்பது யதியாச்சிரமம் என்று சொல்ல வும் மகாதேவி இரண்டுகையுங்குவித்துசுவா மி! உலகத்தில் மலைவாசியாய் அரிதாகிய தபசு பண்ணுகிறார்கள் அதற்கு மிஞ்சின நன்மை வேறில்லையென்று உலகஞ் சொல் லுகின்றது அஃதென்னவென்ன மகாதேவர் சொல்லத் தொடங்கினர்.

---

தவபேதங்கள்.

ஓ மரகதாங்கி! எல்லாவற்றினுமுயர்ந்த நித்தியப் பெருஞ் செல்வத்தைப் பெற்ற தேவபோகத்தை மறுமையில் விரும்பி வெகு கோடிபேர் தபசு பண்ணிப் பெறுவார்கள் சிலபேர் இம்மையிலே அனுபவிக்கும்படி யான போகபாக்கியத்தை நாடிப் பெருந்தவ மிழைத்து மையல்தீர வாழ்ந்திருப்பார்கள். சிறிதுபேர் பல பல தேவர்களுடைய பதவி களைக்குறித்து உறுதியாகத் தவமியற்றி அவ் வப்பதவி பெறுவார்கள். இப்படி அநேக மான தவசுகளுண்டாயிருக்கின்றன. இவை களிலொன்றுமில்லை ஒரு காலத்தில் அப்பே றுகளியாவு மறிந்து போய்விடும். பின்னுஞ் சனனம் எடுக்க வேண்டி வரும். இதன்றி மேலாயிருக்கின்ற தவம் என்னவென்றால் மௌனமடைந்து சங்கல்ப மில்லாத நிலையி னின்று செய்கின்ற தவமே தவம். மற்றத் தவசுகளெல்லாம் இறந்தவுடனே சொர்க் காதிபோக முதலான பதவியைக் கொடுத்து மறுபடியும் பூமியிற்பிறப்பிக்கும் அங்குட்டப்

பிராமணத்துடனே இருக்கின்ற வாலகில்லியர்கள் சூரியன் தேரிலிருந்து தபசு பண்ணுகின்றார்கள். அதுவே தவம். அதற்கு மிஞ்சினதில்லை. பிறவிக்கொடாமல் மன்னும் இன்னுஞ் சிலபேர் பூவாழ்க்கையிற் பொருந்திய ஆசாபாசமும், மனமாயையும், தேகாபிமானமுமற்று, மகாதவம் பண்ணுவார்கள். அதுவு முக்கியமான தவமே. போசனஞ்செய்து தவமாற்றுவோர் சிலர் காற்றைப்புசித்துத் தபசிருப்பவர் சிலர். கந்தமூலங்களருந்தி அருந்தவமிருப்பவர்சிலர். சலமருந்திப் பொருந்தித் தவம்புரிவோர் சிலர். அசைவற்றிருப்பவர் சிலர். ஒற்றைக் காலினினும், மற்றக் காற்பெருவிரலை யூன்றியும் தலைகீழாகியும், பஞ்சாக்கினி மத்தியிலும் ஊசிமுனையிலும், தண்ணீரிலும், மலையுச்சியிலும் மண்ணிலுள்ளுமிவ்வாறு பற்பலவாய் மாதவமிருப்போர் சிலர். எவ்விதமாகத் தவம் பண்ணினாலும் ஆசாபாசம் விட்டுத் தானென்பதில்லாமல் நிஷ்காமியமாய்த் தனித்துச் செய்கிற தவமேதவம் என்று சங்கரரியம்பியதைக்குன்றனைய இள்முலைகொண்ட கோமளவல்லி கேட்டு மனமகிழ்ச்சியாகி, சுவாமி! இல்லற தருமமே தருமமென்றும், அவ்வில்லறத்திலிருந்து தவமிழைப்பது எவைகளினுமேன்மையென்று தேவரீர்க்கினிமையோரியம்புகின்றார்கள். துறவறத்திலும் இல்லறம் பெரிதோ இந்தச் சந்தேகத்தை எளியேனுக்கு அனுக்கிரகம் பண்ணும் ஈசனேயென்று கேட்க, அதற்கவ் விறைவியைநோக்கி எப்பொருட்கு முரிய தனிமுதலெடுத்துப் புகலுகின்றார்.

---

### இல்லறதருமம்.

ஓ சாம்பவி! இதெல்லாம் உனக்கு முன்னே சொல்லியிருக்கிறேன். நீ மீளவும் உலகத்தாருக்குஉறுதியுண்டாக்கும்படிக்குக்கேட்கின்றாய், இது நன்றுநன்று. அவ்வில்லறதருமத்தின் பெருமையைச் சொல்லுமிடத்தில், சாத்திரங்களில் என்னென்ன காரியம் பொல்லாதென்று சொல்லியிருக்கின்றனவோ? அவைகளையெல்லாம் போக்கி, வேதவிதியில் நன்மையென்று விதித்திருக்கின்றதெவையோ? அவ்விதியாகியவைகளைச் சேர்த்து, அதிதிகளுக்கு அன்னம் படைத்து, மூன்றாச்சிரமங்களுக்கு முதன்மையாய்ச்சோடசமகாதானங்கள் கொடுத்து, முக்கியமாகிய புகழ்பெற்று, புண்ணியமென்னு பொருளைத்தேடி, வந்தவிருந்தை வருந்தி உபசரித்து உண்பித்து, தானங்களிலுயர்ந்த அன்னதானத்தை அனுதினமும்புரிந்து, எல்லாரிடத்திலும், பரிந்து, உயிர்க்கொலை செய்யாமல், ஊன்புசியாமல், உண்மையாயிருப்பது இல்லறதருமம் என்று பரமேஸ்வரன் சொல்ல பரமேஸ்வரியார்மகிழ்ந்து, இவ்வில்லறநடாத்தும் பதிசதிகணிலையைப் பகரவேண்டுமென்று மகாதேவி கேட்க, மகாதேவன் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

---

### பதிசதிகணிலை.

ஓ சங்கரி! இல்லறத்துள்ள புருடனுக்கு முதற்றருமந் தாய் தந்தையைப் பூசிப்பது அப்பால் ஆசாரியரைத் தொழுது, அவர் சொல்வதை அறிவாலறிவது அவ்வாசிரியரால் தெய்வ நிர்ணயந்தெரிவது. எல்லாவுயிருந் தன்னுயிர்போற் காண்பது. ஏழைகள் முதலிய பரதேசிகளை ஆதரிப்பது. இவையே கடைத்தேறுகிற முதல்வழி. இவனுடைவ் வில்லற நடாத்து மனையாளுக்குப் புருஷனே தெய்வம். அவனுடைய ஊழியமே தேவர்களுக்குரிய பணிவிடை அவனைச்சுற்றிவருவதே பிரதக்ஷிண நமஸ்காரம் அவன் சாப்பிடுகிற வரையிலுஞ் சலபானம் பண்ணுதிருப்பதே உபவாசவிரதம். அவனுடைய சொல்லுக்கு மாறுபடாம நடப்பதே வேதவிதி மந்திரஜபம். அவனுக்கு முன்னிறப்பதே அழியாப்பதவி. இப்பதவி சாகமானமென்றும், அக்கினிப் பிரவேசமென்றும் இருவகை. இவற்றுள் சாகமானமாவது சனித்து அனுபவிக்குஞ் சம்பந்தம். அக்[illegible]னிப் பிரவேசமாவது, இரும்புண்ட நீ[illegible]லத் திரும்பி வாராதிருத்தல், இதைத் [illegible]துகொள்ளுகவென்று முக்கண்ணன் மொ[illegible]யமைக்கண்ணிடைய மாதேவி மகிழ்ந்து ஐயா! தாய்தந்தை யிருவருஞ் செத்துப்போன பிற்பாடு பிள்ளைகள் செய்யவேண்டிய பெருங்கடன் என்னவென்று வினவ, பெம்மான் பேசத் தொடங்கினார்.

---

### புத்திரர்கணிலை.

ஓ சற்குணி! கிரகாச்சிரமத்திற் பிறந்த பிள்ளை யாயினர் தமது தாயுந் தகப்பனு

பிறந்தபின்பு அவர்களைப் பின்னமென்று இகழாமல், மறவாமல், தென்புலத்தாராகிய பிதுர்தேவதைக ளென்றெண்ணி, அவர்களுக்குச் செய்யவேண்டிய அருங்காட்டருங் கடன் முடித்து, சூதக கவசம் பூண்டுசோட சதிவசமீந்து, சுருதிக்குரிய பெரியபதவியிற் புகுத்தி, ஊனமாகிய மூவந்து, ஓராண்டுவரையிற் கலந்து, விஸ்வதேவபூசை புரிந்து, விதிமுறைப்படி பிதுர்க்களுக்குத் திருப்தி பண்ணி, அதிதி பரதேசிகளுக்கு அன்ன பானுதிகளளித்து, மாதமாதம் வருகிற திதியெல்லா மறவாமல், மதிமயங்காமல் சற்றும் பால்மாறிக் கைப்படாமல் இல்லையென்றிராமல் உண்டானமட்டும் உபசாரஞ் செய்து வருஷாப்திக மாறாமல் கொடுக்கவேண்டும். இவைகள் தப்பிப்போமாகில் அந்தப்பிதிர்க்கள் மாதவருஷ்திதி வருங்காலையில் தங்கள் சந்ததியாரிருக்கிற மனைக்குவந்து பார்த்து மனதெரிந்து, வயிறெரிந்து, சாபங்கொடுத்துப் போவார்கள். அப்பால் அந்தக் குடும்பத் தலையெடுக்கப் போகிறதில்லை ஒன்று போனு லொன்றாய் இடையூறு, துன்பம், பொருளில்லாமை, நோய், உபாதி, அபாண்டம், குடி தோஷம், குலப்பிரஷ்டத்துவங் கோத்திரக்குறைவு இவை யாவும் வந்து சேரும். இடிந்துபோவார்கள். ஆதலால் தரித்திரராணுலுங், கருத்தில் மதித்து, திலோதகற் பணக் கடனுவது கழித்து சங்கல்பஞ் சொல்லவேண்டும். ஈதன்றி யாத்திரைபோகும்படி நேரிட்டால், வழிகளில் எந்தப் புண்ணிய ஸ்தலங்களை எந்தப் புண்ணிய தீர்த்தங்களை எந்த நந்தவனங்களைக் கண்டாலும் அந்தயிடங்களில் இந்தப் பிதிர்க்கடனைத் தீர்த்தால் முந்திச்செய்திருக்கும் பலனுக்கெல்லா மேற்பட்ட பலனுகும். மூவேழு தலைமுறை தந்தைதாய் முதலிய பந்துக்களும் உயர்ந்த பதத்தைப் பெறுவார்கள். அங்ஙனே பிண்டம்வகுத்து தற்பணம்பண்ணி பொன் வெள்ளி வஸ்திரம் பூஷணம் இவைகள் கொடுத்து பிராமண பூசைசெய்து வேதார்ச்சனை நடத்தித் தெரிசனை செய்யவேண்டும். ஒரு வித அசந்தர்ப்பத்தினுற் சிலவேளை இசையாமற்போனுல், இரணிய சிரார்த்தமாகிலும் பண்ணிப் பிண்டம் வைத்துத் தர்ப்பணஞ் செய்யவேண்டும் அல்லது எதாசக்தி என்னுஞ் சங்கல்பஞ்சொல்லி, தாய் தந்தை முதலியபேர்களைக் குறித்து குலகோத்திர நாமங் கூறிப் பூரிகொடுத்தாகிலும் விடவேண்டும் அதுவுங் கிடையாமற் போனுல் சாதமாகிலும், மூன்னை மூசுட்டையானுலும், சேகரித்துக் கொடுக்கவேண்டும். மந்திரமுங் கிரியையும் வழுவாமலியற்றி வேதியரைப் பூசிக்கவேண்டும். பிதிர்த்தினமாகிய விசேஷ புண்ணியகாலத்தில் பிள்ளை, பேரன், தத்தபுத்திரன், அபிமான புத்திரன், அடைக்கலப் புத்திரன் ஆருமற்ற புத்திரனுனுலும் பிதுர்க்கடன் பூரணமான பத்தியுடன் சுத்த பத்தியாய்ச் செய்யவேண்டும். என்று சாம்பவமூர்த்தி சொல்ல சாம்பவி மீட்டும் பணிந்தெழுந்து, சுவாமி மணவனிழந்த மாதர்கள் நடக்கவேண்டிய விதியாது? அதனையருள்செய்யவேண்டு மென்ன, அந்திவண்ண னுரைக்கின்றார்.

---

மணவனிழந்தவணிலை.

ஓ இமயவல்லி! புருஷன் போய்விட்டபிற்பாடு உயிர்வைத்திருந்த விதவஸ்திரீ யானவள் தன்னுயகனுக்கு நல்லகதி வரத்தக்கதாகப் பிரமசரிய விரதம்போ லிருந்து, நித்திய ஸ்நானம்பண்ணி, நியமமுடித்து, ஒருவேளையாய்ப் புசித்து, சாந்து சந்தனம் புட்பமுதலாகிய நற்பண்டங்கள் லாசைவைக்காமல் தன்னுடைய பர்த்தாவை என்னேரமும் உன்னித் தோத்திரம்பண்ணி, மானதபூசை வைத்து, இஷ்ட தெய்வத்தை ஏற்றிப் போற்றி, சுவாமி! என் புருடனுக்கு நல்ல பதவி கொடுக்கவேண்டும் என்று நாளுந் துதித்து, தலைமூண்டிதமாகி, சற்கருமங்களை அனுசரித்து, சாஸ்திர புராண தரும நூல் முதலியவைகளைப் பெரியோர்களால் வினவி அவர்களால் அடியார்கள் சரித்திரங்களையுங் கேட்டு, பாய், தலைக்கணை, பஞ்சணை இவைகள் விலக்கித் தரையிற் படுத்து, நல்ல வஸ்திராபரணங்களை வெறுத்து, தாம்பூலம் விடுத்து பரபுருடரை மனத்திலு நினைத்துப் பாராமல் பெரியவர்களுக்குப் பூசை உபசாரம்புரிந்து, எதாசக்தி பரதேசிகளுக்கு பிட்சைகொடுத்து, சுவாமி தரிசனம்பண்ணி, தாயாகிய உன்னையும் இலட்சுமியையு மதியுற் பதித்து, விழுப்புவஸ்திர மகற்றி சுசியாகிய வெள்ளி மடிப்புடவை யுடுத்தி, மனமடங்கி எந்தவேளையிலும் கர்த்தனே என்று சிந்தித்து இந்தக் கட்டையை சோற்றுமூட்டையை

பீற்றச் சட்டையை மும்மலக் குட்டையை சாரமற்ற சாரப்பட்டையை ஒன்பதுஓட்டையுள்ள லொட்டலொட்டையை உன்னுடைய பாதாரவிந்தத்தில் சேர்த்துக்கொள்ளுமென்று நினைத்துத் தியானம்பண்ணிக்கொண்டு வைராக்கியமா யிருக்கவேண்டியது. என்று பொன்போன்ற கொன்றைமாலையைப் புனைந்த புரதகனுரைக்க பூதநாயகியார் புகள்ந்து மகிழ்ந்து ஆண்டவனே! புருஷனிறந்த பெண்களுக்கு விதிசெப்பினீர். பெண்சாதியை யிழந்த புருஷருக்கு ஒன்றுமில்லையா வென்று கேட்க அதற்கெம்பெருமா னியம்புகின்றார்.

மனைவியிழந்தவனிலை-

ஓ பெண்பாவாய்! புருடன்தன்னாலான மட்டும் மாதா பிதுர்க்கடன்களை லோபத்துவமில்லாமற் சாங்கோபாங்கமாய் நடத்தி பஞ்சபர்வங்களை அனுஷ்டித்து விரதமிருந்து இந்த நாட்களோடு மாசாந்திர மூன்று நாள்! வருஷாந்திர மூன்றுநாள் ஸ்திரீயுடன் பேசாமல் நாவுக்கு ருசிதேடாமல்குழந்தைகளும்பந்துக்களும்பசியாயிருக்கின்றார்களென்று காதிலிட்டுக்கொள்ளாமல் பறவை எலி பூனை நாய் இவை முதலியசெந்துக்கள் சில பண்டங்களைத் தின்றுவிட்டால் அதுகளின்பேரிற் கோபியாமல் தாய் தந்தை தமயன் தம்பி பத்தினி பெரியோர் பந்துக்கள் இவர் முதலிய பேர்களுக்குச் சஞ்சலம் வரவொட்டாமல் எல்லாரிடத்திலுந் தயவாயிருந்து தானதருமம் பரவுபகாரம்பண்ணி மனைவாழ்விலுயர்ந்து, மாதவர் புகழ்ந்து வாழ்த்த மகிழ்ந்திருக்குங் காலத்தில் தாரந்தப்பினால் தருமகருமம் மனைவி யில்லாமற் புரியலாகாதென்று சாற்றிய வேதவிதிப்படிக்கு அக்கினி முதலியயாவருஞ்சாட்சியாய் புனர்விவாகம் பண்ணிக்கொண்டு அம்மனைவியுடன் மருவி பிறர் மனைவியைப் பேணாமலிருத்தல் வேண்டும். ஒருவேளை தன் பத்தினி நோயினாலும், புத்திரப் பேற்றினாலும் குணபேதத்தினாலும், தான் கூடுவதற்கு உபயோகப்படாவிட்டால், தேவதாசியாய் தேசவாசியா யிருப்பவளைச் சேர்ந்து, தனக்கு முற்சொன்ன தடைகள் நீங்கிச்சீரானபோது தன் மனைவியிடத்தில் மருவ வேண்டியது இதைவிட்டு இரவும் பகலும் அதுவே வேலையா யிருக்கப்படாது. இல்லற தருமத்தை இகழக்கூடாது. பரபோகத்தால் தருமபத்தினி மனஞ்சலிக்க நடக்கலாகாதுஎன்று கங்காதரன் சொல்ல என் கருணைத் தாய்கேட்டு ஆனந்தித்து ஓ மகாதேவா வேதசாஸ்திரங்கள் ஐயமிட் டுண்டென்று சொல்லியிருக்கின்றனவே அதன் விபரத்தினைச் சொல்லியருள வேண்டுமென்னத் தூயோன் சொல்லுகின்றார்.

ஐயமிட்டுண்போர் சிறப்பு-

ஓசந்திரவததி! ஐயமிட்டுண்ணும் அன்புடையானுக்கு நூறு அஸ்வமேதம் பண்ணிய பலன் வந்துகிட்டும் அவனெங்கிருந்தாலும் இந்திர போகனே. எந்தக்காரியமுமவனுக்கு எளிதில் முடியும் அவன் எவ்வருணமானாலும் முந்தியவருணத்திலுமுன்னவன். சந்திரசூரியருஞ் சிந்திப்பார்கள். பூமியிலுள்ளோர் வந்திப்பார்கள். தேவர்கள் முதலிய பேருந் தொந்திப்பார்கள். சங்கற்பவிகற்பம் வந்து சாராது. நல்வினை தீவினை நலிக்காது. அகப்பற்று புறப்பற்று அணுகாது. நின்மல சித்தனா யிருப்பான். பிறவியறுப்பான். நல்ல காற்றினால் அலை எறியுங்கடலானது துரும்பு தூண்களை யொதுக்கி துத்துக்களை ரத்தினங்களை யடக்கிளப்படி ஆனந்தத்துடன் முழங்குகின்றதோ? அப்படிபோ லவன்மனதி லழுக்கற்றுப் பரிசுத்தமாகி பொய், வஞ்சம், பொறாமை முதலிய பொருமல்களைக் கரைவெளியி லொதுக்கி தயை, தாட்சண்யம், சாந்தம், தருமமுதலியவற்றைத் தன்னிடத்தி லடக்கிப் பேரானந்தங்கொண்டிருப்பான். அவன் பூலோகமாகிய கருமபூமியி லிருந்தாலும், தெய்வலோகமாகிய தருமபூமியி லிருப்பவனென்று சாமவேதப் பிரியன் சாற்றினார். இவ்வசனத்தைக்கேட்ட இமயவல்லி யெழுந்து, சுடர்க்கொழுந்துபோன்ற சோதியைத் தொழுது, ஓ சந்திரசேகர சடாமண்டலதரா வென்று வாழ்த்தி, சுவாமி? பூலோகத்தில் தேவரீருடைய சிருஷ்டிக்குட்பட்ட அனேகம் பிராணிகளில் மானிடதேகம் பெற்றிராநின்றவரிலொருவன் மகாராஜனென்றும், எல்லாருக்கு முயர்ந்தவனென்றும், தெண்டனை கண்டனை செய்கின்ற சண்டப்பிர சண்டனென்றும், ரதகஜதுரக பதாதிகளும் வெள்ளைக்

குடையும் வெண்சாமரமும் அருகு தீவட்டியும், கொடியுந் தோரணமும் செங்கோலுங் கொண்டு எங்கோனென்று எவர்களுந் துதிக்க நின்று, இயாவரையுந் தொண்டாக்கிக் கொண்டு, சிலபேர்களைரட்சிக்கவுஞ் சிலபேர்களை சிட்சிக்கவும் உச்சாகம்பெற்று, இச்சாசுதந்தரனாய் இயாவரும் வணங்கச் சிங்காசனமேறி யிருக்கப்பெற்ற செல்வ மென்னமோ? அதனை யடியாளுக்குத் தெரிவியுமென்ன, அதற்குப் பரமசிவன் அப்பரமேஸ்வரியை நோக்கிச் சொல்லுகின்றார்.

---

## இராஜத்துவ சம்பவம்.

ஓ பார்வதி? மனிதரியாவரும் மனங்குவிந்து தவமிருக்க மாட்டார்கள் ஏகதேசத்தில் ஒருவன் தனக்கு அதிகசெல்வம் வேண்டுமென்றும் அருந்தவமிழைப்பான். அந்தத் தவத்திற்குப் பிரசன்னமாகிய கடவுள் அநுக்கிரகம்பண்ணுவார், அவன் மறுசனனத்திற் போகபாக்கிய யோக்கியனாகிய, பூலோக இந்திரன்போல் ஒரு குடை நிழலில் உலகத்தையடக்கி ஆளுவான். அவன் செல்வகொர்வத்தினால் ஆண்வப்படாமல் தருமத்தைமறக்காமல், நீதிகுன்றாமல் நெறிக்கோல் சாயாமல், ஏழைகளுக் கிடர்விளைக்காமல், குடிபடைகளுக்கு, இதமாக நடந்து சத்துருசெயம்பெற்று,சமயங்களிற் பேதம்வைக்காமலுற்று, நீதியின்படியொழுகி கோபமாற்சல்யங்களைப்போக்கி ஒருவருக்கிடையூறுசெய்தலின்றி, குடும்பகலகமுங் குடும்ப தோஷமும் புரிதலற்று, சமர்வந்தவேளையி லிளைக்காமல் போர்முகத்திற் புறங்கொடுத் தோடாமல், இராஜாங்கத்திற்குரிய தருமத்தின்வழி நடந்துவருவானாகில், அவன்தான் நல்வினைப் பயனைப் பெறுவான். நால்வருக்கு மேன்பாடாகிய ராஜனாகி யுறுவான். பிற்பாடு பெரிதான நற்கதியிற்போய்ச்சேருவான். இவ்விதநெறிதப்பி அனியாயமாய் நடந்து, வீண் சண்டைவிளைத்து, கலகமூட்டி, நிலைதவறி, நெறிபிசகி, பட்சபாதமிகுந்து பெரியோர்களுக் கடங்காமல் பணப்பெருமையாலும் காலபலத்தாலும் பரதாரமும் பிறர்பொருளுமிச்சித்து உதாசனம்பேசி தெய்வதூஷணை செய்து ஆலயம் குளம் சாவடி நந்தவனம் சத்திரங்கள் இவை முதலியவற்றை யிடித்து ஒத்திவைத்துவித்துத் துய்த்து குடும்பத்திவிராமற் றனித்து கொண்டாளுக்கடங்கி இளைத்து, தாய்தந்தையைப்பகைத்து இன்னுமுள்ள பற்பலகொடுமைகள் செய்தானாயின், ஒருநாளுங் கடைத்தேறான். ஒருவேளை ஆயிரம்பாபத்தில் ஒரு அணுவத்தனை புண்ணியமிருந்து இவனை யரசனாக்கி வைத்தாலும் அவனணிந்திருக்கின்ற பாபமாகிய சட்டை அன்றைக்குத்தானே சிங்காசனம் விட்டிறக்கித் தரித்திரனாக்கி ஆயுளைக் குறைத்து காடேகதியாய் அலைந்து திரிந்து நரககதியைப் பெறச்செய்யும். எப்போது நன்மைகளையே நாடவேண்டும். என்று நாதாந்தனாதனேத அதைப் போதாந்த மாதுகேட்டு ஓ பூதாதிகள் மகிழ்ந்து போற்றும் புண்ணிய சொரூபமே? எளிதிற்கடைத்தேற்றுகிற தருமமொன் றுண்டேல் அதை அடியேனுக்கு அறிவிக்க வேண்டுமென்ன, நல்லதென்று நறுங்கொன்றை மாலையார் சொல்லத் தொடங்கினார்.

---

## கொல்லா விரதம்.

ஓ பராம்பிகா! கொல்லாவிரதமே எல்லாத் தருமத்திற்கு மேலானது, ஆனால், கருமபூமியிற் சனித்துக் கருமகாரிகளாகிய பூததேகிகள் எவ்வாறு கொல்லா விரதங் காப்பது? எவ்விதந்திலானாலுங் கொலைபாவஞ் சம்பவிக்குமே, என்று கேட்பாயாகில், இது தேவேந்திரன் தேவர்கள் முதலிய பேர்களுக்குந் தெரிதற்கரிதா யிருக்கப்பட்ட சந்தேகரகசியம், ஆகிலும், பொங்குசிங்க மிடையும் தங்குமன்ன நடையும் தாவுவேற் கட்கடையும் தலை மூன்றுடைய சூலப்படையுமுடையவளே! நீ யுணரலாம். வெயர்வையினாலும், புழுக்கத்தினாலும் உண்டாகிற பேன், கொசு, புழு, எறும்பு இவை முதலிய சிற்றுயிர்கள் சடராக்கினி படைத்த சடத்தை எடுத்தவர்களில் அமிக்கியமே. ஒருவராலும் உயிர்வதை யில்லாத காலம் மண்ணிலொருநாளுமிராது. ஆகிலும் உபசாரமா யுள்ளவர்கள் ஆரெனில், எவ்விடத்திற்கும் போகாமல், இருந்த இடத்தைவிட் டெழாமல், யாண்டுஞ் சஞ்சரிக்காமல் தேகம் ஒஞ்சரிக்காமல், காய், கனி, கிழங்கு, சருகு இவை முதலிய பட்சணங்களுண்ணாமல், மனம்வேறுபடாமல், யாவற்றினும் இரக்கம்வைத்து,

உன்னதஸ்தானத்தி லுட்கார்ந்துகொண்டு,
அஞ்ஞானத்துலவிய இந்திரியங்களையகற்றி
இருபக்கையு மொடுக்கி, அறிவு புறஞ்சாயப்
பூசஞ்சாரம்புரிவது விடுத்து, பரண்மேலிரு
ந்து பசியடக்கியிருப்பர், இதுமகா பிரயாசம்
ஒருவரு மிருக்கமாட்டார்கள். ஒருவேளை
அப்படி யிருக்க இசைந்தாலும், சுத்தமாய்க்
கொல்லாவிரத மிதுதானென்று துணிந்து
சொல்லப்படாது. அதிலும் கலக்கம் வந்து
கலக்கும் ஆனால் ஒருவன் மகா பரிசுத்தனாகி
நானென்கிற ஆணவமலமும் தேகாபிமான
மும், எனதென்னும் பற்றும், மோகப்பிராந்
தியுங் கொள்ளாமல், செருக்கை நெருக்கி,
சுத்தஸ்தபதர் யிருப்பவன் ஒன்றிலுஞ் சம்
மந்தப்படான் இவன் யாவும் பிரமமேயல்ல
துவேறில்லையென்று ஒட்டாமற் கண்டுவிட்
டவன். பிரபஞ்சத்தி லுழன்றாலும் பிரபஞ்
சந்தானல்லாதவன் புளியம்பழமும் ஓடும்
போலிருப்பவன். தானென்பதும் தனதென்
பதும் எப்போதவனுக்கு விட்டுப் போயின
வோ, அப்போதே அவனுக்கு ஒருபற்றுமி
ல்லை, அவன்தான் கொல்லாவிரதமுடைய
வல்லாளனென்று ஒருவேலை சொல்லலாம்.
ஒருவனுக்குத் தேகாபிமானத்தால் கொசு,
எறும்பு இவை முதலிய செந்துக்கள் கடிக்
கில், உடனே அடித்துக் கொல்லவேண்டி
வரும், அப்படிக்கானால் கொல்லாவிரதமெங்
ஙனம்.

ஓ மங்கையே! மெஞ்ஞானிக்குக்கோபம்
தாபம், கொடுமை, காமம், வெகுளி, மயக்கம்
இவை முதலியவைகளிரா, உலக வாழ்க்கை
யை யொருபொருட்டா யெண்ணான். உலக
மெல்லாம் ஒருகுடையி லாண்டுவரு மரசனை
யுந்துதிக்கான். மதிக்கான். பொன்னும் புழு
தியும் பிரித்துநோக்கான். யாரிகழ்ந்தாலும்
யார் புகழ்ந்தாலும் ஒருபொருளாய்மதியான்
சீதஉஷ்ண நன்மைதீமைகளிரண்டு மொன்
றென்று நாடுவான் அவனுக்கு யானைமுதல்
எறும்பு வரையிலும் பிரமமே. எல்லா விதி
யும் விதித்தப்படி என்றுஎண்ணிவிட்டவனு
கையால் கொல்லாவிரதனென் றெல்லாரும்
பேசலாம். அவனுக்குக் கொலைபாதகமில்லை
அவன்தான் சாயுச்சிய மென்கிற என்னிற்
கலந்தவன் மற்றபேருக்கு நிர்ணயமாய்ச்
சொல்லப்படாது. ஒருவேளை தன்னையறியா
மலாவது, தனக்குத் தானேயாவது; கொலை
வந்துவிட்டால், அக்கொலைப்பாவம் அந்த
மெஞ்ஞானியைப் பிடிக்கமாட்டாதோவென்
று கேட்பையாகில் ஓ நாராயணி பிரகாசத்தி
ற்குவைத்த விளக்கு எரியும்போது வீட்டிற்
பூச்சிகள் பத்தெட்டு விழுந்து சாகின்றன.
அதனால்வரும் பாபம் விளக்கேற்றினவனுக்
குவாராது. கலப்பைபிடித்துப் பூமியிலுழும்
போது கணக்கில்லாத சீவன்கள்மடிகின்றன
அந்தப்பாவ மவனைத்தொடராது பின்னும்
ஒவ்வொருவன் செய்யும்படியான செய்கை
மூலமாய் அநேகசீவான்மாக்களெவனுக்குந்
தெரியாமல் முடிகின்றன. அந்தப்பாவ மவ்
வவனையுமணுகாது. யிவ்வுயிர்வதைப்பாவம்,
பிரமத்தின்செயலென்று யிருப்பவர்க்கு ஒன்
றுஞ் சேராது. மேலும் ஆயுள்முடியாமலழி
யாதென்கிற திடச்சித்தக் கியானமில்லாமல்
யானென்னுஞ் சஞ்சலத்தாற் சங்கடப்படுகி
ன்ற அக்கியானிகளுக்குக் கொஞ்சந் தொட
ரும் பிரபஞ்சமோக ஆசாபாசத்துடன் கல
ந்து, எல்லாம் என்னாலேயு மென்சமர்த்தினா
லேயும் நடந்ததென்றெண்ணி யிறுமாந்திரு
ப்பவ ரெவரோ அவருக்கு யிருவினைகளு
முண்டாம். எண்ணமிறந்தார்க்கு ஒருவினையு
மில்லை. இதெல்லாந் தன்னினைவினால் விளை
வதேயல்லது வேறில்லை.

ஓ நீலோற்பலமொத்த நேத்திரமுடைய
வளே? வேதவிதிப்படி யாகங்கள் பண்ணு
ம்போதுபசுக்கள்முதலியவைகளைக்கொன்று
தேவதைகளுக்கு அவிர்ப்பாகங் கொடுக்க,
அதையவர்களுண்டு களிக்குங் காரணத்தி
னால் கொல்லாவிரதத்திற் குண்டான பலன்
கிடைக்கும். குற்றமில்லை. இதற்குத் திருட்
டாந்தம் பூர்வமுறை நெறிமாறாமல் செங்
கோல் செலுத்திவந்த அந்தித் தேவனென்
னுமரசனொருவனுளன். அவன் நூறுகோடி
பசுக்களைக்கொன்று எக்கியங்கண்டு மேலான
பேறடைந்தான். யின்னும் அந்தப் பசுக்
களினுடையயினங்கள், நான் வருகின்றேன்
நான்வருகின்றேன் என்று இயாகமுன்னிலை
யில் உடலையொறுத்து உயிர்விடுவதற்காகக்
காத்துக்கொண்டிருக்கின்றன. அந்த அந்தி
தேவனுடைய சந்ததியார் முந்தியவாறு
போற் பிந்திச்செய்து மோட்சத்திற்குப்போ
கின்றார்கள். ஓமத்துக் குரித்தாயிருந்த பசுக்
கூட்டங்களுங் கோமளவுலகத்திற் குலாவியி
ருக்கின்றதுகள். அவ்வெக்யம் பண்ணத்தொ
டங்கியபின் இறந்த பசுக்களுடைய உதிர
மானது சருமணவதியென்று பிர்மாண்டமா

ன நதியாய்ப் பெருகியது. பூமியிலுள்ளவர்கள் அந்த நதியிற் புனிதமாய் ஸ்நானம்பண்ணி, பஞ்சமா பாதகங்களையும் போக்கடித்துக்கொண்டு பதவியுடைகிறார்கள். யாக மூன்னிலையில் பசுபந்தனுதிகள் பண்ணி யாகஞ்செய்தால், அவர்களுக்குக்கொலைப்பாதகம்பொருந்தாது. அந்தப் பழியை மந்திரதேவதைகளேற்றுக் கொள்ளுவார்கள். இதன்றியும் பெரிய சண்டையில் எண்ணிறந்தவர்களைக் கொன்றாலும் மேலான வீரசொர்க்கவின்பங் கிடைக்கும். இந்தப் பாவங்களை வீரலட்சுமி தாங்கிக் கொள்ளுகிறாள். நிர்தாட்சண்யமாய் யுத்தம் பண்ணுமல் முதுகுகாட்டியோடுகிறவர்கள், ஒதுங்கினவர்கள், பதுங்கினவர்கள், கொடிய நரகத்தில் சூலாவுவார்கள். பகைத்து யுத்தம் நேரிட்ட காலத்தில் உயிர்வதை செய்யாமல் விடுவது மகா பாவமாம். புறமிடாமனின்று வெற்றிபெறுவதே புண்ணிய சாரம். புருஷதீரம். புகழ்ப்பிரதாபம் பொருந்திய வீரம். ஜீவாதாரப் பிரசாதமாயிருக்கின்ற நெற்பயிர் முதலானவைகள் சீவனுனும், அவைகளை யறுத்துப் புசிப்பதனுற் பாபமில்லை. மேலுந் தவசிமுதலிய முனிவர்களை, மனிதர்களை, பசுபட்சி முதலியவைகளை, பயிர்ப்புலங்களை இன்னுமுண்டான உபயோக மானவைகளைக் கெடுக்காநின்ற துஷ்ட மனிதர்களையும், துஷ்ட மிருகங்களையும், துஷ்டபறவைகளையும் அடக்கும்பொருட்டு ராஜன் வேட்டையாடிக்கொல்லவேண்டியது. அதனுல் பாவமில்லை.

ஓ நீலவேணி! இப்படிக்கெல்லாம் இறந்துபோகிற உயிர்களுக்கு நற்கதியுண்டாம். மறுபடியும் பிறக்கா. இன்னும் நல்ல விவேகிகளாகித் தரும சொரூபிகளா யிருக்கிறபேர்களுக்குச் சிலபாவிகள் பொல்லாத துன்பமிழைப்பார்கள். அவர்களையு மரசன் நீதிவழுவாமல் அழிக்கலாம் கொடுமையில்லை. நெற்பயிருக்குக் களைபிடுங்கியதுபோலாம். துன்பமில்லாமல் ஆத்ம விர்த்தியாய்ச் சுகப்படுவார்கள். நீதியுண்டாம் நெறிசேரும். மாதவம் தவம்புரிவார்கள். மழைமாரி மிகப்பெய்யும். வையகந் தழைக்கும். இதுகளெல்லாம் நன்மையே யல்லது வேறல்ல, இன்னுந் தன்னிச்சையாற் கொலைபுரிந்தபேர்கள், பிராமணுளை நடுங்கச் செய்தவர்கள், பசுவைப் போஷிக்காமற் பட்டினிப் போட்டவர்கள், கொட்டிலிலே கட்டியடித்தவர்கள். பெரியாரையிகழ்ந்து பிழைத்தவர்கள், வேதவிதிதப்பி நடந்தவர்கள், இவர்களையெல்லாம் ராஜன் விதிப்படி விசாரித்துத் தெண்டிக்காவிட்டால், அவனுக்குக் கதிக நரகமுண்டு, உடனுக்குடனே விசாரித்துத் துஷ்ட நிக்கிரகம்பண்ணினுல், துஷ்டாளுக்குப் பாவம்போய்த் தெளிவு பிறந்து செவ்வையான வழியிற் சேருவார்கள். இராசனுக்கு நல்ல சுகபோக பதவி கிடைக்கும். இராஜநீதி கொல்லா நெறியிலும் மேலான நெறியென் றுணர்க என்றுரைத்ததைக் கேட்ட சண்முகனை யளித்தருளிய உண்ணுமூலையன்னையானவள் தீர்க்க தண்டஞ்செய்து, அரிபிரமர் தியர்க்குமெட்டாத அரும்பொருளே! பிரமசாரி வானப்பிரஸ்தன் சந்நியாசி இம்மூவருக்கும் இல்லறத்தான் துணையென்ப தென்னை யென்று முன்னம் யான் கேட்டதற்கு கைவல்லியமான கடைப்பிடி தருமங் கற்பித்தருளினீர் அக்கருத்தை யோசிக்குமிடத்தில் செல்வமிருந்தால் மாத்திரஞ் சீர்பெற நடத்தலாம் திரவிய முதலிய வரும்படி யில்லாவிட்டால் மேற்சொன்ன மூன்றாச்சிரமத்தையும் எப்படி போஷிப்பான்? அவனுக்குப் பொருளேது? அப்பொருள் வரும்வகையெப்படி? எவ்வாறந்த இல்லற தருமம் நடத்துவது? இவற்றை ஏழையேற்கருள வேண்டுமென்று இறைவி வினவ எப்பொருட்கு மிறைவன் சொல்லுகின்றார்.

---

## சம்பாத்திய வகை.

ஓ மைக்கண் மானே! தருமமுங் கரமுந் திரவியமில்லாமற் கூடா திரவியம் வரும் வழி யாதெனில், வித்தியாமூலத்தில் சொல் வண்மையாகிய கட்டுவார்த்தையில் உழவாணிபத்தில் உண்மை வியாபாரத்தில் பசுக்காக்கும் பக்குவத்தில் உத்தியோகத்தில் ஆசையில்லாமற் சத்தியத்துடனே சம்பாதிக்கலாம். இதுகளினுங் கல்வி யுடையவன் கர்வங்கொண்டு சேர்க்கும் பொருளானுல் அது பாவமே பிரசங்கம் முதலிய சொல் வண்மை பெற்றவன் ஆங்காரப்படாமல் இயாவருக்குந் தாட்சி சொல்லி மாட்சிமை பெறவேண்டும். உழுமுறைசெய்பவன் சோம்பலகற்றிச் சீவகாருண்யனுகி வரியிறை முறை வழுவாதளித்து மனங் களிகூர்ந்து வருவிக்கவேண்

டும். வியாபாரி தன்னை யுணர்ந்து தனத்தை
ச்சுமந்து நடுநிலைமையாய் வியாபார நடத்த
வேண்டும் பசுக்காப்போன் பசுவின் பாலைக்
கறந்து குடித்துப் புல்விடாமற் காட்டிலோ
ட்டலாகாது அது பிணியினால் வருந்திப்
புல்லைப் பிடித்து மேயமாட்டாத காலத்தில்
சாப்பாடுந் தண்ணீருங் கொடுத்துத் தேய்த்
துக் காப்பாற்றி அதனால் வரும் பலப்பொரு
ளை ஆர்ச்சிக்கவேண்டும் உத்தியோக வேலை
யிலிருப்பவன் தன்னெசமானுக்கு மனதின்
படி நடந்து அவன் சொல்லைத் தள்ளாமல்
உண்மைக்குத் தாரமாக விருந்து வஞ்சனை
பொய் முதலிய மனத் தழுக்கில்லாமற் பழகி
இரத்தினாபரண முதலிய பொருளைச் சம்பா
தித்தல் நன்மை, அப்போதவனுக் கப்பொ
ருளுங் கீர்த்தியுந் தருமமுங் கிளைத்து மேன்
மேற்படரும் இவையெல்லாந்தான்பாவமில்
லாத சொத்து எந்தக் குலத்தோனானும்
எத்தொழில் புரிவோனானும் சத்தியமாயுந்
தருமமாயுஞ் சம்பாதிப்பது மேன்மை இந்
தச் சொத்துக்களுடனும் உத்தமியாகியஸ்தி
ரீயுடனும் வாழ்ந்தால் உத்தமம். இதிலுந்
தாய் தந்தை பந்துமித்திர உடற்பிறப்புட
னிருத்தல், உத்தமத்திலுமுத்தமம் இதிலுந்
தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்,
அதிதி பூசை, இவை முதலிய விரதங்களை
வேதப்பிரமாணப்படிக்கு இழைத்தல் சுத்த
பவித்திரம் பர அன்னங்கள் பாதனங்கள்
புண்ணிய முள்ளனவாய்ப் பார்த்து இவைக
ட்கு வாங்கிப்போடலாம். இவைகள் நான்கு
வருணத்தோரும் நடக்கவேண்டுவனவேயெ
ன்று பரிபூரணனியம்ப, பரிபூரணி மகிழ்ந்து
ஓ நாதா! இந்தச் சம்பாத்தியத்தைச் செல
விடுந் திறமெப்படி? அதையுந் திருவாய்மல
ர்ந்தருள் வேண்டுமென்ன அமலன் சொல்
லுகின்றார்.

---

### சற்கரும விதி.

ஓ நாரி! அவாளவாள் தன் தன் குலத்தி
ற்குத் தகுந்த பிரதிஷ்டையுடன் சத்தியமாய்
ச்சேகரித்த திரவியத்தைத் தான் மாத்திரஞ்
சாப்பிடாமல், இல்லாதபேருக்கு உதவிசெய்
து, எல்லார் குடிசிலேயும் விழப்பண்ணவே
ண்டும். நல்லதண்ணீர்க் கிணறு உலகத்திற்
கெப்படி உபயோகமாகுமோ? அப்படிபோல்
யாவருக்கும் உதவிசெய்யவேண்டும். அப்
போதவருள் ஓர் புண்ணியவான் கர்ப்பம்
பூரித்துக் குளிர்ந்து, அதனா லீந்தோனுக்கு
மேன்மையுண்டாம். இயாவரும் முதற்குலத்
தாராகிய பிராமணருக்குக் கொடுத்து, பத்தி
சிரத்தையுடன் வணங்கிங் பட்சம் பாராட்ட
வேண்டும். தனக்குப் பின்குலத்தாராகியபேர்
களுக்கு முதவி உபசாரமாய் இன்சொல் லிய
ம்பவேண்டும். எவனாகிலுமொருவன் தனக்கு
ஒருகாலத்திற்செய்த நன்றியை உயிருள்ள
மட்டும் மறக்காமல், இஷ்ட தெய்வத்தைக்
குறித்துப் பூசித்து நித்தியம் விண்ணப்பம்
பண்ணவேண்டும். நன்றி மறந்தால் அவ
னென்றைக்குங் கடைத்தேறமாட்டான். எக்
காலத்துங் கோபத்தைக் குறைத்துவிட வே
ண்டும். தீவினை முதலிய பாபங்களுக்குப் பய
ந்து நடக்கவேண்டும். நல்வினைப் பொருளை
எப்போ தெப்போதென்று விரைந்து, நம்
முடைய செல்காலத்திலேயே சம்பாதித்துக்
கொள்ள வேண்டும். நாக்கைகட்டிக் காக்க
வேண்டும். நல்லவர்களினுறவை நாளும்
விடப்பேர்காது. தீயரிருக்கும் திசையை
நாடப்படாது ராஜாக்ஞைக் குட்படவேண்
டும். ஒரு உயிரையுங் கொன்று தின்னாமல்மறு
க்கவேண்டும். சத்தியத் தப்பலாகாது தரும
தேவதை பிரியப்பட நடக்கவேண்டும். சாஸ்
திரவிசாரணை என்னேரமு யிருக்கவேண்டும்.
சாதுசங்கம மிருக்கவேண்டும். நல்லகேள்வி
களினாற் காதுகள் சுத்தியாக வேண்டும்.
இவை யெல்லா மொருவனுக் குண்டாகில்
தனக்குத்தானே சாந்த குணம் வரும். அப்
பால் நன்மை தீமை பெரியவாள் சிறியவாள்
என்பதை யறிந்து கொள்ளலாம். ஈஸ்வரத்
தியான முண்டாம். எல்லா நன்மைகளும்
விளையும் கேள்வி எல்லாவற்றிலு மேன்மை
யானது. இக்கேள்வி யொருவனுக்கு முதிர
முதிர நல்வழியிற் கொண்டுபோய்விடும். திவ்
விய பதவி பெறுவான். அவன் மனிதத்தேக
மானாலும் தேவர்கள் தேகத்திலும் அதிக
மென்று ஸ்திரமாய் நம்புக என்று சாம்பவ
மூர்த்தி சொல்ல, அதைக்கேட்ட அம்மை
யானவள், சுவாமி லோகத்திலே சிலர் பாக்
கியவான்களா யிருக்க சிலர் தரித்திரராய்
வருத்தப்படவு மிருக்கிறார்களே அஃதென்
ன காரணத்தினாலேயோ அதை யெனக்குச்
சொல்ல வேண்டு மென்ன, எமதையன்
சொல்லுகின்றார்கள்.

## இருவினைப்போகம்.

ஓ காருணி! ஆதி காலத்தில் தாமரைக்
கோவிலில் வாசம்பண்ணிய பிர்மா இந்த
வுடல்களை யேர்ப்படுத்திய நாள்முதற்கொண்
டு குற்றமும் பொய்யு மில்லாம லிருந்த து.
அதனால் உயிர்களுக்கு நன்னெறி, நீதி,
ஈகை, சா ந்தம், உண்மை, பொறுமை, ஆசா
ரம், நியதி, இவை முதலியவைகள் வித்தி
யாசமில்லாமற் சமமாயுண்டாகி, தக்கோரா
கிய பெரியவாள் மனம்நோவாமல் வணங்கி
விரததான முதலியதும்பண்ணி, அன்றைக்
கன்று செய்கிற காரியங்களை ஈஸ்வரார்ப்பி
தஞ்சொல்லிப் பயந்து காலங் கழித்தார்கள்.
அவர்களுக்கு நித்தியவைபவச் செல்வங்
கிடைத்து வந்தது. இப்பால் அத்தருமங்
கள் நாளுக்குநாள் பாவச்செய்கையால் மா
றிப்போயின, அதனாற் சிலர் செல்வராயுஞ்
சிலர் தரித்திர ராயுமாவதற்கேது உண்டா
யது அஃதெப்படியெனில் தம்மைப்போன்ற
சுற்றத்தார், அண்ணன் தம்பிகள், தாய்தந்
தைகள், பசியினாலே துன்பப்பட்டுக்கொண்
டிருக்கத் தம் வயிற்றைப் பெரிதாய் நினைத்
துச் செவ்வையாகச் சாப்பிட்டு, நிர்த்தயாளு
வாய் உபாதானபிச்சை முதலியனவுஞ் செய்
யாமல், ஏழைகளை யெதிரிட்டுச் சண்டை
போட்டு மற்கட்டித்திரிபவ ரானார்கள். இத
னாலவர்கட்கு வறுமைவந்து நொந்து ஊரூ
ராய்த்திரிந்து இரந்து உழலுவதானார்கள்.
இப்படியே யெத்தனையோ கோடிபாவங்க
ளைச்செய்து, அந்தந்தப் பாவங்கட்குத் தக்க
படி உழன்றிறக்கின்றார்கள். அவரவர்கள்
மனசையுந் தேடிக்கொண்ட இருவினையை
சீர் தூக்கிப் பார்த்து. திசைமுகன் மீட்டுஞ்
சிருஷ்டிப்பான். பற்பலவித பேதச் செய்
கைகளினால், பூர்வகிர்தம் புண்ணிய பாவ
மென்பதற்கு ஈடாய்நமது பஞ்சகிருத்தியமு
நடத்தும். பூர்வந் தேடிக்கொண்ட செயல்க
ளென்னவென்றால்! தேவதைகளை வணங்
காமற் பழித்து இகழ்ந்து, தனக்குவந்த
செல்வங்களைப் பெரிதாய் நிதானித்து, நம்
முடைய யிருப்பென்ன? நமது முன்னோர்க
ளிருந்த நிலையாது? இந்த பொருட்பாக்
கியம் நமக்குக் கிடைத்தவிதமெப்படி? இது
யாவனுடைய முயற்சி? பயிர்க்குழியிற் செடி
படர்ந்து காய்ப்பதுபோல் சென்மாந்திர
புண்ணியவசத்தால் வந்து நேரிட்டதல்ல
வா இது இதைக் கெட்டியாய்க் காப்பாற்று
வோமென்றால் இதற்கு முன்னிருந்த செல்
வர்களெங்கே! அவர்களுடைய பாக்கிய
மென்னமாய்ப்போயது! என்று நிதானிக்கா
மல் நானுமுண்ணாமல், தருமதானம் புரியா
மல் ஒருவருக்குங் கொடாமல், பந்துமித்திர
சவரட்சணையும் பண்ணாமல் உலுத்தனாய்க் க
வலைகொண்டிருப்பவனெவனோ? அவன்பூர்
வத்திலொருவர்சொத்தை அபகரித்துவஞ்சித்
துமோசஞ்செய்து முழுதும்புரட்டி இந்தச்
சன்மத்தில் அவனுக்காகக் காப்பாத்திவைத்
திருக்கிறானென்று தெரிந்து கொள்க.

ஓ நங்காய்? இப்பேர்ப்பட்ட பாவிக்கு
இந்த ஜன்மத்திற் பணங்குவிக்கும்படியான
பரிசு எப்படிக் கிடைத்தென்றால்? பூர்வம்
இயாராகிலும் பெரியவர்கள் பந்துக்கள் இ
வனுக்குப் புத்திசொல்லி ஐயோ! வீணாய்ப்
புதைத்து வைத்திருக்கிற திரவியத்தை யெடு
த்து வெகுபேருக்குக் கொடுத்து, சத்திரஞ்
சாவடி, கோவில், குளம் இவைகள் கட்டப்
படாதா? என்று நாள்தோறு மிடிந்துச்சொ
ல்லிக் கொண்டுவர, அதனால் வெட்கப்பட்டு
ஏதோ சில தருமங்களைச் செய்து கிடைத்த
தென்றறிவை. இப்பிறப்பில் வெகு தரித்திர
மாய்த் துன்பப்பட்டுப் போசனவஸ்திர பூ
ஷணமில்லாமல் வாடுகிற பேர்கள் யாரெ
னில்? பூர்வத்தில் லட்சுமி புத்திராளாகிய
பாக்கியவான்களைப் பார்த்துப் பொறாமை
கொண்டு இல்லாத இடையூறு விளைத்தவர்
கள்பேதையறிவினாற் பிதற்றித் திரிவார்கள்.
தருமம் பண்ணுகின்ற பேரைத் தடை படுத்
தினவர் விரதம், நோன்பு, யாகம், தியாகம்,
இவைகளுக்குப் பழுதுரைத்தவர்கள், பிரா
மணரை நிந்தித்தவர்கள், சிசுவைக்கண்டித்
தவர்கள், மனத்திலொன்றுமாய் வசனித்து
வஞ்சித்துச்செல்வம் வருமென்று பேராசை
பிடித்து இறந்தவர்களாம். தாம் வருந்
தாமல் இருந்த இடத்தில் தானே நான்கு
திக்கிலுமிருந்து திரவியம் வந்து சேர நாண
யப்பாராட்டி, பரவுபகாரம் பண்ணி, யாவ
ரும் பாக்கியவானென்று புகழப் பெற்றுச்
சுகமாயிருப்பவர்களில் யாரென்றால்? பூர்வ
ஜெனனத்தில் தமக்குக் கிடைத்ததை இல்லை
யென்னாமல் தானமீந்து, மனோதுக்கமில்
லாமல் மகிழ்ந்து, இன்னும் வருவார்களா
வென்று புகழ்ந்து பெரியவாளுக்குப் பல
வந்தமாய்ப் பூசைபுரிந்து அமுதுபடைத்து

ஆலயந்தொழுது, ஆசாரியபத்தி செலுத் தினபேர்களாம். எந்த வேளையுங் கவலையாய் அலைச்சற்பட்டு அலைந்து, அகால போசன முண்டு சுகத்திலுந் துக்கத்திலும் பாதியா யனுபவிக்கிற பேர்கள் ஆரெனில்! பூர்வ சன்மத்தில் ஒருவருக்கு வாக்குத்தத்தம் பண் ணி ஆசைவார்த்தைகாட்டி, பின்பு அலக்கழி த்துக்கொடாமல் வயிறெறியப் பண்ணின வர்களாம். சில வேளையிற் றருமமெண்ணிக் கொடுத்து அரிய வருத்தமான தொழிலைச் செய்து, இராப்பகல் சரீர கஷ்டப்பட்டு அ லுத்து, திரவியங் கிடையாமல் யில்லாமை யால் உயிர்வேதை படுகிற ஆத்மாக்கள் யா ரென்றால்! பூர்வத்தி லிரப்போர்க ளிடத்தி லிருக்கும் பொருளை யிச்சித்துத் துரோகஞ் செய்து துன்பப் படுத்தினவர்களாம்.

ஓபாவாய்! ஆங்காலமெல்லாம் போய்ச் சாங்காலத்திற் பாக்கியம் வந்தால் அனுபவி க்காமற் செத்துப் போகின்றார்களே. அது யாதுகாரண மென்றால்! ஊழ்வினையினாற் றிரவியங் கிடைத்திருந்து, நல்லவர்களுக் கும் உற்றார் பெற்றாருக்கும், ஆபத்துவேளை க்குக் காலமறிந்து கொடாமல். நெடுநாள் சும்மாயிருந்து, தமக்கு முடிவு காலஞ் சமீ பித்தபோது கொடுக்கப் புகுந்து. குபீரென் றெரிந்து மன்த்துடனிறந்த கொடுமையாள ரென்றறிவாய். அநேக விதத்திற் பொருள் வருவாயிருந்தும், பிணியாலும், போசனப் பிரிவாலுந் துன்பப்படுகிற பாவிகளாரென் றால்? முன்சன்மத்திற் கிடைத்த திரவியத் தை நல்ல புண்ணிய காலங்களில் அரதேசி பரதேசி சங்கமன் சோகி பெரியவர்கள், உரி யவர்கள், இவர்களுக்கு உபயோகப் படுத்தா மல், தமக்கு ரோகம் வந்தபோது அந்தநோ ய் தீர்வதற்காகச் செபதப நமஸ்காரங்கள் செய்வித்தவரென் றறிவை சுந்தரலாவண்ய சௌந்திரியச் சந்திர முகார விந்தமும், நற் குண நற்செய்கையும், சுகசீவனமுமா யிருக் கிறபேர்கள் யாரெனில், பூர்வத்திற் புலால் மதுவாதிகள்புசியாமலும், அப்பேர்ப்பட்ட துட்டநடத்தையோர்களை மதியாமலும், அ வர்களை யெண்ணித் துதியாமலும், ஈஸ்வர னுக்குத் தேன் பால் முதலியவற்றால் அபி ஷேகம்பண்ணி, இரக்கமுடன் இரப்பவருக் கீந்த இன்பமுடையாரென் றுணர்வை. இர க்கமற்ற ஈன அழகற்ற அங்கவீனராய், யா ருங்கண்டு அவருக்குத் தக்க விகார சொரூப மா யிருப்பவர்கள் யாரெனில் கடுமொழி புக ன்று, ஆத்மகோடிகளை வதைத்து, கையைக் காலையொடித்து, கழுத்தை யறுத்துக் கருக் கிப் பொசுக்கிப் புசித்தபேர்களாம். நற்குண ங்களும், சத்கீர்த்தியும் மேன்பாடும், சொல் வண்மையும், திண்மையும், செல்வமுமுள்ள வர்கள் யாரெனில்? அக்கினி சாட்சியாய்ப் புணர்ந்த மனைவியைவிட்டு அன்னியஸ்திரீ களை விரும்பித் தவத்தை விரதத்தை சத்திய த்தை விடுத்துக் கெட்டுப்போகாமல், தனது மனையாளுடன் கூடிச் சுகமாக வாழ்ந்தவர் கள். பெண்சாதி யிறந்துபோகத் தான் முண் டையாய்ப் பெருமை கெட்டு, ஒருவருக்கும் யோக்கியப்படாமல், தமது நெஞ்சைத் தா மே சுட்டுக்கொண்டு, மனதுவெந்து, நொந் து, நைந்து, திக்கில்லாமற்சரிப்பவர்கள் யா ரெனில், பூர்வம் புண்ணியத்தாற் கிடைத்த பெண்சாதியை முறட்டுத்தனத்திற் கடிந்து, உதாசனமாகப் பேசி, அடித்துப் பிடித்துத் தாலியறுத்து, தனியே படுக்கவைத்து அவ ள்வயி றெரியும்படியாய் அவளுக் கெதிரில் மற்றொரு ஸ்திரீகளுக்கு உடல் புளகரும்பப் போகங்கொடுத்து இன்ப முண்டாக்கினவர்க ளென்றறிக.

ஓ மாதங்கி! மிதமற்ற கல்விகியானங்கற் று உலகமெல்லாங் கொண்டாடப் பேர்பெற் றும், கஞ்சிக்கு மாத்திரங் காற்றாய்ப் பறப் பவர்கள் யாரெனில், பூர்வத்திற் கல்விகேள் வியிருந்தும் விசேஷ காலங்களில் தானங் கொடாமலும், கல்வியை ஒருவருக்கு உப யோகப் படுத்தாமலும், கபடமாய் மனத்தழு க்குட னிருந்தவர்களாம். பரிசுத்த ஞான முங்கல்வியுமில்லாம லிருக்கிறபோது சகல செல்வ சம்பத்துட னிருப்பவர்கள் யாரெ னில்? எவரிடத்திலும் பேத நினையாமல், எங்குநிறைந்த ஈஸ்வரனொருவனே யென்று மதித்துத் தாரதம்மியமாய்ப் பிரிக்காமல், ஒருவருக்குங் குறைவில்லாமற் பெரிய குடும் பங்களைப்போஷித்து, எளியார்களைக் கண்டி ரக்ஷித்தவர்க ளென்றறிக. கல்விக்கியானமில் லாமற் போனதற்குக் காரணஞ் சிலபேத மாகிய தாரதம்மிய மெண்ணிப்பார்த்த தாட் சியாம், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் இந் நாற்கவிகளைப் பாடப் பிரசங்கஞ் செய்பவர்கள் தந்திரிமடைவது யாதெ னில்? ஒருகுருவை வணங்கி வழிபட்டு, பின் பவரைவிட்டு இன்னொருவரோ டிணங்கி,

முன் குருவைப்பழித்து, பின் குருவைப் புகழ்ந்து,காணிக்கை வஸ்திரங்கொடுக்க நாணி, பேணிப் பூசைபுரியாத பாபிகளென்றறிக, கற்றகல்வியையாவருக்குஞ்சொல்லி ஆசானை மகிழ்வித்து, சொற்ற கல்வியின் வழி நடந்து அடங்கியிருந்தவ னெவனோ? அவன் இந்தச் சன்மத்திற் கல்வியுஞ் செல்வமுமுடையவனாவான் குருவையடுத்தும், என்னென்ன பாடுபட்டும், வித்தைவாராமலும், அறிவுதுலங்காமலு மிருப்பவன் யாரெனில்? பூர்வசென்மத்திற் சகல கேள்வியுந்தெரிந்த பெரியோர்களை மதிக்காமல், மரியாதைபண்ணாமல் அவமதித்து இகழ்ச்சிசெய்து பாவந்தேடிக்கொண்டவனாயும் நல்ல பெண்சாதி, வல்லமையான பிள்ளை, இலட்சுமி கடாட்சம், உரோகநிவர்த்தி, பூரணாயுள், ஆரோக்கிய திடகாத்திரம், இவைகளைப் பெற்றிருப்பவர் யாரெனில், பூர்வங் கல்வி-தானம்-கேள்வி தானம்-கன்னிகாதானம்-புத்திரதானம்:தன தானம்-தானியதானம்-வாகனதானம் இவைகளை மாலை சந்தனமுதலிய வாசனைத்திரவியங்களோடும் பண்ணியபேர்களென் றுணர்க. புருடன், பிள்ளை,பெண்டு, பந்துஇவர்களில் ஒருவருக்கொருவர் சம்மந்தமில்லாமல் தேசதேசங்களிற் பிரிந்து தவித்துக் கவலைக்கொண்டு, உத்தியோக முதலிய வெந்தைப்பிடித்தாலு முடியாம லிடுக்கமடைந்திருப்பவர்கள் யாரெனில், சென்மாந்திரத்தில் திரவியந் தேடி, மோகலோப கோபங்களினாலே பூமியிற் புதைத்து, பின்பு வைத்தயிடந் தெரியாமல் வாயடைத்து மாண்டவர்களாகும். செல்வங்கிடைத்தும் பிள்ளைகளில்லாமல், அதுவே வேதனையாய்த் தருமம் பண்ணவேண்டுமென்று சஞ்சலப்படுகிறவாள் யாரெனில்? முற்பவத்திற் கற்பங் கொண்டிருக்கிற உயிரைக் கத்தியினாலே யறுத்து, கருப்பத்தைக் குலைத்து குருவிக்கூண்டைக் கோலாற் கலைத்து, குளம், கிணறு, குட்டை இவைகளைக் கெடுத்தவாளென்று நினை.

ஓ உமையே! பிறவிக்குருடா யிருப்பவர்களோ? பூர்வத்திற் காமமயக்கத்தினாற் பிறருடைய ஸ்திரீயை யெடுத்துக்கொண்டும்; வஸ்திரம் விலங்கியபெண் ணவயவங்களைப் பார்த்து ஆசைகொண்டு மிருப்பார்கள், நடுமத்தியிற் கண்போனவர்களோ? தவளை முதலிய செந்துக்களைப் பிடித்து, ஈர்க்கில் திரிச்சீலை கொளுத்திச் சொருகினவர்கள், கண்ணிற் பூவிழப்பட்டவர்களோ! மிளகா முதலிய கொடியதூட்களை ஒருவர் அல்லது ஒருசெந்து இவர்களுடைய கண்ணிலிட்டவர்கள், கண் சிதைந்தவர்களோ? பசுவையு மற்ற வுயிர் வருக்கங்களையுங் கண்பொறி கலங்க அடித்தவர்கள், காது கேளாதவர்களோ பெரியோர்கள், தாய்தந்தைகள், அண்ணன் தம்பிகள் இவர்களை அதட்டிக்கொடூரமாகிய மொழிபுகன்று, கடுஞ்சொல்லாகிய நெருப்பைக் காதிலேற்றினவர்கள் தீப்போலாகிய வயிற்றுநோய் வந்து தேம்பித் திரிபவர்களோ? பொய்யு மசத்தியமும் ஒருவர் பொருட்டிற் பேசி, ஒருவர் தின்னுகிற அன்னத்தைக்கண்டு கண்கூசி, வயிறுதாரி என்றேசி நகைத்தவர்கள். பித்தமூர்ச்சை பிடித்தலைபவர்களோ? கள்ளையுஞ் சாராயத்தையுங் குடித்து, கஞ்சாவையு மபினியையுந்தின்று மதிமயங்கி, அத்துமீறி உத்தமிகளையும் உத்தமரையுமேசி யிகழ்ந்தவர்கள், எத்தனைப் பிள்ளைகளைப் பெற்றாலுஞ் செத்து, செல்வமுங் கெட்டு அல்லற்படுபவர்களோ? வித்துவான் மனதை நோகப்பண்ணிய வீணர்கள். கோசலத்திலே ரணங்கண்டு, சீழுமிரத்தமுஞ் சிலைத்தண்ணியுஞ்சொட்டத் தயிரியஞ் சிந்தியிருப்பவர்களோ? பரதாரம் விரும்பித்தொந்தரைப்பண்ணி வலாற்காரமாய்ப் புணர்ந்தவர்கள். அடத்தின்பேரில் தண்டுபூச்சிட்டுச் சங்கடஞ் செய்தவர்கள். கன்னிகையை அழித்தவர்கள், பசு-கழுதை-எருமை-குதிரை,ஒட்டை முதலியவற்றினுடன் சம்மந்தப்பட்டவர்கள், சிறியதாய், தங்கை, தமக்கை, பெண் இப்போற்பட்டவர்களுடன் முறைதப்பினவர்கள், அறிவுகெட்டு மாடுபோ லுழைப்பவர்களோ? மாட்டை வண்டியிற்கட்டி பொதிபோட்டடித்து, அந்த லாபத்தைத்தின்றவர்கள், யானைக்காலுடனும் விரை வீக்கத்துடனுங் கழுத்தொடியப் பளுவெடுப்பவர்களோ கோழி மாடுந் திருடி, அவற்றின் கழுத்தை முறித்து முடித்தவர்கள், விலங்கு போட்டுக்கொண்டு கட்டுக்காவலாகிய காவற்கூடத்திலிருப்பவர்களோ? பசுவைத் தளைந்து,பட்சி மிருகங்களைக் கூட்டிலடைத்து வளர்த்தவர்கள்,முடவரானவர்களோ? பசுமுதலிய நல்ல சீவன்களைப் படுகுழிபாச்சி, அவற்றின்காலை யொடித்தவர்கள், கால்கள் பருத்து புண்ணாய்ப் புழுத்து மண்ணாய் மக்குகிறவர்களோ?

கால் கழுவாமலும் புறங்கால் நனையாமலும் சுசியில்லாமலு மிருந்து, சும்மாவாகிலுங் கால்நேர வென்று சொல்லிப் பெரியோர்களிட்ட வேலைசெய்யாமற் பால்மாறின பேர்களாம்.

ஓ கௌரீ! நமது கோவிலுக்கு வந்து கோட்டுவாய் தும்மலிட்டபேர்களும், பெரியவர்களுக்குந் தேவர்களுக்கு முரியபொருளையும் அன்னத்தையும் உதைத்தபேர்களும், குறள் கூன் வாய்கோணல் இப்பேர்ப்பட்டவராவார்கள் கூலிக்காரருக்குக் கழுத்தொடியச் சுமையேற்றிக் கூலி குறைத்தவர்களும், வியாபாரத்தில் தானியமுதலிய பலபண்டங்களை அதிகமான விலை சொல்லிக் குறைத்த பாவிகளும், குஷ்டரோகமாகி, விரல், கை, கால், மேனி இவை குறைந்து வெடித்து இசிவெடுத்திருக்கிற தீயராவார்கள். மரக்கால், படி, இவை முதலியவைகளை அதனளவிற் குறைவளந்து நிறுத்தவர்களும், பரமசாதுவாய், பத்தியாய், சத்தியமாய், பரப்பிரமத்தின் பிரீதிபடைத்தவர்களைவஞ்சித்து அவர்களுடைமையையும், பொன்னையும் பொருளையும் நிலத்தையு மெடுத்துக்கொண்டு போராட்டங் கண்ட புலையர்களும், இந்தச் சன்மத்தில் நிலையில்லாத உன்மத்தராகி, கண்டவர் கண்டபடி சீசீ என்று அடிக்கடி முதைக்கவுமாவார்கள். ஆகாரமில்லாம லுயிரோடிருப்பவர்களும், ஐயமிட்டுண்ணுதவர்களும், பிள்ளைக ளிறந்துங் குடும்பமழிந்தும் போவார்கள். மாதுர்பிதுர் காரியங்களை மகிழ்ந்து நடத்திப் பிராமணரைப் பூசியாத பேர்களும், சிசுவதையும் பசுவதையுஞ்செய்ததீயர்களும் இப்பிறப்பில் நபுஞ்சகராவார்கள். பஞ்சபர்வாதி புண்ணியகாலங்களில் ஸ்திரீகளை புணர்ந்தவர்களும், ரிஷபத்தைக் கோசலத்திலடித்தவர்களும் குட்டரோகப் புலையராவார்கள் நிரேதுவாய் ஸ்திரீயுடன் பேசாமற் சபதம் பண்ணிக்கொண்டு அவளைக் கூடாமல் அவளக்கறை யில்லையென்று விட்டுவிட்டு, அல்லதவளைத் தாய்வீட்டுக் கனுப்பிவிட்டு இருந்தவர்கள் தான் மூலரோக முதலிய மிடிபெற்றவர்கள். ஸ்திரீகளிற் புருஷனை நீக்கி வஞ்சித்து, சோரபுருஷனைச்சேர்ந்தவர்களுக்கும் இப்பேர்ப்பட்டகதிவரும். அவளைச் சேர்ந்த பழைய புண்ணியவான் கண்ணியமா யிருப்பான் அவள்மாத்திரங் கண்ணீருங் கம்பலையுமா யிருப்பாள். நல்ல குடிப்பிறப்பிற் பிறந்தும் ஆசாரசுசியிற்சிறந்தும் இருந்தவர்கள் பின் பற்பல ஈனமான மில்லாத தொழில்களைச் செய்து, கண்டயிடத்திற் புசித்து, சாதியேது? குலமேது என்று ஞானிகள்போற் பேசி வயிறு வளர்க்கின்றார்களே. அவர்கள் யாரென்றால்? சிற்சொரூப வஸ்துவாய் தேவாதிதேவனாகிய நம்மையும் நம்மையுள்ளும் புறம்புந் தெரிந்து பரிந்த மெய்யடியார்களையும் பத்திபாராட்டாமல், பரிவுகூராமல், உபசரிக்காம லுல்லங்கனம் பண்ணின பேர்களன்றி, யாதினு முயற்சியின்றி, வசிக்கப் பதியுமில்லாமல் யாவருங் கோபிக்கக் கண் பிசைந்து, எங்குந் தாசத்துவமாய் வேலைசெய்து ஆளடிமைப்பட்டவர்கள் யாரெனில், ஒருவர்பொருளை யெடுத்து மறைத்து, அறியேன் என்று அசத்தியம்பண்ணி, இந்தச் சென்மத்தி லப்படி யுழைக்கின்றார்கள்.

ஓ மலையரையன் பாவாய்! உரிய தரிசனமாய்ப் பெரிய காரியங்களிற் பிரியமும் பட்சமும் வைத்து மகா உபசாரமாய் வேலைசெய்தாலும், இவர்கள்பேரில் அவர்களுக்கு இஷ்டமில்லாம லிருப்பதென்னவெனில்? பூர்வத்தில் தாதாவாய் வந்த பேருக்குத் தியாகங் கொடுத்து வரும்போது, அதிலொருவனைச் சினந்து அவனைத் தம்மிடத்தில் வரவொட்டாம லோட்டித் துரத்தி விட்டவர்களாம். மகாபாபசிந்தைபடைத்த நிர்த்தாட்சணிய ராஜன் கையிற்சிக்கி, அவன் நாகசற்பம்போற் சீறிக் கோபித்துக்கொண்டு தெண்டனை பண்ணத் தன்னேவலாளிகட்குச் சொல்லி, அதனால் வருந்துகிறவர்கள் யாரென்றால்? முன்பிறப்பிற், சாந்தகுணமில்லாமல் நாய்போற் குரைத்து தயாரசம்வறண்டு தம்மைச் சார்ந்தவர்களை இம்சித்துத் தலைநடுங்கப்பண்ணிய பாவியர்களாம். தமது கைப்பொருளை ஒருவருக்குக் கொடுத்து, அந்தத் திரவியம்வராமல், திரிந்து அலுத்துத் தளர்ந்து சண்டைபோட்டு நெஞ்சிற் சீழ்கட்டிக் கொண்டு, ஞாயஸ்தலங்கள்தோறுந் திரிந்து, பொருள்போச்சேயென்று பரிந்து விசாரப்பட்டுப் பரதவிக்கின்றவர்க ளாரென்றால், ஒருவன் தம்மிடத்தில் அடைக்கலமாகவைத்த பொருள்களை அபகரித்து, அவனை அழவிடுத்த குருத்துரோகியர்களாம். பெண்களும், பிள்ளைகளும், பெண்சாதியும், உற்பாத

மாய் ஏககாலத்திற் சாகிறார்களே அஃதென்னவெனில் அனேகம்பேர்களைக் குடும்பத்துடனழித்த அதிகார ஆங்காரிகளென்றுணர்வை. ஓ பார்வதி! இப்போது நம்புகின்ற பாபாத்மாக்களை யெல்லாம் யமனால் தண்டித்தான் பின்பு, அவர்கள் மறுபடி பற்பலயோனிகளிற் றடுமாறி மானிடப்பிறவி பிறந்து அனுபவிக்க வேண்டியவாறென் றறிந்து கொள்ளுக! இப்படி நமன் அந்தப் பாவிகளை இத்தனைகாலமென்று கணக்கிட்டு நரகத்தில் வீழ்த்தி அனேக நிற்பந்தமான ஆக்கினை புரிந்து, அத்தனை மனுபவித்துத் தீர்ந்த பிற்பாடு பல யோனிகளில் மாறிமாறி மறுபடியும் மனுஷனாய்ப் பிறந்து முன்னர் நான் சொல்லியபடிக்கு அனுபவிப்பவர்கள் மீட்டு மீட்டும் பலகொடுமைக ளிழைப்பார்களாகில் பின்னு மிறந்து நரகப் படுகுழியில்வீழ்ந்து கிடந்து, தவணைகடந்தும் இதுபோல் மறுஜனன முதவாமல் வேறுவேறு யோனியேதமா யுதிப்பார்கள். என்று கயிலாசவாசர் சொல்லிய மொழிகளை மகமேருகிரியைப் போன்ற இரண்டு ஸ்தனங்களையுடைய மனிமலை மகளாகிய பார்வதியாள் கேட்டு அற்புதப்பட்டு சந்தோஷமாய் ஒருவாக்கியம் பேசுகிறாள். ஓ கடவுளே! கொடியபாவிகளை அரசனாயினன் மனுவிக்ஞானப்படி தண்டிப்பது நீதியானாலும் எமதண்டனை யிருக்க அவன் தண்டிப்பானேன். அவர்கள் தண்டிக்கப் படுவானேன். இதுபூர்வவினையா அல்லது இந்தப் பிறப்பிற்செய்தபாபமா இந்தச் சந்தேகத்தினைச் சொல்லவேண்டு மென்று கேட்க கொன்றைமாலை சூடிய கோமான் சொல்லுகின்றார்.

---

## இகபர தண்டனை.

ஓ கோமளமே! கர்மபூமியிற் சனித்த யாவருக்கும் நல்வினை தீவினைப்போகம்இன்னொரு பிறப்பிலூட்டும். பொய் சாட்சி, தப்புப்பத்திரம், நல்கியதை, நல்காமை, ஒப்பிப் பணிசெய்யாமை, கட்டுப்பாடு கடத்தல், வன்செய்கை, சொற்கொடுமை, சூது, வாது, இவை முதலிய சொற்ப குற்றங்களை அப்போதைக் கப்போதே இகத்தில் அரசன் தண்டிப்பான். இவற்றினும் பெரிதாகிய கொடுமைகளெல்லாம் இராச தண்டனையிற் றீரா, பரலோகத்திற் சண்டன் தண்டனைக்கு ளடங்கியது. அப்பெருந் தண்டனை பெரும் பாவத்திற்குத் தகுந்த தண்டனையை அரசனியற்றினால் ஸ்தூலதேகம் பொறுக்காமல் உயிர் போய்விடும். அப்பாவியிரைக் கண்டுபிடித்துத் தண்டிக்க வேந்தனால் முடியாது. யமபடாள் யாதனாசரீரவசத்தாகிய பிராணனை வேண்டியமட்டுங் கண்டிப்பார்கள் அப்பாலுங்கர்மபூமியிற்சமூகவிகார பந்தச் சலிய தொந்தமாகிய இவ்விருவினைக் கீடாகாத ஆன்மாக்கள் முத்திசேருவார்கள் முத்திக்கரை கண்டவர்களுக்குப் பிறப்பில்லை என்று சாற்றவு மகாதேவி மகிழ்ந்துசுவாமி! உலகத்தில் எத்தனைகோடி பாபம் பண்ணினாலும் ஒரு அஸ்வமேதம் பண்ணினால் தீர்ந்துபோமென்று தேவரீரைப் பூசிக்கு முனிவர்கள் வேதங்களினாற் செப்புகின்றார்களே அதெப்படிக்குத் தீரும். நல்வினை தீவினைகள் அனுபவியாமற் றீராதென்று தேவரீர் மொழிந்தீர்கள். இதன் விபரஞ் சொல்ல வேண்டுமென்று வேண்டப்பரமசிவன் பகரலுற்றனர்.

---

## தீருந் தீராவினைகள்.

ஓ கோதாய்! இயாதொரு ராஜன் அல்லது தெளிவுள்ளனவனாய் இந்தப் பிரபஞ்ச மாயையுந் தேகாபிமானமு நீங்கிய செருக்கற்ற ஞானவான், இவர்கள் தம்மி லறியாமற் பாவஞ் செய்தார்களாயினும், மற்றையருள்ளுந் தங்களறிவின் தேர்ச்சியாற் பகுத்தறியும் பான்மையற்று முன் பாவஞ் செய்தார்களாயினும், தண்டனை யென்பதில்லை. அப்பாபதோஷம் அவர்கள் செய்யும் அஸ்வமேதாதிகளாலும், விரத நோன்பாதிகளாலும் விலகிப் பவித்திரமுண்டாம். இப்படிக்கின்றி தானென்கிற அகங்காரம்படைத்து, மதமாற்சரிய கர்வகோபங்கொண்டு பொய், பொறாமை, லோபம் மோகம் இவைமுதலியன வகித்து, தன்னைவிட வேறே பிரபஞ்ச மில்லையென்று அக்ஞான கேவல முடையவனுக்கு அளவிறந்த பாவம். அவன் எப்பேர்ப்பட்ட தானதரும எக்கியாதிகள் செய்தாலுந் தீராது. எமதண்டனை பூர்த்தியா யுண்டு அவனேக செனன மெடுத்து, இம்மைத் துன்பங்களனுபவித்து மறுமையிலு நரகவாதை யடையவேண்டும். அனுபவியாமற் றீராது. என்று விளம்பியதைக் கேட்ட அந்தரி

சந்தோஷப்பட்டு, இரண்டு கரத்தையுங் குவித்துப் பணிந்து ஆண்டவனே சிலர் அருளாகிய ஞானம் வந்த காலத்தில் எல்லாம் ஈஸ்வரச் செயலென்றுங் காலத்தி னியல்பென்றுஞ் சொல்லுகிறார்கள். சிலர் ஆத்மா புசித்து அனுபவிப்ப தெல்லாம் வினைதானென்று பேசுகிறார்கள். இந்த மயக்கத்தை மாற்றிவிடுமென்று கேட்க, அதற்கு ஈசன் சொல்லுகின்றார்.

---

வினையின் கால்வியல்பு.

ஓ சங்கரி! முன்செய்த வினைக்கீடாகப் பின் னனுபவிப்பது மெய்தான். அவ்விரு வினைக்குத் தகுந்தகாலமும் வந்து கைகூடும் அந்தக் காலம் நல்வினையினதானாற் சகல சம்பத்தும், நினைத்த காரியங்களும் நேருக்குநேராய் வந்து பொருந்தும். பொல்லா வினையின் கால்மானாற் பிடித்த கொம்பும் போய் மிதித்த கொம்பும்போம். ஆதலால், இன்பமுந் துன்பமுந் தகுந்தாப்போல் நடக்கும் ஆதியில் தாய்தந்தை இருவருங்கூடியமர்ந்தபோது அறுகுநுனி பனியனைய சுக்கிலத்துளி சுரோணித்ததோடுங் கலந்து, தரித்தகாலம், சலோதயகாலம், சிரோதயகாலம், பூவுதயகாலம் என்பவற்றோடு இதற்காக நாம் ஏற்படுத்தி வைத்திருக்கின்ற நாள், நட்சத்திரம், லக்கினம், நவக்கிரகம், நீட்சணியம், வீட்சண்யம், நட்பு, ஆட்சி, உச்சநிலை, மாறல், வக்கிரம், கேந்திரம்,கோணம் இவைகளைப் பிரித்துப் பொருந்தி பிறந்ததுமுதல் இறப்பதுவரைக்கும் ஆயுத் தாய்மேற்படுத்தி, இந்திந்தக்காலத் தின்ன பலன் இந்திந்தக்காலத் தின்ன நட்டமென்று சோதிடநூலோர் நேமிப்பார்கள் நல்வினை தீவினைக் கீடாய் ஒத்து நடந்தேறிவரும். ஆங்காலமெல்லாந் தன் சமர்த்தென்று தலையாட்டங்கொண்டிருப்பான்.போங்காலம் பொருந்தியபோது, தெய்வமே!தெய்வமே! என்று புலம்பித் தவிப்பான். நற்காலத்தில் தகுந்த புத்தி, யுத்தி, சத்தி, சித்தி, இவையாவும் பிறக்கும். நற்காலத்தில் முன் பிறந்ததெல்லாம் பறக்கும். இதுதான் உலக வாழ்க்கை,இவ்வாழ்க்கை யனைத்தும், வினைவசத் தென்பதற்குச் சந்தேகமில்லை. இப்பேர்ப்பட்ட வாழ்க்கையையும், வினையையும், இவைகளினால் விளையும் உபாதிகளை யு நீக்குகின்றவர்கள் யாரென்றால்? மலபரிபாகப் பட்டுப்பிரபஞ்சந் தள்ளி இருவினை யொப்ப நிற்பவர்களே அவர்கள்தா னென்னைச் சார்ந்தவர்கள் என்று சொல்லியபோது சாம்பவி பணிந்து, சுவாமி! பாலப்பருவ முடையவர்கள், கௌமாரப்பருட் முடையவர்கள் ஆகிய விம்மூவருஞ் சீக்கிரமிறக்க நான்காவது பருவத்தினராகிய வார்த்தீபர் வெகுநாளைக்கிருக்கின்றார்களே அதென்ன காரணமென்ன அதற்கு எத்தை யருளுகின்றார்.

---

ஆயுள் நிருணயம்.

ஓ பூரணி! பேறு, பருவம், இன்பம், பிணி, சாக்காடு, இவை யெல்லாம் பூர்வ சென்மத்தினிற் செய்த புண்ணிய வசந்திறாற் கருத்தரிக்கிம்போதே கற்பனையாய் விடும். முற்பிறப்பிற் சத்தியம், வாய்மை, சாந்தம், பொறுமை.இரக்கம்,கருணை,வணக்கம், ஒழுக்கம், நெறிமுறை, ஆசாரம், நியாயம், குரவர்பூசை, தெய்வபூசை, பிதுர்க்கள்பூசை சொற்றவராமை. இவை முதலாகிய சற்கருமங்களிற் பிரவேசித்த பேர்களுக்கு ஆயுள் விர்த்தி, ஐஸ்வரியசித்தி, அறிவானந்த யுத்தி அபரிமிதபுத்தி, இவைகளுண்டாம். பொய், வெகுளி, கோபம், குரோதம், பகை, சூது, வாது, தாய் தந்தை யிகழ்ச்சி, தன்னிஷ்டமகிழ்ச்சி, ஆசாரயீனம், அனுசாரபானம், தருமவிகாதம், குருநிந்தனை, தெய்வநிந்தனை, பெரியோர் நிந்தனை, இன்னுமுள்ள பொல்லாதகாரியம் பண்ணிய பேர்களுக்கு, அந்தந்த அளவின்படி அற்பாயுசுண்டாம். இதல்லாமலும்இன்னுமொரு ரகசியங்கேள் மேலுலகாகிய சொற்காதி போகங்களிலே யிருந்து அனுபவித்துத் தீர்ந்த பிற்பாடு, மறுபடியும் பூமியிற் பிறந்து, புண்ணியம் பண்ணி வளருகிறபேருக்கும் பூரணயுசுண்டாம். நரகத்திற் கிடந்து நலிந்துமெலிந்து பின்னும் எழுவகைத் தோற்றங்களிற் பிறந்து ஒருவேளை மானிடயோனி வந்துவிடுமாகில், பலவகைப்பிணிகளாலழுந்தி சிலநாள் வருந்தி நல்ல அனுபவமில்லாமல் மாய்வார்கள். பலர் அற்பாயுசாய்ச் சாவார்கள்.அவர்களுக் கிதுதான் வேலை. ஆதமாவுஞ் சுகதுக்கப் பட்டுக்கொண்டே திரியும் ஆத்மா நசிக்கும் வரைக்குந் துக்க நீங்காது. அதுவரைக்கும் எத்தனைகோடி தாய் எத்தனைகோ

டி தந்தை? எத்தனைகோடிஸ்தலம், எத்தனை கோடிரூபம் எத்தனைகோடி நாமம்? ஐயோ! எத்தனை எத்தனையென் றியம்புவேன். இந்த வுயிர் இயற்கைக் குணமாகில் இன்பம்வாய்க் கும் செயற்கைக் குணமானால் இந்தவண்ண மாய்க்கும். இதனாற் பெரியவர்களின் சாவகா சம் பண்ணாமற் போயது, இதற்கு சாஸ்திர விசாரணையுடன் விவேகம் விளங்கித் தன்னை யுந்தலைவனையுமறிகிற கியானமருவிமோட்ச மடைகிறபரியந்தம் பிறவிக்கிட முண்டாகும். ஆயுள் வளருகிறதுந் தேய்கிறதுஞ் சரத்தி னது தன்மை, சரமாவது, கலை என்று மூன் றுவிதமாய்ப் பிரிந்து வலதுமூக்கில் வருகிற சுவாசம், சூரியகலை, அக்கினியென்பது, புரு வமத்தி இவ்வக்கினிக்கலையைத் தான் சுழி முனையென்று சொல்லுவது இவற்றில் ஒவ் வொன்றுக்கு நிதம் ஐந்து நாழிகையாக்கி, ஒவ்வொரு கலைக்கு இருபது வயது நேமித் து, அக்கலைகள் அவ்வவற்றின் செயலிலே நிற்கிற பூரணயுசென்றும், சுழிமுனை முகில், அப்போதே ஒடுங்குமென்றுஞ் சிலசாஸ்திர ங்கள்பேசியிருக்கின்றன. அதுவுமுன்சொல் லிய இருவினைக்கீடாகவே ஒத்திருக்கும். எல் லாவற்றிற்குமூலம் வினைதான் வினைக்குமிஞ் சினது ஒன்றுமில்லை. அதை விபரமாய்ப் பாராவிட்டால் மேல்வருந் தொல்லை என்று சந்திரசேகர சதாசிவப் பொருள் சாற்றவும், மந்திர வேதவித்தாகிய மகேஸ்வரி கேட்டுச் சந்தோஷப்பட்டு ஓ சுவாமி! உடலெல்லாம் ஒன்றுயிருக்க, அதை ஆண் பெண்ணென்று சொல்ல, நேரிட் டிருப்பானேன்? அதனைச் சொல்லவேண்டு மென்னவும் அருளானந்த சொரூபமான பரமசிவன் சொல்லத் தொட ங்கினார்.

---

## இருதிணைத்தோற்றம்.

ஓ உமையே! தாமதம், இராசதம், சாத் துவீகம் என மூன்று குணமுண்டு. இவற் றுள் தாமசமென்பதெல்லாம் பெண்மை. இராசத மென்பதெல்லாம் ஆண்மை. அப் பாலிருக்கிற சாத்வீகமானது மேற்கூறிய தா மசராசதங்களிற் சார்ந்தறிவை விளைவிக்கும் அப்படிக்கே யவ்விருதிணைப் பிறப்பிலுஞ்சா த்வீகக் குணத்தைப் பொருந்துவாராகில் அ வர்களுக்குச் சனனமில்லை, இம்மூன்று குண மாகிய பிணிப்பினாலே காத்திரமான சரீரத் தில் ஆத்மா பிரவேசிப்பது. இத்தன்மை யாகிய களேபரமென்றே மகானுபாவர்கள் இருவினைப் பாண்டமாகிய உடலைவெறுத்து விட்டார்கள். இந்தஉடலானது யோனிசம், அண்டசம், சுவேதசம், உற்பீசம் என நான் குவகையா யுதிக்கப்பட்டது. இதில் முதன் மையான ரெண்டுங் கர்ப்பவுற்பத்தி முதற் பிற க்கிறவரையிலும் உயிரை வளர்த்துவருமமற் றிரண்டும் பிறக்கும்போ துண்டாய் வளர்ந்து புழுங்கும். இந்நான்கில் மானிட ஜன்மம் உத்தமம். இதிலுங் கூன், குருடு, நொண்டி, மூடம், சப்பாணி இவை முதலாகிய அங்க யீன மில்லாதிருந்தால் நன்மை. இவற்றி லுங் கல்வி, கேள்வி, சாதுக்களுடைய சக வாசம், இவை கூடுவது அருமை. இப்படி க்கானாலும் ஞானம், தானம், தருமம், ஜீவகா ருண்யம், தன்னைத் தானறிதல், இவைகள் கைகூடினால் மோட்சம். இல்லாவிடில் மற் றப் பசுவாகிய அஃறிணை யாத்மாக்களிற் சே ர்ந்ததே யென்று கூறிய முக்கண்மூர்த்தியை உமையவள்பணிந்தெழுந்து, சுவாமி! இந்த ஆன்மாக்களுக்குக் கல்வி கேள்வியினாலாகும் ஞானமுண்டாதற் கேது வெப்படி யென்று கேட்க, இறைவன் சொல்லுகின்றார்.

---

## கல்விகேள்விகளின் றிறம்.

ஓ அபிராமி! சத்தியலோக வாசியான பிர்மா தனது தபோமகிமையால் மானிட ஆக்கையைச் சிருட்டித்து, அவைகளுக்குத் தாமசமாகிய அஞ்ஞானங்கப்பிக்கொண்டுபீடி க்கவொட்டாமல் வைத்துப் பார்த்து, பின்பு தன்னாலும் முடியாமல், இவ்வான்மாக்கள் சிறுபோதிலேயே கல்வியைக் கற்றுக் கற்ற வாளிடத்திற் கேள்வி பெற்றுத் தமது புத்தி பூர்வீகத்தால் தங்களக்கியானத்தைப் போக் கடித்துக் கொண்டாலுண்டு இல்லாமற்போ னால் அதுபோகாதென்று கருதி, அவ்வவர் கட்குத் தக்க கல்வியை யேற்படுத்திக் கொடு த்து, அதற்குத்துணையாகச் சிரவணம், மன னம், நிதித்தியாசனம் என்று சொல்லுஞ் சாதனங்களைச் செய்யும்படிக்குத் திட்டப்படு த்தினார், சிரவணமனன நிதித்தியாசனமா வது, கேட்டலுஞ் சிந்தித்தலுந் தெளிதலு மாம். பெருங்காற்றினால் மகமேருவும் வேர றுவதுபோற் கேள்வியாம். காமக் குரோத

லோபங்கள் நீங்கிப்போம். யாவனொருவன் கல்வி கேள்வியில்லாதவனோ? அவன் துநல் வினை உறுதிப்படமாட்டாது. எந்தக் காரிய த்திற் பிரவேசித்தாலும் அதற் கனேக விக்கி னங்களுண்டாம். ஆதலால், யாவற்றினும் கல்விகேள்வியே பெரிது. ஆன்மா கடைத் தேறும். மேலான தருமம் பலிக்கும். செல்வ ஞ்சித்திக்கும். மற்றொரு விதத்திலும் பயனி ல்லை. பெரியவாளுக்குத் தொண்டு புரிந்து அன்புடன் கேட்ட இன்பமுடையாருக்கு, முன்பிறந்த பிறப்பின் முதன்மை தெரியும். இவர்களைத் தான் திரிகாலக் கியானியென் பது. இவாள் தான் மகாத்மாக்கள். இவாள் தான் தவசிரேஷ்டர்கள். இதுகளெல்லாங் கடைசியில் அவாளவாள்செய்த இருவினைக் கீடாய் நடக்கும். முன்விட்ட குறையெய்து வோ? அதுதான் இப்போதுவந்து தொட்டு க்கொள்ளும். அறியாமை ஒன்பது பங்கு. அறிவாண்மை ஒருபங்கு. இவற்றைத் தேவ தைகளும் நீக்கிக்கொண்டவர்களல்ல. அவர் களும் வினைவசத்தாரே. இப்படிக் கிருக்க. பட்டபடிபட்டு, கெட்டபடி கெட்டு, சொன் னபடிசொல்லி, தின்னபடி தின்று, பெண், பிள்ளை, பூமி, முதலியனவும் பொய்யென்று தள்ளாமல் மெய்யென்று நம்பி ஆசைக்கொ ண்டு, சிறிதும் ஈஸ்வரத்தியான மில்லாமல் மௌடீகமாய்வாழ்பவர்கள், நோயான்மெலி ந்து, பந்து மித்திராதிகள் சுற்றிலுமிருந்து அழும்போது எமதூதர்வந்துஇவனறிவை க்கலைத்து, உடலைப் பேதித்து, உயிரைக்கொ ண்டுபோய் மகாவிரதசத்தியசீல உத்தமனுன காலகர்த்த னிடத்தில் விட்டு, இவாளுடைய நலன் பொலன் விசாரித்து, அனுபவிக்கப் படுத்தி, பின்னும் பூவிற் பிறக்கச்செய்து, பெண், ஆண் என்கிற உடற்பேதமாக்கி விடு வார்கள். என்று நின்மலன புகல, இதனை நாதநாதாந்தரூபிகேட்டு, சுவாமி! இவைகள் சகலாத்ம கோடிகளுக்கு மேல் வினையினுல் நடப்பதானல், எல்லாஞ் சிவன்செயலென் று மேலோர்களும்பேசுகின்றார்களே. அதை விபரஞ் சொல்ல வேண்டுமென்று சத்திகே ட்க சதாசிவன் சொல்லுகின்றார்.

### சிவசெயலூழின் செயல்களினியல்பு.

ஓ காருணியே! எந்தச்செய்கையும் என் னைமுன்னிட்டுக் கொண்டிருக்கு மல்லாமல் வேறல்ல. தானென்பதற்று மாயாவசத்தில முந்தாமற் பிரபஞ்சப் ஈஸ்வரவிலாச மென் றெனக்கு அற்புதம் பண்ணப்பட்ட அன்பு டையபேர்கள்செய்யுங் காரியமெல்லாம் என் னைச்சாரும். ஆணவமலத்தால் தானென்று ன்னிய செய்கைக ளியாவும் நஷ்டமுங் கஷ் டமுமுண்டாய் துஷ்டத்தனத்திற் கொண்டு போய் விட்டுவிடும். சர்வமும் மித்தையென் றறிந்தவனுக்கு என்னுடைய செயல். நினை ப்பின் வண்ணந் தன் செயலென் றுணர்ந்த வனுக்குஊழியன்செயல். ஊழின் செயலொ ன்றுளதானல் உலகத்திலுள்ள மதபேதங் களிலொரு மதஸ்தன் இந்தப் பிறப்பி லெடு த்த தேகம் இத்தோடே சரியென்றும், இன் னொரு பிறப்பென்பது சந்ததி கால்வழி வே றேயென்றும் பேசுகிறார்களே யென்றால்? ஒரு பொருளுண்டென்றெண்ணுதவன் மோ ட்சத்தைக்கண்ட தாரென்றவன் உடல்மாய் வதே மோட்சமென்றும், உடலிருக்கும்போ தனுபவிப்பதே ஆத்மலாபமென்றுஞ்சொல் பவன் கடவுளேதென்பவன். இவ்விருவருந் திங்கணினைப்பின் வழியே நடப்பவர்கள். இவர்கட்குத்துணை நாமேயிருப்போம் இவர் கட்குத் தன்செயலேயன்றி, ஊழின் செயற் சிவன்செய லென்பதில்லை என்று கூறக்கே ட்ட பராசத்தி பணிந்தெழுந்து, சுவாமிதே வரீர் சொல்லியது சரியே. இதற்குமுன் சொல்லிவந்த சூக்ஷத்தில்தேகம் போனவுட னே தேகியாகிய ஆத்மா எமபடாள் வசத் தாகப்போய் நரக முதலிய துன்மைகளையுஞ் சொர்க்க முதலிய நன்மைகளையும் அனுபவி க்கும் என்று நவின்றிருக்கின்றதே. அஃதெ ப்படியென்று இமயவல்லி வினவ, மகமேரு வில்லி வசனிக்கின்றார்.

### இருவினைகளின் பயன்.

ஓ பசுங்கொடியே! முன்செய்த நல்வினை தீவினையாலே யெடுத்துக் கட்டிருக்கிற சரீர மானது இருவினைத் தீர்ந்தவுடன் விழுந்து போம். ஏறியிருக்கும் வினைக்கு எமதூதர் ஒரு மாயாதிரேகத்தைக்கொண்டுவந்து ஆத் மாவை அதற்குள்ளடக்கி, எமனிடத்தில்வி ட்டு, அவன் உத்தாரப்படிக்கு நல்வினையாள ரை நற்கதியிலும், தீவினைமாக்களைத் தீக்கதி யிலும், புகுத்திப் பாராட்டுவார்கள். பாவிக ளைக் கண்டவுடன் எமன் கோபித்து எரிந்து

விழுந்துகிங்கரர்வசத்தி லொப்புவித்து நிற்பந்தம் பண்ணச் சொல்லுவான். அவர்களுடனே கொண்டுபோய் யிருட்டுவழியுள்ள குருட்டுமார்க்கத் துற்கந்தக் கொடிய நரகத்திலழுத்தி மூழ்த்தி வைப்பார்கள். புண்ணியவான்களைக் கண்டவுடன் விசுவாசமாய் அரியபிரிய வாற்சலலியப் பெருமை பாராட்டி, தன்னருகாசனத்தி லமைத்துக் கொள்ளுவான் சகல வெகுமதிகளும் பொன்னுபரணபூஷணமுங் கொடுத்துப் பூசிப்பான், ஆனல், வெகுகோடி ஆன்மாக்களாற் செய்யப்பட்டதென்றும், எந்தெந்த குணங்களினுகப் பாப புண்ணியம் விளைவதென்றும் கேட்பாயாகில், மனம், வாக்கு, காயம், என்கிற மூன்றின் குணத்தால்வரும். அஃதெப்படியெனில்? கொலை நினைக்கை, காமப்பற்று ஆசை இவைபோல வனமனத்தில் தீக்குணம், பொய் சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச் சொல்லல், கோட் சொல்லல், இவைபோல் வனவாக்கின் தீக்குணம், கள்வாடப்போதல், வறிதே தொழில் செய்தல், கொலை செய்தல், இவைபோல் வனகாயத்திக்குணம், அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று, இவைபோல் வனமனத்தினற்குணம், மெய்யுரை, நல்வார்த்தை, இனியவைகூறல், பயன்படு சொல், இவைபோல் வனவாக்கினற்குணம். கோவில் வலம்வரல் தவம்புரிதல், தானஞ்செய்தல் இவைபோல் வனகாயநற்குணம். என்று கூறியமகேசனை மகோசை தொழுது, சுவாமி! கள்ளருந்தல் சூதாடல், கணிகையரைக்கூடல் இவைமுதலியனவற்றை இன்பதுன்பமென் றெய்துகின்றார்களே. அவற்றின் காரியத்தையுங் கெடுதியையுந் திருவாய்மலர வேண்டுமென்ன. இறைவன் சொல்லுகின்றார்.

தீநெறியிழிவு.

---

ஓ பராபரையே! கள்ளுண்ணுதல் பாதகத்துக்கெல்லாம் பதியாயிருப்பது. மிகுந்த தோஷத்தை விளைப்பது. கல்வி, ஞானம், தேயசு, அறிவு, நன்னெறி, தருமம், குலாச்சாரம், இவையெல்லா மழித்து, கோத்திர தோஷம், பிதுர்த்தேவதைகள் சாபம், தாய் தந்தையர் வெறுப்பு, பந்து முதலியவாள் வயிறெரிவு, மனைவியின் மனோதுன்பம் நல்லவர்கள் பெரியவர்களி னிந்தை, இவ்வையெல்லா முண்டாக்கி, அபகீர்த்திக்கு ஆளாக்கி, மறுமையில் நரகத்தில் மயங்கிக்கிடக்கப் பண்ணும். இளமையில் அவமதிப்பு இகழ்ச்சி, ஆடிவாடி விழுதல், குளறிப் பேசல், மொழிமாறல், தனப்பழுது, தவவழிவு, விரத விக்கினம், பகை, பழி ஆணவம், ஆங்காரம் இவையெல்லாம் விளைவிக்கும். பிறவியுமுளைக்கும். ஆனுற் சிலர் ஒரு தெய்வத்தின் முன்னிலையில், தேசிகன் பொருட்டில், மந்திராபூதி செய்து யாவருக்குந் தெரிய உட்கொள்ளுகிறார்கள். அப்படி யுண்டாலு மெய்வழியில் நின்று விரதஞ் செலுத்தினுற் பலனுண்டு பொய்வழிமேற் சென்று ஐம்பொறியையும் அதன் வசத்தாக்கினுல், கொடியரிலுங் கொடிய குடியராய்க் கரையேற மாட்டாத தீக்கதியிற் கண்கலங்கி கிடப்பார்கள். வேதவிதி தப்பி நடப்பவரும் இக்கதியைப் பெறுவார்கள். இப்போப்பட்டவர்களுடைய உறவு எத்தனை லாபத்தைக் கொடுத்தாலும், கொடுப்பதா யிருந்தாலும், உடனே விட்டுவிட்டு மறுவேலை பார்க்கவேண்டும். மேலும் எத்தனை பேதமான பாவங்களைப் பண்ணினுலும் பரிகாரந் தேடிக்கொள்ளலாம், இந்தக் கயப்பாகிய கள்ளுண்ணலினுல் வருகிற பாவம் ஒருபோதுந் தீரமாட்டாது. எமனுற் காய்ச்சி விடுகிற ஈயத்தைக்குடித்துஅலறிக்கதறிப் பதறும்போது, அப்போதுந் தீருமோ? தீராதோ? நானறியேன் அவாளனுபவிக்கப்போகிற நரகத்தை நாம் நாவினுற் பேசினுலும், நம்மைப் பாவம் பீடிக்கும்.

இந்தப்படியிருக்க, இன்னெருரகசியஞ் சொல்லுகின்றேன் கேள். அமராவதியாகிய பொன்னுலகத்தில் மானிடரியாவருஞ் சேர்ந்து வெகு சம்பிரமத்துடனே யிருந்தார்கள் அப்போது சொற்கலோகம் இடம்பெருமற் போய்விட்டது. அதனுல் தேவேந்திரன் முதலிய தேவர்கள் அன்னவாகன மூர்த்தியாகிய அயனிடத்திற்குப் போய்ப் பணிந்து முறையிட்டார்கள். அதற்குப் பிரமதேவர் இந்த ஆத்மாக்களுக்கெல்லாம் பூர்வக்ஞானந்தோன்றுமற் போகும்படிக்கு மயக்கம்மறதி கர்வம்இம்மூன்றையும் உண்டாக்கினர் அது ஒன்றுந் தோன்றுமற் பிறப்பிலே மூழ்கி, இயான குனியவாய்மனம்போன படிக்கெல்லா நடந்து வழிதப்பிப் போனுர்கள். அப்பால்

நல்வினைப் பயன்பெற்ற சிலர் சாஸ்திரங்களைக் கற்று நற்பலனறிந்து, சாதுசங்கப் பழக்கமுற்று பூர்வக்ஞான முணர்ந்து பொருட்பட்டு வந்தார்கள். அதைப் பிரமனறிந்து ஒரு சூட்சமுண்டாக்கிவைத்தார். அதாவது வேசிகள் சூது ஆகிய விப்பேர்ப்பட்டவைகளையுண்டுபண்ணி, சாஸ்திர மூலமாய்வந்த ஞானத்தை தட்டழியப்பண்ணினார். இவைகளிலுந் தப்பித்துக்கொண்ட பேர்கள் கதியின்கரையைக் காண்பார்கள். மற்றையரெல்லாம் ஊசல்வடம்போற் பிறந்திறந்து சுகத்தையுந் துக்கத்தையுங் கண்டவரைக்கும் ஆனந்தமென்று அனுபவித்துஉழலுவார்கள். வலையி லகப்பட்ட மான்போலும், கெர்ப்பத்தில் வீழும் யானைபோலும் கண்ணி பிசின் இவைகளிற் கட்டுபட்டு ஒட்டுப்பட்ட பட்சிபோலும், கள் தாசி சூது இவற்றிலகப்பட்டுக் கெட்டுப்போகின்றார்கள், இதுபிர்மசூட்சி. இச்சூட்சந் தெரிந்த புத்திமான்கள் மலைகலங்கினு மனசுகலங்காமல் திடச்சித்த விர்த்தி யுடையவராகி, நீதியும், நெறியும், நிலையும், நியமமும்பொருந்தி உன்னையுமென்னையும் பணிந்து கடைத்தேறுவார்கள், என்று பரமேஸ்வரர் பகர வாலாம்பிகை இருகரத்தையுங்கூப்பி இறைவனே! இதனாற் றீவினைகளின் சேர்க்கை தெரியவந்தன. இனி நல்வினை நணுகுவ தெவ்விதமென்று வினவ நம்பன் சொல்லுகின்றார்.

---

### நல்வினையுயர்வு.

ஓ கிரவுஞ்ச கிரியைப் பிளந்த குமார சுவாமியையருளிய கோதாய்? நினைப்பிற்சுகிர்தமுள்ளவனும், நல்ல பத்தி யுடையவனும் யிரக்கமான்வனுமா யிருந்தானாகில், நன்மைகளுக்கெல்லா முதன்மையான காரியத்தையடைவான். ஒருவருடைய ஆபத்தைக் காப்பாத்துகிற நிமித்தம் பொய்யானாலுஞ் சொல்லி உபாதி தீர்த்துவைத்தால், இது சத்தியத்திலும் அத்தி யற்புதமான சத்திய மாகும். தான் சொல்லுகிற மெய் வசனங்களினால் ஒருவருக்கு உபத்திரவத்தை யுண்டாக்குமானால், பொய்யினா லனுபவிக்கவேண்டிய பொல்லாங்கைக்கொடுக்கும். ஆனதால் வாக்கினாலேயும் புண்ணியஞ் சம்பாதித்துக்கொள்ளலாம். அதிலுந் தரும சூட்ச மறிந்து பேசவேண்டும். இனிகாயத்தா லாகவேண்டிய தென்னெனில், தானங்களீவதும் தவங்கள் பண்ணுவதும், தக்கோராகிய பெரியவர்களைப் பூசிப்பதும் சாஸ்வத தருமங்களை நிலையாக விசாரித்துச் செய்வதும், காசிமுதலாகிய தீர்த்தங்களில் ஸ்நானப்பண்ணுவதும், விரத மனுஷ்டிப்பதும், புண்ணிய க்ஷேத்திரங்களில் வாசம்பண்ணித் தரிசிப்பதும் அன்னதானஞ் செய்வதும், அதிதி அப்பியாகதிகளிக்கு அமுதளித்து உபசரிப்பதும், அஷ்டாங்கயோகம் புரிவதும், இன்னுமுள்ள உத்தமக் கிரியைகளெல்லாந் தன்னாற் கூடியமட்டும் பால் மாறிகை யில்லாமல் தேடிக் கொள்ளுவதாம். இந்தப் பிரகாரம் மநோவாக்குக் காயங்களினாற் சம்பாதிக்கவேண்டிய பொருள்களைக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பேர்கள் உத்தமமான பதவியும், ஆயுசும், சீரும், சிறப்பும், கீர்த்தியும், மனதொத்த பத்தினியும், வம்ஸத்திற்குரிய சுபுத்திராதிகளும் காரியசித்தியு முண்டாயிருப்பார்கள். இவ்விதமான நல்ல செய்கைகளை விட்டுப் பொல்லாவழியில் நடந்து, யிங்குமங்கும் ஈனப்பட்டு நரகத்திற் கேதுவாகிய பேர்களை நானெப்படி யியம்புவது அவர்கள் யாவருந் தீவினை வசத்தாரென்று செப்பவேண்டியதே. என்றுசொல்லவும் பர்வதராஜபுத்திரி பரவிப் பணிந்து சுவாமி! எக்கியத்தி னியல்பென்ன யென்று வினவ, அதற்குச் சர்ப்பாபரணத் தனிமுதல் சொல்லுகின்றார்.

---

### பஞ்சவெக்கியவிதி.

ஓ பெண்பாவாய் எக்கியம்ஐந்தெனவேதத்தில் விளம்பியிருக்கின்றது. அவை பிரமம், தெய்வம், பிதுர், பூதம், மானிடம் என்பனவா. இவற்றுள் பிரம. யெக்கியமென்பது தக்ஷணாக்கினியம் காருகபத்தியம் ஆகவனீயம், என்று சொல்லப்பட்ட யிந்த மூன்றக்கினியும் வளர்த்துத் தேவதைகளுக்கு அவிற்பாகங் கொடுத்து பூசிப்பது தெய்வ எக்கியமென்பது தெய்வங்களுக்குக் கோவில் கோபுரம், குளம் தேர் நந்தவனம் யிவை முதலானவைகள் செய்தல், ஆலயங்கட்டுவதில் அநேகந் திருப்பணிகளுள. அந்தத் திருப்பணிகளை யெல்லாம் அமைதிபெறமுடித்து, வேத விதிப்படிக்கு மூலஸ்தானம், அர்த்தமண்டபம், மகாபண்டபம்,

அந்திராளம் யிவைகளேர்ப்படுத்தி மந்திரா லோபம் கிரியாலோபமில்லாமல் மூர்த்தியை ஸ்தாபித்து கும்பாபிஷேகம்பண்ணி அன்னதானங்கொடுத்து பிராமணுள் பூசைநடத்தி வஸ்திராபரண அலங்கார மாலைகள் சாத்தி தூபதீபநைவேத்தியம்வைத்து சத்திரம் சாமரம் ஆலவட்டம் கொடி குடை விசிறி முதலானசின்னங்களெடுத்து ஆடல் பாடல்களமைத்து, சந்தன புஷ்ப தாம்பூலாதிகள் பொருத்தி மேளதாளங்களொலித்து, வாகனவரிசைகளெடுப்பித்து பிரமோர்ச்சவாதிகளேயும் இகபரத்திற் கேதுவாய்ச் செய்வது. மேலும் வேதாகமவிதிப்படிக்கு என்னையும் உன்னையுங் கருக்கட்டிப் பஞ்சலோகத்தினுல் வார்ப்பித்து பஞ்சபர்வஉச்சவாதி நடப்பித்தவர்கள் ஜென்மஜென்மங்களிற் செய்திருக்கிற மகாபாதங்களெல்லாம் போய் நம்மிற்கலந்திருப்பார்கள். அவர்கள் பெருமையை அள்விட்டுச் சொல்லப்போகாது. இதற்குமிஞ்சின தருமமுண்டென்று எண்ணுதே இது சத்தியமென்றெண்ணி ஆத்மார்த்தபூசை செய்பவர்களும் பரார்த்த பூசை பண்ணுகிற பேர்களும் பாக்கியவான்கள்.

ஓ பாவாய்? தரிசனமார்க்கத்தில் உதயகாலம் மத்தியானம் சாயங்காலம் அர்த்தசாமம் இவைகளிற்செய்யவேண்டும் உதயகாலமென்னுந் திருவனந்தல் தரிசனத்தால் சகலபீடை துக்கம் துன்பம் துயரம் நோய் வறுமை மலடு இவை முதலியன நீங்கும் அதிகபலனேங்கும் உச்சிகால தரிசனத்தாற் சத்துரு க்ஷயமுறும் தீவினையறும் புண்ணியப்பொருள்வரும் தேகவெப்பந்தீரும் கிரகதோஷம் போகும் வச்சிரசரீர முண்டாகும். சாயங்கால தரிசனத்தாற் குலாச்சாரம் விளங்கும் சைவாச்சார மிலங்கும் பெரியோர்களாசீர்வசன முண்டாகும் உத்தியோகம் பிரபலமாகும் பழிநீங்கும் புகழோங்கும் பாப விமோசனமாம். அர்த்தசாம தரிசனத்தால் தேவர்களின் சுகுணவாசப்பரிசமாம் மந்திர நிலையருளால்நின்றமாதவரருள்கிடைக்கும். மூலஸ்தான மொடுக்க காலமாதலால் முத்தி நிலைதரும், மெய்யடியார்களின் திருத்தாள் தூள்சிதறி மேனிசுத்த பவித்திரமாம் ஜன்மசாபல்யமுமாம். அன்றியும், கிராண புண்ணியகாலங்கள் முதலாகிய விசேஷ தினங்களில் விரதசீலராய் சுசியாசாரமாய் ஆலயங்களிற்சென்று பிரதட்சண நமஸ்காரஞ்செய்து துஜஸ்தம்பத்தினிடத்தில் வணங்கியிருந்து சங்கல்பஞ்சொல்லி அர்ச்சனை செய்து கர்ப்பூராதிகளேற்றி தேங்கின்கனியாதிகளாற் பூசிக்கு மேன்பாடுடையவர்கள் மகா பாவவற்சிதரென்று வேதங்களும் ஆகமங்களும் முறையிடுகின்றன. இவ்விரண்டுவித தெய்வயெக்கியமும்முக்கியம். இப்பால் பிதுர்யெக்கியமென்பது, தர்ப்பணம், பிண்டம் அன்னதானம் இவைகளேப் பிராமணருக்குக்கொடுத்தல். பூதயெக்கியமென்பது பலிமுன்னிலையில் நடப்பது. மானிடயெக்கியமென்பது ஒக்கலுடன் சகோதராள் பசித்திராமல் அவர்களுக்குத் தன்னுலியன்றமட்டும் வஞ்சனையில்லாமற்கொடுத்து, தன் சரீரத்தைப் பத்திரமாய் போஷித்துக் கொண்டு, மனையாளைத் திருத்தி இல்லறதருமத்திற் கிடையூறுவராமல் நடத்திக்கொள்ளுவது. ஆகஐந்துஎக்கியமும் இவைதான் என்றியம்பியபரஞ்சோதியைப்பார்வதிபணிந்து, சுவாமி! தேவரீர் செப்பிய எக்கியம் ஐந்திற்-பிதிர்க்களைக் குறித்து ஒரு எக்கியம் பேசினீர். இறந்துபோனவர்கள் எழுவிதத் தோற்றங்களிற் பிரவேசித்துவிட்டால், அவர்களைக்குறித்து இருக்கிறவன் எங்கே கொடுக்கிறது? எவன் வாங்குகிறது? எவர்களைச் சேருகிறது? இஃதெனக்குச் சந்தேகமாயிருக்கிறதென்று சாம்பவிகேட்க, சந்திரசேகரர் தலையசைத்துச் சற்றே நகைத்து, பக்கத்திலுள்ள ரிஷிகளெல்லாம் ஹரஹரசம்போவென்று பிரணவஞ்சொல்லித் துதிக்கும்படியாய்ச் சொல்லத்தொடங்கினர்.

---

## பிதுர்க்கருமப் பயன்.

ஓ பவளம்போன்ற இதழுடையவளே! கிருஷ்ணபக்ஷஞ்சுக்கிலபக்ஷமென்று சொல்லுமிரண்டில் வருகின்ற திதிகளில் எந்தத் திதியில் தாய் தந்தைகள் இறந்தார்களோ அந்தத்திதியிலிச்சைவைத்துத் தர்ப்பணம் பண்ணினுல், அவர்கள் யாதனு சரீரத்திலகப்பட்டு வாதைப்படுவதா யிருந்தாலும் உடனே நீங்கும். சூட்சுமதேகத்திலிருந்து சுகம் பெற்றிருந்தாலும் இன்னு மேலான பதவி கிடைக்கும். எத்தனைவிதப் பிறவியிற் பிறந்தாலும், அவர்கட்குச் சுகமுண்டாவதற்கு அப்போதைக்கப்போது உதவி. இப்படிக்

குச் செய்யாவிட்டால் அப் பிதிர்க்கள் குடும்பத்தைச் சபிப்பார்கள். அதனுற் குலகோத்திரம் நசித்துப்போம். இதன்றியுஞ் சிரார்த்தஞ்செய்வது எதுநிமித்தமென்றால், அவர்கள் தன்னைச் சுமந்துபெற்று வளர்த்துப் பாதுகாத்து, புத்திமதிகற்பித்து அநேகம் பாடுபட்டு, முன்னுக்குக் கொண்டுவந்து முறைநெறிவிதிகாட்டி, பின்பு தனக்குவந்த நன்மை தீமைகளுக்கு முடன்பட்டபடியால் அவர்களைப்போல் ஆருபாடு படமாட்டார்கள். இந்தப் பிதுர்ககருமம் அவர்கள்செய்த நன்றிக்கு ஈடல்லாவிட்டாலும், ஒருவாறு பாராட்டுகிற பட்சமாம். ஒருவரொருவருக்கு செய்த நன்றியை என்றைக்கு மறக்கலாகாதென்று வேதங்களில் விளம்பியிருக்கின்றது உலகில் எவன் எந்த நன்றியை மறந்தபோதிலும் பிராயச்சித்தமுண்டு. ஆபத்துக் காலத்தி லுதவிய உதவியை மறக்கலாகாது. அதிலுந் தன்னை வயிறு நொந்து பெற்று வளர்த்துக் காத்த தாய் தந்தைய ருதவியை ஒருக்காலு மறக்கப்போகாது. அவாள் பேரைச் சொல்லித் தர்ப்பணம் பண்ணுவது ஒருவருஷத்திற் கொருதரமாயினும், நமக்கொரு வருடமென்பது தேவர்களுக்கு ஒரு நாளாகையால், அவர்களுக்கு நாம் பிரதிதினமும் நினைப்பதுபோலாம். பிர்மதேவன் உலக சிருஷ்டி செய்யும்போது ஜெகத்துக்குத் துணைக்காரணமான தேவர்களை ஏர்ப்படுத்தினன். அக்காலையிற் பிதுர்த்தேவதைகளென்றும், பிதுர ருலகமென்றும், உண்டாக்கி, தென்புலத்தாரென்னத் திட்டப்படுத்தி அவாளுடைய கால்வழியிற் றேன்றிய சந்ததியார் சிரார்த்தமுதலிய பூசைபுரிவதை ஏற்று அக்குடும்பங்களை ரட்சித்துக்கொண்டிருங்களென் றுவரங்கொடுத்துமகாபலன்களையுடைய பலமான தேவதைகளாய் மேன்பாடுந் தயாரசமுஞ் சார்வதாய்ப் பொருந்தியிருக்கப்பண்ணி விருப்பதால், ஆமசிரார்த்தமும் அன்னசிரார்த்தமுஞ்செய்கிற கால்வழிகளில் அவர்கள் வந்து சாநித்தியமாயிருந்து, சுசியாசார பத்திசிரத்தையைக் கைக்கொள்ளுவார்கள்.

ஓ சந்திரவதனி! அந்தத் திதிகாலங்களில் திவசம் பண்ணுகிற பேர்கள் உதயத்திலெழுந்து, வீடுவாசலைச் சுத்திசெய்வித்து, மொக்கிடுவித்து, கோசலந் தெளிப்பித்து, ஸ்தானஞ்செய்து சுத்த வஸ்திரந் தரித்து, அக்குடும்பத்திலுள்ள சமஸ்தமானபேரையுமிவ்வாறு செய்வித்து, தாய்தந்தையை நினைத்து, பிராமணுள் பூசைபுரிந்து தன்னுலியன்றமாத்திரம் பலவகைப்பட்ட பதார்த்தங்களுடன் தண்டுல மமைத்து, தர்ப்பணம் பண்ணி, திலோதர்ப்பணம் விடுத்து, ஆமபிண்டம் பகுந்து, அட்சதை வகுத்து தருப்பை விரித்து, நைவேத்திய தூபதீபங்கொடுத்து, எதாஸ்தானத்திற்கு எழுந்தருளப் பண்ணினுல், அவர்கள் என்றென்றைக்கும் இந்தக்குடும்பந் தழைக்கத்தக்கதாக வாழ்த்தி அனுக்கிரகம் பண்ணிப்போவார்கள்? அதனுற் குலவிர்த்தி, தீர்க்காயுசு, நல்லபோகபாக்கியம், பதிவிரதையான ஸ்திரீ சுபுத்திரன் மநோபீஷ்டம் இவைகள் முதலானவைகள் வரும். இம்மை மறுமைப்பயனுண்டாகும். இதைவிடப் பிரதிஷ்டைக்காக ஊரார் மெச்சவேண்டிப் பலதருமங்களையும்பண்ணிதந்தை தாயினுடைய திதியைக்கொடாமல் நிறுத்திவிட்டாலும், கொடுத்தும் சிரத்தையில்லாமல் அல்பமாய்ச் செய்தாலும், ஏனோதானோவென்று விருப்பமில்லாமற் கொடுத்தாலும் அவர்களுக்கு ஆயுட்குறைவு தேகமெலிவு ஐஸ்வரியப்பூச்சியம் அபாண்டம் அபரோதனை சந்ததிநாசம் பெண்சாதி மோசம் ராஜதண்டனை இன்னுமுள்ள பழிபாவங்களெல்லாம் அடுக்கடுக்காய்வரும். முன்னே ஐவித எக்கியங் கூறினேன். அவ்வைந்தில் நான்கு நழுவிப்போனாலும் போகலாம் இந்தப் பிதுர்க்கருமமென்கிறவொன்றும்பொருளிருந்தாலும், இல்லாவிட்டாலும் எப்பாடுபட்டாகிலுஞ் செய்யவேண்டும். அப்படி செய்தவனுக்குப் பஞ்சபெக்கிய பலனுண்டாகும் பிட்சையெடுத்தாவது திவசம்பண்ணித் தாய்தந்தையின் பசிதீர்க்கவேண்டும். தாய் தகப்பன் பட்டினியிருக்க வெகுபணங்களைச் செலவுசெய்து உற்சவாதி பண்ணுவதிலும் அன்னசத்திரங் கட்டி அறுசுவையுண்டி கொடுப்பதிலும் பலனெப்படி வருமென்று எம்பெருமானுகிய ஈஸ்வரன் சொல்ல என் பிராணவல்லபா! நற்கதியடைகிறவர்களின்னார் துற்கதியடைகிறவர்களின்னாரென்று விபரித்துரைக்க வேண்டுமென்ன பரமேஸ்வரன் சொல்லுகின்றார்.

---

நற்கதி துற்கதிகளுக் காளாயினேர்.

ஓ சாம்பவி! பிறருக்குக் கேடுநினைக்காமல் ஞாயந் தப்பாமல் தருமமறக்காமல் சத்தியங் குன்றுமல் ஆசாரியனைப் பிழையாமல் உயிர்வதை செய்யாமல் ஊராருடமைக்கு உலை வைத்திராமல் ஏழைகளை யெதிரிடாமல் வருவிருந்து கண்டு எரிந்து விழாமல் ஜிவகாருண்யந் தப்பாமல் மேன்பாடுள்ள விசேஷகாரிய விரதங்களை விட்டுவிடாமல் ஒரே உறுதியாய் நல்ல மனதுடனே இருப்பவர்கள் சற்கதி யெத்தனையோ? அத்தனையும் பெறுவார்கள். தீநெறியிற் சிந்தை, நன்னெறியில் வெறுப்பு செருக்கு பொய் அசத்தியம் கோபம் அல்பத்தின்மீதாசை துஷ்டருறவு கொலை களவு கள் காமம் ஸ்திரீமோகம் மோசம் நயவஞ்சகம் கபடம் பெரியோர் நிந்தனை தெய்வதூஷணை குருநிந்தை நன்றி மறத்தல் தந்தை தாய் வயிரெறிய விந்தையாய் வாழ்தல் பிதுர்க்கருமபூச்சியம் பசுவை வதைத்தல் சிசுவையடித்தல் சுயஸ்திரீயையுதைத்தல் வேதாகம புராண நிந்தை இப்பேர்ப்பட்ட துர்க்குண முடையவர்கள் தீநரகென்பது எவ்வளவோ அவ்வளவும் அநுபவிப்பார்க ளென்ருர். இவை யினைத்துங் கேட்ட அம்பிகை மகிழ்ந்து சுவாமி! இதுகாறு மனேகங்கோடி தருமங்களை அறைந்தீர். இத்தனை தருமமும் ஒருவனுக் கிசையுமோ? காலதேச வர்த்தமானங்களினுல் வேறுபட்டுப்போம். ஆகையாலெல்லாந்தருமங்களும் ஒரு தருமத்திற்குள்ளே அடங்கியிருக்கத்தக்கதாக ஒரு தருமசூட்சஞ்சொல்ல வேண்டுமென்றுகேட்க அம்மேனதேவி புத்திரிக்கு விமலன் விளம்புகின்ருர்.

---

முத்தி நிலை.

ஓ அயிராணி! ஒருவன் இல்லறநீங்கித் துறவறந்தாங்கி நாட்டைவிட்டுக் காட்டிற் போய்த் தவமிழைப்பதே கடைப்பிடியான தருமம். இத்தருமம் வகித்தவன் பொருள் பெண்டு பிள்ளை மண் மனை இவைகளை நினையாமல் நல்வினை தீவினைகளில் மயங்காமல் நடுக்கமில்லாமல் மழை வெய்யில்களுக்குத் தியங்காமல் கல் கறடு புல் பூண்டு இவைகளுக்கு இடையாமல் பஞ்சேந்திரியங்களையு நிக்கிரகித்து அறுவகைப் பகையையு மொழித்து தானென்கிற ஆணவமலத்தையறுத்து உடலபிமானம் விட்டு சிகை யெக்கியோபவீதங் களைந்து தண்டு கமண்டலந் தாங்கி மரவுரி உடுத்தி பெரிய மகானுபாவரை விரும்பி யோகத்திலோங்கி விதிவிலக்கை யனுசரித்து வெறுப்பும் விருப்பு மில்லாம லிருப்பவன் பிறவாதவன். இறவாதவன் இதற்கு மேற்பட்ட தருமமில்லை. மற்றவைகளெல்லாம் இத்துறவுக்குச்சரியானதல்ல. எல்லாம் பந்தசம்பந்தங்களாம். அப்பந்த சம்மந்தத்தினியல்பென்னவெனில்? பணம் பணமென்று நினைத்துக்கொண்டு எத்தனை பாவங்களானுலுஞ் செய்து பொருளைச் சம்பாதிப்பதும் அந்தப் பொருளைப் போஷிப்பதும் அப்பொருள் கெட்டுப் போவதுமாம். இத்தியாதிவிதங்களி னெல்லாந் துன்பமே. எப்போது பணத்தாசைவிடுமோ? அப்போதே விசனம் விடும். இப்பொரு ளாசையினும் பிள்ளையாசை பெரிது. பிள்ளை யில்லாமற் போனலோ? மெத்தவும் பிராந்தி. பிள்ளை கிடைத்தாலோ? அதனுல் வேண்டியதுக்கம் முடிவில் யோசிக்குமிடத்தில் இவனுர்? பிள்ளையார்? இது சிருஷ்டியினுடைய சுபாவம். பிள்ளை வேண்டுவோர்க்குப் பிறக்காமையும் வேண்டாதார்க்கு வெகுவா யுண்டாதலுமாகின்றன. இது தெரிந்தவர்களுக்குந் தெரியாதவர்களுக்கும் வினைவசத்திற் கீடாய் நடக்கும். பெண்சாதி பிள்ளை யென்பவர்களில் முற்பிறப்பில் ஆருக்கார் சொந்தபந்தம் இப்பிறவியாகிய சந்தையிற்கூடிய கூட்டம். சுக்கிலம் சுரோணிதம் எலும்பு தோல் நரம்பு மாம்சம் நிணம் ரோமம் இவைகள் சேர்ந்தால் ஒருதேகம். காற்று நின்ருலாவி யசைக்குங் காயம். வாயுவாங்கினுல் வல்லுடற்றூங்கும். ஒரு மரத்திய தளிர்ந்தது கொழுந்து அப்பால் இலை. பின்பு பழுப்பு. அதன்மேல் உதிர்ந்த சருகு. இந்த ஆக்கையுங் குழந்தை பாலன் பையன் குமரன் நாயகன் வயோதிகன் என்னும் பருவங்களை வகித்துக்கொண்டு வளர்ந்து வாழ்நாள் நீங்கினுல் மாளத்தக்கதே. ஆனதால் கானல் நீர்போன்றது காயம் இதை நல்வினை தீவினைகட் கீடாயெடுப்பது அவ்வினைக ளொழிந்தால் விட்டுமறையுமின்னலைப்போலாகும்.

ஓ பகவதி! இப்படிப்பட்ட பொய்யினை மெய்யென்று நம்பின வீணனுக்கு மோட்சமேது? சத்தைவிட்டு அசத்தைத் தொட்டு

மயங்கி, நாலுநாளையில் நாறி நலங்குலைந்து போவான். இவன் புத்திசாலியல்ல. பிறவி வேறுக்க மாட்டான் பின்னை யெப்போது தான் கடைத்தேறுவா னென்றால்? பிரபஞ்ச மாயாமயக்க மித்தையென் றுணர்ந்து ஈஸ்வரபத்தி பிறந்து ஞானஞ்சிறந்த நாளெதுவோ? அன்றைக்கு நற்கரும அதிகாரியாவான். மலின நீங்கும் அல்பசந்தோஷ அவனியை விரும்புகிற வரையிலும் பைத்தியக்காரன். அவ்விருப்ப மொழிந்தால் முடிவுணர்ந்த வைத்தியக்காரன். சரீரந் தோன்றும்போதே பிணி நரை திரை தளர்ச்சி இவைகள் பிறந்தன. பிறந்தது முதல் இறந்ததுவரையில் என்ன சுகம்? அவ்வவனும்எண்ணிப்பார்த்தால் எளிதிற்றெரியும் ஒருவன் முதலில் எக்கச்சிக்க மக்கத்திரிகோண மூலச் சுழி யென்னுங் கருப்பகோள கைதட்டிற் கருப்பட்டகப்பட்டு ஐந்துபிரிவா யுருப்பட்டு முன்னூறுநாள் கட்டுண்டு சலத்தால் மிதந்து அனலாற் றீய்ந்து குளிர்ந்தநீரால் நடுங்கி வெப்பநீரா லொடுங்கி வாயுவா லுதைப்பட்டு வதங்கித் தலைநட்டு கீழதுமேலதாய்த்திரும்பி கிருமித் தலத்தில் மலசலத்துடன் கலந்திருந்தபடி பூவிற்பிறகு, பிராணன் மூர்ச்சையாகக் கிடந்து, காயத்திற் சலந்தெளித்தவுடன் காவுகாவென்றழுது, அங்குள்ளோர் மூக்கெடுத்து, காதுருவி, கண் விளக்கி, அபானந் துலக்கி, ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணுமாக அமரிபுகட்டி ஆண்பிள்ளை யாக்கியபின், தன்னை மறந்து, தாய் தந்தையைத் துறந்து, சரசமாதுடன் சிறந்து, பணந்தேடப் பறந்து, கிழமாயிறந்து போவதுவரையில் என்னசுகத்தைக் கண்டான், கண்டதெல்லாந் துன்பமே. இப்படியெல்லா மிங்கு கஷ்டப்பட்டு இறந்தும் எமபாசப் பந்திப்பி லகப்பட்டுக்கொண்டு படுகிறதுந் துன்பமே. ஆகையால் நல்ல கல்வி கேள்விகளைச் கேட்டு, பெரியாரைப்பேணி, ஆசாபாசத்தை ஒருவிதமா யகற்றி ஆத்மஞானம் பிறந்து பிரபஞ்சமாயை தெளிந்து மனத்துணிவு வந்தவனெவனோ? அவன் பிறவிசாகர நீந்தி கரையேறினவன்.

ஓ இமயவல்லி! தேவேந்திரன் முதலிய தேவர்களும் நல்வினை தீவினை வசத்தராய் மனது வருந்தி மெலிவார்கள். சர்வ சங்கப் பரித்தியாகம் பண்ணி என்னை நாடி யிருப்பவர்களுக்குச் சுகமல்லாமல் மற்றப்பேருக்குச் சுகமில்லை. வேதாந்த இன்பங்கண்டு. பேரின்ப மோனானந்தங் கொண்டவர்கள் இந்தத் துறவற மில்லற மென்னுந் தருமத்திருந்து முத்தி பெறலாகும். அஃதெவ்வாறெனில், மூவாசை முதலிய பாசங்களிற் புளியம்பழத்தோடுபோற் பற்றற்றிருந்து, அகம்புறமொத்து உற்றுப் பார்த்தபேர்களுக்கு இல்லறத்தானென்று நடை நொடி பாவனை காட்டி உள்ளம் பக்குவப்பட்டுத் துறவுபூண்டிருந்து பலனைப் பெறுகின்ற பேருமுண்டு. ஆனால் பெண்டு பிள்ளை பண்டுபதார்த்தத்திலிருந்து பெருந்துறவடைவது மெத்தவும் அருமை. அப்படிக்கானால் அது சத்துவப் பெருமை. இன்னுஞ் சாங்கிய நூற் பயிற்சியாற் சாங்கிய யோகத்திலிருக்கிற பேருக்குஞ் சிந்தியான ஞானம் வரும். முத்தியும் பெறுவார்கள். அஷ்டாங்க யோகத்தி லிருந்து பரமுத்தி யோகம் பாராட்டிய பேருக்கும் பதவிகிடைக்கும். இரவும் பகலுங் கிரியாசார நெறிதப்பாமல் ஈஸ்வரத்தியான மிருப்பவர்களுக்கும் இன்பமுண்டாகும். நன்மை தீமைகளொன்றாய் நாடியபேருக்குங் கைகூடும். இம் முத்தின் விபரம் யாதெனில், பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும் வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னுங் கருமேந்திரியங்களும் சத்தம் பரிசம் ரூபம் ரச கந்த மென்னுந் தன் மாத்திரைகளுந் தோத்திரந் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணமென்னு மைம்புலன்களும் மனம் புத்தி அகங்காரம் சித்த மென்னும் நான் கந்தக் கரணங்களும் பிரகிருதிகிருதிமுதலிய தத்துவங்களுந் தானல்லாமற்கண்டு கரைவதே மோட்சமாம். இவ்வான்ம தத்துவம் இருபத்துநான்குடனே அளாவிக்கொண்டு அவ்வியத்தனை அனாதி ஆன்மா இவன் பிரகிருதியென்கிற பெயர் பெற்று மயங்கி மாயையிலு மலைந்துத் தியங்கிக் கெட்டுப்போகின்றான். ஆனதாற் பிரகிருதிமாயையை வேறாக்கித் தான் சுயம்பா யிருந்தானானல், உடலெடுக்கான் இது முத்தியின் விபரம் என்று கூறிய மகாதேவனை மகாதேவி வாழ்த்தி, சுவாமீ? சிலர் தேவரீரைப்போற் சடைமுடி முதலிய சின்னங்களைத் தாங்கிப் பலவித்சித்தி விளையாடல்களைச் செய்கின்றார்களே, அவர்களுக்கு மிந்தஞானமு முத்தியுமுண்டோவென்று கேட்க இறைவனிசைக்கின்றார்.

சித்திநிலை.

ஓ கொவ்வைப் பழம்போன்ற இதழையுடைய கோதாய்! தாமதம், இராசம், சாத்வீகம் என்கிற குணங்கள் மூன்று மாறிமாறிவரும், எந்தக்குணம்எப்போதுவருமோ? அந்தக் குணத்தின் கருமத்தை அது விளைவிக்கும். அதாவது, உன்மத்தம், சித்தப்பிரமை, சோம்பல், கோபம், பொய், களவு, காமம், சண்டை, தூக்கம், கெடுதி இவை முதலியவெல்லாம் தாமத குணத்தின் செய்கை. மானம், கல்வி, இன்பம், வண்மை, பேரறிவு, உச்சாகம், சோடசதானம், நல்லொழுக்கம், சீலம், தவம் செபம் இவையெல்லாம் இராசதகுணத்தின் செயல். ஞானம், அருள், சத்தியம், பொறுமை, வாய்மை, சாந்தம், வேதாகமபுராண ஆராய்ச்சி இவையெல்லாஞ் சாத்வீக குணத்தின் றன்மை. இம்மூன்று குணங்களிலேயுந் தாமத மிராசமென்னுமிரண்டையுந் தள்ளி, சாத்வீகக் குணத்தினலே ஆராய்ந் தறியத்தக்கதை யறிந்து, பின்பு அதையும் வெறுத்துக் குணரகிதமாகி, சாங்கிய சாஸ்திர நிலையில் நின்றவ னெவனோ? அவன் இந்த லோகத்தை மித்தையென்றுன்னி இதிற் சற்றும் பிராந்தி கொள்ளாமல், பழுதை பாம்பல்ல வென்றும் கிளிஞ்சிலினெளி வெள்ளியல்லவென்றும் கானல் தண்ணீரல்லவென்றும் கட்டை கள்ளனல்லவென்று நிச்சயித்து நின்மலசித்தனயிருப்பான். அதுவே யவனுக்கு முத்தி தாமச குணத்தினலே பாபம் பிறக்கும். இராசத குணத்தினலே புண்ணிய முளைக்கும். இந்தப் பாப புண்ணியமிரண்டுஞ் சாத்வீக குணத்தினலே ஒழியும் அப்போதே அழியாப் பிரகிருதியுற்ற சுகங்கிடைக்கும். இதுநிற்க பஞ்சேந்திரியங்களைப் பாழ்படுத்துவதற்கு ஒருத்தராலேயு முடியாது. மனங் குவிந்து வசப்பட்டாற் செபிக்கலாம். மனங்குவிந்து மகாப்பிரயாசம். மனசின் விகற்பத்தினலேயே எண்ணிறந்தகோடி தேகமாயின. அப்பேற்பட்ட மனசையும் அம்மனசின் பேதத்தையும் அறிந்தால் அவன்என்றைக்கு மழியாத பரமானந்த சுகத்தை யடைவான். இப்படிக்கு மனமொடுங்கி அவ்வியத்தனகிய ஆத்மாவே நித்தியன். அனதி எல்லாந் தானனவன்.

ஓ அந்தரி! இவனெப்படியிருக்கவேண்டுவதென்றல்? தனக்கு இவ்விடமென்பதில்லாமற் றேறிச் சித்தசாந்தி பெற்று, எங்குந் தானென்கிற பிரகாசமடைந்து, பிரமத்தியாருயிருக்க வேண்டுமென்று வேத முடிவில் ஒரு வாக்கியம் விளம்பியிருக்கின்றது. அந்த வாக்கியம் (தத்துவமசி) என்கிற மகாவாக்கியம். இவ்வொன்று, தத்துவம், அசி என மூவகையாம். இவற்றைத் தான் தற்பதமென்றும், தொம்பதமென்றும், அசிபதமென்றும் புகல்வன. இம்மூன்று மொன்றுகில் (அது நீயாகுய்) என்னும்பருவம்வந்தசொல்லென் றுணர்வை. யோகமென்று ஒருநெறியுண்டு. அந்நெறியைப் பற்றினேர் ஐம்புலனையும் அறிவினுடன் கூட்டி, நல்ல சிந்தை, அருள், பெருமை, புகழ் இவைகளைப் பொருந்தி ஆசனமென்கிற யோகத்திலிருந்து ஒரு பாசமுடிவில்லாமற் பற்றற் றிருப்பார்கள். பிராண, அபான, உதான, வியானன் என்னும் வாயுக்கள் தன் வயப்படுமானல், ஆயுள் விர்த்தி. அநேகநாள் இருக்கலாம், அழிவில்லை. உடலொழிவில்லை. கரும பூமியில் இவர்கள் தான் மாயசித்தி பெற்றபேர்கள். அவர்களுக்கு நினைப்பில்லை. மறப்பில்லை, நிலையில்லை, நெறியில்லை, ஒருவித முத்தியை முடித்து வைத்திருப்பவர்கள். இவர்களுக்குச் சீவன் முத்தரென்று திருநாமமுமுண்டு. உல்லாசார்த்தம் உடலை வைத்துக்கொண்டு, ஒன்றுமில்லாமலே எல்லாமுள்ளவர்களாகியும், எப் பொருளிலும், வல்லவர்களாகியும், யார்க்கு நல்லவர்களாகியும், எம்போலுருவு காட்டிக்கொண் டிருப்பவர்கள். மகா தூய்மை வாய்ந்த வாய்மையுடைய சித்தபுருடர். அவர்கள் காரியம் பிரத்தியேகம். அடங்கலுக்கும் புறம்பு. அவர்கட்கு நான் மாத்திரஞ் சொந்தம் என்று நவின்ற சிவவாக்கியத்திற்கு மகாதேவியானவள் மகிழ்ந்து, ஐயா! சுத்தஞானவர்கள் உமது ரூபமாய்சாரூப்பிய மடைவார்கள் என்று கேள்விப் பட்டிருக்கின்றேன். அதனுடைய விபரமடியாளுக் கறியப்படுத்த வேண்டுமென்று போற்றினள். அப்படியே அமலமூர்த்தி அருள் செய்யத் தொடங்கினர்.

---

நால்வகைப் பதவி.

ஓ அணங்கே! மறைகளினல் அறியப்படாத சிற்பரம்பொருள் யான், எனக்கு நீட்

கள சகளமென இரண்டு விலாசமுண்டு;
அவைகளில் நிட்களமாவது பரிபூரணமாய்
எங்குந் தானுயிருக்கப்பட்டது. இதற்குவிலா
சமாவது என்னையன்றி எள்ளத்தனையு மின்
றி, ஜெகத்தெல்லாம் எனது பூரண ரூப நாம
க்கிரியைகளாயுள்ள விலாசம். சுத்த ஞான
வான்கள்எல்லாம் இந் நிஷ்களவிலாசத்தை
யடைவார்கள் இதே நானிருப்பது சகளத்
தோற்றம். யோகீஸ்வரர்கள் இயாவரும்
சகளீகரித்த சாரூப்பியம்பெருவார்கள். மேற்
கூறிய ஞானவான்கள் பந்தமும்பற்றுமற்று
என்னை அந்தர யாமியாய்ப் பாவித்துச் சாயு
ச்சிய மடைவார்கள். இரும்புண்ட நீர்போற்
றிரும்பா நெறி பெருவார்கள். உலகத்தில்
ஸ்தாபித்திருக்கிற எனதுசொரூபமாகியசிவ
லிங்க மூகூர்த்தத்தை வேதங்களில் விதித்தி
ருக்கிறபடிக்கு யாவனொருவன் அபிஷேகவ
லங்கார நைவேத்திய தூபதீப உபசாரங்கள்
செய்து மனோவாக்குக்காயங்களினுல் வழிபடு
வானே? அவன் சாமீபம்பெறுவான். தடம்,
மடம், சத்திரம், அன்னதானம், தண்ணீர்ப்
பந்தல் இவை முதலாகிய அநேக பிரதிஷ்
டைசெய்தவன், சாலோகமடைவான். ஆன
தால் சரிதையென்னு முறைமைப் பிரகாரம்
நடந்து அன்பு மிஞ்சின பேர்களுக்குத்தே
வர்கள் கொண்டாடப்பட்ட சாலோக பதவி.
கிரியை யனுசரித்துக் கிரமமாய் நடந்தவர்க
ளுக்குச் சாமீபபதவி. யோகவான்களுக்குச்
சாரூப பதவி. ஞானவான்களுக்கு சாயுச்சிய
பதவி. இந்நான்கு மந்தத்த நெறிகளில்
அன்புடையார்க் குண்டு இவர்கள் நடக்குச்
சொந்தம் என்று சொல்லவுங் காதள நீண்ட
கண்ணுளாகிய காமக்கோட்டி களித்துத் தெ
ண்டனிட்டு, சுவாமி! வேத நுட்பங்களெல்
லாம் அறியத்தக்கதாக விளம்பினீர். இயான்
கவலையற்றேன். மூதறிவுடைய முனிவரரும்
மகிழ்ந்து மதிபெற்றுச் சதியுற்ருர்கள். இனி
க்குறைவில்லையென்று கயிலைமலையா ளிங்குப்
பணிமலை கன்னி உபகாரஞ் சொல்லிப் பணி
ந்தாள். அப்போது சகலமான முனீஸ்வ
ரர்களும் அம்மையப்பருடையசகஸ்திர நாம
ங்களையெல்லா மெடுத்துத் துதித்து, இயா
வருங் குதித்துக் கூத்தாடினுர்கள். அந்தவே
ளையிற் பரமசிவன் அபிராமியைப் பார்த்து
இதனைச் சொல்லுகின்ருர்.

ஓ நாராயணி! அநேகம் பெண்கள் நம்
மைச் சேவிக்கவும், சில தருமங்களைக் கேட்க
வும் வந்திருக்கின்ருர்கள். நீ பெண்ணையக
மாகையால் உன்வாக்கினுல் அவர்களுக்குண்
டாகிய சங்கையைத் தீர்த்துவிடுக வென்ற
னர். அதற்கு வேதநாசி சொல்லுகின்ருள்.
ஓ அகிலலோக நாதா! ஓ அற்புதகுண நீதா
ஓ பரஞ்சுடரே! தேவரீர் வேதங்களினுலே
யும் விள்ளுதற் கரிதாகிய ரகசியங்களை அடி
யாளுக்கு விளம்பினீர், அப்படி யிருக்க அடி
யேன் என்ன சொல்லப் போகிறேன்? தேவ
ரீரே திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று
தேவி சொல்லினுள். அதற்கு மஹாதேவர்
நகைந்து, ஓ மாதுசிரோமணி! உன் வாக்கி
னுற் கேட்க விருப்பங்கொண்டு வந்தவர்களு
க்கு நான் சொல்லுவது நன்மையன்று. மே
லும் உன் வாக்கினுற்கேட்க எனக்கும்ஆசை
யாயிருக்கிறது ஆதலால் நீயே தெரிவியெ
ன்று கூறினர். அந்த சமயத்தில் அரம்பா
ஸ்திரீகளுங் காந்தருவப பெண்களும்நெறி
வழுவில்லாத ரிஷிகன்னியர்களுந் தேவமாத
ர்களும் பரமேஸ்வரியைப் பணிந்தெழுந்து,
ஓமகாதேவி! ஓசாம்பவி! ஓவராகி! ஓவயிண
வி! ஓ பகவதி! ஓ பார்வதி? என்று துதிப்பிர
தட்சண நமஸ்காரம் புரிந்து கைகட்டிவாய்
பொத்தி, தாயே! நாங்கள் கடைப்பிடி யறிந்
துக்கதிபெற்றுக் கடைத்தேறும்படியாய் இர
ட்சிக்க வேண்டுமென்று வேண்டினுர்கள்.
அப்போது சங்கரியானவள் தாண்டவ மூர்த்
தியின் தாளிணையைத் தொழுது, சகலருங்
கேட்கச் சொல்லத் தொடங்கினுள்.

---

## பெண்டீர் தருமம்.

ஓ சர்வலோக சரண்யராகிய சம்புவே!
பெண்டீர்களுக்குத் தற்சுதந்திரமென்ப தெக்
காலத்திலுமில்லை. தாய்தந்தைகளின் கட்ட
ளைப்படிக்குச் சில காலம் புருஷன் பணிவி
டைப்படிக்குச் சிலகாலம், பிள்ளையின்சொல்
லுக்கு மாறுபடாதிருத்தல் சிலகாலம், இதற்
குள்ளாக அப்பெண்டீர் கால வளவைக்கண
க்கு முடிந்துபோம், இஃதொரு விதி ஸ்திரீ
களுக்கு யாதொரு அதிகாரமுமில்லை தாய்
தநதையர், அண்ணன் தம்பிகள், என்னும்
இவர்களே அவர்கள் பருவமறிந்து நடத்த
வேண்டுங் காரியங்கட்கு அதிகாரிகளாவார்
கள் இவர்களிலொருவர் சம்மதித்துத் தரு
ணிப் பருவத்தில் ஒருவருக்குத் தத்தம் பண

ணிக்கொடுத்துவிட்டால், அப்பா லத்தத்த நீரேந்திய தலைவனே அதிகாரஸ்தன். இஃதொருவிதி. இப்படி ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்ட பெண்ணாயினள் அவனுடைய அபிமதப்படிக்கு நடந்து, பிதிரர், அதிதி, இவர் முதலியபேர்களுக்குச் செய்யவேண்டிய கடன் முதலாகிய பூசனைகள் செய்து மனம், வாக்கு, காயம், இம்மூன்று மொன்றாகி, சட்ருசி பதார்த்தத்துடனே சமையற்செய்து ஊட்டிவைத்து, யிரவும்பகலும், பணிவிடையிற் பால்மாறிக்கை யில்லாமல், குளிர்ந்த சொல்லும், ஆசாரமும், அறிவும், அருள் பெருகிய மனமுமுடையவளாயின் அவள் மஹாபதிவிரதை, அதற்குத் திருட்டாந்தம் ஒரு கதையுண்டு. ஒரூரிலொரு பிராமணன் அவனுக்கு இரண்டு ஸ்திரீகள். மூத்தாள் சகல தருமமுந் தனது நாயகன் மனதிற்குப் புறம்பாய் நடத்தி, நன்னடத்தையையுங்குடி வாழ்க்கையையுந் தன்சுதாவிற் பாராட்டிக் கனம்பண்ணினள். இளையவள் புருடன் வார்த்தைக்கு எதிரிடாமல் வழிபாடுபட்டு தற்சுதந்திரமற்று, அவனுத்தரவின்படி பிரியமாய் நடந்துவந்தாள். பிற்பாடு அந்தமூவர்களும் வயோதிக தசையடைந்து மறுமைப்பயனை நாடினர்கள். அவர்களிடத்திற்கு அறக்கடவுள் வந்து, மூதற்பத்தினியைப் பார்த்து, ஓ பெண்ணே! உன் புருடனுடைய கட்டளைப்படிக்குத் தருமங்கள் செய்யாமல், உன் னிஷ்டம்போற் சகல கருமங்களையுஞ் செய்தாய். அறனுலுனக்கென்னவுண்டு! நீ செய்த புண்ணியகருமங்களினற் பிரயோசனமில்லை. நீ உன்புருஷனோடு இந்தப்பூமியிலிருந்து சுகபோக சவுக்கியங்களை யனுபவிக்கப் பந்தமற்றதுபோல், அந்தப்பூமியிலு மனுபவிக்கச் சொந்தமில்லை. நீ இங்கேதானே வித்துவா யிருமென்று விட்டுவிட்டு, புருஷன் சொற்கடவாமல் நடந்த இளையாளுடன் அவள் நாயகனையும் அழைத்துக்கொண்டு போய் சொற்காதிபோகங்களை அனுபவிக்கச் செய்து சுகத்திலிருத்தினர்.

ஓ பரமேட்டி? இப்பால் மூத்தவள் விதவையாகி, மங்கிலியப்பெண்களைக்கண்டு மனமருண்டு, விகாரங்கொண்டு வெதும்பி, அன்னத்தை வெறுத்து அகங்கலாய்த்து, அழுத கண்ணீருஞ் சிந்தையுமாயிருந்து, நாயகனையே தெய்வமாக்நாடி நினைத்து நலிகின்ருள். அக்காலையிற் குற்றமற்ற எமதருமன் வந்து ஓ பெண்பாவாய் நீயேன் கிலேசிக்கின்ருய். ஒரு லாபமுமில்லை. மறுபடியும் பிறவிக்கிடந் தேடிக்கொண்டாய். எப்போ நீ மகிழ்நனுத்தரவில்லாமல் உன் சுயமாய்த் தருமம் பண்ணினையோ அப்போதே எல்லா அகங்காரங்களுமுண்டாய் விட்டன. ஆதலால் நீ மிறந்து இன்னொருதரம் பிறந்து, வேறு புருடனுக்கு வாழ்க்கைப்பட்டு, மிகுந்த பத்தி செலுத்தி, தகுந்த ஊழியத்திவிருந்து, அவனுத்தரவு கடவாமல் நடந்து, அவன் மனதின் படிக்குத் திருந்தி விருந்து முதலியன பரிந்துவருவையாகில் முடிவில் அந்தப்புருஷன் பெருகிறகதி நீயும் பெறுவையென்று புகன்றுபோய்விட்டார். அவ்வாறே பிறந்திறந்து பேறு பெற்றனள். ஆதலால் ஸ்திரீகள் சுயேச்சையா லொருகாரியமுஞ் செய்ய அதிகாரமில்லை. தரும முதலிய கருமம் நடத்த வேண்டுமானுற் புருஷனுலும் அவனுத்தரவாலும் புரியலாம். கைம்பெண்ணான பின்பும் புத்திரனலாவது, பௌத்திரனலாவது இரண்டுமில்லாவிடிற் புருடன் சந்ததியிலுள்ள வேறொருவராலாவது நடத்தவேண்டியது. இதற்கு வேதமேசாட்சி. அது விளம்பியதேகாட்சி. இதனுலொரு தாட்சியுமில்லை ஓ ஆட்சியாகிய ஆதிபகவனே! பெண்கள் புருடனுக்குக் கண்கள். பெண்களுக்குச்சகலமும் புருடனே. புருடனயினன் அநேகம் போகமாதருடன் கூடிச்சந்தோஷமாகவாழ்ந்தாலும் அவனுக்குமனைவியாயினள் மனங்கோணமற் பணிவிடை பண்ணித் தீரவேண்டும். தனக்குக் கற்பே நிலைமையாம். அக்கற்பே அற்புதக்கணமாம். புருடன் தன்வசத்தில் வைத்தபொருளை உயிர்போற் காத்து எந்தக் காரியத்தைப் பற்றியேனு மவன் கேட்டபோது தடை சொல்லாமல் உதவவேண்டும். நாயகன் கரத்தால் எதுகிடைத்தாலுங் குறைவென்றெண்ணமல் வீறைவாய்க் கொள்ளவேண்டும் தனது நாயகன் ஒருவருக்கொன்று கொடுத்தால் தானும் அதற்கு அனுகூலமாக வேண்டும். அந்தரங்கத்திலிருந்த சங்கதிகளை அயலாரறியப் போகாது. வெகுபேர் பெருமையாய்ச் சொல்லிக் கொள்ளுவதுண்டு. அது பெரும்பிழை. நாயகன் வறுமையாளனுனலும், நோய் மிக்கோனுனலும், உடற்குறையுற்றோனுனலும் அறிவில்லாமூடனுனலும், அழகற்றவனுனலும், தனக்கென்று சமைந்தவனுகையால்,

அவனே தெய்வமென்று நித்தமும் பத்தி செலுத்தி மெத்தவும் பூசித்து தொழவேண்டும். பார்ப்பவர்களுக்குங்கேட்பவர்களுக்கும் பெருமை பாராட்டிப்பேசவேண்டும். மன்ஞ் சளையப்போகாது. தென்புலத்தார், தெய்வம் விருந்து, ஒக்கல் இவையெல்லாந் தினந் தினஞ் சிந்திக்கவேண்டும். இதனாற்புருடனுக்குச் சிரேயஸ்கர மூண்டாகும். நற்காலந்துற்காலங்களிலுஞ் சமமாய் ஒத்து நடக்கவேண்டும்.

ஓ கிரீசா! பெண்களில் அசுரமென்றும் பைசாசமென்றும், இராக்ஷசமென்றும்மூன்றுகுலம். இவர்கட்குக் குணமெப்படியெனில் அசுரகுல ஸ்திரீகளுக்கு விபசாரத்துவமே உடற்பிறப்பு. ஆசாரயீனமே அடிமை. தீய நடத்தையே புண்ணியம் மாறுபாடே மதி. வஞ்சமே நெஞ்சம். மானம்வெட்கம்வணக்கம் ஒடுக்கம். இவைகளவர்க ளிருக்குநாட்டிலுமிரா. தங்கள் குரோதங் குடிகொண்டசிந்தையாற் கொலை பாவத்திற் கஞ்சுவதில்லை. பொய்யில் மிஞ்சுவதுபோல் மெய்பேச மிஞ்சுவதில்லை. தங்களிச்சையின்படிக்குச் செலவழித்து லெச்சையற்றுத் திரிவார்கள். புருஷன் வாக்கு ஒரு பொருளல்ல. புண்ணியர் தவத்தை யழிப்பதே போதுமான பொருள். வீட்டுடமைகளை விற்று மூடிந்து மேற்காசு கண்டு தாயார் வீட்டுக்கும் தந்திண்டிப்பாட்டுக்கும் தம்பணங்கொண்ட ஆசைக்கும்,மது பானப் பூசைக்கும் போட்டுவிட்டு, ஒன்றுமில்லையென்று ஒரு கவினை புரிந்து, கர்வங்கொண்டு,அண்டையயல் நகைக்கச் சண்டை போடுவார்கள். புருடனும் ஒருபோது நயத்து பேசார்கள். கடுகடுப்பு, சிடசிடப்பு, படபடப்பு, வெடுவெடுப்பு, துடிதுடிப்பு, இப்படிக்கு என்னுளுமூண்டு, இத்தியாதி குணமுள்ளவர்களை அசுர ஸ்திரீகளென்று அறியவேண்டும். பைசாச மடந்தையோ? கவணையேறப்பாராள். அன்பில்லாள். நாய் போல் வீழ்வாள். மகாபாவி. பிள்ளைகள், தாய், தகப்பன், அண்ணன், தம்பி, பந்து மித்ராள் இவைகள்பேரிற் பட்சம்வைக்காள் என்னேரமும் புருடனைப் பேயாட்டமாட்டிவைப்பாள், கலகம் அசத்தியம் தூஷணை துரோகம் இவையாவுங் குடிகொண்டவள். புருஷனை, பட்சம், விளையாட்டு, சிரிப்பு களிப்பு இவைகள் வெளிகளிலும், உள்ளிட்டாரில் மூக்கசுளிப்பு, பிரியமிராமை, எடுத்தெரிந்துபேசுதல் இக்குணமுடையாள். இவளே பைசாச மங்கையென்று சொல்லப்படுவள். இனி ராக்ஷச ஸ்திரீயினுடைய நடையெவ்வகைத்தெனில், கள்ளு சுள்ளு சாராய் கஞ்சா அபின் மாஜின் பங்கி இதுகளைப்புசிப்பதில்அதிக விச்சை புருஷனிருப்பது வெகு லச்சை. ஆசாரங் கொச்சை. தேகமோ? நாற்றவாசம் துணியோ? அழுக்கு வாசம் சின்னவருடனேசம். செய்வதெல்லாம் மோசம். பொய் மேல் விசுவாசம். புணர்ச்சியோ? யமபாசம், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு இவை நாசம் வெட்கஞ்சிக்கில்லாதவீருப்பு வீண்சம்பவம், வெறும்பேச்சு, இவைகளில் நயம், தவம், விரதம், நோன்பு நியதிஇவைகளிற் பயம். பெருங்குரலிட்டுப் பேசுதல், வண்டவாள மெல்லாம் ஊரறியச் செல்லுதல், வீடுவீடாய் நுழைதல், நாவுருசி தேடுதல், ஆகிய வத்துற்குணங்களை வகித்து, நாலுவீட்டுத் தங்கையாய், எட்டுவீட் டப்பாத்தையாய்த் திரிவதே இராக்கத ஸ்திரீ நடையென்னலாம்.

ஓ சம்புவே! இம்மூவகைத் துர்க்குணமுடையபேர்களுக்கும், இவர்களைக் கொண்ட கணவருக்கும்இறப்புப் புறப்புகளென்னுளு மொழியா இணித் தெய்வகுல ஸ்திரீகளாவார் நன்னடக்கை, சுசி, புனிதம்,ஒழுக்கம், நல்லறிவு, அன்பு, தருமம், தெய்வபக்தி, இவையாவுமுடையவர்கள். அன்றியும் ஒருவனுக்குப் பெண்டாயினுல் புருஷனுக்குப் பின் தானுண்ணல், நித்திரை செய்தபின் தானித்திரைபண்ணல், அவனெழுமுன்னே தானெழுதல் பாதம் வருடல் அறுசுவை யுண்டி அமைத்து அருந்தல்புருஷனை காண்பதற்கென்சற பூ, மஞ்சள், பூஷணம்,வஸ்திரம், அலங்காரம்பூனல்இவைகளை இருப்பதைக்கொண்டு இந்திர பாக்கிய மென்னல். புருஷனுடைய லாபலோபத்திற் குடன்பட்டிருத்தல், புருஷன் கோபிக்கும்போது நற்குணங் காட்டிக் கோபந் தணித்தல், பிறர் மனை புகாமை, பெரியவர்களிடத்திற் பேசுதல், மாமியார், மாமனர், மகிழ நடத்தல், கொண்டார் பெயர், குடிப் பெயர், உரையாமை, சுபகரம், பசுமஞ்சட்குளி, நெற்றியிற் றிலதம் இம்மூன்று மாருதிருத்தல், மாதவிடாய் மூன்றுநாள் மறைந்து நான்காம் நாள் ஸ்நானஞ்செய்தல், ஐந்தாம்நாள் தயிலஸ்நானம் புரிதல், அப்பாற் புருஷன்

முகத்தில் விழித்தல், புருஷனுக்கு மிஞ்சிப்
பேசாம லிருத்தல், மற்றொருபுருஷரை மதி
யாமையும், மகிழாமையும், புகழாமையும்,
வகித்தல், வாசற்படி உரல் உலக்கை முறம்
அம்மி இப்பேர்ப்பட்டவைகளை இலக்குமிக்
கொக்கப் பூசித்தல், குடும்பத்தின்பேரி லா
சைமிகுதல், பிறந்த குடும்பத்தின்பேரி லின்
பும் புகுந்த குடும்பத்தின்பேரி லன்பும்வைத்
திருத்தல், புருஷனிருக்கும்போதும், வார்த்
தை சொல்லும்போதும் உட்கார்ந்திராமல்
எழுந்து வணங்கியிருத்தல், ஆகிய விக்குண
ங்களையுஞ் செயல்களையும்வகித்து காதலனை
கடவுளென்று பூசித்து வருவள் காலாதீதத்
தால் நாயக னிறந்தால் உடன்காட்ட மேறு
வள், சாகமனங் கூடாதாயின், பாக்கு, வெற்
றிலை, சந்தனம், புட்பம், வர்ணவஸ்திரம்,
பாய், தலைக்கணை, சட்ருசி பதார்த்த மிவை
களையெல்லாந் தள்ளி தலை மொட்டையிட்டு
ஒருவேளை அன்னம் புசித்து விரதங்களனு
ஷ்டித்து பெரியோரைப் பூசித்து தேவதா
தரிசனஞ்செய்து புண்ணிய நதிகளில் மூழ்கி,
தானதருமம்புரிந்து முடிவில் கதியடைந்து
தேவதாசொரூபமெடுத்து சொற்கர் தி போக
மடுத்து அளவிறந்த காலம் புருடனுடனே
அமர்ந்துவாழ்வாள் இம்முறை தப்பினுலுயி
ர்வதையான நரகத்திலுழலுவாள் துன்மார்
க்கமுள்ள பெண்சாதியினுலே நல்ல புருஷ
னுக்குந் தீங்கு உண்டாம். இத்தியாதி கற்
புடைமைகளுங் குலவி யிருந்தால், அவ
ளைக்கொண்ட கணவனுக்குத் தருமங் கூற
வேண்டுவதில்லை. அவள் வாக்கியம் வேதத்
திற்குச்சமானம். தருமதேவதைவாக்கியம் தி
ருமந்திரம், அவளிருக்கும்வீடு சிவலோகம்.
பதினன்கு லோகமும் அவ்வொருத்தியாற்
கடைத்தேறும். (தெய்வந் தொழாள் கொழு
நற்றொழுதெழுவாள். பெய்யெனப் பெய்யு
மழை.)

ஐயா கிருஷ்ணமூர்த்தி? இப்படியாக
ஈஸ்வரிசொல்ல, ஈஸ்வரனும் மற்றமாதவர்
களுக்கேட்டு மகிழ்ந்தார்கள் புகழ்ந்தார்கள்
பாடினர்கள். ஆடினர்கள். தொழுதார்கள்.
அழுதார்கள் ஆனந்த சமுத்திரத்தி லழுந்
தினர்கள். தேவர்கள், ரிஷிகள், முனிவர்கள்
கண நாதர்கள் இவர்களியாவரும் பரவசமுற்
றூர்கள். இருதரத்தையுஞ் சிரத்திற்குவித்து,
இறைவனையும் இறைவியையும் வலமாகவந்
துபணிந்து, ஆனந்தபாஷ்யம் பொழிந்து,

ஹரஹரசம்போ சங்கரவென்று கோஷ்டித்
துத் தொழுதார்கள். அப்போது பரமசிவன்
பார்வதியைப்பார்த்து, ஓ கௌரீ? நாமிருவ
ரும் ஏகாந்தமாயிருந்த இடத்தில்வந்து இப்
பேர்ப்பட்ட தருமமுதலிய நீதிமகத்துவங்
களைக் கேட்டுச் சந்தோஷப் பட்டவர்களும்,
இப்பிரகாரம் வழுவாமல் நடந்தவர்களும்,
பூலோகத்தில் யாவருக்கும் புகன்றவர்களும்
விசுவாசித்தவர்களும் ஆகிய விவர்களெல்
லாந் திவ்விய தேகம் பெற்ற தேவர்களாங்,
நமது அருளுக்குப் பாத்திராளாய், சமயமா
றையுங் கடந்து ஞானனந்த சாகரத்தைப்
பெற்று, இகத்தும் பரத்தும் பெருமையுற்
று, பிறவியற்று, பெறும்பேறுபெருவார்கள்.
புத்தியுண்டாம், வெற்றியுண்டாம், கல்வி
சேரும், செல்வி சேரும், துற்சோபம்
துற்பயங்கரம், துற்மரணம், துற்வியாதி,
இவைகள் நீங்கும். சற் சிநேகம், சன்
மார்க்கம் சற்பிர பலம். சத்காலக்ஷேபம்
இவைகளோங்கும். பெரியோர்கள் இந்தச்
சரித்திரத்தை யெடுத்துப் பேசுங் காலையில்
மனதைவேறிடத்திற் செலுத்தாமல் வெறுக்
காமல், அவசரப்படாமல், அலுப்பா யிரா
மல், அலட்சியப் படுத்தாமல், பசி நோக்கா
மல், பத்தியாய்க் கைகுவித்து, வந்தனைவழி
பாட்டுடன் இந்தப்பாவிக்கு இது கிட்டுமோ
கிட்டாதோ வென்கிற ஏக்கம்வைத்து, தூக்
கஞ்சோம்பலற்று, தெய்வாராதனை செய்து,
தும்பல், கொட்டாவி, நெட்டை, குறுகுறு
ப்பு இவை முதலியதில்லாமற்கேட்டு, இந்த
விதிகளை அநுசரித்து நடந்தவர்கள், ஏழு
சன்மங்களிற்செய்த வல்வினைகளும் போய்
புண்ணியமேலிட்டு, இம்மையில் மிகுந்த
போக பாக்கியத்துட னிருந்து மறுமையில்
நமது சிவலோகத்தை யடைவார்கள். இந்த
நீதியாகிய தருமங்களைச் சுமங்கலமாதர்கேள்
விப்பட்டால் மகா பதிவிரதா மகத்துவ மங்
களமுண்டாகும். மோட்சங் கிடைக்கும்.
நாதனிழந்த பெண்கள் வினவினல் இந்தச்
சன்ம மிப்படியானலும் இன்னெரு பிறவி
யிற் கணவனுடன் கலந்து தருமந்தப்பாம
லிருந்து மகிழ்ந்து வாழ்ந்து, வைதவ்விய
மென்கிற விசனமில்லாமல் நித்திய சுப மங்
களமா யிருப்பார்கள். நற்கதியுண்டாம். மல
டிகள் பத்தியாய்ப் பூசித்து விரும்பினல், ந
ல்ல சுபத்திரரைப் பெறுவார்கள். தரித்திரர்
கேட்டால், செல்வமும், சீரும், தயாளமு

முண்டு. உரோகிக ளனுஷ்டித்தால், சகல பீடைகளும் விட்டுப்போம். கிரகசாரமும் ஒடுங்கும். தீர்க்காயுசுண்டாம். இந்தப் பொருளைச் கல்வியறியார், படிப்பில்லார், கற்றுமறப்பார், புத்தி மழுங்குவார், இவராதிய பேர்கள் உற்றுணர்ந்து கேட்டால், அவர்கட்குவேண்டிய நன்மையெல்லாம் உண்டாகும். என்று அந்திவண்ணம் அம்பிகையுடன்சொல்லி ஆசீர்வதித்து, கணநாதர் கொண்டாட, தேவர் முனிவராதியர் பக்கத்திற் சூழ்ந்து தோத்திரம் பண்ணித் தொடர்ந்துவர, தமது திருமேனி யெறிக்கு நிலவிற் பார்வதி தேவியாருடைய பச்சைப் பிரகாசம் பிரதி பலித்திருக்க, காலகாலனை அந்தக் கண்ணுதல்வள்ளல் கயிலாயத்திற் கெழுந்தருளினர். மற்றையர்கள் தேங்கித் திகைத்துத்தங்கள் தங்களிடத்திற்குப்போயினர்கள்.

ஓ அருட்கடலாகிய ஆதிமத்தியாந்தரகிதனே! ஓ ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியே! இதெல்லாம் நானுங்கூடக் கேட்டுக் கொண்டிருந்தேன். பரிபூரணானந்தம் பெற்றேன். அன்பு செறிந்திவணுற்றேன், என்று நாரத மகாமுனிவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்குச் சொல்லவும், அதைக்கேட்டிருந்த இக்கண்ணன் உமாமகேசனாகிய சந்திரசேகரனது திருநாமங்களை உச்சரித்துத் தோத்திரம்பண்ணி, ரிஷிகள் முனிவர்கள் முதலிய பேர்களுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு, தாமும் உருக்குமணி தேவியுமாகத் துவாரகாபுரிப் பட்டினத்திற்குட் புகுந்து, மற்றத் தேவிமாரோடுங்கூடிச் சுகமுற்றுப் புத்திரப்பேறுபெற்று வாழ்ந்து கொண்டிருந்தார் பின்னொருபோது அம்மகதியாழ்த் தலைவராகிய நாரதமகா முனிவரை யான்கண்டு தரிசித்த காலத்தில் இந்தச் சரித்திர தருமங்களை யெனக்குப் பரிஷ்காரமாய்ப் பகர்ந்தருளினர். இப்பேர்ப்பட்ட தரும சூட்சங்களை யெல்லாம் உனக்குச் சாங்கோபாங்கமாய்ப் புகன்றேன். சங்கதி தெரிந்துகொள்ளுக. என்று வீஷ்மாச்சாரியர் விளம்பவுந் தருமராஜன் சரீரம் பொங்கி, மயிர்க்குச் செறிந்து, பரவசமடைந்து பாட்டனுருக்குப் பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணி, வினைவேரறுந்து மனம் வேறுவந்து பிழைத்தேனென்று போற்றி வணங்கி, மகாதேவத் தியானம்பண்ணி நின்றனர். அப்போது ரிஷீஸ்வரர், முனீஸ்வரர், முகுந்தன் இவர்முதலாகிய பேர்கள் சகல புவன கர்த்தாவாகிய சாம்பவமூர்த்தியை நினைந்து சரணம் புரிந்திருந்தார்கள். பின்பு யாவரும் வீஷ்மருக்கு வந்தனை வழிபாடு செய்து ஐயா பெரியோனே! தேவரீர்க்கித்தனை நாளைப்பார்க்க இத்தின மகாகஷ்டம். சூரியனும்மஸ்தமனமாகின்றான். இனி யாங்கள் அஸ்தினாபுரத்திற்குச் செல்ல விடை கொடுத்து, மீட்டுத் தேவரீரை யாங்கள் வந்து காணற்குரிய நாளையுங் கிருபை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். தருமனாதிய பஞ்சபாண்டவர்களும் அவ்வாறேவினவிப் பணிந்து நின்றார்கள். அக்காலவர்களை வீஷ்மர் கிருபையோடும் பார்த்து, ஓ என் கருத்திற்கிசைந்த பௌத்திரர்களே! உத்தராயண புண்ணியகாலஞ் சம்பவிக்கும்போது நீங்கள் யாவரோடும் வந்து என்னைக் காணுங்கள். அதுகாறும் யான் சொல்லிவந்த தரும நீதிகளனைத்தையுஞ்சிந்தித்துச் சிங்காதனத்திலுட்காருங்கள். இராச்சிய பரிபாலனத்தை இளைக்காமற் செய்துவாருங்கள். என்று சொல்லி விடைகொடுத்தனர். உடனே யாரும் பிரயாணமாகி அஸ்தினாபுரஞ்சென்று, தத்தமிருக்கையைச் சேர்த்து, சகல சுப சந்தோஷந்தோடு நித்தியானந்த சுகத்தை நினைவாதி முக்கரணத்துடும் பொருந்தியுற்றிருந்தார்கள்.

## உமாமகேச சமவாதமுரைத்த சருக்கம்.

முற்றிற்று.

## மூன்றாவது,

# வீஷ்மர் முத்திபெற்ற சருக்கம்.

கண்ணன் துதி.

பாருருவில் நீரெரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற விமையவர்தந் திருவுருவே றெண்ணும்போது
ஓருருவம் பொன்னுருவ மொன்றுசெந்தி யொன்றுமா கடலுருவ மொத்துநின்ற
மூவுருவுங் கண்டபோ தொன்றுஞ்சோதி முகிலுருவ மெம்மடிக ளுருவந்தானே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! தரும புத்திர மகாராஜன் தனது மூதாதையாகிய வீஷ்மாசாரியரிட்ட கட்டளைப்படி அஸ்தி தினபுரத்திலிருந்துகொண்டு, திரிதராஷ்டிர பூபதி, விதுரமகாராஜன், காந்தாரிதேவி, குந்தியம்மை, கிருபாசாரியர், இவர்கள் முத லாகிய முதியோர்களையும் வேதவேதியர்களை யும் பூசித்து மாசற்ற மணிச்சிங்காதனத்தி லிருந்து, அரிபரந்தாமனை அருகிலிருத்தி, தம்பிமார்களுடனும் ஏனைய மந்திரர் சாமந் தருடனும் இராச்சிய பரிபாலனம் பண்ணி வருகின்றார். இப்படி சிலநாட் சென்றபின் ஒருநாளிருவினையுங்கடந்த இறைவனாகிய வீஷ்மாச்சாரிய ரிடத்திற்குப் போகவேண்டு மென்று எண்ணினவராகி, மகரத்திற் சூரி யன் வந்த உத்தராயண புண்ணியகாலம் நேரம் உடனே கிருஷ்ணமூர்த்தியை எச் சரித்து, அவருத்தரம் பெற்றபின் தன்சகோ தரர்கள், திரிதராட்டிரன், காந்தாரி, குந்தி தேவி, திரௌபதி, விதுரராஜன், கிருபா சாரி, சஞ்சயன், உயிச்சன், இவர் முதலான வர்களோடு, தத்துவக்கியான சம்பன்னரா கிய வேதவேதியர்களும், இரத கஜ துரக பதாதிகளும், தன் சொந்த பரிசனங்களும், பட்டினத்துப் புறஜனங்களும், புடைசூழ்ந் து வரும்படியாகப் பிரயாணங்கொண்டு, தனது மூதாதைதாரணையோகத்திலிருக்கின் ற குருட்சேத்திர பூமியில்வந்து சேர்ந்தனர் அதற்கு முன்னமே ஆங்காங்குள்ள முனீஸ் வரர்கள், ரிஷீஸ்வரர்கள், தவசிகள், விரதி கள், இவர் முதலர்யினோர் வீஷ்மரருகில்வந் து, வழக்கப்படி அவ்வவர்க ளாசனங்களில் அமர்ந்திருந்தார்கள். தருமராஜனவர்களுக் கெல்லாம் நமஸ்காரஞ்செய்துஆசீர்வசனம் பெற்று, காங்கேயரைத்தொழுது, ஓ ஆண் டவனே! எங்கள் பெரிய தந்தை முதலிய பேரும் ஏனைய மகாத்துமாக்களுந் தேவரீ ருடைய தரிசனப் பிரசாதத்திற்கு வந்திருக் கிறார்களென்று தெரிவித்தார். அதைக் கே ட்ட வீஷ்மர் கண்விழித்துநோக்கினர். அப் போது எல்லோருங் கைகூப்பித் தொழுது வாழ்த்தினார்கள். அக்கால் வீஷ்மர் யாவ ரையுங் கருணையுடன் கண்டு, மங்கள வாழ்த் து கூறி, ரிஷீஸ்வரர் முதலிய பேர்களைப் பணிந்து, பரந்தாமனைப் பக்குவ நோக்கத் தாற் பரிவுடன் பார்த்து, அவர் திருவடித் தாமரையையகத்துளமைத்து, உள்ளன்புட னெழுதுயாவரையும் ஆசனங்களிலமரும் படிகூறி, தருமராசனைப் பக்கத்திலிருத்தி, அப்பா மெய்விரதனே! உனக்கு முன்னமே விதிமுறைகளைப்பற்றியும், இராச நீதிகளைப் பற்றியும், தரும சூக்குமங்களைப் பற்றியும், வேதாகமப் பிரமாணங்களைப்பற்றியும், அவ் வவற்றிற்குத்தக்க இதிகாசங்களோடு வெகு வாய் உரைத்திருக்கின்றேன். இன்று யான் அடையப்போகின்ற மூத்திக்கு வித்தாயிருக் கும் இப்பரந்தாமனைப் பற்றிச் சில ரகசிய மகத்துவங்களைக் குறித்துச் சொல்லுகின் றேன். அவற்றை நீ நிதானமாய்க் கேட்டி டுகவென்று சொல்லத்தொடங்கினார்.

---

புருஷோத்தமன் மகிமையுரைத்தல்.

ஓ அறக்கடவுள் மைந்தனே! பாண்ட வச் சகாயனெனவந்த இப்பரம்பொருளான வர் எப்பேர்ப்பட்டவரென்றால், இவ்வுலகத் தில் தசாவதாரங்களெடுத்து, தருமங்களை நி லை நிறுத்து, தரும நுட்பமாய்ச் சிட்டாச்சா ரத்தன்மைதெரிவித்து, தேவர்கள் முதலாயு

ள்ளா சகலவர்த்மகோடிகளையு மிரட்சித்துக் கிருபாநோக்கங்காட்டி, மாயவலேயி லகப்ப டாத முக்தாத்மாக்களுக்கு மோட்சமளித்து, யாவரையும் ஆபத்பாந்துவாயிருந்து காக்கப் பட்ட மகானுபாவரென்றறிந்துகொள்ளுக. இவருக்கு உள்ளும்புறம்புமொத்து, இரவும் பகலும் மனதிலிடைவிடாமலிருத்தி, இவரு டைய பாதத்தாமரையை வணங்கித்தொழும்பு செய்யும் வேலேகளைமறவாமற்புரிக. ஓ தரும ராஜனே! நீ வெகுகோடி புண்ணியங்களைப் பண்ணியபடியாற் பிர்மா முதலான தேவர் களுக்குங் கிட்டற்கு எட்டாப்பதநாதன் உன் னைவிட்டு நீங்காம் லிருக்கப்பெற்றனே. நீ தவத்தினுல் மேன்மையடைந்தவன். உலகத் திற் பாக்கியங்களைக் கொடுக்கப்பட்ட மகா லட்சுமி நல்வினேயாளரிடத்தில் நிரந்தர நீங் காதிருப்பாள். அப்படியாகிய லட்சுமிகடா ட்சம் பெறவேண்டினுல், அந்த லட்சுமீபதி யாகிய விஷ்ணுவின் கிருபைவேண்டும். சகலகோடி ஜீவராசிகளும் ஸ்ரீமந் நாராயண னுடைய திருவடியைத் தோத்திரஞ்செய்ய வேண்டும். விஷ்ணுவுக்கு அடிமையாகாத பேர் மேன்பாடாகியசெல்வம்பெறமாட்டார் கள். மோட்சமடைய வேண்டுமென்ருல் கேசவனல்லது வேறுண்டா? அவருடைய கமலக் கண்ணனருளல்லாமற் கதிபெறமாட் டார்கள். அவருடைய மகத்துவம் வாக்கு மனதிற்கு மெட்டாதது. அவரது பிரதாப த்தை ஒருவராலுஞ்சொல்லிமுடியாது. சரா சரப்பொருளுக்கெல்லா தாமாகிய ஆதிமூலம்.

மேலும், சகல கிருத்தியங்கட்கு மூலகா ரணகாரியமானவரும், காலதீதமானவரும், கர்த்தாவானவரும், உருவானவரும், அரு வானவரும், தருமமானவரும், கருமமானவ ரும், தருமங்காப்பவரும், கருமம் வாய்ப்பவ ரும், தானவரானவரும், வானவரானவரும், மானிடரானவரும், எல்லாந் தானனவரும், தானல்லாதானவரும், வேதரூபமானவரும், பிர்மசொரூபமானவரும், பர்வதா ராஜபுத் திரி சமேதருன பரமசிவனுனவரும், சற்கிர் த்தியமானவரும், எக்கியமூக்கியமானவரும், சூரியசந்திர அக்கினியானவரும், துளவணி மார்பனுனவரும், வகுளமணி மார்பனுனவ ரும், முத்தனுனவரும், கர்த்தனுனவரும்,சம யமானவரும், அச்சமயக் கடவுளானவரும், வினேவிளைப்பவ ரானவரும், வினே தொலேப் பவரானவரும், சமயவாதம் பேசித் தெய்வ தூஷணை பண்ணித் திட்டாம லிருக்கின்ற இஷ்டரிருதயத்தி லிருப்பவரானவரும், யா வரிலுந் தானொருத்தரானவரும், ஒன்று முணராதார்போலிருப்பவரு மிந்தத் துவார காபுரிவாசன். இவைகளெல்லாம் இவரு டைய லீலா விபூதிதான். கபடநாடக சூத் திராவதாரி, பரிபூரணமான ஞானக்கிரியை யுடைய பரந்தாமன். சங்குசக்ர கதாகட்க கோதண்டபாணி, ஆசானுபாகுகவுஸ்துவா பரணன், திருநாபித்தாமரையில் வேதம்விள க்கிய மண்பொதுத் தந்தையைத்தந்த மாத வன், மாயவன்-வாமனன்-வாசுதேவன்-தே வகி புத்திரன்-யாதவன்-மாதவன்-கேசவன்- சிதாகாசமூர்த்தி-கஜேந்திரவரதன் -பீதாம்ப ரநாதன்-நீலமேகன்-காசாம்பூகருவிளமலர்- கருமணி-கடல்களாப்பழம்-கருமணல்இவை களைப்போன்ற வண்ணன்-பஞ்சபூதசகிதன்- பஞ்சபாணலிகிதன்-அநந்தகல்யாணகுணன் புருஷோத்தமன்-பரப்பிரமன் - பரஞ்சோதி- பரமபதநாதன்- சனார்த்தனன்-ஜகநாதன்-சக ஸ்திரநாமன்- தன்னை எக்காலும்எப்பேரதும் எவ்விடத்து மறப்பில்லாதிருக்கின்ற அன்ப ரிடத்து வசிப்பவன். அவர்களுள்ளத்திற் கருதியவண்ணம் பிரத்தியட்சமாகும் பேரறி வாளன். கிருபாநிதி கேட்டில்லாப்பதன். இவருடைய திருவடியை முடியிலும் உள்ள த்திலுமிருத்தி, ஒருகணப்போதும் ஏமாறு மற் சிந்திக்கக்கடவை. என்று பெரியவரா கிய வீஷ்மர் சொல்ல, தருமராஜன் இந்த மகத்துவத்தைக்கேட்டு, சுவாமி! தேவரீரு ரைத்த திருநாமங்களை மறவாமல் மனதிற் பதித்தேன். பூமியிற் பூசைக்குரியவர்களும் பூசைபண்ணுவதற் குரித்தானபேர்களும் யா ரென்று முரசக்கொடியோன் கேட்க காங்கே யர் கரைக்கின்ருர்.

---

மெய்ஞ்ஞானிகள் மகத்துவங்கூறி, அது பற்றி ஓர்வேசையின் கதையுரைத்தல்.

அப்பா வாய்மையாளனே! அகப்பற்று புறப்பற்று அற்றவர்க ளானுலும், அதைப் பெற்றவர்களானுலும், கியான வல்லமை யுடையவர்களே பெரியோர்கள். அவர்கள் எந்தக் குலமானுலும், அவர்களைப் போற்றி வணங்கி அன்புடனே பூசை செய்யவேண் டும் சுவர்ணமந்தாரை மாலேதரிக்கப்பட்ட

தேவர்களுக்கும் மும்மூர்த்திகளுக்கும் பூசை பண்ணுவதைப் பார்க்கிலு முக்கியம். அதிக பலனுண்டாகும். அவனவனுராதிக்குத் தேவதைகளின் பிரபாவமும், வேதவேதாந்தங்களும் தருமமும் நீதியும் சாஸ்திரமும் செவ்வையாகக் கற்ற தேசிகராலே தெரிந்துகொள்ள வேண்டும். அவாள் சில ரகசியப் பொருள்களை நவிலுவார்கள். அவைகளவாள் நாவிலூறிக்கொண்டிருக்கும். சகல தேவர்களும் அவர்கள் நாவிற் குடியிருப்பார்கள். ஆதலால், அப்பேர்ப்பட்ட உத்தம வித்வான்களைப் பணியலாம். அவர்களைப் பூசித்து, வேண்டியபொருளுமளித்து, அவர்கள் மனங்கோணுமல் நடந்த பேர்களுக்குப் பூமியில் ஒரு கவலையு மிராது. பூமண்டலாதித்துவமுண்டாம். கடைசியில் ஒருவரும் பெறக்கூடாத பேற்றைப் பெறுவார்கள். கற்றவர்களுக்கு ஆசைவார்த்தை சொல்லி மோசப்படுத்தினுலும், கடின வார்த்தைப் பேசினுலும், மரியாதை பண்ணும் விருந்தாலும், அலட்சியம் பண்ணினுலும், இகழ்ச்சியாய் நிந்தித்தாலும், வேருகச் சிந்தித்தாலும், இவ்வகைத்தான துஷ்கிருத்தியங்களில் ஒரு கிருத்தியத்தினுலேனு மவர்கள் மனநொந்தால், ஐயோ! (எந்தையடியார் மனங்கல்க்கி லீரேழுலகுங் கலங்காதே?) என்னும் பெரியோர் வாக்கின்படி உடனே யவர்கள்வெந்து விரிந்து பொரிந்து, கரிந்து மஹா பாவிகளாகிச் செல்வ விருத்திகெட்டு, யமன் வசப்பட்டு, நரகவேதனைக் குட்பட்டுப் பரதவிப்பார்கள். எப்படிப்பட்ட மஹாராசனுனுலுங் கற்றவித்துவானை உன்னத ஸ்தானத்தில் வைத்து, தான் தாழ்ந்திருந்து மரியாதை உபசாரம் பண்ணி வணங்கவேண்டும். அப்படிச் செய்யாமற் போனுல் அவர்கள் மனமெலிந்து சபிப்பார்கள். அதனுல் அந்நாட்டில் மழையில்லாமல் தானிய முதலிய பல பாண்டங்களுங் குறைந்து, வறுமை நிறைந்து, குடி, படை, கூழ் அமைச்சு இவை முதலியனசாய்ந்து, அழகுஞ் சிறப்புந்தேய்ந்து, ஆயுளுமாய்ந்து, ஆண்மிக்கையும் ஓய்ந்து, க்ஷாமபஞ்ச மேலிட்டு நோய் முதலாகிய துன்பங்களினுல் இன்பமிழப்பதாய் வரும்.

முற்காலத்தில் ஒரு வேசியானவள் தருமமென்பதை அறியாதவளாகி, ஈவிரக்கம் பச்சாதாப மில்லாமற் பாவமே செய்பவளாயிருந்தாள். பிறருடைமையைப் பார்த்துப் பேராசைப் படுகிறவள். ஊருடைமைக்கு உலை வைத்திருப்பவள். பேசுவதெல்லாம் பொய் அசத்தியம் பூரணமாய் நிரம்பிய போக்கிஷம். வஞ்சனை வளரும் பூமி மாறுபாடிலா சாமி. வல்லவர்களை மயக்குவிக்குங் காமி. மோசத்தில் முழுச்சாமி. கட்குடியில் வாமி. இப்படியானவள் தன்னியல்பின்படி வாழ்ந்துவருகிற நாளையில் ஒருநாள் சகல நூலுங் கற்றறிந்த மூதன்மையான பெரியவர் அந்த தாசிவீட்டிற்கு வந்தார். அவள் அவரைக் கண்டவுடன் எதிர்சென்று வணங்கி, தோத்திரஞ்சொல்லித் துதித்து, அவர் விரும்பிக் கேட்ட பொருளெல்லாங் கொடுத்து உபசரித்தனுப்பிவிட்டு, பின்னுஞ் சிலநாட் பூமியிலிருந்து தன்னைத்தழுவி மருவிய நாயர்களை தனிக்கவிட்டுக் காலாந்தத்திற் கண்மூடியிறந்தாள். இவளை எமலோகத்திற் கொண்டு போய்விட்டார்கள். அங்கே எமதருமராசன் அவள் கணக்கைப் பரிசோதிக்கும்படி உத்தரவு செய்தான். அப்படியே பார்த்தபோது இவள்பேரிலிருக்கிற பேரேடெல்லாம் பாபமே நிறைந்திருக்கின்றன. எந்தயேட்டிலும் புண்ணியம் வரவில்லை. இப்படிக்கிருக்க ஒருநாள் கற்றுணர்ந்த பெரியவரைப் பூசித்த புண்ணியபலன் ஓர் கடைசியேட்டிலிருந்து கண்ணிலகப்பட்டது உடனே யவர்கள் தங்களெஜமானுக் கறிவிக்க அவன் அதைக் கொண்டு பற்றுரவு சரிப்படுத்தி, இன்னும் அவளுக்கு கொடுக்கவேண்டிய அதிகபாக்கியான புண்ணிய பலத்திற்காகப் பூலோகத்தில் உயர்ந்த பிராமணகுலத்தில் நற்குணப் பெண்ணாய்ப் பிறப்பித்து, சகலவித சுகபோசன வைபவ சந்தோஷ சம்பிரங்களும் அநுபவிக்கப் பண்ணினுன். அதனுலவள் நல்ல கணவனை யடைந்து, பெருங் கற்பினையுடையவளாகி, சகலதேவதைகளுங் கொண்டாடும்படிக்கு வேத மந்திரங்களெல்லாங் கேட்டு, தம்பதி சமேதராய் தரும கருமங்களியாவும்நடத்தி, அதிதிபூசைபுரிந்து அழியாப்பதவி யடைந்தாள். இதைப்பார்க்கிலுந் திருஷ்டாந்தம் வேண்டுமோ? என்று வீஷ்மர்சொல்ல அதைக்கேட்ட தருமராசனடிபணிந்து, ஐயா! தன்னைவிட்டு, நீங்காத தரித்திரத்தை நீக்கிக் கொள்ளுவதற்கு உபாயமுண்டானுற் சொல்லியருள வேண்டுமென்று துதித்துக் கேட்க, அதற்குக் காங்கேயர் சொல்லலுற்றனர்.

துரித்திர விமோசனமாதற் கேதுகூறுதல்.

அப்பா பேரனே! உதயமாகு முன்னே யெழுந்து காலக்கடனை முடித்துக்கொண்டு, மஹாகணபதியை நினைத்துத் துதித்து வணங்கி, பால்போன்ற நிறம்பெற்ற சரஸ்வதியைப்பணிந்து, இலட்சுமியைச் செபித்துச் சிந்தித்து, பிரமத்தையும் விஷ்ணுவையும் போற்றி, வேல்போன்ற கண்களையுடைய பார்வதா தேவியையும், பரமேஷ்வரனையும், பிரதக்ஷிண நமஸ்காரம்பண்ணி, சரவணத்தி லுதித்தருளிய சூரசம்ஹார மூர்த்தியான சண்முகக்கடவுளை வள்ளிதெய்வயானை மணாளனேயென்று வாழ்த்தி, தேவேந்திரன்முதலாகிய திக்குப்பாலகரையும், கண்கட்சியாய் கண்ட சூரிய சந்திரரையும், மற்றக் கிரகங்களையும், சப்தநதியையும், சப்தசமுத்திரத்தையும், காமதேனுவையும், சப்த ரிஷிகளையும், வால்கில்லியர்களையுந் தியானித்து, வேத வியாசர் வான்மீகர் பரத்வாசர் நாரதர், அகஸ்தியர் கௌதமர் காசிபர் கண்ணுவர் இன்னுமுள்ள மஹாரிஷிகளையும் போற்றி, அரம்பையாகிய தேவமாதர்கள், தருமதேவதை, சத்தியதேவதை, தினக்கடவுள்,பகல்,இரவு, இராசி, நட்சத்திரம், திதி, கரணம்,யோகம், பட்சம், இரிது, அயனம், மாதம், வருடம், கடிகை, பதினன்குலோகம், சப்தத்தீபம், பிலத்துவாரம், வேதப் பிராமணாள், நீதியுடைய சக்கிரவர்த்திகள், அருந்ததி முதலிய ரிஷிபத்தினிகள், சப்த கன்னிகைகள், பஞ்ச கன்னிகைகள் இவர்களை யெல்லாம் நினைத்து நிதமுங் குற்றமில்லாமற் குறித்துவணங்கினால் தேயுசும் ஆயசும் செல்வமும் கல்வியும் புத்திர பாக்கியமும் மித்திர போக்கியமும் மனை வாழ்க்கையும் வாகன போகமும் வரும் வறுமையறும் இவைகளுக்கு மன்வுறுதி வேண்டும். மேலும் ஸ்ரீமந் நாராயணனை, வாசுதேவனை, பரந்தாமனை, கேசவனை வாசவனை, விமலனை, அமலனை, கமலனைத் தந்த திருநாபனை, விண்டுவை, கொண்டலை, துளசியந்தாமனை அழகனை குழகனை முண்டகாசனை கேள்வனை நராரியை மூராரியை இராமனை கண்டகனை, கோதண்ட நாதனை, நிமிஷ நிமிஷமுந் துதித்துச் சிந்திக்கவேண்டும். கோவிந்தன் கோபாலன் கோபிகா நாதன், அஷ்டலட்சுமிவாசன், ஆதிமத்தியாந்தரகிதன், தாமோதரன் ஜனார்த்தனன் இராமன் காகுத்தன் அச்சுதன் மால் இவ்விதமான சத்திர நாமார்ச்சனை செய்தால் இப்பிறப்பும் ஒப்பில்லாதிறந்து அப்பிறப்பும் பரமபதமடையலாம் அன்றியும் அக்கியான கேவலத்தினின்று நீங்கி விக்ஞான மேன்பாடடைந்து சனனமரண சலதிக்கரையேறி பிரகாசம்பெற்ற சூரியன்போற் றுலங்கிவாழ்வார்கள். என்று சொல்லவுந் தருமராஜன் என்னைப்போற் பேறு எவர் பெற்றாரென்று எழுந்து நின்று, மகிழ்ந்து, புகழ்ந்து,பணிந்து, சுவாமி! பூசையைப் பெற்றுக்கொள்வதற்கும், வணங்குவதற்கும், அன்னதானமாதிகள் கொடுப்பதற்கும், உபசாரத்திற்கும் உரிய பெரியவர்களாரென்று வினவ, வீஷ்மர் இவையெல்லாவற்றிற்கும் உரியவர்கள் வேதவேதியர்களேயென்று அவர்கள் நிலையைப் பேசத் தொடங்கினார்.

---

பூதேவர் மகிமை கூறல்.

ஓ என் ஜேஷ்ட பௌத்திரனே! வேதமும், யாகமும், ஒழுக்கமும், ஆசாரமும், மேன்பாடும், பொறுமையும், தவமும்,செபமும், ஆச்சிரமதருமமும், அருளும், பிராமணமும், அவுபாசமும், சந்தியாவந்தனமும், சுவாமி! தரிசனமும், பிராமணருடைய சொத்தென்று சுருதி முறையிட் டிருக்கின்றது. இவை யாவற்றையு நடத்தற்குந் தானமாதிகளையேற்றற்கு மற்ற யாருக்கும் அதிகாரமில்லை. பிறப்பொழுக்கங்குன்றாப் பெரியவர்கள். அவர்கள் பிசகிப்போவர்களாகிற் பூமிதேவி பொறுமையை வகிக்காள். தருமதேவதை தளர்ச்சியடையும். இலட்சுமி விலகிப்போவாள். மூத்தவளுலாவித் திரிவாள். ஆகையாற் கிரமமுடைய கியானவல்லவரான பிராமணர்களையே பூசிக்க வேண்டும். நான்குவேதமும் நன்ரு யோதியுணர்ந்த ஓர் விருத்தப் பிராமணனுக்கு அன்னங்கொடுத்தால், அந்தப் பெரும்பயனைச் சொல்ல வல்லவரில்லை, ஒரு பிராமணனுக் கன்னமளித்த மகத்துவப் பலன் இப்படியானால், நூறு ஆயிரம், பதினாயிரம், லட்சம், இப்படியாகப் பிராமணப்போசனஞ் சந்தர்ப்பணை பண்ணிய புண்ணியவான்களுக்கு என்னபலன் பேசுவது? எந்தக் காரியக் கிரியைகளையும் பிராமணரை முன்னிட்டுப் பூசித்து நடத்தி முடிக்கவேண்டும். ஓ மானம், குலம், கல்வி,

வண்மை, அறிவுடைமை, தானம், தவம்,முயற்சி, தாளாண்மை, பேண்மை, இனியசொல் சத்தியம்,தருமம், இவற்றுள் ஒன்றுக்கொன்று குறைவில்லாதோங்கிய உத்தமத் தருமனே! வேதாகமங்கட் குரியவராகிய அந்தப் பிராமணாள் மகத்துவத்தை வேதாவுஞ் சொல்ல வல்லவனல்லவென்றால், என்போலிகளாற்சொல்லி முடிவதோ? என்று பெற்றவனிலும் பத்துபங்கு அதிகமாய் அன்புவைத்துப் புகன்ற பாட்டனாரைத்தருமராஜன் பணிந்து, ஐயா மூதாதையே இவ்விதமகிமை இந்தப் பிராமணாளுக்கு மாத்திரம் வந்த வரலாறென்னவென்று வந்தித்துக்கேட்க, வீஷ்மர் விரைந்து புகலுகின்றார்.

---

## பூதேவர் மகத்துவத்தைப்பற்றிக்கூறிய அருச்சுனன் கதை.

அப்பா சத்தியசந்தனா! உன் தம்பியாகிய அர்ச்சுனனுக்குப் பவனென்கிற மகா பெரியவர் பிராமணாள் மகத்துவத்தைப் பற்றிப் பகர்ந்திருக்கின்றார். அஃதியாதெனில்? யிவ்வீரேழுலகமுங் கிரீடியென்று பேர்பெற்ற விஜயனைச்சப்தமாகப்பூட்டிய தேரேறிச் செல்லுஞ் சூரியகிரணம் பாவிய ஏழுதீவுகளிலும் இவனுக்கிணையானவன் இல்லையென்று சொல்லிக்கொள்ள, அதனால் மகிழ்ந்திருந்த அருச்சுனனை எழுநாவுடைய அக்கினியிலிருந்து ஒருபூதம் புறப்பட்டு, அண்டகடாகங் குழுறவளர்ந்து ஆகாயத்திற் புகுந்து, ஓ அர்ச்சுனா! நீயுன்னுடையபுஜபலத்தைமதித்து, ஆரும் எதிரில்லையென்று இறுமாந்து, மமதை யடைந்து மகிழ்ந்திருக்கின்றனை, அதுசரியல்ல! உன்னிலு முயர்ந்தவர்கள் வெகுபேருண்டு. அதிலும் பிராமணாள் மெத்தவுஞ் சிறந்தவர்கள் உயர்ந்தவர்களைத் தாழ்ந்தவராக நிதானிப்பது உனக்குத் தகாதென்றுபுகன்றது, அவ்வார்த்தையை அர்ச்சுனன்கேட்டு, ஆ! பூதமே, என்னுடைய ஆக்கினைக்குள ளடங்கி, என்னிடத்திலிருந்து யாசித்து, எனது தயவுக்காக இதவு பேசிக்கொண்டிருக்கிற பஞ்சவேதியர்களை எனக்கதிகமெனச் சொன்னாய். வண்டுமொய்க்கு மாலையணிந்த வானவர் தானவர் இயாவரும் புகழத்தக்கதாய், எண்டிராமுகமும் போர்புரிந்து ஜயஸ்தம்ப நாட்டி விருதுக்கொடிபோட்ட என்னையோ எளிதமாய்ப்பேசினை? நீ முன்னஞ் சொன்னபடிக்கு இன்னொருக்காற் சொல்லுவையாகில், என்னுடைய பாணத்திற்கு உன்னை யிரையாக்குகிறேன்பார். என்று பல்லைக் கடித்து, வில்லைப்பிடித்து, புருவநெறித்து கண்களையுருட்டி விழித்துக் கருவினான். அவனது உக்கிரத்தைப் பார்த்த விக்கிரமபூதந் திடுக்கிட்டுத் திகிலடைந்து, தெரியாமற் செப்பினேனென்று மறைந்து சொற்கம் போய்ச்சேர்ந்தது. அப்பால் விஜயனானவன் தனது ஆக்கினைச் சக்கரத்தை யெங்குஞ் செலுத்தி, பரமசிவனுடைய நெற்றிக்கண்ணா லெரிபடாத மன்மதன்போலும் கோபால கிருஷ்ணன்போலும் மகா பராக்கிரமத்துடனே எதிரொருவரு மில்லாமலிருந்தான்.

அப்போது இவன் பேசியவார்த்தைக் கிசையாத பவனென்கிற தேவர் அர்ச்சுனனுக்கு நேரில்வந்து, தன்னையின்னாரென்று தெரிவித்து நீ உலகமெல்லாம் ஆண்டுவருகிறபடியினால் உன்னை நீதானேவியந்து புகழ்ந்து சந்தோஷப்பட்டுக்கொண்டாய். பெரியவர்களாகிய பிராமணாளைப் புகழாமல் இழிவாகப்பேசினாய். அவர்களப்படி குறைந்துபோவார்களாகில், தாம்தந்தைக்குப் பலமில்லாமல் அதனால் மெலிந்து பிறந்தபிள்ளைபலப்படுமா, வேதியருடைய மகிமையறிந்தும் அறியாதவன்போற்பேசினை. மறையவர்களுடைய தவம் செபம் ஓமம் இவைமுதலிய மகிமையினாலல்லவா இராஜர்கள் செங்கோல் செலுத்துவது பிராமணன் செய்கிறகருமகிரியைகளினாலல்லவோ சகலகோடி பிராணிகளும் சுகமுடனே உச்சீவித்துவாழ்கிறது, அவர்களின் நான்கு வேதபாராயணத்தினாலல்லவா மாதமாதம் வருஷம்பொழிவது சகலமும் பிராமணாளாதீனம். எக்கியபலத்தினால் உலகநிலை பெற்றிருப்பது. அந்தணருக்கு அதிகமானபேர் அவனியிலில்லை. இப்படியிருக்க நீ மூதற்சாதியாகிய முனிவர்களை இகழ்ச்சி பண்ணாதே, தேவேந்திரனைப் போலொத்தவன் கௌதமரிஷியினாற்பட்ட பாடுங் கெட்டகேடு மறியாயா? அகஸ்திய மகாமுனிவர் அலையுள்ள சமுத்திரத்தை அகங்கையி லடக்கிப் பருகினார். பிறகு மகாரிஷி சாபத்தினால் அக்கினிதேவன் பெதறிப்போயினான். ததீசி மகாரிஷியின் முதுகு முள்ளென்பினால் வச்சிரா

புதன் மலைகளின் ரக்கையை யறுத்தான்.
சனனுமகாரிஷி கங்கையைக் காதின்வழியில்
விடுத்தார். அங்கிரசவசு புத்திரனான பிரகஸ்
பதியினுடைய ஸ்திரீயை வருணனெடுத்
துப்போகவும், பிரகஸ்பதி வருணலோகத்
திற்குப்போய் மேற் கடற்சலத்தைக் குடி
த்து வறட்டவும். அதைக்கண்டு வருணன்
தேவ குருவின் மனைவியைக் கொண்டுவந்து
விடுத்து, அவரது பாதாக்கிராந்தனாய் அப
சாரக்ஷமை பெற்று அடி வணங்கிப் போன
தை நீ கேட்டதில்லையா?

ஒருக்கால் தேவேந்திரன் யாகமுகத்தில்
மருத்து தேவதைகளுக்கு அவிர்ப்பாகங்
கொடாமல் மறுக்க, அந்த மருத்து தேவ
தைகள் ஆலாம் போன்ற கண்களையுடைய
பெரும்பூதத்தை யுண்டாக்கித் தேவேந்தி
ரன் பேரில் விடுத்தார்கள். அதைக்கண்ட
இந்திரனடுங்கி ஓ சுவாமிகளே! அபயம்
அபயம், என்னை ரக்ஷிக்கவேண்டும், எனதப
சாரத்தைப் பொருக்கவேண்டும். என்று
தொழுது அவிர்ப்பாகமளித்து, சவுனகமகா
ரிஷியை வணங்கிப் பிராணனைத் தப்பித்துக்
கொண்டான். ஒருக்கால் தேவர்களியாவரும்
ராட்சதருடன் சண்டையிட்டுத் தொற்று
ஓடிப்போய் ஞான சொரூபியாகிய அகஸ்தி
யரைச் சரணமடைந்தார்கள். அவர்கிருபை
கூர்ந்து அநுக்கிரகம்பண்ண, அந்தப்பலத்
தினால் மறுபடியும் ராட்சதரை வென்று
வெற்றி பெற்றார்கள். ஒருக்கால் அந்தராக்ஷ
ஸர்களால் தேவர்களடிப்பட்டுஓடுகிறபோது
வசிட்ட முனிவர் கண்டு ராட்சசர் பேரி
லெதிர்த்து, நேத்திராக்கினியா லெரித்துப்
பொடிப்படுத்தி அண்டருக்குச் செயங்கொ
டுத்தருளினார். ஒருக்கால் தேவர்களுமரக்கரு
மிகுந்த போர்புரியுங்காலையில் உலகந்தடுமா
றிப் பல கலகங்கள் விளைந்தன. அக்காலத்
திற் சந்திர சூரியர் தொந்துபோய்விட்டார்
கள். பூமியெல்லாம் இருள் மூடிக்கொண்
டது. அப்போது தேவர்கள்தவச்சிரேஷ்ட
ராகிய அத்திரி மகாரிஷியி னிடத்திற்குப்
போய் அடைக்கல மென்றார்கள். அவருக்
குந் தயவுவந்து சூரியசந்திரர்களுக்குத் தகு
ந்த பலமான உடல்கொடுத்து, இயாவரா
லும் பயமில்லாதபடி வரங்கொடுத்து, ஆகா
யத்திற்கு அனுப்பிவிட்டுஉலகத்தை வெளிச்
சமாக்கி, ஒரு சொல்லினாலே ராட்சதரைப்
பாழாக்கி அதம் பண்ணிவைத்தார் இதல்
லாமலுங் கபிலமகாரிஷி சகரவம் ஸத்தாரை
ச்சாம்பராக்கினார். இப்படிக்கு வெகுகோடி
வேதியர்களுண்டு அவர்கள் புரிந்த ஒவ்
வொரு சரித்திரமுந் திவ்வியமாயிருக்கும் ஓ
புரந்தரன் மகனே! இப்பேர்ப்பட்ட மாகா
னுக்களை இகழ்ச்சி செய்வது உனது புகழ்ச்
சிக்குக் கேடென்று சொல்லினர். இவைய
னைத்துங் கேட்ட விஜயன் ஒன்றும் பேசா
மற் செத்தவன் போலிருந்தான். அதைக்
கண்டபவனாகிய தேவர் கோபித்து, ஓ அர்ச்
சுனா! உங்களுக்கிந்த நலமெல்லாம்வந்த
வாறு அறியேனென் றெண்ணினையோ?
பூர்வ நீங்கள் தத்தாத்திரேயரது பாதத்தில்
வீழ்ந்துவேண்டிக் கொண்டபடியாலல்லவா
உங்களுக்கித்தனை பெருமையும், அருமை
யும், மமதையும்வந்தன? என்று அலட்டிப்
பேசினார்.

அப்போது அர்ச்சுனனுக்குக் கொஞ்
சம்புத்திவந்து, திரிகாலமுந் தெரிந்த தத்
தாத்திரேயரை வழிபட்டபடியினால் நமக்
கிந்த அரசாட்சியுங் கீர்த்தியும் வெற்றியும்
வந்ததென்று இந்த மகாநுபாவர் சொல்லு
வது, நிசந்தான் நிசந்தான்: ஆனால் இனி
மேற் பிராமணனுக்கு நல்லவனாய்வழிபட்டு
நடக்கவேண்டும். வேதியர் நிந்தை கூடாது.
என்று சிந்தைகொண்டபோது அந்தப்பவ
ரென்னுந் தனஞ்செயனை நோக்கி, அப்பா!
இன்றுமுதல் அந்தணரைப்பணிந்து அவ
ருக்கடங்கித் துதித்துத் தொழுதுவருவை
யாகில், ஆயுசுவிர்த்தியும், ஐஸ்வரியசித்தி
யும், சத்துருசெய வெற்றியும், நல்ல நல்ல
புத்தியும்பெறுவை. அது தப்பினால் ஆயுள்
குறைந்து அழிந்துபோவாய், என்று புக
ன்று போய்விட்டனர். ஆதலால் பூதேவ
ராகிய பிராமணர்கள். மகத்துவத்தை ஒருவ
ராற் சொல்வதற்கெளிதல்ல. என்று வீஷ்
மர்சொல்ல, அதைக்கேட்ட அறக்குமாரன்
அன்புகூர்ந்து பாட்டன் பாதத்தில் நமஸ்
காரம்பண்ணி ஐயா! பிராமணனுடைய சரி
த்திரங் கேட்கக் கேட்க விநோதமும் பெரு
மையும், புண்யமுமாயிருக்கின்றன. தேவரீர்
இன்னு மெடுத்துச் சொல்லவேண்டு மென்
றுகேட்டார். அதற்கு வீஷ்மர் முரசக்கொ
டிக்கதிபனைப்பார்த்து அப்பா என்னருமை
பேரனே! எனக்கு நினைப்புத் தடுமாறிவரு
கிறது. ஆயாசமா யிருக்கிறது ஆதலால்தள
ம்விரிந்த துளவம் புனைந்த முகுந்தனை

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுவார். அவ ராலே நீயறிந்துகொள்ளுகவென்று சொன் ஞர். அதைக்கேட்ட குந்தி மூதற்புத்திரன் பச்சைமேனியனுகிய பரந்தாமனைத் தோத் திரம்பண்ணி ஐயா கிருஷ்ணமூர்த்தி! பிராம ணுளுடைய விசேஷத்தைக் கேட்க விரும் பிய அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று சிந்தித்தார். அதற்குப் பூத கியை முலைப்பாலுடனேயும் பிராணனுட னேயு முறிஞ்சியவள் வஞ்சகத்தை யொழித் தருளிய கிருஷ்ணபகவான் மகிழ்ந்து, வேதி யர் மகத்துவம் விளம்பத்தொடங்கினுர்.

---

## பூதேவர் மகிமையைப்பற்றிக் கூறிய தூறுவாசர் கதை.

ஐயா தருமமூர்த்தி ஐஸ்வரியம் ஆண் மை சுபுத்தி கல்வி புத்திரர் பெண்சாதி மோட்சம் ஞானம் ஆயுள் திடம் ஆரோக்கி யம் இவை வேண்டினபேர்கள் பிரமஞான முள்ள பிராமணுளை வணங்கிப் பூசித்துத் தொழுவார்கள். தீவினை வசத்தால் மகாபா தகஞ் செய்யவேண்டுமென்ன விரும்பினவர் கள், மறையவருக்குக் குறைவரும்படி புரி வார்கள். முன்னொருநாள் தூறுவாசரான வர் என்னிடத்திற்கு வந்தார். நானவருக்கு வேண்டிய உபசாரம்பண்ணி வணங்கி சுவா மி. தேவரீரேது இவ்வளவு தூரம் எழுந்த ருளியதென்று கேட்டேன். அதற்கவர் உம் முடைய வீட்டிற் சிலநாளைக்கு இருக்கவே ண்டி வந்தேனென்று சொன்னுர், அவஙிஷ் டப்படிக்கு நானும் உருக்குமணியுமனேவாக் குக் காயங்களொருமித்து அவருக்கு வருத் தம் வரவொட்டாமற் பரிவாகப் பூசைபுரிந்து வந்தோம். இப்படிக்கிருக்க அவர்ஒருவேளை கோபித்துக்கொள்ளுவார். சிலவேளைச் சந் தோஷப்படுவார். ஒருவேளை நல்லவார்த் தைகள் பேசுவார். சிலவேளை சிடசிடப்பா யேசுவார். ஒருவேளை அநேகம் பேரை யழைத்துவந்து சாப்பாடு வையென்பார். இன்னின்ன பதார்த்தஞ் செய்யென்பார். எனக்குச் சாப்பாடு வேண்டாம் போவென் பார். ஒருநாளைக்கு வீட்டிலுள்ள போசன மெல்லாவற்றையும் போடச்சொல்லித் தின் னுவார். இருக்கிற தண்ணீரெல்லாங் குடிப் பார். பஞ்சணையில் மெத்தெனப் படுத்துப் பகலில் நித்திரை பண்ணுவார். எழுந்து எங்கேயோ போய்விடுவார். அகாலத்தில் வருவார். இல்லாததைக் கேட்பார். ஒரு வேளை ஆமென்பார். ஒருவேளை அல்லவெ ன்பார், இன்னும் பண்ணுதகோலமெல்லாம் பண்ணுவார் அத்தனைக்கும் யாங்கள் மனஞ் சலியாமல் ஆதரவும் அன்புங் குறையாமல் அவரெந்தவழி போனுலும் அந்த வழியில் நின்று ஒருநாளைப்போற் பலநாளு முபசரி த்து வந்தோம்.

இப்படிக்கிருக்க ஒருநாள் எனக்குப் பாலரச அன்னத்தின்மேரி லிச்சையாயிருக்கிற தென்ருர். அப்படியே பால்ரச அன்னம் பண்ணிவைத்தேன். அவர் ஒருபாக முட் கொண்டு, மற்றதைத் தன்தேகத்திற் பூசுங்க ளென்ருர். அப்படியே பூசினேம். பின்பு ஆண் பெண்ணென்றில்லாமல் மூலஸ்தா னத்திற்கும் பூசச்சொல்லி, அக்கோலத்தோ டும் உன்மத்தன்போல் வீதியிற் புறப்பட் டார். நாங்களுங் கூடவேசென்றேம். என் னைப்பார்த்து ஒரு திவ்விய விமானங்கொண் டுவரச்சொன்னுர். அப்படியே அலங்கரித் துக்கொண்டுவந்தேன். அவ்விமானத்தின் பேரிற் ருனேறிக்கொண்டு, என்னையும் உரு க்குமணியையும் இழுக்கச்சொன்னுர். அவ் வாறே இழுத்தோம். மேடு பள்ளம் காடு கரம்பு தோப்பு சோலை மூலை முடக்கு சந்து பொந்து வீதி ஆற்றங்கரை குளத்தின்கரை இந்த மார்க்கங்களிற் போகச்சொல்லி விரை கிருர். நாங்களவர் மனதின்படிக்கெல்லாம் வலித்துகைகனத்து மெய்சலித்துஇருவரும் அலுத்துப்போனேம். அப்போது வெளி யிற் புறப்படாமல் வீட்டிலிருக்கிற பெண் பிள்ளை மெத்தகளைத்து இளைத்து விழுந்து விட்டாள். அதைப்பார்த்த தூறுவாசர்கீழே யிறங்கிவந்து, சாம்பசிவன்போல் தன் மே னியில் அணிந்திருக்கிற விபூதியை வழித் துப்போட்டார். அதுபட்டவுடனே உருக் குமணியெழுந்து தொழுதாள். பின்னையுந் தேரிழுக்கச்சொல்லி முடுக்கினுர். அதையந்த ஊராரெல்லாருங்கண்டு எங்களுக்காகப் பரிவு கொண்டு, பெரியவர்பேரிற் சண்டைக்கு வந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே இ வர் பின்னுமுடுக்கி, சுவ்தி என்று குதித்தார் அப்பால் அவர்களியாவரு முனைந்தார்கள். அக்கால் யாங்களவர்களைக் கையமர்த்தி, ஒன் றும் பேசாதீர்களென்று புகன்று, அன்புமா ருமல் வியர்வை கொடுக்கும்படிக்குப் பாடு

பட்டு அரண்மனைக்கு வந்தோம். உடனே யவ்விமல ப்ரதாப முனிவர் தேர்விட்டிழிந்து சிங்காசனத்திலேறினார். நாங்களிருவரும் பணிந்தெழுந்து, கட்டளையென்ன கருணைக் கடலே யென்றோம். அப்போது மகரிஷி சந்தோஷப்பட்டு இத்தனை நாளும் பண்ணிய இடர்கட்கெல்லா மிடங் கொடுத்துக் கொண்டு எனக்கு மனநோதல், வரவொட்டாமல் உபசரித்து வந்தீர்களன்றோ? இப்படி புருஷன் மனமும் பெண்சாதி மனமும் ஒருமைப் படுவது அருமையென்று உருக்குமணியை மிகப்புகழ்ந்து இதனைச் சொல்லுகின்றார்.

ஓ கற்புக்கரசீ! கடல் சூழ்ந்த காசினியெல்லாம் உனக்குள்ளாகிப் போகக்கடவது உனக்கு மாறுபட்டவர்கள் உன்னால் நசிக்கத்தக்கது. எல்லாம் உனக்குத் தாழ்ந்த வஸ்துவேயல்லது மேற்பட்டதில்லை. இன்னுஞ் சிலநாள் இகத்திலிருந்து அப்பாற் பரந்தாமனுடைய பதவி சேர்வாய். என்று சொல்லிக் கண்ணனைப் பார்த்து, ஓ கிருஷ்ணா! உருக்குமணியும் நீயும் பாயாசம் பூசியபோது மேனியெல்லாந் தடவினீர்கள். உள்ளங்காலிற் பூசவில்லை. அதனால் உனக்கு உயிர் ஸ்தானம் உள்ளங்கால்தான். அது வினைக்கீடாய் வந்து முடியும். மற்ற எந்த அஸ்திரம் உன்பேரில் பட்டாலும் அதனா லுனக்கொரு உபத்திரமிராது. செல்வங் குறையாது. எப்போதும் பிராமணர்பேரில் விசுவாசம் வைக்கவேண்டியதென்று வற்புறுத்திச் சொல்லி, திதியார்த்த பிண்டபலனும் உனக்குண்டாமென்றும் உன்னிடத்திற் பிரியமுள்ள இவ்வுருக்குமணிதேவி என்றென்றைக்கும் உன்னைவிட்டு நீங்காளென்றும், நீ யிவளைவிட்டு நீங்காயென்றும், அனேக வரங்கொடுத்து ஆசீர்வதித்து, உடனே யந்திரத்தியானமாய் மறைந்துபோயினார். அன்று முதல் அந்த மகானுபாவரை நினைத்து அவர் ப்ரதாபத்தை வாழ்த்தி, நானும் உருக்குமணியும் வீட்டிலிருந்தோம். நாளுக்கு நாள் இந்திரச் செல்வமா மெங்கள் வீட்டில் நிறைந்து மிகுந்த சிறப்படைந் திருந்து, அற்புதமான ஆபரணம் இரத்தினம் நிதிப் பொக்கிஷம் பீதாம்பரம் பட்டுபட்டாவளி இவைகளையெல்லாங்கண்டு பூரித்து சந்தோஷங்கொண்டு சம்பிரமமாயினோம் ஓ தருமரே அந்தணருக் குபசாரம்பண்ணி அவர்களிஷ்டப்படி நடந்தால், பைந்துளவோன் பதம் பெறுவதுமன்றி அஷ்ட ஐஸ்வரியங்களுமுண்டாம். ஆயுள் விர்த்தியுமாகும். ஆதலால் நிறைமொழி மாந்தராகிய வேதியர் மகிமை நானறிந்தபடி நீறறியச்சொன்னேனென்று நிகழ்த்தினார். இவையனைத்துங்கேட்ட சந்திரகுலத்தோன்றல் தன்னை மறந்து சிறந்து களாப்பழம்போன்ற திருமேனி படைத்த கண்ணனைப் பார்த்து, ஓ மேகவண்ணனே ரிஷியீஸ்வரர்கள் சந்தோஷப்படும்படியான தூறுவாசர் கயிலர்சபதியின்சொரூபமென்று சொல்லுகிறார்களே. அஃதெப்படி பிறப்பிலியாயும் சந்திரசடாமண்டல தாரியாயும் மோட்ச நாயகனாயும் முக்கட்பெருமானாயு மிருக்கின்ற அச்சிவபெருமானுடைய அற்புதத்தையும் தூர்வாசருடைய உற்பத்தியையுந் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டார். அதற்குக் கேசவன் மகிழ்ந்து பூரித்துச் சொல்லுகின்றார்.

---

## சிவ்பிரான் சிறப்புந் தூறுவாசர் பிறப்புங் கூறுதல்.

ஓ சிலைமதனை நிகர்த்த தருமராஜனே! சிவபெருமானுடைய பெருமைப் பிரதாபத்தை யெடுத்துச் செப்பவல்லவரார்? அதை தெரிந்துகொள்ளும் புத்திமான்க ளெவர்கள். இயாவருமக்குச் சொல்பவர்கள் இயானும் பிர்மாவும் அவருடைய பிரபாவமறிய மாட்டோமென்றால், எம்மைவிடத் தெரிந்தவரெவரிருக்கின்றார்கள். ஆகிலும் அவனருளாலே அவன்றாள் வணங்கி, என்னும் அருள்வாசகப்படி அவரது கடாட்சம் பெற்று அன்புக் கருகனானே னாகையால் அவரைப் பூசித்த பலத்தினாலே தைரியமாய்த் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன். நீர் அவருடைய சித்விலாசத்தைக் கள்ளமில்லாத உமதுள்ளத்திற் கொள்ளுமென்று விள்ளுகின்றார் ஓ வள்ளலே! உருத்திரசெபம் ஒரு நூறு அன்புடனோதினவ னெவனோ. அவன் இம்மையிற் காணப்படாத சாலோக சாமீப சாரூபனென்னும் பதவிமூன்றுங் கடந்து நான்காவதாகிய சாயுச்சியமும் பெறுவான். மகாதேவனென்று வசனித்தவர்களுக்கு மிஞ்சின பெரியோர்களில்லை. அவரைத் தாமசகுணனென்று தெரியாதவர்கள் சாற்றுவார்கள். அவர் கர்மிகளுக்குத் தாமசகு

ணத்தர். தர்மிகளுக்குச் சாத்வீகமுணத்தர். அலர்குண மிறந்தவர். ரூபமில்லாதவர் அநுக்கிரக நிமித்தப் மானிடச் சட்டைசாற்றித் தோற்றுவர் பசுபதியானவர். மேருவம் அணுவுமாக விளங்குவார். பஞ்சபூதசகித மாயுலாவுவார். முழுதுமுணர்ந்த பற்றற்றவரிதயத்திற் பதிவாயிருப்பவர். பிரணவாட்சரப் பொருளானவர், நான்குவேத நாயிலர் ஏழைபங்காளமூர்த்தி தக்கனெக்கிய பங்கர், அவ்வெக்கியத்திற் சிதைந்தவர்களை யெல்லாம் பிழைப்பித்த துங்கர் திரிபுர ஹரணஞ் செய்தவர், அந்தகாலத்தில் நகைத்தபோது அந்நகையினின்றும் ஓர் கிழவிகிளைக்க, அதனைக்கண்ட தேவர்கள் சதாசிவத்தை வணங்கி, இக்குழவியை யெங்கட் களித்தருள்கவென்று கேட்டனர். அதற்குக் காளகந்தரர் கடாட்சித்து, இவனுடைய பெயர் துர்வாசனென்று சொல்லி, அக்குழந்தையை நோக்கி, அநுசூயாதேவிபொருட்டு நீ குழந்தை பருவமாயிருந்து வளர்கவென்று கொடுத்தருளினர். அதுமுதலவர் சிவனெனும் பொருளாய் நின்று வளர்ந்து செகமெலாந் திரியுஞ் சிதேந்திரிய மூர்த்தியாயினர்.

ஆதலால் சிவமாகிய அப்பொருளே மெய்ப் பொருளாய் என் கிரகத்தில் வந்து எழில்பெற்றிருந்தது. ஒப்பற்றவனே? தூறுவாசர் திரிபுர தகனனுடைய சிரிப்பின்கிளைப்பென் றுணர்வீர். இப்படி துர்வாசரை தந்தருளிய தூமணியும் எனதுக்க மாமணியுமாகிய மஹாதேவ மூர்த்தியானவர் இவ்வெட்டுத்திக்குமாகி, நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் அஷ்டமூர்த்தியாகி, பிர்மா, விஷ்ணு உருத்திரன் மகாதேவன் என்னும் நான் குருவாகி சிமை சத்தி விந்து நாதமென்னும் நான்கருவாகி, இவற்றி னிடையே சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களை அருவாவுருவமா யிருந்து நடாத்துஞ் சதாசிவ மூர்த்தியாகி யிருப்பவர். அவருக்கனேகதிருநாமங்களுண்டு. அவைகளிலொரு நாமமேனும் உறுதியாய் வளுத்துவாராகில், அயனெழுத்தையுமந்தகனெழுத்தையும் அகற்றி வாழ்வார்கள். இன்னுமச் சிவபிரானுடைய லீலாவிபூதியைச் சொல்வு என் தரமல்ல. என்று ஸ்ரீகிருஷ்ணருரைக்க, குன்றுபோலுயர்ந்த தோளான் குறைதீர்ந்தே னென்று உருத்திர மந்திரத்தினால் மகாதேவனைத் தோத்திரம்பண்ணி, இருகரத்தையுஞ் சிரத்திலேற்றி நமஸ்கரித் நு மீட்டுந் தன் பிதாமகரைப் பணிந்து சுவாமி நல்வழி நூலைக்கேட்டுச் சிந்தித்து அவ்வழியி னில்லாமல் அதற்கு மாறுபடப்பேசி சாஸ்திரங்களை நிந்தித்து தன்மனது போனபடி திரிந்து கடவுளிரண்டு வகைத்தென்று நீனைத்து கலகம் விளைத்து பகைத்து எக்காலத்தும் ஒருவரோடொருவர் கர்வங்கொண்டு பேசுகிறார்களே அஃதென்னத்தினால் சாஸ்திரங்களைப் பார்த்திருந்தும், கோத்திர சூத்திரங்களை மறந்து நிந்திப்பானேன். இதனை யெனக்குச் சொல்லியருளவேண்டுமென்ன வீஷ்மர் விளம்புகின்றார்.

---

## மாந்தர்க்கு முக்குணப் போற்றின் முறைமை கூறுதல்.

அப்பா புண்ணியவானே இராசதம் தாமதம் என்னுமிக் குணங்களையுடையார் சாத்திர வரோதியர் சமயப் பகைவர் விந்துதிக்கும்போதே தொந்து இக்குணங்களாகியதந்தைக்கு வந்தவர். சாத்வீகருண முடையவர்கள் புராணசார சாஸ்திரங்களை நம்பிச் சிரவணமனன நிருத்தியாசனஞ் செய்வார்கள். அவர்களுக்குப்பேதந் தோற்றாது. கடவுளை அபேதமா யபேட்சித்து அநுக்கிரகம் பெறுவார். இந்த வஸ்து பேதமற்றவர்கட்கு மரண வேதனை வராது. மோசக்காட்சியிற் றூட்சியிராது. வாதாடிக் கெடுவார்கள். மமகாங்காரத்தாற் பூலோகத்தாருக்கு மெய்க்கும்படி புகழுக்கும் பொருளுக்கும் பாடுபட்டு பிறவிக்கடந்தேடி, பழியும் பாவமும் பூண்டு புலன்பொறி குன்றி. பிறரால் நகைக்கப்படுவார்கள். பொருளையுடையவர்கள்பிறருக்குந் தெரியாமல் அப்பொருளைஎப்படிக்காப்பார்களோ அப்படிக்கு அருளுடையவர்கள்மௌனத்திலிருந்து ஆராய்ந்தேறி அவ்வருளினமாற்றத்தை வாய்விட்டுரையாமல், மாறுதன் மோட்சத்தை தாட்சியில்லாமல் பெறுவார்கள். அவரவர்களுடைய வசனத்தினால் இவன் லோகமெச்சப் பேசுசிறவன் இவன் உண்மையானவனென்று அறிந்துகொள்ளலாம். என்று வீஷ்மர் குறிக்க, தருமராசன் சந்தோஷித்து, ஐயா தாம்! செலவுகொடுத்த

குணங்களில் தெரிந்த சாத்வீகமென்றுந்தெரியாத சாத்வீகமென்றுச் செப்புகின்றார்களே அஃதென்னவென, அதற்கு வீஷ்மர் விளம்புகின்றார்.

---

கர்மசாது தர்மசாதுக்களி னியல்பு கூறுதல்.

அப்பனே! கர்மசாது தர்மசாதுஎன்று இருவருண்டு, கர்மசாதுவாகிறவனாரென்றால் கோபம் மனஸ்தாபம் பாபம் லோப மிவையில்லாமல் ஒரு சோலிக்கும் போகாமல் சாத்திரங்களும் அதனது கருத்துமறியாமல்ஒருவர் சொன்னாலுந் தெரியாமற் சும்மா யிருப்பவன் இவன் பூர்வமு மனிதசென்மம். இப்பவு மனிதசென்மம். தாமசாது வாகிறவனாரென்றால்? பூர்வந்தேவனாயிருந்து, சிலகாரியத்தாற் கர்மபூமியில் மனிதகணமாய்ப் பிறந்திருப்பவன் இவன் அகோராத்திரியும் பகலுஞ் சாஸ்திர புராணங்கள்பார்த்து, அவற்றின் பொருளுணர்ந்து, அப் பொருளின் வழி நின்று, பிரபஞ்ச மிப்படியென்று ஆராய்ந்து, பொய் யென்பதெல்லாந் தள்ளி, மெய்யென்பதைக் கைக்கொண்டு, ஞான பாதத்தை நாடி, மற்றொரு நிமித்தமில்லையென்று செபதபங்கள், சிந்தித்து யாதிலு பேதாபேத மில்லாமல் ஈஸ்வரத் தியானமாயிருப்பன். ஆதலாற் சாத்வீகஞானம் பொருந்தினவர்கள் யாரோ? அவர்கள் தேவயோனியினின்றுஞ் சிறிது தவக்குறையால் மனுஷயோனியில் வந்தவர்களென் றறிக. என்று சொல்லக்கேட்ட தருமராஜன் பாட்டனைப்பணிந்தெழுந்து, ஐயா! மனத்திலுதித்த ஐயமெல்லாந் தீர்ந்தேன். தேவரீர் கிருபையினாற் சகல சங்கையுந் தேர்ந்தேன். இனிக் கேட்க வேண்டுவ தொன்றுமில்லையென்று தோன்றுகிறது. வேறே யுண்டானால் எளியேன்மீது அன்பு பாராட்டி அனுக்கிரகம்பண்ணவேண்டும். என்றுஉபசரித்து வந்தன வணக்க வழிபாடு புரிந்து, சிந்தைகளிகூர்ந்து, தேகம் பூரித்து, அவருடைய திருவடியைத் தனது திருமுடிமேல்வைத்து கண்களிலொத்தி முத்தமிட்டுக் கொண்டனர். தம்பிமார்களும் அப்படியே வணங்கிஇணங்கினார்கள்.

---

வீஷ்மர் கிருஷ்ணமூர்த்தியினிடத்தி லனுக்ஞைபெறல்.

கேட்டீரோ ஜெனமேஜய மகாராஜனே இப்பால் வீஷ்மாசாரியார் பௌத்திர ரைவரையும் ஆசீர்வதித்து, திருதராஷ்டிரன் விதுரன் காந்தாரி குந்திமாதேவி இவர் முதலான பந்துசனங்களைப் பரிவோடும் பார்த்து, கிருபாசாரி உயுச்சன் சஞ்சயர் இவர் முதலான பரிசனங்களைப் பக்குவப்பட நோக்கி, மற்ற வேதவேதியர்கள், முனீஸ்வரர்கள், ரிஷீஸ்வரர்கள், தவசிகள், இவர் முதலானவர்களை இருகைகூப்பி யிறைஞ்சி, பரந்தாமனைச் சிரந்தாழ்த்தி வணங்கி அவர் திருவடித் தாமரையை அகத்துளமைத்து உள்ளன்பினாற் றொழுது, வெளிப்படையாகப் புகழ்ந்து ஓ கருணைக்கடலாகிய கண்ணனே! ஓ சர்வலோக சரண்யா! தேவரீர் பூமிதேவியினுடைய பாரந்தீர்த்துப் பொறையாற்றி ரட்சிக்கவேண்டிப் பூமியிற் கிருஷ்ணவதாரம் பொருந்தினீர். உம்முடைய விலாசம் ஒருவராலுங் காணப்படாது. ஒருவருக்குந் தோணப்படாது. அது மகா மாயாவினோத விலாசம். அடியேன் ஒரு காரணார்த்தமாகப் பிறந்து கலாமதி குலத்திற் சிறந்து இருந்தேன். இப்படிக்கிருந்ததில்ஏதாகிலுங் கருத்தறியாத பெருத்தபிழை புண்ணியக்குறைவு தீவினை நிறைவு இவற்றைப் பண்ணியிருப்பேனாகில் அவைகளை யெல்லாந் தேவரீர் க்ஷமித்துத் தண்டித்து நல்லகதி யடையும்படிக்குச் செலவுகொடுமையா திருநாரணனே என்னை ரக்ஷியும். என்னை ரக்ஷியும். என்று உள்ளும் புறம்பும் ஒருமையாயுருகிக் கேட்டார். அதற்கு அனந்த கல்யாணகுணன் கிருபைகூர்ந்து, இனிமேலும் எப்பேர்ப்பட்ட காரியங்களினாலும் உமக்குப் பிறவியில்லை. உமது பதமாகிய எட்டாம் வசுவினியற்கையைப் பெறுவீர். யாதென்றுங் குறைவில்லை. சுகமாய்ப்போய்ச்சேரும்என்று சொல்லிய கர்த்தாவின் திருவாய்மொழி கேட்டு வீஷ்மர் ஆனந்தப் படும்போது, ரிஷீஸ்வரர்கள் முதலாயினோர் சதாஸ்து சதாஸ்து என்று கடல்போலிரைந்து ஆசீர்வதித்தார்கள்.

---

## வீஷ்மர் திரிதராஷடிரனுதியருக் கறிவுறுத்தி விடைகோள்ளுதல்.

உடனே வீஷ்மர் எட்டவிருந்த திரிதரா
ட்டிரனைக் கிட்டவழைத்து அப்பா மைந்த
னே! உன் பிள்ளைகளாகிய பாண்டவர்கள்
உன்னை அன்புடனும்பிரியத்துடனும் பாது
காப்பார்கள். சவுக்கியமா யிருந்து சம்பத்
தைப் பெறக்கடவை. என்றன்போ டருள்
வாழி சாற்றி, விதுரன் சஞ்சயன் உயிச்சன்
கிருபாசாரி இவர் முதலியபேர்களுக்கு நல்ல
வார்த்தைகள் வழங்கி மிகுந்திருப்பவர் நீங்
கள்தாமென்று புகழ்ந்து குந்தி முதலாகிய
ஸ்திரீகளுக்கெல்லாம் இதமான வார்த்தை
கள் சொல்லித் தருமராஜனைப் பரிவோடும்
பார்த்து, அப்பா தருமமூர்த்தி! நானிதுகா
றும் பூமியிலுள்ள அரசர்களையெல்லாம்வெ
ன்று நவநிதிகளையுஞ் சம்பாதித்துத்தானுகி
கட்குச் செலவிட்டதுபோக என் பொக்கிஷ
த்தில் மிகுதியாயிருப்பதை நீ கைக்கொண்டு,
கலைக்ஞானங் கற்ற அந்தணர் வித்வான்கள்
பந்துக்கள் இவர்களுக்களித்து புகழ்பரிமளி
க்கப் பொற் குன்றுபோல் வாழ்ந்து அரசர்
களை வருத்தாமல் குடிகளை நெருக்காமல்,
படைகளை உறுக்காமல் பந்துசனங்களை ஒறு
க்காமல் திலோதற்பணக் கடன்களை வெறுக்
காமல் செய்யுங் கருமங்களைச்சுருக்காமல்இல்
லாத காரியங்களைப் பெருக்காமல் தேவஸ்தா
ன தருமங்களைக் குறுக்காமல் தம்பிமார்களை
மறுக்காமல் தையலரைமுறுக்காமல் பெருக்க
மாகத் துரைத்தனம்புரிக. இந்தப் புருஷோ
த்தமனையும் பூதேவர்களையுங்கைவிடாதுகாத்
துப் போற்றிவருக என்று அனுக்கிரகம்ப
ண்ணி ஆசீர்வதித்து, சமஸ்தமானவர்களை
யுஞ் சமஷ்டிப் பார்வையாகப்பார்த்து, நான்
விண்ணுடேறுவதற்குச்செலவுகொடுங்களெ
ன்று அந்நண்ணர் பணியும் பதாம்புயன்கே
ட்டனர் அக்காலியாவருங்கைகூப்பி, சுவாமி!
தேவரீர் சித்தப்படியே செலவுசெலவுஎன்று
விரைந்து இரைந்து பரிந்தார்கள்.

## வீஷ்மர் தமது பிரபாசன வசுபத மடைதல்.

அந்தவேளையில் வசிட்டரிட்ட சாபம் மலைபோல்வந்து எதிர்நின்று, ஐயா வீஷ்மரே! நான் போகிறேனென்று செலவு பெற்றுக்கொண்டு வணங்கிச்சென்றது. அப்பால் வீஷ்மரானவர் பிரபாசன வசுதேகத்துடன் மும்மூர்த்திகளையுங் கும்பிட்டுத் தோத்திரம்பண்ணி மூவர் நாமங்களையும் ஸ்மரித்துத்தியானித்து, ரேசக பூரகநாடியைச் சுழிமுனையிலிருத்தி வாயுவைப்பந்தித்து ஆகாயத்திலெழுப்பி சிதம்பரத்தினின்ற திருநடனங் கண்டு தேஜோன்மய சோதியாயெழுந்து அந்தரம் புகுந்து யாவருங் கண்டு மகிழ்ந்து புகழ்ந்துகொண்டிருக்கப் பொருந்தி மறைந்தனர். உடனே தேவர்கள் புஷ்பமாரி பொழிந்துத் தேவதுந்துமி முதலியன முழக்கினர்கள். தேவேந்திரன் முதலிய திக்குப் பாலகரும் வசுக்களுங் கணங்களும்எதிர்கொண்டுகண்டு உபசரிக்கும்படியாகப் பழைய பிரபாசன வசுபதத்திற் புகுவதாயினர். அதுவரையிலும் இந்திரன் முதலாகிய சகலரும் அவருடன் பந்து கட்டாகப்போய் அப்பதவியில் வைத்துவிட்டுத் திரும்பினர்கள். சகலாத்ம கோடிகளுஞ் சந்தோஷப்பட்டதுகள். பூமிதேவி பொங்கி விளையாடினள். தரும தேவதைத் தனக்குத்தானே களிந்தது. எல்லோருமின்பமுற்றனர்கள். இவ்விடத்தில் இறந்துபோனபாட்டனருடைய ஸ்தூல தேகத்தின்மேரிற் பாண்டவர்கள்விழுந்து அடித்து மோதிக்கொண்டு, முறையோ முறையோவென்றழுது முடியாத துயரத்துடன் உடல் மறந்து சோபித்து மலையருவிகள்போற் கண்களில் நீர்வழிந்தோட விம்மிவிம்மி வெதும்பி வெதும்பிக் கமறித் திணறிக் கதறினர்கள். ஸ்திரீ ஜனங்களின் பிரதாபஞ் செப்பி முடியாது. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியுந் தேம்பித் தேம்பி அவருடைய கீர்த்திகள் அனைத்துஞ்சிந்தித்து அழுதார்.

### திரிதராஷ்டிரனும் தருமராஜனும் வீஷ்மருக்கு ஈமவிதிக் கடன் திகள் நிறைவேற்றுதல்.

இப்பால் ஒருவருக்கொருவர் பற்பலவாக்கியங்களைச் சொல்லி ஒருவாறு தேறி துக்க மாறி இனிச் செய்யவேண்டிய பிரேதவிதிக் கருமங்களைப் பாராட்டுவதானார்கள். அக்காலையிற் சிற்பர சொரூபராகிய மகாரிஷிகள் ஓமம் வளர்த்தி அக்கினிவிர்த்திபண்ணினார்கள். இராசாக்கள் முதலியபேர்கள் சந்தனக்கட்டை அகிற்கட்டை தேவதாரிக்கட்டை முதலியவெல்லாஞ் சேகரித்துக் காஷ்டமடுக்கினார்கள். கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் யாவுங்கொணர்ந்து கலசபூசை புரிந்து தேன்பால் இளநீரினுமுள்ள திருமஞ்சனத் திரவியங்கள் எல்லாஞ் சேர்த்து ஸ்நானமாட்டி சுகந்தமிகுந்ததகுந்தபரிமள மாலைகளைப்புனைந்து துல்லியமான வெண்பட்டுகள் தரித்து சந்தன குங்கும புனுகு சவ்வாது பனி நீர் முதலாகிய வாசங்கள் திமிர்ந்து திரிதராட்டிர மகாராசனுந் தருமராஜனுந் திருவடியைப் பிடித்தும், நகுலசகாதேவர்கள் திருமுடியைச் சுமந்தும் வீமார்ச்சுனன் மத்தியத்திற் றாங்கியும் எடுத்துவந்து பொன்னணிப்பணி பூஷணங்கள் நிரம்பிய புட்பக விமானத்திலேற்றி, திரிகாலந் தெரிந்த தேவரிஷிகள் முதலியபேருஞ் சுலோக மந்திரஞ் சொல்லிச்சூழ்ந்துவர, பிராமணாள் சாமவேதங்கள்சாற்றிவர, வீமராஜனும்அர்ச்சுனராஜனும் இருபக்கத்திலும் வெண்சாமரம் வீசிவர, குந்திமாதேவி முதலாகிய ஸ்திரீ ஜனங்களியாவரும் ஆலவட்டம், தாலவட்டம், மகரதோரணம், பூரணகலசம், புஷ்பம், பொன்னக்ஷதை, வெள்ளி யக்ஷதை, சமிதை, நெய், பொரி, தண்டுலம், பொற்பூ, வெள்ளிப்பூ இவைகள் இறைந்து நிறைந்துவர, நகுல சகாதேவர் முதலிய பேரப்பிள்ளைகள் நெய்தீவர்த்தி ஏந்திவர ஞானவானாகிய விதுரன் வெண் முத்துக்குடை பிடித்துவர சஞ்சயன் உயிச்சன் மஞ்சட் பாவாடை விரித்துவர கிருபாச்சாரியார் அட்சதையும் புஷ்பமும் இறைத்துவர யானை சேனை முதலிய ஆடம்பரத்துடன் சகலபேரி வாத்தியங்களுந் தழங்கத் தருமராஜனும் திரிதராட்டிர மகாராஜனுஞ் சம்பிரமமாய்க்கொண்டுபோய் ஈமஞ் சேர்த்துக் காஷ்டத்திலேற்றினார்கள். உடனே தேவப்பிராமணர்கள் எல்லாங்கூடி த்திரிதராட்டிரமகாராஜனால் ஓமம் மூட்டுவித்து அந்தஅக்கினிபகவானுக்கு வீட்டுமர் திருமேனியை உணவாக்குவித்து, கொள்ளிக்குடம் முதலிய கிரியைகள் யாவும் முடிப்பித்து ஆடையாபரணாதிகளும் அளவற்ற கோதானம் பூதானமுதலிய சோடச மகாதானங்களுஞ் செய்வித்தார்கள். ஐம்பத்தாறு தேசத்தரசரும் பதினெண்படை மன்னருங் கவிந்து பற்பல வரிசைகள் புரிந்து பந்துஜன சமேதமாய்ப் பொருந்தியிருந்தார்கள். அன்றுமுதற் பன்னிரண்டுநாளுங்கங்கைக்கரையிலிருந்து, நித்திய கருமவிதியும் புரிந்து உத்தரகிரியைப் பிண்டம் தற்பணம் இவை முதலியவுங் குறைவர நிறைவேற்றி அநேகமகாரிஷிகளும் பிராமணாளும் ஸ்ரீகிருஷ்ண பகவானுஞ் சூழ்ந்திருக்க மத்தியில் தம்பியரோடு தருமராஜன் இருந்தார். திரிதராட்டிரனும் அந்தப்புர ஸ்திரீகளும் ஏனைய சகல ஜனங்களும் ஆங்காங்கு அமர்ந்திருந்தார்.

---

### கங்காதேவி தன் புத்திரனுக்குப் பரிந்து வந்து புலம்ப கிருஷ்ணமூர்த்தி தேற்றுதல்.

அந்த வேளையிற் கங்காதேவியானவள் தன்பிள்ளையாகிய வீஷ்மரிறந்துபோனசேதியறிந்து ஒருஸ்திரீரூபமாய் பிரகாசம்பெற்ற சகலாபரண பூரணபூசித மேனியுடன்வந்து நீலோற்பலம் போன்ற கண்களிலிருந்து தாரைதாரையாய் நீர்சொரிந்து துக்கம்பெருகிச் சோபித்து குழந்தாய் குழந்தாய் என்றுருகிக் கரைகின்றாள். அப்போது யாவரும் கங்காதேவியென்று அறிந்து பணிந்து கசிந்தார்கள். அக்கால் அந்த அம்மன் அருந்துயராற்றாளாகி ஓ பேரறிவாளனே! ஓ என் கருப்பத்தில் ஊறிப்பிறந்த பாலனே? ஓ இங்கிதகுணனே? ஓ தருமந்தவருத சத்தியனே? ஓ நித்தியவிரதனே ஓ யாவருக்குநல்லவனே ஓமூவருக்குமவனே? உன்னுடைய வல்லவனே! ஓதென்புலத்தார் கடன்தீர்க்குந்திண்ணனே! ஓகுற்றமற்றவனே! ஓதேவர்களறியாத ரகசியமெல்லாந்தெளிந்து தேர்ந்தவனே! ஓ நின்மலானந்தனே? உன்னுடையவிதி இப்



தருமராஜன், ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலானவர்களோடு சென்று பீஷ்மாச்சாரியாரை காணுதல்.

யடியா முடிந்தது? சிகண்டியென்னும் அம்
மையோ உன்னைச் செபித்தது? ஆகிலுஞ்
சிகண்டியா லிறந்தாயென்பது எனக்கு ஐயத்
தைத் தந்தது. வச்சிராயுத முருகாத உன்மே
னியில் ஓர் பஞ்சையினுடைய பாணம் எப்
படிபாய்ந்தது. அடாமகனே. அடா மகனே
என்று வாய்விட்டலறினாள். அப்போது
தருமராஜனவர் கிருஷ்ணமூர்த்தியைநோ
க்கி, அம்மாதவ கேசவ மாலாகிய கிருஷ்ண
பகவான் அவ்வம்மனைப் பார்த்து, ஓ கங்கை
யே! சிகண்டியுடனே அநேக தேவர்களுங்
கூடிக்கடும்போரிட்டாலுஞ்செயிக்கக்கூடாத
உம்முடைய பிள்ளை வசிஷ்டருடைய சாபத்
தினால்வந் தவதரித்து ஆயுள் முடிந்து, தன
க்குத்தானே உத்தராயண புண்ணிய காலந்
தேடி உயிரை யொழித்துக்கொள்ளச் சக்தி
யிருந்தபோது ஒருவனா லிறந்தா ரென்பது
உடற்பாசமேயன்றி வேறன்று. மறுபடியும்
பழய வசுபதம்போய்ச் சேர்ந்தார். தந்தை
யான சந்தநு மகாராஜனால், எமவாதை யில்
லாதிருக்க வரம்பெற்றிருந்தார். தானே வே
ண்டுமென்று தனுவை யொழித்தாரே யல்
லது மற்றொருவராலுமில்லை. உமது வயிற்
றிற் பிறந்த பலன் அபல மாகாமல் விமல
மான பதவி யேறினார். இப்பேர்ப்பட்ட
ஜீவன் முத்தனை எவர் சொல்லுவார்கள்!
இதைக்குறித்து நீர் துயரப்பட வேண்டா
மென்று புருஷோத்தமன் புகன்றார். அவ்
வார்த்தை கேட்ட மாத்திரத்திற் கங்காதேவி
மனந்தேறி, தருமன்முதலிய யாவரையுநோ
க்கி ஆசீர்வதித்து இது தேகசம்பந்தமின்றி
சிந்தைகுவிந்து மறைந்துபோயினாள். இப்
பாற் பூமிதேவியின் துக்கந்தீர ராச்சியபரிபா
லனம் புரியுந் தருமராஜன் பாட்டனைக் குறி
த்துப் பரதவித்து, பெரியோர்களுடன் வச
னிக்கிற சம்பாஷிப்பினால் மீட்டு மனந்தேறி
பிரயாணமாகி, அநேகங்கோடி பிராமணாள்
ரிஷிகள், தபசிகள், ஆசீர்வதிக்க, ஸ்ரீகிருஷ்
ணபகவான் குளிர்ந்த கருணைக்கண் பார்வை
யுடன் அனுக்கிரகம் பண்ண, சகல சந்தோ
ஷத்துடனே தம்பிமார் தன் புஜங்கள்போற்
பக்கத்திலிருக்க, இராஜ பரிவட்டனையுடனே
பட்டுவான்கள் பிரதாபம்பாட, கட்டியர்
கொண்டாட, மங்கள வாத்திய முழங்க, சங்
கம் பேரி தழங்க, அங்கங்கும் அன்னதான
மோங்க சொர்னதானம் வழங்க, மன்னவர்
களிக்க, நன்னய நாவலர் துதிக்க, அமரர்
கள் புகழும் அஸ்தினாபுரத்தில் வந்து முத்
துப்பந்தலமைத்து சிங்காசனத்தில் வீற்றிரு
ந்து, தன்னைப் புடை சூழ்ந்த சகோதரா
ளோடு பாண்டவச்சகாயனும் பக்கத்திலிருக்
கத் திரௌபதாதேவியுடன் இராச்சிய பரி
பாலனம் பண்ணிக்கொண்டு வந்தார்.

## வீஷ்மர் முத்திபெற்ற சருக்கத்தோடு,

### அனுசாசனிகபர்வம்

### முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:







ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீ மஹா பாரதவசனம்.

## பதினான்காவது

# அஸ்வமேத பர்வம்.

### கண்ணன் துதி.

ஆவணியு ரோகணிநா ளமரபக்கத் தட்டமியி லரிவை வேற்கட்
டேவகிபாற் றோன்றிநந்தன் மனைவளர்ந்து மாதுலனுந் தீயகஞ்சப்
பாவியுமி றறவீட்டிப் பார்த்தன்விடு மொருதனித்தேர்ப் பாகனாகிக்
காவலர்சூ ழரங்கத்தி லவர்பகை தீர்த்தவருட் கண்ணுபோற்றி.

### சூதபுராணிகர் வாக்கியம்.

[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு சாந்தித்திரையத்தின் மூன்றும் பாகமாகிய அனுசாசனிகபர்வத்தைக்கூறியவைசம்பாயனமுனிவரை ஜெனமேஜெயமகாராஜன்பணிந் தெழுந்து, சுவாமி! இராச்சிய பட்டாபிஷேகத்தோடு திருமுடிதரித்துக்கொண்டு செங்கோ லியற்றிவருந் தருமராஜனவர் தனது மூதாதையாகிய வீஷ்மாச்சாரியரிடஞ் சென்று அர சுரிமைக்குரிய சகல தருமங்களையுங்கேட்டு அஸ்தினபுரத்தையடைந்தபின்பு, மீட்டும் ஆன் மார்த்தத்திற் குரிய தருமங்களையும் விசாரிக்கக்கருதி ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலிய சகல பரிசனங்களோடு வெளிப்பட்டு அவ் வீஷ்மரிடஞ்சென்று வேதாகமங்களில் வகுத்திருக் கின்ற பிரமாணங்களையெல்லாம் தொகுத்துரைக்க வேண்டுமென்று கேட்க, அதற்கவரவ்வா றே அவ்வவற்றின் விதிகளையும் விலக்குகளையும் உதாரணக்கதைகளோடு கூறியதன்றி; ஸ்ரீ கைலாயபதி உமாதேவியாருக் குரைத்தருளிய சில சிவ ரகசியங்களையுஞ் சிருட்டியாதிமுறை களையுஞ் செகசீவபர வியல்புகளையுங்கூறி ஆசீர்வதித்துத் தருமராஜன் முதலிய சகலரையும் அஸ்தினபுரத்திற் கனுப்பியதும், அவையனைத்தும் கேட்டானந்தித்த தருமராஜன் மீள வுந் திரிதராஷ்டிரன் காந்தாரிமுதலியகுரவர்களோடுங் கண்ணன் முதலிய பரிசனங்களோடு ம் வேதவேதியர் முதலான சாதுக்களோடும் பிரயாணமாகிவந்து பாட்டனைப் பரிவோடுங் கண்டு தன்னோடுவந்த பேர்களையெல்லாங் குறிப்பித்து வணங்கி நிற்க, அப்போதவ ரவ்வ

வர்கட்குந் தனித்தனி அறிவுறுத்த ஆசீர்வதித்துப் பூபாரந்தீர்த்த புண்ணியனுகிய ஸ்ரீபுருஷோத்தமன் மகிமையையும் பூதேவர் மகத்துவததையுங்கூறி யாவரையு மகிழ்வித்து, இது நான் சரசசயன்ங்கொண்ட மூன்ருவ துத்தராயனமாதலால் இனியிம்மூவுலகை மறக்கக் கிருபை புரியுமென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியி னனுக்ஞை பெற்றுத் தனது எட்டாவதாகிய பிரபாசன வசுபதமும் பெற்றதும், அதுகண்ட தருமனுதியவருக்குத் திரிதராஷ்டிர மகாராசனுல் தீக்கடன் முடிப்பித்துக் கங்கைக்கரையிற் றிலோதகக்கடனும் நடப்பிக்க, அப்போதவ் வீஷ்மாச்சாரியருடைய தாயாகிய கங்காதேவியானவள் தன்மைந்தனைக் கருதிப் புலம்ப, அவளை வாசுதேவனைக்கொண்டு ஒருவாறு தேற்றியனுப்பிவிட்டு அங்ஙனே பன்னிரண்டு நாள் வரையிலிருந்து அவர்க்கான மற்றக் கிரியைகளை யெல்லாம் விதிமுறைப்படி நிறைவேற்றி யாவரும் அஸ்தினுபுரம் வந்துசேர்ந்ததும், ஆகிய விச்சரித்திரங்களை யெல்லாஞ் சாங்கோபாங்கமாகக் கேட்டுச் சன்மசாபல்லியமாயினேன். இப்பால் அந்திய பஞ்சகத்தின் முதற்பாகமாகிய அஸ்வமேத பர்வத்தையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனமுனிவர் மகிழ்வோடுஞ் சொல்லத்தொடங்கினுர்.]

## முதலாவது,

# தருமன் சோகநிவாரண சருக்கம்.

துதி.

இலனது வுடையனி தெனநினை வரியவன்
நிலனிடை விசும்பிடை யுருவின னருவினன்
புலனொடு புலநல னொழிவிலன் பரந்தவந்
நலனுடை யொருவனை நணுகின நாமே.

ஓ சந்திரகுல திலகனுன ஜெனமேஜெய மகாராசனே! பாண்டவருள் முதற் ரேன்றலாகிய தருமராசனுனவர் எட்டாம் வசுபதம் பெற்று இவ்வுலக வாழ்க்கையை விட்ட மூதாதைக்கு முடிக்கவேண்டுங் கருமங்களை யெல்லாம் பெரிய தந்தையினுல் முடிப்பித்துக்கொண்டு பழையபடி அஸ்தினுபுரம் வந்து அரசியற்றி வருகின்ருர். இப்படியிருக்குநாளி லொருநாள் தனது மனத்தின்கண் ஏதேதோ சில சிந்தாகுலங்களை வகித்து, இராச்சியபாரத்தி லிச்சையில்லாதவராகி, தனது கருத்தை வெளிப்படுத்தாமல், தற்செயலாய் பாகீரதிக் கரைக்குப் போகவேண்டு மென்று பிரயாணமானுர். அப்போது ஒப்பொருவருமில்லாத சுப்பிரதீபம்போன்ற தம்பியரும் பக்கத்துணையாகிய பரந்தாமனும் அளவற்ற முனிபுங்கவர்களும் வேதவேதியரும் புடைசூழ்ந்துவர, அவர்களோடு யாதொன்றும் பேசாமல் அவர்களையும் விட்டுப்பிரியாமல், உன்மத்தம் பிடித்தவரைப்போல் ஒருவாருகிய மனத்தை யுடையவராகிச் சென்று பாகீரதிக் கரையை யடைந்து, பையப்பையச் சிறிது நேரங்கிடத்தலுஞ்சிறிதுநேரம்நடத்தலுஞ் சிறிதுநேரம் படுத்தலுமாகி, (பாலரோடு பேய்பித்தர் பான்மையென நிற்பதுவே, சீலமுள ஞானியர்தஞ் செய்கை.) என்று சொல்லும் பெரியோர் வாக்கியத்திற் கொப்பாகி யிருக்கின்ருர். அவருள்ளக் கருத்தை அவ்வள்ளலாகிய ஸ்ரீவாசுதேவ னறிந்துகொண்டு, அவரெந்தெந்த வேளையி லெப்படிக் கிருக்கின்ருரோ? அந்தந்த வேளையிலப்படிக்கெல்லா முடன் பிரியாமதிருந்து சம்பாஷணை செய்துகொண்டு, பொழுது போகிறதற்குமுன் நாம் அஸ்தினுபுரம் போய்ச் சேரலாம் வாருமென்று அழைக்க

னர். அதற்குத் தருமராசன் அவரைப் பார்த்து, ஐயா! கிருஷ்ணமூர்த்தி! எனக்கு அஸ்தினுபுரமும் வேண்டாம். அரசாட்சியும் வேண்டாம். இந்தச் சரீரமும் வேண்டாம். இவ்வுலகில் நானிருந்து என்ன பிரயோசனம்? தாயினுமினிய பாட்டன் முத்தி பெற்ருர். அவர் இறக்கும்படிக்கு யுத்தம் புரிந்தேன். வெற்றி யடைந்தேன். இதனுல் நானும் ஒரு வீரனுனேனென்று மகிழ்ந்திருக்கின்றேன். அந்தோ! யுத்தம் பதினெட்டு நாளென்று நேமித்துக்கொண்டு, ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் மற்றப் பிரஜைகளையும் வதைத்து இப்பால் நானனுபவிக்கப்பட்ட போகமும் இன்பமும் துன்பமேயல்லது சுகமென்பதில்லை, ஓ முதல்வனே மூதாதை முதலாகிய பேர்களைக் கொன்றது பாவத்திலு மகா பாவம். இவ்வாறு எனக்கு நேரிடச் செய்த தீவினையைக் குறித்து என் சொல்லுவேன்? என்றுரைத்துப் பெருமூச் செறிந்து களைத்துப்போயினர்.

---

### வேதவியாசர் தருமராஜன் மனேவிசார மாற்றற்கும், மாநிதிசேர்த்தற்கும், ஏதுகூறுதல்.

அதுகாலையில் வேதவியாசர் பிரசன்னமாகி, களைத்து வீழ்ந்த காவலனைக் கைகொடுத்தெடுத்து ஆசீர்வதித்து ஓ தருமநந்தனு! நீயென்ன ஒருவாருய் இருக்கின்ருயென்று வினவி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை நோக்கினர். அப்போது துவாரகாபுரிவாசனுனவர் வேதவியாசரைப் பார்த்து, ஓ சுவாமி! இந்தத் தருமராஜன் மெத்த விசனப்பட்டுக்கொண்டு, வீஷ்மர் முதலாகிய சகலமான பேர்களையுஞ் சண்டைப்போட்டுக் கொன்றுவிட்டேனென்றும், நான் மகாபாவியானேனென்றுஞ் சஞ்சலப்படுகிருர். நான் என்ன சொல்லியுந் தேருதிருந்தவரை நான்முகனுதியருங் கொண்டாடத்தக்க இவர் மூதாதையிடங் கொண்டுவந்து விடுத்துப் பலநாள் தேற்றிவைத்தும், இன்னுமிவர் தன் மனதிற் கொண்ட வியாகூலத்தை விட்டவரல்லர். ஆதலால் இவரைத் தேற்றும்விதம் இனியென்னுலில்லையென்று சவுரி சொல்ல, அம்மொழியைக் கேட்ட வியாசர் முரசக்கொடி வேந்தனைப் பார்த்து, ஓ குந்திதேவிக்கு முதற்குமாரனே! நான் சொல்வதைக் கேள். சகலசராசரங்களுக்குந் தாயாகியுஞ் சர்வலோக சரண்யனுகியும் விளங்காநின்ற மோட்ச கர்த்தாவாகிய இந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தரவின்படிக்கு நடத்திய உனக்குத் துக்கமேது? துயரமேது? விசாரமேது? வீண்பழியேது? உனக்கொன்றும் இல்லை, இதல்லாமல் வசிட்ட முனியாளவர் அஷ்டவசுக்களில் பிரபாசன் வசுவைச் சபிக்க, வருணனுகிய சந்தனுவுக்குங் கங்காதேவிக்கும் புத்திரனுகப் பிறந்த வீஷ்மனை நீ கொல்லுவதற்குங்கொல்லுவிப்பதற்கும் உனக்கதிகார முண்டோ? கர்த்தனுகிய முதல்வனெவனே? அவனுல் எல்லா வல்லமையுமாகும். யாவற்றையும் நீயென்று மேற்கொள்ளாமல் அவனுக் கற்புதம் பண்ணிவிடுக வென்றனர். இவ்வாறு வியாசர் மொழியைக் கேட்ட தருமராசன் ஐயனே! ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியின் விலாசம் இப்படிக்கிருந்தபோதிலும், இன்னுர் கொல்லச் சொல்ல இன்னுர் கொன்ருர்களென்று பூமியுள்ளவரையிலும் பழிச்சொல் நின்றுவிட்டதே. மகானுக்கள் முதலிய பிரஜைகளும் வாடிக்கையாய் வசனிப்பார்களே. எப்படியும் நான் முன்னிலையாய் நின்று பழிக்கு வழி தேடிக்கொண்டேனே. எனக்கு நரகத்திற் கிடமுண்டாச்சுதா? இல்லையா வென்று நவின்றனர். அம்மொழிக்கு வியாசர் விளம்புகின்ருர்.

ஓ சந்திரகுலாதிபனே! உலகத்தில் வழங்குகிறபழி கழிந்துபோவதற்கும் பாவமான துன்னையணுகாம லிருப்பதற்கும் நீ ஒரு அஸ்வமேதம் புரிந்தால், மெத்தவும் நன்மையுண்டாகும். ஆனுல் அஸ்வமேதஞ்செய்வது மிகவும் அருமை. வேதவிதி தப்பாமல் அஸ்வமேத முடித்துப் பிரமாண பூசைசெய்து, பூரி முதலியதுங் கொடுத்து, சோடச மகாதானங்களும் வழங்கி, மங்கள ஸ்நானஞ்செய்து, அன்னதானமும் வஸ்திரதானமும் அபாரியாய்க்கொடுத்து இஷ்டதெய்வத்தை இன்புறத்தொழுவையாகில், உன்னை விட்டுத் தீவினை முதலிய வெல்லாந் தீங்கு நீங்கும். பூர்வஜனனம், இப்போ தெடுத்திருக்கின்ற ஜனனம், இனி யெடுக்கவேண்டியிருந்தால் அந்தச் சன்னம்இம்மூன்றையும் போக்கி மேலான கதியையும் புகுவிக்கும். ஆகையால் பரிமேதம் பண்ணி, பதினெட்டு

நாள் யுத்தம்புரிந்த பாரத்தில் இறந்தவர்களினால் உனக்குண்டாகிய தோஷத்தைப்போக்கடித்துக் கொள்ளுகவென்று புகன்றனர். அச்சொல்லினால் தருமராஜன் சந்தோஷமடைந்து, வியாசரை நமஸ்கரித்து, ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைக் கிட்டி, ஐயா! அஸ்வமேதம் நடத்துவதற்கு விஸ்தாரம் பணம் பிடிக்குமே அதற்கெப்படி யென்று கேட்டனர். அதற்கு ஸ்ரீ வேணுகோபாலர் சிறுநகை விளைத்து, வியாசரைப் பார்த்து, ஓ வாதராயணரே, உலகாளப்பட்ட உத்தமன் திரவிய மில்லையென்றால், நானிதற்கென்னசொல்லுவேன், இந்த வேடிக்கை வார்த்தையை நீரே கேளுமென்றனர். அதற்குத் தருமராஜன் இருவரையும் பார்த்து, ஓ ஐயமீர்! நான் சொல்வதைக் கேளுங்கள். துரியோதனன் எங்களைச் செயித்துப் பட்டங் கட்டிக் கொள்ளவேண்டும் என்கிற அவாவினாலும் பத்தாறுதேச ராஜாக்களுக்கும்அவனவனுட்டில் அவனவனுக்குவரியிறை கப்பணம்மாப் பென்று கையொப்பம் பண்ணிவிட்டுப் பொக்கிஷத்தில் இருந்த பெருந் திரவியத்தைக் கையாண்டதுமல்லாமல் இந்தச் சண்டைக் காகவந்த மண்டலீகர்முதலியபேர்களுக்கும் படைகளுக்குங் கைகொண்டமட்டும்விஸ்தாரம் விறையம்பண்ணிப் போட்டான் அவனுமிறந்துபோய்விட்டான் படைத்துணைவந்த பார்த்திபர்கள்ஒன்றொழியாமல் மடித்துபோனார்கள்.

அந்தராஜாக்களுடைய பிள்ளைகள்பேரமார் பந்துக்கள் தப்பிப்பிழைத்தவர்கள்கைம் பெண்சாதிகள் இப்பேர்ப்பட்டவாள் தான் இப்போ திருக்கின்றார்கள். தேசமும் நாசமாயது. வரும்படியும் போயது. நாங்களும் எங்கள் துணையான வேத்தர்களுக்கு அவாளவாளுடைய இராச்சியத்தை துமாலாயனுபவிக்கும்படி கையொப்ப மிட்டுக் கொடுத்திருக்கின்றோம். இப்போது நொந்திருக்கிற இராஜபுத்திர பந்துக்களெல்லாம் வந்து எங்களைத் தொந்திரவுசெய்கிறார்கள். அதனுலவர்களுக்குச் சிலதிரவியங்களுந்தவிபண்ணி எங்களுடைய நாடுநகரத்திலுஞ் சிலவற்றைக்கொடுத்துப் பாதுகாத்து வருகின்றோம். இதனாலுங் கொஞ்சம்பொருட்செலவுண்டாயது வரும்படியில்லை, நாங்களுந் தாழ்ந்திருக்கின்றோம். ஈஸ்வரச் செயல் நாளைக்கெப்படியோ தெரியாதென்று நவின்றனர். அப்போது வியாசபகவான் அவரைப் பார்த்து, ஓ தருமராஜனே, அஸ்வமேதயாகத் தொடங்குவதற்குப் போதுமான திரவியங் கிடைக்கும்பாயஞ் சொல்லுகிறேன் கேள். சூரியவம்சத்திற் பிறந்தமருத்துவ மகாராஜன்பெருத்த தனங்கள் சேர்த்து அநேக யாகங்களியற்றி, கோடா கோடிப்பிராமணர்களுக்கு அப்பொருள்களைக் கொள்ளையாகவிட்டு, வெகுகாலம் வரைக்குங் கையோயாமலுங் கொடுத்து இப்படி செலவழிந்ததுபோக மிகுதியாகிய பொருள்கள் அளவு பிரமாணமில்லாமலுந் தொகை வகை தெரியாமலுமிருந்தன. அந்தத் திரவியங்களை அவ்வரசன்பள்ளம்வெட்டிப் புதைத்து விடும்படிக்குக் கட்டளையிட, அப்படியே புதைத்துவிட, பின்பவ்வரசனவன் இச்சொத்துக் குரியவர்கள் யாரோ அவர்களுக்கிடைக்குமென்றுசொல்லிப்போய்விட்டான். அங்கே தன மிருக்கிறது. நீ போய் வெட்டிப்பார். உனக்குரிய பொருளாயிருக்குமாகிற் சுளுவிற் கிடைக்கும். அந்தத் திரவியத்தைவைத்துக்கொண்டுஅஸ்வமேத யாகம் முடிக்கலாமென்று வியாசருரைக்கத், தருமர் பகட்டுஐயா, அந்த மருத்துவமகாராஜனுடைய சரித்திரங் கேட்க விருப்பமாயினேன் அதனைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுபணிந்தார். அவ்வாறே வியாசபகவான் சொல்லத்தொடங்கினர்.

---

## வியாசர் தருமராஜனுக்கு மருத்துவ மகாராஜன் சரித்திரமுரைத்தல்.

ஓ பாண்டு நந்தனா! ஜோதியி லுயர்ந்த சூரியபகவானுடைய வம்சத்தில் மநுவென்பவர் தோன்றினர். அவர் இவ்வுலகத்தை யாண்டு மநுவிக்கியான மேற்படுத்தி நீதிசெலுத்தி வந்து பிரதானியனென்னும் பிள்ளையைப் பெற்றார். அவருக்கு இக்குவென்பவர் பிறந்தார். அவருக்கு இட்சுவாகு தோன்றினார். அவருக்கு நூறு பிள்ளைகள்உதித்தார்கள். அவர்களில் மூத்தபிள்ளைவிமசுவென்பவருக்கு விவிசனென்பவர் பிறந்தார் அவருக்குப் பஞ்சத் தசரென்று ஐம்பது பிள்ளைகள் தோன்றினார்கள். அவர்களில் ஜேஷ்டன் பலினென்பவன். அவன் மகா பாவியாயும் மிகப் பொல்லாதவனாயும் கொடுங்

கோல் மன்னனுயுமிருந்து தனது தம்பிமார் நாற்பத்தொன்பதின்மர் மந்திரியர் பிரதானியர் சேனுபதியர் குடிபடையர் இவர் முதலான சகலருக்குங் குருரனுய், தீயிலுங் கொடியனுய், அறிவில்லாதவனுய், இராச்சியபாரம் பண்ணிவருகிருன். அவன் பூமியிலுள்ளசெனங்களுக்கெல்லாம் பொல்லாதவனுயு நிலையில்லாதவனுயு மிருந்தும், அவனுக்கு ஒருநல்லகுமாரன்பிறந்தான். அவன் மேலான புத்தியும் யுத்தியும் கற்றறிவும் ஜீவகாருண்யமு மமைந்த அழகன் அவனை உலகத்தார்மதித்து, மிகவுந் துதித்தழைத்து, கிரீடந்தரித்து, செங்கோள்முத்திரை யளித்துத் துரைத்தனம் பண்ண விடுத்தார்கள். அந்தப்பிள்ளை அரசுபுரிந்து வருவதை ரிஷீஸ்வரர்களும் இந்திராதி தேவர்களுங்கண்டு களித்து, மிகவு மகிழ்த்து கொண்டாடி இவன்றந்தை தேடிக்கொண்ட நிந்தையைப் போக்கித்தனது மரபுக்குப் புகழுண்டாக்கிக் குடிபடைகளைச் சீர்பெற வைத்துப் பேர் பெற்ருனென்று ஆசீர்வதித்து, மாதமும் மாரிபொழியும்படிக்கு வாழ்த்தினுர்கள். அந்தப்பெரியோர்களின் மங்களாசாசனத்தினுல் அவன் நாளுக்கு நாள் நந்நீதியிலோங்கி, அவனுடைய நாடுங் காமதேனுேடு கற்பக விருட்சம்நிறைந்த தேவலோகம்போற்சிறப்புற்று, பிராமணுள் வித்துவான்கள் ஏழைகள் பேதைகள் தரித்திராள் நோயாளிகள் இவர்கள் முதலாகியபேர்களைக்கண்டவுடன் பரிந்து, அவர்கட்குப்பூமி, யானை, கரி, பரி, தேர், பொன், பொருள், இவைகளெல்லா மரியாதைக் கிரமமாகக்கொடுத்து, சகலவுயிர்களையுங் காத்திரட்சித்து, தருமந் தப்பாமல் ஆறிலொருகடமை வாங்கி, சௌரியம் பாராட்டி, பகையென்பதெங்கனுமில்லாமல் அடுத்தவர்களையாதரித்து, பகைத்தவர்களைப் பாழாக்கி, இயாவருக்கு மிங்கிதனுய், சத்தியமோங்கிய நித்தியடங்கள உசிதனுய், மகா கீர்த்தியோடுந் துரைத்தனம் பண்ணிவந்தான்.

அப்பா தருமநந்தனு! வரவுக்கு மேற்பட்ட செலவு பண்ணுகிறவனை வையகம் பயித்தியக்காரனென்று பேசுமல்லவா? அந்தப்பேச்சை நிறுத்தும்படிக்கு இவ்வரசிளங் குமாரன் மிகுந்த பொருட்செலவு செய்து, பொக்கிஷத்திற் றிரவியமில்லாமற் போக்கடித்துக்கொண்டான். இந்தச் சேதியைச் சத்துருக்களாகிய இராசர்களறிந்து, தீபமுள்ளமட்டும் இருள்கிட்டாது. தீபமாறினுல் இருட்டும், திருட்டும் எப்படிமேலிடத் தகுவனவோ: அப்படியே பகைவர் மேலிட்டுச் சண்டை போட்டார்கள். அவர்களை வென்று படை யுதவியும் அப்படைகளை வைப்பதற்கு பொருளுதவியு மில்லாததினுல் எதிரியினிடத்தில் தனது கோட்டையையுங் கொடியையும் விட்டுவிட்டுக் காட்டிக்கோடி போய்விட்டான். அக்காட்டில் தவமிழைத்திருந்த மாதவமுனிவர்கள் மகாரிஷிகள் முதலியபேர்க ளிவனைக்கண்டு, ஐயோ! மெய்யான தர்மிஷ்டியாச்சே, மேலான சத்தியம் இவன்பேச்சே, வரவுக்கு மிஞ்சிய செலவு செய்து இந்தக் கெதியாச்சே இவன் வாழ்வனைத்து மிவ்வாறு குன்றிப் போச்சே, என்று விசனங்கொண்டு, நாமெல்லோருங் கூடி இந்த அரசனுக்கு ஐஸ்வரியமும் பட்டாபிஷேகமு முண்டாகும்படிக்குப் பண்ண வேண்டுமென்று எண்ணங்கொண்டு, அவ்வண்ணலைக்கூவி, ஓ இராஜகுமாரனே! நீ இன்றுமுதல் வடதிசைக் கதிபனுகிய யட்சகுல குபேரனைக் குறித்துத் தவமிருந்து நன்மையைப் பெறக் கடவையென்று நவின்று, அத்தவத்திற் குரிய மந்திரோப தேசமுஞ் செய்தார்கள். பின்பவ்வரசன் அவர்களுபதேசித்த மந்திரங்களை யுச்சரித்துத் தபசு பண்ணினுன். அத்தவத்திற்கு அளகைக் கதிபன் பிரத்தியக்ஷமாய்வந்து அவனது மநோபாவமறிந்து, நல்வினைப் பயனுல் நல்மெல்லா முண்டாகக் கடவதென்று வரங் கொடுத்துப் போயினுன். அவனுடைய அநுக்கிரகத்தினுல் உடனே அஷ்டைசுவரியங்களுங் கலந்துவந்து கைகூடின. அது முதலவன் கோடையாற் காய்ந்தபயிர்வாடையாற் பேய்ந்த மழையிற் றளிர்க்கும் வாறு போல அபிவிர்த்தியாகி பழைய பட்டணமும்வந்துசேர்ந்து, சூரியனைக்கண்ட பனி போல தீவினையகன்று கரந்த னென்னும் பெயரோங்க, காவலரேங்கிப் பின்வாங்க, வெற்றியும் வீரமும் பெற்று வாழ்ந்தான். அதனுல் ஆதிமனு இவன் ருனென்று சொல்லும்படிக்கு அரசுபுரிந்து வருநாளில் மூலதாமரைவாசியாகிய பிர்மாவி னுடைய பிள்ளைகளில் ஆங்கிரீசு யென்பவர். இந்த

கரந்தனென்னும் அரசனுக்கு நிரந்தர நீங்காத பிராண சினேகிதனாக இருந்தார். அந்தப் பெரியோனுடைய உதவியினாற் பிர்மா விஷ்ணு உருத்திரன் முதலாய் இந்திராதி தேவர்களுஞ் சந்திராதி மூவர்களுங்கொண்டாடும்படிக்கு அஸ்வமேத முதலிய யாகங்களைச்செய்து, பர்வதராஜ புத்திரியும் பரமசிவனும் பிரத்தியக்ஷமாய்க் கைலாய பதவி கொடுக்கச் சிவலோகஞ் சேர்ந்துசாயுச்சியம் பெற்றான்.

இவன் பிள்ளை ஆவிதீட்சனென்பவன் அனேகமான ஓமங்களைச்செய்து பூமியைப் புரந்து சொற்க பதவியைப் பெற்றான். இவன் குமாரன்றான் மருத்துவ மகாராஜனென்பவன். இவனில் யீரேழுலகத்தும் பேரோட்டி, சந்திர வட்டக்குடை நீட்டி, வெற்றிக்கொடிநாட்டி, அகண்ட ராச்சியாதிபதியாய்த் தாமரையிற் பிறந்த முத்தைப்போற் பிரகாசித்து, சகலருந் தோத்திரம் பண்ணத் தக்கதாய் அஷ்ட திக்கஜங்கணெற்றியில் தன்னுடைய பிரதாப வீரபட்டங் கட்டி, கரியகுழலும் கமலவிரலும் பெரிய தனமும் உரியமனமும் சிறிய தொடையும் குறியயிடையும் நறியகுழையும் அறியபிறையும் அன்ன நடையும் வன்னவுடையும் பொன்னின்வடிவும் கன்னன் மொழியுமுடைய அரம்பா ஸ்திரீகளினாலே எத்தேச காலமும் பாடும்படியாகிய புகழ்ப் பிரதாபக் கீர்த்தியைப் படைத்தவன். நயம்பெற்ற அசேயசவுரியன். அரசசிகாமணி, தெய்வசிகாமணி, தன்னை நாடி நத்தினபேருக்குத் தாயானவன், தன்மேல் மோடிவைத்த பேருக்கு வாயாதவன், தீனபந்து, தீனதயாளு, தருமசத்திய நெறிமுறை பிசகாத பிரமன், தனுர்வேத சாஸ்திர முதலியகலைக்யானங்க ளெல்லாவற்றையுங் கற்ற பரமன், இந்திரவைபவன், இராசர்கள் பணியும் வீரகண்டாமணி யணியும் பாதன், இவ்வகைத்தான சிறப்புக்களை வாய்ந்த அரசன் ஒரு யாகஞ் செய்யவேண்டுமென்றெண்ணி, சகலவுபகரணங்களுஞ்சம்பாதித்து, எங்குமுள்ள முனீஸ்வரர்களையும் ரிஷீஸ்வரர்களையும் மற்றப் பெரியோர்களையும் வரவழைத்து தனது பாட்டன் கரமந்தனுக்கு ஆசாரியராயிருந்து யாகத்தைச்செய்துவைத்த ஆங்கீரசுவென்னு மகாத்மாவைத் தருவித்து உம்முடையபுத்த குமாரனாய்த் தேவகுருவாயிருக்கின்ற பிரகஸ்பதி பகவானைக்கொண்டு நானினைத்த காரியங்களை விக்கினமின்றி நிறைவேற்றி வையுமென்று கேட்டுக்கொண்டான். அதற்கவர் நீரே போயழைப்பது மிகவு முத்தமமென்றார். அதைக்கேட்கவுந் தானே அவ்வியாழபகவானை அக்கறையாய்த் தேடுவதானான். இந்தக்கருத்தை யறிந்த தேவேந்திரன் பிரகஸ்பதிக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து இன்சொலியம்பி, ஓ சுவாமி! தேவரீர் தேவகுருவானவர், இந்தத்தெய்வபூமியிலிருந்து யாகங்களைச் செய்து எங்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து நாங்கள் பெருமையடைச்செய்யும் புண்ணியவான். பூலோகத்தரசனான் மருத்துவராஜன் உம்மைக்கொண்டு யாகமுடித்துக் கொள்வதற்கு அழைக்கத்தேடுகிறான். நீர் பூலோகத்திற்குப் போய் மனிதனாகிய அம்மருத்துவ ராசனுக்கு யாகம்பண்ணி வைப்பீராகில், தம்முடைய தேவதத்துவம்போய் மனிதத் தத்துவ மேலிட்டு முந்திப்போம். மந்திரார்த்தங்களும் பிந்திச் சிந்திப்போம். ஆனதால் எங்கள்பேரிற் பட்சமிருந்தால் அந்தச் சூரிய குலத்திராசன் தொடங்கப்போகின்ற வேள்விக் கிடங்கொடுக்காமல் னிறுத்திப்போடும். அவன் வேண்டுமானால் நீர் தெய்வலோகத்தை விட்டுப் பூலோகத்திற் போயிருக்க வேண்டும். தான் உண்மையைச் சொன்னேன் என்றியம்பினான்.

அந்தச சொல்லைக்கேட்ட தேவமந்திரியானவர் இந்திரனைப் பாரத்து, ஓ தேவராஜனே! நீர் சொன்னதறிந்தோம், தேவபுரோகிதன் கர்மபூமியிற் மானிடருக்குக் கருமங்கள் செய்யலாகாது. அப்படிக்கல்லவென்று புரோகிதம் பண்ணினால், மிகுந்த அபவாதம் நேரிடும். மருத்துவ மகாராசனுக்கு நானுடன்படத் தக்கதில்லை. உம்முடைய மனதிற் சந்தேகப்பட வேண்டாம். எக்காலமும் எரிந்துக்கொண் டிருக்கப்பட்ட அக்கினி பகவானனவர் குளிர்ந்துபோனாலும் எக்காலமுஞ் சோதியாய் வெளிச்சத்தைத் தரப்பட்ட சூரிய பகவானனவர் இருளடைந்து போனாலும், சராசரமாகிய ஜீவாத்துமாக்கள் புண்ணப்பட்ட அகிர்த்தியங்களையெல்லாம் பொறுத்திருக்கின்ற பூமிதேவிக்குக் கோபம் பிறந்து யாவரையுங் கொன்று

நாசம்பண்ணிப்போட்டாலும், பூமிக்காதாரமாகிய மகமேறு வேர் பறித்து வீழ்ந்துவிட்டாலும், அல்லது பூமியெல்லாம் உலாவித் திரிந்தாலும், நான் பேசிய வசனந் தப்பமாட்டேனென்றார். இப்படி உண்மையான உறுதி வார்த்தை புகன்ற வியாழபகவானுடைய பேச்சைக் கிரிவைரியாகிய தேவேந்திரனுந் தேவர்களுங் கேட்டுமகிழ்ந்து அவரவரிருக்கையில் அமர்ந்திருந்தார்கள். அந்தவேளையில் மருத்துவமகாராசன் தேவகுருவினிடத்துக்கு வந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு, சுவாமி! தேவரீர் தந்தை எங்கள் பாட்டனுக்கு அனேகயாகங்கள்செய்துமுடித்து மேலானபலனைப்பெறவைத்தனர். அந்தப் பரம்பரையின் படிக்குத் தேவரீர் தான் தொடங்கப் போகின்ற யாகத்தை முடிப்பிக்க வேண்டுமென்று வேண்டினன். அதற்குப் பிரகஸ்பதி சொல்லுகின்றார். ஓ அரசனே! தேவராசனாகிய ஆகண்டலன் ஒரு வேள்வி செய்யவேண்டுமென்று என்னுடன்சொல்லியிருக்கின்றார். இதல்லாமல் நான் பூமியில் வந்து மானிடருக்கு யாகம்பண்ணி வைக்க மாட்டேன். அப்படி செய்வேனாகில் தேவர்களுக்கு மிகுந்த அவமானமாயிருக்கும் எங்கள் தகப்பனார் தேவலோகத்திற்கும் பூலோகத்திற்கும் பொதுவாகையால் பூலோகத்திலும் யாகத்தை முடிப்பித்தார். அவருக்கந்த அதிகாரமுண்டு அவரைப்போல் நானிரண்டு லோகத்திற்கும் பொதுவென்றுஞ் சமமென்றும் பேசப்படாது. எனக்குந் தேவகாரியமிருக்கிறது. நானிப்போது வரத்திராது. இன்னும் யாரைக்கொண்டாவது வேள்வி முடித்து கொள்ளுமென்று மறுத்துப் பேசினார்.

அதுகேட்ட மருத்துவ மகாராசன் மனம் வெறுத்து உற்சாகமற்று, பெருமூச்சு விட்டு, மகா துக்கத்துடன் விண்டலத்தை விட்டு மண்டலத்திற்கு வருகின்றான். அப்போது நாரதமகாமுனிவரெதிரானார். அவரையவன்கண்டு பிரதக்ஷண நமஸ்காரம் பண்ணி, ஓ சுவாமி! துன்பசாகரத்தில் மூழ்கிய வெனக்கு இன்பத்தோணிபோல் வந்து காட்சி கொடுத்த இறைவனே என்றுவாழ்த்தவும்அவனுக்கு நாரதர்ஆசிவழங்கி, ஓமகாராசனே உமது கண்களிற் சலம் பொழிய வேண்டிய காரண மென்னவென்று கேட்டனர். அதற்கு மருத்துவ மகாராச னவரை வணங்கி, ஆண்டவனே ஒருயாகம் பண்ணுவதற்காக பிரகஸ்பதியை வேண்டினேன். அவர் தந்தையின் சாம்பிரதாயத்தையும் பாராமல் மறுத்து விட்டார். அதனாலே ஆயாசம் நேரிட்டதென்றான். அதற்கு நாரதரவனைத்தேற்றி, ஓ ராசனே தேவகுருவானவர் வராமையினால் உமக்கு யாகம் நிற்கப்போகிறதில்லை. அந்தப் பிரகஸ்பதிக்கு நேரிளையவரும் பிர்மாவுக்குச் சமானமானவருமாகிய சம்வர்த்தன ரென்றொருவ ரிருக்கின்றார். அவருக்கும் இந்தப் பிரகஸ்பதிக்கும் பரஸ்பரமாகாது, விரோத வயிராக்கிய மேலிட்டிருக்கின்றது. ஆகையா லவரிப்போது இல்லறத்தை விடுத்துத் துறவறத்தை யடுத்துத் திகம்பரனாய்த் திரிகின்றார். அவரைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்தால் உம்முடைய வேள்வி மும்மூர்த்திகளுங் கொண்டாட முடியுமென்று மொழிந்தனர். அப்போதவ் வரசனுக்கு போனபிராணன் பொந்தியிற் புகுந்தவாறுபோலும் தாமரைப்புட்பஞ் சூரியனைக் கண்டு மலர்ந்ததுபோலும் பேரானந்தப் பிரபலமடைந்து அந்நாரத ரடியில் வீழ்ந்து வீழ்ந் தெழுந்து மெய்யனே! அந்தச் சம்வர்த்தன ரிருக்குமிட மெங்கேயோ? நான் காண்பதெப்படி? அவரெனக் கெவ்வாறு கிடைப்பார்? என்று ஆசையுடன் வினவினன். அதற்கு வீணைமுனி விளம்புகின்றார் ஓ சூரியகுலதிலகனே அந்தரிஷியானவர் பட்டணத்தைவிட்டு நீங்காமலிருப்பர். பயித்தியம் பிடித்தவர்போலத் திரிவர், அவரைக் காண்பதற்கு நீர் காசி தேயத்திற்குச் சென்று, கங்காதீரத்திற் செத்துப்போய்க் கிடக்கின்ற பிணத்தை யெடுத்து முதுகிலேற்றிக்கொண்டு அவ்விடத்திற் காத்திருந்தால், அவர் நேரிட்டு உம்முடைய சொரூபத்தையும் உமது முதுகிலிருக்கிற பிணத்தையும் பார்த்து, நாகப்பாம்புபோற் சீறிக் கோபித்து வெருண்டவர்போல் வளைந்து வாயுவேகத்திலு மிஞ்சிய விசையாயோடி யொளிப்பார். அப்போது நீர் அவரை விடாமற் றொடர்ந்துபோவீரானால் சிலது தூரம்போய் இளைத்து நின்று திரும்பிப்பார்த்து, வெகுளிமேற்கொண்டு ஏசி தூஷணமாகப் பேசி கற்கள் விட்டெறிந்து சொல்லாதுஞ்சொல்லி, உமதுமனமுறிந்து

நின்று போகும்படியாய்ச் செய்வார். அவர் என்னகோபம் பண்ணினாலும் ஒரே பிடியா கப் பிடித்து, அவரைவிடாமல் எடுத்துக் கூடவே திரிந்தால், அப்பால் ஒப்பில்லாத தயையும், தாட்சண்யமும் சந்தோஷ முண்டாகி, ஒரு பக்கத்தினின்று பேசுவார். அப்போது நீபோய் வணங்கினால், நீர் நாடி வந்த காரியங்களைச் சொல்லுவார். அதற்கு நீர் ஆம் சுவாமி! என்று அடிதொழுதெழுந்தால், நானிருக்கும் இடமும் என்னைக்கண்டுபிடிக்கும் வகையும் உனக்கு உளவுசொல்லி யனுப்பின பேர்கள் யாரென்று அதட்டிக் கேட்பார் அதற்கு நீர் பயப்படாமல் நாரதர் சொன்னாரென்று சொல்லும். அவர் எங்கிருக்கின்றார் என்று வினவுவர். ஐயா! தேவரீரைக் காண்கிற உபாயம் எல்லாஞ் செப்பி அப்பால் நெருப்பில் விழுந்து போனாரென்று நிகழ்த்தும் என்று சொல்லிப்போமென்று விடைகொடுத்துவிட்டு நாரதமுனிவர் இந்திர லோகத்திற்குப் போய்விட்டார்

இப்பால் மருத்துவ மகாராசன் காசிக்குப்போய் ஒரு பிணத்தைச் சுமந்து, பாப விநாசம் பண்ணப்பட்ட கங்கைக்கருகிற் காத்திருக்கிறான். அப்போதவர் சரீர முழுமையுஞ் சாம்பலும், சாய்ந்து நடக்குஞ் சோம்பலும் அழகுமலிந்த போர்வையும், அகலாப்பீத்தப் பார்வையு முடையவராய்க் குருரங்கொண்ட கோலத்தோடு தோன்றி, களேபரத்தைச் சுமந்திருக்கிற ராஜனைக் கண்டு, பயந்தவர்போற் கதறிப் பதறிக்கைகாலுதறி, வேங்கையைக் கண்ட மான்போற் றிரும்பிக்கொண்டு வேகமா யோடினார். இவர்தான் குற்றமற்ற சம்வர்த்தனரென்று மருத்துவ மகாராஜன் கூடத் தொடர்ந்து ஓடினான். மான் பாய்ச்சல் குதிரைப் பாய்ச்சலைப்போலோடிய மாதவர் சிறிது தூரமோடி, பூமியின்பேரிற் பொத்தென்று வீழ்ந்து, மெத்தென்றெழுந்து, கோபமேற்கொண்டு, திரும்பவுமோடி, பாட்டுகள் பாடி தித்தோமென்றாடி, தன்னை விடாமற் றொடர்ந்து வருகிற இராஜனைத் திரும்பிப் பார்த்துத் திட்டி, மண்ணை வாரிக் கொட்டி கல்லாலடித்து, காலால் உதைத்துப் பாணவேகத்திலும் பத்தத்தனையாய்ப் பறந்து நிந்தித்துச் செல்கின்றார். அவரை இராஜன் பருந்தின் நிழல் போலும் பரிதியின் சாயல்போலும் விடா மற்றொடர, அவரப்பட்டணத்தின் கடைவீதித் தெருக்களெல்லாங் கடந்து அப்பால் மனிதசஞ்சாரமில்லாதவனத்தில் ஒரு ஆலமரத்தினிழலில் மெத்த விடாய்ப்பட்டவர் போல் வெதும்பி வெம்பி அலசி ஓய்ந்து சாய்ந்து போனார். ராசன் ஊசியேறும் வழியே சரடுபோமாறுபோல் விடாமற்றொடர்ந்து சென்று, மாசிலாமணியாகிய சம்வர்த்தனர் பாதத்திலே சாஷ்டாங்கமாக விழுந்து தொழுதான். அதனாலப்பெரியவருக்குச் சந்தோஷம் பிறந்து அரசன் நினைத்துவந்த நினைப்பை வெளியிட்டு, என்னையறியும்படி தெரியப்படுத்தி யனுப்பினவன் யாரென்று கேட்டருளினர். அதுகாலையில் இராசன் பயந்து, நாரதர் சொல்லியிருக்கிற நியாயங்களையு நினைத்து, ஆண்டவரே, மோட்ச சாதகராகிய மகதியாழ் முனிவர் மொழிந்தனரென்று சொல்லினன். அதற்கவர் அந்த நாரதரெங்கேயென்று கேட்டனர், அப்போதரசன் தேவரீரைத் தேடிப் பிடிக்கும் உளவு எனக்குச் சொல்லிவிட்டு அக்கினியிலே வீழ்ந்துபோனா ரென்று அடிபணிந் துரைத்தனன். அது கேட்ட சம்வர்த்தனர் சற்று நிதானித்து, அப்படியா நல்லது; நீர் நம்மண்டைக்கு வந்த காரியமென்ன சொல்லுமென்றனர் அதற்கரசன். சுவாமி! நான் அயோத்திமா நகரமாளுகின்ற மருத்துவ மகாராஜனென்பவன் நானொரு யாகஞ் செய்யவேண்டித் தேவரீரை நாடி வந்தேன். உம்மைச் சரணமடைந்தேன். அருள் செய்ய வேண்டுமென் றிருந்தான். அதற்கு மெய்விரதராகிய ரிஷீஸ்வரர் சொல்லுகின்றார்.

ஓ வேந்தனே! வேள்வி செய்வதற்கு என்னையேன் கோரினீர், இந்தப் பூமியிலுள்ள வஸ்துக்களிலே தாழ்ந்த பொருளாயிருக்கப்பட்டது பிணம். அந்தப்பிணத்தை யாவரும் நிஷேதமாய்ப்பேசுவார்கள். அதற்குச் சரியாயிருக்கப்பட்ட என்னை நீர் நாடி வந்தீர். என்னாலாகுவதென்னே? உமது காரியமெல்லாம் இலேசிலாவதற்கு இடஞ் சொல்லுகிறேன் கேளும். மகா வைபவத்திலேயும், விவேகத்திலேயும் உயர்ந்தவர். தேவர்களுக்குக் குருவா யிருக்கப்பட்டவர். சகல கர்மங்களையுங் கடந்தவர். எனக்குத்

தமயனுனவர். அவருத்தரவில்லாமல் நான் யாகம் பண்ணி வைக்க மாட்டேன். அவரை நீர் குறித்துக்கொண்டால் எல்லாக்காரியங்களும் எளிதில் முடியுமென்று சொல்லினுர். அம்மொழியைக்கேட்ட அரசன் திகைத்து, சுவாமி! பூர்வத்தில் எனக்குப் பாட்டனுனவர் உங்கள் தந்தையின் புத்தியைக் கேட்டு யாகம்பண்ணி நிறைவேற்றியபடியினுலே, நானும் அந்த முறைமை தப்பாமல் உங்களண்ணுவாகிய பிரகஸ்பதி பகவானைத் தெண்டனிட்டு இயாகம் பண்ணிவைக்கவேண்டுமென்று வேண்டினேன், உபசரித்தேன் ஆசரித்தேன், எத்தனை சொல்லியும் இந்திரன்பேச்சைக்கேட்டு, என்சொல்லையிகழ்ந்து போட்டு, மனிதருக்கு வேள்விசெய்து வைக்க மாட்டேனென்று நிர்தாட்சணியமாய்ச் சொல்லிவிட்டார். அதனுலே நானிளைத்து வருந்திவரும்போது என்பங்குத் தெய்வம் போற்றேன்றிய நாரதர் வசனத்தினுல் உம்மைத் தேவாமிர்தமாய் நம்பியடுத்தேன். உம்முடைய கடாட்சத்தினுலே இயானெண்ணிய வெண்ணம் நிறைவேருமே யானுல் தேவேந்திரனை வென்று ஜெயத்தைப் பெறுவேன், எத்தையே எனதெண்ணத்தை யெவ்விதத்தேனு நீரேவந்து நிறைவேற்றிஇரட்சிக்கவேண்டும் என்று வந்தனை செய்தான். அதை மகாரிஷிகேட்டு மிகுந்த மனமகிழ்ச்சியுடையவராகி, நல்லது உம்முடைய யாகத்தை நானே முடிப்பிக்கிறேன். முத்தராகிய முனீஸ்வரர்களை யெல்லாம் வரும்படி செய்யும் ஓ கைத்திரவுடைய காவலனே என் தமயனென்மேற் கோபஞ்செய்த படியினுலும், என்னை விரோதித்த முறையாலும், எனக்கு வயிராக்கியம் பிறந்து இல்லறமும் பொருளறமும் விட்டுத் துறவறத்தைத் தொட்டுத் திரிகின்றேன். இப்பவும் நானேர்ப்பட்டு உமக்கு வக்தாவாயிருந்து இயாகத்தைத் தொடங்கி முடித்தால், உம்முடைய பேரிற் பொருமைகொண்டு தேவேந்திரனும் என தண்ணனும் அநேக விகாதந்தேடுவார்கள் விக்கினம்பண்ணுவார்கள். அவர்கள் பண்ணப்பட்ட கலகத்திற்கு நீர் பயந்தால், என்னுலுமக்குச் சாபங் கிடைக்கும். பயப்படாமலிருந்தால் உம்முடைய கருத்திற்கிசைய வேள்வி நிறைவேரும் சவுக்கியமுண்டாகும். ஜெயம்பெறுவீர், இதைக்குறித்துத் தீர்க்காலோசனை செய்து ஸ்திரமாகச் செப்பு மென்ருர். அதற்கு இராஜன் சொல்லுகின்ருர்.

ஓ முனிவரேறே உயுத்தசங்கத்தில் வல்லவனு யிருக்கப்பட்ட கர்த்தனுலும், ஆயிரங் கண்ணனுலும், உமதண்ணனுலும், அக்ஞானம்விலங்க விளம்பிய வேதமுதல்வனுலும், சர்வசம்மாரகால உருத்திரனுலும், முப்பது முக்கோடி தேவராலும், மற்றெவராலும் என்அடைய யாகத்திற்குக் கலகம் விளைத்து என்னேடெதிர்ப்பார்களாகில், நான் கலங்கமாட்டேன். உம்முடைய கிருபா நோக்கமாத்திரங் கிஞ்சித்துக் கிடைக்குமாகில், உலகத்தைக் கீழ்மேலாக்கிப் போடுவேன். ஓ ஆண்டவனே இன்னுங் கேளும் இனிமேல் யாராகிலு மென்பால் நேரிட்டு, நீ பயப்படாதே இயாகத்தை நானே முடித்துவைக்கிறேன், என்று எத்தனை விதத்திற் சொன்னுலும், தேவரீரை விடமாட்டேன். அப்படி யொருவர் மொழியைக் கேட்டு உம்மை இகழ்ந்தேனுகில் சூரியன் சந்திரன் வேதங்கள் ஆகமங்கள்ரிஷியீஸ்வராள், முனீஸ்வராள், தேவதைகள் இவாளெத்தனை காலம் அழியா திருப்பார்களோ! அத்தனை நாளும் அடியேன் அழல்நரகத்தை யனுபவிக்கக்கடவேன் என்று சபதம் பண்ணி அடிபணிந்தேத்தினன். அவனுடைய உறுதிவார்த்தையைக்கேட்ட சம்வர்த்தன மகாரிஷி அகமும் முகமும் அலர்ந்து புகழ்ந்து, ஓமருத்துவராஜனே! உம்மைஇன்னேரமே தேவேந்திரனுக்கும் அதிகமாக்கி, சம்பத்தும் பாக்கியமும், சந்தோஷமும் சவுக்கியமும் போகமும், யோகமும் பொருந்தச் செய்து, பிற்பாடு வேள்வியை முடிப்பேன். அஃதெப்படியெனில் என் தமையனுக்கு ஒரு மந்திரம் தெரியவரும், அதை யெனக்கு உபதேசம்பண்ணி யிருக்கின்ருர். அந்த மந்திரம் எப்பொருட்கு மிறையாகியஈசனுக்குரியது, அவ்வீசனுகிய சிவபெருமான் என்னிதயத்தி லிருக்கின்றனர். அதனுல் எனக்கு அரிதாகிய வஸ்துவென்பது வேறென்றில்லை. மேலும் இமயகிரிக்கு வடபுறத்தில் மூஞ்சுவாத மென்றெருபர்வதமுண்டு. அவ்விடத்தில் அநேகங் கோடி யட்ச கின்னர காந்தருவ சித்த சாத்தேய வித்தியாதரர்கள்

முதலாகிய கணங்களும், கமலவாசியாகிய பிரம்மதேவனும் திருமால் முதலிய தேவர்களும், சதாவிழுந்து சேவிக்கும்படியாய் ஒரு மண்டலத்திலே திரிபுராந்தக தேவாதிதேவ சின்மயாநந்த சிற்சொரூபியாகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்றார். அம்மலையானது சந்திரனும் சூரியனும் நவக்கிரகங்களும் நட்சத்திரங்களும் கணநாதர்கள் முதலிய இயாவர்களுஞ் சதாகாலமும் பிரதட்சணம்பண்ணவும் அண்டகடாகங்களெல்லாந் திரும்படிக்குவேதங்களொலிக்கவும், ஆகிய இவ்வகைத்தான் சகலவண்மைகளையுமுடைத்தாகி, நாளுக்குநாள்விர்த்தியாகி, எக்காலத்தினுங் குளிர்ச்சியாகி, அங்குள்ளபசு, பட்சி மரம், கொடி, செடி இவை முதலியவையெல்லாம் வாடாமல் வதங்காமல் பூத்தும், காய்த்தும், பழுத்தும், கொழுத்தும், தளிர்த்திருக்கின்றன.

அங்ஙனம் வாசஞ் செய்யும் புண்ணிய தேசங்களுக்குப் பாலியம், எவ்வனம் கவுமாரம், மூப்பு, திரை, நரை, மாயாமயக்கம், இவை முதலியன ஒன்றுமில்லை, நிரந்தரகோடி காலமும் நிஷ்டைகூடிய முனிவர்களும், இராஜரிஷிகளும்பொருந்திபிருப்பார்கள். இயாவரையு மளவின்படி கொள்ளை கொள்ளுகிறஇயமரில் இதுகாறுமித்தனைபேரிறந்தார்கள் இத்தனைபேர் பிறந்தார்களென்கிற கணக்கின் தொகைவைத்துக்கொண்டிருப்பவராய், பசி நோயற்றவர்களாய்; குணவிகாரம், இராப்பகல் நன்மைதீமைஇவற்றைக் கண்டறியாதவர்களாய்; எந்தச் சரீரத்தைப் பார்த்தாலும்பிரகாசமும்ஆநந்தபாஷ்பமும் சிவத்தியானமும் சிவபூசையும் ஆசாரமும் இவ்வாறுகப் பொருந்திய பத்தசனங்களாய் நிறைந்திருக்கப்பட்டது அப்பர்வதம் அதனடிவாரத்தைச் சுற்றிலும் அக்கினியைவிட அதிகப் பிரகாசமுடைய ஆயிரத்தெட்டுமாற்று அபரஞ்சிக்கல்லுகளும், பாறைகளும், மணல்களும் நிறைந்திருக்கின்றதுகள், சந்திரசேகரசடாமண்டலதாரியாகிய சாம்பசிவமூர்த்தி யெழுந்தருளிய அம்மலையானது அண்டகோளகையை அளாவியிருக்கப்பட்டது தேவேந்திரனுக்கும் தேவர்களுக்கும் மேகங்களுக்கும் தோற்றப்படாதது அங்ஙனந்தங்கிய முக்கண்மூர்த்தியின் கிருபையினால் அம்மலைக்கு நான் அடிக்கடி போய் வருவேன். அந்த மலைக்குப் போகவும் வரவு மற்றொருவருக்குஞ் சவுக்கியப்படாது. அப்பேர்ப்பட்ட இடத்திற்கு இப்போது உம்மையு மழைத்துக்கொண்டு போகிறேன். அவ்விடத்திலிருக்கின்ற அகிலேசனை சதாசிவத்தை தபசிகள் மகாரிஷிகள் முதலிய பேர்களுக்குத் தாரகமான வஸ்துவை அஞ்ஞானிகளறியப்படாத ஆநந்தத்தை அக்கினி சொரூபத்தை நாம் கண்டு வணங்கித் தோத்திரம் பண்ணி அவனருள் பெற்று வருவோமாகில், அப்பால் நமக்கு மலைக்கற்களெல்லாம் தங்கமாம், ஓ வேந்தனே? கங்கை தும்பை கொன்றை திங்கள் பொங்கரவு இவைகளை யணிந்த புனிதபூரண சங்கரனும், ஆலகாலத்தையருந்தித் தேவர்களையிரட்சித்த கோலாகலனும் காலகாலனும் விபூதிபூசிய மெய்யனும், நிராமய நித்தியனும், நின்மலச்சித்தனும், சர்வசீவகாருண்ய தாணுவும், ஏகநாயகனும், தெளிந்த ஞானிகள் மனத்தி லொளித்திருக்குந் தேவனுமாகிய அவரை வழிபட்டால், அநேகம் பொருணலம் பெற்று வருவோம். என்று கூறியசம்வர்த்தன முனிவரானவர் உடனே தம்மோடு அரசனை யழைத்துக்கொண்டு சென்று, கோடி சூரியோதயம்போற் பிரகாசிக்கப்பட்ட மூஞ்சுவந்தமென்னு மலையைக்கண்டு, சற்றுநேரம் நின்று கிரி தெரிசனஞ்செய்து, பின்புமூவர் முதல்வனெழுந்தருளியசபையிற்போய் அண்ணலாகிய அப்பரமசிவனைக்கண்டு சாஷ்டாங்க தெண்டனிட்டு, தாம் வந்தகாரியத்தை விண்ணப்பம் பண்ணிக் கொண்டனர். அது கேட்ட காமத்துவம்ஸியானவர் ஓ சம்வர்த்தனரே! உமக்கு வேண்டிய தங்கப் பாளங்களையும் பொற்கற்களையும் இஷ்டமானமட்டு மெடுத்துக்கொண்டு போமென்று கட்டளையிட்டருளினர்.

அப்போது கூடவந்திருக்கிற மருத்து மகாராஜனைச் சம்வர்த்தனர் பார்த்து, அரசனே! பரமசிவ மனுக்கிரகம் பண்ணிய வாக்கியங் கேட்டதா வென்றனர். ஓ கடவுளே! அசரீரி வாக்குபோற் கேட்டேனென்றான். உடனே ரிஷியீஸ்வரர் தம்முடைய தபோசத்தியினாலே அளவிறந்த யானைகள் குதிரைகள் ஒட்டைகள் சகடங்கள் இவைகளை யேர்படுத்தி தொகையிறந்த தங்கங்களை

எடுப்பித்து திக்கெட்டிலு முள்ள பேர்கள் திகைத்துத் திப்பிரமைகொள்ளும்படியாய்ச் சிவபெருமானைத் தொழுது அவரருளமுதம் பெற்று, இமோத்கிரிச்சாரலுக்கு வந்து, பொன்மலை புகுந்ததுபோற் கொண்டு வந்த தங்கக்கற்களை இறக்கி, ஆகாசமுட்டக் குவித்தார். தக்ஷணம் போர்முகத்திற் புலிபோன்ற மருத்தி மகாராஜன் சுவர்ணமயமாய் இயாக சாலை யேர்ப்படுத்தி, வேதவேதியர் முதலிய பிர்ம்மரிஷிகளும் உலகாள்பவராகிய மன்னர் மன்னர்களும் மற்றப்புரஜனங்களு மறியும்படியாய் ஓலைகளுந் தூதுகளும் போக்கி வேள்விக்கு வேண்டுவனவாகிய ஓமத்திரவியங்களையும் மற்ற வஸ்துக்களையும் வரவழைத்து, சுவர்ண பாத்திரங்கள் இரசித பாத்திரங்கள் கலச பாத்திரங்களமைத்து, அரிசி பருப்பு, ஆச்சியம், தயிர், பால், இவை முதலான வஸ்துக்களை அபரிமிதமாய்க் குவித்து, தகுதியான ஆள்களை வகுத்து, வேதவோசை முழக்கி, வக்தாசிரோத்தர் உபாத்தியாயன் இவர் யாவரும் விதிமுறை நிறைந்தபின் தான் சென்று ஸ்நானஞ்செய்து வந்து மரவுரி மானுரி தரித்து, தருப்பை வாங்கி, கங்கணந்தாங்கி, சம்வர்த்தனரென்னும் அம்மகாரிஷியால் தீக்ஷைவகித்து, அன்னம், தாம்பூலம், சந்தனம், புட்பம், வஸ்திரம் இவைகளை ஓயாமற் கொடுப்பித்து, தியாகத்துசங்கட்டி, எவர்கள் எதைக் கேட்டாலுங் கொடுக்கிறேனென்றும் அவரவர்கள் இச்சைக்கு எட்டுப்பங்கதிகந் தருகிறேனென்றும் பறைசாற்றிவைத்து வீரபட்டமுந் தானபட்டமும் நாட்டி, இயாகந் தொடங்கி அக்கினிபூசைக் காரம்பித்தான். இஃதிங்கனமாக, அங்கே பிரகஸ்பதியானவர் மருத்து ராஜன் தன்னிடத்தினின்று நீங்கினதுமுதல் நடந்த காரியங்களை யெல்லாங் கேள்விப்பட்டு, ஐயோ! என்னை இந்திரனுந் தேவர்களுங் கெடுத்தார்களே இனி யென்ன செய்யப்போகின்றேன்! என்று விசாரத்தி லழுந்தி மனஸ்தாபமடைந்து, நாளுக்குநாள் தேய்ந்து,நரம்புமெலும்புமாயிளைத்து உலர்ந்த தாமரைபோல் முகம் வாடி, எழுந்து நடக்கமாட்டாமல்விழுந்து, கால்கைகளோய்ந்து உச்சாகந் தப்பி அன்னத்துவேஷங் கொண்டிருந்தனர்.

இந்தச் சங்கதியைத் தேவேந்திரனறிந்து குருவினிடத்திற்கு வந்து நமஸ்கரித்து சுவாமி! ஏன் இப்படி விசனமாயிருக்கின்றீர் உடம்பிளைத்ததற்கான உபாதி என்னவென்று கேட்டனன். அதற்கவரொன்றுஞ் சொல்லாமற்போகவே தானே அவரது மனோவியாதியின் மார்க்கந் தெரிந்துகொண்டு ஐயா! விசனப்பட வேண்டாம் அந்த மருத்து மகாராஜன் உம்மையல்லாமல் யாகம் பண்ணுகிறதில்லைதேவரீரை யழைப்பிக்கும்படி செய்விக்கிறேன் நீர் பயப்படாதீர் தயிரியமாயிரும் என்று தேற்றித் தன்னுடைய தேவசபைக்குட் புகுந்து, சிங்காசனத்திலிருந்து, யக்கினிதேவனை யழைத்து, நீர் என்னுடைய தூதனுகப்போய் மருத்து மகாராஜன் செய்கிற யாகச்சாலையில் நுழைந்து இராஜனைக் கண்டு இதோபதேச மியம்பி, ஐயோ இந்த யாகத்தை சம்வர்த்தனரைக் கொண்டு நடத்துகிறாயே இவரால்ஆகமாட்டாதே இவருடைய தமயன் தேவகுருவைக் கொண்டு முடித்தால் நீ யெண்ணியவண்ண நிறைவேறுமே, விக்கினமில்லாமல் வேள்வி முடியுமே யென்று சொல்லி ஆளை வசப்படுத்திக்கொண்டு வாருமென்றனன், அப்படியே அக்கினிதேவன் உடன்பட்டு,மருத்து மகாராஜனுடைய யாகசாலைக்கு வந்துஆசீர்வதித்தான். அவனுக்கு மருந்துவ மகாராஜன தீர்க்கதெண்டம் பண்ணி, அந்திவானம்போற் பிரகாசிக்கப்பட்ட அக்கினிதேவனை ஆசனத்தி லெழுந்தருளச்செய்து, சம்வர்த்தன ரிஷியை யழைப்பித்து அவருத்தரவின்படிக்கு அர்க்கியபாத்திய ஆசமன்னியங் கொடுத்துப் பூசித்து உபசரித்து, தேவரீரெழுந்தருளிய காரியமென்னவென்று கேட்டான். எழுநாவினையுடைய தீக்கடவுள் ஓ அரசனே யாகங்களுக்கதிகாரியாகிய தேவேந்திரமகாராஜன் அனுப்பினர். அது என்னத்திற்காகவென்றால்? பிரகஸ்பதி பகவான் செவ்வையாகிய வேள்வி செய்விப்பார். மந்திரயீனங்கிரியா யீனமிராது ஆகையால் அவரைக்கொண்டு யாகம் பண்ணிக் கொள்ளச் சொல்லென்று சொல்லினர். அது நிமித்தம் வந்தேனென்றான்.

இதுகேட்டதும்பமாலையணிந்தவேலாயுதம்பெற்ற மருத்துவமகாராசன் அத்தழற் கடவுளைப்பார்த்து ஐயா! அக்கினிதேவனே! அடியேன் தேவலோகத்திற்குவந்து தேவ

குருவைக்கண்டு வணங்கி நானினைத்த வேள்வியை நிறைவேற்றிவைக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டேன் அதற்கு அவர் எவ்வளவேனுமிறங்காமல், நிர்த்தாட்சண்ணியமாய்ச் செப்பிலுஞ் செவந்தகண்களையுடையவராய்க் கோபித்து பூலோகத்திலுள்ள மனிதருக்கு இயாகம்பண்ணி வைக்கப்போகாது. பண்ணிவைத்தாலோ? தேவர்களுக்கும் எனக்கு மெத்த அவமானமுங் குறைவும் வருமென்றுகூறிவிடுத்தனர். இது சமஸ்தமான பேருக்குந் தெரியவரும். பின்பு நானெடுத்த காரியத்தைத் தவிர்த்துவிட மனமில்லாமல் விசாரப்பட்டு, அந்தத் தேவகுருவினுடைய தம்பி சம்வர்த்தனரை யடுத்து கால்மேல் விழுந்து அழைத்துவந்து இயாகத்தைத் தொடங்கினேன் இப்போது நேரிட்ட தேவகுருவின் பலத்தினுலேயும் தேவராசன் வளத்தினுலேயும் பின்புவருந்தி யழைத்துவந்த குருவைவிட்டு முன்பு வரமாட்டேன் என்ற குருவைத் தொட்டுயாகத்தை நிறைவேற்றிக் கொள்வது நீதியா? அப்படிகொள்ளென்று சொல்லச்சொல்லி இந்திரன் உம்மை யனுப்பிவைத்தால் இதற்கு நான்செய்வதென்னையிருக்கின்றது? நீர் சொல்லும் என்றுரைத்துப் பின்னும் பேசுகின்ருன் ஓ அக்கினித்தேவே தேவலோகத்தாருக்கு யாகம் பண்ணிவைத்துப் பெருமையடையப்பட்ட ஆசாரியர், பூலோகத்துமானிடருக்கு யாகம்பண்ணிவைத்துச் சிறுமைப்படுவானேன்? பெருமைகுலைவானேன்? என்னைப்போன்ற எழைகளுக்கு யாகம்பண்ணிவைக்க இந்தச் சிவயோகியிருக்கின்ருர் இவரைக்கொண்டு யாகத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறேன் ஆதலால் ஆயிரங்கண்ணருக்கு அடியேனுடைய விண்ணப்பத்தை அறையுமென்று மொழிந்தனன் அதுகேட்ட அக்கினிதேவன் அவ்வரசனைப் பார்த்து ஒருவரும் ஒப்புவமையில்லாத கற்பனையிலுயர்ந்த காவலனே பிரகஸ்பதியை யாகமுதல்வரா யமைத்துக்கொண்டு இவ்விரதயாகத்தை முடிப்பித்தால் உமக்கு மிகுந்தகீர்த்தியுண்டாகும். தேவராசன் சொல்லி யனுப்பிய வண்ணம் புரிந்தால் அவருடைய நட்புமுண்டாம். இவ்விரண்டு விதத்திலும் புனிதமாகும் வேதமந்திரம் விளங்கும் அக்கினிபகவானுகிய யானுஞ் செழித்தெழுந்து திகழ்ந்திருக்கக்கூடும்சுபகரமுண்டாமென்று சொல்லினர். அதற்கு மருத்துவமகாராஜன் சொல்லுகின்ருன் ஐயா! இந்த யாகத்தினுற் கதிவந்தாலும், அவகதிவந்தாலும் கியாதி வந்தாலும் அவக்கியாதிவந்தாலும் கீர்த்தி வந்தாலும் அபகீர்த்தி வந்தாலும் பட்சம் வந்தாலும் அபட்சம்வந்தாலும் மற்றயெது வந்தாலும் நானே அனுபவிக்கிறேன் இப்போது நேமித்திருக்கின்ற சம்வர்த்தனமகாரிஷியை நீக்கி மற்ருெருவரை நேமிக்கமாட்டேன் சொற்சோர்வுபடமாட்டேன் எடுத்த காரியத்தை தொடுத்தபடி முடிப்பேன் அவரவர்க ளெடுத்திருக்கின்ற செல்வச்செருக்கு அவரவர்களுக்கு போதுமானதா யிருக்குமென்று கோபித்துக் கூறினுன்.

அந்தவேளையில் மண்பொதுத்தந்தைக் கொப்பாகிய சம்வர்த்தனருக்கு விண்பொதுளும்படியாகக் கோபமுண்டாகி, ஓ அக்கினியே மருத்துராசன் சொல்லச் சொல்ல மறுத்துச் சொல்லுகின்றீர் அதை மனம் பொறுத்தோம் இனிமேற் பேசுவீராகில் யாமே அக்கினியாய் நின்று நெருப்பில் வேகுஞ் சரகுபோல் உம்மை யெரித்துப் போடுவோம் பொடி நீராக்குவோம் என்று கண்கறுத்துப் பேசியபோது இயாவற்றிற்கும் பயப்படாத தீக்கடவுள் நடுங்கிப்பயந்து நாவறண்டு திடுக்கிட்டு திகிலடைந்து உப்சார வார்த்தையினுல் இன்சொலியம்பிவிடை பெற்றுத் திரும்பி பாரிசாதமாலை தரித்த சதமகனைக்கண்டு ஐயா தேவேந்திரமகாராசனே நானுரைத்த வார்த்தைக்கு மருத்து மகாராஜன் நவின்ற வாக்கிய மிதுவென்று நவின்று கடைசியிற் சம்வர்த்தனரைவிட வேருெருவரைவரிக்கிறதில்லை ஸ்மரிக்கிறதில்லையென்று ஸ்திரமாய்ச் சொல்லிப் போட்டானென்றுச் சொல்ல, உடனே தேவேந்திரனுக்குக் கோபம் பிறந்து சிரித்து ஓ அக்கினிதேவே! நீ திரும்பவும் போய் பிரகஸ்பதியை வைத்துக்கொண்டு வேள்வி தொடர்ந்தாற் பிழைத்தாய் இல்லாவிட்டால் என்னுடைய வச்சிராயுதத்திற் கிளைத்தாய் உன் பிராணன் போய்விடும் உன் மனதைத் தொட்டுப்பார் என் சொல்லை விட்டுப்பார் என்றுசொல்லி வாருமென்னவுந்தீக்கடவுள் செப்புகின்ருன். ஓ! இந்திரனே! இனிநான் போவேனுனற் சம்வர்த்தன மகாரிஷி சபிப்பார் முன்னமேயே முனிந்தனுப்பினுர். ஆனதால் இன்னமும் நான்போக மாட்டே

னென்றியம்பினன். அதுகேட்ட இந்திரன் அக்கினிதேவனைப்பார்த்து, ஐயா, சேர்ந்தார்க்கொல்லி! உம்முடைய தீட்சண்யத்தினல் லோகாலோகங்களெல்லாம் வெந்து பொடியாமே நீருப்நொந்து நைந்துவேமே ஆன்மாக்கள் சாமே அப்படிக்கிருக்க உம்மை வேகச்செய்யும் நெருப்பும் வேறே யிருக்கின்றதோ? என்றுபேச அதற்கு அங்காரகன் கூறுகின்முன் ஐயா மேகவாகனனே! விருத்திராசூரன் உம்மைக்கீழாக்கித் தான்மேலாகி லோக மூன்றையும் ஆண்டுவந்தானே அதை மறந்துவிட்டீரா! சவுனகமகாரிஷி யாகம் பண்ணியபோது உம்மைத்தள்ளி, உமக்குக் கொடுக்கவேண்டிய அவிர்ப்பாகத்தை மருத்து தேவதைகளுக்குக் கொடுத்தாரே அதை மறந்துபோனீரா? அக்காலம்வெள்ளையானையின்பேரிலேறி வச்சிராயுதம் வீசி சவுனகரோடு சண்டைபோட்டீரே! அப்போது உம்மிடைகையும் வச்சிராயுதமும் ஸ்தம்பித்துப் போய் நீர் கடலிலொளிந்ததும் அயிராவதம் வீறிட்டு காட்டிலோடிப் பிழைத்ததும் மறந்தீரா? இப்படிக்கெல்லாம் பண்ணப்பட்ட மகாரிஷிகளின் தவமகிமையுஞ் சாபானுக்கிர சாமர்த்தியமும் எனக்குத்தெரிந்திருக்க நான் இன்னும் போகலாமா? உமக்கிஷ்டமானல் நீர்வேறே தூதுபோக்கிக் கொள்ளுமென்று அக்கினிமொழிந்தான்.

அப்போது இந்திரனும் கண்டையிற் பஞ்சவர்ணமுஞ் சூரியகாந்தியு முள்ளவனுயிருந்த கந்திருவ னெருவனைப்பார்த்து, நீர் மருத்து ராசனிடத்திற்குச் சென்று கண்டு, தேவகுருவையழைக்காமலும் அவருக்கவிர்ப்பாகங் கொடுக்காமல் விலக்குவையாகில் இந்திரன் தன்னுடைய வச்சிராயுதத்தைப் பிரயோகம்பண்ணுவான். அதனல் நீ குண்ணுவாய் என்றுசொல்லி வாவென்றுவிடுத்தான் அப்படியே கந்திருவராசன் மருத்துமகாராசனிடத்திற்போய் இந்திரன் சொல்லிய வனைத்தையும் வகுத்தான் அவனவற்றைக் கேட்டு ஓ கந்தருவராசனே! நீர்போய் இதனைச் சொல்லும் முதலில் தேவகுருவை விரும்பியழைத்தேன் அவரைப் போகவேண்டாமென்றுதான் தடுத்தார் அதனலவருங்கூடாதென்று என்னைக் கைவிடுத்தார் இப்பால் அவர்தம்பியை விரும்பிக்கொணர்ந்தேன் இவருக்காக நான்பட்டபாடு தெய்வமறியும் அவனைத்தள்ளிஇவரைவைத்துக்கொள்ளென்று தூதுஅனுப்புவதுசுகிர்தமோ? நீதியோ மித்துரு துரோகமல்லவோ? பாவத்திற்கு மூல முளையாமே இஃதறியாமல் தேவராசனுந் தேவகுருவுந் தியங்குவானேன்? அவர் கட்குத்தெரியாத அறமுமுண்டா? அவர்களுக்கு நானுதருமஞ்சொல்லி அனுப்புவது? ஐயோ! ஐயா! நான்செத்துப்போனலும் சற்றேனும் பிரகஸ்பதியைத் தள்ளிவைத்து யாகத்தைப் புரிவேன். இதனை நீர்போய்ச் சொல்லுமென் றனுப்பிவைத்தா னப்படியே சொல்லுகிறேனென்று செலவு பெற்றுக் கொண்டுபோனன் இங்கே சமவர்த்தன மகாரிஷியானவர் மருத்துமகாராசன் முகத்தைப் பார்த்து இந்தக்கலகமெல்லாம் விளைத்துவருபவன் தேவேந்திரனவனென்ன பண்ணினுலு மதை நீர்வொருபொருட்டாய்எண்ணுதீர் வடவாமுகாக்கினியும் ஏழுசமுத்திரமும் ஆலாலவிடமும் எழுந்துபுரண்டுவந்தாலும் மனமருண்டு விடாதீர் வச்சிராயுதத்தை யேவினுலும் முப்பத்துமுக்கோடி தேவர்களை திர்த்தவ ரவர்களின் ஆயுதங்களை யுகுத்தாலும் அஞ்சாதீர் பயந்து கெஞ்சாதீர் இவைகளையெல்லாம் ஒருசொல்லினற் பொடியாக்கி புழுதிபோக்கி உம்மைச் சுகப்படுத்தி வைக்கிறேன் பயப்படாதீர் என்று சம்வர்த்தனர் சாற்றிக் கடாட்சும் வைத்தனர். இவ்வார்த்தைகளை கேட்டமாத்திரத்தில் அரசனுக்குப் பர்வதா கிர்த்தியாகத் தோள்கள் பூரித்து உடலம்பாரித்து வேள்விசெய்யும் வேலையி லிருந்தான்.

முன்னர் மருத்துமகாராசன் பேசிய வார்த்தையைக் கந்திருவன்போய் இந்திரனிடத்திற் கழறினன் அதுகேட்டமாத்திரத்தில் இந்திரனுக்குக்கோபம்பிறந்து மருத்துராசனைக் கொன்றுவாவென்று வச்சிராயுதப் பிரயோகம் பண்ணினன் அவ் வச்சிராயுதமானது உடனே ஆகாயத்தைவிட்டுப் புறப்பட்டு, அண்டகடாகநடுங்கச்சென்று, பூலோகத்தில் வேள்விதொடங்கியமருத்துமகாராசனைக் குறித்து வருகின்றது, அப்போது ராசன் கண்டு பயந்து சிவனைப்போ லெழுந்தருளி யிருக்கின்ற சம்வர்த்தனரைச் சரணமடைந்து சுவாமி! இந்திரனது வச்சிராயுதம் வருகிறபடியால் என்னைக் காப்பாற்றுமென்று கலங்கினன் இவர் தமது மந்திர சக்தியினு

ல் வந்த வச்சிராயுதத்தைத் தடுத்து சின ந்தார் அந்த வச்சிரம் பயந்து லச்சைப் பட்டுத் திரும்பிப்போய் விட்டது அதை மருத்துராசன் கண்டு, சம்வர்த்தனருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்பண்ணி, ஐயனே! தேவேந்திரன் என்னைக் கொல்லவிடுத்த மலைபோல்வந்த வச்சிரத்தைப் பனிபோலாக் கித் தேவரீர் சூரியனைப்போற் பிரகாசித்து ரட்சித்தபடியால் உடல் பொரு ளாவி மூன் றும் உமக்கே ஒப்புவித்தேன் இனி நான் தன்னியனுகிச் சவுக்கியம்பெற்றேன் பாப மற்றேன் என்று பணிந்தான் சம்வர்த்தனர் மருத்துராசனை நோக்கி சந்தோஷப்பட்டு நீர் மிகுந்த தைரியசாலி சத்தியசந்தன் உ த்தமன் உம்மிடத்தில் எனக்கிஷ்ட முண்டா யது உமக்குவேண்டிய வரமெல்லாங் கேளு ந் தருகிறேனென்றனர் அதற்கு ராஜன் ஒ ரிஷிதுல்யரே! தேவேந்திரன் முதலான தேவர்கள் அடங்காத கோபங்கொண் டிருக் கிறபடியால் நம்முடையயாகத்திற்கு அவிர்ப் பாகம் பெறமாட்டார்கள் அவர்கள் சந்தோ ஷமாய் வந்து ஆகுதி பெற்றுக்கொள்ளும்ப டியாய் வரங்கொடுத் தருளுமென்று வணங் கினான். அப்படியே கொடுத்தோமென்று கூறி, அந்நிமிடத்தி லாகாயத்தி லிருக் கின்ற முப்பத்துமுக்கோடி தேவர்களும் தே வேந்திரனும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷி களுங் கோபமாறி சாந்தமூர்த்திகளாய் யாக சாலையில் வரும்படிக்கு ஒரு மந்திரத்தை யுச் சரித்தருளினர். அம்மத்திரம் இந்திரன்முத லிய இயாவரையும் பந்துபோற் சுருட்டிக் கொண்டு வந்துவிட்டது அந்த விந்தையை வேந்தன்கண்டு இந்திராதி தேவர்களுக்குத் தேவகுருவுக்கும் வந்தனை வழிபாடுநேர்ந்து உபசரித்து அவரவர்களுக்கு ஸ்தானமேற் படுத்தி அதிலவர்களை மந்திராட்சதையுடன் எழுந்தருளச் செய்தான் சம்வர்த்தன மகா ரிஷியும் பிரகஸ்பதி பகவானும் தேவேந்திர னும் மருத்துமகாராசனும் அளவளாவிக் கலந்து மனமுவந்து, குரோதமில்லாமற் கு லாவியிருந்தார்கள்.

இப்பால் யாவரு மொருமித்திருந்து வேதவிதிப்படிக்கு இயாகத்தைப் பூர்த்தி பண்ணி ஆகுதிகொடுத்து சகலரும் புசித்து மகிழ்ச்சியடைந்தனர் அப்போது இந்திரன் சம்வர்த்தனரைத் துதித்து அவருடைய தபோபலத்தையும் மருத்துமகாராசனுடைய புண்ணியபலத்தையும் அவர்களுடைய சத் தியவசன உறுதிநெறியையும்பார்த்து இது காறும் பூலோகத்திலுந் தேவலோகத்திலும் இந்த வேள்விபோல ஒருவரும் பண்ணிய தில்லை நானொருநாளுங் கண்டதில்லைஎன்று கொண்டாடினன் இப்பால் மருத்துமகாரா சன் அங்குள்ள ரிஷீஸ்வரர்கள் வேதப்பிரா மணர் முனீஸ்வரர்கள் இவர்கள் முதலிய பேர்கள் வேதகோஷம்பண்ணி ஆசீர்வதி க்க யக்ஷகின்னர கிம்புருடர் கீதங்கள்பாட, கருடகாந்தருவ சித்தவித்தியாதரர் சங்கீத நாதங்களோலிட அவிர்ப்பாகத்தை விக்கின மின்றி முடித்து யாகபூர்த்தியும் பண்ணி, ஆவாகனதேவதைகளை யெல்லாம் எதாஸ் தானத்தி லெழுந்தருளும்படிக்குச் செய்து, அனந்தங்கோடி திரவியங்கள் பொன்னாரங் கள் இரத்தினபரணங்கள் நவமணிகள்பணி கள் துணிகள் பட்டுபட்டாவளிகள் சரிகை தாப்தாக்கள் பற்பலவித பொற்பாத்திரங்கள் இயானைகள் குதிரைகள் தேர்கள் பல்லக்கு கள் பசுக்கள் இடபங்கள் பூமிகள் கன்னிகை கள் இன்னுமுள்ள பொருள்க ளெல்லாவற் றையு மெடுத்து தானம் பூரி வெகுமானம் இ வை முதலிய சன்மானத்தால் இயாசகர் பி ராமணர் முதலிய பேர்களுக் கெல்லாங் கொடுத்து பின்னையுஞ் சடா மகுடத்தை யும் சம்வர்த்தன மகாரிஷி சொன்ன உ த்தரவின் பிரகாரஞ் சர்வதானமும் யளி த்து, தேவர்கள் ரிஷிகள் முனிவர்கள் வேதவேதியர்கள் இவர் முதலிய யாவர் களுக்குந் தெண்டஞ் சமர்ப்பித்து அவ ர்களுக்கு மேலு மேலும் அபரி மிதமி ல்லாம வீய்ந்து, அவரவர்கள் ஆசை மோகம் போகும்படிக்குக் கொடுத்து, சம்வர் த்தன மகாரிஷியை யடுத்து, அவருடைய தி ருவடிகளைச் சிரத்திலும் புயத்திலும் கண் ணிலும் கரத்திலும் பொருந்தி வயாத்திக் கொண்டு செலவுகொடுத்து அவருடைய மங்களாசனம் பெற்று மற்றவர்களினது தற் றவ வாக்கியமுமுற்று இயாவர்களும் எதாஸ் தானத்திற் கெழுந்தருளும்படிக்கு அனுப்பி விட்டு இயாகசாலையில் மீந்து மிகுதிப்பட் டுக்கிடந்த சொர்ணங்களையெல்லாம் பூமியிற் புதைத்துவிட்டு மருத்துராஜனும் மந்திரி பிரதானிகளும் மங்கள வாத்தியங்களுடன் சென்று அயோத்திமாநகரம்புகுந்து இராஜ

மண்டபச் சிங்காசனமேறி இன்புற்றிருந்த னர் கேட்டாயோ தர்மநந்தனு! பூர்வம் சம் வர்த்தனர் பரமசிவனிடத்திற் சுவர்ணக்கல் வாங்கிவந்து யாகத்தில் தானங்கொடுக்க, அதைப் பிராமணரெடுக்கமாட்டாது சலித் துப் போட்டுவிட்டுப்போன திரவியந்தான் இப்போது மேடிட்டிருப்பது ஆனலது எவர்கள் கண்ணுக்குத் தோற்றமாகுதோ? அவர்கள் சத்தியநெறி உத்தமரென்றும், அவர்களாற் சில யாகங்கள் நிறைவேறு மென்றும் பாபரகிதமாமென்றும் பகர்ந்து சம்வர்த்தன மகாரிஷியும் மருத்துமகாராஜ னும் வாக்கிட்டிருக்கின்றூர்கள். அந்தத் தனந்தானிங்கேயிருப்பதென்றுசொன்னது. அது உனது கண்ணுக்குத் தோன்றும் நீ தான் அந்தப் பொருளுக் குரியவன் அத னுலே தான் உன்னுடைய அஸ்வமேத யாகமு நிறைவேற வேண்டுமென்று வேத வியாசர் விளம்பினுர். இவையனைத்தையும் அஸ்தினுபுரத்திற்கதிபதியாகிய தருமராஜன் கேட்டு சந்தோஷப்பட்டு அந்தத்திரவியத்தி னளவில் வெறுப்பும் விருப்பும் இல்லாதவ ராகி ஸ்ரீகிருஷ்ணபகவானை நோக்கி மேல் நடக்கவேண்டிய தென்னவென்று கேட்ட னர் அதற்குஸ்ரீகிருஷ்ணமூர்த்திதருமமூர்த்தி யைப்பார்த்து அவருடைய மனத்திலிருக் கின்ற ஆயாசம் விசனம் வித்தியாசம் வெது ப்பு துக்கம் துயரம் இவைகளெல்லாந் தீரு ம்படியாய்ச் சொல்லத் தொடங்கினுர்.

---

### தருமராஜன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய தேறுதலோடு அத்தினபுரஞ்சென்று அரசியற்றல்.

ஐயா மெய்விரதனுகிய மேலோனே? பூர்வவினைப்பிரகாரம் நடப்பதை யனுபவி த்து ஒவ்வொருத்தராய் அநேகம் ராசர்க ளிறந்துபோனுர்களே யல்லது ஒருவர்கொல் லவும்அதனுலிறந்தார்களென்றுசொல்லவும் யாவருக்கும் வல்லமையில்லை, இது வீணு கிய அவமானம் அறிவில்லாத பேர்களான மூடர்கள் சொல்லிக்கொள்ளுகிற வசனமே யன்றி வேறல்ல சகல லோகத்தையுஞ் சர் வாத்மாக்களிலேயும் வியாபித்திருக்கின்ற தேவாதி தேவனுலே சிருஷ்டித்திருப்பது அப்பேர்ப்பட்டமூன்றுலோகத்தையும் நான் செயிக்கிறேனென்று யார் சொல்லுவார்க ளோ? அவர்களைப் பழியும் பாவமும் படரா மல்விடா இப்படிக்கொத்த பழி பாவங்களு க்கு மிகுந்த பலத்தையுடையவன் மிர்த்தியு தேவனென்னும் எமதர்மராஜன் அவனும் அநேக வியாதிகளென்றும், ஆயுஷ் பிரமா ணமென்றும்? தொகையென்றும் வகையெ ன்றும் இன்னதால் வீழ்ந்தானென்றும், இ தினுலிறந்தானென்றும் பழிபோட்டு தன் பேரிலுந் தன்னையு மவ்வுயிர்களையுந் தந்த தலைவனுகிய ஈஸ்வரன்பேரிலும் பழிசாரா மல் ஒருமுன்னிலைச் சூட்டாய்முடிக்கின்றுன் இவைகள் தெரிந்திருந்தும் ஒபர்வதாகிர்த்தி யாகிய தோள்களையுடைய தருமநந்தரே நீர் பிராந்தியாகிய கவலைகொண்டு மயங்குவா னேன். நானே கொன்றேனென்று வீணை பழியை மேற்போட்டுக் கொள்ளுகிறீர் உம க்கு வந்ததென்ன? ஒருவன் மேற்போகிற சுமையை நீரேன் சுமக்கிறீர்? வீஷ்மாச்சாரி யார் உங்களாலே சாகத்தக்கவர்தானு? அவ ரைக் கொல்ல உம்மாலேயாமா? நீங்களதி காரிதானு? அவருக்கமைந்திருக்கும் விதி யின்படிக்கு முடிந்துபோயிற்று நீர் பெரு மூச்சு நெடுமூச்சும்விட்டு வருந்துவானேன் தேவேந்திரன் விருத்திராசுரனுடனே போ ராடி வச்சிராயுதப் பிரயோகம்பண்ணி அது பிரயோசனப்படாமற்போக இந்திரன் பய ந்து விஷ்ணுபாதத்திற் போய்விழுந்து முறையிட அப்போது மகாவிஷ்ணு ஒரு துரும்பைக்கிள்ளி வெள்ளைவாரணன்கையிற் கொடுத்துக் கொல்லச்சொல்ல அவனப்படி யே பிரயோகம்பண்ண அதுவே பிரமாண்ட கோளகைமட்டு முருவிச்சென்று விருத்திரா சுரனைக்கொல்ல, இப்படி கொன்றது ஒரு துப்பற்ற துரும்பாயிருக்கத் தேவேந்திரன் நான் கொன்றேனென்று கெர்வத்தினுலே வசனிக்க அன்னேரமே யவனைப் பிரமஹத் தி தொடர்ந்து நாலுவித அவதிப்பட்டுப் பின்னர் தெய்வபலத்தினுற் சுகப்பட்டான். பெரியோர்கள் ஒரு காரியந் தங்களாலே நட க்குமென்று எண்ணுர்கள் வாக்கினுலுஞ் சொல்லார்கள் ஈஸ்வரனுலே பிறப்பும் இற ப்புமென் றெண்ணுவார்கள் நீர் தெரியாத வரல்லவே தெரிந்துங் கலங்குவானேன்? மயங்குவானேன்? இந்த மயக்கத்தைவிட்டு அஸ்வமேத யாகத்தைப் பண்ணுமென்று

மாயவன் உபாயமாய்ச் சொல்லினர் அங்கிருந்த ரிஷீஸ்வரர்களும் அப்படியே பேசி தருமருடைய சஞ்சலத்தை மாற்றினார்கள் அதனால் அவர் தேறி யிதனைச் சொல்லுகின்றார்.

ஓ சத்தியசீல உத்தமர்களே! நீங்களித்தனைபேருஞ் சொல்லுகிறபோது நன்மைவந்தாலும் வரட்டும் தீமைவந்தாலும் வரட்டும் உங்கள் வாக்கியத்தை வேதவாக்கியமாக நம்பிக்கொண்டேன் இயானிவ் வாசுதேவனோடும் ஏனைய பரிசனங்களோடும் அலையெறிந்து கரைசெறிந்த கங்காநதிக்கரையில் இன்னஞ் சிலநாளிருந்து என்னிதயந் தேர்ந்து பின்பு அஸ்தினாபுரத்திற்குப் போகின்றேன் நீங்கள் உங்களாசீர்மத்திற்கெழுந்தருளுங்களென்று சகல கலைக்ஞானம் வல்ல மாதவர் முனிவர் ரிஷிகள் இவர் முதலியபேர்களின் பாதங்களில் வீழ்ந்து பணிந்தனர். அவர்களுமவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டுசென்று தத்த மிருக்கையடைந்தார்கள் பின்பு தருமராஜன் வேதவியாசரை வணங்கி சுவாமி தாங்களினுஞ் சிலதினத்திலிவ்விட நீங்கி அஸ்தினாபுரஞ் சேர்ந்து அஸ்வமேதயாகத்திற்கு வேண்டிய வஸ்துக்களையுஞ் சேர்மானப்படுத்திக்கொண்டு மருத்துமகாராஜனாற் புதைபட்டுக் கிடக்கின்ற தனங்களை யெடுப்பித்து வருவதற்கும் யாக காரியத்தைமுடிப்பதற்கும் தேவரீரை யழைப்பித்துக் கொள்ளுகிறோமென்றனர். அதற் கவரப்படியே செய்வோமென்று ஆசீர்வதித்துத் தமது ஆச்சிரமத்திற் கெழுந்தருளினர் அப்பால் தருமராசனும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் தம்பிமார்களும் மற்றுமுள்ள பேர்களுஞ் சிறிதுநாள் கங்காதீரத்திலிருந்து, ஒருநாட் பயணப்பட்டுப் பட்டணத்திற்கு வந்தார்கள் அதுகண்டவுடன் மந்திரி பிரதானி முதலியபேர்கள் எதிர்கொண்டழைத்துவர மகா சம்பிரமவிலாச உல்லாசத்தோடும் இராசவீதியைக் கடந்து அரண்மனைக்குட் சென்று, நவரத்தினகசிதக் கால்களமைந்த மண்டபத்திலிருந்து மகாரிஷீஸ்வரர்கள் பிராமணாள் பெரியோர்கள் இவர் முதலிய பேர்களின் முகத்தைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ண பகவானும் வியாசபகவானும் அஸ்வமேத யாகம் பண்ணச் சொன்னதைத் தெரிவித்து மற்ற மந்திரர் பிரதானியர் சாமந்தர் சாரணர் இவர் முதலியபேருக்கு அன்னியதேசத் தரசர்களிடத்தில் விகிதாச்சாரந் திறைகள் வாங்கச்சொல்லி இளைத்தவர் மிடிதீர அன்னதானஞ் சொர்னதான முதலியவைகள் பண்ணி சந்திரவட்டக் குடைநிழலில் தாரணியைப் புரக்கும்படிக்குத் தருமராஜன் வீற்றிருந்தார்.

## தருமன் சோக நிவாரணச்சருக்கம்

முற்றிற்று.

---

# இரண்டாவது,

# ஸ்ரீ கண்ணன் துவாரகைக் கெழுந்தருளிய சருக்கம்.

### கண்ணன் துதி.

சுரர்முதலோ ரேத்தெடுப்பக் கற்றூணி னரசிங்க சொருபமாகி
இரணியன்வல் லுயிர்குடித்து ஹரிநமோ நமோவென்றுள் ளிரங்கிநிற்கு
மொருமதலை பிரகலா தனனையளித் தருளுருவா யுலகமுய்யத்
திருவரவி லறிதுயில்கொண் டமர்ந்தோனென் சிந்தையினிற் செழியுந்தேவே.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! தருமராஜனவர் தனது மனத்தைவிட் டகலாதிருந்த விசாரமென்னும் வெந்தழலை வேதவியாசர் கூறிய வேதவாய்மையினாலும் வேள்வி நிச்சயத்தாலு மாற்றிக்கொண்டவராய் கண்ணனாகிய அண்ணலோடு வண்ணத் தம்பியருந் தமதெண்ணப்படி நின்றினிது களிக்க அஸ்தினபுரத்திற் சொஸ்தமாகயிருந்து அரசியற்றி வருகிறநாளில், ஒருநாள் அர்ச்சுனராசனும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் ரதகஜதுரக பதாதிகளுடன் ஸ்திரீசெனங்களும் புடைசூழ்ந்துவரத் தருமராஜனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்து, அலங்காரமான சிங்காதனத்திலிருந்து அகமகிழ்ந்தார்கள் இப்படி உலகளந்தவனும் உலகை வென்றவனும் உட்கார்ந்திருக்கக் கண்ட அநேகங்கோடி வேதப்பிராமணாள் ஆசீர்வசனங்கள் மொழிய ஆகாயத்தி லிருக்கின்ற பாரிசாத மலரை வாரித் தேவர்கள் பொழிய இப்பேர்ப்பட்ட சம்பிரமத்துட னிருவருமிருக்கின்ற போது விஜயன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்குத் தெண்டனிட்டுத் தோத்திரம்புரிந்து சுவாமி பாரதயுத்த வாரம்பத்தி லடியேன் தேவரீருடன் தடுத்துப்பேசி பிதாமகர் ஆசாரியர் அண்ணன் தம்பிகள் மாமன் மைத்துனர் பந்து மித்திரா ளிவர் முதலாகிய ஜெனங்களை எப்படி மாய்ப்பதென்று திப்பிரமை கொண்டு சொன்னபோது ஞானதத்துவமான பகவற்கீதையை உபதேசம்பண்ணி அநுபோகமுங்காட்டி பதின்மூன்றுநாள் யுத்தத்தில் அபிமன்னு இறந்த துக்கத்தினால் விக்கியிருந்த காலத்தும் ஞானபக்குவத்தை யுபதேசஞ்செய்து நாயேனைக் காத்தருளினீர் ஓ பரந்தாமா இன்னமொருதரம் அன்ன ரகசியத்தை முன்னஞ் சொன்ன வண்ணம் பண்ணியருள வேண்டுமென்று பணிய, கன்னங்கறுத்த மேகநிறத்த கண்ணன் சொல்லத் தொடங்கினார்.

---

### ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனனுக்குப் பிரம்மஞான முபதேசித்தல்.

ஓ அர்ச்சுனா! அன்றுரைத்தபடி இன்றைக் குரைத்தால், பூர்வங்கேட்டது தானேயென்று நீ லேசாயிருக்கப்போகாது உனக்கு அது சுளுவாகத் தோற்றப்படாது மெத்தப் பளுவாகவே யிருக்கும் எளிதிலுணரமாட்டாய் ஆயினு நீ மகோத்தமனாதலால், அந்த ஞானத்தை வகித்த ஒருகதை சொல்லுகிறேன் அதைப்பக்திசிரத்தையாய்க்கேள் அதனது பான்மையைப் பக்குவமாய்த் தெரிந்துகொள் என்று பச்சைமால் இச்சையுடன் சொல்லத் தொடங்கினார். ஓ காண்டீபனே! முன்னொருக்காற் காசிபமுனிவர் தவஞ் செய்வதற்காக ஓர் பர்வதச் சாரலிற் போயிருந்தார் அவ்விடத்தில் மான்மழுவேந்திய மகாதேவனைப்போல் வடிவுடைய ஓர் சித்தர் வந்தார் அவரை யக்காசிபர்பணிந்து ஓ ஆண்டவனே! யாவரு முலகத்தில் நல்வினைசெய்து முத்திபெறுகின்றார்கள் நானெத்தனையோ நல்வினைகள் செய்தும் அம்முத்தி வரவில்லை ஆதலால் தபசைச்செய்து அதனாலந்த நிரந்தர முத்தி பெறவேண்டு

மென்று இந்த மலைச்சாரலுக்கு வந்தேன் வந்தவிடத்தில் என்பங்குத் தெய்வம்போல் நீர்வந்தீர் தேவரீர் அடியேனுடைய பிரார்த்த வினைகள் தொலையும்படிக்குத் தத்துவ போதந் தரவேண்டும் என்று பணிந்து வருந்திக் கேட்டார் அதற்கந்தச் சித்தர் மன மகிழ்ந்து ஓ காசிபரே! ஓர் வித்தகபுருடன் எத்தனைகாலம் நல்வினையைச் செய்தாலும், முத்தியை யடையமாட்டான் ஆயினும் அவன் செய்த நல்வினைகளெல்லாம் வீணாய்ப்போகமாட்டா உலகத்திலே தீவினையாளருக்கு இரும்பினால் விலங்கும், நல்வினையாளருக்குப் பொன்னினால் விளங்கும் பூட்டுவது போலாம் இருவருக்கு மறுசன்மத்திலேயும் இவ்விலங்குகளே எந்த வினையும் முத்திக்கு வழிகாட்டமாட்டாது இது சத்தியம் ஓ உத்தமரே! இவ்வுலகத்தில் நல்வினை யென்று சொல்லப்பட்ட காரியமெவ்வளவோ? அவ்வளவுஞ் செய்தேன் அதனால் என்னபலன் பெற்றே னென்றால், இந்திரனிருக்கின்ற சொர்க்கத்திலேயும் பிர்ம்மாவின் சத்தியலோகத்திலேயுஞ் சிறிதுகாலஞ் சஞ்சரித்து, அப்பலனை யனுபவித்து பின்பு பூமியிற் பிறப்பென்னும் பெருங்கடலி லாழ்ந்தேன்.

இப்பிறவிக்கு வேண்டிய கருவியாகிய கல்வியில் ஐயந்திரிபு அறியாமையற்றுகுறையாமற் கற்று வித்தியா கர்வமேறி அனேகம் பெரியவர்கள் பயந்து பின்னிடையும்படியாய் வாதுகளிட்டு வழக்காடப்பட்டு தர்க்கங்கள் பண்ணி நானே யாதினும் விக்கிரமனென்று பேர்பூண்டு, கடைசியில் வினையினால் மெலிந்து அதன் வசத்திலாழ்ந்து, அக்கல்வி கேள்வி முதலியனவும் பிரயோசனத்திற்கு வாராமற் றேய்த்து காலன் பாசத்தாற் கட்டுபட்டிறந்து கடுமையாகிய பொல்லா நரகத்திலாழ்ந்து எல்லா நரகமுஞ் சிற்கால மனுபவித்து, ஆசாபாசச் பற்றினாலே திரும்பவும் பூமியிலே ஜனனமெடுத்தேன் ஐயோ இப்படி எத்தனையோ ஜனனமெய்தேன் அவற்றைச் சொல்ல ஒன்று பத்தா நூறு எத்தனை தகப்பன் விந்துவுக்கும் எத்தனை தாய்மார் சுரோணிதத்திற்கும் கருவுற்பத்தியாய்க் கர்ப்பத்தி லடைபட்டு எத்தனையோ யோனிவழியில் வந்து பூவிற் பிறந்தேன் பிறக்குந்தோறு மெனக்குண்டாயிருந்த அண்ணன் தம்பி பெண்டீர் பிள்ளை தமக்கை தங்கை மாமன் மச்சான் உற்றார் பெற்றார் உறவினர் முறையார் உலகின் முறையார் என்னு மிவர்களைத் தொகைபடுத்திச் சொல்லமாட்டேன் இப்படி யெடுத்த பிறவிதோறும் பொய்யை மெய்போற் பேசியும் சாதிமுயற்சியுஞ் சமயமுயற்சியுந் தள்ளாமல் அனுசரித்தும் விஷய வாசனைகளிலே உழலப்பட்டும், இவ்வாறு பிரபஞ்சத்திலே அமிழ்ந்து ஆழ்ந்து முழுகிப்போனேனே யல்லாமல் முத்திக்கு வழியறியப் படிக்காமல் போனேன் இந்தப் பிறப்பிற் பிரபஞ்ச மாயாமயக்கத்தை விட்டுக் கடைத்தேறவேண்டிக் காட்டிலே வந்து சிறிது நாள் தபசுபண்ணி, லோக வாசனைகளை யொழித்து ஆசாபாசங்களைத் துறந்து சூரியன் முன்னர் நீங்கிய பனியிருள்போற் பிறவித் துன்பத்தைக் கடந்தேன். இந்த மட்டுக்கும் என்னுடைய பக்குவமென்னவெனில் கடல்நீந்திக் கரையேறிய தன்மையை யொத்தேன் இனியெனக்குச் சனனமரணமில்லை முத்தியென்னு மோட்ச வீட்டிலே குடியானேன் இந்தப்பக்குவ மென்னத்தினாலமைந்ததென்றால் |ஆசாரியர் கடாட்சத்தினாலே அமைந்தது குருவே துணை.

ஓ காசிபரே இப்படிப்பட்ட தத்துவ முத்தி யிதுவாக்கும் நீர் நம்மை நேசித்து வந்தமையால் உமக்கு இந்தத் தத்துவமார்க்கங்களெல்லாஞ் சொற்றேன் இதை யுமது நின்மல மனத்தி லிருத்தி வினையென்பவைகளை விட்டுத் தத்துவ வழியிலே தபசு பண்ணி முத்தியடையும் இந்தத் தத்துவத்திற்கு முடிவு தன்னைத்தானறிவது சித்தசாந்தி பெறுவது மனதுகலையாமற் பரமாத்மாவைத் துதித் தானந்தமடைந் தசைவற்றிருக்கப்பட்டது மோன ஞானிகளுக்கு வேறே நினைப்பில்லை மறப்பில்லை இன்பமில்லை துன்பமில்லை நீ யென்பதில்லை நானென்பதில்லை பகலில்லை இரவில்லை மருளில்லை தெருளில்லை இவ்விதமாக விருந்து பரமாத்மாவைக் காண்கிற பேருக்கு முத்தி என்பதாயுரைத்து தமக்கிச்சையானவிடத்தி லெழுந்தருளினர். சித்தர் பின்னொருகாற் காசிபரை யான் கண்டடுத்து ஓர் நற்பயனை எனக்குச் சொல்லுமென்று கேட்டபோது இதனைச் சொல்லி இவ்வுபதேசம் வந்த முறைமையுங் கூறிப் போய்விட்டனர் இது

தேவவாக்கியம் பிர்மவித்தை பரமரகசியம் ஓ அருச்சுனு நல்வினைகளைச் செய்தாலும் முத்தி வரமாட்டாது தத்துவமுடிவிலே நின்று தபோசித்தியைப் பெற்றுப் பரமாத் மாவைக்காணப்பட்டால் முத்தியுண்டாம். அஃதெப்படியெனில் அழகென்னப்பட்ட பதார்த்தங்களுக்குள் முதன்மையிற் சிறந் தது சூரியன் காரணபூதங்களிற் சிறந்தது அக்கினி விந்தையிற்பெரியதுவேதம்பெற்ற திற்பெரியுது மானிடம் மந்திரங்களி லரி யது காயத்திரி நாலுகாற் சன்மங்களிற்சிற ந்தது பசு பறவையிலுயர்ந்தது கருடன் யுகநான்கிற் சிறந்தது கிரேதாயுகம் இயாகங் களிற் பலமானது இராயசூயம் செம்பொன் னுக்குரியது தானம் தேகத்திற் குரியது மானம் சாப்பிடும் வஸ்துவி லுயர்ந்தது அன்னம் பருகும்வஸ்துவி லதிகம் நீர் மலை யிற்பெரியது பொன்மலை மரத்திற் சிறந்தது ஆல் நதியிலுயர்ந்தது கங்கை சரசுகளிற் சிறந்தது சமுத்திரம் ஆச்சிரமங்களி லழகு இல்லறம் திசைகளிலழகு ஊர்த்ததிசை தேவர்களிற் பெரியவன் பிரமன் பிரமனிற் பெரியவன் விஷ்ணு எவரிலு முயர்ந்தவன் ஈசன்.

அப்பா என் மைத்துன இம்மூவரும் ஒருவர்க்கொருவர் பேதமில்லை. பேதமுண் டென்று பேசுவோர் வாய்மதத்தர் வாதாடு கிறபேர் அக்கியானிகள் மூவருமொன் றென்று பேரறிவா லுணர்ந்தவர்கள் புண் ணியவான்கள் அவர்கள் பெறுவது மோட் சம் பேரறிவுடையவர்கள் யாரென்னில் புரு ஷார்த்தங்களும் சாத்திரங்களும் புராணங் களும் நீதியும் வேதமும் நெறியும்முறையும் தெரிந்தவர்கள் இப்பேர்ப்பட்டனவாயுள்ள சத்தான பிரயோசனத்தை அறிந்தமகாத்து மாக்களே முத்தொழிற்குரிய கடவுளரைச் சரியாக மதிக்கப்பட்டவர்கள் அவர்கள்தான் லோகமயக்கமற்றதத்துவக்கியானிகள்இதை விட்டு இம்மூவரில் வித்தியாச மிருக்கிற தென்று மதத்துவேஷியாய் வாதிப்பவர்கள் கர்மிகள் முத்திவழிக்கு முட்போட்டடைத் துக்கொள்பவர்கள் கதிக்கு அருகராகமாட் டார்கள் கடவுளர் மூவரிற் பெரிது சிறிது உயர்வு தாழ்வென்று சொல்லுகிறது எதற் குச் சமானமென்றால் பகலை இரவென்று சொல்லுவோரது பான்மைக்குச் சமானம் மேலும் பிரபஞ்ச ஆசை யொழியாத நாள் வரையிற்பிறப்புயிறப் பொழிவதில்லை ஆசை யையறிந்து நிராசை யடைந்தால் முத்திக்கு வித்தாவான் இதனை நீ யறிந்துகொள்ளுக என்று வாரிசநர்பனருளிச் செய்ய இவை யனைத்தையும் வானவ ராஜகுமாரன் கேட்டு ஆசனம்விட்டெழுந்து ஆனந்தக் கூத்தாடி பிறவிக்கடலை ஞானத்தோணியாற் கடந்து ஞான பூரணனுகி நட்சத்திரங்களைக் கண்ட வர் சந்திரனைப் பார்த்துச் சந்தோஷப்படு வதுபோல் ஆடிப்பாடி ஹரிஸ்மரணை நாடி ஆதிமத்தியாந்த ரகிதனுடைய திருவடிமல் ரைச் சிறத்திற்சூடி, தன்னைத்தான் மறந்து பரவசமடைந்து திரும்பித்தெளிந்து சுத்த ஞான சுசீலத்தன்னியனுகி தானும் ஸ்ரீ கிரு ஷ்ணபகவானும் அவ்விடத்திற் குலாவிப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

---

### ஸ்ரீகண்ணன் தருமாதியரிடத்தி லுத்தரவு பெற்றுத் துவாரகைக் கேகுதல்.

இவ்வாறு துவாரகாபுரி வாசனும் அருச்சுனராஜனும் இந்திரப் பிரஸ்தத்தி லிருந்து நன்நெறியாகிய விபகார தருமங் களைப்பேசி தேச ராஜர்கள் வந்து பணியத் தக்கதாகச் சிங்காசனத்திலிருந்து உலகு புகழப் புரந்துவரு நாளையில், ஸ்ரீகிருஷ்ண பகவான் தருமராஜனிடத்திற் செலவு பெற் லுக்கொண்டு துவாரகைக்குப் போகவேண்டு மென்றுன்னி அர்ச்சுனன் முகத்தை அரு ளுடன் பார்த்து ஓ விஜய மகாராசனே எனது தந்தை தாய் முதலாகிய இயாதவர்க ளியாவரும்என்னைப் பார்க்கவேண்டுமென்று ஆவல்கொண் டிருப்பதாய்ச் சொல்லி யனு ப்பினுர்கள். தம்பிமார்களும் பிள்ளைகளும் ஸ்திரீ செனங்களும் பட்டணத்துப் பிரசை களும் என்னைக் காண்பதற்குக் கவலைப்பூண் டிருக்கின்றுர்களாம் இது சங்கதி கேள்விப் பட்டேன் அதுமுதற் கவலைகொண்டேன் ஆனபோதிலும் எனக்கு உன்னை விட்டுப் பிரியப் பிரியமில்லை ஒருவிதமாய்ப் பிரிவோ மென்றால் தருமராஜனைவிட்டு நீங்க மன மில்லை நானிவ்விடத்தில் வந்து வெகு நா ளாயிற்று மனமும் வினையு மருவிக்கொண் டிருப்பதுபோற் பழகிக்கொண்டிருந்து விட் டோம் இப்போது மருவிப் பிரிவது அரிதா

யிருக்கின்றது ஆகிலும் என்னைப் பார்க்க வேண்டுமென்று ஆசையேறி யிருப்பவர்களுக்குத் திருப்திபண்ணுமற் போனுற் பாபமல்லவா? ஓ தர்மார்த்த காமமோட்சந் தழுவிய தருமருக்கிளைய தனஞ்செயனே? நான் உண்மையாகச் சொல்லுகிறேன் எனக்குப் பிராணன் உறவு நிதி நிக்ஷேபம்பந்து மித்திரர் இவர் முதலாகிய பேர்கள் தருமராசன் முதல் நீங்களே யல்லாதுவேறில்லை. இப்பவும் உங்கள் தமயனைக் கேட்கிறேன் அவர் போவென்று உத்தரவு கொடுந்தாற் போவேன் நில்லுமென்றால் இங்கேதானே நின்றுவிடுவேன்! வேறெண்ணமில்லை இதற்குனதெண்ணமென்ன சொல்லென்றார் அப்போது அர்ச்சுனன் ஸ்ரீ கண்ணன் முகத்தை நோக்கி ஓ பரம தயாளுவாகிய பரந்தாமா தேவரீருடைய எண்ணத்தில் இப்படிக்கிருந்தால் அப்படியே அஸ்தினு புரத்திற்குச் சென்று அண்ணு அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு போய் வரலா மென்று சொன்னுன்.

அம்மொழியைச் சந்தோஷ சம்மதியாய்க்கேட்ட ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் தனது சாரதியை இரதங்கொண்டு வரும்படியாகப் போக்கினர். அந்த க்ஷணத்தில் தேர்கொண்டு வந்தான். சவுரிராசனுந் தனஞ்செயராசனுந் தேரேறினர்கள். அப்போது முரசு காளம் பேரிகை குடமுழா டமாரம் சின்னம் தாரை பூரி கொம்பு வாங்கா சங்கம் இது முதலாகிய வாத்தியங்கள் ஏகவிரைவாயிரைய சாமரம் குடை பீலிக்குஞ்சம் மயிற்பீலி சாந்தாற்றி கொடி மகரதோரணம் மேற்கட்டி விருதுடால் இவைகள் சிறக்க அனுமக்கொடியும் கருடக்கொடியும் ஆகாயமளாவிப்பறக்க, இவ்வித ராஜவைபவங்களுடன் இந்திரப் பிரஸ்தத்துத் தெரு வீதியில் வருகிறபோது வேதப்பிராமணுள் ஆசீர்வதிக்க தேவர்கள் புட்பமாறி யிறைக்க ஸ்திரீ ஜனங்கள் ஆலஞ்சுழற்ற, பாணப்பெண்கள் மங்களம் லாலி சுபசோபனங்கள் பாட, அரண்மனைப்பெண்கள் வாசப் பொடிகளும் பனிநீர் முதலாகியதும்வீச, பட்டுவான்கள் புகழ, கட்டியர்கொண்டாட, கடைவீதி முதலிய பலவீதியுங்கடந்து அஸ்தினுபுரத்திற்கு வந்து அந்தப்பட்டணத்திலுள்ள பேர்கள் எதிர்சென்று கண்டு இங்கிதங்கள் செய்ய சபாமண்டபம் போய்ச்சேர்ந்து இருவருந் தேர்விட்டிறங்கி தருமராஜனுக்குத் தெண்டனிட்டெழுந்து துதித்தார்கள். தருமராஜனுஞ் சிங்காசனம் விட்டெழுந்து மகிழ்ந்து புகழ்ந்து எதிர் நழுவிக்கொண்டு இதோபசார மியம்பினர். அருச்சுனன் கிரமப்படிக்குத் தருமராஜனையும் வீம ராஜனையும் பணிய அவர்க ளாசீர்வதித்தார்கள் தம்பிமார் முதலிய பேர்கள் இவர்களைத் தொழுதார்கள் இவர்கள் அவர்களைக் கட்டிக்கொண்டு ஆசிபுகன்றார்கள் கிருபாச்சாரியார் விதுரன் இன்னுமுள்ள மேலோருக்கும்வந்தனை தந்தார்கள். அவர்களும் இவர்களையெடுத்தணைத்து நகைமுகமாய் மதித்து ஆசீர்வதித்து அன்பு பாராட்டினுர்கள் அப்பாற் சஞ்சயன் முதலாகிய பேர்களுக்கு ஆதரணை சொல்லிச் சிங்காசனத்தி லிருந்தனர்.

இந்தப் பிரகாரம் இயாவருஞ் சபை நிறைந்திருக்கும்போது இந்திரப் பிரஸ்தத்திற்குப் போய்வந்த சந்தோஷ சம்பிரமங்களைச்சிலநேரம் பேசிக்கொண்டிருந்து, பின் யாவருமெழுந்து அந்தப்புரத்திற்குப் போய் ஸ்நான பூசை செப தப முதலாகிய நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு திரிதராஷ்டிர மகாராஜனுக்கும் காந்தாரியம்மனுக்கும் குந்திதேவிக்குப் பாதபூசைபுரிந்து ஆசமனியமருந்திதேவதார்ச்சனை செய்துபோஜன சாலைக்குட் புகுந்து பந்துக்கள் முதலிய பரிசனங்களோடும் அநேக பிராமணக் கூட்டங்களோடுஞ்சட்ருசிபதார்த்த போசனமருந்திசந்தன பாளித குங்குமாதிக ளணிந்து, மலர்மாலை புனைந்து தாம்பூலந்தரித்து சுகமிஞ்சியமஞ்சசயனத்திற்படுத்துஅன்றிராப்பொழுதையகற்றி மறுநாட்காலையில் யாவருமெழுந்து காலக்கடனை முடித்துக்கொண்டு கொலுக்கூட்டத்திற்கு வந்து நிறைந்தார்கள்அப்போது அருச்சுனன் தருமராஜனைப் பணிந்தெழுந்து, அண்ணு! மேகவண்ணன் துவாரகைக்கு போய்வர வேண்டுமென்று சொல்லுகிருரென்றுன். அதுகேட்ட மாத்திரத்திற் சலம்நிறைந்த ஏரிக்கரைகசியுமாறு போற் கண்களில் நீர்பெருகி உடலெங்குமயிர்க்குச் செறிந்து, ஓ தேவகிநந்தன ! அடியேங்கள் துரியோ தனுதியரிடத்தில் லகப்பட்டுக்கொண்டு சகலமுந் தோற்றுத் தாழ்வடைந்து வாழ்விழந்து தடுமாறுகிற காலத்

தில் சத்துருக்களைச் செயிப்பித்து இராச்சிய பட்டாபிஷேகத்தில் வைத்து அட்டாள தேசமும் இஷ்டசன சமுகமாக விருந்து கொண்டாடும்படிக்கு அருள்புரிந் தருளிய இறைவனுகிய தேவரீரை நான் எப்படிவிட்டுப் பிரிவேன்? எவ்விதந் தேறியிருப்பேன் நீர் வந்து நெடுநாளுமாய்விட்டதால் அதைக் குறித்துப்பேச வெனக்கொன்றுந் தோன்றவில்லை இப்போது உமது மனத்திற் குறித்திருக்கின்றபடிக்கு அடியேனுக்குஞ் சம்மதமே ஆனல் தேவரீருடைய கிருபையால் அஸ்வமேதயாகம் நடக்கவேண்டியிருக்கின்றதே இதற்கெப்படி? தேவரீர் துவாரகைக்குப்போனல் திரும்பி வருகிறவரைக்கும் இயாகந் தொடங்கப் போகிறதில்லை, தேவரீர் வந்தபிற்பாடு வேள்வி முடிக்கவேண்டிய பாரந் தம்முடையதே: உம்மைவிட வேறேராதார வில்லையென்று கூறினர் தருமநந்தனர்.

இம்மொழியைக் கேட்ட ஸ்ரீகிருஷ்ண தேவரவரைப்பார்த்து ஓ மெய்விரத மூர்த்தியே! நீர் மனப்பூர்வமாய்ச் செலவுகொடுப்பீராகில் நான்போய்த் திரும்பிவந்து உமக்கிஷ்டப்படிக்கு நடந்து கொள்ளுகிறேனென்று சொன்னர் இப்படி சனனமரண மொழிய வேண்டுமென்றெண்ணித் தன்னை நம்பிக் கும்பிட்டபேரை இரட்சிக்கும் முத்திநாதன் சொல்லித் தருமராஜனிடத்தில் விடைபெற்றபின் திரிதராட்டிரன் முதலாகிய பேர்களிடத்திலுஞ் செலவுபெற்றுக் கொண்டு சாத்தகியும் சுபத்திராதேவியும் தாமும் தேரேறி நால்வகைச் சேனைகளும் புடைசூழ்ந்துவர அஸ்தினுபுரத்தைக் கடந்து போகின்றார். அப்போது வழிவிடத் தொடர்ந்த மாதவர் முதலிய மகாசனங்கள் யாவருந்திரும்பிவிட்டார்கள் அர்ச்சுனனெருவன்மாத்திரம் நெடுநாட் பழக்கத்தைப்பிரியமாட்டாமற் பின் தொடர்ந்து போனன். ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனை விட்டு நீங்குவதற்கு இஷ்டமில்லாமல் தன்னுடைய தேரை அவன் தேரோடு மெதுவாய்ச்செலுத்திப் பேசிக்கொண்டு போகின்றார். இவ்வாறு யிருவரும் பிரிவதற் கொப்பாமல் ஒருவர் முகத்தை யொருவர்பார்த்து மனமுருகி, முகங்கருகி உடல்வெருவி பூர்வத்திற் சரீரம் ஒன்றுங் இப்போது அதிலிருந்து பிரிந்த சரீரம் இரண்டாகையால் பந்தம் போராடியது இந்தப்பிரகாரம் எத்தனைநேரமிருந்தாலும் முடிவிலெப்படியும் பிரியவேண்டியதே யென்று அருச்சுனன் துணிந்து ஆதியைப் பணிந்து சின்ன மைத்துனனிடத்திலுந் தன் பத்தினியினிடத்திலும் உத்தரவு வாங்கிக்கொண்டு அஸ்தினபுரிக்கு மெத்த விரைவாகப்போனன் யிப்பாற் சமுத்திர நீருண்ட கார்கால மேகம்போற் கறுத்த கண்ணன் அர்ச்சுனன் தன்னுடையகண்ணுக்கு அகப்படாமல் மறைந்துபோமளவும் பார்த்துக்கொண்டு போயினர்.

---

## உதங்கமுனிவருக்கும் ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்கும் சம்வாதம்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராசனே யிப்படி ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனனைப் பரிந்து, சாத்தகி தேர் பின்னும் தன் தேர் முன்னும் தங்கை தேர் நடுவுமாகத் தேவர்கள் பாரிசாத புட்பமாறித்தூவச் செலுத்திக் கொணிடு காரிய காரணங்கள் தெரிந்த ஆரியர் முதலிய சீரியர் பொருந்திய ஆசீர்மத்யன் வழியாய்ப் போகின்றார் அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் வருகிறாரென்று உதங்கமகாரிஷியானவர் எதிர்வந்து காத்திருந்தனர் ஸ்ரீ கிருஷ்ணதேவரும் மகானுக்களுடைய ஆசீர்மவாச வனமென்றறிந்து தேர் விட்டிழிந்து, உதங்கமகாரிஷியைப் பணிந்து அவராற் பரிபூரண ஆசீர்வாதம் பெற்று மிகுந்த ஆசையுடன் அவரோடு மகிழ்ந்தார் அக்காலையி லவரும்புகழ்ந்து பகவானைப் பரிந்து தமது ஆசீர்மத்திற் கழைத்துச் சென்று தழை பன்னுடை மரவுரி மலரணை மான்றேல் இவைமுதலிய வாசனத்தி லிருக்கச்செய்து தேவாமிர்தத்திலும் இனிமையாகிய கனிவர்க்கங்களினல் விருந்தமுது தந்தி, பரிந்து பாரித்து பிரமாவுக் கொப்பாகிய அந்த முனிவர் வித்தகனுகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, ஓ மாயவனே! பாண்டவகுல தருமனுதியருங் கௌரவகுல துரியோதனுதியருஞ் ஜீவவந்தராய் ராச்சிய பரிபாலனம் பண்ணவும் சத்தியசந்தராயிருக்கப்பட்ட தேசாதிபதிகளாகிய இராஜராசர்கள் தங்கள் தங்களினரசு குறையாமல்

ஆளவும் பூமியிலுள்ள செனங்களெல்லாம்
ஆயுசுடன் சுகமாய் விருத்தியடையவும்பண்
ணிப்போட்டு சுவாமிகள் சத்தியவிரதத்துட
னெழுந்து துவாரகைக்குப்போய் வரப்போ
கின்றதோ தேவரீர் உறவு பகை சமமாய்
நோக்கி பட்சபாதமில்லாமல், மேடு பள்ள
மெல்லாஞ் சரிப்படுத்தி எவையுஞ் சீராய்
நடப்பிக்கப்பட்டவரென்று தெரிந்த பெரி
யோர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறே
ன் உலகிலுள்ள வெகு பிராணிகளையுந் துக்
கப்படாமற் பக்குவசுகமா யிருக்கப்பண்ணி
வைத்தீரென்று வெகு ஜனங்கள் விஸ்திரித்
து கொண்டாடப் பார்த்தேன் துரியோதனு
தியர் நூறுபேரும் பாண்டவர்களைந்துபேரு
ம் பகையிலே கெட்டுப்போகாமல் ஒரு வகை
யிலே ராச்சியமாளப் பண்ணினதாயும் போ
ர்க்களத்திற் ஒருவருமடியாமற் செய்ததாயும்
உலகத்தைச் சுகப்படுத்தியதாயும் போதுமா
னமட்டுங் கேட்டுவிட்டேன். இதுவெல்லா
ம் உள்ளதுதானே வள்ளலே யென்று ஏள
னமாகக் கேட்டருளினர்.

இவையனைத்துங் கேட்ட பத்தருக் குக
ந்த கர்த்தன் கலீரென நகைத்து ஓ உத்தம
உதங்கரே நீர் நம்மைப் பெருமைப்படுத்திச்
சொல்லி அக்கினிமூண்டெரியும்படியாகக்கர்
ப்பத்தில் தீமூட்டிவிட்டுமுன்புறத்திலுருவிப்
பின்புறத்திலோடிய இராமன் கணைபோலப்
பேசினீர் நமக்குத் தெரியவந்தது யுத்தகளத்
திற் கும்புகூடி அஸ்திரங்களினல் ஒருவரை
யொருவர் கொல்லவல்ல நல்லபோரில் செத்
துப்போன பேர்களிடத்தில் வைத்த தய
வுடன் எனக்குக் குத்துப்பாடாகச் சொன்
னீர் ஐயா! நல்லதுஇப்பூமியில்தானேவந்து
வந்து பிறந்தவர்களும் தானே நொந்து இ
றந்தவர்களு முண்டோ? அல்லவென்று
பிறப்பிக்கிறவனும் இறப்பிக்கிறவனும் வே
றொருவனுண்டோ? இது நீரறியீரோ! இப்
படியென்று தெரிந்துந் தப்படி சொல்லுவா
னேன்? முன்னே அஸ்தினபுரத்திற்கு நா
ன் பாண்டவர்கள் தூதாய் போகையில் நார
தர் கண்ணுவர் சமதக்கினிநேயர் இம்
மூவரும் வந்து என்னுடன் கூட விருக்கும்
போது வீஷ்மர் துரோணர் இன்னுமு
ள்ள பேர்களுந் துரியோதனனுக்கு எத்
தனையோ புத்தி சொல்லியுங் கேளாமல்
உலகிலுள்ள பேர்களையெல்லாங் கூட்டிக்
கொண்டு வீரசுவர்க்கம்போய்ச் சேர்ந்தான்
அந்தக்காலத்தில்நாங்களுரைத்தபுத்தியைக்
கேட்டுப் பொறுமையாயிருந்த பாண்டவர்
கள் இராச்சியப்பட்டங் கட்டிக்கொண்டு உலக
த்திலிருக்கின்றார்கள் வினையின்செய லெப்
படியோ அப்படி முடியும் நம்மா லாவ
தென்னே நீர்கூட இப்படி நினைக்கப்போமா
இவ்வாறும் யோசிக்கலாமா என்று லோக
நாயகனிகழ்த்த உதங்கர் ஓஸ்ரீகிருஷ்ணு! நீர்
வேண்டுமென்று தப்பவைத்தா லிறப்பார்
களா? நீரிப்போது உம்மைத் தப்பித்துக்
கொண்டு பேசுகிறீர் யாவருக்கும் உயிர்வதை
செய்யா திருக்கும்படிக்குச் சொல்லி இப்
போது ஊரையெல்லா மொருமிக்க அழித்
தீர் நீர் நினைத்தாற் பதினெட் டக்குரோணி
சேனைகளும் இன்னுமுண்டான உயிர்களும்
அழியப்போகிறதேயில்லை ஆகையால் உம்
மைச் சபித்துப் போடும்படியாய் எனக்குக்
கடனிருக்கின்றது இதோசபிக்கிறேனென்று
கோபித்துச் சொல்லினர் அதைக்கேட்டகிரு
பாநிதியாகிய ஸ்ரீகிருஷ்ணன் ஓ உதங்க
ரிஷியே நீரேன் கோபிக்கின்றீர் நான் சில
வசனஞ்சொல்லுகிறேன் அதனை நீர்பொறு
மையோடுங்கேட்டுப் பின்பு உமக்கிஷ்டமான
படி செய்யும் என்று சொல்லுதற் கரிதாகிய
பெருமான் இதனைச் சொல்லுகின்றார்.

ஓ முனிசிரேஷ்டனே! பூமியில் தாமத
குணத்தை யுடையவர்கள் கொஞ்சந் தபசு
பண்ணி அந்தத் தபோபலத்தினுல் வெகுளி
யும் வெருப்பும்பிறந்து தங்களுக்கு எல்லோ
ரும் பயப்படவேண்டுமென்று சபித்துக்கொ
ண்டே திரிகிறதுண்டு சாத்வீககுணத்தை யு
டையவர்கள் பூரணமாய்த் தபசுபண்ணி,
பொறுமை மேற்கொண்டு, மதங்களடங்கி
சபிப்போமென்கிற இறுமாப்பு வார்த்தை
வாராமற் சாதுவாயிருப்பார்கள் ஆனதால்
நீர் தெரிந்தவர் தெரியாதபேர் சபிப்பே
னென்றாலும் உம்மைப் போன்றவர்கள்
பொறுமை சொல்லவேண்டும் நீர் தானே
தெரிந்துந் தெரியாதவர்போற் கோபிப்பீரா
கில் நாமென்ன செய்வது வருகிறது வரட்
டும் நாம் அதற்குப் பயப்படத் தக்கதல்ல வி
ஸ்தாரஞ் செத்தைகளைப் போட்டுக் கொளு
த்தினலும் ஒரு விளக்கொளிக்குச் சமான
மாகா அப்படிபோல் நான் சகலமுந் தெரி
ந்து பார்பவழிகளைத்தள்ளி மேலானவழி

களுக்கு உபகிர்திகள்தேடி நடப்பித்தவனும் நித்திய பிர்ம்மசாரியாயிருந்து சத்தியந் தப்பாமல் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் பண்ணினவனு நானுயிருப்பேனுகில்என்னை நீர் சபித்தாலும் அந்தச் சாபமானதென்னை பற்றமாட்டாது அதைப் பரீட்சைப்பார்க்க வேண்டினுற் சபித்துப்பாரும் மேலும் சிருஷ்டிகர்த்தன்ரட்சககர்த்தன்சம்ஹாரகர்த்தன் என்றுசொல்லும் மூவர் முதலிய சமஸ்த தேவர்களும் தான்தான் தருமம் அதருமம் செல்வம் தரித்திரம் கசப்பு தித்திப்புமனிதர் மிருகங்கள் நல்லவர்கள் பொல்லாதவர்கள் நான்தான் இவர்களுக்கும் உற்றதுணையானவனும் நான்நான் துஷ்டருக்குச்சத்துருவாகிறவனும்இஷ்டருக்குமித்துருவானவனும் நான்தான் இதற்குசாட்சி உமக்கே தெரியும் இராட்சதர்களைப்போக்குகிறதும் இந்திராதி தேவர்களைக்காக்கிறதும் நீரறிவீரே அப்படிப் போற்பரதகுலத்தில் துரியோதனனும் பாண்டவர்களும் பிறந்து அதிலே துஷ்டர்களி யாவருந் துரியோதனனைச்சேர்ந்து இறந்து இஷ்டராகிய பாண்டவர்கள்சிறந்துதீவினை மறந்துஎன்னிற் கலந்திருக்கின்றுர்கள் பூமியிற்பிறக்கிற ஆத்மகோடிகளெல்லாம் ஆயுள் முடியாமல் மடிவதில்லை ஆயுளிருக்கும் போது யாவருஞ் சாகார்கள் இறப்பவர்களை யிருக்கச் செய்பவரும் இருக்கிவர்களை யிறக்கச்செய்பவரும் எவ்வுலகத்தினு மில்லை இதுவே சத்திய சித்தாந்தம் நாமுள்ளபடி புகன்ருேம் இப்பால் உம்மிட மனதிற்கு ராஜியானபடி செய்யுமென்ருேதினர்.

இவையனைத்துங் கேட்ட உதங்கர் சந்தோஷித்து மகா பத்தி சிரத்தையுடன் நகைத்து ஓ தேவகிபாலா நீர் நடத்தியதெல்லாம் அடியேனுக்குத் தெரியவரும் இப்போது தேவரீருடன் மாறுபாடாய் வசனித்ததும், சபிக்கிறேனென் றிசைத்ததும், என்செயலால் வந்ததல்ல அதுவுந்தேவாள்செயலே ஈதன்றி அடியேனுக்கு ஒரு ஆசை இருக்கின்றது. அஃதென்னவெனில் தேவரீருடைய சொரூபத்தைக் காணவேண்டுமென்னு மிச்சையினுல் இப்படிக்குவாதிட்டு பேசினேன் ஓ பரிதிபோன்ற பரந்தாமனே பாரதயுத்த முதனுளில் அர்ச்சுனற்கு காண்பித்த விஸ்வரூபத்தை எனக்குத் தெரிவித்து தீவினையிருட்டைத் தெளிவித்து பாரதயுத்தத்தை முடிப்பித்த பராக்கிரம ரூபத்தையுங் காட்டி அடியேன் தெரிசனம் பண்ணும்படிக்குக் கடாட்சம்வைத்து என் பிறவிப்பெருங் கடலை வறளச்செய்யுமென்று கேட்டுக்கொண்டனர். அதுகேட்ட மஹாலட்சுமி நாயகனுகிய புருஷோத்தமன் தட்சணத்திலே விராட்டு சொரூபத்தைக்காட்டி, உலகமெல்லாந் தானேயாகி நின்றனர். அவ்வுருவத்தை உதங்கரிஷிதரிசித்து அதில் முப்பத்து முக்கோடி தேவர்கள் அறுபத்தாறுகோடி இராக்கதர்கள் நாற்பத்தெண்ணுயிரம்ரிஷிகள் ஆகாசம் பூமி அஷ்டதிசைகள் பதினுன்கு லோகங்கள் சூரியசந்திர அங்காரகர் முதலிய கிரகங்கள் அஷ்டபாலகர்கள்வசுக்கள் உருத்திரகணங்கள் ஜீவாத்மகோடிகள் திரிமூர்த்திகள் இன்னுமுள்ள மலை மர முதலியவெல்லாம் பிரகாசித்திருக்கக்கண்டு பயந்துநயந்து வேதமந்திரங்களினுல் தோத்திரம்பண்ணி சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு ஓ என்னையாளப்பட்ட எந்தையே! ஓ கர்த்தனே! ஓ கடவுளே! தேவர் பெருமையைக் காண்பதற்கு நானெவ்வளவு மனிதன்? எனக்குள்ள தெரியாமைக்குணத்தினுல் தேவரீரை மனித பரியாயத்திலெண்ணி வசனித்தேன் இந்த அபராதத்தை பொறுத்தருளும் ஓ ஆழியிற் றுயின்ற அருளாழியானேயென்று அடிக்கடி பணிந்து வேண்டிக்கொண்டனர் தட்சணம் பரந்தாமன் அவ்வுருவத்தை மறைத்து எப்போதும்போல் எதிரிலிருந்துதப்பாமற்று திக்கும் உதங்கரைப்பார்த்து உமக்குவேண்டிய வரத்தைக்கேளுந் தருகிறே னென்றனர். அதற்கவர் சுவாமி! தேவரீர் அனுக்கிரகம் பூரணமாயிருக்கும்போது எனக்கென்ன குறை? எனக்கு ஒருவரமும்வேண்டாம்சுவாமிகளின் திவ்வியவடிவ தெரிசனங்கண்டு களித்ததே போதுமென்றனர். அதற்கு வாசுதேவ னவரையணைத்து ஓ ரிஷியே! என்னுடைய விஸ்வரூப தரிசனம்பெற்ற நீர் மேலான வரத்தைப் பெற்றதுபோலாம் ஆகிலும் நீரேதாகிலுங் கேட்டுக்கொள்ளுமென்றுர். அதற்கவ்வுதங்க ரவரைப் பணிந்தெழுந்து ஆண்டவனே! இரவும்பகலும் ஒழியாமல் உம்மைக்கண்டு களித்துத் தரிசிக்கும்படிக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்றிரந்தார். அப்படியே கண்ணன் அருள் புரிந்து செலவுபெற்றுக்கொண்டு துவாரகையை நோக்கிநடந்தார்.

### ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சாத்தகிக்கு உதங்க முனிவர் சரித்திரங் கூறுதல்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராசனே இப்படி தன்னோடு சம்வாதம்பண்ணிய உதங்கரிஷிக்குச் சமாதானங்கூறி விஸ்வரூபத்தையும் வேண்டியவரத்தையு மனுக்கிரகித்து விடைபெற்றுத் தேரை நடத்திச் செல்லும்போது தம்பியாகிய சாத்தகி அரிவாசுதேவனைப்பார்த்து ஓ அண்ணா! இந்த உதங்கர் தேவரீரைக் கோபித்துச் சபிப்பேனென்று சொல்லவும் வாதுபண்ணவும் இவ்வளவு அதிகார மமதை என்னத்தினால் வந்தது? அதை அடியேனுக்கு விபரமாய்ச் சொல்ல வேண்டுமென்று கேட்டார் அதற்குச்சுவாமி சந்தோஷித்து அடா தம்பி அவரை இலேசாக நினையாதே அவர் சரித்திரத்தைச் சொல்லுகிறேன்கேள். எல்லாவுலகு மெல்லா திசையுந் தொழப்பட்ட பிருகுமகாரிஷியென்பவரொருவர் அவருடைய வம்சத்திற் பிறந்தவர் இந்த உதங்கர் இவர் சிறுபிள்ளையா யிருந்தகாலத்தில் வேதபாடவித்தை கற்றுக்கொள்ளுவதற்குப் பயிலவ மகாரிஷி இடத்திற்குப்போய் அவர் பாதங்களிற்பணிந்து அவருக்கூழியம்புரிந்து தன்மேலவருக்கிதவுவரும்படி நடந்துவந்து கல்விகளெல்லாங் குறைவறக் கற்றுவருகின்றார் அந்தநாளையில் இவருடன்கூட வெகுபேர் படித்தார்கள் படித்தவர்களியாவரும் நிர்வாகிகளாய் ஆசானிடத்திற் செலவுபெற்றுக் கொண்டு போயினார்கள். இவர்மாத்திரஞ் செலவு பெறாமலிருக்கையிற் பயிலவரிடத்தில் அந்தரங்கபட்ச முடையவராகி சகல தருமமருமங்களுஞ் சித்தியாகும்படிக்குவரங் கொடுத்து வெளிக்குக் காட்டாமலிருந்தார் இந்தசீடர்குருவின் வேலைகளிற் குறையாமல் மனஞ்சலியாமல் காட்டுக்குப்போய் ஆசாரியர் வீட்டுக்குவேண்டிய விறகு சாகம் தேன் கந்தமூலபலங்கள் சமித்து மாவிலை தருப்பை இவை முதலானதுங் குறைவில்லாமற் கொண்டுவந்து கொடுத்து ஒருநாட்போற் பலநாளும் வழிபட்டு வருகிறார் அப்படி வருகையில் இந்தஉதங்கருக்கு விர்த்தாப்பியமேலிட்டு நரை திரை மூப்பு நலி பிணிசேடம் இவைகள் கப்பி இரைப்பு பெருமூச்சு இளைப்பு சுவாசகாசம் இவைகளினைந்துங் குறுகிக் குன்றச்செய்தன.

இப்படி குன்றியும் ஆசாரியர் வீட்டுத் தொழிலில்மாத்திரங் குன்றாமல், ஒருநாள் காட்டுக்குப்போய் விறகுகள் சேர்த்துச்சுமையாகக் கட்டி, தமது சடாபார முடிமேல் வைத்து சூரியபகவான் ஆயிரங்கிரணங்களும் ஒடுங்கிப் பிரகாசிப்ப தெப்படியோ அப்படிபோல் அந்த வயோதிக காலத்திற் சிறிதுஞ் சளையாமற் சுமந்துகொண்டு வருகிறார் இப்படிவருகையில் அவர் தலையிலிருக்கிற சடைக்காட்டில் ஒருசடை அந்த விறகு சுமையிற் சிக்கிக்கொண்டது அதை யவரறியாமல் ஆச்சிரமத்திற்கு வந்து தலைமேலிருந்த சுமையைத் தரைமேற் போட்டார் மாட்டிக்கொண்டிருந்த சடை அடியோடு பிடுங்குண்டு இரத்தந் தாரைதாரையாய் வடிந்தது அந்த உதிரத்துடன் பூமியிலே விழுந்த சடை உடனே திக்கென்று பற்றிக் கொண்டு லோகங்களையெல்லாந் திகுதிகென்று எரிக்கத் தொடங்கிற்று அதனாற் பிரபஞ்சஞ் சகிக்கமாட்டாமல் துக்கப்பட்டுத் துயர்கூறும்போது சடையழிந்து உதிரம் வழிந்து நெருப்பா யெரியக்கண்ட உதங்கர் பூமியிலே வீழ்ந்து புரண்டு அரண்டு மருண்டு அலறிக் கதறிப் பதறியழுதார் அதை யாசானாகிய பயிலவர்கண்டு கிருபாகடாட்சம் பிறந்து சீடனுக்கண்டையில் வந்து நம்முடைய பெண்ணைப் பார்த்து அம்மா இந்த உதங்கனைத் தூக்கிவிடென்று சொற்றனர். மிகுந்த நோன்புகள் நோற்றிருக்கின்ற பாக்கியவதியாகையால் அந்தட்சணமே அவரை வாரியெடுத்து கண்ணீர் துடைத்து உபசரித்தாள் அப்போது உதங்கராகிய சீடர் குருவைப்பார்க்கவே மெத்தவும்அழத்தொடங்கினார். அந்தச் சீடன் ஆசாரியன் நோக்கி அப்பா என் சற்புத்திரனே! நீயேனழுகிறாய் உன்னுடைய கருத்தென்ன ஒளியாமலெனக்குச் சொல்லென்றுகேட்டார் அதற்கவ்வுதங்கர் அவரைப் பணிந்தெழுந்து சுவாமி! என் சடையறுந்து இரத்தம் பெருகுகிறது இதைப்பாரும் என்னைக்காரும் எனக்காருமில்லை தேவரீரிடத்திற் படித்த சீடருக்கு எல்லாம் பொருளுரைத்து அருளளுத்தனுப்பிவிட்டு என்னிடத்தில் மாத்திரங் கருணை தப்பி இருக்குமானால் எனக்குத் துக்கம் வாராதா? ஆண்டவனே எனக்கென்ன சுகமிருக்கிறதென்று சொன்னார். அதைக்கேட்ட

பயிலவர் சிறு நகைவிளைத்து மிகுந்த கிருபையுடன் இதனைச் சொல்லுகின்றார்.

அப்பா உதங்கா! குருவுக்குப் பணிவிடை செய்வதைப் பார்க்கிலும் வேறே தபசில்லை யாகமில்லை விரதமில்லை நோன்பில்லை ஆராதனையில்லை உனக்குச்சகலமுஞ்சித்தமாயிருக்கின்றன நானும் என்னுடைய அன்பினாலே உன்னைச் சதாகாலமும் ஆசீர்வதித்துக் கொண்டிருக்கிறேன். இனி நீ பெறவேண்டிய பேறு வேறில்லை அதற்குத் திருஷ்டாந்த மென்னவென்றால் உன்னுடைய சடையிலே ஒரு சடை பிடுங்குண்டு போகவும் அது பற்றிக்கொண்டெறியவும் அதனால் லோகாலோகமெல்லாம் நிலேசப்படவுமான மிகுந்த மகுத்துவமுண்டாயது நிலத்தில் வீழ்ந்து சோர்ந்தழுத உன்னையெடுத்து உபசரிப்பதற்கு ஒரு பெண்ணும் ஏற்பட்டுப் போனாள் இவைகள் எல்லாம் ஆசாரியபத்தி பண்ணிய பலத்தினால் வந்து சித்தித்தன. இப்பவும் அறுந்தசடை திரும்பவும் உனது முடிவில் நிரம்பக்கடவது உன்னைத் தூக்கியெடுத்த பெண்ணோ நல்ல விரதத்தையுந் தவத்தையு மனுஷ்டித்தவள். இந்தப் பெண்ணை நீ விவாகம் பண்ணிக்கொண்டு, இன்பசுகத்தை யென்னாளு மனுபவிக்கக்கடவை. சகல பெரியோர்களு முன்னைப் பணிந்து மகா பூச்சியனென்று கொண்டாட வேண்டியது என்று ஆசீர்வதித்து, மேலும் இந்தப் பெண் ஆசாரிய புத்திரியாச்சே நாம் எப்படி கலியாணம் பண்ணிக்கொள்வதென்றும், பண்ணிக்கொண்டால் தருமவிரோதம் வருமே யென்றும், அதனாற் பாபஞ் சம்பவிக்குமே யென்று மெண்ணிப் பாராதே, அப்படிக்குத் தருமவிரோத முண்டாகும்படிக் கிருந்தால் எனது வாக்கிலிருந்து இந்த உத்தரம் பிறக்காது. அப்பேர்ப்பட்ட பாபமென்றும் பீடிக்காமலிருக்கும்படியாய் வரங்கொடுத்தேன். நானே விவாகமுஞ்செய்து வைக்கிறேன் நீ ஆடவருக்குள் பீடுடைய நாயகனாகி, கோவைப் பழம் போன்ற இதழுடைய மகா லட்சுமிக்குச் சமானமாகி என் தவத்திற் பிறந்தபெண்ணை யிந்த மாதை மணந்து புணர்ந்து, யில்லற வாழ்க்கையிலிருந்து நல்லறத்தைப் பெறுக, என்று புத்தி தெளியும்படியாகவும் புனிதமருவும்படியாகவுஞ் செப்பினார். அதற்குச் சீடன் ஓ ஐயா நான் பாபபுண்ணிய மறியேன், மிகவுஞ்சிறியேன் ஞானவறியேன் மற்றொன்றுங் குறியேன் தேவரீருடைய திருவாக்கை நம்பினேன். தங்களுடைய வார்த்தையே வேதம் ஆதலால் தமது இஷ்டப்படிக்கு நடந்து கொள்கிறேனென்றார். ஆசாரியார் ஆசாபாசங்களும் ஐம்புலமயக்கமு மற்ற சீடனைப் பார்த்து, அஞ்சாதே என்று அறுத்த சடை திரும்பவுஞ் சிரத்திற் பொருந்திப் பிறங்கச் செய்து தமது பெண்ணையும் நல்ல முகூர்த்தத்தில் மணமுடிப்பித்து தமது ஆசிரமத்திற்றானே வைத்துக் கொண்டனர். அப்பாற் சதியும் புருஷனுங் கோட்டானைகள் மலித்திருக்கப்பட்ட அக்காட்டிற் கூட்டுளிபோற் கலந்து பேதமில்லாமல் இருக்கையில் அந்தப் பெண்ணானவள் தகப்பனது தபோபலத்தினால் தன்னுடைய சரீரத்தை விட்டு வேறே சரீரமெடுத்து புருடனைவிட்டு க்ஷணப்போதும் பிரியாப் பிரியையாகி நாயகன் மனதுக்குச் சரியாய் நடந்து வாழ்த்து வந்தாள்.

தம்பி சாத்தகி இப்படியிருக்க ஒருநாளிவ்வுதங்கரானவர் அருளென்னுங் கிருபைக் கடலும் ஞானவரம்பும் இருதயத்திற் குடிகொண்டிருக்குந் தன்னிறைவனுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு, சுவாமி அடியேனுக்கிவ் வுலகளையுடைய கடல்வளைத்த பூமியிற் ஜன்மித்த சனங்களுக்குள்ளே புனிதமாகவும், பொறுமையாகவும் விளங்கப்பட்ட பேரறிவாளரும் ஆசாரியரும் மாமனாரும் தேவரீராகையால் தேவரீரிடத்திலேயே படித்து தேவரீராலேயே உதங்கமகாரிஷியென்று பெயர் வகித்து தேவரீரே எனக்குத் திருக்கலியாணமு முடிப்பிக்க எல்லாச் சிறப்பும் பெற்றேன் ஓ ஆண்டவனே தேவரீருக்குக் குருதட்சணை கொடுக்க மனதிருக்கிறது தேவர் மனத்திற்கு வேண்டிய பொருளைக் கேட்டால் அடியேன் கொடுக்கிறேனென்று வணங்கி வேண்டினார். அதையவ்வாசாரியர் கேட்டு ஓ மாணாக்கனே நமக்கு எதிலேயும் அவாவில்லை உன்னுடைய வந்தனை வழிபாடே நமக்குப் போதுமான குருதட்சணையாயிருக்கிறது இதுவே போதுமென்றுரைத்தருளினார் அதற்கவர் ஓசுவாமி தேவரீர் இப்படி மறுத்துச் சொன்னால் அடியேனுக்கு ஒப்பாதென்று பின்னும் வருந்திக்

கேட்டார் அப்படிக்கானல் என்னுடைய
பெண்சாதி யிடத்திற் சொன்னல் அவளுக்
கிஷ்டமானதை விரும்பிச் சொல்லுவாள்
அப்படியே செய்யென்று அனுப்பினர் வல்
லவராகிய உதங்கர் நல்லதென்று குருபத்தி
னியைக் கண்டு பிரதட்சண நமஸ்காரம் புரி
ந்து அம்மா நான் ஆசாரிய ருத்தரவின்
பேரில் வந்தேன் உமக்கு வேண்டியதைக்
கேளும் அதைக் குருதக்ஷணையாகக் கொடுக்
கிறேனென்று பணிந்தார். அதற்கந்த ரிஷி
பத்தினி ஒன்றுந் தோன்றுதவள்போ லிருந்
தனள் மீட்டும் உதங்கர் பணிந்தெழுந்து,
அத்தாய் நீர் கேட்கிற வஸ்து பதினன்கு
லோகத்தி லிருந்தாலும் அருமையான தானு
லும்பெருமையான தானுலுங்கொண்டுவந்து
கொடுக்கிறேன் நீ ரொன்றும் யோசிக்காமற்
சொல்லுந் தாயே யென்றார். அதற்குக் குரு
பத்தினி ஓ சீடனே பௌடியந்த மித்திர
சக்கியனென்னும் இராசனுடைய பட்டபு
ஸ்திரீயின் காதுகளில் ஜீவரத்தின குண்டல
முண்டாயிருக்கின்றது அதைக் கொண்டு
வந்து கொடுத்தால் எனக்கு மிகுந்த சந்தோ
ஷமாவென்று சொன்னள் அவ்வாறே நல்ல
தென்று செலவு பெற்றுககொண்டு போயி
னர். இப்பாற் பயிலவர் ஆசீர்மத்திற்குள்
வந்து உதங்கனெங்கே போனனென்று
பெண்சாதியைக் கேட்டார் குருதட்சணைக்
காகக் குண்டலங் கொண்டுவர போனதை
விண்டனள் பயிலவர் மெத்தக்கிலேசப்பட்டு
அந்த ராசஸ்திரீயினுடைய குண்டலத்தை
விரும்பி அந்த ராசனுடையகுணமறியாமல்
அனுப்பினயே அவனுஞ் சம்மதித்துப்
போனனே அந்த ராஜன் மகாரிஷி சாபத்தி
னல் நித்தியம் ஒரு மனிதனைக் கொன்று
மாமிசந்தின்று வயிறுவளர்க்கின்றவனச்சே
அப்படிப்பட்டவ னிடத்திற்கு நீ அனுபபி
யதும் அவன்போன தும் பெரிய குற்றத்திற்
கிடமாய் விடுமே என்று தராசு நிலையாகிய
நடுவு நிலைமையுடைய பயிலவர் சொல்ல
ஆசாரிய பத்தினி கலங்கி கிலேசமாய் வில
ங்கி பெண்புத்தியும் பேயறிவுமாய் வருந்தி
ஐயோ நானேன் அனுப்பினேன் விருதா
விற் பழிக்கு ஆளானேனே ஓ சுவாமிதாயா
னவள் சேயை ரட்சிப்பதுபோல் காக்கப்
பட்ட தேவரீர் நமது மருகன்போன இடத்
தில் ஒரு குறைவும் வாராமல் என்னையும்
அபராதனை சாராமல் அருள் புரியவேண்

டும் என்று அடிபணிந்தழுதாள் பயிலவர்
காதலியைப் பார்த்து ஓ பெண்ணே மன்மத
னுக்குச் சமானமாகிய உதங்கன் யாதொரு
அபாயமில்லாமல் வருவான் நீ பயப்பாட
தே என்று திடஞ்சொல்லி பொய்யில்லா
மெய்யர்கள் கூடிய சாது சங்கமத்திற்பொறு
மைப்பயிரேற்றிய பயிலவர் தன்னிருப்பிடத்
திற்போய்ச் சேர்ந்தார். அங்ஙனமிருந்த
மற்றரிஷீஸ்வரர்களுஞ் சீடர்களும் ஒருவருக்
கொருவர் பிரிய வசனம் பேசிக்கொண்டு
வந்தனை வழிபாடு தந்து மனமுவந்திருந்
தார்கள்.

அப்பால்சாத்தகி இப்பாற்குருதட்சணை
கொண்டு வரப்போன உதங்கர் காடு மேடு
செடி மலை ஆறு ஏரி குளம் மடு இவை முத
லியவெல்லாங் கடந்து பவுடியந்த மித்திர
சக்கியனென்னும் வேந்தனைத் தேடிச்
சென்று விசாலமான வாளுக்கொப்பாகிய
கண்களையுடைய அவ்வரசனைக் கண்டார்!
அப்போதவன் மனிதர்களுடைய ரத்தநாற்
றமும் மாமிசமொட்டிக்கொண்டிருக்கிற பற்
சந்துகளும், குரூரப்பார்வையும், கோரவேர்
வையும், குரை கடலோசையும், பவளம்
போற் சிவந்த கண்ணும், நெருப்புப்பொறி
பறக்க விழிக்குங் கோபமும் பர்வதாகிர்தி
யாய்க் கறுத்த மேகம் போன்ற விகிர்தாகார
சரீரமும் ஆலாலவிடம்போ லெரியுமுகமும்
கோரத் தந்தமும் தீராப்பசியும் தெளியாத்
தாகமும் எப்போதுயிரைக் கொல்லுவோ
மென்னும் வாஞ்சையும் உகாந்த காலாக்
கினிபோற் றேற்றமு முடையவனய் ஒரு
பிராணியு மில்லாமல் ஒன்றியாய்க் காட்டி
லிருக்கிற தன்மை யறிந்தும் அவரருகிற்
சென்றார் அவனுமிவரை நல்விருந்தென்று
களித்துப் பார்த்தான் உடனே உதங்கரிஷி
பயப்படாம லவனுக்கு யாசீர்வதித்தனர்
இராக்ஷசனுக் கொப்பாகிய நாசகால ராசன்
இவரைக் கண்டு சந்தோஷங் கொண்டு ஓ
ரிஷியே நான் பெரிய பசியால் நொந்துழல்
கின்றேன் உகாந்தகால ருத்திராக்கினியைக்
குடிவைத்ததுபோல் என் வயிறெறிகிறது.
என்பசிதீரும்படியாய் நீவந்தாய்கரும்பினு
மினிதாகிய விருந்தே ஓ என் பசிதணிய
வந்த பாக்கியவமுதே உன்னைக்கொன்று
தின்னுகிறேன் வாவென்று கையிரண்டை
யும் நீட்டிக்காட்டினன். அப்போது உதங்க

ரொடுங்கிச் சொல்லுகிருர் ஓ அரசனே தேவர்களுக்குயர்ந்தவர்குருஅப்பேர்ப்பட்ட யாசானுக்குத் தக்ஷிணை கொடுக்கவேண்டி உம்மைநாடிவந்தேன் வந்தயென்னை நீயார் வந்த காரியமென்ன என்று கேளாமல் தரும விரோதமாகிய சொல்லைச் சொன்னீர் நீர் சரீரமெடுத்த நாள்முதல் நாவினலே ஒரு பொய் பேசியறியாத புண்ணியதேகி பிரதாப சூரர் வேலாயுதந் தரித்தருளிய தீரர் உலகாளப்பட்ட உத்தமர் நிதிதாஸ்திரந் தருமசாஸ்திரந் தெரிந்தவர் அப்படியாகிய உமக்கு யாதோ தீவினை வசத்தால் இந்தத் தேகமும் கொலைசெய்யுஞ்சிந்தையும் வந்திருக்கின்றன மற்றப்படி உமது புத்திக்கு மயக்கம்வரத் தக்கதேயில்லை என்னைக் கொன்று தின்று பசிதீருவேனென்று நீர் சொல்லத்தகாத வார்த்தையைச் சொன்னீர் இப்பவுங் கோபத்தைத் தணித்து என்னுபத்தைத் தீர்த்து உமது பாபத்தை யொழித்து சாந்தமூர்த்தியாய் மேல்வரும் லாபத்தைக் குறித்து நான்வந்தசங்கதியைக் கேட்டருளுமென்றுரைத்தார்.

இவ்வாறு சொல்லிய உதங்கர் வசனத்தைக் கேட்டவரசு னவரைப் பார்த்து ஓ ரிஷியே எனக்கிந்தச்சாபம் நேரிட்டுப் புத்தி மாறிப்போன தினந்தொட்டு நித்தியம் உதயமுதல் மூன்றுசாமத்திற் குட்பட்ட இந்தக் காட்டின்வழியாக யாத்திரைப்போகிற மனிதரில் ஒரு மனிதனைப் பிடுங்கித்தின்று பசி திரும்படியாய்த் தேவர்கள் வரங்கொடுத்திருக்கின்ருர்கள். அன்றுமுதலின்றுவரைக்கும் அத்துதப்பாமல் ஒவ்வொரு மனிதனையே தின்று வருகிறேன் இன்றையதினத்தில் மேற்சொன்ன மூன்றுசாம வேளைக்கு என் கண்ணெதிர் நீ வந்தாய் இப்போது நானுன்னை விடேன், எப்படியுங் கொன்று தின்று பசிதீருவேனென்று சொல்லினன் அதுகேட்ட உதங்கரிஷி புன்சிரிப்புகாட்டி ஓ பொருதும் வேலைத்தாங்கிய பூபதியே! பசியென்னுநோய் யாவர்களுக்கும் பொல்லாது அந்த ரோகமேலிட்டால் ஏதாகிலுமொரு ஆகாரம் போடாமல் நில்லாது யாரானபோதிலும் கொன்று புசியாமல் நிறுத்தக்கூடாது மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை தானம் தவம் முயற்சி தாளாண்மை மகளிர் கேண்மை என்னு மிப்பத்தும் பசிவந்த காலத்திற் பறந்துபோய்விடும் அதின்செய லப்படிக்கிருந்தாலும் வஸ்துநிலையும்சாந்தகுணமும் நித்திய சத்தியமும் தருமநினைவும் தயாரசமும் தகுந்ததூய்மையும் ஆகிய விவையெல்லாமுடைய புண்ணியபுருடனை நீர் இந்த வேளையிற் கொண்டிருக்கப்பட்ட பசிக்கு அல்பமான என்னுடல் உதவியாகும்படியாய் வந்து வாய்த்ததே அது எனக்குச் சந்தோஷம் வெகுபேர் பாழான உடலையெடுத்து மடிந்து மண்ணில் வாழாமற் போனர்கள் நான் பிறவியெடுத்த பாக்கியம் உமக்கு யிரையாகப் பலித்ததுவே சிலாக்கியம் ஆனந்தயோக்கியம் யானும் நான் குருவுக்குத் தட்சணைகொண்டு வருகிறேனென்று வந்தவன் நீரென்னைத் தின்றுபோட்டால் அடியேனுடைய வார்த்தை அவலமாய்ப் போய்விடும் உம்மைக்கோரி நான் கேட்கவந்த உடைமையைக் கொடுத்தனுப்பினல் நான் கொண்டுபோய் ஆசாரிய சம்பாவனை நடப்பித்து பேச்சுத்தப்பாம லும்மிடத்திற்கு வருகின்றேன் பிற்பாடு என்னைத்தின்று பசியாற்றிக் கொள்ளலாம் நானே மகா சத்தியன் சாகின்றமட்டும் பேச்சுத்தப்பிப் போகமாட்டேன் என்று சொல்லிப் பிரமாணிக்குஞ் செய்தார் அச்சொல்லைக் கேட்ட அரசன் ஓ ரிஷியே கையிலகப்பட்ட பொருளை விட்டுவிட்டு வரட்டும் வரட்டும் என்று வழி பார்த்திருப்பது மார்க்கமோ நீ வருமட்டும் உன் பிராணன் ஸ்திரமோ? இதை நானெப்படி நம்புவது எனக்கு மனம் ஒப்புமாவென்ருன்.

இதனைக்கேட்ட உதங்கர்மீட்டுமவனைப் பரிந்துநோக்கி ஓ மகாராசனே! பெரியோர்களா யிருக்கப்பட்ட பேர்கள் கிடைக்காத வஸ்து கிடைக்கிறதா யிருந்தாலும் ஜீவ யிம்சை செய்யத் துணியார்கள் நீர்சகல விபரங்களும் வைதிகமுறைகளும் அறிந்திருப்பவர் உமக்கு ஜீவயிம்சை செய்ய மனம் வராது அல்லவென்று என்னைக்கொன்று பசி தீர்த்துக்கொள்ள மனதிருந்தால் நான் விரும்பிவந்த பொருளைத்தந்து என்னையனுப்பிவையும் நான் சென்று குருதக்ஷிணை கொடுத்து சொற்சோர்வுபடாமல் உம்மண்டைக்கு வருவேன் நானுரைத்த உறுதிமொழி தப்புவதில்லை தப்புவனகில் இந்தச்

சமுத்திர சலம் அத்துதப்பிப் பூமியை முழுத்தக்கடவது இதற்குசாட்சி ஆகாசவீதியிலிருக்கிற தேவர்களேயென்று கெட்டியாய்ச் சொல்லினர் அப்போது ராசனுக்கு மனமிதங்கி ஓ ரிஷியே என்னிடத்தில் நீ வந்த காரியமென்னவென்றுகேட்க உதங்கர் முகமலர்ந்து ஐயா இந்தப் பிரபஞ்ச வாழ்க்கை நீர்க்குமிழ்போலென்று எண்ணித் துணிந்த எங்க ளாசாரியாருடைய பெண்சாதி அருந்ததிக்கொப்பாகிய அம்மை அவ்வுத்தமியார் தானணிந்து கொள்ளுவதற்கு உம்முடைய மனைவி காதிலிருக்கிறகுண்டலத்தைக் கேட்டனர் அதற்காகவந்தேன் நீர் கொடுப்பீராகில் உமக்கு மிகுந்த வைபவமுண்டாகும் சகலவரிட்டமு நீங்கும் என்பேரிற் றயவு பண்ணி அதனைத் தருமென்றார் அதற்கு இராசன் சொல்லுகிறான் ஐயா! ரிஷியே கொடுக்கிறவிஷயத்தில் தன்னுடைமையைக் கொடுக்கவேண்டும் பிறருடைமையைக் கொடுப்பதினால் பிரயோசனமில்லை ஆதலால் என் சொந்தப் பொருளாகியதைக் கேள் தருகிறேனென்றான் அதற்கு உதங்கர் ஐயா மகாராஜனே! நான் ஜென்மாந்திரத்திற் பண்ணிய புண்ணியவசத்தால் ஆசாரியபத்தினி அதைக் கேட்கவும் உம்மிடத்தில் வந்து யாசிக்கவுமாயிற்று அந்தக் குண்டலமே வேண்டியது அதைவிட வேறு பொருள் வேண்டுவதில்லையென்றார் ஆனால் என்னரண்மனைக்குட் போய் என் பெண்சாதியைக் கண்டு நான் சொன்னதாய்ச் சொல்லி அக்குண்டலத்தைப் பெற்றுக் கொள்ளுகவென்று அனுப்பினான் உங்கள் வீடெங்கே யென்று உதங்கர் வினவினார். அரசன் வீட்டுக்கு அடையாளஞ் சொல்லிப் போவென்றான் அந்தக் குறியின்படியே உதங்கர்சென்று பதிவிரதா தர்மத்தைத் தாங்கி அருந்ததிக் கொப்பாகப் பொருந்தியிருந்த ராஜஸ்திரீயைக்கண்டு உம்முடைய கணவன் உமக்குச்சொல்லி நீரணிந்திருக்கிற குண்டலத்தை என் குருவுக்குத் தட்சணை கொடுப்பதற்காக வாங்கிக்கொண்டு போகச்சொன்னார். அவ்வார்த்தையை நம்பி வந்தேன் உமக்குந் தெரிவித்தேன் நீர் தயவுசெய்யவேண்டுமென்றார் அந்தப் பெண்பெருமாள் சந்தோஷப்பட்டு என்னாயகன் ஒரு அடையாளங் கொடுத்தருள்வாராகில் அட்டி சொல்லாமற் தருவேனென்றாள்.

அந்தக்ஷணம் உதங்கர் விகிர்தகார சரீரகுணம்பெற்ற வேந்தனிடத்திற்கு வந்து தேவரீருடைய மனையாள் ஒரு அடையாளம் வாங்கிவரச் சொன்னாளென்றார், அதற் கரசன் (பதியாலொரு கதியில்லை) என்று கழறி இந்த வாக்கியத்தைப் போய்ச் சொல்லுகவென்றுவிடுத்தான் இந்த அடையாளமொழியை அரசன் பத்தினிக்குச் சொல்லவும் அவள் சந்தோஷமாகி உதங்கரிஷியைத் தொழுது பழுதுபடாத அப்பத்தினியானவள் குழையைக்கொடுத்து இந்தக் குண்டலத்தைத் தரித்தபேருக்குப் பசியிராது தாகமணுகாது அக்கினி சூரியன் சந்திரன் இன்னுமுள்ள கிரகங்களின் வெப்பவேதைகள் சேரா சரீரத்திற்கு இளைப்பில்லை விஷதிருஷ்டியிராது விகாரங் கிட்டாது பூதப்பிரேத பிசாச டாகினி டோகினீ வைப்புமாரண முதலிய மார்க்கங்களணுகா வாலைப்பருவப் பாலியப் பெண்கள் தரித்ததால் அவர்கட்கு வாழ்வுமிகும் கிழவிகள் தரித்தாற் குமரிகளாவார்கள் சௌந்தரியமுமுண்டாம் செல்வங் குறையாது இது இருக்கிறவிடத்திலே லட்சப் பிராமணபோசனம் நடந்துகொண்டேயிருக்கும் நாகலோகம் தேவலோகம் அசுரலோகம் யக்ஷலோகம் கருடலோகம் காந்தருவலோகம் சித்தலோகம் வித்தியாதரலோகம் இப்பூலோக முதலான இடங்களிலிருக்கும்பேரெல்லோரும் இதனைத் திருட்டுத்தனத்தினாலாவது வஞ்சனை மோசத்தினாலாவது கிரகித்துப் போவதற்குக் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கின்றார்கள் இதற்கீடாகிய குழை எங்கணுமிராது நாங்க ளன்புகூர்ந்து அளித்த இக்குண்டலத்தைக் குருதட்சணையாகிய மேலானதானத்தைச் செய்து நிறைவேற்றுகிற பரியந்தம் நீர் மகா நிதானத்துடன் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கவேண்டும் எங்களுக்கும் உமக்கும் பாக்கிய சிலாக்கியமுண்டாம் நல்ல பலன் கிடைக்கும் நாங்கள் கொடுத்தது பெரிதல்ல நீர் கொண்டுபோய்ச் சேர்ப்பது அருமை மெத்தப் பிரயாசம் மார்க்கத்தில் மலசலாதி கழிக்க காலக்கடன் முடிக்க நித்திரைசெய்ய போசன மருந்த நேரிட்டால் கையைவிட்டுப் பூமியில் வைக்கலாகாது வைத்தாலோ? உடைமை நம்முடையதல்ல இதை யடித்துக்கொண்டு போவதற்கு எங்கே? எங்கே? என்று காத்திருப்பார்கள் மோசம் போகா

தீர் என்று மொழிந்து கொடுத்து விடுத்த
மொய்குழலை உதங்கர்வாழ்த்தி, காட்டிலிருக்
கிற காவலனிடத்திற் வந்து காட்டினார், அ
துகண்ட அரசனவரைப்பார்த்து, ஓ வேத
முனியே! இதனை யும்முடைய ஆசானிடத்
திற் கொண்டுபோய்க் கொடுத்து குருதட்ச
ணைக்கடனைத் தீர்த்துக்கொள்ளுமென்று செ
லவுகொடுத்தான்.

அப்போது உதங்கர் அரசனை நோக்கி
வேந்தனே உமக்குச் சமானமாகப் பேசுவ
தற்கு ஒருவரையுங் காணேம் மகாத்துமா
வாகிய உமக்குச் சன்மாந்திர வினையினால் இ
ந்தத் தேகம் வந்திருக்கின்றது அஃதப்படி
யிருக்க நீர் சொல்லிய அடையாள வசனத்
தை உம்முடைய பெண்சாதி தெரிந்துகொ
ண்ட வயணமெப்படி? எனக்கு அந்தச் சந்
தேக நிவர்த்தி செய்விக்க வேண்டுமென்று
கேட்டார் யாவரையுங் கொன்று தின்று திரி
யுங் கூறுபெற்ற காவலன் கொல்லாவிரதமு
டைய உதங்கரிஷியைப் பார்த்து ஓ ஐயா!
இராஜதருமமாவது வேதவித்தாகிய பிர்மக்
ஞான பிராமணர்களுக்கு வந்தனையாதி வழி
பாடுசெய்து பாதுகாத்து இல்லற தருமத்
தின்வழி நிற்றலென்று கேட்டு அந்நல்லற
தின் வழியினின்று நாளுந்தவராமற் பிரா
மணபூசை நடத்தி வருகையில் ஒருநாள்
ஒரு பார்ப்பானுக்கு அன்னங்கொடுத்தேன்
அதிலே ஒரு மயிர் எப்படியோ தப்பிக்கிட
ந்து அவர் கரத்திற் சிக்கியது அந்த அல்
பக்குற்றத்தைச் சகிக்கமாட்டாமல் என்னை
இப்படியாகச்சபித்தனர் அந்தச்சாபத்தினால்
நானிந்தக் கொடுமையைப்பெற்று எய்தேன்
வீட்டைவிட்டேன் காட்டிலுற்றேன் என்
பெண்சாதி என்னுடன்கூட வந்திருந்து
நான்படுகிற அலங்கோலத்தைப் பார்த்து
ச் சகிக்கமாட்டாதவளாய் நாட்டுக்குப்போ
ய்விட்டாள் என்னையவள் விடுத்துப்போ
னபோது பர்த்தாவினுடைய தரும கரு
மங்களைச் செய்வதைவிடப் பதிவிரதைகளு
க்கு வேறுகதியில்லை யென்னும்பொருள்பட
அவ்வாக்கியஞ் சொன்னேன் அப்படிச்சொ
ல்லியு மகன்றாள் நீர்போய் அந்த மொழி
யைச் சொல்லவே அவள் தெரிந்துகொண்
டு குண்டலத்தைக் கொடுத்தா ளென்றான்.
உதங்கர் சந்தோஷித்து மகாராசனே நான்
சென்று குருதட்சணை கொடுத்துவிட்டு உ
மக்குச் சொல்லிய உறுதிவசனந் தப்பாமல்
உம்முடைய பசிதீர்க்க வருகிறேன் செலவு
கொடுமென் றெழுந்தார் அப்போதரச னவ
ரைப்பார்த்து ஓ உத்தமனே கொல்லுபவர்க
ளிடத்திற்கு நல்லவர்கள் வருவார்களோ
இனி நீர் தப்பித்துக்கொண்டு போகிற வழி
யைப்பாரும் நீர் வரவேண்டாம் நான் சுகப்
படும்படியான மார்க்கத்தைத் தேடும் என்
னேசம் எந்நாளுமோசம் ஆகிலும் உம்மு
டைய விசுவாச மறக்கவேண்டா மென்று
ரைத்து விடைகொடுத்தான் அதற்குப்
பாலசுப்பிரமணியர்போன்றஉதங்கர் அவனை
யாசீர்வதித்து ஓ அரசனேஉமதுமநோ நிச்
சயந் தெரிந்துகொண்டேன் ஆனால் மகாத்
துமாக்களாகிய பயிலவரும் அவர் பத்தினி
யும் எனக்குத் தாயுந்தந்தையுங் குருவுந்தெய்
வமுமாயிருப்பது மெய்யேயானால் நானும
வர்களை யவ்வாறே நினைத்து வழிபடுவது ச
த்தியமானால் இந்த க்ஷணத்திலேயே உம்மு
டைய சாபம் நீங்கவேண்டியது நீர் பழயப
டி ராச்சியபரிபாலனம் பண்ணத்தக்கது என்
று சொல்லி வாழ்த்தினார்.

இவ்வாறு உதங்கர் சொல்லி முடிவதற்
குமுன் அரசனுக்குச் சாபம் நீங்கிபழயருபத்
திலும் பத்துபங்கதிகமாகி பொன்மலைபோற்
பூரித்து பெருத்த புயமும் நயமும் பிரகாசி
த்து திரிகாலமும் தெரியும்படியாகிய ஞான
முஞ் சாந்தகுணமுமுண்டாகி மகாநிதானமு
முண்டாய் உதங்கமகாரிஷியைப் பணிந்து,
சுவாமி உம்முடைய தரிசன பலத்தினால்
தரிசனமாகிய வாழ்வை கண்டேன் இனியெ
னக்கொரு குறையுமில்லை என்று தோத்திரம்
பண்ணித் தொழுதான் அதற்கு உதங்கர்
அரசனை வாழ்த்தி ஐயா என்னு லொன்று
மில்லை என் குருசாமியைச் சிந்தித்தபடியி
னாலே உமக்கிந்த வைபவ மார்க்கம் வந்தது.
சுகமேயிரும் பட்டாபிஷேக துரந்தரனாய்
உலகாளும் என்று ஆசீர்வதித்து விடைபெ
ற்றுக்கொண்டு அந்தக் குண்டலத்தை மா
ன்தோலில் வைத்து அரையிற் கட்டிக்கொ
ண்டு வழிமேல் வருகின்றார் அப்பலி வ
ருகையில் அவ்வழிக்கண் ஒரு வில்லவமரத்
தைக் கண்டு அரையிற் கட்டியிருந்த குழை
யை யவிழ்த்து அந்த மரத்தின் பொந்தில்
வைத்து அம்மரத்தின் மீதேறி வில்வதள
மும் அதன்பழமும் அறுத்தார் அப்போது

ஒருகாற் றடித்துப் பொந்திலிருந்த குழை
கீழே விழுந்தது உடனே அந்த மரத்தடியி
லிருந்து ஒரு பெருநாகம்புறப்பட்டு அந்நா
கத்தினக் குண்டலத்தைக் கவ்விக்கொண்
டோடியது அப்போது உதங்கரதைக்கண்டு
மரத்திலிருந்து குதித்து கால்கொண்ட
விசையாய்த் துரத்தியோடியும் இவர் கைமி
லகப்படாமல் ஒரு புற்றிலேபோய்ப் புகு
ந்துகொண்டது அந்தப் புற்றைத் தன்னு
டைய தண்டினலே கெல்லிப்பார்த்தும் பாம்
பைக்காணுமற் பெருமூச்சுவிட்டுவிசாரப்பட்
டார் அப்போதுபூமிதேவியாருக்குத் தயவு
வந்து ஓ ரிஷியே நீரேன் புற்றைவெட்டிப்
பார்க்கின்றீர் அந்தக் குழையைத் திருடிக்
கொண்டுபோனது அயிராவத மென்னும்
பாம்பின்குட்டி உமக்கு இங்கே வழிகாட்டி
நாகலோகம்போய்ச் சேர்ந்ததென்றாள் அது
கேட்ட உதங்கர் ஆச்சரியப்பட்டு ஆ அப்
படியா! அந்தக்குழை என் கைக்கு வந்தா
லாச்சுது இல்லாவிட்டால் என் பிராணன்
போச்சுது என்று சொல்லுகையில் தேவேந்
திரன் கிட்டி ஓ உதங்கரே உம்முடைய குரு
பத்தினியை நிதாவரிக்காமற் குழையைத்திரு
டிக்கொண்டு பாதாளத்திற்குப்போன பாம்
பைத் தொடர்ந்துபோகத் தைரியமிருந்தால்
உமக்கு ஒருவரங் கொடுக்கிறேன் நீர் கேளு
மென்று சொல்ல உதங்கர் பாதாளம் போவ
தற்கு வழிதெரியும்படியாய் அனுக்கிரகம்
பண்ணுமென்முன் இந்திரன் உமது கையி
லிருக்குந் தண்டு வச்சிராயுதமாகி அதனுலும
க்கு நாகலோகவழி தோன்றும்படி யாகுக
வென்று சொல்லிப் புரந்தரன் மறைந்து
போயினன்.

இப்பால் உதங்கர் தேவேந்திரனுடைய
வரத்தினலும் பூமிதேவியாருடைய சகாயத்
தினலும் பயமகன்று நாகலோகம் புகுந்து
அங்ஙனமுள்ள பலவதிசயங்களையு மாச்சரி
யங்களையும் பார்த்து ஆங்காங்குள்ள பாடுஞ்
சாலையும் ஆடுஞ்சோலையும் கபாடவாயிலும்
அபாரமதிலும்பற்பலவினேதமும் விற்பன
விவேகமுங் கண்டு பயங்கொண்டு பெரு
மூச்சுவிட்டு மூர்ச்சைபோனர் அந்தவேளை
யில் அக்கினிதேவன் ஒருவர்சிமேற்றேன்றி
இந்தக் குதிரையின் செவியில் வாய்வைத்
தூதுக என்றார் உதங்கர் அப்படியே ஊதி
னர் அப்போது உகாந்தகாலப் பேரொலி
பிறக்கக் குழையைத் திருடிப்போன நாகமும்
இன்னுமுண்டான பாம்புகளுங் குலைநலைந்
து பயந்து குண்டலத்தைக் கொணர்ந்து
உதங்கர் முன்னே வைத்து சுவாமி! அறி
யாமையாற் செய்த அபராதத்தைப்பொறுக்க
வேண்டுமென்று அடிமேற்பணிந்துபோனு
ர்கள் அதுகண்ட உதங்கர் யாதொருபழியும்
பாராட்டாமற் குழையைக் கைக்கொண்டு மு
றைவழியே வந்து குருவினது தழைவாகிய
கருணைபோன்ற குருபத்தினி கையிற்கொடு
த்து தீர்க்கதண்டன் செய்து ஆசாரியரையு
ம் போற்றி சுவாமி தேவரீருடைய அருளி
னலே பிராணன் போகாதபடி பிழைத்தேன்
நாகத்தின ஓலையுங் கொணர்ந்து கொடுத்
தேன் என்று நடந்த விருத்தாந்தங்களை எல்
லாஞ் சொன்னர் ஆசாரியர் சந்தோஷ
ப்பட்டு நம்மிடத்திற் கற்ற சீடருக்குள்
ளே உன்னையு மொருவனைப் ஒப்பிச்சொ
ல்லப்போமோ நீ ஜன்மாந்திரத்தில் ந
ல்லதவம் பண்ணினவ னுகையாற் பெரி
தான காரியங்களுனக்குச் சுளுவாகக் கை
கூடிவந்தன உனக்கு வேண்டிய வரங்கள்
தருகிறேன் பெற்றுக்கொள்ளுக வென்றருளி
னர் அவரும்அவ்வாறே பலவரங்களைப்பெற்று
அவ்வாசிரமத் திறங்கி யிருந்தனர் இப்படி
யான மேன்மையடைந்த உதங்கமகாரிஷி
யானவர் ஜெனமேஜயமகாராஜன் புரிந்த ச
ர்ப்பயாகமுமிவரால் நடந்ததுஎன்றுசாத்தகிக்
குஞ் சுபத்திராதேவிக்குஞ் சொல்லி ஸ்ரீகிரு
ஷ்ணபகவான் துவாரகையை நோக்கி வ
ருகின்றார்.

---

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி வரக்கண்ட கிளைஞர் செயல்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராசனே
இப்படி உதயகாலத்து சூரியன்போல் ஒளி
விட்டு வெளிப்பட்ட சுவாமியைக் கண்ட
துவாரகையென்னும் தாமரைக்கமலம்அலர்
ந்து விரிந்து மகிழ்ந்து புகழ்ந்து, அதில்
வாசமாகிய பந்து மித்திராள் புத்திராள்
ஸ்திரீகள் முதலியபேர்களும் எதிர்கொண்டு
திவ்விய புட்பங்களினலேயும் அட்சதைகளி
னலேயும் அனிமணிப் பணிகளினலேயும்
சந்தன தாம்பூலங்களினலேயும் உபசாரஞ்
செய்துஆலாத்திசுழற்றிகர்ப்பூரதீபங்காட்டி

வீதிகளெல்லாமெழுகிமொக்கிட்டுப் பட்டின
வலங்காரம் பண்ணினார்கள் அந் நாட்டி
லுள்ள பெண்களியாவரும் வீட்டைவிட்டு
வெளியே புறப்பட்டு கொண்டைமுடித்து
புட்பந்தரித்து சந்தன கதம்ப கஸ்தூரிப்
பொடிகளைத் தனத்தின்மீ திறைத்துப் பூசி,
இங்குலிகச் சேறுதோய்ந்து கச்சிறுக்கிக்கட்
டிதிவ்விய வஸ்திராபரணந் திருத்தி ஒருவ
ரையொருவர் உசாவிவந்து உனக்குமுந்து
மோ எனக்கு முந்துமோ ஒப்பில்லா சேவை
யென்றிரைந்து விரைந்தோடி நடந்து தொ
ய்யலெழுதியும் எழுதாமல் விடுத்தும் தீட்டி
யுந் தீட்டாமல் மறந்தும்வந்து சிறந்தார்
கள். கண்ணனுக்குப் பாதபூசை பண்ணினா
ர்கள் நைவேத்தியம் வைத்தார்கள் நான்உரு
க்குமணி என்னைக் கிருஷ்ணன் கிட்டி முத்தி
கொடுப்பாரென்பாரும் நான் பிரந்தை என்
னிடத்திற் சிந்தை நந்தநந்தனனுக்கென்பா
ரும் என்னைவந் தணையீரோவென்று நகைப்
பாரும் என் விரகதாபத்தை யொழிப்பீரென்
று அழைப்பாரும் இன்னுஞ் சில பெண்கள்
தங்கள் வாசலை அலங்கரித்து இங்கேவாரும்
சற்றுநேரம் நின்றுபாரும் நானிட்ட கோல
த்தைப் பார்த்து முத்திதாரும் நானிட்ட
மேடையிலே உட்காரும் என்னைச்சேரும்
ஆதரித்துக்காரும் என்பாரும் வெகுநாளாய்
சுவாமி வருவாரென்று பார்த்திருந்து வந்த
தால் மகிழ்ந்து மயங்கிக் கிடக்கிறபேரும்,
பூர்ணகும்பமும் மாணிக்கதீபமும் வைக்
கின்றபேரும் பச்சைப்பந்த லிடுகிறபேரும்
கொத்துச்சித்திர முத்துமாலைகளைக் கொத்து
கொத்தாய்த் தொங்கவிட்டிருப்பாரும்வாழை
கரும்பு கமுகு பேரீச்சு தாழை கூந்தற்பனை
இளநீர் இவை முதலிய தோரணங்கள் கட்
டிச் சோபிக்கச் செய்கிறவர்களும் கொடிகள்
டால்கள் மேற்கட்டிகள் இவைகளைக் கட்டு
கிறபேரும் இந்தப்பிரகாரம் ஸ்திரீபுருஷாள்
எல்லோரும் வேடிக்கை விநோதமாய் விளை
யாடிக்கொண்டிருந்தார்கள்.

அப்போது நால்வகைச்சேனைகள்சகல
சின்னங்களோடும்வந்து சுவாமியைப்புடை
சூழ்ந்தன இயாதவர்களெல்லாம்மாதவனைப்
பார்த்து மங்களங்கொண்டாடி மகிழ்ந்தார்க
ள் எந்தெந்தப்பணிகளை எந்தெந்தக்கோலத்
தை எந்தெந்த அவயவங்களை எவரெவர்கள்
கண்டார்களோ? அவரவர்கள் அப்படியப்ப
டியே நின்றார்கள் நல்வினை தீவினைகளைக்
கடந்த நன்முனிவர்களெல்லாம் மோட்சகா
ரணராகிய முகுந்தனைப்பார்த்து, சந்திரனைக்
கண்ட நீலோற்பலம் போன்று அகமும்முக
மும் அலர்ந்தார்கள் நெடுநாட்பிரிந்த ஸ்திரீ
சனங்களெல்லாம் வாடிய பயிர்கள் மழை
யைக் கண்டதுபோற் கண்டு மகிழ்ந்து தழை
த்தார்கள் சேயைப்பிரிந்த தாயனையார்கள்
நிதி நிக்ஷேபம் பெற்றவர்போலானார்கள்
இப்பேர்ப்பட்ட யாவர்களுக்கு இன்பநாயக
னாகிய புருஷோத்தமன் எல்லாரிடத்திலுங்
கருணைகாட்டிக் கசிந்துருகிப்பாராட்டிவருவ
தால் அவரவர்களும் என்னுடன் பேசினார்
என்னைப் பார்த்தாற் என்பேரிற் பட்சமறக்க
வில்லை என்று பேசிக்கலந்துகளிகொண்டார்
கள் இப்படி சுவாமியானவர் சர்வசனமோக
னனாகத் துலங்கி இராஜமண்டபத்திற்கு வந்
து மந்திரிகள்பிரதானிகள் மாதவர்கள்வேதி
யர்கள் வித்துவான்கள் பாடகர்கள் இன்னு
முண்டான பேர்களைக்கண்டு பரிந்து வார்த்
தை புரிந்து பலநாட்செய்தியுந் தெரிந்து
அத்தப்புரத்திற் புகுந்து அன்னை தந்தைய
ரைப் பணிந்து வார்த்தை புரிந்து பலநாட்
செய்தியுந் தெரிந்து தமையர்களையுந் தம்பி
யர்களையும் பிள்ளைகளையுங் கனிந்து அஷ்ட
பாரியர்களும் வருந்திவந்துபார்க்கச்சிறந்து
அவர்களோடு மிகுந்த ஆதரணையுடன் திரு
ப்தியான வசனங்கள் செப்பி நவரத்தினக்
கசித சொலித சோப்பிய மந்திரமணி மகா
மண்டபத்தில் இந்திராதியர்க ளிறைஞ்சி
யேந்த வெழுந்தருளினார்.

அக்கால் அந்தப்புறத்திலிருந்த யாதவ
ஸ்திரீகள் முதலாகிய பேர்கள் சுபத்திரை
யைக் கண்ணுற்று பாரதயுத்தத்தி லிறந்த
பற்பல பேருக்கும் அபிமன்னுவுக்குத் துக்
கங் கொண்டாடி சாத்தகியைக் கட்டிக்கொ
ண்டு சஞ்சலம்பாராட்டி விசனப்படுகின்றார்
கள் அப்போதுஸ்ரீகிருஷ்ணபகவான் வந்து
அவர்களைத் தடுத்து இறந்தபேர்களைக் குறி
த்து நீங்கள் இறைந்தழுவானேன் போர்
முகத்தில் நேர்முகமாகித் தேரேறிச்சென்று
திரத்துடனிருந்து சூரத்துடனிருந்து வீர
சொர்க்கம் போனவர்களைப்பற்றி விசனப்படு
வானேன் ஐயோ அவர்கள் யாவரும் நல்ல
கீர்த்தி பெற்றார்கள் மேலான வீஷ்மர்
துரோணர் முதலியபேரும் வெகும்பி

போனார்கள் ஒருவரும் துன்பப்படவேண் டாம் என்று துயரநீங்கச் சொல்லியுந் தங் களாலடக்கக் கூடாதவர்களாகி இறந்தவர் களை நினைத்து நினைத்து மெத்தத் துக்கித் தார்கள் அந்தவேளையில் வசுதேவருந் தேவ கியு மகிழ்ந்து மைந்தனைக் கட்டியணைத்துத் தழுவி முத்தமிட்டு உச்சிமோந்து புகழ்ந்து அப்பா அச்சுதா பாரதயுத்தத்தைப் பற்றிப் பற்பலவிதமாய்க் கேள்விப்பட்டோம் நட ந்த பான்மையை நீ உள்ளபடி சொல்லுத வென்று கேட்டனர் அவர்க்குப் பாரதப் போரை ஆதிதொடங்கி அந்தம்வரையிலும் அடிமடங்காமற்பேசினார் அவற்றைத் தாயுந் தந்தையுங் கேட்டுச் சந்தோஷப்பட்டு காட் டில் வருந்திய பாண்டவர்கள் நாட்டிற் பட் டாபிஷேகங் கட்டிக்கொண்ட பட்சத்தையும் வினவி விரும்பி அஸ்வத்தாமன் கிருபாச் சாரி கிருதபன்மன் இம்மூவரும் பிழைத்த முக்கியத்தையுங்கேட்டு ஆகினும் ஒருவரா லொருவர் சாகிறதில்லை இது நல்வினை தீவி னைக் கீடாயெடுத்த தேகம் வினைப்போகந் தீர்ந்தால் தனக்குத்தானே விடப்போம், இதற்கொருவரும் பிணையில்லை துணையில்லை என்று பெரியாருடனும் உரியாருடனும் மேனேக்கமாய்ப் பேசிக்கொண் டிருந்தார் கள் அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அவர்களோடு கலந்து வார்த்தையாடிக்கொ ண்டு இன்னும் அஸ்வமேதயாகம் பண்ண வேண்டிய வேலையொன்றிருக்கிறது அதற் குப்போய்த் தீரவேண்டும் நான் போகாமற் போனல் ஒன்றும்படியாது ஒருவேலையும் முடியாது என்றுகூறி இராசஸ்திரீகளிருக் கும் இடத்திற் கெழுந்தருளியிருந்தார்.

## ஸ்ரீ கண்ணன் துவாரகைக்கெழுந்தருளிய சருக்கம்

முற்றிற்று.

---

# மூன்ருவது,

# பரிச்சித்துற்பவச் சருக்கம்.

கண்ணன் துதி.

கவனவாம் பரியருவா யவனியிடை யவதரித்துக் கருதுமன்பர்
பவமகற்றும் படியன்பி னுளங்கொண்டு முனிவர்கள் பல்லாண்டுகூறத்
தவமுயலும் விபீடணனுக் கிரங்கியொரு விமானமேற் சர்ப்பமீது
நவையறுசீ ரருட்கோலங் கொண்டோனென் சிந்தைமலர் நணுகுந்தேவே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே ஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகையில் உருக்குமணிதேவி முதலிய அஷ்டலட்சுமியுடன் கோபிகாஸ்திரீகளுங் குலாவிக் கொண்டிருக்கப் பூரண சந்திரோதயத்திற் கொப்பாகிய முக மலர்ச்சியுடையவராய் மனங்களித்து இன்பத்திலாழ்ந்து இனிமையுடன் வாழ்ந்திருந்தார் இப்பால் அஸ்தினபுரத்தில் அரசுபுரிந்திருக்கின்ற தருமராஜன் முதலிய பேர்களுந் திரௌபதாதேவியும் பொன்நந்திப் பற்பல சங்கதிகளெடுத்துப் பேசிவருங் காலையில், இறந்துபோன பிள்ளைகளையும் அவருட்சிறந்தவனை அபிமன்னனையும் நினைந்து நினைந்து அக்கினியில் வீழ்ந்த அரவிந்த மலர் போல் வதங்கி வாடி கண்களிலே சலங்களோடிச்சோரும்படிக்கு விசாரப்பட்டார்கள் அக்காற் குந்திதேவியாகிய குலமங்கையானவள் அவர்கட்கனேக தைரியங்களையுந் திடங்களையுஞ்சொல்லித் தேற்றி ஆறுதலைசெய்து கொண்டிருக்கும்போது வேதவியாசர் வந்து இயாவருடைய துக்கங்களையும் துயரங்களையும் போக்கி இனிமேற் பழிபாவம் நீங்குகிற வழியைப்பாருங்கள் அஸ்வமேதயாகம்பண்ணுங்கள் அதனுலுங்களுக்கு நன்மை யுண்டாமென்று சொல்லிச் செலவு பெற்றுக் கொண்டு போயினர்.

---

பாண்டவர்க ளிமோத்கிரிக்கேகி மருத்து
ராஜன் வைத்த நிதிப்புதைய
லெடுத் தனுப்புதல்.

இவ்வாறு வேதவியாசர் வந்து கூறியதை முரசக்கொடிக் கதிபனுன தருமராஜன் யோசித்து தம்பிமார் முகத்தை நோக்கி இயாக முடிப்பதற்குப் பொருள்வேண்டுமே பொருளில்லா விட்டால் அருளில்லாமற் போமே அப்போது இவ்வுலகமும் அவ்வுலகமும் நமக்குச் சொந்தமில்லையே இதற் கெப்படி யென்று பேசினர் அப்போது சிங்கக்கொடிக்கதிபனுகிய வீமசேனன் அண்ணனைத்தொழுது முன்னுலே இயாகஞ்செய்த மருத்துமகாராஜனுடைய திரவிய மிகுத்திருக்கிறதென்றும் அதைப் பெயர்த்து எடுத்து வரலாமென்றும் வியாசபகவான் விளம்பியிருக்கின்றுரன்றே அவருடைய திருவாக்கின்படிக்கு இமோத்கிரிச் சாரலுக்கேகி, பார்வதி தேவியார் பங்கனுகிய பரமசிவனுடைய பாதபங்கயங்களைத்தொழுது தரிசனம் பண்ணி அவருடைய கடாட்ச வீட்சண்ணியம்பெற்றுப்பொருளெடுத்து வரலாமென்று செப்பினுன் மற்றத் தம்பிமார்கள் மூவரும் அப்படியே செய்வது அழகாமென்றுர்கள் அதற்குத் தருமராஜன் சம்மதித்து திருதராட்டிர மகாராஜன் காந்தாரியம்மன் குந்தியம்மன் இவர்களைப் பணிந்து இவாளாசீர்வசனத்துடன்செலவு வாங்கிக்கொண்டு கிருபாச்சாரியார் விதுரன் சஞ்சயன் இன்னுமுள்ள சிலபேர்களையும் பட்டணத்தில் நிறுத்திப்போட்டு இரதகஜதுரகபதாதி முதலிய படைகள் புடைசூழ்ந்துவர பேரி பாங்கா உறுமி தம்பட்டம் மத்தளம் முரசு முழவு டங்கா டமாரம் இவை முதலிய வாத்தியங்கள் முழங்க சகல விருதுகளுடனும் புறப்பட்டு அஸ்தினபுரத்தை கடந்து காடு செடி மேடு பள்ளம் மலை ஆறு புதர் கற்கு வடு தோப்பு சாலை சோலை இவை முதலிய வெல்லாந் தாண்டி பனிமலைச் சாரலிற் சென்று வேத வியாசரைச் சிந்தித்து வந்தித்து நின்றனர்.

உடனே அப்பாண்டவர்க ளைந்து
பேருந் தெண்டனிட்டுப் பணியும்படிக்கு
வேதவியாசர் காட்சியாகி, ஸ்ரீபரமேஸ்வர
சொரூபமாகிய பஞ்சாக்ஷர மந்திரோப
தேசம் பண்ணினூர். அப்பஞ்சாக்ஷர செபத்
தினூற் கைலாசகிரி வாசகராகிய கண் ணுதலை
யும் பார்வதி தேவியாரையும் போற்றி அங்
ஙனமே அநேக நாள் அருந்தவ மிழைத்
துக் கொண்டிருந்தார்கள். அப்போது
கைலாசபதிக்குக் கிருபை சுரந்து இடப
வாகனராய் இறைவியான மகாதேவியாரு
டன் எழுந்தருளினர். அவரோடு பலகோடி
தேவர்களும் அளவற்ற சிவகணங்களும்
ஏகாதசருத்திரர்களும் துவாதசாதித்தர்களு
ம் துந்துமி முழங்கிக்கொண்டுவந்து நிறைந்
தார்கள். வேதவியாசரும் பாண்டவ ரைவ
ரும் பணிந்து படிந்து தீர்க்கதண்ட நமஸ்
காரஞ் செய்து ஓ மால்விடையாளா! ஓ மங்
கைபங்காளா! ஓ அங்கைக்கங்களா! ஓ கிண்
கிணித்தாளா! என்று தோத்திரம் புரிந்து
அப்பாற் சிவபெருமானுடைய கண்ணருள்
பெற்று அந்த மருத்து மகாராஜன் புதைத்
துவைத்த தனத்தினிடத்தை யடுத்து வியா
சருரையால் நிலத்தைப் பெயர்த்து, பிலத்
துவாரம் வரைக்கும் புதைத்து கிடக்கின்ற
திரவியத்தைக்கண்டு களித்து வாரிவாரி மலை
மலையாய் குவித்து பல மதயானைகள் ஒட்ட
கங்கள் சகடாபண்டிகள்குதிரைகள் மாடுகள்
இவைகளின் பேரில் மூட்டைகட்டி யேற்
றிப் பட்டணத்திற் கனுப்பிவிட்டு தாங்க
ளவ்விடத்திற்றூனே யிருந்து பின்னும் பல
சேமத்திற்கிடந்த திரவியங்களை யெல்லாந்
தேடி யெடுத்துச் சேர்த்துப் பட்டணத்
திற்கு அநேகந் தடவையாகக் கொண்டுபோ
ய்க் கொட்டும்படி உத்தரவு செய்தார்கள்.
அவர்களப்படியே திரும்பவும் வந்து பல
நடையாய் ஓயாது எடுத்துப் போகும்போது
அன்னிய தேசத்து அரசர்கள் கேள்விப்
பட்டு ஓடிவந்து பார்த்து வெகுவாய்ப் பொ
றூமைகொண்டு மனம் புழுங்கி இதென்ன
அற்புதமென்று ஆச்சரியமடைந்துபாண்ட
வர்கள் அநேக நாளா யெடுத்தும் இன்னு
மாளாமலிருக்கிற புதையல் எப்படிப்பட்ட
டதோ? ஸ்ரீ வேதவியாசர் ஸ்ரீ கிருஷ்ண
தேவர் இவர்களுடைய கடாட்சவீட்சண்ணி
யம்பெற்றவர்களுக்கு என்னதாட்சி இதுவே
அத்தாட்சி என்று பேசிக்கொண்டார்கள்.

இப்படி தொகையிறந்த பொருள் மகமேரு
வைப்போலத் தொகுத்தனுப்பி விட்டபின்பு
இந்த மட்டும் போதுமென்று நிறுத்தி அங்
ஙனமே நித்முஞ் சிவபிரானைத் தரிசித்துக்
கொண்டிருக்கின்றூர்கள்.

---

### திரிதராஷ்டிர னழைப்பிக்கக் கண்ண னஸ்தினுபுரிக் கெழுந்தருளுதல்.

அப்போது அஸ்தினுபுரத்தி லுற்ற
திரிதராஷ்டிரன் பட்டினமுழுதுந் திரவிய
மலைகள் சேர்ந்ததைக்கேட்டு சிந்தைகளித்து
சந்திரனுள் தொடங்கி எந்த நாளினும் இந்
தப் பாக்கிய மிப்படியிருக்க கேள்விப்பட்ட
தில்லையே யென்று மகிழ்ந்து பாண்டவர்
களைப்புகழ்ந்து அந்தமட்டும் அதிஷ்டசாலி
களென்று தம்பியாகிய விதுரனுந் தானும்
பேசி யோசிந்து சில தூதரைக் கூவிக் கோ
பாலனை யழைத்து வாருங்களென்று அனு
ப்பிவைத்தார்கள் அப்படியே சாரணர் துவா
ரகைக்குப் போய் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைக்
கண்டு தெண்டனிட்டுக் கொண்டு சுவாமி
பாண்டவர்கள் இமோற்பர்வதச் சாரலுக்
கேகி வியாசபகவானுடைய மந்திரோபதே
சத்தினூற் பரமசிவனையும் பார்வதாதேவியை
யும்போற்றித் தவங்களியற்றி அவாளுடைய
பேரருளினூல் அங்ஙனம் புதையலிட்டிருந்த
மருத்து மகாராஜனுடைய திரவியங்களை
யெல்லாம் வாரிக்கொண்டு வந்து அஸ்தினு
புரத்தில் இடம்போதாமல் அம்பாரங்கட்டி
வைத்தார்கள் இப்பால் அஸ்வமேதயாகம்
பண்ணவேண்டி யிருப்பதினூல் தேவரீரை
யழைத்து வரும்படிக்கு திரிதராட்டிர மகா
ராஜனும் விதுரமகாராஜனும் எங்களை யனு
ப்பினூர்கள் ஆண்டவனே! நாங்களிங்ஙனம்
வந்த சங்கதிஇதுவென்று சொல்லிப்பணிந்
தார்கள் அந்தச் சொல்லைக்கேட்ட கள்ளத்
திருமால் மெள்ள வெழுந்து தந்தையாகிய
வசுதேவவர நோக்கி ஐயா! பாரதயுத்தம்
புரிந்து முடிந்த நாள்முதற் பாண்டவர்கள்
ஒருநாளைப்போற் பலநாளும் பெருந்துக்கப்
பட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த வேளை
யில் வேதவியாசர்வந்து சொல்லவேண்டிய
தெல்லாஞ் சொல்லிப் பொருத்தி அவர்கள்

மனதைத் திருத்தி அஸ்வமேதயாகஞ் செய்தால் எல்லாப்பாவமும் பழியு நீங்குமென்றுரைத்தார் அந்த யாகத்தை முடிப்பதற்குப் பணமில்லையே யென்று பர்தவித்தார்கள். அதற்கும் ஒருவகையாய் மருத்துமகாராஜன் புதைத்து வைத்திருந்த சேமமிருக்கிறவிடத்தையும் அது கிடைக்கும் விதத்தையுஞ் சொல்லிப்போயினர் அதுவரையில் எனக்குத்தெரியும் பின்பு அச்சேமத்தைக் கரைத்தெடுத்து அத்தினபுரத்திற் குவித்துக்கொண்டு யாகத்திற்கு எத்தனஞ் செய்திருக்கின்றார்களாம் இயான் போகாமல் வேள்வி நிறைவேறமாட்டாது முக்கியமாய் நான் செல்லவேண்டும் இதல்லாமலும் யான் வரும்போது தருமராஜன் சொன்னது யாதெனில் எங்கள் மாமா வசுதேவரும் மாமி தேவகியம்மாளும் உரோகணியம்மாளும் பலராமரும் தம்பிமார்களும் மற்ற ஸ்திரீஜனங்களும் பிள்ளை குட்டிகள் முதலாகிய யாதவ பந்துக்களும் வந்திருந்து இயாகத்தை முடித்து வைக்கவேண்டுமென்று சொல்லி யனுப்பினர் இப்பவுஞ் சாரணரை விடுத்திருக்கின்றார் ஆனதால் தேவரீரும் பிரயாணப்படவேண்டும் அடியேனுக்குஞ் செலவுகொடுத் தருளுமென்று சொன்னார் குமாரனுடைய மொழியைக்கேட்ட மாத்திரத்திற் பரமசிவனுக்கும் பார்வதியாருக்கு மொப்பாகிய தந்தையுந் தாயும் உன்னிஷ்டப்படி நடக்கிறோமென்று உத்தரவு பண்ணினார்கள்.

இப்பால் தன்னை நம்பின பேருக்குப் பிராணதாரப் பிரணவ மூர்த்தியாகிய பகவான் வெளிப்பட அவரோடு பலராமர் கிர்தவன்மர் சாத்நகி இவர்முதலான சகோதரர்களும் பிரத்தியும்னன் சாம்பன் சுதேஷனன் இவர் முதலான பிள்ளைகளும் தங்கை சுபத்திராதேவியும் மற்றயாதவர்களும்நான்குவித படைவீரர்கள் நாற்புறமுஞ் சூழும்படியாக வெளிப்பட்டு மங்கள வாத்தியங்கள் எங்கெங்கு முழங்கும்படியாய்க் குடை கொடிகளுடன் மகர தோரணதிகள் பிடிக்க அவரவர்கள் வாகனங்களேறி துவாரகையை விட்டு அஸ்தினபுரம் போகின்றார்கள் அப்போது இருபுறத் தூதர்கள் முந்திபோய் திரிதராட்டிரனுக்குத் தெரிவித்தார்கள் அது கேட்டவுடன் காந்தாரிதேவி குந்திமாதேவி இன்னுமுண்டாகிய பந்துக்களெல்லாம் சிந்தை மகிழ்ந்து பட்டினத்தை அலங்காரஞ் செய்வித்துச் சகலமான சமூகமாகப் பஞ்சவாத்தியங்களுடன் எதிர்சென்றுகண்டு அழைத்து வரும்படிக்கு அமைச்சர்களுக்கு உத்தரவு செய்தார்கள் அந்தக்ஷணம் பட்டணத்திலுள்ள பிரஜைகளும் சேனைகளும் கட்டியரும் பட்டுவான்களும், நாடகசாலைப் பெண்களும் கட்டுமுட்டிக்காரரும் பட்டைக்காரரும் பொற்பிரம்புக்காரரும் வெள்ளிப் பிரம்புக்காரரும் பொற்றடிக்காரரும் வெள்ளித்தடிக்காரரும் ஆகிய சகல பரிசனங்களுந் தங்கள் தங்கள் சின்னங்களோடு புறப்பட்டார்கள் வீதிக்குவீதி பூரண கும்பம் மாவிலை தருப்பை வேதிகைமேடை மாணிக்கதீபம் நீராஞ்சனம் இவை முதலியன வமைத்து பனிநீருஞ் சந்தனமும்வீசி சாந்தினுற்றரை மெழுகி கர்ப்பூரத்தாற் கோலமிட்டு புட்பாரங்கள் தூக்கி பச்சைப்பந்த ரமைத்து பண்டு பலாதிதாம்பூலங்கொண்டு அண்டர்நாயகன் வருகின்றானென்று அந்நகர முழுவதும் அநேகவிதமான அலங்காரங்களை யமைத்து நிறைத்தார்கள் இப்பால் எதிர்கொண்டழைத்துவரச்சென்ற புரஜனங்களும் பரிஜனங்களும்போய் அவ்வவர்களைப் பணிந்து ஒருவர்க்கொருவர் வந்தனஞ் செய்துகொண்டு அஸ்தினபுரத்துவீதியி லழைத்துக்கொண்டு வருகின்றார்கள் அப்போது வெகு ஜனங்கள் கண்களிக்கும்படிக்கும் தேவர்கள் புட்பமாரி சொரிந்து கொண்டாடும்படிக்கும் ஸ்ரீ கிருஷ்ணதேவர் சகல பந்து மித்திராதிய பரிசனங்களோடு இராஜ வீதிகளெல்லாங் கடந்து பெரிய அரண்மனையி லிறங்கி திரிதராட்டிரனுக்குங் காந்தாரிக்குங் குந்திதேவிக்குந் தெண்டனிட்டு தம்மை வணங்கப்பட்ட ஸ்திரீகளுக்கு அபயப் பிரஸ்தம் பண்ணி திரவியக் குப்பையைப் பார்த்துச் சந்தோஷச் சித்தமுடையவராகி மகிழ்ந்து தான் வந்தசெய்தி பாண்டவர்களுக்குஞ் சொல்லி யனுப்பிவிட்டுத் தருமராஜனுடைய அரண்மனையில் வந்திருந்தார் வசுதேவர் தேவகிதேவி முதலிய பெரியோர்களும் உடனேவந்து சேர்ந்து பெரியவரண்மனையிலிருக்குந் திரிதராட்டிரன் காந்தாரி முதலியவர்களோடு கலந்து வீற்றிருந்தார்.

---

## உத்தரை யுயிர்மாண்ட பிள்ளையைப் பிரசவித்தல்.

இப்படிக் கிருக்கையில் உத்தராதேவிக்குப் பிரசவகாலம் நேரிட்டு வேதனைப்படுகிறாள் அதுகண்ட காந்தாரி குந்திதேவி முதலாயினோர் பிராமணாள் சாஸ்திரிகள் மந்திரிகள் தந்திரிகள் சேனாநாயகர் இவர் முதலிய பேர்களைப் பொருந்தியிருக்கச் செய்து மந்திரசாலிகள் பந்துவர்க்கங்கள் முதலானவர்களோடு பக்கத்திலிருந்து உபசாரம் புரிகின்றனர் அப்போது நல்லநாள் சுபமுகூர்த்தம் திவ்ய நட்சத்திரம் சுபக்கிரகசாரம் மங்களலக்கினம் புருஷகால வோரை இவைகூடிய புனிதகாலத்திற் புத்திரனைப் பெற்றாள் அக்கால் அந்தப் புரத்திலிருக்குஞ் சொந்தச் சனங்களும் தாதிகள் சேடிகள் முதலியபேர்களும் சமுத்திர வோசைபோ லிரைந்து சந்தோஷங் கொண்டாடி சாந்து சந்தனாதிகள் பூசி விளையாடினார்கள். அப்போது பிறந்த பிள்ளை யாதொரு செயலுமற்றுப் பிரதேசம் போற் கிடக்கவே யாவருக்குஞ் சந்தோஷ மாறிப்போய் கர்ப்பத்திற்றானே யிறந்து பிறந்ததென்று கண்கலங்கி அழுதார்கள் இப்படி சகலமான ஸ்திரீகளும் பேரோசையிட்டழும்போது இராஜமண்டபத்தி லிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலாகிய வேந்தர்கள் கேட்டு விசனப்பட்டு, உடனே அவ்வந்தப் புரத்திற்கு வந்து குந்திதேவி காந்தாரியம்மன் திரௌபதாதேவி சுபத்திராதேவி தேவகிதேவி இவர் முதலிய யாவர்களுந் துக்கப்படுவதைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணதேவர் அவர்களுக்குத் தணிக்கை சொல்லுகின்றார் அவர் சொல்லுகிற சாந்தவார்த்தையை ஒருவருங் கேளாமல் தாரை தாரையாய்க் கண்ணீர்விட்டழுது, முகம்வாடி நாப்புலர்ந்து நானிலத்திற் புரண்டு பார்த்தசாரதியை நாடி பாதாம் புயத்தில் விழுந்து வாடி யாவருமிரைந்து விரைந்து பரிந்து அருள்புரிந்து இரட்சிக்கவேண்டும் ஆண்டவனே யென்று கரைந்து துரோணாச்சாரி குமாரன் அஸ்வத்தாமன் தொடுத்த பிரமசிரமென்னும் பெரும்பாணமானது உத்தரையின் கருப்பத்தை மெத்தத் தீய்த்து மாய்த்துவிட்டதே அப்போது நாங்கள் நீரிருக்கும்போது ஒரு தீங்கு மிராதென்று பயமொழித்திருந்தோமே இப்போது வெம்பி இடர்கடலி லாழ்ந்தோமே உம்முடைய திருவடியில் வீழ்ந்தோம் உம்மையே யடைக்கலமாகத் தாழ்ந்தோம் எங்கள் வினை யிப்படிக் கிருந்தது ஓ எங்களிஷ்ட தெய்வமே என்று கூவிக் கஷ்டப்பட்டுக் கலங்கினார்கள்.

## ஸ்ரீகண்ணனோடு குந்திதேவி முறையிடல்.

இவ்வாறு புலம்பிப் புரண்டு பொருமலுடனலறுகின்ற பேர்களைப் பரந்தாமன் பார்த்து அத்தையாகிய குந்திமாதேவியை அழைத்து அணைத்து அவள் கண்ணீரைத் துடைத்து மற்றையருக்கும் பொருமல் விம்மலாதிய துயரங்களைப் போக்கி எல்லாந் தெரிந்த நீங்களே சிந்தை நைந்து துக்கப்படலாமா எத்தனையோ துன்பத்தில் இதை உரையிடப்போமா செத்துப்போனவர்களைப் பிழைப்பிக்க நம்மாலாமா? நீங்கள் துன்பப்படாதிருங்கள் என்று துணிவுகூறியபோது குந்திமாதேவியா ரவரைப்பார்த்து அப்பா மருமகனே உனது மைத்துனராகிய பாண்டவர்களின் பிள்ளைகளியாவரும் பாரதயுத்தத்திற் படுசூரணமானார்கள் பேர்சொல்லப் பிள்ளையில்லாமற் போயிற்று ஐயோ பிள்ளை வயிற்றுப் பிள்ளையான பேரனிருப்பானே அவனுக்குப் பிள்ளையாய் ஒருவன் பிறப்பானே அவனை யாமுமெடுத்து ஆசைதீரலாமென்று ஆவல் கொண்டிருந்தோமே எங்கள் மருமக்கள் மார்களும் புகழ்ச்சியாய் மகிழ்ந்திருந்தார்களே எங்கள் மக்கள் இத்தனை அக்கிஷ்டப்பட்டும் ஓர் பேரப்பொக்கிஷங் கிடைக்குமென்று பூரித்திருந்தார்களே இந்தச்சேதிகேட்டால் அவ்விடத்திற்றானே ஆருயிர் மடிவார்களே மறுபடியும் இந்தயிடத்திற்கு வரமாட்டார்களே வந்து எங்கள் முகத்தில் விழிக்கப் போகிறதாய்த் தோணவில்லையே சத்துருக்களைச் செயித்து சகலபுவனங்களையுங் கைக்கொண்ட பேருக்கு ஒரு பௌத்திரனாவது இல்லாமற்போனால் அபகீர்த்தியல்லவோ மேற்கதி கிட்டாதே வேள்வியும் விரதமும் நோன்பும் ஒட்டாதே இந்த மட்டுந் தழைத்துவந்த இச் சந்திரகுலம் இனித்தலைக்காட்டாதே மந்தப்பட்டுப்போச்சுதே மகா துன்பம்வந்து வாய்ச்சுதே ஓகண்ணனே அப்பா மேகவண்ணனே உலகங்களை ஆக்கவும் காக்கவும் கடைசியிற் போக்கவுஞ்

சிலாக்கிய வல்லமையுள்ள உனக்கு இந்தக் குழந்தையைப் பிழைக்கப்பண்ணுவதரிதோ யந்திரமாகிய எல்லாத் தந்திரமும், மந்திரமாகிய சகல சுதந்திரமும், உனக்குண்டாயிருக்கின்றதே. நாங்கள் பரதந்திராள் எங்களுக்கென்னதெரியும், ஏந்தலே! இதுவரையி லெங்களையு மெங்கள் பிள்ளைகளையுங் காப்பாற்றியது பெரிதல்ல இப்போது நாங்கள் படுகிற துக்கத்தைப் பக்குவப்படுத்திப் போக்குவது உனக்குக் கோடி சுகிர்தம். நாங்கள் பட்ட வருத்தங்களெல்லாம் போதும் இனியாகிலுஞ் சந்தோஷம் பெறச்செய்து இதனால் நீ பெருமைபெறவேண்டும்.

ஓ ஆதவனுக்கொப்பாகிய மாதவனே! நீ சிறுபிள்ளையாய் பள்ளிக்கூடத்திற் படிக்கும்போது அந்த உபாத்தியாயருடைய பிள்ளை தாயாருடன்கூடி மடுவுக்குப்போய் நீரில் விளையாடிய காலையில், அம்மடுவிலுற்ற முதலை பிள்ளையை இழுத்துக் கொண்டுபோய் விழுங்கிவிட்டது. அப்பிள்ளையைக் குறித்துத் தாயுந்தந்தையுங் கவலைகொண்டு ஆற்றினருகில்வந்து, ஓ முதலையே எங்களிருவரையும் ஒப்புக்கொள்ளுகவென்று பிராணனைவிடுவதற்குத்துணிந்து மடுவில் விழப்போயினர். அதனை நீயறிந்துகொண்டுபோய் அவர்களை வழிமறித்து, மடுவின்கரையில் முதலையை வரவழைத்து, விழுங்கிய பிள்ளையை விடச்செய்தருளிய விதரணன் நீயல்லையோ. ஆசாரியனையும் அவன் பெண்சாதியையும் விசனமாற்றிச் சந்தோஷப்படுத்திய மேன்மை லோகாலோகங்களுமறியுமே நீமறந்துபோனாலும் நான்மறக்கத்தக்கதல்லவே. என்னருமை மருமகனே! அவர்கள்பேரில் நாட்டிய அன்புபாராட்டி அம்புலிவம்சத்தையாதரித்தருளுக ஓ ஆதியே உன்னைப் பெறுவதற்கு முன்னே ஆறுபிள்ளைகப் பெற்று, கம்ஸராஜன் வாளினாற் செற்று, ஏழாவது கர்ப்பத்தைக் கூழாய்க் கரைத்து, எட்டாவது பிறப்பு துஷ்டநிக்கிரகனாகிய நீ பிறந்து மாமனிறந்துபோகப் போர்புரிந்து, உன்னைப் பெற்ற தாயாராகிய இந்தத் தேவகியம்மாள், மற்றப் பிள்ளைகளை வளர்க்கப் பாக்கியம்பண்ணமற் போனேனேஎன்று விசாரப்பட் டழும்போது அந்தட்சணமே பாதாளலோகம்போய் முன்னிறந்த பிள்ளைகளாறையும் அழைத்துவந்து தாய்தந்தையர் முதலிய பந்து ஜனங்களுங் கண்டு கண்களிக்க வளித்து, மறுபடியும் பாதாளலோகம் போய்ச் சேரும்படியாய்ப் பண்ணிவைத்த பெருமையை மகரிஷிகள்முதல் தேவர்களுந் தெரிவார்களே. இத்தியாதி பிரதாபசாலம் பெற்ற உன்னுடைய கிருபாகடாட்சத்தினற் பெரிதாகிய காரியமுஞ் சுளுவாகுமே. அரிதாகிய பொருளென்றுவுமிராதே. உன்னலாகாதகாரியம் ஒருவராலுமாகாதே. இந்தப் பரத வம்சத்தைப் பாழ்படவொட்டாமல் விளைவிக்க வேண்டியதும் முளைவிக்கவேண்டியதும் உன்கடமையென்று மாமியாகிய குந்திதேவியார் வாழ்த்தினள்.

---

ஸ்ரீ கண்ணனேடு திரௌபதாதேவி முறையிடல்.

இப்பால் அக்கினியிற்பிறந்த திரௌபதாதேவி அண்ணவென்று புலம்பி, கன்றிழந்த காராப்பசுப்போற் கலங்கி, கமலமலர் தாளைப் பிடித்துக்கொண்டு, அஸ்வத்தாமன் உமது குமாரத்தியாகிய உத்தரை கர்ப்பத்தின் பேரில் அஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்த காலையிற் கர்ப்பமாயிருக்கிற சரீரந்தானாதென்று அந்தப் பாணத்துடன்கூடப் பொருந்தி, அவ்வுத்தரைக்குத் தேகவருத்தம் வைக்காமற் சக்கிரதரனுயிருந்து காத்துப்பக் குவப்படுத்திய தேவரீர் இந்தச் சிசுவையு மெழுப்பிக் காவாவிட்டால், மகாபாவமாகிய அபவாதம் உம்மைவந்தடையுமே மேலும் அஸ்வத்தாமன் அம்பு தொடுக்கும்போது அபிமன்னன் பத்தினியான உத்தரை கருப்பத்தைமாத்திரம் விட்டுவிடென்று தேவரீர் கேட்க, அந்தத் துட்டன்மூர்த்தி அந்தமைந்தனைப் போக்குவேனென்றான் அப்போது தேவரீர் சினந்து, அடா அஸ்வத்தாமா? அப்படியே போக்குவையாகில் நானுண்டாக்குவே னென்றீரே பாண்டவாள் முதல் வெகுஜனங்களு மறியுமே உம்முடைய திருவாய்மொழியல்லவா எங்களையெல்லாஞ் சந்தோஷப்படச் செய்தது நம்பியிருந்த நாங்கள் மோசம் போகலாமா ஓ நந்தநந்தனு? தயிரியமாகிய பாண்டவர்கள் பிள்ளைபிறந்து பிழைமோசம் வந்ததென்று கேட்டால், உடனே மரிப்பார்களே. இதுவரையிலும் உயிர்த்துணையாயிருந்து இப்போது கைவிட்டுவிடுவது கருணையா உமது மைத்துன

ரைவரும் சுபத்திரை உத்தரை முதலானவரோடு நானும் வயிறு குளிர்ந்து மகிழ்ச்சியடைந்து மங்களம் லாலிசொல்லிப் புகழும்படியாய் இந்தக் குருத்துக் குழந்தை பிழைக்கக் குளிர்ந்தக்கண்பாரும், ஓகோபாலா! ஓ கோவிந்தா! ஓ கோகுலமணியே! பூர்வம் இராஜகூட்டத்தில் அடியேன் மானபங்கப் படாமல் மாளாதவஸ்திரங்கொடுத்துமானங் காத்தருளிய மாதவா! ஓவாசுதேவா! ஓஜனார்த்தனா? அந்த ஆபத்துக்குதவிய அவசரத்திலும் இது பெரியதல்லவோ! தேவரீர் திருக்கண் மலர்ந்து பார்த்தால் உடனே ஜெயமுண்டாகுமே என்று சிந்தைநைந்திரங்கினாள்.

---

### கண்ணனோடு சுபத்திராதேவி முறையிடல்.

அப்பால் தங்கையாகிய சுபத்திராதேவி தாழ்ந்தெழுந்து, அண்ணா! உம்முடையமருமகனாகிய வாளபிமன்ளன் இறந்த செய்தி கேட்ட அப்பொழுதே திரிலோக தண்டனென்னும் உமது மைத்துனனாகிய அர்ச்சுனராஜன் இனி உயிர்வைத்திரேனென்று மகனுடனேகூட மடியத் துணிந்தபோது, தேவரீர் அவருக்குரிய வார்த்தைகளை ஏதேதோ தெரியப்படுத்தி அப்பா அர்ச்சுனா பெரிதல்ல நாளைக்கே பேறன்பிறப்பான். அவன் வெகு தீரனாவான். வீரனான உன்பிள்ளையின் விசனத்தை மாற்றுவான் என்று தேற்றினீரே உமது பேச்சைக் கேட்டுப் பௌத்திரன் பிறக்கப்போகிறான் கைக்குக் கனிசமாயெடுக்கலாம்என்று களித்திருந்தாரே இப்போதக் காண்டீபன் இந்தச்செய்தி கேள்விப்பட்டாலோ அந்தத் துக்கம் இந்தத் துக்கம் மற்றெந்தத் துக்கமும் ஒன்றாய்ச்சேர்ந்து, உலகமும் விசும்பும் ஒருங்கே கலங்கவேண்டிவருமே அவர் துக்கத்தை யெப்படிபோக்குவது! என்ன உபமானம்பண்ணினாலும் உயிர்வைத்திருக்கமாட்டார். உடனே மற்றநால்வரும் மடிவார்கள் தாங்களுமிறப்போம். ஆதலால் இந்தச் சிசுவை யெழுப்பித்தாரும். ஓ தீனபந்து ஓ தீனதயாளா? என்று செப்பி மெத்தத் துயரப்பட்டாள்.

---

### ஸ்ரீகண்ணனோடு உத்தராதேவி முறையிடல்.

இப்படிக்கு எல்லோரும் விண்ணப்பம் பண்ணிக் கொள்வதை ஸ்ரீ லட்சுமி நாராயணன் கேட்டு, அப்படியே யாகட்டும். உங்களுடைய மனஞ் சந்தோஷப் படும்படிக்குச் செய்கின்றோம் நீங்களெல்லோரும் வாருங்கள் என்று எழுந்து பூவளந்ததிருவடிசெவந்து பொருந்த நடந்து, உத்தராதேவியின் ஆசூசக்கிரகத்தை நோக்கி திரௌபதாதேவி முன்னும் குந்திமாதேவிபின்னும் சுபத்திராதேவி பலராமர் சாத்தகி இவர்களிருபக்கத்திலும் பொருந்த நடுமத்தியில் நாயகமணிபோல் விளங்கி, கரிகை, வாள், வேல், சக்கரம், சூலம் இவைகள்வைத்து வேப்பிலைகள் சொருகி, பூரண கும்பங்களமைத்து, விருத்த ஸ்திரீகளும் மருத்துவத் தொழில் திருத்தமாய்ச் செய்யத்தக்கவர்களும் சிற்சில பந்து ஜனங்களும் தோழிகள் முதலிய சொந்தசனங்களுங் கூட்டமாககொண்டிருக்கின்ற ஆசூசக்கரத்தின் முகப்பிலெழுந்தருளினார். அப்போது அக்கினியிற் பிறந்த பாஞ்சாலி முன்னாடி யோடி, உத்தரையினது உறக்கத்தை மாற்றி அம்மா இதோ உங்கள் தந்தை வந்தார் உன்மாமன் மாருக்குச் சகாயராகிய வாசுதேவர் வந்தார் என்று சொன்னாள். அந்தச் சொல்லைக கேட்ட மாத்திரத்திற் செத்த குழந்தையோடொத்துக்கிடந்த உத்த்ரை துடிதுடித்தெழுந்து ஆ மாமி எனதுசாமி யிறந்துபோன துயரத்தை மாற்றுவதற்குப் பூமியிற்பிறந்த என் கண்ணுச்சாமி மோசம் பண்ணினானே நானென்னசெய்வேன் ஏது பண்ணுவேன் என்று அழுது நேமிநாதனைக் கண்டு தொழுது நெருப்பில் வீழ்ந்த புழுப்போற்றுடித்து முகம்வாடி கண்ணன் திருவடியைப் பற்றிக்கொண்டு ஐயா என் வாழ்வும், வளமும் குலமும் நலமும் இன்றோடே பொய்யாய்ப் போய்விட்டனவே என்று புலம்பி மலினவஸ்திரமும் வாட்டமுற்றமுகமும் நீரோட்டமான கண்களும் மெலிந்த உடலும் நலிந்தசொல்லுமாய் இருகரத்தையும் விரித்து நீட்டி முகத்தைக்காட்டி இதனைப் பேசுகிறாள்.

ஓ அத்தனே! ஓ நம்பினபேரை ரக்ஷிக்கிறேனென்று கக்ஷிகட்டிக் கொண்டிருந்து காப்பாற்றுகிற சுத்தனே ஓ கருணைப் பிரதாபா ஓ கருணாசமுத்திரா ஓ கற்றவர் மித்திரா ஓ யதுகுல காவலன் புத்ரா ஓ ஐவருக்குச் சகாயா எனக் காதாரமாகியும் அருந்தன

மாகியும் குலமுதலாகியு மிராநின்ற இந்தச் சுந்தரனை எழுந்திருக்கச் செய்து முன்னாலே அஸ்வத்தாமனுடன் பேசிய சபதத்தை நிறைவேற்ற வேண்டும் என்னுயக னிறந்த பதின்மூன்று நாள் யுத்தத்தில்நானுங்கூட அக்கினிப் பிரவேசமாகிறேனென் றெழுந்த என்னைத் தடுத்து கர்ப்பத்தின்பேரில் தீப்பாயப் படாதென்றும் தரும விரோதமென்றுஞ் சொன்னதின்பேரில் நானும் உயிர்வைத்துக் கொண்டிருந்துவிட்டேன் அப்படிக்கிருந்தும் இந்தக் கோராமைகண்டேன் இனியென்ன இருக்கிறது இப்பூமியாசை யொழித்துச் சுவர்க்கம்போய்ச் சேர்ந்தால் என் கணவனுடன் பிரியாத துணையாயிருப்பேன் நானிறந்தபோதே வராமல் இப்போதேது வந்ததென்று கேட்பாராகில் சுமை கூலிபொடாத பெரும்பாவியான யான் சுமந்துபெற்றுகொள்ளைக் கொடுத்து வந்தேனென்று கூறுவேன் புருடனும்போய் பிள்ளையும்போனபின்பல்லவோ வந்தாய் புத்திரனிருந்தால் வரமாட்டாயே என்று கோபம் பண்ணுவாராகில் அந்தக் கோபத்தை யெப்படி மாற்றிக்கொள்ளுவேனென்று ஆலோசிக்கிறேன் விசாரப்படுகிறேன் இல்லை இவ்வுலகத்திலிருந்தாலும் புருஷனையும் பிள்ளையையும் பறிகொடுத்த பாதகியென்று பலரும் இகழ்ந்து பழிப்பார்கள் இந்தப் பதினான்கு லோகத்தையும் படைக்கத் துடைக்கப் பக்குவமுடைய தேவரீர் எனக்குத் தந்தையாய்க் கிடைத்திருந்தும் இந்தக் குழந்தை யெழுந்திராமற்போனால் இதனாலெனக்கு நிந்தையல்லவா ஓ தொந்தவரை யாதரிக்கின்ற நந்தநந்தன உமதாசை மருமகன் பிள்ளையை முன் கர்ப்பத்திற் காத்ததுபோற் காத்து ஐவர்களுடைய ஆபத்தைத் தீர்த்து ஆதரிக்கவேண்டும் ஓ யாதவகுல சிரேஷ்டரே பிள்ளைபிறந்த உடனே தேவரீருடைய திருவடிகளிற் போட்டுச் சரணாகதி யடைவிப்பதற்காக வெண்ணினேன் என்னெண்ணம் வீண்போகாவண்ணம் பண்ணும் என்று மரித்த மைந்தனை வாரி யெடுத்தணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து அடா மகனே சராசரங்களை யீன்ற தந்தைக்குத் தந்தையாகிய உங்கள் பாட்டன் இதோ உன்னுடன் பேசவந் திருக்கிறார் ஏனையாவென்றுயெச்சரி இப்படி நீ பேசாமலிருக்கலாமா சாஷ்டாங்க தெண்டனிட்டுச் சரணஞ் சரணமென்று அடைக்கலமாகக் கடவை அப்பனேஉனக்குத் தீர்க்காயுளுண்டாம் ஜெயங்கிடைக்கும் இதோ உன் பாட்டமாரைப் பெற்றபாட்டியாரோடு பெரியபாட்டியார் முதலான பேர்களியாவரும் வந்து நீ வாய்திறப்பாயென்று காத்துக்கொண் டிருக்கின்றார்கள் நீ பேசாமலிருக்கிற பெருமை யென்னடா ஓ பிள்ளாய் அடா காரணகாரியந் தெரிந்த காவலன் கான்முளையே என்று ஸ்ரீகண்ணனுடைய கால்மேற்போட்டு தானும் வீழுந்து கடகடவென்று புரண்டு கதறியழுதாள் இருகரத்தையுந் தலைமேற் குவித்துத்தொழுதாள் நான் வாழ்ந்த வாழ்வு இவ்வளவோ இதற்கோ நான் ஆளானேன் என்று புலம்பினாள்.

---

### ஸ்ரீ கிருஷ்ணபகவான் இறந்த குழந்தையெழுப்பித்தரல்.

இப்படி புலம்பிய உத்தராதேவியை இறைவன் பார்த்து அம்மணி பயப்படாதே விசனப்படாதே உன் மகன் பிழைப்பான் முகத்திற் களையிருக்கிறது கலங்காதேயென்று தைரியஞ்சொல்லி சுத்தசலம் வரவழைத்து தமது இரண்டுபாதங்களையும் கரங்களையும் திருவாயையும் திருமுகத்தையும் சுத்திசெய்து ஆசமன்னியம் பண்ணி அங்ஙனமமைத்த ஆசனத்திலிருந்து இந்தப்பூமியும் பூமியையாளும் பாண்டவர்களும் திரௌபதிமுதலிய பாட்டிமார்களும் மற்றச்சகலமான பேர்களுஞ் சுகசந்தோஷ சுபம் பெறும்படியாய் இதோ உத்தரையின் புத்திரனை எழுந்திருக்கப் பண்ணுகிறேன் பாருங்களென்று சற்றுநேரஞ் செபத்திலிருந்து சொல்லுகின்றார். இவ்வுலகத்தில் எனக்குச் சத்துருவென்றும் மித்துருவென்றும் பேதமில்லை யாவு மிரண்டாகவெண்ணாமல் வித்தியாசமில்லாமற் சமமாய் நடப்பித்தேன் நானுஞ் சரியாய் நடந்தேன் ஒருவரைக் கெடுத்து ஒருவரை இரட்சிக்கயில்லை மனதறிந்து ஒரு துரோகமுஞ் செய்தறியேன் மேலும் நான் சந்திரவம்ஸத்திற் பிரிந்த யதுகுலத்திற் பிறந்து க்ஷத்திரிய குலாச்சாரந் தப்பாமல் இராசர்களிடத்திற் பிரீதியும் அந்தக்கரணமும் அன்பும் ஆசையுமுடையவனாக இருந்தேன் அருச்சுனனும் யானும் யுத்தரங்கத்திலாவதுமற்றோரிடத்தி

லாவது இன்னுமுள்ள எந்தக் காரியங்களி
லாவது ஒரே பேச்சும் ஒரே பிராணனும்
ஒரே மனதுமாயிருந்து நடக்கிறதும் நட
த்துவதும் நடத்தியதும் பேதமில்லை வஞ்
சனையுடையசகடாசூரனையும் சிசுபாலனையும்
தந்த வக்கிரனையும் இன்னுமுள்ள துஷ்டர்
களையும் நான் கொன்றதுங் கொன்றுவித்
ததும் பரிசுத்தமுள்ள தேவர்கள் ரிஷியீஸ்
வரர்கள் இராஜாக்கள் வேதவேதியர்கள் கற்
றவர்கள் நற்றவர்கள் இன்னுமுள்ள மற்றவர்
களுக்கும் உத்தம தருமமென்று நிச்சயமா
ய்த்தோன்றும் ஆகிலும் தருமம் சத்தியம்
என்னு மிவ்விரண்டும் இரண்டு நேத்திர
மாகக்கொண்டு நித்தியப் பிரமசாரி விரத
ந்தை அனுசரித்திருக்கின்றே னென்பது
நிச்சயமானல் இந்தப் பரதகுல யதுகுல
முதலாயுள்ள எல்லாக் குலத்தரசர்களும்
எல்லாக்குல ஸ்திரீகளுங் கண்டு களிக்கும்
படியாய்ச் சுத்தவீரனகிய அபிமன்னனுக்கு
அவன் பத்தினியாகிய உத்தரைக்கும் பிறந்த
பிள்ளையாகிய இந்தச் சிசுவானது இத்தரை
யாளுவதற்குப் பிழைக்கக் கடவதென்று ஆ
காயத்திற் கைநீட்டிச் சொல்லி அந்தப் பிள்
ளையின் றேகத்தைத் தடவினர் இம்மொழி
கூறியபோது யாவருந் தேருதவர்களாய்த்
தியங்கி மயங்கினர்கள் அப்போது உருண்
டை வடிவாகிய கருங்கற் குழவிபோ லுயிரற்
றுக் கிடந்த சிசுவானது அரண்டு புரண்டு
இரண்டு கையுங்காலு மெடுத்து அசைத்து
கண்கள் திறந்து சுவாசம்பிறந்து வாயைக்
குழைத்து நாவை நீட்டி காவுகாவென்று அ
ழுதது.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாரா
ஜனே மூவுலகத்தையுந் றன்னுதரத்து ளட
க்கி மூவாதளித்த முதல்வனுக்கு ஈதோரரு
மையோ இவ்வற்புதத்தை அந்தப்புறத்து
பெண்கள் யாவருங் கண்டு சரீரம் பொங்கிப்
பிரமானந்த மடைந்து வேதவித்தாகிய விம
லனைப்பணிந்து குழந்தையையெடுத்து அவ
ர்கரத்திற்கொடுத்து கடலொலிபோ லிரைந்
து அவ்வவர்களும் பேருவகை யடைந்த
பெருக்கத்தைரீ கணக்கிட்டுச் சொல்ல முடி
யாது இப்பேர்ப்பட்ட சம்பிரமத்தைக்கண்ட
விதுரனுஞ் சஞ்சயனும் இன்னுமுள்ள ஆட
வர்களும் ஸ்ரீகிருஷ்ண தேவருடைய லீலா
விபூதியை நினைந்து நினைந்து பரமானந்த
சாகரத்தில் மூழ்கினர்கள் இப்பால் உத்தரா
தேவிக்கு மெத்தப் பலஞ்சேர்ந்து பெற்ற
வருத்தந் தீர்ந்து கோபாலனுடைய திருவ
டியிற் றொழுது ஒப்புழுதுபடாத பாக்கியமே
யென்று பல்லாண்டுபாடி வாழ்த்தினள் அப்
போது பரவாசுதேவ னவளை யாசீர்வதித்து
புத்திரனைப் பெற்றவளிடத்திற் கொடுத்து
மற்றவருடன் கூடி மகிழ்ந்து புகழ்ந்து ம
னமூ வந்திருந்தினர் அந்தச் செல்வனை
யேந்திய விராடராஜ கன்னிகை முத்தமிட்டு
பொன்னுபரணங்கள் பூட்டி பிராமணைக் கொ
ண்டு ஓமச் சடங்குகள் நடாத்தி சாதகன்
மனம்புரித்து பரிச்சித்து மகாராஜனென்று
நாமகரணம் புனைந்து சகல முயற்சியுடன்
மங்களவாத்திய மூதலியனவெல்லா முழக்கி
வைத்தனள் யாதவாளோடு போஜகுலத்தா
ரும் விராடபுரத்தாரும் பாஞ்சால நாட்டா
ரும் ஆபரண முதலிய அநேகம் வரிசை
களும் வெகுமதிகளுங் கொணர்ந்து ஆனந்
தங் கொண்டாடி மஞ்சணீர் முதலிய சம்பிர
மங்களில் மனது வைத்திருந்தார்கள் பட்ட
ணத்துச் சனங்களியாவருங் காணிக்கை கொ
குடை சாமரம் பீலிக்குஞ்சம் இவை முத
லாகிய பெருமைகளைக் கொண்டுவந்து
கொடுத்தார்கள் அரண்மனைக ளெங்கும் ஆ
காயமறையப் பந்தலமைத்து பூமாலைகள்
பொன்மாலைகள் முத்துமாலைகள் ரந்தின
மாலைகள்முதலிய பலமாலைகள் தூக்கிகர்ப்பூர
கதம்பப்பொடிகளை வீதிகள் நிறைய விறை
த்துவாழைகரும்பு கமுகு கூந்தற்பனை இள
நீர்க்குலையிவைமுதலியவைகள் கட்டி மாவிலை
க்கும்பம்வைத்து பிராமணாள் தரித்திரர் யாச
கர்யிவர்முதவியோர்க்குயிரணியமுதல் அணி
மணிப் பணித்துணிகளளித்து ரிஷியீஸ்வரர்
மூனீஸ்வரர் தவசிகள் முதலாயினேர்க்கு
அன்னதானமுஞ் சொர்ணதானமும் ஏ
மாராமல் ஈய்ந்து இயாவருஞ் சந்தன
தாம்பூல புட்பாதிகள் தரித்து அஸ்தினபுர
சனமும் அதற்குப் பிறம்பிலுள்ள குருநாட்
டுச் சனமூங் கொண்டாடித் தங்கள் தங்கள்
வீடுகள் தோறும் புந்திரோச்சவம் பாராட்டி
னர்கள் திரிதராட்டிரனுங் காந்தாரியுங் களி
த்து இறந்து பிறந்த பிள்ளை துவாரகைநாத
ஞற் சிறந்து வளர்ந்ததென்று தேகமுமன
மூஞ் செருக்குற்றிருந்தார்கள்.

---

## பாண்டவர் பட்டினமீண்டு பரந்தாமன் செய்த வரிசையும் பௌத்திரனுய்ந்த பரிசையுங் கேட்டானந்தித்தல்.

---

அக்காலவ் வஸ்தினாபுரத்திலுள்ள பசுக்களும் எருமைகளுந் தமக்குத்தாமே காலைச் சுருக்கிப் பாலைப்பெருக்கி மூலைக்கு மூலை வெள்ளமாயோடிப் பள்ளமாகிய பயிர்ப்புலத்திற் பாய்விக்கவும் காய்க்காத மரமுதலியவைகள் காய்க்கவும் பூர்க்காத மரமுதலியவைகள் பூர்க்கவும், ஏரிக்குளங்களிற் சங்கினங்கள் ஆர்க்கவும் அநேகந் தேசத்தரசர்கள் இச்சேதிகேட்டு மேன்மை நோக்கவும் நற்குணங்களுண்டாகவும் நித்திய சத்திய மங்கள கலியாண சுபசோபனங்களோங்கவும் அசத்தியங்கள் அபரோதனைகள் அடர்பகைகள் இவை முதலியன பின் வாங்கவும் துற்சோகம் துற்பயங்கரம் துற்மரணம் துற்வியாதி இவைகளெல்லா முன் தூங்கவும் ஜெயலட்சுமி தனலட்சுமி தானியலட்சுமி தருமலட்சுமி முதலிய அஷ்டலட்சுமிகளுங் குதிகொள்ளவும் காடு தழைக்கவும் நாடு செழிக்கவும் கல்விகொழிக்கவும்செல்வி கொழுக்கவும் தேவாலயமும் விஷ்ணுவாலயமும் பூசை நைவேத்தியம் அபிஷேகம் உபசாரம் அலங்காரம் இவையாவுங் குறையில்லாமல் நிறையவும் தேசதேசமெங்கும் அபிமன்னனுக்குச் சுபுத்திரனும் பாண்டவருக்குப் பௌத்திரனுமாகிய பரிச்சித்து மகாராஜன் பிறந்தானென்று பறை யறையவும் பந்துஜனங்கள் வந்து வந்து நிறையவும் பாபங்களெல்லாம் நொந்து நொந்து குறையவும் இவ்விதமாக வளமோங்கி யிருக்கு நாளையிற் பிறந்த பரிச்சித்து மகாராஜனுக்கு ஒருமாதமாயிற்று அம்போது இமோத்கிரிச் சாரலுக்குப் போயிருந்த பாண்டவர்கள் பின்னுந் தங்கள் மனோபீஷ்டப் பிரகாரந் திரவியங்களெடுப்பித்துக்கொண்டு பிரயாணமாகி அஸ்தினாபுரத் தெல்லையை சேர்ந்து முன்பு கொண்டுவந்து குவித்து வைத்திருக்கிற அளவிறந்த பொன்மலைகளைக்கண்டு பூரித்து வருகிறார்கள் அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலாகிய பேர்கள் எதிர்சென்று கண்டு ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டு கண்ணும் மனமுங் களிகூர்ந்து நாடகசாலைப் பெண்களாடலும் நல்லிசைகூடிய பேரியாழ்ப்பாடலும் பட்டுவேர்கூறுந் தோத்திரமும் கட்டியர் கூறுங் காத்திரமும் வித்துவான்கள் கூறும் வாசியும் வேதியர் கூறும் ஆசியும் சர்வவாத்திய நாதமும் சதுரங்கச்சேனையின் பேதமும் ஆகிய விவைகளெல்லாம் விண்ணதிர முழங்கும்படி இராஜவீதி முதலிய தெருக்களெல்லாங் கடந்துவந்து அரண்மனையிற் புகுந்து பெரிய தந்தையாகிய திரிதராட்டிரன் காந்தாரியம்மன் குந்திமாதேவி இவர் முதலிய பேருக்குப் பூமியிற் படிந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு அவாளுடைய ஆசீர்வசனங்களைப் பெற்று இதரமான வசுதேவர் பலராமர் முதலிய பேர்களையும் வணங்கி அவ்வவர்களும் ஆசனத்திலமர்ந்து அதிசயவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள் அப்போது விதுரனானவர் உத்தரைபுத்திரனை யீன்றதும் அது செத்துப்போய் வீழ்ந்ததும் கர்த்தனாகிய கண்ணன்தான் நித்தியப் பிரமசாரி மெய்யாகில் இக்குழவி எழுகவென்று சொல்லி உடலைத்தொட்டு தடவியதும் உடனே பிள்ளை பிழைத்ததும் பூரி முதலிய வரிசை வண்மைகள் நடந்ததுஞ் சொன்னார்.

அம்மொழிகேட்ட பாண்டவர்கள் அற்புதமடைந்து பொற்புடைய புண்டரீகாட்சனைப் பூசித்து உபசாரஞ்சொல்லி ஓ உபகாரம்பண்ணிய உத்தமனேயென்று பத்துத் தரமாகத் துதித்துத் தோத்தரித்து தங்களை தாங்கள் மறந்து அளவிறந்த சந்தோஷத்தையடைந்து ஆபத்பாந்தவாகிய ஐயனை சங்குசக்கரக்கையனை அமலமாகிய தூயனை காளமேகம்போன்ற மெய்யனைப் பணிந்து நோக்கி ஓ கோமானே குருக்ஷேத்திரத்திலிறந்த அபிமன்னனாகிய குமாரனை இன்று எழுப்பிக்கொடுத்தீர் நீர் எங்களைக் காக்கும் பாரமுள்ள சீமானைகயாற் செய்யவேண்டிய வேலைகளை யெல்லாஞ் சீர்பெறச் செய்தீர் உமக்கிவைகள் மெத்தச் சுளுவாயிருக்கும் எங்களுக்கு மெத்தப் பளுவாயிருக்கும் குமாரன் மடிந்த நாள் முதற்கொண்டு கருதும்போதெல்லாங் கவலைப்படாத காலமில்லை ஓ கண்ணனே! அக்கவலையினாற் செல்வத்தை சதமென்றேற்றிப் போற்றிய தீனரைப்போலானோம் தியங்கினோம் மயங்கினோம் இப்போது தேறித்தெளிந்த ஞானிகள்போலாயினோம் இனிமேல் எங்களுக்குத் துக்கமு

மில்லை துயரமுமில்லை ஓ ஆதியே இதுவன்றிப் பிறவியென்னுந் துக்கத்தைப் போக்கடித்துக்கொள்ள வேண்டியபேருக்கு உம்முடைய அருளுண்டானல் அப்போதே கறையேறலாம் உம்மை நம்பினபேருக்கு எங்குமென்னகுறைவு? ஐயனே! உம்மைப்பெற்ற தந்தையுந் தாயுஞ் சிந்தை மகிழ்ந்து நீடூழி பெருமை பெற்றுக் குறைவில்லாமலிருக்கக் கோருகின்றோம். ஓ கோபாலா! உடைமையைக் காப்பாற்றும்வருத்தம் உடைமையைப் படைத்தவற்குத் தெரியும் அவ்வுடைமைக்கு என்ன தெரியும் சுமை யெடுப்பவனுக்குச் சுமைப்பளுவு தெரியும் சும்மாட்டுக்குஞ் சும்மாயிருப்பவனுக்கு என்ன தெரியும் இத்தன்மைபோல் எங்களைப் படைத்த உமக்கு இரட்சிக்கவுந் தெரியும் பட்சிக்கவுந்தெரியும் நாங்கள் ஏதுமறியோம் மெத்தவுஞ் சிறியேம் முற்றிலும் வறியேம் ஓ தர்மார்த்த காமமோட்ச மென்கிற புருஷார்த்தங்களை நாங்களனுபவிக்கும்படியாய் பொருத்திவைத்த கர்த்தனே என்றும் வருத்தம் வரவொட்டாமற் காத்தருளிய வாசுதேவா சரணம் சரணம் என்று ஸ்துதிசொல்லி நின்றனர் இப்படி ஸ்துதிசொல்லி நின்ற ஐவரை அனந்தசயனன் பார்த்துச் சிறுநகை காட்டி கிருபாநோக்கம் நாட்டி அவர்களோடு பழையபடி ஏது மறியாதவர்போல் உண்டுடுத்திப்பூண்டு உலகினர்போ லிருந்தருளினர்.

பரிச்சித்துற்பவச்சருக்கம்

முற்றிற்று.

நான்காவது,

# பரிவலச்சருக்கம்.

கண்ணன் துதி.

மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
　　விளங்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தானய்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப்பில்லாப்
　　பிறப்பிலிபா யிறப்பதற்கே யெண்ணதெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
　　புனலுருவா யனலுருவிற் றிகழுஞ்சோதி
தன்னுருவா யென்னுருவில் நின்றவெந்தை
　　தளிர்புரையுந் திருவடியென் றலைமேலாமே.

ஓ சந்திரகுலத்தி லிந்திரனுக் கொப்பாய்த் தோன்றிய ஜெனமேஜெய மகாராஜனே அபிமன்ன மகாராசனுக்குப் புத்திரனும் அருச்சுன மகாராசனுக்குப் பௌத்திரனுமாகிய பரீச்சித்து மகாராசன் பரந்தாமனுடைய கிருபாகடாட்சத்தால் உயிர்த்தவதரித்த உண்மையை யெண்ணுந்தோறும் பாண்டவர்கள் பரமானந்தக் கடலில் மூழ்கினவர்களாகி அந்தக் கண்ணபிரானேடு தங்கள் கருத்து முதலிய கரணங்கள் மூன்றுங் கலங்கப் பொருந்தி போசன முதலியதுண்டு பூசுவனபூசி பூண்பண பூண்டு அஸ்தினபுர

த்தி விருக்குநாளையில் பிறவித் துயரமாகிய
தரித்திரத்தையனுபவித்தவர்களுக்கு நிக்ஷே
பங் கிடைத்தது போல் தருமராசனுடைய
ராசசபைக்கு வேதவியாச ரெழுந்தருளினார்
அவரைக் கண்டவுடன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி
யும் பாண்டவர்களுமெழுந்து ஓ எங்கள்குல
தெய்வமே! ஓ எங்கள் தபோபலமே! ஓ எங்
கள் விரதமே ஓ எங்கள் சரதமே எழுந்
தருள்க என்று சாஷ்டாங்க தெண்ட
னிட்டு அர்க்கியபாத்திய ஆசமனீயங்
கொடுத்து பாதபூசை தொடுத்து கர்ப்பூர
தூபமெடுத்து சிங்காதனத்திலிருக்கவைத்து
வணங்கினார்கள் அந்த வியாச ரவர்களை
இருக்கு வேதங்களினால் ஆசீர்வதித்து ஓ
தருமநந்தன அஸ்வத்தாமாவின் அஸ்திரந்
தகித்து எரிந்த உத்தரையின் பிண்டமானது
செத்துவிழுந்து இயாவரும்மெத்தவருந்திக்
கத்தியபோது இந்த சித்தசனைப்பெற்ற உத்
தமனாகிய புருஷோத்தமன் தனது அலர்
ந்த செந்தாமரைக்கமலம் போன்ற கரத்தாற்
றடவிப் பிராணப்பிரதிஷ்டை பண்ணி பரிச்
சித்தென்று பெயரிட்டுத் தேவதார்ச்சனை
செய்தருளிய செய்தி கேட்டுச் சந்தோஷ
மடைந்தோம் இப்பேர்ப்பட்ட பகவான்
உங்களுக்குப் பக்கத்துணை யிருக்கிறபோது
பிறவிக்கடலுங் கடந்தீர்கள் ஈதெல்லாஞ்
சந்திரன்முதல் அபிமன்னு வரையிலுமாகிய
உங்கள்பெரியோர்கள் செய்ததவமேயல்லது
வேறில்லை என்று சொல்லியபோது தரும
ராசன் நமஸ்கரித்து ஐயா வேதமுனியே
இவ்வுலகளந்தவ னருளுந் தேவரீருடைய
கிருபாகடாட்சமு முண்டாயிருக்கும் போது
எங்களுக்கென்ன தாட்சி இதற்குச் சாட்சி
பராபரமாய்ச் [illegible]சம்பொன் மலைகள் நேரிட்
டிருப்பதே காட்சி இத்திரவியஞ் சேகரித்
துக் கொடுத்ததைப்போல் அஸ்வமேத யாக
த்தையுமுடிப்பித்துஎங்களுக்குண்டான இட
ரகற்றிச் சுகப்படச் செய்தருளு மிறைவனே
யென்று துதித்தனர்.

---

## வேதவியாசர் யாகவிதி கூறுதல்.

அந்தவேளையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான்
வியாசரைப் பார்த்து ஓ வேதபுண்ணியனே
தேவரீர் ஈஸ்வர சொரூபமாகையால் நீரே
அஸ்வமேதயாகத்திற்கு ஆசாரியராயிருந்து
முடிப்பிக்க கடனென்று வேண்டினார் அத
ற்கு வேதவியாசர் சொல்லுகின்றார் ஓதேவகி
நந்தன அப்படிக்கானால் அஸ்வமேதயாகத்
திற்குத் தீக்ஷை வாங்கவேண்டும் அந்தத்
தீக்ஷையாவது வசந்தருதுவிற் சித்திரைமா
தப் பர்வமுதற்கொண்டு பன்னிரண்டு பர்
வம் வரைக்கும் பெரியவர்களுடன் விரத
மனுசரித்துப் பக்குவமா யிருக்கவேண்டும்
அந்தச் சித்திராபர்வத்திற் பஞ்ச லட்சண
மமைந்த குதிரையைப்பூசைபண்ணி தேசங்
கள்தோறுஞ் செல்ல விடவேண்டும் தேச
மெல்லாந்திரிந்து பன்னிரண்டாவது பர்
வத்திற்கு முன்னாநாள் குதிரைவந்து யாக
சாலை சேரவேண்டும் அந்தக் குதிரைக்குச்
சர்வ சுபலட்சணங்களும் பொருந்தி யிருக்க
வேண்டும் அந்த அஸ்வத்தின்பின்னே திட
காத்திரதேக வீரமுடைய ராசர்களும் பல
ராணுவ வீரர்களுந் துணையாகப் போக
வேண்டும் அவர்களந்தக் குதிரைக்கு எந்த
ராசாக்களாலுந் தோஷமில்லாமலும் அபா
யமில்லாமலும் ஆட்சேபனை யில்லாமலும்
அட்டங்கமில்லாமலும் ரட்சித்துக்கொண்டு
சகலராசாக்களிடத்திலுங் கப்பணங்களுடன்
செயம்பெற்று வரவேண்டும் இந்தப் பிரகா
ரங் குதிரைவந்து சேர்ந்த பிற்பாடு இயாகந்
தொடங்கவேண்டும் ஓமகுழிக்கு வேண்டிய
உபகருவிகளும் யாகபாத்திரங்களும் அமை
க்கவேண்டும் பிராமணரிஷிகளும் தவசிரேஷ்
டர்களும் தினமானம் போசனஞ் செய்ய
வேண்டும் எவர்களெந்த வஸ்துக்களைவிரும்
புகின்றார்களோ அந்த வஸ்துக்களும் பற்
பல சொத்துக்களும் விஸ்தாரமிருக்கவேண்
டும். இல்லையென்னும்வாக்கியங்களுங்கலகங்
களும் குறைவும் லோபத்தன்மும் வரப்
போகாது சாமான் எடுத்துக் கொடுப்பவர்
களும் செலவழிப்பவர்களும் பூரியளிப்பவர்
களும் கோபமில்லாமல் முகநயந்து மிகப்
பயந்து கொடுத்துவரவேண்டும் எந்தெந்தப்
பொருள் எந்தெந்தயிடத்தி லமைப்பதோ
அந்தந்தப் பொருளை அந்தந்த யிடத்திற்
கலபையில்லாம லமைத்து வைக்கவேண்டும்
கங்கைக்கரையில் இயாகசாலை அமைக்க
வேண்டும் பொற்பாத்திரம் வெள்ளிப்பாத்
திரம் செப்புப்பாத்திரம் கலசம் அகல் தகளி
வட்டகை அகண்டம் மடக்கு பாலிகைகடம்
குடம் சால் கரகம் இவை முதலிய தினுசுக
ளெல்லாங் குறைவற விருக்கவேண்டும் பூமி
யிலுள்ள பிராமணரும் ரிஷீஸ்வரர்களும்

யாகத்திற்குவந்து சேரும்படியாய்த் தூதுவர்களை யனுப்பித் தெரிவிக்கவேண்டும். இத்தியாதி காரியங்களுங் கைகூடின பின்பு வேள்வி யாரம்பிக்கலாமென்று விளம்பினர்.

---

## தருமராஜன் ரக்ஷாபந்தனங்கொண்டு அஸ்வம் விடுத்தல்.

இவ்வாறு கூறிய வேத வியாசரைத் தருமராஜன்தொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் முகத்தைப் பார்த்து ஐயா துவாரகாபுரி வாசனே இவ்வாறெல்லாஞ் செய்வதற்குத் திருப்திதானாவென்று கேட்டனர் அதற்குப் பசுவின் கன்றைக்கொண்டு விளாங்கனி யுதிர்த்தருளிய யதுகுலவேந்தன் சந்தோஷித்து ஓ மெய்விரதவேந்தனே அப்படியே செய்வதற்கு யாதொரு தடையுமில்லை ஆனால் உமது தம்பிமார்களும் நானும் என்னுடன் சேர்ந்தவர்களும் உம்முடன் கூடியிருந்து நீர்கைகாட்டிய ஏவற்றொழிற் செய்யக் காத்திருக்கின்றோம் குறைவில்லாமல்வேள்வியை நிறைவுபடுத்தும் என்று புகன்ற காலையில் அறைகழலரசரும் வியாசரும் எழுந்து மகிழ்ந்து குதிரைச்சாலைக்குட் புகுந்து எல்லாக் குதிரைகளையுஞ் சோதித்து அக்குதிரைகளில் இலக்கணமுள்ளதாய் ஒரு குதிரையையேர்ப்படுத்தி அதற்கு ஸ்நானம்பண்ணிவைத்து சந்தன புட்பகந்த கதம்ப குங்கும அட்சதைகளினாற் பூசைபண்ணி போசனமருந்தி நவவிதமாகிய இரத்தினாபரணங்களினால் அலங்கரித்து அநேக பிராமணர்களால் மந்திரகலாபங்கள் பண்ணிக் கொண்டிருக்கவைத்து தருமராசனை நல்ல சுபமுகூர்த்தத்திற் கலாசாவாகனம் பண்ணியகங்கையினால் ஸ்நானம் பண்ணச்செய்து சாஸ்திரப்படிக்கு வஸ்திரமும் மான்றோலும் தரிப்பித்து இப்பூமியை யாளுஞ் செங்கோற்கொண்ட கரத்தில் ஒரு பலாசத்தண்டமேந்துவித்து தருப்பையினாற் பவித்திரந் தரிப்பித்து சந்தனாதிகள்பூசி சுகந்தபரிமள மிகுந்த மலர்மாலை சாற்றி கங்கணங்கட்டிஎக்கியவற்கலரென்னப்பட்டவரிருந்து ஓமாகுதிகள் நடத்த அந்த ஓமத்தின் மத்தியிற் குதிரையைக்காட்டி ஓமாக்கினியை வலம் வரச்செய்து குதிரையினெற்றியில் வீரபட்டங்கட்டி நல்ல சுபமுகூர்த்தத்திற் பூப்பிரதக்ஷணம் பண்ணிவைக்கும்படியாய் மந்திரதேவதை வசத்தால் விடுத்து எக்கியவற்கல மகாரிஷியின் சீடர்களில் பதினாயிரவர் அஸ்வத்தின் பின்போய் வரும்படிக்குக் கட்டளையிட்டு குதிரை நடக்கும்போது காலடிவைக் குமிடங்களில் ஓமங்கள் பண்ணவும் தேகம் உதறியவிடத்தில் நாகப் பிரதிஷ்டைசெய்யவும் நீர்விட்ட இடத்திற் குளமெடுப்பிக்கவும் படுத்த இடத்திற் கோவிற் கட்டவும் அம்மிவிம்மி இருமிய இடத்திற்சுமைதாங்கி சத்திரம் சாவடி இவைகளேற்படுத்தி வரும்படிக்கு வேண்டிய திரவியங்கள் சாமான்கள் முதலிய இயாவற்றுஞ் சேகரித்தளித்தனுப்பி விட்டார்கள்.

---

## தருமராஜன் அருச்சுனனுக் கறிவுறுத்தி யனுப்புதல்.

கேட்டீரோ ஜெனமேசெயமகாராசனே அப்போது தருமராசன் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப்பார்த்து பரிவலம் வருவதற்குப்பின் போய்வருகிற வீராதிவீரர்கள் இயாரென்று கேட்டனர் அதற்கு வியாசர் சொல்லுகின்றார் ஓ தருமநந்தனா அஸ்வத்தின் பின் போகத்தக்கவன் அருச்சுனன் தவிர இதராளுக்கு முடியாது அவனே போகவேண்டும் என்று சொல்லவும் அதை விசயன் கேட்டு உடனே அம்பறாத்தூணியும் வில்லுங்கொண்டு கவசமும் வெற்றிமாலையும் கிரீடமும் ஆரகேயூரமும் மதாணி முதலிய பதக்கமுந் தரித்து காலகேய நிவாத கவசரைச் செயித்து தேவர்களுக்குச் சவுக்கியங்கொடுத்த அச்சவ்வியசாசி அண்ணனுடைய அடிமேற் பணிந்து அண்ணா! அடியேனுக்குத் தாரந்தந்தனுப்பும் குதிரையின் பின்போய் பூப்பிரதக்ஷணம் புரிந்து பெரியவர்கள் பேசிய தவணைக்கு முன்னேவந்து சேருகிறேனென்றான் அத்தம்பியைத்தருமராசன் அணைத் திருகக்கட்டி ஆலிங்கனஞ் செய்து அப்பனே! பதினெட்டு நாளைய யுத்தங்களில் உலகிலுள்ள அரசர்களையும்யானைகள் முதலிய சேனைகளையுங் கருவறுத்துப் போரட்டோம் அந்த யுத்தங்களிற் போனவர் போக ஆராகிலுமவர்கள் சந்ததியார் தப்பியிருப்பார்கள் அப்படி தப்பினபேர் எதிர்த்துக் குதிரையைத் தகைந்து சண்டைபண்ணவந்தாலும் அவர்களிடத்தில் நன்மையாய்ப்பேசி லகுவாய் அவர்களுடைய பகை

யைமாற்றி வீணே பாணந் தொடுத்துச் சண்டைகொடுத்துப் பாழ்படுத்தாமல் ஒருவருக்கும் பிராணபயமில்லாமல் உறவாய்க்கலந்து சகல திசைகளையும் விசயஞ் செய்துகொண்டு அஸ்வமேதயாகத்திற்கு முன்னாலே வந்து சேரக்கடவை அங்கங்கே கிடைக்கும் பொருள் முதலாகியதில் எவ்வளவு கிடைக்கிறதோ கிடைத்தமட்டுப் அவற்றைப் பெற்றுக்கொண்டு மேலுமேலு மினுக்கிட்டு நிற்காமல் அஸ்தினாபுரம் வந்து சேரவேண்டும் என்று தருமராசன்சொல்லவும் அர்ச்சுனன் அந்தப்படியே நடக்கிறேனென்று அவ்வரை வணங்கி வீமசேனனைத்தொழுது தம்பிமார்களைத்தழுவி தாய்தந்தைமார்களையும் பணிந்து ஸ்திரீ சனங்களுக்குந் தெரிவித்துப் போட்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பலராமர் வசுதேவர் விதுரர் கிருபாச்சாரி சாத்தகி தேவகி ரோகணி முதலாகிய இவர்களைத் தொழுது அவர்களுடைய ஆசீர்வாதமுந்தாங்கி அலங்காரமுள்ள வெல்லாம் புனைந்து தெளிவிக்குஞ் சவுரியத்திற்கும் ஒருவரும் நிகரில்லாத சிலைவிசயன் சிவசுப்பிரமண்யக் கடவுளைப் போற் புறப்பட்டு பிராமணர்களையும் வேத வியாசரையுங் கைதொழுது அவர்களை வேத விதிப்பிரகாரம் பூசித்து மங்களாசன வரம் வாங்கிக்கொண்டு இரதமேறினான்.

---

## திரிகர்த்தாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராசனே அந்த அர்ச்சுனராஜன் பெற்றிருக்கின்ற பெயர்கள் பன்னொன்றிற் சுவேதவாகன னென்கிற பெயருக்குக் குறைவுவராமல் அக்கினித்தேவனாற்பெற்றிருந்த அழியாத ரதம் பாரதயுத்தமுடிவில் அழிந்துபோனபடியால் வேறே ஓர் தேரும் வெள்ளைக்குதிரைகளுஞ் சம்பாதித்து அலங்கரித்து அனுமத்துஜ மெழுதிநாட்டி சுவேதவாகனன்தேரேறினானென்று ஜெயசங்கமுழக்கி விரசின்னம் மாரகாகளம்பேரி, தாரை, பூரி, கொம்பு, டமா, கெடி, முரசுமுதலாகிய வாத்தியங்கள் முழங்க கொடிகள் குடைகள் மயிற்பீலிகள் பீலிக்குஞ்சங்கள் ஆலவட்டங்கள் மகரதோரணங்கள்சவளங்கள் மேற்கட்டிகள் முதலிய சின்னங்கள் ஆகாயத்தை மறைக்க ரத கஜ துரக பதாதிகள் நாற்புறத்துந்தழைக்க நுரைக்கும் அலைகளையுடைய சமுத்திரப்பெருக்கமாய்ச்சிற்சில வீரர்களும் பற்பல ராஜர்களும் குறுநிலமன்னர்களுங் குழஉக்கொண்டுவர மண்டலத்திலுண்டான கருந்தூள் செந்தூள் விண்டலத்தைமூடி நிறைக்க அருச்சுனனாகிய சந்திரனை அணியாகிய அளவற்ற நட்சத்திரங்கள் புடைசூழ்ந்திருப்பனபோல் ஆயுதபாணிகளாகிய அரசர்கள் தங்கள் படையுடன் தொடர்ந்துவர அநேக ஸ்திரீ ஜெனங்கள் தேசவிலாசம் பார்க்கவேண்டுமென்று தேவேந்திரனுடன் அரம்பாஸ்திரீகள் மருவிவருவதுபோல் அருச்சுனனைப் பொருந்திவர வெண்சாமரம்வீச, விருது, டால் பிடிக்க தேவர்களுந் தேவப்பெண்களும் பூமாரிபொழிய இவ்வித வாடம்பரத்தோடு தனது எக்கியக்குதிரையை முன்னே நடத்தி தான்பின்னாலே போனான். அந்த அஸ்வமானது தன்சுயேச்சையாய் வடக்குத்திக்கு நோக்கி அடிமேலடிவைத்து மெத்தென நடந்து தன்னைச் சூழ்ந்துவருகின்ற வேதியர்கள் அவ்வடிகள் நாட்டிய இடங்களில் ஓமங்கள் செய்து உபசரித்து வரும்படியாய் இரவும்பகலுஞ்சென்று, அநேக பூமிகள் கடந்து திரிகர்த்தன் தேசத்தையடைந்தது முன் பாரதப்போரில் மடிந்த ராஜாக்களுடனே செத்துப்போன திரிகர்த்த ராஜனுடைய பிள்ளைகள் துரியோதனனைச் சார்ந்தவர்களாதலாற் பாண்டவர்களால்விடப்பட்டு ஓர் அஸ்வமேதக் குதிரை வருகிறதென்று சமாச்சாரம் கேள்விப்பட்டு மகாமகத்துவராச்சிங்கமாகியபார்த்தனுடன் பகைத்து உயுத்தம்பண்ண நினைத்து மிகுந்த கோபங்களுடன் கறுத்து வில் வேல் வாள் முதலிய ஆயுதங்களைத் தரித்து கிரீட கேயூர கவசமும் பொருந்தி நால்வகைப்படையும் பிரித்து சங்கத்தொனி குறித்து குதிரையை வளைத்தார்கள்.

அந்தச் சங்கதியை அருச்சுனனறிந்து திரிகர்த்த ராசகுமாரர்களைப்பார்த்து அப்பா அரசிளஞ் சிங்கங்களே உங்கள் தகப்பன் கீசகனுடன் க்ஷாத்திரங்கொண்டு துரியோதனனைச் சேர்ந்து அந்தப் பகையை முடித்துக் கொள்ளுவதற்காக விராடபுரத்தைச் சார்ந்த தெற்குத்திசையில்மேய்ந்த பசு நிரைகளை மடக்கினான் அக்கால் நாங்களைவரும் உரு மறைந்து அங்கே அஞ்ஞாதவாசம் பண்ணினோம் அப்போது விராடனுக்காகப் பரிந்து அவனுடைய சேவகத்தைப்புரிந்து

செயங்கொண்டோம் அந்த விராடன் தன் பிள்ளை குட்டிகளுடனே பாரதப்போரில் எங்களுக்குப் படைத்துணையானான் உங்கள் தகப்பன் துரியோதனன் பட்சத்திற் சேர்ந்து போர்புரிந்தான் வந்தகதை யிப்படிக்கிருக்க நாங்களுங்கட்குப் பகையல்ல எங்களை விரோதித்து எதிர்க்கிறீர்கள் பாரதயுத்தத்தில் உங்கள் தந்தை பட்டபாடும் நானாவிதக் கேடுங் கேட்டிருக்கின்றீர்கள். எங்கள் எசமானாகிய தருமராசன் அசேயசத்துருவென்று பெயர்பெற்றவர் சத்தியமும் தருமமும் தயாரசமு முற்றவர் முரசக்கொடி பொறுத்தவர் அப்பேர்ப்பட்ட உத்தமருடைய யாகத்திற்கு விக்கினந் தேடாதீர்கள் ;தீங்குசெய்யக் கருதுவது நன்மையல்ல. நான் எங்கள் தமையனிடத்தில் விடைபெற்று வரும்போது அவரெனக்குப் புத்திசொல்லி யனுப்பிய தென்னவென்றால் பாரதயுத்தத்தில் தேசதேசத்து ராஜர்களுஞ் சேனைகளுஞ் செத்துப்போனார்கள் அவரவர்களுடைய பிள்ளைகள் குழந்தைகளாயிருக்கும் அவர்களும் கண்கலங்கி வருந்தி மெலிந்து நொந்திருப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் பாலியப் புத்திக்கொண்டு மந்திரிமுதலிய பேர்களின் கலைப்பினாற் சண்டைபோட வந்தாலும் அவர்களுடன் எதிர்த்துப்போர் புரியாமல் நல்ல வசனங்களைப் பேசி தெளிவுண்டாகத் தெரியப்படச்சொல்லி பயப்படுத்தாமல்- நயப்படுத்தி. யாகத்திற்கு வரும்படியாய் பண்ணிக்கொண்டு வரவேண்டுமென்று ஆக்ஞாபித் தனுப்பினார் நாங்களோ இதுவரையிலும் ஏதேதோ துன்பமெல்லாம் அநுபவித்தோம் அந்தக்காலத்திலும் எங்கள் தமையன் சொல்லைத்தள்ளி நடந்ததில்லை அதனால் உங்களுடனே நான் அமராடுவதற்கு மனமில்லை சிங்கம் யானைக்கு வணங்குவதுபோல் இணங்கிச் சொல்லுகிறேன் எங்கள் வசனத்தைக்கேட்டு உங்கள் விசனத்தை விட்டுவிடுங்கள் சமரசமாய் அஸ்வமேதயாகத்திற்கு வந்திருந்து குறைவற நிறைவேற்றி வாருங்கள் என்றைக்கிருந்தாலும் இறப்பது நிச்சயம் இதுவரையிலும் இருந்தவர்களு மிறந்தவர்களுமென்ன பலனைக் கண்டார்கள் ஒன்றுமில்லை உலகம் பொய்யாய்விட்டது ஆதலால் ஒருவர்க்கொருவர் ஒப்பிப்போகிறது உத்தமம் இதை நீங்கள் யோசித்துப் பாருங்கள் சண்டைபோட வேண்டுமென்று இஷ்டமிருந்தாற் சகலருங் கூடிவாருங்கள் என்று சவ்வியசாசி பேசினான்.

இச்சொற்கேட்ட திரிகர்த்தன் மைந்தர்கள் மிகுந்த கோபாவேசங்கொண்டு ஓ! ஓ! உயுத்த கோலங்கொண்ட நீ உறவாடிப் போகலாமென்று வந்தாயோ? உபாயமாய்க் காதிலோதிக் கால்வாங்கலாமென்று நினைத்தாயோ! அடா பைத்தியக்காரா! உன்னை லேசாய் விடுகிறதில்லை இன்றைக்கு நீ தப்பிப்பிழைத்துப்போகப் போகிறதில்லை இப்போதே உன் தலையை வாங்குவோம் எங்கள் கணைக்கு உன் பிராணனை இரையாக்குவோம் என்று சொல்லி மகா சவுரிய பராக்கிரமசாலிகளாய் வில்லெடுத்துப் பிடித்து இரண்டு குதையும் வளைத்து விற்குணமெடுத்துத் தொனித்து வெகு பாணங்களைத் தொடுத்து விஜயன் தேரின்பேரிலும் அநுமந்தக்கொடியின்மீதிலும் சுவேதப் பரிகளினிடத்திலும் சாரதி மேனியிலுஞ் சொரிந்தார்கள். அவருள் திரிகர்த்தனுடைய ஜேஷ்டகுமாரனாகிய சூரியவன்மனென்பவன் கூரிய பாணங்களைகோடி கோடி கோடியாய்த் தொடுத்துவிட்டான் அதை மாதவிநாயகன் கண்டு மகிழ்ந்து புன்சிரிப்புகொண்டு அடா அற்பபுத்தி யுடையவர்களே எங்களண்ணனுடைய வார்த்தை கடந்து நடக்கும்படிக்குவைத்தீர்களே இது தானெனக்குத் துயரம்விளைந்ததென்றுகாண்டீபத்தை வளைத்து சிறிது கணைகளைச் சிந்திக்கொத்தினான் அதனாற் சூரியவன்மன்பயந்து அர்ச்சுனனை வியந்து இவன் பழம் புண்ணியமெத்த அநுபோக முற்றவன் மாசறக்கற்றவன்என்று சொல்லிக்கொண்டே ஓடிப்போனான் அவன் தம்பி சூரிய வீரியனென்பவன் சற்றுநேரம் நின்று பாணவருஷம் வருஷித்தான் அதனாற் காண்டீபன் தேரும் அவன் தேகமும் கவிந்து குவிந்து மறைந்துபோய்விட்டான் உடனே விஜையன் அவன் தொட்ட அம்புக்கும்புகளத்தையுந் தும்புந் தூசியுமாய்ப் பறந்தோடவடித்து அவனுகத்திலும் வேககணைகள் விடுத்து மூர்ச்சையாக்கினான் அதுகண்டு அவனுக்கிளைய சூரியகேது வென்பவன் எதிர்த்து அண்டமும் பூமியும் அதிர்த்து விதிர்விதிர்த்துப் போகும்படியாய் பெரிய கணைகளைச் சொரிந்தான் அவைகளையெல்லா

மருச்சுனன்போக்கி தன் பாணங்களைத் தாக்கி அவனிரண்டு தோளையுந் துளைப்பித்தான் அந்த வருத்தத்திற் காற்றமாட்டாமல் அவனும் பின்னிடைந்தான் அவனுக்கிளையவனான சூரியசண்ட விக்கிரமனென்பவன் தேவதாஸ்திரங்களை யனேகமாய்த் தெரிந்தெடுத்து அர்ச்சுனனுடைய உடலுயிர் வெவ்வேருய்ப் பிரிந்து போகும்படிக்குப் பொழிந்தான் அதனுற் பார்த்தனது பச்சை மேனி முழுமையும் பசந்து இரத்ததாரைகள் கசிந்து வழிந்து சோர்ந்தன அப்போதும் அர்ச்சுனன் பச்சாதாபப்பட்டு ஐயோ! இவன் மெத்தவுஞ் சிறுபிள்ளை யுத்தத்திறமுங் கண்டிருக்கமாட்டான் ஆயினும் நாம் லகுவாய் பாணங்களைத் தொடுப்போமென்று தயாரசத்தினு லடித்தான் எதிரி இவன்பேரிலிரக்கம் வைக்காமல் உரக்கச் சாத்தினன் விக்கிரம பராக்கிரம அர்ச்சுனனுக்குக் கோபம்பிறந்து செவ்வரக்கைபோற் கண்கள் செவந்து செவ்விய விஷக்கணைகளைச் சொரிந்து போர்புரிந்தான் அவன் இவன் பாணத்தை அலட்சியஞ்செய்துவடவாமுகாக்கினிலேயும் பதின்மடங் கதிகமாய் சிடசிடப்புடனெரிந்து சிங்கம்போற் கர்ச்சித்து, மிகுந்த குரூரமாகிய விஷக்கினி யம்புகளைக் கும்பாக விடுத்து மார்புருவப் பொடித்தான். அப்பாணங்கள்பட் டுருவியபோது அர்ச்சுனனுடைய மார்பு உதய சூரியன்போலொளிரத்தக்கதாய் உதிரஞ் சொரிவதனுல் தன்னை மறந்து கைபிற்ருங்கிய காண்டீபங் கழன்று சிறிது மூர்ச்சை போனவன்போற் களைத்துச் சாய்ந்தான்.

அப்போது திரிகர்த்தனுடைய சேனைகள் கடலொலிபோ விரைந்து சந்தோஷப்பட்டு நெருங்கி விரைந்து களித்தார்கள் அந்தவேளையில் அவர்களுடைய மந்திரர் சாமந்தர் சேனுதிபர் முதலிய பழைய மனிதர்கள் கண்டியுத்தஞ் செய்வதற்கு வீராவேசங்கொண்டிருக்கிற சூரியசண்ட விக்கிரமனைத் தடுத்து கெக்கலிகொட்டிச் சிரிக்கா நின்ற சேனைகளைக் கோபித்து அதட்டி நிறுத்தி அர்ச்சுனனுடைய பிரதாப வீரதீரத்தை யெடுத்துப் புகழ்ந்து பேசத் தொடங்கினுர்கள் ஓ திரிகர்த்தராஜ சிகாமணி இவர் நமது ராஜவம்சத்திலும் வீரதருமத்திலுஞ் சிறந்த சிங்கம்போன்றவர் இந்திரதனுசையும் வெல்லவல்ல விஜய காண்டீபமுடையவர் காலகேய நிவாத கவசரை யழித்துத் தேவர்களுக்குப் பயமொழித்துத் தேவேந்திரனுக்கு இந்திரலோக சுதந்தரத்தை அளித்தவர் காண்டாவன தகனங்கண்டவர் சகலதேசத்தரசர்களையும் பாரதப்போரிற் சாடித்துவிட்டவர் திக்கெட்டும் பேர்பெற்றவர் தீரவீர சிகாமணியானவர் இவர் தொடுக்கும் ஓரம்புக்கும் இங்கிருக்கிறகும்புக்குஞ்சரி நீர் சிறுவனென்று தயவுசெய் திருக்கின்ருர்போலுமிருக்கிறது நீரவருக்குத் துரும்பு அவரிரும்பு நீரவருக்குப் புல் அவர் மலைக்கல் நீரவருக்குப் பூனை அவர் யானை இப்பேர்ப்பட்ட இயாளிக்குமுன்னே நீர் பங்கயாளியாயெதிர்த்துச் சண்டை போடலாமா? நீர் யெவ்வளவு மனிதன்? அவர் தமையன் உரைத்த சத்தியத்தை அனுசரித்துப் பார்க்கின்ருர் போலுந் தோன்றுகிறது வேண்டுமென்று போர்விளைத்தவரல்லர் அப்படிக்கானல் இன்னேரம் நீங்களியாவரு மிறந்திருப்பீர்கள் எப்போதுந் தன்னிலுமுயர்ந்த பேர்களைத் தழுவி பிழைக்கவேண்டும் மேல்விழுந்து போராடக்கூடாது இனியேனும் உறவுபண்ணிக்கொண்டு ஒத்துப்போகிறது உத்தமம் யாவரும் வாருங்கள் என்று மற்றச் சிறுபிள்ளைகளையுந் தேற்றி தந்தையைக் குறித்து அவர்களுக்கிருக்குங் கோபத்தை யாற்றினர் உடனே யப்பிள்ளைகள் யாவருந் தாமரை மலரானது சூரியனை விரும்புமாறுபோலும் நெரிஞ்சிற் புட்பஞ் சூரியனை நாடித் திரும்புவதுபோலும் சிற்சில காணிக்கையுடன் வந்து மூர்ச்சைதெளிந்த அர்ச்சுனனைப் பணிந்து ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு ஐயா விஜயமகாராசனே நாங்கள் தேவரீருடனெதிர்த்துப் போர்புரியும்படியான திறமுடையவர்களா? ஸ்திரமுடையவர்களா? தங்களுக்கு நாங்களெவ்வளவு மனிதர் ஆனுல் எங்களத்தன் செத்த குற்றம் மெத்த உபத்திரவம் பண்ணிக்கொண் டிருந்தது ஆத்திரக்காரருக்கும் புத்திமட்டு என்பது போல் வந்துயுத்தம்பண்ணினேம் தாங்கள் க்ஷமிக்கவேண்டும் என்றுசாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்தார்கள் அமைச்சர் முதலாயினேரும் வீழ்ந்து வணங்கினர்கள். அர்ச்சுனன் அந்த நால்வரையும் அமைச்சர் முதலிய பேர்களையும் கரத்தினலெடுத்து உரத்தோடணைத்து சில விசித்திர வார்த்தைகளை

ப்பேசிக் கொண்டிருந்து அப்பால் அஸ்வமேத யாகத்திற்கு நீங்களியாவரும் இஷ்டஜன பந்துக்களுடன் வந்திருந்து சம்பிரமங் கொண்டாட வேண்டுமென்று வரம்போல் உரமானவார்த்தை வாங்கிக்கொண்டு பிரயாணப்படுவித்தானன் அப்போது அவர்கள் தடுத்த குதிரையை விடுத்து அதற்குப் பூசைமுதலியவும் புட்பாலங்கிர்த பூஷணங்களும் பொருந்தி சற்று தூரம்வந்து வழிவிடுத்துச் சந்தோஷ சித்தராய்ப்போனார்கள் அவ்வஸ்வம் அவ்வட திசைக்கண் எந்தெந்தத் தேசங்களிற் செல்கின்றதோ அங்கனமெல்லாம் விசயன் பின்தொடர்ந்து அந்தந்த வரசர்களைக் கைவசப்படுத்திக் கொண்டு வருகின்றான்.

---

## மகதராதிதேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே இப்பால் அஸ்வமானது சுபகரத்துடன் மகததேசத்தை நாடிவந்தது அங்கே பகதத்தன் பிள்ளை வயிரதத்தன் பார்த்து முகம்வேர்த்து குதிரையைப்பிடித்துப் பந்தித்தான் குதிரையுடன் கூடவந்த படைகளும் மன்னவான்களும் சாரணர்களும் சேனாதிபதிகளும் சற்றே சிந்தித்து முந்திப் போர் மூட்டினார்கள் அவனும் ரதாரூடனாய் ரதகஜ துரகபதாதிப் படைகளைக் கூட்டிக்கொண்டு வில்லினையேந்தி யுத்தசன்னத்தனாய்வந்து அவர்கள் யாவரையும் வெற்றிகொள்ளுகிறான் அப்போது பார்த்தன் கண்டு அவ்வயிரதத்தனுக்குத் தழைக்கச்சொல்லிப் பார்த்து எதிலும் வழிப்பட்டு வராமையால் உடனே தனது காண்டீபத்தைப் பிடித்துப் பாணங்களை பறக்கவிடுத்தான் அதனாலவ் வச்சிரதத்தனோடியொதுங்கி நீலகிரிக்குச் சமானமாகிய நீண்ட துதிக்கைபூண்ட யானையின்மீதேறி வந்து சக்ராயுதங்களையும் உக்ரவேல்களையும் உந்தினான் அப்போது அர்ச்சுனன் கண்டு புன்னகை விளைத்து காண்டீப நாணேற்றிக் குணத்தொனி காட்டினான் அவ்வோசையால் அஷ்டகஜங்களும் அஷ்டமாநாகங்களும் அஷ்டகுலாசலங்களும் செவிடுபட்டுக் கலங்கி அலமலங்கித் துலங்கி நலங்கி அசைந்காட்டவும் விழுந்தோடவு மாயின ஆகாசவீதியிலிருக்குந் தேவர்களெல்லாம் பயந்து ஒதுங்கினார்கள் இவ்வாறாக யுத்தம் பண்ணும்போது வயிரதத்தன் மனங் கலங்காமல் பழிவிலங்காமல் குரூரமான அனேக பாணங்களைச் சொரிந்து அர்ச்சுனனைப்பகைத்தான் அவனவைகளைப் பொடியாகப் பொடித்து அந்த வயிரதத்தனேறிவந்த மதயானையை மாட்டி வீழ்த்தி அவன் மார்பிலுஞ் சிலபாணம் போக்கினான் வயிரதத்தன் வேறு யானையின்மேலேறி வீறி வருகிறான் அந்தயானையின் மூச்சும் மதவெள்ள நீச்சும் துதிக்கைவீச்சும்காதுகளசைத்திசைக்கும் பெருங்காற்றிலேச்சும் நேத்தியாய்நெறித்தகொம்பும் காலடியிலெழுகிற தும்பும், இருப்புலக்கைகொண்டு சுழற்றுகிற வம்பும், சேனைக்கடலைக்கலக்குகிறதெம்பும் யாவராலுஞ் சொல்லி முடியா, அந்த யானையின் மேற்கொண்ட வச்சிரதத்தன் அஸ்திரங்களைத் துஸ்தரமாய் அர்ச்சுனன்பேரிற் கொட்டுகின்றான். அவைகளை அர்ச்சுனன் பொடியாக்கி ஒரு தோமராயுதத்தை யெறிந்தான் அதைக்கண்ட வச்சிரதத்தன் நான்கு தோமரத்தைநொடிக்குள்ளே உந்தினன் அத்தோமரங்களை அர்ச்சுனன் தீயெழப் பொடித்து வச்சிரக்கணை யெடுத்துப் போக்கி வயிரதத்தனை மூர்ச்சையாக்கினான்.

அப்போதுயானையின்மேலிருந்து அவமாய் வீழ்ந்த வச்சிரதத்தன் மீட்டுங் களைதெளிந்தெழுந்து இனிநான் உன்னை விடுகிறதில்லையென்று தேவர்கள் பயப்படும்படியாய் அக்கினிக்கணைகளைத்திக்கென்றெரியத்தாக்கி விஜயனை நோக்கி என்தந்தை பகதத்தமகாராஜன் கிழவரானபடியினாலே நீ சுளுவிற் கொன்று போட்டாய் நானுங் கிழவனல்ல என்னை லேசாகமதிக்காதே துரியோதனமகாராஜனுக்குப் படைத்துணையாகி எங்களையாவந்ததை நான் வந்திருப்பேனாகில் நீஇவ்வளவு தூரம்வரும்படியிருக்குமோ நீ எதிறிப்பறக்கும்படி வீரம் பெருக்குமோ என்னமோ உங்களுக்குநற்காலம் ஆகிலுமென்னிடத்திலெப்போது வந்து சிக்கிக்கொண்டாயோ! அப்போதே உனக்குப் பொல்லாத காலம் இப்போது நீ விடுகின்ற பாணங்களெல்லாம் எனக்கு முன்னே வராது என்னையுங் கொல்லமாட்டாது உன்னைத்தானே திரும்

பிக் கொல்லும் என்னோடு சண்டைவிளைத்து நீ வெற்றிபெறமாட்டாய் என் விற்றிறமைக் குத் தப்பிப் பிழைக்கப்பட்ட வீரா ளொரு வருமில்லை நீ யென்ன செய்யப் போகிறாய் ஓடிப்போகாமல் நில்லு நில்லு என்று சொல்லி அஸ்திரங்களைத் தொடுத்தான். இரண்டு சேனைகளுந் திரண்டு சண்டைக்கு அடல் புரண்டு நிற்கின்றார்கள் அப்போது வீராளிருவரும் ஆகாசம் பூமி தெரியாமல் அம்புகள் சொரிந்து, மேககர்ச்சிதம்போற் பவுரிஷங்கூறி தேவர்கள் கொண்டாடும் படிக்கு வெற்றி தோர்வையற்று இரண்டு நாள் யுத்தம் பண்ணினார்கள் அப்படி பண் ணுகையிற் சத்தமேகங்களுந் தியங்கி சமுத் திரமுங் கலங்கி, பேரிடி சோ்தியெழும்பி பூமி சுழன்றுமயங்கி துருவனும்நடுங்கி சூரி யனு மொடுங்கிச் சோகமாகும்படியாயது. இவ்வாறு அண்டகடாக நடுங்கப் போர்புரி யும்போது அர்ச்சுனனுக்கு மிகுந்த கோபம் வந்து எதிரியினுடைய பாணங்களையும் யானையையும் வில்லையும் வெட்டி யெறிந்து கவசத்தையு மொழித்து, அம்புறாத் தூணி யையுங் கிழித்து அவன் மார்பையுந் துளை த்து வாட்டமுண்டாக்கினான். அர்ச்சுனனு லடிபட்ட வச்சிரதத்தன் பிராணமூர்ச்சை யாய்ப் பூமியில் விழுந்து திரும்பித் தெளி ந்து எழுந்து வருகின்றான். அப்படி வரு கின்ற வயிரதத்தனைக் காண்டீபனழைத்து, அப்பா! யுத்தத்தில் உனக்கு நிகராக ஒருவ ரையுஞ் சொல்லப்படாது. எங்கள் தமயன் தேசராசர்களுடனே சண்டைபண்ணி ஒரு வரையுங் கொல்லாமல் நன்மைபாராட்டிச்சித் திராபர்வத்திற்குள்ளே வரவேண்டுமென்று சொல்லியனுப்பினார். அவருடைய உத்தர வைத் தள்ளப்படாதென்று விரதமாகக் கொண்டு உன்னை உயிருடன்விட்டேன் ஏன் வீணாய்ப் போராடிக் காணாப் பிணமாய் மாண்டுபோகும்வழி பார்க்கிறாய் இனியேனு நண்பாயுறவாடி நாமெல்லோருங்கூடியாகத் திற் கதிகாரியாகிய தருமராசனை வணங்கிச் சுகமாய் வாழலாமென்று சொல்ல அப்ப டியே அவன் சம்மதித்துக் காணிக்கைகள் வைத்து அஸ்வபூசைசெய்து விஜயனை பல் காற் கும்பிட்டுக் கொண்டான். அவனுக்கு அர்ச்சுனன் ஆசீர்வதித்துச் செலவு பெற் றுக்கொண்டு அம்மகத தேயத்திற் கருகி லுள்ள பல தேசங்களிலுஞ் சென்று செயங் கொண்டு அவர்கள் யாவரையும் யாகத்திற்கு வரும்படி திட்டஞ்செய்து அப்பாற் செல லப் புறப்பட்டான்.

---

### சிந்துவாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாரா சனே? இப்பாற் குதிரையானது சிற்சில காடும் பற்பல நாடுங் கடந்து தெற்பமிரு டைய சிந்து தேசத்திற்குச் சென்றது. அங் கே சமிந்தவனுடைய பேரனாகிய சுப்பிரதீப னும் பின்னுமுள்ள பல ராசகுமாரர்களுஞ் சேர்ந்து அர்ச்சுனனைச் சத்துருவாகப் பகை த்து தந்தையைச் சபதம்பண்ணிக் கொன்ற விந்தையை நினைந்து வெதும்பித் துடித்து குதிரையைப் பிடித்துக் கட்டுவோம் குறை தீற்ற சண்டை பண்ணுவோம் என்று நால் வகைச் சேனைகளுடன் பஞ்சவாத்தியங்கள் முழங்கப் படையெடுத்துவந்தார்கள். அதை அருச்சுனனறிந்து எதிர்த்து போர் புரிந்து தொகையற்ற பாணங்களைத் தூவி வேலாயுத மும், சூலாயுதமும், குந்தாயுதமும், சக்கிரா யுதமும்முன்பின்பாராமலோயாது செலுத்தி ஒரு முகூர்த்தம் வரையிலும் பொருத்தமா யுத்தம் புரிந்தான் அதனால் ராசகுமாரர்கட் கெல்லாம் விஸ்தாரங் காயங்கள்பட்டு அவர் களுடைய நாற்படைகளிலுஞ் சிலபேர் நொந்து நைந்துவாடிப் பறந்தும் சிலரிறந் தும் போனார்கள் அதுகண்ட சுப்பிரதீபன் கிரீடியின்பேரிற் பதுமமுகாஸ்திரம் பாச்சி னான் அதனாற் பற்குனன் இரதத்தின்பேரிற் சாய்ந்து வில்லும் பாணமும் ஓய்ந்து போ யின இந்த அதிசயத்தை ஆகாயவீதியிலுள் ள தேவரிஷிகளும் அமரர்களுங்கண்டு அர்ச் சுனனுக்கு மிப்பேர்ப்பட்ட அபசெயம் வர லாமாவென்று மந்திரங்களினாலே அவனு க்கு வேண்டிய சகாயம்பண்ணி வாழ்த்தினர் உடனே யவன் மூர்ச்சை தெளிந்தெழுந்து மிகுந்த கண்கள் செவந்து எண்களெழுந்து மிகுந்த வெகுளி மேற்கொண்டு வில்லை வளைத்து நாணேறிட்டு நூறுபாணங்களை நொடிக்குள் விடுத்து பாம்பின் படத்தின்பேரில் இடி விழுந்தாற்போல் சிந்துதேசச் சேனைகளை யும் இராசகுமாரர்களையுங்கொன்று குவித்து போர்புரிந்த இடமெல்லாம் புழுதியும் திண

ச்சேறும் உதிரவாறுமாகக் காட்டி, மெத்த
வருத்தப்படுத்தினான். அப்போது வெற்றி
மிகுந்த குதிரைவீராள் யானைவீராள் இராச
குமாராள் இராசபந்துக்கள் யாவரும் மிகு
ந்த துக்கமடைந்து புறங்கொடுத்தோடினார்
கள். இந்தப் பிரகாரம் வாடியபேரும், ஓடிய
பேரும், வீடியபேரும் பல்லைக் கடித்துப்
பாதவித்தபேரும், புல்லைக் கடித்துப் புலம்
பியபேரும், வில்லை விடுத்து வெறுங்கையாய்
நின்றபேரும், அல்லல் முடியாதென்று
அபயம் புகுந்தபேரும், இறந்துபோன
பிணமலைகளிற் பதுங்கியபேரும், படைமுறி
ந்து ஒதுங்கிய பேருமாக இருக்கக்கண்ட
அர்ச்சுனன் மன்னித்து சற்றே விடாயாற்
றிக் கொண்டிருந்தான்.

அப்போது மீட்டும் ஆயிரம் ராஜகுமா
ராள் மாயிருஞாலமும் மயங்கும்படிக்குவந்து
பெரிய போர்மூட்டினார்கள். பற்குனன் விற்
குணங்காட்டி, கற்கவடுருவக்கணைகள் செலு
த்தி வந்தபேர்களையும் அவர்களேறி யூருந்
தேர்களையும் வில்லையும் பாணத்தையும் மே
னியையும் வருத்தினான். அதனாலவர்கள்
பிராண்ஹானியும் பேமானியுமாய்க் குறைவு
பட்டு புறமுதுகிட்டு, மறுபடியும் போரிட்டு
வீறிட்டு வந்தார்கள். அதுகண்ட அனுமக்
கொடியோன் நகைத்து, மீட்டும் பகைத்துப்
பாணந் தொடுக்காமல் தகைத்து மிகுந்த
பட்சமுடையவனாய் அவர்களை யழைத்து
அப்பா இராசச் செல்வர்களே நான் அஸ்
தினாபுரம் விட்டு அஸ்வத்தின் பின்னே புற
ப்படும்போது உங்கள் பெரிய மாமனாகிய
தருமராசன் சொன்னதாவது, முன்னம் பா
ரதயுத்தத்தில் வெகுபேர் அடிபட்டுப் போனா
ர்கள் அவர்கள் குலங்கள் பழுதுபடாமல்
ஆங்காங்கும் ஆலம் விழுதைப்போற் சில
பிள்ளைகள் ஒன்று மரையுமாக உச்சீவித்திரு
க்கின்றன. அவர்கள் விளக்கில் வீழ்ந்திறக்
கிற வீட்டிற் பூச்சிபோல் வந்து விழுந்து
உன்னோடு போராடுவார்கள் அவர்களுடன்
பகைத்துப்போர்புரியாமற் பிரிய வசனங்களி
னால் தெரியப்படுத்தி நம்மில் ஒருவராகச்
சேர்த்துக் கொள்ளுக. அவ்வழிக்கும் வரா
மற் பழிக்குடன்படுவாராகில் பிராணச்சேதம்
வாராமற் போராடி அக்குமாரர்களைக் காத்
துச் சமாதானத்தின் பேரிற் குதிரையை
மீட்டுக்கொண்டு வருக வரும்போது அவர்
கள் யாவரும் நமது யாகத்திற்கு வரும்படி
யாகச் சொல்லிவருக, என்று உத்தரவு செய்
தனுப்பினார் அவர் வாக்கியம் எங்களுக்குத்
தேவதாயோக்கியம் ஆகையால் உங்களுக்
கெல்லாம் இது நல்லகாலம் நீங்களுஞ்
சண்டைசெய்ய நாங்களும் உங்களிடத்தில்
அடிபட்டு நைய, சிலபேர்கள் வைய, வெகு
பேருய்ய, விளையாட்டுச் சண்டையாய் நிஷ்
பிரயோசனத்தை யடையலாயிற்று ஆயினும்
பெரிதல்ல நீங்களெல்லாம் வேறல்ல கால
கதியாற் பகைக்கும்படி நேரிட்டது போகட்
டும் இப்போது என்ன. சொல்லுகிறீர்கள்.
நாளை வரப்போகிற சித்திராபர்வத்தில் நட
த்துகின்ற அஸ்வமேதயாகத்திற்குத் தாங்
கள் தங்களிஷ்டஜன குடும்பசமேதராய் வந்
திருந்து நடப்பித்து வரவேண்டுமென்று
வசனித்தான்.

அச்சமயத்திற் சயிந்தவராச பத்தினி
யாகிய துர்ச்சளையானவள் தனது பௌத்
திரன் முதலாயினோர் அஸ்வமேதக் குதிரை
யின் பின்வந்த அர்ச்சுனனோடு சண்டையிட்
டிருப்பதை யறிந்து ஓடிவந்து, அர்ச்சுன
னைக்கண்டு அண்ணா! என் கழுத்து இப்படி
யாக யிருக்கக்கண்டதே தெய்வமென்றுகதறி
யழுது காலமேற் பணிந்தாள். உடனே விஜ
யன் அதறிப் பதறி வாரியெடுத்து முகத்
தோடு முகஞ் சேர்த்து அழுது, அம்மா
நமது குலம்பழுதுபட்சு போச்சுது நீயேன்
வெளிப் புறப்பட்டா யென்று கேட்டான்.
அண்ணா இன்னேரம் உங்களுடனெதிர்த்
துச் சண்டையிட்டவன் உனக்கும் எனக்கும்
பேரன் இவனை நீர் காப்பாற்றவேண்டு
மென்று கேட்க விரும்பிவந்தேனென்றாள்
அம்மா! இந்தப்பிள்ளையின் தந்தையும் உன
க்குப் பிள்ளையுமாகிய எனது மருமகனெங்கே
யென்றான். அதற்கவள் அண்ணா என்புருட
னைச் சதுர்த்தடு யுத்தத்திற் கொன்று அவர்
தலையைச் சுமந்த பஞ்சகத்தினின்று தர்ப்ப
ணம் விடுகின்ற எங்கள் மாமன் கரத்தில்
விழவென்று நீர் சரங்கொண்டு போட்ட
போது அச்சரமும் என்புருடன் சிரமும்
என்மாமன் கரத்தில் வீழ்ந்து, அவருடைய
சரீரமு மச்சிரத்தோடு நதிதீரத்தில் அழுந்
தின அப்போது உமது மருமகன் அந்தச்
சேதிகேட்டு அந்நாள்முதல் திகிலடைந்து
பாட்டனையுந் தகப்பனையும் பறிகொடுத்தோ

மேயென்று அழுது, உமது பேரைச்சொல்லுந்தோறுங் காதிற்கேட்க பயங்கொண்டிருந்தான் நீங்கள் அஸ்வமேதயாகம்பண்ணப் போகிறதாய்ப் பரிவலம்போகிறபோது அர்ச்சுனனும் கூடவருகிறுனென்று சிலர்பேசிக்கொண்டிருந்தார்கள் அது முதல் நாளுக்கு நாள் அவனுக்குத் திகில் மேலிட்டுவந்தது நீங்கள் புறப்பட்டீர்களென்றுசேதிகேட்டான் உடனே பிராணனைவிட்டான் இந்தக்கலக்கங்களெல்லாம் பார்க்கவுங் கேழ்க்கவும்என்னை ஆளாக்கிவைத்து பாழான தெய்வம் என்பாக்கிய மிப்படிக்காச்சுது என்னன்பனுக்கு அக்கதிவாய்ச்சுது நான்பிறந்தகுல மிறந்துபோச்சுது பேசும்போதெல்லாம் பெருமூச்சாசுது அண்ணு! தப்பியிருப்பவள் இச்சயந்தவச் சுப்பிரதீபன் இவன் உமதடைக்கலம் என்றுபேரன் கையைப்பிடித்து விஜயகுபேரன் கையிற் கொடுத்தாள்.

அப்போது அர்ச்சுனன் முகம்வாடி முத்து முத்தாய்க் கண்ணீரோடி முன்னுடி நிற்கின்ற தங்கையைப் பார்த்து அம்மணி! அண்ணன் துரியோதனன் எடாத எடுப்பாகிய அடாத காரியங்களெண்ணிப் படாத பாடும்பட்டுப் போயினுன் அவனிமித்தத்திலுடன்பட்டுவந்த பலதேசத்துராசர்களேயும் வெகு சேனைகளேயும் நேசமித்திரர்களேயும் ராசபுத்திரர்களேயும் சத்துருவாகப் பாவித்துக்கோபித்துவேடனைப்போல் வேலைமுடித்து வெகுபேர் இராஜஸ்திரீகளை விதந்துவாக்கி விடடோம் என்கண்ணுல் உன்னையும் இந்தக்கோலத்துடன் பார்க்கும் பாவியாயிருந்தேன் அம்மா? ஊழியன் செயலால்நேரிடுங் காரியங்கட்கு யார் என்ன செய்யலாம்! என்று கிலேசித்து உபகாரஞ் சொல்லி விசுவாசித்துஅவளது மாருததுக்கத்தைமாற்றி ஆருத அக்கினியை அவித்து சிலநேரம் இருவரும் நிரவிய வார்த்தைகளாய்ப் பேசி பெரனுக்கு வேண்டிய வாள்வேல் முதலிய திவ்வியவாயுதங்களும் அஸ்திரங்களும் மந்திரங்களுங் கொடுத்து முஷ்டி நிலைமூர்த்தி நிலையாதிகளைக்காட்டி அவன் பேணிக்கொண்டு வைத்துப் பணிந்த காணிக்கையைக் கைக்கொண்டு ஆணிப்பொன் ஆரங்களும் ஆனைசேனை பரிவாரங்களும் பேரனுக்களித்து தங்கையின்முகந் தனது தோள்மேற்படிய அணைத்து சமஸ்த சனங்களுஞ் சந்தோஷங் கொண்டாடச் செய்து அஸ்வமேதயாகத்திற்கு எல்லோரும் வரவேண்டுமென்று அன்பாகச் சொல்லிப்போட்டு விடைபெற்று அஸ்வமும் பிராமணர்களும் முந்தி நடக்கப் பிந்திய சேனைகளுடன் ரத கஜ மேளவாத்திய முழங்க நடந்து அநேகக் காடுகள் மேடுகளெல்லாங் கடந்து வங்க தேசமட்டும்போய் அங்கிருந்து தெட்சணந் திரும்பி தட்சணங் கலிங்கம் குலிங்கம் புலிங்கம்தெலுங்கம் ஒட்டியம் கன்னடம் மராடம் குகுதம் இந்தத் தேசங்களெல்லாஞ் சென்று அவ்விடத்திலுண்டாகிய அரசகுமாரர்களைக் கண்டு பக்குவபதமாய்த் திரும்பி சூரியர் சந்திரர்முதலான கிரகங்களும் நட்சத்திரங்களும் ஆகாயத்திற் செல்லுவதிற் கிடமில்லாமலுயர்ந்து வளர்ந்து பரந்திருக்கின்ற மலைநாடெல்லாந் தொடர்ந்து விந்தமுங் கடந்துவிந்தியதேசம்புகுந்து வருகின்றுன்.

---

### விந்தியமாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே? அப்போது நீலமகாராசனுடைய மூத்தகுமாரராகிய பிரவீர நீலன் நீலத்துவஜன் என்னு மிவரிருவரும் பாண்டவாளுடைய வீரப்பிரதாபம் யெழுதி குதிரை முகத்திற் கட்டியிருக்கிற வீரப்பட்டத்தைப்பார்த்து, அக்குதிரையை அப்பாற்போகவொட்டாமற் காவலிட்டார்கள் அதைச் சுவேத வாகனனறிந்து அவ்விராஜ குமாரர்களைப் பார்த்து ஓ அரசிளங்காளையரே? திக்குவிஜயத்திலும் பாரதப்போரிலும்உங்கள் தந்தை பட்டபாடு நீங்கள் கேட்டிருப்பீரல்லவா! இப்போது எல்லாம் நிறைவேறிப்போய் விட்டது நீங்களிந்தக் குதிரையைத் தடுத்து என்னை மினக்கிடச்செய்வதனுல் உங்கட்கு லாபமென்னை! வீணுய்ப் பகையை விளைத்துக்கொள்ளாதீர் என்று சொல்லியும் அதற்கவர்கள் சம்மதியாதவர்களாகி, நாங்கள் சண்டைக்குத் தயாராயிருக்கிறும் மென்றும் நாங்கள் தடுத்த குதிரையை சமர்த்துண்டானுல் விடுவித்துக்கொண்டு போகலாமென்றும் பேசினுர்கள் அச்சொல்லைக்கேட்ட அர்ச்சுனன் கோபங்கொண்டு நீங்கள்யுத்தத்தில் மெத்தவல்லவர்களோ எங்கே பார்ப்

போம் வில்லைவளையின்கள் என்றுசொல்லித்தனது காண்டீபமெடுத்தான் எடுத்த காண்டீபத்தில் நாரிதொடுக்குமுன் அவர்கள் கோடி யஸ்திரங்களை விடுத்தார்கள் அதை இரணியனைக் கொல்லுவதற்குத் தூணிலுதித்தருளிய நரசிங்கத்திற் கொப்பாகிய துரைசிங்க அர்ச்சுனன் கண்டுதனது விஜய காண்டீபத்தை வளைத்து நாணேற்றி வேண்டியபாணங்களை விடுத்து அவர்களேவிய அம்புகளைத் தும்புகளாக வடித்துப் பொடியாக்கி ஒரு கணையால் அவர்கள் வில்லை வெட்டி மற்றொரு பாணத்தால் அவர்கள் தேரையழித்து சிலவடிக்கணைகளை அவர்கள் மார்பிற்பட்டு முதுகிலுருகி யோடும்படியாய்த் தாக்கிமாட்டினான் அப்போதவர்கள் போர்முகத்தைவிட்டு நேர்முகமா யோடாமல் ஊர்முகமாயோடிப் பிழைத்தார்கள் அதை விஜயன்கண்டு நகைத்து விருதாவிலேன் பகைத்துவந்தார்களென்று கனைத்து குதிரையை மறித்துக்கொண்ட கொண்டைக்காரரை கூப்பிடுங்களென்று உரத்துக் கூவினான் அப்போது புரமிட்டோடிய ராசகுமாரர்கள் தந்தையாகிய நீலனையடுத்துசண்டை தொடுத்து இளைத்திவந்த சங்கதிகளைச் சொன்னார்கள். அதை யவனுணர்ந்து நீங்கள் சிறுவராகையால் திரும்பியோடி வந்தீர்கள் என் பருவகாலத்தில் நானேயானால் வென்று வருவேன் சூரியன் சந்திரன் அக்கினி என்னு மிம்மூன்று சுடரையுங் கண்களாகப்படைத்த பரமசிவனும் எனக்குநேராக வருவதற்கு நெஞ்சு துணிவாரா பாரத யுத்தத்தில் வீரமில்லாமலிளைத்த வீணரையெல்லாம் வென்றோமென்று பேர்வைத்துக் கொண்டு என்னையும் அசக்கிப் பார்க்கலாமென்றெண்ணிவந்தான் போலும் நல்லது நான்போய் என் வீரியத்தைக்காட்டி, வெற்றிக்கொடி நாட்டி வருகிறேன் பாருங்கள் என்று சபதம்பேசிச் சதுர்விதப்படையுடன் இரதமேறிச் சென்று, இந்திர குமாரனை வளைத்து மந்திரவாளிகள் விடுத்தான் அப்போது அருச்சுனன்சேனைகளும் நீலன்படைகளும் போர்கொடுத்தார்கள்.

இப்பால் விஜயனானவன் வெகுண்டு கையிற் காண்டீபத்தினைக் கொண்டு ஆலால விடத்திற் கொப்பாகிய கோலாகலக் கணைகளைக் கொட்டினான். நீலனும் விஷாமிர்த விமலன் பாணத்தை யேவிக் கிட்டினான். இவ்விருவரும் விஷ்ணுவும் ராட்சசரும் வினைப்போர் புரிவதுபோல் விறற்போர் புரிந்து நிற்கவே, ஆகாயவீதி நிறையத் தேவர்கள் வந்துபுகுந்து வாகாய சண்டையைக்கண்டு நின்றார்கள் அந்த வேளையிற் பார்த்தன் நீலன் கைவில்லை முறித்துநெஞ்சிற் கணைகளைக் குறித்தான் நீலன் வேறு வில்லெடுத்து வளைந்து விபரீதபாணங்களை உந்தினான் அவைகளை அருச்சுனனழித்து, நீலனேறிவந்த தேர் குதிரை சாரதிகளைச் சிந்தச்செய்து பின்னுமனேகமான மின்னற் கணைகளைவிட்டு வில் கவசம் துவசம் கிரீடம் இவை முதலிய வெல்லாம் பொடி பொடியாக்கிப் போக்கினான் நீலன் நெறித்து வெறித்து வாளாயுதத்தை உருவிக்கொண்டு வியசனை வெட்டக் கிட்டவந்தான் அவன் எட்டவரும்போதே வியசன் ஓர் மொட்டக் கணைவிட்டு அவ்வாளைத் துட்டத்தனையாயொடித்துப்போட்டான் மறுபடியும் நீலன் பாணங்களை வருஷம்போற் பொழிந்தான் அதனால் விசயன் கலங்கி மெய்மறந்து உடனே சிறந்து உரகக்கணை யெறிந்து நீலனதகலத்தை நிறையக் கலக்கினான் அப்போது நீலன் மூர்ச்சையாகிய பேச்சில்லாதொழிந்து நீச்சு நிலையில்லாத துக்க சமுத்திரத்தி லாழ்ந்து ஐயோ இதுவரையிலும் நான் வாழ்ந்த வாழ்வு யிம்மட்டோவென்று தன் வீட்டுக்குள்ளே சென்று தனக்கு மருமகனாய் வாய்ந்திருக்கின்ற அக்கினிதேவனுக்குக் காயத்தைக்காட்டி இந்த வேளை நீர் வந்த விசயனை மாட்டி யடித்துத் துறத்தி விடுமென்று சொல்லினான் அதுகேட்ட அக்கினிபகவான் மாமனை நோக்கி ஐயா மகாராசனே! பரவாசுதேவன் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியாய் அவதரித்துப் பாண்டவசகாயனென்று பேர்பெற்று அவர்களுக்கு மைத்துனராகி யிருப்பதுமல்லாமல் கயிலாசபதியின் கருணையைச் சம்பூரணமாய்ப் பெற்றிருக்கின்றவன் இவன் மேலும் பதினான்கு லோகமும் புகழ்பெற்றவன் எனக்குக் காண்டாவனத்தை யிரையாக்கிக் கொடுத்துக் காவலிருந்து மருந்து முதலிய வஸ்துக்களைவிருந்துபோலருந்தச் செய்த விஜயன் திருந்திய தேவர்கட்கு இடையூறகற்றிய செல்வன்பதினெட்டுநாள யுத்தமும் பொருந்தப்புரிந்தருளிய போர்வீரன் இவனுடன் பகைத்து எதி

ர்ப்பவர்கள் யாரெனில் தலைவிதியோலை கிழிந்தவரென்று தப்பாமல் நம்பலாம் மூக்காலுஞ் சொல்லுவேன் அப்பேர்ப்பட்டவனை ஏகதேசத்திலெதிர்த்து அமராடுகிறேனென்பதும் நீர்போய் அடித்து ஓட்டிவிடுமென்பதும் அறிவில்லாத்தாழ்ச்சி ஆகையால் அவனுடன் கலந்து உறவாடிவிட்டால் நமக்கு என்றென்றைக்குங் கீர்த்தி புகழு மகிழுமுண்டாகும் நமக்கும் அபாயகில்லை என்று அக்கினிதேவன் பக்குவஞ்சொல்ல அம்மொழிக்கேட்ட நீலன் உமக்கிஷ்டமிருந்தால் எனக்கும் அவருக்கும் உறவுண்டாக்கி வையுமென்றுகேட்டான்.

அப்போதே அக்கினிபகவான் அரனைப்போல் ரூபமெடுத்து அணிமணிப்பணியாவுந்தரித்து நீலனையும் அழைத்துக்கொண்டு அலங்காரமுள்ள தேரேறி அருச்சுனனுக்கெதிரிலே வந்து, ஐயா! முன்னர் நீங்கள் ராஜசூய யாகம் பண்ணுகிறதற்காகத் திக்குவிசயஞ்செய்து திரவியஞ் சேகரித்தபோது உமது தம்பி சகாதேவராஜனும் உங்கள்குமாரன் கடோற்கஜனும் பல சேனை சைனியங்களோடு இந்த நீலராஜனிடத்தில் வந்துநெருங்கினார்கள் அப்போதும் இப்படி தான் போர்விளைந்து போயிற்று அந்தச் சேதிகேட்டு நானோடிவந்து இருவருக்குஞ் சமாதானம் பண்ணிவைத்து வேண்டிய நீலமணிக்குவையல்கள் கொடுப்பித் தனுப்பினேன் இன்றைக்கும் அவ்வாறே இசையச் செய்ய வந்தேன் ஓ தாளாண்மையுடைய தனஞ்சய மகாராஜனே அதுகாலம் வேறு இதுகாலம் வேறு ஆதலால் இப்போது நீர் தயவுபண்ணவேண்டுமென்று தீக்கடவுள் சாற்றினான் அதைக்கேட்ட அர்ச்சுனன் நீர் ஆரென்று வினவ, நான் அக்கினி பகவானென்று தன்னுடைய சொரூபத்தை யெடுத்து நின்றான் அவனை விசயன் பார்த்து ஐயா தீக்கடவுளே இந்தப் பொல்லாத நீலனிடத்தில் நீரிருக்க வேண்டியகாரணமும்இவனுக்கபக நீர்வந்து பேசவேண்டிய அவகரமும் என்னவென்று கேட்க அதற்கு அக்கினி சொல்லுகிறான் ஐயா இந்திரகுமாரனே இந்த நீலன்என்னைக்குறித்து தவமிழைத்தான் நான் பிரசன்னமானேன் தன் பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொண்டு தனக்கு மருமகனா யிருக்கவும் தன் கோட்டைக்குக் காவலுந் தனக்கு துணையுமாய்வசிக்கவும் வரம்பெற்றுக்கொண்டான் அதனாலே நான் பாடுபடும்படி நேர்ந்ததென்றான் அதுகேட்ட அர்ச்சுனன் ஆச்சரியமாகி அப்படியா? ஆ ஆ இந்த நீலன்என்ன பாக்கியம் பண்ணினான் தேவரீரையே மாப்பிள்ளையாகப் பெற்றானன்றோ ? மெத்தவுஞ் சந்தோஷம் என்றுபுகழ்ந்து மகிழ்ந்துவணங்கினான் அந்த அருச்சுனனை அக்கினிதேவன் தூக்கியெடுத்து ஆசீர்வதித்து நீருட்டி வைத்த காண்டாவன தகனத் தன்னமுத்தண்ணீரும்என தகட்டிலிருக்கின்றன ஓ திடகாத்திர தேகனே ஓ மகாமேருவாகனனே ஓ சுபத்திரை மோகனனே ஓ சுத்தாத்வீத ஆகனே இந்த நீலன் இன்றுமுதல் உங்களுக்கு நேசனே அஸ்வமேத யாகத்திற்கும் வருவான் நீரொப்புக்கொள்ள வேண்டும்என்று சொல்லிச் சில கப்பணங்களும் காணிக்கைகளும் பண்டுபலாதிகளுங் கொண்டுவந்து வைத்தான் அதுகண்ட அருச்சுனன் கண்களித்து வணங்கி நின்ற நீலனைத்தழுவி அவன்மக்களையும் வரவழைத்து அவர்களுக்கு வேண்டியவெகுமானமுங் கொடுத்து பல சன்மானம் புரிந்தனுப்பினான் அவர்களுந் தெண்டனிட்டு அருச்சுனனுக்குத்தொண்டுபட்டுப்போனார்கள் பின்பு அவ்விந்தியத்திற் கருகிலுள்ள இன்னும் பல தேசங்களில் அஸ்வஞ்செல்ல அவ்வவ்விடங்கள் தோறுந்தானுஞ் சென்று யாவரையுங் கைவசப் படுத்திக் கப்பணம் பெற்றுக்கொண்டு குதிரையை நடத்தி வருகின்றான்.

---

## பாண்டியாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்படி பற்குணன் குதிரையைநடத்திக்கொண்டு பேரி, பாங்கா, கொம்பு, கொடி, முரசு, பூரி, சவடோல், டமா இவைமுதலிய வாத்தியங்களதிரத் தெற்கிற் றிரும்பி வெகுவான ராஜாக்கள் எதிர்கொண்டு உபசரிக்க அவர்களுக்குப் பதில் உபசார மரியாதைகள் செய்து இயாவரும்யாகத்திற்கு வாருங்களென்றுருத்தி அவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு போகையிற் குதிரையானது சோலைகள் நெருங்கிய பாண்டிய தேசத்தில் ஆலவாயென்னும் மதுரைக்குவந்தது அவ்

விடத்தில் அர்ச்சுனனுடைய தேருஞ்சேனை
களும் வைகையாறு மருவி வருவதுபோல்
புகுந்த செய்தியை மீனக்கொடி படைத்த
பப்புருவாகனன் கேள்விப்பட்டு தனக்குரிய
தந்தை வந்தானென்று சந்திரனைக்கண்ணு
ற்ற சமுத்திரம்போற் பொங்கி யிரைந்துசந்
தோஷப்பட்டு தடம்புயம் பணிந்து தாயிட
த்திற் சென்று எனது தகப்பனுரை எதிர்செ
ன்று அழைக்கும்படிக்குச் செலவு கொடுமெ
ன்று சரணம்புகுந்தான். மைத்தன் மொழி
கேட்ட மங்கைசிந்தை புளகோங்கி சரீரம்பூ
ரித்து தன்னைமறந்து பிரதாபவிஜயனை மண
ம்புணர்ந்த நாளிலிருந்த பூரிப்பு எவ்வள
வோ? அவ்வளவுக்கும் அதிகமாய்ப்பூரித்து
வாய்குழறி, அப்பா மகனே! உன்னிஷ்டப்
சடிக்கு உன் தந்தையை அழைத்து வரலா
மென்று பேசினள் அந்தக்ஷணம் முரசு, கா
ளம், பேரிகை, தாளம், சல்லரி, மல்லரி, சற்
சரி, குமாளம் சகல ராஜசமேளம் ரதரிஜ
துரகபதாதி இலையாவுஞ்சூழ உபய சாமர
விருதுகளுடன் சென்று அர்ச்சுன ராஜனைக்
கண்டு சாஷ்டாங்க தெண்டனிட்டு இருகரத்
தைசிம் சிரத்திற் குவித்து நின்றான் அப்படி
நிற்கின்ற பிள்ளையைக் காண்டீபன் குரூரப்
பார்வையாகப் பார்த்து அவன் செவியில்நா
ராச மேற்றியதுபோ விதனைச் சொல்லுகின்
றான் அடா பப்புருவாகனா இம்மதுராபுதக்குத்
துரையாகிய நீ வெறுங்கைவீணனைப்போல்
வந்து பணிந்து நிற்கின்றாயே க்ஷாத்தில்
லையா வீரமில்லையா தீரமில்லையா ஆ! ஆ!
உன் சேவகத்தை நானென்னென்று செப்பு
வேன் உனது திறமறித்துக் கொண்டேன்
இனிக்குறையில்லை உன்னைப்பெற்றவளெவ
ளோ அவள் வீரமில்லாதவள் நீ க்ஷாஜஸ்
திரீ கர்ப்பத்திற் பிறந்தவனல்லை அப்படிக்
குப் பிறந்திருந்தால் க்ஷேத்திரபலம் க்ஷாத்
திர முண்டாக்குமேகையினில் வில்லுங்கட்க
மும் வாங்குமில்லாமல் வரலாமா? தேசவல
ம்வருகிற பரியைப்பிடித்துப் பந்திக்கவேண்
டாமா நீ வைசிய ஸ்திரீ கர்ப்பத்திற்றோன்
றினவன்போல் யுத்தத்திற்குச் சற்றே பயந்
தாய் சரிதான்சரிதான் என்று கோபத்துடன்
சொல்லினன்.

இவையெல்லாங் கேட்ட இராஜகுமா
ரன் தலையிறங்கி தடுத்துப்பேசாமல் திரும்பிக்
கொண்டு பட்டணமேபோய் இராஜ மண்ட
பந்தி லுட்கார்ந்து, மந்திரிகள் பிரதானிகள்
முதலான பேரோடுங்கூடி ஆலோசித்துத்
தந்தையைப் பகைத்துச் சண்டை செய்வது
தருமமல்லவேயென்று சிந்தாக்கிரந்தனாய்த்
தியங்கினன் அப்போது இந்தச்சேதி நாக
லோகமட்டாய்ப் பறந்து நரனுக்குப் பாரியா
ளாகிய உலூபியறிந்து, உடனே மதுரைக்கு
வந்து தனக்கும் பிள்ளையானபப்புருவாகனை
ப்பார்த்துத் துக்கித்தாள் அக்காற்பப்புருவா
கன் அப்பெரிய தாயைத்தெண்டனிட்டுஅட்
சதைகளினால் அர்ச்சனைபண்ணிஅடிபணிந்
தெழுந்து நின்றான் அப்படி நிற்கின்ற பிள்
ளைக்கு உலூபி ஆசீர்வதித்து அப்பா குமார
னே! உன் தந்தை குருகுல சிகாமணி அதி
ரத மகாமணி திரிலோக கண்டகர் இப்பேர்
ப்பட்ட திடகாத்திரதேக தேவதா தோத்திர
வாகுபலிபெற்ற மகானுபாவர் உன்னுடைய
தனுர்வேத தாஷ்டீக தாளாண்மையைப்பார்
க்கவேண்டுமென்கிற தயையினாற் பேசினால்
சிறுவனாகிய நீ திடங்கொள்ளா திருப்பா
னேன் பிள்ளைக்கு அடையாளமென்ன தகப்
பனது மனோபாவந் தெரிந்து நடக்கவேண்
டியது உனக்கு நாலாம் பாட்டனாகிய சந்
தனு மகாராஜன் கங்காதேவியுடன் கலந்து
காங்கேயனைப் பெற்று பிற்பாடு பரிமள கந்
தியை மணந்து வாழும்படிக்கு மூத்தப் பிள்
ளையாகிய த்ரன் தகப்பன் நிமித்தம் வீஷ்
மித்துக் கொண்டார் அந்தப்பிரகாரந் தந்
தை யிஷ்டத்தை நிறைவேற்றுகிறவன் தந
யன் நமது குலாச்சார தர்மப்பிரகாரம் அஸ்
வமேதக் குதிரையைத் தகைந்து தகப்பனெ
ன்றும் அண்ணனென்றும் பாராமல் உயுத்
தியம் தொடர்ந்து வெற்றி பெறவேண்டும்
அப்போது அந்தப் பிள்ளையைப் பெற்ற
வனுக்குச் சித்த மகிழ்ச்சியை யுண்டாக்கும்.
நீ வில்வித்தைகற்ற திறமுன் றந்தைக் கெப்
படித் தெரியுமென்று பெரிய தாயார் சொ
ல்ல மற்ற ராசர்களும் மந்திரிகளுஞ் சரிதா
னென்று ஒப்புக்கொண்டார்கள் அதுகாலை
யிற் பப்புருவாகன் அவர்களைநோக்கிஐயோ!
ஈதென்ன அன்னியாயம் நமது வல்லபத்
தைச் சத்துருவின்பேரிற் றாக்கவேண்டு மல்
லது பெற்றவர்கள்மீது பேசப்போமோ மரி
யாதைக்குத் தாழ்வல்லவோ தருமமல்லவே
என்று பேசினன் அதற்குப் பெரியதாயார்
சொல்லுகிறாள் அப்பாமகனே! தாய்தந்தை
இருவருஞ்சந்தோஷப்பட்டுஒருவேலையைச்

செய்யென்றால் மும்மூர்த்திகளு மொழிந்த
வாக்கியமாகக்கொண்டு முடித்துக் காட்ட
வேண்டியது முறைமை இதனை மரியாதைந்
தாழ்வென்றுந் தருமமல்லவென்றும் பேசா
தேயென்று மொழிந்தாள்.

அந்தப் பேச்சைக்கேட்ட பப்புருவாகன்
பரிதாபப்பட்டு அம்மா! நல்லது நீர் உமது
தங்கையாகிய எனது தாயாரிடத்திற்குப்
போம் என்றனுப்பிவிட்டு அமர்செய்வதற்
காசைபட்டு ஆடையாபரணமும் ஆரகேயூர
மணிமகுடமுந் தரித்து வில்லும் அம்புருந்
தூணியுந் தாங்கி நால்வகைச் சேனைகளையுங்
கொடி குடைமுதலிய சின்னங்களோடு நானு
வித வாத்தியங்களு முழக்கிப் புறப்படும்படி
க்குத் திட்டப்படுத்தி தேரெறி, வாயுகதிக்கு
மிஞ்சின வேகமாய்க் குதிரைகளைத் தூண்டி
மண்டலமும் விண்டலமும் படபடவென்று
நடுங்கும்படியாய் வெளிப்பட்டு திரிபுர சம்
ஹாரஞ் செய்தருளிய சிவபெருமானைப் போ
லும் தேவர்களைக்காப்பாற்றி இராக்ஷசாளைச்
செயித்த திருமால்போலும், சூரனைமடித்துக்
கோழிக்கொடிபிடித்த சிவசுப்பிரமண்யக் கட
வுளைப்போலும் மதுரைப்பதி வீதியில் வரு
கின்றான் அப்போதுசங்கநாதம் சிங்கநாதம்
முரசு காகளம் குடமுழா இவை முதலியவை
முழங்கதன்னுடைய அம்லைக்கொடி அண்ட
மளாவ சித்திராங்கத பாண்டியனுடைய
மீனக்கொடி முன்னே பிடிக்க தந்தையின்
அனுமக்கொடி பிந்திப்பிடிக்க ஏழு சமுத்தி
ரம்போற் சேனைகள் இரைந்து துடிக்க,
தேரோரைகேட்டுப் பிரமதேவன் மயங்க
உலகமென்னமாமோவென்றுயர்வருமுயங்க
வடவாமுகாக்கினிபோல் எடுத்த விரைச்ச
லடங்காம லெரிந்து எதிர்த்துவந்து குதி
ரையைமடக்கிக்கொண்டான் அதை விஜைய
னுடைய தூதுவர்கள் கண்டு கண்கலங்கிப்
பயங்கொண்டு உடனே அக்காண்டீபனிட
த்திலோடிச் சொன்னார்கள் அதுகேட்ட
அர்ச்சுன னகமகிழ்ந்து முகமலர்ந்து களி
த்து தன்சேனைகளை நோக்கிச் சண்டைபண்
ணுங்களென்று முடுக்கினான் அப்போதே
அர்ச்சுனன் சேனையும் பப்புருவாகன் படை
யுங்கைகலந்து தேருடன்தேர் குதிரையுடன்
குதிரை யானையுடன்யானை ஆளுடனாள் மன்
னருடன் மன்னர் மற்றையருடன் மற்றையர்
முனைந்து தொந்தயுத்தந் தொடங்கினார்கள்.

அந்தச் சமயத்தில் அர்ச்சுனனும் பப்புரு
வாகனும் எதிர்த்தார்கள் ஒருவர்க்கொருவர்
பட்சம் பாராட்டாமல் வில்லெடுத்து வளை
த்து நாணேறிட்டுப் பாணப்பிரயோகம் பண்
ணும்போது அமரர்கள் ஆகாயவீதியினிறை
ந்து வேடிக்கை பார்த்தார்கள் பூமியிலுள்ள
பேர்கள் யாவரும் பொருந்திய சண்டையை
விரும்பிக்கண்டார்கள் அக்காற் சப்தகுலகிரி
யும் சப்த சமுத்திரமும் அஷ்டமாதங்கமும்
அஷ்டமாநாகமும் கணகலங்கி இடம் விட்
டுப் பெயரும்படியாக இருவரும் குணத்தொ
னிகாட்டி பெருங்காற்றெழும்பிப் பிரமாதம்
விளைத்து அருமையான கணைகளை அப்ப
னும் பிள்ளையும் ஒப்புவமையில்லாமல் உல
கங் கப்பச்செய்தார்கள்.

இப்படி இவ்விரண்டு விக்கிரமர்களும்
விட்ட பாணங்களிலிருந்து அனேகமேகங்க
ளெழுந்து நான்குதிசையுங்கறுத்துமின்னல்
காட்டி இடித்து இரைந்து மழைகளைச்சொ
ரிந்தன சில பாணங்கள் லூண்டைகீழ் தென்
மேல் இந்நான்கு புறத்தினு மேலுயர்ந்து
அந்தந்தத் திசைகளின் காற்றை விளைத்து
பார்த்தவர்கள் பயப்படும்படியாய் பர்வதங்
களுஞ் சுழலும்படியாய் குருவாரிபோலடித்
தன சில பாணங்கள் காடாக்கினிபோலவும்
வடவாமுகாக்கினிபோலவும் உகாந்தகாலாக்
கினிபோலவும் சடராக்கினிபோலவு மேற்
கொண்டெழுந்து எரிந்துவிரிந்தனமலைமலை
களாய் மலியவும் மாமரங்களாய்க் குவியவும்
மணல்மாரி சொரியவும் கணைவாரி நிறைய
வும் இருளுண்டாகவும் வெயிலுண்டாகவும்
இப்படி பற்பல விந்தைகளைவிளைத்து விண்
டலலோகத்தாரும், மண்டலலோகத்தாரும்,
நாகலோகத்தாரும், போகலோகத்தாரும், நடு
ங்கத்தக்கதாம் மோகனாஸ்திரமுதலிய மொய்
கணைகளேவி ஆயிரத்தெட்டண்டமுமயங்கிப்
பீதி பிறக்கும்படியாக விஸ்தாரமென்மேலா
ன அஸ்திரங்களைத்தொடுத்து விடுத்தார்கள்
இருவருடைய கணைகளும் பெருமிதங்குறை
யாமல் ஒன்றையொன்று கிழித்து ஒன்றை
யொன்றழித்து ஒன்றையொன் றெரிந்து
இரண்டுங் கூடிச் சிரித்து ஆகாயத்தை மூட்
டிக் கனைத்து எட்டுத்திக்கும் ஏங்க தனித்து
கடல்கலங்கக் குளித்துசேனைகளைச்சிதைத்து
கால் தலை மேல் உடல் மார் தோள் என்பு
கள் நரம்புகள் வெவ்வேறாயிடிய வெடுக்கெ

ன்றோடிய மேலெழுந்து விழுந்து படிய
சண்டை செய்யுமிடங்கள் முடிய பிரசைகள்
படிய காற்றோடிபோற் றேர்கள் சுழல கண்
கறுத்துயானைகளுழல வேகமாகக்குதிரைகள்
தாண்ட விதவிதங்களாய்ச் சாரதி தூண்ட
வாயுவேக மனோவேக சரவேக சர்ப்பவேகா
திகள் பின்னிட்டோட இந்திரன் முதலிய
பேருஞ் சிந்தைகளித்து தீரசிங்கக்குட்டி வீர
சிங்கத்திலுமிரட்டி ஆ ஆ மெத்தவுங்கெட்டி
என்று நிதானித்துக்கொண்டாட, ஒருவரை
யொருவர் நீங்காமல் பின்வாங்காமல் இளை
யாமல் சளையாமல் களையாமல் தலைவளையா
மல் கையோயாமற் போராடிவருகின்றார்கள்.

அப்படி வருகையில்சவ்வியசாசிகைமே
விட்டு தன் குழந்தை மார்பில் முப்பது சரத்
தைக்கொத்தாகக் கோர்த்துவிட்டுஆர்த்தான்
அதைப்பார்த்த அரசகுமாரன் அப்போதே
வெட்டியெரிந்து அர்ச்சுனனைக்கிட்டி எட்டு
பாணத்தையெடுத்து அபிமந்திரித்துத் தொ
டுத்து அப்பன்மனுமத்திற் குப்பென்றுதாக்கி
மொய்க்கவிடுத்தான் அதை விசயன் கண்டு
வெகுண்டு குமாரன்விட்ட எட்டுகணையையுந்
தன்தெட்டுக்கணையால் துட்டத்தனையாயறு
த்து மறுத்தும் பப்புருவாகன் நெற்றியிற்
பிறைமுகக்கணையைப்பாச்சினான் அர்ச்சுனன்
விட்ட அக்கணையானது சித்திராங்கதையின்
செல்வக்குமாரனது நெற்றியைத்துளைத்து
ரெத்தவெள்ளத்தை விளைத்தது அதனாலச்
சிறுவன் கோபித்து பற்குனன் மார்பிலும்
பருத்ததோளிலும் வீரபட்டத்திலும் சில
பாணங்களை விடுத்தான் அந்தப் பாணங்க
ளாவது தெறித்து வந்து பொத்தல்கள்
பொறித்து, உதிரப்பிரவாக மூண்டாக்கினான்
பின்னும்முனைந்து அனுமக்கொடியைதறித்
தான் அதுகண்ட காண்டீபன் கலங்கி மகன்
றேரிலாடிய அன்னக்கொடியை யறுத்தான்
இரண்டு தோளையுந் துளைத்தான் அம்மாத்
திரத்தி லப்புதல்வன் அர்ச்சுனன் புயத்தை
வாட்டினான் அர்ச்சுனன் ஆறுகணைகளையெ
டுத்துப் பூட்டினான் பதினாறு கணையைப்
பாலன் பிடித்துப்போக்கிக் கிரீடியின் உடல்
முழுதுங்கிளறிமருமஸ்தானத்திலும்மாயன்
கணையைச்சொருகினான் அப்போதருச்சுனன்
கையிற்பிடித்த காண்டீபத்துடன் மூர்ச்சை
யாகி உடனே தெளிந்தெழுந்து தன்மகனு
டைய வல்லமையையறிந்து வீரதர்மத்தைப்
புகழ்ந்து விதரணையாக வில்வித்தை கற்றிரு
க்கிற மெய்யனுடன் ஐயமில்லாமல் மறுபடி
யுஞ் சண்டைசெய்யத் தொடங்கினான் அர
சிளங்குமாரனுந் தனையனுடன் மையலில்
லாமற்கூடி உடங்கினான் இப்படி யிருவருங்
கைகலந்து ஒருவரை யொருவர் வெல்லும்ப
டியான விதந்தேடி நல்ல பாம்பைபோற்சீறி
நானாவிதக் கோல்களினாற் பீறிவருகிறார்கள்
அப்போது பாண்டிய பௌத்திரன்பேரில்
அர்ச்சுனன் குரூரபாணங்களையேவிமார்புத்
தோளும் புதையமாட்டினான் அதைச் சித்தி
ராங்கதையின் சேயன் லட்சியம் பண்ணாமல்
உருத்திராவேச சரத்தைப் பொருத்தி உருத்
திரமந்திரந் திருத்தமாய்ச் செபித்து கண்
ணுங் கருத்தும்ஒண்ணுபடக் காதுபரியந்த
மிழுத்துதந்தையாகிய காண்டீபன்மார்பைக்
கலக்கிவிட்டான். அப்பாணமானது சூரியனை
விழுங்கிய பாம்புபோல்வந்த சுடச்சுடவெரி
ந்து சுடர்மிகமலிந்து கரகரவென்றுருவி சர
சரவென்று மூதுகிற் புறப்பட்டுப்போயது
அதனால் விஜயன் கைவில்லுடன் மெய்வல்
லமையுங் கழன்று கிறுகிறுவென்றுசுழன்று
பிரேகம்போல் விழுந்து போயினான்.

அதைப் பப்புருவாகனனறிந்து, தன்
றேர்விட்டிழிந்து தந்தைக்குச் சமீபத்தில்
வந்து இந்த விதிக்கோ இவ்வளவு தூரம்
வந்தீரென்று சிந்தைவருந்தி தேம்பியழுது
தகப்பன்மீதுவீழ்ந்து உடல்பதறிப் புரண்டு
அலறிக்கதறி அடிபட்ட காயங்களையெல்
லாம் பார்த்து இடிவிழுந்த பராமரம்போல்
ஏங்கிச்சாய்ந்து மாய்ந்தவனோடு தேய்ந்த
வாறுபோ லோய்ந்து தானும் மூர்ச்சைபோ
ய்விட்டான் அதை மந்திரி பிரதானி முத
லிய பேர்கள் கண்டு ஐயோ இந்த வினைக்
கென்செய்வோ மென்றேங்கி உடனே ஓடிப்
போம் இராஜ கன்னிகையாகிய சித்திராங்
கதைக்குத் தெரிவித்தார்கள். அந்தப் பெண்
பெருமாட்டி தன் காதலர்க்கு நேர்ந்த கலக்
கத்தைகேட்ட மாத்திரத்தில் தரையில் விழு
ந்து முறையோவென் றழுது மதிபோன்ற
முகத்தை மூடி, கண்ணீராறாயோடி வதங்
கிய மாந்தளிர்போற் சரீரம்வாடி இதுவரை
யிலுங் காத்திருந்து காணப்பெற்ற மைந்
தனையுங் காதலனையும் ஏககாலத்தி லிழந்து
எப்படி யுயிர்தாங்கி யிருப்பேனென்று கதறி
யோடி பின்னமாய்ப்போன இருவர் பேரி

லும் படுத்துப் புரண்டு பரதவித்து ஐயோ! பாவியானேனே யென்று ஆவிசோர நின்று விதவிதமாய் ஒப்பனை சொல்லிக் கூவி பின்பு விசனம் ஒருவாறு விலங்கத் தயிரியங் கொண்டு பாதாளத்திற்குச் சென்று தன் சக்களத்தியாகிய உலூகிக்குத் தெரியப்படுத்தினாள். அவள் கேட்ட மாத்திரத்தில் அழலிற்பட்ட மெழுகுபோலுருகி யோடிவந்து புருடன் வீழ்ந்துகிடக்கின்ற கோலத்தைக் கண்ணினாற்கண்டு பிள்ளையையும் பார்த்து உள்ளமுமுடலுங் கலங்கியழுது உமையாள் பாகனாகிய கண்ணுதலைத் தொழுது கணவனுடைய பாதத்தைக் கண்களிலுந் தலையிலும் பொருந்தி முத்தமிட்டுப் பணிந்து முடிமேலே யணிந்து திரிபுண்டரமணிந்து திலகந் தீட்டிய நெற்றியிற் றனது நெற்றியை வைத் தொத்தி இரத்னகிரீடந் தாங்கிய சிரசை மடிமேலிருத்தி ஆகாசவீதியி லிருக்கிற தேவர்களுந் தேவதாஸ்திரீகளும் பெருந்துயர் படும்படியாய் உலூகி அழத் தொடங்கினாள் ஓ பரந்தாமன்போற் பச்சை நிறம் பெற்ற அர்ச்சுனராஜனே நெருப்புப் பொறி பறக்குங் கண்களையுடைய காலகேய நிவாத கவசர்கள் மூன்றுகோடி அறுபதினாயிரம் பேரை நொடியிற் செயித்து இந்திரனரசுக் கிடையூறில்லாதாக்கி வைத்த கிரீடியே அக்கினித்தேவனுக்காக அழியாதவனத்தை யழித்து உயிர்வகைகளை யவ்வக்கினிதேவனுக்குக் கொடுத்த காண்டாவனதகனா அக்கால் தேவேந்திரனானவன் முப்பத்து முக்கோடி தேவர்கள் சப்தமேகங்கள் துவாதசாதித்தர்கள் ஏகாதசருத்திராள் திக்குப்பாலகர்கள் அஷ்டவசுக்கள் தேவகணங்கள் இவர் முதலிய இயாவரோடும் வந்தெதிர்த்தபோது, அவர்களை யெல்லாஞ் செயித்து வென்ற காண்டீபா இப்போது நீர்பெற்ற பிள்ளையால் அந்த நிலைபெற்ற ஜெயமெல்லாம் போயிறக்கும்படி நேரிட்டதற்கு நானே காரணமாயிருந்து மகனைத் தூண்டி யனுப்பினேனே இப்படி வருமென்று சிறிது மெண்ணிலேனே என்று பிரலாபித்தடங்கினாள்.

அப்போது புருஷனருகிற் புண்பட்ட நெஞ்சோடும் புரண்டுவீழ்ந்து கிடக்கின்ற சித்திராங்கதை யெழுந்து முறையோ முறையோ! என்று முகத்தி லறைந்துக்கொண்டு வயிற்றைப் பிசைந்து வாடி வகையொன்றுந் தோன்றாமல் நாடி ஐயோ என் பிராணநாயகா! உமது பெயரைச் சிந்தித்துக்கொண்டு உயுத்தகளஞ் சென்றபேருக்கு உடனே ஜெயமுண்டாகுமே அப்படிப்பட்ட நீர் ஒரு சிறுவனால் இப்படி வீழ்ந்திருப்பது என்ன மாயமோ இது யார் செய்த உபாயமோ அல்லது எங்களைச் சோதிக்க வெண்ணிய நேயமோ ஓ உத்தர கண்டத்தை வென்ற நவமணிகளுடன் பத்தரைமாற்றுப் பசும்பொன் கொண்டு வந்த விஜயனே வீஷ்மாச்சாரியை, துரோணாச்சாரியை, சிந்துதேசாதிபதியை, அங்கதேசாதிபதியை, இவர் குமாரர்களை, மற்றுமுள்ள வெற்றிபெற்ற வேந்தரையெல்லாம் வெகு லேசில் வென்று கொன்று வீரப்ரதாபத்துடனின்ற உமது கீர்த்திகளெங்கே சென்று மறைந்தனவோ! ஓ இருட்டினனே விராடபுரத்தில் உத்தரநிரை மீட்சிகொண்ட பார்த்தனே கங்கையை திங்களை பொங்கரவை வெங்கடுவை கூவிளத்தை கொன்றையை தும்பையை என்பை பிரமசிரமாலிகையோடுந் தரித்தருளிய பெம்மான் மன்மதனுக்கு அம்மான் அவருடன் விளையாடி ஆரமர்க்கடல் கூடி வில்லாலடித்துக் கிளைத்து மல்லா விளைத்துக் களைத்து, மேலான அஸ்திரங்களை யெல்லாம் பெற்ற பாசுபதனே ஆதிநாராயண வவசரமாய் வந்து பங்குனி வுத்தரத்தி லுற்பவித்த பற்குனனே அம்மானை கம்சனைச் சங்கரிக்க வந்த வக்கிரசிசுபால மர்த்தனனுக்கு மைத்துனனே அவர் சாரதியாய்விடுந் தேரிற்பூட்டிய சுவேதவாகனனே பூர்ணயுசுபெற்ற புண்ணியனே மிகுந்த மகத்துவர்களின் ஆசீர்வாதம் பெற்ற மெய்யனே இத்தனைகோடி யுத்தம் விளைந்த பாரதப்போரி லிறக்காமல் யெனக்குப் பழியுண்டாக்க வந்தீரோ இது வரைக்கும் நீர் வருவீரென்று வழிபார்த்திருந்த எனக்கு நல்வழி காட்டினீரோ தருமராசனுக்குத் தம்பியாகிய உமக்குத் தர்ம சகாயமில்லையோ அஃதும்முடன் கூடத்துணையாக வரவில்லையோ நானிரைந்து அழுது விரைந்து கேட்குங் கேள்விக்கு ஒருத்தரஞ் சொல்லீரோ கொசுவினாற் சாபங் குலைந்த தென்றுரைத்தாற் குவலய மியாவும் வசை சொல்லித் தூற்றுமே தேவரீருடைய மார்பு எப்படி துளைப்பட்டதோ ஓ வச்சிரதேகனே ஓ என்னிச்சைப் பிரதாபனே மார்பு துளைபடும்போது என்னை யென்னவென்று நினை

த்தீரோ என்ன விசனப்பட்டீரோ என்ன நிந்தனை சொன்னீரோ எப்படி சிந்தைநொந் தீரோ ஓ செயவிசயதீரனே நான் கொடிய பாவியாய் ஆனேனே இன்று குலைகுலைந்து போனேனே ஐயோ தெய்வமே இனியென் னுயிரை வைத்திருக்கமாட்டேன் என்று வளர்ந்தெரியுங் கனலில் விழுந்த தாமரை மலர்போல் வாடிப் பூமிமேல் வீழ்ந்து மூர்ச்சைபோயினாள் அண்டையிலிருந்த நாக கன்னியை அணைத்தெடுத்துக்கொண்டு அம்மா ஏன் துக்கப்படுகிறாய் வேண்டாம் என் வார்த்தையைக் கேள் விசனப்படுவதினாற் போனது மறுபடியும் வருவதில்லை மனது தேருகவென் றுரைத்தாள்.

இவ்வாறுதேற்றிய அம்மூத்தவளுடைய வார்த்தையின்படிக்குச் சித்திராங்கதை சிறிது தெளிந்து தமக்கையின் முகத்தைப் பார்த்து அக்கா தேவலோகத்திலும் நாக லோகத்திலும் பிரதாபம்பெற்ற புண்ணிய னைக்கண்டு எதிர்கொண்டுசென்று வணங்கிய உமது மகனை இணங்கவொட்டாமல் வலு விற் சண்டைக்கு வரச்சொன்னீராமே நீரு மவர் மனதின்படிபோய் உயுத்தம்பண்ணடா மகனே யென்று ஆளை வுசிப்பேற்றி விட்டீ ராமே உமது சொல்லைக் கேட்ட பிற்பாடு தான் பையன் கொர்வங்கொண்டு சண்டை கண்டு வென்று கொன்றுந் தானுங் கூடவே சாய்ந்து மாய்ந்தானாமே இவ்விருவரும் ஓரே காலத்தில் பிராணன் போகும்படியாய் பிரார்த்துவங் கூட்டி யிருக்குமோ அல்லது உம்முடைய எண்ணம் ஏதாகிலுமுண்டோ புருடன்பேரிற் கோபமிருந்து பிள்ளையை விடுத்துக் கொல்லச் சொன்னீரோ உமக்கு அவர்மீது ஆசையில்லைபோற் றோன்றுகின் றதே நாயகனென்னும் அன்பிருந்தால் என் னுடன்கூட உமதுடல் பதறாதா உயிர் கத றாதா கால்கை உதறாதா வாய் வலறாதா அழீரா துக்கப்படீரா கீழேவிழீரா ஏதோ வந்தவுடன் பதறிக் கொஞ்சந் துக்கங்காட்டி இப்போதெனக்குத் திடஞ்சொல்ல வருகி றீரே இதிலென்னமோ சூதிருக்கிறது எனக் கொன்றுந் தோன்றவில்லை அல்லது இந்தப் பிள்ளையின் கரத்தா லிறக்கும்படியாகப் பூர்வ வினையோ அவனுக்குத் தந்தையைக்கொன்ற பாவியென்று அபவாதமும் அபகீர்த்தியும் அனுபவிக்கும்படியான காலமோ! ஆ! இதென்னஞாலமோ? இந்திரசாலமோ உம் மைப்போ லிருப்பதற்கு எனக்குத் தயிரிய மில்லையே என்னைவிட நீர் அவர்மீதுமோக மாச்சே அம்மா என்னமோ யிருக்கிறது ஏதாகிலும் மர்மமுண்டானால் என்னுடன் கலந்துபேசும். வஞ்சநெஞ்சம் வேண்டாம் தீரே தஞ்சம் இல்லாவிட்டால் நான் தீப்பா ய்ந்து மாய்ந்துபோகிறேன். செலவுகொடும் என்று துணிவுகொண் டெழுந்தாள் வெகு சனங்களுஞ் சமாதானங்கூறிப் பணிந்தழு தார்கள். இப்படியிருக்கின்ற வேளையிற் பப் புருவாகன் தூங்கியெழுந்தவனைப்போலெழு ந்து தந்தையையுந் தாய்மார்களையும்பார்த்து முகத்திலடித்துக்கொண்டு புரண்டு விழுந்து புலம்பி ஐயோ தெய்வமே அர்ச்சுனராஜனு க்குப் பிள்ளையென்று பிறந்து சித்திராங்கத பாண்டியனுக்குப் பௌத்திரனெனச் சிற ந்து மன்னர்முதலியயாவரும் வணங்கும்படி ாயய்த் தருமந்தப்பாமல் அரசாட்சி செய்து வந்த யான் இப்போது பெற்ற தாய்மார்கள் விதவையா யிருக்கும்படிக்குந் தகப்பனைகொ ன்ற தறிதலையென்று பேர்பெற்று மகா பாவியானேனே என்று துக்கித்து இதனைப் பேசத்தொடங்கினான்.

ஓ சகல புவன கர்த்தாவாகிய சாம்பவ மூர்த்தியே! பிதாவைக்கொன்ற பெரும்பாவி நானாகையால் அருந்தவர்யாவரும் என்னைக் கண்ட மாத்திரத்தில் அகங்கலங்கி இந்தந் துரோகி யுள்ளமட்டும் வெள்ளம்மட்டாகும் மழை பெய்யாது கடல் வரண்டுபோம். தவ மோங்காது தானதருமந் தங்காது நெற்பயிர் விளையாது சூரிய சந்திரர் கதிமாறும் பூமி தேவி இவனைச்சுமக்கப்பொருந்தாள் என்று பேசுவார்களே ஆளுக்கொரு பேச்சுப் பேசு வார்களே தந்தையின் தலை கிரீடஞ்சிந்தித் தரையில்விழக் கண்டேனே அவருடைய உடலைவருத்தி உயிர் நீங்கக் கொன்றேன் ஏதேது இனிநான் பிழைத்திரேன் இறப் பேன் இவ்வுலகவாழ்வை மறப்பேன் உம்ப ருலகத்திற் சிறப்பேன் உற்றார் பெற்றாரைத் துறப்பேன் என்று கண்ணீர்பொழிந்து கல ங்கி யுரைக்குங்காலையில் அஸ்வமேதக் குதி ரையின்பின்னாலே ஓமம் பண்ணிக்கொண்டு வந்த எக்கியவற்கலருடைய சீடர்களாகிய பிராமணர்களும் படைமன்னர்களும் நெரு ங்கி அருச்சுனனிறந்து கிடக்கிறதையும் சித்

சிராங்கதை யம்மனும் பப்புருவாகனுந் தியங்கி மயங்கி யழுகிற துக்கத்தையும் நாககன்னிகை நலிவுற்றிருக்கிற மெலிவையும் பார்த்து நலிவுற்றிருக்கிற மெலிவையும் பார்த்து ஓ தருமராஜனுடைய அஸ்வமேதயாகத்திற்வீரத்துட நடத்தப்பட்ட குதிரையை எப்பேர்ப்பட்டவர்களாலும் ஆட்சேபனை பண்ணவொட்டாமல் அஜேயனாக வந்த இராஜசிங்கமே! ஓ அர்ச்சுனதங்கமே நீர் வருகிறவரையிலுந் தருமராஜன் எதிர்பார்த்திருப்பாரே நாள்வைத்துக்கொண்டு வந்த சித்திராபர்வமுங் கிட்டியிருக்கின்றதே மதுரையில் வாசம்பண்ணவேண்டி வந்திரோ மகனும்மனைவியர்களு முமதாவிக்கொள்ளத் தந்திரோ அண்ண அவர்களின் சொல்லைப் பன்னாளுந்தள்ளி நடப்பதில்லையே இன்னாளிலேது இப்படிவிளைந்ததுதொல்லையே அவரெண்ணத்தையும் விரதத்தையும் முடித்துவிட்டு அப்பாற்பிராணனை விட்டால் அது தப்பா இப்போது காரியத்தாட்சி வந்திருக்கின்றதேஎங்களப்பா! அன்று அப்பிராமணர்களும் படைமன்னர்களும் பரதவித்தழுது பப்புருவாகனைப் பார்த்து ஓ ராஜசிங்கமே நல்லயுத்தம்பண்ணினீர் தந்தையைக்கொல்லுகிற யுத்தவித்தையை உமக்குக் கற்றுக்கொடுத்த வித்தகனுக்கு அத்தனைக்கத்தனைபலன் கைக்கூடிப்போயிற்று உம்மைப் பிதுர்த்துரோகம்பிடித்துக்கொண்டது இந்தப் பாவந்தீரப் பன்னிரண்டுவருஷந் தந்தையின் றலையோட்டில் நீர்இரந்துண்ண வேண்டிவரும் அப்போதுந்தீராது ஐயோ! தனது நாயகனுடைய கருத்தறிந்து நீ போயுன்றந்தைக்குத் திடத்தைக்காட்டி மகிழ்வித்துவாவென்றூல் மடிவித்து வரலாமா இவ்வுலகத்திலொருவன் ஏதோ ஒரு காரணத்தினல் தந்தையின்மீது கோபமுண்டாகி உன்னைக் கொல்லவேண்டுமென்று சொல் முறைமைக்குச்சொன்னல் அப்பாவம் பன்னாள் மாமியார் வீட்டில் மடைத்தொழிலாற்றி மாமியாராவது மனைவியாவது தங்கள் இடதுகையினல் உப்பள்ளிவைப்பதெக்காலமோ அக்காலகலுமென்று ஆரியர்விளம்பி யிருக்கின்றூர்கள் நீர்பிரத்தி யக்ஷமாய்க்கொன்று வேலையைமுடித்துவிட்டீர் வந்ததை யனுபவியும் என்று சிந்தைகுன்றிக் கன்றிச் செந்தழல்வளர்ப்போர் செப்பினர்கள்.

அப்போது பப்புருவாக னவர்களைப் பணிந்து ஐயா! இப்போது என் கண்ணெதிரே என் தகப்பன் எழுந்திராவிட்டால், க்ஷணப்போதிலே என்னைப் பார்க்கமாட்டீர்கள் மேலும் அதிரதனாகிய வீரனைக் கொல்லப்போகாது அதிலும் இராஜனாகயிருப்பாகில் அவனுடனெதிர்த்து விரோதிக்கலாகாது அதிலுஞ் சத்தியவந்தனா யிருப்பானாகில் அவனைப் பகைத்துப் போர்புரிந்து வெல்லப்போகாது இப்படிக்கு ஒரு மகாரிஷியின் சித்தாந்தம் இப்போதுநான்செய்திருக்குங்கொலையில்இம்மூன்றுஞ்சேர்ந்திருப்பதுமல்லாமல் எனக்குந் தகப்பனாகிய மகாத்துமனைக்கொன்றேன் இப்பாபத்திற்கு பிராயச்சித்தங் கிடையாது எல்லாவற்றிலு மேலான்து ஆதலாற் பிராணஹிம்சைசெய்துகொள்ளுவதேசரியென்று தன் னுயிரைவிடுவதற்கான உபாயந்தேடிக்கொண்டிருக்கிறுன் சித்திராங்கதையும் பிராணனை விடுவதற்குத்திடங்கொண்டிருக்கிருள் இதை நாககன்னிகை கண்டுமிகுந்த இரக்கத்துடனே மகனண்டையில்வந்து அப்பாமைந்தனே பயப்படாதே அப்பன் பிராரத்துவ கருமத்தினலே இறந்தார் உன் பாக்கியவசத்தினலே இதோபிழைக்கப்போகின்றனர் நீசிந்தனைபடாதேஎன்று தெரிவித்து தன்சிந்தையிற் றுதித்து மதித்துத் தந்தையாகியவாசுகியை நினைத்துசாஷ்டாங்க தெண்டனிட்டுச் சேவித்தாள் அவ் வாசுகி சிந்தாமணியென்னுஞ் சீவரத்தினத்தைக் கொடுத்தனுப்பினன் அம்மணியை வாங்கி மகன்கையிலளித்து உன் தந்தையின் மார்பிலும் சிரத்திலும்பாணங்கள்பட்டஇடத்திலும்பொருத்தென்றுரைத்தனள் அதை அந்தப்பிள்ளை தாயைத் தொழுது தன் கையால் வாங்கி தலைமேல் வைத்துக் கொண்டு கூத்தாடிச் சந்தோஷித்து, இறந்து கிடக்கின்ற தகப்பனிடத்திற்குவந்து, தாய் மொழி மந்திரம்போல் மார்பிலும் தலையிலும் புண்பட்ட இடத்திலும் காட்டினன் உடனே அர்ச்சுனன் நித்திரை நீங்கியெழுந்த நேயம்போலெழுந்து சிறந்து ஹரிஹராளுடைய திருநாமங்களைப் பாடிச் சிந்தைகளித்தான் அந்த வேளையில் மைந்தன்வணங்கினன் அவனை விஜயன் யெடுத்தணைத்து முத்தமாடிக் கொஞ்சினன் பக்கத்திலிருக்கிற பிராமணனும் படைகளும் பத்தினிமாரும் துக்கந்தீர்ந்தார்கள் தேவர்கள்

பாரிசாத புட்பமாரி வாரி வாரிச் சொரிந்
தார்கள் இரண்டு பத்தினிமாரும் பொருந்
திப் பணிந்தார்கள் அவர்களைக் காண்டீப
னெடுத்து ஆசீர்வதித்து தேவேந்திரனைப்
போற் சிந்தைகளித்து சமஸ்தமான பேர்க
ளுஞ் சந்தோஷப்படும்படியாய் சித்திராங்
கதையோடும் பப்புருவாகனோடுங் குலாவி,
நடந்த காரியங்களை விசாரித்துக் கொண்டு,
நாககன்னிகையைப் பார்த்து ஓ பெண்ணே!
நீ அருமையான அரவானைப்பரிகொடுத்து,
விட்டாயே அத்துயர்போக இந்தப் பப்புரு
வாகனென்னும் பிள்ளை உன்னிடத்தில்
லட்சியமாகிய பட்சம்வைத்துப் பிரீதியுண்
டாய் நடந்து வருகின்றானா வென்று கேட்
டான் அதற்கு நாககன்னிகை நயந்து ஓ
என் பிராணவல்லபா! உலகத்தில் புருஷ
னில்லாத பெண்களுக்கும், புருடனைப் பிரி
ந்திருக்கிற பெண்களுக்கும் பிள்ளையைவிட
ஆதரவில்லை தருமசாத்திரம் பேசிய நீதி
வசனப்படிக்குத் தப்பாமல் ஒப்பாக நடந்
தேறிவருகின்றானென்று நவின்றனன் அத
னைக்கேட்ட அர்ச்சுனன் மீட்டு மவளைப்
பார்த்து ஓமாதரசி இன்று உன்குழந்தையும்
நானும்யுத்தம்பண்ணி, நானிறந்த செய்தி
உனக்கார் சொன்னது என்னமாயறிந்து நீ
இவ்விடத்திற்குவந்தாய் உன்றந்தை யனு
ப்பினாரோ இவ்வாறு விளையுமென்று முன்
னாடிச் சொன்னாரோ நீ வந்த காரியத்தைச்
சரியாய்ச் சொல்லுக என்பிராணரத்தினமே
யென்று கேட்டான். அதற்கு நாககன்னி
கை அமுதத்தைக் காதிற் பொழிவதுபோற்
சொல்லத் தொடங்கினாள்.

ஓ என் பிராண நாதா ஒருநாள் நானும்
என் பாங்கிமார்களுங் கங்காநதியில் ஸ்நா
னஞ் செய்து கரைமேல் வந்து மயிராற்றிக்
கொண்டிருக்கையில் வசுதேவதைகள் ஏழு
பேர் திவ்விய கிரீட ஆரகேயூர மதாணிக
ளுடன் தேசோமயமான விமான ரூடராய்
வந்திறங்கி கங்காநதியில் ஸ்நானஞ்செய்து
அர்க்கியபாத்திய ஆசமன்னியங்கள் கொ
ண்டு சிவபூசை வேலையாய் அங்கிருக்கின்றார்
கள் அப்போது கங்காதேவியம்மன் மிகுந்த
சௌந்தரியத்துடன் வந்து நின்றாள் அவ
ளைக்கண்ட வசுக்களெழுவருஞ் சாஷ்டாங்க
மாக நமஸ்கரித்து அம்மா நாங்கள் எட்டு
பேரில் எழுபேர் உமது வயிற்றிற் பிறந்து
இறந்தோம் எங்களுக்கு முதல் வசுபிரபா
சனர் அவரும் உமது பிள்ளையாகி வீஷ்ம
ரென்று நாமம் வகித்து கௌரவகுல முத
ல்வனென்றிருந்தார். அவர்மிகுந்த மூதறி
வாளர் என்றைக்கு எங்கள் வசுபதத்திற்கு
மீட்டும் வருவரோவென்று நாங்கள் எதிர்
பார்த்துக் காத்துக்கொண்டிருந்தோம் அப்
பேர்ப்பட்ட மகானுபாவனைச் சிகண்டி கொ
ன்றானென்று பேர்வைத்துவிட்டு அர்ச்சு
னன் வேலைமுடித்துவிட்டானென்று சகல
ராஜர்களும் பேசிக்கொள்ளுகின்றார்கள்
அந்த அர்ச்சுனனுக்குப் பாட்டனைக் கொல்
லும்படி எப்படி மனந்துணிந்ததோ வறி
கிலே மென்றார்கள். அவ்வார்த்தையைக்
கேட்டகங்கை யாதொன்றும் பேசாமற் சும்
மாயிருந்தனள் அதுகண்ட வசுக்கள் அவ்
வம்மனைப்பார்த்து ஓ சிவபிரானுடையசடா
மகுடத்தி லிருக்கப்பட்ட தாயே! பெற்ற
சேயின்பேரி லிரக்காதமன்னை இப்பேருலகி
லெங்கனுமில்லை வீஷ்மர் உமது பிள்ளை
யென்றுகேட்டும் அதை நீர் சரிதானென்று
ஒப்புக்கொண்டும் இன்னானால் மாறுபாட்டி
லிறந்தாரென்று சொன்னால் சிறிது முமது
சிந்தை கலங்கவில்லை ஐயோ! (ஆரோ செத்
தான் ஏனோ அழுகிறாள்)? என்று சொல்
லும் பழமொழிபோல இரக்க மற்றிருக்கின்
றீர் எங்கள் மனந் தாளவில்லை இதுவரை
யிற் பெற்றதாயிருக்கும்போது நமக்கென்ன
வென்று சும்மாயிருந்தோம் உமக்கக்கறை
யில்லாவிட்டால் இப்போதே அவனைச் சபி
க்கின்றோம் எங்களுக்காகிலும் உத்தரவு
கொடுமென்று கேட்டார்கள். அதற்குக்
கங்காதேவியானவள் அந்தவசுக்களைப் பார்
த்து மக்களே! உங்களிஷ்ட மெப்படியோ?
அப்படியே செய்யுங்க ளென்றனள். இப்
படி பேசிக்கொண்டிருந்த வார்த்தையைக்
கேட்ட நான் பயந்து திகிலடைந்து நாக
லோகம் புகுந்து என் றந்தையான வாசுகிக்
குச் சொன்னேன் அவர் கேட்டு அதிக
விரைவாக கங்கைகரைக்கு வந்து, கங்கா
தேவிக்கும் வசுக்களுக்குஞ் சாஷ்டாங்க
தெண்டனிட்டு, வீஷ்மர் பூமியிற் பிறக்கவும்
யுத்தத்தில் இன்னான் கையால் இன்னானிறப்
பானென் றிருக்கவும் அதே பிரகாரம் நடக்
கவும் அமைப்பின்படியானதைக் குறித்து
அர்ச்சுனனைச் சபித்தால் ஆகத்தக்க காரிய
மென்ன உங்களைத் தடுப்பாருமுண்டோ?

உங்களுக்கில்லாத அக்கரை எங்களுக்கென்னவென்று உபசார நயிச்சிகமாகப் பேசினுன் அந்தப் பேச்சிலே அவர்களுக்குத் தயவுவந்து இதனைச் சொல்லுகின்ருர்கள்.

ஓ நாகவேந்தே! பூமியாளப்பட்ட அருச்சுனன் தான்பெற்ற பிள்ளையைப் பகைத்துப் பேசிச் சண்டைவிளைத்து அந்தக்குமாரன் கணையால் மரணமடையக் கடவனென்ருர்கள் அப்போது என்தந்தை வாசுகியானவர் அவர்களை வேண்டி இப்பேர்ப்பட்ட அபாயம்வந்தால் மறுபடி பிழைப்பதெப்படியென்று வினவினர் இப்படியாக வினவிய என்றந்தையை வசுக்கள் நோக்கி ஓ வாசுகி! விஜயன் புத்திரன் பாணத்தால் இறந்தானென்று நீ கேள்விப்பட்டால் உடனே ஜீவசிந்தாமணியை அனுப்புவையாகில் அதன் பரிசம் பட்டமாத்திரத்தில் பிழைப்பான்இவ்வளவு வருத்தம் அவன் அனுபவியாவிட்டால் வீஷ்மாசாரியரைக் கொன்றபாவம் வெகுநாளைக்குவிடாதென்று விளம்பினர்கள் அப்போதென்தந்தை அவர்களைப்பணிந்து விடைபெற்று நாகலோகத்திற்கு வந்து நடந்த வயணத்தை யென்னுடனுரைத்து உபசரித்திருந்தார். அன்றுமுதல் இன்றையவரையிலும் இரவும்பகலும் ஏக்கமாய்த் தூக்கமில்லாமல் என்மனதில் வைத்துக்கொண்டிருந்தேன் இத்தருணத்தில் தேவரீர் அஸ்வமேதயாகம் பண்ணுவதற்காக விடுத்தக் குதிரையின் பின்னல் வந்து மதுரையிற்புகுந்து வலியச் சண்டையிழுத்து வம்பு வார்த்தை பேசிய மார்க்கமெல்லாமறிந்து நானிவ்விடத்திற்குவந்து எவ்விதத்திலாவது அச்சாபகண்டம் விலகட்டுமென்று சண்டைபோட சம்மதியில்லாதிருந்த மகனைச் சண்டைபோடச்சொல்லி ஆளாக்கிப்போட்டு நான் மீண்டும் நாகலோகம்போய்விட்டேனப்பால்தேவரீர் ரந்தப்பிள்ளையின் கணையாற் பெருந்துக்கமானீரென்று மதுகண்டுபிள்ளையுமூர்ச்சையாயினனென்றும் சித்திராங்கதை ஓடிவந்து தெரிவித்தாளிந்தசேதி பாதிகேட்டுங் கேட்காதமுன்னம் மனந்தாளாம லோடிவந்து நால்வரோடொக்க வழுது சிறிது தைரியங்காட்டி நின்றேன் அதனுற் சித்திராங்கதைக்குச் சந்தேகமுண்டாகி எனக்கு நீ உண்மை சொல்லாவிட்டால் உயிர் துறக்கிறேனென்ருள் அப்போது குமாரன் மூர்ச்சை தெளிந்தெழுந்து இந்நிமிடத்திலென்றந்தை உயிர்பெற்றெழாவிட்டால் யானு முயிர்மாய்த்துக்கொள்ளுவேனென்று சித்தமாயினன் உடனே நான் அவர்களைத்தேற்றி என்றந்தையைத் தியானித்துப் பணிந்தேன் அவர்உடனே ஜீவசிந்தாமணியைக் கொடுத்தனுப்பினர் அதை உமது பேரிற் பொருந்தி உயிர் பெறச்செய்தேன். ஓ என்னுயிர்க் குயிராகிய உத்தமனே! நானிங்குவந் திருப்பதற்குக் காரணமிதுதானென்று சொல்லி முடித்தனள்.

அப்போது சித்தசனைப் போன்ற சிலை விஜையன் மெத்தவுமகிழ்ந்து கொண்டாடிப் புகழ்ந்து நற்றவர்கற்றவர் பிராமணுள்இவர் முதலாகிய பெரியோர்களைப் பணிந்து ஓ சுவாமிகளே ஸ்ரீகிருஷ்ணபகவான் எங்களைக்காத்து முன்னுக்குக் கொண்டுவந்தார் தனுவேதியராகிய துரோணுச்சாரியார் வில் வித்தை கற்பித்து மேன்மைபெற வைத்தார், நாகராஜனும் அவருடைய கன்னிகை உலூகியும், நானின்னுங் குறைவற்று இம்மையிலிருக்கவும் அம்மையில்யாதொருநரகத்துள் மாழாமற் சுறக்கவும் பண்ணினர்கள் இவ்வாறெனக்கு நன்றிசெய்தருளிய இந்நால்வருக்கும் என் தந்தை தாய்க்கும் வந்தனைபண்ணி மறவாமற் ருெழுவேன் என்னிஷ்ட தெய்வம் இவர்கள்தான் இவர்களுக்கு பிரதியுபகாரஞ் செய்யப் பெருந்தவனு யிருக்கிறேன். என்று சொல்லி உலூகியைப் பார்த்து, ஓ நாககன்னிகையே நீயிந்த மதுரையிற்ருனேயிருப்பையாகில் நானுங் குதிரையும் அஸ்தினுபுரம் போய்ச்சேர்ந்து அஸ்வமேதயாகந் தொடங்கும்போது உன்னையும் சித்திராங்கதையையும் உங்கள் தவப்புத்திரனுகிய பப்புருவாகனையும் அழைப்பித்துக் கொள்ளுகிறேன் நீங்களும் வாருங்களென்று சொன்னுன் இப்படி சொல்லிய கேசவற்ருேழனை அம்மாதரிருவரும் வணங்கி ஓ எங்கள் பிராணுதாரா தேவரீர் இவ்வளவு தூரம் வந்து விட்டதாற் பட்டினத்திற்குட் பிரவேசித்து இராசவீரண்மனையிற் பொருந்தி விருந்து முதலிய தருந்தியிருந்து வரலாமே யென்றழைத்தார்கள் அதற்குப் புரந்தர பூமான் மகிழ்ந்து ஓ என் காதலிகளே மதுரையில் நிரந்தரம் வாசம்பண்ணும்படியான ஆசையுண்டாயிருக்கின்றேன் ஆனல் இப்போது நான் யாகதீட்சை வகித்திருக்கின்றேன் பட்

டணத்திற் பிரவேசிக்கப்படாது என்றீ பகர்
ந்து பப்புருவாகனென்னும் பாலனைப் பார்
த்து அடா குழந்தாய் பதின்மூன்றும்நாள்
யுத்தத்திலிறந்த அபிமன்னனுக்கொப்பாகிய
என் குமாரனே என்றணைத்து முத்தமிட்டு
ஆரகேயூர கிரீட மதாணிமுதலிய ஆபரண
ங்களளித்து வாழ்த்தினன். அந்தப் பிள்ளை
சந்தனக் கட்டைகளையும் முத்தாரங்களையும்
விஸ்தாரமாக வைத்துப் பணிந்துபோற்றி
னன் அவ்வாறே பணிந்து போற்றிய இர
ண்டு ஸ்திரீகளையும் பிள்ளையையும் அரண்ம
னைக்குட் போகவிடுத்து நால்வகைச் சேனை
யுடனடந்து, அனேகம் அரசர்களுடைய
நட்புஞ் சினேகமும் பெற்று, நவரத்தின
பூஷண திரவியங்களுமுற்று, மேற்சமுத்தி
ரத் தீரத்தைநாடி அங்கிருந்து திரும்பி வட
திசையைக்கூடி வருகின்றான்.

---

## கிரிவிரசாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே!
இப்பால் அஸ்வமானது கிரிவிரசபுரமென்
னும் மகததேசத்திற்கு வருகிற மார்க்கத்தில்
சராசந்தன்மகன் சகதேவன் அவன்குமாரன்
ஏகசந்தி யென்பவன் அவன் வந்து குதிரை
யைத் தடுத்து வந்தடுத்த சேனைகளைப் புடை
த்து கண்கள் செவந்து கூறுவினன். அக்
காலையில் அருச்சுனன் ஏகசந்தியை யழை
த்து ஏனப்பா குதிரையை மடக்கினையென்று
கேட்டான் அதற்கவன் முறுக்கி முடுக்கி ஓ
அர்ச்சுனா! நீ மாத்திரம் ஆண்பிள்ளையென்
றும் மற்றவனெல்லாம் வீண்பிள்ளையென்
றெண்ணினையோ போம்பிள்ளைபோம் இங்
கிருப்பவர்கள் பெண்பிள்ளையல்ல நான் உன்
குதிரையை விடுகிறதில்லை சண்டைபண்ணி
செயித்துக்கொண்டுபோவென்றுசாற்றினன்
அதுகேட்டு அர்ச்சுனன் நகைத்து அவனு
டனிருந்த மந்திரி முதலாகிய மதிவல்லோ
ரைப் பார்த்து ஓ நீதிவல்லோர்களே நான்
அஸ்தினாபுரம் விட்டுப் புறப்படும்போது
சத்தியவிரதனான தருமராஜன் சொன்ன புத்
திக ளென்னவென்றால் சிறுபிள்ளைத் தனத்
தால் எந்த ராஜர்கள் போர்புரிய வந்தாலும்
போர்புரிந்தாலும் அவர்கள் சேனைகள் விரிந்
தாலும் நமது படைகள் பிரிந்தாலும் நீ யெ
திர்த்தமராடாதே பொறுமையாய் நல்ல வச
னம் புகன்று யாகத்திற்கு வரும்படி பண்ணி
க்கொண்டு வந்துவிடென்று ஒருதரத்திற்குப்
பத்துதரமாகச்சொல்லி சிலதூரம்வந்துவழி
விடுத்தும்போயினர் அவருடைய விரதமொ
ழியை நினைக்குந்தோறுஞ் சரதமுன் வந்து
நிற்கின்றது சத்தியந்தள்ளி நடக்கப்போகா
தென்று பார்க்கிறேன் உங்கள் சித்தமெப்ப
டியோ அப்படியென்று செப்பினன் அது
கேட்ட வமைச்சர்முதலியயாவருஞ் சண்டை
செய்வது வேண்டாம் வேண்டாம் என்று
ஓதினர்கள். அப்படி யவர்களுரைத்தும்
அந்தப்பிள்ளை சினந்து கனத்த கணைகளை
மனத்திலும் வேகமாகக் கடுக்கி முடுக்கினன்
அவையனைத்தையும் அருச்சுனன் தன் பா
ணத்தா லழிந்துபோகப்படுத்தி அரசகுமா
ரன்பேரில் அம்புகளுந்த அவனு மிவன்
மீதிற் கொடுங்கணைசிந்தஇருவருக்கும்உடல்
துளைபட்டு உதிரங்குழம்பி முந்த விந்தகிரி
போன்ற தோளிணையுடைய விஜயன் கோபம்
பாராட்டாமல் ஒரு ஏறுகணையேச்சி அவ
னது தேர் குதிரை சாரதி வெற்றிக்கொடி
வீரவில் இவைகளைப் பொடியாக்கி அவன்
சரீரத்திலுஞ் சிலவடுவுக ளேர்ப்படுத்தினன்
அப்போதவ் வேகசந்தி யென்பவன்மீட்டும்
பயப்படாமல் வேறு தேரேறி முன்னிலும்
வலிவானஒருவில்லைப்பிடித்து பல்லைகடித்து
அவனை யர்ச்சுனன் யேறநோக்கிப் புன்
சிரிப்புச் சிரித்து அப்பா இளஞ்சிங்கமே!
நமது க்ஷத்திரியகுலத்திற் கடுத்த முறைமை
ப்படிக்கு உன் சேவகத்தைக் காண்பித்தாய்
உன்னுடைய வீரத்திற்கு நாம் மெச்சினேம்
நாளைவரப்பேரகிற சித்திராபர்வத்தில் நடப்
பிக்கா நின்ற யாகத்திற்கு நீயும் உன்னிஷ்ட
சென பந்துக்களும் வந்திருந்து பார்க்கவே
ண்டுமென்றுபேச அவனுஞ் சந்தோஷம
டைந்து சாஷ்டாங்க தெண்டனிட்டுத் துதி
த்தான் அவனை விஜயன் வாரியெடுத்து மதி
த்து வாழ்த்தி அவனால் வரும்படியான கப்
பண காணிக்கைகளை வாங்கிக்கொண்டு சிநே
கமாக நிறுத்தி அக்கிரிவிரசபுரத்திற் கடுத்
துள்ள தேயங்களையும் வென்று கைவசப்ப
டுத்தி குதிரையை நடப்பித்துக்கொண்டு அப்
பாற் போகின்றான்.

---

## சேதிபாதி தேசாதிபர் விஜயம்.

---

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! இப்பால் அஸ்வமானது சேதிப்தேசஞ் செல்லுகையிற் சிசுபால குமாரன் சரபனென்பவன் குதிரையைக்கட்டினன் அவனை யாகண்டலனளித்த அருச்சுனன் பார்த்துப் பிரியவசனம் பேசி சண்டை வேண்டாமென்று சாற்றி தான்வந்தவரலாற்றையும் விளம்பினன் அதற்கவன் சம்மதித்துத் தெண்டம்பண்ணி கண்டகராகிய வண்டரைவென்ற காண்டீபக் கையனே யென்று பின்னும் பணிந்து இயாகத்திற்கு வருகிறேனென்று ஒப்புதலையாகச் செப்பினன் அதைக்கேட்ட அர்ச்சுனன் மகிழ்ந்து அவன் தந்த நவமணி முதலிய பரிசுகளை யெல்லாங்கொண்டு புறப்பட்டான் அப்பாற் கிராதர்கள் வாசம் பண்ணுகிற தேசமெல்லாங் குதிரையுடன் றிரிந்து கோசலதேசத்திற்குப் போய் அங்கிருந்துபின்பு பயணப்பட்டு அயோத்தி காசி இவை முதலிய பட்டணங்களுக்கு வந்தான் அங்கங் கிருக்கின்ற அரசர்க ளெல்லோரும் வந்து வரிசைகளீந்து மகாதேசமாக வாழ்த்திப் போற்றிப் பழமைபாராட்டினர்கள் அப்பால் தசார்னவமென்கிற புரிக்குப் போயினன் அவ்வுலகுக் கிறையாகிய சித்திராங்தன் வந்து தீர்க்கதெண்டனிட்டு யாகத்திற்கு வருகிறேனென்று ஒப்புக்கொண்டு சால்வைமுதலிய சரிகைதாபிதாக்களுங் கொடுக்க அதைப்பெற்று அவ்விடம் விட்டு நிட்தநாட்டுக்குப் புரவிபோனபோது அந்த நிடதநாட்டிறைவன் படையெடுத்து வந்து சில தொடைவிடுத்து வெந்து அர்ச்சுனனுக்குத் தோற்று வேர்த்து ஓடுகிறான் அக்காலையிற் நடுவிற் பார்த்திருந்த திடவானொருவன் சமாதானஞ்சொல்லி இருவரையும் ராஜிபடுத்த அதனால் அர்ச்சுனன் மன்னித்து அவனை அஸ்வமேத யாகத்திற்கு வரும்படியா யமைத்துக்கொண்டு அப்பால் திரும்பி விந்தகிரிக்குத் தென்பாரிசத்தில் ஆரியம் வடுகம் கன்னடம் மராடம் ஒட்டம் சவுராஷ்டம் கோகர்ணம் மலையாளம் அச்சி கொச்சி இவைகளியாவும் போய்த்திரும்பி இயாதவ குலத்தாரால் நிறைந்திருக்கப்பட்ட துவாரகைக்கு வருகிறான் அதுகண்ட யாதவ குமாரா ளனேகர் எதிர்கொண் டழைத்துவந்து பூசை முதலியவும் புரிந்து புரவியையும் போர்வீரனையும் பணிந்தார்கள். அதனால் விசயன் சந்தோஷித்தனாகி யாவரையும் யாகத்திற்கு வாருங்களென் றியம்பி பஞ்சவடிக்கு வந்து மேற்கடலோரமாய்ப் போகின்றான்.

---

## காந்தாரமாதி தேசாதிபர் விஜயம்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே! அங்கே யிருக்கும். காந்தாரதேசத்தை நோக்கிச்செல்லுகையில் மாமர்வாகிய சகுனி பிள்ளை கண்டு தன் தந்தையையுந் தங்கள் தமையன் முதலிய பேர்களையுங் கொன்ற சத்துருவந் தானென்று குதிரையைக் குறுகி வளைத்தான் அதை அருச்சுனனறிந்து தருமராஜன் சொல்லைத்தள்ளிச் சண்டைபண்ணலாகாதென்று கருதி யவனை யருகிலழைத்து அப்பா சித்திர விசயா உனக்கு. நல்ல பேச்சினாற் சொல்லுகிறேன் கேள் உங்களத்தன் எங்களைப் பகைத்து பஞ்சைகளாக்கிக்கொஞ்சநாளையிற் குறைந்து மறைந்தான். அந்த நஞ்சன வஞ்சனை மிஞ்சிய நெஞ்சனையுடையபஞ்சமாபாதகனைப்போல் நீயும்போகாதே அனியாயமாய்ச் சாகாதே இனிமேலென்னயிருக்கிறது நாம் உறவாயிருந்து பிறவாநெறிதேடிக்கொள்ளுவோம் உன்மட்டில் இந்த நாட்டை ஆண்டுகொண்டிருவென் றிசைத்தான் இவ்வுள்வுயிதவோடுரைத்தும் அச்சித்திரவிசயன் வசத்திற்கு வாராமல் வில்லை வளைத்து மேலானகணைகளைத் தொடுத்தான் அர்ச்சுனனும் எதிர்த்து அவனுடைய வில் தேர் சாரதி கொடி முடி இவை முதலிய விருதுகளை யழித்து அவனையும் பின்னோட்டங் கண்டான் மறுபடியுமவன் வேறு தேரேறி வில்லுந்தரித்துப் பற்கடித்து வந்து அர்ச்சுனன் தோள்மேல் நாற்பதும் அநுமக்கொடிமேலைம்பதும் காண்டீபத்தின்பேரில் அறுபதும் சுவேதக் குதிரைகளின் மீது எழுபதும் சாரதிபேரில் எண்பதுமாக அம்புகளை எண்ணித் தொடுத்துகீர்த்தி வண்ணமும் பாடினன் அப்போது கண்ணுதலைக்கண்டு கடாட்சங்கொண்ட பார்த்தன் அத்தனை யம்புக்கும்புகளையுந் தனது ஒரே

கணையா லுதறிவிட்டு அவன் வில்லையு மூறி
த்து கவசத்தையுங் கிழித்து சிறுநகை நகை
த்துத் திருமுகமலர்ந்தான் அந்தச்சமயத்
தில் அவனுடைய மந்திரி பிரதானியர்கள்
மூநாதையானவர்கள் இவர்க ளியாவரும்
போந்து அச்சித்திர விசயனைப் பார்த்து
அப்பா இராஜகுமாரனே அகிலகண்டகனா
கிய அர்ச்சுனனுக்கு நீ யெவ்வளவு வல்
லமைசாலி ஐயோ இதுவரையிலும், பார்த்
தன் உன்னை யுயிரோடும்விட்டு வைத்தானே
இதுயார் செய்தபுண்ணியமோ தெரியவில்லை
இந்தமட்டும் ஓடிப்பிழைப்பது உத்தமமென்
றூர்கள் அவாளுடைய சொல்லினாலும் தா
ன்பட்ட வருத்தத்தினாலும் மெய்யென்று
நம்பி நாலடிசென்று அங்ஙன நின்றுயோசி
த்து தன்னிடத்துள்ள அதிரதர் முதலிய
படைமன்னரை யெல்லாங் கூட்டிக்கொண்
டு மறுபடியுந் திரும்பி மாயன் மைத்து
னனுடைய சேனைகடன்மேற் புகுந்து யா
னைச்சண்டை குதிரைச்சண்டைகள் பண்
ணினான்.

அதைக்கண்ட சுவேதவாகனன் நகைத்
து நாம் அன்பினால் முன்பின் பார்க்கின்
றோம் இந்தச்சங்கதி அந்தப்பிள்ளை யெண்
ணி நடக்கவில்லை நல்லது உள்ளபடியாகின்
றது என்று அவனுடைய அதிரதர் முதலா
கிய படைமன்னரை நிமிஷத்திற்கொன்று சு
வர்க்கத்தி லனுப்பி நின்று அடா தம்பி நீயும்
வாடாவென்று நூறுகணையை நொடிக்குள்
விடுத்தான் அதனாலே யவன் சாரதி தேர்
குதிரைகளிறந்து கொடியும் வில்லுமழிந்து
அவன் சரீரமும் அலக்கழிந்து துளைப்பட்டு
போயது உடனே அங்கமெல்லாங் காயப்
பட்டுப் பங்கத்துடன் மாயப்பட்டானென்
றுரைக்கும்படிக்கு மூர்ச்சைபோனான் அவ
னைப் பெற்றதாயார் மகன்வீழ்ந்தானென்று
கேட்டு மார்பி லறைந்துகொண்டு ஓடிவந்து
அண்ணா என்பிள்ளையை இக்கோலங் காண
லாமா ஐயோ மலையைவாரிக்கொடுத்து மண்
ணுக்கொருபிடியாய் மக்கிக் கிடக்கின்ற வெ
னக்குப் பேரிடிவிழுந்தாய்போற் பிள்ளையி
றந்தானே வாய்பேசாம லிருக்கின்றானே
உமக்கு அடைக்கலம், அடைக்கலம், இச்ச
மயம் அபயங்கொடுத்தாண்டருளும் என்று
வேண்டினாள் அதனால் விசயனுக்குத் தயை
பிறந்து அம்மா நானென்ன செய்வேன் சு
ம்மாயிராமல் எத்தனைபேர் சொன்னாலுங்
கேளாமல் எதிரிவந்து விழுந்து இக்கதி
யானானென்றான் இப்படி பேசிக்கொண்டிரு
க்கும்போதே சித்திரவிசயன் மூர்ச்சைதெளி
ந்தெழுந்து விழித்துப்பார்த்து நாக்குவற
ண்டு நாபிகருகி அர்ச்சுனனுக்குப் பணிந்து
ஓ அத்தானென்னைமன்னித்து ஆதரிக்கவே
ண்டுமென்று தோத்திரம் புகன்று துதித்தா
ன் அவனை விசயன் யெடுத்தணைத்து கட்டி
யிறுக்கி முத்தமிட்டு உன்தந்தைசெய்த நிந்
தை வெகு விந்தை அவ்வஞ்சகச் சிந்தை
முதலிய மார்க்கங்களெல்லாந் துரியோதனாதி
யர்களையும் உங்கள் குடும்பங்களையும் உலகத்
திராசர்களையும் சேனைகளையும் நாசமாக்கிப்
போட்டன அந்தப்பழி யெந்தெந்த காலத்
திலுந் தீராது உன் சிந்தைநொந்து வெல்
லுவதற்கு வல்லமையிருந்தால் இன்னமுஞ்
சண்டைக்குவா இல்லாவிட்டால் விலகிப்
போவென்று சொல்லினான் அதற்கவனென்
றும் பேசாமற் சாணாகதியென்று விஜயன்
காலைப்பற்றி நின்றுவிட்டான் அப்போது
விஜயனவனைப்பார்த்து அப்பா சித்திரவிச
யா என் தமையனென்னை யனுப்பும்போது
யாரோடுஞ் சண்டை பண்ணவேண்டாமென்
றும் கூஷாத்திரம் வேண்டாமென்றுஞ் சத்தி
யம்பண்ணி யனுப்பினார் அதனால் இத்தனை
தூரம் பிழைத்துப் பேசுகிறாய் இல்லாவிட்
டால் ஒரேகணையால் உன் பிராணனை வாங்
கிப்போடுவேன் இப்பவம் எங்களை சத்துரு
வாக யெண்ணாதே மைத்துனன் முறையாக
மதித்து மனத்தில் அன்பு பதித்து அரசு
வகித்து அன்னை முதலிய சுற்றங்களுடன்
வாழ்வுபெற்றுச் சுகமாயிருக்கக்கடவை இது
வல்லாமல் உங்கள் தந்தையுடன் பிறந்தஎங்
கள் பெரிய தாயார் ஆனந்தப்படும்படியாய்
பழைய உறவுபாராட்டி அஸ்தினாபுரத்திற்கு
வரவும்போகவுமா இருவென்று சொல்லி
னான் அவ்வார்த்தையைக் கேட்ட சித்திர
விசையனும் அவன் தாயும் அப்படியே
நல்லதென்று சொல்லி அஸ்வமேத யாகத்
திற்கு அவசியம் வருகிறோமென்று ஒப்புக்
கொண்டு வழிவிடுத்திருந்தார்கள்.

இப்பால் அர்ச்சுனர் அவர்களை நிறு
த்திவிட்டு குதிரையும் படைவீராளும் தா
னும் புறப்பட்டு வருகையில் அஸ்வம் விரா
டபுரத்திற்கு சென்றது அந்த விராடபுர

ராஜனுடைய மகன் அஞ்சன குமாரனறிந்து எதிர்புகுந்து சகல மேளவாத்தியங்களு மொலிக்கும்படிக்குச் செய்து அர்ச்சுன ராஜனைத் தொழுது உபசாரம்புரிந்து அஸ்வமேதயாகத்திற்கு வருகிறேனென்று ஒப்புக்கொண்டு வணங்கினன் அந்தப் பிள்ளையை விசயனெடுத்து ஆசீர்வதித்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் துருபதேயத்திற்கு போகிறபோது வழிகளிலுள்ள குறுநிலமன்னர் மண்டலீகர் இவர் முதலிய மன்னவான்களைக்கண்டு சன்மானங்கொண்டு பாஞ்சால தேசத்திற்குச் சென்றான் அங்ஙனமிருந்த திர்ஷ்டத்தூய்மனுடைய குமாரன் விப்பிரசித்தென்பவன் ஓடிவந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு அருச்சுனனைப் பூசித்து அவசியம் வேள்விக்கு வருகிறேனென்று விளம்பினன் அவனை அருச்சுனனணைத்து உபசரித்து துருபதனுட்டிற் பொருந்தி அங்ஙனநின்றும் வெளிப்பட்டு இன்னுமங்குள்ள நாடுதேசங்களிற் குதிரையுடன் றொடர்ந்து சகல தேசங்களையும் விஜயஞ் செய்து கொண்டு அஸ்திநபுரிக்குச் சமீபத்தில் வருகின்றான். அப்போது சாரணரால் தெரிந்து கொண்ட தருமராஜன் தன்னைமறந்து சந்தோஷங்கொண்டாடி தண்டாயுதபாணியாகிய வீமசேனனைப் பார்த்து அப்பா மாருதி குமாரா அஸ்வமேதக் குதிரையோடு நமது அருச்சுனன் வந்துவிட்டான் இனியாகவேண்டுங் காரியங்களெல்லாஞ் சர்வஜாக்கிரதையோடு முடியவேண்டும். புறதேச அரசர்களும் அவாளுக்குரிய மந்திரியர் பிரதானியர் முதலிய பல பரிசனங்களும் அவ்வத் தேசவாசிகளும், விருதுக்களோடும் வாத்தியங்களோடும் சதுர்விதப் படைகளோடும் வெகு வாடம்பரத்துடன் வருவார்கள். அவ்வவர்கட்குத் தக்கபடி விசித்திரமான விடுதிகளும் விருந்து முதலிய சன்மானங்களும் கொடுத்து விசாரித்து வரவேண்டும். இவர்களல்லாமல் ஆங்காங்குள்ள விரதியர்களும் வேதியர்களும் தபோதனர்களும் தத்துவக்கியானிகளும் மற்றுமுள்ள ரிஷீஸ்வரர் முனீஸ்வரர் முதலான பேர்களும் வருவார்கள் அவர்கட்கெல்லா மனோபீஷ்டப்படி சகல உபசாரங்களும் நடத்திவரவேண்டும் நீயும் பல சாரணர்களை விடுத்து உலகத்திலிருக்கிற உத்தமர்கள், தற்றவர்கள், பிராமணர், ராஜாக்கள் வைசியர் முதலிய வருணத்தார் இன்னுமிவர் முதலிய சகல ஜெனங்களும் யாகத்திற்கு வரும்படியாய்ச் சொல்லி, வருகிற சனங்கட்கும், யாகத்திற்கு வேண்டிய சாமான்களுஞ் சர்வசாக்கிரதையாய்க்குறைவற அமைத்துக் கொள்ளுகவென்று விளம்பினர்.

## பரிவலச்சருக்கம்

முற்றிற்று.

# ஐந்தாவது,

# வேள்விச்சருக்கம்.

### கண்ணன் துதி.

ஒண்மிதியிற் புனலுருவி யொருகால் நிற்ப வொருகாலுங் காமருசீ ரவுணனுள்ளத்
தெண்மதியுங் கடந்தண்ட மீதுபோகி யிருவிசும்பி னூடுபோ யெழுந்துமேலைத்
தண்மதியுங் கதிரவனுந் தவிரவோடித் தாரகையின் புறந்தடவி யப்பால்மிக்கு
மண்முழுது மகப்படுத்து நின்றவெந்தை மலர்புரையுந் திருவடியே வணங்கினேனே.

ஓ ஜெனமேஜெய மகாராசனே இப்பாற்
பூரித்து வளர்ந்திருக்கும் புயாசலம் படை
த்த வீமசேனன் தமையன் சொற்படிக்கு
நூறுயிரஞ் சாரணர்களை யழைத்து, அந்த
ந்த தேசங்களிலுற்ற பிராமணர் க்ஷத்திரி
யர்கள் வைசியர்கள் சூத்திரர் மற்றுமுள்ள
இதர ஜாதியான சகலமானபேரையு மழைத்
துக்கொண்டு வாருங்களென்று அனுப்பி
விட்டு யாகமண்டபமும் அன்னதானச்சாலை
யும் வெவ்வேருகச் சமைத்து அவைகட்குத்
தங்கச்சரிகை பொற்பாளம் வெள்ளித்தகடு
இவை முதலியவைகளாலும் நவரத்தினங்க
ளினலு மலங்கரித்து யாகத்திற்கு ஓமகுண்
டம் கலசம் கண்டிகை நீர்க்குடம் சிங்காச
னம் வேதிகை மேடை பீடம் இன்னுமுள்
ள வெல்லாம் அமைத்து ஒன்பதுவகை தா
னியங்கள் இரத்தினக் குவியல்கள் பருப்பு
கள் நெய்குடங்கள் வாழைப்பழங்கள் பலா
ப்பழங்கள் மாம்பழங்கள் இளநீர்கள் தேங்
காய்கள் மாவிலை தருப்பை சமித்து மஞ்சள்
காய்கறி வாழை கரும்பு இலை தயிர் பால்
வெல்லம் சர்க்கரை சந்தனம் குங்குமம் கர்ப்
பூரம் பனிநீர் கதம்பம் கஸ்தூரி தாம்பூலம்
புட்பமாலை முடி குடை கவரிதோட்டி கண்
ணடி கோசலம் கோமயம் பற்பல புண்ணிய
தீர்த்தங்கள் பட்டு பட்டாவளிகள் தினுசு
வாரி கோடி மடிகள் கட்டில்கள் மெத்தைகள்
கின்னரி தம்பூர் நால்வகை யாழ் வீணை மர
வுரி தண்டம் கமண்டலம் உருத்திராட்சம்
யோகவேஷ்டி மிதியடி அம்பு அம்புருத்
தூணி வில் வேல் வாள் இவை முதலான
யாகசாலைக்கு ளிருக்கத்தக்க பல பொருள்க
ளையும் யாவரு மாச்சரியப் படும்படிக்குச் சே
கரித்து எவ்வெவற்றை எந்தெந்த ஸ்தான
த்தி லமைக்கவேண்டுமோ அவ்வவற்றை
அந்தந்த ஸ்தானத்தி லமைத்துக்கொண்டி
ருக்கின்றான்.

---

### அர்ச்சுனன் விஜயத்தைப்பற்றி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுந் தருமராசனுங் கொண்டாடல்.

அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான் தரு
மராசன் முதலியபேரைப் பார்த்து நாம்
அனுப்பிய குதிரையுடன் அர்ச்சுனனும்வந்
துவிட்டான். அநேக தேசத்தரசர்களும் யா
கத்திற்கு வந்தார்கள். விஜயன் திக்குவிசயஞ்
செய்து துவாரகைக்கு வந்தபோது விஷ்
ணுதேவனென்னும் பிராமணனுடனே ஒரு
செய்தி சொல்லி அதை யென்னுடன் சொ
ல்லி தெரிவிக்க வேண்டுமென்று அனுப்பி
வைத்தான். அப்படியே யப்பிராமணன் வந்
து புகன்றான். அஃதென்னவெனில் தேசத்
திராசர்களை யெல்லாம் உறவுபண்ணி யாகத்
திற்கு வரும்படியாகச் சொன்னேன். அப்ப
டியே தப்பாமல் வருவார்கள். வந்தாற்
பழைய பகைகளைப்பாராட்டாமல் மரியாதை
யுடன் அழைத்துப்போய் நல்ல வசனங்களி
னல் திருப்தி பண்ணிவைத்து தக்க விடுதிக
ளமைத்து விடவேண்டும் பாண்டி நாட்டிலி
ருந்து சித்திராங்கதை புத்திரன் பப்புருவா
கன் தம்மைத் தரிசிக்கும்படியாய் வருவான
வன் தாய்மார்களுஞ் சேர்வார்க ளவர்களை
ஆதரித்துக் காக்கவேண்டும் என்று சொல்லி
யனுப்பினன். இதை யுமக்கு தெரிவித்தே
னென்றான். அதை தருராசன் கேட்டு ஓ ஸ்ரீ
கிருஷ்ணமூர்த்தியே நம்முடைய அர்ச்சு
னன் அஸ்வத்தின் பின்னுற் சென்று அரச
ரை வென்று செயங்கொண்டு அவ்வவர்க
ளிடத்தினின்றுந் திரைகளளந்து வந்த
செய்தியை சாரணர் சொல்லக் கேட்டே

னதை நானென்னென்று சொல்லுவேனெ
ன்று புகழ்ந்தா ரிப்படி ஸ்ரீ கிருஷ்ண
பகவானும் உதிஷ்டிர மகாராசனும் அர்ச்சு
னன் பெருமையைக் கொண்டாடிக்கொண்டி
ருக்கையிற் சிரசிற் கிரீடமும் மார்பில் மாலை
யும் கைகளில் வில்லும் பாணமுங்கொண்டு
பிரளயம்போல் நாள்வகைச்சேனையும் நானு
சாதிப் பிரபுக்களும் பூமியைச் சூழ்ந்தசமுத்
திரம்போல் வந்து யாகசாலையைச் சுற்றியிரு
ந்தார்கள் பேரி சச்சரி பாங்கா முரசு இவை
முதலிய வாத்தியங்கள் முழங்க கீர்த்திப் பிர
தாபசாலிகளாகிய சுசாதி ராஜ வம்சத்தார்
இரதாருடராய்த் தொகையிறந்தபேர்வந்தார்
கள் யாதவகுல சிரேஷ்டாள் குந்திபோஜ
சிகாமணிகள் சேதிபதேசாதிபர்சிந்துதேசா
திபர் காந்தாரதேசாதிபர் விராடதேசாதிபர்
துருபத தேசாதிபர் கிரிவிரச தேசாதிபர்
இவாள் யாவரும் கங்கைக்கரை வெள்ளம்
போற் பரவியிருந்தார்கள் அப்போது ஸ்ரீ
கிருஷ்ணமூர்த்தி தருமராசனைப் பார்த்து ஓ
மெய்விரதரே இத்தனை தேசாதிபர்களும் பிரி
யமோடு வரச்செய்த அர்ச்சுனனுடைய வல்
லபத்தைச் சொல்ல யாரால்முடியும் அவனு
க்கு வலது தொடையில் செவப்பாகிய ஒரு
மச்சமிருக்கிறது அதுவாக்கும் இவ்வளவு
தூரம் வெற்றியை விளைவித்தது என்று
மேனியான்கூற அதுகேட்ட தருமர் விய
ந்து சந்தோஷமடைந்தார் அப்போதிந்தச்
சங்கதியைக் கேட்டுக்கொண்டிருந்த திரௌ
பதி நகைத்து ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் திரு
ஷ்டிகழித்து நெட்டையிட் டருளினன்
அதேனென்ருல் இரகசியதானத்தி லிருக்
கிற மச்சம் எல்லோரு மறியும்படிக்கு வாசு
தேவன் திருவாக்கினுல் வெளிப்பட்டதே
யென்று நகைத்தவளாகி உடனே சென்று
அந்தப்புரச் சாலையில்வருஞ் சுசாஸ்திரீகளை
யெல்லாம் விசாரிக்கும் வேளைகளில் முயற்
சியா யிருந்தனன்.

இப்பால் நாரதர் வசிட்டர் காசிபர்
பிருகு அகஸ்தியர் தூறுவாசர் கௌதமர்
உதங்கர் சனர்க்குமாரர் கண்ணுவர் மார்க்
கண்டேயர் தவுமியர் வேதவியாசர் சயமுனி
வர் பரதர் இன்னு மநேகங்கோடி ரிஷிஸ்வ
ராள் வந்தார்கள் அன்றியும் சிவந்த சடா
மகுடமும் வெளுத்தபற்களும் உயிர்ந்த உட
லு பருத்த தண்டிகமண்டலமும் வேதவாக்
கும் மரவுரியும் குழைசெவியும் காவிகாம்பர
ங்களு முடையவர்களாய் அளவற்ற மகா
தபோதனர்கள் வந்தார்கள் இவர்களியாவரு
ங்கூடிய கோலமானது தருமராஜனுடைய
பூர்வ புண்ணியமெல்லா மவரைக் காண
வந்ததாக இருந்தது தருமனந்தனருந் தவு
மிய புரோகிதரும் வந்த பெரியோர்களுக்கு
வணக்கஞ் சொல்லிச் சரணம் புகுந்து பூசா
விதியை ஆசாபாசத்துடன் புரிந்து தம்மை
தான்மறந்து மகிழ்ந்தனர் இன்னு முந்திய
நடையும் முப்புரிநூலும் கிருட்டிணஞ்சன
மும் தர்ப்பைப் பௌத்திரமும் பின்னற்
சிகையும் பிரமதேசசுயாய் வெகுபேர்வந்தார்
கள் அவர்களையும் உபசரித்து பாதபூசை
பண்ணிப் பணிந்தனர் இப்பால் பால்போல்
மொழி சேல்போல் விழி ஆல்போல் வயிறு
நூல்போலிடை வேல்போற் கைவீச்சு வரா
ல்போற் கண்டைக்கால் இத்தியாதி நன்மை
களையும் ஆபரணங்களையு முடைய அரண்
மனைப் பெண்கள் யக்ஷவனிதையர் கின்னர
ஸ்திரீகள் கந்தருவமாதர் ராட்சத மங்கை
யர் பிராமணவனிதையர் ரிஷியீஸ்வரர் மட
ந்தையர் நாகலோக அரிவையர்வேடந் தெரி
வையர் குறச்சிறுமியர் நீரரவஞ்சியர்மலையா
மகளிர்கள் ஆகிய நாலுகுலப் பெண்களும்
வந்து சேர்ந்தார்கள் அப்போது எங்குங்
குடைகள் கொடிகள் ஆலவட்டங்கள் தால
வட்டங்கள் மகர தோரணங்கள் வெண்சா
மரைகள் மயிற்பீலிகள் பீலிக்குஞ்சங்கள்
விருதுகள் டால்கள் இவை முதலிய சின்
னங்களும் யானைகள் குதிரைகள் தேர்கள்
பதாதிகள் என்னும் நாற்படைகளும் ஆங்
காங்கு நிறைந்து நின்றன இதன்றியும்
முத்துமாலைகள் பவழக்கோர்வைகள் பொன்
னரித்தாமங்கள் இரத்தினத் தாழ்வடங்கள்
இரசித மலர்மாலைகள் என்னு மாரங்களைப்
புனைந்த மார்பினராகிய பாணினிபகவர்க்
கொப்பான வடமொழிப் பாவலர்கள் சமஸ்
கிர்த சுலோகங்கள் கற்பனை யலங்காரங்கள்
பாடிக்கொண்டு வர அகஸ்திய முனிவருக்
கொப்பான தென்மொழிப் பாவலர்கள் இய
லிசை நாடகமென்னு முத்தமிழ்களையுமிசை
த்துக்கொண்டுவரபூத பௌஷ்யவர்த்தமான
மென்னுந் திரிகாலமும் அறிந்து சொல்
லும்படியான மந்திரிகள் இராஜ னேக்கந்
தெரிந்து பழகும்படியான தந்திரிகள் நிசந்
தைப்பேசிய உயிர்ச்சேவகர்கள் மாயா மயக்

கததிலழுந்தாத காவலாளிகள் மனுவிக்
கியான முணர்ந்த நீதிமன்னவர்கள் சகுன
சாத்திரமுதலிய நிமித்திகப் புலவர்கள் விதி
விலக்குகளையறிந்த அந்தணாளர்கள்விண்ண
முதையொப்பச் சபைக்கு மடைத்தொழிலா
ளர்கள் தாமரைமாலையும் அக்கினியுங் காட்
டிய கையர்கள் அன்னக்கொடியுந் திரிதண்
டமு நீட்டிய துய்யர்கள் பட்டவர்த்தனர்
மகுடவர்த்தனர் சேனுதியர் தண்டத் தலைவர்
குடிபடைகள் ஆகிய சகலமான பேருந்
தாம் தாம் என்னு முழக்கத்தோடும் வந்து
நிறைய வேலாயுதம் சூலாயுதம் பாலா பல்ல
யம் சவளக்கழி பவளக்கோல் கார்த்தி
கை கூர்த்திகை அத்திரம் சத்திரம் இவை
முதலிய படைகள் ஆங்காங்கு விளங்க விரு
ஷபக்கொடி கருடக்கொடி புலிக்கொடி
யானைக்கொடி யாளிக்கொடி அன்னக்கொடி
அன்றிற்கொடி மயிற்கொடி குயிற்கொடி
பசுக்கொடி பருந்துக்கொடிய அனுமக்கொடி
முரசக்கொடி அரவுக்கொடி புருஷாமிருகக்
கொடி வெள்ளைக்கொடி சிவப்புக்கொடி மஞ்
சட்கொடி நீலக்கொடி என்னு மிவ்வகைக்
கொடிகளெல்லா நிறைந்து நெருங்கி இன்
னுமிவ்விதமான அநேக வைபவங்கள்
மழைக்காலம் கோடைக்காலம் க்ஷாமகால
மென்றில்லாமல் நிரந்தரம் பெருவெள்ள
மோங்குகின்ற கங்காப் பிரவாகம்போற்
பெருகி மெய்யறிவு விளங்கிய வேதவேதியர்
கள் பொருந்திய இயாகசாலை யிடம் போதா
தென்றிதசுக்கத் தக்கதாய் ஈரேழுலகமும் ஓரி
டத்திற் குடிபுகுந்தவாறுபோல் நிறைந்தன.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜ
னே மூன்று குலத்திராஜர்களில் எத்த
னையோ பேர் எத்தனையோ கோடி மகமுடித்
திருப்பார்கள் அத்தனைகோடி மகத்திலும்
எந்தெந்த யுகத்திலும் இந்த வைபவம்போ
லில்லையென்று மார்க்கண்டேயர் வசிட்டர்
நாரதர் வேதவியாசர் இவர் முதலாகிய சகல
முனிவர்களும் புகழ்ந்தார்கள் மேலும்
அங்குவந்த அரசர்களும் பிராமணுளுந்
தங்கள் தேகத்திற் றரிந்துகொண்டிருக்கிற
வாசனைப்பொடிகளும்சந்தனக்குழம்புகளும்
ஆபரணக்கல்லுகளும் பொற்சன்னங்களும்
உதைப்பட்டுதிர்ந்து திப்பைத் திப்பையாய்க்
குவிந்துபோயின பனிநீர்களைக் குடங் குட
மாய்ச் சொரிந்தார்கள் அரசரணிந்திருக்கப்
பட்டமாலைகளிற் பிரகாசங்கள் பெருக்கெடுத்
துத் துளிக்க அவற்றைச் சுரும்பினங்கள்
களித்திரைந்து சென்று கிரகிப்பன சனநெ
ருக்கத்தினுல் யாவருமொதுங்கி யொதுங்கி
நடந்து தெளிப்பார்கள் யானை மதங்களும்
குதிரைவாய் நுரைகளும் பசுவின் பால்
களும் இதுவோ அதுவோ மற்றெதுவோ?
என்று மயங்கும்படிக்கு ஓடின கருந்தூள்
செந்தூள் ஆகாயத்தில் நிறைந்தன யாக
சாலையினின்று முண்டாகிய ஓமப்புகை
உலகமெங்கும் மணக்குகின்ற கரும்பு சாற்றி
ன் புகைவஸ்திரீகள் கூந்தலுங்கூட்டிய அகிற்
சந்தனப்புகை சமையற் செய்கின்ற மடைப்
பள்ளிப் புகை தேவதை கட்டுகின்ற சாம்பி
ராணிப்புகை ஆகிய விப்புகையாவு மெங்கு
மயங்கி யியங்கின இருக்கு யசுர் சாமம் அதர்
வணம் என்னு நான்கு வேதமந்திரங்களு
மெங்கு மிசைத்தன விண்டலத்திற் கட்டிய
மணிகளோயாம லசைந்தன முரசு காகளம்
பேரி பூரி இவைகள் மூலைக்குமூலை முழங்
கின ஒருபக்கத்திற் பரத நாட்டிய மாடுவர்.
ஸ்திரீ சனங்களும் புருஷசனங்களும் ஒரு
வருக்கொருவர் புஷ்பங்கள் சூடி மரியாதை
யாய்த் தழுவியணைத்துக் கூடுவர் ஒருவர் மீ
தொருவர் பொன்மாரி பூமாரிவாரிப் போடு
வர் தண்டை சதங்கை கிண்கிணி சிலம்பு
இவைகள் புலம்புகின்ற பாதங்களையுடைய
தையலாரையும் ஆடவரையுங் காமுறச்செய்
யுங் காமன் பவனியொருபுறம் வருவன்
இதன்றியும் வீதிகளியாவுந் திருவிழாவோ
சையும் மண்டபங்களில் தோத்திர வோசை
யும் இயாகசாலையில் மந்திரவோசையும் சமி
த்து நெய்களினுல் எரிகின்ற அக்கினி யோ
சையும் வில்லோசையும் நாணேசையும்
வெடியோசையும் கெடியோசையும் தோப்பு
களில் வண்டு முதலிய பட்சிகளோசையும்
வெள்ளிடமெல்லாம் தண்டைச் சிலம்புகளி
னேசையும் ஆகாயத்திற் கொடியோசையும்
ஆங்காங்கு தேவர்களோசையும் வாங்காத
துந்துமியோசையும் போசனச் சாலைகளிற்
புசிக்குமோசையும் இரப்போர்க்கீயு மோசை
யும் இரந்து கேட்கிறபேர்களி னில்லாமை
போயுண்டான வோசையும் பந்தி பந்தியா
யிருந்து போசனம் புசித்து வந்தவர்களுக்
கும் வராதவர்களுக்கும் வழிபார்த்து உபசரி
க்குமோசையும் ஆகிய இவ்வித வோசைகள்
எவ்விதவோசைகளினு மெய்தி அப்பாலுந்

தாண்டின அப்போது அஸ்தினபுரத்தி
லுள்ள பிரமுகாள் தங்களுடைய மனைகள்
தோறும் இரவலர்களுடைய மனமும் இன
மும் சனமும் தினமும் ஒன்றினுக்குறைவில்
லையென்று சொல்லிக் களிக்கும்படி அன்ன
தானமுஞ் சொர்னதானமு மபரிமிதமாக
நடத்தி பரிசனங்களாகவந்த பேர்களுக்கெல்
லாம் படிமுதலியவுங்கொடுத்து கடிமுரசறை
வித்து சரிகிருஷ்ணப் பெருமாளுந் தரும
ராஜனுந் திருநாள் கொண்டாடிய செல்
வம்போலிருந்தார்கள்.

---

## அருச்சுனன் அஸ்வமேதக் குதிரையோடு அஸ்தினபுரம் வருதல்.

அந்தவேளையில் ஆஜானுபாகுவாகிய
அரசனொருவன் வந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்
திக்குந் தருமராஜனுக்குஞ் சாஷ்டாங்க
தெண்டஞ் சமர்ப்பித்து அஸ்வமேதக் குதி
ரையுடன் அனேக தேசங்களிற்போய் அப
ஜெயமில்லாமல் அருச்சுனராஜன் நமது
அஸ்தினபுரத்திற்குச் சமீபத்தில் வருகின்
றூர் இராத்திரிக்கு அங்கேயே குதிரையை
விடுகிறபடியால் அஸ்வாலய மென்றொரு
ஈஸ்வராலயம் கட்டிப்போட்டு வருவார்
போலுமிருக்கிறது தங்களுடைய பாததரிச
னம் அந்த நரனுக்கு நாளைக்குக் கிடைக்கு
மென்று நவின்றனன் அச்சொல்லைக்கேட்ட
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுந் தருமராஜனு மானந்
தப்பட்டு எப்போது பொழுதுவிடியுமென்று
இரவுமுழுதும் நித்திரையற்றிருந்தார்கள்
புண்ணியவான்களின் புகழ்ப்பிரகாசம் போ
லுஞ் சண்முகக்கடவுளினுடைய வேலொளி
போலுங் கீழ்திசையிற் சூரியனுதித்தான் சக
லமானபேர்களுங் காலக்கடனை முடித்து
அர்க்கியங் கொடுத்துச் சூரியனைத் தொழுது
அணிமணிப்பூணுதி அலங்காரம் பண்ணி
கொண்டனர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி விதுர
மகாராஜன் நகுலராஜன் சகாதேவராஜன்
கிருபாச்சாரியார் உயிச்சன் சஞ்சயன் இவர்
முதலாயினோர் வாகனரூடராய் மகாசனங்க
ளும் புறப்பட்டு எதிர்சென்று வீதிகளில்
அமைத்திருக்கின்ற பூரணகும்பங்கள் பச்
சைப்பந்தல்கள் தோரணங்கள் வாழைகள்
கமுகுகள் கரும்புகள் இவைமுதலிய விநோ
தங்களைப் பார்த்து வேடிக்கையாய் ஆட்ட
பாட்டங்களுடன் சந்தன தாம்பூல புட்பங்
கள் வழங்கி நாராயணனுடைய உலகத்தைக்
கண்டுகளிக்கும் நாட்டம்போல் மகிழ்ந்து
அர்ச்சுனனைக் கண்டார்கள் அர்ச்சுனராஜன்
உதயத்திலெழுந்து ஸ்நான மந்திர செபதப
ங்களை முடித்து சூரியனைப்பணிந்து ஆசாரி
யர்முதலாகிய பிரமரிஷிகளையும் பிராமணரை
தொழுது அஸ்வத்திற்குப் பூசைபுரிந்து
ஆனந்தத்துடன் தன்னைக்காணவந்த ஸ்ரீகி
ருஷ்ணமூர்த்தி முதலான பந்துக்களையும்
பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் முதலிய
பரிசனங்களையும் பார்த்து, எவரெவர்களுக்கு
எப்படி சன்மானஞ்செய்யவேண்டுமோ அவ்
ரவர்களுக்கு அப்படிக்கெல்லாம்வணங்குதல்
தழுவிக்கொள்ளுதல் வந்தித்தல் சிந்தித்தல்
வாயாலுபசரித்தல் சிரக்கம்பம் பண்ணுதல்
கரமமைத்தல் இவை முதலிய மரியாதைக
ளெல்லாஞ்செய்து, பெரியோர்களால் ஆசீர்
வசனம்பெற்று நகுல சகாதேவர்களுடைய
பணிதலை மேற்கொண்டு அவர்கட்குப் பரிவு
கூறி, யாவர்களும்வாகனங்களிலேறிப்புடை
சூழ்ந்து வரும்படியாக ரதமேறி, ஸ்ரீ கிருஷ்
ணமூர்த்தியுடன் வார்த்தை யாடிக்கொண்டு
அஸ்தினபுரத்து இராஜவீதியில் அனைவரு
நெருங்க வருகின்றான்.

அப்போதவ் வீதியிலுள்ள ஸ்திரீசனங்
கள் மோகமாய்வந்து ஆலாத்தி முதலிய
துஞ் சுற்றி, இந்த மகா புருஷனைச் சேரப்
பெற்ற புண்ணியசாலிகளின் பாக்கியமே
பாக்கியமென்று புகழ்ந்து கொண்டாடி,
இந்தக் கிருஷ்ணார்ச்சுன ரிருவரையும் ஏவ
லாளிகளாய்ப்பெற்ற தருமராஜன் நமநூரில்
தெய்வற் துரைத்தனம் பண்ணும் படிக்குக்
கிடைத்தது உத்தமர்களாகிய நமது முன்
னோர்கள் செய்த பூர்வபுண்ணியப் புனித
மென்றுபூரித்தார்கள் ஆடவஜனங்கள் யாவ
ரும் ஆனந்தத்தோடும் வந்து கண்டு எப்
பொருட்கு மிறையாகிய கயிலாசவாசனைக்
கண்டு பண்டுசண்டைமூண்டு அதனலவரு
ளைக் கைக்கொண்டதன்றி திரிபுரதகனஞ்
செய்தருளிய அச் சிவபெருமானைப்போல்
தேவர் பகையைச் செயித்த தீரத்துவவீரன்
தேவலோகப் பட்டாபிஷேகம் பெற்ற செல்
வன் உத்தரகுரு கண்டகத்தை துஸ்தரயுத்த
த்தில்வென்று பத்தரைமாற்றுப் பசும்பொன்
னைப்பெற்ற பாக்கியன் பூர்வம் ஒருதேர்

மிசை உத்தரகுமாரன் தேரூர்ந்துவந்து பந்
துவர்க்கமுதலிய யோர்களை மாட்டி பேய்போ
லாட்டி யாவரையும் புறமுதுகிட்டோட
வோட்டி உத்தரை நிரைமீட்சிகொண்ட உத்
தமன் பதினன்கா நாட் போரில் ஐந்துவித
வியூகங்கட்டிய துரோணாச்சாரியரையுஞ் சுத்த
வீரர்களையும் வென்று கற்ற விற்றிறத்தை
யுங் காட்டி வியூகத்தைக் கலைத்து சயிந்தவ சம்
மாரங்கொண்டு சபதத்தை நிறைவேற்றிய ப
ராக்கிரமன் அந்தச் சயிந்தவன் தந்தைதந்த
தர்ப்பணத்தையும் அவன் தலையையும் போக்
கிய வியாக்கிரமன் இவன் திருஷ்டிக் கெதி
ரில் தேவாதி தேவர்களுந் தலைகாட்டமாட்
டார்கள் என்று துதித்தவர்களாகி இந்தப்
பரதகண்ட முழுமையும் அஸ்வத்துடன்
கூடப்போய் வந்தானகையால்யாவரும் இவ
னுட எதிர்ப்பவர்க ளில்லையென்று மதித்து
க்கொண்டாடினார்கள் இவ்வா றஸ்தினபுரத்
திலுள்ள ஆடவரும் ஸ்திரீகளும் புறநகர்
வாசிகளும் புகழ்ந்து கொண்டாடும்படியாய்
அர்ச்சுனன் இராஜ மண்டபத்தண்டையிற்
போய்த் தேர்விட்டிழிந்து அந்தப்புரத்திற்
குச்சென்று காந்தாரியம்மன் குந்திதேவி இ
வர்களைத் தொழுது மற்றமாதர்களுக்கெல்லா
ம் பிரிய வசனங்கள்பேசி இராஜகொலுக்
கூடத்திற்கு வந்து தருமராஜன் முதலிய சா
துக்களுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு
அவர்களால் மங்களாசனம் பெற்று வீமராச
னைப்பணிந்து வினவவேண்டுவ வினைத்தும்
வினவி அஸ்வமேதக்குதிரையையும் அதனு
டன் கூடவந்த பிராமணுள் முதலிய பேர்க
ளையுங் கங்கைக்கரை யோரத்திற்கட்டிய யாக
சாலைக்குப் போகும்படியாய் உத்தரவுசெய்து
சபாமண்டபத்தி லோராசனத்தின் மீதிரு
ந்து திக்குவிசயமாகப்போய் ஆங்காங்கு நட
த்திவந்த சங்கதிகளையெல்லாம் பேசிக்கொ
ண்டு இருக்கின்றான்.

---

### உலூகி சித்திராங்கதை பப்புருவாகன் இவர்கள் வருதல்.

அப்போது அநேக ராஜமண்டலம்
புடைசூழ்ந்துவர ரதகஜதுரகபதாதி நால்வ
கைச் சேனைகளடர்ந்துவர சர்வவாத்தியமே
ளங்கள் முழங்கி முடைந்துவர, சகல விரு
துகளுடன் கொடி குடை தயங்கித் தொடர்
ந்துவர, கருந்தாள் செந்தா லெழும்பிப்
படர்ந்துவர, நாககன்னிகையாகிய உலூகி
யும் பாண்டிய புத்திரியாகிய சித்திராங்
கதையும் பப்புருவாகனும் பாண்டியநாட்டி
ருந்து வந்தார்கள். அவர்களை முரசக்கொடி
வேந்தனனுப்பிய முறைமைப்படிக்கு அநே
கம் அரசர்கள் எதிர்கொண்டு அழைத்து
வந்தார்கள் அப்படிக்கு வந்த பப்புருவா
கன் தன் தாய்மார் முதலிய ராஜ ஸ்திரீ
களை அந்தப்புரத்திற் கனுப்பிவைத்து, தன்
னுடன் வந்த பற்பல மன்னரும் பாளையக்
காரரும் குறுநிலவேந்தரும் குடித்தன மாந்
தரும் கோபமற்ற சாந்தரும் தேர்முதலிய
வாகனங்கள் விட்டிறங்கச் செய்து, தான்
தருமராஜனுடைய சரணாரவிந்தத்திற் பணி
ந்தான் அவர் தனக்குப் பிராணபதமாகிய
அத்தம்பிப் பிள்ளையை யணைத்தெடுத்து, மு
த்தங்கொடுத்து வாழ்த்தி, அதோ உன்பெரி
ய பாட்டனென்று கைகாட்டினார். நீட்டிய
கையை முடக்குமுன்னமே தாட்டியான தர
ணீசன் திரிதராட்டிரனுடைய பாதங்களில்
தெண்டனிட்டுக் கொண்டான். அவனு மெ
டுத்து அணைத்து ஆசீர்வதித்து க்ஷேமங்க
ளைக் கேட்டான் அப்பாற் ஸ்ரீ கிருஷ்ணமூர்
த்தி பலராமர் வசுதேவர் சாத்தகி அருச்சுன
ன் வீமன் நகுல சகாதேவர் இன்னும் பெ
ரியோர்களுக்குத் தெண்டம் பண்ணினான்
அவர்க ளியாவரும் புகழ்ந்து மகிழ்ந்து
வாழ்த்திப் போற்றினார்கள். இராஜோப
சாரங்க ளியாவும் நடாத்தி அந்தப்புரத்
திற்குச் செல்லச் செய்தார்கள். வந்தியர்
புகழ்ந்துவரச் சிந்தை தெளிந்த மைத்தன்
அந்தப்புரத்திற் கேகி திரௌபதாதேவி சுப
த்திராதேவி முதலிய தாய்மார்களையும் குந்
திமாதேவி காந்தாரிதேவி முதலிய பாட்டி
மார்களையும் சாஸ்டாங்கநமஸ்காரஞ்செய்து
அவர்களும் உபசரித்து வாழ்த்த மங்களாச
னம் பெற்று இராஜசபைக்கு வந்து ஆசன
த்திலமர்ந்திருந்தான் அந்தப் பிள்ளைக்கும்
அவனுடன்கூடவந்த இராச பரிவாரங்களு
க்கும் ஆடையாபரண கேயூரமணிகுண்டல
கிரீடங்களெல்லாங் கொடுத்து மேலான மரி
யாதை பண்ணினார்கள். இதே வரிசையாய்
சித்திராங்கதை உலூகிமுதலிய ராசஸ்திரீ
களுக்கும் வெகுமதிவரிசை நடப்பித்தார்கள்
இவ்விருவரு மாமிமாருக்கும் சக்களத்திமார்
களுக்கும் ஓரகத்திமார்களுக்கும் உற்றார் உற
வின்முறையிற் சிறந்த சுற்றத்தாருக்கும்பணி

தல்செய்து அணியாகிய ஆசீர்வசனம்பெற்று அவரவர்களுக்கு அமைத்த அரண்மனை விடுதியில் அமர்ந்திருந்தார்கள் அர்ச்சுனராசன் தனித்துவந்து நாககன்னிகை சித்திராங்கதை இவ்விருவரையுங் கண்டு ஆசைகொண்டு இத்தனைக்காலம் உங்களைவிட்டு பிரிந்திருந்ததுண்டு அக்குற்றங்களை மன்னித்துக் கொள்ளுங்கள் என்று மனங்கலந்து கூடிக் குலாவிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ண பகவானுடன் கிளர்ச்சி யுற்றிருந்தான்.

---

### இயாகாதி கிரியைகள் தொடங்கி நிறைவேற்றுதல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே இவ்வாறு சகல தேச ராசர்களும் வந்து நடக்கவேண்டிய சிறப்புகளெல்லாஞ் சர்வசித்தமாய் நிறைவேறி யிருக்கும்போது இனி நடக்கவேண்டுங் காரியங்கட்கு வேதங்களில் விளம்பிய விதிப்படிக்கு வேதியர்விவரித்தார்கள் அப்பிரகாரமே அரசர்களமைந்தார்கள் உடனே அந்தணரெழுந்து நாற்கால் சிவன் இருகாற்சிவன் இவ்விரண்டும் மூன்னூறு இவைகளைத் தருப்பைப் புற்களினுற் பந்தித்து வேதமந்திரஞ் சிந்தித்துநவமாகிய சமித்துகளிட்டு நான்குபுறமுந் தேவதைகளைப் பந்திப்பிட்டு விரிந்து பிரகாசிக்கும் வேதிகை தொட்டு முத்துராசி ரத்தினராசிகளைப் பரப்பி தங்கக் கலசம் வெள்ளிக்கலசம் தாம்பரக் கலசங்கள் அமைத்து அதி லாகாய கங்கையை விடுத்து மாவிலை தருப்பை வஸ்திரங்களை புனைந்து தூபதீப நைவேத்தியம் புரிந்து திரிமூர்த்தி சொரூபமாகச் சிந்தித்து இன்னும் பலதேவர்களுக்குண்டான கலசங்களை எங்கெங் கடைக்க வேண்டுவனவோ அங்கங்குங் கணக்கின்படி யமைத்து காருடரூப விஷ்ரூப ரூபங்கள்போல் ஓமவேதி யுண்டாக்கி பூமாலை மணிமாலை மாணிக்க மாலைகள் பூட்டி சரஞ்சரமாய்த்தொடங்கவிட்டுக்காட்டி, வேத வியாசரும் ரிஷீஸ்வரர்களும் பொருந்தி கடலொலிபோல் வேதவோசை முழங்கி, சுவர்ணப் பாத்திரங்களும், இரத்தினப் பாத்திரங்களும் உபய பாத்திரங்களாக வைத்து, காருகபத்தியம் ஆகவனீயம் தக்ஷிணாக்கினியம் என்னும் அக்கினி மூன்றையும் வளர்த்தி, திக்கு தேவதைகள் வசுக்கள் தேவ கணங்கள் இவை யெல்லாவற்றையுந் திசைகடோறும் ஸ்தாபித்து அஷ்டலட்சுமியையும் ஆதிநாராயணனையும் ஆதியாக நிறுத்தி வியாசபகவா னெழுந்து, தருமராசனிடத்தில் வந்து இனிமேல் நீ ரெழுந்திருமென்று சொல்லி, இது நல்ல காலம் இதுவே நன்மையான லக்கினம் என்று நவின்றார் அதுகேட்ட மாத்திரத்தில் உதிஷ்டிரரெழுந்து சென்று கங்காஸ்நானம் பண்ணி, புனித வஸ்திரந் தரித்து, பிரகாச மிகுந்த ஆபரணங்கள் புனைந்து, திரிபுண்டர மணிந்து, மகாலட்சுமிக் கொப்பாகிய பாஞ்சாலியோடு விரதசீல வரதனாகி புரந்தகனைப்போற் சிறந்து, மேதினி யெங்கும் பொங்கிய மேக முழக்கம்போல் மேளவாத்தியமும் வேதவோசையு முழங்க வேள்விசாலையிற்புகுந்து, மகாரிஷிகளுக்கெல்லாம் வணங்கி மங்களாசனந்தாங்கி, எக்கியக்குண்டத்தருகாமையில் எல்லோருங் காணவெழுந்தருளினர்.

இப்பால் தம்பிமார்களும் யதுகுலராசர்களும் பக்கத்தில் நிற்க, ஸ்ரீகிருஷ்ண பகவான் கருணா நிதியாய் எதிரில் தோன்ற, அகத்தியர் வியாசர் தவுமியர் எக்கியவற்கலர் இவர்களெல்லாரும் யாகப்பிரதாக்களாகவும், சயமுனி வசிட்டர், வைசம்பாயர், வரதமுனி இவர்கள் வக்தா சிரோந்தாவர்களவும், நாரதர் முதலாகிய பேர்கள் உபாத்தியாயராகவு மிருந்து, தேவர்களருந்தும் விருந்து இதுதானென்று செப்பும்படிக்கு ஏழுநாள் இரவுபகல் ஓயாமல் இளைப்பு நித்திரை பாராமல், இடைஞ்சல் வாராமல் அக்கினி பூசை நடாத்தி மந்திர தேவதைகள் வசத்தாய் தருப்பைக்கயிற்றால் அஸ்வத்தை யூபத்தம்பத்திற் பிணைத்து, வபையெடுத்து ஆகுதி கொடுத்துத் திருப்தி பண்ணினார்கள். அப்போது வீமசேனன் யாகசாலைக்கு வெளியில் வந்து தன் கையை நீட்டி, ஓவென்றுகூவி, உலகங்களி லிருந்தும் வனங்களிலிருந்தும் பலைக்குகைகளி லிருந்தும் வந்திருக்கிற மகானுக்கள் முதலியஎல்லாச்சனங்களுக்குஞ் சொல்லுகிறேன் கேளுங்கள், யாவருஞ் சங்கோசப்படாமல், வஞ்சனமில்லாமல், கேட்க வேண்டுமென்றுன்னாமல், தங்கள் தங்கட்கு

இஷ்டமானபொருள்களைக்குறைவில்லாமல்
எடுத்துக்கொண்டு போகலாம் இதற்கியா
தொரு தடையில்லை என்று மூக்கார்ற் கூறி
னன். அதை யாவருங்கேட்டுச் சந்தோஷப்
பட்டு, யானைகள் குதிரைகள் தேர்கள் பல்லக்
குகள் குடைகள் கொடிகள் ஆலவட்டங்கள்
சத்திரங்கள் சாமரங்கள்கிரீடங்கள்வீரபட்ட
சால்வைகள் பீதாம்பரங்கள் நவமணிப்பணி
கள் தனித்தனியாகிய ஒன்பதுராசி ரத்தினங்
கள் வில்லுகள் அம்புகள் அஸ்திரங்கள்
சஸ்திரங்கள் இவற்ருற்செய்த பாத்திரங்கள்
பசுவினங்கள் நாடுகள் நகரங்கள் இவைமுத
லாகியவைகளையெல்லாங் கேட்டபேர்களுங்
கேளாதபேர்களுமாய்த்திரணமாகவெண்ணி
கொள்ளை யடித்தார்கள் அக்கொள்ளையிற்
குறையக்குறைய மேலுமெல்லா வஸ்துக்
களையும்விஸ்தாரமாய்க் கொண்டுவந்து குவி
ந்துகொண்டே யிருந்தான் வீமசேனன்
இப்படிக்கு வீமன் கொள்ளைகொடுக்க மற்றத்
தம்பியர் தானமுந் தியாகமும் ஓயாமற் செய்
து, இன்னமும் பெறுகிதற்கு ஏழை மனித
ரில்லையே யென்று ஏக்கங்கொண்டார்கள்.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே !
நானென்று சொல்லுகிறேன் கேளும் விண்
டலத்தினின்று வருஷிக்கிற மேகத்தினனை
யாதபேரும் மண்டலத்தில் தருமராஜனியற்
றிய யாகத்தில் மகாராஜனுகாதபேருங் கண்
டறியேம் குபேரலோகத்திலும் அளவற்ற
தரித்திராளுண்டு தருமராஜன் யாகத்தில்
தரித்திராளென்பவரில்லை. இந்திரலோகத்
தில் போகமில்லா திருக்கினுமிருக்கும் இந்த
முரசக்கொடியோன் யாகத்தில் யோகமில்லா
ரும், போகமில்லாரும், மோகமில்லாரும்,
தியாகமில்லாருமில்லை. கூன் குருடு செவிடு
மூடம் ஊமை சப்பாணி குள்ளன் சித்திரக்
கள்ளன் இவர் முதலாகிய பேர்களுக்கும்
வாகனங்களோடு பலவண்மைப் பொருள்க
ளெல்லாங் கொடுத்தார்கள் இந்த அஸ்வ
மேத யாகத்திற்கு வராதபேர்கள் தான் தரித்
திரர்கள் நோயாளிகள் துக்கமுடையவர்
கள் வந்தவர்களெல்லாம் லட்சுமி சம்மந்த
முந் தெய்வலோகபந்தமுமுள்ளவர்கள் இப்
படிக்குச் செலவழித்துந் திரவியங்கள் மலை
மலையாயிருந்தன இப்பால் பிராமணரோது
கிற வேதநாதமும், கந்திருவர் பாடுகிறவீணை
கீதமும், வித்தியாதரர்யக்ஷர் கின்னரர் இவர்
முதலான பேர்களின் கானபோதமும், மங்க
ளகர வோசையுடன் விளக்கிக் கோஷிக்க
அவிர்ப்பாகங் கொடுக்க வாரம்பித்து, வண்டு
மொய்ப்பதுபோல் வந்த மாதவர்களை யெல்
லாம் வண்மையாக வருவித்து திருமூர்த்தி
களுக்கும ஆகுதியீந்து அப்பாற் கிரமப்படி
க்கு இந்திரன் முதலிய யாவருக்குங் கொடுத்
துச்சந்தோஷங்கொண்டார்கள் பின்னர்ரிஷி
யீஸ்வரர்ள்யூபவீதி செய்யத்தொடங்கிகருங்
காலித்தூண் ஆறுவில்வத்தூண் ஆறுபலாத்
தூண் ஆறு தேவதாரித்தூண் இரண்டு அர
சின்தூண் ஒன்று ஆக இருபத்தொரு
தூணில் ஒவ்வொரு தூணும் இருபத்தொரு
சாணுயரமாயிருக்குப்படியாக வேதவிதி தப்
பாமல் யூபவிதி வகுத்து முன்னூறு தூண்
பூமியிலேநட்டு அவற்றில் முன்கொணர்ந்
திருக்கின்ற நாற்கால் இரண்டுகாற்சீவன்கள்
முந்நூறையுங் கட்டி வேதத்திற் சொல்லி
யிருக்கின்ற பசுபந்தவிதி தப்பாம லவைகளை
நடுவேநிறுத்தி அவ்விடத்தில்நடத்தவேண்
டிய சடங்கெல்லா முடித்து மந்திரங்களி
ஞலே பசுக்களை வகிர்ந்து வபையென்னும்
உறுப்பெடுத்து அக்கினிக்கு ஆகுதிபண்ணி
தேவாமுதத்திலு மினிமையாய்த் தேவதை
களுக்கு கொடுத்தார்கள்.

அப்போதத் தேவதைகள் மந்திரபலத்
தால் வாங்கிப்புசித்துச்சந்தோஷங்கொள்ள
ரிஷியீஸ்வரர்கள் யாகத்தைமுடித்து, பூரண
குதிகொடுத்து, தருமராசனுக்கு பூரணசிர்
வாதம்புரிந்தார்கள் தருமநந்தனருந்திரௌ
பதியும் தம்பிமார்களும் ஸ்ரீ கிருஷ்ண
ஸ்வாமியும் ஒன்று சேர்ந்தெழுந்து தேவர்
கள் தவமுனிவர் பிராமணர் ரிஷியீஸ்வரர்ள்
இவர் முதலாகிய பேர்களை நமஸ்கரித்து
அருளாசிபெற்று இயாக நடத்தி வைத்த
சோமயாசி முதலிய பேர்களுக்குச் செம்
பொன்மணி முதலாளவைகளோடு அம்
பொன்னுரமும்ளித்து நிராசையுள்ள பேர்
களைப் பூசித்து அளவற்ற பேருக்குக்கோதா
னமுதலாகியதும் வேறுவேருய்க் கொடுத்து
வியாசர்முதலாகிய பேர்களைப்பணிந்தார்கள்
ஸ்ரீகிருஷ்ணபகவான் திரிநேத்திரதாரியாகிய
பரமசிவனுக் கொப்பாகிய பூதேவர்கட்குக்
கொடுத்த தானங்களைக் கொண்டு அகமகிழ்
ந்து முகமலர்ந்து இராஜஸ்திரீகளையெல்லா
மழைத்து விடுத்து வேண்டியமட்டுங்கொடுக்

கச்சொல்லினர் அப்போது குந்திதேவி முத
லியபேருஞ் சலியாது கொடுத்தார்கள் இயா
சத்தி லமைத்த கலசபாத்திரங்களையெல்லாந்
தவுமியார் முதலாகிய பெரியோர்களுக்குக்
காட்டி அங்கீகரிக்கும்படிசெய்துகங்கணவிச
ர்ச்சிதங்கண்டு மங்கள ஸ்நானங் கொண்டு
இலட்சப்பிரமாண போசனஞ் செய்துண்டு
திவ்வியமங்கள வாத்தியத்துடன் சிங்காசன
மேறி யிருந்தார் தருமராசனவர் தானமே
ற்றவர் சுமந்து சுமந்து சலித்து அவ்வவ்
விடங்களிற் அனேகர் போட்டுவிட்டுப் போ
னார்கள் மன்னவர் கொணர்ந்த வரிசைகளிற்
கிரீடாதி ஆபரண முதலியவெல்லாம் வெகு
மானம் பண்ணியபோது அவ்வவர்களுந்
தருமானமட்டுந் தாங்கி அப்பா லெங்களா
லில்லையென்று வாங்காமற் போனார்கள் இந்
திராதி தேவர்கள் பஞ்சதாருவின் புஷ்பங்க
ளைச் சந்தனத்தோடுகலந்து சொரிந்தார்கள்
வித்துவான்கள் பாடிப்பரிசுபெற்றார்கள்கின்
னர கிம்புருடப் பெண்கள் கீதசுரம்பாடிமங்
கள வாலிகளினாற் பல்லாண்டு கூறினார்கள்

இயாவர்களும் ஒரே கூட்டமாய்க்கூடிவிரை
ந்து எழுமேகமும் ஒரேதடவையாயிரைந்து
முழங்கினு லெப்படியோ அப்படிக்கு அள
வற்றகோடி ரிஷீஸ்வரர்களும் முனீஸ்வரா
ளும் வேதவேதியர்களும் தபசிகளும் விரதி
யர்களும் வேதமுழக்கத்துடன் ஆசீர்வதி
த்து அவரவர்கள் தங்கள் தங்க ளௌதாவஸ்
தானத்திற் கெழுந்தருளினார்கள் மந்திரமூர்
த்திகள் தேவதைகளையெல்லாம் அவ்வவற்
றினுடைய இடத்திற்குப் போகும்படி யனு
ப்பிவிட்டு தாங்களுந் தங்களிடம் போய்ச்சே
ர்ந்தார்கள் இராஜராசர்களிற் சிலர் தங்களு
டைய பட்டணத்திற்குப் பிரயாணப்பட்டார்
கள் பாஞ்சாலியு முரசக்கொடிபடைத்த முன்
னவனும் யாகசாலையைவிட்டு அனேக வாத்
திய கோஷத்துடன் அஸ்தினபுரம்போய்ச்
சேர்ந்தார்கள் உலகத்திலுள்ள நால்வகை
வருணத்தினரும் எந்த காலத்திலும் இந்த
யாகத்திற்கு மிஞ்சினயாக மெங்கணுமில்லை
யென்று சொல்லிப் புகழ்ந்து கொண்டாடி
னார்கள்.

## வேள்விச்சருக்கம்

முற்றிற்று.

---

# ஆறுவது,

# நகுலோபாக்கியானச் சருக்கம்.

### கண்ணன் துதி.

திருவடிவிற்கருநெடுமால்சேயனென்றுந்திரேதெக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும்
பெருவடிவிற் கடலமுதங் கொண்டகாலம் பெருமானைக் கருநீலவண்ணன்றன்னை
யொருவடிவத் தோருருவென் றுணலாகா வூழிதோ றூழிநின் றேத்தியல்லாற்
கருவடிவிற் செங்கண்ண வண்ணன்றன்னைக் கட்டுரையே யாரொருவர் காண்கிற்பாறே.

ஓ ஜெனமேஜெயமகாராஜனே? அஸ்வமேதயாகங் குறைவர நிறைவேற்றிய தருமராஜனவர் தம்பியர்முதலிய சகல பரிசனங்களோடு அஸ்தினபுரம் வந்து சேர்ந்த பின்பு ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கிருபாசாரியார் விதுரமகாரிஷிசர் தம்பியர் முதலிய இஷ்டஜன பந்துக்கள் இன்னுமுள்ள இராஜமித்திரர்கள் ஆகிய விவர்கள் யாவரும் புடைசூழ்ந்திருக்கும்படி கொலுமண்டபத்திற் சபைகூடி இருக்கின்றார். அச்சமயத்தில் அளவற்ற பூசுரர்களும் வித்துவான்களும் மகாரிஷிகளும் இன்னுமேலான முனிவர்களும் ஏககூட்டமாய் கங்காப்பிரவாகம் பெருகி வருவதுபோல் வந்து அஸ்வமேதயாகமுடிந்த வைபவத்தைப் பற்றிச் சிறப்பித்துத் தருமராசனை மிகவுங் கொண்டாடினார்கள். அப்படி யவர்கள் கொண்டாடியதனால் ஒருவேளை பரமசாதுவாகிய தருமராசனுக்கு மனச்செருக் குண்டாகவுங் கூடுமென்பது பற்றியோ அல்லது அஸ்வமேதத்திற்கு மிஞ்சிய தொன்றுமில்லை யென்று கருதி அதிதிபூசைக்கு அருமைக்குறை வுண்டாகாமைப் பற்றியோ மற்ற யாதுகாரணமோவறிகிலேன். அப்போது ஓர் கீரிப்பிள்ளை தற்செயலாய் வந்து அஸ்வமேத யாகத்தையுந் தருமராசனையுங் கொண்டாடிய சனசமூகங்களைப் பார்த்து ஓ பூசுரர்களே! ஓ வித்துவான்களே! ஓ மகாரிஷிகளே! ஓ மகாமுனிவர்களே! இந்தத் தருமராஜன் செய்த யாகம் போலில்லையென்று மெத்த மோகமாய்ச் சொன்னீர்களே, நான் என் வாக்கினாலும் பனித்துளி நக்கு நாங்கினாலும் இதையொரு பெரிதாய்ப் புகழ்ந்து பேசவே மாட்டேன் நீங்கள் நமிச்சிகழு மிச்சமுங்கொண்டு பேசினீர்கள் நாமப்படியல்ல இதென்ன யாகம் மெத்த அல்பமான சின்ன யாகமென்று இகழ்ச்சியாய்ச் சொல்லியது. அப்போது புகழ்ச்சியாய்ப் பேசிய ரிஷிகள் ஓ நகுலமே இப்போது நடந்த அஸ்வமேதயாகத்தில் எங்களாற் குற்றம் எதாகிலுமுண்டா வேத மந்திரம் வழிவிப்போனதுண்டா அரசர்கள் ஆராவது தண்டாபண்ணியிருந்தால் அத்தாட்சிகொண்டா மந்திரயீனங் கிரியாயீனம் வராமற் சர்வசாக்கிரதையாய்ச் செய்து மகத்தைமுடித்துச் செயித்தோமென்று நாங்கள் பேரட்டோஞ் செண்டா இந்தக் காலத்தில் நீவந்து நாங்கள் சிந்தனைப்படும்படிக்கு நிந்தனை விண்டாய் அஃதெந்த விதத்தாற் கண்டாய் உள்ளதை யுள்ளபடி சொல்லென்று கேட்கக் கீரிப்பிள்ளை சொல்லத் தொடங்கிற்று.

---

### அஸ்வமேதாதிகளினு மோரதிதிபூஜை விசேட மென்பதைப்பற்றிக் கூறிய சத்துப்பிரத்த முனிவர்கதை.

ஓ மஹான்களே! இந்தப்பூமியிற்புனித பூமியானது குருக்ஷேத்திரம். அந்த க்ஷேத்திரத்திற் சத்துப்பிரத்த னென்றொரு ரிஷி துல்லியனிருந்தார். அவருக்கு அருந்ததிக்குச் சமானமான பெண்சாதி யிருந்தனள். அந்தம்மாளுக்கு ஒரு பிள்ளையுண்டா யிருந்தான் அப்பிள்ளைக்கு ஒரு பெண்சாதி இவர்கள் நான்கு பெயர்கள் இல்லற தருமத்தை நடத்தி நல்லறஞ் சம்பாதித்து எல்லோருந் தோத்திரம்பண்ணுவதற்குப் பாத்திரமுள்ளவர்களா யிருந்தார்கள். அப்படி யிருக்கையில்

க்ஷாமகாலம்நேரிட்டு மழையில்லாமற் காய்ந்து தழையும் பயிர்கள்தீய்ந்து சகலஜீவாத்துமாக்களும் ஓய்ந்து பசியினால் வருந்தி மாய்ந்து தானதரும தவங்களெல்லாம் புகைந்து போயின பசும் புற்றலையுங் காணக்கூடாதபடிக் காய்ந்து அப்போது கடலும் வரண்டு காசினியோர்கள் குடலும் வறண்டு காட்டிலிருக்குந் தவசிகளுக்கு அஷ்டமத்துச்சனி பிடித்து கந்தமூலபல சருகாதிகளுங் கிட்டாமற் கிலேசப்படுகிறார்கள். அக்காலத்தில் இந்தச் சத்துப்பிரத்தரென்னும் முனிவர் முதலிய நால்வருக்குங் குடிக்கத் தண்ணீர் கிட்டாமல் கிழங்கு காய் கனி இலை இவை முதலியவும் அகப்படாமல் பசியினால் நொந்து பரதவித்து வெந்து சரீரமிளைத்து தாஷ்டீகங்களைத்து அஸ்திகளுடனே பரமசிவன் பாதத்தை மனதிலமைத்து ஓ வெள்ளிமலையானே ஓ வெண்பொன் விடையானே நாங்கள் எக்காலுங் குறையுற்றோம் இனிச் செத்தாலும் உம்மைவிடோம் என்று ஒரே உறுதிகொண்டு வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டு நாட்டில் நடக்கின்றார்கள் அப்போது மேல்வரப்பட்ட தெய்வீகங் கண்ணுக்குத் தோற்றப்படுமாறுபோல் புலங்களிற் பால் வெளுப்பாகிய சில நெல்லுதிர்ந்து கிடக்கக் கண்டு நான்குபேரும் ஒவ்வொன்றாய்ப் பொறுக்கி யெடுத்து நல்ல மனத்துடன் வீட்டுக்குவந்து அந்த நெல்லை அரிசி பண்ணி அந்த அரிசியை பொரிமாவாக்கி அந்தமாவும் நல்ல நீருஞ் சாப்பிட்டு நான்கு பேரும் இற்றை நாளைப் போக்கலாமென்று ஸ்நான முதலாகிய நித்திய விதியை முடித்து பொரிமாவை எடுத்துப் பங்கிடப் போகின்றார்கள்.

அந்தச் சங்கட சமயத்தில் ஆதிசேடனானவர் தபோநிஷ்டைகூடிய பிரமக்ஞான வேதியன்போல் வந்து அந்தச் சத்துப்பிரத்தரென்னு முனிவரைப்பார்த்து ஓ தபோதனரே எனக்கு மிகுந்த பசியாயிருக்கிறது உமது கிரகத்திற் புசிக்க வந்தேனென்றார் இந்தச் சொல்லை யத்தபோநிதி கேட்டு மிகுந்த சந்தோஷமுடையவராகி ஓ சுவாமி! என்னைப்பெற்ற தாய் தந்தையரின் தவமோ எங்கள் சந்ததியாரிழைத்த விரதமோ பிதுர் பிதரக்கள் பண்ணிய பூசாவிதியோ தேவரீரிங்கெழுந்தருள கிடைத்தது. என் பாக்கியமே பாக்கியம் என்று ஆச்சிரமத்திற்குள்ளழைத்துப்போய் பாதங்கள் விளக்கி அந்தச்சலத்தை சிரசிற் புரோக்ஷித்துக்கொண்டு உள்ளுக்கு மருந்தி மற்றையர்க்கு மவ்வாறே நடத்தி தனது வீடெல்லா மிறைத்துப் புண்ணியாவசனம்பண்ணி ஆசனம் போட்டு அவரை உளுக்காரவைத்து பொரிமாவை யெடுத்து நான்குபாகம் பண்ணி பெண்சாதி மருமகள் மகன் இம்மூவருக்கும் மூன்று பங்கைக் கொடுத்து நீங்கள் புசியுங்களென்றனுப்பி தன்னுடைய பங்கை அதிதியாகிய ஐயருக்குக் கொடுத்தார். அவர் வாங்கிப்புசித்து பசியடங்காமல் முகத்தை சுளித்துக் கடுத்துக்கொண்டு என்னகாண் ஐயரே நீரிட்ட தரித்திரம் பிடித்த சாப்பாட்டாற் சிறிதும் வயறு நிரம்பவில்லை என்று ஒருவாறாயிருந்தனர். அதையவர்கண்டு மிகவுந் துக்கப்பட்டு நாமுண்ணாமல் அளித்தும் இவருக்கு வயிறு நிரம்பவில்லை நமக்குந் திருப்தியில்லை ஈதென்ன தருமம் ஈதென்ன உபகாரம் என்று ஏங்கியிருந்தார். அப்போதவர் பெண்சாதி புருடனைப்பார்த்து சுவாமி கவலைப்பட வேண்டாம். என் பங்கு மாவையும் அவருக்குக் கொடுமென்று கொடுத்தாள். அவளை யவர் நோக்கி, அடிபெண்ணே பூமியில் மிருகம், பட்சி, எறும்பு, இவை முதலியனவும் ஆசையுடன் திரிந்து இரைகொண்டுவந்து பெண்சாதி பிள்ளைகளுக்கு ஊட்டிவைப்பன இதை நீ பார்த்திருக்க மாட்டாயா அதைப்போல் நானுங்களைக் காப்பாற்றி ரட்சிப்பதைவிட்டு புறத்தியாருக்குத் துணைபட்டு நெடுநாளைய பட்டினியாயிருக்கிற உன்னுடைய சாப்பாடாகிய மாவை வாங்கிக் கொடுக்கப்போமா எனக்கு மனம் வருமா மேலும் துன்மார்க்கமுள்ளவளா யிருந்தால் ஒரு படி பார்க்கலாம் ஐயோ ஓ சன்மார்க்கவதியே ஓ அருந்ததியே உன்னைக் காக்காமலும் கருணையுடன் பார்க்காமலும் போவேனாகில் எனக்கு நரகங்கிட்டுமே சுவர்க்கந் தூரமாய்ப்போமே இராகுவினாற் சந்திரன் கிலேசப்படுந் தன்மைபோல் நீ பசியினால் வருத்தப்படப் பார்த்து அப்பசியைத் தீர்க்காது நான் உன் பங்குப் பொரிமாவை வாங்கி யெப்படி கொடுப்பேன் எனக்கென்ன புண்ணியமுண்டு என்று துக்கப்படுகிறபோது தரும பத்தினியானவள் சொல்லுகிறாள்.

ஓ என் பர்த்தாவே! ஒருவருக்கு அன்

ணம் வைத்தால் வயிறு நிரம்ப வைக்கவேண்
டும் குறைவாய்ப்போட்டால் அதுதான் எரி
குணமென்னும் வியாதிக்கிடம்பண்ணி இக
பரமிரண்டுங் கெடுமென்று இல்லறதருமத்தி
லியம்பி யிருக்கின்றது மேலும் ஸ்திரீகளுக்
குத் தாய் தந்தை தமையன் தம்பி பிள்ளை
பெண் சுற்றம் குரு இந்த எண்மரும் பெரி
தல்ல புருடனே தெய்வம். புருடனே பிரா
ணன். புருடனைவிட வேறொரு பொருளு
மில்லை. புருடனிட்டப்படிக்கு நடந்துகொள்
ளவேண்டும். அப்படி நடவாவிட்டால் நரக
த்திற்குரிய சாதகராவார்கள். இந்தத் தருமந்
தேவரீருக்குத் தெரிந்திருந்தும் எனக்குத்
திருப்தியாகும்படி புத்திசொல்லவா நினைத்
தீர் நான் சொன்ன பிற்பாடு நீர் ஐயப்பட
லாமா உம்முடைய பங்கை அதிதிக்குக்
கொடுத்து பசியுடனிருக்க நான் மாத்திரஞ்
சாப்பிடுகிறதற்கு விதியிருக்குமா தேவரீர்
சாப்பிடாதபோது நானுமப்படியே அமுத
மேனு மும்மை நீக்கி யருந்தேன் என்றுரை
த்துப் பொரிமாவைக் கொடுத்தாள். அதை
யும் முனிவர்வாங்கி அதிதிகையிற்கொடுத்து
சுவாமி இதையும் புசித் திளைப்பாறு மென்
றார். அவரதையுங் கைக்கொண்டு அன்புட
னே தின்று அதனாலும் பசிதீராமல் ஐயோ
வென்றேங்கினார். அப்போ தவரைக்கண்டு
கிலேசப்படுகிற தந்தையை அவர் மைந்த
னவ னோக்கி எந்தாய் நமஸ்காரம் என்
பங்கையுந் தருகிறே னதனைத் தேவரீ ரதிதிக்
குக் கொடுமென்று சொல்லினன். அதற்கவர்
அப்பா பிள்ளைக்கு எத்தனை வயது சென்றா
லுந் தந்தைதாய்க்கு மைந்தனேயன்றி வேற
ல்ல நீ சிறுபிள்ளை உனக்குப் பசியதிகமாயிரு
க்கும் சகிக்கமாட்டாய் நீயே புசிக்கக்கடவை
உன்மாவை வாங்குவதற்கு எனக்கு மன
மில்லை யென்று சொன்னார் பூமியுள்ள
நாளுங் கீர்த்தியை நிலை நிறுத்தப்பட்ட
குமார னதுகேட்டு ஐயா தந்தையின் கருத்
தையறிந்து நடவாதபிள்ளையை பூமிதேவி
பொறுக்கமாட்டாள் நான் உமக்கு கிறைய
விக்கிறையங்களுக்கு பாத்தியமா யிருக்கிற
சொத்து இந்தப் பொரிமாவுக்கு மாத்திரம்
பாத்தியமில்லாமற் போவானேன் பிறந்த
நாள்முதல் இறந்தநாள் வரையிலுஞ் சாப்
பிடுகிற நாம் இன்றைக்கொருநாள் நிறுத்தித்
துறந்தவாளுக்குச் சோறூட்டி வைத்தால்,
அதனாற் பிராணன் இறந்து போகிறதில்லை
நாளைக்கே வெள்ளியசோறு அகப்படும் இ
ப்பேர்ப்பட்ட அதிதி அகப்படமாட்டார் இ
ளைத்த சரீரத்தை நாளைக்கே பருக்கப் பார்க்க
லாம் இளைத்த விரதத்தை நாளைக்குக் கிளைக்
கப் பார்க்கக் கிட்டாது இதனால் தேவரீரை
நான் வேண்டிக்கொள்ளுகிறேனென்றான்
பின்றவரந்தமாவையும் பெற்று அதிதிக்குக்
கொடுத்தார் அவ்வதிதி அதையும் பட்சித்து
விட்டு அரைவயிறுகூட நிரம்பவில்லையே
யென்று எரிபுரியென்ன ஏங்கியிருந்தனர்.

அதனால் மூவரும் ஆயாசப்படுகின்றார்
கள் அப்போது மாமன் கருத்தை மருமகள்
கண்டு திருவடியைத் தொழுது மாமா பூர்வ
சன்மத்தில் நாம் தேடிக்கொண்ட நல்வினை
யானது இப்பிறப்பில் எதிர்ப்பட்டதாக
வந்த இந்த வேதியரது அரும்பசியை என்
னுடைய பங்குமாவையுங்கொண்டு எப்படி
யாகிலும் நீக்கிவிடுமென்று ஏத்தினாள் அம்
மருமகள் சொல்லைக்கேட்ட மாதவன் மனம்
வருந்தி அம்மா இடையைப் பார்க்கினுந்
தேய்ந்த உடலோடு மாசற்ற மனமும் பெற்ற
நீஐயோ பசிதாளுவையோ பசிநோயையுந்
தடுக்கவல்லையோ நல்லது உன்னிஷ்டப்படி
வாங்கிக்கொடுத்தாலும் எங்கள் மூவருடைய
பாகத்தைப் புசித்த முனிவனுக்கு இது
பெரிதோ அந்தோ இது கொஞ்சமாச்சே
நீ கொடுத்தபோதிலும் நான் வாங்குவது
தருமமல்லவே அம்மா நீ உன்னுடலுக்
காதாரந்தேடிக்கொள்ளுக இக்கிலேசத்தைப்
பற்றி நீ யோசிக்க வேண்டாமென்று கூற
வும் அதற்கு மருகி சொல்லுகிறாள் மாமா
மாயாசம்பந்தமான இந்தத் தேகத்தைச்
சுமந்திருப்பதெல்லாம் பரிசுத்தமுள்ளதேவ
ரீருக்குத் தொண்டு செய்வதற் கல்லவா
சுவாமி தேவரீருடையபட்சம் என்மேலிருக்
கும்படியாய் என் சொல்லைத் தள்ளாமல்
இந்தமாவை வந்த அதிதிக்குக் கொடுத்து
உபசரித்து விடுங்களென்று தன் பங்குமா
வைத் தந்தாள் அந்த மருகிக்குத் தான் மீட்
டுந் தடுத்துச்சொல்லக் கூடாதவராய் அந்த
மாவை வாங்கி மந்திரவுருவாகவந்த அதிதி
க்கு மனமகிழ்ந்து கொடுத்தார் அப்போதவர்
மிகவுஞ் சந்தோஷித்து தேவலோகத் தமு
தத்தைப்பார்க்கிலுஞ் சிறந்த ருசியுண்டான
வமுதாய்ப்புசித்து மனமகிழ்ந்து முகமலர்
ந்து இளைப்பு தீர்ந்து புயம்பூரித்து வாய்

கை கால் இவையலம்பி அவர்களையருட்கண்ணாற்பார்த்து ஹா! ஹா! பன்பசியைத் தணித்தீர்கள் இனிமேல் தருமந்தழைக்கும் தாட்சியில்லை என்று குறைவில்லாமுறைமை விளம்பி மறைந்துபோயினர் தேவர்கள் ஆகாயத்தினின்று அதிக முழக்க முண்டாகும்படியாய் ஆசீர்வதித்து பூமாரியும்பொழிந்தார்கள் தேவதுந்துமி யறைந்தார்கள் திக்குத் திகாந்தமெல்லாஞ் செவிடுபட வேதமுழங்கியதுமேகம் வழங்கியது தருமமோங்கித் தழைத்தது சமுத்திரமார்த்தது ஆத்மகோடிகளெல்லாங் கொண்டாடித்துதித்தார்கள் முனீஸ்வரர் ரிஷீஸ்வரர்கள் ஆசிகூறிய மங்களவோசை எட்டுத்திக்கும் போர்த்தது.

அந்தவேளையில் தருமதேவதை பிரசன்னமாகி மனைமாட்சியிற் சிறந்த மாமுனிவரைக்கூவி அவருடைய மனைவி மகன் மருவி இம்மூவருங் கேட்கும்படி சொல்லுகிறது ஓ இருவினைபோக்கிய இல்லறதரும சிலாக்கிய சத்தியவாக்கியனே உம்முடைய ஆசிரமத்தில் அதிதியாய் வந்து பிள்ளைக்கிருந்த பொரிமாவையுந் தின்று வந்தவன் நான் தான் இயான் ஆதிசேடன் என்முடிமீதுற்ற அவனியிற் பொருந்தியபேர்கள் நல்ல பிரயோசனத்தை அடைய வேண்டுமானல் அதிதிபூசை புரியத்தக்கதென்று யாவருக்குந்தெரிவிக்குமாறுபோல்எனக்கு விருந்திட்டுகந்தீர் உமக்கும் உம்மைச்சேர்ந்த இம்மூவருக்கு மொப்பாக ஒருவருமில்லைமிருந்தகளிப்புடனே தேவர்களியாவரும் வந்திருக்கின்ருர்கள் உம்முடைய பிரகாசமானவுடல் உம்பரிற்சிறந்த சத்தியலோகத்திற் பொருந்திவாழும்படி பிரமதேவர் அபயஸ்தங்காட்டி விமானமு மனுப்பியிருக்கின்ருர் நீர் குடும்ப சமேதராகப் புறப்படும் என்று தருமதேவதை சொல்லியது அப்படி சொல்லுமுன் இமையவர்கள் இந்திரவிமானத்துடன் வந்து நிறைந்தார்கள் அவர்களைக் கண்ட மாமுனிவர் துன்பம்வென்ற தேகத்துடன் சிந்தையிற் புளகமெழும்படிக்கு மற்ற மூவரோடுந் தேவவிமானத்தி லேறினர் உடனே இதழ்க்கணெருங்கிய மலர்மாலைத் தரித்த அரம்பையர் சாமரம் வீசினர்கள் பெருமை பொருந்திய வித்தியாதரர்கள் சங்கீத காளதாள மேள சச்சரியுடன் எச்சரிக்கை பேசினர்கள் சகல சம்பிரமசாம்பிராச்சிய வைபவத்துடன் சத்தியலோக வாசியாகிய வித்தகனுற்ற பத்தரைமாற்றுப் பசும்போற் பீடத்தின் பக்கம்போய்ச் சார்ந்துள்ள மோட்சசாசனராகிய சிவமுத்தர்கள் பல்லோருந் திருவுளமகிழ்ந்து புகழ்ந்தார்கள் இந்நால்வரும் வருகின்றதைச் சதுர்முகனறிந்து எழுந்தெதிர்கொண்டு ஓ மகானுக்களே நீங்கள் தருமதேவதைக்கு அன்னதானஞ் செய்த தயாளுக்களாகிய இல்லறத்தாரென்று கேள்விப்பட்டு உங்களைக் காண்பதற்காக வந்தேனென்று தழுவிக் கொண்டனன் அதுகாலையிலவர்கள் அகங்குழைந்து அன்னவாகனத்தோனது அடிமேற்பணிந்து அவனருளாலே சிங்காதனத்தில் அமர்ந்திருந்தார்கள்.

கேட்டீரோ தருமராஜனே! ஓ மகாதவசிரேஷ்டர்களே! இந்த பெருமையைக் கண்டிருந்த யான் அதுமுதல் அதிதியானவர்கள் காலினற் காட்டியவேலையைத்தலையினற் செய்து அவர்களை யடுத்திருந்தேன் எனது பூர்வதவ மெத்தன்மை யுடைத்தானதோ நானென்னென்றியம்புவேன் இந்த வுலகத்தில் எட்டுதிக்கும் பதினறு கோணமாகச் சென்று தவம் செபம் மகம் இவற்றைச் செய்கின்ற பிரமக்கியானமுள்ள பெரியோர்களை யெல்லாம் பார்த்தேன் சில ஊனமற்ற நெற் பொறுக்கிப் பொரி மாவரைத்துக் கொடுத்து பிர்மலோகம் பெற்ற அந்த மகானுபாவனுக்குச் சரியாய்ச் சொல்லுவதற்கு எவர்களையுங் காணேன் வெற்றியைப்பாலித்தருளுகின்ற முனீஸ்வரர்கள் முதலாகிய இயாவரும் உமது யாகத்தை மெச்சினர்கள் அதனலிதுகூற நச்சினேன் நீர்செய்த யாகமானது அம்முனிவன் ஓரதிதிக்குப் பிச்சைபோட்டதிற் கொவ்வாது என்று இயாவருந் துணுக்குறும்படிக்குச் சொல்லிய பிலத்துவாரத்தி னுழைந்து போய்விட்டது அதைக்கேட்ட தருமராஜன் வெட்கப்பட்டு தீவினை நீத்த பேரறிவாளர்கள் செய்கின்ற யாகத்திற்கு ஈடாக என்னைப்போன்ற ஏழையர் செய்யக்கூடுமோ செய்தாலும் அப்படி முடியுமோ என்று சொல்லிக் கீரிப்பிள்ளை கூறிய மகத்துவமான சரித்திரத்தை மனதிற் சிந்தித்துக்கொண்டிருந்தனர் அப்போது பொய்மொழி நீத்தமுனிவர்கள் தருமராஜனை வாழ்த்தி யாசீர்வதித்து விடை பெற்றுக்கொண்டு போனர்கள்.

கேளும் ஜெனமேஜெய மகாராஜனே அறன்குமாரன் தொடங்கி செய்த யாகம் போல் ஒருவருஞ் செய்ததில்லை அப்படிக் கிருந்தும் அவர்செய்த வேள்வி அதிதிக் குப் பொரிமர்வளித்த பட்சத்திற் கொவ்வா ததாயது ஆனலிந்த யாகமுதலிய எல்லாக் கரும தருமங்களும் ஸ்தூலமென்றுஞ் சூக் ஷுமமென்று மிரண்டு வகையுள்ளன அவை களில் தூலமென்பது நல்வினைகள் அவ்வினை களைக் காலத்திற்குத் தக்கபடி யோசிக்கத்தக் கது சூக்ஷுமம் இந்தத்தருமத்தை கண்டறிந் தவர்கள் பெரியோர் மற்றொருவருக்கு மிந்த வுண்மை வெளிப்படாது என்று கூறிய வைசம்பாயனரை ஜெனமேஜெயமகாராஜன் பணிந்தெழுந்து ஐயா மாதவமுனியே மகா ராஜசபையிற் சிறப்பாகவந்துதோற்றி இவ் விதமாகப்பேசிப்போன கீரிப்பிள்ளை யாதோ அதனது விபரந் தெரியவில்லை ஆனதாலத னுடைய வரலாற்றைச் சொல்லியருள வேண்டுமென்று கேட்க வைசம்பாயனர் அந்தக் கீரிப்பிள்ளையின் பூர்வகதிகளை முறைவழாமற்கண்டு ஒன்றும் பிசகில்லாமற் சரியாய்த் தொடுத்த மாலைபோலெடுத் தணி யத் தொடங்கினர்.

## நகுலத்தின் பூர்வசன்மவரலாறு.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே நான்கு திக்கிலுள்ள சர்வாத்மகோடிகளும் நன்மை பெறும்படியாகத் தொழுது போற் றிச் செய்யாநின்ற புண்ணியப் பொருளான வர் சமதக்கினி பகவான் மகா புனிதமூர்த்தி அவர் ஒருநாள் பிதுர் தேவதைகளுக்குச் சி ராத்தம் பண்ணவேண்டி வீடுவாசல்சுத்தி செய்து சுசியாய்க் கோசல கோமயங்கூட்டி நூதன பாண்டத்திற் காமதேனுவின்பாலைக் கறந்து அதனைத் தனதாச்சிரமத்தில் ஓர்பக் கம்வைத்தனர் அந்தமாட்சிமை கொண்ட மாமுனிவர் துன்பப்படும் படிக்குக் குரோத மென்னுந் தெய்வம்வந்துசாய்த்துவிட்டது அதை யம்முனிவரன் பார்த்து பெருமூச்சு விட்டு வேர்த்து மிகவுங் கோபமுடையவரா கி மறுபடியுந் தணிந்து தமது பொருமைக் கிவ்வண்ட கோளகையில் நிகரில்லாதவராகி யதால் அதுவே விசாநுகூலமாகக் குன்றிப் போயிருந்தார் இப்படிக்கிருந்த பிரமாவு க் கொப்பாகிய சமதக்கினி பகவானது

ஞான சமுத்திரக் கடலைக் கலக்கித் தூளெழு ம்பச்செய்து உடலிற் பூசிக்கொள்ளும்படி நேர்ந்த அக்குரோத தெய்வம் அவருக் கெ திர்வந்து ஓ தவமுனியே பற்றற்ற உமது திருவுள்ளத்தின் பான்மை பகரற்கரிது நீர் கறந்துவைத்த பாலினுக்காக உமக்குக் கோ பமேறிக் குற்றமீறுவதையும் கோபங் குறை ந்து குற்றமாறுவதையுங் காணுமாறு கு றுகி அங்குவைத்த பாலைக்கவிழ்த்தனன் அ தனுல் உமதுள்ள முணர்ந்தேன் இன்று நான் செய்தபிழை பொறுந்தருளவேண்டும் என்று புகன்றது அச்சொல்லைக்கேட்ட மா சற்ற மகாமுனியானவர் அதன் முகத்தைப் பார்த்து ஓ குரோதமே ஆசாகிய குற்றங்களை ச் செய்தாலும் தருமத்தின் முறைமைகளை நடாத்தலும் இன்னு மெப்பேர்ப்பட்ட காரி யங்களை முடித்தலும் விவேகத்தினுற் பேசி முடிக்கும்படியாகிய பேரறிவுடையவர்களாகி ய பெரியோர்கள் பரமசிவனது பாசமா னது நற்கிருபையின் தொழிலினுல் நடத்த வல்லது வேறில்லை தென்புலத்தவராகிய பி துர்தேவதைகளுக்காகத் திதி கொடுப்பதற்கு ப் பரிசுத்தமான பாலமைத்து வைத்தனன் நீ அந்தப்பாலை இப்படிக்குச் செய்யவேண் டுமென்றே நினைத்துத் தரையிற் கவிழ்த்தனை இதனுல் அந்தப் பிதுர்த் தேவதைகளுக்கு இடையூறு கிடைப்பதல்லாமலும் எனக்குப் பெரிய குற்றம் நேரிடும்படிக்குச்செய்தாய் ஒ ருவருக்கு வெருப்பு வரும்படியாய்ச் செய்த து தீவினையேனும் நல்வினையேனும் அவ ற்றைச் செய்தவர்களை வெறுத்து வருத்தப் படுத்தவும் சந்தோஷப்படுத்தவும் மேலான பெரியவர்க ளிருக்கின்றார்கள். நீ கேட்டுக் கொண்ட தாழ்மையான இன்சொல்லை நிதா னித்தேன் உன்னைக் கோபிக்கவு மில்லை கோபித்துச் சபிக்கவுமில்லை பொருமையாய் மனம் பொறுத்திருந்தேன் ஆதலால் உன் னிடத்திற்கு நீ போய்விடலா மென்றார் அ ம்மொழி கேட்ட குரோதமென்னுந் தெய்வ ம்போய் விட்டது.

இங்ஙனஞ் சுத்தப்பிரகாசமான அம் முனிவன் தனித்திருந்தார் அப்போது இவருடைய ஆசிர்மமாகிய கிரகத்திற் பிதுர் த்தேவதைகள் நேரில்வந்து விஸ்தாரமான பெருங்கோபம் பிரபலித்துச் சொலிக்கும் படிக்குச் சினந்து, ஓ சந்ததியானே! உன்

னுடைய பிதுர்ப்பூசைக்காக அமைத்திருந்த பாலை ஊற்றிவிட்டு அபராதஞ் செய்தவனைக் கோபிக்காம லிருப்பது கடமையோ விசாலமான இடத்தையுடைய உலகத்திற் செய்யத்தக்க கருமங்க ளெல்லாவற்றினு மிகச்சிறந்த பெரியகாரியம் பெரியகாரியம் பெரியாருக்குச்செய்கின்ற கருமமல்லாமற் பிறிது வேறுண்டோ பிதுர்க்களான பெரியவர்களின் பூசைக்காக நீ வைத்திருந்த பாலையுகுத்த விண்ணவனைச் சபிக்காமல் விட்டுவிட்டால் இதைவிடப்பாபம் இன்னுமேதாகினுமுண்டென் றெண்ணினையோ அல்லது இவர்களென்ன செத்துப்போன பிதுர்த்தேவதைகள் தானே யென்று அலட்சியங்கொண்டு இகழ்ச்சியாய் நினைத்தையோ நீ அந்தத் தேவனை வெறுக்காமையினுற் கீரிப்பிள்ளையாய் உள்ளங்குழைந்து திரியக்கடவை யென்று சாபமிட்டார்கள் உடனே சமதக்கினி முனிவர் தேகந்துடித்துப் பதைத்து வருந்தி ஓ பிதுர்த்தேவர்களேயென்று அவர்களின் திருவடிகளில் வீழ்ந்து ஓ என் குல ரக்ஷகர்களே இயான் செய்த வினையினல் இச்சாபம் நேரிட்டது எளியேன்பேரிற் கிருபைவைத்து அருள்சுரந்து அன்புநாட்டி இச்சாபத்திற்கு விமோசனஞ் செய்தருள வேண்டுமென்று வேண்டினர் அதனற் பிதுர்க்கள் பிரியம்வைத்து ஓ பிள்ளாய் நீ எங்கள் சாபப்பிரகாரஞ் சின்னவுடலெடுத்து மன்னித்திரிவாய் அப்போது பொய்த்தொடக்காகிய அசத்தியமில்லாத ஓர் நித்திய சத்திய உத்தமன் ஒப்பில்லாத அஸ்வமேதயாகம் புரிந்து பூரணகுதி கொடுத்து புனித மாதவர்களுடன் அடுத்துப் புகழ்ப் பிரதாபப் பேரெடுத்து யாவருந் தன்னைப்போற்றும்படிக்குச் சிங்காசனத்தி லிருப்பான் அக்காலந்தச் செகபதிகாதிற் கேட்கும்படியாய் நல்ல பெண்சாதி பிள்ளையுடன் கூடிக்கொல்லாவிரதம் பெற்ற இல்லற தருமத்தை மெய்விரதமாகக் கொண்டு நன்மை கண்ட ஓர் முனிவரனது விரதசீல மேன்மையை நீயெடுத்துப் பேசி பின்பு வேதவிதியின் பிரகாரஞ் சிவார்ச்சனை புரிந்து ஜகத்தின்மேலாசையற்று தவத்தின்மே லாசைவைத்து சிலநாளை அத்தவமிருந்து கழித்துவிடுக அப்பால் உன்னுடைய ஏதாருபம்பெறுவை சாபம் நீங்கிப்போம் என்றுரைத்துத் தென்புலத்தார் மறைந்து போயினர்கள் இப்பாற் பரமார்த்தியராகிய சமதக்கினிபகவான் பிதுர்விரதத்திற் கமைத்த பொருளைக் கெடுத்த ஒருவனைத் தண்டியாதிருந்த பாபத்தினற் கீரிப்பிள்ளையாகி அதிதிபூசை செய்யப்பட்டவர்களையும் பலநாள் தரிசித்து பல முனிவர்களாற் கொண்டாடப்பட் டிருக்கின்ற தருமராஜனுக்குச் சத்துப் பிரத்த மகாரிஷியினுடைய மேன்மையைக் கூறி அப்பாற் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அபிஷேகவலங்கார வருச்சனை புரிந்து அனேகநாள் பிதுர்க்களை யெண்ணித் தவமிருந்து யதாரூபமடைந்தனர்.

நகுலோபாக்கியானச் சருக்கத்தோடு
அஸ்வமேத பர்வம்
முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:







ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீ மஹா பாரத வசனம்.

## பதினைந்தாவது

# ஆசிரமவாச பர்வம்.

---

### கண்ணன் துதி.

பேச வாதிமறை நாலு மோர்விரகு பேசி லாமைநனி பேசு பாதநம
கூச வானவர்கள் கூற யானுனடி கூடுமாறுனருள் கூறு கோலநம
தூச வாபரண மார மாலைதரு சோசை மாதருட றூய்தில் பாதவரை
கேச வாதியென வேச வாய்மையருள் கேச வாயநம கேச வாயநம.

### சூதபுராணிகர் வாக்கியம்.

[ஓ சவுன்காதி முனிவர்களே இவ்வாறு அந்தியபஞ்சகத்தின் முதற்பாகமாகிய அஸ்
வமேதபர்வத்தைக் கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்
தெழுந்து, சுவாமி! தருமராஜன் தனது மூதாதைக்கு முடிக்கவேண்டுங் கருமங்கள் யாவும்
முடித்து வந்து அஸ்தினுபுரத்தி லரசாக்ஷி செய்கின்றவர் அம்மூதாதை யாதியோரை
யுத்தத்தில் முடிப்பித்தோமே யென்னுங் கவலையா லரசில் மனம் பொருந்தாமல் மீட்டுஞ்
சகல பரிசனங்களோடு கங்கைக்கரைக்கண்வந்து அவலித்திருப்ப அக்கால் வேதவியாசர்
வந்து உனக்கவலைமாறற்கு அஸ்வமேதம் புரிகவென, அதற்கவர் போதுமான பொரு
ளில்லையென அப்பொருள் வருவாய்க்கும் அம்முனிவரேதுகூற மீட்டும் பட்டினஞ்
சென்றரசியற்றுங்காற் கண்ணன் தருமரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு துவாரகைக்கேக
பின்பு பாண்டவர்க ளிமோத்கிரிக்கேகி வேதவியாசருடைய வனுக்கிரகத்தால் அருந்தனப்
புதையலெடுத்து அஸ்தினுபுரத்திற் கனுப்புங்கால் உத்தரை உயிறற்ற பிள்ளையைப் பிரச
விக்க அந்தத் திரிதராட்டிர னழைப்பிக்கவந்த கண்ணனுந் தந்தெழுப்பிப் பரிச்சித்தென்

னும் பேரிட்டழைத்துப் பாண்டவரை வரவழைத்து வேதவியாசரால் யாகத்தைக்குறித்து ரக்ஷாபந்தனஞ் செய்வித்து அருச்சுனனையு மஸ்வத்தையுந் திக்குவிஜயத்திற் கனுப்ப அவன் பலதேசங்களிலுஞ் சென்று பக்ஷம் பாராட்டி வென்று பப்புருவாகனற் றனக்கு வீஷ்மரைப்பற்றி வசுக்களால் நேர்ந்திருந்த பழியை நீக்கிக்கொண்டு சித்திராபர்வத்திற்கு முன்னுள் வந்து சேர அதுகண்ட தருமராஜன் சகல வைபவத்தோடும் அஸ்வமேத யாகத்தை நிறைவேற்றினராக அக்கா லளவற்ற பெரியோர்க ளஸ்வமேத முடிந்த சிறப்பைக் கொண்டாடும்போது ஓர் கீரிப்பிள்ளை வந்து அதிதி பூசையின் மகத்துவத்தைச் சொல்லிப்போன வரையிலுள்ள யாவுஞ் சாங்கோபாங்கமாய்க் கேட்டுச் சந்தோஷமாயினேன். இப்பால் இரண்டாம்பாகமாகிய ஆசிரமவாச பர்வத்தையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.]

---

## முதலாவது,

# திரிதராஷ்டிரன் றுறவெய்திய சருக்கம்.

---

### துதி.

நாமவ னிவனுவ னுவளெவன்
தாமவ ரிவருவ ரதுவிது வுதுவெது
வீமவை யிவையுவை யவைநலந் தீங்கவை
ஆமவை யாயவை யாய்நின்ற வவரே.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! அஸ்வமேத யாகத்திற்கு வந்த சிற்சில தேசாதிபர்களும், பிராமணர்களுந் தரும ராசனிடத்திற்கு வந்து, வடமதுராபுரிக்கு அரசனாகிய வசுதேவனையுங் கண்டு மருவித் தோத்திரம் பண்ணினர்கள். அதுகாலையில் அறக்குமாரன் மனமகிழ்ந்து அவர்களை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, ஆசனத்தி லிருக்கச் சொன்னர். அப்படியேஅவ்வரசர் களுந் அந்தணர்களுந் தாங்கள் கொண்டு வந்த இயானை குதிரை தேர் பல்லக்கு ஆபரணம் விநோத விந்தையான வீரகண்டை கொடி குடை புஜகிர்த்தி மகுடம் தும்பிப் பதக்கம் இவைமுதலிய பொருள்களை யெல்லாந் தருமராசனுக்கு காணிக்கை வைத்து தங்கள் தங்களுக்குரிய பீடத்தின் பேரிலமர்ந் திருந்தார்கள் அவை யனைத்தையுந் தருமராஜன் ஒப்புக்கொண்டு அவர்களுக்கு ஆணிப்பொன் பதக்கமும் மதாணி முத்துமாலைகள் இவை முதலிய வஸ்துக்களைவிஸ் தாரமாகக் கொடுத்தார். அவர்களவற்றை யேற்றுச் செலவு பெற்றுக் கொண்டு போயினர்கள். இப்பாற் பாண்டவர்கள் திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி விதுரன் திரௌபதி சுபத்திரை உத்தரை இவர்முதலானவர்கள் ஒருவரோடொருவர் சந்தோஷித்து அவ்வவர்கள் அரண்மனையிற் சென்று கூடிக் குலாவியிருந்தார்கள். இப்பால் தருமராசன் எட்டுதிக்கினுந் தீவாந்திரங்களினுந் தன்து ஆக்கினைச்சக்கிரஞ் செலுத்தி வெள்ளைக் குடை நிழலில் வீற்றிருந்து இராசாங்கம் நடாத்தி வரும்போது சிலநாட் சென்றபின் ஸ்ரீகிருஷ்ணதேவரும் இயாதவ குலத்தார் போஜ்குலத்தார் ஆண்பெண் ணடங்கலும் கிருபாநிதியான தருமராசனிடத்திற்செலவு வாங்கிக்கொண்டு தங்கள் தங்கள் பட்டினம் போய்ச் சேர்ந்தார்கள். இவ்விடத்தில் நாடு செழித்து காடு தழைத்து தருமங்களோங்கி சத்தியம் நிறைந்து பெருமையும் நீதியும் நெறியும் முறையும் சுத்தமும் சுகுணமும்

சீலமும் ஞானமும் மென்மேற்சிறந்து தேவ குருவும் ஆச்சரியப்படும்படியாகி தெய்வ லோகத்திலும் இந்த வைபவமில்லையென்று தேவேந்திரனுங் குபேரனும் புகழ்ந்து பூரிக்க சகோதரன் பந்து மித்திரர் முதலியோர் தன்னைவிட்டு பிரியாதிருக்கும்படியாய் ஒருமையுடனேயெம்பி மன்னுயிரெல்லாந் தன்னுயிர்போற் கருதி இரக்கமுஞ் சீவகாருண்யமும் உடையவராய்த் துரைத்தனம் பண்ணிக்கொண்டு வருகிறார் தருமநந்தனர்.

இப்படித் தருமர் துரைத்தனம்பண்ணி வரும் நாளையில்இவருடைய நித்திய நியதிகளென்னவென்றால்பட்டாபிஷேகமான நாள் முதற்கொண்டு நிதமுந் தம்பிமாருடன்உதயத்திலெழுந்து காலக்கடனை முடித்து சூரிய நமஸ்காரந் தொடுத்து அர்க்கியங் கிரமப்பிரகாரம் விடுத்து ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைத் தியானித்து திரிதராட்டிரனையுங் காந்தாரியம்மனையுமடுத்து ஆகமவிதிப்படிக்குப் பாத பூசைபண்ணி, பணிவிடை உபசாரப்பத்திகள் செலுத்தி துதித்து வணங்கித் தோத்தரித்து அவாளுடைய ஆசீர்வாதம் பெற்று பிராமணக் கூட்டங்களுடன் பெரிய தந்தையைச் சபா மண்டபத்திற் கழைத்துவந்து சிங்காசனத்திலேற்றி தானுந் தம்பிமாரும் பக்கத்திலிருந்து விதுரன் கிருபாச்சாரி உயிச்சன் சஞ்சயன் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் மந்திரிகள் தந்திரிகள் சாமந்தர்கள்பிரதானிகள் குடிபடைகள் இவர் முதலிய பேர்கள் சூழ்ந்திருக்கும்போது தேசசமாச்சாரங்கள் தூதர்கள்வந்து சொல்லக்கேட்டு அவற்றைத் தந்தைக்குரைப்பார் உடனே திரிதராட்டிரனதையறிந்து எந்ததேச ராஜர்களுக்கு என்னகுறையிருந்தாலும் அதை யம்மைந்தனுடன் சொல்லி மகிழ்ச்சியுண்டாகும்படியானுடன் செய்து அரண்மனைக்குப்போய் ஸ்நானஞ்செய்து அரண்மனைக்குப்போய் ஸ்நான பூசை செபதப முதலிய வெல்லாம் முடித்து திரௌபதி சுபத்திரை முதலிய மருமக்கள் மாரைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு அறுசுவையன்னமுண்டு சந்தனபுட்ப தாம்பூலங் கொண்டு ஒருநாளைப்போற் பலநாளு மனுபவித்துவருவான் மருமக்கள் மாரும் அம்மாமன் மாமிமாரிடத்தில் அதிக நேசமாயிருக்க அவர்களும் விசுவாசமாய்ப் பேதமற்றும் பொருந்தி யிருப்பார்கள் தங்கள் தங்கள்புருடருக்குஞ் செய்ய வேண்டிய பூசிதைகளைக் குறைவரச் செய்து வருவார்கள்.

---

### திரிதராட்டிரன் தருமராஜனுக்கு விபரீதச் சேலவுண்டாக்க, அதுகண்ட வீமன் மனம்பொறுது தவித்தல்.

இப்படிக்கிருக்க திரிதராட்டிரன் தருமராசனையழைத்து அப்பா தருமநந்தனா துரியோதனாதியர்களாகிய உன் தம்பியர்கள் பேரால் அக்கிராரம் சத்திரம் சாவடி மடம் சோலை நந்தவனம் கோவில் குளம்காள்வாய் ஏரி கிணறு தென்னைமரச்சோலை பனைமரச் சோலை புன்னைமரச் சோலை பலாமரச்சாலை இவைகளெல்லாம் ஏற்படுத்துக அவர்கள் துர்கிர்த்தியங்களெல்லாம் தீர்ந்து நற்கெதி பெறும்படியாயெண்ணுக என்று சொல்லித் தானே நித்தியவிசாரணை வைத்துக்கொண்டு அதுவே வேலையாய் எங்கே பார்த்தாலுந் துரியோதனனுடைய பேர் மயமாயிருக்கும்படி செய்வித்து நித்தியம் அநேக அரதேசிகள் பரதேசிகள் ஆண்டிகள் யோகிகள் சங்கமர்கள் தாதர்கள் இரப்போர் பறப்போர் பஞ்சைகள் இவர்கட்கெல்லாம் அன்ன சொர்ண வஸ்திராதிகளளித்து வித்துவான்களாற் பிரபந்தம் பாடச்செய்து பரிசுகொடுத்து திதிவருங்காலத்திலும் வருஷாப்திகத்திலுஞ் சோடச மகாதானஞ்சொரிந்து வருகிறான் அவனெப்படி வாரிச்சொரிந்தாலும் மேலும் மேலும் பரிந்து நடப்பிக்கும்படி செய்து அவனிஷ்டத்துக்குக் குறுக்கே பேசாமல் தடைசொல்லாமல் பொருளில்லாதிருந்தாலும் அந்தச் செய்தியையுந் தெரிவிக்காமல் எல்லாஞ் சரியென்று அப்பெரிய தந்தை பெரியதாயின்மனதிற்கு வித்தியாசந் தோன்றவொட்டாமல் நடந்துகொண்டு வந்தார் தருமராசன் இதல்லாமல் அத் திரிதராஷ்டிரனுடைய உத்தரவின்படி துரியோதனன் துச்சாதனன் முதலாகிய பிள்ளைகளுக்கும் வீஷ்மர் துரோணர் சோமதத்தன் காம்பிலீகன் அபிமன்னன் சயிந்தவன் சல்லியன் சகுனி கர்னன் இவர் முதலான பேர்களுக்கும் யாதவாள் போஜகுலாள் காந்தாரபதிகள் விராடபுரத்தார் துருபதேயர் காசிராசர்கள் தேசராசர்கள் சேரசோழ பாண்டியாள் இவர் முதலிய அநேகம் பேருக்கும் அவ்வ

வவர்களோடுவந்து மடிந்துபோன புத்திர மித்திர பந்துசனாதிகட்குந் தினந்தப்பாமற் சிரார்த்தம் நடப்பித்தும் அதிதி முதலிய பேர்களுக்கு அன்னதான மீந்தும் பசுமுதலிய தானங்கள் பண்ணியும் அபரிமிதமில்லாத தருமச்செலவுகள் செய்தும் ஒருவேளை அன்னம் புசித்தும் அதுவுஞ் சிலகாலமின்றி உபவாசமிருந்தும் பசுமுதலிய தானங்கள் பண்ணியும் அபரிமிதமில்லாத தருமச்செலவுகள் செய்தும் ஒருவேளை யன்னம் புசித்தும் அதுவுஞ்சிலகாலமின்றி உபவாசமிருந்தும் அவற்றையுங் கோபமில்லாமற் பொறுமையூய்ச் சந்தோஷமாக நடத்தி அந்தத் தாய்தந்தைகள் சிந்தை களிக்கச் செய்துவந்தார் தருமமூர்த்தி.

இவைகளையெல்லாம் வீமசேனன் பார்த்துக்கொண்டிருந்து ஒருநாள் தமையனருகில் வந்து அண்ணா முன்னாளில் துரியோதனாதியர்களுக்குந் தங்களுக்கும் நடந்த சரித்திரமும் நாம் பண்ணிய சபதங்களும் அவற்றை முடிக்கவேண்டிப்பட்டபாடும் இந்தத் திரிலோகங்களு மறியுமல்லவா இதெல்லாம் ஒருபக்கமிருக்க இப்பவும் அந்தத் துஷ்டர்களைப் பெற்ற இந்தக்கிழவன் ஏற்பட்டு நம்மைத் தலையெடுக்கவொட்டாமல் முடியைத் தடவி மூளையுறுஞ்சுபவர் போலவும் பகையாளி குடியை உறவாடிக் கெடுப்பவர்போலவும் சந்தோஷமாகவே உம்மை மேன்மைபடுத்தி மிடற்றைப் பிடித்துக்கொண்டு வருகின்றான் இதுதெரியாமல் தேவரீர் அன்றைக்கும் இன்றைக்கும் மற்றென்றைக்கும் ஒன்றாய் நன்றாயிருக்கின்றீரண்ணா நானோ இவை யனைத்தையும் பார்த்துக்கொண்டு தேவரீருக்கு மனக்கிலேசம் வரப்போகுதென்று வாயைத்திறவாமல் மறுவார்த்தை பேசாமல் எனக்கு நானே வயிற்றைப் பிசைந்து வயிறெறிந்து வாய்ப்பூட்டு கட்டிக்கொண்டு திரிகிறேன் முன்னே பேசினாற் சிசுவத்தி பின்னே பேசினாற் பசுவத்தி இடையிற்பேசினால் ஸ்திரீஹத்தி கடையிற் பேசினால் பிராமணஹத்தி இப்படியாக இடிந்திருக்கிறேன் என்னைக் காணும்போதும் என் வார்த்தை கேட்கும்போதும் பெரியவரும் அவர் பெண்சாதியும் நூறுபேரையு முடித்தவனென்கிற கியாபகத்தினாற் பெருமூச்சுப் பேரிரைப்பும் விட்டு முறுக்கி ஒரேபிடியாய்ப் பிடித்துக் கடித்துத் தின்றுவிட வேண்டுமென்று எண்ணியிருக்கின்றார்கள் நானவர்கள் வாய்க்கு அடங்குகிறவனாகயிருக்கவில்லை அதனால் இதுவரையிலும் பிழைத்திருக்கிறேன் தேவரீரோ தங்கள் மனதைப்போல் எதிரிமனதுமிருக்குமென்று நம்புகின்றீர்கள் இதற்கு நானென்ன செய்வேன் ஆருடன் முறையிடுவேன் என்றாலும் பொறுக்கமுடியாமல் இன்று தங்களுக்கு வெளிப்படுத்தினேன் என்றான்.

இவை யனைத்தையுந் தருமசொரூபி கேட்டு ஆ! தம்பி எது எப்படியாயினும் இப்போது சொல்லியதுபோல் இனியெப்போதுஞ் சொல்லாதே அவர்கள் மெத்தவும் நொந்துபோயிருக்கின்றார்கள் மைந்தராசை பொல்லாது அந்த விசனங்களை நாமேதான் ஆற்றல்வேண்டும் என்று புகன்று சத்துருவையு மித்துருவையுஞ் சரியென்று தானெப்படி வணங்குகின்றாரோ அப்படியே இயாவருந் திரிதராட்டிரனுக்கு வணங்கும்படியாய்த் திட்டப்படுத்தி வீமன் சொல்லுவதற்கு முன்னே யிருந்த பத்தியைப் பார்க்கிலுஞ் பத்தத்தனைபங்கு அதிகமாய் போஷிக்கவும் பூசிக்கவுந்தொடங்கினார் அதனால் வீமனுக்கு நெஞ்சில் நெருப்புமூண்டு ஒருநாள் தாட்சணியம் பாராமல் திரிதராட்டிரன் காந்தாரி இவர்களுக்குக் கேட்கும்படியாய்ச் சொல்லுகிறான் ஓ! ஓ! இவ்வுலகத்தில் அநேகவரசர்களையும் இராசர்களையும் தேவர்களையும் எட்சுக்களையும் கந்திருவர்களையும் வீராதி வீரர்களையும் சூராதி சூரர்களையும் சிங்கத்தைக்கண்டு பங்கங்கண்டோடி இறந்துபோகின்ற யானைகளைப்போல் என்னிடத்தில் அபஜெயப்பட் டழிந்துபோகும்படி கண்டது இந்தக் கைத்தண்டல்லவா துரியோதனாதியர் நூறுபேர்களையும் வேள்விப் பசுக்கள்போல் மாட்டிவிட்டது இந்தக் கதாயுதமல்லவா மண்ணாசைகொண்டு பெண்ணாசையுண்டு மானபங்கம் பண்ணி விண்ணாசைகொண்ட வீணரை முடித்தது இந்தத் தடியல்லவா மோசமெண்ணி மாயச் சூதாடிய பாவியும் அவன் குடும்பமும் எங்கே அவனோடு வீண்பேச்சுப்பேசி நாசமாய்ப்போன வினாசகாலரெங்கே இவர்களையும் இவர்களுக்கு ஏற்பட்ட துணைகளையும் ஈடுகொடுத்துச் சாடி அமராடி எனக்குத்

துணைகூடியிருந்தது என் கதாயுதமல்லவா இதைவிட எனக்கொரு சகாயமில்லை ஆனல் தெய்வசகாயம்போல் இந்தக் கதை எனக்கு உயிர்த்துணையாதலால் தினமானம் இதைப் பூசை செய்து வருவேன் என்று தெழித்து சுழற்றி மேலே விட்டெறிந்து கீழது மேல தாய்ப்புரண்டு வருவதைப் பிடித்து எதிரில் நின்ற நகுலசகாதேவரைப் பார்த்து ஒ தம்பி மார்களே இப்பவுந்தானென்ன எனக்கெதிர் ஒருவருமில்லை உண்டென்றுவந்தால் சண்டனுலகத்திற் கனுப்பிவிடுவேனென்று இரைந்தான்.

---

### திரிதராட்டிரன் கொலுக்கூடம்வந்து தனது துறவின்கருத்தைத் தருமனுக்குணர்த்தி விடைகேட்டல்.

இவையனைத்தையுங் கண்ட நகுல சகாதேவர் முகஞ்சுளித்து தருமராஜனைப் பணிந்து ஜாடையாய்ச் சொன்னார்கள் அதனைக் கேட்டுங் கேளாததுபோற் றன்னியல்பவர் படியிருந்தனர் இந்த வீமனிசைத்த வெப்பான பேச்சுகளைக் கேட்ட பெரியராஜனும் பெரியதாயும் மனம்வருந்தி இவன் என்றைக்கும் மூரடன் முன்பின் தெரியாமற் பேசிவிடுவான் எந்தச்சங்கதியும் உரக்கக் கூவுவான் இதனுல் நமக்காகவேண்டியதென்ன எல்லாவற்றிற்கும் தருமராஜனிருக்கின்றான் அவன் நல்லபிள்ளை நமக்குச்செய்துவருகிற உபசாரமும் பணிவிடைகளும் போசனாதி சவுக்கியமும் வந்தனை வழிகளுங் குறைவானவைகளா இல்லை நமக்குந்தான் ஏதாகிலுங்குறைவுண்டா தாட்சி என்பது சாக்ஷிக்கு மில்லை பாலைப்பற்றிப் பானையைக் காக்கவேண்டும் என்று புருடனும் பெண்சாதியும் பேசாமலிருந்து ஒருநாள் பெரியபிள்ளையை யழைத்து ஐயாமூர்சகேதனா உன் தம்பிமார்கள் இறந்துபோய் பதினைந்து வருடமாயின இதுவரைக்கும் என்னிஷ்டம்போல் நடத்தி வந்தாய் என் பிள்ளைகளிருந்தாலும் நாங்கள் இவ்வளவு சவுக்கியம்பெறமாட்டோம் அப்பாவள்ளலே இது உள்ளபடி சொன்னோம் இன்றைக்கு கள்ளமில்லாத உன்னோடு கொலுக்கூடம்பார்க்கவருகிறோம் ஆதலால் நீயழைத்துக்கொண்டு போகவேண்டும் என்றார்கள் உடனே தருமராஜன் மகாபாக்கியமென்று கூறி அளவற்றவேதவேதியர்கள் வித்துவசனங்கள் வேந்தர் தம்பியர் நால்வர் கிருபாச்சாரியர் விதுரன் சஞ்சயன் உயிச்சன் மற்றுஞ்சுற்றிலுமுள்ள குறுநிலமாக்கள் இவர்களெல்லோருங் கூடியிருக்கச் செய்து தந்தை கருத்தெரிவித்தார் திரிதராட்டிரனும் அவன சாயல்போலு மிரா நின்ற காந்தாரியுஞ் சகல வித வைபவ வண்மை யலங்காராதி வரிசைகளோடு அந்தப்புரத்தை விட்டு வெளிப்பட்டு மேளதாளங்கள் அல்குசா புள்ளாங்குழல் முறலி நாகசுரம் யாழ் வீணை இவை முதலிய சின்னங்கள்நெருங்கக் கட்டியர் கொண்டாட பட்டுவான்கள் புகழ்ந்து பூாட எட்டுத் திக்குஞ் செயங்கொண்டாட விருந்த சந்திர குலத்தாருடைய இயற்கைகளை இசைந்துப் பரணி முதலிய பிரபந்தங்களை வித்வான்கள் பிரசங்கம்பண்ண கணிகையர் நாட்டியமாட கடவுளர் கைலாவுகொடுக்க கந்தனையனைமைந்தர்கள் வந்தெதிரழைக்க வந்து கொலுக்கூடத்தி லமைந்திருக்கின்ற சிங்காசனமேறியிருந்தார்கள் அவ்விடத்திலிருந்த யாவரும் வணங்கிப் போற்றினர்கள் பெரியோர்களை இவர்கள் தொழுது ஆசீர்வாதம் பெற்று இயாவரும் நிறைத்திருக்குஞ் சபையில் தருமராஜனை யழைத்துப் பக்கத்திலிருத்திச் சில வார்த்தைக ளியம்பத் தொடங்கினன் திரிதராட்டிரமகாராஜன்.

அப்பா புருடதீரனே அப்பா புருடரத்தினமே அப்பா புருட சிலாக்கியனே அப்பா புருட பூச்சியனே அப்பா புருட திலகனே ஐயா புண்ணியப் புதல்வனே என்வார்த்தையைக் கியாபகம் வைத்துக்கேள் அலர்ந்த புட்பமாலைகளைப் புனைந்த அரசர்களிற் சிலர் இம்மைப் பிரயோசனத்தைக் கண்டு போதுமென்ற திருப்திகொண்டு மறுமைப் பிரயோசனத்தைப் பெறவேண்டுமென்று மாதவம் புரிந்து சுகம்பெற்றார்கள் பலர் மண்ணாசையால் மயங்கிப் பெண்ணாசை பேய்பிடித்து உயங்கி பொன்னாசைக்கு முயங்கித் திரிகின்ற பேராசைக்காரர்களாகித் துறவுபெருமல்பாசபந்தத்தில் அழுந்தி முடிவில் வருணபாசப் பிணிப்பினால் வருந்தினர்கள் சத்து அசத்து என்பதை உணராதவர்கள் தாமச குணத்தையுடையவர்களாய்ச் சங்கடப்பட்டிருந்து மறுபடியுஞ் சனனமெடுப்பார்கள் அச்சின்னவறிவுடையவர்கள் மெய்யைப் பொய்யென்றும்

பொய்யை மெய்யென்றும் வாய் கூசாமற் பேசி வருந்துவார்கள் அப்பனே இந்தப்பாண்டம் உப்பில்லாம லுளுக்கத்தக்கது ஊழ்வினையும் பாழ்நிலம் மலக்கூடு பிரதிமை காற்றிருந்தசைக்குந் துருத்தி நீரிற்குமிழி தெருப்பிலிட்ட வெண்ணெய் இதற்குவேலையென்னவெனில் ஓயாதிறக்கிறதும் பிறக்கிறதுமாகிய இவ்விரண்டு வேலையே இவ்விரண்டையுமில்லாமற் செய்துக்கொள்ளுவதற்குந் துறவு என்பதுவேதிறவுகோல் இத்துறவே செனனமரண சாகரத்தைக் கடப்பதற்குத் தெப்பம் இந்தத் தெப்பத்திலேறிச் சஞ்சலமாகிய ஜனனமரணக் கடலைத்தாண்டி பிரமக்கியானம் பேருத்தியிலேறி விளையாடி அஞ்சனம் போட்டறியும் பெகருட்போல் அகண்டாகார பிரமஞானத்தையறிந்து அக்கியான கேவலமான சமுகவிகார குடும்பத்தி லாழாமற் பரமாச்சாரிய னருளைக் கொண்டுஉப்புக் கடற் சலத்தை மேகங்குடித்துச் சுகப்படப் பொழிந்தும் பின்னுமந்த நீரானது அக்கடலிற் போய்விழுந்து பழய உப்பாய் ஒப்புரவு கொள்வதுபோற் பிறவியின் குணமாதலால் அக்குருவருளைப்பற்றிச்சுகத்தையடையவேண்டியது விவேகவானாகிய உனக்குநான்விவரித்துச் சொல்ல வேண்டியதில்லை கிருஷ்டிநாகன் எனக்கு நூறு பிளைகளைக் கொடுத்தாற்போற் கொடுத்து அவர்களின்புத்தியைக்கெடுத்து யுத்தகளத்திற் படுத்தால் அந்தப் பிள்ளைகள் எனக்குச் சள்ளைகளென் றெண்ணுமல் விஷத்தை அமுதென்ன விரும்பிய விழலனைப்போல் விருதாவாய் பழியேற்றேன் விதியை யனுசரிக்கு மதியென்பதற்குச் சரியாய் அவர்கள் போனவழிக் கெல்லாம் இடங்கொடுத்துப் பிற்பாடு பெருந் துக்கத்திற் குடம்பெடுத்தவ னாயினேன்.

அப்பா உதிஷ்டிரனே நமது கிருஷ்ணன் தூதுவந்தபோது நெஞ்சில் வஞ்சனையில்லாமல் என்னைப் பார்த்தபோது ஓமாமா உமது நூற்றைந்து பிள்ளைகளையும் ஒன்றுபடுத்தி வாழ்விக்கவேண்டி நான் வந்துஎன்னபாடுபட்டும் என்னெண்ணப்படி முடிவதாயில்லையே என்று என்னிடத்தில் அன்புபாராட்டி எத்தனையோவித மிசைத்தான் இதல்லாமலும் வீஷ்மர் துரோணர் கிருபர் விதுரர் சஞ்சயன் இவர்களைக்கொண்டும் இன்னுமுள்ள மகாரிஷி முதலிய பேர்களைக்கொண்டும் எனக்கும் என் பிள்ளைகளுக்குத் தெரிவித்தான் அப்பா தருமநந்தனு என்ன தெரிவித்தும் இப்படியாகமுடிவதற் கிருக்கும்போது என் துற்புத்தி அந்த நற்புத்திக் கிசையுமா இதற்கு மூலமானவன் நானே என்னைவிடப் பெரும்பாவி எங்கு மிருக்கமாட்டார்கள்இந்தமட்டும் இகத்தாசையைத்துறந்து பரத்தாசையை விரும்பிப்பாராமற்போனுல்மகாபாதகங்கள் வந்து என்னைப் பற்றிப் பீடிக்கும் அடா குழந்தாய் உன்னைப் பிள்ளையாகப்பெற்ற நான் கொள்ளையாகிய கொடுநரகத்திலாழ்வது குணமோ நம்முடைய பிதுர் பிதாக்கள் முதலிய பெரியோர்களும்பேறே முக்கியமென்று வேறே பாக்கியந் தேடாமல் நேரே சுவற்கம்போய் நிலைத்தார்கள் இந்தச் சந்திர வம்சங் கடைத்தேறுவதற்கு உன்னைவிடப் பிள்ளைகளில்லை உனக்கு நிகர் ஒருவரையுஞ் சொல்லமாட்டேன் இந்த நாட்டைவிட்டுத் துறந்து நான் காட்டை கிட்டிப்போனுலும் உன்னுடைய அருமைபெருமை நற்குணம் சாந்தம் பொருமை சுத்தம் பத்தி ஆசாரம் உபசாரம் சத்தியம் விரதம் இப்பேர்ப்பட்ட நன்மைகளை மறக்கமாட்டேன்சுருதி குரு சுபானுபவம் என்கிற மூன்றில் முதலிரண்டு முன்னே யுணர்ந்தேன் கடைசியொன்ருகிய ஒவானுபவமென்பதை உன்னுற்றெரிந்துகொண்டேன் அதாவது துஷடப்பிள்ளைகளைப்பெற்ற பாவமே ஓ என்னிஷ்டகனிஷ்டனுகிய பாண்டுபுத்திரனே உன்னுல் அப்பாவ வனுபவம்போய்ப் பரிசுத்தம் பெற்றேன் ஆகையால் நீ நமது பெரியவர்களாண்ட பூமியைச் சீர்ப்படுத்திக்கொண்டு செல்வமாகயிருந்து செயம் பெறக்கடவை நான் துறவடைகின்றேன் உலக தருமமாவது இராஜன் குரு பிதுர் தமயன் இவர்கள் சொல்லின்படி வழுவாம லிருத்தல் அப்படிக் கிருந்தால் யாதொரு தோஷமுமில்லை அதைப் பற்றி என் சொல்லைத் தடுக்காமல் ஒப்புக்கொண்டு விடைகொடுக்க வேண்டும். அப்பா வித்தகனே இயான் இருந்து காணப்போகிற காட்சி வேறில்லை உங்களைவர்களுடைய அன்பும் விசுவாசமும் மொய்ம்பாகிய பலமும் அரசாட்சியுங் கண்டேன் ஆநந்தங் கொண்டேன் அவனியாசையை விண்டேன் எத்தனை நாளைக் கிருப்பினும் ஒருநாளிறப்பென்பது நிச்சயம் இவ்விதமாக இறப்பவர்கள் வீட்டிலிருக்காமல் துறவடைந்து காட்

டுக்குப்போய்த் தனித்துத்தவமிழைத்து ஆன்மாவை யொழிப்பாராகில் அவர்கள் தான் பிழையின்றிப் பிழைத்தவர்களென்று பெரியோர் பேசியிருக்கின்றார்கள் ஆகையால் நீ மனதுமகிழ்ந்து எனக்குச் செலவு கொடுத்திடவேண்டுமென்றனன்.

---

### திரிதராட்டிரன் கருத்துக்குத் தருமனேவ் வாம லிருவருஞ் சம்வாதித்தல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே இவை யனைத்துங் கேட்ட தருமராஜன் மிகவுமாலோசித்து ஐயாதேவரீர்க்கு யான் நித்தியவிதி செய்து பத்திபாராட்டி வருவதில் ஏதாகிலுங் குற்றமுண்டோ எங்களைவர்களால் தப்புத்தாட்சி யுளதோ இதரமானவர்களால் ஏதேனுங் குறை நேர்ந்திருக்குமோ தேவரீருடைய மனம் இடையவேண்டியசெயல் யாதோ தெரியேன் நாங்கள் குழந்தைகளாயிருக்கிற ஏழு ஆறு ஐந்து நான்கு மூன்று இவ்வயதுகளிலெங்கள் தந்தை சிந்திப்பேரயிருக்க அக்காலத்தி லாதரித்து அக்ஷராப்பியாசஞ் செய்வித்து தனுவேதங் கற்பித்து தேவேந்திரபோக சாம்பிராச்சிய சம்பிரமம் அனுபவிக்கப் பண்ணி கண்பார்வையை நிமைகாக்கு மாறுபோ லிரட்சித்து எங்களுக்குத் துணைகாரணமா யிருந்த சுத்தபவித்திர உத்தமத் தந்தையான தேவரீர் காட்டுக்குப் போகிறே னென்பது கடமையோ தங்களுக்கு இப்பேர்ப்பட்டவெறுப்பு வருவதற்கு காரணம் இன்னதென்று தேர்கிலேன் இயாவருக்கும் விதிவழி மதியனுசரித்து வினையின்படி நடந்துபோனது போச்சு அன்னாள் முதல் இன்னாள் வரையிலும் இடையில் யாதொரு காரணங்களிலுந் தேவரீருடைய மனம் எங்கள் பேரில் வெறுத்ததில்லை அப்படிக் கேதாகிலும் வித்தியாசங் கண்டிருப்போமாகில்இதுவரையிலும்பொருந்திப் பூசித்து நேசித்து விசுவாசித்து வாழமாட்டோம் ஓ தயைதாட்சணிய முண்டாகிய தந்தையே எங்களுக்கு தாய் தந்தை குரு தெய்வம் மித்திராள் இவர் முதலிய யாவரும் நீங்களென்று நம்பியிருக்கிற எங்களை இப்போது தேம்பவிடுத்துக்காட்டுக்குப்போகக் கருதுவது தக்கதாவென்றுசொல்லிச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து வெம்பியழுதார் வீமனுந் தொழுதான் தம்பியரும் பணிந்தார்கள் அப்போது திரிதராட்டிரன் நமஸ்கரித்தவர்களைக் கைதூக்கி யெடுத்து அணைத்து முத்தமிட்டு ஐவரையும் பக்கத்தில் உளுக்காரவைத்து தருமராஜனை பார்த்து அப்பனே நீ ஆளப்பட்ட அரசாட்சியிற் குற்றம் பகை பேராசை பொறாமை கோபம் புறங்கூறல் பொய் இவைகளெல்லாங் குலத்தோடு சாய்ந்தன சுத்தம் நிறைகுணம் உறவு சமத்துவம் சாந்தம் புகழ் சத்தியம் இவைகளியாவுங் குடியேறி வாய்ந்தன உன்னுடைய நீதியாற் பசுவும் புலியும்சிங்கமும் யானையும் கருடனும் பாம்பும் குரங்கும் நண்டும் மூடரும் ஞானியும் புலியும் மானும் எலியும் பூனையும் கிளியும் கீரியும் கோழியும் நரியும் தோண்டானும் ஆடும் பகையில்லாம லிருக்கின்றன உங்களாலே ஒரு குற்றமுங் குறையுமில்லை உபசார ஸ்திரிகளாலே பொல்லாங் கொன்றுமில்லை மற்றையர்களாலும் மனஸ்தாபமில்லை;

ஓ கலியென்னுங் கரும்பனியைத் தொலைக்குஞ் சூரியன்போன்ற பாக்கியனே எல்லாப் பிறப்பினும் மானிடப்பிறவி அருமையானது அப்பிறவி யெடுத்தாற் பத்தினி புத்திராளுடனே கூடி வாழ்வது துக்கம் அதையொழித்து துறவறமெடுத்துத் தவம் புரிந்தால் அவர்கட்குச் சொற்கம் ஆனதால் அவாவறுத்தலென்னுந் தருமத்தைபற்றிக் காட்டுக்குப் போகின்றேன் இன்னும் நாட்டிலும் அரண்மனை வீட்டிலு மிருந்தால் எமவாதைக் கிடமுண்டாகும் அப்போது நான் அவஸ்தைப் படவேண்டிவரும் பூமியிற்றோன்றிய வெல்லாம் அழிந்துபோவனவே அழிந்துபோவதற்கு முன்னே தபசுமுதலிய தானதருமங்களைச் செய்து நற்கதி புகவேண்டும் அதைவிட்டு ஆசாபாசங்களி லாழ்ந்து வீழ்ந்து போகிறவர்களுக்கு என்னவுண்டாகும் அந்தகனாலும் அவனுடைய தூதர்களாலும் பந்தப்பட்டு பரதவிக்க வேண்டிவரும் ஓ அறநெறி யகலாத ஐயனே நமது சந்திரகுலத்திற் பிறந்து தரணியை யாண்டஅரசர்கள் தங்களுக்குத்தேகதிடமும் நல்லறிவுமுள்ள வரைக்குந் தாங்களே நீதியான அரசாட்சி செலுத்தி வயோதிகம்வருஞ் சமயமறிந்து பிள்ளைகளுக்குப் பட்டங் கட்டி அவனியைப் புரக்கவைத்து அடவி சேர்ந்துதடையிலாப்பதவிக்குத்தக்கவழியை

அனுசரித்தார்கள் நீயுமப்படியே என்னிடத்திருட்டிய வாஞ்சையின்படிக்கு அன்பு தவருமல் அனுப்பிவைப்பாயாகில் ஊழிகாலமும் உலேவில்லாமற் சுகமே யிருப்பீர்கள் நான் அனேகநாள் கெடிஸ்தலாதிபனுகி யிருந்து சகலமன்னர்களும் வணங்கும்படிக்கு வாழ்ந்து சாஸ்திரசம்பிரதாய பண்டிதனுகிய உன்னைப் பிள்ளையாகவும் சதுர்வேத வியாசரைத் தகப்பனுகவும் பாண்டுபூபதி விதுர மகாராசன் இவர்களைத் தம்பிகளாகவும் வீஷ்மாச்சாரியரைப் பரமாச்சாரியப் பண்ணவனுகவும் பெற்று அவாளுடைய கிருபாகடாட்சமுங் கண்ட நான் நரகத்திலாழ்ந்து போவது ஞாயமா உலகத்திற்குத் தாயனைய நான் இன்னமுந் துறவுகொள்ளாமற் பேயனுய்ப் போவது பெரும்பிழை ஐயனே இன்னு மிப்படி யிருப்பேனுகிற் சிற்றறிவுடையவனென்று சிலர் பேசுவார்கள் புத்தியீனனென்று பலரேசுவார்கள் இறக்கிற விஷயங்களிற் போர்முகத்தி லிறப்பது முத்தி தவம் புரிந்திறப்பது அழியாப்பத சித்தி இவ்விரண்டு மில்லாமல் முதுமையும் திரையும் நரையும் தலைநடுக்கமும் காதடைப்பும் கண் பஞ்சடைவும் கியாபகப் பிசகும் காரியத்தாட்சியும் இருமலும் ஈளையும் இளைப்பும் உளைப்பும் களைப்பும் கைத்தலத்திற் றண்டும் முதுகுவளைவும் தேக வாட்டமும் திடந்தப்பிய ஆட்டமும் பந்துசனங்கள் கூட்டமும் திகிலும் பயமும் ஆசையும் பாசமும் பந்தமும் சொந்தமும் படரக்கிடந்து வாய்குழறி கண் பார்வை யுடைந்து அதில் நீர் தாரையாயோட நெடுமூச்செறிந்து அரண்டு புரண்டு ஆவியொழிவது அழகல்லவே.

அப்பா சற்புத்திரனே என்னடக்கையைப்பற்றிப் பெரியவர்கள் வாக்கினுற்பிழையாகப் பேசினுல் நான் பிழைத்த பிழைப்புக்குச் சிறுமையுண்டாகுமே இன்னுமெத்தனை நாளைக் கிருந்தாலும் நீ யென்னைப் பார்ப்பது நானுன்னைப் பார்ப்பதுவே யன்றி வேறென்னையுண்டு நானே ஆரகேயூர கிரீட புஜக்கீர்த்தி முதலிய ஆபரணங்களையும் சரிகை வஸ்திரங்களாகிய சாதரா சகலாத்துகளையும் சுமந்து சுமந்து காய்ப்பேறிப் போயினேன் சட்ருசி பதார்த்தங்களுடன் அன்னம் பால் ரசம் பண்டு பலகாரங்களு முண்டு கழித்துவிட்டேன் பெண்டு பிள்ளை முதலியவற்றைக் கண்டு ஒழித்துவிட்டேன் இனிமேலெனக்கு ஒரு ஆசையுமில்லை சம்பங்கித் தயிலம் பூசி வகுத்து உயர்ந்த சுகந்த மிகுந்த பூமாலைகளைப் புனைந்திருந்த தலைமயிரைச் சடையாகக்கட்டி செங்கோற் பிடித்தகரத்தில் தருப்பைப்புற் பௌத்திரம் போட்டு அறுசுவை யுண்டியுண்ட நாவினுற் கந்தமூலம் புசித்து பஞ்சணையிற் படுத்ததை விடுத்து கிருஷ்ணசனமடுத்து இரத்தின குண்டலமும் பதக்கமுமணிந்த காதுகளிலுங் கழுத்திலும் உருத்திராட்சம் புனைந்து பட்டு பட்டாவளியுடுத்த இடையில் மரவுரிதரித்து திட்டி அமட்டிப்பேசிய வாக்கினுல் திருமந்திரஞ் செப்பி அஷ்டாங்கயோகமுடைய பெரியோரைத் துணைக்கொண்டு காலங்கழிப்பது நன்மை தீராதுக்கத்தைத் தருகின்ற தேசத்திலிருப்பது துன்மை அப்பா என்னன்பிற்குரிய அறன்குமாரனே என தபிப்பிராயத்திற்கு மனதொத்து விடை கொடுத்திடுகவென்று வேண்டிக்கொண்டான் இம்மொழிகளைக் கேட்ட குந்தியின் மூதற் குமாரனுனவர் சிந்தைகலங்கி நமது பெரிய தந்தைக்கு இந்த வக்கியானந்தீர்ந்து அந்த விக்கியானம் பிறந்தவித மெப்படியோ ஆ! ஆ! மகா ஆக்சரியம் என்று இரண்டு கரத்தையுஞ் சிரத்திலேற்றிப்போற்றி கண்ணீர் தாரை தாரையாயோட மனேவாக்குக் காரியத்தைச் சுவேத க்ஷத்திர நீழலு லடக்கிச் செங்கோற்கோணுமல் எங்கும் பிரக்கியாதியாய் நீதி செலுத்தி வருவதே நித்திய விரத சத்திய தருமம் இதனுற் தவமுதலியவுஞ் சித்தியாகும் தபசு பண்ணுகிறவர்களைப் பார்க்கிலுந் தருமவானுகிய இராஜன் அதிக பலனடைவான் அஃதெவ்வாறெனில் கடினமிருதயமில்லாமற் பஞ்சேந்திரியம் ஒருவழிப்படுத்தி பாவபுண்ணியந் தெரிந்து கோபதாபத்தைக் குறுக்கி ராஜரீகம் பண்ணினுல் அதனுல் வரும் பலன் அநேக நாள் தவம்பண்ணுகிற பேர்களுக்கு கிடைக்காது அவ்வரசனும் அந்நாட்டிலுள்ள மகா ஜனங்களும் முத்தியடைவார்கள்.

ஓ எந்தையே இவ்வுலகத்திலுள்ளோர் நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போய்த் துறவடைந்து தவமிருந்து மேற்கதி பெறுவரென்று பேசுவது வழக்கமாய்ப் போனபடியால் தேவரீரும் அப்படியே நினைத்தீர்

அதை நான் விலக்குவதற்கு அருகனல்ல
அடியேனுக்கு ஒருவரங் கொடுத்தருளல்
வேண்டும் அதாவது என்னைப்பெற்று வளர்
த்து இராச்சியபட்டாபிஷேகம் பண்ணிவை
த்து என்னுற்காணவேண்டிய கண்காட்சியுங்
கண்ட கடவுளாகிய நீர் காட்டுக்குப் போகிற
படியால் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்
உமக்கு ஏவற்றொழில் செய்வதற்காக நானுங்
கூடவந்து விடுகிறேன் தேவரீரைத் தெய்வ
மென்றெண்ணி ஊழியம்பண்ணி வருவதில்
எங்களுக்குண்டாசியதீவினைகள் தீர்ந்துபோ
ய்விடும் நாங்களாண்டு வருவதை தேவரீர்
காண்டற்கில்லாமல் எங்களைப் பிரிந்து ஒருக்
காலும் நாங்களிருக்க மாட்டோம் எங்கள்
சொல்லைத் தடுக்காமல் வரங்கொடுக்கவேண்
டுமென்று தருமர் கேட்டார் அதற்குதிரிதரா
ட்டிரன் செப்புகின்றான் ஓ சேயனே நீ சொ
ன்னது தகாதவார்த்தை எல்லாமனுபவித்
துக் கிழமாய்ப்போன நான் துறப்பதுஎளிது
பிறந்தநாண்முத லிதுவரையிலுஞ் சௌக்கி
யமில்லாதிருந்து இப்போது அரசுபுரிந்து
வருகிறவர்கள் நீங்கள் ஆதலால் இந்தவாழ்
வைவெறுந்து நீங்கள் எனக்குமுன்னேகாட்
டுக்குப்போய் இறக்கிறோ மென்பதை மறக்க
வேண்டியது திரிலோகமும் உங்களாலே சுக
நபடவேண்டி யிருக்கின்றமையால் நீயிந்தச்
சொல் கூறத்தகாது உலகத்திற் கரசனில்லா
விட்டால் தருமங்களும் நன்மைகளும் விட்
டுப்போம் உன்னை நம்பியிருப்பவர்கள் வெம்
பிப்போவார்கள் புரசனர் முதலியபேர்களுந்
துறவுபெற்றுப் போவார்கள் மேலும் நான்
என் மக்களும் ஒக்கலுஞ்சேர்ந்து உங்களைப்
படுத்தியபாடுங் கெடுத்தகேடும் போகும்படி
யாய் நீங்களிராச்சியத்தைப் புரந்து தருமந்
தப்பாமல் னடந்து மேலான கீர்த்திபெற்று
நாங்கள் சம்பாதித்துக்கொண்ட அபகீர்த்தி
யைப்போக்கி எங்களுக்குமேலானபதவியுண்
டாக்கி வைக்கும்படிக்கு வையகத்திலிருந்து
மனுநீதி நப்பாத வாழ்வுபெற வேண்டும்
உனது தருமநீதியைப்பற்றித் தானே நான்
தவத்திலுக்குப் போகிறேனென்றது நான்
கொண்ட ஆசையை நீ கெடுத்துவிடாதே
என்னிஷ்டப்படி செலவு கொடுத்தால் இச்
சந்திரவமிசமும் என்றவமும் உன் சத்திய
விரதமும் விருத்தியாகும் உன்னைப் பிதுர்வா
க்கிய பரிபாலனென்று யாவரும் புகழ்ந்துக்
கொண்டாடுவார்கள் காலமுள்ளவரைக்கும்
ஞாலத்தில் உன்பேர் பூசிக்கப்பெறும் அப்
பா உத்தமனே தடை சொல்லாமற் செலவு
கொடுத்திடுகவென்றான்.

---

## தருமன் சமவாதத்தால் திரிதராட்டிரன் மூர்ச்சித்தல்.

இவையனைத்தையுங் கேட்ட மெய்விர
தன் ஐயமாய் விசாரப்பட்டு ஐயோ பழுத்த
ஆலமரத்தைக் கொழுத்துத் தழைத்துக்
கிளைத்த விழுது தாங்குவதுபோல் ஆதரிக்
காமல் பழுத்தபழமாகிய பார்த்திபனை யெப்
படிவிட்டுப் பிரிகிறது நினைக்குந்தோறும்
வயிறெரிகிறது என்செய்வது என்று நொந்
து. ஐயா பெரிய தந்தையே நான் தேவரீரு
டன் நான் மாத்திரம் வருகிறேன் மற்றப்
பெயர்களெல்லாம் இவ்விடத்திலிருக்கட்டும்
அல்லது உயிச்சன் வசம் ராச்சியத்தை யொ
ப்பிவித்துப் போட்டு நாங்களைவரும் வந்து
உபசரித்து இரவும் பகலும் பாதுகாக்கி
றோம் கருணைபுரியும் அல்லாமலும் நீர் தவ
ஞ்செய்கிறகாலம் இதுவல்ல இப்போது
மெத்த தள்ளாண்மை அதிலும் பனி வெய்
யில் காற்று மழை பசி தாகம் நோய் இவை
களுக்கு உமது தேகந் தாளாது இப்போது
தவமிருக்கமாளாது உங்களை நீங்கி நாங்க
ளிருப்பது உயிர் விலங்கி உடலிருப்பதுபோ
லாம் என்று விசனத்தினால் உரத்துக் கூவி
னார் அப்போது பக்கத்திலிருந்த பார்த்திபர்
களும் வேதியர்களுந் திரிதராட்டிரனை நோ
க்கி ஓ மகாராசனே நீர் நாட்டைவிட்டுப்
பிரிந்து காட்டுக்குப்போவது உமது பிள்ளை
களுக்குத் தாளாமல் வெள்ளமாய்க் கண்ணீர்
சொரிந்து வருந்துகின்றார்கள் நீர் காட்டுக்
குப்போய்ப் பெறப்போகிற பலனை நாட்டிலி
ருந்து நன்றாய்ப் பெறக்கூடும் இடம்பொரு
ளேவல் இங்கிருக்கின்றன அங்குமுள்ளன
வென் றழைத்தாலும் இவற்றைப்போலாகா
இப்பாண்டு புத்திரர்கட்கு நல்லகாலம் வரு
வதற்கு இத்தனைநாட் சென்றது அந்தச்
செல்வத்தை நீங்களிருந்து பார்க்காமல்
மற்ற யாரிருந்து பார்க்கப் போகின்றார்கள்
ஆரிருந்து பார்த்தாலும் நீங்கள் பார்த்து
மகிழ்கின்றாப்போலிருக்குமா ஆதலால் நின்
றுவிடுமென்று சொன்னார்கள் அச்சொல்லைத்

திரிதராட்டிரன் கேட்டு மனச்சலிப்புடன் மரணமானதற்குச் சமானமான மூர்ச்சை யடைந்தான் பதிவிரதையான காந்தாரியம் மாள் இருகரத்தாலும் ஏந்தி அணைத்து தானும் பிள்ளைகளுந்தாகத்திற்குக்கொடுத்து சாமரை சாந்தாற்றி ஆலவட்டம் மயிற்பீலி இவைகளினால் வீசி கண்ணீர்விட்டுக் கூசி ஆயாசந்தெளிவித்தார்கள் அப்போது திரித ராஷ்டிரன் மூர்ச்சைதெளிந்துபேசிகாந்தாரி யம்மாளைத்தனியே யழைத்து நீ பாண்டவர் களுக்குப் பக்குவமாய்ச் சொல்லிப் பதப்படு த்திவையுமென்று இரகசியமாய்க்கூறியனுப் பினான்.

---

### வியாசர் தருமனைத் திரிதராட்டிரன் கருத்துக் கிசைவித்தல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராசனே இப்பால் காந்தார தேசத்தலைவி தருமநந்த னரைப்பார்த்து ஓ மாந்தாதாவுக்குச் சமதை யான தருமநந்தனா உன் தந்தையானவர் நாட்டைவிட்டுக் காட்டிலுற்ற நிட்டை கூடி யிருப்பதற் கெண்ணினார் அவர் பெரிய வய தாகையால் அம்மைப்பயனை விரும்ப வேண் டிய அவசரமிருந்தது நீசெலவுகொடுத்தால் நான் கூடப்போயிருந்து சகல உபசாரங் களும் நீங்களிருந்து செய்கின்றாப்போற் செய்கின்றேன் ஓ தந்தைதாய் சொல்லைக்கட வாத மைந்தரானவர்களே பெரியோர் முத லிய பேர்களின் பேச்சையும் அவர்களாலோ சனையுங்கேட்டு நடந்த பிள்ளைகளுக்குச்சிரே யசுண்டாம் செல்வம்பெருக்கும் யுத்தி புத்தி மேலாகும் ஆதலா லவரெண்ணத்திற்குத் தடைசொல்லாமல் உத்திரவுகொடுங்களென் று சொல்லினாள் அதற்குத் தருமநந்தனர் மகாலட்சுமியைப் போன்ற தாயையும் மகா விஷ்ணுக் கொப்பாகிய தந்தையையும் நோ க்கி அலர்ந்த செந்தாமரைப் புட்பம்போல் முகமலர்ந்து ஐயா நான் யோசனை செய்து தேவரீருடைய இஷ்டப்படிக்கு நாளையத் தினஞ் சொல்லுகிறேன் இன்றைக்குப் போ சனம்பண்ணப் போமென்று புகன்றனர் திரிதராட்டிரன் அச்சொல்லுக் கசையாமல் அப்பா தருமநந்தனா நாளையென்பது நம்மு டைய நாளல்ல நமனுடைய நாளாகவுங் கூடும் ஆதலால் இன்றைக்கே செலவு தர வேண்டும் இல்லாவிட்டால் நான் சாப்பாட் டிற் கெழுந்திருக்க மாட்டேன் உன்னுடன் விஸ்தரித்து பேசவும் பலமில்லை என்கால மும் பலமுமொடுங்கிப் போயின விசனமும் வியாகூலமும் மேலிட்டன இனிக்காரியமில் லை நீ நன்றாய் யோசித்துப்பாரென்று கூறி னான் இம்மொழிகேட்ட தருமராசனும் பற் பல மன்னர்மந்திரியர் முதலாகியபேர்களும் மற்ற ராஜஸ்திரீகளும் ஓவென்றுகதறி விசா ரப்பட்டார்கள் அந்த வேளையில் வேதவியா சர் வந்தருளினார் அவரைக்கண்டவுடன்நெ ருப்பில் வீழ்ந்தெறியும் புழுவானது நிழல் கண்டெழுந்ததுபோல் இயாவரு மெழுந்து தெண்டனிட்டுத்தொழுது ஓசர்வக்ஞமூர்த்தி தேவரீர் சந்திரகுலத்திற்குப் பழுதுவாராம லளித்த பாலன் காட்டுக்குப் போகிற தாய்ச் சொல்லுகிறார் அந்தச் சொல்லைக் கேட்டு யாங்கள் வாட்ட முடையவர்களாயி னோம் அதனாற் கரோமான கலக்கத்தை விளைத்ததென்று கண்ணீர்விட்டுக் கசிந்தார் கள் தேவமுனி அவர்களை யணைத்து ஆசீர் வதித்து தருமராஜனைத் தண்மையோடும் பார்த்து ஓ அறன்குமாரனே இராஜதரும மாவது யாதெனில் உலகத்தைப் புறந்து போர்புரிந்தாவது அல்லது துறந்து தவமி ருந்தாவது ஆன்மாவை அறிவுடன் பிறிக்க வேண்டியதென்று வேதங்களில் விதித்திருக் கின்றன அதைக் குறித்து உனக்கொருவரறி விக்கவேண்டியதில்லை தவசுக்குப் போகிறோ மென்பவர்களைத் தடுக்கப் போகாது அவர ளிட்டப்படிக்குச் செலவு கொடுத்து விட வேண்டும் ஆசாபாசப்பற்றுக ளற்றபோதி லும் வாசாகயிங்கரியஞ்சொல்பவர்கள்போல் ஒழித்துவிடவேண்டும் நீ உலக காவலனாக விருந்துஇக்குலத்திற்குரிய தபோபலத்தைத் தேடுகவென் றுரைத்தனர் அதனைத் தரும ராஜன் கேட்டு சுவாமி நானெவ்வளவு மனி தன் எனக்கென்ன தெரியும் நானெம்மாத் திரம் பாத்திரன் தேவரீரும் என் தாய் தந் தையருஞ் சொல்லுகிறபோது நான் தடுத் துப் பேசுங் காரியஸ்தனோ தங்களிஷ்டப் படிக்குச் செலவு கொடுத்தேன் இதற்குவேறு மாறில்லை என்று சொல்லவும் விஷ்ணு அம்ஸமாகிய வேதவியாசர் ஆசீர்வதித்து திரிதராட்டிரன் காந்தாரி பாண்டவாள் முத

லிய பேர்களிடத்தில் செலவு பெற்றுக் கொண்டு போயினர்.

---

## திரிதராட்டிரன் தருமராஜனுக்கு இராசநீதி யுரைத்தல்.

இப்பால் தருமராசன் திரிதராட்டிர மகாராசனுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு தேவரீரிஷ்டப்படி செய்வதற்குத் தடையில்லை யென்றார். இவ்வார்த்தையைக் கேட்ட அப்பிள்ளையைத் தழுவிக்கொண்டு மங்களா சனஞ் சொல்லி அரண்மனைக்குட் போய் அன்னபனாதிகளுண்டு மறுநாட் காலையில் மைந்தர் முதலாகிய பந்துஜனங்கள் மந்திரி மார்கள் அன்னிய தேசத்தார் அஸ்தினபுர வாசிகள் ஆகிய யாவர்களையு மழைப்பித்து, இராஜ கொலுமண்டபத்தில் வந்து வீற்றிரு ந்தனர். அப்போது பிள்ளைகளும், பேரப் பிள்ளைகளும், பேரப்பிள்ளைகளுக்குப் பிள்ளை களும் ,இராஜபந்துக்களும், வேதவேதியர் களும், விதுரன்,கிருபாச்சாரி,சஞ்சயன் உயி ச்சன், குந்திதேவி, திரௌபதி, சுபத்திரை, உலூகி, சித்திராங்கதை இன்னுமுண்டான சகல செனங்களும்மற்றஇனங்களும் வந்து புடைசூழ்ந்திருந்தார்கள். அவர்களை யெல் லாந் திரிதராட்டிரன் பார்த்து, என்னைக் காட்டுக்கு அனுப்பிவையுங்களென்று கேட் டான். அதற்கவர்கள் அகங்குவிந்து ஐயா! உமக்குச் சம்மத மெவ்விதமோ அவ்விதமே எங்களியாவருக்கு மென்றார்கள். அப்போது தருமராசனை சமீபத்திலழைத்து தனி மண் டபத்திருத்தி ஓமேட்டிமையான வேந்தனே நீ ராச்சியபரிபாலன விதங்களை நன்றாய்த் தெரிந்தவ னானாலும் என் வார்த்தையுங் கொஞ்சங் கேட்டு வைக்கவேண்டியது அதா வது நீ யாண்டுவருகின்ற நாடு நகரங்களில் யாவரு முன்னைத் தருமத்திற்றூழாத உத்தம னென்று சொல்லும்படி வித்தக விதரணை யும் வெகுவித நற்கருமங்களும் பிராமண விசுவாசமும், பெரியவர்ணேசமும், பழமை யான மந்திரியும், புதுமையான சேவகனும், கற்றுணர்ந்த வித்துவான்களும், கலைவல்ல ஆசாரியரும், தன் தாரமே தாரம், தரசார சேர்தரமான் பான்மையும் தன்னுயிர்போல் மன்னுயிர்களென்று கருதிப் பாதுகாக்கும் மேன்மையும், சத்துரு விகழ்ச்சியும் மித்துரு புகழ்ச்சியும், குற்றந்தெரிந்து தண்டித்தலும் குறையறிந்து கண்டித்தலும், நால்வகைச் சேனைகளின்பேரில் நண்டபம், நடுவு நிலைமை முதலிய பண்பும் குடி படை கோட்டை கொத்தளம் காடு மலை ஆறு ஏரி இவை முத லிய காப்பும் அந்தப்புர விசாரணையும் சந் தேகமற்ற உயிர்ச்சேவகர் காவலும் சுத்த போசன சலபானமும் சுகசயன நித்திரா போகமும் ஆகிய விவைகளெல்லா மிதமாய் மனங்கனிந்து உரிமையோடும் பெறவேண் டும் சுயம்பாகியைத் தள்ளப்படாது. அவன் பேரிற் கோபங்கொள்ளப்படாது. பதினன்கு லோகமுந் தன் கைவசப்பட்ட போதிலும் ஆலோசனையில்லாமல் ஒரு அற்பமேனுஞ் செய்யப்படாது. எந்தக்காரியங்களும் மர்ம மாயும் ரகசியமாயு மிருக்கவேண்டும்.ஒரு சங் கதியைப்பற்றி மற்றையரோடு ஆலோசிக் கும்போது அவர்கள் சாம்பிரதாய மறிந்த வர்களா யிருக்கவேண்டும்.

அப்பா மெய்விரதனே! நீ அரசாளும் பட்டினத்தினின்றும் இன்னும் பல விடங் களினின்றும் வியாச்சியம் வில்லங்கம் வரும் அப்படி வருமாகில் இருவரையும்விசாரித்து சாட்சி விசாரணைசெய்து சபைகூடிய பெரிய வர்களுக்குத் தெரிவித்து அவர்கள் உலகத் தைச் சார்ந்தவர்களாய் அரசன் ஞாயத்தை யுந் தெய்வ சகாயத்தையுஞ் சேர்ந்திருந்து பெரியோர்களின் சத்திய நெறியை உற்றுப் பார்த்துச் சொல்லும் வண்ணங் கர்த்தத்துவ மிருந்து கண்டதென்று குற்றத்திற்குத் தகு ந்த நீதி செலுத்தவெண்டும். திரவியங்களை அதிக விரயம் பண்ணுமற் பொக்கிஷத்தை நிரப்பவேண்டும். தருமத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டும். உதயத்திலெழுந்து நித் தியவிதி முடிக்கவேண்டும். இரவில் நகரி சோதனை நடத்தவேண்டும். விருந்துபசரிக்க வேண்டும். நீதிவிசாரணை நிலவிசாரணை நீர் விசாரணை தேவாலய விசாரணை தரும விசா ரணை சாஸ்திர விசாரணை கல்வி விசாரணை சங்கீத விசாரணை மநு விசாரணை யாக விசா ரணை யோகவிசாரணை போகவிசாரணை அல ங்காரம் கற்பனம் விற்பனம் சிலம்பஞ்சிற்பம் இவைகளெல்லாம் ஒரு நாளைக்கு இத்தனை நாழிகைஇன்னின்ன தொழிலென்று அளவு படுத்தி நடத்திவரவேண்டும் வேட்டையாட

வேண்டும். காட்டைத் திருத்தவேண்டும். சகலாபரணங்களும் பூமாலைகளும் கதம்பகஸ்தூரி சந்தனங்களும் விடாம லணியவேண்டும். தன்னுடைய தாளாண்மையைப் பிறர்பாலில் ஒப்புவிக்கப்படாது. இராசசபைக்கு வேண்டியவைகளை தூண்டிச் சேகரிக்கச் சொல்லவேண்டும். தீரவீரரா_யிருப்பவர்களைப் பெருமைபடுத்தவேண்டும். அன்புடையாரிடத்தில் நண்புவைக்க வேண்டும். ஒருவரைச் சிநேகிக்குமிடத்தில் மெத்த விசாரித்து நேசிக்கவேண்டும். எல்லார் சொல்லையுங்கேட்டு தோள்வலியையுந் துணையாகக் கொண்டு சமருக்கெழவேண்டும். சத்துருக்களிடத்தி லுறவாகாது. அந்தரங்கப் பேச்சு வெளியிற் போகக்கூடாது இப்படியெல்லாம் இராஜன் ஜாக்கிரதையா யிருந்தால் ஒரு நாளுங் குறைவிராது. பழமைபாராட்டி நடத்துவது பக்குவம் ஒருவனைப் பகைக்கும் விஷயத்தில் தன் பலமும் எதிரி பலமும் கால பலமும் சீர் தூக்கிப் பார்த்து பகைக்க வேண்டும். அல்லாமலும் சொந்தப்படை அப்போதைக்குப் பணங்கொடுத்து வைத்த படை அன்னிய அரசர்களாற் கூடிவந்த படை காட்டிலிருக்கும் படை அம்மான் சீதனப் படை அடைக்கலப் படை என்னுமிவ் வறுவகைப்படையும் இராஜர்களுதவியுங் கொண்டு வெல்லுமிடந் தோற்குமிடமறிந்து சண்டை பண்ணி செயம் பெற வேண்டும். உடற்பிறப்பைக் காக்கவேண்டும். மானங்கெட ஒரு வேலைக்கும் பிரவேசிக்கலாகாது. சொற்சோர்வு படப்போகாது. சின்ன மனிதரைச் சேர்க்கலாகாது. அப்பா புதல்வனே வேதவியாசரும் வீஷ்மரும் நாரதரும் ரிஷியீஸ்வரர்களும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் பொருந்திச் சொல்லத் திருந்தக் கேட்டிருக்குந் தெளிவினையுடைய உனக்கு நானென்ன சொல்லப் போகின்றேனென்றனன்.

---

திரிதராட்டிரன் மீட்டும் பொருட்சிலவிடக் கண்ட வீமன்வெகுள, தருமனவனைத் தேற்றி பொருளனுப்புதல்.

இவையெல்லாங் கேட்ட தருமராஜன் சரீரம் புளகித்து பெரிய தகப்பனாரை வணங்கி தேவரீரியம்பிய வண்ணந்தெரிந்து நடக்கிறேனென்று திருவடியைத் தொழுது சற்றே அழுது ஐயா! தேவரீருக்கு என்னை விட்டுப் பிரிய எப்படி மனந்துணியுமோ அறியேன் அப்பால் யான் நிரம்பக் கிலேசிப்பேன் நெட்டுயிர்ப்பேன் என்று கூறித் துக்கித்த தரும நிருபனைத் திரிதராட்டிரன் கட்டியணைத்து முத்தமிட்டு கருணை நீராட்டி அப்பா மகனே! எனக்கு மப்படியேதானிருக்கிறது. என்ன செய்யலாம்? இனி மேலானபதவியை விரும்பினல் எனக்கும் உனக்குத் துணையாகும் அப்பனே! இப்பூமியில் ஜன்மாந்திர மென்பதும் ஊழென்பதும் பூர்வகன்மமென்பதும் இதுதான் இதுதான் இதனையறிந்துமனதைத் திடஞ்செய்து கொள்ளுக என்று சொல்லி அங்குள்ள இயாவரையும் நோக்கி இரண்டு கரத்தையுஞ் சிரத்திற் குவித்து வணங்கி, எல்லோருக்குஞ் சரணம் சரணம் என்று சொல்லி யெழுந்தான் அப்போது யாவரும் மேகக்கர்ச்சிதம்போல வீறிட்டலறிக் கூச்சலிட்டழுதார்கள். அக்காலரசன் யாவரையுங் கையமர்த்தி நீங்களெல்லோருஞ் சுகமாயிருங்கள் தம்பி அரசாட்சி செய்கிறான் உங்களுக்குத் தாயுந்தந்தையும் அவன்தான் அவனை விட ஆதரிப்பவர்களியாருமில்லைசத்தியமாக காலங்கழியுங்கள். என்று சாற்றி உபசரித்து வாழ்த்தி தனது அரண்மனைக்குப் போய் தம்பியாகிய விதுரனை யழைத்து யுத்தத்தி லிறந்தபேர்களுக்கெல்லாம் நாளைக் கார்த்திகைப்பர்வம் வருகிற பரியந்தஞ் சிராத்தங்களும் அநேக தரும தானங்களும் பண்ணவேண்டுமென்று தருமோஜனுக்குச் சொல்லும்படிக் கனுப்பினன் அப்படியே விதுரன் தருமராஜன் முதலிய பேர்களைக் கண்டு தெரிவித்தான் தருமராஜன் சந்தோஷப்பட்டு அப்படியே செய்வோமென்றார். அருச்சுனனும் அதற்குச் சம்மதித்தான் வீமன் கேள்விப்பட்டு வெகுளிமேற்கொண்டு விதுரனைப்பார்த்து வெறிந்து விழித்தான். அதை யர்ச்சுனன் கண்டு தெண்டனிட்டு அண்ணு என்னத்திற்கு நீர் வீணே பழிப்புக்கிடந் தேடிக்கொள்ளுகின்றீர் ஐயோ! போனதெல்லாம் போச்சு இப்போதேன் நமதண்ணு மனத்திற்கு வியாகூல முண்டாக்குகின்றீர்? வேண்டாம் மனம்பொறும் என்று சில உபசார வார்த்தையை காதிற் புகன்றான் அ

தைக்கேட்டும் வீமனுக்கு மனந் தாளாமல்
தம்பீ செத்தபேரெல்லாம் நமக்குச் சென்மப்
பகையாளிகள் அவர்கள் பண்ணிய அக்கிரம
மோசத்திற்கு மோட்சமும்வேண்டுமோ இந்
தப்பாவிகிழவனைப்பார்க்கப் பார்க்க நெஞ்சு
ருகிறது வாயிறெரிகிறது தொலைந்து போகிற
வன் சும்மா போகாமல் போகிற பைசாசங்
கல்லைத் தூக்கிப்போட்டுப் போகின்றார்போற்
கொஞ்ச மிஞ்சியிருக்கின்ற பொருளையும் கரு
வறுத்துப் போகின்றான்.

அப்பா அர்ச்சுனா (சொர்க்கத்திற்குப்
போகிற பேர்க்குக் கக்கத்திற்கேன் கனத்த
அழுக்கு?) என்பதுபோல இவனுக் கேன்
இந்த வேலைகள் இருக்கிறவன் றலையை
மொட்டையாக்க வேண்டுமென் றெண்ணி,
நாமே போகின்றோமே நாசம்பண்ணிப்போ
வோமென்று கெடுநினைப்பு கொண்டு இறந்
துபோனவர்களுடைய சிரார்த்தத்திற் கென்
றும் கர்மங்களுக்கென்றும் தர்மங்களுக்கென்
றும் இவனுக்கும் இவன்பெண்டாட்டிக்கும்
பெருஞ்சாவுக்கென்றும் காடாற்றலுக் கென்
றும் கருமாந்தங் கல்லெடுப்புக்கென்றும் கே
ட்டுக்கொண்டு யிருந்தால் இவைகட்குப்போ
துமான திரவியப் பொக்கிஷம் எங்கிருந்து
வரும் நாலாம் வழியிலும் நூலாம் வழியாய
விட்ட கண்கெட்டபாவி இன்னுமிருப்பறை
யுந் துடைக்கத் துணிந்து சொல்லியனுப்பி
னான் அல்லவா? பிள்ளைகள்செத்துப் பதினை
ந்து வருடங்களாயின பதினாறாவது வருடம்
நடக்கிறது இந்தபதினைந்து வருடம்வரை
யிலும் ஐயோ! தனக்கிஷ்டமான படிக்கெல்
லாந் திதிக்கென்றும் மதிக்கென்றும் சிரார்த்
தத்திற்கென்றும் தர்பபணத்திற் கென்றும்
தருமத்திற் கென்றும் தானத்திற் கென்றும்
கோவிலுக்கென்றும் குளத்திற் கென்றும்வா
ங்கி வாங்கி ஒன்றுங் குறைவில்லாமற் செய்
துவைத்தான் இன்னும் பயித்தியக்காரப் பா
ண்டுமக்கள் நாம் சொன்னபடி கேழ்ப்பார்
கள் சரிப்படுத்தி விடுவோம் என்கிற எண்ண
மாக்களும் இவன் சொல்லைக்கேட்டு இருந்
தானா அப்படிக்கிருக்கவீணான காரியத்திற்கே
ணிவன் றலைப்பட்டு இவ்வாறு நட்டப்படுத்
துகிறான் ஆனால்இந்தக்கிழவன் நமக்குமுன்
னாலே மெத்த உபகாரம் பண்ணினவன் நம்
மைச் சொக்கட்டானாடுவதற்கு வரவழைத்து
இக்கட்டு வராமற் காத்திருந்தவன் திரௌப
தியைத் துகிலுரியும்போது வேண்டாமென்
றுதடுத்து மெத்தப் பிரயாசைப்பட்டான் மக
ன்செய்த வஞ்சனைகளையெல்லா மாற்றினான்
நாட்டைக்கொடுப்பித்தான் ஆ! ஆ! இவன்
செய்த நன்மைகளை யெல்லாம் என்னென்று
சொல்லுவேன் தன்மனப் பூர்த்தியாய் மெத்
தவும் நன்மைசெய்த வேடன் கொலைசெய்யு
ம்பாவி இவனைத் தகப்பனென்றபோதேசஞ்
சலம் விளையும் சங்கடந்தழையும் இவன்கெ
ட்டான் பாவியென்று தள்ளிவிட்டுப் போகா
மல் இவனைக்கட்டிக்மொண்டழுகின்றார் நம
துவைதீகச் சாந்தஸ்தர்இதனால் வீணான மய
க்கம் காரியமேயில்லை விருதா விருதா என்று
வெகுளிமேற்கொண்டு கோபக்கூத்தாடினான்
இவையனைத்துங் கேட்ட அர்ச்சுனன் வெறு
த்துக் கண்கறுத்து, முகஞ்சிறுத்து நெறித்
துப் பார்த்து ஐயா தோன்றலே இப்படிக்
கெல்லாம் எண்ணாதவெண்ணமும் பண்ணாத
கோலமும் பண்ணிய காலத்தில் அண்ணாவு
டைய சொல்லுக்கடங்கி யிருந்தோம் விண்
ணாளப்போயினார் நமது பகைவர் உமக்கிது
வரையிலுயில்லாமல் இப்போதென்ன கிளை
த்துக்கொண்டது ஓ அண்ணா நமது ஜேஷ்
டருடைய மனசுநோவுமென்று சொல்லியுங்
கேளாமற் போனால் நான் செய்யதென்ன
கொஞ்சஞ் சுறுக்காய்ப்பேசி பின்னும் வீம
னுக்குத் தெரியப்பட விளம்பிக் கோபமாற்றி
னான் விஜயன்பேசிய சாத்தமும் வீமன்சொ
ல்லிய உகாந்தமுந் தருமநந்தனன் கேட்டுச்
சஞ்சலப்பட்டு விதுரனைப்பார்த்து ஐயா ஆ
ண்டவன் ஆக்கினைப்படி ஆகவேண்டியகாரி
யங்கள் எல்லாம் ஆய்விட்டன இனி நாம்
ஒருவரை நிந்திப்பதில் என்ன பயன் எப்ப
டியுந் திரிதராட்டிர மகாராஜன் எங்கள் தந்
தை எங்கள் உயிர்எங்களிஷ்டபந்து எங்கள்
தெய்வம் எங்கள் குரு அவர் சொல்லியனு
ப்பிவைத்த பிரகாரம்நடப்பிக்கவேண்டியதே
ஆதலால் நீர் அவர் சம்மதிப்படிக்குச் சரிப்
படுத்திக் கொள்ளுமென்று வேண்டிய திரவி
யங்கள் ஆபரணங்கள் ஆடைகள் பசுக்கள்
இவை முதலாகிய வஸ்துக்களை அருச்சுன
னைக்கொண்டு கொடுத்துவிட்டு வாவென்று
நவின்றார் அதுகேட்ட வீமன்உள்ளெறிந்து
மேலுக்கிசைந்து நானக்கிழவனைப் பேசியத
ற்கு அபராதமா யிதுவென்று ஆள்களைக்
கொண் டெடுப்பித்து விதுரனுடன் கூடப்

போய்ப் பெரிய அரண்மனையின் முன்முகப்பு வாயலில் வைத்துவிட்டுத் திரும்பினான்.

---

### திரிதராட்டிரன் தானம் வழங்கிக் காந்தாரி யோடு தவக்கோலங்கொண்டு வெளிப்படுதல்.

அப்பால் விதுரன் திரிதராட்டிரனிடத்திற்குவந்து அண்ணா! நீருரைத்த வண்ணம் புகன்றேன் தருமராஜனும் அர்ச்சுனனும் உமது வார்த்தையைத் தலைமேலேற்றுக்கொண்டு பிராணனைக் கேட்டானுங் கொடுக்கச் சம்மதித்தார்கள் வெகு பொருள்களும் விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் அளவற்ற பசுக்களும் இன்னும்பலலிதச் சாமான்களும் வந்து உமதரண்மனை முன்முகப்பு வாயலில் நிறைந்துகிடக்கின்றன இனியாகவேண்டுங் காரியங்களை உமதிஷ்டப்படி நடப்பியுமென்றுசொல்லிப் போட்டுத் தனது அரண்மனைக்குப் போயினான் இப்பால் திரிதராட்டிரன் நாளை கார்த்திகைமாத மாரம்பமுதற் பர்வம் வருகிற வரைக்குஞ் சிரார்த்தங்கள் நடத்தப் படுமென்று சாரணரைக்கொண்டு எங்கும்பறையறைவித்து,தானுங்காந்தாரியுமாக அம் மாதப்பிறப்பின் தினங்காலையில் நித்தியகரும அநுஷ்டானங்கள் முடித்து சிரார்த்தத்திற் காரம்பித்தார்கள். அப்போது பார்ப்பனக் கும்புகள் மேற்பட்டுத் தேனீப்போல் வந்து சேர்ந்துவிட்டார்கள் அப்பால் வாகுலிகன் சோமதத்தன் பூரிசிரவன் கர்னன் விடசேனன் சகுனி சயிந்தவன் சல்லியன் துரியோதனாதியர் நூறுபேர் அனேகம் அரசர்கள் இன்னும் அவ்வவர்களுடைய புத்திரபௌத்திர மித்திராதியர்கட் கெல்லாம் மேலான கதி வரும்படிக்கு சிரார்த்தங்கள் பண்ணிய நேகமாயிரம் பாற்பசுக்களளித்து ஆடையாபரணங்கள் ரிவலடங்கக் கொடுத்து, பொன் மூட்டைகள் கட்டி அவ்வவர்கட்கும் புரட்டிப்புரட்டி யளித்து அநேக வித்துவான்களுக்கு வெகுமானம்பண்ணி இயாவராலும் ஆசீர்வதித்தல் வாழ்த்துதல் புகழ்தல் இவை முதலியகேட்டு மனமகிழ்ந்து இவ்வாறே பர்வம் வரையிற் சிரார்த்தமுந் தான தருமாதிகளுங் கொடுத்துக் கொண்டிருக்கின்றான் அந்தத் தந்தையுந் தாயாகிய காந்தாரியையும் மைந்தராகிய பாண்டவர்கள் வந்து தெண்டனிட்டார்கள் தட்சணந் தவம்பண்ணப்போகிற தராதிபன் பர்வங்கழித்த பாட்டிலமையினன்று உதய ஸ்நானஞ்செய்து அநுஷ்டானமுடித்து இலட்சுமிகரமாகிய தனது அரண்மனைக்கும் சிம்மாசனத்திற்கும் பொக்கிஷச்சாலைக்கும் ஆயுத அறைக்கும் பூசைகள்பண்ணி தன்னாசைகள் எல்லாவற்றையும்போக்கி நிராசையுடையவனுய்த் தான்கட்டிக்கொண்டிருந்த வஸ்திரவஸ்திரங்களையும் அணிமணிப்பணிகளையுந் தள்ளி ஈஷணத்திரயங்களையும் எள்ளி, மரவுரி யணிந்து காந்தாரியுந் தொடர்ந்துவர பிராமணர்ளுமாக்கினி வளர்த்திவர பாண்டவர்கள் பூசித்துவர இராஜமனை நீங்கித் தெருவீதியுல் வந்தான்.

---

### திரிதராட்டிரனோடு குந்திதேவியுந் துறவெய்த, அதுகண்டு வருந்திய பாண்டவரை யவ்வன்னைதேற்றி யறிவுறுத்தல்.

கேட்டீரோ ஜெனமே ஜெய மகாராஜனே! அந்தவேளையிற் குந்திதேவியும் விதுர மகாராஜனும் வந்து கலந்தார்கள் இவர்களையும் பாண்டவர்கள் வணங்கினார்கள் அவர்களை யவ்விருவரும் எடுத்து அணைத்து ஆசீர்வதித்தார்கள் பின்பு குந்திதேவி தன்னுடைய பிராப்தவினை தீரவேண்டித் தன் பிள்ளைகள் ஐவரையும் நோக்கி இதனைச் சொல்லுகின்றாள் ஓ என் குழந்தைகளே! உங்கள் தந்தையாகிய பாண்டு மகாராசன் இறந்துபோன்போது மாத்திராதேவி மடிந்ததைப்போல் நானுங்கூட மாளாமல் இருந்ததேன் அதேனென்றால் நீங்கள் ஐவரும் பால்யராகையால் உங்களை வளர்க்க வேண்டுமென்கிற பாசத்தினாலும் என் தீவினை மேலிட்டு நற்கதி கிடைக்காமற் செய்த மோசத்தினாலும் உலகநிந்தைக்குப் பயப்படாமல் உடலைச் சுமந்தேன் அப்படியாக இருந்தகாலத்தில் துரியோதனாதியர்களுக்கும் உங்களுக்கும் பகை நேயுட்டுப் பலப்பட்டது அப்போது இந்தக் கலகம் எப்படி முடியுமோ ஏதாய் விளையுமோ கார்ப்போமென்கிற நேசத்தினால் நீன்றேன் அந்த விரோதம் பதினெட்டு நாள் பாரதமாகி பதினெண்பீடை மன்னர்களையும் அவர்கட்குரிய நால்வகைப் ய

டைகளையும் பந்து மித்திரர்களையும் பல பு
த்திரர்களையும் உரியோர் முதலாகிய பெரி
யோர்களையும் ஒருங்கே ஒழிந்தது அவ்வுண்
மையையும் பார்த்தேன் இறந்தவர்களைக் கு
றித்துத் துயரப்பட்டுக் கடன்முறை நடந்த
காட்சியுங்கண்டேன் நீங்கள் பட்டங்கட்டிக்
கொண்டு படுகிற காட்சியு மாட்சியுந் தெரிந்
தேன் முடிவில் ஒன்றுமில்லை பெற்ற பிள்
ளைகளிற் பெரிய பிள்ளையாகிய கர்னனைக் காப்
பாற்றாத பெரும்பாவி நான் சின்னாளிங் கிரு
ப்பதி லென்னலாபம் புண்ணியஞ் செய்
வோர் புகுவது சொர்க்கம் அல்லாதோ ர
டைவது நரகம் ஆனதால் இனிமே லெனக்
கென்ன மிருக்கிறது உங்கள் பெரிய தகப்ப
னுடன் நானுங் காட்டுக்குச் சென்று அவ
ருக்கும் பெரியவர்களுக்குந் தொண்டுசெய்து
அடிமைப்பட்டு சுத்தமனதோடு மிருந்து வி
ரஜ மனுட்டிப்பது மேலென் றெண்ணுகி
றேன் என் சொல்லைத் தள்ளாமல் இன்புற்
றுச் செலவு கொடுங்களென்று கேட்டனள்.
அப்போது தருமராசன் தவிர மற்ற நால்வ
ரும் வெகுசனங்களும பசுவைப் பிரியும் தன்
சிசுவைப்போற் பரதவித்துக் கலங்கினார்கள்
தருமராசன் சற்று நிதானித்து கையொடு
கையறைந்து தாயே எங்களைப் பெற்று வள
ர்த்துப் பெரியவர்களாக்கிப் போஷித்து வந்
த நீர் இப்போது யாங்கள் செல்வ சாம்
பிராச்சியச் சிங்காசனமேறி நீதிசெலுத்தும்
நித்தியவைபவத்தைப் பாராமல் நகரத்தை
விட்டு நீங்கிப்போக நினைப்பீராகில் நாங்க
ளெப்படி பிரிந்திருப்போம் தந்தை தாயிழ
ந்த மைந்தராகின்றோமே அக்கினி யெரியப்
பட்ட காட்டில் எப்படி யனுப்பிவிட் டிருப்
போம் நாங்கள் செல்வமா யிருக்கும்போது
நீங்களெல்லோரு மிருந்து பார்க்கப் பாக்கி
யம்பண்ணாத பாவிகளாய்ப் கபாகின்றோம்
ஆவிபோய்க்கிடந்த பிணமாகின்றோம் ஓ அ
ன்னையே இனியெங்கட்கு மென்னையிருக்கின்
றது என்று கண்ணீர் சோரக் கருகி
முகம்வாடி கால்மேல் வீழ்ந்து கதறியழுது
பதறித் தொழுதனர்.

இவ்வாறு கதறியழுது வீழ்ந்த ஜேஷ்ட
குமாரனைக் குந்திதேவி யெடுத்து பரிதாபித்
தழுவி மார்போடணைத்து மனங்கலங்கித்
தளர்ந்து ஐயா தருமநந்தனா உங்கள் தகப்
பன் தவஞ்செய்தபோது நான் பணிவிடை
பண்ணிக்கொண் டிருந்தேன் அவரென்னி
டத்தில் அதிகப் பிரிதியினை யுடையவர் உட
லிரண்டு முயிரொன்றுமா யிருந்தவர் தனக்
குச் சுகந் தேடிக்கொண்டு என்னைவிட்டுப்
பிரிந்துபோயினார் அதுவும் உபாயந்தான்
அப்போதுதானே என்னையுங் கூட அழைத்
துக்கொண்டு போனாற் பிள்ளைகள் பிழைக்க
வேண்டுமே யென்று கருதிவிட்டுப் போன
தாய்த் தெரியவருகின்றது ஏதோ நானும்
இந்த கர்மபூமியிலிருந்து காணாததெல்லாங்
கண்டேன் கேளாததெல்லாங் கேட்டேன்
இனி யிந்தக்சாயத்தை வைத்திருக்கப் போ
காது உன் தந்தையை நீங்கி வெகுநாளாச்
சுது நானும்போய் அவருடன் சேர்ந்து
உங்களுடைய நன்மைகளையெல்லாம் யெடுத்
துப் பேசுகிறேன் அதுவரையில் யாகங்களி
னாலேயும், தவங்களினாலேயும் வேதங்களினா
லேயும், மேன்மைபெற்றிருக்கின்ற அனேக
மேலோர்கள் காட்டில் தவம்பண்ணுவார்க
ள் அவர்களுக்கு ஊழியம்பண்ணி இந்தப்
பொய்யான வுடலை யொழித்துப் போடுகிறே
ன் இந்நாட்டினும் பெரிய அரண்மனை
வீட்டிலும், உயிர் பிரியலாகாது அப்பனே
நீங்கள் பண்ணவேண்டிய உபகாரந் தடை
சொல்லாமல் எனக்கு விடைகொடுப்பது தா
ன் யான் சகலமான காட்சியுங் கண்டுவிட்
டேன் இனி யான் காணவேண்டுவதொன்று
மில்லை நீங்களிப்போதுதான் அரசுரிமைக்
குரியவர்களானீர்களாதலால் இனி உங்கள்
கண்ணார எல்லாக் காட்சியுங் காணவேண்டு
மென்று கரைத்தனள் இப்படி கரைத்த
தாயைப் பாண்டவர்கள் பார்த்து கண்ணீர்
சொரிந்து கலங்கி நின்றழுதார்கள் அப்
போது திரௌபதி சுபத்திரை உத்தரை
மற்றுமுள்ள ஸ்திரீகள் யாவரும் மேககர்ச்
சிதம்போ லிரைந்து விரைந்து அலறுவதா
னார்கள் அக்கால் மாமியார் மருமக்களை அ
ணைத்தும் போற்றி சண்ணீர் துடைத்துத்
தேற்றி துக்கத்தை மாற்றி துயரத்தையாற்றி
மனோதிடஞ் சொல்லி, தானுடுத்திக்கொண்
டிருந்த வஸ்திரந்தைக் களைந்து மரவுரி
யுடுத்தி தருமசாஸ்திரந் தெரிந்த தருமராச
னை நோக்கி எல்லாந் தெரிந்த வல்லாண்மை
க்காரனாகிய நீயும் இவர்களுடன் கலங்கப்
போமா? இப்பட்டணத்தைவிட்டு அரைக்க
ணமேனு நீ விலங்கலாமா? என்றுரைத்துத்
தேற்றிப் பின்னுஞ் சொல்லுகிறாள்.

அப்பா தருமந்தானே! இளையவன் சகாதேவன் அவனை வளர்ப்பதற்குளத்தனையோ பாடுபட்டேன் தாய் முகமுந் தகப்பன் முகமுஞ் செவ்வையாய்த் தெரியாது என் மார்பையு மடியையும் விட்டுப் பிரியாதிருந்து வளர்ந்த மைந்தன் அவனைக் கைவிடாதே மற்றவர்கள் எல்லாச்சித்துங் கற்றவர்கள் அவர்களையுஞ் சன்மானத்துடன் நடப்பித்துக்கொள்ளுக என் மருமக்கள்மார்களில் எல்லாரும் நல்லவர்கள் மெத்தவும் பதிவிரதைகளாகிய உத்தமிகளாகிய அவர்கள் சித்தங் கலங்காமற் பத்திரமாய்ப் பார்த்து ரட்சணை பண்ணி வரவேண்டும் கர்னனுடைய பிள்ளை அச்சுவசேனனைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள் கர்னனுக்குச் செய்யவேண்டிய கருமக் கடன்களைக் குறைவில்லாமல் நடத்திவாருங்கள் ஸ்ரீகிருஷ்ணனுடைய சொல்லின்படிக்கு நடவுங்கள் வேதவியாசரை மறக்காமற் பூசியுங்கள் உங்களுடைய ஏவலாளிகளைக் கைவீடாதீர்கள் புதிய மனிதரைக் கண்டவுடன் பொங்கிமகிழ்ந்து பூரித்துச் சேர்க்காதீர்கள் எங்களை பிரிந்தோமென்று ஏக்கப்படாதீர்கள் சத்தியவிரத தருமங்களை மறக்காதீர்கள் உத்தமராயிருங்கள் என்று ஆசீர்வதித்துக் காந்தாரியம்மனிடத்திற்போய் வணங்கி நானுமதடைக்கலமென்று கலந்தாள் இந்தச் சங்கதி திரிதராட்டிரன் கேட்டு மெத்தவுஞ் சந்தோஷப்பட்டு சற்குணராகிய பிள்ளைகளும் நற்குணமுள்ள நராதிபரும் கற்பனைகற்ற மந்திரிகளும் மற்றையரான புரசனங்களும் பிரியாமற் றொடர்ந்து வரும்படியாய் அஸ்தினாபுரத் தெருவீதியில் வந்தார் ஆஜானுபாகுவாகிய திரிதராட்டிரன் கால்நடையாய் நடந்துவருவதைக்கண்ட துரியோதனன் பெண்சாதி முதலியோர்கள் துக்கப்பட்டு துறந்துபோகின்ற அம்மாமனார் மாமிமார்களையும் இறந்துபோன புருஷதீரர்களையு மெண்ணிப்பதைத்து தாங்களுந் துறவுவேடம் பூண்டு சஞ்சலமுஞ் சந்தேகமும் இல்லாதவர்களாய் மாமன் மாமிமார்களை வணங்கி வெளிப்பட்டார்கள் அவர்களையுங் கூட்டிக் கொண்டு நடக்கும்போது சஞ்சயனும் விதுரனுந் துறவுபூண்டு காவிவஸ்திரந் தரித்து தண்டுகமண்டலந் தாங்கிச் சென்றார்கள்.

---

திரிதராட்டிரனுதியர் துறவெய்திச் செல்லும்போது அந்நகரத்தினர் பிரலாபம்.

கெட்டீரோ ஜெனமேஜய மகாராஜனே இவர்களையெல்லாந் தருமராஜன் பார்த்து நிம்மதமான உங்களுக்கிது சம்மதந்தானென்று கிலேசித்து வீழ்ந்து மூர்ச்சையாகி மீட்டுந் தேற்றியெடுக்கத் தெளிந்து எம்மதமு மிதுதானென்று தான் தாங்கிய மணிமகுட குண்டலாதிகளை வாங்கினர் பாங்கினிலிருந்த தம்பிமார்களும் இதுமெத்தவு நன்மையென்று தோள்வீங்கி யோங்கினர்கள் இத்தியாதி தன்மைகளைக் கண்டவிதுரனுஞ் சஞ்சயனு முரசக்கொடியுடைய முதல்வனைப் பார்த்து அரசனே! நீர் காட்டிற் போயிருந்து உமது தந்தை தாய்க்குப் பணிவிடை பண்ணவேண்டுமென்று நினைத்தீரல்லவா உபகுப் பதிலாய் நீயனுப்பியதாக நாங்கள் போயிருந்து திரிதராட்டிர பூபதி முதலிய பேருக்குப் பணிவிடை செய்கிறோம் என்று திருப்தி சொல்லிவைத்து அத்திரிதராட்டிரனுக்குப் பக்கத்தில் போய் நின்றார்கள் இந்த சேதியைத் திரிதராட்டிரனறிந்து நீங்களிருவருந்தருமராஜனுக்குத் துணையாயிருந்து அவனிபுரப்பீர்களென்று எண்ணியிருந்தேன் முன்பின் யோசிக்காமல் வெளிப்பட்டீர்கள் இதுதான் என் மனதைக் கிலேசப் படுத்துகின்றது என்று வருந்திக்கொண்டிருக்குஞ் சமயத்திற் கிருபாச்சாரியரும் உயிச்சனும் வந்துகண்டு நாங்களுந்துறவுகொண்டுவருகிறோமென்று சொல்லினர் அம்மொழிகேட்ட திரிதராட்டிரன்வருந்தி அவர்களையழைத்து அணைத்து உபசாரஞ்சொல்லி என்துதம்பி விதுரனுஞ் சஞ்சயனும் வந்து நீங்களும் வந்துவிட்டாற்சரியல்ல ஆதலால் நீங்கள் இருவருந் தருமராசனிடத்திலிருந்து மனுநீதிகுன்றாமல் அரசுபுரியக்கடவீர்கள் என்று அமர்த்திவைத்து அப்பாற்போகும்போது அஸ்தினாபுரத்திலுற்ற நான்குவருணத்தாருங் கண்ணீர்விட்டழுது முன்னொருநாள் சொக்கட்டாடித் தோற்றுக் காட்டுக்கேபோக வழிப்பார்த்த பஞ்சபாண்டவர்களும் திரௌபதியும் இந்தத்தெருவழியே போனார்கள் அன்றைக்கந்தப் பாவத்தைக்கண்டோம் இன்றைக்கிந்தப் பாவத்தைப்பார்த்தோம் என்று

முகத்தை மூடிக்கொண்டு முறையிட்டிரந்
தார்கள் மறுபடியுஞ் சிலர் தேறித்தெளிந்து
இதுவரையிலும் நம்மைப் புரந்துவந்த இ
றைவனும் இறைவியும் எல்லாச் செல்வத்
தைசிந் துறந்து தவத்திற்குப் போகிறபோ
து நாம் அவத்திலிருப்பானேன் நாமுங் கா
ட்டுக்குப் போவோமென்று வீட்டுக் கதவை
படைத்துப்போட்டு புறப்பட்டார்கள் வெகு
சனங்கள் காட்டுக்குப் போவானேன் நாட்டு
க்கு நல்ல துரைவந்திருக்கின்றார்வீட்டிலிரு
ந்தபடி வேள்விப்பலனும் விரதப்பலனும்
தவப்பலனும் தானப்பலனுந் தானே வரு
மென்றார்கள் சிலபேர்கள் பாபத்திற்கு ஆதி
மூலமாகிய பார்த்திவன் பட்டணத்தை விட்
டுப்போவது நம்முடைய ஆபத்து நீங்கிய
தென்றார்கள் அநேகம்பேர்கள் கோபத்தாற்
குடிகெடுத்த நூறுபிள்ளைகளும் பேரர்களும்
மாண்டுபோன கோபத்தாற் றுலைந்து போகி
ன்றானென்றார்கள் பற்பலபேர்கள் மகா பதி
விரதையின் சாபத்தால் இப்படிச் சமைந்த
தென்றார்கள் சிலபேர்கள் பெரியோர்களின்
மனஸ்தாபத்தால் நேரிட்ட சங்கடமிது வெ
ன்றார்கள் பலபேர்கள் போங்காலத்தில் யா
ரும் போவார்கள் சாங்காலத்தில் யாருஞ்சா
வார்கள் ஆங்காலத்தில் அற்பாளையும்பொற்
பாளை மாக்கிவைக்கு மென்றார்கள் பலபேர்
கள் ஊழ்வினைப்படி முடியும் ஓடியோடிப்
பறந்தாலும் ஊர்க்குருவி கருடனாகிறதில்லை
என்றார்கள் சிலபேர்கள் இவனென்ன வே
சானவன் துரியோதனாதியர்கள் ஒரு படிசு
ஐயோ: இவன் கொடியபாவி இவனுக்குத்
தவங் கைகூடுமாஒருக்காலுமிவனெண்ணங்
கைகூடி வரப்போகின்றதில்லை யென்றார்கள்.

இப்படிக்கெல்லாம் பற்பலவாறாய்ப்பே
சிச் சரிபோனபடி யேசிக்கொண்டு தெரு நெ
ருக்கமாம்படிக்குச் சேர்ந்தார்கள் இந்தப் பிர
காரம் அஸ்தினாபுரத்து வீதிகளைக் கடந்து
கோட்டைவாசலையடர்ந்து போகையில் தெ
ருவுகளும் வெட்டவெளிகளும் தெரியாமல்
அழுதுகொண்டு வரப்பட்ட சனங்களைத்தி
ரிதராட்டிர னடக்கி அவரவர்களுக்கு மனந்
தெளியும்படியாய் உபசரித்து தான தருமங்க
ளெல்லாங் கொடுத்து எல்லாரையும் பட்ட
ணத்திற்குப் போங்களென்று அனுப்பிவிட்
டுப் பிள்ளைகளையும் அவர் பரிசனங்களையும்
நோக்கி நில்லுங்களென்று சொல்லிச் செல்

லுகின்றான் அப்போது யாவரும்பணிந்தார்
கள் அவர்களை யெல்லாந் திரிதராட்டிரன்
ஆசீர்வதித்துச் செல்லும்போது தருமராஜ
ன் குந்திதேவியைக் குறுகி அம்மா தேவரீர்
போகின்றீராவென்று அலறினார் அப்போ
தவளும் பதறிக் கதறி பாசபந்தப் பற்றினை
யுதறி ஓ வித்தகனாகிய வேந்தனே விசனப்ப
டாதே இந்தமட்டில் நில்லுக என்று சொ
ன்னபோது வீமன் அர்ச்சுனன் நகுலசகா
தேவர் சித்தம் பிரமித்துச் சோர்ந்துபோனார்
கள் அவர்களை விதுரமகாராஜனும் சஞ்சய
னுந் தேற்றிச் சோபமாற்ற எழுந்திருந்து
ஐயோ பெண் சன்மத்தைப் பெற்றோர் இப்
பேறுபெற்றது சரியல்லயாமதற்கொவ்வாதி
ருந்தால் பெரும் பாவமென்றுபுண்ணியவா
ன்கள் புகன்றபோதிலும் எங்கள் தாயைப்
போல் தருமம் தவம் தண்மை தயை தக்கத
னையர் ஆகிய விச்சவுக்கியத்தையுடைய புண்
ணியவதிகளை யாருங் காண்ப தருமையிலும்
அருமையாச்சே ஓ அம்மா உம்மைப் பிரிந்த
பின் எம்மைப்புரந்துகொண்டிருப்போமோ;
எப்படி மனந்தேறப் போகின்றோம் தாயே
என்று துக்கித்தார்கள் அப்போது குந்தி
தேவி ஐவரையும் நோக்கி ஓ குழந்தைகள்
விரதம்பெற்ற நான் விசனப்பட லாகாது
உங்களைப் பார்க்குந்தோறும் நீங்கள் படுகிற
விசனத்தை நோக்குந்தோறும் என் கண்ணி
லுஞ் சலம் பெருகுகிறது எவர்களையும் விட்
டதல்ல நேசம் இவ்வுலகத்தில் இருந்தால்
வரும் பெரும் மோசம் இக்கட்டு படச்செய்
யும் எமபாசம் ஓ என்னளவில் விசுவாசம்
வைத்த இளந்தைகளே பயப்படாதீர்கள் ஸ்ரீ
கிருஷ்ணனாகிய என் மருமகனிருக்கின்றான்
எல்லாம் அவனுக்குத் தெரியும் கலங்காதீர்
கள் இந்தப் பரிசித்துவினால் நமது குலந்
தழைக்கும் பிரபலஸ்தனா யிருப்பன் சுகமே
யிருங்கள் என்று பூரண ஆசீர்வசனம் புரி
ந்து நீங்களியாவரும் என்னிடத்தில் நாட்
டிக் கரட்டிய அன்பு நிச்சயமானால் இட்ச
ணமே செலவு கொடுங்களென்று விடைபெ
ற்றுக்கொண்டு உங்கள் வீடு இவ்வுலகத்தில்
இனி எங்கள் வீடு அவ்வுலகத்தில்ஆதலால்
அங்கே போகின்றோமென்று சொல்லித்திரி
தராட்டிரன் காந்தாரி முதலானவர்களோடுங்
கலந்து நடந்தனள். அப்போது பிள்ளை
கள் முதலிய பேர்களுங்குப் பதிற்பேச வாய்
வராமல், நாவுவரண்டு நாபியுலர்ந்து திக்கு

நோக்கித் தெண்டனிட்டு வெகு ஜனங்களும் பாண்டவர்களுந் திரும்பி அஸ்தினபுரத்திற்கு வந்தார்கள் திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி சஞ்சயன் விதுரன் துரியோதனன் பத்தினி முதலிய உத்தமிகள் இவர்களைப் பார்த்துத் துறந்த பட்டணத்திலுள்ள ஜனங்களிற் சிலர் அவ்வுபாசாக்கினி பூசிக்கும் வேதப்பிராமணர் இவர்கள் யாவரும் ஒன்றுகூடி வேதங்கட்கு முதலாகிய ஓமென்னும் பிரணவ ஓசையை யொலித்துக்கொண்டு வனத்தை நோக்கிச் சென்றார்கள்.

## திரிதராஷ்டிரன் துறவெய்திய சருக்கம்

முற்றிற்று.

## இரண்டாவது,

# திரிதராஷ்டிரன் வனவாசச் சருக்கம்.

---

### கண்ணன் துதி.

தாரம் போதுபொருடானென் றோதிநம தாரம்பாலர்பலச் சார்பென் றோதிநம
வீரம்போதுதலை மீதந்தாளுநம வேகம்போதிலெரி மாகங் காலவணி
நாரம் போதகன மாவிங் கோதிநம ஞானம் போயழிய நாசஞ் சேரியம
கோரம் போகவெனை யாளுங் கோலநம கோவிந் தாயநம கோவிந் தாயநம.

ஐயா ஜெனமேஜெய மகாராஜனே! இவ்வாறு துறவர் வாச்சிரமத்தைப் பெற்றுவனத்திற்குப்போன திரிதராட்டிரனானவன் தன்னைக் காந்தாரியம்மன் கையைப் பிடித்துக்கொண்டு அழைத்துப்போக பூமிதேவிக்குச் சமதையாகிய குந்தியம்மன் கல்லு முள்ளுங் கறடு மேடு பள்ளம் இவைகளைப் பார்த்துச் சொல்லி உபசரித்து வர மற்றப் பெண்களெல்லாஞ் சுற்றிக்கொண்டுவர விதுரனுஞ் சஞ்சயனும் முன்னாலே வழிகாட்டிச் செல்ல இந்தப் பிரகாரம் பல நந்தவனங்கள் சோலைகள் சாலைகள் தடாகங்கள் கழனிகள் முதலியன குலாவிய குருநாட்டெல்லையைக் கடந்து நடந்து சந்தியாவந்தனக் கடனை முடித்துத் தருப்பாசனம் விரித்து இரவிற் சயனித்து உதயத்தில் எழுந்து கங்கா நதிக்குப் போய் கங்கையைத் தொழுது ஸ்நானம்பண்ணி நித்திய விதியை முடித்துக்கொண்டு அவ்விடம் விட்டுக் குருக்ஷேத்திர மணுகி சிறந்த பஞ்சகஸ்தலத்தில் அன்றிரவு இருந்து மூன்றாநாளுதயத்தில் ஸ்நானம் பூசைகள்முதலிய முறைகளை முடித்து சூரியநமஸ்காரம் பண்ணி அப்பால் நடந்து கருமேகந்தாங்கிய மலைச்சாரல்களில் ஓங்கிய பல சோலைகளைக் கண்டு அவற்றிலொரு சோலையுட் சென்றான் அங்கே கேயதேயத்துராஜன் தபசு பண்ணிக்கொண்டிருக்கின்றான் அவனையும் அவனுடனே கூடியிருக்கின்ற சதயூபனென்னும் பெயரினையுடைய முனிவரையுங் கண்டு நமஸ்கரித்தனன் அவர்களிவனை அஸ்தினபுரத்திற் கதிபதியென்றறிந்து வாருங்களென்றழைத்துப்போய் ஆசிரமத்தில்வைத்து அர்க்கியபாத்திய வாசமன்யாதி உபசாரங்களாற் பூசித்து கந்தமூலபலங்கள் கொடுத்துப்பசிதீர்த்து தருப்பை மான்றோல் இவைமுதலிய சயனங்களமைத்து அன்புடனே ஒருவர்க்கொருவர் இன்பமுண்டாய் இஷ்டவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

---

### திகிதராட்டிரன் தவநிலை.

அப்போது அம்பிகை மைந்தனான திரிதராட்டிரன் தனது தம்பியான விதுரனைப் பார்த்து அப்பா என்னிளவலே நாமிங்கிருந்து தவஞ்செய்யத் தக்கதாக ஒருபர்ணசாலை பண்ணுகவென்றனன் அந்த க்ஷணத்திற் சஞ்சயனும் விதுரனும் ஓலை முதலியவைகளைச் சேகரித்து ஸ்திரீகளிருப்பதற்கும் புருஷர்கள் தங்குவதற்கும் பூசனை முதலிய முடிப்பதற்கும் போசனஞ் செய்வதற்கும் பெரியோர்களிருந்து காலட்சேபம் பண்ணுவதற்கும் வெவ்வேறாகிய இடங்கள் விதவிதமாயமைத்துவிட்டார்கள் திரிதராஷ்டிரனந்தவிடத்திற்சென்று தவம் பண்ணிக்கொண்டுவர விதுரன் சஞ்சயன் இவர்களிருவருங் காட்டிற்றிரிந்து கந்தமூலபலங்கள் சம்பாதித்துவந்து கொடுக்க காந்தாரி குந்தி இவர் முதலிய பெண்கள் போசனஞ்சமைத்து அருகிற் காத்திருந்து உபசாரம்புரிய இயாதொரு குறையுமில்லாமல் விரதமுந் தவமும் நாளுக்குநாள் மென்மேலாக விருத்திபண்ணிக்கொண்டு மெய்யுணர் வுடையவனாயினான்

இவ்வாறு திரிதராட்டிர மகாராஜன் தவசு பண்ணிக்கொண்டுவருகிற சங்கதியைத் தினந்தோறும் ரிஷீஸ்வராள் கண்டு ஆ! ஆ! இதுமகாமேலாகியதவம் என்று ஆச்சரியப்பட்டுச் சந்தோஷித்தார்கள் பதினன்கு லோகமும் இதுமகாபக்குவமென்று கொண்டாடினர்கள் அக்காலரசன் தனதுப்பழித்திருக்குந் திருமேனிக்குப் பலமு நலமு முடைத்தாகி பனி குளிர் மழை வெயில் இவைகளினுற் சளையாமல் உடல்வளையாமல் கசங்கிக் களையாமல் காசினியாண்ட சம்பிரமசுகங்களை நினையாமல் கர்ப்பூரதீபம்போற் ஜோதிகாட்டத் தாரணையோகம் சாதித்துவந்தான் இவனுடன்கூடிவந்த பிராமணுள் அக்கினிஅவியாமற் பூசித்திருந்தார்கள் இப்படியிருக்கையிற் சிலநாள்களுக்குப்பின் திரதராட்டிரன் ஒருநாள்விட்டு ஒருநாள் போசனம் புசித்து வ்ரத் தலைப்சட்டான் அப்பால் வாரத்திற் கொருதரந் தின்னுவதாயினன் பிற்பாடு பட்சத்திற்கொருதர நுகருநேமகங்கொண்டான் அதன்பின் மாசத்திற் கொருதரமாக வுண்ணல் நண்ணினன் அப்பாலயனத்திற்கொருதரமாக அருந்தினன் பின்னும் சம்வச்ரத்திற்கொருதரஞ் சாப்பிடத் தலைப்பட்டான் இப்பால் அந்தச் சாப்பாட்டைக்குறைத்துக் கிழங்கே சாப்பிட்டு அதையும்விடுத்து பழங்கள் தின்று அதையும் விலக்கிச் சருகுபுசித்து அதையுந்துறந்து சலமருந்தி அதையும் நிறுத்தி வாயுவைக்கும்பித்து இப்படியாக நாளுக்குநாள் ஆகார வர்ச்சிதம்பண்ணி சாகார ஆர்ச்சிதஞ்செய்துநவநிலையில் முக்கியமாய் யிருக்கிறன்.

---

நாரதமுனிவர் திரதராட்கிரனுதியர்க்கு
இனிக் கைகூடும் பதவியின்
றிற முரைத்தல்.

அக்காலத்தில் அனேகந் தவங்களுடைய ரிஷியீஸ்வராள்முனீஸ்வராள் புடைசேர்த்த கூட்டமாய் நாரதமுனிவர் வந்தார் அவரைத் திரிதராட்டிரன் முதலிய மூவரும் எதிர்சென்று கண்டுசாஷ்டாங்க தெண்டனிட்டு பாதபூஜைபண்ணி ஆசிபெற்றுஓராசனத்தி லெழுந்தருளச்செய்து அடிபணிந்திருந்தார் அப்போது சதயூபர் முதலான பெரியவர்களுஞ் சந்தோஷப்பட்டுவணங்கினர்கள் குந்திதேவி காந்தாரி முதலிய பெண்களும் போற்றினர்கள் எல்லாருக்கும் நாரதர் நன்மையுண்டாக விளம்பினர் அக்கால திரிதராட்டிரன் நாரதரைப் பார்த்து நயந்து சொல்லுகின்றன் ஐயா தெய்வமுனியே அவத்திற் காலம்போக்காமல் தவத்தை விரும்பி வனத்திற் புகுந்து சிவத்தைப் பேணிய சதயூபருடைய கடாட்சந்தாங்கிப் பவத்தையுடைத்தேன் என் பாக்கியமே பாக்கியம் என்றுசொல்லித் தொழுதான் அதைக்கேட்ட நாரதர் சொல்லுகின்றர் அரசனே இந்தச் சதயூபரென்பவர் மிகவும் பக்குவமுடையவர் இவருடைய ஆசிரமம்போ லெங்கணுமில்லை இந்த ஆசிரமத்தை யடுத்துத் தவமிழைத்துந் பெருமைபெற்றவர்களும் சொற்கபதவி சேர்ந்தவர்களும் வெகுபேருண்டு இதுநல்ல சித்தியான இடம் இவ்விடத்திலுள்ள தீர்த்தங்களுக்குச் சமானமாகிய தீர்த்தம் எவ்விடத்துமிராது பூர்வத்திற் சதவிந்துவென்னும் ராஜன் தன் குமாரன் சதசித்துவை ராஜனுகவைத்துத் துறவடைந்து, இந்த ஆச்சிரமத்திற்கு வந்து அருந்தவமிருந்து இந்திரலோகமடைந்தான்இன்னுமனேகம் அரசர்களும் இங்ஙனமிருந்துகதி பெற்றுர்கள் இப்பேர்ப்பட்ட இடம் உமது புண்ணிய வசத்தாற்பொருந்தியது வேதவியாசருடைய கிருபாகடாட்ச மிருக்கின்றபடியால்உமக்கொரு குறைவுமிராது பூரணமாகத் தவத்தைத் தேடிக்கொள்ளும் நீரிங்கிருந்து செய்யுந் தவமகிமையாற் பிர்மா விஷ்ணு ருத்திரன் இவர் முதலாகிய தேவர்கள சந்தோஷப்படும்படியாய் முத்தியடையலா மென்றனர்.

இவ்வாறு சாமகீதம்பண்ணுகின்ற மகதியாழ் நாரதர் சாற்றியதைக்கேட்ட வரசன் அவரைப் பணிந்தெழுந்து சுவாமி இந்த வனத்தில் தவமிழைத்துப் பேறுபெற்றவர்களனேகம் பேரென்று திருவாய் மலர்ந்தீர் அடியேன் கிழவன் தள்ளாதவன் மகாபாவி நானெப்படிதவசுபண்ணுவேன்? என்னமாய்க்கதிபுகுவேன் எனக்கும் பலன்கிட்டுமோ? என்னையுமவர்களுடன் சேரவொட்டுமாவென்றன் அதற்குநாரதர் கிருபைகூர்ந்து ஓ சந்திரகுலாதிபதி தவமென்பதுஒருக்காலும் அவமாகாதுஉமதுசத்திக்குக் கூடினமட்டுந் தபசுபண்ணிக் கரையேறுமென்றுகுறித்தார்

அந்த நாரதரைத் திரிதராட்டிரன் தொழுது ஆண்டவனே! தேவரீராசிர்வாதபலமே என் தவற்திற்குத் துணையாகும் ஆனல் எனக்கு என்ன கதிவரும்? என்னைச்சேர்ந்த இவர் களுக்கு எந்தப்பதவிகிட்டும்? இவற்றைச் சொல்லவேண்டுமென்று கேட்க அதற்கு நாரதர் சொல்லுகின்றார் ஓ மகாராஜனே! நீர் தாமரைக்கமலத்திற் பிறந்த பிர்மதேவ னுடைய பிள்ளைக்குப்பிள்ளையாகிய குபேரன் பக்கத்தில் யக்ஷராசனகி அநேகர் சேவித்து வந்தித்து நிற்க இரத்தின கிரீடமுதலாகிய வஸ்திராபரணங்களுடன் மெத்தப் பிரகாச மாய்ச் சிங்காசனமேறி, உமது பெண்சாதி உம்மைவிட்டுப் பிரியாமலிருக்கச் சகலவை பவத்துடனே ஜன்பசாபல்லியமா யிருப்பீர் குந்திமாதேவி இந்திரலோகாத்தி லிருக்கிற பாண்டுமகாராஜனுடன் கண்புற்றுக் கூடி யிருப்பள் விதுரன் தருமராசனுக்குட் பர காயப்பிரவேசஞ் செய்வன். சஞ்சயன் நாக லோகஞ்சேர்வான் உமது குமாரர்களுடைய தருமபத்தினிமார்கள் தங்கள் தங்கள் கணவ னுடன் கலப்பார்கள் ஸ்தூலதேகமிருக்கிற வரையிலுந் துன்பம் ஸ்தூலதேகத்தைத் துணையாகக்கொண்டு பாபங்களை விட்டுச் சூட்சும தேகத்திற் பிரவேசித்தால் மோட் சம் இதுவே நிச்சயமாக உமது மனத்திற் கொள்ளுமென்றியம்பினர்.

இவ்வாறு கூறிய நாரதர்வார்த்தையை நராதிபனும் ராஜஸ்திரீகளுங் கேட்டு அற் புதப்பட்டு ஓ கர்த்தனே தேவரீரிட்டருளிய கட்டளைப்படிக் கஷ்டப்பட்டுத் தவஞ்செய் கின்றோம் முடிவில் சரீரத்தை யொழித்து தாட்சியில்லா மோட்சமடையும் படியாகிய உபாயமெப்படியோ அதனைச் சொல்ல வேண்டுமென்று கேட்கச் சதயூபருஞ் சகல ரிஷிகளுந் சந்தோஷிக்கும்படியாய் நாரதர் சொல்லுகிறார் ஓ புனிதசீலர்களே யான் ஒருநாள் அநேகமான முனிபுங்கவர்கள் யென்னுடன் கூடிவரத் தெய்வலோகத்தி லிருக்கின்ற தேவேந்திரன் சபைக்குச் சென் றேன் அவ்விடத்தில் வேகுபேர் தேவர் களும் பிர்மரிஷிகளும் மேனகை முதலியீ பெண்களும் பொருந்தி யிருந்தார்கள் அப் போது சில மகாரிஷிகள் இந்திரனைப் பூசி த்து ஓ ஆண்டவனே பூமண்டலாதிப ளுகிய திரிதராட்டியனனவன் தன் தம்பி யோடும் பத்தினியோடும் குந்திதேவி முத லிய பெண்டீர்களோடுந் தவசு பண்ணுகிரு னென்று பேசினர்கள் அதற்கு இந்திரன் சொன்னதாவது திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி விதுரன் சஞ்சயன் அநேகமான ராசஸ்திரீகள் ஆகிய விவர்கள் மூவாண்டா ய்த் தவம்புரிகின்றார்கள் அவர்கள் செய்யப் பட்ட தவசுகளினல் இன்னின்னவழியில் தேகம் விழுந்துபோம் பின்பு யாவரு மிவ் வுலகபதவியைப் பெறுவார்களென் றுரைத் தான் அதை நான் கேட்டுவந்தேன் ஆனதா ல்தேபிரகாரம் உங்களுக்குப் பதவிகிடைக்கு மென்று சொல்ல திரிதராட்டிரனதியர் சத யூபரையும் நாரதரையும் பார்த்துப்போற்றி மகாரிஷிகளையும் வணங்கினர்கள் அப்போது நாரதரும் அவரோடு வந்த ரிஷீஸ்வரர்க ளும் அவர்களை யாசீர்வாதம் பண்ணிப்போ னர்கள். நாரதராதியர் போனபிற்பாடு திரித ராட்டிரன் முதலியபேர்கள் பலநாளுந்தவசு பண்ணிப் பக்குவப்பட்டு வந்தார்கள்.

---

## தருமனதியர் திருதராட்டிரனுடைய தவச்சூழலுக் கேகுதல்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாரா சனே! இவர்கள் அஸ்தினபுரத்தை விட்டுக் காட்டுக்குப்போன பிற்பாடு தருமராசன் முதலாகிய பிள்ளைகளும் திரௌபதியம்மா ளும் மற்ற ராசஸ்திரீகளும் மிகுந்த தாபத் திரையத்துடனே சந்தோஷமில்லாமற் சஞ் சலப்பட்டு சகலத்திராளையும் பிரிந்து தனி மையிலிருக்கச் சம்பவித்ததேயென்று தனித் தனி புலம்பிக்கொண்டிருந்தார்கள். ஒருநாள் தருமராசன் தம்பிமார் முதலியவர்களைப்பார் த்து நமது பெரிய தகப்பனர் பிரபஞ்சவாஞ் சையைவிட்டுத் தவம்பண்ணப்போனர். நம க்குரிய தாய்மார்களும் பெண்டீர்களுங்கூடச் சென்றார்கள். விதுரராஜனுஞ் சஞ்யனுசங் கூடஇங்கிராமற் போயிருக்கிறார்கள். அவர் களை மறந்து நாம் இவ்விடத்திற் சிறந்து அரசாட்சி பண்ணிக்கொண்டிருந்து விட் டோம் இதென்ன அனியாயம் அவர்கள் தான் ஆசையை யொழித்தார்கள். நாமும் அப்படியே ஒழித்துவிட்டோமா இல்லையே! ஐயோ நானும் அவர்களுடனே போய்ச்

சேர்ந்து, அவர்களுக்கு ஊழியம் பண்ணிக் கலந்து இந்த மாயவாழ்க்கையைத் துறந்து வாழ்வேனென்றனர். இம்மொழி கேட்ட தம்பியர் நால்வருந் தளர்ந்து கால்மேல் விழுந்து மழை பொழிவதுபோல் அழுது இதற்காகவா இந்தப்பாடுபெட்டது இராகவா ஆ! தெய்வமே என்று இயாவருங் கண்ணீர் சொரிந்தார்கள். திரௌபதி சுபத்திரை உலூகி சித்திராங்கதை உத்தரை இவர் முதலிய உத்தமஸ்திரீகளும் விஸ்தாரங் கூடி தராதிபனை தலைவர் தங்களைத்துறந்துபோவதைக்குறித்து ஓவென் றரற்றினார்கள்.

இவைகளை யெல்லாங் கண்டிருந்த சகாதேவன் தமையன் பாதத்திற் பணிந்து அண்ணா யதுகுலத்திற் பிறந்த யாதவ சம்மந்தமான நமது தாய் குந்திதேவியார் தன் பிராணனை யொழித்துவிடும்படிக்கு நினைத்துப்போயிருப்பது தெரிந்தும் கண்ணினாற் கண்டும் அதைப்பற்றி நாம் சிறிதும் பரதவிக்காமல் ஐஸ்வரிய மோகபோகங்களினால் மயங்கினோமே யல்லாமல் பெற்று வளர்க்க பெரும்பாடுபட்ட உத்தமியை மறந்துவிட்டோம். அன்றைக்கு நினையாத யாம் இன்றைக்கு எண்ணுவதி லென்ன லாபம் இது ஏழ்மையாகிய பாவம் அஃதிருக்கட்டும் நமது பெரியவர்களும் பூமிபாலரும் உமக்கு ராச்சியபட்டாபிஷேகம் பூட்டினார்கள். நீர் நாட்டைவிட்டுக் காட்டுக்குப் போகிறேனென்பது காரியமன்று நான் எல்லாருக்குந் தாழ்ந்தவன் என்னை ஏவல் கொள்வது ஞாயம் ஆதலால் எனக்குச் செலவுகொடும் நான்போய் அவர்களுக்கு ஊழியஞ் செய்து அடிக்கடி உமக்குச் சமாச்சாரமறிவிக்கிறேன் அப்படிக்குச் சம்மதியில்லா விட்டால் தாயாரைப் பார்த்து வருகிறேன். தயை செய்யும் என்று இளைய தம்பி கேட்கத் தருமராஜனுக்கு விசனம் பிறந்து நீமாத்திரந் தனியாய் போவது சரியல்ல எல்லோருக்கும் விசனமிருக்கும் ஆதலால் யாவரும்போய்ப் பார்த்து வருவோமென் றெண்ணினார்கள். அந்தக் குறிப்பை யறிந்த ஸ்திரீகள் முதலிய பேருங் கூடவருகிறோமென்று மீறி யானை குதிரை பல்லக்கு ஒட்டகம் வண்டி காடி இவைகளிற் புறப்பட்டார்கள். தருமராஜனுந் தடைகொல்லாமல் வீதிகளில் முரசறைவித்து வரத்தக்க பேர்களுடன் நகரம் நாடு ஆறு மலை காடு இவைகள் கடந்து வழிமுடிய அன்னதானமுஞ் சொர்னதானமுங் கொடுத்து கிருபாசாரியையும் உயிச்சனையுங் காவலாளிகளுடன் பட்டணம் பாதுகாக்க வைத்துவிட்டு ஒட்டொழியப் புறப்பட்ட ஊராருடனே வெகு கூட்டமாய் வெளிப்பட்டு ரதகஜ துரக பதாதிகணெருங்க வெள்ளைக்குடை விருது டால் இவைகள் பிடிக்க சகல மேள வாத்தியங்களுஞ் சம்பிரமமாய் முழங்க பிராமணர் வித்துவான்கள் கட்டியர் பட்டுவான்கள் இவர்கள் யாவருந் தொடர்ந்து ஆசீர்வசன வாழ்த்துகள் விடுக்க, மகாரிஷிகளுந் தபசிகளு மறைகோஷமுடிக்க இத்தினகிரிச் சாரலோரமாய் போயினார்.

அந்த மலையினின்றும் ஓடிவருகின்ற அருவியும் அதில் விளையாடி மருவிய மச்சங்களும் பற்பல நிறப் பொற்சன்னங்கள் முத்துக்கள் சங்கினங்கள் மலைத் தேன்களுடன் கலந்து கரைகளில் மலிந்து பிரகாசிக்கின்ற காட்சியும் ஆகாயமட்டு முயர்ந்த மரங்களின் மாட்சியும் மான்கள் ஆன்கள் மயில்கள் குயில்கள் முதலிய உயிர்க ணெருங்கியிருக்கிற பான்மையும் குறவர் சிறு குடிசைகள்தோறுஞ் சிறுவர்கள் விளையாடுந் திரட்சியும் இயானை புலி சிங்கங்களின் மருட்கியும் சந்தனம் அதில் குங்கும விருட்சங்களால் மடைப்பள்ளிகளி லுண்டாகிய புகைச்சலும்வாயுவைப் பட்சித்துக்கொண்டு மண்டலமாய்க் கிடக்கிற மலைப்பாம்புகளும் தேய்யுவிழுந்தெரிகிற சிலைக்காம்புகளும் இராஜஸ்திரீகளுடைய அவயவங்களுக் கொப்பாகிய பலவலங்காரக் காட்டிக்கொண்டிருக்கிற அலங்காரப் பூவனங்களும் பூர்வம் ஆதிசேடனால் மகமேருவின் சிகரத்தைமறைத்து வாயுதேவனுக்கு வலிமை கொடாதிருந்த வாறுபோற் பாம்புகள் படம் விரித்து மலைச்சிகரங்களை மறைத்துக்கொண் டிருப்பதும் மலைகளுக்கு வாகுமாலை தொடுத்து விட்டது போற் பெருகியோடுந் தேனருவியும் பெரிய பாம்புகள் பூமிமட்டமாய்த் தொங்கிக் கொண்டிருப்பதும் வானமாதர்கள் மலைகளின்மீதிறங்கி இராஜகன்னியர்களைக் காணும்படியான நலமும் வாசனை மலர்களி லுறைந்த வண்டுகணிறைந்த மதுமலர்த்தடமும் நால்வகைச் சேனைகள் நடக்கு மோசையையும் வாத்திய முழக்கத்தையு மடக்கி ஆங்காங்கும்

அருவியாய் விழுந்தோடுகின்ற நீரொலியும்
மிருகங்களிறைகின்ற பேரொலியும் விண்மே
விரைகின்ற காரொலியும் வாடைக்காற்றும்
வசந்தக்சாற்று மருவி வருகின்ற மாருதலியு
மிகுந்திருக்கின்ற பலவளங்களையும் பார்த்து
அந்தப் பர்வதச்சாரலி லிறங்கினார்கள்.

இப்பால் இயானை சேனை பரிவாரங்களை
அவ்விடங்களிற் பந்தித்து கூடாரங்களிட்டு
ஸ்திரீகள் புருஷரோடு கூடி அந்த மலையிட
ங்களைக் கண்டு மலர்களைப்பறித்து வாவியிற்
குளித்து மாணிக்கமெடுத்து கிளிகளுடன்
கொஞ்சி விளையாடி குயில்களுடன் மிஞ்சிப்
பாடி மயில்களுடனாடி மானுடனோடி அன்
னப்பட்சிகளுட னடந்து பெண்ணானைகளு
டன் றொடர்ந்து முல்லையரும்பைக் கண்டு
நகைத்து வில்லைக் கரும்பைக்கொண்டு வளை
த்து வல்ல மன்மதனுடன் சண்டை விளை
த்து நல்ல போசன பதார்த்தஞ் சுவைத்து
நானாவித புட்பமுடித்து கால்களுக்குச் செம்
பஞ்சுகூட்டி கண்களுக்கு மைதீட்டி நெற்றி
க்குத் திலகமிட்டு நேயகபோற் கொண்டை
யிட்டு ஒருவரையொருவர் பிரியாமற் குலாவி
யிருந்தார்கள். நாயகரும் நங்கையருங் கூட
லில் ஊடலாகி உடனே வனவேடர்களைக்
கண்டும் விலங்குகளைப் பார்த்தும் பயந்து
தலைவனைத் தழுவிகொள்ளுவார்கள். இப்படி
தையலார்களுந் தருமனுதியரும் வந்திருப்
பது தெரிந்த மாதவர்களும் முனிவர்களும்
இயாகம் புரிந்த பிரசாதங் கொணர்ந்து
ஆசீர்வதித்தார்கள். மிருகங்கள் சத்துருத்த
னந் திட்டத்தனமில்லாமல் ஒன்றோடொ
ன்று இட்டமாகத் திரிந்ததுகள். அட்டமா
சித்திபெற்ற தருமராஜன்து வட்டமான
வெண்குடைபோ லெழுந்தமதி அட்டதிக்
கும் பரவ அப்போ சமுத்திரம்போ லெறி
த்து நிழலில் ஆடவரும் அரிவையரும்
உலாவிச் சிறந்து மன்மதக்கூத்தாடி மகிழ்
ந்து மதுபானமருந்தி இரவுமுழுதும் நித்
திரையில்லாமற் கலவி நூலைப் படித்து மெத்
தையின்மேற் றுயின்றார்கள் கற்றைக் கிரணத்
தைக்காட்டி நின்ற திங்களும்கருமேகம்போ
தைக்காட்டி நின்ற திங்களுங்கருமேகம்போ
விருண்டுவந்த கங்குலும் தந்தை தாயாரைக்
காணவேண்டு மென்சிறபிரேமை கொண்டு
நீங்குமவர்போல் நீங்கிவிட்டன இப்படி
சோமனுமிருளுந் துலைவதற்கு முன்னே
தருமசாஜனுடைய ஆக்கினைச்சக்கரம் புகுந்
து அதமாக்குந் தன்மைபோல் உதயகிரியிற்
சூரியனுதித்தான் பூமியிலிருந்த தாமரைக்
கமலமும் புருடருங் கலந்த பெண்களின் மு
கக்கமலமும் பூசுரர் புண்ணியர் புனிதர்கள்
மனகமலமும் பொங்கிமலர்ந்தன.

அப்போது தருமபூபதி யெழுந்து கா
லக்கடனை நடாத்தி பிரயாணபேரி முழக்க
வைத்து கட்டியர் பட்டுவர் முதலியபேர்கள்
முன்னே சென்று சங்கதி சொல்ல கருத
லரை வெல்லவல்ல சகல சேனைகளும் சர்வ
வாத்தியங்களும் சமஸ்த ஜனங்களும் தம்பி
மார்களும் புடைசூழ்ந்து புல்ல உடனே பி
ரயாணமாகித் திரிதராட்டிரன் முதலிய
பேர்கள் தவசுசெய்கிற வனத்தைச் சார்ந்து
கங்கா நதியும் யமுனாநதியுங் கலந்துவருகிற
குருக்ஷேத்திர எல்லையில் இரதத்தை விட்டி
றங்கி ஆச்ரமத்திற் கருகாமையிற் போயினார்
அதை யங்கிருந்த மகாரிஷிகள் பார்த்து ஓ
அறக்கடவுளே உங்களையன் யமுனாநதியில்
ஸ்நானம்பண்ணப் போயிருக்கின்றா ரென்
றார்கள் அப்படியே திரும்பி யமுனாநதிக்க
ரையை நோக்கி வருகையில் திரிதராட்டிரன்
தீர்த்தமாடி செபதப முதலிய செய்கையை
முடித்து வெகு ரிஷிகளுடன் திரும்பி வருகி
றான் அபபோது தருமராஜன் தம்பிமார்க
ளுடன் சாஷ்டாங்க தெண்டனிட்டார் அ
தைக் கூடவந்தவர்கள் குறிப்பா லுணர்ந்த
இராஜசபையிற் றெரிந்துகொண்ட திரிதரா
ட்டிரன் கண்ணுள்ளவற்போற் கண்டு இரு
கரத்தாலு மெடுத்து அணைத்து முத்தமிட்
டு இறுகத்தழுவி அவாளுடைய முகத்தை
ற் துடைத்து ஆசீர்வதித்து அவர்களுட
னடந்து தவச்சூழலுக்கச் சென்றான் அங்
ஙனமிருந்த முனீஸ்வரர்கள் ரிஷிஸ்வரர்கள்
பெரியோர்கள் காந்தாரி குந்திதேவி இவர்க
ள் யாவருக்கும் பாண்டவர்களும் ஸ்திரீ
களும் பரிவாய் நமஸ்காரம் பண்ணினா
ர்கள் இவர்களெல்லோரையு மவர்களெடு
த்தணைத்து ஆசீர்வதித்தார்கள் சகாதேவன்
முந்தியோடிக் குந்திதேவி காலில் விழுந்து
ஓ அம்மாவென்றலறினான் அவனை யத்தே
வியெடுத்தணைத்து ஆதரித்து அப்பாமகனே
சும்மாயிரு என்று சொல்லித் தேற்றினாள்
தருமராஜன் முதலியயேர்களும் வணங்கி
னார்கள் குந்திதேவி சகலரையுந் தழுவிக்
கொண்டு என் விசனப்படுகிறீர்கள் இயாதுங்

குறைவில்லை என்றுசொல்லி வாழ்த்தினான் இப்படி ஒருவருக்கொருவர் இஷ்டலாபங்களைப் பேசிக்கொண் டிருக்கையிற் பாண்டவர்கள் சஞ்சயன் வரக்கண்டு கட்டித் தழுவிக்கொண்டு அனேக ஆதரணை வசனங்களாற் புகழ்ந்து மகிழ்திருந்தார்கள் அப்போ சந்திரவம்ஸந் தழையுங்காலம் இதுதானென்று அங்குள்ள தவச்சிரேஷ்டராகிய மகாரிஷிகளெல்லாங் கொண்டாடினார்கள்.

---

### தருமராஜனுந் திரிதராட்டிரனு மொருவர்க்கொருவர் க்ஷேமவிசாரணை செய்துகொள்ளுதல்.

அந்தவேளையில் தருமநந்தனர் எங்கள் சிற்றப்பாராகிய விதுரமகாராஜனெங்கே யென்று வினவினார் அதற்கு விவேகத்திலுயர்ந்த சஞ்சயனவரைப்பார்த்து ஐயா! நாங்கள் அஸ்தினபுரம் விட்டு வனத்திற்கு வந்தநாள்முத லொருவருஷம் வரையில் நமது ராஜனுக்கு ஏவற்றொழி லியற்றிக் கொண்டிருந்தனர் அவருக்கு யாதோவொருகாரணம் பிறந்து எந்த உறுதியைக் கைக்கொண்டு போனாரோ தெரியவில்லை எங்களையெல்லாம் ஒட்டற விட்டுப்போட்டு அட்டகுண மூர்த்தியாகிய அமலனை அகத்துணையாகப் பற்றி அன்பு மாறாமையுமாகிய குறியேறி மகத்துவ மிகுத்திடும் வெறியேறினர் வந்தாலும் வந்தார்வராமலிருந்தாலுமிருந்தார் இப்படியாகச் சித்து விளையாடுகின்றார் நித்திரை யாகாரமில்லை எத்தேசகாலமும் அங்கில்லை நம்பத்தகாது என் சொல்லை என்று நவின்றான் அதைத் தருமராஜன் கேட்டு சஞ்சலப் படுவார்கள் போற் சாலங்காட்டி இனியெப்போது காண்போமென்றேங்கி கூடவந்த பேர்களுங்குறையாகித் துக்கப்படும்படியாய் விக்கி விசனப்படுகின்றார் அப்போது தபசியாகிய திரிதராட்டிர னவரையாதரித்து அப்பா தருமநந்தனா! உனக்கிது என்ன மயக்கம் இதோ விதுரனைக் காண்பாய் இந்த வெளியிலேதானிருப்பானென்று விளம்பினான் அப்போது அந்தக்காட்டிலிருக்கின்ற ரிஷிகளும் அவர்களின் பத்தினிமார்களும் அஸ்தினபுர நாட்டிலிருக்கின்ற தருமராசனென்னும் ராசரிஷி வந்திருக்கின்றார் அவரைப்போய்ப் பார்ப்போம் என்று கும்பு கும்பாய் வந்தார்கள் தருமராசன் முதலியபேர்கள் அவர்களுக்குச் சாஸ்டாங்க தெண்டனிட்டுப் பணிந்தார்கள் அவர்களை யவர்களாசீர்வதித்து அங்கு வந்திருக்கின்ற இராசர்களும் ராசஸ்திரீகளும் இன்னாரின்னாரென்று ரிஷிபத்தினிகளறிந்து கொண்டு தருமராசன் அவர் தம்பிமார்கள் திரௌபதி சுபத்திரை உத்தரை சித்ராங்கதை உலூகி அரவான்பெண்சாதி கடோற்கஜன் பத்தினி இளம்பஞ்சபாண்டவாளுடைய பத்தினிமார்கள் பாண்டவர்களுக்கு வேறுள்ள பெண்சாதிகள் அவாள் பெற்ற பிள்ளைகளின் பெண்சாதிகள் எல்லோருக்கும் உபசார மரியாதை செய்து பண்டுபலாதிகள் கொண்டுவந்து கொடுத்து ஆசீர்வதித்தார்கள்.

இப்பால் திரிதராட்டிரமுனி தருமதனயனை நோக்கி ஓ குழந்தாய்? உன்னரசும் சேனைகளும் குடித்தனங்களும் உன் சொல்வழி நடக்கின்றார்களா? உனக்குரிய சிநேகிதர்கள் சுகமே யிருக்கின்றார்களா அஸ்தினபுரம் அழகாய் அலங்காரமாய் யிருக்கின்றதா தேசதேசத் திராசர்கள் பூர்வமரியாதைபோற் புரிந்து வருகின்றார்களா பந்துஜன போஷிப்பு நடந்து வருகின்றதா நான்கு வருணத் தருமமும் பிசகாமல் நடக்கின்றனவா பிராமணர்கள் தங்களுடைய விதிமுறைத் தப்பாமல் நடந்து வருகின்றார்களா? வேதபாராயணம் பண்ணுகின்றார்களா இயாகாதிகிருதுக்கள் நடந்தேறி வருகின்றனவா அவுபாச அக்கினிபூசை யாகின்றதா அவரவர்க்குரிய சர்வமானியஞ் சவுக்கியமாய்விளைகிறதா யாவருக்குமறிவு மேன்பட் டிருக்கிறதா கல்வி செழிக்கிறதா தருமந் தழைக்கிறதா தேவாலயங்களுக்குக் காலந்தப்பாமற் பூசை நடக்கிறதா தேர்த்திருநாளுண்டாயிருக்கிறதா அதிதி பரதேசி திதி மதிமுதலியவற்றி னுபசாரங்களும் உபகாரங்களும் முண்டா யிருக்கின்றனவா என்று விசாரித்தான் அதற்குத் தருமராஜ னிருகரத்தையுஞ் சிரத்திற் றரித்து ஓ எங்களையனே தேவரீருடைய ஆக்கினைச்சக்கிரப்படிக்கு அஷ்டலட்சமியுங் கூத்தாடிக்கொண்டிருக்கின்றார்கள் குறைவில்லை ஓ நிறையறிவுடைய நிருபரே தேவரீருடைய திருமேனி இந்தவெ

ப்பமான் தவத்திற்கு ஒப்புகிறதா தாளுகிற
தா உபசாரங்கள் குறையாம னடக்கின்றன
வா துரியோதனன் பெண்சாதி முதலிய சிறு
பெண்கள் தவமும் விரதமுஞ் சாதிக்கிருர்
களா இந்தச் சஞ்சயன் உங்களுடைய பணி
விடையில் ஏமாருமலிருக்கின்ருர் போலும்
அதனு லவர்தேகம் இளைத்துக் காட்டுகிறது
நல்லது எல்லோரையும் பார்த்தேன் விதுர
ராசனைப் பார்ப்பதற்குப் பாக்கியம் பண்ணுத
வனு யிருக்கின்றேன் ஊழ்வினையை விலக்க
ஒருவராலாகாது என்று பேசிப் பெருமூச்சு
விட்டார் அதற்குத் திரிதராட்டிரன் அப்ப
னே மனதை மாயாமயக்கத்திற் போக்காதே
பிராந்திகொண்டு தாக்காதே அதோமுகப்பா
ர்வை பார்க்காதே அஞ்ஞானங்களை நோக்கா
தே நான் தவஞ் செய்யத்துணிந்துவந்தநா
ள்முதல் என்றேகத்திற்கு வலுவேறி விட்
டது நமக்குரியவர்கள் சலிப்பில்லாமற் பணி
விடை பண்ணி வருகின்ருர்கள் ரிஷீஸ்வரர்
களே! தாய்தந்தையரிலும்முந்தியபேராகின்
ருர்கள் ஐயோ? இதுகாறு நாடே சுகமென்
று நான் கெட்டு நலிந்தேன் காடேசுகமென்
று கண்டு தெளிந்தேன் இந்தப்பலனெல்லா
முனக்கே உன்னுடைய சகாயத்தினுல் எனக்
கிது கிடைத்து என்று திரிதராட்டிரன் தரு
மராஜனோடு ஆசையாய்ப் பேசிக்கொண்டி
ருந்தான்.

---

## விதுரமகாராஜன் முத்திபெறுதல்.

இப்படிக் கிருக்கையில் தற்செயலாய் அ
ங்ஙனம் விதுரமகாராசன் வந்தான் உடனே
தருமராஜன் முதலிய பேர்கள் சென்று நீறு
பூத்த நெருப்பைப்போ லிருக்கின்ற அந்நீ
ருகண்டு தேகம்வேறுபட்டும் முகமாறுபட்டு
ம் தலைசடையிட்டும் திகம்பரனுகிய பரமசி
வத்தின் தரிசனப்பான்போ லிருப்பதைநோ
க்கி ஆச்சரியங் கொண்டார்கள் இவர்கள்
வருகிற திரண்ட கும்பைக்கண்ட விதுரன்
மிரண்டோடினுன். அப்போது தருமராஜன்
மாத்திரந் தனிமையாய்ச் சென்று என்னை
ய்யாவே என்னப்பாவே என்னத்தாவே என்
னண்ணுவே என்றழுது அழைத்துப் பின்
தொடர்ந்தார் அதைக்கண்ட விதுரன் ஒரு
பூமரத்து நீழலிலே சென்று இரண்டு
கண்ணையும் மூடிக்கொண்டு நின்ருன் அதை
த்தருமராசன் பார்த்து, ஆண்டவனே! அடி
யேன் உமது திருவடிக் கடிமையாகிய தரும
னென்று சாற்றினுர் அப்போது விதுரன்
கண்ணைத்திறந்து நோக்கி இருவருங்கலந்
துத்தன்னுடைய பிராணவாயுவை வெளியா
க்கித்தருமராஜனுடைய பிராணவாயுவைவெ
ளியாக்கித் தருமராஜனுடைய சரீரத்திலயிக்
கப்படுத்தி அனுக்கிரகம் பண்ணினுன் அப்
போதே தருமராஜனுக்குப் பிரமதேயசும்பே
ரறிவும் காயசித்தியு முண்டாயின விதுரன்
சமாதி நிலைகொண்டு அங்ஙனேயிருந்து அ
சைவற்றுப் போயினுன் அப்போது தருமரா
ஜன் ஆநந்தங்கொண்டு விதுரனைத் தகனம்
பண்ணி வைக்கவேண்டுமென்று நினைத்தார்
அக்கால் ஆகாயத்திலிருந்து அசரீரிதோன்
றிஓதருமநந்தனு இவ்விதுரன் தேகத்தைத்
தகிப்பதற்கு அக்கினிதேவனுலாகாது நீயிந்
தநினைப்புக் கொள்ளாதே என்றுரைத்து ம
றைந்தது அதைக்கேட்ட தருமராஜன் பயந்
து நயந்துதண்டனிட்டு. அவ்விடம் விட்டுத்
திரும்பித் திரும்பிப் பெருங்கும்பலாக நின்ற
தம்பிமார் முதலியபேர்களை யழைத்துக்கொ
ண்டுதிரிதராட்டிரன துதவச்சூழலுக்குவந்து
நடந்த தன்மையெல்லாம் நவின்றுவணங்கி
ஞர் பக்கத்திலிருந்த அருந்தவமுனிவர்கள்
யாவரும் ஆனந்த பரவசத்தாராகி ஐயோ!
எங்களுக்கு இப்பேறு கிடைக்காமற் போயிற்
றே மகா சித்தனுகியும் பரகாயப் பிரவேசம்
பண்ணுகிற பாக்கியவானுயு மிருந்த இந்த
விதுரமகாராசனைத் தம்பியாகவுந் தந்தையா
கவும்படைத்த உங்கள் குலத்தினுடையபாக்
கியமே பாக்கியம் என்று சந்திரகுலத்தையும்
திரிதராட்டிரன் குணத்தையும் தருமராஜன்
மனத்தையும் புகழ்ந்து மகிழ்ந்து போற்றி
யேற்றி வாழ்த்தினுர்கள் திரிதராட்டிரன் தரு
மராஜனுல் விதுரனுகிய தம்பியினுடைய சங்
கதியெல்லாம் அனுபவமாய்க் கேட்டுகொடு
த்துவைத்த மகாராசனென்று குறிப்புவைத்
திருந்தான் அப்பாலவன் தருமராசனைப்பா
ர்த்து நீமெத்த சத்தியவானுகையால் அந்
தப் புருஷோத்தமனுகிய விதுரனுற்சுளுவிற்
பரகாயப் பிர்வேசச் சித்திபெற்றனை எங்கிரு
ந்தாலு மெய்தவேண்டிய வின்பம் எப்படியு
ங்கிடைக்கும் தப்படி மனத்தை யுடையவர்
கள் சலித்துச் சஞ்சலித்துத் திரிவார்களெ
ன்று கிலேசப்பட்டு அங்குவந்திருந்த மகாரி

ஷிகளேயும் மகாரிஷிகளின் பெண்சாதிமார்களேயுஞ் செலவு கொடுத்தனுப்பி விட்டு பாண்டவர்களேப் பார்த்து வழிநடந் திளேப்பாக வந்த நீங்கள் ஸ்நானசந்தி செப பூசைகளே முடித்துக்கொண்டு விரைவிற் சாப்பிடப்போங்களென் றனுப்பினன் அப்படியே யாவரு மிஷ்டபோசனஞ் சட்ருசி பதார்த்தங்களுடன்புசித்து கந்தமூல பல கனிகளுந் தின்று, கரம் வாப்பூசி சயனம் பொருந்தி இரவகற்றி உதயத்தி லெழுந்து இதயமகிழ்ந்து காலேக்டனே நிறைவேற்றிக்கொண்டு சூரியநமஸ்காரங்கண்டு திரிதராட்டிரன் காந்தாரியையுந் தொழுது குந்திதேவியாருடன் பேசிக் குளிர்ந்து பாதபூசை பண்ணிப் பணிந்து பிரிவாற்ருமையைக் குறித்துப் பரதவித் திருக்கின்ருர்கள். அப்போது சதயூப முனிவர் வந்தார் அவரைக்கண்ட மாத்திரத்தில் தருமராசனும் மற்றபேர்களுந் தெண்டனிட்டார்கள் அவரவர்கட்கு ஆசி சொல்லி ஓ புனிதர்களே, நீவிர் இங்கேதானே யிருங்களென்று உபசரித்தார் அப்படியே மகா பாக்கியமென்று ஒருமாதம் வரையிலும் இருந்தார்கள் முப்பத்தோராம் நாள் கங்கைக்கேகி உதய ஸ்நானஞ்செய்து ஸ்திரீகளுந் தம்பிமார்களும் புடை நெருங்க மீட்டும் ஆச்சிரமஞ் சேர்ந்து தாய்தந்தை முதலிய மகானுக்களே வணங்கி அவர்களால் மங்களவாசிகொண்டு மகிழ்ச்சியடைந்திருந்தார் தருமநந்தனர்.

## திரிதராஷ்டிரன் வனவாசச் சருக்கம்

முற்றிற்று.

---

# மூன்ருவது,

## திரிதராஷ்டிரன் புத்திரசோபந் தீர்த்த சருக்கம்.

———[o]———

### கண்ணன் துதி.

கட்ட மாமவினே கைத்த தாணம கந்தும் வாதியர் கைப்ப டாய் நம
விட்ட மானவர் பத்தி யாய்நம வெற்றி யாள்வல் வித்த காநம
வெட்டு மாவுரு வத்த னேநம வெட்டொ ணுவதி வத்த னேநம
வெட்ட மாவர கிட்டு வாய்நம விட்டு வேநம விட்டு வேநம.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே இவ்வாறு துறவறம்பூண்டு தவஞ்செய்யப்பெற்ற திரிதராட்டிரன் முதலான பேர்களும் இல்லறம்பூண்டு இன்ப நலத்தைப் பெறப்பட்ட தருமராசன் முதலானவர்களும் காட்டிலிருக்குங் காலேயில் செவ்வானம்போற் சடையும் திருநீற்றுப் பூச்சும் செபமாலேக் கைவீச்சும் தண்டுகமண்டலமும் மிதியடியும் கதிர்முடியுமுடைய என்னுண்டவராகிய வேதவியாசர் வந்தார் அவரைக் கண்ட திரிதராட்டிரனும் பாண்டவர்களும் மாட்சிமைபெற்ற தவசிகளும் மற்றுமுள்ள பேருந் தீர்க்கதண்ட நமஸ்காரமிட்டு, அர்க்கியபாத்தியமளித்து ஆசனத்தில் எழுந்தருளப் பண்ணிப் போற்றினர்கள் அந்த மகானுபாவ ரவர்களேச் சாமவேத மிருக்குவேத மாதிகளினல் ஆசீர்வதித்து அநேகங்கோடி மகாரிஷிகளே புடைநெருங்கியிருந்து கேட்கத்திரிதராட்டிரனே நோக்கி அப்பா தனயனே நீயிவ்விர்த்தாப்பியமான காலத்திற் காட்டிலிருந்து ராஜரிஷியாகிப் பூர்வ பாவங்களேப் போக்கடித்துக் கொள்ளவேண்டி ஆசைப்பட்டு வந்தாய்போலு

ம் ஆகிலும் ஒரு சாமமேனும் ஒரு நாழிகையேனும் நிலைபெற்று உளுக்காருவதற்குஉனக்குத் திராணியிருக்குமா? பெரிய மனுஷ்யனுயிருக்கின்ற நீ வெய்யில் காற்று மழையார்திகட்குக் காலந்தள்ளுவையா அப்படிக் கமையுமாகில் மெத்தவும் அற்புதம் என்று கொண்டாடி இனிப் பிறவிக்கிடமில்லாத காலம்நேரிடப் போகிறபடியால் நற்காரியத்தையே உன்னுடைய மனதுகோரிக் கொண்டதன்றி அப்பா! நீ பண்ணப்பட்ட தபசுக்கு உன்னுடைய பெண்சாதியும் உன் தம்பி பெண்சாதியும் தள்ளாத காலத்திற் பால்மாறிக்கையில்லாமல் ஏவற்பணிவிடை செய்கிறதும் இரவும்பகலுங் கட்டிக் காத்துக் கொண்டிருப்பதும் பூர்வபுண்ணிய பலமென்றுபுகலவேண்டியதே வஞ்சனையற்ற சஞ்சயன் உன்னுடைய பாதத்தைத் திருநாதனுடைய திருவடியாக நினைத்துச் சிந்தித்துப் பந்திப்புடனிருக்கின்றான் இதுவுந்தவமே பஞ்சபாண்டவரைந்துபேரும் நெஞ்சிரக்கமுள்ளவர்களாய் வஞ்சிமார்களுடன் உன்னைப் பார்க்க வந்து உன்னுடன் கூடவிருந்து உபசரிப்பது லேசான காரியமா!

ஓ காவலனே? இந்தப் பிள்ளைகளைப் போற்பிள்ளைகளுண்டோ உனக்குண்டாயிருந்த நூறு பிள்ளைகளும் பண்ணியதெல்லாம் புண்ணிய விரோதமே அதற்குச் சாட்சி குருக்ஷேத்திரந்தான் இவர்கள் உனது வயோதிக திசையில் உதவியானார்கள் நீ ஜன்மாந்திர சுகிர்தம் உடையவன் இப்போர்ப்பட்ட நல்லகாலத்தில் அந்தப் பாவிப் பசங்களை நினைக்கவேண்டாம் இந்த ஐவரையும் நீபெற்ற பிள்ளைகளாக எண்ணி யிருக்கவேண்டும் பிள்ளைகளைப் பெற்ற பேருக்குத் தன் பிள்ளைக்குச் சமானமான பிள்ளைகள் இராதென்றும் தமது பிள்ளைகளே புத்திசாலிகள் என்றுங் கொண்டாடி மெச்சி யிச்சைக் கொள்ளுவார்கள் அப்படிக்குப் பிள்ளைகளைப் பெற்றவர்கள் சந்தோஷப் படலாகாது அப்பிள்ளைகளைக் குறித்து வெளியிற் பேசிக்கொண்ட பேச்சை ஒருவன் சொல்லக்கேட்டு மனைவியுந்தானு மகிழ்வது மாண்பு ஆதலால் நாம் நூறு பிள்ளைகளையும் பெற்றவனல்ல வளர்த்தவனல்ல இருந்ததுமில்லை செத்ததுமில்லை என்றிகழ்ந்து இவர்கள் பொருட்டில் மகிழ்ந்திருந்து தபசுக்குத் துணிந்துவந்தபோதே சகலமும் நாசம்பண்ணவேண்டும் அப்போதுதான் சன்னியாசமென்று சாற்றுவது இந்தக் காலத்திலாவது மறந்துபோனாயே அல்லதுபுத்திரசோபம் வைத்தாயே நீயே மறவாதிருந்தாற் காந்தாரி பெண்பாலானவள் அவளெப்படி மறக்கப்போகிறாள் மறவாதிருந்தால் தபசுக்கு விக்கினம்வரும் துட்டரை மறப்பது காயசித்தி மனுநீதி வேதங்களும் வந்து முன்னிற்கும் இதற்கு மிஞ்சிய உறுதி நான் வேறு சொல்லத் தக்கதில்லை என்று பிறப்பிறப்பற்ற பரப்பிரமத்தை யொத்த வேதவியாசர் சொற்ற மொழியைத் திரிதராட்டிரன் கேட்டு சிரமேற் கரங்குவித்து இதனைப் பேசுவதானான்.

---

### வியாசரோடு திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி இம்மூவருந் தங்கள் குறைகூறி யிரத்தல்.

ஓ என்னையனு மெய்யனுமான அரும் பொருளே! இளைத்த காலத்தில் தவத்தின் மேலிச்சைவைத்து வந்தேன் தேவரீர் கிருபாகடாட்சத்தினாற் குறைவில்லை எனக்கு என்னகதிவருமோ அதுதெரியவில்லை இருப்பவர்களே என் பிள்ளைகளென்றும் இறந்துபோன நூறு பிள்ளைகளும் என் சத்துருவின் பிள்ளைகளென்று மெண்ணிக்கொண்டிருக்கின்றேன் சத்தியமாகச் சொன்னேன் இந்தத் தருமராஜன் ஆரோக்கிய திடகாத்திரதேகனாக விருக்கவேண்டுமென்று கோரியிருக்கின்றேன் இப்பூவிலினி யிருக்கவுமாட்டேன் எனக்குண்டாகிய தெய்வபலன்கள் நான் பெறப்போகிற கதிகள் இவைகளெல்லாம் உமது பாதமேயென்று கோரியிருக்கின்றேன் முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் யக்ஷ கின்னர கிம்புருட சித்த வித்தியாதரரும் ஆகிய இவர்களெல்லாங்கூடி முடிக்காத காரியந் தேவரீராலே முடியுமென்றும் நல்வினை தீவினைக்கிடமாகிய ஜனனமரணங்கள் வாராமற் காக்குங்கடன் தங்களுடையதென்று மெண்ணி தமது திருவடியை என் மனதிற் குடிவைத்திருக்கிறேன் நான் பேசுகிற பேச்சிற் குற்றங்குறை யிருக்கினும் க்ஷமித்து அநுக்கிரகம் பண்ணவேண்டும் (பண்ணிய

பயிரிற் புண்ணியந்தெரியும்) என்று கூறிய பழமொழிக்கிணங்க, எனக்குப் பிறந்த நூறு பிள்ளைகளும் பாவிகளாஇறந்துபோனார்கள் இப்படி அற்பாயுசாகப் போகின்றவர்களாதலால் அடங்கியொடுங்கி யிராமல் அன்பாகிய விப்பாண்டவர்களை மனவருத்தப்படுத்திவைத்து வீஷ்மர் துரோணர் கர்ண்ணன் சகுனி சிந்துதேசாதிபன் மைந்தர்கள் பந்துக்கள் தேசத்தார்கள் சேனைகள் மந்திரிகள் தந்திரிகள் இவர்கள் யாவரும் மரணமடையப் போக்கினார்கள் இதிற் புண்ணியவான்கள் யார் அவர்களுக்கென்ன பதவி பாபிகள்யார் அவர்களுக்கென்னகதி இவர்களுடன் சம்பந்தப்பட்டபேர்கள் பெறும் பலனென்ன என்று திரிதராட்டிரன் கேட்குங்காலையில் காந்தாரிதேவி கணவன்து கருத்தைத் தெரிந்து, வியாசருக்குத் தெண்டனிட்டு வசனிக்கத் தொடங்கினாள்.

ஓ என்மாதுலரு ம்ாநிதியுமானமறைப்பொருளே மதித்த தோளினையுடைய மன்னவான்கள் பெற்ற மாதர்களை என்மக்கள் விவாகம் பண்ணிக்கொண்டு மடியவும் இவர்கள் விதந்துவாய்த் துக்கசாகரத்திற் படியவுமாயிற்று சுமங்கிலிகளாகிய திரௌபதி சுபத்திரை நாககன்னிகை இவர் முதலான பேர்கள் தங்கள் தங்கள் பிள்ளைகளையும், சகோதரானையும் தந்தை முதலிய பேர்களையும் இனியெப்போது காணப்போகின்றோமென்று துக்கப்படுகின்றார்கள் சுவர்க்கலோகத்தையும் பாதாளலோகத்தையும் ஓரிடத்திற் சேர்க்கவும் பிரிக்கவுஞ் செய்யுஞ் சத்தி தங்களுக்கிருக்கும்போது இந்தப் பாரதப்போரி லிறந்தவர்களை அழைப்பித்துக் காண்பிக்கிறது தமக்கு அருமையான வேலையல்ல தேவரீர் அவ்வளவு தயைபுரிந்தால் யாவருக்கும் அற்புதமாயிருக்கும் அமரரும் புகழ்வார்கள் நாங்களுந் துக்கம் நீங்கிப்பக்குவப் படுவோம் இந்த வரங்கொடுத்து இரட்சிக்க வேண்டும் என்று இரண்டு பாதங்களையும் பற்றி திரண்டகும்புடன் வீழ்ந்து புரண்டலறினாள் அப்போதுபொற்பட்டத்தினாற் கண்களைப் புதைத்துக்கொண்டிருக்கிற காந்தாரியின்பேரில் வியாசர் கருணை நாட்டி, ஓ மருமகளே! உன்னிஷ்டப்படியே நடக்கும் என்று சொல்லி இளையமருமகளைப்பார்த்து அம்மா குந்திதேவி உன் குறையைச் சொல்லென்று கேட்டார் அதற்கவ்வம்மைதீர்க்கத்தண்டன் செய்து சுவாமி தேவாதி தேவனை நீர் பூதேவராயவதரித்து, எங்களுக்குப் பொருந்திய மாமனுமாகி எங்கள் குலக்குரவனுமாகயிருக்கின்றீர் உம்மிடத்தில் என் குறையைச் சொல்லாமல் இன்னுமெவரிடத்திற் சொல்லுவேன் ஓ ஆண்டவனே! என்கன்னிகைப் பருவத்தில் தூருவாசரனுக்கிரகித்த மந்திர பலத்தினாற் கன்னனைப்பெற்று லோகாபவாதத்திற் கஞ்சிப் பெட்டியில்வைத்து நானப்போது கட்டியிருந்த நாகவுரிப்பட்டை விரித்துப்போட்டு ஆற்றில் விட்டுவிட்டேன் ஸ்ரீகிருஷ்ணனாகிய என் மருமகன் துரியோதனனிடத்தில் தூதுவந்தபோது ரகசியத்தை வெளியிட்டு ஆருக்குஞ் சொல்லாதேயென்று ஊருக்குப்போய்விட்டான் என்பிள்ளைகளெவ்வரையும் வஞ்சித்துச் சொல்லாமலிருந்தேன் பதினேழாநாள் யுத்தத்திற் கர்னன் மாண்டான் மனதறிந்து ஜேஷ்டமைந்தனைக்கொன்ற மகாபாதகி நான் ஆகையால் எனக்கும் பதவி கிடைக்குமாவென்கிற ஏக்கமுண்டு என்னை யிருப்பினுங் கொடியதாயென்று இந்தப் பிள்ளைகளும் நிந்தித்துவிட்டார்கள் ஆதலால் அந்தவஞ்சநெஞ்சம் படைத்த பாபத்தைத் தீர்த்து கர்னனையுமென்கண்ணிற் காணச்செய்யவேண்டுங் கர்த்தனேயென்றாள்.

---

### வேதவியாசர் உயுத்தகளத்திறந்த துரியோதனாதியரை வரவழைத்து திரிதராட்டிரனாதியரோடு குலாவச்செய்தல்.

கேட்டீரோஜெனமேஜெயமகாராசனே! குந்திமொழிக்கும் வியாசர் கிருபைகூர்ந்து அம்மா! சகலமும் பிராப்த கர்மப்பிரகாரம் பலிக்குமேயல்லது வேறொன்றும்வினையாது பாண்டவர்பிழைத்திருக்கவும்கர்னன் ஆரோயெவரோ வென்னப்பட்டிறக்கவும் வினைப்பயனிருந்தமையால் அதைவிலக்க ஒருவருக்கும் அதிகாரமில்லை விதிப்படிமதியும்வளருமென்பது அறிந்திருந்துந்தெரிந்திருந்தும் மயங்குவானேன்? உனக்குச் சிறிது பாபங்களுண்டாயிருப்பதாய்ச் சொன்னாய் உன்பேரில் ஒன்றுமில்லை இந்த வம்சம் விருத்தியாகிறதற்குப் பெற்ற பிள்ளைகளைவைத்த கர்ப்ப

முடைய புண்ணியவதியாகிய உன்னைக் கண்டவர்கள் துதித்தவர்கள் மதித்தவர்கள் நினைத்தவர்கள் ஆகிய யாவர்களுக்கும் பஞ்சமா பாதகங்களெல்லாம்பறந்தோடிப்போம் உன்னிஷ்டப்படியே கர்னனைக் காண்பாய் இந்தப்பூமியிற்பிறந்த குருக்ஷேத்திரத்திலிறந்தவர்களெல்லாம் தேவாம்சம் கந்திருவாம்சம் யக்ஷாம்சம் திசைக்காவலரம்சம் இராட்சசாம்சம் இப்படியாகப் பிறக்கப்போனார்கள் போகட்டும் இதைக்குறித்த விசனங்களும் பழிபாவங்களும் உங்களுக்கில்லாமற்போகும்படிக்கு எல்லோரையும் தருவிக்கிறேன் வாருங்கள் என்று சொல்லிச் சோலைகள் நெருங்கிய கங்கைக்கரைக்குத் திரிதராட்டிரன் பாண்டவர் இவர் முதலான ஆடவரோடு காந்தாரி குந்தி இவர் முதலிய ஸ்திரீசனங்களையு மழைத்துக்கொண்டு சென்று அங்ஙனே ஓரிடத்திற்றங்கி யிருக்கச்செய்தனர். அப்படியே யிருந்தார்கள் சூரியனு மஸ்தமனமானான் இயாவருஞ் சந்தியாவந்தனமுடித்து இராத்திரி யங்கேயே யிருந்து, பொழுதுவிடிந்த பிற்பாடு சூரியோதயத்திற் காலைக்கடனை நிறைவேற்றிக்கொண்டு ஒருதோப்பி லிறங்கினார்கள் இந்தச் சங்கதியெங்குந் தெரிந்து ரிஷீஸ்வராள் முனீஸ்வராள் இராஜாக்கள் பின்னுமுள்ள வெகுஜனங்கள் வந்து வேடிக்கையாய் நிறைந்தார்கள் வானமுழுதுந் தேவதைகள் வந்து கவிந்தார்கள் அப்போது அநேக நட்சத்திரங்களுக்கு நடுவே ஒரு சந்திரன் பிரகாசிப்பதுபோல் வியாசபகவான் விளங்கியிருந்து ஓ திரிதராட்டிரனே நீங்களெல்லோரும் இங்கே வாருங்களென்றழைத்து திருத்தி வலதுக்ரத்தை நீட்டி வானத்தைக்காட்டினார் அக்கால் ஆகாயத்திற் பேரி வாங்காடங்கா மேளம் முரசு சங்கம் இவை முதலிய சகல வாத்தியங்களுமொலிக்க கொடி, குடை சாமரம், ஆலவட்டம் இவை முதலிய விருதுகள்சொலிக்க ஆனை சேனை பரிவாரங்கள் ஆர்ப்பரிக்க இன்னுமளவற்ற வைபவங்கள் கணக்கிட்டுச்சொல்லிமுடியாததாகி, கங்கைக் கரை யெங்கும் பொங்கி வழியும் பெருவெள்ளம்போல் வந்திறங்கினார்கள்.

அஃதெவ்வாறெனில்? ஆகாயமளாவிய கோபுரத் தேரின்பேரில் ஆரகேயூர மணிகுண்டலக் கிரீட புஜகீர்த்தியுடன் முத்துமாலைகளிலங்க வெற்றிமாலை துலங்க சந்தனமகாராஜனுக்குங் கங்காதேவிக்கும் பிறந்தால் கொடிபடைத்த வீஷ்மாச்சாரியரும் தேவக்கொடி படைத்த வில்லாசிரியராகிய துரோணரும் நந்தியாவர்த்தமாலையணிந்து நாகக்கொடி படைத்துவணங்காமுடிபெற்று நவரத்தினமாலை தரித்து சந்தனபுட்ப சவ்வாதுபூசி பெரிதாகிய ரதத்தின்பேரிலேறிக் கொண்டு சர்வமேள சமேளதாள விருதுடாலுடன் ராஜாதிராசனாகிய துரியோதன ராசனும் தொண்ணூற்றென்பது தம்பிமார்களும் பதினாயிரம் புத்திரவர்க்கமும் பல கோடி போர்ப்பெருக்கமும் அங்கதேசாதிபனாகிய கர்னமகாராசனும் குளிர்ந்த சந்திரன்போல் முகமும் அலர்ந்த தாமரைபோற் கரமும் வச்சிரமாலைபோல் மார்பும் உச்சிதத் தூண்போற் றோளும் வீரகண்டையும் மின்னல்மேனியும் வீரகோதண்ட அபிமன்னராஜனும் இராவான் கடோற்கஜன் இளம்பாண்டவர்கள் அஞ்சனவாமன் சகுனி மாமன் சிகண்டி திஷ்டதுய்மன் உத்தமோசன் உதார்மன் பாஞ்சாலன் உத்தரகுமாரன் சுயோதன் விராடன் சதானீகன் சல்லியன் சிந்துதேசாதிபன் சயிந்தவன் சோமதத்தன் சோழன் பாண்டியன் சேரன் காசிபதி ஆகிய இவர்களும் இவர்களுக்குரிய பெரியோர்களிலும் பந்துமித்திர புத்திரர்களிலு மின்னார் வந்தார், இன்னாற் வரவில்லையென்று சொல்லாமற்படிக்கி எல்லோருந் தங்கள் தங்கள் நால்வகைப்படையுடன் வந்து நிறைந்தார்கள். வந்தவர்கள் அந்தக் கும்பிலிருக்கின்ற பகைவரை நோக்கி ஆ! ஆ! சண்டையுண்டா? கொண்டா கொண்டா போடடா செண்டா என்று பொங்கிப் போர்செய்யப் புறப்பட்டார்கள். அவர்களை வேதவியாசரட்க்கி உருவகங்காட்டினார். இயாவரும் அற்புதமோங்கி ஆனந்தித்தார்கள்.

கேட்டீரோ ஜெனமேஜெய மகாராஜனே அருந்ததிக்கு நாயகனாகிய வசிஷ்ட மகாரிஷியின் பேரன் வேதவியாசராகையால் இறந்தபேர்களை யெல்லாம் அழைப்பித்துக் காட்டும்படிக்கான சத்தியிசைந்தது. இந்தச் சமர்த்து ஆருக்குண்டாகும் அப்போது திரிதராட்டிரனுதியர் மகாவானந்த பரவசத்தாராகிக் களித்து இது அனுதியான பிர்மகுலத்தின் மகத்துவமோ அல்லது நமது குலத்

தோர்களின் தவமோ என்று சிந்தித்து ஒன்றாகிய பரப்பிர்ம சொரூபமே இவர் உலகத்திற் செத்துப் போனவர்கள் பிழைப்பதே அருமையா யிருக்க யுத்தகளத்திலிருந்து மறந்து எரிந்து சாம்பராய்ப் பறந்து போனவர்கள் திரும்பச் சிறந்து வருவது அறவுங்கெடாத ஆச்சரியம் ஞானநிறைந்த சுகப்பிரம்மத்தைப் பிள்ளையாகப்பெற்று வேதங்களைச் சிக்கறுத்து வெளிப்படுத்திய இந்த மெய்யனைத் துணையாகமாற்றி நாமெல்லோருங் கறையேறலாம் என்று அவரைச் சிந்தித்து தொழுது ஓ தேவதேவனே மிருகண்டர் பிள்ளையாகிய மார்க்கண்டேயருக்கு என்றும் பதினாறுவயதுகொடுத்த ஈசன்பிரதாபத்தை கேட்டறிந்தோம் பதினெட்டுநாள் யுத்தத்தில் மடிந்த பாரத வீரரைப் படைத்து காட்டிய உமது பராக்கிரமத்தையும் என்னவென்று சொல்லுவோம் இதுவரையிலுந் தவஞ்செய்த மகாரிஷிகள் எவரேனு மிப்பேர்ப்பட்ட விந்தையை எளிதிற் செய்திருக்கின்றார்களா இனிமேலுஞ் செய்ய மாட்டுவார்களா இல்லை இல்லை முற்காலத்தில் அகஸ்தியர் சமுத்திரத்தைப் பருகினாரென்றும் பகீரதன் தவம் பண்ணிக் கொணர்ந்த கங்கையைச் சன்னுமகாமுனி பருகினாரென்றும் பெருமையாகப் பேசிக் கொள்ளுவார்கள். அவற்றிலுமிது அருமையான காரியம்என்று ஆனந்தப்பட்டு அந்தோ ஈதென்ன ஆச்சரியம் இவர்கள் யாவரும் முன்னிருந்த க்ஷாத்திரங்களெல்லா முடித்து இப்போது அன்னியோன்னியமா யிருக்கின்றார்களே இவ்வேதவியாசமூர்த்தி இவர்களை யெல்லாமிப்படியே நிலைக்கச்செய்து அஸ்தினாபுரத்தைப் பேர்பாதியாய் ஆளும்படிக்குத் திட்டம் பண்ணி வைத்து விடுவாரா அப்படிக் கானால்நாம் புருடனைபிள்ளைகளை தந்தையை தமயனை தம்பியை மாமனை மச்சானை பாட்டனைசிற்றப்பனை பெரியப்பனை சேர்ந்தாரை சிநேகிதர்களை உற்றாரை உறவின் முறை யாரைப் பார்க்கலாமே பரியலாமே கலந்திருக்கலாமே என்று யாவருங் கவலைகொண்டார்கள்.

அப்போது விதவைகளெல்லா மங்கிலியம் பெறலாமென்று மகிழ்ந்தார்கள் குந்திதேவி பெற்ற கன்னனென்றும் பாண்டவர்க்கு அண்ணனென்றுந் தெரிந்தபிற்பாடு கலகமேயிராது நூற்றைந்து பேரும் அண்ணனாகிய கன்னனை அடிபணிந்து வாழ்வார்கள் உலகஞ் செவ்வைபடுங் காலமாகும் என்று ஒருவருக்கொருவர் கும்மாளமிட்டோடி கொண்டானடித்து சரீரம் மறந்து பரமானந்த வசனங்களைப்பாடி யாடினார்கள். பிராமண ரிஷிகள் பிரமித்துப் போனார்கள். அந்தந்த அரசர்கள் முதலிய பேர்களை அவரவர்கட்குரிய பெரிய மனுஷர்கள் அருமையாய்ப் பார்த்து ஆவலோடிருந்தார்கள். இவ்வாறு வித்தியாதரர்கள் வீணைகானம்பாட விண்ணவர் மாதர்கள் பரதநாட்டியமாட தேவர்கள் பூமாரிபோட தேவேந்திரனாதியர் திப்பிரமைகூட நிறைந்திருக்கின்ற நிருபர் முதலிய பேர்களை வியாசர்காட்டி ஓ திரிதராட்டிரனே நன்றாய்ப்பார் என்று கண்தெரியப் பண்ணினார். அப்படியே திரிதராட்டிரனுங் காந்தாரியுங் குந்திதேவியும் பார்த்துத் திப்பிரமைகொண்டு தியங்கிய வேளையில் வீஷ்மாச்சாரியுந் துரோணாச்சாரியுந் தேர்விட்டிழிந்து வேதவியாசரைச்சேவித்துக்கொண்டார்கள். அவர்களையவராசீர்வதித்து அழைத்து வந்து ஆசனத்திலிருத்தினார். அவர்களைப் பார்த்த பெரிய அரசனும் பாண்டவர்களுங்காந்தாரி குந்திதேவி முதலாகிய பெண்களும் பந்திபந்தியாய் வந்து பணிந்தார்கள் அவர்களின் பாதங்களை யெடுத்துக் கண்களினும் உச்சியிலும் ஒத்திக்கொண்டார்கள். துரியோதனாதியர்கள் வந்து விழுந்து தொழுதெழுந்தார்கள். அவர்களைத் திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி இம்மூவருந் தங்களிருகரத்தாலு மணைந்து ஏங்கி சுப்பிரமணியரைக் கண்ட சோமசுந்தரமூர்த்தியும்பார்வதிதேவியாரும்போற் களித்து தங்களுக்குண்டாகிய புத்திரசோபத்தை விண்டார்கள் பாண்டவர்களுந் துரியோதனாதியர் முதலிய பேருந் தழுவி நாம் குலமுறை வழுவிப் பழிக்குடன்பட்டு நழுவிப்போய் விட்டோமென்று பரதவித்தார்கள். கன்னன் வியாசரையும் திரிதராட்டிரன் காந்தாரி குந்திதேவி இவர்களையும் வணங்கினான் அவனையவர்கள் உடலுடனுடல் ஒன்றுபடும்படியா யணைத்து உபசரித்தார்கள்.

அப்போது பாண்டவர்கள் தமையனை வணங்கி தங்களுக்குண்டாகிய தயாரசமெல்லாங்காட்டி மனக்குறைமாற்றினார்கள். அபி

மன்னன் வந்து திரிதராட்டிரன் முதலியபே
ரைக் கிரமமாகப் பணிந்து வணங்கினன்.
அவனை யாவரும் ஆசீர்வதித்துப்பிரியமாட்
டாமற் பிரிந்தார்கள். தருமராஜன் முதலிய
தந்தையரையும் வணங்கினன். அவரவர்கள
வனை இறுகத்தழுவி யணைத்து விந்தை விந்
தையாய்ச்சொல்லி யழுதார்கள். அர்ச்சுனன்
மாத்திரம் அவனை யணைத்துக்கொண்டு விட
மாட்டேனென்றும் நானுங்கூட போகிறே
னென்றும் யானுங்கூடி யிருக்கிறேனென்
றும் இப்படி யெத்தனையோ விதஞ் சொல்
லிக் கதறினன் பதறினன் இளைத்தான் களை
த்தான் அவன் பட்டபாட்டை இவ்விதமெ
ன்று சொல்ல வெளிதல்ல பின்பு அபிமன்
னன் திரௌபதி முதலியபேர்களைத் தொழு
தான் அவர்கள் அவனைக் கட்டிக்கொண்டு
புத்திரசோப முற்றதையெல்லாம் போக்கி
னர்கள். உத்தரைவந்து கால்மேல் வீழ்ந்
தழுது பரிச்சித்தென்னும் புத்திரனைக் காட்
டினள். அவனை அபிமன்னன்மெத்தப்புகழ்
ந்து சித்தங்களித்து நீ சித்தசனை வென்ற
வித்தகனற்சித்திபெறுவையென்று வாழ்த்தி
னன் இளம்பஞ்சபாண்டவர்களிறைஞ்சினர்
கள் எல்லோருமெடுத்து உச்சிமோந்து இச்
சை தீர்த்தார்கள். இராவான் தொழுதான்
அதுகண்டு உலூகி யழுதாள் அவளை யவன்
பார்த்து அம்மா ஏனழுகிறாய் வந்தவேலை
தீர்ந்தால் இந்த லோகத்தில் என்ன வேலை?
உனக்கிந்தவூர் சொந்தமென் றெண்ணினை
யோ வென்று வேதாந்தம் பேசி விடுத்தான்.
கடோற்கஜன் அஞ்சனவர்மன் இவ்விருவ
ரும் ஏற்றிப்போற்றித் தெண்டனிட்டார்கள்
அவர்களை யாவரும் வரிசைக்கிரமமாய் வாழ்
த்தியெடுத்தார்கள். இராஜர்கள் முதலியபேர்
களும் பணிந்தார்கள். அவர்களை வியாசர்
முதலிய பேர்கள் புகழ்ந்து மகிழ்ந்தார்கள்.
திரௌபதியானவள் பாஞ்சாலன் திருஷ்டத்
துய்மன் முதலாகிய பேர்களைக் கண்டு எந்
தெந்தவிதமாய்த் துக்கப்பட வேண்டுமோ?
அந்தந்தவிதமா யழுதுபுலம்பி அணைத்துத்
தினைத்து ஆதரித்து உபசரித்து அன்புபா
ராட்டினள் உத்தரை விராடனையுஞ் சுவேத
ன்முதலிய தமயர்களையும்பணிந்தாள் அவர்
களவளை யாசீர்வதித்து ஆதரணை சொன்ன
ர்கள் காந்தாரியானவள் சகுனி முதலாகிய
பேர்களைக்கண்டு கண்கலங்கிமனந்தேறினள்
சிந்துபதியையுங் கண்டு சிந்தைநைந்து
சிந்தை தெளிந்தாள் அப்போது துற்சளை
துயர்கூர்ந்து துணைபிரிந்த மான்போல் து
வண்டு நின்றாள் இன்னுமுள்ள பேர்கள் எ
ல்லோரும் இங்ஙனமிருந்த வியாசர் முத
லிய பெரியோர்களையும் உரியோர்களையும்
அஷ்டாங்கசாஷ்டாங்கநமஸ்காரம்பண்ணி
ஆசீர்வாதம் பெற்று அன்புகூர்ந்தார்கள்.

இத்தன்மை நடந்த செய்கைகளில்இற
ந்து வந்தவர்க ளியாவரும் தேவாம்ஸம்
உடையவர்களாயும்இங்கிருந்தபேர்கள்யாவ
ரு மானிடவாக்கை தாங்கினவர்களாயு மிரு
ந்தபோதிலும் நல்லோரைக் கண்ட தீயோ
ருக்கு நன்மை கிடைக்குமென்னுஞ் சொற்
குச்சோர்வில்லாமல் அவர்களைப் பார்த்த இ
வர்களுக்கும் ஆசாபாச அக்கியானங்க ளில்
லாமல் உபாயமாய்ப் போய்விட்டன. இப்
பா லங்ஙனம் வியாச ருத்தரவின்படிக்கு
அனேக கூடாரங்கள் வீதி வீதியாய் அடித்
தார்கள் அவைகளில் வந்தவர்களெல்லாம்
போயிறங்கி அவரவர்கள் ஸ்திரீகளுடன்சக
லாபரண பூஷண மாங்கிலிய மங்களகரமாய்
மஞ்சள்குங்கும புஷ்பாதிகள்பூண்டு அஷ்ட
லட்சுமி கடாட்சமுண்டாய்க் கலந்துவாழ்ந்
தார்கள் மற்றையர் ஒருவரையொருவர் தொ
ழுது பிரியமாட்டாமலழுது மனந்தேற்று
கிறபேர்களும், விசனமாற்றுகிற பேர்களும்
தாங்கள் தாங்கள் தாங்கள் பட்டபாட்டைப்
பேசுகிறபேர்களும் சந்தோஷப் படுகிறபேர்
களும் ஆலிங்கனஞ் செய்கிறபேர்களும்
க்ஷேமலாபம் விசாரிக்கிற பேர்களும்தெய்வ
லோக சவுக்கியங்களைச் செப்புகிறபேர்களும்
வீரசுவற்கத்தின் மேன்மையை விசாரிக்கிற
பேர்களும் அதனை யெடுத்து விளம்புகிற
பேர்களும் சந்தனம்சாந்து சவ்வாதுபுனுகு
இவைகள் பூசுகிறபேர்களும் பூமாலைபொன்
மாலைகள் புனைகின்றபேர்களும் சம்பிரமச்சா
ப்பாட்டு கச்சாய வர்க்கங்களோடு புசிக்கிற
பேர்களும் தம்பூர் வீணை தாளம்மேளம்கின்
னரி அல்குசா வேணுநாதம் முரளிநாதம்
நாகசுரம் இவைகளை வசிக்கச் செய்து விரு
ம்பியிருக்கிறபேர்களும் நடனநாட்டியங்களி
ற் விசுவாசிக்கிற பேர்களும் சாஸ்திர விசார
ணை பண்ணுகிறபேர்களும் இப்படி பலபல
விதங்களாய்ப் பகற்காலமு மிராக்காலமும்
போக்கி வெகுநாள் பிரிந்திருந்த வேஷ்டை
நீக்கி மறுநாட்காலையில் ஸ்நான சந்திமுடி

த்து ஒருவருக்கொருவர் விக்ஞானம் விள ம்பி நீவிர்வேறு யாம்வேறென்று நிகழ்த்தி அங்கிருந்து வந்தோர் யாவரும் இங்கிருந் தோர் யாவரையுந் தொழுது வியாச ரனு க்கிரகப்படிக்கு எல்லோரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு மேலுலகம் போனார்கள் ஸ்திரீ செனங்களெல்லா மனது தரியாமல் ஆகாசத்தைப்பார்த்து புருடனுடனேகூட வானலோகத்திற்குச் செல்ல வாஞ்சை யுற்ற வர்களாய் வியாசருடைய பாதத்தில் விழு ந்து ஓ சர்வலோக சரண்ணியனே ஓ சமஸ் த வேதாகம புராண சாஸ்திராதிகளையெல் லாஞ் சாற்றிய தலைவனே ஓ சுகப்பிரம்ம ரிஷியின் றந்தையே இயாங்களினி தனித் திருக்கமாட்டோமென்று தளர்ந்து அழு தார்கள் அப்படியே நீங்களியாவருங் கங்கா நதியிற் பூதசரீரத்தைப் போக்கித் திவ்விய தேகம்பெற்று உங்கள் பதியிருக்கின்ற பதி போய்ச் சேருங்களென்று பக்குவப்படுத்தி னார் அப்படியே யவர்கள் யாவருங் கங்கையி லிறங்கி தங்கள்தங்கள் கணவனை நினைத்து, கங்கையைப் பூசித்து அங்ஙனந் தங்களாவி யை யகன்றார்கள் உடனே தேவலோகம் பெற்றுத் தங்கள்நாயகருடன் நலமுற்றிருந் தார்கள்.

---

## பாண்டவர் அஸ்தினபுரம் வந்துசேருதல்.

இப்பாலிவையனைத்தையுந் திரிதராட் டிரனும் பாண்டவர்கள் முதலியபேரும் பார் த்து மிகுந்த சந்தோஷமடைந்து இங்கிரு ந்து சங்கடப்படாமல் ஸ்திரீகளடைந்த சவுக்கியத்தை யெண்ணி வியாசபகவானை யுன்னி வாழ்த்தி மதித்துத் தோத்திரம்பண் ணினார்கள் அந்தவேளையிற் குந்திதேவி வியாசரைப் பணிந்து தயாநிதி விதவையா யிருந்த பெண்களெல்லாஞ்சுமங்கலிகளாய்ப் போய்ப் புருடருடன் கலந்துபோனார்கள் நான் மாத்திரம் பாவியானேன் தேவரீர் கிரு பையுண்டானால் எனக்கும் மேன்மையுண் டாமென்று சொல்லி விசனமடைந்தாள் அ வள் கருத்தையறிந்த வாதராயணன் சைகை காட்டி இஃதுனக்குக் காலமல்ல சற்றேபொ று என்று நிறுத்திப்போட்டு திரிதராட்டி ரன் காந்தாரிதேவி பாண்டவர்கள் சஞ்சயன் பாஞ்சாலி சுபத்திரை உத்தரை ரிஷிபத்தினி கள் மகாரிஷிகள் முதலானவர்களையுங் கங்கைக்கரையிற்றானே நிறுத்தி வசித்திருக் கச் செய்தனர் இப்படிக்குச் சிலநாளிருந்த பின்பு ஒருநாள் திரிதராட்டிரன் வியாசரை வணங்கி ஓ கண்தெரியாதவெனக்குக் கண் தெரிவித்த கருணைக்கடலே நான் கடைத் தேறுங் காலமெதுவோ வென்று கசிந்து கேட்டுக்கொண்டான் வேதவியாச ரவனுக் காசீர்வதித்து இன்னுஞ் சிலநாள் தவஞ் செய்வையாகிற் சீக்கிரத்திற் கதிகிடைக்கு மென்று செப்பி யாவரையு மாசிரமத்திற் கனுப்பினார் அவ்வாறே இராசனுங் காந்தா ரி குந்திதேவி முதலியபேரு மாசிரமத்திற்கு வந்து நவமாற்றினார்கள் வியாசர் பாண்ட வர்களை யழைத்து நீங்களேன் இங்கு காத் துக்கொண்டிருக்கின்றீர்கள் நாட்டுக்குப் போய் துரைத்தனம் பண்ணுங்கள் உங்கள் தந்தை தாய்மார்களுக்கு இன்னுஞ் சிலநா ளிருக்கிறது அந்நாட்கள் தீர்ந்தபிற்பாடு மேற்கதி புகுவார்கள் அப்போது நீங்கள் வந்து ஒத்துக்கொள்ளலாமென்று அனுக் கிரகம் பண்ணிப்போட்டு யாவரும் வந்தனை செய்ய அவர்களுக்கு மங்களாசனம் புரிந்து உடனே மறைந்து நமதாச்சிரமத்தி லுறை ந்து சிறந்தனர் இப்பால் தருமராசனும் தம்பிமார்களும் ராசஸ்திரி கூட்டங்களும் மற்றுமுள்ள பரிசனங்களுங் கங்கைக்கரை யைவிட்டு திரிதராட்டிரனுறையுந் தவஞ்செய் கின்ற ஆசிரமத்தில் வந்து உளுக்கார்ந்தார் கள் அவர்களைத் திரிதராட்டிரன் பார்த்து நீங்கள் செலவுபெற்றுக்கொண்டு பட்டினம் போங்கள் நீங்கள் வந்து ஒருமாதத்திற்கு மேலாச்சுது அரசாட்சி யெப்படி யிருக்கிற தோ தெரியாது நீங்கள் ராச்சியத்தைப் பிரி யாது நலமாக்கவேண்டும் ஆதலா லுங்கள் தருமபத்தினிமார்களுடன் அஸ்தினபுரம் போய்ச்சேருங்களென்று சொல்லினான்.

இவ்வாறு பெரியதந்தை சொற்றதைத் தருமராசன் கேட்டுச் சஞ்சலமுடையவராகி ஐயா! நாட்டின்பேரிலு மற்றப் பாட்டின் பேரிலும்எனக்கிஷ்டமில்லை அரசுபுரிவதற்கு இளையவர்களில் ஆரையாகிலும் ஒருவனை யனுப்பிவிட்டு நான் தங்களிடத்தில் நீங் காம லிருந்து நிரந்தரமாய் ஊழியம்புரி

ந்து உங்கள் பாதத்தை நம்பி நற்கதி பெறலாமென்று நினைத்திருக்கின்றேன் என்னிட்டப்படியே செலவு கொடுத்தருள வேண்டும் ஓ தீனபந்துவே என்று வேண்டினார் அதற்குத் திரிதராட்டிரன் அப்பா! நீ சொன்ன வார்த்தை என் காதிற் கிதவா யிருக்கவில்லை என் சொல்லைத் தள்ளாதே என்று சொல்லியவரைத் தனது மார்புடனணைத்து நீங்களிருக்கிறவரைக்கும் எங்களுக்குத் தவத்திற் சிந்தைகலக்காது உங்களுக் கிப்போது இராச்சியம் செலுத்திப் பெறவேண்டிய பலனுக்குமிஞ்சி வேறொன்றுமில்லை ஆகையால் இப்போதே நீங்க ளஸ்தினபுரஞ் சென்று நீதி செலுத்தவேண்டும் இல்லாவிட்டாற் சந்திரவம்சம் தளரும் குருவம்சமென்னும் பெயருங்குன்றும் அதனால் எங்கட்குமீங்கட்குஞ் சுவர்க்கமுதலிய பதவி தூரமாகும் நீங்கள்போய் வாருங்கள் என்று புகலவுந் தருமராசன் பிதாவசனந் தள்ளாமற் பாக்கியமென்று கொண்டு காந்தாரியிடத்தில் வந்து கண்கலங்கி தாயே உங்களைவிட்டுப் போகாமலிருந்து ஊழியம்பண்ணிக் கடைத்தேறலாமென்று நினைத்தேன் ஐயா வவர்கள் அரசாட்சி செய்வதற்கு அனுப்பி வைக்கின்றார். அவர் சொல்லையுந் தள்ளக்கூடாது தேவரீருடைய எண்ணமெப்படியோ அப்படிக்குக் கட்டளையிட்டருளுமென்று பணிந்தார். அப்போது காந்தாரியம்மன் அப்பெரிய பிள்ளையை யெடுத்தணைத்து விழிநீர் துடைத்து அப்பனே ஒப்பில்லாத சத்திய விரத சீலனே உன்னாலே யெங்களுக்குப் பிறவியில்லாமற் போகும்படியாகிப் பெருந்தவ மிருக்கின்றோம் நாங்க ளனுபவிக்கப்போகிற கதிக்கு நீயே அதிபதியாய் யிருக்கின்றாய் உங்களைப் பிள்ளையாகப் படைத்த எங்களுக்குப் பேரும் பிழைகளெல்லாம் நீங்கிப் பேரறிவோங்கிப் புண்ணியபலனைத் தேடவும் நீங்கள் வந்துபார்த்து நேசித்துப் பூசிக்கவும் இறந்துபோன பேர்களையெல்லாம் எதிரிற் காணவும் இறைவனுக்குமெனக்குங் கண்கள் தெரியவும் பெற்றோம் உங்களால் எங்களுக்கொருகுறைவுமில்லைஎங்களாலுங்களுக்கெத்தனையோ துக்கமுண்டு அவைகளையெல்லாம் மறந்து எங்களை யாதரிக்கச் சிறந்த உங்கள் அன்பு ஒன்றே போதும் நீங்கள் இவ்விடத்திலுறைந்து ஊழியப் பணிவிடை செய்ய வேண்டுமென்கிற சிந்தை வேண்டியதில்லை உங்கள் பெரிய தந்தையுரைத்த பேச்சைக் கேட்டு ராச்சிய பரிபாலஞ் செய்வது நன்மையாம் நாங்களும் நல்ல பதவியைப்பெறுவோம் ஓ நந்தனனே உன்னுடைய மனதில் யாதுஞ் சிந்தியாது தம்பியரோடுந் தருமபத்தினிகளோடுஞ் செல்லுக என்று சிந்தை கனிந்துரைத்தனள்.

இவ்வாறு கூறிய காந்தாரி தேவியைத் தருமநந்தனர் தொழுது குந்திதேவியை நமஸ்கரித்தழுதார். அந்த அம்மாள் சிந்தை கலங்காமல் மற்ற மைந்தர்களையு மணைத்துத் தேற்றி நீங்கள் ஐந்தறிவினைப்போல் அமர்ந்து வாழ்வீர் உங்கள் நிமித்தம் வியாசபகவான் இங்குவந்து எங்கள் கோரிக்கையை ஈடேறச்செய்தார் உங்களுக்கும் அவருடைய கடாட்ச முண்டாம் எங்களுக்கும் அவரால் மோட்சமுண்டாம் நாட்டிலிருந்து அரசுபுரிவதும் காட்டிலிருந்து தவசுபுரிவதும் ஒன்றுதான் இவ்விரண்டுக்கும் பலனுண்டு ஆதலால் நீங்கள் நாட்டை யாளப்போவது நலமென்றுரைத்தாள் இப்படியாகத்தந்தைதாய் மூவரும் ஒரே மனதாய்ச் சொல்லிய உத்தரவைக்கேட்ட தருமநந்தனர் அம்மூவரையுந் தொழுது போற்றி விடைபெற்றுக் கொண்டனா அப்போது திரிதராட்டிரன் அவரைப் பார்த்து குழந்தாய் நமது வீஷ்மர்விளம்பிய இராஜதரும மேன்பாட்டின்படி மேதினிபுரந்து கீர்த்திபெறக் கடவையென்று ஆசீர்வதித்தனுப்பினான் தம்பிமார்களும் நமஸ்கரித்து மங்களாசனம்பெற்றுவந்தார்கள் பாஞ்சாலி சுபத்திரை இவர் முதலாகிய பெண்களும் வணங்கிப் பக்குவப்பட்டமனதையுடையவர்களாய் விடைபெற்றுக்கொண்டுவந்தார்கள் அப்பாற் பாண்டவர்கள் சகல பரிசனங்களோடுஞ் சஞ்சயன் முதலாகியபேர்களிடத்திலுஞ்சொல்லிக்கொண்டு வெளிப்பட்டுத் தவப்பெருமைவாய்ந்த மகாரிஷிகள் ரிஷிபத்தினிகள் இவர்களைப் பூசித்து விசுவாசித்து தானதருமங்க ளெல்லாங்கொடுத்து சர்வேஸ்வரனாகிய கடவுளைத் தியானித்து சகலவித சந்தோஷங்களையும் அடுத்து தந்தை தாயாரைப் பிரிகின்றோமென்கிற ஆற்றாமையாலுண்டாகிய துன்பத்தையுந் தடுத்து சங்கீத இங்கித மங்கள சரச சல்லாபவைபவத்துடனே அஸ்தினபுரம் வந்துசேர்ந்தார்கள்.

திரிதராஷ்டிரன் புத்திரசோபந் தீர்ந்தசருக்கம் முற்றிற்று.

நான்காவது

# திரிதராஷ்டிரன் முத்தியடைந்த சருக்கம்.

## கண்ணன் துதி.

புரையாற்றி யாவையினு நிலையுற்ற பாதநம புகழுற்ற தோளுமுடல் புளகித்து ணேயமொரு
கரையற்ற மாதவர்க டமைகைத்த லாமலக கனியொக்க நாடியிரு களியுற் பாதநம
வுரையுற்ற தாயுமறை யுணவிற் படாததென் வொழிவற்ற சோதிவர வழியிட்ட வீரநம
திரையற்ற வார்கலிய தெனவைத்த பாதநம திரிவிக்ர மாயநம திரிவிக்ர மாயநம.

ஓ ஜெனமே ஜெய மகாராஜனே இவ்வாறு பஞ்சபூதம் போன்ற பாண்டவர்கள் ஐந்துபேரும் அஸ்தினுபுரத்திற்குப்போகையிற் பட்டினத்தி லுண்டாகிய சனங்களெல்லாம் யதிர்கொண்டுவந்து பணிந்து மிகுந்த உபசாரத்துடன் சர்வமேள சகிதமாய்புடை சூழ்ந்தனர் நாட்டியப்பெண்கள் நட்டுமுட்டுக்காரர்பட்டுவான்கள் கட்டியர் வித்துவான்கள் பிராமணுள் சாஸ்திரிகள் சோமயாசிகள் தீக்ஷதாள் இவர் முதலிய பேருங்கூடி ஜெயங்கூறி யழைத்து வந்து இராஜ கொலுமண்டபம்புகுந்து சிங்காசனத்தில் எழுந்தருளச் செய்தார்கள் அப்போது தருமநந்தனர்சபையிற்சேர்ந்த மகாசனங்களுக்கெல்லாந் தவஞ்செய்கிற தந்தையிடத்திற்போய் வந்த விந்தையையும் அவ்விடத்திற் ருனே யிருந்துவிடவேண்டுமென் றெண்ணிய தன் சிந்தையையும் பேசினுர் அவர்க ளியாவரு மவரை மிகுந்த பட்சமாய் ஆசீர்வதித்து ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மகா மகிழ்ச்சி கொண்டாடி வாழ்விற்சிறந்து சகல சம்பிரமத்துடன் மகிழ்ந்திருந்தார்கள்.

---

### பாண்டவர்கள் நாரதமுனிவரால் திரிதராட்டிரனுதியர் செயல்கேட்டுப் பிரலாபித்தல்.

இப்படி சிலநாட்போக ஒருநாள் நாரதமகாமுனிவர் வந்தார் அவருக்குப் பாண்டவர்கள் ஆசமன்யாதி உபசாரப் பூசைகள் எல்லாம் நடத்தி வாழ்த்தித் தொழுதார்கள் அந்த மகானுபாவர். அவர்களை யாசீர்வதித்து ஓ பாண்டு புத்திரர்களே நீங்கள் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணி எண்ணிய கருமங்களை யெளிதில் முடித்து வந்ததால் உங்களைப் பார்க்கவேண்டுமென்கிற பட்சமுடைத்தாய் வந்தேனென்ருர் அப்படியே மகாபாக்கியமென்று தருமராஜன் வணங்கி சுவாமி நாங்கள் வனத்திற்குப்போய் தந்தை தாய்மார்களைப் பணிந்து விதுர தரிசனங்கொண்டு வேதவியாசர் காட்டிய விந்தைகளெல்லாங்கண்டு ஒருமாதம்வரையிலும் இருந்துவந்தோமென்று விளம்பினுர் அதை நாரதர்கேட்டுச்சந்தோஷமடைந்து இறந்தவர்களாகிய எல்லோரையும் பார்த்தீர்களா இங்கிருந்த ஸ்திரீகளும் இன்பமுடைய பதவிபெற்றுர்களா? என்று எல்லாம் வல்லமையுமுள்ள நாரதர் நவின்று மேலுஞ் சொல்லுகிருர் ஓ தருமநந்தனரே நான் கங்காஸ்நானம்பண்ணி வரும்போது உங்கள் தந்தை தாய் தவம்புரிகின்ற சாலையிற்போய் அவர்களின் றன்மையையுணர்ந்து அதை யுங்கட்குச் சொல்லிப்போகவும் வந்தேனென்ருர். அச்சொல்லைக்கேட்ட தருமநந்தனர் ஆனந்தப்பட்டு சுவாமி எங்களையாவு மெங்கள் தாய்மாருஞ் சுகமா யிருக்கின்ருர்களா தவநெறி நிறைவெறி வருகின்றதா? பெரியவர்களின் சாவகாசக்கூட்டங்க ளுண்டாயிருக்கின்றதா? சஞ்சயன் முதலியபேர்களும் ஏவலாளிகளும் வேலைசெய்துகொண் டிருக்கின்ருர்களா? என்றுகேட்க அதற்கு நாரதர் நவிலுகின்ருர்.

கேளுந் தருமநந்தனரே! நீங்களியாவரும் போய்ப்பார்த்துவந்தபிற்பாடுபிராமணர்

பேச்சைக் கேட்டு முன்னிருந்து தவம்பண்
ணிய காட்டைவிட்டு ஓர்மேட்டுப்பாங்காகிய
ஒரு காட்டில் மூங்கில் மிகுத்துப் புதருகளா
யோங்கித்தழைத்து அக்கினிமயமாயிருக்கிற
வனத்திலிருந்து அப்பாலோர் வெள்ளிடை
யான விடந்திற் சரகுபட்சணம் பண்ணிக்
கொண்டு சிறிதுகாலந் தள்ளிவந்தார்கள் பி
ன்பு அச்சரகைத்தள்ளி தண்ணீர்மாத்திரு
கள் சிறிதுநாள் சென்றபிற்பாடு தண்ணீரை
யும் நீக்கி உபவாசமிருந்து தவம்புரிந்தார்க
ளிப்படியிருக்கையில் மைப்படியுங் கண்டத்த
ராகிய மகேஸ்வரனுடைய அனுக்கிரகத்தி
னற் காட்டாக்கினி பற்றிக்கொண்டு நாலுபக்க
முஞ்சொரிந்து புலிங்கர்சாலப்பொறிகள்மலி
ந்துபுகைகளெழும்பிசிடசிடப்புடனே ஆகா
யமும் பூமியுந் தெரியாமற் பொரிந்து கங்கா
நதியுங் கரிந்து, கடலொலிபோ லிரைந்து
மலைகளெல்லாம் வெடித்து இடித்துக்காய்ந்
து மண்ணுடன் மண்ணாய்த் தீய்ந்துஎல்லா
மொன்றுபட நிறைந்து வானமும்மறைந்து
தானந்தெரியாமற்கறுத்து ஒழுத்ததன்மையா
லகப்பட்டுக்கொண்டுவிருத்தனாகிய திரிதராட்
டிரனும் காந்தாரியும் குந்திதேவியும் சஞ்சய
னும்வெந்துபோனார்கள். அப்போதவர்கள்
சிந்தையில் அக்கினித் தேவனைத் தியானித்
து வேதவியாசரைச் சிந்தித்து, விஷ்ணுவா
கிய ஆதிமூலப்பொருளை வேண்டி, கயிலாச
பதியைக் கருதி, கருமசரீரத்தைக் கழற்றிக்
கியான மேன்மையுடன் நிட்டைகூடியிரு
ந்து நற்கதி பெற்றார்கள். பொற்பிரதி மெய்
போன்ற அப்புண்ணிய வாளர்கள் இரும்
புண்ட நீர்போற்றிரும்பாத திவ்வியபதவி
சேர்ந்தார்கள்.

என்று வீணைமுனிவரர் விளம்பக்கேட்
டமாத்திரத்தில் அஸ்தினபுரத்தை யாண்ட
வர்களாகிய பாண்டவர்கள் மெய் சோர்ந்து
கைசோர்ந்து, மனஞ் சோர்ந்து, பூமியில்
விழுந்து, பொருமி, விம்மி, ககனத்தளவு
மூயர்ந்த மலையருவியானது கால் கொண்
டோடுவதுபோற் கண்ணீர் விட்டழுது கத
றிக்கதறி ஐயோ எங்களையாவே? ஓ எங்கள்
பெரிய அன்னையே! ஓஎங்களருமைத்தாயே!
சகல சுப சந்தோஷ சம்பிரமங்களிருக்கத்
தனிவனத்திற் றகனமானீர்களே! சந்திரவம்
சத்திற் பிறந்து ஏக சக்கிராதிபத்யம் புரி
ந்து வெள்ளைக்குடை நீழலில்லிருந்து விள
ங்கிய ஐம்பத்தாறு தேசத்தையும் விடுத்து
காடே கதியாய்க்கிடந்திறக்கக் கிடைத்ததோ
அக்கினிதேவனுக்கு எங்களிடத்தில் அன்
பில்லாமற் போச்சுதோ! எத்தனைவித சகா
யஞ் செய்தும் அத்தனையும் எண்ணிப் பாரா
மல் என்னமா யெரித்தாயோ! அக்கினிபற்றி
எரிக்கும்போது திருகொருவரு மில்லையே
என்று தேம்பித் தியங்கினீர்களோ? ஓ எங்
களைப்பெற்ற தந்தையினுஞ் சிறந்துகாத்த
பெரிய தந்தையே? உத்தமியான பெற்றதாயு
டனும் பெரிய தாயுடனும் பத்திமேற் கொ
ண்டு செய்த தவம் பழுதாச்சுதோ? நாடிருந்
தும், நகரமிருந்தும், வீடிருந்தும், விநோ
தங்களிருந்தும், தேவர்களிருந்தும், யானைக
ளிருந்தும், குதிரைகளிருந்தும், பதாதிக
ளிருந்தும், அஸ்திரசஸ்திரங்கள் முதலிய
படைகளிருந்தும், ஒக்கவிருந்தும்,மக்களிரு
ந்தும், இனமிருந்தும், கனமிருந்தும், ஞா
ன மனமிருந்தும், போதுமான மானமிருந்
தும் யாருமற்றவர்கள் போலானீர்களோ?
தேகம்நழுவிப்போகிறயிடம் இன்னதென்று
தெரியாதென்பதாய்ப் பெரியோர்கள் பேசிய
நீதி சரியாச்சுதோ! ஊழ்வினையின் கதிவாய்
ச்சுதோ! அவரவர் செய்தவினை அவரவ
ரனுபவிப்ப ரென்கிற ஆட்சிக்குச் சாட்சி
யானீரோ?

ஓ எங்களுக்குச் சுபங்கொடுத்ததோன்ற
லே! நாங்களிருந்தும் உங்களுக்கு நன்மை
செய்யாமற் போனோமே எங்களரசாட்சியின்
சம்பிரமத்தைத் தேவரீர்கள் இருந்து பார்க்
கப் பாக்கியம் பண்ணாத பாவியானோமே.
நீங்கள் உண்பன தின்பனவற்றை யொழித்
திருக்க நாங்கள் சம்பிரமமாய்ச் சாப்பிட்டி
ருந்தோமே உலகேசனும் உத்தமிமார்களும்
வந்தார்களென்று, அமரர்களும், அமர்நாத
னும், அரம்பையர்களும், ஆதரணைவுடன்
ஆசைகொண்டு எதிர்கண்டழைத்துப்போய்
இந்திரபதவியி லிருத்தினார்களோ! சந்திர
பதவியிற் பொருத்தினார்களோ! நானிருக்கி
றேனென்று நாடிச் சொன்னபோது அரசு
புரியும்படிக்கு அறிவுறுத்தி அனுப்பிவிட்
டீர்களே! அந்தோ அந்தோ? எங்களிடத்
தை கட்டப்படுத்திவிட்டது என்ன காரணத்
தாற் சொல்லுங்க ளெந்தையர்களே? இனி
நாங்களெப்படி இந்தப் பூமியிலிருப்போம்?
நாயகன்கதி நமக்காகுமென்று பொற்பட்டம்
பூட்டிக் கண்களை மறைத்துக்கொண்டபுனித

வதியாகிய பெரியம்மா? தேவரீரை அக்கினி தேவன் எப்படி கிட்டி யெரித்தார்? ஈதென்க்கு விந்தையாயிருக்கிறது. உலோக நிந்தையா யிருக்கிறது. நீங்க ளெரியும்போதும், வெள்ளரிப் பழம்போல் விரியும்போது, சிறியேனைக் குறித்து என்ன நினைத்தீர்களோ? ஓ தெய்வமே! ஓ வினையே! எனக்கு உள்ள நாளுள்ளமட்டும் விசனமேபட வைத்திர்களே.

ஓ அம்மா குந்திதேவியாரே! உன்மைந்தன் அர்ச்சுனன் காண்டாவனத்தை அக்கினிதேவனுக்கு அமுது செய்யக் கொடுத்திருக்கின்ற கருணையை நினைத்து, அர்ச்சுனனுக்குத் தாயாச்சுதேயென்று பட்சம்வைத்து நன்றி குன்றமல் நடக்கவில்லையே? எங்கணிமித்தத்தி லெத்தனை பாடுபட்டாய்? தாயே? இப்போது எப்படி மறந்து விட்டாயோ? ஓ குந்திபோஜ குலக்கொடியே! எங்களை வளர்க்க பார்க்க கார்க்க இன்னொருதரம் வாராயோ? ஓ பதிவிரதா பங்கமில்லாத பாக்கியவதியே! தேவேந்திரன் வந்து தியாகியென்று கேட்கக் கவசகுண்டல மளித்தவன் கர்னமகாராஜன் அந்த உத்தமனைப் பெற்ற பத்தினி வந்தாளென்று அவ்வும்பர் நாதனெதிர்கொண்டழைத்து உபசரித்தானோ? இல்லையோ! பாண்டு பூபதியைப் பார்த்தையோ! பார்க்கவில்லையோ! என்று பற்பலவாறுகப் புலம்பிப் பரதவித்திருக்கும்போது, யுந்துமித்திராள்முதலிய பேர்களுங்கவிந்து அந்தப்புர ஸ்திரீகளும் ஒருவரோடொருவர் அலறி, மோதிவிழுந்து முட்டிக்கொண்டு ஆண்மகனுக்குக் கொடுத்து வையாத விதவையான நாங்கள் மாமன் மாமியார் முதலிய பேர்களுக்குங் கொடுத்து வைக்காத மகாபாவியானேமென்று மயங்கித் தியங்கினார்கள். ஊரனைத்தும் புரண்டதுபோலும், உகாந்தகால இரைச்சல்போலு மிருக்கிற ரோதனத்தைக்கண்டு, அஸ்தினபுரத்துள்ள இயாவரும் பயந்து போனார்கள்.

நாரதர் பாண்டவர்களைத் பதற்றி இறந்தோர்க்கு ஈமவிதியாதி முடிப்பித்தல்.

அந்த வேளையில் நாரதரெழுந்து, தருமராஜனை யணைத்து எடுத்து சோபந்தீர்ந்து, பனிநீர்வீசிக் களையாற்றி, ஓ பரதகுலத்திற் பிறந்த பாக்கியவானே! நீ உலகத்தியற்கையறியாத ஒருவன்போல் வருத்தப்படுகிறாய். அப்படியே அழுது புலம்பினாலும், யாத்திரை சென்று தேடினாலும், இறந்தவர்கள் வருவாரோ! துறந்தவர்கள் சிறந்த செல்வத்தைத் தேடுவார்களோ! மறந்துமவர்கள் பிறவி வேதனையில் மயங்குவார்களோ! கறந்தபால் முலைக்கேறுமோ? கலங்கி விசனப்பட்டாலும் விலங்கினவர் விலங்கினவர்களே இதற்கென்னசெய்யலாம் இனி எட்டுத்திக்குங் கீர்த்தியிட்ட பட்டாபிஷேக துரந்தரனாகிய நீ உன்னுடைய தம்பிமார்களுடனும் தருமபத்தினி முதலாகிய மாதர்களுடனுங் கங்கைக்குச்சென்று, ஈமவிதி முதலாகிய கருமக்கிரியைகளை நடாத்தி ஸ்நானம் பண்ணி, சோடச மகாதானமுங் கொடுத்து, சூதக விவாரணம்பண்ணிக்கொள்ளுகவென்றார். அதுகேட்டு தருமராஜன் முதலியபேர்கள்தேறி, பிராமணக் கூட்டங்களுடன் பாகீரதிக் கரைக்குப் போய் ஸ்நானம் பண்ணி, அன்றுமுதல் பன்னிரண்டுநாளு நித்திய கர்மவிதியும் நிமல வேத விதியும் ஆகமமுறைப்படி கிரமமாய் முடித்து, சிலையுகித்து பிண்டம் வகித்து, திலோதர்ப்பணம் விடுத்து, சோடசதானமுஞ் சொரிந்து, இறந்து போனவர்களுடைய அஸ்திகளை ஆராய்ந்தெடுத்துக் கங்கையில்விட்டு வரும்படிக்குச் சில தூதரையேவி, வந்தபந்துக்கள் சிந்தை மகிழச் சேர்ந்து அன்னதானம் நடாத்தி, இயாவரையும் பூசித்து வெகுமதி கொடுத்து தாங்களும் போஜனமுண்டு, கந்தபுட்ப தாம்பூல சந்தனாதிகளீந்து களித்தார்கள்.

அப்போது புறதேயங்களிலுள்ள இராஜராஜர்களும் ராஜபூஜிதர்களும் வந்து வினவிக்கொண்டார்கள். அவர்களுடன்தருமநந்தனர் கலந்து வார்த்தையாடிக் கொண்டிருந்து, பின்பு அஸ்தினபுரிவந்து சேர்ந்து, இராஜ மண்டபத்திற் கொலுவிருந்து நீதிச் செங்கோல் நடத்தினார். முன்னே நாரதர் சொன்ன வார்த்தையைக் கேட்டபடி சொல்லியனுப்ப தூதர்கள் அந்தப் பிரகாரம் போய்ப் பார்த்து, வன முதலியன வெந்து சாம்பலாய்க்கிடப்பனவு நோக்கி, இறந்தவர்களுடைய எலும்பை எடுத்து வந்து கங்கையில் விடுத்து மீண்டனர். உடனே பாண்டவர்கள் அப்பால் நடக்கவேண்டிய கருமக்

கிரியையெல்லாம் நடத்தி முடித்து, அந்தத் திரிதராட்டிர மகாராஜன் காந்தாரிதேவி குந்தியம்மன் சஞ்சயன் இவர்களிறந்து கிடந்த யிடத்திற் கோயில்கள், கோபுரங்கள், அக்கிராரங்கள், தவச்சாலைகள், விரதமாடங்கள், யோகஸ்தலங்கள், தடாகங்கள், சுமைதாங்கிகள், இப்படிக்கு அனேக விமரிசைகளுண்டாக்கி, உச்சவாதி முதலிய மகத்துவங்களேற்படுத்தி, அதிக இச்சையுடையவர்களாய் பட்சந்தோறும் பட்சம் வைத்து, பிரார்த்தனை தரிசனை முதலியது நடக்கும்படி பாதுகார்த்து வந்தார்கள். இப்பால் பேரானந்தப் பிரபலராகிய தருமராஜன் நீதியோடு ராஜரீகம் நிகழ்த்தினர்.

## திரிதராஷ்டிரன் முத்தியடைந்த சருக்கத்தோடு

## ஆசிரமவாச பர்வம்

### முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:





ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீ மஹா பாரதவசனம்.

## பதினாறாவது

# முசலபர்வம்.

—(*)—

### கண்ணன் துதி.

ஆராய வேதமுடி வானதை பாதநம வாசாபி சாசமற வேயானு பாதநம
சீராய வானவர்க டேவாதி தேவநம தேனுரு பாதமலர் சீராக வோதுதொறு
நீராய வாணவரை நேர்காணு பாதநம நீதான தாகுமென நேரோது மாசில்பொரு
ளாராய ணையபத மாநாட வோதிநம நாராய ணையநம நாராய ணையநம.

### சூதபுராணிகர் வாக்கியம்.

[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு அந்திய பஞ்சகத்தி னிரண்டாம் பாகமாகிய ஆசிரமவாச பர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்தெழுந்து, சுவாமி! தருமராஜன் சகலவைபவத்தோடு மஸ்வமேதயாகம் நிறைவேற்றி அஸ்தினபுரத்தி லரசாட்சி செய்துவரும் நாளையில் ஒருநாள் திரிதராட்டிரன்கொலுக்கூடத்திற்கு வந்து பாண்டவர் முதலிய பலருங் கேட்கும்படி தான் துறவாச்சிரமத்திற்கொண்டிருக்கும் கருத்தை வெளிப்படுத்தி விடைகேட்க, அதற்குத் தருமநந்தனர்ஒருவாற்றானுமொவ்வாது இருவர்க்குஞ் சமவாதம் நேர்ந்து திரிதராட்டிரன் மூர்ச்சையாக அக்கால் வியாசர் வந்து தந்தை கருத்துக் கிணங்குகவென்று தருமனைத்தேற்ற, அதனாற்றேரிய தருமநந்தனருக்குத் திரிதராஷ்டிரன் இராஜநீதிக ளுபதேசித்துக் குருக்ஷேத்திரத்தி லிறந்துபோன துரியோதனாதியர்கட்குச் சிரார்த்த கருமாதிகளுந் தருமதானாதிகளும் நடத்திக் காந்தாரியோடு தவக்கோலங்கொண்டு வெளிப்பட, அவர்களோடு விதுரராஜனுங்குந்திதேவியுந் துரியோதனாதியர் பத்தினிகளுஞ் சஞ்சயனுந் துறவெய்திக்கூடும்போது குந்திதேவி தன்னைக்கண்டு வருந்திய பாண்டவர்கட் கறிவுறுத்தித் தேற்றிச்செல்ல, இவ்வாறுயாவரும்

வனநோக்கிச் சென்று சதயூப முனிவருடைய ஆச்சிரமத்தருகிலிருந்து தவநிலை சேர்ந்து நாரதமுனிவரால் இனித் தமக்குக் கைகூடும் பதவியின் திறமுணர்ந் திருக்குங்காலையில் தருமராஜன் திரிதராஷ்டிரனைச்சென்று கண்டு ஒருவர்க்கொருவர் க்ஷேமாதிகளைவிசாரித்து விதுரராஜனுடைய முத்திநிலையைத் தரிசித்து அங்ஙனமிருக்கும்போது வேதவியாசர்வர, அவரைத் திரிதராட்டிரனுதிய மூவரும் வணங்கித் தங்கள் மனக்குறைகூற, அதற்கவரமர்க்களத்திறந்த யாவரையும் வரவழைத்து அவர்களோடுங் குலாவச்செய்ய, அப்படியேயவர்களோர்பகலுமிரவும், பரிந்துகுலாவி மறைந்தபின் தருமன் அஸ்தினபுரம் வந்துசேர, அப்பாலப் பெரியதந்தையாகிய மூவரும் வனத்திற் கடுந்தவம்புரிந்துகனலுக்கிரையானார்களென்று நாரதமுனிவராற் கேட்ட ? அத் தருமனாகிய ராங்குசென்று ஈமவிதிக்கடனாதிகளாற்றிவந்து அஸ்தினபுரத்தி லரசுசெலுத்தியவரையிலுள்ள சரித்திரங்களனைத்துஞ் சாங்கோபாங்கமாய்க் கேட்டுச் சதுர்வித புருஷார்த்தமுஞ் சன்மசாபல்யமு மடைந்தேன். இப்பால் மூன்றும்பாகமாகிய முசலபர்வத்தையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனமுனிவர் சொல்லத்தொடங்கினர்.]

---

## முதலாவது,

## பலராமகிருஷ்ணன் பரமபதமடைந்த சருக்கம்.

—:o:—

### துதி.

அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவர் குறைவிற ரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே.

ஓ குலகுலசிகாமணியாகிய ஜெனமேஜெய மகாராஜனே! திரிதராட்டிர மகாராஜன் காந்தாரியம்மன் குந்திதேவி விதுரமகாராஜன்சஞ்சயன் துரியோதனாதியர்-பத்தினிமார்- இவர்கள்யாவருந் திரம்பரச்சுகமாகிய பரமபதஞ் சேர்ந்தபின்பு தருமராஜ னவ்வவர்கட்குரிய கருமக் கிரியைகளெல்லா முடித்துவிட்டவராம் யதாப்பிரகாரம் அஸ்தினபுரத்திலிருந்து அரசாட்சி செய்துகொண்டுவந்தார். அப்போது தருமராஜனுக்குப்பட்டங்கட்டிப் பதினெட்டு வருஷங்களாயின. அப்பாற் பதினெட்டு வருஷம் வரையிலும் அரசுபுரிந்து வருகிற்றாளையில் ஸ்ரீகிருஷ்ணபகவானவர் துவாரகையில் தந்தையாகிய வசுதேவர் தேவகிமுதலிய தாய்மார்கள்பலராமர் முதலிய சகோதரரான் அவ்வவர்களின்மனைவியர்- அளவிறந்த பிள்ளைகள் - யாதவகூட்டத்தார்- அனேகராசர்கள் இவர்கள் யாவருந் தம்மைப்பிரியாது மருவியிருக்கும்படி அஷ்டலட்சுமிகளோடும் அளவற்ற கோபிகாஸ்திரீகளோடு நித்தியவைபவ லீலாவினோதராய் முத்தராகிய முனிவர்களெல்லாம் முறைமுறையாய்வந்து வணங்க வாழ்வுற்றிருக்கின்றார்.

### இருடியர்களால் யாதவகுலஞ் சாபமேற்றல்.

இப்படி யிருக்குங்காலையி லொருநாள் கிருஷ்ண பகவானைக்கண்டு தரிசனம்பண்ண வேண்டிக் கண்ணுவர்-ஜமதக்கினி - நாரதர்- ஆகிய யிம்மூவருந் துவாரகை வீதியில் வருகின்றார்கள். அப்படிவரும்போது இயாதவகுமாரர்களிற் சிலர்சாம்பனென்பவனைக்கருப்பிணி வேடம்போட்டு, அம்மகாரிஷிகளுக்கெதிரிற்கொண்டுவந்து, சுவாமிகளே! இந்தப்பெண்பப்புருஷர்கன்யெண்சாதிஇப்போது கருப்பிணியா யிருக்கின்றாள் என்னபிள்ளையைப் பெறுவாள்? அதைத் திரிகாலக் ஞானிகளாகிய தேவரீர் சொல்லுங்களென்று

கேட்டார்கள். அவர்கள் கருத்தை மகாரிஷிகளுணர்ந்து, இந்தப் பசகள் நம்மை யேளனம்பண்ணுகிறார்களென்று கோபங்கொண்டு ஓ! யதுகுலகுமாரர்களே! இந்தக்கர்ப்பம் அற்பமல்ல, இப்படியே கட்டியாயிருந்து, ஒருவராலுஞ் சொல்லுதற் கரிதாகியும் வெல்லுதற் கரிதாகியு மிரா நின்ற முசலம் பிறக்கும். அந்த இருப்புலக்கையால் இந்த யாதவகுல முழுது நாசமடைந்து போம். அப்போது கிருஷ்ண சுவாமியும், பலராமரும், ஸ்திரீ சனங்களுந் தப்பிப்போவார்கள். பின்பு பலராமர் தனக்குத் தானே சரீரத்தை யொழித்து. ஓ வென்றிரையுஞ் சமுத்திரத்திற் கலந்துபோவார். கிருஷ்ணமூர்த்தி காட்டிற்சென்று பூசயனம் பொருந்திப்பொய்த்துயில் கொள்ளும்போது, ஒருவேடன் வில்லிற்பாணத்தைச் சந்தித்துவிடுவான், அதனால் அவர் தேகத்தைப்பரிகரித்துவைகுந்தஞ்சேருவார். இப்படிக்கெல்லாம் உங்கள் வம்சம் இறந்துபோகப் போகின்றது. என்று சபித்து அந்த ரிஷிகள் மாதவனைக் காணமல் வந்தவழியே திரும்பி வனம்போய் விட்டார்கள்.

---

உற்பாதங்கள் விளைதல்.

இவைகளையெல்லாம் வசுதேவர் கேள்விப்பட்டு, சகிக்கக்கூடாதசங்கடங்களைத்தாங்கினவராகி, ஊழ்வினை மாட்டிக்கொண்டது. இனிமேலொன்று முதலாவது ஆடுங்காலமும்ஓடுங்காலமும் அடங்கிப்போயின. இந்த மட்டு முன்னடந்த பெருமையைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய தாச்சு. என்பதாய்க் கருதிப் பிள்ளைகளையழைத்து, அடாபாமரர்களே! பெரியவர்களிடத்தில் அபராதமிழைத்துச் சாபங்களேற்றீர்களே ஐயோ! இதென்ன அனியாயம். என்றவர்களை வெறுத்துத்தன்மனதைத் தேற்றிக்கொண் டிருக்கையில் மறுநாள் சாம்பன் வயிறுநோய்ப்பட்டு,ஐயையோவென்று அழுதுபுரண்டு செத்தேன் எய்தேன் கெட்டேன் என்று தேம்பியழுது, பெரிய மந்தரம் போலும் மகமேருபோலும் இயமதருமராஜன் தண்டாயுதம் போலும் ஒரு இருப்புலக்கையைப் பெற்றான். அந்த உலக்கையைக்கண்ட யாதவர்முதலியயாவரும் உடல் நடுக்கங்கொண்டு, வசுதேவரிடத்திற்போய்ச் சொன்னார்கள். அவரும்பயந்து துக்கப்பட்டு,அதை அறங்கொண்டு உரங்கண்டமட்டும் அராவிப் பொடிகளாக்கி, சமுத்திரத்திற் கொட்டிப் போடும்படிக்குத் திட்டப்படுத்தினர். அவர்களப்படியேசெய்துமுடித்து மகரிஷிகள் சாபத்தைக் கடலிற் கரைத்துப்போட்டோமென்று பய மகன்றிருந்தார்கள். அன்றுமுதல்ஒருபுருஷன்கறுத்தரூபமமுஞ் சிவந்த கண்களுங் கையிற் தெண்டாயுதமும் பாசமுங்கொண்டு, இரவும்பகலும் துவாரகையைச் சுற்றிக்கொண்டு எல்லாரும் பார்க்கும் படியாய் உலாவித்திரிகிறான். இதல்லாமல் அற்புதமாகிய உற்பாதங்க ளனேகமுண்டாகின்றன. பூமிகுலுங்கியது, சமுத்திரம் அலையோங்கித் துவாரகையின்மேற் குவியது. இவைகளை யெல்லாம்கண்ட இயாதவாள் விசாவிட்டிருக்கிறது.

இவையன்றி கிளிப்பிள்ளை கோட்டான் போற் பேசவும், ஆடுகள் நரிபோ லூளையிடவும், நரிகள் ஆடுபோற் கனைக்கவும், மாடுகள் புலிபோற் கர்ச்சிக்கவும், புலிகள் மாடுகள்போற்கத்தவும், பசுக்கள் கழுதைகள்போற் கன்றுபோடவும், கழுதைகள் பசுவின்குட்டிபோடவும், பெருச்சாளி கீரிப்பிள்ளையைப் பெறவும், கீரிப்பிள்ளைகள் எலி-பெருச்சாளி-மூஞ்சூறு-இவைகளைப்பெறவும், நாய்கள் பூனைகளைத்தரவும், பூனை நாய்களைத்தரவும்,உயர்ந்தசாதியாரைத் தாழ்ந்த சாதியார் வையவும், ஒருவரையொருவர் மரியாதைக் குறைவு செய்யவும். ஸ்திரீகள் வரிசைக்கிரமந்தப்பி நடக்கவும், புருடர் வருணைச்சிரமங் கெடுக்கிடக்கவும், அக்கினிவேதை அதிகமாகவும், அந்தரமாரி கல்மாரியாய்ப் பொழியவும், சோற்றுப்பானை தெருவிலுருளவும், சாற்றுச்சட்டி சந்திலுடையவும், மனைகளிலும் வீடுகளிலும் பாம்பும் ஆமையுநுழைந்து, கரையான்புற்றுகட்டி, பருந்தடித்து மோதிவிழுந்து பயமாய்ப்போகவுங் கண்டார்கள். இவைகளை யெல்லாம் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யறிந்து, முன்னாலே குருக்ஷேத்திரத்திற் காந்தாரியாகிய பதிவிரதை சபித்தசாபத்தை நினைந்துமதித்து, முப்பத்தாறுவது வருடம் எங்கள் வங்கிஷத்தைப்போல் உங்கள்வங்கிஷம் நாசமாகக்கடவதென்று நவின்றிருக்கின்றன வல்லவா? அந்தப்படிக்கு நேரிட்டது. (முற்பகை செய்தாற் பிற்பகை விளையும்.) என்றுசொல்லு மேலோர் வாக்கியமென்ன பொய்யா? என்று வொருவாறு சஞ்சலங் கொண்டிருந்தனர்.

## கிருஷ்ணமூர்த்தி யாதவர் யாவற்றையும் ஓர் பூசையைமுன்னிட்டுக் கடற்கரைக் கழைத்துச் செல்லுதல்.

---

அப்படி யிருக்கின்ற நாளையிலொருநாள்கிருஷ்ணமூர்த்திசபை நிறைந்திருக்கின்ற சனங்களைப்பார்த்து, சமுத்திரக்கரையில்வருடந்தோறும் பூசைபோட்டுத் தேவதைகளை நோக்கி தியானித்து நைவேத்தியம்பண்ணி நாமுஞ்சாப்பிட்டு வருவோமே, அந்நநாளிந்தாள் நீங்கியாவரும் புறப்படுங்கள் என்று சொல்லவும் அவர்கள் பட்டணமெங்கும் பறையறைவிந்தனர். அதனாற் சகலருஞ் சந்தோஷத்துடன் பிரயாணசகிதமாகி,இனிமேல் விளையப்போகிற விந்தை தெரியாதவர்களாய்ச் சிந்தைகளித்துச் செழித்திருந்தார்கள். அன்றிராத்திரி கறுத்ததேகமும்-பெருத்த தலையும்-திறந்தவாயும்-கோரதந்தமும்-திரண்டுருண்டமூக்கும்-எரிந்து சிவந்தகண்களும்-பரந்துவிரித்த செம்பட்டமயிரும்-மடிந்து தொங்கிகாதுகளும்-பனைமரம்போன்ற கரங்களும்-பர்வதாகிர்த்தமாகியமார்பும்-மலையையொத்தமுலையும்-பருத்தவயிறும்-ஆகிய இவ்வகைத்தான உறுப்புக்களைக் கொண்ட விகிர்தாகிர்தியாகிய வேடங்கொண்டு ஒருத்திவந்து, எல்லோரும் பயப்படத்தக்கதாய் சொப்பனத்திற்றோன்றி, அவரவர்களை யிழுத்துப் போகவுமெடுத்துப் போடவுமாகி, ஆடையாபரணங்கள் வில்லம்புகள்-வாள்கள்-வேள்கள்-இவைகளை யிராக்கதர்வந்து கொள்ளையடிக்குங் கொடுமைபோலவுங்கண்டு, இயாவரும் பயந்தெழுந்து, இதென்ன விபரீதமென்று ஏங்கியிருந்தார்கள். அக்காலத்தில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினாயுதமாகிய சக்கரங்கோடி சூரியன் பிரகாசமா யெழும்பி ஆகாயத்திலுயர்ந்து ஒளியவும், அவருடையரதமும் குதிரைகளும்-கருடக்கொடியும்-வானத்தி லோடி மறையவும், அண்ணனாகிய பலராமருடைய தேரும்,அஸ்வமும்,தாலக்கொடியும்,மேலேறிச் செல்லவுமாயின. இவைகளை யாவருங் கண்டு, இது மகாவிந்தையென்று எண்ணிக்கொண்டிருக்கையிற் சகலசனங்களுஞ் சமுத்திரஸ்நானத்திற்குப் புறப்படுங்களென்று அசரீரி வாக்கியமுண்டாயிற்று. அதனாற் சர்வத்திர சனங்களும் அதிசயப்பட்டு மகிழ்ந்தார்கள்.

இப்படிக்கிருக்கிற வேளையில் கோபாலன் வேறுதேர் கொண்டுவரச்சொல்லி அதன்பேரி லேறிக்கொண்டு, சந்தோஷமுந் துக்கமுமுடையவராகி, அநேகம்யாதவகுமாரரும் அரசர்களுஞ் சூழ்ந்துவரும்படியாகப்பட்டணத்தைக் கடந்துபோனார். கலப்பையையுடைய பலபத்திரர் பாதசாரியாய் நடந்துவந்தார் பட்டணத்திலுண்டான வெகு சனங்களும்பஞ்சவாத்தியங்களுடன் கும்புகும்பாய்ப்புறப்பட்டு, சமுத்திரகோஷம் போற்சப்தித்துக்கொண்டு, அன்னபானாதிகளுடனு மதுமாம் சாதிகளுடனுஞ் சமுத்திரக்கரையைச்சார்ந்து,விஸ்தாரமாய் பந்தரிட்டிருந்தஇடத்தில் வந்திறங்கி, அவ்வவர்களும் ஸ்நானஞ்செய்து, மடியுடுத்தக்கொண்டு,நைவேத்தியமுதலிய வுங்கொடுத்து, வரிசைவரிசையாயுட்கார்ந்துபோசனங்களுடன் பஞ்சகச்சாயங்களும் புசித்து சகலருஞ் சரீரந்தெரியாமல் மறந்துசமுத்திரக்கரையிற்றானே தங்கியிருந்தார்கள். அப்படி யவர்களிருக்கையிற் பலராமரெழுந்து, காட்டுக்குப்போய் வருகிறேனென்று நடந்து விட்டார். அவர் போனகருத்தை ஸ்ரீகிருஷ்ணதேவர் பார்த்து, மேல் நடக்கப்போகின்ற விதிகளறிந்து, ஒருவருக்கு சொல்லாமற் போய்விட்டாரே யென்றுபொறுமலுட னிருந்தார். இப்பாற் காட்டுக்குப்போன பலராமர் வீட்டுக்கியான மில்லாதவராய் ஒருவிருட்சத்தடியிலிருந்து, பத்மாசனம் பண்ணி சமாதி நிலையிற் பிராணாயாமங் கருதி, தனது வெள்ளைமேனி பிரகாசிக்கத்தக்கதாய் தியானத்தி லழுந்தினார்.

---

## யாதவர்யாவரும் மதுவெறிகொண்டு பகைத்து முசலப்பொடிக் கோரையால்மாளுதல்.

இவ்விடத்திலிருந்த யாதவகுமாரர்களுக்கும்-யாதவராசர்களுக்கும்-மெள்ளமெள்ள மதுவெறியேற, யாவருக்குங் கோபமுங் குரோதமும்-மதமும்-மார்ச்சல்லியமும் பிரிந்து ஒவ்வொன்றிரைந்து, ஒருவரை யொருவர்மதியாம லெதிர்த்து,ஒருவரையொருவர்வறிதே வைது சண்டையிட வெளிப்பட்டனர், அப்போது சாத்தகிக்குக்கண்கள்சிவந்துகோபம் பிறந்து, கிர்தவன்மனுடைய முகத்தைப்பார்த்து, வாயில் வந்தபடி வைது, விசேட

வித்தியாசமாய்ப்பேசி, அடா பயலே! நீபா பியாகிய அஸ்வத்தாமனுடன் சேர்ந்து, பாதிராத்திரியிற் பாசறையிற்புகுந்து, இராஜ குமாரரள் இளம்பஞ்சபாண்டவர்ள் முதலிய எல்லோரையும் போக்கிச் செய்யாத காரியங் களுஞ்செய்த தியனல்லவா! சாதிகுலங்கெட் டுந் தருமநீதியைவிட்டுத்தறிதலையான தடிய னல்லவா! என்று வைதான். அதற்குக் கிருதவன்மன் கோபித்து, அடா சாத்தகி! உன்பவிஷேன்ன? நீயும் பிராமணனை பூரி சிரவனும்போர்புரிந்து உன்னைக்கீழேதள்ளி இரண்டுகையையு மிதித்துக் கழுத்தையறுக் கக் குறுகியபோது, அர்ச்சுனன் ஒரு பாணத் தையேவிப் பூரிசிரவன் கையை வாளாயுதத் துடன் வெட்டினன். அவனவனைப் பார்த் துத் திட்டி வாளைநட்டு அதில்விழுந்து மடி யப் போகிறவனை நீ மடக்கி வெட்டினயே, அடா பாவி! நீயொருவீரனு? உன் யோக்கி யதைக்கு என்னை யேசவந்தாயே, அடா பே யே என்று பேசினன். அப்போது உருக்கு மணி குமாரன் சிறிய தந்தையான சாத்தகிக் குப் பரிந்து, கிர்தவன்மனைக் கிட்டித் திட்டி னன். இவைகளைக் கிருஷ்ணமூர்த்திகண்டு, தமது தம்பிக்கும் பிள்ளைக்குஞ் சைக்கினை பண்ணினர். உடனே யவர்கள் ஆயுதங்கள் கைக்கொண்டு யுத்தமாரம்பித்தார்கள். நெடு நேரம் போர்புரிந்து முடிவிலிருவரும்வாள் கொண்டுவெட்ட, சாத்தகிகையால் அக்கிர்த வன்ம னிறந்தான்.

அதைக்கண்ட அவனுடைய சகோத ரரள் பிள்ளைகள்-சேனைகள்-இவர் யாவருஞ் சேர்ந்து சாத்தகியோடெதிர்த்தார்கள். அப் போதுசாத்தகியுங் கிருஷ்ணன்பிள்ளைகளுங் கலந்துபோர்புரிந்தார்கள். இருதிறத்தாரும் ஆயுதங்களற்று நிராயுதராகி, கடற்கரையில் முளைத்திருந்த இருப்புலக்கைப் பொடிகளா கிய கோரைகளைப் பிடுங்கிக்கொண்டு, மகா ரிஷிகளிட்டசாபந்தப்பாமல், தமையன் தம்பி மக்கள்-மாமன் மச்சான் - அத்தான்-பின்ன வன் - முன்னவன் என்று சொல்லப்பட்ட உறவுமுறை பாராமல், கட்குடி வெறியேறி, ஒருவரையொருவ ரதட்டிப்பேசி வம்புசெய் து, ஒருவரையொருவ ரடித்துக்கொண்டுமடி ந்து போனார்கள். இவைகளைக் கண்டிருந்த் வண்டிருந்த துளவமாலையான் தூரநின்று வேடிக்கை பார்ப்பவராயினர். அந்தக் கோரைகளினுற் சாவாமலிறந்தவர்கள் யாரே னில்! தாரகன்-பப்புருவாகன் ஸ்ரீகிருஷ்ணன் இவர்கள் மூவர். இம்மூவரிருக்க மற்றப் பேர்கள் சாடவாயிறந்துபோனார்கள். அப் பால் கிருஷ்ணன்மற்றயிருவரோடும் பலராம ரண்டைக்குச்சென்று, அண்ணு! நம்மவர்கள் முழுமையும் இவ்விதமாய் மாண்டுபோனார் கள். என்று சொல்லித் தாரகனையழைத்து, நீ அஸ்தினுபுரம்போய் பாண்டவர்களுக்கு இச்சங்கதி தெரிவித்துப்போட்டு, அர்ச்சுன னைமாத்திரம் அழைத்துக்கொண்டு வாவென் றனுப்பினர். அப்படியே தாரகன் பயண மாய்ப்போயினன்.

---

### கண்ணன் வசுதேவருக்கு நடந்தது நடக்கவே ண்டுவனவுங்கூறிப் பலராமரிடஞ்சொல்ல, அவர் பரமபதமடைதல்.

இப்பாற் கண்ணனவர்பப்புருவாகனை யழைத்து, நீ கடற்கரையிலிருக்கின்ற இயா தவஸ்ரீகளையும், அஷ்டபாரியாள் முதலிய பேர்களையும், யானை-குதிரை-தேர்-காலாள்- இவை முதலிய வைகளையுஞ் சேகரித்துக் கொண்டுபோய் துவாரகைப் பட்டணத்தில் விட்டுவாவென்றனுப்பினர். அவனவ்வாறு சென்று எல்லோரையு மழைத்துக்கொண்டு வரும்போது, ஒருவேடன் அக்கடற்கரையிற் கிடந்தகோரையையெடுத்துகையிற்பிடித்துச் சுழற்றிக்கொண்டு வருபவன்சும்மாபோகிற பப்புருவாகனை யடித்தான். அந்த அடி அவன்மார்பிற் பட்டபோதே பப்புருவாகன் பதறிவிழுந் திறந்தான். இந்தச் செய்தியை மலைதாங்கியமாதவன்கேட்டுநகைத்து, தவம் பண்ணப்பட்ட சாதுக்களே மேலானவர்க ளென்று கருத்திலெண்ணி, அண்ணவாகிய பலராமர் முகத்தைநோக்கி, போஜவம்சத்தி லும் நமது குலத்திலுமுள்ள யாவருந் தப் பாமலிறந்துபோனார்கள். பப்புருவாகன் தப் பியிருந்தான். அவனையும் ஒருவேடனடித் துக் கொன்றுவிட்டான். ஏனடா அடித்தா யென்றுகேட்பதற்கிடமில்லை. ஈஸ்வரச்செய லிப்படியாச்சுது. ஸ்திரீசனங்களையு நால்வ கைச் சேனைகளையுந் துவாரகையிற் சேர்த்து வருகிறேன், என்றுரைத்து யாவரையுமழை த்துக்கொண்டு அச்சமுத்திரக்கரையை யடுத் திருக்கின்ற துவாரகாபுரிக்குட்புகுந்து, தாய் தந்தையர்களைப்பணிந்து, கண்ணீருருத்துக்

கனிந்து, தெய்வாராதனை செய்விப்பதற்குச் சேர்ந்ததும் கோரைகளினால் யாவருமாய்ந்ததும், தாரகன் அஸ்தினாபுரிக்குச் சார்ந்ததும் அர்ச்சுனன் இதோ வரப்போகின்றானென்பதுஞ் சொல்லி, இன்னு மேழுதினத்தில் இத்துவாரகை அழியப்போகின்றமையால் அவன் முன்னிலையில் இதைச்சேர்ந்த நாடுகளையும் நவநிதிகளையும் அன்னியராஜர்கள் கைப்பற்றிக் கொள்ளாமற் காத்துக் கொள்ளுங்கள்.

இஃதல்லாமலும் யானைசேனைபரிவாரங்களும் யாதவ ஸ்திரீகளுந் திக்காலொன்றாய் இறைந்துபோகாமற் போர்ச்சிங்கமாகியபுரந்தரன் மகனாற் போஷித்துக் கொள்ளுங்கள். இறந்தவர்களைக் குறித்து மறந்தவர்கள் சிறந்தவர்கள். அவர்கள்தான் ஆசாபாசந் துறந்தவர்கள். ஒருவருக்குந் துக்கம் வேண்டியதில்லை. துக்கப்படுவதினால் இறந்த ஆன்மா மறுபடி திரும்பிவரப்போகிறதில்லை. போனவர்போக மிகுந்திருப்பவர்கட்கெல்லாஞ் செவ்வையாகத் திடஞ்சொல்லிக்காருங்கள் நான் அண்ணாவாகிய பலராமரிடத்திற்குப் போகின்றேன். சந்தோஷமாகச்செலவுகொடுங்கள் என்று கண்ணன்கேட்டார். தந்தையானவசுதேவரும் தாய்மார்களும் மேகவண்ணன் விளம்பியதைக்கேட்டு, கண்களிலே தண்ணீர் பெருகக் கசிந்து, பலராமனும் நீயுந் தவம் பண்ணப்போனால் நீங்கள் போகிற கதியென்ன? இந்த நாட்டிலிருந்து பெருகிற சாம்பிராச்சியமென்ன? நீ தெரியாதவனல்லவே ஓ கிருஷ்ணா! உனக்குச் சம்மதமானபடிக்குச் செய்திடுக என்று சஞ்சலப்பட்டார்கள். அனாத யனந்த கல்யாண குணனாகிய ஆதிமூலங்கேட்டு, ஒருவர்முகமும்பாராமல் ஒருத்தருடனும் பேசாமல், தம்மோடழைத்து வந்த நால்வகைப் படைகளையும், நன்மை ஸ்திரீசனங்களையும், அத்துவாரகையிற்சேர்த்துவிட்டு, பலராமரிருக்கும் பாரியவனத்திற்குப் போய்விட்டார். இப்படி தம்பிவரக் கண்ட பலராமர் முகத்திலிருந்து ஆதிசேஷன் வெளிப்பட்டு, ஆயிரஞ் சிரசும் நாகரத்தினமணிப் பிரகாசமும் பர்வதாகாரமான மண்டலசரீரமும் பளபளப்பாகியதிருமேனியுமான தன்னுருவெடுத்து, பூமியிலிறங்கிப் போய்விட்டனன். இவையெல்லாங் கிருஷ்ணமூர்த்தி கண்டு பூர்வஜன்ம புண்ணியத்தையெண்ணிக்கொண்டிருக்கையில், ஆதிசேடனானவ னகர்ந்துகொண்டு சமுத்திரக் கரையை நாடிப்போகின்றான். அப்போது வருணராஜன் எதிர்கொண்டு அர்ச்சனைபண்ணி, நாகலோகத்திற்கு அழைத்துப்போய் விட்டான், அங்கேயுள்ள சகலத்திராளுமவ்வாதிசேடனுக்கு மரியாதைசெய்து தெண்டனிட்டு, வெகுநாள் பிரிந்துபோன வேஷ்டைதீரப்பேசி, பின்பு சிங்காசனத்திலேற்றி தெரிசித்துவந்தார்கள்.

---

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பரமபதமடைந்து தேவராதியர்க் கனுக்கிரகித்தல்

இப்பால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் இது சங்கதிகளெல்லாந் தெரிந்து, தம்முடைய சரீரத்தைவிட்டு வைகுண்டம் போவதற்கெண்ணி, பூர்வம் நமக்குத் தூருவாசர் உள்ளங்காலில் அம்புபட்டுருவி யிறந்துபோவாயென்று சொல்லியிருக்கின்றார் அந்தச் சாபத்தை அநுபவிக்கவேண்டிய காலஞ்சமீபித்தது. இனி நாமிவ்விடத்திலிருக்கக் காரியமில்லை. என்று அவ்விடம்விட்டுப் புறப்பட்டு அனேகங் காதவழி நடந்து, இருண்ட காட்டிற்சென்று, ஒரு மரத்தினீழலிலுட்கார்ந்து, இரேசகபூரகமார்க்கமாய் வாயுவையடக்கி நிலைபெற்றிருந்து நிலத்தின்மீது சாய்ந்து இருகாலையு நீட்டி, ஒருகரத்தைக்சிரத்தைத் தாங்கி, மற்றொரு கரத்தை இடையின்மேல் வைத்து, அரைக்கண் முழித்து, செந்தாமரைக் கமலம்போல் விளங்குகின்ற தமது பாதத்தின் பெருவிரலை யசைத்துக் கொண்டிருந்தார். அப்போது ஒருவேடன் வில்லிலே பாணத்தைப் பூட்டி, பட்சிகள் மிருகங்களகப்படாமற் காடெலாந் திரிந்து பசியினால் வருந்திக் கண் பஞ்சடைந்து கலங்கி வருகிறவன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய காற்பெருவிரலாடுவதைப்பார்த்து, இது புறாவென்றெண்ணிப் பிரயோகம் பண்ணினான். அந்தப் பாணம்போய் கிருஷ்ணமூர்த்தியின் பாதத்திற்பட்டுருவிப்போகவும், அதுகாரணமாகப்பரவாசுதேவனுடைய பிராணவாயுவானது சரீரத்தைவிட்டுப்போயது, இதைவேடனறிந்து ஓடிவந்து பார்த்து, மனிதனென்றறியாமல் வடிக்கணைவிட்டேனே என்றுமண்மேல்விழுந்து துக்கப்பட்டு, மார்பிலடித்துக் கொண்டுவிம்மிவிம்மி அழுதான். அதுகாலை

யில் ஆண்டவனுடைய திருமேனியிலிருந்து அனேகங்கோடி சூரியப்பிரகாசச் சோதியானதெழுந்து, தமது பதமாகிய வைகுண்டத்திற்குப் போயது.

இப்படி ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாய் விளங்கிய பகவானுடையதிருவிளையாட்டைக்கண்ட ரிஷீயீஸ்வரரள் - முனியீஸ்வரர்ள்: தேவர்கள் - தேவகணங்கள் - அஷ்டதிக்குப் பாலகர் - நவக்கிரகங்கள் - அஷ்டவசுக்கள்- இவர் யாவரும் நெருங்கி, ஆதிமூலமாய் விளங்கப்பட்ட தேவனுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு, ஓ தாமரைக்கண்ணா! ஓ மேகவண்ணா! ஓ முகுந்தா! ஓ கோவிந்தா! ஓ கருணாகரா! ஓ கிருபா நிதி! ஓ சமுத்திரவண்ணா! ஓ சுபுத்திரைக்கண்ணா! ஓ பஞ்சாயுதா! ஓ பஞ்சசதகோடி பூமியைப் படைத்தளித் தழிக்கும் பங்கசாட்சி மணாளா! ஓ பூமியையளந்த புருஷோத்தமனே! ஓ கஜேந்திரவரதா! ஓ குவல்யாபீடமென்னுங்குஞ்சரத்தைக்கொன்ற கோபாலா! ஓ கஞ்சனைச்சாடியகமலவதனா! ஓசிசுபாலனைச்செறுத்த தேவகிபாலா!ஓதிரௌபதி மானங்காத்த ஜனார்த்தனா! ஓ பாண்டவசகாயா! ஓ பாஞ்சசன்னிய வாயா! ஓவசுதேவசேயா! ஓவாசுதேவமாயா! ஓ அருச்சுனற்குப் பகவற்கீதைபடித்த பராபர வஸ்துவே! ஓ நான்குவேதமுங்காணாதநாதா! ஓநாவலர்யாவரும்புகழும்நவநீதா! ஓ உபநிடதத்தை யுரைத்தருளிய போதா! ஓ உலகம்யாவுங்கடந்தபாதா! ஓ உள்ளுணர்வுடையோருவக்குமதீதா! ஓ துளபந்தாரா! ஓ தாமோதரா! சுந்தரா! ஓ துரந்தரா! ஓ புரந்தரா! ஓ நிரந்தரா என்றுதோத்திரம்புகன்று, பாரிசாத புட்பங்களைப் பறித்து பெருமாரி வருஷிப்பதுபோல் வருஷித்து, வேதங்களினாற்று தித்து, மெய்புளகித்துக் களிந்தார் அப்போது ஜீவரத்தின முடி சொலித்துப் பிரகாசிக்கின்றபணாமகுடங்களை யுடைய பணியாசனத்தில்மகாலட்சுமியுடன்பதிந்து நித்தியசூரியர் பத்திசெலுத்த உத்தமர்முதலியோர் சுற்றிலுந் தொழுதேற்ற வீற்றிருந்த அஷ்டாட்சரப் பொருளானவர் அவர்களையெல்லாங்கிருபை கண்ணாற் பார்த்து, அவ்தமமைத்துத் திருவாய்மலர்ந்து தெரிவிக்கின்றார்.

ஓ எனதுண்மையுணந்த உத்தமர்களே! நாம் பூமியிற்பிறந்து, ஸ்ரீகிருஷ்ணனென்று பேர்சிறந்து, பொய் வாழ்க்கையிற் புகுந்து, பெருந்தலரைப்பொருது வென்றுபூபாரந்தீர்ந்துவந்த புனிதசரித்திரத்தை எழுதிவைத்துப்பூசித்தாலும், ஒருவருக்குப்புகன்றாலும், அவர்கள் இகத்தற் சகல யின்பமுமனுபவித்து, பரத்தில் நமது வைகுண்டபதமுமுண்டாகும்படி பெருவார்கள். இன்னும்இப்பூமியில் மனிதரானவர்கள் எனது சரித்திரத்தைப்பத்தியோடும் வினவுவார்களாயின், அவரவர்கட்குவேண்டிய பிரார்த்தனைகள் கைகூடிவரும்படியாய்க்கடாட்சிப்போம். கோரிக்கைகள் நிறைவேறும். வித்தையுண்டாம். வெற்றியுண்டாம்,சித்தியுண்டாம் புத்தியுண்டாம் பாயங்கள் தீரும். கோபங்களாறும். தருமந்தழைக்கும். தவங்களோங்கும். கொலை-களவுகள்-காமம்-பொய் என்னும் பஞ்சமாபாதகங்களும் புறம்போய் பிழைக்கும் ஜனனமரண வேதனைசாகும். தன்னந்தனியாகிய தீவினைவேகும். நமனுபத்திரவஞ் சத்திக்காமற்போகும் தருமமாக வெண்ணிய வெண்ணந் தளராமலுண்டாகும். சஞ்சலமேகும் மஞ்சுவான்செழியும் மழைமிகப்பொழியும். மனுக்களும் வாழ்வார். வேள்விகளோங்கும் வேந்தர்நீதியுந்தழைக்கும் மும்மூர்த்திகளும்பொருந்திமுத்திகொடுப்பார்கள் என்றுமுகுந்தன் கடாட்சித்து, இயாவர்களையும் அவரவர்கள் யதாஸ்தானத்திற்குப் போகும்படியாய் செலவுகொடுத்து, தான்யதாப்பிரகார நித்தியானந்த சுத்தபரிபூரணராய் சர்வமங்கள குணானந்த ஸ்வருபராய், சாஸ்வித மூத்திக்காதினபராய், ஆதிமத்தியாந்த ரசிதராய் சங்குசக்கிரகோதண்ட கதாகட்கதராய் தன்னேடொப்பாரு மிக்காருமில்லாதவராகி மாணிக்கமேடையின்மேல் வீற்றிருந்தருளினார்.

பலராம கிருஷ்ணாள் பரமபதமடைந்த சருக்கம் முற்றிற்று.

---

# இரண்டாவது,

## அருச்சுனன் துவாரகைபோய் மீண்ட சருக்கம்.

கண்ணன் துதி.

வாத வாதரறி யாத பாதநம மாகர் நாடரிய வேகபாதநம
வோது வாரரிய வேத நாலுமன மோர்வு ரூததென வோது பாதநம
சீத வாதவழல் சேரு மாதவர்கள் சேரு மாறுனடி தேரு மாறருளி
மாத வாவிலுழி வேலை யாளுநம மாத வாயநம மாத வாயநம.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சாரதியாகிய தாரகன் அஸ்தினு புரத்திற்குப்போய் தருமராஜன் முதலியபேர்களுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு ஒகுருகுலக்கோமான்களாகிய பாண்டு நந்தனரே துவாரகையிலுள்ள யாதவகுலாதியர்கள்வருஷாவருஷஞ்சமுத்திரக்கரைக்குப் போய் தேவதைகளுக்குப் பூஜையிடுகிறவழக்கப்பிரகாரஞ்சென்று நைவேத்தியம்பண்ணி, மதுமாம்ச பட்சணங்களை இச்சைதீரப்புசித்தார்கள் அந்தச்சமயத்தில் மதுவெறியேறி, சாத்தகியுங்கிர்த்தவன்மனும்வரைதப்பிப்பேசிக் கண்கள் செவந்து, ஒருவர்மீதொருவர் கோபித்தார்கள். அப்போது இவர் பட்சத்திற் சிலரும் அவர் பட்சத்திற் சிலருஞ்சேர்ந்து, ஆயுதபாணிக ளாயுத்தம் பண்ணினுர்கள். இருதிறவர்களுக்கும் அஸ்திர சஸ்திரங்கள் பயன்படாமற் பாழாய்ப்போயின அப்பால் வேறுசிலவாயுதந் தேடுகிறபோது சில நாளைக்குமுன்னே யாதவர் சாம்பனைக்கருப்பங்கொண்ட பெண்வேடம்போட்டு கிருஷ்ணமூர்த்தியைக் காணவந்த கண்ணுவர் ஜமதக்கினி நாரதர் இவர்கட் கெதிர்காட்டி இந்தப்பெண் பெறப்போகிறது பிள்ளையா பெண்ணு வென்று பரிகாசம் பண்ணினுர்கள். அந்த மகாரிஷிகள் வெறுத்துக் கோபித்து, இந்தக் கருப்பத்தில் மூசுலம்பிறக்கும் அதனுல் உங்கள் குலமிறக்கும் என்று சபித்துப் போய்விட்டார்கள் அதைக்கேட்ட வசுதேவருங்கிருஷ்ணரும் பலராமரும் விசனமடைந்திருக்குங்காலத்தில் சாம்பன் அதுவே கருப்பமாய் இருப்புலக்கையைப் பெற்றுன். அதைக்கண்ட யாவரும் விசனங்கொண்டு, அந்தஉழுலக்கையை ராவிக்கடலிற் கொட்டிப்போட்டார்கள். அவைகளெல்லாம் பின்புமுட்கோரைகளாய் முளைத்திருந்தன. அவைகளை பிடுங்கிக்கொண்டு ஒருவரையொருவரடித்து, சரீரங்கள்இரண்டிரண்டு துண்டாய் வீழ்ந்திறந்தார்கள். அச்சண்டையில் ஸ்ரீபலராமர்-ஸ்ரீகிருஷ்ணர்பப்புரவாகனன் நான் ஆகியநாங்கள் நால்வர் தப்பினேம். இதிற் பலராமரும் பரவாசுதேவரும் வனம்புகுந்தனர் பப்புருவாகன் சேனைகளையும் ஸ்திரீகளையுமழைத்துக்கொண்டு துவாரகையில் விட்டு வரப்போயிருக்கின்றுன் என்னை கிருஷ்ணமூர்த்தி இவ்விடத்திற் கனுப்பி அருச்சுன மகாராஜனையழைத்துக்கொண்டு வரச்சொன்னுரென்றுன்.

---

### அருச்சுனன் வசுதேவரைத்தேற்ற, அவர் கண்ணன் கூறினவற்றைச் சொல்லிக் கலங்குதல்.

இதைக்கேட்ட பாண்டவர்கள் கண்களிலே தாரைதாரையாய்ச் சலம்பெருக வழுது ஐயோ? குலப்பழுதுவந்ததா? என்றுதொழுதுபூமியில் விழுந்துபுரண்டு, அலறிக் கதறிப்பதறிமலைபோலொத்த தோள்களும் வாடியலர்மாலைகளும் வதங்கி, முகங்கருகி, பெருமூச்சு விடுத்து தங்களால் ஆற்றமாட்டாத மனத்தாப மடைந்தார்கள். இந்தச்செய்தி அந்தப் புரத்திலிருந்த அரிவையர் கேட்டு, சமுத்திரகோஷம்போற் சப்தித்தழுது பிரலாபித்தார்கள். அர்ச்சுனன் மாத்திரஞ் சிறிதுதேறி, தருமராஜன் முதலிய பேர்களின் சஞ்சலத்தை மாற்றி, ஸ்ரீ கிருஷ்ணசுவாமியார் சொல்லி யனுப்பிவைத்த வண்ணம் நான்போய் வருகின்றேன், தேவரீர் உத்தரந்

தாருமென்று தருமரைத் தொழுது கேட்டானப்படியே செய்யென அனுக்ரகம் பண்ணினருடனே கொடி குடை சிகரம்பிரகாசிக்கப்பட்ட தேர்மேலேறிக்கொண்டு, வாயுவேகம் பின்னிட மனோவேகம்போற் றேரைச் செலுத்திக்கொண்டுபோய் துவாரகாபுரி சேர்ந்து தேர்விட்டிறங்கி நடந்து, அமங்களக் குரலோசை யடர்ந்திருக்குந் தெருக்களையுந் தெற்றிகளையும் பார்த்துப்பார்த்து, கண்களை மூடிமூடித் திறந்து, முத்து முத்தாய் நீர் துளிக்கச் சித்தப்பிரமைகொண்டு, மகா விசனத்துடன் வசுதேவர் அரண்மனையைச் சார்ந்து, ஓ மாமா? மாமா? என்றரற்றினன் அப்போது சிவச்சவம்போற் கிடக்கிற வசுதேவரெழுந்து, அலறிப் பதறி கதறி யவனைக் கட்டிக்கொண்டு, தலையோடுதலை முட்டிக்கொண்டு, ஓவென்றிரைந்து அழுது, உருண்டு புரண்டு ஒரு மண்டபத்தில் வந்து உட்கார்ந்தார்கள். அப்போது வசுதேவர் அருச்சுனனைப் பார்த்து, அப்பா பற்குனா! பிள்ளைகள் முதலாகிய பேர்களிறந்து, என்னை மறந்து, தங்கள் தங்கள் போகசவுக்கியங்களைத் துறந்து வீரசொர்க்கத்திற் சிறந்து போனார்கள். என்று சொல்லி உடனே சோபித்துப் பூமியில் விழுந்து மூர்ச்சைபோனார். அப்போது ஸ்திரீகள் யாவரும் ஓவென்றிரைந்து ஒருவரையொருவர் கட்டிக்கொண்டழுதார்கள்.

அக்கால்அர்ச்சுனனும்பொருமியழுது மாமனாகிய வசுதேவரை வாரியெடுத்து, பனிநீர் தெளித்து, சாந்தாற்றி சாமரங்களால் உபசரித்து மூர்ச்சை தெளிவித்து, கண்ணீர் துடைத்து, ஓ மாமா! எல்லாந் தெரிந்த இறையாகிய நீர் அறிவு மயங்கி அவஸ்தைப்படலாமோ துக்கத்தை விர்த்திபண்ணி விசாரப்படலாகாது. துக்கமானது தைரியத்தைத் துலைத்துக்கலைத்துத் தூரத்திலோட்டிவைக்கும் சாத்திரப் பழக்கத்தினாற் சங்கடங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். ஓ மதியுடையீர்! ஓ திரமனதுடையீர்! ஒருபேரமகிழ்வுடையீர்! கிரதவன்மன், சாத்தகி, சாம்பன், அனுருத்திரன் இவர் முதலாகிய சூரகுல போஜகுல யதுகுல வம்சத்தர்களெல்லாரும் ஒருவர் பார்ப்பதற்கும், ஒருவர் பணிவதற்கும்வாக்கினாற்பேசுவதற்கும் வண்மை கூறிக்காட்டுவதற்கும் அருமையான பலங்களையுடையவீராள். அவர்களுக்குவினைவலி இப்படியாகக் கூடியிருந்தது. ஐயோ! இப்போதிறந்தவர்கள் பாரதப்போரிற் றப்பியிருந்தார்களே, அப்போதல்லவோ மடியவேண்டும். பெருந்தீயினின்று பிழைத்தவன் புலிங்கத்திலிறந்தானென்று பேர்வாய்ச்சுதே. ஓ மாமா இதைக் குறித்து விசனப்படுவதினாற் காரியசாதனமாமா. இனிச் சிந்தாகுலப் படவேண்டாம் தொந்தாவ தென்னை, திடங்கொண்டிரும். என்று தேற்றிய மருமகனை வசுதேவர் பார்த்து தேம்பியழுது, இதனைச் சொல்லுகின்றார். ஓ தேவேந்திரப்பட்டம் பெற்ற ஜெயவிஜய தீரனே இவர்களியாவருமரித்துப்போனது பூர்வவினையென்று புகன்றனை. அது என்மனதிற்குச் சரிப்படவில்லை. அதென்னத்தினா லென்றால், என்னிளைய குமாரன் ஸ்ரீகிருஷ்ணனினைப்பானாகில், யாதொரு சண்டையு மில்லை. சச்சரவு மில்லை, பிரமன் கட்டளையுமில்லை. ஊழ்வினை யென்பதுமில்லை. மற்றொன்று மில்லை. இப்போதெண்ணினாலும் இறந்தவர்கள் பிழைப்பார்கள். அவர்கள் பிழைக்கவேண்டு மென்கிற இஷ்டமில்லாமல் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டான். பிள்ளைகளென்கிற வாஞ்சையை எள்ளத்தனையு மெண்ணாமற்போனான். அவனெண்ண மென்னமோ எவரிட்டசாபமோ ஒன்றும்நான் அறியேன்.

அப்பா பற்குனா! முன்னாலே அஸ்வத்தாமன்விட்ட பாணத்தாற் றீய்ந்து மாய்ந்து கருகருத்துக் கரய்ந்து சுட்டெரித்த கட்டைபோற்பிறந்த அபிமன்னுவின் பிள்ளையாகிய பரிச்சித்தென்னும் உன் பேரப்பிள்ளையை எழுப்பிக் கொடுக்கவில்லையா சமுத்திரத்தில் வீழ்ந்து மடிந்துபோன பிராமணவாத்தியார் பிள்ளையை வரவழைத்துத் தரவில்லையா மதுபான மயக்கத்தினால் தோற்றுமல் இறந்த இந்தப்பிள்ளைகளை யெழுப்பித்தரப்போகாதா இவனுக்கு இது அருமையா? இந்தக்குலம் இப்படிக்கானது பெருமையா? தீவினைக்கு பேட்சை செய்தானேயொழிய நல்வினைக்குபேட்சை நாடாமற்போனான். எட்டாவது பேறாய்ப்பிறந்து நட்டப்படுத்தி என் குலத்தைக் குட்டிச் சுவராக்கினான். அவனுடைய எண்ணமே இப்படி யாக்கிவிட்டது. என்று பிரலாபிக்கின்ற வசுதேவருக்கு அர்ச்சுனன் சொல்லுகின்றான் ஓ மாமா! பாரதயுத்தம் பதினெட்டுநாளுந் தீர்ந்து இரணகளம்பார்க்கவந்த எங்கள் பெரியதாயார் கிருஷ்ணமூர்

த்தினையக்கண்டு, அப்பா கிருஷ்ணா! எங்கள்
வம்ஸத்தை இப்படியாக்கினையே; இப்படி
யே உங்கள் வம்சமும் ஒழியக் கடவதென்று
அழியாச் சாபங்கள் கொடுத்தாள். இதல்லா
மலும் உங்களுடைய கொழுத்த பிள்ளைகள்
காலத்திற்கு தகுந்த புத்தியாய் கண்ணுவர்
முதலிய முனிவரைக்கண்டு, கருப்பமென்று
பரியாசம் பண்ணி அவாளுடைய சாபமும்
பெற்றார்கள், இப்படிக்குப் பலவேரிய படி
யால் இதனை என்னாலும் உம்மாலுங் கிருஷ்
ணமூர்த்தியாலு நட்டப்படாமல் நிறுத்தலா
மென்று நம்புகிறீரா? ஒருபோதும் நம்ப
வேண்டாம். வினை மூண்டுவிட்டது. ஒரு
வரை நோவதினாற் காரியமில்லை. விதியை
வெறுக்கவேண்டுமல்லது வேறொன்றில்லை,
என்று கூறிய அர்ச்சுனனை வசுதேவர் பார்
த்து, அப்பா விஜயா சமுத்திரக்கரையில் எல்
லோரு மிறந்தபிற்பாடு கிருஷ்ணன் வந்து,
எல்லாச் செய்தியுஞ் சொல்லி எங்களுக்குந்
தைரியம்பேசி, நாங்கள் சுகமாயிருப்பதற்கு
வயணங்கூறி, உன்னைக்கொண்டு எல்லாச்
சவரட்சணையு நடத்திக்கொள்ளும் படிக்குக்
கட்டளையிட்டு, பலராமனிடத்திற் போகிற
தாய்ச் சொல்லிப் போனான். துவாரகையையு
மின்னுமேழு நாளையிற் சமுத்திரங் கொண்டு
போகுமாம். இதைவிட்டு வேறிடஞ் சம்பா
தித்துக் கொள்ளவேண்டுமாம். இதெல்லாம்
அருச்சுனனாலே யாகுமென்று உன்னைக் கை
காட்டிவிட்டான். என்று வசுதேவர் வாய்
விட்டலறி விளம்பினார்.

---

## அருச்சுனன் துவாரகையிலுள்ள சனங் களை யெல்லாம் இந்திரப்பிரஸ்தம் வந்து சேரும்படி மூரசறைவித்தல்.

இச்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் அ
ருச்சுனன் கண்கலங்கி, ஆ தெய்வமே! என்
னுயிர்குயிராகிய உத்தமனை யொழித்து எத்
தனை நாளைக்கு இத்தலத்தி லிருப்பேன்.
ஐயோ அவரையன்றி இனியென்னால்யாதா
கும். என்று இவேசித்து, மீட்டுந்தேறி வசு
தேவரைப் பார்த்து, மாமா! கிருஷ்ணபக
வான் உத்தரவின்படிக்கு நான் உங்களுக்குத்
துணையாயிருந்து, சகலகாரியங்களுந்தாட்சி
யில்லாமல் நடத்தி வைக்கிறேன். நீங்கள்
சீக்கிரம் பிரயாணப்படுங்கள், இந்திரப்பிரஸ்
தம் போவோம் ஏனென்றால், தாரகனால் யா
வுங்கேட்டு நான் பிரயாணமானபோது எங்க
ளண்ணாவாகிய தருமனந்தனர் சொல்லிய
தென்னவென்றால்? கிருஷ்ணசுவாமியின்
சொற்படிக்கு நடந்துகொண்டு அவருடைய
தாய்தந்தை முதலிய இயாவர்களையும் அழை
த்துவந்து இந்திரப் பிரஸ்தஞ்சேரென்று
ஆக்கியாபித்திருக்கின்றார். ஆதலா லந்தப்
பிரகாரம் நடத்துவதற்குச் சித்தமா யிருக்கி
றேன். நீங்கள் ஆலசியம் பண்ணாமற் புறப்
படுங்களென்று சொன்னான். அந்தப் பேச்
சுக்கு வசுதேவர் சம்மதித்து, சமுத்திரக்கரை
யிலிறந்து கிடக்கிற பிணங்களை யெடுத்துத்
தகனம் முதலாகிய கடன்களியற்றி சமுத்
திரஸ்நானம்பண்ணி, கங்காஸ்நானஞ்செய்
து, சகலத்திராலோடும் பொருந்தி யிருக்
கின்றார், அப்போது விஜயன் வசுதேவரைப்
பார்த்து, ஓமாமா? ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி காட்
டுக்குப்போனாரென்றீரே. அவரிருந்து செய்
கிற தபசைப் பார்க்கவேண்டும். அவரையுந்
தரிசனம் பண்ணவேண்டும். நீரும் வாருமெ
ன்றுரைத்தான். அதைக்கேட்ட தாரகனாகிய
சாரதி சொல்லுகிறான். ஐயா அருச்சுன மகா
ராசனே இயாதவகுல புருஷர்கள் மடிந்து
போனமையால் அவாளவாளுடைய ஸ்திரீ
கள்வெகு துக்கமடைந்து துயரப்படுகின்றார்
கள் அவர்களையழைத்து உபசரித்துதிகிலுந்
தியக்கமும் பயமும் பறக்கச்செய்து, தேற்றி
விட்டு அப்பாற்போகலாமென்றான். அதற்கு
விஜயன் அப்படியே யாகுகவென்று சம்மதி
த்து, மந்திரிபிரதானி முதலிய பேர்களையு
நான்குவருணச் சனங்களையும் வருவித்து, ஓ
நகரவாசிகளாகிய மித்திரர்களே! யாதவகுல
மட்டுங்கலு நசிச்சிப்போயது. இந்த வியா
கூலத்தாற் பலராமருங் கிருஷ்ணமூர்த்தியு
மனம் வெறுத்துக் காட்டுக்குப் போய்விட்
டார்கள். இப்போது நீங்களிருக்கிற பட்
டணமும் இன்றைக் கேழா நாளையில் மூழுகி
விடப் போகின்றது. ஆகிறகால மாச்சுது
போகிறகாலமாச்சுது. ஆதலால் ஸ்ரீகிருஷ்
ணபகவான்பௌத்திரனாகிய வச்சிரதேவனை
அபிமானராஜனாக வைத்துக்கொண்டு, இந்
திரப் பிரஸ்தத்திலே உங்களியாவரையுங்
கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். அங்கிரு
ந்து உங்கள் காலத்தை ஆனந்தமாய்க்கழிக்
கலாம். மேலும் இறந்தவர்கள் தவிர மற்
றப்பேர்கள் எந்த விஷயங்கள் செல்வுங்கள்

மேன்பாடுகள் வேண்டுமோ? அவைகளையெல்லாங்குறைவில்லாமல் நிறைவாகக்கொடுத்து சவரட்சணை பண்ணுவார் தருமராஜன், நீங்கள் சுகப்படுவீர்கள், அவரவர்கள் தங்களுக்குண்டாகிய ஆடையாபரணமும்ரொக்கமுதலிய வெல்லா வஸ்துக்களு மெடுப்பித்துக் கொண்டுமாடுகன்றுகளுடன்சதுர்விததானைகளுடன் புறப்படுங்கள் என்றுபேசிமுரசமுழங்கிவைத்தான். அப்படியே சம்மதமென்று யாவரும் அவரவர்கள் விதிக்குப் போயினார்கள்.

---

## வசுதேவரும் பத்தினிமார் நால்வரும் நிரியாண மாதல்.

இப்பாலருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணருடைய அரண்மனைக்குட்சென்று அந்தப்புரஸ்திரீகளுக்கெல்லாம் அநேகவிததணிக்கை சொல்லி, துக்கத்தையாற்றித் துயரத்தையுமாற்றியும் பக்குவப்படுத்திக்கொண்டிருந்தான். அப்போது சூரியனஸ்தமனமானான். அன்றிரவில் யாவரோடும் போசனமுண்டு,பொழுது விடிகிற வரையிலும் பொருமலுற்றிருந்தஅவர்கள் பெரியவிசனத்தைப் போக்கி, அவர்கள் புத்தியை புண்ணிய நூல்வழிகளிற்றேற்றிக்கொண் டிருக்கின்றான் அப்போது வசுதேவர் நானிங் கிருக்கமாட்டேன். என்பிராணனை விடுகிறேன் என்றுகூறி வாயுவைக்கும்பித்து பிராணவாயுவைப் பிர்மானந்தவழியிற்போக்கிமேற்கதியை யடைந்தார். அது கண்டயாவரும் இடிமேலிடி அடிமேலடி படும்பரிசுபோலுடைத்து, ஓவென்றிரைந்து, உற்றார் பெற்றார் சுற்றத்தார் முதலியமற்றெல்லோரும் வந்து புகுந்து கடலொலிபோல் கதறிப்பதறி, உதலுதரிப் பரதவிக்கின்றார்கள் அந்தயதுகுல நாயகிகள் விசனிப்படுவதை விஜயங்கண்டு வெறுப்பும் விருப்புமற்றவனுகி, இம்மட்டோ நம்மட்டமென்று கண்களிலே நீர் பெருகச்செய்து. பூர்வஜென்மவினையின்படிக்கு முடிந்ததைக் குறித்துத் துக்கப்படுவதினுற் காரியமில்லையென்று தேறி அந்த ஸ்திரீகளையும் தேற்றி உபசரித்து திரிலோகங்களுந் தேவதேவனென்று துதிக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்குப்பேரனுகிய வச்சிர தேவனை அணைத்துக்கொண்டு விசனங்களை மாற்றி ஆளைத்தேற்றி அவனால் இறந்த வசுதேவருக்கு ஸ்நானக்கடன் முடிப்பித்து அலங்கார புட்ப ஆபரணங்கள் தரிப்பித்து பீதாம்பரபோர்வை மிடுவித்து, சுவர்ணக்கித உசிதவிமானத்திலேற்றி வெந்சனங்கள் கூடிவரும்படியாய் வாத்தியகோஷ்டியுடன் மஹேச ஸ்தானத்திற்குச் சென்று அதிற்கட்டை சந்தனக்கட்டைதேவதாரிக் கட்டைகளடுக்கி, அதன்மேலவரை வளர்த்தி ஓமந்திமூட்டி வேதவிதிப் பிரகாரங்கடன்முறைகளை முடித்து அக்னிக் குணவாக்கினான். அவருடைய தேவிமாராகிய தேவகிதேவி ரோகணிதேவி பத்திராதேவி மதுராதேவி இன்நான்கு அம்மைமார்களுந்தயிரியமுடையவர்களாய் அகத்துளுருகி, அருகிலிருந் தழாமற் சோடசதானங்களுங்கொடுத்து, தாங்களும் ஸ்நானம் பண்ணிமஞ்சள் குளித்து, குங்குமணிந்து, புட்பமுடித்து, இருந்தவர்கட்கெல்லாம் இன்சொல்லுரைத்து தேவதா பக்தி செலுத்தி, ஆசிரிய பூசை புரிந்து. தாய்தந்தையேரை நினைந்து,தம்பதியுடன் கலந்து சுகமமனமானார்கள். பதிவிரதைகளாகிய நால்வரும்உடன்கட்டை யேறவே வச்சிரதேவன் அப்பாட்டிமார்களுக்கும் இயற்றவேண்டிய அருங்காட்டருங்கடனைமுடித்து, எல்லோருக்கும் சமவிதிபுரிந்து,கருமக்கிரியைகளும் திலோதர்ப்பணதிகளும் பிண்டங்களும்தான துண்டங்களுங்கொடுத்திமங்கள ஸ்நானம் பண்ணிப் பஞ்சகவ்வியமுண்டனன்.

---

## அர்ச்சுனன் கிருஷ்ணமூர்த்திக்கும் பலராமருக்கு மக்கினிக்கடன் முடித்தல்

அப்பா லருச்சுனன் ஸ்திரீசனங்களைபட்டணத்தில் வைத்துவிட்டு, வச்சிரதேவன் மந்திரிமார் தாரகன் இவர் முதலியபேர்களோடி புறப்பட்டு, ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தேடிக் காணும்படியாய் காட்டுக்கு சென்று, மேட்டுப்பாகங்கள் குகைகள் மலைகள் மலைச்சார்புகள் நதிகள் ஆகிய விவ்விடங்களெல்லாந்தேடி அலுத்து. எங்குமவரைக் காணபதற்குக் கூடாமையால்விசனப்படுகிறான்.அப்போது ஒருவேடன் அர்ச்சுனனுக் கெதிரில்வந்து வணங்கி, ஓ மகாராஜனே! நீங்கள் தேடப்பட்ட மகாபுருஷனை நான்கண்டு வந்தேன். உங்களுக்கிடம் காண்பிக்கிறேன்

வாருங்கள் என்றுசொல்லி யழைத்துக்கொ
ண்டு முன்னே நடந்து,ஒருமரத்தடியிற் போ
ய்நின்று, இதோ விழுந்துகிடக்கிறஇவர்தா
னுபாருங்களென்றுசொன்னான் அவரை யிவ
ர்கள்பார்த்தமாத்திரத்திற் பூமியின்பேரில் வீ
ழ்ந்து புரண்டு அலறி, தேவாதிதேவா! நீரி
றக்கவும், உம்முடையசரீரம் பூமியிலே கிடக்
கவும், நாங்கள்பார்க்கவும், பிர்மதேவரிப்படி
யுமெழுதியிருந்தாரா? என்று பிரலாபித்து,
ஸ்ரீகிருஷ்ணபகவான் மார்பிலேயும் பாதங்க
ளிலேயும் கவிழ்ந்து தாயைப் பிரிந்த சேய்
போலேங்கி, உடம்பு மறந்து வீழ்ந்து, உட
னே யெழுந்து தேறி மிஞ்சிப்போன காரிய
த்திற்கு என்செய்வோமென்று தைரியங்கொ
ண்டு சிறிதுதெளிந்து,தன்னுடைய இஷ்ட
மான பகவந்தனுக்குப் பிராணவாயு எந்தவ
ழியிற் கழன்றுபோயிற்று பார்ப்போமென்று
சரீரமடங்கலுந் தடவிப்பார்த்து,உள்ளங்கா
லிற் பாணம்பட்டுருவி அந்த வழியாய்ஆன்
மாகழன்று போச்சுதென் றறிந்து, நவத்து
வாரமிருக்கக் காலின்வழியாய்ப்போகவேண்
டியகாரண மென்னவென்று யோசித்து, ஓ!
ஓ! பூர்வந் துருவாசருக்குஉபசாரஞ்செய்து
பால்ரசம் பண்ணிக்கொடுத்து மிகுந்த பால்
ரசத்தை தேகமெல்லாம் பூசச் சொல்லிய
போது உள்ளங்காலிற் பூசாமையால் உனக்
குந் பிராணன் உள்ளக்கால்வழியே ஓடிப்
போமென் றுரைத்தவண்ணம் வினைமூண்டு
அம்மகானுவின் வாக்கியமும் பலித்ததென்
று மனமுருகி,பாரதயுத்தத்தில்நம்மைக்காத்
தருளிய பகவந்தனுக்கு இப்பேர்ப்பட்ட கதி
கிடைத்தபோது நமக்கெந்தகதியோ அறி
யோமென்று நலிந்து மெலிந்து கூடவந்த
வர்களுடன் கலந்து,இனி இந்தக் கோபால
னுடைய அருமைத் திருமேனியைத் தேரி
லெடுப்பித்துக்கொண்டு துவாரைக்குப் போ
ய் தகனஞ்செய்வதற்குத் தொடங்கினால், ஸ்
திரீசனங்கள் பார்த்து முகம்வேர்த்து கும்பு
கள்கூடி, அழவும்அலறவும்கதறவும்பதறவு
மாவார்கள். அவர்களை யாற்றித்தேற்றி யட
க்குவதற்கு ஆலசியமாகிப்போம். ஆததால்
இங்கேதானே அக்கினிபுடம்பண்ணிப்போ
ட்டு, ஸ்ரீகிருஷ்ணபகவான் இறந்துந் தக
னம் பண்ணிப்போட்டதுஞ் சொல்லாமல்,
யோகத்தி லிருக்கின்றார் தரிசனம்பண்ணி வ
ந்தோமென்று சாதித்துப் போடுவோம். ந
மது சொல்லை நம்புவார்கள். உடனே பய
ணப்படுத்தி அந்திரப் பிரஸ்தத்திற்கு அ
ழைத்துப்போய் அவ்விடஞ் சேர்ந்தபின்பு
கண்ணனிறந்ததுங் கர்மங்கணடந்ததும்பே
சலாம்.இதுவரையிலும் அடக்குவையுங்கள்
என்றுயாவரோடு நிச்சயம் பண்ணிக்கொண்
டு, கட்டைமுட்டைகள் சேர்த்து அதன்மே
ற்கிடத்தி, பிள்ளையில்லாமையாற் பேரனைக்
கொண்டுநீர்க்கடன்நெருப்புக்கடன்கள் முடி
த்து. உச்சிக்காலம் வரையிலுமிருந்துகாடா
ற்றிவைத்து மற்றக்கடனுங் கழித்து கலப்
பைதரித்த பலராமரைப் பார்ப்போமென்று
நடக்கையில் ஓரிடத்தில் அவருடலைக்கண்டு,
எல்லோரும் பிரலாபித்து அவரை மவ்வா
றே அக்கினிக்கிரையாக்கிஅருங்கடன்முடிப்
பித்து, அஸ்தமானவரையிலுமிருந்து, பின்
பு மேகம் பொழிவதுபோல் விழி நீர் பொ
ழிந்து கொண்டு துவாரகாபுரி வந்து சேர்ந்
தார்கள்.

—

### துவாரகாபுரி கடலின்முழுகிப் போதல்.

இப்படி யாவு முடிந்தபின் அப்பட்டண
மழிந்து போகிறநாளுஞ் சமீபித்தது. இப்
பேர்ப்பட்ட காலத்தில் உருக்குமணிமுதலிய
அஷ்டலட்சுமிமார்களும்வெகுவாகியபெண்
களும் ஓடிவந்து, அருச்சுனன் வச்சிரதேவ
ன் இவர்களுடன் வந்த பேர்களையுங் கண்டு
ஸ்ரீகிருஷ்ண சுவாமியாரும்பலராமருஞ் சுக
மோவென்று கேட்டார்கள்.அவர்களுக்கு ஒ
ருவருமுண்மைசொல்லாமல் இருவருங்கண்
ணைமூடிக்கொண்டு தபசிலே யிருப்பதாக சந்
தோஷமடையும்படிக்குச் செய்து, தாங்களு
ஞ் சந்தோஷித்திருந்து பயணப்படுங்களெ
ன்று பகர்ந்தார்கள். அவரவர்களும் ஆடை
யாபரணப் பொங்கிஷங்களோடு வைப்புச்
சொப்புமுதலியவெல்லாவற்றையுமெடுத்துக்
கொண்டு பண்டிகள் சகடங்கள் தேர்கள் கா
டிகள் யானைகள் குதிரைகள் ஒட்டகங்கள்இ
வைகளிலேறி. இராஜபட்டபு மகிஷிகளான
எட்டுப்பேரும் பல்லக்கிலேறி, இராஜர்களெ
ல்லாம் இயானை குதிரைகளிலேறி நடந்தார்
கள். கிருஷ்ணமூர்த்தியின் போகத்திற்கிசை
ந்த பதினாயிரங் கோபிகாஸ்திரீகளின் பல்ல
க்குகளும் ரதகஜ துரகபதாதிச் சேனைகளு
ம், யாதவகுடும்பங்களும் புறப்பட்டு அயுத
பாணிகளாகிய வீராளிருபக்கமும் அடர்ந்

துவர வந்தார்கள். அருச்சுனன் ஒரு தேரேறி, தனுர்ப்பாணங் கைகொண்டு, சகலசாமான்களுஞ்சனங்களுந் துவாரகையிலில்லாமற் சாடாவாய் வெளிப்பட்டுவிட்டதாவென்றுவிசாரித்துக்கொண்டு நிற்கின்றான். அப்போதுசமுத்திரம்பொங்கி துவாரகாபுரியையடித்துக்கொண்டுபோயது இதையாவருங்கண்டுஆச்சரியமாகிஐயோ! துவாரகைமுழுகியது இதுபரமேஸ்வரனுடைய செயலென்று பேசிக்கொண்டார்கள் அவ்வதிசயத்தைஅர்ச்சுனன் பார்த்து ஈஸ்வரகடாட்சமெல்லாம் எண்ணியெண்ணி, ஆலசியம் வேண்டாம், அவசரமாய் நடவுங்கள், என்று தேவேந்திரன் தேவதைகளுடன் நடந்துவருவது போல்சமுக்திரம்போன்ற ஜனங்களை நடத்திக்கொண்டு பஞ்சவடிதீர்த்தத்திற்கு வந்தான். அதுவரையிலும் பொழுதிருந்தது. அப்பால் வடமதுரையை வாயிற்போட்டுக்கொண்ட கீழ்க்கடலின் சங்கதியை மேற்கடலுக்கு விளம்பச் சென்றவன்போற் சூரியன் அஸ்தமனமாயினான். உடனே இருள்மூடிக்கொண்டது. அதனாலிவ் விரவை இங்ஙனமே கழிப்போமென்று அவ்விடத்திலே யிறங்கினார்கள்.

---

### அருச்சுனன் யாதவகுலசனங்களோடு பஞ்சவடிதீர்த்தத்திருந்தபோது, வனவேடர் வந்து கொள்ளையடித்தல்.

அப்போது அந்தக்காட்டிற் குடியிருக்கின்ற வேடர்கள் - வேலாயுதம்-சூலாயுதம்-சக்கிராயுதம்-கதாயுதம் - இருப்புலக்கை-வசி வில்லம்பு-சவளம்-வாளம் கவுண்டு உண்டைவில்இவைமுதலாகிய ஆயுதங்களைப்பிடித்து கோடிபேர் வரைக்கும் புறப்பட்டு, துவாரகைப் பட்டணத்தின் சனங்களிடத்திற் கொள்ளையடித்து, ஆடையாபரணங்களையுமுரித்து, பெண்களையும் சிறைபிடிக்கத்தொடங்கினார்கள் அதை வச்சிரதேவன் கண்டு, ஓ வேடரே! கேளுங்கள் என்கைப்பாணங்களுக்கு உங்கள் கூட்டமுழுமையும் ஓட்டமாய்ப் போய்விடும், காட்டைக்கொளுத்தி உங்கள் வீட்டையழித்துச் சேட்டைக் காற்றுபோல் உங்களுக்குக் கேட்டை யுண்டாக்குவேன். ஓடிப்பிழையுங்கள் என்று யாவருங் கேட்க உரத்த சொல்லாகச்சொல்லி உரும்பினான். அவன்மொழியை யவ்வேடர்கள் ஒருவரவு செலவில் வைக்காமல், ஆசை வெட்கமறியாதென்பதுபோல அதறப்பதறவிழுந்து, பல ஜனங்களையும் கைப்பற்றினார்கள். அதை வச்சிரதேவன்கண்டு தனுப்பாணங்கொண்டு சரமாரிபொழிந்தான். அதையுமவர்கள்தப்பவைத்துக்கொண்டு கொள்ளை யடித்தார்கள். இவைகளையெல்லாம் அருச்சுனனறிந்து தன்கையிலிருக்கின்ற காண்டீபத்தை வளைத்து, கனலாஸ்திரங் கதிராஸ்திர முதலிய கடவுட் படைகளைப் பிரயோகனம் பண்ணினான். உலோகாலோகமெல்லாம் வெந்து தகித்து நீராக்கி வேறாகச்செய்கின்ற அப்பாணங்களானதுகொஞ்சமேனும் வேகமாய் ஓடாமனின்று வெருவித்திரண்டன. வில்லும் வளையாமல், வேதமந்திரங்களும்பலியாமல் மருவித்துவண்டன. அதனாலருச்சுனனுக்குப் பலங்குறைந்து, பயம்பறந்து, வீரதருமம் போய்விட்டதென்றுவெம்பி ஐயோ! நமது கையிற்பிடித்த வில்லும், அம்பும் தோளிற்றூக்கிய அம்பறுத்தூணியுஞ்சோர்ந்துபோனதுஎன்னகாரணம்? சாம்பவமூர்த்தியின் கடாட்ச வீட்சண்யந் தப்பிப் போனதினாலேயோ? முதுமையான கிழத்தனத்தினாலேயோ? மற்றென்னத்தினால் இப்படியாச்சுதென்று ஏக்கக்கொண்டு நின்றான் அந்த வேளையில் வேடர்கள் மேலிட்டு, அகப்பட்டமட்டும் பறித்துப் பிடுங்கொண்டு யாவரையும் புரட்டிப புரட்டி யுதைத்துவிட்டுப் போனார்கள். இதுகளை யோசித்துப்பார்த்தவிஜயன் அந்தவேடரைநோக்கி அப்பா கானவர்களே! இவர்கள் ஸ்ரீ கிருஷ்ணசுவாமியார் வீட்டுப்பெண்கள் நீங்கள் கைக்கொண்டிருப்பது அப் பகவானுடைய புனித சொத்தாகிய ஆடையாபரணங்கள், இதையெண்ணிப் பாருங்கள். என்று யெத்தனைவிதமாய் இதவான வார்த்தைகளுரைத்தாலுமவ்வேடர் கேளாமல், சரிப்போனமட்டுஞ் சாடாவாய்க் கொண்டுபோனார்கள்.

---

### விஜயன் வச்சிரதேவனுக் கணிமுடிசூட்டி இந்திரப்பிரஸ்தத்திலிருத்தி ருக்குமணியாதியர்க்குள்ளதுகூறி யவர்கடனு மாற்றி முடித்தல்.

இப்பால் திரிலோகண்டனை விஜயன் பலங் குறைந்துபோய் பொறுமைமேலிட்டு, ஆரார் சொத்து ஆராரனுபவிக்கவேண்டு

மோ? எந்தெந்தவேளையில் என்னென்னபாடு படவேண்டுமோ? அவையெல்லா மனுப வித்துத் தீரவேண்டும்? வினையின்பயனே பயன் என்றுவெட்கப்பட்டு அவமானமடை ந்து, வேடரிடத்திற் சிக்காமலிருந்த பொரு ள்களையும்-ஸ்திரீகளையும் - சேனைகளையும்-அ ஷ்ட பாரியர்களையுமழைத்துக்கொண்டு, பஞ் சவடி தீர்த்தத்தைவிட்டுக் குருக்ஷேத்திரத் தைக் குறுகினன். அப்போது அங்கிருக்கி ன்றமகாரிஷீஸ்வரர்களியாவரும்வந்து, அர் ச்சுனன் முதலிய பேர்களுக்கு ஆசீர்வசனந் தந்து, அவ்விடத்திற்றானே சிலநேரமிருத் தி, கந்தமூலபலாதிகளுந்தவி வழியினைப்பாற் றினர். பின்பு அந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய பேரனான வச்சிரன் முதலான பங்காளிகளுக் குத் துவாரகை நாட்டைப் பங்குவைத்து, நீங்களிந்தப்படி நடவுங்களென்று மூழ்கிப் போன கோட்டைபோக நகரத்திற்குப் புறம் பாகிய நாட்டை மூன்றுபங்கிட்டு, கிர்தவன் மன் குமாரனுக்கும் வச்சிரதேவனுக்குங்கொ டுத்து, அவ்விடத்திற்றானே மூன்றுபட்டண மேற்படுத்திக்கொள்ளச்சொல்லி, அவ்வவற் றிலிருந்து அவ்வவற்றைச்சார்ந்த நாட்டை அவ்வவர்கள் ஆண்டு அனுபவித்துக்கொண் டு அவரவர் தாய்மார் முதலாகிய சனங்களை யெல்லாம் வம்சாசார வர்ச்சம்போகாமற் சவ ரட்சணைபண்ணிக்கொள்ளுங்களென்று திட் டம்பண்ணினார்கள். அவர்களும் அப்படியே சம்மதித்துக்கொண்டார்கள். இப்பால் வச் சிரதேவனையும், பட்டபுஸ்திரீகள் எட்டுப் பேரையும், பலராமர் பெண்சாதிகளையும், அவர்களைச் சார்ந்த பந்துக்களையும், இயாத வப் பெண்களையும், யாதவராசாக்களையும், அழைத்துவந்து இந்திரப்பிரஸ்தத்திலே சேர்த்து, வச்சிரதேவனுக்குப் பட்டாபிஷே கம் பண்ணிவைத்து, பிற்பாடு ஸ்ரீ கிருஷ்ண தேவர் காட்டிலிறந்து வைகுந்தநாட்டிலு றைந்தாரென்றுரைத்து, இரண்டு கண்களி லுந் திரண்டு புரண்டுவருகின்ற வெள்ளங்கா ட்டி, உடல்பதறிக் கதறியழுதானருச்சுனன். அப்போது அக்கிருஷ்ணமூர்த்திக்கு ஆவி போலொத்த உருக்குமணி முதலான தேவி மார்கள் துயரப்படும் பான்மையில்லாமல் துணிவாயிருக்க, அதுகண்ட அருச்சுனன் உங்களுடைய எண்ணமெப்படியென்று கே ட்க, தாங்கள் அக்கினிப்பிரவேசமாவோமெ ன்று ஆனந்தப்பட்டுச்சொல்ல, அவ்வார்த் தையின் வண்ணம் பெரிய கட்டைகளினால் நெருப்புகள் மூட்டி, நெய்யுங் கற்பூரமு நிறையச் சொரிந்து அண்டகோளகை மட் டும் மண்டியெரியவிட்டான். அதிலந் தேவி மார்களெல்லாந் திரளாய் வந்திரங்கி, ஸ்ரீ வைகுண்டஞ் சேர்ந்து ஆதிநாராயணமூர்த் தியுடன் அமர்ந்திருந்தார்கள். சத்தியபாமை முதலாகிய பதினாயிரங் கோபஸ்திரீகளுந் தவமிழைத்து, விரதசித்தியாய்ச் சரீரங்களை யொழித்துப் பரமபதஞ் சேர்ந்தார்கள். பல ராமருடைய பத்தினிமார்களு மக்கினியிற் பாய்ந்து அன்பன் பக்கலிற் போய்ச்சேர்ந் தார்கள். இப்படியாக இறந்துபோன ஸ்திரீ சனங்களுக்கெல்லாம் அருச்சுனனானவன் வச்சிரதேனாகிய பேரனைக்கொண்டு கருமக் கடன்களை முடிப்பித்து, அவனுக்கு மிகுந்த தைரியங்களைத் தகுந்தபடிக்குச்சொல்லி அவ னிடத்திற் செலவு வாங்கிக்கொண்டான்.

---

### அருச்சுனன் வேதவியாசரிடம்போய் நடந்த விதங்கூறி பணிய, அவரவர்மேலிவு தீர்த்தனுப்புதல்.

இப்பால் அர்ச்சுனனானவன் வியாசபக வானுடைய ஆசிரமத்திற்குச்சென்று வெய் யலில்விடாய்ப்பட்டுவந்துபெருநிழலைக்கண்டு நின்று வெப்பந் தீர்ந்துகொண்ட நேர்மை போல மனங்குளிர்ந்து, வேதவியாசருக்குச் சாஷ்டாங்கமாகதெண்டனிட்டு வாய்புதைத் து நின்றான் அப்படி நின்றமாதவிகொழுநனு க்குவியாசர்ஆசீர்வாதம்பண்ணி, ஓசவ்வியசா சி! நீயேதுஇவ்வளவுதூரம்வந்தது உங்கள ண்ணன்முதலியபேர்கள் அஸ்தினாபுரத்திற்சு கமாயிருக்கின்றார்களா? உயிர்த்துணையாகியும் உதற்காதாரமாகியு மிருந்த உத்தமனை ஒழித் துவிட்டு வந்தாயோ வேடருடனே சண் டைபண்ணி வெட்கப்பட்டுப் போனாயோ? வேறேதாகிலும் விந்தைகளுண்டோ! சந்திர பிம்பம்போன்ற முகம்வாடி யிருப்பானேன்? சகலகலையும் பிரகாசிக்கின்ற உன் முகங் களை மாறியிருப்பானேன்! நடந்தகாரியங்களைஉள் ளபடிக் குறையென்றுகேட்டார். அதற்குவள் ளலாகிய வாசவன்மகன் விள்ளுகின்றான். சுவாமி! இயாதவகுலங்கள்முழுதும் பழுது பட்டன. துவாரகாபுரி சமுத்திரத்தில் மூழ்கி ப்போய்விட்டது சாத்தகிகிர்தவன்மன் இவர் முதலாகிய யாதவகுமாரர்கள் ஒருவருக்கொரு

வர் சண்டைகொண்டு கோரைகளைப்பிடுங்கிக் கொண்டடித்துச் சமுத்திரக்கரையி லிறந்து விட்டார்கள். இப்பேர்ப்பட்ட துர்மரணநே ரிடுவதற்கு முன்னமே பலராமர் காட்டுக்குப் போய்விட்டார். இந்தவேலைக ளெல்லாந்தீ ர்ந்தவுடனே ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுங் காட்டு க்குப்போய் என்னிடத்திற்குத் தாரகனையனு ப்பிவிட்டு, தமையனுந் தானுந் தனித்தனி இருந்தார்கள். நான் தருமராஜனிடத்திலுத் தரவு பெற்றுக்கொண்டு தாரகனுடன் போய் வசுதேவன் முதலியபேர்கள்பட்ட சஞ்சலத் தையகற்றி, அவ்வூரிலுள்ளோரையெல்லாம் என்தமயன் சொற்படி இந்திரப் பிரஸ்தத்தி ற்குப் பிரயாணமாகும்படி முரசறைவித்து, அரண்மனையிலுள்ள மற்ற ஆடவர்களையும் ஸ்திரீகளையும் பிரயாணப்படுத்தவிருந்தபோ து வசுதேவரும் அவர் பத்தினிமார் நால்வ ரும் பிராண னொழிந்தார்கள். உடனேயவர் கள் அருங்கடன் முடித்து என்னன்பனைப் பார்க்கப் போனபோது, அவர் தனதண்ண னுயிர் நீங்கிக்கொண்டதுகண்டு தானுமுயிர் போக்கிக்கொண்டார், அவ்விருவருக்குந் தக னசஞ்சயனம் பண்ணி, இருப்பவர்களை ய் ழைத்துக்கொண்டு பஞ்சவடிக்குவந்து அன் றிராத்திரி அங்கு தங்கியிருந்தோம். அவ்வி டத்திலுள்ள வேடர்கள் வந்து வளைத்து, ஸ்திரீகளையும்ஆடையாபரணங்களையுங்கொ ள்ளை யடித்தார்கள். என்கரத்தில் வில்லும் வேலு மிருந்ததல்லாமற் கொல்லு மம்புங் கொடுவாளு மிருந்தும், ஒன்று மபிவிர்த்தி யாகாம லடங்கிவிட்டன. பின்பவர்களிடத் தில் என் சிலம்ப நடவாமற்போகவே நயம துர வசனங் ள்பேசி, அத்துட்டர்கள் பறி த்துக்கொண்ட சொத்துக்கள்போக மற்றச் சொத்துக்களையும், கிருஷ்ண சுவாமியின் அ ஷ்ட பாரியைகளையும், மற்ற ஸ்திரீகளையு மழைத்துக்கொண்டு ஊர்வந்து சேர்ந்தேன். எட்டுப்பத்தினிகளுந் தீப்பாய்ந்து போனார் கள். மற்றவர்கள் தவஞ்செய்யச் சென்றார் கள். இந்தச்செய்திகளை யெல்லாந் தங்களி டத்திற் சொல்லிக்கொள்ள வந்தேனென்று கண்ணீர் சிந்திக்கதறி அவர் காலில் வீழ்ந் தழுதான்.

இப்படி ஐம்பத்தாறு தேசத்து ராஜர்க ளையு மரைக்கணத்தில் வெல்லுகின்ற அர்ச்சு னன் ஆறுமைப்படுவதைக்கண்ட வேதவியா சர் அவனை யாதரித்தெடுத்து, அப்பா! மிகு த்த தூய்மையாகிய தவசுகளிற்சிறந்து நிறை த்த மனத்தையுடைய பெரியோர்களின் சாப த்தினால் யாதவகுலம் பாழாய்ப் போச்சுது. ஆதிமூலப் பொருளாகிய ஆதி நாரயணன் ஸ்ரீகிருஷ்ணனா யவதரித்து, ஆதியிலெண் ணிய தேவரகசியப்பிரகாரம் பூபாரந் தீர்க்க வந்த காரியங்களை நிறைவேற்றிக்கொண்டு, பழயபடிக்குப் பரமபதவாசியாயினார் அவருக் கொருகாலமு நாசமில்லை. காயங் கருகிப் போம் பலராமனும்ஆதிசேடனாய் அவனித் தேகத்தை நீக்கிப் பாம்பாய்ப் பாதலஞ் சேர் ந்தான். இயாரானபோதிலுந் தோற்றமா கில் மாற்றமுண்டு இந்தப் பிள்ளை குட்டிகள் அழியாமலிருக்க நிறுத்தும் வல்லமை கிரு ஷ்ணமூர்த்திக் குண்டாயிருந்த போதிலும், தாமிருந்து கற்பனைசெய்த கட்டளையைத்தா மே யழிக்கலாகாதென்று ஜாடையாயிருந்து விட்டனர். இதன்றி பாரதயுத்தத்திற்செயி த்த பலமெல்லா மெங்கே ஒளித்தன பாரத யுத்தத்துக்கு பார்வதி பங்கனாகிய பரமசிவங் கொடுத்த பாசுபத முதலிய வரங்கள் எங்கே தத்தளித்தனவென்றும், தேவராஜன் முத லாகிய தேவர்களீந்த திவ்யாஸ்திரங்களும்- மந்திரங்களும்-முஷ்டி நிலைகளும்-எங்கே ஒக் களித்தனவென்றும் உன் மனதிற் கவலைகொ ண்டிருக்கின்றாய் அந்தப் பலன்களும்-வல்ல பங்களும்-ஜெய நலங்களும்-கடல்வண்ணனா கிய கண்ணன்சகாயமுள்ள மட்டுக்கு மிருந் தன. அவர் போகவே யாவுங்கூடப்போய் விட்டன. உன் முகங்களையும் அவருடன் கலந்துபோயிற்று. இனி யுனக்கு எதுவுஞ் சாயாது. நீ மயங்கவேண்டாம். நீங்களும் சீக்கிரத்தில் ஜாக்கிரதைப்பட வேண்டும். ஐம்புலனை யடக்கி உத்தரதிசைநாடி மெத் தத் துரிதமாய் நடப்பதே காரியமல்லது, வேறே வீரியமில்லை என்று ஆரியருரைத் தனர்.

---

### அருச்சுன னஸ்தினபுரியடைந்து தருமனதி யர்க்குத்தான் போய்வந்த சேதிபுகல அவர்கள் பிரலாபித்தல்.

அவையனைத்தையுங்கூறியதைபுத்திசா லியான சீரியன்கேட்டு, இது நிரியாண தீட் சைமந்திரமென்று நினைவிற் பதித்து, பகை யிருள்கடிந்த சூரியனைப்போல் பரமானந்தம் பெற்ற பான்மைபோலாகி, மனவருத்தங்கள்

யாவுமாறி, வேதவியாசரை வேண்டிப் பணி
ந்து விடைபெற்றுக்கொண்டு அஸ்தினபுர
ஞ்சென்று, தருமராஜனுடைய அடிமேற்ரெ
ழுது, வீமனைவணங்கி, மேலோரைப் பரவி,
தம்பிமார்களை யணைத்து, சகலரையும் வந்தி
த்து சர்வஜீவ தயாபரமூர்த்தியாய் தர்ப்பர
னைச் சிந்தித்து, பாண்டுமகாராஜன் தவம்
பதிவிருந்தது போலிருந்தது, தான் துவார
காபுரிக்குப் போனதும், வசுதேவர் - இவரு
டைய பெண்சாதிமார்கள் நால்வர்-பலராமர்-
கிருஷ்ணர் இவர்களோடு யாதவகுல மடங்க
லும்இறந்துபோனதும், துவாரகாபுரியைச்
சமுத்திரம் விழுங்கிவிட்டதும், பஞ்சவடியி
ல்வந்திறங்கியபோது வேடர்கள் அடித்துக்
கொள்ளையிட்டதும், அவர்கள்மீதில்தன்னு
டைய பாணமும்-மந்திரமும்-ஏறிப் போகாம
ல் மாறிப்போனதும் உருக்குமணி முதலிய
தேவிமார் எட்டுபேரும் அக்கினி வளர்த்தி
உயிர்விட்டுப்போனதும், சத்தியபாமை முத
லான கோபஸ்திரீகள் தவஞ்செய்திறந்து
மறைந்துபோனதும், மைத்துனன் பிள்ளை
யாகிய வச்சிரன் முதலான மூன்று பிள்ளைக
ளுக்கு நாட்டை மூன்றாய்ப் பங்கிட்டுக்கொடு
த்ததும், இந்திரப்பிரஸ்தத்தி லழைத்துவ
ந்தயிடத்தில் வச்சிரனுக்கு உச்சிதமுடிசூட்
டிப் பட்டங்கட்டியதும், வியாச பகவானிட
த்திற்குப் போனதும், அவருக்குச் சங்கதிக
ளைத் தெரிவித்து அவர் சொன்ன புத்தியை
க்கேட்டுவந்ததும், ஆகிய விவையனைத்துஞ்
சவிஸ்தாரமாய்த் தருமநந்தனர் முதலாகிய
சகலருங் கேட்கச் சொன்னான் அருச்சுன
ராஜன்.

இவையனைத்துங் கேட்டிருந்த தருமரா
ஜனவர் இடியுண்ட மரம்போல் மடிவுண்
டமனத்தராகி, ஆ! கிருஷ்ணாவென்று கூவி
மூர்ச்சித்து, சித்திரப்பிரதிமெய்போலசைவ
ற்றிருந்தனர். அப்போ தருகிலிருந்த வேதி
யர்களும் பரிசனங்களும் பனிநீராதிகளைத்
தெளித்து, சாந்தாற்றி சாமர முதலியவை
கள் வீசித் தேற்றினார்கள். அதனாற் றேறித்
தெளிந்த தருமநந்தனர் பக்கத்திற் சூழ்ந்தி
ருந்த பெரியோர்களைப் பார்த்து, ஓ மகான்
களே! எங்களாவிக்கு ஆவியாயிருந்த ஓர்
பேராவியானவர்போய்விட்டாரே, அவரெங்
கட்குச் செய்தவுதவியை யென்னென்று மனத்
தால் நினைக்கத்தாமோ? ஆதியிற் பெரியதந்

தையர்னவர் இளவரசாக்கி முடிசூட்டியவெ
ன்னைத் தன்பிள்ளைகள் துர்போதனையாற்கா
டாய்க்கிடந்த இந்திரப் பிரஸ்தத்திற் கனுப்
பும்போது, அவ்வூரை இந்திரனால் இந்திர
லோகம்போ லாக்குவித்தளித்த இயல்பை நி
னைப்பேனோ? இவ்வருச்சுனனாற் காண்டாவ
னத்தை அக்கினிதேவனுக் குணவாக்கி, ஒடி
யாத காண்டீபமும்-குறையாத அம்புப்புட்டி
லும்-அழியாரதமுமிவ்வருச்சுனனுக்குத்தரு
வித்தஅருளை நினைப்பேனோ இராஜசூயயா
கத்திற்கு இடையூறெய்தாவகை ஜராசந்த
னையுஞ் சிசுபாலனையும் எளிதிற் கொல்லுவி
த்து, தானே அக்கிர பூசையேற்றி அந்தயா
கத்தை நிறைவேற்றிவைத்த அன்பை நினை
ப்பேனோ? மகாசபையில் மாயச் சூதாடி வெ
ன்ற துரியோதனாதியர் திரௌபதியின் துகி
லுரியும்போது, அவள் மானத்தையும் எங்
கள் வீரத்தையுங்காத்த அருமையை நினைப்
பேனோ? ஆரண்ய வாசத்தில் துரியோதன
னேவலால் விருந்துக்குவந்த தூர்வாசமுனி
க்கு அமுதுவிருந்தளித்து, அவர்வந்தநினை
ப்பை மாற்றிவைத்த ஆதரவை நினைப்பே
னோ? இந்திரனுக்குக் கர்னன்வரலாறுகூறிக்
கவச குண்டலத்தைக் கவரச்செய்த கருத்தை
நினைப்பேனோ? மித்திரமகாரிஷி வனத்தில்
ஓராமலக்கனியால் நேரிட்ட ஆபத்தைக்கா
த்தருளிய ஆதரவை நினைப்பேனோ? துரி
யோதனன் படைத்துணைக்கழைக்கப்போன
போது அன்பெல்லா மெங்கள்பேரில் நிறு
த்தி, அருச்சுனனுக் காதரவு கூறியனுப்பிய
அருமையை நினைப்பேனோ? நாங்கள் நாடு
வேண்டித் தூதுவிடுத்தகாலத்தில் மனங்
கோணாதுசென்று, கையேந்தியிறந்துங்கொ
டாத அக்கைதவனுக்குத் துணையாகாதபடி
விதுரருடைய வில்லை யொடித்து, அஸ்வத்
தாமன்மீது அநுமானமேற்படுத்தி, எங்கள்
நாயைக் கர்னராஜனிடத்திற் சிலவரங் கேட்
டுவரச்செய்து, துரியோதனனுக்குக் களப்ப
லிக்காயுடன்பட்ட இரவான்செயலையும்-உயு
த்தத்திற்கு நாள் வைத்துக்கொடுத்த சகாதே
வன் செயலையும் - வெளிப்படுத்தி, இவ்விரு
வர்செயலும் அவனுக்கு உதவாதபடி நாளை
யும் புரட்டிவைத்த நன்மையை நினைப்பே
னோ? இந்த அருச்சுனன் யுத்தகளத்தைக்
கண்டயர்ந்தபோது தமது கீதோபதேசத்தா
லும் விஸ்வரூபத்தாலும் இவனயர்வைமாற்
றியருளிய அன்பை நினைப்பேனோ? பாசறை

யிற் படைகூட்டிவந்த மூதாதையும் வில்லாசிரியரு மெங்கள்பேரில்முதிர்சினங் காட்டாதபடி கலக்குவித்த மொய்ம்பினை நினைப்பேனோ? பதின்மூன்று நாட்போரில் அபிமன்னு விறந்ததறிந்த தான் பஞ்சகத்தர்களோடு போராடிமீளு மிவ்வருச்சுனனறிந்தா லென்னாகுமோ வென்று வழியிற்றானே ஆகண்டலனை அக்கினிப்பிரவேச மாகுமோ ரந்தணனாக விருத்தி, அவன் முன்னிலையில் ஓர்வாக்குத்தத்த முண்டாக்குவித் தழைத்துவந்து, ஆயுதங்களையு மிவன் கைக்கெட்டாதபடி மறைத்துக் காத்தருளிய அருமையை நினைப்பேனோ? அத்தின மருச்சுனன் செய்துகொண்ட சபதத்தையழிக்கும்படி துரியோதனனதியர் செய்துகொண்ட ஆலோசனையைக்கேட்டுக் கலங்கிய வெனக்குத் தக்கபடி தைரியங் கூறித்தேற்றிய தகைமையை நினைப்பேனோ? அத்திப் பூசைக்காரனாகிய இவ்வருச்சுனனை ஓராரண்யத்திற்கழைத்துப்போய்த் தன்னைச் சிவமாகப்பாவித்துப் பூசைசெய்வித்து, இவனோடுண்டு நித்திரை செய்வித்து, தன்னை வந்து பணிந்த இந்திரார்தியர்க்கினிமைகூறி தாரகலென்னுஞ் சாரதிக்கு நாளை நடக்க வேண்டுங் காரியங்கட்குத் திட்டஞ்செய்து, இவ்வருச்சுனன் சொப்பனத்தினு மாதரவு கூறி, இவனைக் கருடன் மீதேற்றிக்கொண்டு கைலாயஞ் சென்று பாசுபதாஸ்திர முதலிய பரிசுகள் பரமனிடத்தினின்றும் வாங்கிக் கொடுத்து, இங்கே ஏக்கமுற்றிருந்த வென்னை யெழுப்பவந்து கூடிய இரக்கத்தினை நினைப்பேனோ பதினான்கா நாட்போரில் அருச்சுனன்பேரிற் சுதாயுவிடுத்த கதாயுதத்தைத் தனது மார்பிற்றாங்கி, சக்கராயுதத்தாற் சூரியனைமறைத்து, சயித்திரதனாகிய சிந்து ராஜனையுஞ் சங்கரிப்பித்திவன்செய்தசபதத்தினை முடித்தருளிய தாஷ்டீகத்தை நினைப்பேனோ தன் தந்தைபடச் செய்தோரைத் தறிபடச் செய்வேனென்று அஸ்வத்தாமன் விடுத்த உக்கிரநாராயணாஸ்திரத்தை பதினேழா நாட்போரில் அங்கராஜனு மரவக்கொடியோனு மமர்க்களத்துற்ற கெம்பீரங் கண்டையுற்ற வெனக்கு மேல் நடக்கு நிச்சயங்கூறித்தேற்றிய நிலைமையை நினைப்பேனோ? இவ்வர்ச்சுனன் கர்னனை வெற்றிக்கொள்ளாது வந்தமைக்கு வெறுத்துக்கொண்ட யென்மீது இவன் சாற்றிய சபதத்திற்கு நிவாரணங் கூறி, என்னையு மிவனையுந் தேற்றிய இனிமையை நினைப்பேனோ? தருமங்களெல்லாங் கூடிக் கர்னராஜனைத் தலைகாக்கக்கண்டு, ஓரந்தணனாகி யவரிடஞ்சென்று, அத்தருமப்பலனைத் தானம்வாங்கி, இப்பற்குனனலவ்வண்ணலைப் பரமபத மடைவித்த பாக்கியத்தை நினைப்பேனோ? பதினெட்டா நாட்போரிற் படைக்குறைவைக்கண்டு வருந்தியவெனக்கு இனிநடக்கப்போகின்ற திதுவென்றுகூறித் தேற்றிச் சமர்க்கெழுவித்த சமர்த்தை நினைப்பேனோ? வீமன் தனது பிராண நிலை கூறித் துரியோதன னுயிர்நிலையறியாது வருந்தியபோது, அருச்சுனனைக்கொண் டறிவித்து அவனை முடிப்பித்த அன்பினை நினைப்பேனோ? அஸ்வத்தாமன் பாசறையுத்த நடத்தப்போகிற தறிந்து, எங்களைத் தனியே கானகத்திற் கழைத்துச் சென்று, ஓரிரவெல்லாங் காத்த ஊக்கத்தை நினைப்பேனோ? அஸ்வத்தாமனவ்விரவிற் செய்த கொடுமைக் காற்றுளாய்த் திரௌபதிகொண்ட சபதத்தை ஒருவாறு முடித்தருளிய உண்மையை நினைப்பேனோ? துஷ்டசன நிக்கிரகமெல்லாந் துலைத்தபின்பு சிஷ்டசனராகிய வெங்களைப் பரிபாலிக்கவேண்டி, திரிதராஷ்டிரன் காந்தாரியிடத்தி லழைத்துச் சரண்புகுவித்து, என் பெரிய தாய் தனக்கிட்ட சாபத்தையும் வருந்தாதேற்று, அஸ்தினபுரவரசாட்சியை யெனக்கொப்புவித்து, உயிரற்றுதித்த பரிச்சித்துவை யுயிர்ப்பித்துக்கொடுத்து, அஸ்வமேத முதலிய சற்கருமங்களை யெல்லாம் நிறைவேற்றி யாட்கொண்டருளிய அருமையை நினைப்பேனோ? ஆ! ஆ! இனியென்னென்று நினைக்கப் போகின்றேனென்று இவ்வாறு பலவாறாய்ச் சொல்லிப் புலம்பினர். மற்ற வீமனாகிய தம்பியர் நால்வரும், திரௌபதி, சுபத்திரை, உத்தரை, இம்முதலானபேரும், தங்கட்கவர்செய்த உபசாரங்களையும் உறுதிகளையும் உள்ளத்தி லெண்ணி யெண்ணி வருந்துவதானார்கள்.

அருச்சுனன் துவாரகைபோய் மீண்ட சருக்கத்தோடு

மகப்பிரதானிசபர்வம்

முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:







ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீ மஹாபாரதவசனம்.

## பதினேழாவது

# மகப்பிரதானிகபர்வம்.

———(*)———

### கண்ணன் துதி.

பிறைசூடு வேரனுமரி பிரமாவு மாதிநம பெருவான மாதிநில வரைநாச காரிநம
துறைகூறு வாதருள் மிருளான பாதநம சுருபாவெ ணுவுருகு மவர்காணு சோதிநம
வரைகூவி நாயனைய் வெனையாளு பாதநம வமரேச ராலுமறி வரிதாய பாதநம
மறைசூடி காபரண வணியான பாதநம மதுசூத னயநம மதுசூத னயநம.

### சூதபுராணிகர் வாக்கியம்.

[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு அந்திய பஞ்சகத்தின் மூன்றும்பாகமாகிய
முசலபர்வத்தைக்கூறிய வைசம்பாயன முனிவரை ஜெனமேஜெய மகாராஜன் பணிந்
தெழுந்து, சுவாமி! தருமராஜன் தனது தாய்தந்தையர் முதலிய பேர்கட்கெல்லாஞ் சஞ்ச
யன முதலிய கடன்களை நிறைவேற்றி அஸ்தினபுரத்தி லரசியற்றுங்கால் துவாரகையிற்
கண்ணனைக் காணச்சென்ற கண்ணுவராதி முனிவர் மூவரை யாதவ வமிசத்தினர் செய்த
பரிகாசத்தா லக்குலமுழுவது நாசமாகச் சாபம்பெற்றதைக் கிருஷ்ணமூர்த்தி யறிந்து ஓர்
திருவிழாவை முன்னிட்டு யாதவர் யாவரையு மழைத்துக்கொண்டு கடலருகிற் செல்ல,
அப்போதவர்கள் மதுவுண்ட வெறியினு லொருவரை யொருவர் பகைத்துமாள அக்காற்
றப்பிய தாரகனைக் கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனிடத்திற்கேவி ஸ்திரீசனங்களைத் துவார
கையில் விடுத்து வசுதேவருக்கு நடந்தனவு நடக்கப்போகின்றனவுங்கூறித் தனியே கான
கஞ்சென்ற பலராமரைக்கலந்து இருவரும் பரமபதமடைய, அஸ்தினபுரியில் தாரகன்
வந்து கூறிய சேதிகேட்ட தருமனுத்தரங்கொண்டு அருச்சுனன் துவாரகைக்கு வந்து
யாவரு மிந்திரப் பிரஸ்தம்போய்ச் சேரும்படி முரசறைவிக்க, அதுகேட்டவுட னுயிர்

நீங்கிய வசுதேவருக்கு மவர்பத்தினியர் நால்வருக்கு மீமக்கடனுதிகள்முடிந்தபின்புகாட்டிற்சென்று பலராம கிருஷ்ணனுக்கும் பாடுகொடு விதிநடத்தித் துவாரகைக்குமீள, உடனேயத்துவாரகையைக் கடற்கொண்டு போன துகண்டு சகலாளங்களையு மழைத்துக்கொண்டுபஞ்சவடி தீர்த்தத்தைப் பலதுன்போடுத்தாண்டிகுருநாட்டெல்லையைச்சேர்ந்துகிருஷ்ணமூர்த்தியின் பௌத்திரனுகிய வச்சிரதேவன் முதலிய பங்காளிகள் மூவருக்கு மிருந்திருக்கும் பூஸ்திதியாதிகளைப் பகுத்துக்கொடுத்து இந்திரபிரஸ்தத்திற் கொண்டுபோய்விடுத்துப் பலராமகிருஷ்ணன் பரிசுகூற, அதுகேட்டனுமரனஞ்செய்தவவர் தேவிமாருக்கு மருங்கடன் முடித்து வேதவியாசரைக்கண்டவரனுக்ஞையின்படி அத்தினபுரிக்குப்போய்த்தருமனுதியர்க் கறிவித்தவரையிலுள்ள சரித்திரங்களையெல்லாம் சாங்கோபாங்கமாய்க்கேட்டுத்தாபத்திரியங்கடந்தேன் இப்பால் நான்காம் பாகமாகிய மகப்பிரதானிகபர்வத்தையுந்திருவாய்மலரவேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.]

---

## முதலாவது,

# பாண்டவர்துறவெய்திய சருக்கம்.

———:o:———

### துதி.

பறந்ததண் பரவையு ணீர்தோறும் பரந்துளன்
பரந்தவண்ட மிதென நிலவிசும் பெழிவரக்
கரந்தசில் லிடந்தொறு மிடந்திகழ் பொருடொறுங்
கரந்தெங்கும் பரந்துள னிவையுண்ட கரனே.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! அஸ்தினபுரத்திற் றருமனுதிய பாண்டவர்களுந் திரௌபதிமுதலானபத்தினிமார்களுந் தங்களுயிருக் குயிராயிருந்து பாது காத்துவந்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பரமபத மடைந்ததைப் பற்றித் தாங்களடைந்த பரிபவங்களை யெல்லாம் ஒருவாறுமாற்றித்தேற்றிக்கொண்டனராக, அக்கால் தருமராஜன் இராஜமண்டபத்தைவிட்டு அந்தரங்கச் சாலைக்குட் புகுந்து, தம்பியர் முகங்களைநோக்கி. அப்பா சகோதரர்களே! நமக்குச்சகாயமாகிய கிருஷ்ணபகவானனவர்இப்பூவாசையைத்துறந்து சகல தேவரும்புகழும்படியான தமதுபரமபதத்திற்குக்குடிபோய்விட்டார். இனி நாம் இந்தப் பூமியை ஆண்டுகொண்டு ஆசையொழியாமலிருந்தால், இதுவரையிலும் நாம்பெற்றபிரதிஷ்டைகள்போய் அப்பிரதிஷ்டை யுண்டாகும். நாமும் நம்மிலிருக்கின்ற பஞ்சபூதங்களும் பஞ்சேந்திரியங்களும் பிராணவாயுவும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மயமென்று நிச்சயமாய் வையுங்கள். அப்பேர்ப்பட்ட ஆண்டவன் இவ்வுலகத்தை விட்டுத் தாண்டிய போது, இனிமேல் நாமிங்கே யிருக்கலாகாது. வடதிசைநாடி நடக்கவேண்டியதே, இஃது என்னெண்ணத்தில் தீர்க்கமாயிருக்கச் சொல்லுங்கள் என்று தருமராஜன் உசாவிய போது வாயுபூதத்திற் கொப்பாகிய வீமசேனன் வணங்கிச் சொல்லுகின்றான்.

---

#### தருமராஜன் தன்கருத்தின்படி தம்பியர்க்குந் திரௌபதிக்கு முள்ளவாறறிதல்.

ஓ எங்க ளருமையறிந்த அண்ணவே! தேவரீருரைத்தவழி பேனியைக் கொடுக்கும் மற்றவையெல்லாங் கானலைத் தண்ணீரென்றுகருதி, ஓடிப்பார்த்து விடாய்ப்பட்டுறுங் குந்தன்மையை ஒக்கும் இந்தப் பிரபஞ்சத்தி

ற்சனனமெடுத்துவந்தநாள்முதல் ஸ்ரீகிருஷ்ணபகவானுத்தரவின்படிக்குச் சகலசாம்பிராச்சிய வாள்வுகளும் அனுபவித்தோம். இப்போதவர் நடந்தபடிக்கு நாமும் இறந்து அவர் திருவடியைச் சார்வோம். ஊழ்வினையின் வண்ணம் யாவுமுடிவது திண்ணம். வேறு எண்ணங்கொள்ளவேண்டியதென்ன விருக்கின்றது? இனி நமது அபிமன்னு குமாரனாகிய பரிச்சித்தை இந்தப் பதினன்கு உலகத்திற்கும் பார்த்திபனுக்கிவைத்து, இப்போதே துறந்து இறந்துபோவது நன்று. இனிமேற் பட்டணத்திலிருப்பது காரியமல்லஎன்று வீமன்பேசி பணிந்தான். அப்பால் தருமநந்தனர் அருச்சுனனை நோக்கி, ஓ அஜேயஜய விஜயனே! சகல செயலுந் தெரிந்த நீ உன் சங்கதியைச் சொல்லென்றார். அதற்குவிஜையன்றொழுது, ஓ அண்ணலே! இவ்வுலகத்தை ஓரடியளந்த வாமனனாகிய கிருஷ்ணமூர்த்தி பூவிற்பிறந்து திருவிளையாடல் புரிந்த நாளெல்லாஞ் சிறந்த செல்வங்களை யனுபவித்தோம். அவரிறந்து போன பின்பு நாம் பூமியிலிருப்பது பெருமையல்ல இன்னு மிருக்க நினைத்தால் நமக்குயாதுண்டாம்? பிறவிக்கிடமாகும். இந்தச் சமூகவிசார பந்தத்தை விட்டு வடக்கே போய்விடுவது நன்மார்க்கம். துறந்து போவதற்கு வேத வியாசரிடத்திலும் பொருள் பெற்று வந்தேன். இனி யிருப்பது இறப்பதற்குச் சமமென் றிசைத்தான்.

இப்பால் தருமர் நகுல சகாதேவரைப் பார்த்து, ஓ கனிஷ்டர்களே! உங்கள் கருத்தென்னவென்றார். அதற்கவர்கள் சிரத்திற் கரத்தைக் குவித்துச் செப்புகின்றார்கள். ஓ குவளைமலர் மாலையணிந்த கோமானே! சித்திரவிசித்திரக் கோதண்டம்பிடித்தகிருஷ்ண பகவான் இந்தப் பூமியில் வாழ்ந்த நாள் வரையில், அவரோடு நாமுங் கூட வாழ்ந்தோம் அவரிப்போ திந்தப் பூமியைப்பிரிந்து போனதால், நாமும் பிரிந்து போய்விடுவோம். அவரைவிட்டு நமக்கென்னவாதாரமிருக்கிறதென்றார்கள். அப்பால் உதிஷ்டிரர் திரௌபதியைப்பார்த்து, உன்மனதிலிருக்கிற எண்ணத்தை ஒளியாமற் சொல்லென்றுகேட்டார். ஓ பொய்யுரையாத புண்ணியப் பொருளே! தாமரையானது தண்ணீரிருக்கிற பரியந்தந்தழைத்து படர்ந்து அலர்ந்து மலர்ந்து விருத்தியா யிருக்கும். அத்தண்ணீர்வரண்டாற் கூடவே உலர்ந்துபோம். அத்தன்மைபோல் நமக்கு சகல விதத்திலு மாதரவாயிருந்த சித்ரன் போய்விட்டார். இனி உங்களெண்ணமுங் கதியுமெதுவோ? அதுவே எனக்கு மாதவமென் றுரைத்தனள்.

---

## தருமராஜன் பரிச்சித்துவுக்குத் திருமுடி புனைதல்.

இவையனைத்தையுந் தருமபூபதிகேட்டு, சுபத்திரையை யழைத்து, அம்மா! நாங்கள் துறந்துபோக விருக்கின்றோம். நீ இவ்விடத்திலிருந்து எங்கள்குருகுலத்தையும்உங்கள் யாதவ வம்சத்தையும்வகித்து, அடிமைகள் இந்தப்பூமிகளுக்கெல்லாம் பெண்ணரசாகத் திருந்தி இயாவரும் புகழ்ந்துவணங்கப்பட்ட அபிமன்னு குமாரன் பரிச்சித்து உன்னை வணங்க அவனுக்கு நீ துணையாய்ச்செறிந்து கிருஷ்ணபகவானுக்குப் பேரனாகிய வச்சிர தேவனையும், சாத்தகி குமாரனையும், கிர்தவன்மன் புதல்வனையும், விசாரித்துக் கொண்டு, எல்லாரினுஞ்சிறந்த எசமானியாகி, மதிமந்திரித்தன்மையும், நால்வகைச்சேனையாதரிப்பும், விதிவிசாரணையும்வகித்து, அடிமைகள் முதலிய சனங்களை யெல்லாஞ் சவரட்சனை பண்ணிக்கொண்டு சம்பிரமமா யிருவென்று சொன்னார். இப்படி முத்தார் கூறிய சொல்லைக்கேட்ட சுபத்திரை ஆவென்றார்த்து, கண்களிற் சலஞ்சோரவேர்த்து, பெருமூச்சுவிட்டுப் பூமியிற் படிந்தாள், அவள் பட்ட விகாரத்தையும், தருமநந்தனர் ஒருவாறு தேற்றினர். அப்போது தன் பெண்சாதியும் வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன், இவர்கள் பெண்சாதிகளுஞ் சோர்ந்து, எங்களுக் கென்னகதி யென்று, சேர்ந்து கேட்டார்கள். அதற்கவரவர் நீங்களுஞ்சுபத்திரா தேவியுட னிருந்து, அவர்களைப் பார்த்து, அந்தம்மாள் சொற்படி நடந்து, கற்புக்குப் பயந்து, அற்புதமான செல்வத்தை யடையுங்கள். உங்களுடைய பேரன் துரைத்தனமாகையால் ஆருக்கென்ன தாட்சி? ஒரு குறையுமில்லை. என்று யாவருக்கு நிறைவாகிய ஆசீர் வசனம் புகன்று, பரிச்சித்துவை யழைத்து இதனைச் சொல்லுகின்றார்.

அப்பா சுபத்திர சிகாமணி! நீ சந்திர குலத்திற்பிறந்துதளர்ந்து சிறந்து வளர்ந்த

மெஞ்ஞான துல்லியனுகையால், இத்தவம்ச
த்தைப்பிரபலிக்கப்படுத்தி, நீயுங்கனவானுகி,
நீதி சாஸ்திரந் தரும சாஸ்திர மறிந்து,
முறைப்படி யரசு புரிந்து, பாப புண்ணியம்
பார்த்துப் பாராளவேண்டும். என்று பின்
னுஞ் சொல்லவேண்டிய விதி முறைகளை
யெல்லாம் விளங்க உரைத்து, உடனே சிங்
காசனத்திலேற்றி, சிரேஷ்டமாகிய நன்னு
ளில் திருமுடி புனைந்து, அஸ்தினுபுரத்திற்
கதிபதியாக்கி, சகல சேனுசைனியங்களையும்
புறசனங்களையும் வருவித்துப் பேரனுக்கு
வணங்கப்பண்ணி கிருபாசாரியரைப் புத்தி
யுத்திகட்குக் கர்த்தாவாயிருக்கநேமித்துவை
த்து, அவர்கையிற்பரிச்சித்துவைப் பிடித்து
ஒப்புவித்து, காக்கக் கடனுனக்கென்று கை
யடைகொடுத்து, உயிச்சனைப் பெரியமந்திரி
யாக்கி, உன்னடைக்கலம் பிள்ளை யென்று
தாக்கி, மீட்டும் பரிச்சித்துவை நோக்கி, எந்
தெந்தராஜர்களுக்கு என்னென்ன மரியாதை
யோ, அந்தப் பிரகாரம் அசையாமல் நடப்
பித்து, அவாளவாளத்துப்படிக்கு கப்பணம்
பகுதி, திறை, தீர்வை, வாரம் இவை கொடு
க்கில் அதைத்தடுக்காமல் வாங்கி, நாட்டிலே
பயிரிடுங்குடிகளுக்கு ஆறிலைந்துபங்கு கொடு
த்து ஒருபங்கு நீ யெடுத்து, இவ்விதமாக
நடுநிலை குன்றுமல் இராச்சிய பூச்சியனுய்
நீடூழிவாழக் கடவதென்று வாழ்த்தி ஆசீர்
வதித்து, உடனே முத்திரை மோதிரமு முத்
திரை முடிவைத்த செங்கோலு மளித்து,
அநேக புத்திமதிகளியம்பி, தபோதனர்,
பிராமணர், தரித்திரர், புலவர் இவர்கள் முத
லிய பேர்களுக்குப் பசுக்கள், சுவர்னங்கள்,
பட்டுகள், வஸ்திரங்கள் முதலிய தானங்க
ளுங் கொடுத்து, மிகுந்திருக்கப்பட்ட பொக்
கிஷங்களை யெல்லாம் பரிச்சித்து மகாராஜ
னுக்கு ஒப்புவித்து, தங்களைப் பிரியமாட்டா
மற் கவலைப்படுகிறபேர்களுக்கெல்லாங்கவலை
தீர நல்ல வசனங்கள் கூறித்தேற்றி இயாவ
ரிடத்திலுஞ்செலவு பெற்றுக் கொண்டு, ஆர
கேயூர மணிகுண்டலகிரீடாதிகளைக் கழற்றி
வைத்து அவ்வவ்வைபவங்கடோறும்உருத்
திராக்ஷவணிகளைப்புனைந்து, பொற்கலையுரி
ந்துவற்கலைதரித்துசகல வாசாபாசங்களையும்
விட்டு, தன்னைப் போலவே தவவேடங்
கொண்டு நான்கு தம்பிமாருந் திரௌபதா
தேவியும் ஒன்றுபட்ட மனத்தினராய் வர
அவர்களோடுங்கூடி நடக்கின்றுர்.

### தவவேடங்கொண்டு வெளிப்பட்ட தரும னுதியர்க்கெதிரில் வேதியரிருவர் வியாச்சிய முறைத்தல்.

இவ்வாறு பாண்டவர்களுந்திரௌபதி
யுந் தவக்கோலங்கொண்டு வெளிப்பட்ட
போது இரண்டு பிராமணுள் தமக்குள் ஓர்
வழக்கை முன்னிட்டு எதிர்வந்து நின்று, ஓ
தருமமூர்த்தி! நீர் நீதிநெறியுஞ் சத்தியமுந்
தப்பாமல் இராச்சியமாண்டு, ஒருவருடைமைக்
கும் ஆசைப்படாமல் வாழ்ந்தவர் நாங்களிரு
வரும் விவாதப்பட்டு வந்தோம். எங்கள் நூா
யத்தைக்கேட்டுத் தீர்ப்புச்சொல்லவேண்டும்.
அஃதென்ன வியாச்சியமென்றுல், இதோ
நிற்கின்ற பிராமணன் எனக்கு ஒரு மனையை
விற்றுர். நானதை விலைகொடுத்து வாங்கி
என்னுதீனமாக்கிக்கொண்டு வீடுகட்டவேண்
டுமென்றெண்ணி அஸ்திவாரம் வெட்டுகை
யில் அத்த வெட்டுக்குழியில் திரவியத் தபலை
களிருந்து அகப்பட்டன. அவற்றை நானெ
டுத்துக் கொண்டேன். அந்தத் தனத்தைத்
தனக்குக் கொடுக்கச் சொல்லிக் கேட்கின்றுர்.
நான் விலைக்கு வாங்கிக்கொண்ட நிலத்தி
லிருக்கின்ற சலநிதிபாஷாண நிதிநிக்ஷே
பாதிகள் என்னுடையதென்கின்றேன். நானு
னக்கு மனைமாத்திரம் விற்றேனே யொழிய,
எங்கள் பெரியவாள் புதைத்துவைத்த ரொக்
கத்தையும் விற்றேனு வென்கிறுர். நிலத்தை
வாங்கிய என்னதிர்ஷ்டமென்று நான் சொ
ல்லுகிறேன். இதுதான்என்னுடைய வியாச்
சியமென்றுன். இவையனைத்தையுங் கேட்ட
தருமநந்தனர் இன்னெருவனை நோக்கிஉன்
வியாச்சிய மென்னவென்றுர். அதற்கவன்
ஐயா! நானிவருக்குமனையைவிற்றேன். அதி
லிருந்த தனத்தை விற்கவில்லை. தனம்
எனது. நிலம் இவரது. இதுதான் என்
வழக்கென்றுன். உபயவாதிகளின் பேச்சைக்
கேட்ட தருமநந்தனர் இளவரசனுகிய வீம
னைப்பார்த்து, தம்பீ! இதற்கென்னசொல்லு
கிறுயென்று கேட்டனர். அதற்கு வீமன்
சொல்லுகின்றுன்.

ஓ அண்ணலே! இந்தப் பிராமணுளிரு
வரும்நேற்றையதினம் என்னிடத்தில்வந்து
விபகாரஞ் சொல்லிக் கொண்டார்கள். அஃ
தெவ்வாறெனில், இவரிடத்தில் மனைவாங்
கிக் கடைக்கால் வெட்டினேன். அதிற் பொற்

காசுள்ள தபலைகளகப்பட்டன் அவைகளை யெடுத்துக்கொண்டு இவர் வீடுதேடிப்போய் வைத்து, ஐயா! உம்மிடத்தில் மனையைக் கொண்டேனே ஒழிய, பொன்னையும் பொருளையுங் கொள்ளவில்லை, அப்படிக்கிருக்க, அந்தமனை அஸ்திவாரத்தில் பொருளகப்பட்டன, அவற்றை நீரெடுத்துக்கொள்ளும் எனக்கு ஒருவருடைய சொத்துவேண்டாம். நான் விலைதந்து வாங்கிய மனையொன்றே போதும். அதிக சொத்துக்கு ஆசைப்பட்டால் எமபாச மிருக்குமென்றேன். இவர் வேண்டாமென்று மறுத்து என்வீட்டிற்கொண்டுவந்து வைத்துவிட்டனர். என்று ஒருவர் சொல்லினர் அதுகேட்ட நான் மற்றவரைப்பார்த்து, நீரென்ன சொல்லுகிறீரென்று கேட்டேன். அதற்கவர்சொன்னதாவது, நானிவருக்கு மனுவிற்றேன். அது கிழக்கு மேற்கு அடி இவ்வளவென்றும் தெற்குவடக்கு அடி இவ்வளவென்றும் ஆகக்கூடிய அடிகளுக்கு நீதியடிக்கோலாற் கூடிய குழி இவ்வளவென்றும், நாற்பங்கெல்லை காட்டி, சர்வவில்லங்கசுத்தியாய் சலநிதிபாஷாணம் மாவடை, மரவடை, நிதிநிக்ஷேபம் இவை யாவுமுட்பட சந்திரசூரியருள்ளவரைக்குந் தானவிக்கிறையங்களுக் குபயோகமாய், இவரே அனுபவித்துக் கொள்ளுவதென்று கையெழுத்திட்டு, சாட்சிகள் சகிதமாய்ப் பொருளறவிற்று விலைதரக்கொண்டேன். அந்த மனை அஸ்திவாரத்தில் சில திரவிய மகப்பட்டதாய்க் கொண்டுவந்து கொடுத்தார். உமக்கு விற்றுப்போட்ட மனையிலிருந்து என்ன அகப்பட்டாலும் உம்முடைய சொத்து அவற்றை நான் கைப்பற்றுவேனாகில் எனக்கு நரகங் கிடைக்கும். என்று தடுத்து இவர் வீட்டிற் கொண்டுபோய் வைத்துவிட்டேன். அப்பொருளுக்கு மெனக்குமியாதொருசம்மந்தமுமில்லையென்றனர். இப்படியாக நேற்றையதினம் இவர் எனக்கு வேண்டாமென்றும் அவர்தனக்குவேண்டாமென்றுஞ் சொல்லி, இன்றைக்குத் தேவரீர் சன்னிதானத்தில் மனையை வாங்கினபோதே அதிலுள்ள பொருளெனதென் றொருவரும், மனையை விற்றேனே யொழிய அதிலென் பெரியோர்கள் சேமித்து வைத்த பொருளை விற்றிலேனென் றொருவருமாய்வந்து நாப்புரட்டிப் பேசுகின்றார்கள். நேற்றுப் பேசியது சௌமியம். இன்று பேசுவது வயிராக்கியம் ஆகையால், இத்தினங் கலியுகம் பிறந்து விட்டது. கலிபுருடன் மேலிட்டான். இனி நாமிருக்கவேண்டிய ஜாக்கிரதையி லிருக்க வேண்டும். என்று சொல்லி வீமன் நகைத்தான். அப்போது தருமராஜனும் புன்னகை விளைத்து,ஓபிராமணர்களே! இவ்வுலகத்தை யாளப்பட்ட பரிச்சித்து மகாராஜனுடன் சொல்லி உங்கள் வழக்கைத் தீர்த்துக்கொள்ளுங்களென்று அனுப்பி விட்டனர்.

---

பாண்டவர்கள் தம்மோடு பரதவித்துவரும் பரிசனங்களைத் தக்கபடி தேற்றி விடுத்து, நாய் வடிவெடுத்து வந்த தரும தேவதையோடு வழி நடத்தல்.

இப்பாற்பாஞ்சாலியுந் தம்பிமார்நால்வருந் தன்னைத் தொடர்ந்துவரத் தக்கதாய்பரிச்சித்து முதலிய பரிசனங்கள் புடை சூழத் தருமராஜனடக்கையில், ஒருசுணங்கன் இவர்களைப்பற்றிப் பின்னாற்சென்றது, அந்தநாயினாலே தாங்கள் பெறப்போகிற சாம்பிராச்சியம் இன்னதென்று தெரியாமல், அதையதட்டித் துறத்தினார்கள். அப்படி துரத்தியும் அது இவர்களைப் பிரியாமற் பருந்தினிழல் போற் பின்னேவர, அதைப் பார்த்துக்கொண்டு அஸ்தினா புரத்து இராஜவீதியி னடந்து திருப்பங்கடந்துபோகின்றார்கள். அப்போது பட்டணத்திலுள்ள நான்குவருணத்தாரும் பதினெட்டுக்குடித்தனத்தொழிலாளர்களும்,ஸ்திரீசாதிகளும், புருஷர்களும்,பாலியர்களும், உயிரிழந்தஉடல்போல் மனநொந்துவாடி, மிகுந்தகிலேசத்துடனே நெட்டுயிர்த்து, நீதிமானாகிய தருமராஜனுக்கு இரண்டு பக்கங்களிலும் ஆசைகளுட னடந்து அலைந்து, குலைகுலைந்து, தலைவிரிந்து, நிலைதளர்ந்து,நெருங்கிமுகத்திலறைந்துகொண்டு முறையோமுறையோஎன்று கதறி அழுகின்றார்கள். அவர்களுக்கெல்லாம்பாண்டவர்கள் ஆதரவு சொல்லி, மனது பரிக்கும்படியாகிய வழிகாட்டி, மரியாதையும் உபசாரமும் விரிவாகக்கூறி விடுத்து, தாங்கள்பூசிக்கப்பட்ட அக்கினியைத் தவுமியாசிரியரிடத்திலளித்து அவர் பாதங்களிற் சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி, ஆறுபேரும் அவருடைய அருள் வாழியேற்று விடைவாங்கிக்கொண்டுபௌத்திரனாகிய பரிச்சித்துவுக்கு அநேக ராஜநீதி

யுரைத்து, அப்பா குருகுலமணியே கிருபாச்சாரியையும் தௌமியாச்சாரியையும் இடைவிடாமல் நேசித்துப் பூசித்து வருவையாகில், உனக்குராச்சியம் புறக்கிறநெளிவு பளுவில்லாமற் றெரியும். அதனாலுனக்கு ஆயுள் விருத்தியும்அஷ்டைஸ்வரியங்களுமுண்டாகும் நீ பட்டணத்திற்குச் செல்லுக, என்ற அப்பிவிட்டுக் கர்மபூமியின் றரிசனம்பெற்ற வரானார்கள்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே அப்போதங்கிருந்த அஸ்திணபுரத்துச் சனங்களும் உமது தந்தையாகிய பரிச்சித்துமகாராசனுநகரம்வந்துசேர்ந்து,பாண்டவர்களைப்பிரிந்த நலிவினால் மெலிவடைந் திருந்தார்கள் நாககன்னிகையாய் உலூகி அருச்சுனனைக்குறித்துப் பிரலாபித்து, அன்பனுடைய ஆதரவான சொல்லினாற்றேறி, தனக்குமுன் அஸ்திணபுரத்தில் வந்திருக்கின்ற பரிச்சித்து-சுபத்திரை-உத்தரை-இவர்முதலிய பேர்களிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு நாகலோகம்போய்ச்சேர்ந்தாள் பாண்டியன்பெண்ணாகிய சித்திராங்கதை பேரப்பிள்ளையினிடத்திலும் பெண்பிள்ளைகளிடத்திலுஞ் சொல்லிக்கொண்டு, புருடனாகிய கிரீடியை நினைத்துக் கிலேசித்து, தன்பிள்ளை பப்புருவாகனைக் குறித்து அங்கலாய்ந்து, அப்பாமகனே! துவாரகாபுரியோ உன்னுமிருக்குந் துணையாயிருந்தது, இந்த மண்ணே உனக்கு எமனாய் வந்தது! என்றுஏங்கிவிசனமோங்கி மதுரைமா நகரம்போய்ச் சேர்ந்தாள். மற்றபெண்களெல்லாஞ் சுபத்திராதேவியின் மகத்துவச் செல்வத்தினால் வாழ்வுபெற்று அஸ்தினபுரியிலுற்றிருந்தார்கள் இப்பாலிவர்களையுங் குடிபடைகளையுஞ்சவரட்சணைபண்ணிக்கொண்டு அரசாட்சி செலுத்திவந்த பரிச்சித்து வானவன் தேவேந்திரன் கொண்டாடும்படிக்கும் அன்னிய தேசாதிபர் அடங்கி நடக்கும்படிக்கும் கலிகடந்து, துட்ட நிக்கிரகசிட்டபரிபாலனம்பண்ணி, எட்டுத்திக்கிலுங் கிள்ளாக்கும் செல்லவிட்டு, மட்டுப்படாத பெருமிதத்துடன் தருமசாஸ்திரம்-மனுசாஸ்திரம்-இவ்விரண்டையுங் கண்மணிபோற் கொண்டு, சுபத்திராதேவி முதலிய பாட்டிமார்களையும் பெரியவர்களையுந் தினந்தினம் வழிபட்டு, அவர்களைத் தன்னுத்துமார்த்தக்கடவுளாகத் துதித்து மதித்து, பிதுர்ப்பூசைகள் முதலியனவுங் குறைவில்லாம னடத்தி, சிவாலயம் விஷ்ணுவாலய முதலியவைகளைத் தினமும் விசாரணை செய்துகொண்டு, தன் பட்டணத்திலுள்ள பிரசைகளுக்குத் துற்சோபம்-துற்பயங்கரம்-துற்மரணம்-துற்வியாதி-இவைகள் சம்பவிக்காமல் நெடுங்காலந் துரைத்தனஞ் செய்து வந்தான்.

பாண்டவர் துறவெய்திய சருக்கம்-முற்றிற்று.

---

## இரண்டாவது

## பாண்டவர்கள் உத்தரதிசையடைந்த சருக்கம்.

கண்ணன் துதி.

சோம னுதிசுடர் பூமு னயபொரு டோமி லாதவுயிர் தோறு மேவிநம
நாம நாடுருவம் யாவு மாகியொரு நாம ரூபமறு நாத பாதநம
தாய்மு னாகிவரு சார்பி யாவுநின தாள லாதறிவி லாத தாபதர்கள்
வாய்ம னலயம்விடாத சோதிநம வாம னயநம வாம னயநம.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! தருமராஜனும் பின்னவர்களும் பொன்னனைய பாஞ்சாலியுந் துறவறமுற்ற பெரியவர்களைப்போற் றவவேடம்பூண்டு ஆயுதமொழித்துப் போகையில், அவருளருச்சுனன் மாத்திரங்காண்டீபத்தைக் கைவிடாதவனாகி, அந்த வில்லுடன்மேலான கதியைப்பெறவேண்டு மென்னும் விருப்பங்கொண்டு உறுதியுடன் சென்றான். அப்போது தருமதேவதையாகிய நாயும் இவர்களைவிட்டு நீங்காதவினைபோற்றொடர்ந்துசென்றது. இப்பால் யாவரும்உலகுக்கு அன்னையாகிய பாபவிமோசன பாகீரதியைக்கண்டுசாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து, பின்பு சங்கல்பங்கூறி ஸ்நானம்பண்ணிக் கரையேறி, செபதபமுடித்து,இஷ்டதெய்வப் பிரார்த்தனையியற்றி, மந்திரவுருவேற்றி,

ஆசாபாசமுதலிய சங்கற்ப விகற்பங்களையும் விட்டுத்திடச்சித்தப்பட்டு, கிழக்குத்திசையே நடந்து, இனிமேற் சச்சிதானந்த கதிவிஞவாய் இதரகெதிகள் பாரார்தவர்களாய்க் கீழச் சமுத்திரத்தைக் கண்டார்கள்.

---

அக்கினிதேவ னருச்சுனனிடத்திருந்த காண்டீபத்தை வருணனிடத் தொப்புவித்தல்.

அவ்விடத்திற் சத்திய தாவினையுடைய அக்னிதேவன் மூன்றுமுகங்களாய் ஆட்டுக்கடாவின்பேரி லேறிக்கொண்டு அஷ்டதிக்கும் பிரகாசிக்கும் வெட்டவெளிச்சச்செம்மேனி படைத்து நாகரத்தின மாலை ஜொலிக்க வாசனையுள்ள மலர்மாலைகள் துலங்க திவ்விய கிரீடகாந்தி திசாதிசையுமொய்க்க, கிருபாரசம்பெருகிய கண்களிலங்க, சிறுநகையுடன் பாண்டவர்களுக்குக் காட்சியானன். அவனையவர்கள் கண்டு களித்துத் தெண்டனிட்டுக்கொண்டு, ஓ செஞ்சுடர்த்தேவே! தேவரீர் எங்களுடைய தபோபலத்தால் தெரிசனங்கொடுத்தீர். தற்செயலாய்த்தேவரீர் எங்களுக்கெதிர்தோன்றிய எண்ணமென்னமோதெரிவிக்க வேண்டுமென்றார்கள். அதுகேட்ட வக்கினிபகவான் பக்கென்று சிரித்து, நீங்கள்ராச்சியபாரம் புரிவதைத்துறந்து தபோநிஷ்டராய்ப் புறப்பட்டீர்கள். உங்களில் அர்ச்சுனன் கரத்தில் மாத்திரம் வில்லிருப்பானேன்? தேவகாரிய முடியும் பொருட்டு வருணதேவன் கையினின்றும் வாங்கிக்கொடுத்தவில்லைக்கொண்டு பாரத யுத்தம் பதருமல் முடித்துப் பூபாரந் தீர்த்து நீங்களுந் துறந்து சிறந்த தபசிகளாய் வடதிசை நோக்கிப் போகின்றீர்கள். ஆதலால் இந்தக்காண்டீபத்தைச் சமுத்திரத்திற் போட்டுவிட்டு போங்கள். என்று தனது சுடர்க்கரத்தை நீட்டிக்காட்டினன். உடனே அர்ச்சுனராஜன் அக்காண்டீபத்தை அவன் காண்பித்தவிடத்தி லெறிந்துவிட்டு, அவ்வக்கினிக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு ஆசிர்வாதம் பெற்றான். அப்போதே அக்கினிதேவன் மறைந்து போயினன்.

---

பாண்டவர்கள் பூப்பிரதட்சணஞ் செய்தல்.

இப்பாற்பாண்டவர்கள் பூப்பிரதட்சணம்பண்ணவேண்டி வெகுதூரந் தெக்ஷண முகமாய்ச்சென்று, மேற்குதிசையிற் றிரும்பி, மூங்கில்களெரியப்பட்ட காடுகளும் மலைகளுங்கடந்து மேற்கு சமுத்திரத்தை யடர்ந்து, அங்கிருந்து வடக்கு முகமாய் நடந்து ஸ்ரீ கிருஷ்ணபகவானிருந்த துவாரகை சமுத்திரத்திலமிழ்ந்த இடத்தைத்தரிசித்து, அப்பாற்பராசத்தியான பார்வதிபிறந்த பதினுயிரம் யோசனையுயர்ந்த இமோர்ப் பருவதத்தைக் கண்டு கைதொழுது, அதற்குச் சமீபத்திற் போய் நின்றார்கள். அந்தநாயும்அவர்களுடன் விடாது தொடர்ந்துவந்தது அப்போதம் மலையிலிருந்தெழும்பிய காற்றினுலும் அதை மூடிக்கொண்டிருக்கின்ற பனியினுலும்-மலைத்தேன் முதலிய பெருக்கினுலும்-அருவி பெருகிவருகிற ஆரபாரத்தினுலும்-வழிநடப்பாலானஇளைப்பாறி, சரீரத்திற்குண்டானகளைமாறி, அந்தமலையை முத்திக்குவித்தாகிய மூர்த்திமலையென்றெண்ணி, அதனதுஅழகும்-பிரகாசமும்-பான்மையும்-சிறப்பும்- விசாலப்பரப்பும்-சகலவளச்செழிப்பும்- நவமணிமுதலியபொன்னருவிகளின் கொழிப்பும்-உயர்ந்த சோலைகள் தழைப்பும்-பெரியவர்கள்தவமிழைக்கின்ற பெருமையையும்- திரிமூர்த்திசொரூபமாய் விளங்கிய அருமையும் பார்த்து அதன்மே லேறினர்கள்.

அப்போது தருமநந்தனர் தம்பிமார்களைப்பார்த்து, இதுவரையிலுங் கிழக்கு-தெற்கு-மேற்கு-இம்மூன்று திக்கும் போய் மீண்டுவந்தபிரகாரம் வடக்குதிசைபோய்வரக்கூடாது. வாயுவைக்கும்பித்தடக்கி யோகமார்க்கங்கொண்டு, அந்தர கமனத்தினடக்க யோகமார்க்கங்கொண்டு, அந்தரகமனத்தினடக்கவேண்டும். நீங்களெல்லோரும் ஜாக்கிரதைப்படுங்கள். என்றுரைத்துத் தன்மட்டுந் திருத்தி வடதிசையைநாடி நடந்தனர் கனிட்டருந் திரௌபதியுந் தருமராஜனுடைய கண்ணருள்தாங்கி, அவரைவிட்டுப்பிரியாமற்சென்றார்கள். இவர்களைப்பற்றிய சுனங்கனு நடந்தது. அங்கே யக்ஷகின்னராதி விண்ணவர்களும் அவர்களுக்குரியஸ்திரீகளும் விமானரூடராயெதிராக அவர்களைப்பார்த்தும்பாரா

தவர்களாகி, பூமி, பூமியின்பக்கம், மலைகள் மலைச்சாரல்கள், வானுலகம்,வானுலகமார்க்கம், இவற்றிலொன்றையும் பாராமல், பிறையணிந்த வேணியனுகிய பிஞ்ஞகப் பெருமானது கயிலாசத்தைக் கருத்திலிருத்திக் கொண்டு, ஒரேதியானமாய் ஏமகூடஞ்சேர்ந்து, அப்பால் நிடதகிரிதாண்டி, அங்கேஆயிரம் பண மணிமகுடங்கள் மின்னுகின்ற ஆதிசேடன்போலொத்த கோபுரங்கள், உப்பரிகைகள், உன்னதஸ்தானங்கள் இவைகளில் தேவதைகளிருக்கப்பார்த்து, மகத்துவத்தையுண்டாக்கு மாதவர்கள்போல் மகமேருவுக்குச் சென்று வணங்கிக்கொண்டு, அந்தப் பொன்மலைக்கு மேற்பாரிசம்போய் பின்னும் உத்தரதிசையை நண்ணி விரைந்து செல்லுகின்றார்கள்.

---

### திரௌபதியும் வீமார்ச்சுன நகுலசகாதேவர்களும் வீந்து விண்ணுலடைதல்.

அப்போது மடமாதுனக்கியாகிய பாஞ்சாலிவாய்வறண்டு, மனமருண்டு, கண்களிருண்டு, நடைதளர்ந்து, ஆகாயத்தை விட்டெரிந்துவிழுகின்ற நட்சத்திரம்போற்குபீரென்று சோதியாய் நழுவி விழுந்தாள். மகமேருவில் விழுந்த திரௌபதியின் களேபரத்தை வீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் இன்னல்வருங்கண்டு, முன்னே செல்கின்ற நூல்வல்லானுக்கு நுவன்றார்கள். அச்சொல்லுக் கவர் சற்றேனும் வெருப்பும் விருப்புமில்லாதவராகி, ஊழனுபவிக்காமலொழியாது. அதற்கு நீங்கள் விசாரப்படுவானேன்? மற்றையர் நிற்காமல்வாருங்கள், என்றுகூறித் திரும்பி பார்க்காமற்போனார். அவரை வீமசேனன் பணிந்து, அண்ணலே! கூடவந்த திரௌபதியின் றேகம் நழுவிவிடும்படியான காரியம்யாதோ? இவளிடத்திலுற்றஅகாரியமென்ன? அதனையருள்செய்யவேண்டுமென்றிரந்தான். அதற்கறன்காளை சொல்லுகின்றார். அப்பனே! நம்மைந்துபேருக்கும்பத்தினியா யிருந்தவள் அர்ச்சுனனிடத்தில் மாத்திரம்மெத்த ஆசைவைத்திருந்தாள். தானெனுந் தன்மைபடைத்தவள். ஆனபடியாலிவள் முட்டின்றி முற்றும்வாராளென்றுசொலி ஆலசியமில்லாம லெட்டி நடந்தார் இப்படி விழுந்த திரௌபதியைத் திரும்பிப் பாராமற்போகின்ற தமையன் பின்னுல் தம்பியரு மோடினார்கள்.

அப்பால் மகாப்பிரகாசமா யிருக்கின்ற சகாதேவனுக்குக் கதிகுறைந்து, தடுமாறி, முகமாறி, பிராணவாயுதளர்ந்துகழன்று, சரீரம் விழுந்தது. வீமசேனன் தருமராஜனை நோக்கிஅண்ணு! இவன் யாவரினுந்தூயன் மூவருக்கு நேயன், நமக்கிளையசேயன் இப்படிக்கிருக்கத் தான் கலைகுறைந்து நிலைதளர்ந்துபோவானேன்? என்று வினவியவீமனைத் தருமராஜன் பார்த்து ஐயா! இச்சகாதேவன் மேலான அறிவிலேயுங் கற்ற வித்தைகளிலேயு நமக்குநிக ரொருவரு மில்லையென்று அகந்தைமருவி யிருந்தான். அதனுல் இறந்துபோனன். என்று செப்பி அப்பாற் போகும்போது நகுலன் கதியழிந்த ஜீவன்சிவனிலொடுங்கத்திடீரென்று வீழ்ந்தான்வீமனும் அர்ச்சுனனும் பார்த்துத் தருமராஜனுடன் வின்றார்கள். அதற்கவர் அப்பா சகோதரர்களே! நகுலன் நம்மிட அழகுக்கு மிஞ்சினவர்க ளில்லையென்றும், யாவரும் எனக்குப்பிந்தின சவுந்தரியத்தைப்பெற்றவரென்றும் அகந்தையடைந்திருந்தான். அதனுல்இந்த மரணம் வந்ததென்று சொல்லிக்கொண்டே போயினர். அப்பால் நெடுந்தூரஞ்சென்றபோது அர்ச்சுனனுக்குச் சரீரம் வேர்த்துப் பலங் குறைந்து, வேகங்குன்றி, விக்கலும், விம்மலுமுடைத்தாகி, கூண்டைவிட்டுப் பட்சிபறக்கும் பான்மைபோல் தேகத்தையொழித்துச் சீவான்மா புறப்பட்டுச் சென்றது. காயங் கவிழ்ந்து வீழ்ந்தது. இப்படி காண்டீபனிறந்த காட்சியை வீமன்கண்டு மெலிவுகொண்டு அண்ணு! விண்ணுட்டிறைவன் மகனுகிய வெள்ளைப் புரவியோன் வீழ்ந்தானென்றான்.

அதற்குத் தருமநந்தனர் அவ்வீமனைப் பார்த்து, யுத்தம்பண்ணுகிற இடத்தில் ஒரு நாளில் எல்லாரையுங் கொல்லுகிறேனென்று சபதம் பண்ணிக்கொண்டு போர்புரியும்போது சபதந்தப்பி, இரண்டு மூன்று நாளையில் வென்றான். இந்த இறுமாப்பிருந்த சொற்சோர்வினுலும், இன்னும் பலவாருய் நேரிட்ட துர்த்தோஷங்களினுலும் இந்தக் கதிநேரிட்டது. என்றுரைத்து விசனமில்லாமல் துறையாய் நடந்து, வானுலகத்திற்

பார்க்கப்பட்ட தேவஸ்தைகளுந் தேவஸ்திரீ
களும் அற்புதப்படும்படியாய்ச் சந்திரசூரிய
ரிருவரும் ஒருராசியில் நடப்பதுபோல் அந்
தரத்திற்போகின்ருர். அப்போது வாயுகுமா
ரனுனவன் வதங்கி வாடி தன்னுடைய தேக
நில்லாதென்று நாடி, தருமபூபதியைப்பார்
த்து, ஓ அண்ணலே! தேவரீரைப் பிரிந்து
நானும் நழுவிப்போகிறதா யிருக்கிறது. ஆ
தலால் இது என்னத்தினுலேயென்று கேட்
டான். அதற்கவர் வீமனைப்பார்த்து, தம்பி?
உன்னுடைய புஜபல் பராக்கிரமத்தினுலே
இயாவையு முடித்து வெற்றிபெற்ருய். ஆ
னுல் நீ எவர்களுடனும் இனியமொழிபேசி
யறியாய் கடகடவென்று வெடிப்பாய்ப்பேசு
வை. இதன்றியும் மிதமற்ற அன்னம் புசிப்
பாய். நெடுநேர நித்திரைசெய்வாய். இப்பே
ர்ப்பட்ட குற்றங்களினுல் நிறைதவங்குறைந்
துபோய் விட்டதென்ருர். அப்படியாவென்
று அண்ணனைத் தொழுதான். உடனேபிரா
ணவாயு புறப்பட்டுப்போயிற்று. மலைபோன்
றசரீரம் பூமியில்வீழ்ந்தது. அதைத் தரும
ராஜன் அறிந்துந் திரும்பிப் பாராமல், மக
மேருவைக் கடந்து, நாயுந் தானுமாக நட
ந்து போகின்ருர்.

---

## இந்திரனுக்குந் தருமராஜனுக்குஞ் சம்வாதம்.

இப்படி தம்பிமார் நால்வரையும் திரௌ
பதியையு மிழந்து தனிமையாய் வரப்பட்ட
தருமராஜனுக்கு நேரில், வச்சிராயுத பாணி
யான தேவேந்திரனுனவன் முப்பத்து முக்
கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம்
முனிவர்களும்புடைசூழ்ந்துவர அரம்பாஸ்
திரீகளும் யக்ஷ கின்னரர் முதலியபேர்களும்
வீணைவாசிக்க, குபேரன் வாயு வருணன் அக்
கினி ஈசானன் அட்டவசுக்கள்ஏகாதசருத்தி
ரரள் துவாதசாதித்தாள் மருத்துதேவதை
கள் காந்திருவர் வித்தியாதரர் இவர்முதலிய
பேர்களு மிவர்கள் பந்துமித்திரர்களும் பத்
துயோசனைப் பரப்பான ஓர் விமானத்திற்கு
அநேகரத்தின மாலைகளணிந்துபுட்பமாலை
கள் பிரகாசிக்கத்திணிந்து மிகுந்த சம்பிரமத்
துடன் கொண்டுவர, சாமகானங்களோடு
தாளமத்தள ஒலிகளுஞ் சிறக்க, பரதநாட்டி
யப்பாடலு முழங்க, புட்பமாதாவி ஆசீர்
வசனங்கூற, காமதேனு, கற்பகவிருட்சம்,
ஐராவதம், உச்சை சிரவம் இவைகளொருங்
குடன்வர, அகிற்புகை, சாம்பிராணிப்புகை,
தீபங்கள் தூபங்கள் முதலியன அட்டதிக்
கும் பரவி நெருங்க, குடை கொடி ஆலவட்
டம் கவரி இவையாதிகள் காற்றிசைத்தாட,
பூரணகும்பம் அஷ்டமங்கலம் நீராஞ்சனம்
ஆலாத்தி இவைகளொடுக்க, தேவதுந்துமி
குடாமுழா உடுக்கை துடி இவை முதலிய
வுங் கோஷிக்க. தேவதூதரும் ரம்பாஸ்திரீக
ளுங் கட்டியங்கூற, இவ்விதவைபவத்தோடு
செந்தாமரைப் பூப்போற் சிறந்த முகமும்
குவளைப்பூப்போலலர்ந்த ஆயிரங்கண்களும்
மந்தரகிரிபோன்ற தோளும், வீரமணியணி
ந்த தாளும் புன்னகையோடுவன்னவுடையு
முடையவனுகி, பாற்கடல்போல் விளங்கிய
வெள்ளை யானைமேல் விளங்கி, இயமதரும
ராஜ குமாரனுன தருமராஜகுமாரனுன தரும
ராஜனுடைய வலப்பக்கத்தில் வந்து நின்
ருன்.

அப்படி வந்து நின்றவனைத் தருமரா
ஜன் கண்டு கண்களித்து, இதென்ன ஆச்சரி
யம்! அடியேனுடைய தவப்பயனே? அல்
லது எனது பெரியோர்களிழைத்த யாகபல
னே அதிதி அப்பியாததிகள் முதலிய அந்
தணர்க்குக் கொடுத்த தானபலனே? வித்வா
ன்கள் முதலிய பேர்களுக்குதவிய தியாகபல
னே? ஏழைகளுக்கன்னமிட்ட தருமபலனே?
மற்றியாதோ இன்னதென்றறிகிலேன். தே
வரீரெனக்கு எளிதிற் றரிசனமானீர். என்று
சாஷ்டாங்கமாகத்தண்டனிட்டு,சகலதுக்கங்
களும் நீங்கித் தோத்திரம்பண்ணி, ஓ தேவ
தேவனே! அடியேன் வினைவசத்தாலெடுத்த
தேகங் கர்மபூமியிலகன்று கழன்று போங்கா
லத்தில் என்னையொருபொருட்டாயெண்ணி
நீங்கள் காட்சியானது, காட்சியில்லாத பாக்
கியமே, மாட்சியின் மிக்க யோக்கியமே
என்று சந்தோஷங் கொண்டு, அடிக்கடி
தொழுது அன்புபாராட்டினுர். அப்போது
ஆகண்டலனவரைப் புகழ்ந்து, மகிழ்ந்து,
ஓ சந்திரகுலோத் துங்கனுன தருமநந்தன
மகாராஜனே! ஆதிசேட னுயிரம் பணமகு
டங்களினுற் ருங்கிய பூமண்டலத்தை விரு
த்தியாக்கி, தருமந் தப்பாம லரசு புரிந்து,
வருணுச்சிரம தருமம் வழுவாதளித்து, விர
தம், யாகம், ஓமம், பூசை, நேமம் இவைகளை
யெல்லாம் ஒழுங்குபடுத்தி வைத்து, எங்க

ளுடைய யோக்கியதையைக் காணவேண்டிப் பிரயாச மெடுத்துக் கொண்டு வந்த புனித ஞகிய நீர் பூமியிற் கால்வைத்தா நடப்பது? அதுதகுதியல்ல. ஆதலாலிந்தத் தேவவிமா னத்தி லேறிவரவேண்டுமென்று விரும்பிக் கேட்டுக்கொண்டனன்.

அதுகேட்ட தருமநந்தனர் சற்றேதயங்கி இரண்டுகைகளையுங் குவித்து உச்சிமேல்வை த்து, அண்ணலே? உலகத்தில்ஒருசரீரமுண் டானல் அதில் ஐம்பூதமு மமைந்திருக்கின் ருப்போல், நாங்களைவருந் தமையன் தம்பி மார்களாய் ஏகோபவித்துப் பெரியவர்கள் முதலிய பிரசைகளெல்லாங் கொண்டாடவா ழ்ந்தோம் எங்களைவர்களுக்கும் மெய்விரத முள்ள பாஞ்சாலியென்கிற தையலொருத்தி சமைந்தனள். நாங்கள் ஆறுபேருந்தேறி வருங்காலையிற் பிரியாப்பிரியமுள்ள ஐவர் என்னைவிட்டுப் பிரிந்துபோனர்கள். நான் ஒன்றியாய் வந்தேன். இப்போது நானிந்த விமானத்திலேறுவதற்கு மனமொப்பவில்லை யென்ருர். அதற்கு தேவேந்திர னவரைப் பார்த்து, ஓ தருமபூபதி! உமது தம்பிமாரும் மன திற்கிசைந்த தருமபத்தினியு மெடுத்த சரீரமழியாமல், இந்திரபதவி யடைவதற்குச் சுதந்தராளல்ல. ஆன்மாவொன்றே யடை யத்தக்க பாக்கியம்பெற்றவர்கள். ஆனதால் வழியிற்ருனே பழியானதேக நழுவப்பெற் ருர்கள், அவர்களை நீர் இவ்விடத்திற்காண லாகும். நீ ரவர்களைப்போலல்ல. தருமசத் திய வலுவேறிய சவமுற்றவ ராகையாற் சரீரத்துடன்வந்தீர். ஆதலால் இந்த இந் திர விமானத்தி லேறிக்கொள்ளுமென்று இ யம்பினன். அதற்குத் தராசைப்போலொத்த சரிமனம்பெற்ற தருமராஜன் ஒருவாறுமகிழ் ந்து, இதனைச் சொல்லுகின்ருர்.

ஓ சகிமணுளரே! நாங்கள் பட்டணம்விட் டுப் பயணமாகுமுன்னே இந்த நாய்எங்களை விட்டு நீங்காமல் தொடர்ந்துவந்தது. என் னும் பிரியோமென்றிருந்தவர்கள் வழியிற் பிரிந்தார்கள்- இந்தச் சுனங்கன் மாத்திரம் பிரியாமல், நாங்கள் நடந்தவழியெல்லாங் கடந்து, கடைசியில் என்னைத்தொடர்ந்து வந்தது. உம்முடைய கிருபாகடாட்சத்தி ஞல் எனக்குக் கிடைக்கப்போகிறகதி இதற் கும் அனுக்கிரகமாகவேண்டும். என்னையொ ரு துணைவனுக நம்பிவந்த இந்தச் செந்து வை யெப்படி கைசோரவிடுவது? எனக்கொ த்த துஇதற்கும்வருமென்றுஎண்ணுகிறேன் இந்தவரமாத்திர மீய்ந்து என்னையாதரியு மென்ருர். அதற்கு வெள்ளைவாரண னவ ரைப் பார்த்து, ஓ முரசக்கொடி வேந்தனே! நீர்கேட்பது தகாதகாரியம், சொற்கபதவிக்குக் கலுக்குண்டாகுமா? தருமமறிந்த தயாளுவா கிய நீருமிப்படி சாற்றப்போமோ? இப்படிக் கெப்போதாகிலு முன்பின் நடந்திருக்குமா! வழங்காதவழக்கத்தை விருதாவாய் வசனித் தீர். ஐயோ! எத்தனைகோடி வேள்வி-யாகம்-தடாகம்-சாலை-சோலை- சிவப்பிரதிஷ்டை-சத் தியநெறி-உத்தமவிரதம் இத்தனையுஞ்செய்த பேர்களுக்கு இந்தப்பதவிய ணுகுவது துஸ் தரமாச்சே. அப்பேர்ப்பட்ட பதவியை சுல பமாக வெண்ணச்சொன்னீர்! ஈடுபடாததை ஈடுபடுத்துவதனுற் பெரும்பாவமுண்டாம். உமது பெருமைக்கும் புண்ணியத்திற்கும் பழுதுண்டாகும். (ஞானமுங் கல்வியும் நய ந்த நூல்களும், ஈனருக்குரைசெயி லிடரதா கும்.) என்னும் நீதியையோதுந் தருமசா ஸ்திரத்தை மறந்துபோனீரா இந்தச் சுவா னத்தின் காற்று இதனது நீழல், இது உத றிய தூசி, இதுபடுத்த யிடத்தின் பரிசம், இது வாயவைத்துப்புசித்தசேடம், இவை யெல்லாங் கூடாதென்று வைதீகவொழுங் கில் வழங்கியிருப்பதைமாற்றிவிட்டு, அதை யும் விமானத்திலேற்றிவிடும்படிக் கியம்பி னீர். போகட்டும், இனியேனு மந்தச்சுணங் கனைத் துரத்திவிட்டுத்தேர்மேலேறிக்கொள் ளுமென்று இந்திரனுந்தேவர்களுஞ்செப்பி ஞர்கள்.

அந்தவேளையில்அறன்குமாரன்சிந்தை வருந்தி ஓஆகண்டலமூர்த்தி!உலகமெல்லா வற்றினும் பெரியது சுவர்க்கம். அதிலும் பெரியவர் தேவர்கள். அவர்களுக்கும் பெரி யவர் தேவரீர். தேவரீரிலும் பெரியவர் பிர கஸ்பதி பகவான். அவரிலு முயர்ந்தவர் அரிபரந்தாமன். அப்பேர்ப்பட்ட கிருஷ்ண மூர்த்திக்கு மைத்துனனுனேன். நீங்களித் தனைபேரும் எதிர்கொண் டழைக்கப்பெற் றேன். உங்கள் தரிசனங்கண்டேன். இனி நானடையத்தக்கபல னெப்பேர்ப்பட்டது? என்னை யடுத்தபேர்களுக்கு என்னதாட்சி? இப்படிக்கிருக்கஎன்னைத்துணையென்று நம்

பிவந்த சீவனை நீங்கி நான்மாத்திரமிந்நலத்தைப் பெறுவதுமுறையா? எல்லாவுயிரினும் பொருந்தி யிருப்பவன் ஈசன். இரக்கமில்லாத தேகமெடுத்தவன் நீசன். மானிடதேகம் பெற்றவர்களில் இவ்வளவு தூரம்வந்தவர்கள்யார்? சிலபேர்கள் அல்பவித்தையைக்கற்று, சொல்ப சீவனமுற்று, விற்பன விவேகமற்று, நீ நானென்று வாதிட்டு வழக்கிட்டுச் செத்துப்போய் விட்டார்கள். இந்த நாயாகிய செந்து கடைப்பட்டதானாலும், இவ்வளவுதூரம் நடந்து இந்தப்பூமியை மிதித்து, உங்களையுத் தரிசனங்கண்டபோது இதற்கு எப்படி பலன்கிட்டாமற்போம்? இந்தமட்டுந் தேவபூமிக்கு உடலுயிருடன்வந்த நாய்களெந்தநாய்கள்? அந்த நாய்களுண்டானாற் காட்டுங்கள். இந்தநாய்க்கு எந்தப்பதவி கட்டளையிடுகிறீர்களோ? அந்தப் பதவி யெனக்குப்போதும். நானும் இதனுடன்கூடயிருக்கிறேன். ஐயறிவுடையவர்களும், நான்கறிவுடையதுகளும்,வையகவாழ்விலொன்றாய் மயங்கிக்கிடப்பார்கள். ஆகாரம், நித்திரை,மைதுனம், இம்மூன்றுமெல்லாவுயிர்கட்குமுண்டு இவற்றில் வித்தியாசமில்லை. மத்தியில் நானென்கிற மமதாங்காரத்தால் நாசப்படுவதற்கு மோசஞ்செய்வது மோகமென்றறியார்கள். பாசகரனாற் பரதவிப்பார்கள். என்று தருமராஜன் வசனித்தனர்.

இவையனைத்தையுந் தேவேந்திரன் கேட்டு, ஓதிடவானே! நீர் கூறியதனைத்தும் உண்மையேனும்ஆயினும், மனுஷர்களுக்கு மாத்திரஞ் சுவற்கபூமி வைத்திருப்பது மற்றச் செந்துக்கள் அவைகள் செய்கிற பாபபுண்ணியங்களுக்குத் தக்கதாய் இயமலோகத்திலிருந்து சுகப்பட்டு மானிடமாகவந்து பிறந்தால், சுறந்தபதவிகிடைக்கும் அதைவிட்டு இப்போதே இந்த நாயாயிருக்கிற ஈனசன்மத்திற்கு இந்தப்பதவி கொடுத்தோமானால், தேவர்களுக்கும் ரிஷிகளுக்குந் தருமந் தப்பிப்போம். அத்துபுரண்டுபோம். வரம்புநிற்காது, வாய்மை வித்தியாசப்படும் இந்தத்தருமசூட்சுமம் உமக்குத்தெரியாததா தெரிந்திருக்கும் அப்படி தெரிந்திருந்தும் என்னையேன்வருந்தச்செய்கிறீர்? இந்த நாய் இவ்வளவுதூரம்வந்ததற்காகமானிடஜன்னமெடுக்கும்படிக்கு அனுக்கிரகம்பண்ணி, அப்பாலிதை இவ்விடத்திற்கு வரவழைத்து உம்முடன்கூட யிருக்கச்செய்கிறேன். இந்தத் தேகத்துடன் கதியடையக்கூடாது எல்லோருக்கும் நன்மையாக நடந்தீர்.இவ்விடத்திலிருப்பவர்களுக்குப் பொல்லாதவனென்னும்பெயரைப்பெறுவானேன்? வேண்டாம் நீர்மாத்திரம் விமானத்தி லேறுமென்றான். அதற்குக் குருகுலக்கோமகன் கூறுகின்றார். ஐயா விண்ணவர்க்கரசே! நம்பினபேர்களைக் கைவிட்டவனுக்கும், பிராமணரைக்கொன்றவனுக்கும், சமமான பாபமுந் தண்டனையுமென்று பண்டிதர் முதலாகியபேர்கள் சாஸ்திரத்திற் கண்டிருக்கின்றார்கள். ஆதலால் எனக்கு ஒருவேளை நரகங்கிடைக்கப்போகிறதென்று பயப்படுகிறேன். அல்லவென்று உங்கள் சொல்லுக்குப்பயந்து இந்தநாயைக் கைவிட்டேனாகில், குளிக்கப்போயுஞ் சேறுபூசிக்கொள்ளுங் கொள்கையனாவேன். இத்தனைதூரம் வருத்தப்பட்டு நம்பிவந்ததையெப்படி நீக்குவேன்? இதுவரைக்குஞ்சீவகாருண்ய தயாரசமுடையவனென்று பேரெடுத்து, இப்போது முழுப்பாவியாய்ப் போகின்றேன். எனக்குஅபரோதனையான பேச்சுவரவொட்டாமற் செய்யும்புண்ணியனே யென்று தீர்க்கதண்டம் பண்ணினார்.

அப்போது அமரர்நாதன் களித்து ஓ அரசனே! நீர்சொல்லுவதெல்லாஞ்சரிதான் இது மனிதருக்கு நடப்பிக்க வேண்டியது. அதை நாய்க்குநடப்பிக்கச்செய்வது பாபங்களுக்கெல்லா மேலாகியபாபம். பஞ்சமாபாதகத்திற்கு மேலான பாதகத்தைப்பண்ணி நாயாய்ப்பிறப்பது. அது நல்லோர் பெரியோரென்றில்லாமல் நன்மைதீமையென்றுபாராமல்எல்லாவற்றிற்குங் குலைக்ககற்ற குணமே பெரிதாய்க்கொண்டது. பிதுர்ப்பூசை வேள்வி இவைமுதலிய விரதநடத்திப் புசித்த எச்சிலை நாய்முகரப்படாதென்றும், முகர்ந்துநக்கினால் அந்த விரதபலன்கெட்டு நஷ்டமாய்த்துட்டுப்பெறாமற் போகுமென்றும் அந்தக் குடித்தனமுநொந்துபோய் விடுமென்றும், கடைசியிற் கொடியநரகமனுபவிக்கவேண்டிவருமென்றும் பெரியவர்கள் பேசியிருக்கின்றார்கள், ஆனதால் திரிந்த நாயைக்குறித்து முயற்சியாய் பேசவேண்டாம் உம்முடைய மனது இதற்கெப்படி ஒப்பியதோ எனக்குத் தெரியவில்லை. நீர் தெரியாதவரல்ல இதனை

லுமக்கு தேரூன்தெளிவுந்தெளிந்தான்களை
யுறவுந், தீராவிடும்பைதரும். என்னும் பெரி
யோர் வாக்கின்படி தீங்கினைவினைக்கும் தீய
வர்களைச் சேர்ந்தவர்களும். அவர்களுக்குத்
துணைப்பட்டுத் திரிந்து சகாயஞ் செய்தவர்
களும், பொட்டெனக் கெட்டுப்போவார்கள்
அருமையான பதவிகிடைப்பதை யிகழ்ந்து
எள்ளி, பசையற்ற வெள்ளென்பைக் கவ்வி,
சள்ளென்று குலைக்கு நாய்க்குடன்பட்டுப்பா
பமேற்காதீர். அந்த நாயின் பேச்சைத் தள்
ளிவிட்டு விமானத்தி லேறிக்கொள்ளும், ஐ
யோ! ஒருவருக்குங்கிடைக்காத ஊர்த்தபதங்
கிடைத்தும், அதைத் தடுக்கின்றீர். பெரிய
வாள் பேசியிருக்கிற விபகாரங்களைத் தட்டி
விடுகின்றீர் கூடவந்த தம்பிமாருங் குலக்
கொடியும் பிரிந்திருக்க, அவர்களைக்குறித்
துச்சிறிதும் விசாரப்படுகிறீர் மண்ணைத்
தோண்டிமுடங்குகின்ற இந்தச் சுணணச்சு
ணங்கனுக்குப் பாத்தியப்பட்டு, உறுதிதளர்
ந்து, ஏதேதோஉரைக்கின்றீர். ஓஉத்தமனே!
உம்மைப் பெற்றவன்வந்து பேசினாலும்
ஒப்பப் போகிறதில்லை ஏன் இப்படி வாதிக்
கின்றீர்? ஏதுக்கிவ்வண்ணம் பிடிவாதம்
பேசுகின்றீர்? இஃதெனக்கு ஆச்சரிமாயிருக்
கின்றதென்று சொல்லினன்.

அதற்குத் தருமராஜன் கரங்குவித்துஅ
ஞ்சலிபண்ணி, தேவராஜனைநோக்கி, ஓ வெ
ள்ளைவாரணரே! நீரே என்றம்பியாகிய அர்
ச்சுனனைப்பெற்றவர். எங்களுக்குத் தந்தை
மேலுந் தருமரூபி மேலாகிய கதிபதி நீர்பா
ர்த்துப் பதவிகொடுத்தாற் கொடுக்கலாம் கெ
டுத்தார் கெடுக்கலாம். நீர்தானே என்னைமறு
த்துச் சொல்லுகிறீர். எனக்குப் புத்திபோ
திக்கிறீர். இந்தநாய் கூடாதென்று சாதிக்கி
றீர். (முன்னவனே முன்னின்றால் முடியாத
பொருளுளதோ? என்னுமொழி யிழிக்கின்ற
து தேவரீர் வேண்டுமென்றால் யாவுங்கைகூ
டும், வேண்டாமென்றால் ஒன்று முடியாது.
நான் உபசரித்துப் பஞ்சரித்துப் பேசமாட்
டேன். தப்பித்தடுத்துப்பேசினால் அதுவே
ஒருபழியாய்முடியும். வேறேவழியுமில்லை இ
தற்கொரு முடிவுசொல்லுகிறேன் கேளும் எ
ன்னை நம்பிவந்த சீவனைவிட்டு நலம்பெறமா
ட்டேன். எனக்குச் சொற்கலோக பதவிவே
ண்டாம். அண்டினபேரைஆதரிக்காமற்போ
வதிலும் மோட்சம் பெரியதென்று முக்கியங்
கொண்டாடேன் இது என்னுடைய விரதம்
உம்முடைய பேச்சைத் தள்ளவுமாட்டேன்.
தேவரறியாத தருமரகசியமில்லை. நானுரை
க்கவேண்டியது இதைவிட வேறொன்றுமில்
லை சூரியவம்சத்திற் சிபியென்னு மிராஜன்
அடைக்கலமென்றுவந்த புறவுக்காகத் தன்
பெண்சாதியும்-பிள்ளையும்-செல்வமும்-தானு
ம் துலையேறி அச்சிறிய வுயிரைக் காப்பாற்
றினன். இப்படிக்கின்னும் அநேகம் புண்
ணியவான்கள் தங்களுயிரைக்கொடுத்து நம்
பினபேர்களை ஆதரித்திருக்கின்றார்கள் ஆத
லால் மனிதரேனும், மிருகமேனும்,பக்ஷியே
னும், அல்லது புல்லிய புழுவேனும், அ
டைக்கலம் புகுந்துவந்தவை எனதான்மாவு
ள்ள வரையிலும் புறம்போக விடமாட்டே
ன். நம்பினபேர்களை நட்டாற்றில் விட்டவ
ர்களெவர்களோ, அவர்கள்மித்துருத்துரோ
கிகள்:ஸ்திரீஹத்தி செய்தபாவிகள் - பிராம
ணருடைமைகளை யடித்துப் பறித்துக்கொ
ண்ட பேதைகள் - பட்சபாதம்பேசிய பதிதர்
கள்-குலாச்சாரம்விட்ட கொடியர்கள் - கட்கு
டியர்கள்-இவர்கள் முதலாகிய பேர்கள் புகு
கிற நரகத்திற் போவார்களென்று வியாசர்-
பராசர்-பிரகஸ்பதி-சக்கிராச்சாரி - வசிட்டர்-
கசியப்பிர்மா-இவர் முதலிய பெரியோர்கள்
கரைத்துக்கணித் திருக்கின்றார்கள்.

ஆதலால் ஓ மேகவாகனரே! என்னுட
னேகூட இந்தநாயுந் தேறேறிச் சொற்கத்
திற்கு வருவதாகக் கடாட்சம்பண்ணும் அப்
படிக் கில்லாவிட்டால், அடியேனுக்குப் பத
வியும் வேண்டாம் வேறொருதவியும் வேண்
டாம். அப்பதவியைப் பார்க்கிலும் அதிகமா
னது உம்முடைய பாதாரவிந்தம். ஆதலா
லதை எனது நெஞ்சிலுஞ் சிரத்திலுமிருத்
தி, கண்களிலு மிடைவிடாமற்கண்டு தபசுப
ண்ணும்படிக்கு ஒரு இடங்காட்டிவிடும். நீர்
கைகாட்டிய இடத்திலிருந்து தவமிழைக்கி
றேன் என்னுடனேகூட இந்த நாயுமுழை
க்கும் இதுவரைக்கும் இந்த நாய் பிழைத்தி
ருப்பதினால் எனக்கித்தனைவேதை என்னுட
ன்கூடவந்தவர்களைப்போல் இறந்துபோயி
ருக்குமாகில், நான்விசனப்படவேண்டிய அ
வசியமில்லை. ஊழ்வினைப்படி முடிந்ததென்
று உணருவேன் நம்பினஉயிரைவிட என்னு
யிர் அவ்வளவு நன்மையோ? உமது கடாட்
சந்தப்பினும், தேவர்கள் முனிவர்கள் முத

வியோர்க்குக்கோபம்வந்தாலும், எனக்குநல்லகதி வாராமற்போனாலும், என்புண்ணியமெல்லாம் பொய்த்தாலும், சத்தியமுந் தருமமுந்தவறினாலும் பிடிவாதக்காரனென்கிற பேர்வந்தாலும், பெரியோர்சொல்லை யெள்ளிநடக்கின்ற பேயனென்றாலும், பழிபாவமாகிய அபவாதம் வந்தாலும் வரட்டும். என்னை நம்பிவந்த நாயை விடமாட்டேன். இதைக் கெட்டியாய் நம்பும் என்று தருமராஜன் சொல்லினர்.

---

### தருமராஜனுக்கு நாய்வடிவாய் வந்த யமன் பிரத்தியக்ஷமாகி, விமானத்தி லேற்றிவைத்தல்.

இவையனைத்தையும் ஆயிரங் கண்ணன் கேட்டு, அகமகிழ்ந்து, முகமலர்ந்து, ஆச்சரியங்கொண்டாடினன். அப்போது நான்கு வேதங்களு முழங்க, தேவர்கள்ரிஷிகள்வாழ்த்த, தேவஸ்திரீகள் வாழ்த்தி, தேவஸ்திரீகள் புட்பமாரியிறைக்க, மற்றப்பேர்கள்மங்களாசனஞ்சொல்ல, நாய்ரூபமாய் நடந்துவந்த எமதருமராஜனனவன் தன்சுருபத்தோடு நின்று சிரக்கம்பஞ்செய்தான். அப்போது தருமனந்தனர் தன்னை ஈன்றளித்த தகப்பன் நாய்வடிவெடுத்து வந்தானென்றறிந்து, அவன் திருவடிகளிற் சாஷ்டாங்கமாகவீழ்ந்து சரணம்புகுந்தார். அந்தப்பிள்ளையைவாரியெடுத்து தோளுடனுமார்புடனுஞ்சேர்த்தணைத்துத் தழுவிக்கொண்டு, ஓ தருமநந்தனா! உன்னுடைய சத்தியமும்-ஒழுக்கமும்-தருமமும்-சாந்தமும்-உலகத்தாருக்குத் தெரிவிக்கவேண்டி நாயாகித்தொடர்ந்தேன். உன்னைக்கொண்டாடாத உத்தமர்களு முண்டோ எல்லாரினுஞ் சிறந்து பெருமை நிறைந்திருக்கின்ற உனக்கு, இனிப் பெருமையுண்டாக்க வேண்டிய பெருந்தன்மையில்லை. அப்பா ஸத்திய சொரூபனே! வனவாசம் பண்ணும்போது நீயுந் தம்பிமார்களுங் காளமாமுனி செய்த யாகத்தால்வந்த பூதத்தாலிறந்துபோகாமல் நச்சுப்பொய்கை யேற்படுத்தி, தம்பிமார் நால்வரும் அந்த நீரைக்குடித் திறக்கச்செய்து நீ வந்தபோது தண்ணீரைக் குடிக்கவொட்டாமற் றடுத்துச் சிலசம்மைகள் கேட்டுச் சந்தோஷப்பட்டு, உனக்குப்பிரசன்னமாகி இங்கிறந்துகிடக்கிறபேர்களில் ஒருவனை யெழுப்பிக்கொள்ளென்றேன். நீ நகுலனை யெழுப்பித் தரவேண்டுமென்றாய் சரியொத்த பலசாலிகளாய்த் தனஞ்செயன் வீமனிருக்க இவனை யெழுப்புவானேனென்று கேட்டதற்கு எங்கள் தாயாருக்கு நான் சேஷ்டன் மாத்திராதேவிக்கு அவன் சேஷ்டன். யாங்களிருவருங் கருமதருமங்களுக்கு குரியவராகையால் நகுலனை யெழுப்பிக் கொள்வதற்கு நாடினேனென்றாய் அப்படியே யுனக்கு அனுக்கிரகம்பண்ணி, உன்னுடைய குணநிசயத்தை உண்மையாயறிந்தேன் இன்றைக்குஉன் மனதை மற்றத் தேவர்களுக்குந் தெரியச் செய்யவேண்டி நாய்ரூபமெடுத்து, உனக்குத் துணையாயடுத்து, தெய்வலோகத்தின் எல்லையிற் கொண்டுவந்து விடுத்தேன். இனித் தாமதஞ் செய்யாமல் இத்தேவேந்திர மகாராஜன் மனதின்படி விமானத்தின் மீதேறிச் செல்லுகவென்று கூறி மறைந்தனன்.

பாண்டவர் துறவெய்திய சருக்கத்தோடு

மகப்பிரதானிகபர்வம்

முற்றிற்று.

---

ஸ்ரீ.

ஸ்ரீமதேராமாநுஜாய நம:





ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால பரப்பிரம்மணே நம:

# ஸ்ரீ மஹா பாரதவசனம்.

## பதினெட்டாவது

# சொர்க்காரோகணபர்வம்.

—(*)—

### கண்ணன் துதி.

மாதரவி ஞர்களாயகில
வேத ராகியுடன் வீடு சேரும்வகை மேவு மாதரவி ஞர்களாயகில  
பூத ராலும்வழி பாடு மேவுமிரு போதெ ஞவுமுரை யாடு மாயநம  
மாத ராதலம வான நாடர் தொழு மகா ராசர்பத மாய்வி லாமையிலே  
சீத ராதரவில் வீத ராகமறி சீத ராயநம சீத ராயநம.

### சூதபுராணிகர் வாக்கியம்.

இவ்வாறு அந்தியபஞ்சகத்தி நான்காம் பாகமாகிய
[ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு அந்தியபஞ்சகத்தி நான்காம் பாகமாகிய ஜெனமேஜெய மகாராஜன் பணிந்
மகப்பிரதானிக பர்வத்தைக் கூறிய வைசம்பாயனரை புண்ணிய ரூபங்கொண்டு வந்த ஸ்ரீ
தெழுந்து, சுவாமி! இப்பூபாரந் தீர்க்கவேண்டிப் தேவகாரியங்கள் யாவுஞ் சாவகாசமாய் நிறைவேற்றிக்
கிருஷ்ண மூர்த்தியானவர் தமது தேவகாரியங்கள் பரிபாலனமு நடாத்தித் தமது பரமபதத்திற்
கொண்டு துஷ்டசன நிக்கிரகமுஞ் சிஷ்டசன பிராணனற்ற படிவத்தினராக, அக்கால் தரும
கெழுந்தருளியதைக் கேட்ட பாண்டவர்கள் துறவெய்த வெண்ணியிருக்க, அது
நந்தனர் இவ்வுலகவரசாட்சியிலிருக்க வாற்றாராய்த் கருத்துக் கிணங்க. உடனே தரும
கண்ட மற்றத் தம்பியர் நால்வருந் திரௌபதியு மவர் பழுதுபடாது பரிபாலித்து வரும்படி
நந்தனர் குருகுலத்தையும், யாதவகுலத்தையும் புத்திரனாகிய பரிச்சித்துவுக்குத் திருமுடி
சுபத்திராதேவிக்குக் கட்டளையிட்டு, அபிமன்னு தருமபத்தினியுந் தவக்கோலங்கொண்டு
சூட்டி இராஜமுறையில் னிறுத்தி, தாங்களைவருந் இரண்டு பிராமணர்களாற் கலியுகவுற்பத்தி
வெளிபட்டபோது தம்மெதிரில் வழக்கிட்டுவந்த தருமதேவதையோடு பூப்பிர
யறிந்துக்கொண்டு, தம்மோடு சுணங்கனுருவு கொண்டுவந்த

தக்ஷிணஞ் செய்து உத்தரதிசையை நாடிச் செல்லும்போது திரௌபதியுந் தம்பியர் நால்வரும் ஒவ்வொருவராய் முறையே விண்ணுலகடைய, அப்பால் தருமராஜனவர் நாயுந் தானுமாக வழி நடக்கையில் தெய்வ விமானத்தோ டிந்திரன் வந்து தன்னை வர வழைக்க, அப்போதந்த நாயுந் தன்னுடன் வரவேண்டுமென்பதைப் பற்றி யவ்விந்திர னுக்குந் தனக்குஞ் சமவாத முண்டாக, அக்காற் சுவானவடிவாகிய தருமதேவதை பிர சன்னமாகி ஆசீர்வதித்துத் தருமராஜனை விமானத்தி லாரோகணிக்கச் செய்தவரையி லுள்ள சரித்திரங்கள்யாவுஞ் சாங்கோபாங்கமாய்க்கேட்டுச் சகலவரிட்டங்களுந் தீர்ந்தேன் இனிச் சென்ம மெடுக்காததில் சார்ந்தேன் பரமானந்தக்கடலிற் படிந்தேன். இப்பால் ஐந் தாம்பாகமாகிய சொர்க்காரோகண பர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கேட்க, வைசம்பாயன முனிவர் சொல்லத் தொடங்கினர்.]

---

## முதலாவது,

# சுவர்க்கதரிசனச் சருக்கம்.

---

### துதி.

திடவிசும் பெருவளி நீர்நில மிவைமிசைப்
படர்பொருண் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே.

ஓ பதினன்குலகிற்கும் பார்த்திபஞ்கிய கீர்த்தியாளனே! உங்களிரண்டாம் பாட்டனுகிய தருமராஜனைத் தன் தந்தையாகிய எம தருமராசன் நாய் வடிவங்கொண்டு பின்றெடர்ந்து அவர்சென்ற திசையெல்லாங் கூடவேசென்று, உத்தரதிசையிற் சகலசம்பிரமத்தோடுந் தேவ விமானங்கொண் டெதிர்வந் தழைத்த தேவேந்திரனுக்குந் தன்பிள்ளைக்கு நடந்த சமவாதங்களை யெல்லாங் கேட்டுக் களித்து ஆனந்தமுற்று, பின்னர் தனது சுய ரூபத்தோடுந் தரிசனந்தந்து விமானத்திலேறிச் செல்லும்படி உத்தரவுசெய்து மறைந்த பின்பு தேவேந்திரனவன் தருமராஜனைப் பார்த்து, ஓ குருகுல வம்ஸத்திற்கு விலைமதியா முடியு முதலுமாய்வந்த மதலாய்! உமது வம்ஸமெல்லாம் உம்மொருவராற் கடைந்தேறின் யாவருக்கு மோக்ஷ நிலையுந் தேறியது. இங்கிருக்குந் தேவர்களுக்கு உற்ற துணையாயினீர். தரும சத்தியக்கொடி படருவதற்குக் கொழுகொம்பாயினீர். உமக்குச் சமானம் ஒருவருமில்லை. என்று தேவேந்திரன் சொல்லும்போது தேவர்களுஞ்சந்தோஷப்பட்டு ஓ மெய்விரத மூர்த்தி! நற்காரியங்களுக்கு உம்முடைய மனதிற்கொப்பாக ஒருவரையுஞ் சொல்லமாட்டோம். ஆலசியம் பண்ணுமல் இந்திர விமானத்தி லேறியருளும். என்று மந்திர வாழ்த்தொலி வழங்கினர்கள். அப்போது குந்தி முதற் புதல்வன் அவ்விமானத்தைச் சுற்றிவந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, சகல தேவர்களும் ஜய ஜயவென்று கொண்டாடும்படி அதிலாரோகணித்தனர். உடனே அமரர்கள் ஆசிர்வதிக்கவும், காந்தருவஸ்திரீகள் பாடவும், அரம்பையராடவும், பாரிசாதாதி பூமாரிகள் பொழியவும், ரிஷீஸ்வராள் மங்களாசனஞ்சொல்லவும், முனிவர்கள் பல்லாண்டுகூறவும், காந்திருவர் வீணைமீட்டவும், சகலதேவதைகளும் விமானத்தைச் சூழ்ந்து தாங்கி வரவும், சாமரம்-கொடி-குடை-குஞ்சம் - மேளவாத்தியம்- தேவதுந்துமி இவை முதலியன நெருங்கி கோஷிக்கவும், கட்டியர்கள் - பட்டுவான்கள்- புகழ்பேசவும், இவ்வித வைபவத்தோடு தேவர்கள் செல்லுகின்ற பல விமானங்களுக்கு நடுவே பொன்மலைவருவதுபோல் தருமராஜனுடைய விமான மூர்ந்து வந்தது. அவ்விமானத்திற் கருணைப்பிரவாக நிறைந்த கண்களும், பொருவற்றிலங்கு மற்றப் புண்ணிய வைபவங்களும் விளங்கும்படியாய்த்தருமரா

ஜனிலங்கி, இந்திரன்மந்திரிபோற்றன்விமா
னத்தைப் பக்கத்தில்விடுத்துபசரித்து வரத்
தக்கதாய் ஜோதிப்பிரளய வீதிகளையெல்லாம்
ஒவ்வொன்றாய்க் கடந்துபோகின்றார்.

அக்கால் தேவேந்திரனானவன் இவர்
தன்னுடைய பட்டினத்திற்கு இனிவரத்
தடையில்லையென்று நிச்சயித்து, இவருக்கு
முன்போய் ஆகவேண்டுங் காரியங்களையமை
ப்போமெனச் செல்லுவான்போலத் தரும
நந்தனரிடத்தில் விடைபெற்று, தேவர்களு
க்குந் தேவஸ்திரீகளுக்கும் ஆங்காங்குள்ள
வதிசயங்களெல்லாங்காட்டி அமராபதிக்கு
வந்து சேருங்களென்று உத்தரவுசெய்து
தன் விமானத்தோடு நடந்தான். அப்பா
லந்தத்தேவர்களுந் தருமராசனை ஆங்காங்கு
எச்சரித்து, இஃது கின்னரர்வீதி, சித்தர்கள்
தெரு, இஃது வித்தியாதரர்ள்மறுகு, இஃது
அமராரூர், இஃது இந்திரபுரம், இஃது கற்
பகச்சோலை, இஃது விற்பனச்சாலை, இஃது
மொற்புறுமாடம், இஃது அர்த்தக்கூடம்,
இஃது வாணுற்றின் வாய்க்கால், இஃது பா
லாற்றின் வாய்க்கால், இஃது அரம்பையர்
வீடு, இஃது அமரர்பொன்னூடு என்று அடிக்
கடியுள்ள வீதிகளையும் வேடிக்கைகளையுங் கா
ட்டிக்கொண்டு சென்று, ஓ சத்தியவிரதனே!
சூரியனுடைய உதயமும், மத்தியானமும்,
அஸ்தமனமுமாகின்ற உதயகிரி இது. இப்
பாற் சந்திரனானவன் உதயமும் அஸ்தாங்க
முமாகின்ற இடங்களிவை. மற்றக்கிரகங்க
ளின்கதியும், நட்சத்திரவீதியும், தருமமாகிய
கிஞ்சுமாரச்சக்கரச் சுழற்சியும், துருவனிலை
யும், ஈதீது, இவையனைத்தையும் அந்தந்தச்
சாஸ்திரங்களாற் கற்றிருக்கின்ற அறிவாளி
யாகிய பொறுமைப் பொருள் யடைத்த உம
க்கு, நேத்திரங்களாலுங்காணக்காட்டினோம்.
என்று தருமநந்தன்ரேறிய விமானத்தைப்
பின்னுஞ் சிலதூரஞ்செலுத்தி, அனந்தங்
கோடி சூரியர் தினந்தப்பாமற் பிரகாசிப்பது
போற் சொலித்து, அண்டமுகடோங்கிய
மண்டபமாடகூடமும், மேலாகியசிகரகோபு
ரங்களும், பொற்றகடுகொண்டமூத்திய சுற்
றும் மதில்களும், நவரத்தினக்கலசங்களும்,
மதிலுறுப்புகளும், அகழ்க் கிடங்குகளும்,
நான்கு வாயில்களும், அநேக மநேகங் கால்
கள் படைத்த மண்டபங்களும், பல வோம
குண்டங்களுமுடைய அமராவதிப்பட்டண
த்தை யடைந்தார்கள். அங்கே அந்தப்
பட்டணத்தை அவனியிலுள்ள பட்டணங்
களுக்கெல்லாம் நீதான்திபதியென்று முடி
சூட்டி வைத்ததுபோல் விளங்குகின்றகொத்
துச்சித்திர வேலைகளிட்ட நான்கு பொற்
கோபுரங்களும், ஆங்காங்கு கலீரென்னுஞ்
சிலம்பணிந்த அரம்பாஸ்திரீகளும், சங்கீத
வாத்தியமும், சகஸ்திரவித வாத்தியமும்,
கனகமயமாகிய சுவரேற்றி விருத்தமாகவளை
த்து வாசற்படியமைத்துக் காந்தியுடைய மர
ங்கள் வைத்துக் கவிந்திருக்கின்ற பொழிவி
னடுவிற் கற்பகச்சோலையும், அந்த நான்கு
பக்கமுங் காத்திருக்கின்ற பொற்கூடண
நிறைந்த விற்பன் விவேகிகளுரைத்த அற்
புதச் சாலையும், சதமகனன் தேவேந்திரனுக்
கும் முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும்,
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளுக்கும் சிரிகா
லத்திலுந் தெவிட்டாத பாலுடன் வேண்
டிய வஸ்துக்களையுங் கொடுத்து ஆதரிக்குந்
தாய்போன்ற காமதேனுவும், இதுவிதுவெ
ன்று நேரிற் கொண்டுபோய்க் காட்டினார்கள்.

இவையன்றியும் அஸ்வபந்தமும் பசு
பந்தமும் புரிந்து ஆகுதிகொடுத்து அன்பு
ற்றபேர்கள் அன்னதானமளிக்கும் விஷயத்
திற் பயந்து நயந்து உபசரித்தளித்த உத்த
மர்கள், சுவர்ணதானஞ்செய்த சுகிர்தர்கள்,
பாத்திராபாத்திரந் தெரிந்து பிச்சையிட்ட
பாரமார்த்தியர்கள், தண்ணீர்ப்பந்தல்கள்,
தடாகங்கள், துரவாதிகள், தோப்புகள் இ
வைகளை யுண்டாக்கிய பேர்கள், சத்திரம்,
சாவடி, சுமைதாங்கி, ஊஷுராஞ்சுதறிஇவை
களைஉண்டாக்கியபேர்கள், வெப்பகாலத்திற்
காலுக்குக் குளிர்ச்சியாய் பாதரட்சைதானஞ்
செய்தவர்கள், சிரத்திற்குச் சூடுதாங்காதபடி
குடை தானஞ்செய்தபேர்கள், உத்தமமாகிய
கோதானம்புரிந்தபேர்கள், நல்ல புண்ணிய
காலங்களிற் கங்காநதிமுதலாகிய தீர்த்தங்
களில் ஸ்நானஞ்செய்து, தீர்த்த கட்டத்திற்
சொல்லியிருக்கிற வண்ணந் தருமதானாதிக
ளைப் பிதுர்க்கள் பெயர்களைச்சொல்லிக்கொடு
த்த பேர்கள், பொய்சொல்லாத புண்ணிய
வான்கள், குற்றம்பாராட்டாமல் தீர்க்கவயிரி
யம் வைக்காமல் அப்போதைக்கப்போது
மறந்து நன்மைகளையே நாடிச்செய்தவர்கள்
சொற்சோர்வுபடாதவல்லவர்கள், கீர்த்திபெ
ற்ற நல்லவர்கள், போர்முகத்தில் நேர்முக

மாகி நின்று யுத்தங்கொண்டுபுறங்காட்டாமற் றிறங்காட்டி உயிர்விட்டபேர்கள், மனங்கூசாமற் குடும்பசவரட்சணை செய்தபேர்கள், நன்றிமறவாத நற்குலத்தர், நற்குணத்தர், பழியஞ்சிப்பார்த்த பாக்கியவான்கள், ஏழைகளை யிகழாமல் எதிர்க்காமல் ஆதரித்தவர்கள் அழியாக்கீர்த்தி படைந்தவர்கள், நடுத்தர ஞாயம் பேசினவர்கள், தெய்வதூஷணை செய்யாதவர்கள், குடும்பதோஷங் குலப்பிரஷ்டத்துவங்கள் கொள்ளாதவர்கள், அவற்றைக் கூறாதவர்கள் பதிவிரதைகள், அவர்கட்குரிய கணவர்கள், இல்லறதருமத்தை நல்லறமாக நடாத்தி இருப்பவர்கள், இன்னமிப்படி எத்தனையோ கோடி தருமங்களைச்செய்தபுருடர்களையும் ஸ்திரீகளையுங் கணக்கிட்டுக்காட்டுவதற்குங் காண்பதற்குங் கூடாமையாயிருக்கிற சன்சமூகங்கள் வசிக்கப்பெற்ற சுவர்ண மண்டபம், பளிங்குமண்டபம், இரத்தினமண்டபம், இரசிதமண்டபம், இவைகள் கோடாகோடியுண்டு அவைகளை யெல்லாம் அந்தத் தேவர்களுந் தேவஸ்திரீகளுங் கைகளினாற் காண்பிக்க, செவந்த முகத்தை யுடைய தருமராஜன் பார்த்துச் சந்தோஷமடைந்து, தேவேந்திரனெழுந்தருளியிருக்கின்ற சபைக்குப் போயினார்.

அங்ஙனம் வீணைவல்லவராகிய நாரதமகாமுனிவர் தருமநந்தனரைக் கண்டு சந்தோஷங்கொண்டு, ஓ சத்தியவானே! பூமியிலெத்தனையோ கோடிபேர் பிறந்து, பூமியாண்டு இறந்து, புகழ்மறந்து, பூவாசைதுறந்துபோனார்கள். இப்போதிந்தச் சொறக பதவி பெற்றிருப்பவர்கள் மெத்தப் பேரிருக்கின்றார்கள். அத்தனைபேரும் உம்மொருவருக்கு ஒப்பாக மாட்டார்கள். ஏனெனில்? அவர்களெல்லாந் தங்கள் தேகத்தைப் போட்டுவந்த பலயீனுள் நீர் தேகத்துடன் புகுந்த திடவான். உம்மைப்போற் சரீரத்துடனே வந்த தாஷ்டீகரைக் கண்டதில்லை. நீர்சுத்த பவித்திரன் காலாகாலத்திலும் அழியாத கீர்த்தியைப் பெற்றீர் இப்படிப்பட்ட கதி உமக்கெப்படி கிடைத்ததென்றால்? உத்தம சாதியிலே பிறந்தோமென்றும், அழகிற் சிறந்தோமென்றும், ஐஸ்வரியமுடையோமென்றும், அதிகபலம்படைத்தோமென்றுங் கர்வமில்லாமல், ஸ்ரீமோகங்களிலேயும், கோபங்களிலேயும், ஆதிக்கனுமுழலப்பட்டு, வினைக்கிடான யோனிகள்தோறும் பிறந்து இறந்து, கர்மியாவும் போகாமல் நீர் தப்பித்துக்கொண்டபடியால், தேவதைகளெதிர்கொண்டழைத்துப்போகவும், எடுத்த சரீரம் பௌரிகுலையாமலிருக்கவும் படைத்து தேவலோகமடைந்தீர். இனிப் பெறப்போகிறவர்களிலும், பிறந்திருப்பவர்களிலும், உமக்கீடாயொருவருமில்லை. ஓ பெருமையுடைய பூமானே! ஓ தேவர்களும் ரிஷிகளுந் தேவேந்திரனும் உபசரிக்கத்தேவவிமானத்திலேறித் தேகத்துடன் திரிந்து நோக்கப்பெற்ற சீமானே! நீர்பெற்ற பேறாகிய பேரின்பம் ஆர் பெற்றார்கள்? உமது பாக்கியமே பாக்கியம். என்று நாரதர் புகழ்ந்து துதித்தனர். அப்போது தருமராஜன் நகைத்து, சுவாமி நான் பெற்றபேறு கிடையாத பேறானபோதிலும் என்னுடன் பிறந்து சிறந்து லாபலோபத்திற்கிருந்து அனுபவித்த தம்பிமாரும் பத்தினியும் வழியிலிறந்து என்னை மறந்துபோனார்களே; அதுதான் ஒரு குறையிருக்கிறது. அவர்களை இந்தயிடத்திலாவது கண்டால் என்க்குண்டான தாபத்திரையங்களகலும். இல்லாமற் போனால் இத்தனைச் சம்பிரமங்களைப் பெற்றும் பெறாதவனாகிறேனென்றார்.

---

## தருமராஜன் துரியோதனாதிய நூற்றுவரைக் காணுதல்.

அதற்கு தேவேந்திரன் செப்புகின்றான் ஓ அறக்கடவுள்மைந்தனே! சகலமுந்தெரிந்த உமக்குமயக்கமேனிருக்க வேண்டும்? நீரடையப்போகிறகதி அவர்களுக்குக் கிடைக்குமா? ஆராருக்குஎப்பதங்கிட்டவேண்டுமோ? அவரவர்களுக்கந்தப்பதங்கிட்டும். கிட்டாப் பதவிக்குளட்டினாலொட்டுமா? அவர்கள் உமக்கு நிகராவார்களா? ஒருக்காலுமாகார்கள். ஆதலால்வர்கள்குறைந்த கதியைப்பெற்றார்கள். நீர் உயர்ந்தகதியையடையப்போகின்றீர்பெறுதற்கரிய பெரும் பதத்தைப்பெறப்போகிற நீர் அவர்களை நினைக்கப் போகாது இந்தப் பதவிக்குத்தகுந்த நினைவுவரவேண்டும் அவனவனடையப்போகின்றகதிக்கு பேர்களுக்குக்கடைசி நினைப்புஎன்னயிருக்கிறதோ அந்த நினைப்புக்குத்தகுந்த பதவியிலவர்களைக்கொண்டுபோய் விட்டுவிடும். பள்ளங்கண்டவிடத்

தில் தண்ணீரோடுகின்றாப்போல், நல்வினை தீவினைகளை நாடிமுடியும். ஆதலால் நீர்வேறு நினைப்பெண்ண வேண்டாமென்று விளம்பினன், அதைக்கேட்ட அறன் குமாரன் அவனைத் தொழுது, ஐயா சதமகரே! நான் ஒன்றின்பேரி லாசைப்பட்டால் யாவரைக் கேட்பது? தந்தையையல்ல துமைந்தருக்குந் துணையாரிருக்கின்றார்கள். ஆதலால், மனதொத்திருக்கிற எனக்கு ஒரு சந்தோஷமுண்டாகும்படிக்கு, என் சகோதராள்-பிள்ளைகள்-திரௌபதி-எனக் குடன்பட்டிருந்த சுற்றத்தார் - யுத்தத்திலிறந்த மற்றுமுள்ளபேர்கள் இவர்களை யெல்லாங் கண்ணினாற் பார்க்கும்படிக் கடாட்சம் பண்ணவேண்டும். இல்லாமற்போனால் இவ்வுலகத்தில் நான் கண்ட காட்சிக்கு மாட்சிமை யென்ன? என்மனதிற்குச் சந்தோஷமிராது. சந்தேகமிருக்கும். அவர்க ளெந்தெந்த கதியைப் பெற்றிருந்தாலு மவற்றை நான் பார்க்கும்படிக்குத்தயவுபண்ணும் என்று மகா பிரீதியோடுந் தாழ்ந்து கேட்டனர். அதற்கு அமராவதியோ நகைத்து, நாரதர் முதலிய சப்தரிஷிகளையுந் தேவர்களையுஞ் சேர்த்து, இத்தருமராஜனுக்குத் தனது பந்து மித்திர புத்திர பத்தினி யாதியரைக் காட்டி யழைத்துக்கொண்டு வாருங்களென்று உத்தரவு செய்தான். அந்தப் பிரகாரந் தேவதூதருடன் தேவர்கள் ரிஷிகள் முதலியபேர்கள் தேவவிமானத்தி லேற்றிக்கொண்டுபோகையில், தருமராஜன் நாரத மகாமுனிவரை நோக்கி, சுவாமி! தேவரீரைப்போன்ற வேதபண்டித பூசிதாளாகிய பெரியவர்களிடத்திற்பட்சம்வைத்து அவர்களின் திருவடிகளைத் தரிசித்த என் கண்களினால் எல்லோர்களையும் நல்லோர்களாய்ப் பார்க்க அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று துதித்தார். அப்படியே நல்லதென்று அழைத்துக்கொண்டுபோய்க் காண்பித்தார்கள்.

இப்படி யவர்கள் காட்டும்போது துரியோதன மகாராஜனனவன் தன்னெதிரில் அரம்பாஸ்திரீகள் பரதநாட்டியஞ்செய்தும் தன் தோளில் பாரிஜாத புட்பமாலை யணிந்தும், தன்மேற் பற்பலவிதப் புட்பமாரி பொழிந்தும், சிலர் வீணைவாசித்தும், சிலர் விசுவாசித்தும், சிலர் உபசாரமாகப் பூசித்தும், சிலர் தேவாமிர்த போஜன முண்பித்தும், சிலர் சந்தனபாளித குங்கும கதம்பகஸ்தூரி சாத்தியும், சிலர் தாம்பூலச் சாயமேற்றியும், இவ்வாறு சகல சவுக்கிய சம்பிரமத்துடன் நவரத்தினகசித சிங்காசனத்திலிருக்க, சுற்றிலுந் தம்பிமார்களிருக்க, உபயசாமர முதலிய சின்னங்கள் நெருக்க, பெரியோர் முதலிய பேர்கள் பொருந்தியிருக்கக் கொலுவீற்றிருந்தான். அப்படியவனைக்கண்டமாத்திரத்தில் ஆனந்தங்கொண்டு, வீரலட்சுமியின் வெற்றியினால் இந்தவைபவம் இவனுக் குண்டாச்சுதென்றுமெச்சி, இதனாலேதானேபிராணனை லட்சியம் பண்ணாமல் ஒரே பிடிவாதம் பண்ணியிறந்தான். ஆ! ஆ! நல்லகதியைப் பெற்றான். நமது குலமும் நல்ல தவம் பண்ணியது என்று புகழ்ந்து கூடவருகின்ற மகாரிஷிகளைப்பார்த்து, ஓ மாதவர்களே! உலகிலுள்ள அரசர்களும் யானைசேனை பரிவாரங்களுமாகிய பதினெட் டக்குரோணி சேனைகளையுங் குருக்ஷேத்திரத்திற் பாழாக்கி, அவற்றிற்றப்பி யிருந்து பாசறையிற்படுத்து நித்திரைபோன ஒரக்ரோணி சேனைகளையும் பந்துமித்திரர்களையுந் தூக்கத்திற் கழுத்தறுப்பித்தான் துருபதராஜ கன்னிகையைத் துகிலுரித்தான். அன்னத்தில் விஷங்கலந்தூட்டிவைத்தான். நித்திரையில் வீமனைக்கட்டித் தண்ணீரிற் போடுவித்தான். வசிநாட்குக் குதிப்பித்தான். நாட்டைவிட்டோட்டிவைத்தான். அரக்குமாளிகைகட்டி நெருப்பிடப் பண்ணினான். பெருமைகொண்டு சூதாடிக் கெலித்தான். பன்னிரண்டு வருடங் காட்டிலிருக்கப் பண்ணினான். அக்ஞாதவாசம் ஒரு வருட முறையச் செய்தான். மாரண ஓமம் பண்ணுவித்தான். பூதத்தையேவி விடுத்தான். பெரியவாள் சொல்லைத்தள்ளி நடந்தான். வீஷ்மர்-துரோணர்-கர்னன் - சல்லியன்- இவர்களைச் சேனாபதியாக்கி, தானுஞ் சவுக்கியம்படாமல் அவர்களையு முருட்டினான். இப்பேர்ப்பட்ட மகாபாதகங்களெல்லாம் புரிந்த ஒருவனுக்கு மேற்பட்ட பதவி கிடைத்திருக்கின்ற விந்தை யாதோ? அதனுடைய ரகசியமிவ்வகைத்தென நந் தெரியேனென்றார் அதற்கந்தத் தேவர்கள் சொல்லுகின்றார்கள்.

ஓ குவலைத்தார் புனையுங் கோமானே! பூமியிற் கணக்கிறந்த பாவங்களைச் செய்தாலும், உறுதியாய்ப் போர்முகத்திற் சமானமான வீரனுடன் சண்டையிட்டு இறப்பானாகில், அவனுக்குவீரசொற்கமென்றுமேலோர்

விளம்பி யிருக்கின்றார்கள். இவனுக்கு வீர சொர்க்கங் கொடுக்கவில்லை. பேரகசொர்க்கத்தி லிருக்கின்றா னென்றார்கள். அதைக்கேட்ட தருமராஜ னனந்தம் பெற்றவர்போலாகி ஐயோ? நன்றாயிருக்கட்டும். சுகமாயிருக்கட் டும். தம்பிமார்களுடன் வீரசுவர்க்கமும்பெற ட்டும். என்று வாழ்த்தி அப்பால் நடக்கும் போது நாரதமகாமுனிவர் தருமனந்தனை நோக்கி, ஓ முரசகேதனு! இப்போது நீ உரைத்தவைக ளெல்லாஞ் சுயோதனன் செய்த மோசமென்றும், வஞ்சனையென்றும் பொறாமையென்றும் எண்ணிச் சொன்னீர். இதல்லாமல், இவைகள் இராஜ தந்திரம், வீரதந்திரம். இப்படிக்கில்லாமற்சத்தியமாய் நடந்தால் ஒருவரை யொருவர் வெல்லுவ தெப்படி? கொல்லுவதெப்படி? இதனுற் குற்றமில்லை. நீ ரவைகளை மறந்துபோய் விடும். ஒரு குலத்திற் பிறந்த உத்தமனுகிய உம்மாலே அவள் வெற்றிப்பதவியி லிருக் கின்றா னென்றார். அதற்குத் தருமராசன் அகங்களித்தவராகி, சுவாமி! அப்படியே யிருக்கட்டும். மகாபாக்கியம். ஆனல்,எங்கள் தமையனுகிய கர்னமகாராசன் இறக்கிற பரி யந்தம் இன்னானென் றறியாமல் இகழ்ந்து விட்டோம் அவரெங்கிருக்கின்றாரோ! தம்பி யர் நால்வரும் பாஞ்சாலி முதலியபேர்களும் எங்கிருக்கின்றார்களோ? அவர்களையும் பார் க்க ஆவலாயிருக்கிறதென்று சொல்லினர். அதற்கு மகாரிஷிகளுரைக்கின்றார்கள். ஓ புண்ணியனே? உம்முடைய மனசிற் கோரி ன்பிரகாரங் காண்பிக்கச்சொல்லிக் கட்டளையி ட்டிருக்கின்றபடியால், அவ்வாறே இத்தேவ கணங்கள் காட்டுவார்களென்று சொல்லி நா ரதமுனிவரோடு விடை பெற்றுச் சென்றார் கள். இப்பால் தேவதூதர்களுந் தேவர்களு ம் அக்குருகுல சிரேஷ்டனும் அறக்கடவுள் மைந்தனுமாகிய தருமராஜனை யழைத்துக் கொண்டு, பொன்னுட்டுப் பூமிமுழுதுஞ் சுற் றிப் போனார்கள்.

சுவர்க்கதரிசனச் சருக்கம் முற்றிற்று.

---

இரண்டாவது,

## நரகதரிசனச் சருக்கம்.

கண்ணன் துதி.

கழல்சூடு வாரிதய கமலால யாயநம கலிகாலன் வாயின்மணி யிடுகால காலநம
வழல்சேர்மு னேயழியு மெழுகாக வேயுருகு மடியார்க டாமறிய வுளதான பாதநம [லநம
குழல்சேரு மாறின்மொழி மடவார்கள் காதன்மிகு கொடியேனையாளவொரு குருவான கோ
வெழில்சேரு மாமுனிவர் தொழுமாதி நாதநம விருஷிகேச வாயநம விருஷிகேச வாயநம.

ஓ ஜெனமேஜெய மகாராஜனே! தேவர் களுந் தேவதூதர்களுந் தருமராஜனை விமா னத்தோடும் பொன்னுலக முழுவதுஞ் சுற் றிக்கொண்டு போகும்போது, ஓர் புறத்திற் சுற்றுமதில் மத்தியில் மிகுந்த விருணிறைந் த படர்ந்த நரகபூமியும், அதில் துற்கந்தம்- பிண என்பு-மயிர்-முட்டினுது-மயிர்ப்போர் - பிண மோடு-காக்கை-கழுகு - கோட்டான் - சிச்சிலி பருந்து-ஆந்தை- கண்டபேரண்டம்-பற்பல விதப் பூச்சிகள்-புழுக்கள்-அட்டைகள்-அர ணைகள்-பாம்புகள் தேள்கள்: நண்டுத்தொறக் காய்கள்-செம்பூரான்கள் கொசுகுகள்-மோட் டுப்பூச்சிகள் சர உண்ணிகள்-முதலைகள்-ஆ மைகள்-புழுத்திருக்கிற சேறுகள் - புதர்கள்- கள்ளிகள்-தாழைகள்:காரைகள் - முள்ளிகள் கொப்பறைகள்-பந்தங்கள் - இருப்புத்தூண் கள்-நெருப்புக்குழிகள்-சூடாகக் காச்சிவைத் த பிரதிமெய்கள்-ஆமணக்கு நெய்யிட்ட அ டாசுகள்-மீனின் நிறைந்த பாழ்நதிகள்-இப் படிக்கனேக நிற்பந்தங்களிருக்கவும், அங் கங்கே செவந்தெரிந்த கண்களும்,பொரிந்து பொங்கும்நெஞ்சமும், கூக்குரலிட்டகுரலும் பற்பல ஆயுதங்களும், கோரதந்தமும் ஆகிய விலைகளையுடைய ஆயிரங்கோடிய மகிங்கரர் களிருந்துகொண்டு, தள்ளு, குத்து குத்து அடியடி, பிடிபிடி, வெட்டு வெட்டு, கட்டு,

கட்டு, இழுஇழு பறிபறி, முறிமுறி, கிள்ளு கிள்ளு, தள்ளு தள்ளு, கொல்லு கொல்லு, அறு அறு, நசுக்கு நசுக்கு, பிழிபிழி, மோது மோது, பிளவுங்கள் பிளவுங்கள், கிழியுங்கள் கிழியுங்கள் இருத்துங்கள் இருத்துங்கள், நுழுத்துங்கள் நுழுத்துங்கள், சொருகுங்கள் சொருகுங்கள் என்று பற்பலவிதமாய்ப்பேசுகிற பெருங்கூச்சலும் ஐயையோ!! அனியாயமே! அவதியே! அசையே! மோசமே! நம்பவைத்தநாசமே? திட்டநேசமே! துற்குறிக்கோசமே! பந்தபாசமே! என்று பதைபதைத்துத் துடிதுடித்து இறைந்து அழுகிற பேரோசையுந் தருமராசனுடைய காதுகளையடைத்தன அப்போதவர் ஆச்சரியப்பட்டு மதிற்சுவரேறிப் பார்க்கத்தொடங்கினர்.

இப்படியதர் பார்க்கிறவேளையில் இமயகிங்கிரர் வெகுயேரைக் காய்ந்துஎரியப்பட்ட இருப்புலக்கை, இருப்புத்தூண், இருப்புத்தடி, இவைகளால் மோதியும், அடித்தும், செக்கிணைத்தும், அண்டையிலாட்டப்பட்ட ஆலைகளில் மாட்டிகினிற்போட்டாட்டியும், சம்மட்டிகொண்டடித்தும், தகடுவாட்டியும், நெருப்பினிற் காட்டியும், அம்மியிலிட்டும், ரம்பத்திடரைத்தும், அறிவாளாலறிந்தும், மூக்குகளில் காதுகளில், அனுற்பிளந்தும், மைய்யத்தில் காச்சிபானத்தில், குய்யத்தில், யேற்றியும், குகைகய இரும்நாராசத்தை குடிமியிற் கொள்ளிற் றள்ளியும், கூந்தலிற் ஊசியேற்றியும், எரி யூட்டியும், நாக்கினில் சேதிக்கிறவதைப்பதோடு, வாய்ச்சியினுற் நறுக்குகிறதும், அதும், கரங்கால் சிரத்தை உதைக்கிறதும், செருக்குகிறதும், சொல்லுகிற மூக்குகிறதும், இருப்புத்தூணைத்தழுவச் சொல்லுகிறதும், இருப்புத்தூணைத்தழுவச்சொல்லுகிறதும், தூண்டினில்மாட்டி ஆட்டிவிடுவதும், தொழுமாட்டுவதும் நரககழுவேற்றுவதும் தோய்த்துக் காச்சிக்காச்சிகத்தில்தோய்த்து இப்படிக் கனேகவிதங்கறையிலெறிகிறதும், இப்படிக் கனேகவிதங்களாய்த் துன்பப்படுத்திவருந்துகின்றூர்கள் அவ்வளவு வருத்தங்களையிப் அநேக நரவுயிர்கள் சகிக்கமாட்டாமற் சகித்து வதையகண்டுநலிவுகொண்ட பொய்யறியாதமெய்யர் தேவதூதர்களைநோக்கி, அப்பா! என்னகுற்றத்திற்கு இந்தத் தண்டனை? ஐயோ! சிறிதும் பார்ப்பதற் கென்மனஞ் சகிக்கவில்லையே. இத்தண்டனையனைத்துய் இன்னகுற்றத்திற்கென்று சொல்லவேண்டு மென்ன, தூதர் சொல்லுகின்றூர்கள்.

ஐயா தருமபூபதியே! பிராமணருடைமையை அபகரித்தவர்கள், அக்கிராரத்தை யிடித்தவர்கள், மானியதானியத்தைப் பிடித்தவர்கள், வீட்டில் நெருப்பிட்டவர்கள், அன்னத்தைபின்னப்படுத்தினவர்கள், வழியடித்துப்பறித்தவர்கள், வயிற்றெரிச்சல் கொட்டிக்கொண்டவர்கள், பிள்ளைபெண்கள் சிசுக்களைக்கொன்றவர்கள், பெண்சாதியை விட்டவர்கள், பிறர்மனைவியைத் தொட்டவர்கள், சமயம்விட்டுக் கெட்டவர்கள், தெய்வமிகழப்பட்டவர்கள், பெரியவர்கள் மதியாமற் பேசினவர்கள், உண்டவீட்டுக்கு ரண்டகம் பண்ணினவர்கள், நன்றிமறந்தவர்கள், பட்சபாதஞ்சொன்னவர்கள், அழிவழக்குறைத்தவர்கள் பெண்ணைக்கொடுத்துப் பிழைக்க நினைத்துவாழ்மனைப்பொருளைத்தாய்மனைக்குக்கொண்டுவந்து சேர்த்தவர்கள், ஊருடமைக்குஉலைவைத்திருப்பவர்கள், ஆசைவார்த்தை பேசுகிறவர்கள், இன்றைக்கு நாளைக்கென்று திருப்பிடுகிறவர்கள், மனநோவச் சொல்லுகிறவர்கள், வைதவியமாதரைப் புணர்தவர்கள் கன்னியழித்தவர்கள், கணவனைத் தூறிக் காலாலுதைத்தவர்கள், முறைமைதப்பிப் பேசினவர்கள், மருமகனை வயரெறியக்கண்டவர்கள், பொய்யை மெய்யாக சாதித்தவர்கள், கண்டபோது கனிவாகப்பேசி, காணுதபோது தூறியேசினவர்கள், வாக்கிலொன்றுமனத்திலொன்றுமாய்வைத்து வஞ்சித்து உறவாடினபேர்கள் அடைக்கலமென்றவர்களைக் காட்டிக்கொடுத்தவர்கள், ஆகிற இவர்தான் மேற்பாரிசத்திலிருக்கப்பட்டவர்கள்.

இப்பூவுலகத்தில் அக்கினி கங்கைநவக்கிரகங்கள் அஷ்டதிக்குப்பாலகர்கள், அம்மிகுழவியென்னும் அர்த்தனரீஸ்வரம் பெற்ற பரமசிவன் பார்வதி விநாயகர் சுப்பிரமண்ணியர் அருந்ததி பிராமணர் வெகுஜனங்கள் வேலைக்காரர்கள் இத்தனைபேர்முன்னிலையில் தாம்பூலந்தொட்டுச் சத்தியமிட்டுத் தாலிகட்டியகுலமகளைத்தனித்திருக்கப்பண்ணிபரஸ்திரீபோகம்விரும்பிப்படுகுழியிலாழ்ந்துவாழ்ந்துகிடக்கிற படுபாவிகள், பதிதர்கள், படித்தும் அடக்கமில்லாமற் கர்விந்தவர்கள், கள்ளைக்குடிப்பவர்கள், வீண்பெயரெடுத்தவர்கள்

தாய்தந்தை பசித்திருக்க, அவர்கள்பசியைத் தணியாமலுண்டவர்கள், உடற்பிறப்பைநிந்தைசொல்லி இகழ்ந்தவர்கள், குடும்பங்குலைத்தவர்கள், கோட்சொன்னவர்கள், கலகமூட்டினவர்கள், களவுாண்டவர்கள், தந்தையை குருவை அரசனை பெரியோர்களை நிந்தித்தவர்கள், தெய்வங்கட்குரிய திரவியங்களை அபகரித்துத் தின்றவர்கள் விருந்துவந்தவர்பசித்திருக்க உபசருயரவலுண்டவர்கள், குடும்பத்தையனுசரித்து அவர்களுடன் கலந்துவாழாதவர்கள், கற்றவித்துவான்களைக் கண்டுங் காணுதவர்போற் போனவர்கள், அவர்களுக்கு மரியாதை செய்யாதவர்கள், அவரவர்களுக்குவரிசைபுரியாதவர்கள், அவர்களைப் புகழாமல் இகழ்ந்தவர்கள், குலமுறை தப்பினவர்கள், சகலமும் நாசமென்னுஞ் சன்னியாசி வேடம்பூண்டு மனம்வெறுக்காமல் திருட்டுத்தனமாய்ச் சகலமும் தேசமாகித் திரியுஞ் சண்டாளர்கள், பசுவையடித்தவர்கள், கன்றுக்குப் பால்விடாமற் கறந்தவர்கள், மாடு, குதிரை முதலியவற்றை வருத்தினவர்கள், ஆகிய விவர்கள் தான் கீழ்ப்பாரிசத்திலிருப்பவர்கள்.

அன்றியும் தோழனை வஞ்சித்தவர்கள், கொடுக்கிறேனென்றுவாக்காறகூறிக்கொடாமல் அலங்கழித்தவர்கள், சிவார்ச்சனைக்குரிய பொருளை திருடினவர்கள், வேதமந்திரங்களை வெளியிட்டவர்கள், அண்ணன் தம்பி முதலிய பேர்களை மோசம்பண்ணினவர்கள், ஏழைகளை எதிரிட்டுக்கொண்டவர்கள், ஈடில்லாரைப் பகைத்தவர்கள், ஆறு குளத்தில் அம்மணவானவர்கள் படித்தக்குருவையிகழ்ந்து இன்னொருவனைக் குருவாக்கு கொண்டவர்கள், புணரக்கருத்தறியாமலுரையிட்டவர்கள், ஒருவனுடைமையைத்தின்று மற்றொருவனுக் குரிமையாய்ப் பேசினவர்கள், எளியவர் மனநோவ வருந்தினவர்கள், கன்னிகை விரதந்தப்பக்கலந்தவர்கள், புருடனைவிட்டுப் பர புருடனிடத்தி லாசைக்கொண்டவர்கள், நாணிழந்தும் நாணமில்லாதிருப்பவர்கள், அன்னியனுடைய அழகைஅந்தத்தை ஆபரணத்தை செல்வத்தைப் புகழ்ந்து பேசினவர்கள், புருஷஅக்கு எதிர்த்துப்பேசினவர்கள், மாமன் மாமியை மரியாதையில்லாமல் வைதவர்கள், அவர்களைத் தூறினவர்கள், தாயார்வீடே கதியென்றிருந்தவர்கள், புருடன்சொத்தைத்தாயார் வீட்டுக்குக்கொடுத்து அந்தத் தாயார்வீடுதரித்திரம் பிடிக்கச்செய்தவர்கள், வேலைக்காரிகள், வேலைக்காரர்களை மிகவருத்தமும் நிற்பந்தமும் பண்ணினவர்கள், கர்ப்பத்தைக்கரைத்து அழித்தவர்கள், சிசுவைக்கொன்றவர்கள், ருதுகாலத்தீற்புருடன் முதலிய பேர்களின் முகத்தில் விழித்தவர்கள், பிச்சையிடாதவர்கள், இழிவானபேச்சைப் பேசினவர்கள், பிறர் நிந்தை பின்புறணிகூறினவர்கள், இன்னுமுள்ள பாபத்திற்குப் பயப்படமல் அக்கிரமஞ் செய்தவர்கள், ஆகியவிவர்கள்தான் நடுவேயிருந்து நலிகின்றவர்கள், ஐயா அறக்கடவுள் மைந்தனே! இப்பேர்ப்பட்ட பெண் பிள்ளைகளும் ஆண் பிள்ளைகளும் படும்படியகரிய கொடிய தண்டனைகளால் அவர்களிரைகிற கூச்சல் அனவரதமுமிங்கு அழியாமலிருக்கு மென்றனர்.

---

## தருமராஜன் தனதண்ணன் தம்பியர் முதலிய பந்துக்களைக் காணுதல்.

கேட்டீரோ ஜெனமேஜெயமகாராஜனே இப்படியாக அத் தேவதூதர்கள் தருமராஜனுக்குச் சொல்லிக்காண்பித்துக்கொண்டுவரும்போது சத்திரவிரதனுகிய உத்தமன்மெத்தப்பயந்து, ஹரி! ஹரி! நாராயணு! நானென்னப்பாவம்பண்ணினேன்ஐயோஇந்தப் பொல்லாங்கையும்பார்க்கப்பெற்றேனே இப்பேர்ப்பட்டதுன்பமென்றறிந்தால்இதைக் காணவரமாட்டேனே எவ்றுகாதைமூடிக்கொண்டு இரைந்து விரைந்து நடந்து, நல்லதுஇந்த நரகமித்தெய்வலோகத்தின் எல்லையிற்கலந்ததோ? அல்லது இந்தலோகத்தைக் கடந்ததோ! அதனைச்சொல்லுங்களென்று தேவதூதரைக் கேட்டனர். அவர்கள் ஐயா! தெய்வலோகத்திற்கும் நரகலோகத்திற்கும் பேதமுண்டு. அஃதெப்படியென்றால்? தெய்வலோகத்திற்குத் தேட்சண பாரிச மனு நீதி செலுத்துகின்ற மறலிமகாராஜனுடையகொலுபண்டபம். அதற்குக் கடையாகிய இந்தப் பொல்லாத நரகதொந்தம் பாவிகளுக்கேயிதுசொந்தம். ஓ விந்தம்போன்ற தோளினையுடைய வேந்தனே! உமது தம்பிமார்கள் முதலாகிய பேர்களைபார்க்கவேண்டியது வைகுந்தம். அதுதான் மகாவிந்தமென்பதென்றார்கள் அதுஇன்னுமெவ்வளவு தூரமிருக்கு

மென்று தருமவிறைவன் கேட்டார். உம்மை ப்போலொத்த உத்தமருக்குச் சமீபம் இப் போது நரகத்திற்கண்ட பாபிகளுக்குத் தூல தூரம். ஆதலால் சீக்கிரங் காணலாம் வாரு மென்று திரும்பினார்கள்.

அப்போது நரகவேதனையி லகப்பட்டு நைகின்ற சுற்றத்தினர் உதிஷ்டிரமகாராஜ னைப்பார்த்து, ஓ ஐயா தருமபூபதியே! ஐயா சத்தியவானே! ஐயா தயையுள்ளவரே! ஐயா ஜீவகாருண்யமுள்ள சீமானே! ஐயா தேவ காரியஞ் செலுத்துஞ் சிந்தையனே! ஐயா பொறுமையாவனே; ஐயா பூமிபாலனே! ஐ யா புண்ணியவதிபெற்ற கண்ணியனே! ஐ யாபாண்டுராஜன் தவமெனப்பிறந்த பாக்கிய னே ஐயா உண்மைவாக்கியனே உம்மைத் த ரிசனம்பண்ணிய நாங்கள் கிரிசைகெட்டு நர கத்திலழுந்தித் துன்பப்படப்போமா? உம் து கருணைக்கண்கள் நோக்கும்படிக்குப் பாக் கியம்பண்ணிய எங்களை இனிப்பாபியென்று சொல்லப்படுமா நரகவேதனையிற் றுன்னேப்ப டுமா சூரியனைக்கண்ட இருள்மாய்கிருப்போ ல் தேவரீரைக்கண்ட எங்கள் தீவினை வேண் டுமையா ஓதீனதயாளுவே எங்களைக்கரையே ற்றிவையும். ஆபத்துக் குதவிசெய்யும் உம் மைப்போன்ற உத்தமன் எம்மைக்காயும் வெ ம்மையைக்கண்டு சும்மாப் போய்விட்டால், எங்களுக்குத் திக்காரிருக்கிறார்கள் ஓ திருவு ளமே ஓ தெய்வமே நல்ல புண்ணியசாலியி ன்பாதம் பட்டபோதே கண்ணிய லோகமா னபுண்ணியலோகமாச்சுது எங்களைப் பிடித் தசனியும் போச்சுது உமது தேகக்காற்றும் எங்கள்பேரிற் றாக்கியபோது நாங்கள் புடம் போட்டெடுத்த தங்கமானோம் எங்களைத்தண் டித்துக்கொண்டிருந்த இயமகிங்கரர்களெல் லாம் உம்மைக் கண்டமாத்திரத்தில் ஓடியொ ளித்து ஒதுங்கிப் பதுங்கினார்கள் நீர் தலைம றைப்போனால் எங்கள் பல மூறியப்போனு ல் எங்கள் பலமூறிய அறையவருவார்கள்?

ஆகையால் ஐயா போகாதீர், போகாதீர். நல்லகாலத்திற்றான் பலபேரையுங் காக்கவே ண்டும் எங்களைப்போல் உமக்குந் தீயகாலநே ரிடுமாகில் நீர் யாரை ரட்சிக்கப் போகின்றீர் உம்மையெவர்கள் விரும்புவார்கள் அல்லது இனிமேல் தேவர்களுடைய தயவு சம்பாதிக் கப்போகின்றீரோ? இல்லை நீர் உடனுடன் வந்திருக்கிற பதவிக்கு இனி மாறுதலுவஸ் டோ? எங்களுக்குத் துணைப்படுவதில் உமக் கேதாகிலுங் கதிகுறைவாகிறதானால் நாங்க ளும் உம்மைவிரும்போம் நீருஞ்சகாயப்பட லாகாது இனி யுமக்குக் குறைவில்லை உத்தி யோகம் பலப்பட்டுப்போச்சுது பரமபதங்கா ணியாச்சுது இத்தப்பதத்திற்குநீரே யெசமா ன். எங்களை நீர் மீட்காமற்போனாலு நீரிங் கே யிருக்கிறவரைக்கும் எங்களுக்குத் தண்ட னையில்லை அதுபற்றித் தேவரீரிங்காதானே யிருந்துவிடும். நாங்களும்வாயிலடித்துக்கொ ள்ளாமல் வயிறெரிந்து வாடாமல் மனதுவ ருந்தாமற் பொருந்தியிருக்கின்றோம் ஓ மாத வசிரேஷ்டனே சரணம் சரணம் அடைக்கல ம் என்று பலவிதங்களாய் முறையிடுகின்றார் கள் அப்போது தருமநந்தனர் அந்தப்பரி தாபச் சொல்லைக்கேட்டு, அப்பா வடியெடுத் து வைப்பதற்கு மனமொப்பாம விருந்து ச ற்றே நிதானித்து, அவர்களுக்குச் சமீபத்தி னெருங்கி நீங்களார் எமதருமராஜன் தண்ட னையிற்றியிருக்க நானதை திருத்தப்போ மா? மறுபடியுந் தேகமெடுத்து அனுபவிக்கி ற நீங்கள் இந்தப் பாபத்தை மீதிவைக்கலா மா எப்படியேனும் அனுபவித்து தீரவேண் டும் நல்லது என்னை என்னத்திற்கு அழை த்தீர்கள் உங்கள் கருத்தைச் சொல்லுங்க ளென்றார்.

இச்சொற் கேட்டவுடனே அவர்கள்யா வரும் ஒவென்றழுது, அப்பாதம்பி நான் கர் னன் ஓ அண்ணா! நான் வீமன் ஓ தலைவா! நான் அர்ச்சுனன் ஐயா தமயனே? நாங்கள் நகுலசகாதேவாள் ஓ என்பிராணநாயகா நா ன் திரௌபதி ஓ பிதாவே? நாங்கள் உபபா ண்டவர்களாகிய உமதுபிள்ளைகள் ஓ அத்தா ன் நான் உமது மைத்துனனாகிய திர்ஷ்டத் தூய்மன் நான் உத்தமோசன் நான் உதாரம ன் இப்படியாக அவாளவாளுடைய குரல் வேறாய், முகமாறாய் உருவொருவாறாய் தங் கள் தங்கள் பேர்களைச்சொல்லி முறையிட்டா ர்கள் அவற்றைக்கேட்ட தருமராஜன் அவா ள் படுகிற சங்கடந் தாம்படுகிறதாய்க் கவலை கொண்டு கண்ணீர்விட்டு ஆ? ஆ? இவர்களு க்கெல்லாம் இந்தக்கதி வரவேண்டிய முறை மையென்னமோ நரகசம்மந்த மெய்ப்பேர்ப்ப ட்டதோ இதற்கு நாம் என்னசெய்யலாம் எ ன்று முகம்வாடி யோசித்து நல்லது பாபமி

ல்லாமல் இவர்களை நரகத்திற்கனுப்பமாட்டார்கள். அப்படியிருக்க இவர்களுடையபாபந்தீர்ந்த பிற்பாடு தானே நரகத்தைவிட்டு வெளிப்படவேண்டும் பாபம் அனுபவித்தாவதற்கு முன்னே இவர்களை யழைத்து நாம் பேசுவதெப்படி இது சாமீன்கொடுத்து வருவதுபோலல்லவே அனுபவித்தே தீர்க்கவேண்டியதாச்சே இதற்கெப்படி இதுவோ வேதவிதிப்படிக்கு நடப்பிவிக்கிற ஒழுங்கு இதினின்று மிவர்கள் முத்தியிற்றப்புவது மிகு பிரையாசம் ஆ? கடவுளே இதென்ன தருமச்சங்கடமாய் வந்தது ஐயோ ஒருவேளை தெய்வமாயையோ? நமக்குக் கனவாகத்தோன்றலோ யாதொன்றுந் தோன்றவில்லை.

மேலு நமது அண்ணன் தம்பி முதலானபேர்கள் பாபிகளல்லயாகாதி கிருதுக்களைப்பண்ணி வேதங்களை யனுசரித்து பிராமணரிஷிகளைப்பூசித்து என்னுடையசொல்லுக்கு மாறுபடாமனடந்துசத்தியவிரதநாட்டி யுத்தத்திற் சமத்தைக் காட்டி தேவர்களெல்லாங் கொண்டாடவெற்றிபெற்று நெற்றிக்கண்ணனுடைய நிமலனடிபோற்றி எத்திக்கு நிறைந்த ஈசனடிபோற்றி முத்திக்குவித்தான முதல்வனடிபோற்றி அத்திக்கு முன்வந்தவன் வலதுபோல் நடந்த உத்தமகுணத்தினராகிய இவர்களுக்கே இப்பேர்ப்பட்ட கெதியானால் ஏழைமதியோர் முதலியபேர்களுக்கு என்னமாய் முடியும் ஆ தெய்வமே? இராஜாதிராஜனுகிய துரியோதனன் செய்ததெல்லாம் பாபம் நினைத்த யாதுஞ் சூது நடத்தியதெல்லாந்துற்நடத்தை பிடித்ததெல்லாம்பழிகொடுத்ததெல்லாம் பருக்குவழி அப்பேர்ப்பட்டவன் நல்ல பதத்தைப் பெற்றிருக்கப் பார்த்தோம் ஞாயமானவர்கள் தீயகதி சேரவேண்டிய காரணமென்ன இதைவிட வேறு புதுமையென்பதில்லை இனி எதனைக் குறித்து உன்னுவது என்று தனக்குத்தானேயெண்ணி மௌனமாயிருந்து, மனத்துயர் கூர்ந்து உயிர்சோர்ந்து பெருமூச்செறிந்து தேவேந்திரமகாராஜாவின் செயலிப்படிக் கிருந்ததென்று தலையிரக்கமாய்க் சஞ்சலப்பட்டார் தருமநந்தனர்.

இப்படிக் கவர்படுந்துயரத்தைத் தேவதூதர்கண்டு ஓயா சத்தியவானுகிய தருமராஜனே உமது தம்பியரிருக்கிற இடம்போய்ப் பார்க்கவந்த நீர் இங்கேதானே தலையிறங்கிக் கொண்டு சஞ்சலமா யிருந்துவிட்டீர் இது வெகு நேர்த்தி எழுந்திரும்போவோம் விரைவில் வாரும் வாரும் என்று அழைத்தார்கள். அப்போது வாக்கு மனமும் ஒத்தவராகிய தருமநந்தனர் அவர்களைநோக்கி அப்பா தூதர்களே அங்கேபோய் ஆரைப்பார்க்கிறது இதோ எல்லோருமிருக்கின்றுர்கள். நானுமியிருடனிருக்கிறேன் அந்தமட்டுந் தேவேந்திரனுந் தேவர்களுங்கூடி என்னைச் சிலாக்கியப்படுத்தித் தேகத்துடன் விமானத்திலேற்றி வந்ததற்குப் பெருமையாய் என் பந்துக்களையுஞ் சகோதரர்களையு நைந்துநொந்து வெந்து கிடக்கிற நரகந்தில் அவஸ்தைபடப் பார்த்தேனே இதுவேபோதும் நீங்கள்போய்ச் சொல்லுங்கள் வேறுபதம் எனக்கு வேண்டாம் மாறுபதம் போதுமென்று சொல்லிவிடுங்களென்றுர் அப்படியே தூதரோடி தேவராசனுக்குத் தெரிவித்தார்கள் அதற்குந் தேவராஜன் சபையிலிருந்த தேவர்களைப் பார்த்துச்சரித்து வேகத்துடனெழுந்து வெள்ளையானையேறி தேவர்களும் ரிஷிகளும் அரம்பைமாதரும் அனேகங்கணங்களும் மேளவாத்தியங்களும் புட்பமாரிகளும் பொருந்தப் புறப்பட்டுத் தருமராஜனிடத்திற்கு வந்தனன் அவனேடு திக்குபாலகர் அஷ்டவசுக்கள்-நவக்கிரகங்கள்-ஏகாதசருத்திரர்இவர்முதலிய சமஸ்தமானபேரும் விருதுகொடிகுடைகளாகிய சின்னங்கள்கவியவந்தார்கள்.

அந்தவேளையில் வெவ்வேறு பின்னமாகிய உடல்களெல்லாம் ஒன்றாகியும் கூச்சலிட்டுக்கொண்டிருந்த உயிர்களெல்லாம் அடங்கியும் துற்கந்த நாற்றங்களனைத்துஞ் சுகுணமாகவும், பிராணிகளெல்லாம் வேதையில்லாம லிருக்கவுங் கண்ட குருகுல சிகாமணி மகிழ்ந்து மிகுந்த மகத்துவங்கொண்டபெத்துத்திசையும் பரந்து நிற்கின்ற தேவதைகள்ரிஷிகள்முதலிய சகலமானபேர்களும் பிரத்தியக்ஷமாய் வந்திருத்தலை நோக்கி அற்புதப்பட்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து தோத்திரம்புண்ணி நின்றுர் வச்சிராயுத னவரைப் பார்த்து, ஓ தருமராஜனே நீர் இவ்விடத்திற்றுனே யிருக்கின்றே னென்று சொன்னதாய் தூதருரைக்கக்கேட்டுவந்தோம் உம்மையுயர்ந்தபதவியாகிய அச்சுரானந்தத்திற் சேர்க்கக்கருதினல் நீர் தாழ்ந்தகதியிற் புகுவேனென்று சங்கித்த தென்னவென்ற

னன். அதற்குத் தருமராஜன் ஐயா சசிமணுளரே! துரியோதனுதியர்கள் சொர்க்க பதவி பெறுவானேன்? எனது தம்பிகளும் பெண்சாதிபிள்ளைகளும் இத்தீய நரகத்தில்நின்று கதருவானேன்? இந்தச் சந்தேகத்தினுல் நானிங்கேதானே யிருந்துவிட்டே னென்றுர். அச்சொற்கேட்ட அயிராவதன் தருமராஜனைநோக்கி, ஐயா சத்தியரூபி! நல்வினைகொஞ்சஞ் செய்தவர்கள் முன்னே சுவர்க்கபோகத்தை யனுபவித்து, அப்பால் தீவினைகளுக்குத் தக்கபடி நெடுநாள் நரகத்தில் மூழ்கிக்கிடப்பார்கள். தீவினை கொஞ்சம் புரிந்தவர்கள் முன்னே நரகத்தை யனுபவித்துவிட்டு, அப்பால் நல்வினைக்குத் தகுந்தபடி போகபாக்கிய பூமியை நெடுநாள னுபவிப்பார்கள்.

இந்த விபகாரத்தைப்பற்றி உமது தம்பிமார்கள் முதலாகியபேர்கள் கொஞ்சமான துன்பத்தை முன்னே யனுபவித்து விட்டால், பின்னுலே உம்முடன் கூடியிருக்குஞ் சவுக்கியமுண்டு சங்கடமில்லை அதற்காகக் கிஞ்சித்து வினையை முதலில் அனுபவித்தார்கள். துரியோதனன் கொஞ்சமே நல்வினை செய்தான். அதையவன் முன்னுடி யனுபவித்துவிட்டால், அப்பால் அவனடத்திய தீவினைகளெல்லாம் மலைமலையா யனுபவிக்கப் போகின்றுன். மாளா நரகவேதை வந்திருக்கின்றது. இதுதானிங்கிருக்கு ஞாயம். இப்பவும் உமது தம்பிமார் முதலிய பேர்களை நீரெப்போது கண்டீரோ? அப்போதே அவர்களுக்குத் தண்டனை கண்டனை தீர்ந்து, உன்னதபதத்தி லுறுவதற்காக விரசாநதி ஸ்நானத்திற்குபபோய் பரிசுத்தமான அமுதபோனசமுண்டு ஆனந்தத்தி லிருக்கின்றுர்கள். அதையுங் காண்பிக்கின்றேும் வாரும்வாரும் என்று அழைத்துக்கொண்டு போகிறபோது இந்திரன் உதிஷ்டிரரைப் பார்த்து ஓ தரும பூபதி! நீரும்நரகதரிசனம்பார்த்து அப்பூமியில் ஒருகடிகை வாசம்பண்ணக் கிடைத்தது அஃதென்னத்தினு லென்றுல்? நீர் நடந்ததெல்லாஞ் சத்தியமே- தருமமே, ஆகிலும் உம்மையறியாமலுற்றிருந்ததீவினைகள் நீங்குகிறதற்காக நியமித்திருந்த ஆக்ஞைப்படிக்கு, உம்மை யந்நரகத்திற்கு நெட்டாமலுத் தட்டாமலும் எட்டநடந்துபோய்விட்டது. உம்மையும் ஊழ்வினை விட்டது. கிலேசம் வேண்டாம்.

ஓ கீர்த்தியாளனே! மநு-மாந்தாதா-பாகீரதன்-திலீபன்-அரிச்சந்திரன்-நளன்-யயாதி-பரதன்-இப்பேர்ப்பட்ட பார்த்திவர் முதலாகியபேர்கள்-கிரீடாதிபதிகளாய் இராச்சியபரிபாலனம் புரிந்தார்கள், அவர்களியாருமிங்கிருக்கின்றுர்கள். அவர்களெல்லாரும் உம்மை பூசிக்கும்படியாயும் ஆசீர்வதிக்கும்படியாயும் மேலானகதி பெறப்போகின்றீர். ஓதருமரே, இராஜசூயம், அஸ்வமேதம் இவை முதலிய வேள்விகளை நிராமய நின்மலசித்தபவித்திரம் பெற்றவராயிருந்து செய்துமுடித்து, பூரணுகுதிகொடுத்து, யாவருக்கும் பொருளளித்துப் புகழப் பொருள்பறித்த புண்ணியத் தேகியாகிய உமக்கு, ஒருகாலத்திலுங் குறைவில்லை. தேவகண்டராகிய ராட்சதருக்குச் செயமாட்டாது. உமது தமையனுகிய கர்னன் எனக்குத் தானமளந்தவன். ஆதிநாராயணனுக்குத் தருமங்களைப்பச்சை போட்டவன். ஆனபடியாலந்த மகானுபாவனுக்கு ஜனனமரண மென்னுந் தடையே கிடையாது. அக் கொடையாளியாகிய கோமான் உன்னத கதியைப்பெற்றிருக்கின்றனன். அந்தப் புனிதனையும் பார்க்கவேண்டுமென்றுல், முன்னதாய் நீர் ஆகாயகங்கையைப் பார்த்துப் போவீர் வாருமென்றழைத்துக்கொண்டு அங்ஙனம் வந்து சேர்ந்தான். அதைக் கண்டவுடனே தருமராஜன் தண்டனிட்டார். தேவதைகள் புகழ்ந்து வாழ்த்தினுர்கள். அப்போது தருமராஜன் திடகாத்திர தேகத்துடன் மனேரம்மிய முடையவராகி, இதுகளெல்லாந் தேவமாயையென்று தெரிந்துகொண்டு, நாம் கொண்டதெல்லாம் வீண்பிராந்தி மயக்கங்களென்றேர்ந்து, அரவிந்தம்போல் முகமலர்ச்சியுடையவராகி, ஆகாயகங்கையில் மூழ்கி, ஆசமன்யமுண்டு, காயத்திரி மந்திரசெப முடித்துக்கொண்டு, சூரியன் முதலாகிய தேவதைகளைத்தொழுது கங்கையைப்பணிந்து, திவ்விய தேகசௌந்தரிய காந்தியுடையவராயினுர்.

நரகதரிசனச் சருக்கம் முற்றிற்று.

மூன்றாவது

## பரமபத தரிசனச் சருக்கம்.

———:o:———

சித்தரா ஞர்களறி சிற்பிரகா சாயநம, செற்றமார் வாதின்மயல் செற்றதா டாளநம
மத்தராயோ துபத கத்தில்வா தேயொழிய, மற்றிலா தாரமருள் வைத்தமா மாயநம
நித்தமா வேவல்செய்து நீக்கநே ராதுனடி, நித்தமா மேவல்செய்து நிற்கமா லாகுமதி
பத்தரா ஞர்கள்பெறு பத்மபா தாயநம, பத்மநா பாயநம பத்மநா பாயநம.

ஓ ஜெகதலம்புகழும் ஜெனமேஜெயமகாராஜனே! தேவேந்திரனும் தேவர்களுந்தருமராஜனும் ஒருவரோடொருவர் வார்த்தையாடிக்கொண்டு ஒருமை மனதுடையவர்களாய் ஆகாயகங்கையைக்கண்டு ஸ்நானமுதலிய பூசைகள் செய்துகொண்ட பிற்பாடு, தருமராஜனவர் தனது ஆசாரியர் தந்தையர் தாயார் தம்பியர் தமையர் தருமபத்தினிகள் புத்திரவருக்கங்கள் பந்துமித்திராள் இஷ்டகடவுளர் இவர்முதலாகிய பேர்களையெல்லாம் நினைத்துத் தொழுதார். அந்தச்சமயத்தில் எமதருமராஜன் வந்து, தன்னமிசமான தருமராஜன் முகத்தைப்பார்த்து, ஓ என்னருமைச் செம்மலே! நீ இந்நதியில் மூழ்கின தன்மையினுற் பிறவிக் கடல் கடந்தனை, வினையிரண்டு மற்றனை, இந்திரியங்களைச் செயித்தனை, பகைவரையும் வென்றனை, அவஸ்தை பத்தையும் ஒறுத்தனை மலமூன்று மாற்றினை, ஆசை மூன்றையு மறுந்தனை மானிடதேகந் தீர்ந்து திவ்விய தேவதேகம் பெற்றனை. பூலோகத்தின் மாயாசம்மந்த மயக்கம் வாஞ்சை பொய்ப் பதார்த்தம் பிராந்தி சங்கைகள் இயானெனதெனும்பற்றுகள்இவையெல்லாவற்றையும் பிரிந்தனை. ஆனல் ஞான பூமி சம்மந்தமான பந்தங்கள் மாத்திரமே உனது கியாபகத்தி லிருக்கின்றன. இனியுன்னைக்கண்டு தரிசித்தபேர்களுக்கு மவையுண்டு சத்திய வுருவம் பெற்ருய், உன்னைப்பார்ப்பதற்காக வனத்தில் இரண்டுதரம் வந்தேன். விராடபுரத்தில் ஒருதரம் வந்தேன். பின்பு துறவுபூண்டு பூமிப்பிரதக்ஷணஞ் செய்து உத்தரதிசையை நாடிவந்த உங்களைத் தொடர்ந்து நாய்போல்வந்து, தம்பியருந் தருமபத்தினியுஞ் சாய்த்த பிற்பாடுங் கூடத் தொடர்ந்து, என்னைப் பற்றித் தேவேந்திரனேடு நீ சம்வாதஞ்செய்த சற்குணத்தையும் பார்த்து அப்பால் யான் வெளிப்பட்டு உன்னையிந்திர விமானத்திலேற்றிப் போயினேன், இப்போது ஆகாயகங்கையில் ஸ்நானம் பண்ணி என்னை நினைத்த அருமையால் வந்தேன். ஓ பார்த்திபனே! உன்மீது எனக்கு மிகுந்த பாஷமுண்டாச்சுது என்றுசொல்லி ஆலிங்கனஞ் செய்துக் கொண்டேன். அப்போது தேவகணங்கள் அரிச்சந்தனம் பாரிசாதம் மந்தாரம் தேவதாரம் சந்தனம் என்னும் பஞ்சதாருவின் புட்பங்களை வாரி மாரிபோற் சொரிந்தார்கள். ரிஷியீஸ்வராள் ஆசீர்வாதம் பண்ணினர்கள்.

இப்பால் தருமராஜன் இந்திரனேடும் இயமனேடுந் தேவவிமானத்தி லேறிக்கொண்டு, வாசனையுடைய மாலைகள் புனைந்து, இந்திரவர்ணப் பட்டுடையுடுத்தி, சந்தனம் புனுகு சவ்வாதுந்தரிந்து, அளவற்றதேவர்களும் முனிவர்களும் அரம்பைமார்களும் திருத்துளவமார்பமும் பூதேவியுடன் மகாலட்சுமிப் பிரகாசமும் அவர்களிடத்தில்மருவியபுன்னகையும் வேதந்துதிக்கும் வித்தகமும் முப்புரிநூலும் அபய வரதாஸ்தமும்ஆகிய விக்கோலங்களை யெல்லாந் தனித்தனிகண்டு தரிசித்தனர். அப்போது சகஸ்திரார்ச்சனை செய்யு மன்பர்களுக்கு அமுதமாகியும் சதுர்வேதஞ் செபிப்பவர்களுக்குத் தேனுகியும், சத்துருவுக்குத் தழலாகியும் மித்துருவுக்கு நிழலாகியும் மாணிக்கச் சிங்காதனத் திருக்கின்ற அம்மாதவனவர் சந்தோஷித்து, சகலகவலைகளுமொழிந்து சரீரம் புளகித்துப் பரவசமடைந்து உள்ளன்பினு லுருகியிருக்கும். உத்தமனுக்கு மெத்தவும் ஆசீர்வதித்துப்பல்லாண்டுகூறி, பூமியிலுற்பவித்தபோது, பாண்டவர் சகாயனென்றிருந்த பான்மையிலும் பத்தத்தனைபங்குவைத்து மெத்தவுங் கடாட்சித்து, இன்னுமுமது மனதிலுள்ள பந்தத்தை இந்திரனுமியமனும் நீக்கிவைப்பார்கள். நீர் போய்வாரும் என்று கருணைபுரிந்தனர். உட

னேதேவேந்திரனும் யமதருமராசனுந் தருமராசனுடன் விமானத்தி லேறிக்கொண்டு, ஓ சகலசாஸ்திர சாம்பிரதாய பண்டிதனை தருமராஜனே உமது குலத்தாரை யெல்லாங்காட்டுகின்றோம் பாருமென்று அவ்வவ்வவரையுந் தங்கள் கரத்தை நீட்டிச் சுட்டிக் காட்டுவதானார்கள்.

---

## தருமராஜன் தனது பிதுர்க்களாதியரைத் தரிசித்தல்.

ஓ சத்தியவிரதனே! அலர்ந்தசெந்தாமரைப்போல் விளங்குகின்ற முகமும், கிருபை நிறைந்திருக்குங் கண்களும், மதுரமொழியும்வாயும், முத்துகள் வரிசை வைத்ததுபோன்ற பற்களும், தயையுடைய புன்சிரிப்பும், வண்டுகள் மொய்க்கப்பட்ட மாலையும், முப்புரிநூலும், பொன்னுடையு முடையவராகி அஷ்டவசுக்களி லொருவராக அமர்ந்திருக்கப்பட்ட உங்கள் பாட்டன் வீட்டுமரைப்பாருமென்றார்கள். அவரைந் தருமநந்தனர் கண்டு தோத்திரம் பண்ணி, நமஸ்கரித்துக் கொண்டு துதித்தார். அப்பால் தாமரைக் கமலமலர்மாலையும்,வெள்ளைப்பட்டுடையும், உத்தரீயமும், குண்டலப் பிரகாசமும், எக்ஞோப வீதரீபக்கத்திற் பொருந்திவரும்படியாய் தேவலோகமெல்லாந் திரிந்துபார்த்து அப்பாற் சிலதூரஞ்சென்று, சுவர்ணமயமானமதிலும், நான்குவாயிலும், சிகரகோபுரங்களும், பொன்னாலாகிய வீதிகளும், பூரணக் கலச மேடைகளும், மாட மாளிகைகளும், கூடமடாலயங்களும், நாகரத்தின தீபங்களும், நற்பொன்னின் ரேகைகளும், தருமம், தவம்-யாகம்-யோகம்-இவைமுதலியன செய்யுமிடங்களும்,மணி-மலர்-சந்தனம்-பனிநீர் இவைகளைப் பொழிகின்றமேகங்களும், சூரியசந்திர கிரகக்கதிகளும் நித்திய சூரியர் பத்திசெய்யுந்துதிகளும், ஆகிய மங்களாகரங்களனைத்தும் பொங்கியிருக்கின்றவாசுதேவன் எழுந்தருளிய வைகுந்த நகரத்தைக் கண்ணிற்கண்டனர். உடனே விமானம்விட்டிறங்கி, திக்குநோக்கித் தெண்டனிட்டெழுந்து, நடந்துசென்று, ஆகமம்-புராணம்-வேதம்-சாத்திரம்-கலைக்ஞானம் இவை முதலியவைகள் செவிக்கினிமையாய் முழங்குமோசையும், சிதரன் திருநாமஞ்செபிக்கின்ற முழக்கமும், சங்கமுதலிய வாத்தியங்கள் சப்திக்கின்ற ஆர்ப்பும் இவ்விதமாக நிறைந்திருக்கப்பட்ட அவ்வைகுந்தத்தைவலமாகவந்தனர். அப்பால் இந்திரனும் இயமனும் அப்பட்டணத்திற்கு மத்தியிலிருக்கின்ற திருக்கோவில்-வாகனமண்டபம் - கொலுக்கூடம்-பகடசாலை-இவைகளில் தருமராஜனை யழைத்துக்கொண்டு சென்று, ஓ முரசகேதனனே! இதோபாரும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கின்றார். அவரருகில் அஷ்டலட்சுமிகளு மமர்ந்திருக்கிறது.

அவரைத் தருமனந்தர் பார்த்தவுடனே ஆவென் றிரைந்து, அலறி விழுந்து விரைந்து அடிமலர்மேலமர்ந்து மூர்ச்சைபோயெழுந்து மனக்குறைகளெல்லாந்தீர்ந்து, இருகண்களிக்கக்கண்டு, இன்பசாகரத்தில்மூழ்கி, அப்பகவானுடைய பசுமையாகிய மேக நிறமும், பவளமாகிய அதரமும் அடுத்தாரைரட்சிக்குங் கமலபாதங்களும் - பிரமனைப் பெற்ற உந்திக்கமலமும்-சூரியன்போன்ற மணிமகுடமும்-ஜீவரத்தினக் குண்டலங்களும்-கனகமயமான அம்பரமும்-செந்தாமரைக் கமலமனைய திருக்கண்களும்-பர்வதம்போன்றகதையும்-ஜோதிமயமான வாளும்-இந்திரதனுவனைய கோதண்டமும்-சங்குசக்கரமும்-கவுஸ்துவாபரணமும் - தர்ப்பை பௌத்திரமும், திவ்யாபரணங்களும், சிகையும், மணிமகுடமும், வில்லும் அம்பறுத் தூணியும் விளங்க, சுக்கிராச்சாரியாருக்குப் பக்கத்திலிருக்கிற துரோணச்சாரியரைப் பார்த்துச் சேவித்துக் கொள்ளுமென்றார்கள். அப்படியே வணங்கிக்கொண்டு அன்புட்னேக்கினார். அப்பாற் பொற்கலைகள் தரித்து, இரத்தினாபரணங்கள் பூட்டிகிரீடஞ்சூட்டி, மாலைகளணிந்து, கணவனைப்பிரியாத குணவதியாகிய காந்தாரிதேவியுடனே கந்திருவர் கூட்டத்திற் கலந்திருக்கின்ற உங்கள்பெரியதந்தையாகிய திரிதராட்டிரனைப் பாருமென்றார்கள். அப்படியே கண்டுகளித்து, திக்குநோக்கித் தெண்டனிட்டெழுந்து அப்பாற் செல்லும்போது பதிவிரதைகளாகிய குந்திதேவி மாத்திராதேவியென்னும் இரண்டு ஸ்திரீகளும் பக்கத்திலிருக்கச் சுக்கிரன்போல் பிரகாசித்து, சர்வாபரண பூஷிதத்தோடு தரிசனைக்குரியவராகிகாண்டற்கரிய தரிசனமாய்ப் பன்னிரண்டு சூரியகோஷ்டிக்குப் பக்கத்தில் வைத்து உபசரித்துவருகின்ற உமது தந்தையாகிய பாண்டு பூபதி

யைப் பாருமென் றுரைத்தார்கள். அவ்வாறே பார்த்து ஆனந்தங்கொண்டனர் தரும பூபதி.

அப்பாற் சிலதூர மழைத்துச்சென்று, ஓமெய்விரதரே! உலகமுள்ளளவரையிலுங் கீர்த்திவளர்த்து, ஈகையிற் சிறந்து, முதல்வள்ளலென்று பேரெடுத்து, வைகுந்த நாதனுக்குப் புண்ணியத்தைத் தானமாகக் கொடுத்து கவசகுண்டலத்தை யளித்து, பாரதப் போரில் நன்றிகுன்றாமலுழைத்துச்சொர்க்க பதவியுற்றிருக்கிற உங்களண்ணன் கர்னமகாராஜனனவன் தன் பத்தினி புத்திராளுடன் வீற்றிருக்கும் விந்தையைப் பாருமென்றார்கள். அவ்வாறே பார்த்துக் களித்தபின்பு அதற்கப்பால் அழைத்துச்சென்று, அதோ அக்கினிப்பிரகாசத்திலு மதிகப்பிரகாசமாகி, அருட்கண்தாங்கி, பர்வதம்போன்ற தோள்களும்-அணிமணிப் பணிகளும்-நவரத்தின முடியும் - திவ்விய சௌந்தரியமும்-திடகாத்திரதேகமும்பெற்று, வாயுதேவனது வலதுபுரத்திலிருப்பவன் வீமசேனனென்றும், இதோ அரவிந்தமுகமும், அழகிய பச்சைமேனியும் - நகைமுகமும்-சுவர்ணகசித வஸ்திரமும்-சுந்தரகாந்தியும்-கேயூர மணிகுண்டல கிரீடமும்-ஆரமும்-வில்லும் இனியவசனமுமுற்று, சுசனபோஷகனுமாகி,பர்வாசுதேவனுடைய பாதகமலத் தண்டையிலிருப்பவன் பார்த்தனென்றும், அதோ மிருத்யுதேவதைகளுக்கு மருங்கிலிருப்பவர்களிரட்டையாகப் பிறந்த நகுலசகாதேவாளென்றுந் தெரிவித்தார்கள். அவர்களை யவர் கண்டபின் இதோ அகத்தியருக் குபதேசித்த இளைய பிள்ளையாருடனே மூன்றாம்பிறை தரித்து முடி யோடு பார்வதி சமேதராய்ப் பலகணங்கள் பக்கங்களிற் புடைசூழ வீற்றிருக்கின்ற சிவபெருமானைச் சிந்தித்து, பாஞ்சாலன் யாகத்தில் அயோனிகமாகச் சனித்து, உங்களைவரையுங் கலந்த திரௌபதாதேவி மகாலட்சுமிக்கு மருங்கிலிருந்து திருமால் திருவடியை வருடிக்கொண்டிருக்கின்றாள்.

மேலும் சிவந்த அதரமும், மலர்ந்தமுகமும், நிறைந்தவயிறும், நீலோற்பலமொத்த கண்களும், நாகரத்தினபாணமும், சுகந்தமாலைகளும், தயை சாந்தமுதலிய சுகுணமும், சிறுநகையுமுடைய அப்பாஞ்சாலிவயிற்றிற் பிறந்த இளம்பஞ்ச பாண்டவர்கள் அதோ காந்திருவருடன் கலந்திருக்கின்றதைக் காணும் - அன்றியும் - ஸ்ரீமந்நாராயணராகிய கிருஷ்ணசுவாமிக்கு மருமகன், எனக்குப் பேரன், அர்ச்சுனன் முதலாகிய-உங்கட்குப் புத்திரன், சுபத்திரைக்குக் காதலன் என்று சொல்லப்பட்ட அபிமன்னன் அதோ சந்திரனுடனே சரியா யிருக்கிறான் பாரும். இதோ இரவான் கடோற்கஜன் இன்னுமுண்டான பிள்ளைகள் பந்துஜனங்கள் மித்திரநேசர்கள் யாதவகுலத்தார்கள் போஜகுலத்தலைவர்கள்-கிருதவன்மன் - கிருதவீரியன்-சாத்தகி-இவர் முதலான பேர்களையெல்லா நோக்கும். அதோ திட்டத்தூய்மன்-பாஞ்சாலன்-விராடன்-பாண்டியன்-கேகயன் அவரவர்களுடைய - புத்திராள் - அண்ணன்மார்கள்-தம்பிமார்கள் இவர்கள் பூர்வம் எந்தெந்தத் தேவாமிசமோ! அந்தந்த அம்சத்தை யடைந்திருக்கின்றதைக் காணும் இன்னுமுள்ள வீராள் தீராள் முதலிய பாரதப் போரிற் பட்டவர்கள் அத்தனைபேரு மிதோ பலபதவி யடைந்திருப்பதைக் கண்டுகொள்ளும் என்று ஒருவரையும் பாக்கியில்லாமற் காண்பித்து இன்னுமுமக்குப் பார்க்கவேண்டியவர்கள் யாராகிலு மிருந்தாற் கேளுமென்று யமதருமராஜனுந் தேவேந்திரனுங்கேட்க, தருமராஜன் சொல்லுகின்றார்.

ஓ கிருபாமூர்த்திகளே! நான் பெரியன். பெரியோர்களுக் கபகாரி. தேவதைகளுக் கபராதி. நீங்கள் என்னையொருபொருட்டாயெண்ணி என் மனதிலிருந்த சங்கல்பப்படிக்கு எல்லோரையுங்காண்பித்தீர்கள். அதிசயங்களியாவுங்கண்டேன் ஆனந்தங்கொண்டேன் இனிநான் பெறவேண்டிய புருஷார்த்தங்களில்லை. உங்கள் கிருபாகடாட்ச மாத்திரம் என்றென்றைக்கும் என்னைவிட்டுப் பிரியாமலிருக்கவேண்டும். என்னைப்போல்பேறுபெற்றவர்களை இம்மையிலுங் கண்டதில்லை. அம்மையிலுங் கண்டறியேன். உம்மையிலுங்காணமாட்டேன் ஓ மூவர் முதல்வர்களே! ஒன்றுக்கும்போதாதவென்னை உத்தமபதத்திலேற்றிவைத்த வுதவிக்கு என்னாலாகுங் கைம்மாறியாது? ஒன்றுமில்லை என்றுகூறிப்பரந்தாமனுடைய திருக்கோவிலைபணிந்து,தோத்திரஞ்செய்து துதித்தார். அந்தத் தருமபூபதியை அச்சுதப்பெயரண்ணலாகியபச்சைமால் பார்த்து, பட்சமாய்த் தன்னிடத்தி லமரும் படிக்கு அனுக்கிரகஞ் செய்தருளினார். அப்

பால் தருமபூபதியானவர் தேவர் - சாரணர் சித்தர்-யக்ஷர்-கின்னரர்-கருடர் - காந்திருவர் முதலிய பேர்கள் தன்னை புடைசூழ்ந்து வந்திக்க வீற்றிருக்கின்றபோது இயமனும்-இந்திரனும்-மற்றமுள்ள தேவதைகளும்-அவரவர்க ளெதாஸ்தானம் போவதற்கு எம்பெருமானிடத்திலுந் தருமநந்தன ரிடத்திலும், விடை பெற்றுக்கொண்டு போனார்கள். என்று ஜெனமேஜெய மகாராஜனுக்கு வைசம்பாயனர் விளம்பினர்.

இவையனைத்துங் கேட்ட வபுஷ்டாதேவி மகிழ்னன் மகிழ்ந்து, ஓ திரிலோகமும் புகழாநின்ற ரிஷிதுல்லியரே யென்று தீர்க்க தெண்டனிட்டு, சுவாமி! தேவாமிர்தத்தை என் செவியில் மடுத்தீர். உள்ளும் புறம்பும் வெள்ளமாய்க் குளிர்ந்தேன். உம்மாலே எங்கள் பெரியவாள் பெற்ற பேறு கேட்டேன். அதனால் என்னைச் சார்ந்தவர்களும் நானுங் கிருதார்த்தரானோம் கல்விகளிலும் - கேள்விகளிலும் வேள்விகளிலும் - அறிவிலும் ஞானத்திலும்-தபசிலும்-ஆசாரபத்தியிலும் சுத்தியிலும்-உமக்கு ஒப்புச்சொல்லஒருவரையுங் கண்டிலேம். தேவரீர் அருளிச் செய்ததெல்லாஞ் சத்தியமே. உண்மையாகக் கொண்டோம். இதிலின்னுமொரு கேள்வியுண்டு. அதாவது, தருமராஜன் முதலாகிய பேர்கள் அடைந்தகதிகளைச் சாற்றினீர். இனி யெப்போதும் அந்தப் பதவியிற்றானே யிருப்பார்களோ? அல்லவென்று சிலநாளிருந்து திரும்பவு மண்ணில்வந்து பிறப்பார்களோ? என்று அனுமானப்பட்டேன். அதை எனக்குத் தெளியப்படுத்த வேண்டுந் தேவனேயென்று சிந்தித்து வந்தான். அதற்கு வைசம்பாயன முனிவரவ்வரசனை அருட்கண்ணாற் பார்த்து, ஓ மகாராஜனே! நீர் மெத்தப்பரம ரகசியமான பதார்த்தத்தைக் கேட்டீர். இப்படி பன்னிக் கேட்பவர்கட்கே உன்னிச் சொல்ல வேண்டியது. ஆதலால், என்னுண்டவனாகிய வியாசபகவானுடைய கருத்தின் வண்ணம்விரும்புகிறேன். அதனை நீர்கேட்டு அறிந்துகொள்ளுமென்றுசொல்லுகின்றார்.

பரமபததரிசனச் சருக்கம் - முற்றிற்று.

---

நன்காவது,

# முத்தியடைந்தச் சருக்கம்.

---

கண்ணன் துதி.

ஆழுமதை தீயவனி யாகாச மாதிநம வானுலு நீமுழுது மாகாத சோதிநம
ஏழுத வாகனன்மு னும்வானு ளோர்பரவு தெவேச ராலுமறி வாகாத தேசநம
மாழுந்து நான்மறைகள் வாசாம கோசரமென் வாடாத பாதமலர் வாயார வோதுதொறு
தாழுந்து கூரமென லாநேசர் சார்புநம தாமோதராய நம தாமோதராயநம தாமோதராயநம.

ஓ குருகுலக்கோமனுகிய ஜெனமேஜெய மகாராஜனே! அட்டவசுக்களி லொருவராகிய பிரபாசன வசுவென்பவர் வீஷ்மராகப் பிறந்து பிரமசாரி விரதத்தை யனுஷ்டித்துப் பெருமைபொருந்தி யிருந்து வசுபதம் பெற்றனர். சுக்கிரபகவான் கலையாகிய துரோணாச்சாரியர் மறுபடியுமச் சுக்கிரபகவானைச்சார்ந்துபோனர். கந்திருவராசனுடையகலை திருதராட்டிரனாகப்பிறந்துமறுபடியுங் கந்திருவப் பதமடைந்தான். யக்ஷ குலாதிபனாற் பிறந்த பாண்டுயக்ஷபதவிசேர்ந்தார். சூரியனுடைய அம்சையான கர்னன்சூரியனைக்கலந்தான். வாயுகுமாரனான வீமன் வாயுபகவானைச் சார்ந்தான். இந்திரனாகிய அர்ச்சுனன் தேவேந்திரனைக்கூடி நாராயண பாகமான நரசம்மந்தத்தினாற்பரவாசுதேவன் பணிவிடைக்குகந்தான். மருத்து தேவதைகளின் பொருத்தமான நகுல சகாதேவர் அவ்வஸ்வனி தேவ

தைகளை அண்டினார்கள். சந்திரன் கலையால் வந்த அபிமன்னு சந்திரனிடத்திலேயே சேர்ந்தான். பிரத்திம்மன்னென்பவன் சனற் குமார னிற்றங்கினன். கிருஷ்ணன் பத்தினி வாரான உருக்குமணி முதலாகிய தேவிமார் கள் மகாலட்சுமியில் மருவினார்கள். இன்னு மனேகம் ஸ்திரீகளுந் தபோவிரதங்களினால் ரம்பாஸ்திரீகளிற் கலந்தார்கள். குந்திதேவி முதலாகிய புனிதவதிகள் பூமிதேவியிற் பொருந்தினார்கள். வித்தியாதர ராஜன் விதுரனுகப் பிறந்து இயம னம்சந்தாங்கி என்றென்றைக்கு மழியாத இன்பமேற் கொண்டான். தருமராஜன் எமதருமராஜன் கலையால் என்று மிறவாமலிருந்தனர். திர்ஷ் டத்தும்மன் அக்கினியைச் சேர்ந்தான். சிகண்டி காந்திருவாம்ஸங் கலந்து கனவி லமிழ்ந்தான். இன்னும் எந்தெந்தத் தேவ தைகள் எப்படி பிறர்ந்தார்களோ? அந்தப் படியே அமிக்கமானார்கள்.

இப்பால் துரியோதனனும் அவன் தம் பிமார்களும் சகுனி முதலாகிய பேரும் இரா க்கதாம்சமானதினுலும், அவர்களுதித்தொ டுங்கிய துபாபசொருபமான துவாபரயுகாந்த மானதினுலும், அவர்களுக் குடனின்றது கர்மத்தொடர்ச்சி யானதினுலும், பெரு நர கத்தில் வீழப் பிசகாமற் போனார்கள். பொய் வாழ்வை நம்பிப் புலம்புந் தன்மைபோற் போக்கழிந்துபோன அத்துரியோதனுதியர் களும், அவர்களைச் சார்ந்த துன்மார்க்கர்க ளும், துராலோசனைக்காரர்களுந்துயாமடை யும்படி யாச்சுது. ஆயினுமிவருட் சில நீதி யறிந்து காலத்தைக் குறித்து நேசித்திருந்த வர்கள், நிற்பந்தத்தினின்று நீங்கிப்போய் விட்டார்கள். அஃதெப்படி யென்றால்? துரி யோதனன் நெடுநாள் நரகத்தில் மிதந்து கலிபுருடனுய்க் கலந்து போனான். சிந்துபதி யும், துரியோதனன் தம்பிமார்களும் இராக்க தாமிஸத்திற் பொருந்தினார்கள். சகுனி துவாபரயுகாந்தத்திற் சேர்ந்தான். வகதத் தன் முதலிய பாரதவீரர்களெல்லாம் அசுர வருக்கத்திற் கலந்தார்கள். துருபதன்-பாஞ் சாலன் -சோமுகன் - விராடன் - காம்பிலீசன் கடோற்கசன் இவர்கள் விஸ்வதேவதை கூட்டங்களில் மேவினார்கள். கிருஷ்ணமூர்த் திக்குத் தமையனை பலராமர் ஆதிசேடனும் சத்திலானார். இயாதவ குலத்தாரிற் துரியோ தனனைக் கிட்டினோர் இராக்கத குலத்தை யணுகினார்கள். பாண்டவர்களைச் சார்ந்தவா ள் தேவாமிஸஞ் செறிந்தார்கள். அவரவர் செய்த வினைகள் அவரவர்களைப் பிடித்துக் கொண்டன. இன்னுமுள்ள தீவினைகளுக் குப்பிறவி யெடுக்கும்படி யமையும். நல்வினை களுக்குப் போகபாக்கியபூமி கிடைக்கும்.

கேட்டீரோ சந்திர குலோத்துங்கனே! ஆதிபர்வமுதற் சொர்காரோகணம் வரைக்கு முள்ள பர்வம் பதினெட்டும் ஆயின. இந்த க்கதைகளைச் சாங்கோபாங்மாகச் சொன்னே ன். தேவதைகளாலேயுஞ் செப்புதற்கரிதா கியஒப்புவமையில்லாத வேதவியாசரென்னு மெய்தவன் எனக்குரைத்த வண்ணம் உமக்கு ஒன்றேனும் பிசகாமம் ஐந்தாம் வேதத்தை விளம்பினேன். இதற்கு ஐந்தாம்வேதமென் றுரைத்தது யாதினுலெனிற்? வேதரகசியம்-உபநிடதசாரம் தருமத்தினியல்பு தானதி னியற்கை - வேதாந்தமார்கம் - இராஜ நீதி-புண்ணியபெருமை-தீர்த்த மகத்துவம்-தெய் வச்சிறப்பு-பிதுர்தேவதைகளின் பூசை இயா கம்-விரதம்-மனைவாழ்க்கை-வருணச்சிரம த ருமம்-பிட்சை விருந்தோம்பல்-புதல்வரைப் பெறுதல்-சந்தியம்-இவை முதலியவெல்லா ம் இந்த ஒரு நூலிற் சொல்லியிருக்கின்றார். ஆதலாலிது ஐந்தாம் வேதமென்று சொல் லப்பட்டது. சாஸ்திரபுராணஆகமாதிகளில் ஒன்றிரண்டு பேசியிருக்கும். இந்த நூலில் எல்லாஞ் சொல்லியிருக்கின்றன. அவற்றை புத்திமான்கள் கவனித்துப்பார்த்தாலுண்டு, (பாரதம்படித்தவனோடுபகைக்காதே.) என்று ஓர் பழமொழியுண்டு. ஆதலாலிந்தப் பஞ் சம வேதமாகிய இதிகாசத்தை நீர் கேட்ட படிக்கு நித்தியசெபம்போற் சிந்தித்துக்கொ ள்ளும்பிரமன்-விஷ்ணு-உருத்திரன்-என்னு மூன்றுருவும் ஒருருவாகிவந்த மூர்த்தியாகிய வாதராயணரென்னுமென் குரு சுவாமியாரு டைய ஸ்ரீபாதகமலங்களை என்னுடைய சிர சிற் சூடிச் சிந்தித்து, இந்தப் பதினன்கு லோகமுங் கொண்டாடப்பட்ட இந்தப் பார தக் கதையை உமக்குச் சொன்னேன். இது என் வல்லமையல்ல.

ஓ இறைவனே! நிலையில்லாதமனத்தை இந்திரிய வழிகளிற் செல்லவொட்டாமல், அறிவை மாறுபடுத்தாமல், பிரபஞ்ச வாழ்க்

கையில் மூழ்கி உழலாமல் ஒரே மனதாய் மிகுந்த ஆசையுடனே புளகித்து, ஒரு நாட்போலும் பலநாளும் பத்திசெலுத்தி இந்தப்பாரத முழுதும் நீர் கேட்டபடியினுலே ஜன்ம சாபல்யமானீர் கடைத்தேறினீர் நீர் பெற்றபேறு ஒருவரும் பெற்ருர்கள் பெற்றிருக்கவு மாட்டார்கள் உமது பாக்கியமெத்த யோக்கிய சிலாக்கியம் ஓவாசனே தங்கிய தேன்கள் பொங்கிய மாலையைத்தரித்தமன்னரே இந்த இதிகாசத்தை ஒருதரம் இரண்டுதரம்-மூன்றுதரம்-வாசித்து அல்லதுகேட்டு இதனது கருத்தை மனத்திலிருத்தினபேர்களுக்கு வேறேதருமமுதலியமறுவிக்ஞானம்- நீதி-ஆசாரம் - இவைகள்பேச வேண்டியதில்லை அவையெல்லா மிதில் நிறைந்து புறம்புசிந்தியனவாகும் இப்பேர்ப்பட்ட பவித்திரமான பஞ்சமவேதமென்னு மகாபாரதத்தை உம்முடையசிந்தையில் நீங்காமலிருத்திநேசித்து வருவீராகில்சகலபுனிதங்களு முண்டாகும் உம்முடைய பூர்வபுண்ணிய வசத்தினுல் இந்த மகாபாரதக்கதை கேட்கப்பெற்றீர் நீரேபுண்ணியவான்உமது பேரைச்சொன்ன பேருக்கும்புண்ணியமுண்டாகும் குறைவில்லை அநேகங்கேள்விகளேயுந் தேவரகசியங்களையும் ஆராய்ந்து கேட்டறித்த அன்பனுகிய உமக்கு, ஜெனனமரணங்கள் தீர்ந்து சீவன்முத்ததசையுண்டாகிபரமானந்த சுகங்கிட்டி பாருள்ளவரைக்கும் உமதுபேருங் கீர்த்தியு நிலைக்கும் உமக்குச்சொன்னபாக்கியவசத்தால் என்பேரும் விளங்கும் நம்மிருவராலும் இந்நூலான்து வெளிப்பட்டது. இதற்குத்துணை என்னுண்டவராகிய பரப்பிரமசொருப பரந்தாமனுகிய வேதவியாசர் திருவடிகளென்று வைசம்பாயன முனிவர் திருவாய்மலர்ந் தருள்செய்தனர்.

---

### வைசம்பாயனமுனிவர் ஜெனமேஜெய மகாராஜன்செய்த பூசனையாதிகளை யேற்றுத் தமதாச்சிரமத்திற்கு எழுந்தருளல்.

அப்போது இப்பூமியையாளும் புண்ணியமூர்த்திபூரித்து அப்புராணிகராகியவைசம்பாயனருக்கு வேதவிதிப்பிரகாரம் பாதபூசைபண்ணி சகலஉபசாரங்களும்புரிந்துவேதவியாசபகவானையுந் தியானித்து வேண்டியமட்டு மானதவிதிப்படிக்குப் பூசித்து, பிராமணர்களுக்குச் சோடசதானமுங் கொடுத்து, இலட்சம்பிராமண போசனம் பண்ணிவைத்து வைசம்பாயனரை வேதவியாசருக் கொப்பாகவும் பரவாசுதேவனுக்கொப்பாகவும் பாவித்துப்போற்றிப் பணிந்து உபசரித்து அநேகவாபரணங்கள்வஸ்திரங்கள் பட்டுவர்க்கங்கள்-கட்டுவர்க்கங்கள்-பொற்பாடங்கள்-பூகாவிதிக்குப் பொற்சரிகைத்தாப்தாக்கள்-இயானைகள்-குதிரைகள்-தேர்கள் -பல்லக்குகள் ஒட்டகங்கள்-எருதுகள்-பண்டிகள் - சேனைகள்-ஊழியக்காரர்கள்-பணிவிடைப்பெண்கள் பெட்டிகள்-பேழைகள்-பொக்கிஷங்கள் பொன்னுரங்கள்-மாணிக்கமாலைகள்-ஆணிப்பொற்பதக்கங்கள் - அவுதாக்கள்-சங்கீதமேளங்கள்-தனதானியங்கள்-கிராமங்கள்-பூமிகள் கிரகங்கள்-அக்கிராரங்கள்-பசுப்பாக்கியங்கள் இன்னும் வேண்டுவன வெல்லாங்கொடுத்து, வெறுப்பில்லாமல் ஆயாசப்படாமல் - ஒருக்காமல்-உவப்புடன் இன்னும் என்ன வேண்டுமென்று விசாரித்தளித்து, ஊர்க்கோலங்கொண்டுபவனிவரும்படியாய்ப் பல்லக்கிலேற்றி, தானுந் தன்பெண்சாதியுமப்பல்லக்கைத் தாங்கிவந்தனர். அக்கால் வைசம்பாயனர் அளவற்ற பூரிப்போடுஞ் சகலவித வாத்திய சம்பிரமத்துடனே பட்டணம் பிரதட்சணம் வந்து, அரசனுக்கு மவன்றேவிக்கு மளவற்ற ஆசீர்வசனங்கள் கூறி தம்முடைய ஆச்சிரமத்திற் கெழுந்தருளினர்.

இப்பாற் சௌந்தரியவதியாகிய வபுஷ்டாதேவியும், ஜெனமேஜெய மகாராஜனும், இவர்களுடையபிள்ளை சதானீகனும் இவன் பெண்சாதி வைதேகியும், இவனுடையபிள்ளை அஸ்வமேதவந்தனும், தங்கள் மந்திரிமார்கள்-பிரதானியர் பட்டணத்துச் சனங்கள் மற்றவினங்கள் முதலிய யாவருடனும் போய் தங்களரண்மனைபுகுந்து போஜனுதிகள்புசித்து சந்தனபாளித கதம்பகஸ்தூரிகலந்த கலவைகள்பூசி, தாம்பூலமணிந்து சம்பிரமங்கொண்டிருந்தார்கள் என்றுகூறியசூதபுராணிகரை நைமிசாரண்ணியவாசிகளாகிய சவுனகாதி முனிவர்கள் தொழுதெழுந்து ஐம்புலன்களையும் வென்று மோட்சத்திற்குச்சென்று ஆனந்தமடைந்தவர்களபோற் சந்தோஷித்து, ஐயா சூதபுராணிகரே! ஜெனமேஜெய மகாராஜனுக்கு வைசம்பாயனர் சொற்றவண்ணங் கற்றறிவுடைய உத்தமரா

கிய நீர் அடியேங்கட்குச் சாங்கோபாங்கமாய்த் தெரிவித்தருளினீர் அடியேங்கள் தேவரீராற் பதினெண் புராணமும் ஸ்ரீமகாபாரதமாகிய இதிஹாசமுங் கேட்டோம். தன்னியரானோம். பவித்திரமடைந்தோம். கிருதார்த்தராயினோம். என்று பிரதக்ஷணம் புரிந்து வணங்கிக்கொண்டார்கள். அப்போது சூதபுராணிகா அவர்களை வாழ்த்தியிதனைச் சொல்லுகின்றார்.

# சூதபுராணிகர் வாக்கியம்.

—(*)—

ஓ சவுனகாதி முனிவர்களே! முன்னொருகால் மகத்தாகிய வேதகாரணனும், மாயாமக்கமற்ப ஞானபோதகனும், தழைந்த சடாபாரதாரியும், தண்டுகமண்டல பாணியும், அஷ்டாங்க யோகநிர்வாகியும், அடியாரிடத்திற் பட்சமுடைய வென்குருசுவாமியுமான தபோநிதியைத் துதித்து, அவர்பாதாரவிந்தங்களை என்சிரசிற் பதித்தேன் அக்காலவரென்மீதுகிருபைகூர்ந்து, எனதுமனோமயக்கங்களைப் பறக்கஅடித்து, இவ்வுலகத்தாரெல்லாருங் கடைத்தேறிச் சச்சிதானந்தபதமடையும்படிக்கு இந்தமகாபாரதகதையைச் சொல்லியருளினார். ஸ்ரீமகாபாரதமானது சீதரனென்னுந் திருநாராயண சுவாமிக்குந் திருமகளாகிய மகாலட்சுமிதேவிக்கும், திருவிளையாடல் செய்யும்பொருட்டு அந்தரங்க மண்டபமாயுள்ளது. தேவாதி தேவனாகிய சிவபெருமானும் பார்வதிதேவியாரும் எழுந்தருளி யிருக்கத்தக்கது நான்முகப் பிரமதேவர் சிருஷ்டித் தொழிலுக்கு ஆதாரமாயிருப்பது முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், பதினெட்டுத் தேவகணங்களும், ஏகாதசருத்திரர்களும், துவாதசாதித்தர்களும், இடைவிடாமல் வசிப்பதற் கிடமாயிருப்பது உலகத்திற் கஞ்சூராணியான மகமேருவைப்போன்றது. சரஸ்பதிக்கு வாசமான வெண்டாமரை மலரானது வீரலட்சுமி-விஜயலட்சுமி- சந்தானலட்சுமி- சவுபாக்கிய லட்சுமி - மகாலட்சுமி முதலிய அஷ்ட லட்சுமிகளும் அனவரதம் ஆனந்தக்கூத்தாடுகின்ற அரங்கமானது ஆயுதச்சாலைக் கதிதேவதைகள் வாசமாயிருப்பதுஐமுகனாகியும் ஐந்து கரத்தனாகியுமிராநின்ற விநாயகக்கடவுள்; தமது கொம்பையெழுத்தாணியாகக்கொண்டு மகமேருவை ஏடாகப்பிடித் தெழுதியது. சண்முகக் கடவுளுக்கு அணிமணிமுடியா யமைந்திருப்பது பதிவிரதைகளின் பாக்கியவிரதத்திற்கு யோக்கியமானது. பக்தசனங்களுக்குப் பதவி நிலைகளைப்பாலிக்கத்தக்கது. அன்றியுமிந்தப் பஞ்சமவேதமானதுதருமம்-தானம்- விரதம் வேள்வி-சத்தியம்-இவைமுதலிய வெல்லாம் படருவதற்குக்கொழுக்கொம்பாயிருப்பது பூலோகத்திற்பிறந்த பிறவிகளுக்கு ஜனனமரண சாகரத்தைத் தாண்டிவைக்குங் கப்பலானது ஆன்மாக்கள் மோட்சவீடேறுவதற்குப் பதினெட்டுப் படிகட்டி யிருப்பது நான்கு வேதப் பொருளையும் நன்காராய்ந்தெடுத்து நாட்டிவைத்தது. தேவரிஷிகள் - இராஜரிஷிகள் இவர்கள் முதலியபேர்களுக் குண்டாயிருக்கப்பட்ட ஐயம்-திரிபு - அறியாமையைப் போக்குவது. அனுட்டிப்பவர்க்கு ஆத்மார்த்தமாயிருந்து அருளுண்டாகுவதுதிரிலோகத்திற்கும் பொருளாகிய தருமப்பயிரேற்றிவைப்பதுஜனனசாதக சாஸ்திரம் புருஷலட்சண சாஸ்திரம், ஸ்திரீலட்சண சாஸ்திரம், தன்மார்த்தசாஸ்திரம், வைத்தியசாஸ்திரம், கெவுளிசாஸ்திரம், தும்மல் சாஸ்திரம், சகுனசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், யோகசாஸ்திரம், வேள்விசாஸ்திரம், ஓமசாஸ்திரம், காமசாஸ்திரம், ஆகமசாஸ்திரம்,இவைகள் முதலியன வமைந்தது, வேலாயுதந்தரித்த வேந்தர்களுக்கு இரத்தினாபரணம், வெற்றிமாலை, வீரகண்டாமணி, விருதுவகைகள், கவசங்கள், துவசங்கள், நீதிகள், நெறிகள், முறைகள், விதிகள், விலக்குகள், இவையாவுமானது பிதுர்த்தேவதைகளுக்குத் திவசம், தர்ப்பணம், திலோதகம், இவைமுதலானவைகள் நடத்திற்குச்சீலகவசமானது அக்கியான விருட்டையகற்றுஞ் சுக்ஞான சூரியனானது துற்சோபம்-துற்பயங்கரம் - துற்மரணம்- துற்வியாதி-இவைகளைத் துலைத்து, சற்சிநேகம்-சன்மார்க்கம்- சாற்பத்திரம்-சதாவிருத்தி யுண்டாக்குவது. சஞ்சித பிரா

ரத்துவத்தைத் தீர்ப்பதற்குச்சஞ்சீவியானது அறிவின்மையென்னும் பசியை யகற்றுவதற்கு அமுதமானது. குலகோத்திர நிலை தேர்வதற்குப் பாற்கடல்போன்றது. தருமம் அருத்தம்-காமம்-மோட்சம் என்னும் புருஷார்த்தத்தைத் தரப்பட்டது. பாபபுண்ணியங்களைப் பகுத்தறிவதற்குக் கண்ணுடிபோன்றது நினைத்ததைக் கொடுக்குங் கற்பகவிருட்சத்திற் கொப்பானது. ஓ ஐம்புலனையும் வென்ற அருந்தவர்களே! ஆதிபர்வத்தை யோதினோர்க்குப் புத்திரசந்தான முண்டாக்குவதும், சபாபர்வத்தைப் படித்தோர்க்கு அதிக பாக்கியமுண்டாக்குவதும், ஆரண்ய பர்வத்தைக் கற்றோர்க்கு அதிக வெற்றியுண்டாக்குவதும், விராடபர்வத்தை நவின்றோர்க்கு இஷ்டபலங்களுண்டாவதும், உத்தியோக பர்வத்தைப் பயின்றோர்க்கு இஷ்டகாமிய சித்திகளெல்லாம் எளிதிலுண்டாக்குவதும், விஷ்மபர்வத்தை விரும்பினோர்க்கு ஆடையாபரணங்களுண்டாக்குவதும், துரோணபர்வத்தைத் துதித்தோர்க்குச் சொல்லற்கரிய சம்பத்தை யுண்டாக்குவதும், கர்ன பருவத்தைக் கருதினோர்க்கு ஆயுள்விருத்தி யுண்டாக்குவதும் சல்லிய பர்வத்தைச் சாற்றினோர்க்குப் பசுவிர்த்தி யுண்டாக்குவதும், சவுத்திக பர்வத்தைச் சம்பாஷித்தோர்க்குத் திரவியலாப முண்டாக்குவதும், ஸ்ரீபர்வத்தைச் சாதித்தோர்க்குத் துக்கநிவாரணமுண்டாக்குவதும், சாந்திபர்வத்தைச் சார்ந்தோர்க்கு வாகனலாப முண்டாக்குவதும், அனுசானிக பர்வத்தை ஆய்ந்தோர்க்கு மகதைஸ்வரிய முண்டாக்குவதும், அஸ்வமேத பர்வத்தை அனுசரித்தோர்க்குப் பெரும்பொருளுண்டாக்குவதும், ஆசிரமவாச பர்வத்தை யாற்றினோர்க்கு இஷ்டசித்தி யுண்டாக்குவதும், முசலபர்வத்தை மூன்னோர்க்குப் பாப நிவர்த்தி யுண்டாக்குவதும், மகப்பிரதானிக பர்வத்தை மருவினோர்க்குப் பெருஞ்செல்வமுண்டாக்குவதும், சொர்க்காரோகண பர்வஞ் சொற்றோர்க்கு அஷ்டைசுவரிய முண்டாக்குவதும், இந்த ஐந்தாம் வேதமாகிய ஸ்ரீமகா பாரதமென் றறியக்கடவீர். மேலும் மெய்ஞ்ஞானிகள்-சீவன் முத்தர்கள் - பத்தர்கள் இவர்களைப் படியேற்றி வைப்பதற்கு ஏணியானதும், பாபமாகிய பாம்பைக் கொல்லுவதற்கு இடிபோன்றதும், வினையாகிய விடத்தைத் தீர்ப்பதற்கு ஔஷதம் போன்றதும், காமப்பேய் முதலிய கர்மப்பேய்களை ஓட்டிவைக்கும்படியானதும், பிரணவ மந்திரம், அதினின்றுண்டான எழுத்து, சொல், பொருள், பயன், அலங்காரம், கற்பனை, அணி, உபமானம், உபமேயம், பொருத்தம் மங்கலம், இவையாவுக்கும் முதற்பொருளாயிருப்பதும், இந்த ஐந்தாம் வேதமாகிய மகாபாரதமென் றறியக்கடவீர்கள்.

ஆதலால்:—

இப்பெருங்காதை யுரைத்தவர் படித்தோ ரெழுதினோ ரிதன்பொருள் விரித்தோர்
செப்பருமன்பாற் கேட்டுளோ ரிதன்பேர் செப்பினோர் தீமையிற் றீர்ந்தே
எப்பெருஞ் சிறப்பு மைந்தரும் வாழ்வு மிசைந்ததீர்க் காயுளு மூளரா
யொப்பருங் கதியி னிலைபெற விளங்கி யும்பரும் புகழவாழ்குவரே.

ஏழ்பெ ருங்கடன் மாநில மெங்குநல் லறமே
சூழ்க வண்டமி ழோங்குக தேங்குக சுருதி
வீழ்கபைம்புயல் விளங்குக வளங்கெழு தனுநூல்
வாழ்க வன்புடை யடியவர் மன்னுமா தவமே.

முத்திபெற்ற சருக்கத்தோடு,

சொற்காரோகண பர்வம், முற்றிற்று.

---

Amirtha Gunabodhini Press, Madras.

இந்நூல் கிடைக்குமிடம்:—

B. இரத்தின நாயகர் சன்ஸ்,

புத்தக வியாபாரிகள்,

நெ, 41. வெங்கடராமய்யர் தெரு,

ஜி. டி. சென்னை.